# இப்புத்தகத்திலடங்கியவை.



உ

கணபதிதுணை

# முகவுரை.



மேருமால் வரையின் மேதினி யுய்யப்
பாரதம் வரைந்த பண்ணவன்
சீரடிக் கமலஞ் சிரத்தணி வோமே.

பாரதம் என்னுஞ் சொற்குப் பாதவம்சவரசர்கள் சரித்திரங் கூறு நூல் என்பது பொருளாகக் கொள்க. இது முதனூலாற் பெற்ற பெயர். ஈண்டுக்கூறிய பாரதனென்பவன் சந்திரகுலவரசரிலே துஷ்யந்த மகாராஜன் புத்திரன். இவன் சகல கலைகளினும் வல்லவனாகி உலகத்தை தன்னடிப்படுத்துச் செங்கோல் செலுத்திக்காக்குங் காலையிலே தேவாசுரயுத்தத்தில் இந்திரன் அஞ்சிப் புறங்கொடுத்தபோது அசுரர்களைச் செயித்துத் தேவலோகத்தைக் காத்துதவி மிகப் பிரசித்திபெற்று நூறுயாகமுஞ் செய்தவன்; குருகுலச்சருக்கம்-உரு, உஎ-ஆங் கவிகளிற் காண்க. இவன் வம்சத்துற் பவித்தவர் பாரதர்; அவர் மிகப்பலராயினும், அவர்களில் மிகப்பிரசித்தி பெற்றிருந்தவர் தேவர் முதலோரம்சங்களாற் பிறந்த பாண்டவர் துரியோதனாதியரென்க. அவர் சரித்திரங்கூறு நூல் பாரதமெனப்பட்டது. இது * தத்திதாந்த நாமம். கிரியை ஞானமுமாகிய விபாகங்களையும், பதி முதலிய பொருளினிலக்கணங்களையும், புருஷார்த்த சாதனங்களையும், எல்லாக்கலைகளின் சாரங்களையும், ஒவ்வொரு மந்திரங்களுக்குரிய தேவர் முனிவர்களையும், வருணாச்சிரம தருமங்களையும், அரசநீதி முதலியவைகளையுங் கூறுதலானும், வேதத்தை இருக்கு முதலாகப் பகுத்த வியாசமுனிவர் கூற, உலகமுய்யுமாறு விநாயகமூர்த்தி யெழுதியுள்ளமையானும் இப்பாரதத்தை வேதங்களுடன் சேர்த்து ஐந்தாம் வேதமென்பர்: (பாரத: பஞ்சமோவேத:) என்றும், "நீடாழியுலகத்துமறைநாலோடைந்தென்று நிலைநிற்கவே —வாடாததவவாய்மை முனிராசன் மாபாரதஞ்சொன்னநாள்" எனவுங் கூறியிருத்தல் காண்க. ஐந்தாம் வேதமாகிய மேம்பாடுடைமையால், இதற்கு மகாபாரதமென விசேடணங்கொடுத்துக்கூறினரென்பர். இதனை இதிகாசமென்றுங் கூறுவர். (இதிகாசம் - தர்மார்த்த முதலிய பயனைத்தரும் பழைய சரித்திர வரலாற்றைக் கூறு நூலென்க.) இதிகாசமும், புராணமும் வேதத்தின் கருத்தை நியாயப்பிரமாணங்களால் விளக்குதலால் இவ்விரண்டினையும் வேதத்திற்கு உபப்பிரஹ்மணங்களென்பர். (உபப்பிரஹ்மணம் என்பதற்கு விளங்கச் செய்வது என்பது பொருள்.)

---

* தத்திதாந்தமாவது:—ஒரு வடசொல் சிறித வேறுபட்டுத் தன் பொருளையாயினுந் தன்னோடியைபுடைய பொருளையாயினு முணர்த்துவது.

புராணமாவது. "மணித்திரள் படுகடன் மாநிலவரைப்பிற் ... ஸப்பில் ல்
லுலகமுந்தத்துவ நிலையு—மன்னமுன்னாள் வகுத்தவிர்த்தாந்தமு— ... ரவையெ ...
கூறு மடைவுமங்வந்தரத்—தியற்கையும் புவவிருடியர் மரபு—மயக்க ... நிவ்விருவ ...
யினர் சரிதமு—மென்னு மைவகையிலக்கணமுடையது" என்பர்; ... னம் ஐந் ...
வேதமென்றும், இதிகாசமென்றுங் கூறப்படு மகத்துவமுடைய இம ... ாரதகதை ...
ஆதியிற்கூறிய வியாச முனிவர் வரலாறு:—

பிரமபுத்திரராகிய வசிஷ்ட முனிவர் புத்திரர் சத்திமுனிவ ... னவர் பெ ...
பராசரமுனிவர் துவாபர யுகத்திறுதியிலே உலக முய்யும்படி கன்ன ... செய்யுமெ ...
புத்திரனைப் பெறவேண்டுமென்று கருதி, அதற்குரியகாலம் வருமளவு ... தவத்திலி ...
தார்; அக்காலஞ் சமீபித்தலும் ஒருபெண்ணைக் கூடவேண்டுமென் ... தவநிலை ...
டெழுந்து யமுனாநதியிலோடத்திலேறிச் செல்லும்போது ஆகாயத்தி ... தாங்குறி ...
நக்ஷத்திர முச்சமாயிருத்தல் கண்டு அவ்வோடத்தை நடத்துகின்ற க ... னியாகிய ம ...
கந்தி யிசையுமாறு தன் கருத்தினைத் தெரிவித்து அவளை மங்கைப் ப ... நுவமும் பரிம ...
கந்தமுமுடையவளாக்கி விபூதியைத் தூவிப் பனியினாலே சூரியனை மறைத்துப் பக ...
யிரவுபோலாக்கி யொருதிடருமுண்டாக்கி அவ்விடத்திலே அவளைக்கூடி ஒரு புத் ...
ரரைப் பெற்றார். நதியின் கண்ணுண்டாகிய தீவிலே பிறந்தமையால் துவைபாயன ...
எனப்பெயர் பெற்றார். பின் வேதங்களை வகுத்த காரணத்தால் வேதவியாசரென ...
பெயர் பெற்றார். பின் அம்முனிவர்தந்தையார் உணர்த்துவனவுணர்ந்து திருநந்தி ...
வர் மாணாக்கராகிய சனற்குமார முனிவரையடைந்து அவர்பாற் கற்கவேண்டுவனவு ...
வும் கற்றுயர்ந்து தவத்தினுமிக்கோராய் விளங்கினர். உலகிற் கலக்தியால் ஒன்றாய் ...
கலந்திருந்த வேதங்களைச்சிக்கறுத்து முறைப்படுத்தி இருக்கு, எசுர், சாமம், அதர் ...
வணமென நான்காகப்பகுத்தும், நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையுட்கொண்ட ஐஞ் ...
ஞூற்றைம்பத்தைந்து சூத்திரங்களை யுடையதென்று சொல்லப்படும் வேதாந்த சூத் ...
ரமியற்றியும், புராணத்தைப் பதினெண்புராணங்களாக வகுத்தும், சூதமுனிவர் மு ...
லாகிய பலமுனிவர்கட்குக் கற்பித்தும் விளங்கியிருந்தார்; இவர் திருவவதாரத்தை
சம்பவச்சருக்கத்திற்காண்க.

புராணம் வகுத்த வரலாறுவது:—கிருத யுகத்திலே நூறுகோடி கிரந்தங்
களாலே பிரமனாற் செய்யப்பட்டுப் பிராமம் என்னும் பெயரினையுடைத்தாய் ஒன்றாயி
ருந்தது. பின் திரேதாயுகத்திலே கோடிகிரந்தங்களால் நூற்றுப்பதினெட்டுச் சங்
கிதைகளையுடைய பதினெட்டுப்பாகங்களாக மகாமுனிவர்களால் வகுக்கப்பட்டிருந்
தது:—அதனைத் துவாபரயுக விறுதியிலே வியாசமுனிவர் நான்கிலக்ஷங் கிரந்தங்களாற்
பதினெண்புராணமாக்கினர் என்பர்.

இவரிங்ஙன மிருக்கு நாளில் ஒரு நாள் பராசரமுனிவர் வியாசமுனிவருடன்
திருக்கைலாயத்திற்குச்சென்று சிவபிரானைக்கண்டு வணங்கிச் சுவாமீ இனி நடக்கு

பாரத கதையை உலகிற்குபகாரமாக இக்குமாரனுற் செய்விக்கத் திருவுளங்கொண்டருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார். சிவபிரான் திருவுள மகிழ்ந்தருளி விநாயகக் கடவுளை நோக்கி வியாசமுனிவர் கூறும் பாரதகதையை யெழுதும்படி கட்டளையிட்டருளினர். பின்பு வியாசமுனிவர் விநாயகக்கடவுளை வணங்கி அடியேன் கூறுஞ் சொல் வழுமுதலிய வழுக்களைத்திருத்தஞ்செய்து வரைந்தருளவேண்டுமென்று வேண்டிக் கொண்டு கூறத்தொடங்கினர்; விநாயகக்கடவுளும் மேருமலை யேடாகத்தமது கொம்பெழுத்தாணியாக வைத்தெழுதும் போது அவர்திருத்தி யெழுதுவதற்குமுன் வியாசமுனிவர் சுலோகத்தைப் பூர்த்தியாக்கிக் கூறுவார். இவ்வாறே பதினெட்டுப் பருவமாக்கிச் *சபாத லக்ஷம் கிரந்தமாகக்கூறிச்சம்பூர்ணம் பண்ணினர்.

பின்பு வியாசமுனிவர் அதனை அநேகமுனிவர்கட்குக் கற்பித்துச்சுவர்க்கலோகத்திற்கு நாரதமுனிவரையும், யக்ஷகருக்குச் † சுகமுனிவரையும், பிதிர்தேவதைகட்குத் தேவலமுனிவரையும், பூலோகத்திற்கு ‡ வைசம்பாயன முனிவரையும், பாதாளலோகத்திற்குச் சுமந்தமுனிவரையும், கூறுமாறு நியமித்தாரென்பர். சுவர்க்கலோகத்திற்குப் பைலவமுனிவரையும், பிதிர்லோகத்திற்குச் சுமந்தமுனிவரையும், பாதாளலோகத்திற்கு ஜைமுனிவரையுங் கூறுமாறு நியமித்தார் என்றுங் கூறுவர்.

பின் இதனைக் கடைச்சங்கப் புலவருளொருவராகிய பெருந்தேவனர் என்பவர் தமிழில் உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுளாக வெண்பாவாலியற்றினர். அவ்வெண்பாவின் றொகை அறுபதினுயிரமென்பர். பன்னீராயிரமென்று தொண்டைமண்டல சதகத்திற் கூறியிருக்கிறது. அதற்குப் பாரத வெண்பாவென்றும் அவருக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனுரென்றும் பெயர் வழங்கின. இவர் தொண்டைநாட்டு வேளாளர் என்பர். அவருக்குப் பின் மகா கவிசிரேஷ்டராகிய வில்லிபுத்தூரர் விருத்தப்பாவாலியற்றினர். இதற்கு ¶ வில்லிபாரதமென்பர்; இது மிகச்சுருக்கமாயிருக்கிறதென்று அதனுடன் தொண்டைநாட்டு மாதலம்பேட்டையிலிருந்தவேளாளர் நல்லாபிள்ளை என்பவர் இடையிடையேகதைகளை விரித்துப் பதினையாயிரத்து முந்நூறு கவிகளாற் செய்தார்.

## இனி வில்லிபுத்தூரர் வரலாறு:—

அவர் திருக்குமாரர் வரந்தருவார் கூறிய சிறப்புப்பாயிரத்தாலுங் கர்ணபரம்பரையாலுந் தெரியத் தக்கதாயிருக்கின்றது. பெண்ணைநதி பாவுகின்ற நடுநாடென்று

*சபாத லக்ஷம்—லக்ஷத்திருபத் தையாயிரம்.

†சுகமுனிவர்—வியாசர்புத்திரர்.

‡வைசம்பாயனர்—விசம்பமுனிவர்புத்திரர். வியாசமுனிவர்கட்டளையால் ஜெனமேஜெய மகாராசனுக்குப் பாரதத்தைக்கூறினவருமிவரே.

¶இந்நூலில் இப்பொழுதில்லாத பருவம் எட்டு.— அவையாவன:—ஸ்ரீ பருவம், சாந்தி பருவம், அநுசாசநிக பருவம்; அசுவமேதபருவம், ஆசிரமவாச பருவம், மௌசலபருவம், மகப்பிரதானிகபருவம், சொர்க்கா ரோகண பருவம்.

கூறப்படுவதாகிய திருமுனைப்பாடி நாட்டிற் சனியூரிற் பிராமணகுலத்தில் *வீராராக
சாரியர் திருக்குமாரராயவதரித்து † வில்லிபுத்தூரார் என்னுந்திருநாமம் பெற்
வளர்ந்து நல்லாசிரியர் பால் வடமொழிதென்மொழிகளைக் கற்றுத்தேர்ச்சியடைந்த
ராய், ஒழுக்கமுதலியவற்றிற் சிறந்தவராய், ஆசு மதுரஞ் சித்திரம்வித்தாரமென்னு
வகைப் பாக்களையும் படிப்பவர் கேட்பவர்க்கு அமிழ்தினுமினியவாய் விளங்கச் செ
வராய்த், தமிழ் நாட்டு மூவேந்தருந் தக்க வரிசை செய்யப்பெற்றவராய்த், திருமா
குப் பலகவித்துறைகளையும் பாடித்தமிழ் நாடெங்கும் புகழ்பரவச்செய்து வாழ்வாரா
னர்? இவரிங்ஙனமிருத்தலை மேற்கூறிய திருமுனைப்பாடிநாட்டில் வக்கபாகை யென்
நகரத்திலே கொங்கர் குலாதிபதியாயரசுசெய்து, கல்வி செல்வங் கொடை வீரமுதலி
வற்றிற் சிறந்து, புலவர் குழாத்தைச் சேர்த்து, முச்சங்கத்தமிழ் நூல்களையும் அ
விர்த்தி செய்து, கண்ட னென்னுஞ் சோழ மகாராசனுக்குத் திருமுடி சூட்டி, ந
றிசையினுஞ் சென்று அவன் பகைவரைச் செயித்து, அவன் புலிக்கொடியை எங்
நிலைநாட்டிப், பலவறங்களையுமேலோங்க வளர்த்து வாழ்ந்திருந்த ஆட்கொண்ட
னென்றும், வரபதியாட்கொண்டானென்றும், கொங்கராயனென்றும் கூறப்படும் பெ
ரினையுடைய பெருந்தகையோன் அறிந்து மிக வியந்து தக்கவரிசைகளைச் செய்
இவருடன் அளவளாவியிருக்குங்காலையில், ஒருநாள் வில்லிபுத்தூரரை நோக்கி, நாமி
வரும் பிறந்ததிசையிற் கீர்த்தி நிற்கவும், இத்தமிழ்நாட்டிக் குபகாரமாகவும் மகாபார
கதையைச் சங்கிரகமாகத் தமிழிற்பாடவேண்டுமென்றான். அதற்கிசைந்து வில்
புத்தூராரும் அவ்வாறே பாடிநிறைவேற்றி, அவனவைக் களத்தரங் கேற்றினர். இங்
னங் கூறியவரலாறு வரந்தருவார் சிறப்புப் பாயிரத்தால் விளங்கும்.

இனி இந்நூலாசிரியர் சகோதரருக்குந் தமக்கு நேரிட்ட தாயபாக விவாதந்தீர்
தற்பொருட்டு அவ்வாட்கொண்டா னென்னுங் கொங்கராயனிடந்தெரிவிக்க அவன் ப
தகதையைச் சங்கிரகமாகப் பாடிக் கொண்டு வந்தாற்பின்பு விவாதந்தீர்த்துவிடுகிறே
னெனக்கூறியதாகவும், இந்நூலாசிரியர் பாடி முடித்தபின் பாண்டவர் துரியோதனதி
தாயபாகத்தின் பொருட்டுப் பொருதமையுணர்ந்து தம்பாகமுந்தாமே சகோதரருக்கு
கொடுத்து விட்டா ரென்றுங் கூறுவர்.

இவ்வாறன்றி இந்நூலாசிரியர் சந்தக்கவிகள் செய்வதிலே தம்மோடுவாதிட
வந்த நாவலர்களிலே தோல்வியடைந்தவரை அவ்வாட்கொண்டா னென்னும் பெரு
தகையோன் கொடுத்த ஆயுதத்தாற்காதினையறுத்துவிடுகிறதென்றும், அனந்தனெ
னுமோர் பாவலன் செவியறுக்கத்தொடங்கும்போது அப்பாவலன் என்பெயரையுடை
சேடனுக்குங்காதில்லை எனக்கு மவ்வாறில்லாமற் செய்யவேண்டுவதுதான் இதற்

*வீராராகவாசாரியரை வில்லிபுத்தூராருக்குக் கற்பித்தகுருவென்றுங்கூறுவர்.

†பெரியாழ்வார் பெயராகிய வில்லிபுத்தூரார் என்னும் பெயரைத்தமக்கிட்டழைக்க
பெற்றாரென்றும், பாண்டி நாட்டுள்ள வில்லிபுத்தூரிற் சென்றுவசித் திருந்தமையால் வில்லிபு
த்தூரார் எனப் பெயர் கூறப்பெற்றாரென்றுங்கூறுவர்.

மனந்தளர மாட்டேனென்று கூறக்கேட்டு மகிழ்ச்சியடைந்து விடுத்துப்போயினாரென்றும், இவ்வாறிருக்குநாளிலே திருவண்ணாமலையிலே திருப்புகழ்பாடிய அருணகிரிநாதரைச் சந்தித்தகாலத்து அவர் இந்நூலாசிரியர் செருக்கையடக்கக்கருதி, யாமிப்பொழுது கூறுங்கவிகட்குப்பொருள்கூறுவீராயின் உமது கல்வித்திறமதிக்கத்தக்கதென்று கூற, அதற்கிந்நூலாசிரியருமிசைந்து அவர்கூறுங்கந்தரந்தாதிக்குப்பொருள் கூறிவரும்பொழுது, "திதத்தத்தத்" என்னு முதற்குறிப்புடைய செய்யுளுக்குப் பொருள் கூறமுடியாமற் செவியறுக்கின்ற அவ்வாயுதத்தை யெறிந்துவிட்டுப்போம் வழியிற் சிவாலயமொன்றெதிர்ப்பட அதுகண்ணுக்குத் தோன்றாதபடி திரையிட்டுமறைத்துச் செல்ல அது தெரிந்த அருணகிரிநாதர் கண்ணிழக்கும்படி சபிக்க அதனாற் கண்ணிழந்து பின் அவர் சாபநீங்கும்படிகூற இம்மகாபாரத கதையைப் பாடினாரென்றுங்கூறுவர். இவ்விரண்டுங் கர்ணபரம்பரையாகக் கேட்டுக்கூறுவர்கூற்றேயன்றி வேறுபிரமாணமில்லை. இந்நூலாசிரியர் தோற்றவரைக்காதை யறுப்பவர் என்பதற்கு மாத்திரம் "குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லைக்குறும்பியளவாக் காதைக்குடைந்து தோண்டி—யெட்டினமட்டறுப்பதற்கோவில்லியில்லை." எனத்தனிப்பாடற்றிரட்டிலோர்கவியுளது.

இந்நூலாசிரியர் காலமிவ்வளவினதெனத் துணிந்து கூறுதற்குத்தக்கவாதாரமில்லை; ஆயினும் இரட்டைப்புலவர்காலமும் இவர்காலமுமொன்றென்பது மாத்திரம் விளங்குகின்றது. அவ்விரட்டைப்புலவர் திருவக்கரைநகராதிபதி அசனமளித்தபோது,

> "சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்ட நாயன் றமிழ்க் கொங்கர் கோன்
> பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதிபக்கத்திலே
> யூணுக்கு வாராதிருப்பாய் விருப்பாகி யுயர்வானிலே
> வீணுக்கு நின்றுகை மெலிகின்ற தெவ்வாறு வெண்டிங்களே"

எனக்கூறியஇக்கவியாற்காண்க. சாணர்-சதுரர். சிலர்சற்றேறக்குறையநானூறு அல்லது ஐந்நூறு வருஷமிருக்கலாமென்று கூறுவார்.

இந்நூலைப் "பெருங்காப்பியநிலைபேசுங்காலை" என்னுஞ்சூத்திரத்திற் கூறிய விதிப்படி காப்பிய நடையிலே சொல்லணி பொருளணிகளும் பலவகைச்சந்தங்களும் படிப்பவர்கட்குங் கேட்பவர்க்கு மேன்மேலற்புதமகிழ்ச்சி விளையுமாறு செய்திருக்கின்றனர். இந்நூலில் வடமொழிகளை மிகுதியாக வெடுத்துக்கூறியதுபோல இதற்கு முன்னுள்ளநூல்களிற் கூறவில்லை. இந்நூலை வியாசமுனிவர் கூறியவாறேதென்மொழியாற் சங்கிரகமாகக்கூறினாரென்பது தற்சிறப்புப்பாயிரஞ், சிறப்புப் பாயிரங்களாற் றெளிவாக விளங்குகின்றது. ஆயினும், வடமொழிப்பால பாரதநடையைப் போலச் சிற்சிலவிடங்களிலெடுத்துக் கூறியிருக்கின்றாரென்பர்.

இந்நூலிற் சிறப்புப் பாயிரத்திறுதியிற் கூறியிருக்கின்ற கவியையும் இந்நூலினிறுதியிற் கூறிய கவியின் பாடபேதத்தையு நோக்கும்போது இந்நூல் முழுவதும் பாடினாரென்பதற்கையமில்லை. ஆயினும், இப்பொழுது ஆதி பருவமுதற் பத்துப்பரு

வமே இருக்கின்றன. ஆதலால், ஏனைய பருவங்கள் அக்காலத்துள்ளன போலும் கம்பராமாயணத்தில் ஆக்குவித்தோனைச் சிறப்பித்துக்கூறி நன்றிபாராட்டுவதுபோல இந்நூலினும் ஆக்குவித்தோனைச் சிறப்பித்து நன்றிபாராட்டிக்கண்டவதகனச்சருக்கம் ருO-ஆங்கவியினும், நிரைமீட்சிச்சருக்கம் ௱௪-ஆங் கவியினும், பதினாறும் போர்ச்சருக்கம் ௬O-ஆங்கவியினும், பதினேழாம் போர்ச்சருக்கம் ௬௬-ஆங் கவியினுங் கூறியிருக்கின்றனர். அணிவகுப்பு முதலிய சில கதைகளை முதனூலிற்கூறியவாறு கூறாது பாலபாரத முதலியவற்றை நோக்கிச்சிறிது வேறுபடக்கூறினர் என்பர். தமிழ்நாட்டு மூவேந்தரிடத்துந் தமிழ்மொழியினிடத்து மிக்க வேட்கையுடையாரென்பது விளங்கச்சிற்சில விடங்களில் அம்மூவேந்தரைச்சிறப்பித்துங் கூறியிருக்கின்றனர். இவர் வைணவசமயத்தவரென்பது சிறப்புப்பாயிரத்தாலும், இந்நூலிலுள்ள சருக்கங்களின் முகத்திற்கூறியசெய்யுட்களாலுந், தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலையில், "அறஞ்சுவராகின்ற வரங்கனூர்க்காட்செய்யாதே—புறஞ்சுவர் கோலஞ்செய்து புட்கவ்வக்கிடக்கின்றீரே" என்றாற்போலக் கன்னனைக் கூறும் போது "புறஞ்சுவர்கோலஞ்செய்வான் பூபதிக்குரைக்கலுற்றான்" என்றும், இன்னும் அவ்வாழ்வார்திவ்வியப்பிரபந்தத்தில், "மருவிய பெரிய கோயின்மதிட்டிருவரங்க மென்னாக்—கருவிலேதிருவிலாதீர் காலத்தைக்கழிகின்றீரே" என்பதன் கருத்தைத்தழுவி "கரியபைம்புயலைக்கைதொழுமவரேகருவிலேதிருவுடையவரே" என்றும் இவ்வாறு ஆழ்வார்கள் திருவாய் மலர்ந்தருளிய சில திருப்பாடல்களின்கருத்தைததழுவிக் கூறியதனால் ஆழ்வார்களிடத்தி லீடுபட்டுள்ளாரென்பது விளங்குதலாலுங் காண்க.

இந்நூலுட் சைவசம்பந்தமாய் வரும்பல்வேறிடங்கடோறும் உள்ளபடியே உயர்த்திக்கூறியமை கொண்டு இவர் மதவிஷயங்களிற் பொதுநோக்குடையாரென்பது தெளிவாகவிளங்கும்.

இந்நூலைக் கற்போரிடர்ப் படாது கற்கும்படி, இம்மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்குக் கிடைத்த ஏட்டுப்பிரதிகளைக் கொண்டுபரிசோதித்து, அரும்பதவுரையுமெழுதியச்சிட்டு வெளிப்படுத்தவேண்டு மென்று, "முச்சங்கத்தண்டமிழ் நூல்கலங்காமற்றலைகண்டானாகிய அவ்வாட்கொண்டானே அவதரித்தானென்று அறிஞர்கள்கூறத்தக்க செல்வங் கல்விகொடை புகழ் முதலியவைகளிற்சிறந்த பாலவனத்தம்ஜமீந்தாரூந் தமிழ்ச்சங்கத்து அக்கிராசனாதிபதியுமாகிய ஸ்ரீமாந்—பொ. பாண்டித்துரைச்சாமித்தேவரவர்கள் நியமித்தவாறே இயன்றமட்டு மூலத்தைப்பரிசோதித்து, அதற்கரும்பதவுரையுந்திருவாவடுதுறையாதீனத்தில் இரண்டாவது குருமூர்த்தமாயெழுந்தருளியிருந்த—ஸ்ரீ நமசிவாய தேசிகசுவாமிகண் முகமாகக்கற்றதும், பிறர்முகமாகக் கேள்வியுற்றதும், அறிவாலுணரப்பெற்றதும், மறப்பெனும் பகைவன் வாரிக்கொள்ளாமற் கற்போர்க்கு உபகாரமாக வரைந்து வெளியிடலாயிற்று.

பரிசோதிக்குங்காலையிற் கண்டபாடபேதங்களிற்சில "செந்தமிழ்"ப்பத்திரிகைவாயிலாக வெளியிடப்பட்டன. சுவமதக்கொள்கைபரமதத்துவேஷம் என்பனவற்றை

யுட்கொண்டு பாடங்களைச் சிதையாமற் பிரதிகளிலுள்ளவற்றை யுள்ளவாறே ஆராய்ந்து பிறழாமலவைகள் வெளியிடப்பட்டன; இங்ஙனமுண்மையேயாமென்பது, அருச்சுனன் றவநிலைச்சருக்கம் ௭௭-ஆங்கவியையும், கிருட்டிணன்றூதுச்சருக்கம் ௰௫-ஆங்கவியையும், பதின்மூன்றும்போர்ச்சருக்கம் உ௭௫-ஆங்கவிமுதலாகிய சிலகவிகளையு நோக்குவோர்க்கு வெள்ளிடைமலைபோல நன்குவிளங்கும்.

## இத்தமிழ்ச்சங்கத்திற்குக்கிடைத்த பிரதிகளின்விவரம்.

மகாமகோபாத்தியாயர். உ. வே. சாமிநாத ஐயரவர்களாற் கிடைத்தபிரதி ௧.
சேதுசமஸ்தான வித்துவான், இராகவையங்காரவர்கள் பிரதி ௧.
சேற்றூர்ச்சமஸ்தானபதி, சுந்தரதாசுத்துரைத்தேவரவர்கள்பிரதி ௧.
மதுரைத்தமிழ்ச்சங்கத்து அக்கிராசனாதிபதி பொ-பாண்டித்துரைச்சாமித்தேவரவர்கள்பிரதி ௩.
பாங்கிப் பேட்டை ஓவரஸியர், இலக்குமண பிள்ளையவர்கள்பிரதி ௪.
யாழ்ப்பாணத்துச்சுன்னாகம், அ. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள்பிரதி ௧.
துறையூர்க் கோவிந்தபிள்ளையவர்கள் பிரதி ௧.
நாகபட்டினம், வடக்காலத்தூர், வாலை முதலியாரவர்கள்பிரதி ௧.
உத்தமபாளையம், அனுமந்தநகர், கிருட்டிணஐயங்காரவர்கள்பிரதி. ௧.

ஆகப் பிரதி ௰௪.

இங்ஙனம்,

சே. ரா. சுப்பிரமணியக்கவிராயர்,



கணபதிதுணை.

# சிறப்புப்பாயிரம்.



[நூலாசிரியர் குமாரர் வரந்தருவார் செய்தது.]

பொருப்பிலேபிறந்து தென்னன்புகழிலேகிடந்து சங்கத்
திருப்பிலேயிருந்து வைகையேட்டிலேதவழ்ந்தபேதை
நெருப்பிலேநின்று கற்றோர்நினைவிலேநடந்தோரேன
மருப்பிலேபயின்றபாவைமருங்கிலேவளருகின்றாள். (௧)

அகத்தியன்பயந்தசெஞ்சொலாரணங்கம்புசாதன்
முகத்தினில்வாழுமந்தமொய் குழலருளினாலே
பகைத்தெதிர்பொருததெய்வப்பாரதகதையிம்முந்நீர்ச்
செகத்தினில்விருத்தயாப்பாற்செய்கெனச்செய்ததன்றே. (௨)

தேடினரிபாவரேகொலெழுவகையானுஞ்சீர்த்தி
நீடினரவரேயென்பர்நீணிலத்துயர்ந்தமாந்தர்
பாடினரியாவர்யாவர்பாடுவித்தார்கொலென்று
நாடினர்தெளியும்வண்ணநவையறநவிலலுற்றேன். (௩)

வேறு.

நாணிரைத்தநேகதாரகாகணமா †நவமணியுடனவவிதங்கொள்
கோணிரைத்தீரேழ்புவனமும்வலஞ்செய்கொற்றநேமிப்பின்வருகொண்டல்
வாணிரைத்திரவிவிதிர்ப்பபோன்மின்னிவான்முகடுறநெடும்பளிக்குத்
தூணிரைப்பனபோனந்திமால்வரையின்சூழலிற்றரைகொண்டதுவே. (௪)

வம்பறுமலருஞ்செம்பொனுமணியுமருங்கெலாநெருங்குமக்குன்றி
‡னும்பரார்ப்பெழுப்பாரளவுநின்றோங்கியுள்ளுறத்துள்ளிவீழருவி
யம்புராசியைமான்மந்தரஞ்சுழற்றியமுதெழக்கடைந்தநாளதற்குத்
தம்பமாமதியையதனுடன்பெயர்த்துச்சார்த்திவைத்தென்னலாந்தகைத்தே. (௫)

வெண்ணெயேகமழும்பவளவாய்விமலன்மெய்யெனக்கருகிமெல்லியலார்
கண்ணையேயனையநெடுங்கடன்முகந்துககனமுந்திசைகளும்விழுங்கிப்
பண்ணைசூழ்ந்திலகுந்திருமுனைப்பாடிப்பழையநாடனைத்தையுமொருதன்
பெண்ணையேகொண்டுபோகமுய்த்திடுமாற்புயலெனும்பெயருடைப்பெரியோன். (௬)

தொடுத்தநாண்மலர்வேய்ந்தகிலளைந்துந்திச்சுழிவயினிலங்கமெய்த்தனங்க
ளெடுத்துமேல்வீசிமணிமருங்கலையவினங்கொள்வண்டொடுசிலம்பிரங்க
வடுத்தநீள்சுரதமகளிரிற்றடங்கணிறஞ்சிவப்புறக்கரையழிந்து
படுத்தபேரணைப்போர்புரிந்ததாலந்தப்பண்ணையங்கானல்சூழ்பெண்ணை. (௭)

---

† நவமணியெனமுறைநவின்றஎன்றும் பாடம்,

‡ உம்பரூடெழ என்றும்பாடம்.

அவ்வைபாடலுக்குநறுநெய்பால்பெருகியருந்தமிழறிவினுற்சிறந்து
பௌவநீராடைத்தாணிமான்மார்பிற்பயிலுமுத்தரியமும்போன்று
மொய்வரால்கெண்டைவாளைசேன்மலங்குமுதலியசனமெதிர்கொள்ளத்
தெய்வமாநதிநீர்பாக்குநாடந்தத்திருமுனைப்பாடிநன்னாடு. ( )

பாவருந்தமிழாற்பேர்பெறுபனுவற்பாவலர்பாதிநாளிரவின்
மூவருநெருக்கிமொழிவிளக்கேற்றிமுகுந்தனைத்தொழுதநன்னாடு
தேவருமறையுமின்னமுங்காணுச்செஞ்சடைக்கடவுளைப்பாடி
யாவருமதித்தோர்மூவரிலிருவர்பிறந்தநாடிந்தநன்னாடு. ( )

வேறு.

அந்தத்திருநாட்டந்தநதியமுதம்பெருகியிருகரையுஞ்
சந்தத்துடன்காரகில்கமழத்தடங்காவகஞ்சூழ்தடநிறைப்பக்
கந்தக்குவளைமேய்பகட்டின்காலானெரிந்துகதிர்முத்தஞ்
சிந்தச்சிந்தக்கொழுமுனைக்குமுன்னே*ருழுவசெய்ச்சங்கம். (க )

கொழுநீர்மதுவுண்கடைசியர்தங்குழைதோய்விழியினெழுநிழலைக்
கழுநீர்மலரென்றொருபகலுங்காலான்மயக்கிக்களைதுவைப்பார்
முழுநீரூடுதமதுநிழன்முழுதுங்கண்டுதொழுதிறைஞ்சிச்
செழுநீரமங்கையரென்றுதிகைப்பார்நகைப்பார்செறுவெல்லாம். (க )

கரும்புங்கமுகுந்தலைதெரியாக்கழனிச்செந்நெற்களையாகி
யரும்புங்குவளைநறுமலர்த்தேனுறுபெங்குஞ்சேருக
விரும்புஞ்சுருதியிசைகேட்டுவேலைக்கழிக்கானலங்கைதை
சுரும்புந்தும்பிகளுமருந்தமாறுதென்றுஞ்சேறிடுமால். (க )

வேறு.

கம்பலைக்கழனிச்சேனைக்காவலர்காங்கணீக்கிப்
பைம்புலத்துழுநர்தங்கள்பலவகைவிளைவுமீட்டி
யைம்புலத்தவர்க்குமீந்தரங்கறத்தினைவளர்த்தலாலே
செம்புலக்கிழத்திக்காவியன்னதச்செல்வநாடே. (கந

வேறு

எண்ணுமாகடலேழுமன்றிருகடலாகப்
பெண்ணைமாநதிநறுநெய்பால்பெருகுமப்பழனப்
பண்ணைநீள்வளம்பல்குசீர்ப்பழையநன்னாட்டில்
வண்ணநான்கினுமுயர்ந்துளோரொருமுனிவந்தான். (க

ஐந்துபாவுடைநால்வகைக்கவிக்கதிபதிபாய்
வந்துவட்டமாமணியினன்மணிமுடிபுனைந்து
பைந்துழாய்முடிப்பரமனைப்பலகவித்துறையுஞ்
சிந்தையான்மொழிந்தன்பர்தந்திருவுளம்பெற்றோன். (க

தென்னர்சோலர்செம்பியரெனப்பெயர்சிறந்த
மன்னர்மூவரும்வழங்கியவரிசையாலுயர்ந்தோன்
முன்னரெண்ணியமுத்தமிழ்ப்பாவலரெவரும்
பின்னர்வந்தொருவடிவுகொண்டனரெனப்பிறந்தோன். (க

*உழவு செயுஞ் சங்கமென்றும்பாடம்.

*தாரகாயணவண்டலேதண்டலேச்சனியூர்
வீரராகவனருள்பெறுவில்லிபுத்தூர
னூராரமுடிமண்மிசையுயர்புகழ்நிறுத்தித்
தீரகாகளம்பெறுதலின்யாரினுஞ்சிறந்தோன். (௧௭)

வேறு.

எங்குமிவனிசைபரப்பிவருநாளில்யாமுரைத்தவிந்தநாட்டிற்
கொங்கர்குலவரபதியாட்கொண்டானென்றொருவண்மைக்குரிசிறோன்றி
வெங்கலியின்மூழ்காமற்கருநடப்பேர்வெள்ளத்துவிழாமறனுங்காஞ்
சங்கமெனமுச்சங்கத்தண்டமிழ்நூல்கலங்காமற்றலைகண்டானே. (௧௮)

மற்றவனிப்புவியாளும்வளவனுக்குமுடிகவித்துவழுதித்தெவ்வைச்
செற்றவனுக்கவனியெல்லாஞ்செங்கோன்மைநிலையிட்டுச்செல்வமெல்லாங்
கற்றவருக்கிருகையுடைக்கற்பகம்போலினிதளித்துக்கமலமாதுங்
கொற்றவையுமனங்களிப்பத்தன்னுமையமேருவினுங்கோட்டினனே. (௧௯)

தென்னாட்டில்வடநாட்டிற்குடநாட்டிற்குணநாட்டிற்றெவ்வரோடக்
கன்னாட்டியமர்பொருதுகங்கைகீழ்நாட்டுவித்துக்கண்டன்வேங்கை
யென்னாட்டுமெழுதியவன்றிருமாபோர்பெற்றபுகழ்யாவர்பெற்றா
ரந்நாட்டுக்கொற்றமெல்லாமக்குரிசில்புகழொடவதரித்ததன்றே. (௨0)

ஆற்றியமெய்ச்செல்வத்தாலளகையைவென்றிருங்கவினலமாருரை
மாற்றியபொற்றடமதில்சூழ்வக்கபாகையினறநந்தின்வடிவம்போலத்
தோற்றியவக்கொங்கர்பிரான்சூழ்தமிழாளுட்கொண்டான்சுற்றத்தோடு
போற்றியவிப்புவிமுழுதுந்தன்றிருப்பேர்மொழிகொண்டேபுரந்தானம்மா. (௨௧)

பிறந்துய்யக்கொண்டவனிப்பேருலகம்பெருவாழ்வுகூருநாளி
னிறைந்தபுகழ்ச்சனிநகர்வாழ்வில்லிபுத்தூரனைநோக்கிநீயுநானும்
பிறந்ததிசைக்கிசைநிற்பப்பாரதமாம்பெருங்கதையைப்பெரியோர்தங்கள்
சிறந்தசெவிக்கமுதமெனத்தமிழ்மொழியின்விருத்தத்தாற்செய்கவென்றான். (௨௨)

இருக்காதிமறைமொழிந்தோனியம்பியவிப்பெருங்கதையையாருங்கேட்பச்
சுருக்காகப்புராணமுறைசொல்லுகவென்றவினவனுஞ்சொல்லலுற்றான்
பெருக்காளர்முதலாயபெருந்தலத்தோரிக்கதையின்பெற்றிகேட்டார்
செருக்காகவவண்மைந்தன்வரந்தருவானிப்பதிகஞ்செப்பினனே. (௨௩)

வேறு.

†கலியுகவியாதன்சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழினானுயிரமென விருத்தம்போற்றிச்
சலிவறுவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபூம
ஞெலிகெழுமறையோர்கோமானுயர்ந்தவுருவப்பச்சொன்னான். (௨௪)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

*தாரகாகண என்றும் பாடம்.

† இச்செய்யுள் பலபிரதிகளிலுங்காணப்படுதலாற் பாரதமுழுவதும் இவ்வாறு பாடப் பட்டிருந்தன போலும்.

அவ்வைபாடலுக்குநறுநெய்பால்பெருகியருந்தமிழறிவினாற்சிறந்து
பௌவநீராடைத்தரணிமான்மார்பிற்பயிலுமுத்தரியமும்போன்று
மொய்வரால்கெண்டைவாளைசேன்மலங்குமுதலியசனமெதிர்கொள்ளத்
தெய்வமாநதிநீர்பாக்குநாடந்தத்திருமுனைப்பாடிநன்னாடு. (அ)

பாவருந்தமிழாற்பேர்பெறுபனுவற்பாவலர்பாதிநாளிரவின்
மூவருநெருக்கிமொழிவிளக்கேற்றிமுகுந்தனைத்தொழுதநன்னாடு
தேவருமறையுமின்னமுங்காணாச்செஞ்சடைக்கடவுளைப்பாடி
யாவருமதித்தோர்மூவரிலிருவர்பிறந்தநாடிந்தநன்னாடு. (கூ)

வேறு.

அந்தத்திருநாட்டந்தநதியமுதம்பெருகியிருகரையுஞ்
சந்தத்துடன்காரகில்கமழத்தடங்காவகஞ்சூழ்தடநிறைப்பக்
கந்தக்குவளைமேய்பகட்டின்காலானெரிந்துகதிர்முத்தஞ்
சிந்தச்சிந்தக்கொழுமுனைக்குமுன்னே*ருழவசெய்ச்சங்கம். (க0)

கொழுநீர்மதுவுண்கடைசியர்தங்குழைதோய்விழியினெழுநிழலைக்
கழுநீர்மலரென்றொருபகலுங்காலாண்மயக்கிக்களைதுவைப்பார்
முழுநீரூடுதமதுநிழன்முழுதுங்கண்டுதொழுதிறைஞ்சிச்
செழுநீரரமங்கையரென்றுதிகைப்பார்நகைப்பார்செறுவெல்லாம். (கக)

கரும்புங்கமுகுந்தலைதெரியாக்கழனிச்செந்நெற்களையாகி
யரும்புங்குவளைநறுமலர்த்தேனாறாயெங்குஞ்சேறாக
விரும்புஞ்சுருதியிசைகேட்டுவேலைக்கழிக்கானலங்கைதை
சுரும்புந்தும்பிகளுமருந்தமாறாதென்றுஞ்சோறிடுமால். (கஉ)

வேறு.

கம்பலைக்கழனிச்சேனைக்காவலர்கரங்கணீக்கிப்
பைம்புலத்துழுநர்தங்கள்பலவகைவிளைவுமீட்டி
யைம்புலத்தவர்க்குமீந்தாங்கறத்தினைவளர்த்தலாலே
செம்புலக்கிழத்திக்காவியன்னதச்செல்வநாடே. (கங)

வேறு

எண்ணுமாகடலேழுமன்றிருகடலாகப்
பெண்ணைமாநதிநறுநெய்பால்பெருகுமப்பழனப்
பண்ணைநீள்வளம்பல்குசீர்ப்பழையநன்னாட்டில்
வண்ணநான்கினுமுயர்ந்துளோரொருமுனிவந்தான். (கச)

ஐந்துபாவுடைநால்வகைக்கவிக்கதிபதியாய்
வந்துவட்டமாமணியினன்மணிமுடிபுனைந்து
பைந்துழாய்முடிப்பரமனைப்பலகவித்துறையுஞ்
சிந்தையான்மொழிந்தன்பர்தந்திருவுளம்பெற்றோன். (கரு)

தென்னர்சோலர்செம்பியரெனப்பெயர்சிறந்த
மன்னர்மூவரும்வழங்கியவரிசையாலுயர்ந்தோன்
முன்னரெண்ணியமுத்தமிழ்ப்பாவலரெவரும்
பின்னர்வந்தொருவடிவுகொண்டனரெனப்பிறந்தோன். (கசா)

---

*உழவு செயுஞ் சங்கம்என்றும்பாடம்.

தாரகாயணவண்டலைதண்டலைச்சனியூர்
வீரராகவனருள்பெறுவில்லிபுத்தூர
னாராமுடிமண்மிசையுயர்புகழ்நிறுத்தித்
தீரகாகளம்பெறுதலின்யாரினுஞ்சிறந்தோன். (௧௭)

வேறு.

எங்குமிவனிசைபரப்பிவருநாளில்யாமுரைத்தவிந்தநாட்டிற்
கொங்கர்குலவரபதியாட்கொண்டானென்றொருவண்மைக்குரிசிறோன்றி
வெங்கலியின்மூழ்காமற்கருநடப்போர்வெள்ளத்துவிழாமனான்காஞ்
சங்கமெனமுச்சங்கத்தண்டமிழ்நூல்கலங்காமற்றலைகண்டானே. (௧௮)

மற்றவனிப்புவியாளும்வளவனுக்குமுடிகவித்துவழுதித்தெவ்வைச்
செற்றவனுக்கவனியெல்லாஞ்செங்கோன்மைநிலையிட்டுச்செல்வமெல்லாங்
கற்றவருக்கிருகையுடைக்கற்பகம்போலினிதளித்துக்கமலமாதுங்
கொற்றவையுமனங்களிப்பத்தன்னைமேருவினுங்கோட்டினனே. (௧௯)

தென்னாட்டில்வடநாட்டிற்குடநாட்டிற்குணநாட்டிற்றெவ்வரோடக்
கன்னாட்டியமர்பொருதுகங்கைநீரூட்டுவித்துக்கண்டன்வேங்கை
யெந்நாட்டுமெழுதியவன்றிருமரபோர்பெற்றபுகழ்யாவர்பெற்றா
ரந்நாட்டுக்கொற்றமெல்லாமக்குரிசில்புகழொடவதரித்ததன்றே. (௨௦)

ஆற்றியமெய்ச்செல்வத்தாலளகையைவென்றிருங்கவினாலமரரூரை
மாற்றியபொற்றடமதில்சூழ்வக்கபாகையினறந்தின்வடிவம்போலத்
தோற்றியவக்கொங்கர்பிரான்சூழ்தமிழ்நாட்கொண்டான்சுற்றத்தோடு
போற்றியவிப்புவிமுழுதுந்தன்றிருப்பேர்மொழிகொண்டேபுரந்தானம்மா. (௨௧)

பிறந்துய்யக்கொண்டவனிப்பேருலகம்பெருவாழ்வுகூருநாளி
னிறைந்தபுகழ்ச்சனிநகர்வாழ்வில்லிபுத்தூரனைநோக்கிநீயுநானும்
பிறந்ததிசைக்கிசைநிற்பப்பாரதமாம்பெருங்கதையைப்பெரியோர்தங்கள்
சிறந்தசெவிக்கமுதமெனத்தமிழ்மொழியின்விருத்தத்தாற்செய்கவென்றான். (௨௨)

இருக்காதிமறைமொழிந்தோனியம்பியவிப்பெருங்கதையையாருங்கேட்பச்
சுருக்காகப்புராணமுறைசொல்லுகவென்றவினவனுஞ்சொல்லலுற்றான்
பெருக்காளர்முதலாயபெருங்குலத்தோரிக்கதையின்பெற்றிகேட்டார்
செருக்காகவவண்மைந்தன்வரந்தருவானிப்பதிகஞ்செப்பினனே. (௨௩)

வேறு.

†கவியுகவியாதன்சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழினாறாயிரமென விருத்தம்போற்றிச்
சலிவறுவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபூம
னொலிகெழுமறையோர்கோமானுயர்ந்தவுருவப்பச்சொன்னான். (௨௪)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

*தாரகாகண என்றும் பாடம்.

† இச்செய்யுள் பலபிரதிகளிலுங்காணப்படுதலாற் பாரதமுழுவதும் இவராற் பாடப் பட்டிருந்தன போலும்.

உ

கணபதி துணை.

# மகாபாரதம்.

## தற்சிறப்புப்பாயிரம்.

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதஞ்சொன்னநா
ளேடாக*வடமேரு வெற்பாக வங்கூ ரெழுத்தாணிதன்
கோடாக வெழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு கூர்வாமரோ. (க)

†முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்வினைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரு
மொருகோடிபூதேவருங்கைதொழுங்கோவைபுறவுன்னுவாம். (உ)

வேறு.

ஆக்குமாறயனாமுதலாக்கியவுலகங்
காக்குமாறுசெங்கண்ணிறைக்கணையங்கடலாம்
வீக்குமாறரனாமவைவீந்தநாண்மீளப்
பூக்குமாமுதலெவனவன்பொன்னடிபோற்றி. (ங)

ஏழ்பெருங்கடன்மாநிலமெங்குநல்லறமே
சூழ்கவண்டமிழோங்குகதேங்குகசுருதி
வீழ்கபைம்புயல்விளங்குகவளங்கெழுமனுநூல்
வாழ்கவன்புடையடியவர்மன்னுமாதவமே. (ச)

கன்னபாகமெய்களிப்பதோரளப்பில்கதைமுன்
சொன்னபாவலன்றுகள்றசுகன்றிருத்தாதை
யன்னபாரதந்தன்னையோரறிவிலேனுரைப்ப
தென்னபாவமற்றென்னையின்றென்சொலாதுலகே. (ரு)

மண்ணிலாரணநிகரெனவியாதனார்வகுத்த
வெண்ணிலாநெடுங்காதையையானறிந்தியம்பல்
விண்ணிலாதவன்விளங்குநீடெல்லையையூமன்
கண்ணிலாதவன்கேட்டலுங்காண்டலுங்கடுக்கும். (சு)

முன்சொலாகியசொல்லெலாமுழுதுணர்முனிவன்
றன்சொலாகியமாப்பெருங்காப்பியந்தன்னைத்
தென்சொலாலுரைசெய்தவிற்செழுஞ்சுவையில்லாப்
புன்சொலாயினும்பொறுத்தருள்புரிவரேபுலவோர். (எ)

முன்னுமாமறைமுனிவருந்தேவரும்பிறரும்
பன்னுமாமொழிப்பாரதப்பெருமையும்பாரேன்
மன்னுமாதவன்சரிதமுமிடையிடைவழங்கு
மென்னுமாசையால்யானுமீதியம்புதற்கிசைந்தேன். (அ)

---

* மாமேரு என்றும்பாடம்.

† இச்செய்யுள் சிலபிரதிகளிலில்லை.

உ

முதலாவது

# ஆதிபருவம்.

## குருகுலச்சருக்கம்.



எங்கண்மாதவனிதயமாமலர்வருமுதயத்
திங்கண்மாமரபினிற்பிறந்திசையுடன்சிறந்தோ
ரங்கண்மாநிலத்தரசர்பல்கோடியவ்வரசர்
தங்கண்மாக்கதையானறியளவையிற்சமைக்கேன். (௧)

பொருந்தவானுறைநாள்களைநாடொறும்புணர்வோ
னருந்தவானவர்க்காரமுதன்புடனளிப்போன்
றிருந்தவானவர்க்கரியவன்செஞ்சடைமுடிமே
லிருந்தவானவன்பெருமையையார்கொலோவிசைப்பார். (௨)

மண்டலம்பயிலுரகர்பேருயிர்ப்பினான்மயங்கி
மண்டலம்பொரவருந்தியபெருந்துயர்மாற
மண்டலந்தனைநிழலெனுமரபினாற்றனது
மண்டலம்பொழியமிழ்தின்மெய்குளிரவேவைத்தோன். (௩)

பைம்பொன்மால்வரைமத்தினிற்பணிவடம்பிணித்திட்
டும்பரானவர்தானவருடன்கடைந்திடவே
தம்பமானதுமன்றியத்தழல்விடந்தணிய
வம்புராசியினாரமுதுடனவதரித்தோன். (௪)

பத்திரட்டியிலீரிரண்டொழிந்தபல்கலையோன்
மித்திரற்கவைகொடுத்துமுன்மீளவுங்கவர்வோ
னத்திரிப்பெயரந்தணனம்பகந்தனிலுஞ்
சித்திரக்கனன்முகத்தினும்பிறந்தொளிசிறந்தோன். (௫)

அந்தியாரணமந்திரத்தன்புடனிவனை
வந்தியாதவர்மண்ணினும்வானினுமில்லை
புந்தியாலுயர்புதனெனும்புதல்வனைமகிழ்வாற்
றந்தியாவருங்களிப்புறவிருக்குநாடன்னில். (௬)

வளைநெடுஞ்சிலைக்காத்தினன்மநுவருண்மைந்த
னுளையெழும்பரித்தேரினானுறவதொன்றுணரான்
விளையருந்தவவிபினமுற்றம்பிகைவிதியா
லிளையெனும்பெயர்மடவரலாயினனென்ப. (௭)

மாரகாகளமெழுவதோர்மதுமலர்க்காவிற்
ருரகாபதிபுதல்வனத்தையலைக்காணு
வீரகாமபாணங்களின்மெலிவுறமயங்கித்
தீரகாமமுஞ்செவ்வியுமிரும்படிதிளைத்தான். (அ)

புதனுமந்தமென்பூவையும்புரூரவாவினைத்தஞ்
சுதனெனும்படிதோற்றுவித்தனரவன்றோன்றி
யிதநலம்பெறுமழகினுந்திறலினுமிலங்கி
மதனனுங்கலைமுருகனுமெனும்படிவளர்ந்தான். (கூ)

பொருப்பினைச்சிறகரிந்தவன்புரத்துமங்கையரு
ளுருப்பசிப்பெயரொண்டொடியுருவினிற்சிறந்தா
டருப்பொழிற்பயில்காலையிற்றனவர்காணு
விருப்புறக்கவர்ந்தேகினரவளுடன்விசும்பில். (க0)

கொண்டுபோதலுமபயமென்றுருப்பசிகூவ
வண்டர்யாவருமஞ்சினரவருடனடுபோர்
வண்டுசூழ்குழலணங்கையிம்மதிமகன்மகனுங்
கண்டுதேர்*நனிகடவினனசுரர்மெய்கலங்க. (கக)

நிறந்தருங்குழலரிவையைநிறுத்திவாளவுணர்
புறந்தரும்படிபுரிந்தபின்புரந்தரன்றாதான்
மறந்தருங்கழன்மன்னவன்மண்மிசையணைந்து
சிறந்தவன்பொடத்தெரிவையைநலம்பெறச்சேர்ந்தான். (கஉ)

மாயனூருவின்வந்தருளந்தமான்வயிற்றி
லாயுவென்றொருசெம்மலையம்மகனளித்தான்
றேயுவும்பலதேவருமகிழமற்றிவனே
மேயவண்புகழ்வேந்தரில்வேள்வியான்மிக்கோன். (கங)

மூசுடமும்பெருஞ்சேனையுந்தாணியுமுற்றுஞ்
சூசுடநீரெனச்சதமகம்புரியருந்தவத்தோ
னசுடனுமவேனராதிபனுகருக்கரசாய்
மதுடமேந்தியகுரிசிலாயுவின்றிருமைந்தன். (கச)

புரந்தரன்பதம்பெற்றபின்புலோமசைமுயக்கிற்
கிரந்துமற்றவளேவலின்யானமுற்றேறி
வரந்தருங்குறுமுனிமுனிவாய்மையான்மருண்டு
நிரந்தரம்பெரும்புயங்கமானவனுமந்நிருபன். (கரு)

மற்றவன்றிருமைந்தன் † வின்மைந்திஞலுயர்ந்த
கொற்றவன்றிறற்கொற்றவைக்கிருபுயங்கொடுத்தோன்
முற்றவன்பகைமுகங்கெடமுகந்தொறுந்திசையிற்
செற்றவன்பெருஞ்செற்றமில்குணங்களிற்சிறந்தோன். (கசு)

---

* தனிகடவினன் என்றும் பாடம்.

† வேன்மைந்தனிலுயர்ந்த என்றும் பாடம்.

யயாதியென்றுகொண்டிவனையேயெவரினுஞ்சிறக்க
வியாதனும்புகழ்ந்துரைத்ததுமற்றிவன்மேனாட்
புயாசலங்களுக்கிசையவேபுகரவன்புதல்வி
குயாசலந்தழீஇயிருவர்வெங்குமரரையளித்தான்.

அன்னகாலையிலிவடனதாருயிர்த்துணையாய்
முன்னிசைந்தபேரிசைவினாலேவலின்முயல்வா
ணன்னலந்திகழ்கவிதனக்குரைகெழுநண்பா
மன்னவன்றருமடவரலிவனுழைவந்தாள்.

ஆழிமன்னனவ்வணங்கினையணங்கெனக்கண்டு
பாழிவன்புயம்வலந்துடித்துடனுறப்பரிந்து
வாழிதன்மனைமடவரலறிவுறாவண்ணம்
யாழினோர்பெரும்புணர்ச்சியினிதயமொத்திசைந்தான். (௧௯)

சாருமன்பினிற்கற்பினிற்சிறந்தசன்மிட்டை
சேருமைந்தினுருவினுந்தேசினுஞ்சிறந்து
மேருவென்றிடமேதினிபாவையுந்தரிப்பான்
பூருவென்றொருபுண்ணியப்புதல்வனைப்பயந்தாள். (௨௦)

மருவிளங்கொடியனையமென்மருங்குலாள்பின்னு
மிருவர்மைந்தரைப்பயந்தனளிறைமனைகாணா
வுருவிளங்கியவுலகுடைநிருபனுக்கிவண்மேற்
றிருவுளங்கொலென்றழன்றுதன்றாதையிற்சென்றாள். (௨௧)

சென்றுதாதையைப்பணிந்திதுசெப்பலுஞ்சினவேல்
வென்றிமன்னனைவிருத்தனாம்வகையவன்விதித்தா
னன்றுதொட்டிவனம்முதற்பிணியினாலழுங்கி
யின்றுநூறெனநரைமுதிர்யாக்கையோடிருந்தான். (௨௨)

அந்தமன்னவன்மைந்தரையழைத்தெனக்குசனார்
தந்தமூப்பைநீர்கொண்மினும்மிளமைதந்தென்ன
மைந்தர்யாவருமறுத்திடப்பூருமற்றவன்ற
னிந்தமூப்பினைக்கவர்ந்துதன்னிளமையுமீந்தான். (௨௩)

விந்தைபூமகண்முதலியமடந்தையர்விரும்ப
முந்தைமாமணம்யாவையும்பலபகன்முற்றிச்
சிந்தையாதரந்தணிந்தபின்சிந்தனையின்றித்
தந்தைமீளவுமிளமைதன்றனயனுக்களித்தான். (௨௪)

இடியுமாறுகொணெடுமொழியயாதியன்றிவற்கே
முடியுமாலையுமுத்தவெண்கவிகையுமுரசும்
படியும்யாவையும்வழங்கியெம்பணிமதிமரபிற்
கடியுநீயினியெனமகிழ்ந்தளியுடனளித்தான். (௨௫)

விரதமிஞ்சியவேள்வியாற்கேள்வியான்மிக்கான்
சுரதமங்கையர்முலைக்குவடணைவரைத்தோளான்
பாதனென்றொருபார்த்திவன்பாதமுமிசையுஞ்
சரதமின்புறவக்குலந்தனிலவதரித்தான். (உசு)

சுரசமூகமுஞ்சுராரிகள்சமூகமுஞ்சூழ
விரசுபூசலின்வாசவனடுங்கிவெந்நிடுநா
ளரசர்யாவருமறுமுகக்கடவுளென் றயிர்ப்பப்
புரசைநாகமுன்கடவினுகமும்புரந்தோன். (உஎ)

முக்குலத்தினுமதிக்குலமுதன்மைபெற்றதுவென்
றெக்குலத்தினிலரசும்வந்திணையடியிறைஞ்ச
மைக்குலத்தினிற்புட்கலாவர்த்தமாமெனவே
யக்குலத்தினிலத்தியென்பவனவதரித்தான். (உஅ)

கொண்டல்வாகனுங்குபோனுநிகரெனக்குறித்துப்
புண்டரீகன்முன்படைத்தவப்புரவலனமைத்த
தெண்டிசாமுகத்தெழுது சீரியக்கர்மாநகரு
மண்டர்தானமுமுவமைகூரத்திஞபுரியே. (உகூ)

மீனமாகியவிண்ணவன்விநதைமுன்பயந்த
யானமீதெழுந்தருளிவந்திருபதம்வழங்கக்
கானநாண்மலர்க்கயத்திடைக்கயமும்வெங்காமு
மானமானவரிருவருமக்குலத்தவரே. (ங0)

பொருபெரும்படைத்தொழில்வயப்புரவிதேர்மதமா
மருவருந்தொழின்மன்னர்நீதியின்றொழில்வளங்கூர்
சுருதியின்றொழின்முதலியதொழிலனைத்தினுக்குங்
குருவெனும்புகழ்க்குருவுமக்குலத்திலங்குரித்தான். (ஙக)

வருகுலத்தவரெவரையும்வரிசையாலின் றுங்
குருகுலத்தவரெனும்படிபேரிசைகொண்டா
னிருகுலத்தினுமாசறுதேசிஞலிவனுக்
கொருகுலத்தினுமுரைப்பதற்குவமைவேறுண்டோ. (ஙஉ)

வேறு.

அந்தணன்மரபினிலமுதவெண்டிரைச்
சிந்துவின்மிசைவருதிங்களாமெனச்
சந்தனுவெனும்பெயர்த்தரணிகாவலன்
வந்தனனவன்செயல்வகுத்துக்கூறுவாம். (ஙங)

வேனிலானிவனெனவிளங்குகாலையிற்
கானகவேட்டைபோயிளைத்தகாவல
ஞன*மென்குளிர்புனலாசையான்மணித்
தூநிறக்கங்கையாள்சூழலெய்திஞன். (ஙச)

* மெய்குளிர் என்றும் பாடம்.

மருவருங்குழல்விழிவதனம்வார்குழை
யிருதனந்தோள்கழுத்திதழொடின்னகை
புருவம்வண்புறவடிபொற்பப்பாவைய
ருருவுகொண்டனடனதுடைமைதோன்றவே. (௩௫)

கங்கையின்வெள்ளமேற்கருத்துமாறியிம்
மங்கைதன்பேரொளிவனப்பின்வெள்ளமே
தங்கியசோகமுந்தாபமுங்கெடப்
பங்கயவிழிகளாற்பருகினனரோ. (௩௬)

வையகமடந்தைகொல்வரைமடந்தைகொல்
செய்யபங்கயமலர்த்திருமடந்தைகொ
லய்யவண்கலைவிதச்சொன்மடந்தைகொ
லையமுற்றனனிவளார்கொலென்னவே. (௩௭)

கண்ணிமைத்திருநிலங்காலுந்தோய்தலாற்
பெண்ணிவண்மானுடப்பிறப்பினளென
வெண்ணமுற்றவளருகெய்தியாவர்செய்
புண்ணியநீயெனப்புகழ்ந்துபோற்றினன். (௩௮)

போற்றியகுரிசின் *மெய்ப்புளகமெய்தவே
யேற்றியவிழியினளிளகுநெஞ்சினள்
சாற்றியமலரயன்சாபமிவ்வழித்
தோற்றியதெனவுறுதுயர்நீங்கினள். (௩௯)

பொங்கியமாதர்விழிப்புரிவுமாதரந்
தங்கியமுகின்முலைத்தடமுநோக்கியே
யிங்கிதமுறைமைநன்றென்றுவேந்தனு
மங்கிதமுடனவட்கன்புகூரவே. (௪0)

கன்னியேயாமெனிற்கடிகொள்பான்மையை
யென்னின்மற்றுயர்ந்தவரில்லைமண்ணின்மே
லுன்னினைவுரையெனவுசாவினனிகன்
மின்னிலைவடிகொள்வேல்வேந்தர்வேந்தனே. (௪௧)

†நாணினளாமெனநதிமடந்தையும்
பூணுறுமுலைமுகம்பொருந்தநோக்கினள்
சேணுறுதனதுமெய்த்தேசுபோனகை
வாணிலவெழச்சிலவாய்மைகூறுவாள். (௪௨)

இரிந்துமெய்ந்நடுங்கிடயாதியாதுநான்
புரிந்ததுபொறுத்தியேற்புணர்வலுன்புயம்
பரிந்தெனைமறுத்தியேற்பிரிவொடன்றுனைப்
பிரிந்தகன்றிடுவனிப்பிறப்புமாற்றியே. (௪௩)

* மேற்புளகம் என்றும் பாடம்.
† நாணினளொதுங்கினள் என்றும் பாடம்.

மெய்தருவிதியினேன்விரதமற்றிவை
பெய்தரிதொருவராலெய்தவல்லையேற்
கைதருகெனப்பெருங்காதலாளனு
முய்வரிதெனவிசைந்துடன்படுத்தினான். (ச )

எனதுயிரரசுவாழ்வென்பயாவையு
நினதுநின்னேவலினிற்பன்யானென
வனிதையைமருட்டினான்மன்றலெண்ணியே
தனதனுநிகரிலாத்தனமகீபனே. (ச( )

அருமறைமுறையினாலங்கிசான்றெனத்
திருமணம்புரிந்துளந்திகழவைகினா
னிரதியுமதனனுமல்லதில்லைமற்
றொருவருமுவமையென்றுலகுகூறவே. (சக

மருவுறச்சிலபகன்மணந்துமான்விழி
கருவுயிர்த்தனளெனக்களிகொள்காலையிற்
பருவமுற்றன்புடன்பயந்தமைந்தனைப்
பொருபுனற்புதைத்தனள்புவனங்காணவே. (சஎ

கண்டுளம்வெருவிமுன்கதித்தவாசகங்
கொண்டுரையெடுத்திலன் கொண்ட காதலா
ளொண்டொடியுடன்மணந்துருகிவைகினன்
பண்டையினெழுமடிபரிவுகூரவே. (சஅ)

பின்னருமறுவரைப்பெற்றதாய்மன
முன்னரின்மும்மடிமூண்டுமாய்க்கவே
மன்னவனவற்றினும்வாய்திறந்தில
னன்னகர்ச்சனமெலாநடுநடுங்கவே. (சகூ)

வழுவறுகுருகுலமன்னன்மைந்தரோ
ரெழுவரைமுருக்கினளீன்றதாயெனப்
பழுதறுமகப்பலபயந்தமங்கைய
ரழுதனர்கட்புனலாறுபாயவே. (ருo)

கங்கையென்றுலகெலாங்கைதொழத்தகு
மங்கையங்கனந்தாம்வயிறுவாய்த்துழி
வெங்கயகடகரிவேந்தன்மாமனப்
பங்கயத்துறந்ததுபஞ்சுயவின்புமே. (ருக)

மதலையைப்பயந்தனண்மடந்தையென்றலுங்
கதுமெனச்சென்றுதாய்கைப்படாவகை
யிதமுறப்பரிவுடனெடுத்துமற்றவள்
பதயுகத்தாமரைபணிந்துபேசுவான். (ருஉ)

நிறுத்துகமரபினைநிலைபெறும்படி
வெறுத்தெனைமுனியினும்வேண்டுமாலிது
மறுத்தனன்யானெனமனஞ்செயாதினிப்
பொறுத்தருள்புரிகவிப்புதல்வன்றன்னையே. (௫௩)

என்றுபற்பலமொழியிவணியம்பவே
நன்றுநன்றவனிபநவின்றவாசக
மின்றுநின்றிரங்கினையெழுவர்மைந்தரைக்
கொன்றவன்றென்செய்தாய்கொடியையென்னவே. (௫௪)

அரசனுமுணர்ந்துநீயார்கொல்பாலரைத்
திரைசெறிபுனலிடைச்செற்றதென்கொலா
முறைசெயவேண்டுமென்றுரைப்பவஞ்சியும்
வரிசையினுயர்ந்ததன்வரவுகூறுவாள். (௫௫)

வான்முகமதியமும்புதியமாலிகைக்
கான்முகவிதழியுங்கமழுங்கங்கையா
டேன்முகம்பொழிதருசெய்யதாமரை
நான்முகன்பேரவைநண்ணினாளரோ. (௫௬)

இருங்கலையிமையவரெதிரிறைஞ்சுவாண்
மருங்கலை*மதியினைமதிக்குமாறுபோ
லருங்கலையயனுறவதிர்ந்துவீசினான்
பொருங்கலையெனுமிகற்புரவிவீரனே. (௫௭)

திருத்தகுமவயவந்திகழ்ந்துதோன்றவே
கருத்துடனவைக்கணோர்கண்புதைக்கவு
மருத்தினைமனனுறமகிழ்ந்துகாதல்கூ
ருருத்தகுமுரிமையோடொருவனோக்கினான். (௫௮)

நோக்கியவருணனைநுவலுநான்மறை
யாக்கியமுனியுருத்தழன்றுபார்மகள்
பாக்கியமென்னவுற்பவிக்கநீயெனத்
தாக்கியவுருமெனச்சபித்தகாலையே. (௫௯)

கோனிடநினைவொடுகுறுகிநீயுநன்
மானிடமடந்தையாய்மணந்துமீள்கென
வானிடைநதியையும்வழுவினாலவ
டானிடருறும்வகைதந்தையேவினான். (௬௦)

பாரினுநமக்கொருபதமுண்டென்றவ
ளீரமுற்றிழிதருமெல்லைவானகத்
தோரிடையுடன்விழுமுற்கைபோன்முக
வாரொளிமழுங்கினர்வசுக்கடோன்றினார். (௬௧)

* அலையினை மறிக்குமாறு என்றுபாடம்.

என்னையிங்கிழிந்தவாறெங்கண்மாநதி
யன்னையென்றவளடியவர்வணங்கனுந்
தன்னையங்கயனிடுசாபங்கூறினள்
பின்னையங்கவருந்தம்பெற்றிபேசுவார். (௬உ)

உற்றுறையெங்களுளொருவன்றன்மனைப்
பொற்றொடிக்கழிந்தவள்புன்மைவாய்மையாற்
சற்றுமெய்யுணர்வறத்தகாதொன்றெண்ணினன்
மற்றெழுவருமவன்வயத்தாயினேம். (௬௩)

தூநகைமொழிப்படிசோரராகியே
வானவர்வணங்குதாள்வசிட்டன்வாழ்மனைத்
தேனுவையிரவினிற்சென்றுகைக்கொளா
மீனெறி*காங்தெனமீளவேகினேம். (௬௪)

பசுக்கவர்ந்தனரெனப்பயினுமாதவ
முசுக்குலமனையமெய்ம்முனிவர்கூறலுஞ்
சிசுக்களினறிவிலாச்சிந்தைசெய்தவர்
வசுக்களென்றருந்ததிமகிழ்நனெண்ணினன். (௬௫)

உம்பதமிழந்துநீருததிமண்ணுளோர்
தம்பதம்பெறுகெனச்சாபங்கூறலு
மெம்பதம்பெறுவதென்றினியெனுவவன்
செம்பதமெமதுபூஞ்சென்னியேந்தினேம். (௬௬)

அன்புடைமுனிமுனிவாறிடானுடப்
புன்பிறப்பெழுவரும்புரிந்துமீளுதிர்
மின்புரைதெரிவைசொல்விழைந்தநீயவ
னின்பமற்றநேகநாளிருத்திபென்னவே. (௬௭)

விண்வருசெல்வமும்விழைவுமேன்மையு
மெண்மருமிழந்தனமென்செய்வேமென
மண்வருதையலைவணங்கத்தையனும்
பண்வருமொழிசிலபகர்ந்துதேற்றினள். (௬௮)

வலத்துயர்தடம்புயவருணனுங்குரு
குலத்தினிலயன்வரங்கொண்டுதோன்றுமா
னலத்துடனவன்மனைநண்ணுமெல்லையி
னிலத்திடையென்வயினீருந்தோன்றுவீர். (௬௯)

அஞ்சன்மினும்மைநானவனிதோயுமு
னெஞ்சவீட்டிடுவனிவ்விறைவன்றன்னையு
நெஞ்சுறத்தந்தைபானிறுத்திநானுமவ்
வஞ்சகப்பிறப்பினைமாற்றுவேனென்றாள். (எ0)

---

* கவர்ந்தென என்றும் பாடம்.

நாவிருவசுக்களுநதிமடந்தைசொற்
பாவிருசெவிப்படப்*படாதநற்றவஞ்
சாலிருநிலத்திழிதாயையன்புடன்
காலிருகரத்திறைஞ்சுகிந்துபோற்றினார். (௭௧)

சதையமீன்கடவுளுஞ்சசிகுலத்துநல்
விதையெனமேதினிமீதுதோன்றினன்
றுதையளிசெறிகுழற்றோகையாயினு
ளிதையமுற்றுயர்நதியென்னுமின்னுமே. (௭௨)

தவமுறக்குடதிசைத்தலைவன்றராமா
மவள்வயிற்றுதித்தனரந்தவெண்மரு
முவகையிற்பெருமநீயுணர்ந்துகொள்கென
விவடிருக்கணவனுமின்னகூறுவான். (௭௩)

அறப்பயனென்னுமாறறிவிலாவெமைப்
பிறப்புணர்த்தினைமகப்பேறுசெய்துநீ
யிறப்பவரெழுவரோடேகலாவுயர்
சிறப்புடையினையவன்செய்வதென்னென்றான். (௭௪)

முக்குலத்தரசினுமுதன்மையாளுய
ரிக்குலத்திவனலாதில்லைமாமகா
ரக்குலத்தவமுனியருளினாலிவன்
மெய்க்குலத் †தந்தையாம்விழைவுமில்லென்றாள். (௭௫)

மன்னவர்தொழுகழன்மன்னன்மைந்தனோ
டின்னமுமொருவனையினிதளித்துநாம்
பன்னகநெடுமுடிப்பார்களிக்கவே
பொன்னகரிருவருமபோதுமென்னவே. (௭௬)

போயிருந்தென்பயன்போகம்பல்வகை
யாயிருந்தனவெலாமருந்தியின்னமு
மாயிருந்தாணியின்மன்னுசில்பக
னீயிருந்தரசியனிறுத்திமீளுவாய். (௭௭)

இப்புதல்வனுமினியென்னொடேகியே
மெய்ப்படுகாளையாம்பதத்துமீளநின்
கைப்படுத்துவலெனக்கணவனைத்தழீஇ
யப்பெரும்புதல்வனோடவளுமேகினாள் (௭௮)

## வேறு.

அன்றுதொட்டிவனுமகன்றபூங்கொடியையகுறவெழுதிமுன்வைத்து
மொன்றுபட்டுவமைப்பொருள்களாற்கண்டுமுறைத்தவையெடுத்தெடுத்துரைத்து
மன்றவிற்றலைநாள்விழைவொடுமணந்தமடந்தையர்வதனமுநோக்கா
னென்றினிக்கிடைப்பதென்றுளம்வருந்தியெண்ணுநாளெல்லையாண்டிருந்தான். (௭௯)

---

* படர்ந்த நல்லறம் என்றும் பாடம்.

† தந்தையால் என்றும் பாடம்.

பின்னொருதினத்திலமைச்சரும்பிறரும்பெரும்படைத்தலைவருஞ்சூழ
முன்னொருதினத்தின்வனத்துமாவேட்டைமுன்னினன்முயன்றுபோய்முற்றி
மின்னொருவடிவுகொண்டெனச்சிறந்தமெல்லியன்மீண்டுறைமறையுந்
தன்னொருமதலையாக்கமுங்கருதிச்சானவித்தடங்கரையடைந்தான். (அ0)

பண்டுதானவளையெதிர்ப்படுங்கனகப்பைங்கொடிப்பந்தர்வானிழலும்
வண்டறுநறைப்பூஞ்சோலையுந்தடமுமருங்கலைமலயமாருதமும்
புண்டரீகமுஞ்செங்காவியுங்கமழும்புளினமும்புளினமென்றுறையுங்
கண்டுகாரிகையையிம்மையிலின்னுங்காண்குமோவெனமனங்கசிந்தான். (அக)

பிரிந்தநாளெண்ணிப் *பகீரதிப்பெருக்கைப்பேதுறுங்குறிப்பொடுநோக்கிக்
கரிந்தபாதவம்போனின்றவப்பொழுதிற்கால்பொரக்குனித்தகார்முகமுந்
தெரிந்துமேன்மேலுந்தொடுத்தசாயகமுஞ்சிலம்பெனத்திரண்டதோளிணையும்
விரிந்தநூன்மார்புமாகிமுன்னடந்தான்விழிகளித்திடவொருவீரன். (அஉ)

வியந்திடவருமக்குரிசிலையிவனேவிடையவன்குமரனென்றயிர்க்கும்
வயந்தனிலுலவுமதன்கொலோவென்னும்வாசவன்மதலையென்றெண்ணு
முயர்ந்தவரிவனின்வின்மையினில்லையொருவருமுலகின்மேலென்னும்
பயந்ததன்வடிவின்படியெனத்திகழும்பான்மையைநினைந்திலன்பயந்தோன். (அங)

தந்தையென்றிவனையுணர்கிலாமதியாற்சராசனந்தழுவுறவளைத்து
மைந்தனுமொருபோர்மோகனக்கணையான்மறையுடன்மார்புறவெழுதி
யிந்திரதனுவோடிந்திரனெழிலியிடைமறைந்தனனெனப்புடையே
சிந்தியதிவலைச்சிந்துவின்மறைந்தானரசனுமகிதலஞ்சேர்ந்தான். (அச)

காதலனயர்வுந்திருமகன்புனலிற்கரந்ததுங்கண்டுளமுருகி
மேதகுவடிவுகொண்டுமற்றந்தவெஞ்சிலைவிஞைதனுந்தானு
மோதவெண்டிரையின்மதியுடனுதித்தவொண்மலர்க்கொடியெனவோடித்
தூதுளங்கனிவாய்மலர்ந்தினிதழைத்துச்சூடகச்செங்கையாலெடுத்தாள். (அரு)

வாடியதருவின்மழைபொழிவதுபோன்மடவால்கருணைநீர்பொழியக்
கூடியவுணர்வோடெழுந்த †காவலனைக்கொங்கைமார்புறத்தழீஇக்கொண்டு
நாடியகருமம்வாய்த்ததென்றுவகைநலம்பெறத்தந்தைபைங்கழற்கால்
சூடியமகவைக்கைக்கொடுத்திவளுந்தோன்றலோடிவையிவைசொன்னாள். (அசு)

வேந்தகேளிவனுன்மதலையேதேவவிரதனென்றிவன்பெயர்பல்லோ
ராய்ந்தநூல்வெள்ளங்கடந்தனன்கரைகண்டருந்ததிபதிதிருவருளாற்
பூந்துழாய்மாலைப்போர்மழுப்படையோன்பொன்னடிபொலிவுறவணங்கி
யேந்துநீள்சிலையும்பலகலைமறையுமேனையபடைகளும்பயின்றான். (அஎ)

மகப்பெறுமவரிலொருவரும்பெறாதமகிழ்ச்சியும்வாழ்வுமெய்வலியு
மிகப்பெறுந்தவம்புரிந்தனைநின்னைவேறினிவெல்லவல்லவரா
ருகப்புறவிவனோடவனியாளுகவென்றோரடிக்கோரடிபுரிந்து
தகப்பெறுமயிலுந்தலைவன்மேலுள்ளந்தகைவுறத்தடம்புனல்புகுந்தாள். (அஅ)

---

* பகீரதி நோக்கிப் பெருந்தகை பெருந்திகைப்பெய்தி என்றும் பாடம்.

† காதலனை என்றும் பாடம்.

மனைவியைக்கண்டுமீளவும்பிரிந்தவருத்தமெய்த்திருத்தகுகேள்வித்
தனையனைக்கண்டமகிழ்ச்சியாலருக்கன்றனனென திரிருளெனத்தணப்ப
நினைவினிற்சிறந்ததேர்மிசைப்புதனுநிறைகலைமதியுமேநிகர்ப்பப்
புனைமணிக்கழலானவனொடுந்தனதுபுரமெதிர்கைதொழப்புகுந்தான். (அகூ)

தானுமம்மகனுந்தரியலர்வணங்கத்தங்குநன்னாளிலங்கொருநாட்
டேனுறுந்தொடையலிளவரசனைத்தன்றிகழரியாசனத்திருத்திக்
கானுறுவிலங்கினுயிர்கவர்நசையாற்காற்றெனக்கூற்றெனநடந்து
பானுவின்மகளாங்காளிந்திநதியின்பாரமெய்தினன்விறற்படையோன். (கூ0)

பாசறைமுழுதுமொருபெருங்கடவுட்பரிமளமொல்லெனப்பரப்ப
யோசனையளவுங்கரையிருமருங்குமுயிர்க்குமெல்லுயிர்ப்பெதிரோடித்
தாசர்தங்குலத்துக்கதிபதியளித்ததையலைத்தரணிபர்க்கெல்லா
மீசனுமுருகிக்கண்டிளங்கனியாவிலங்கிழைபார்கொனீயென்றான். (கூக)

நிருபனதுரைகேட்டஞ்சினளொதுங்கிநின்றுகைநினைவுறக்குவியா
விருதுறைநெறியில்வருநரைகாவாயேற்றுவலெனந்தையேவலினென்
றுரைசெயுமளவில்வேட்கையாலுள்ளமுருகிமெய்ம்மெலிந்தொளிகருகி
யரிவையையளித்தோன்பக்கமதடைந்தானவனும்வந்தடிமலர்பணிந்தான். (கூஉ)

பாகனையரசன்குறிப்பினாலேவப்பாகனும்பரதவர்பதியை
யோகையோடிருத்திநின்னுழைவதுவையுலகுடைநாயகனயந்தான்
ஞோகைசெய்தவமோநின்பெருந்தவமோதொல்குலத்தவர்புரிதவமோ
வாகுமிவ்வாழ்வென்றுரைத்தனனவனுமாகுமாறவனுடனுரைப்பான். (கூங)

பூருவின்மரபிற்பிறந்தகோமகனென்புன்குலமகள்கும்பொருந்தன்
மேருவுமணுவுநிறக்குமாறொக்குமேலினியிவைபுகன்றென்கொல்
பாருவகையினாலாளுதற்கிருந்தான்பகீரதிமகனிவள்பயந்த
சீருடைமகன்மற்றென்செய்வானிசைபின்செய்கைதான்றிருவுளங்குறித்தே. (கூச)

என்னமுன்னிறைஞ்சியிவன்மொழிகொடுஞ்சொலிறையவன்கேட்டலுமிரண்டு
கன்னமுமழற்கோல்வைத்ததொத்தியங்கருகிவேறொன்றையுங்கழறான்
முன்னமுன்மதத்தான்முனியிடுசாபமுடிந்ததென்றுகுலமூற்றி
யன்னமுங்குயிலும்பயிலுநீள்படப்பையத்தினபுரியைமீண்டடைந்தான். (கூரு)

கங்கையாளிடத்திலாதரமெலிந்த *காலையிற்களிந்தவெற்பளித்த
மங்கையாமென்னநின்றபூங்கொடிமேல்வைத்தபோராதரமலியப்
பங்கயானனந்தான்முறைமுறைகுறையும்பான்மதியெனவழகழிந்த
சங்கையான்மைந்தன்வினவலுநிகழ்ந்ததன்மையைச்சாரதிபுகன்றான். (கூசு)

கேட்டவக்கணத்திற்கடற்புறத்தாசைக்கேண்மையோடடைந்திளவரசும்
பாட்டனீயெனக்குப்பெற்றதாய்தானும்பகீரதியல்லணின்மகளே
நாட்டமின்றெனக்கியாதனுநிலைபிந்தநாலமுமெம்பியர்ஞால
மீட்டமற்றின்றேதிருமணநேர்வாய்நீதிகூர்நிருபனுக்கெனறான். (கூஎ)

---

* காலையில் வேலையிற்பிறந்த என்று பாடம்.

விரதமுற்றியவாறனைவருங்கேண்மின்மெய்யுயிர்வீடுமன்றளவுஞ்
சரதமுற்றியமெய்த்தாதுவுமூலத்தழலுடன்மீதெழுந்தகைத்தே
யிரதமுற்றியசொன்மகப்பெறுதவனுக்கில்லையென்றியம்புநற்கதியுஞ்
சரதமுற்றியவென்றந்தைதன்பொருட்டாற்பெறுவலென்றின்னதுஞ்சொன்னான். (௯௮

இவன்மொழிநயந்துகேட்டுழியவையினிருந்ததொன்மணிதரேயன்றித்
தவமுனிவருந்தேவருங்ககனந்தங்குமாமங்கையர்பலரு
முவகையோடிவனுக்கேற்றபேருரைசெய்தொளிகெழுபூமழைபொழிந்தா
ரவனியினிருபர்வெருவருந்திறலானரியசொற்பொருணிலையறிந்தே. (௯௯)

மெய்ம்மகிழ்கடவுட்பூமழையுடனேவீடுமனெனும்பெயரெய்திக்
கைம்மகிழ்வரிவிற்றுசபூபதியுங்கன்னிகைகாளியுந்தானு
* மொய்ம்மணங்கமழுமன்றல்வேனிலின்வாய்முனிவருங்கிளைஞருஞ்சூழச்
செய்ம்மகிழ்பழனக்குருநிலமுடையான்றிருமனைவிரைவுடன்சேர்ந்தான். (௧௦௦)

பரிமளவடிவப்பாவையையரசன்பாலளென்றொருபுடைநிறுத்தி
யிருபதந்தொழுதுநின்றமாமகனையிதயமோடிறுகுறத்தழுவித்
தருமணங்கமழுஞ்சென்னிமேல்வதனந்தாழ்ந்துமோந்துருகிமுன்றந்தைக்
†குரியபேரிளமைகொடுத்தகோமகனுமுனக்கெதி ‡ரல்லனென்றுரைத்தான். (௧௦௧)

தந்தையர்க்குதவுமுதவியினெனக்குச்சதமடங்குதவினையுனக்கு
மைந்தருக்குதவுமுதவியிற்சிறிதுமாதவஞ்செய்திலேனுதவச்
சிந்தையிற்றுறக்கம்வேண்டுமென்றெண்ணிச்செல்லுமன்றல்லதுன்னுயிர்மேன்
முந்துறக்காலன்வரப்பெறுனென்றேமுடிவிலாவொருவரமொழிந்தான். (௧௦௨)

அம்புவியரசன்மாமனுமரசனடிபணிந்தவயவத்தழகா
லும்பரும்வியக்குங்கிளியைமுன்னிறுத்தியொடுங்கினன்வாய்புதைத்துரைத்தா
னெம்பெருமானீகேட்டருளுனக்கேயிசைந்தமெய்த்தவம்புரியிவளை
வம்பவிழ்மலர்மாதென்பதேயன்றிவலைஞர்மாமகளெனக்கருதேல். (௧௦௩)

வாசவனளித்தவிமானமீதொருவன்வசுவெனுஞ்சேதிமாமரபோன்
கேசரனெனப்போம்விசும்பிடை $மனையாள்கிரிகையைநினைந்துடல்கெழுமி
நேசமோடுதயமுருகுமக்கணத்தினினைவறவிழுந்தவீரியமெய்த்
தேசவனளித்தநதியிடைத்தாளத்திரளெனச்சிந்தியதொருபால். (௧௦௪)

ஒருமுனிமுனிவாலரமகளொருத்திமீனமாயுற்பவித்துழல்வா
ளிரையெனவதனைவிழுங்குமுன்கருக்கொண்டுன்முதிர்காலையிலதனைப்
பரதவர்வலையினகப்படுத்தரியப்பாலகனொருவனுமிவளு
மிருவருமிந்தமீன்வயிற்றிருந்தாரியமுனையும்யமனுநேரெனவே. (௧௦௫)

மானவர்பதியாம்வசுவினுக்கிவரைமகிழ்வுறக்காட்டலுமகனை
மீனவனெனப்பேர்கொடுத்தனன்கொண்டுமெல்லியலிவளைமீண்டளித்தான்
யானுமின்றளவுமென்மகளென்னுமியற்கையாலினிமையின்வளர்த்தேன்
கானமென்குயில்போல்வந்துமீளவுந்தன்காவலர்குலத்திடைக்கலந்தாள். (௧௦௬)

---

* மெய்ம்மகிழ்கமழும் என்றும் பாடம்.

† உரிய தன்னிளமை என்றும், ‡ அல்லவென்றுவந்தான் என்றும் பாடம்.

$ மனையாள் கிரீடையை நினைந்து என்றும் பாடம்.

வேறு.

என்றுகூறிவிடுத்தனனேந்தலு
மன்றவைக்கணவன்மொழிகேட்டவந்
தின்றுநற்றினமென்றிளந்தோகையை
மன்றலெய்தினன்மாநிலம்வாழ்த்தவே. (க0எ)

காளிவந்துகலந்தனள்கங்கைவேய்த்
தோளியும்புயந்தோய்ந்தனண்முன்னமே
வாளிவெம்பரிமாநெடுந்தேருடை
மீளிதானும்விடையவனாதலால். (க0அ)

கங்கையின்கரைக்கண்ணுறுகாரிகை
கொங்கையின்பங்குலைந்தபின்மற்றவ
ளெங்கையென்னயமுனையின்பால்வரு
மங்கையின்பமகிழ்ந்தனன்மன்னனே. (க0௯)

வீடுமன்கழல்வேந்தர்வணங்கிட
நாடுநன்னெறிநாளுநடத்திட
நீடுமன்னனுநேரிழைமேன்மலர்த்
தோடுமன்னுசுரும்பெனவீழவே. (கக0)

அன்னநாளிலருக்கனுந்திங்களு
மென்னமைந்தரிருவரையீன்றனண்
மன்னனாவிவடிவுகொண்டன்னமெய்க்
கன்னபூரங்கலந்தசெங்கண்ணியே. (கக்க)

*சித்திராங்கதன்செப்புநலனுடை
மெய்த்தசீர்த்திவிசித்திரவீரிய
னித்திறத்தரிருவருந்தம்முனு
லொத்தகல்வியராயினருண்மையே. (ககஉ)

மதிநெடுங்குலமன்னனைநண்பினால்
விதியனந்தரம்விண்ணுலகேற்றினு
னதியின்மைந்தனுநம்பிக்கெம்பியே
யதிபனென்றரியாசனத்தேற்றினன். (ககங)

எங்கணுமிவன்கவர்ந்தானெனக்
கங்குல்வந்தொருகந்தருவாதிபன்
றெங்ககமாமுடிசூடியவேந்தனை
யங்கையாலமலைந்தாருயிர்கொள்ளவே. (ககச)

---

* ஏடுகளில் ககஉ-வது செய்யுள் "சித்திராங்கதன் சித்திர வீரனென், றித்தராதிபன்மைந்த ரிருவருந், தத்த மன்பொடு தன்முன் பதந்தழீஇ, யொத்த கல்வியராயின ருண்மையால்" என்று எழுதப்பட்டிருக்கிறது.

எம்முனன்றிப்பிறந்தனனென்றுதாய்
விம்முநெஞ்சின்மிகுதுணிமாறவே
*தெம்முன்வல்லவிசித்திரவீரனைத்
தம்முன்மீளத்தனிமுடிசூட்டினான். (ககரு)

சிற்பொருட்பரமானபொருட்கெதி
ருற்பவிக்குமுபாயமதென்னவே
விற்படைத்திறல்வீடுமன்வாய்மையாற்
பொற்புறப்புவிபூபதியானநாள். (ககசு)

காசிமன்னவன்கன்னியர்மூவருந்
தேசின்மிக்கவர்ச்சேர்வரென்றுள்விட
மாசினுல்குலமன்னவரீண்டினார்
மூசிவண்டினமொய்ப்பதுபோலவே. (ககஎ)

வரித்தமன்னர்மறங்கெடவன்பினாற்
றிரித்துமெய்ப்பிறைச்சேர்த்துவல்லானொ
தரித்தவில்லொடுந்தன்னிளவேந்தொடும்
விரித்தவெண்குடைவீடுமனேகினான். (ககஅ)

அரவமாநதியன்னையுந்தன்மகன்
வரவறிந்துவழியினைப்பாற்றினாள்
பாவிவந்துபணிமலர்த்†தென்றலை
விரவுநுண்டுளிமீதெறியூதையால். (ககக)

கஞ்சவாவிகலைமதிகண்டென
நெஞ்சழிந்துநிருபர்குழாந்தொழ
வெஞ்சராசனவீரனுந்தம்பியு
மஞ்சமேறிமணித்தவிசேறினார். (கஉ0)

குருத்தலந்தனிற்கூறியவஞ்சின
மொருத்தான்றறிவாருலகோர்பலர்
விருத்தன்வந்தனன்மேலினியேதிவன்
கருத்தெனுமனங்காளையர்கன்றினார். (கஉக)

இருந்தமன்னரிவரிவரென்றுளம்
பொருந்தமற்றவர்பொற்புடைத்தேசெலாந்
திருந்தநின்றுசெவிலியர்கூறவே
முருந்தவாணகைமூவருந்தோன்றினார். (கஉஉ)

---

* இவ்வடி "தெம்முன்வென்றநற்சித்திரவீரனை" என்று ககஉ-வது செய்யுளின் பாட பேதத்துக்கியைய ஏடுகளிற் காணப்படுகின்றது,

† தென்றலாய் என்றும் பாடம்.

கையின்மாலையிவற்கெனக்கன்னியர்
வெய்யநெஞ்சொடுமின்னெனவந்தவர்
வையமன்னன்வயநிலைநோக்கியே
யையமுற்றனரன்புறுகாதலர். (கஉந)

ஏனைவேந்தரெதிரிவரைப்பெருந்
தானைசூழ்மணிச்சந்தனத்தேற்றியே
சேனைமாமதஞ்சோருங்கடதட
யானையென்னவிளவலொடேகினான்.  (கஉச)

முறையினாலன்றிமொய்ம்பிற்கவர்வதெக்
குறையினாலெனக்கோக்குலங்கூடிவந்
திறைவனோடெதி*ரேற்றவில்வீரரைப்
பிறைமுகக்கணையாற்பிளந்தோட்டினான். (கஉரு)

முந்துறப்பெறுமூவரொடாடமர்
விந்தைதன்னையும்வேந்தர்கொடுத்தலாற்
சந்தனுப்பெயர்த்தார்முடிமன்னவன்
மைந்தர்தங்கள்வளநகர்மன்னினார். (கஉசு)

சமரின்முந்தியசாலுவன்மேன்மன
மமரநின்றதறிந்துழியம்பையை
யெமர்களுக்கிடுதியற்கையன்றென்னவே
யமரழிந்தவவனுழைப்போக்கினான். (கஉஎ)

அம்பிகைக்குமம்பாலிகைக்கும்பதி
யெம்பியேயெழிலாலென்றிசைவுறத்
தம்பிதன்னைத்தனஞ்சயன்றன்னைநி
வம்பினான்மிகுமாமணஞ்சேர்த்தினான். (கஉஅ)

சென்றவம்பையைத்தீமதிச்சாலுவன்
வென்றுதெவ்வர்கவர்ந்தநின்மெய்தொடே
னென்றிகப்பவிவனுழைமீளவு
மன்றல்வேண்டினண்மன்றலங்கோதையாள். (கஉகூ)

கங்கைமைந்தன்கடிமணங்காதல்கூர்
மங்கைதன்னைமறுத்தபின்மங்கையுஞ்
செங்கணீரொழுச்சிந்தைசெந்தீபெறச்
சங்கையோடுதன்றுறைதையைநண்ணினாள். (கங0)

வேறு.

தாதைதாளினில்விழுந்துசந்தனுவின்மைந்தனின்னலுரைதந்ததுங்
கோதையாலுறவுகொண்டுகைதரல்குறித்தகோமகன்மறுத்ததும்
பேதைகூறமனநொந்திரங்கியவன்மிக்கநண்பினொடுபின்னையுந்
தூதையேவிமணமுற்றிரந்தனன்விசும்புலாவுநதிசுதனையே. (கஙக)

---

* ஏற்றவவ்வீரரை என்றும் பாடம்.

போனதூதுவர்வணங்கியிம்மொழிபுகன்றபோதுமொழிபொய்யுறா
மீனகேதனனைவென்றுதன்கொடியவிரதமேபுரியும்வீடுமன்
மானவேணிநபன்மகள்குறித்ததிருமன்றல்வன்பொடுமறுத்தலா
னானவாதரவொடாகுலம்பெருகவம்பைதந்தைதனதருளினால். (க௩௨)

வரிசைபாலுபாநேகமண்டலமகீபர்சொன்னசொன்மறுக்கினும்
பரசுராமனநுண்மொழிமறானவனதிருபதத்திடைபணிந்துநீ
யுரைசெய்தாலவனுரைத்தசொல்லின்வழிபொழுகிவந்துநினையுவகையால்
விரைசெய்மாலைபுனையாதுவீடுமன்மறுத்துமீளவும்விளம்புமேல். (க௩௩)

பின்னைபெண்ணியபெருந்தவம்புரிதியென்றுகூறியபிதாவையு
மன்னைதன்னையும்வணங்கிநீடுசதுரந்தயானமிசையம்புயப்
பொன்னைவென்றொளிகொள்சாயலாளிருபுறத்துமாதர்பலர்பொலிவுடன்
றன்னைவந்துபுடைசூழவேகியமதங்கிமைந்தனகர்சாரவே. (க௩௪)

காசிராசன்மகளென்றுவந்தனளொர்கன்னியென்றுகடைகாவலோர்
வாசநாறுதுளவோனுடன்புகலவருகவென்றபின்மடந்தைபோ
யாசினாலுரை *வகுத்துமுற்செயலனைத்துமண்ணலடிதொழுதுபின்
பேசினாளவனும்யாமுடிக்குவமிதென்றுமெய்ம்மையொடுபேசினான். (க௩௫)

வாதன்வீரமழுவாலநேககுலமன்னர்வேரறமலைந்தகோ
னிரதமீதவளுடன்கணப்பொழுதினேறிமையிருதினத்தினில்
விரதமாபரணமெனவணிந்ததிறல்வீடுமன்பதியின்மேவலுஞ்
சரதமாகவெதிர்கொண்டவன்சிரமிவன்பதத்தினிடைசாத்தினான். (க௩௬)

தனக்குவின்மைநிலையிட்டகோவையொருதமனியத்தவிசில்வைத்துநீ
யெனக்குநன்மைதரவந்தநற்றவமிருந்தவாவெனவிருந்தபின்
கனக்கும்வெண்டரளவடமுலைப்பெரியகரியகண்ணியிவள்காதலா
லுனக்குமன்றல்பெறவுரியளாகுகெனவுவகையோடவனுரைக்கவே. (க௩௭)

இன்சொலாலவனிகொண்டவெந்தைமுதலின்பமன்றலினிதெய்தநான்
வன்சொலாலிரதமணமுறேனெனமனத்தினால்விரதமன்னினே
னின்சொல்பாவநுமறாரெனக்கருதிநீயுரைப்பினுமிகழ்ந்தவிப்
புன்சொலானதினிமாதவத்தின்மிகுபுனிதவென்செவிபொறுக்குமோ. (க௩௮)

களம்புகுந்தவரைமீளவேகுதல்கொடாதகார்முகவினோதகே
ளுளம்புகுந்தினிநிருக்குநற்கடவுளுன்னையன்றியிலையுண்மையே
வளம்புனைந்தவநுராகபோகமிகுமாதர்மங்கையர்பொருட்டினால்
விளம்புமிந்தமொழியொழிகவென்றனுயிர்வேண்டுமென்னினும்வழங்குவேன். (க௩௯)

மறுத்திவன்புகலவீரியன்புயமொராயிரந்துணிசெய்மழுவினான்
வெறுத்தனந்தரமெழுந்திருந்துகரையழியும்வேலைநிகர்வெகுளியன்
கறுத்தநெஞ்சினன்வெளுத்தமேனியனுறச்சிவந்தவிருகண்ணினன்
பொறுத்தலில்லினன்விரைந்துதேர்மிசைபுகுந்தனன்பெரிதுபோர்செய்வான். (க௪௦)

---

* தொகுத்து என்றும் பாடம்.

வெருவுடன்றெழுது கங்கைமைந்தனடிவீழவுஞ்சினமிகுத்தலா
லுருவுடன்றனியிருக்குநீள்விரதம்வழுவிநரகமுறுவதிற்
குருவுடன்பொருதுமடிதனன்றெனநினைந்துதாலமுயர்கொடியினன்
செருவுடன்றிடுதலுன்னியேறினனமைந்துநின்றதொருதேரின்மேல். (கசக)

அவ்விராமனுமறுத்தமன்னவனுமைபிரண்டுதினமிகலுடன்
வெவ்விராவுமொழியாதுவெஞ்சமர்விளைத்தகாலையடல்வீடுமன்
கைவிராயசிலையோடுமெய்வலிகவர்ந்துமுன்றளர்வுகண்டபோ
ரவ்விராமனிகரென்னுமாறிவனையஞ்சிநின்றெதிரடர்க்கவே. (கசஉ)

ஓடிமீளமழுமேவுபாணிதனதூர்புகுந்தனனுவந்துபல்
கோடிபோரசர்துதியெடுக்கநதிகுமாரனுந்தனகர்குறுகினா
னூடிமாலையிடவந்தகாசிபதிநல்குமொல்குமிடைநவ்வியும்
வாடிவாடியினியமையுமென்றுதவவனமடைந்தனண்மடங்கியே. (கசங)

வெம்பையாடரவமாயவென்றிடுவிகங்கராசனெனவீடுமன்
றும்பையாடமரின்மாயவெல்லவல்சூரனாகுவனியானெனா
வம்பைமோதுமுலைவம்பைவீசுகுழல்வம்பைமன்னுமெழில்வரிகொள்கூ
ரம்பைமானும்விழியம்பையென்பவளுமரியமாதவமியற்றினாள். (கசச)

தாளிரண்டினிலொர்தாண்மடக்கியொருதாளில்வைத்தமைசமைத்தபொற்
றோளிரண்டினையுமீதெடுத்துநனிதொழுதியக்கிதுணையடியிலே
வாளிரண்டனையவிழிமலர்த்திநிறைவாவிநீரினிடைவானுளோர்
நாளிரண்டதனைடைபிரண்டுமொருநாளெனும்படிநடக்கவே. (கசரு)

முயலிலாமதிமுகத்தினாளொருவர்முயலநந்தவமுயன்றபின்
புயலிலாதமினலொத்தமெய்யிலொளிபுரியியக்கிதனதருளினால்
*மயிலனாடனதுவடிவகற்றியிகல்யாகசேனனதுவயினிடைச்
செயலிலாறுமுகனிகரெனத்தகுசிகண்டியாயினள்சிறக்கவே. (கசசு)

மணிமுடிக்குரியநிருபனுங்கடிகொண்மாதர்தங்களைமகிழ்ச்சிபா
லணிபெறத்தழுவியின்பவேலையினழுந்திநாள்பலகழிந்தபின்
பிணிகளுக்கரசெனும்பெரும்பிணிபிணித்துவாழ்வினிகணித்தெனப்
பணிமுடிப்புவியிரங்கவைகியொருபற்றிலாதநெறிபற்றினான். (கசஎ)

குருகுலச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் கருரு.

---

# சம்பவச்சருக்கம்.

---

அரியகங்குலினன்னைதன்வடிவுகொண்டலைகயாகியநங்கை
பரிவுபொங்கவந்தெடுத்தணைத்துவந்துளம்பரிந்துடன்பாராட்ட
வுருகுமாமுலைப்பாலுடனவளுயிருண்டழுமுருகார்மெய்
கரியகோவலன்செய்யதாண்மலர்களென்கருத்தைவிட்டகலாவே. (க)

---

* மயலிலாடனது என்றும் பாடம்.

இறந்தமைந்தனுக்குரியதென்புலத்தவர்யாவருங்களிகூரச்
சிறந்தநான்மறைவிதியினுலகியல்செய்தபின்செழுந்திங்கண்
மறைந்தபாமினிநிகரெனக்குருகுலமன்மயக்குறுமெல்லை
யறந்தவாவகை* துறந்தவாளரசனுக்கன்னைமற்றிதுசொன்னாள். (௨)

மைந்தகேட்டிநின்றுணைவன்வானடைந்தபின்மதிமுதலெனத்தக்க
விந்தமா†மரபரும்பணிப்பகைச்சிரத்தெழிலியொத்தமன்னோ
முந்தைநான்மறைமுதலியநூல்களின்முறைமைநீயுணர்கிற்றி
யெந்தநீர்மையினுய்வதென்றறிகிலேனிடரினுக்கிருப்பாளேன். (௩)

ஈண்டுதேவரநீதியிற்கொழுந்தியரெழின்மகப்பெறநின்னால்
வேண்டுமாலிது தாயர்சொற்புரிதலின்விரதமுங்கெடாதென்ன
மூண்டுவானுருமெறிந்தபோதவெனமூரித்திருசெவிபொத்தி
மீண்டுமாநதிவயின்மிசைப்புரியினென்விரதமுந்தபுமென்றான். (௪)

மழுவெனும்படைபிராமணன்மனுகுலமடிந்தழியவர்தந்தம்
பருதின்மங்கையர்முனிவரருளினாற்பயந்தனர்மகவென்ப
ரெழுதுநன்னெறிமுறைமையின்வினைப்படேயியற்கையென்றிருகைபாற்
றொழுதுசொன்னபின்மனந்தெளிந்தன்னையுந்தோன்றலுக்குரைசெய்வாள். (௫)

பருதிதந்தமாநதிமருங்கொருபகற்பராசரன்மகப்பேறு
கருதிவந்துகண்டென்னையுமெனதுமெய்க்கமழ்புலவையுமாற்றிச்
சுருதிவாய்மையின்யோசனைப்பரப்பெழுசுகந்தமுமெனக்கீந்து
வருதிநீயெனப்பணியினன்மறைத்தொருவண்டுறைக்குறைசேர்ந்தான். (௬)

முரணிறைந்தமெய்க்கேள்வியோனருளினான்முஞ்சியும்புரிநூலு
மிரணியஞ்செழுங்கொழுந்துவிட்டனவெனவிலங்குவேணியுந்தானுந்
தரணியெங்கணும்வியந்ததனென்றுரைகெழுதபோதனமுனிப்போ
தரணியின்புறத்தனலெனவெவ்வயினவதரித்தனனம்மா. (௭)

சென்னியாலன்னைவணங்கியாதொருபகற்சிந்திநீசிந்திக்கு
முன்னியானருகுறுவலென்றுரைசெயமுனிமகன்முனிமீளக்
கன்னியாகெனவிதித்துடன்கரந்தனன்கைபருகவிட்டன்றன்
பன்னியானவரிடத்தினிலவன்வரிற்பலித்திடுநினைவன்றே. (௮)

எனக்குமைந்தகேணினைவினான்றுணைவனென்னேவலுமறானிவ்வா
றுனக்குநெஞ்சுறவருங்கொலோவறிகிலேனுண்மைநீயுரையென்ன
மனக்கிசைந்ததென்றவன்வியந்தேகலும்வழுவறமனஞ்செய்யக்
கனக்கருங்குழன்மகிழ்வுறமுதற்பெறுகாதன்மைந்தனும்வந்தான். (௯)

தொழுதுநெற்றியில்விபூதியாலன்னைதன்றுணையடித்துகணீக்கி
விழுதுடைத்தனியாலெனவிருந்ததொல்வியாதனைமுகநோக்கிப்
பழுதுபட்டதிக்குருகுலமீளநின்பார்வையாற்கடன்ஞால
முழுதுமுய்த்திடுமகவருளெனப்பெருமுனியுமக்குறைநேர்ந்தான். (௧௦)

---

* துறந்துவாழரசனுக்கு என்றும் பாடம்.

† மாபரும்பணியச்சிரத்து என்றும் பாடம்.

அழைத்தமாமகனப்பொழுதவருனையனுகுவமெனப்போகத்
தழைத்தநெஞ்சினளனந்தரமிழந்தபொற்றாலிமாதரைத்தேற்றி
யுழைத்ததுன்பமுமுன்னுளோர்பலருலகியற்கையுமுறக்காட்டி
யிழைத்தபாவையினிருந்தவர்க்கந்நிலைவிசையுமாறிசைவித்தாள். (கக)

கனையுநீடிருளணைமிசையிருவருங்கணவனைமறவாது
நினையுநெஞ்சினர்பயின்றுழிப்புன்மணநிறைந்தொளிகுறைந்தொல்கப்
புனையுமெய்யொடும்பொழுதொடும்புரிதவம்போதலுமிகவஞ்சி
யனையகாலையிலம்பிகைமலர்ந்திலளம்பகமொருக்காலும்.

பராசரன்றருமுனிநினைவொடுகருப்பதித்துமீளவுஞ்சென்று
நிராசைநெஞ்சினனவசரத்தவனிடைநிகழ்ந்தமெய்க்குறிதன்னாற்
கராசலம்பதியிரம்பெறுவலிகாயமொன்றினிற்*பெற்றோ
ரிராசகுஞ்சரம்பிறந்திடும்விழிப்புலனில்லைமற்றதற்சென்றான். (கங)

மீளவுந்தலைப்புதல்வனைநோக்கியேமிகமகிழ்வுறுமன்னை
தூளவண்சடைத்தோன்றலம்பாலிகைக்குதவுறுவனைநல்க
நாளபங்கயப்பதியெனமதியெனநலந்திகழ்கவினைக்கீ
ழாளவம்புவியவனெனநினைந்தினியளிக்கவென்றருள்செய்தாள். (கச)

கிளைத்திடுந்துகிர்க்கொடிநிகர்சடையவன்கேட்டுநண்ணிடைபோ
யிளைத்திடுங்கவின்மெய்யுடையவண்மனைபெய்தலுமிவனைக்கண்
டுளைத்திடுங்கருத்துடன்வெரீஇவருபயத்தொடுநிறைபாது
விளைத்திடுங்கருவிளையுமுன்மடவரன்மெய்யெலாம்விளர்த்திட்டாள். (கரு)

அருந்தபோநிதியவளிடத்தினுங்கருவருளியக்கணத்தேகி
யிருந்தவாறுதன்னன்னையோடினியுரைத்திசைபவனெனச்சென்றான்
பெருந்தராதலந்திறலினிலொருதனிபெறுமுறையவன்பெற்ற
முருந்தவாணகைமருட்சியால்விளர்ந்திடுமுழுவதுமுடலென்றே. (கசு)

வேதபுங்கவனகன்றுழிவலியுடைவிழியின்மைந்தனும்யாரும்
பாதபங்கயந்தொழத்தகுந்திறனுடைப்பாண்டுவென்பவன்றானும்
பூதலம்பெருங்களிப்புறக்குருகுலம்பொற்புறப்பொழுதுற்றுச்
சாதராயினரவ்விருமகவையுஞ்சத்தியவதிகண்டாள். (கஎ)

காணலும்பெரிதுவகையற்றின்னமுங்கருதுதுமெனவெண்ணாச்
சேணடைந்தமாமுனிவரன்வருதலுஞ்சிந்தையுறச்சொல்ல
நாணலந்திகழம்பிகையிடத்திவனண்ணலுமவளஞ்சிப்
பூணலம்பெறுதோழிமற்றொருத்தியைப்பூவணையணைவித்தாள். (கஅ)

வந்தகாலையின்மனங்கலந்தகங்கநூன்மரபின்மெய்யுறத்தோய்ந்து
சந்தனகருப்பரிமளத்தனதடந்தயங்குமார்பினின்மூழ்க
விந்திராதிபர்போகமுற்றிசைதலுமின்பமுற்றியபின்ன
ரந்தணாளனவ்விரவிடைமீளவந்தன்னையோடுரைசெய்வான். (ககூ)

---

* பொற்றேரிராசகுஞ்சரம் என்றும் பாடம்.

அம்பிகைக்கொடிதோழியைவிடுத்தனளவள்புரிதவந்தன்னா
லும்பரிற்பெறுவரத்தினாற்றருமன்வந்துதித்திடும்பதம்பெற்றாள்
வெம்படைத்தொழில்விதுரனென்றவன்பெயர்மேவினிமகவாசை
யெம்புணர்ப்பினானொழிகெனவனநெறியேகினன்விடைகொண்டே. (உ0)

மருவருங்குழற்றாசிபெற்றெடுத்தவிம்மைந்தனுமுதற்பெற்ற
விருவருங்குருகுலப்பெருங்கிரிமிசையிலங்குமுக்குவடென்னப்
பொருவருந்திறற்படைகளுங்களிறுதேர்புரவியும்புவிவேந்தர்
வெருவரும்படிபலகலைவிதங்களும்வீடுமனிடங்கற்றார். (உக)

ஆனதிக்கிருநாளும்வந்தடிதொழவம்பிகைமகன்றன்னை
வானதித்திருமகனொருதினத்தினின்மங்கலமுடிசூட்டிப்
பானிறத்திறற்பாண்டுவேசேனையின்பதிமுழுமதிமிக்க
கானிறத்தொடைவிதுரனேயமைச்சனிக்காவலற்கெனவைத்தான். (உஉ)

நதியளித்தவனேவலிற்றாதர்போய்நயந்துடன்காந்தார
பதியளித்தமெய்க்கன்னியைத்தருகபூபதிக்கெனமணநேர்ந்தார்
மதியளித்ததொல்குலத்தவன்விழியிலாமகனெனத்தமர்சொல்ல
விதியளித்ததென்றுளமகிழ்ந்தனள்வடமீனெனத்தகுங்கற்பாள். (உங)

இமைத்தகண்ணிணைமலர்ந்தினிநோக்கிலேன்யாரொருவரையென்று
சமைத்தபட்டமொன்றினிற்பொதிபெதும்பையைத்தந்தையுந்தனையோரு
மமைத்தருங்குலமுனிவருமறைமுறையருங்கடிவிளைத்திட்டார்
சுமைத்தராபதிமதியிவளுரோகிணியென்னவேதொழத்தக்காள். (உச)

புந்தியாலருங்கலைமகள்பொற்பினாற்பூந்திருப்புனைகற்பா
லந்திவாயருந்ததிபெரும்பொறையினாலவனிமானிகரென்னக்
குந்திபோசரிற்சூரனென்பவன்மகள்குருகுலந்தழைத்தோங்க
வந்தியாவரும்பிரதையென்றடிதொழமதியெனவளர்கின்றாள். (உரு)

அந்தமாதிளமடமயிலெனவிளையாடுமெல்லையிலென்று
முந்தமாதவம்புரிதுருவாசமாமுனியுமவ்வழிவந்தான்
வந்தமாதவனடிபணிந்திவனைநீவழிபடுகெனத்தந்தை
யிந்தமாதவன்மொழிப்படிபுரிந்துகுற்றேவலின்வழிநின்றாள். (உசு)

கழங்குகந்துகமம்மனையாடலுங்கனகமென்கொடியூசல்
வழங்குதண்புனலாடலுந்துறைவரிவண்டலாடலுமாறி
முழங்குசங்கினந்தவழ்தருபணிநிலாமுன்றிலுஞ்செய்குன்றுந்
தழங்குசெஞ்சுரும்பெழுமலர்ச்சோலையுந்தனித்தனிமறந்திட்டாள். (உஎ)

தொழுதுதாளிணைச்செய்யபஞ்செழுதினுந்தோளிணைச்செழுந்தொய்யி
லெழுதினும்பொறாவிளமையண்முதுக்குறைந்தியாதியாதுரைசெய்தான்
முழுதுநெஞ்சுறுகோபமேமிகமிகுமுனிவரன்மகிழ்வெய்தப்
பழுதிலன்புடனியற்றினளொன்றுபோற்பன்னிருமதிசேர. (உஅ)

பிரதைதன்னையத்தபோநிதிவருகெனப்பெரிதுவந்தெனதேவ
லரிதெனுது நீயிபற்றினைநெடுங்கடலவனிமேல்யார்வல்லார்
தெரிவைகேளெனச்செவிப்படுத்தொருமறைதேவரில்யார்யாரைக்
கருதிநீவரவழைத்தனையவரவர்கணத்துநின்கரஞ்சேர்வார். (௨௯)

தம்மையொப்பதோர்மகவையுந்தருகுவர்தவப்பயனெனப்பெற்ற
விம்மறைப்பயனிம்மையிலுனக்குவந்தெய்தியதெனக்கூறி
யம்முனிப்பெருங்கடவுளுந்தபோவனமடைந்தனனவளுந்தான்
செம்மனத்தொடுபயின்றரமகளெனச்செல்வமாமனைசேர்ந்தாள். (௩௦)

ததையும்வண்டிமிர்கருங்குழற்கன்னியத்தனிமறைப்பயன்காண்பான்
சுதைநிலாவெழுமாளிகைத்தலத்திடைத்தூநிலாவெழு பூன்றி
விதையமாமலர்களிக்கநின்றன்பினேடியம்பலுமெதிரோடி
யுதையபானுவுமலர்மிசையளிபெனவொருகணந்தனில்வந்தான். (௩௧)

செம்பொனுடையுங்கவசகுண்டலங்களுந்திகழ்மணிமுடியாரம்
பைம்பொன்னங்கதம்புனையவயவங்களும்பவளமேனியுமாகி
வம்பறுதமெய்ப்பதுமினியெனச்செபூமறைநுவன்மடப்பாவை
யம்புயானனமலர்வுறக்கரங்களாலணைத்தனனழகெய்த. (௩௨)

கன்னிகன்னியென்கைதொடேன்மடந்தையர்கற்புநீயறிகிற்றி
யென்னமெய்குலந்தலமாநாணினுளிதயமும்வேறாகி
யன்னமென்னடையஞ்சினளரற்றலுமருகுறன்விடப்போய்நின்
றுன்னியென்னைநீயழைத்ததென்பெறவெனவுநத்தனனுரைசெய்வான். (௩௩)

உருக்கொள்சாயையுமுழையுமங்கறிவுறுதொளித்துநான்வரவேநீ
வெருக்கொளாவெனைமறுத்தனையுனக்குமுன்மெய்ம்மறையுரைசெய்த
குருக்களென்படானென்படாதரிவைநின்குலமெனக்கொடித்திண்டே
ரருக்கன்மெய்யினுமனமிகக்கொதித்தனனுபிரமடங்காக. (௩௪)

உனையளித்தவன்முனியுமென்றஞ்சனீயுடன்படுமுணர்வானல்
வினையளித்ததென்றனைதியேலின்பமும்விழைவுறும்படிதுய்த்தி
யெனையளித்ததொல்லதிதியினுனக்கிசையெய்துமாறிகன்மைந்தன்
றனையளித்திமற்றென்னினுமிருநிலந்தாடொழத்தக்கோனே. (௩௫)

ஆயிரங்காத்ததிபதிபுகழ்ந்துநூறாயிரமுகமாகப்
போயிரந்திவையுரைத்தபின்மதர்விழிப்புரிவுறாலுநல்கி.
வேயிருந்தடந்தோளிடந்துடித்திடமெல்லியன்மதன்வேதப்
பாயிரங்கொலென்றைபுறவவனொடும்பனிமலரணைசேர்ந்தாள். (௩௬)

தினகரன்சுடர்வடிவமுமமிர்தெழுதிங்களின்வடிவாகத்
தனதடந்திருமார்புறத்தழீஇயபின்றையறன்னினைவெய்த
மனமகிழ்ந்ததும்வந்ததுமணந்ததும்வரங்கொடுத்ததுமெல்லாந்
தனவெனும்படிகரந்தனன்பெருந்தகைக்கன்னியுங்கருக்கொண்டாள். (௩௭)

அந்தியாழலெனப்பரிதியினொளியடைந்தபி*னணிமாடக்
குந்திபோசன்மாமடமகளெழினலங்கொண்டகொள்கையளாகி
யிந்திராதிபரவரவர்முகமலர்ந்திரந்தனதாத்தக்க
மைந்தனனவனொருவனைப்பயந்தனண்மாசிலாமணியென்ன. (௩௮)

சூரன்மாமகள்சூரனதருளினாற்றலங்குகன்னிகையாகி
வாரமாமணிக்கவசகுண்டலத்துடன்வருமகன்முகநோக்கிப்
பாரமாமரபினிற்பிறந்தவர்மொழிப்பழுதினுக்கழுதஞ்சிப்
பூமாநதிப்பேடகத்திடைநணிபொதிந்தொழுக்கினண்மன்னே. (௩௯)

குஞ்சரத்திளங்கன்றெனச்சாபவெங்கோளரியெனப்பைம்பொற்
பஞ்சரத்திடைவருதிருமதலையைப்பகீரதியெனுமன்னை
§யஞ்சரத்திரைக்கரங்களாலெடுத்தெடுத்தசையவேதாலாட்டி
வெஞ்சரச்சிலைச்சூதநாயகன்பதிமேவுவித்தனளன்றே. (௪0)

கோடகப்படவரும்புனல்விழைவினாற்குளிர்துறைமருங்குற்றோர்
பேடகத்திடையொழுகியதினபதிபெருங்குமரனைக்கண்டு
சூடகக்கையம்புயமலரிராதையுஞ்சூதபுங்கவன்றானு
மாடகக்குலமடைந்ததொத்தரும்பெறலாதரத்தொடுகொண்டார். (௪௧)

அதிரதன்றிருமனையினில்விழைவுடனரும்பியபணிக்கற்றை
மதியெனும்படிவளர்ந்துதிண்டிறல்புனைமழுவுடைவராமன்
பதயுகந்தொழுஉவரிசிலைமுதலியபலபடைகளுங்கற்றுக்
கதிரவன்றநுகன்னனென்றுலகெலாங்கைதொழுங்கவின்பெற்றான். (௪௨)

வேறு.

கன்னற்பயந்தகதிர்வெம்முலைக்கன்னிதன்னை
முன்னர்ப்பயந்தோன்முகவோலையுவகையோடு
மன்னர்க்கெழுதமடப்பாவைவரிக்குமென்று
‡சென்னற்படைவேன்முடிமன்னவர்சென்றுசேர்ந்தார். (௪௩)

உருவஞ்சிறந்துபலகோளுமுதிக்குமேனு
மருவுங்குமுதமதிகண்டுமலருமாபோற்
பருவஞ்செய்பைம்பொற்கொடியன்னவள்பாண்டுவென்னு
நிருபன்றனக்கேமணங்கூர்பெருநேயமுற்றாள். (௪௪)

தானேயுவந்துதனித்தார்புனைதையல்வென்றி
யானேறனையானுயிர்க்காரமிர்தானபின்னர்
யானேதருவனெனமத்திராசனல்க
மானேயனையவிழியாளைவதுவைசெய்தான். (௪௫)

---

* அமருண்கட் என்றும்பாடம்,

§ சஞ்சரத்திரை என்றும்பாடம்.

‡ சென்னற்படிவேல் என்றும்பாடம்,

எண்ணுற்றசூரனிகன்மத்திராசனென்ன
மண்ணுற்றசீர்த்திவயமன்னர்மகளிரோடுங்
கண்ணுற்றகானில்விளையாடல்கருதியம்பொன்
விண்ணுற்றசாரலிமயப்புறமேவினானே. (சசு)

கானத்திலுள்ளகலைமானினங்*காட்சியாமா
வேனத்திரள்வெம்புலியெண்குடன்யாளிசிங்கந்
தானப்பகடுமுதலாபசனங்களெல்லா
மானச்சரத்தாற்கொலைசெய்தனன்வாகைவில்லான். (சஎ)

மெய்யிற்றெறித்தகுருதித்துளிமேருவில்வி
சையத்தலர்ந்தகமழ்குங்குமத்தாதுமானக்
கையிற்சிலையோடுலவுங்கழற்காளைகேதம்
பையத்தணித்தானிமநாகபவனனென்பான். (சஅ)

பொன்னங்கழலானெதிரவ்விடைப்போகம்வேட்டு
மன்னுங்கலையும்பிணைமானுமகிழ்ச்சிகூர
மின்னுங்கணையாலிவனெய்திடவீழ்ந்தபோதின்
முன்னின்றதந்தவுயிர்வந்தொர்முனிவனாகி. (சகூ)

நாரிக்கொருகூறரனார்முதனல்கவெய்த
வேரிக்கணையான்மிகநொந்துழிவேடமாறிப்
பூரித்தகாமநலமெய்துபொழுதுநின்கைச்
சோரிக்கணையாலறையுண்டுயிர்சோர்ந்துவீழ்ந்தேன். (ருo)

என்போலவின்பத்திடைநீயுமிறத்தியென்று
வன்போடிறந்தான்முதற்கிந்தமனானபேரோன்
றன்போன்மகிழ்நனுடனேசெந்தழலினெய்திப்
பின்போயினண்மென்பிணையானவப்பேதைதானும். (ருக)

நினைவற்றசாபநிலைபெற்றபினெஞ்சின்வேறா
ரினைவற்றுநன்மையிதுவேயினியென்றுதேறி
†மனைவைத்தகாதன்மடவார்நடன்மன்றல்வேந்தன்
|| முனைவைத்தவாய்மைமுனிக்கானமுயன்றுசேர்ந்தான். (ருஉ)

காண்டற்கரியமணிப்பைம்பொற்கலனொடாடை
வேண்டற்கரியவிடயங்களின்வேடமாற்றித்
தீண்டற்கரியதிருமேனியன்றேவராலும்
பூண்டற்கரியபெருமாதவம்பூண்டுகொண்டான். (ருங)

உற்றுப்புறத்துப்பகையாடியுடன்றவெல்லாஞ்
செற்றுப்புவியிற்றனியாழிசெலுத்துநீரான்
பற்றற்றயோகப்படையாலுட்பகைகளாறு
முற்றத்துறந்துபெருஞானமுதல்வனானான். (ருச)

---

* கற்கியாமா வென்றும்பாடம்.

† வனைவற்றகாதல் என்றும்பாடம்.

|| முனைவற்றவாய்என்றும்பாடம்.

ஆரக்குழம்பிலளைந்தாரமணிந்து விம்மும்
பாரக்குசங்கள்பலதைவரும்பான்மைநீங்கி
நாரக்கமலகரசோதிநகங்கண்மீள
வீரக்குசங்கள்கிளிக்குந்தொழிற்கேற்றவாலோ. (ருரு)

நாமக்கலவிநலங்கூரநயந்து நாளுங்
காமக்கனலைவளர்க்கின்றகருத்துமாற்றித்
தாமக்குழலாரிருவோரொடுதானுமொன்றி
யோமக்கனலேவளர்த்தானுணர்வுண்மைகண்டான். (ருசு)

இவ்வாறரியதவநாடொறுமேறுமெல்லைக்
கைவாளொழிந்துசமித்தேந்தியகாவன்மன்னன
மைவாணெடுங்கண்வரசூான்மகளைநோக்கிச்
செவ்வாய்மலர்வான்புவிமேலுறைதெய்வமன்னான். (ருஎ)

பூந்தார்வியாதமுனிதாளிணைபோற்றியன்பு
கூர்ந்தார்வமுற்றியவன்பால்வரங்கோடலெய்திக்
காந்தாரிநூறுமகவானகருப்பமொன்று
வேந்தாதரிக்கத்தரித்தாள்வடமீனொடொப்பாள். (ருஅ)

கல்லாமழலைக்கனியூறல்கலந்துகொஞ்சுஞ்
சொல்லாலுருக்கியழுதோடித்தொடர்ந்துபற்றி
மல்லார்புயத்தில்விளையாடுமகிழ்ச்சிமைந்த
ரில்லாதவர்க்குமனைவாழ்வினிமையென்னும். (ருகூ)

மெய்தானம்வண்மைவிரதந்தழல்வேள்விநாளுஞ்
செய்தாலுஞாலத்தவர்நற்கதிசென்றுசேரார்
மைதாழ்தடங்கண்மகவின்முகமன்னுபார்வை
யெய்தாதெழிற்பெறுமின்பமிவணுமில்லை. (சுO)

மென்பாலகரைப்பயவாதவர்மெய்ம்மையாகத்
தென்பாலவர்தம்பசித்தீநனிதீர்க்கமாட்டா
ரென்பானிகழ்ந்தவினையாலிடரெய்திநின்றே
னின்பாலருளுண்டெனினுய்வனெடுங்கணல்லாய். (சுக)

இல்வாழ்பவர்க்குமடவாரலதியாவரின்ப
நல்வாழ்வுதேசுபுகழ்யாவுநடத்துகிற்பார்
தொல்வானவரின்மறையோரிற்றுறக்கபூமி
செல்வார்பெறும்பேறினிநீயருள்செய்தியென்றான். (சுஉ)

பொற்பாவைகேள்வன்மொழிகேட்டலும்பொன்றநாணிச்
சொற்பாலவல்லாப்பழிகூறுரைசொல்வதென்னே
வெற்பார்நதிகள்சிறுபுன்குழிமேவினன்றோ
விற்பாலவர்க்குப்பிறர்மேன்மனமேற்பதென்றாள். (சுங)

பின்னும்பலகால்*வருட்டிப்பிறர்பெற்றிகாட்டி
மன்னன்புகலமடமாது மறுக்கமாட்டாள்
கன்னன்பிறந்ததொழியச்செழுங்கன்னியாகி
முன்னம்பெறுமாமறைமேன்மைமொழிந்திட்டாளே. (சுச)

மருமாலைவல்லியுரைகேட்டுமகிழ்ச்சிகூரும்
பெருமாதவத்தோன்பணித்தேவியபின்னர்முன்னர்த்
தருமாதிபனைக்கருத்தான்மடத்தையலுன்னி
யருமாமறையாலழைத்தாண்மற்றவனும்வந்தான். (சுரு)

வந்தித்ததெய்வமெதிர்வந்துழிமன்னுகேள்வற்
சிந்தித்தசிந்தையினளாய்மலர்ச்சேக்கைசேர்ந்து
குந்தித்தெரிவைநிறைமாமதிக்கூட்டமுற்ற
வந்தித்தெரிவைநிகரென்னவழகின்மிக்காள். (சுசு)

வேறு.

சிவமுறகூர்த்தம்வாரந்தினந்திதிகரணம்யோக
நவமெனவழங்குகோளுநன்னிலைநின்றபோதி
லவனிமையொருகோலோச்சியாளுமென்றறிஞின்மிக்க
தவநெறிமுனிவர்கூறப்பிறந்தனன்றருமன்மைந்தன். (சுஎ)

உதிட்டிரன்பிறந்தகாலையுலகினிலுயர்ந்தோர்யாரும்
அதிட்டனேமுதலாவெண்ணுமுனிவரும்வானுளோரு
நிதிப்பயன்பெற்றோர்போலநேயமோடுவகைகூர்ந்தார்
மதித்தனநிமித்தம்யாவுமங்கலநிகழ்ந்தவன்றே. (சுஅ)

தண்பிறைபெழுச்சிகண்டசலநிதியெனவேமைந்தன்
பண்புடைவதனநோக்கிப்பார்த்திவன்பாண்டுவென்பான்
கண்பனிதுளிப்பநெஞ்சங்கனிந்தினிதுருகமேனி
வண்புளகரும்பமேன்மேல்வரம்பிலாமகிழ்ச்சிகூர்ந்தான். (சுகூ)

அற்றனடியரமெல்லாமருந்தவப்பயனுன்மைந்தற்
பெற்றனள்குந்தியென்னும்பேருரைகேட்டவன்றே
யுற்றனள்பொறுமைகல்லாளுதரமுட்குழம்புமாறு
செற்றனடனதுகேடுமாக்கமுஞ்சிந்தியாதாள். (எ0)

மையறுசுபலன்கன்னிவயினிடைக்கருப்பஞ்சேரப்
பையொடுகுருதிபொங்கப்பார்மிசைவிழுந்ததாகச்
செய்யவன்விழுந்ததிக்கிற்செக்கர்வானென்னச்சென்று
மெய்யுடையரியகேள்விவேள்விகூர்வியாதன்கண்டான். (எக)

சஞ்சலமானகோசத்தசையினைத்தாழிதோறு
மெஞ்சலவாகநூறுசெய்திழுதிலேற்றி
நெஞ்சலர்கருணையாளனின்றவக்குறையுஞ்சேர்த்தி
யஞ்சில்வார்குழலியாகென்றுங்கொருகடத்தில்வைத்தான். (எஉ)

---

* வருந்தி என்றும் பாடம்.

கருவுறு தாயைநோக்கிக்கையறுமென் றுகன் றி
வெருவுறல்கற்பின்மிக்காய்வேறுசெய்தசைகள்யாவு
முருவுறநிரம்பித்தாமேயுற்பவிப்பளவுங்கையான்
மருவுறல்வழுவுறாதென்வரமெனவாதன்போனான். (௭௩)

காம்பெனநிறத்ததோளாள்கருவயிற்றிருப்பதொப்பத்
தேம்பயினறுநெய்பெய்தகலங்களைச்சேமமாக
வாம்பரிவுடனேயாற்றியீற்றனையடைந்துவைகும்
பாம்பெனப்பருவநோக்கியிருந்தனள்பழுதிலாதாள். (௭௪)

ஈண்டுறுநிகழ்ச்சிகேட்டேயாதவன்மகளைநோக்கிப்
பாண்டுமனிரந்துபல்காற்பணித்தலும்பவனன்றன்னை
மீண்டுமம்மறையாலுன்னியழைத்தனள்விரைவினோடி
யாண்டுவந்தவனும்பூத்தகொடியனுளாகந்தோய்ந்தான். (௭௫)

நெஞ்சுறமணந்துமீளநெடுங்கலைவாகனேகச்
செஞ்சுடருச்சியெய்திச்சிறந்ததோர்முகூர்த்தந்தன்னி
லஞ்சனையளித்தபொற்றோளனுமனையுவமையென்ன
வெஞ்சினவீமன்றன்னைப்பயந்தனள்விரதமிக்காள். (௭௬)

தண்பரிமளமென்சாயற்றந்தையுந்திசைகடோறு
மெண்பெறுமுயிர்கட்கெல்லாமிதமுறுபொலிவின்வீச
நண்புடையனலன்றானுநலமிகுநண்புதோன்றப்
பண்புறவலம்வந்தோங்கிப்பரிவுடன்விளக்கஞ்செய்தான். (௭௭)

அன்னநாளனிலன்மைந்தன்பிறந்தனனாகவற்றை
முன்னைநாளருக்கன்வேலைமுழுகியகூர்த்தந்தன்னி
லின்னநாளுருவமுற்றியெழில்பெறுமென்றுமுன்னோன்
சொன்னநாள்வழுவுறாமற்சுயோதனன்றோன்றினானே. (௭௮)

வாரியினதிர்ந்துவிம்முமங்கலமுழவமேன்மே
லோரியின்குரலாலோதையொடுங்கினவிடங்கடோறும்
பாரியகுலத்தோர்கண்ணினுவகைநீர்பனிக்குமுன்னே
சோரியந்தரத்துநின்றுஞ்சொரிந்ததுசோனைமேகம். (௭௯)

கோள்களினிலையாற்றீமைகொண்டனமுகூர்த்தந்தன்னிற்
றெள்களிற்கொடியமற்றைச்சிறுவருஞ்சேரவோரோர்
நாள்களிற்பிறந்தபின்னர்நங்கையுமொருத்திவந்தா
டோள்களிற்கழையைவென்றதுச்சளையென்னும்போாள். (௮0)

பின்னியபுதல்வராலும்பிறந்தமென்புதல்வியாலுந்
துன்னியமகிழ்நனாலுந்துலங்கியசுபலன்பாவை
தன்னிகர்பரிதியாலுஞ்சவிதழாலுஞ்செம்பொற்
கன்னிகையாலுஞ்சோதிகலந்தசெங்கமலம்போன்றாள். (௮௧)

பான்மொழிக்குந்திமீண்டும்பாண்டுவினேவல்பெற்று
வான்மொழிமறையாலுன்னிவானவர்க்கரசைநோக்க
மேன்மொழிவதுமற்றென்கொல்விடுவனேவிரைவின்வந்தத்
தேன்மொழித்தெரிவைமெய்யுஞ்சிந்தையுங்களிக்கச்சேர்ந்தான். (அஉ)

எங்குநன்னிமித்தஞ்செல்லவிருநிலமகிழ்ச்சிகூரப்
பங்குனிநிறைந்ததிங்களாதபன்பயிலுநாளில்
வெங்குனிவரிவில்வாகைவிசயனும்பிறந்தான்வென்றிப்
பங்குனனென்னுநாமம்பகுதியாற்படைத்திட்டானே. (அங)

கற்பகமலர்கள்சிந்திக்கடவுளர்கணங்களாட
வெற்பகமுனிவரீண்டிமங்கலவேதம்பாடப்
பொற்பகமுழவுவிம்மப்புரிவளைமுழங்கியார்ப்ப
நற்பகலிதுவென்றெல்லாவுலகமுநயந்தவன்றே. (அச)

இறைவனுமகிழ்ந்துபின்னும்யாதவிக்குரைப்பவந்த
மறையினைமுறையிற்பெற்றமந்திராசன்கன்னி
குறைவறவிருவர்வேண்டிந் நமரென்றுன்னிநின்று
ணிறைபுடைபிரவிமைந்தரிருவருநதியின்வந்தார். (அரு)

மருவருங்குழலியாயுமறையினால்வரிசைபெற்ற
விருவருமொருவர்போலவின்புறமணந்தபோதிற்
பருவரலியாதுமில்லாப்பாலகரிருவர்சேரக்
கருவிளைந்துதித்தார்யாருங்கண்ணெனக்காணுநீரார். (அசு)

சசிகுலநகுலனென்றுந்தம்பிசாதேவனென்றும்
விசயனோடெண்ணும்வீமன்மேதகுதருமனென்று
மசைவறுசிங்கசாபமனையவரைவராலும்
வசையறுதவத்தின்மிக்கான்மகிழ்ச்சியால்வாழ்வுபெற்றான். (அஎ)

காதியர்மருங்குந்தந்தைதடமணிமார்பும்பெற்ற
பேதையர்காமுறுங்காப்பெற்றியின்வளர்ந்தபின்னர்ப்
போதகமடங்கல்புல்வாய்புலிமுதல்விலங்கொடோடி
வேதியர்முன்றிறோறும்விளையாடலுற்றார். (அஅ)

செய்தவமுனிவர்தம்மாற்சிகையுடன்புரிநூல்சாத்திக்
கைதவமின்றியெண்ணெண்கலைக்கடற்கரையுங்கண்டு
மெய்தவம்விளங்கவேழுவில்லியும்விழைந்துநோக்க
மைதவழ்சிகரியன்னவளர்ச்சியின்வனப்பின்மிக்கார். (அகூ)

மார்பினுமகன்றகல்விவனப்பினுநிறைந்தசீர்த்தி
போர்வருதெரியன்மாலைப்புயத்தினுமுயர்ந்தகொற்றஞ்
சேர்தருவாய்மைமிக்ககண்ணினுஞ்செங்கைவண்மை
யார்வளஞ்சுரக்குஞ்செல்வப்பரப்பினும்பரந்தவன்றே. (கூ0)

ஆரமுமாரச்சேறுமரும்பனிநீரும்பூவு
மீரவெண்மதிநிலாவுமிதம்பெறுதென்றற்காலு
மோருயிரிரண்டுமெய்யாயுருகுவாருருகும்வண்ண
மாரனைமகுடஞ்சூட்டவந்ததுவசந்தகாலம். (௬௧)

விதுநலம்பெறுகாவெங்குமெய்சிவப்பேறவண்டு
புதுமையின்முரன்றுமொய்ப்பப்புதுமணம்பரந்துலாவக்
கதுமெனத்தலைநடுங்கக்காறடுமாறிற்றம்மா
மதுவயர்ந்தவரில்யாவர்மண்ணின்மேன்மயக்குறாதார். (௬௨)

பைந்தடந்தாளான்முன்னம்பருகியபுனலைமீளச்
செந்தழலாக்கியந்தண்சினைதொறுங்காட்டுஞ்சீரான்
முந்தியவசோகசூத முதலியதருக்களெல்லா
மிந்திரசாலம்வல்லோரியற்கையினியற்றுமாலோ. (௬௩)

பாங்கெழுசூதபுட்பபராகநல்விராகமிஞ்ச
முரண்படுசிலைவேள்விட்டமோகனச்சுண்ணம்போன்ற
*புரிந்ததொல்யோகமாக்கள்புந்திநின்றுருகத்தொட்ட
வருந்தழற்கணைகள்போலவலர்ந்தனவசோகசாலம். (௬௪)

வேனிலின்விளைவினாலும்வேனிலான்விழவினாலு
மாநலந்திகழுமூரன்மாத்திரிவனப்பினாலுந்
தானலமுறுதலெண்ணிச்சாபமுமறந்துமற்றப்
பானலங்கண்ணாளோடும்பாண்டுவும்பரிவுகூர்ந்தான். (௬௫)

அருந்தளிர்நயந்துநல்கியலகுடனலகுசேரப்
பொருந்துமுன்னவசமாகிப்போகமென்குயிலும்பேடு
மிருந்துமெய்யுருகுங்காவிலிரதியுமதனுமென்ன
வருந்தியகாதலோடுமாதவிப்பந்தர்சேர்ந்தார். (௬௬)

பஞ்சின்மெல்லடியினாளுங்கணவனும்பழங்கணோட்ட
நெஞ்சினைநலியமேன்மேனேயமுற்றுருகியாங்க
ணெஞ்சியகாலமெல்லாமென்செய்தேமென்றென்றெண்ணி
வெஞ்சிலையநங்கவேதமுறைமையான்மேவினாரே. (௬௭)

பூவியலமளிபொங்கப்புணர்முலைபுளகமேற
மேவியகலவியின்பமெய்யுறுமகிழ்ச்சிமுற்றிக்
காவியங்கண்ணிகேள்வன்கமழ்வரைமார்பினன்போ
டோவியமெனவேயுள்ளமுருகினளயர்ந்துவீழ்ந்தாள். (௬௮)

அரும்பியவிழியுந்தொண்டையமுதூறுபவளவாயும்
விரும்பியசுரதபோகமேவருகுறிப்புமாகிப்
பொரும்படைமதனனம்பாற்பொன்றினன்போலமன்றற்
சுரும்பினமிரங்கியார்ப்பத்தோன்றலுஞ்சோர்ந்துவீழ்ந்தான். (௬௯)

---

* புரிந்தநற்போகமாக்கள் என்றும்பாடம்.

## வேறு.

கொஞ்சுகிளியன்னமொழிகுமுதவிதழமுதா
லெஞ்சினனராதிபதியீதெனவியப்போ
வஞ்சுதருதீவினையினாழுதுநஞ்சா
நஞ்சமமுதாமுரியநல்வினையின்மாதோ. (௧௦௦)

சித்திரைவசந்தன்வருசெவ்வியுடன்மகிழா
மத்திரியெனுங்கொடியவாட்கண்விடமன்னாண்
முத்திரையுணர்ந்திலண்முயக்கமுறுமின்ப
நித்திரைகொலாமெனநினைந்தருகிருந்தாள். (௧௦௧)

செயிர்த்தவரையாவிகவர்தீயுமிழும்வேலா
னுயிர்த்திலன்விழித்திலனுணர்ந்துமிலனென்று
வயிர்த்தனளழைத்தனளரற்றினளிரங்கா
வயிர்த்தனணிலத்தினுயர்வானமினிதென்பாள். (௧௦௨)

புந்தியிலண்மன்றல்பெறுபூவைகுரல்கேளா
முந்தியகடும்பழிமுடிந்ததுகொலென்றுக்
குந்தியும்விரைந்துதனகுமாரொடுபுக்கா
ளந்தியரவிந்தமெனவணிசுலைமுகத்தாள். (௧௦௩)

உற்றதுமருங்கொழுநனுயிருறுநலத்தா
விற்றதுமுணர்ந்திவளிரங்கியழுமெல்லைக்
குற்றமகலும்படிகுணங்களைநிறுத்து
நற்றவர்புகுந்தருகிகைந்துளநெகிழ்ந்தார். (௧௦௪)

அழுகுரல்விலக்கியபினம்மகவையுங்கொண்
டெழுகடனிலத்தரசையீமவிதிசெய்யப்
புழுகுகமழ்மைக்குழலிபொற்புடைமுகத்தாண்
முழுகினளனற்புனலின்மொய்ம்பனைவிடாதாள். (௧௦௫)

தங்கையவள்வானுலகுதலைவனுடனெய்திக்
கங்கைவனமூழ்கியுயர்கற்பவனம்வைகப்
பங்கயநெடுந்துறைபடிந்துதன்மகாரான்
மங்கையிவளுங்கடன்முடித்தனள்வனத்தே. (௧௦௬)

காசிபன்முதற்கடவுள்வேதியர்கருத்தா
லாசிபெறுமப்புதல்வரைவரொடுமன்றே
யேசில்பிரதைக்கொடியையிறைநகரினுய்த்தார்
தேசிகரின்முற்றுமுழுதகுஞ்சதசிருங்கர். (௧௦௭)

இறந்ததுணைவற்குளமிரங்குநிலமன்னன்
சிறந்தசாரணத்தில்விழுசிறுவரையெடுத்துப்
புறந்தழுவியப்பொழுதுபுண்ணியநலத்தாற்
பிறந்தபொழுதொத்துமகிழ்பெற்றியினனானான். (௧௦௮)

வியனதிமகன்சிலைவல்விதுரன்முதலுள்ளோர்
பயனுடைவிசும்புபயில்பாண்டுவைநினைந்துஞ்
சயநிலைபெறுந்தகையதனயரையுகந்து
நயனமிருபைம்புனலுநல்கினர்நயந்தார். (௧0௯)

அநுசநிருபன்புதல்வரைவருமகீபன்
றனயரொருநூற்றுவருமன்பிெனாடுதழுவிக்
கனகுலமுகந்துபெய்கருங்கயநெருங்கும்
வனசமலருங்குமுதமலருமெனவளர்வார். (௧௧0)

வேறு.

இன்னணம்வளருங்காலைபெறிகடலுடுத்தவல்குன்
மின்னெனுமருங்குற்கொங்கைவெற்புடைவேய்கொண்மென்றோட்
பொன்னெனுநிறத்திேனாடும்பொற்பழியாகுலத்தா
டன்னெணமுடிப்பான்வந்ததலைவனைத்தந்தகோமான். (௧௧௧)

குந்திபோசன்றன்றெய்வக்குலத்துளோர்களுமநேக
விந்திரவனிதன்னிலெய்தினராகுமென்னக்
கந்தவான்கொன்றைதோயுங்கங்கையாள்குமரன்வைகு
மந்தமில்சுவர்க்கமன்னவத்திநாபுரிவந்துற்றார். (௧௧௨)

வெண்ணிறமதியமன்னவிடலையுங்கரியமேக
வண்ணனும்வள்ளறன்னைத்திருவயிற்றுதித்தமாது
மெண்ணிலாவுவகையோடுங்குந்தியையெய்தியெல்லாப்
புண்ணியநலமுமெண்ணிப்பூமியாண்முறையிங்கோத்தார். (௧௧௩)

எம்பிரானுதிமூலமிந்திரன்முதலோர்க்கெல்லாந்
தம்பிரான்பாண்டுவின்றதருமதேவதையைநோக்கி
யம்புராசிகளுட்பட்டவவனிகளனைத்துநாமே
*யிம்பர்நோயகற்றியெல்லாவெண்ணமுமுடித்துமென்றான். (௧௧௪)

முகுரவான்னனும்வேத்துமுனிவனுமனஞ்சொற்காயம்
பகிர்விலாவிதுரன்றனும்பாந்தளேறுயர்த்தகோவு
நிகரிலாத்துணைவர்தாமு†நீரொடுநீர்சேர்த்தென்னத்
தகைவிலாவன்பினோடுந்தழுவினர்கெழுமினாரே. (௧௧௫)

தன்பதிவந்தோர்தம்மைத்தாதைதன்றுதையான
முன்புடைக்கங்கைமைந்தன்முதலியமுதல்வரெல்லா
மன்பொடுகண்டுகண்டுகண்களித்தார்வமிஞ்சி
மன்பதைமகிழ்ச்சிகூரவரம்பிலாவிருந்துசெய்தார். (௧௧௬)

நூற்றுவரைவரென்னுநுதியுடைச்சமரவைவேற்
கூற்றுவரனையோர்க்கியாருங்கொடுங்கடும்போரிலாற்று
மாற்றுவரேனுமுங்களுதவியுண்டருளுமுண்டு
தோற்றமுமுண்டுநுங்கள்சுமையிவர்சுமையுமென்றார். (௧௧௭)

---

* இம்பரோயகற்றி என்றும்பாடம்.

† நீரொடுபால்சேர்த்தென்ன என்றும்பாடம்.

இனிமையிற்பலவுமாற்றம்யாவர்க்குமியாவுஞ்சொல்லிப்
தினகரற்றொழுதபின்னர்த்தேர்பரிகரிகடோறு
மனனுறத்தக்கசெல்வம்வகைதொறும்வழங்கியன்றே
தனதனைப்போல்வார்தம்மைத்தம்பதியடைவித்தாரே. (௧௧௮)

வேறு.

எயினலப்புணகோபுரமாபுரத்தெழுதுமாளிகைதோறும்
வெயினிலாவுமிழ்கனகநீள்வீதியில்விலாசமுற்றிடுநாளிற்
பயினன்மேல்வருகல்லெனச்செறிந்தமெய்ப்பவனன்மைந்தனுமொத்தான்
வயினதேயனைக்காத்திரவேயனைமன்னன்மைந்தருமொத்தார். (௧௧௯)

சம்பவச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் உஎச.

---

## வாரணவதச்சருக்கம்.

---

அருமறைமுதல்வனைபாழிமாயனைக்
கருமுகில்வண்ணனைக்கமலக்கண்ணனைத்
திருமகடலைவனைத்தேவதேவனை
யிருபதமுளரிகளிறைஞ்சியேத்துவாம். (௧)

ஆங்கவரம்முறையயருமாயிடைத்
தீங்கொருவடிவமாந்திறற்சுயோதனன்
பாங்கிவனமக்கெனப்பரிந்திமைந்தனை
வாங்குபுதழீஇயினன்வலிமைகூரவே. (௨)

ஒருபகனிலமகளுய்யமங்குலின்
வருபகீரதிநதிவாசநீர்படிந்
திருதிறப்புதல்வருமியைந்தகேண்மையாற்
கரையடைந்தனரிளங்கடவுளோரனோர். (௩)

தைவருநவமணிச்சையிலமென்னவெ
மைவகைநிறங்களுமமைத்தியற்றிய
தெய்வவாடகமனைச்செல்வப்போனகந்
கைவாநுகர்ந்தபின்கண்ணுந்துஞ்சினார். (௪)

கண்படைக்கங்குலிற்கன்னசௌபல
ரெண்படைக்குமாரனோடெண்ணிப்பாவக
னண்பன்மெய்ப்புதல்வனைநார்கொள்வல்லியாற்
றிண்பதத்தொடுபுயஞ்சிக்கயாத்தபின். (௫)

அரவினிற்பிணித்தெழுமாவம்பொங்கிட
வுரனுடைப்பொருப்பையன்றும்பர்நாயகன்
பாவையிற்செறித்தெனப்பயனில்செய்கையால்
விரவுமப்பெருநதியூடுவீழ்த்தினார். (௬)

வீழ்ந்தவனனந்தரநிமிர்ந்துமெய்யுறச்
சூழ்ந்தவப்பிணிகளைத்துணிகளாக்கியே
யாழ்ந்திலனெறிமீண்டவசத்தோடவட்
டாழ்ந்தில*னிராகவன்றம்பிபோன்றுளான். (௭)

வாளிரவியையொளிமறைக்கும்வெஞ்சினக்
கோளரவினையனகொடியநெஞ்சின
னீளரவினங்களானித்திராலுவை
மீளவுங்கொல்லுவான்வீரனேவினன். (௮)

கடித்தனபன்னகங்கொல்கைளாற்
றடித்திடமற்குணத்தொருதிபோற்பிசைந்
திடித்திடுமுகிலெனவெழுந்துமாநகர்
வடித்தவேற்றுணைவரோர்டெய்திமன்னினன். (௯)

வேறொருபகற்கழுநிரைத்துவீமனோ
டாறுபாய்ந்திருவருமர்டும்வேலையிற்
றேறலான்வஞ்சகந்தெறிவண்டினு
லேறினன்கடந்தரியேறுபோன்றுளான். (௧௦)

பின்னருமொருபகற்பெற்றம்பெற்றவன்
றன்னையம்மகீபதிதனபனுதரித்
தின்னமுதருத்துவான்போலயாவையுந்
துன்னியவிடங்களாற்றுய்ப்பித்தானரோ. (௧௧)

விடத்திலேயழிந்தறிவொழிந்தவீமனை
வடத்திலேபிணித்தனன்கங்கைவாரியி
னிடத்திலேயமிழ்த்தினனிதயமொத்தவர்
திடத்திலேமுதிர்ந்தகிங்கரர்திறங்களால். (௧௨)

ஓதவான்கடலிடைபொளித்தவெற்பெனப்
பாதலந்தனில்விழுபவனசூலுவை
வேதனைப்படுத்தினர்விடங்கொள்கூரெயிற்
றுதவப்பணமணியரவினஞ்சிறார். (௧௩)

முற்படுகொடுவிடமுளையெயிற்றுகும்
பிற்படுவிடத்தினாற்பெயர்ந்துபோதலின்
மற்பநிபுயகிரிவடப்பிணிப்புமற்
றற்படுமிருள்புலரலரியாயினன். (௧௪)

வாசுகிதனக்கிவன்வரவுணர்த்தலு
மாசகன்மதலையென்றறிந்துமற்றவன்
றேசுறுபொற்குடந்தெரிந்துபத்தினு
லேசறுமமுதெலாமினிதினூட்டினன். (௧௫)

---

* இராவணன்றம்பிபோன்றுளான் என்றும்பாடம்.

வெங்கனல்கொளுந்தலின்வெந்தவான்புல
மங்குல்பெய்மாரியால்வயங்குமாறுபோ
லங்கெரிவிடநுகர்ந்தழிந்தபேருட
லிங்கமுதருந்தலாலெழில்புரிந்ததே. (௧௬)

ஆயிரம்பதின்மடங்கரசுவாக்களின்
மாயிருந்திறல்வலிமலிந்தமேனியா
னேயிருந்தவப்பயனென்னவெண்பகன்
மேயிருந்தனன்பணிவேந்தன்கோயிலே. (௧௭)

இவனையந்நதியிடையிட்டபாவியுந்
தவனையுததியிற்சாய்த்தபாலைபோ
லவனிபனகரியினரசவெள்வளைத்
துவனிசெந்தழல்விளக்கெடுப்பத்துன்னவே. (௧௮)

கண்டிலளுதிட்டிரன்கனிட்டற்கண்ணுற
வுண்டிலடரித்திலளோரிராவினுங்
கொண்டிலடுயிலிளங்குமரர்தம்மொடும்
விண்டிலளுரையுளம்விம்முகுந்தியே. (௧௯)

வீடினனெனத்துணைவர்வேறுவே
றோடினர்கானதியோடையெங்கணுந்
தேடினர்காண்கிலஞ்செய்வதென்னென
நாடினர்நடுங்கினர்நடுக்கில்சிந்தையார். (௨௦)

கூற்றனசுயோதனகுமரனேயிவ
னாற்றலின் வெரீஇயழுக்கற்றசிந்தையா
னேற்றதையுணர்கிலமென்றுதந்தையாங்
கற்றினுமலமருங்கருத்தராயினார். (௨௧)

ஊதையில்பூதமொத்துள்ளம்வெம்பிய
தாதையில்சிறுவரைத்தாதைதாதைபாற்
கோதையில்குழலினாள்கொண்டுசேறலும்
வாதையின்றவற்கெனவருத்தமாற்றினான். (௨௨)

தருமமன்னனுநகர்ச்சனங்கள்யாவையுந்
தெருமரறேற்றவுந்தெய்வங்கூறவும்
பெருமிதநிமித்தங்கள்பெற்றிபேசவும்
வரும்வருமெனமனமறுகிவைகினாள். (௨௩)

இருந்திளைப்பகன்றபினிவனைமற்றைநா
ளருந்திறற்போர்கிகளரசனேவலால்
வருந்தியுற்றெடுத்துமுன்வந்தநீர்வழிப்
பொருந்திரைக்கங்கையின்கரையிற்போக்கவே. (௨௪)

பாழியம்புயகிரிப்பாண்டவன்றனைச்
சூழிகற்பணிக்குலஞ்சுமக்கவல்லவோ
வாழியக்குலங்களின்மன்னனல்லனோ
வேழிருபுவனமுமினிதினேந்துவான். (உ௫)

விதியினலொளித்தலினுயங்கிமீளவு
நதியினல்வருதலினலங்கொண்மேனியான்
பதியினல்விளங்குமென்பங்கயங்களு
மதியினற்குளிர்நெடுவானுமாயினன். (உ௬)

வேதியர்குரவர்வில்விதுரன்வீடும
னாதியர்துணைவராக்கருளார்களென்
றோதியசனங்களுக்குவகைநல்கினன்
ஞாதியர்கிளைக்கெலாநடுக்கநல்கியே. (உ௭)

குந்திமைமகிழுரைகூறிக்கற்பின
லந்திமீனனையவளருளின்வாழ்த்தவே
செந்திருமகளுறைசெல்வமாநகர்
வந்திவன்முன்புபோல்வளருநாளிலே. (உ௮)

கோதமன்மகன்மகன்குனிவிலாதியா
மேதருபடைக்கலம்யாவும்வீறுடம்
மாதவன்வயிற்பயில்வாதன்வன்றிறற்
கேதமில்சிந்தையான்கிருபனென்றுளான். (உ௯)

மற்றிவன்சந்தனுமைந்தனேவலாற்
கொற்றவரருள்குருகுலகுமாரரை
வெற்றிகொள்சிலையும்வெவ்வேலும்வாளமும்
பற்றலர்வெருவரும்படிபயிற்றினன். (௩௰)

பரிவுடனிவன்படைபயிற்றப்பின்னரும்
குருபதிவேறொருகுருவைத்தேடின
னிருளறமதிநிலவெறித்ததாயினும்.
பரிதியைநயக்குமிப்பரவைஞாலமே. (௩௧)

வேறு.

பரதநாதவேதபாத்துவாசனென்பான்
விரதவேள்விதன்னின்†மேனகையாலான
சுரததாதுவீழ்ந்ததுரோணகும்பந்தன்னில்
வரதனொருவன்வந்தான்வசிட்டமுனியையொப்பான். (௩௨)

ஈரேழ்விஞ்சைத்திறனுமீன்றோன்றன்பாலெய்தி
நீரேழென்னயாவுநிறைந்தகேள்விநெஞ்சன்
பாரேழெண்ணும்படைகள்பரசுராமன்றன்பா
லோரேழ்பகலினுலகுக்கொருவனெனக்கற்றான். (௩௩)

† மேனகையான்மெலிந்து என்றும்பாடம்.

வெற்பின்வலியதிண்டோள்வேந்தனேவுந்தூதா
லற்பின்மிக்கசிந்தையறஞ்சான்மொழியவ்வாசான்
கற்பின்பன்னியோடுங்கையின்மதலையோடும்
பொற்பினமராவதியேபோலுநகரிபுக்கான். (௩௪)

வந்தான்வரதனெனலுமந்தாகினியாண்மைந்தன்
பைந்தாரசையவெதிர்போய்ப்பணிந்துபூசைபண்ணிச்
சிந்தாசனத்தோடொக்குஞ்சிங்காசனத்தினேற்றி
யெந்தாய்வரநீயடியேனென்னதவத்தேனென்றான். (௩௫)

மூசிவண்டுமொய்க்குமுருகார்செவ்விமாலை
வாசிவான்றேர்வெம்போர்மன்னர்மன்னன்றன்னை
யேசில்கடவுள்வாய்மையிருக்காலெண்ணில்கோடி
யாசியன்பாலோதியருள்செய்திருந்தபின்னர். (௩௬)

வேதமுனிவனிருந்தவேத்துமுனியைநோக்கிப்
பூதந்தன்னினிகழ்ந்தபுன்மைமொழியொன்றுரைப்பா
னேதமெய்பெற்றனையயாகசேனனென்பான்
போதமில்லானென்பாற்பூட்டுநண்புபூண்டான். (௩௭)

யானுமவனுமுறையாலினியோமாகவெல்லைப்
பானுநிகர்தொல்லங்கிவேசன்பாதம்பணிந்து
வானுமண்ணும்வியக்க* மறவெம்படைகள்கற்றுத்
தானும்வல்லனாகித்தன்போலென்னைவைத்தான். (௩௮)

பின்னையிரவும்பகலும்பிரியேமாகித்திரியத்
தன்னையடைந்தநண்பின்றகவான்மிகவாதரியா
வென்னைவானமெய்தியானேயிறைவனாவ
னுன்னையாளவைப்பேனுலகிற்பாதியென்றான். (௩௯)

நன்றுநன்றுன்வாய்மைநன்றுநண்புக்கினியா
யென்றுபோந்துநானுமியன்றதவத்தினிருந்தேன்
வென்றுகொண்டபுவியைவேந்தன்மகவுக்களித்துச்
சென்றுவானம்புகுந்தான்சிறுவன்றலைவனானான். (௪௦)

தனத்திலாசையின்றித்தவமேதனமென்றெண்ணி
வனத்திலுண்டிகொண்டேமகிழ்வுற்றொருசார்வைகிச்
சனத்திலருளாலில்வாழ்ந்தருமந்தவறாவண்ண
மினத்தின்மிக்கசிறுபற்கிளையாளிவளைவேட்டேன். (௪௧)

கந்தமகவையின்றகாளகண்டனருளால்
வந்தமகவிம்மகவும்வளரவளர்ந்தா
னிந்தமகவுமையாண்‡டிளமையறியாதெனலாற்
றந்தமகவைநோக்கித்தாயும்பெருகத்தளர்ந்தாள். (௪௨)

---

* மறைவெம்படைகள்கற்று என்றும்பாடம்.

‡ இன்மையறியாது என்றும்பாடம்.

மாவின்பாலேயன்றிமரபுக்குரியவைமந்த
னாவின்பால்கண்டறியானதனால்வருந்தியந்தக்
கோவின்பாலெய்துதலுங்கோமான்யார்நீயென்ன
நாவின்பாலானடுங்கிநானுன்னன்பனென்றேன். (௪௩)

மன்னன்யானீமுனிவன்மரபாலெனக்குமுனக்கு
மென்னநண்புண்டென்னவேசிநகைசெய்திகழ்ந்தா
னன்னதுருபன்றன்னையவையிலரசர்கேட்பச்
சொன்னவாய்மைநீயேசோர்ந்தாயானேசோரேன். (௪௪)

புகன்றபடிநீயாளும்புவியும்பாதிகொள்வே
னிகன்றசமரினுன்னையிரதத்துடனேகவர்வே
னகன்றமெய்ம்மையுடையாயறிதியென்றேனென்று
சுகன்றன்ஞானம்பெற்றதுரோணன்சொல்லக்கேட்டான். (௪௫)

கேட்டவரசனழைக்கக்கிருபனுடன்வந்திறைஞ்சும்
பூட்டுவரிவிற்றடக்கைப்புதல்வர்புதல்வர்தம்மைக்
காட்டிநீயிவரைக்கடிதிற்படைமைக்கல்வி
மூட்டிநின்வஞ்சினமுமுடித்தியென்றுமொழிந்தான். (௪௬)

முனிநீயையவிதற்குமுன்னமின்றுமுதலா
வினியிவ்வுலகுக்கரசாயெம்மிலொருவனாகிக்
குனிவில்வலியாலமருங்கோடியென்றுகொடுத்தான்
பணிவெண்குடையுநிருபற்குரியவரிசைபலவும். (௪௭)

வேறு.

அன்றுமுதலாகவரிவெஞ்சிலைமுதற்படைகளானவையனைத்துமடைவே
தொன்றுபடுநூன்முறையின்மறையினொடுதிட்டிரசுயோதனர்களாதியவரு
மொன்றியதுரோணரருளாலும்வலியாலுமுயலுணர்வுடைமையாலுமுதலே
நின்றதுறையாலுமொருவர்க்கொருவர்கல்வியினிரம்பினர்வரம்பினிதியோர். (௪௮)

வெஞ்சிலையினுவிவனிராகவனையொக்குமெனவிசயன் || விசயத்தின்மிகவே
யெஞ்சியகுமாரர்கள்பொறாமையின்மிகுத்தனர்களிரவியெதிர்மின்மினிகள்போ
லஞ்சொன்முனிதானுமிவன்மேலெவரினும்பெருகவன்புடையனாகியகலா
னெஞ்சுறவநங்கலைகள்கற்குமவர்தம்மளவினையநிகழாதவர்கள்யார். (௪௯)

ஏகலைவனென்றொருகிராதன்முனியைத்தனியிறைஞ்சியிவனேவலின்வழா
னாகலையடைந்துமிகுபத்தியொடுநாடொறுமருச்சுனனையொத்துவருவான்
மேகலைநெடுங்கடல்வளைந்ததரணிக்கணொருவில்லியெனவின்மையுடையான்
மாகலைநிறைந்துகுருதக்கிணைவலக்கையினில்வல்விரல்வழங்கியுளனால். (௫௰)

அங்குலிகமொன்றுபுனலாழ்தருகிணற்றில்விழவந்தமுனிதேடுமினெனப்
புங்கமொடுபுங்கமுறவெய்திவனெடுத்தமைபுகன்றருகுநின்றவரைநீ
ரிங்கிதனிலைத்தொகைகள்யாவுமுறுவப்பகழியேவுமினெனாமுன்விசயன்
றங்கவில்வளைத்தொருகணத்தினில்வடத்திலைதுளைத்தனனிலக்கிறுடையால். (௫௧)

---

|| வினயத்தின்மிகவே என்றும்பாடம்.

ழத்திமுனிதாளிணையைநீர்படிதடந்துறையின்முதலைகவர்வுற்றதெனவுந்
த்திரவில்வீரர் பலருந்தமவெறுங்கையொடுசென்றருகுநின்றுவிடவே
த்தியின்விரைந்துபொதுவேயிபம்மைக்கவொருபறவைமிசைவந்தநெடுமால்
கைத்திகிரிபோல்கணையின்விசயனதனைப்பழையகார்முதலையிற்றுணிசெய்தான். (௫௨)

ருதனுவினொலிதயமகிழ்குருவினுக்கிவனுமுயிருதவினன்வரிசிலைக்
நருவுமிவனுக்குநிலையாலுமறையாலுமவலிகூர்பகழியொன்றுதவினா
ரிருவருநயந்தருளும்விநயமுமிகுந்தனர்களின்னுயிருமனமுமெனமேன்
ருவிவருநல்வினைவயத்தின்வழிவந்தபயன்மற்றொருவருக்குவருமோ. (௫௩)

லைக்குருவிறற்குருகுலக்குமரருக்குவருசிரமநிலைகாண்மினெனவே
லைத்தலைநிலாவெழுசிறப்புதல்வனுக்குநல்லறக்கடவுளைநக்கழுமரயா
லைப்படுவிசாலமணியணிதிகழரங்கின்மிசைநிகழ்பவிசொடுத்தரியுடன்
லைப்புரவியூர்திருவையுந்தொழுதுபுக்கனனகத்துணர்வுமிக்ககலையோன். (௫௪)

புரியிலறிவோர்சனபதத்திலறிவோர்புவிபுரக்குமவர்தம்மிலறிவோர்
ரிபடவபங்துகொடிமஞ்சவிதமெங்கணும்வனப்புறவிருந்தபொழுதிற்
றரிவுறுவிமானமனைதோறுமுறைதேவர்பலர்சித்தர்முதலோர்பரனொடுங்
ரியநெடுமால்பிரமனிந்திரன்முதற்பலர்கலந்தவகலவானிகருமே. (௫௫)

நற்றின்வழுவாமனுமுறைத்தருமன்மைந்தன்முதலாகியகுமாரரைடைவே
பாற்றிடலாசிரியரிருவரையுமன்பினுபர்பூசைபலசெய்துபுரிநா
ணற்றியசராசனம்வணக்கிவடிவாளியினிலக்கமவை‡நாலுவகையான்
ாற்றினர்பிளந்துபெருவண்மைசிறுநுண்மைசலநிச்சலமெனச்சொல்வகையே. (௫௬)

யுதமநேகவிதமானவையெனைப்பலவுமழகுறவியற்றியுமதம்
ாயுமிபமாவிரதம்வாசியொருவர்க்கொருவர்பலகதிவரக்கடவியுஞ்
சயுயருமாடநிலைதெற்றியினிருந்தவர்தெளிந்துளமகிழ்ந்துநவைதீர்
ாயுகதிபல்லதுமனித்தர்கதியல்லவெனவல்லனபுரிந்தனரரோ. (௫௭)

த்தவலியோர்வலியுமொத்ததிறலோர்திறலுமொத்தவினையோர்வினையும்வன்
த்தமனன்மூளமுகவம்புயமலர்ந்தரசமைந்தனுமனிலன்சிறுவனுங்
கத்தலமமர்ந்தகதைகொண்டெதிர்நடந்தனர்களிப்புடனிரண்டுதறுகண்
க்தகயம்வேறொடுமராமரமெடுத்தமர்மலைந்தனையகோலமறவோர். (௫௮)

ண்டின்முனைபொன்றினுடனென்றுருமெறிந்தனையதன்மையொடுடற்றவிலகு
ண்டலவிதங்களும்வியப்புறநடந்தபின்மறத்தொடுசெயிர்த்துவயிரங்
காண்டிருவரும்பொருதலுன்னுபொழுதத்தவர்குறிப்பினையிமைப்பளவையிற்
ண்டுகுருவின்சிறுவன்வன்பொடுவிலக்கினன்மெய்கல்விகரைகண்டபெரியோன். (௫௯)

ளிமகவான்மதலையாயுதபுரோகிதன்விலோசனமுணர்ந்தவன்மலர்த்
ாளின்முடிவைத்தெதிர்தரித்தனனிடங்கைவரிசாபகவசத்தினனிபம்
ளியரவங்கருடன்வன்னிசலிலந்திமிரமிரவியிவையேகடவுளாம்
ாளியின்விளைதமுறவெய்தனனிருந்தமுடிமன்னவர்மதிக்கும்வகையே. (௬௰)

---

* புரிவிலறிவோர் என்றும் பாடம்.

‡ நாலும் என்றும் பாடம்.

### வேறு.

மங்குல்சூழ்விமானமுன்றின்மஞ்சகோடிதிகழவே
யங்கண்வானமீனமென்னவவையிருந்தவரசர்முன்
சிங்கமென்னுமாறெழுந்துசிங்கநாதமுஞ்செய்தான்
பங்கசாதபரிமளங்கொள்பானுராசசூனுவே. (௬௧)

சிந்தையன்புடன்பணிந்துதேசிகேசனருளினால்
வந்துவெஞ்சராசனம்வணக்கிவீரவாளியா
லிந்திரன்குமாரன்முன்னியாதியாதியற்றினா
னந்தவந்தநிலையுமேவுமவனின்விஞ்சலாயினான். (௬௨)

கணைகள்போயிலக்கடைந்தவுறுதிகண்டுகண்களித்
திணையில்வீரனென்றதன்றிருந்தராசமண்டலம்
பிணையன்மாலைவிசயனண்ணல்பெற்றிபற்றிநாணினான்
றுணைவரோடுவரிகழற்சுயோதனன்களிக்கவே. (௬௩)

மருவநின்றருக்கன்மைந்தன்வானநாடன்மகனைநா
மிருவருந்தநுக்கொள்போரியற்றவம்மினென்றலுங்
குருகுலந்தழைக்கவந்தகுமரனன்புகூரவே
யுருகிநன்றெனத்தழீஇயுகந்துளந்தருக்கினான். (௬௪)

அனந்தரம்பொராற்குநீகொலந்தரம்மெனக்கெனாத்
தனஞ்சயன்செயிர்த்தல்கண்டுதபனன்மைந்தன்மீளவு
முனைந்தபோரின்முடிதுணித்துன்முகசரோருகத்தினாற்
சினந்தணிந்தரங்கபூசைசெய்வனென்றுசீறினான். (௬௫)

அதிருகின்றவெழிலிபோலருச்சுனன்றனைக்குறித்
தெதிருகின்ற‡வன்மைகண்டியாவருந்திகைக்கவே
முதிருகின்றமெய்யனாகிமுன்னிருந்தகௌதம
னுதிருகின்றவமுதவிந்துவொக்குமென்னவுரைசெய்வான். (௬௬)

சூதன்மைந்தன்வேலையேழுசூழுமேதினிக்கெலா
நாதன்மைந்தனுடன்வெகுண்டுநவிலுதற்குநண்ணுமோ
வேதமுண்டுசாலவென்னராசராசனிகலியக்
கோதமன்றனக்குளங்கொதிக்குமாறுகூறுவான். (௬௭)

கற்றவர்க்குநலநிறைந்தகன்னியர்க்கும்வண்மைகை
யுற்றவர்க்கும்வீரரென்றுயர்ந்தவர்க்கும்வாழ்வுடைக்
கொற்றவர்க்குமுண்மையானகோதின்ஞானசரிதரா
நற்றவர்க்குமொன்றுசாதிநன்மைதீமையில்லையால். (௬௮)

அரிபிறந்ததன்றுதூணிலானுட்வேயிலாயினான்
பரவையுண்டமுனியுமிப்பாத்துவாசன்மைந்தனு
மொருவயின்கண்முன்பிறந்ததொண்சரத்தினல்லவோ
வரியவென்றிமுருகவேளுமடிகளும்பிறந்ததே. (௬௯)

‡ வின்மை என்றும் பாடம்.

என்றுநல்லவுரைபெடுத்தியம்பியேனையிழிவினோ
டொன்றிநின்றவாடகத்தையோடவைக்குமாறுபோ
லன்றுசூதன்மதலைதன்னையங்கராசனாக்கினான்
மின்றயங்குமுடிகவித்துவேந்தெலாம்வியக்கவே. (௭0)

தானிருந்தவரிமுகஞ்செய்தாள்சுமந்ததவிசின்மே
லானிருந்தபடையினானையுடனிருத்திவண்டுசூழ்
தேனிருந்தமாலைவாகுசிகரமீதுதெண்டிரைக்
கானிருந்தமண்டலங்கருத்தினாலிருத்தினான். (௭௧)

தவனன்மைந்தனுஞ்சுயோதனனுமிசைந்துதனதனுஞ்
சிவனுமென்னநண்புகொண்டுதிறலுடன்சிறந்துளார்
பவனனும்பர்நாயகன்பயந்தவீரரஞ்சவே
யவனியெங்குநமதெனக்கொள்பெருமிதத்தராயினார். (௭௨)

ஆனகாலையெண்ணுகின்றவாயுதங்கள்யாவையும்
யானைவாசியிரதமானயானமுள்ளயாவையுஞ்
சேனையோடுதெவ்வரைச்செகுக்கவல்லவீரமு
மானவீரர்வல்லரென்றுமறைவலாளன்மகிழ்வுறா. (௭௩)

வம்பினாதிகுருகுலந்தழைக்கவந்தமைந்தர்கா
டம்பினாலேயெமக்களிக்கநின்றதக்கிணை
யெம்பினானொருத்தன்வேறியாகசேனனென்றளா
னும்பினாடிபவனையிம்பர்நோதல்செய்துகொணர்மினே. (௭௪)

என்றுதஞ்சிலைப்புரோகிதர்க்கனன்றியம்பவே
யன்றவன்பதம்பணிந்தளித்தசொற்றலைக்கொளா
வென்றிநீடுபடைகளோடும்விரவுமங்கநாலொடுஞ்
சென்றுதங்களுடகன்றுதெவ்வுநாடுகுறுகினார். (௭௫)

ஆளிமொய்ம்பாம்முனைக்கணானபோதனீகினித்
தூளிகண்புதைத்தசென்றுசெவிபுதைத்ததுவனிபோ
யோளிகொண்டசெம்பொன்வெற்பினுடல்புதைத்தவெழிலிபோல்
வாளிகொண்டவிருதர்மாமதிற்புறம்புதைக்கவே. (௭௬)

வளைத்தசேனையானைவாசிவாயினின்றுகுமுறவே
யுளைத்தெழுந்துமுழையைவிட்டுடன்றசிங்கவேறுபோற்
றிளைத்ததன்பதாதியோடுமோகயாகசேனனு
மிளைத்தநெஞ்சனன்றிநீடுபுரிசைவாயிலெய்தினான். (௭௭)

சோமகர்க்குமுடுகுசேனைசூழவந்தகுருகுலக்
கோமகர்க்கும்வெஞ்சமர்விளைந்ததாண்மைகூரவே
பூமகற்குமிக்கமாமுனிக்குவாய்மைபொய்த்தவம்
மாமகற்கும்விசயனுக்குமன்னுபோர்வயங்கவே. (௭௮)

தூறுகொண்டுகணைபொழிந்துசோமகேசர்பொருதலா
னூறுகொண்டகுமார்தங்கணைகரிமீளநோக்கினர்
மாறுகொண்டுவிசயன்வீசுவண்ணவாளிவலியினால்
வீறுகொண்டெதிர்ந்தமன்விலங்கரீடுபட்டதே. (எ

தகப்படுஞ்சராசனத்தனஞ்சயன் கைவாள்வெரீஇ
யகப்படுந்தாதிபன்றனற்றவில்விஞ்ஞனினான்
மிகப்படுந்தடங்கொடேர்மிசைப்பிணித்துவிசையுட
னகப்படுஞ்செயற்கைசெய்துகுருவின்முன்னர்நணுகினான். (அ

முறுவல்கொண்டுகண்டசாபமுனியுநாணவெம்மைநீ
யுறுவதொன்றுமுணர்கலாதுரைத்தபுன்சொலறிதியே
மறுவிலந்தணாளன்யானுமன்னனீயும்வாசவன்
சிறுவன்வென்றனைப்பிணித்தசிறுமையென்னபெருமையோ. (அ

அன்றெனக்குநீயிசைந்தவவனிபாதியகமையுமற்
றின்றுனக்குநின்றபாதியான்வரைந்துதருகுவன்
குன்றெனக்குவிந்திலங்குகொற்றவாகு*வீரனே
யுன்றனக்குவேண்டுமென்னவுயிரும்வாழ்வுமுதவினான். (அ௨

வேறு.

புயங்கம்பருகியுமிழ்மதியம்போல்வான்மீண்டும்பூசுரன்றன்
வயங்குஞ்சுருதிவாய்மையினான்மன்னுங்குருக்கள்பதிநீங்கித்
தயங்குஞ்சிலைக்கைவாள்விசயன்சயமும்பிறர்முன்றனகப்பட்
டியங்குஞ்செயலுநினைந்துநினைந்துள்ளஞ்சுடப்போயூர்சேர்ந்தான். (அ௩

மறுகிற்பணிலந்தவழ்பழனவளநாடுடையானெதிர்வணங்கி
முறுகிப்புரிவெங்கலைக்கோட்டுமுனிபோலுமுனிவரரைத்
தறுகட்குருவின்றலையணிக்கத்தகவோர்மகவுந்தனஞ்சயன்றே
ருறுகைக்கொருபூங்கன்னியையும்பெறுவான்வேண்டியுற்றிரந்தான். (அச)

ஆறுமுகனைப்பயந்தநதியலைபாற்குளிர்வதொருகானி
லீறிறவத்தோருபயாசன்யாசனெனும்பேரிருவோருங்
கூறுமுறையிற்சடங்கியற்றிக்கோவின்வழக்கப்பெறுவேள்வி
நூறுமகத்தோனிகராசைநோன்மைக்கிசையப்புரிவித்தார். (அரு)

புரிந்தமகப்பேற்றழல்வேள்விப்பொன்றுவோமப்பொருண்மிச்சில்
பரிந்துவிபுதாமுதேய்ப்பப்பைம்பொற்கலத்தினிறைத்தாங்குத்
தெரிந்தமணிப்பூணவன்றேவிக்களிக்கத்தீண்டாளாகியபின்
சொரிந்துகனலினுபயாசனிமைப்பிற்சுதனைத்தோற்றுவித்தான். (அசு)

வலையம்பிறழமுடிதயங்கமணிக்குண்டலம்போழகெறிப்பச்
சிலையுங்கைபுமெய்புமவபந்திகழ்போர்வயிரக்கவசமுமாய்க்
கொலைவெஞ்சிங்கக்குருளைபொலங்குன்றின்புறத்துக்குதிப்பதுபோற்
றலைவன்களிக்கத்தடந்தேர்மேற்றனயனொருவன்றலைப்பட்டான். (அஎ)

* வீரவே குன்றனக்கு என்றும் பாடம்.

தேரோடருக்கனருணமணிச்சிமயத்து திப்பச்செவ்வியுட
னீரோடையிற்செந்தாமரைகணிறம்பெற்றலர்ந்து நின்றனபோல்
வீரோதயன்வந்து திப்பளவின்மேன்மேன்மகிழ்ந்து *மெய்சிலிர்த்துப்
பாரோர்கண்கள்களித்தனவாற்பார்க்குந்தோறும்பரிவுற்றே. (அஅ)

சங்கச்சங்கமிகமுழங்கச்சாந்தும்புழுகுமெறிந்தார்த்துத்
துங்கக்கொடியுந்தோரணமுந்தொடையும்பரப்பிச்சோமகனு
டங்கட்சயந்தனவதரித்தவமராவதிபோலார்வமெழத்
திங்கட்குழவியுற்பவித்ததிசைபோன்றனவெண்டிசையெல்லாம். (அக)

பின்னுங்கடவுளுபயாசன்பெருந்தீப்புறத்துச்சுருவையினுன்
மன்னுங்கடலாரமுதென்னவழங்குசருதிபவிநலத்தான்
மின்னுங்கொடியுநிகர்மருங்குல்வேய்த்தோண்முல்லைவெண்முறுவற்
பொன்னும்பிறந்தாள்கோகனகப்பூமீதெழுந்தபொன்போல்வாள். (கூ0)

மண்மேலொருத்தியரக்கர்குலமாளப்பிறந்தாள் வாமனுதற்
கண்மேலின்றுமிவள்பிறந்தாள்கழற்காவலர்தங்குலமுடிப்பா
னெண்மேலென்கொலினியென்றுங்கெவருங்கேட்பவொருவார்த்தை
விண்மேலெழுந்ததவன்புரிந்தவேள்விக்களத்தினிடையம்மா. (கூக)

முற்றோன்றியதன்குலமுதலான்முரட்போர்முனிக்குமுடிவுமவன்
பிற்றோன்றியவக்கன்னிகையால்விசயன்றனக்குப்பெருநலமு
முற்றோர்ந்துள்ளமிகத்தருக்கியுவந்தாங்கமைந்தானுபர்மகத்தாற்
பெற்றோன்பெற்றபேறுமகப்பெற்றார்தம்மிற்பெற்றார்யார். (கூ௨)

காரணமறுவற்றிலங்குதிறற்கலைசொல்பவன்பார்த்தனல்பபந்தோன்
சரணமலர்தன்றலைக்கொண்டுதனுநூலெனக்குத்தருகென்றான்
மாரணமிவனுற்றனக்கென்பதுணர்ந்துங்குருவுமுறுதளித்தா
னாரணியிடத்திற்செறிந்தன்றோவதனைச்செகுப்பதழலம்மா. (கூங)

இவ்வாறமைந்தாங்கைவருடனீரைம்பதின்மர்தனிவளர
மைவான்மீனிற்பல்கோடிமன்வந்திறைஞ்சிப்புடைசூழத்
† தெவ்வாறியவெம்பெருஞ்சேனைத்திருதராட்டிரனுந்தம்பியுமற்
றெவ்வாரிவற்கென்றுதிட்டிரனையொழுக்கத்தழகாலுட்கொண்டார். (கூச)

வேறு.

பூதிநலந்திகழ்பூருகுலத்திற்
காதிபனுகியநங்கனைவென்றோ
னீதியினுலுநிறைந்தனனுண்ணா
லோதியகேள்வியுதிட்டிரனென்னு. (கூ௫)

---

* மெய்களித்து என்றும் பாடம்.

† தெவ்வாற்றியவெம்பெருஞ்சேனைத்திதராட்டிரனுந்தந்தையும் என்றும் பாடம்.

மைந்தருடன்செயல்வழுவறவெண்ணிக்
குந்திபயந்தருள்குரிசிலையிவனே
யிந்தநிலக்கினியிளவரசென்றாங்
கந்தண்மதிக்குடைமுடியொடளித்தான். (கூசு

சந்தனுவின்றிருமரபுதயங்கச்
செந்திருமேவருசிறுவனுமப்போ
திந்துவொடாதபனிருவருமன்பால்
வந்துதழீஇமெய்வயங்கினனைத்தான். (கூஎ

துன்மதியானசுயோதனன்மாழ்கித்
தன்மதியாலருடந்தையையெய்திப்
புன்மதியாமுரைசிற்சில்புகன்றான்
மன்மதியாதுமதித்தலிலாதான். (கூஅ

உன்பதம்யாவுமுதிட்டிரனுக்கே
மன்பதையோடுவழங்கினையெந்தா
யன்பதிலாவவனநுசர்மதத்தா
லென்பதமம்மவிறந்ததையின்றே. (கூகூ

என்றலுமைந்தனையிந்துகுலத்தோய்
நின்றிலையாண்மனுநீதியிலைபா
பொன்றியவெம்பிபதம்புதல்வர்க்கே
யன்றிநுமக்கரசாளுதலாமோ. (க00

நீதியிலாநெறியெண்ணினைநீயிங்
கோதியவாய்மையினுறுபொருணின்று
லாதிபராயவரைவருநீரு
மேதினியாளுதல்வேத்தியல்பென்றான். (க0க

இகன்மிகுகன்னனுமென்னிளையோருஞ்
சகுனியுமுண்டுதகுந்துணைநெஞ்சி
லுகவையிலாரொடுதேறினியென்றே
முகமுகுரம்புரைமுதலொடுசொன்னான். (க0உ

பாதகனன்றுபகர்ந்தமொழிக்கே
பேதகனானபிதாமருளெய்தா
மேதகவாழ்வுறுவில்விதுரற்கு
நாதகுநல்லுரைநதிமகனுக்கும். (க0ங

ஈண்டினியென்செய்வதெண்ணுமினிங்ஙன்
பாண்டவரோடுபயின்றுறையாது
தூண்டுபரித்துரியோதனன்முதலோர்
பூண்டனர்வெம்பகைவாம்வபொறாகார் (க0

ஒருதிறலிங்கருறைதரினென்று
திருதிறன்மைந்தருமிகலுவர்மேன்மே
லருகணுகாவகையகலவிருந்தான்
மருவுறுநண்புவளர்ந்திடுமென்றே. (௧௦௫)

இம்மொழிகூறலுமிருவருமெண்ணித்
தெம்முறையாயினர்சிறுபருவத்தே
யெம்முறைகொள்கலரினியவர்மதியே
தம்மதியேமதியாகுவதென்றார். (௧௦௬)

விதுரனும்வார்கழல்வீடுமனுந்தம்
மிதயநிகழ்ந்ததியம்பியபின்னர்ப்
பொதுமையிலாதபுரோசனனென்னு
மதியுடைமந்திரிவருகெனவந்தான். (௧௦௭)

வந்தவமைச்சனுமைந்தனுமற்றத்
தந்தையுமங்கொருதனிவயினெய்திச்
சிந்தனைசெய்தனர்தீமைமனத்தோர்
குந்திமகார்முடிவெண்ணிக்கொடல்புரிந்தே. (௧௦௮)

வேறு

ஆரணதிபாரும்புகழ்வது
நாரணதியர்நண்ணுஞ்சிறப்பது
தோரணதிதுலங்குபொற்கோபுர
வாரணாவதமாநகரங்கணே. (௧௦௯)

சென்றிருக்கத்திருவாய்மலர்கென
வொன்றுபட்டுமகன்றெழுதோதிற
னன்றுதொட்டுயிரன்னவமைச்சனு
மன்றுபட்டதந்நன்னகரெங்குமே. (௧௧௦)

சிற்பநூலிற்றிருந்தியமாக்களாற்
பொற்பமைந்துபொலிந்ததப்பொன்னகர்
கற்பகாடவியல்லது கண்டவ
ரற்பமென்னவமராவதியையே. (௧௧௧)

அறத்தின்மைந்தனுக்காங்கொருநாளவைப்
புறத்திருந்துபுகன்றனன்காவலன்
றிறத்துநின்னிளையோரொடுஞ்சென்றுதோண்
மறத்திறற்றனிவாழுதியென்னவே. (௧௧௨)

புகன்றகேள்விப்புரோசனன்றன்னையிம்
மகன்றனக்குநீமந்திரியாகியே
யிகன்றவர்ச்செற்றினியோர்க்கினிமைசெய்
தகன்றஞாலமிவன்வழியாக்குவாய். (௧௧௩)

என்னவாங்கணிறைஞ்சியனந்தரஞ்
சொன்னசொற்படி சூழ்படைவேண்டுவ
வென்னவுங்கொண்டிளவரசோடும்ப்
பொன்னகர்க்கொடுபோயினனென்பவே. (௧௧௪

ஆரமார்புடையைவருங்குந்தியும்
பூரஞானபுரோசனநாமனுஞ்
சேரவெண்பிறைச்செஞ்சடைவானவன்
வாரணாவதஞ்சென்றுவணங்கினர். (௧௧௫

அங்கவன்றனருள்*பெற்றமைச்சனங்
கிங்கிதத்தொடியற்றியநீள்கொடி
மங்குறோய்மணிமாளிகையெய்தினர்
சங்கம்விம்மமுரசந்தழங்கவே. (௧௧௬

ஆவியன்னவமைச்சன்மொழிப்படி
மேவியத்திசைவேந்தர்குழாந்தொழக்
கோவினோடத்திக்குவலயத்
தேவிமெய்களிக்கச்சிறந்தாரரோ. (௧௧௭

வேறு.

மன்னரைவரும்வாரணாவதந்தனின்மருவித்
துன்னலார்தொழத்தொன்னிலப்புரந்திடுநாளிற்
பின்னநெஞ்சுடைப்புரோசனன்பேதறுமதியான்
முன்னமே†யினிதமைத்திடுமனைச்செயன்முன்னை. (௧௧அ

மெழுகினனமக்காலயம்வதுத்ததும்விரகே
யொழுகுகின்றதன்னொழுக்கமும்வஞ்சனையொழுக்கே
யெழுகடற்படையரவையுமிவன்வழியனவே
தொழுதகையுளும்படையுளசூழ்ச்சியும்பெரிதால். (௧௧௯

சங்கையுண்டினியுண்டியுஞ்சாந்தமும்பூணும்
பொங்குநுண்ணிழைத்துகிலுமந்தாமமும்பூவு
மிங்கிவன்பரிந்தியற்றியகோடலமென்றார்
கங்கைநீர்தவழ்கழனிசூழ்பழனநாடுடையார். (௧௨0

ஐயமுற்றிவரிருப்புழிமயனினுமதிகன்
சையமொத்ததோள்வலனுடைத்தபதியனொருவன்
வையமுற்றுடைவீமனையொருதனிவணங்கி
யையபட்டதையறிந்தருளாமுறையென்றான். (௧௨௧

நுந்தையேவலிற்கம்மியர்நூதனமாக
விந்தமாநகர்த்திருமனையியற்றிடுநாளின்
வந்தமந்திரிவஞ்சனையறிந்தறன்வடிவாந்
தந்தையென்னையுமேவினன்றன்மையினுணர்ந்தே. (௧௨௨)

---

* பெற்றழகுற என்றும் பாடம்.

† இனிதமைத்தமன்மனை என்றும் பாடம்.

அடியனேனுமற்றவருடனரக்குமாளிகையிப்
படியினாலியற்றியதொழிற்பயனெலாங்குறித்து
நெடியகானகத்தளவுநீணிலவறைநெறிபோய்
முடியுமாறொருமண்டபங்கோட்டினேன்முறைபோல். (௧௨௩)

வேறொருத்தருமறிவுறாவிரகினாலொருதூண்
மாறுபட்டுநீபறிக்கலாம்வகைவழிவகுத்தேன்
றேறுதற்கிது தகுமெனத்திருவுளத்தடக்கி
யூறுபட்டபோதெழுந்தருள்கெனப்பணிந்துரைத்தான். (௧௨௪)

தச்சரிற்பெருந்தலைவனுக்குரிமையிற்றனங்கள்
பிச்சரிற்கொடுத்தவன்விடைகொண்டதன்பின்ன
ரச்சமற்றிவனம்மனைக்கம்மனைவழங்கு
நிச்சமின்றுகொலென்றுகொலெனநினைந்திருந்தான் (௧௨௫)

விடவிவன்சினைநெடுங்கொடிதழுவலின்மிடைந்த
வடவியெங்கணும்வேட்டையாற்றங்கள்பேராண்மை
நடவிநண்பகலிரவுகண்டுயிலலர்நடந்தார்
புடவிதங்கள்வெண்குடைநிழற்குளிருமாபுரப்போர். (௧௨௬)

பாந்தளோடொருமனைவயிற்பயில்பவர்போல
வேந்தனாவருமந்திரவலியினான்மிக்கோர்
காந்துநெஞ்சுடையமைச்சனைக்கைவிடாரணுகித்
தாந்தமெய்பெனவுயிரெனத்தனித்தனிசார்ந்தார். (௧௨௭)

ஆங்கொர்கங்குலினழைத்துநீடாசியனுசாவி
யீங்குநீதுயில்வைகுதியெம்முடனென்னப்
பாங்கர்மெல்லணைப்பள்ளியும்பரிவுறவழங்கித்
தாங்களும்பொலஞ்சேக்கையிற்றங்கினரன்றே. (௧௨௮)

உணர்வறத்துயிலுற்றபோதற்றமங்குணராத்
துணைவரைத்திருத்தாய்பதந்தொழுகெனச்சொல்லி
யணிகொள்கோயிலைத்தாதைநண்பனுக்கிரையளித்தா
னிணையிலாவமுதுரகர்கோனிடைநுகர்ந்திருந்தான். (௧௨௯)

முடியுடைத்தடங்கிரியினைமுளிகழைதொறுமுற்
றடிநிலத்துறச்சூழ்வருமாறுபோலழலோன்
கொடிநிறைத்தபொற்கோபுரப்புரிசைசூழ்கோயி
லிடியிடித்தெனவெடிபடச்சிரித்தெழுந்தெரித்தான். (௧௩௦)

அக்கணத்திடைபன்னையிலனுகியாங்கவரைத்
தொக்கசித்திரத்தூணடித்துவாரமேவழியாப்
பொக்கெனக்கொடுபோயகல்வனத்திடைப்புகுந்தான்
முக்கணற்புதன்முனிந்தவூர்மூவரோடொப்பான். (௧௩௧)

புரிந்ததீயினைக்கண்ணினீரவித்திடப்புகுந்து
பரிந்தநெஞ்சினைமீண்டுமெப்பாவகன்சுடவே
கரிந்தகோயிலிற்காரிருள்புலர்ந்தபின்கண்டோ
ரெரிந்துவீழ்ந்தனரைவரும்மாயுமீண்டென்றார். (௧௩௨

விருந்தாய்விடமிடச்செலவேடருந்தாயு
மிருந்ததீமதியமைச்சனோடிறந்தமையுணரார்
திருந்துமாமதிப்பாண்டவர்செயலுமற்றறியார்
வருந்தினார்தமதுயிரிழந்தெனப்புவிமன்னர். (௧௩௩

போதுபட்டிருள்புகுந்தொளிபோனவானகம்போன்
மாதுபட்டபார்மடந்தைதன்மதிமுகமழுங்கத்
தீதுபட்டதுகுருகுலச்செல்வமென்றிரங்கி
யேதுபட்டனமுனிவரர்முதலினோரிதயம். (௧௩௪

கொட்பனற்சுடவிறந்தமைகேட்டலுங்குருக்க
டொட்பதத்துடனழுதிமஞ்சுயோதனன்முதலொ
ருட்பனித்துமேல்வெயிலுறவெதும்புநீரொத்தார்
பெட்புறப்புவிமுழுவதும்பெறுங்கருத்துடையோர். (௧௩௫

பொன்னலங்கொளமெழுகினாலாலயம்புனைந்து
துன்னுவெங்கதைப்படைமருச்சுதனையேசுடுவா
னென்னவாண்மைகொலெண்ணினானெண்ணினுஞ்சுடுமோ
வன்னிதன்பெயர்மருச்சகனென்பதுமறந்தே. (௧௩௬

வாரணாவதச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—௪௨0.

---

# வேத்திரகீயச் சருக்கம்.



*சீதநாண்மலர்க்கோயின்மேவுசெந்திருவினாயகன்றேவநாயகன்
வேதநாயகன்பூதநாயகன்விரதநாயகன்விபுதநாயகன்
போதகாதிபன்முதலைவாயிடைப்பொறைதளர்ந்துமுன்பொதுவிலேநினைந்
தாதிமூலமேயென்னமுன்வருமாதிநாயகனடிவணங்குவாம். (௧

தோள்கரம்புறந்†தன்னிலன்னையுந்துணைவர்நால்வருந்தொக்குவைகவே
கோள்காந்தபஃறலையராவெனக்ககரநீணெறிக்கொண்டுபோயபின்
றாள்களின்கதித்தாள்பறிந்துவீழ்தருவனத்தநேதார்சாரன்மன்னினான்
மூள்கடுங்கொடுஞ்சினவனற்கண்மாமும்மதக்களிறனையமொய்ம்பினான். (௨

---

* இச்செய்யுள்சிலபிரதிகளிலில்லை,

† தம்பியென்றும் பாடம்,

அவ்வனத்தில்வாழராமடந்தையென்றையமெய்தவோரடலரக்கிவந்
திவ்வனத்திலிந்நள்ளியாமநீயென்கொல்வந்தவாறிவர்களியாரெனக்
செவ்வனத்திதழ்க்கூரெயிற்றெழுந்தெண்ணிலாவினிற்றிமிரமாறவே
வெவ்வனற்சுடர்க்கொத்தவேதிபாள்வீமசேனனோடுரைவிளம்பினாள். (௩)

யானும்வந்தவாறுரைசெய்கேனினக்குரைசெய்நீயெனக்கியார்கொலென்னலுந்
தானுமங்கவன்றன்னொடோதுவாடழூவுமாதரந்தங்குசிந்தையா
ளேனுகந்துநின்றிடுமிடிம்பனென்றொருவனிங்கிராவணியையொத்துளான்
மானுடங்கொண்மெய்க்கந்தமூர்தலால்வரவறிந்தனன்வாளரக்கனே. (௪)

எம்முனேவலால்யான்மலைந்திடற்கெய்தினேனினைக்கொன்றுமென்பய
னம்மவெற்பிரண்டனையபொற்புயத்தழகெறிக்குநீடாரமார்பகேள்
கொம்மைவெம்முலைத்தெரிவைபார்க்குளங்கூசுமாசைநோய்கூறுகிற்பதென்
றெம்மனோர்களுஞ்சொல்வர்யானுனக்கெங்ஙனேகொலாமிறுதிகூறுகேன். (௫)

பெருஞ்சுழிப்படக்கரைபுரண்டெழப்பெருகும்யாறுபின்பிறழ்கலங்கல்போ
யருஞ்சுவைப்படுந்தெளிவினோடுசென்றாழிவேலைவாயணையுமாறெனப்
பொருஞ்சினத்துடன்கொன்றுதின்றிடப்போதருந்தொழிற்பேதைநாண்மெனிந்
திருஞ்சிறைச்சுரும்பிசைகொண்மாலைபாயின்பமாலுழந்துன்னையெய்தினேன். (௬)

நீடியிங்குநானிற்கின்மாரனுநிருதனிற்கவந்நிருதன்வெம்மையோ
டோடிவந்தெனைக்கொல்லுமும்மையுமொருகணத்திலேயுயிர்செகுத்திடு
நாடியென்கொன்மற்றுய்ந்துபோகலாநம்பியென்னைநீநலனுறத்தழீஇக்
கோடியம்பரத்திடையெழுந்துனைக்கொண்டுபோவலோர்குன்றிலென்னவே. (௭)

இரக்கமின்றியேதனிவனத்திலேயிளைஞரெம்முன்யாயிவரைவிட்டெமைப்
புரக்கவல்லளென்றொருமடந்தைபின்போவதாடவர்க்காண்மைபோதுமோ
வரைக்கண்வாழ்வுகூர்நும்முனெம்முனைமலையவெண்ணிமேல்வந்தபோதுபா
ரரக்கனாகிலென்னவுணனாகிலென்னவனையோர்கணத்தாவிகொள்வனே. (௮)

இடிம்பைதன்மனங்கொண்டகாளையிங்கிவையியம்பலுநவையிடிம்பனும்
கொடும்பெருஞ்சினங்கதுவுகண்ணினன்குருதிநாறுபுன்கூரெயிற்றின
னுடம்புபெற்றதோரிருண்முகத்திலேயோரிரண்டுவெஞ்சுடருதிக்கவு
நெடும்பிறைக்கொழுந்தோரிரண்டுவானிலவெறிக்கவுநின்றநீர்மையான். (௯)

இடிபடுத்தெழுந்தெழிலிமின்னுமாறென்னநீடுகுன்றெதிரொலிக்கவே
வெடிபடச்சிரித்திருபுறத்துநாமிளிரவுட்புகைந்தொளிரும்வாயினு
*னெடில்படுத்தவெங்கானமெங்கணுநிழல்படுத்திவானுறநிமிர்ந்துளான்
கொடிபடுத்தநுண்ணிடையிடிம்பையைக்கூவியவ்விடைக்குறுகினானரோ. (௧௦)

உணவினாசையாற்கொல்லவந்தநீயுவகையாசையாலுள்ளழிந்திவன்
கணவனாமெனக்காதலிப்பதேகங்குல்வாணர்தங்கடனிறப்பதே
யணவுவெம்பசிக்கனலவிந்துபோயநங்கவெங்கனற்கொளுமடற்புலிப்
பிணவையன்பினிற்கலைநயப்பதேபேதைமானுடன்பேசுகிற்பதே. (௧௧)

---

* நெடிபடுத்த என்றும்பாடம்.

வாரடாவுனக்கியாதுதானர்தம்மகளடிக்குமோவானமாதர்தோள்
சேராமலைந்துயிரைமெய்யினைத்தின்றுதேவருர்சேருவிப்பன்யான்
போரடாதுன்னொடாளியேறுபுன்பூனைதன்னுடன்பொரநினைக்குமோ
பாரடாவெனாண்மையையரக்கர்கைப்பட்டபோதில்யார்பாரில்வைகினார். (கஉ)

என்றுசீறிமற்றிவனடுத்தல்கண்டிணையிலாவிறற்றுணைவர்நால்வரு
நின்றயாயுமற்றொருபுறத்திலேநிற்கமைப்பல்கூர்நிருதவல்லியும்
வென்றிநல்குமாவந்தவிந்தைபோல்விழிபரப்பமேல்வீமசேனனுஞ்
சென்றுகைகளாற்பற்கணாவுடன்சிதறவாயினிற்சென்றுகுத்தினான். (கங)

குத்தினானிவன்குணபவல்சிதன்கூர்நகக்கரங்கொண்டுவீமன்மேன்
மொத்தினான்முனைந்திருவரும்பொருார்முரணுடன்சினமூளமூளவே
தத்தினார்பிடுங்கியமரங்களாற்சாடினார்புயசயிலமொன்றொடொன்
றொத்தினாரிரண்டம்புதங்கள்வானுருமெறிந்ததொத்தோசைமிஞ்சவே. (கச)

வளர்ந்ததிண்கருங்குன்றுகாந்தளைமலர்வதென்னவேவானகம்படக்
கிளர்ந்தசெம்புணீர்பொசியுமெய்யினன்கேதநெஞ்சினன்கோதவாய்மையன்
றளர்ந்துவீழ்நிசாசரனுமாடகன்றன்னையொத்தனன்பின்னைமுன்னுறப்
பிளந்தகோளரிதன்னையொத்தனன்பிரதையென்னுமின்பெற்றகாளையே. (கரு)

வேறு.

வன்றிறலிடிம்பனைவயக்கையாலுட
லொன்றிரண்டாகுமாறுடன்றமைந்தனை
யன்றுகண்டனளியாயரியின்பேடுதன்
கன்றுதிண்கரிபொரக்கண்டதென்னவே. (கசா)

இளைஞருந்தம்முனுமிவனரும்பகை
களைகுவனினியெனக்கண்களித்தனர்
விளைவுறுகாதலன்மெலிந்தபாவையு
முளைவுடனுவகையுமொருங்கினெய்தினாள். (கஎ)

பெருந்திறனிசாசரப்பிணத்தையவ்வனத்
திருந்துளபறவைகட்கிருள்செய்கங்குலின்
விருந்திடக்கொளுத்தியவிளக்கெனும்படி
யருந்திசைபொலிவுறவருக்கன்றோன்றினான். (கஅ)

கரங்களானிசாசரனிருளைக்காய்ந்துகொண்
டிரங்கிநீள்வனத்திடையிரவின்மாழ்கிய
வரங்கொடாமரைமுகமலர்த்துநீர்மையா
லுரங்கொள்வீமனுக்கெதிருதயபானுவே. (ககூ)

எண்டருகவர்மனத்திடிம்பைமன்மதன்
மண்டெரிசுடுதலின்வாடுமேனியள்
கொண்டவெங்காதலின்குறிப்பையவ்வழிக்
கண்டனன்காணலற்செற்றகாளையே. (உ0)

மாய்ந்தவன்றுணைவிகேள்வ்துவையின்னமு
மேய்ந்திலனெம்முனும்யாங்கண்மானுட
ராய்ந்துகொண்முறைமையாலரக்கர்பாவைநீ
காய்ந்தமையறிதிமுன்கணையிராமனே. (௨௧)

ஆசைகொளரக்கியோடனிலன்காதலன்
பேசியகட்டுரைகேட்டபெற்றதா
யோசைகொண்மைந்தரோடுசாவிநண்பிறை
லேசறவுரைத்தனளினிமைகூரவே. (௨௨)

மறுத்துரைப்பதுகடனன்றுமாந்தருக்
கறத்தியலார்கணுமமைதல்வேண்டுமா
லுறத்தகுமிவனைநீயும்முன்வாய்மையாற்
கறுத்தவருயிர்கவர்காளையென்னவே. (௨௩)

அன்னையுந்தம்முனுமறைந்தவாசக
முன்னையின்மறையெனமுடியிற்சூடினான்
மின்னையுமுடன்கொடுபோந்துமேவுநீர்
தன்னையுங்கண்டதிற்றுளைந்துதங்கினார். (௨௪)

அத்தினத்தவர்வயினவலநீக்குவான்
மெய்த்தவப்பழமறைவியாதன்வந்தனன்
பத்தியிற்சிறுவரும்பணிந்துபோற்றினார்
முத்திபெற்றவரினுமுற்றுஞ்சிந்தையார். (௨௫)

தனிவனமிகந்துநீர்சாலிகோத்திர
முனிவனஞ்சிலபகல்வைகிமுந்துற
மனனுறப்பார்ப்பனமாக்களாகியே
யினிமையின்வேத்திரகீயமெய்துவீர். (௨௬)

எனத்தமபடமொழித்திமையவன்செல
வனத்தைவிட்டவ்வனமருவிவைகினார்
வினைப்படுத்தியாழினோர்முறையின்வேள்விசெய்
கனக்குழற்கன்னிதன்காதலானொடே. (௨௭)

குந்தியையிரவுநன்பகலுங்கோதிலா
வந்தணைபுரிதலின்மகிழிடிம்பையும்
வெந்திறல்வீமனும்விழைந்துவள்ளியுங்
கந்தனுமெனப்பெருங்காதல்கூரவே. (௨௮)

மான்மதங்கமழ்கொடிமந்திரதொறுங்
கான்மணங்கமழ்தடங்காவகந்தொறுந்
தேன்மிகுசுனைநெடுஞ்சிலம்பகந்தொறு
மேன்மணம்புரிந்தனர்வேட்கைவிஞ்சவே. (௨௯)

நிறந்திகழிருட்பிழம்பென்னநீண்டறப்
புறந்தருமுரோமமும்பொருப்புத்தோள்களு
மறந்தருகனைகுரல்வாயுமாகவே
பிறந்தனன்கடோற்கசனென்னும்பேரினான். (௩0)

காதியதிறனரகாசுரன்றனை
யாதிவெங்கோலமன்றளித்தவாறுபோன்
மேதினிமதித்தபோர்வீமனல்கிய
சோதியம்புதல்வனுந்தொழுதுசொல்லுவான். (௩௧)

நிறையுடைத்தந்தையர்நீர்நினைத்தபோ
துறைவிடத்தெய்தியாங்குறைத்தசெய்குவே
னிறைவவிப்பணிவிடைதருகென்றேகினான்
பிறையெயிற்றியாயொடும்பெற்றபிள்ளையே. (௩௨)

சாத்திரமறைதெரிமுனிவர்தன்மையிற்
காத்திரமாறியக்காவல்வேந்தருங்
கோத்திரஞ்சூத்திரந்துடியுரைத்துளார்
வேத்திரகியமாநகரின்மேயினார். (௩௩)

அந்தணரைவருமாயுமந்நகர்
வந்துழியதிதியர்வரவுகாண்டலு
முந்துபுமுந்துபுமுகமன்கூறினார்
செந்தழல்வேள்விகூர்திதேயரே. (௩௪)

நன்மனைவாழ்க்கையினயந்தசிந்தையான்
மன்மனையனையதன்மனையிலோர்முனி
தன்மனையம்மனைதம்பியரொடு
மென்மனைவருகெனவெதிர்கொண்டேகினான். (௩௫)

ஒருதினத்தமுதெனவுள்ளநாளெலாம்
வருமுறைப்படிவிருந்தயின்றவைகினா
ரருநெறிக்கடவுளர்க்குமுதமூட்டுத
லிருபிறப்பாளருக்கென்றுந்தன்மையே. (௩௬)

பொன்னகராளுகினர்போலநெஞ்சுறத்
தங்கனொனும்படிதர்யுமைந்தரு
மிந்நகரநேகநாளிருந்தவெல்லையி
லந்நகர்புரிந்ததோராண்மைகூறுவாம். (௩௭)

வேறு.

மறையுமுருவிளைடரியகுருகுலமகிபர்நெடுவனசரிதரா
யுறையும்வளமனையுடையமடவாலுருகுபிரதைதனுயிரனள்
குறைவில்பொலிவினள்விரதநெறியினள்குழுவுநிதியினள்கொடுமையா
லிறையுமொழிவறவிருகணறல்வரவெரிகொள்கொடியெனவினையினாள். (௩௮)

மறுகியழுவதென்மொழிகமுனிவனென்மனைவியெனவிவள்வினவலுங்
குறுகியவளுடனுரைசெய்குவளுறுகுறையையுளநனிகுறையவே
முறுகுசினவனல்பொழியும்விழியினன்முகனில்பகனெனுமுரனுடைத்
தறுகணிசிரனுளனிவ்வளநகர்தழுவும்வனனுறைதகுதியான். (௩௯)

அருளிலிதயமுநெறியில்சரிதமுமழுகினுருவமுமதிர்குரற்
பொருளிலுரைகளுமுடையன்முழுதுடல்புலவுகமழ்தருபொறியினன்
மருளுநரியொடுகழுகுதொடர்தரவலியபிணநுகர்சுவையுறு
திருளின்மிசையிருபிறைகளெனவளையெயிறுநிலவெழுமிதழினன். (௪0)

அந்தகனுமிகவஞ்சிமுதுகிடுமந்நிசிரனிந்தவூர்
வந்துகுடியொடுகொன்றுபலரையுமன்றமறுகிடைதின்றநா
ளெந்தைமுதலியவந்தணருமவனிக்குவருதொழிலஞ்சியே
சிந்தைமெலிவுறநொந்துதலைதிசைசென்றுகுடிதருசெங்கையார். (௪௧)

ஒன்றுபடவெதிர்கொன்றுபலருயிருண்பதறநெறியன்றுநீ
யின்றுமுதலினியென்றுமுறைமுறையெங்கண்மனைதொறும்விஞ்சையோர்
குன்றமெனவொருபண்டியறுசுவைகொண்டவடிசிலுநங்குலத்
துன்றுநரபலியொன்றுமிவைதிறைதொண்டுபுரிகுவமென்றலும். (௪௨)

அன்றுமுதலடல்வஞ்சகனுமிறைபண்பினொடுபெறுவன்பின
லென்றுநிலைபெறவுண்டியுடன்மனையெங்குடிபலியெஞ்சுறத்
தின்றுதிரிகுவனின்றென்மனைமுறைசென்றுபணிகவர்திங்கள்போ
னின்றுதளர்வுறுகின்றதெனதுயிர்நெஞ்சுமிலதொருதஞ்சமே. (௪௩)

கன்னியிவள்பிறர்பன்னியெனதிருகண்ணின்மணிநிகர்சன்மனு
மன்னுகுலமுதல்பின்னையொருவநுமண்ணினுறுதுணையின்மையா
லின்னல்பெரிதுளதென்னபுரிகுவதென்னவறிகிலனன்னைகேண்
முன்னைமனைநிகழ்தன்மமுனிவனைமுன்னிவிடர்நனிதுன்னுமால். (௪௪)

ஏதமறவுறவானமனைமகள்யாவுமுறைசெயயாதவன்
றீதில்குலமகளார்வமுடனவடேறவொருமொழிகூறுவா
ளாதியனுமனையோதுமுவமையனுடல்வலியுடையாண்மையான்
*மோதிமிகுதிறல்பாமசரிதனைமூளையுகவுடல்கீறுமே. (௪௫)

கொவ்வையிதழ்மடநவ்வியலமால்துவ்வினனலிலும்வெவ்வியோ
ரைவருளார்சுதர்கைவில்விறலினரவ்வியமுமிலர்செவ்வியோ
ரிவ்விவரிலெமையுய்வுகொளுமவனெவ்வெவ்வுலகையும்வவ்வுதிண்
பௌவமெனநனிதெய்வமுனிவரர்பைதலறநெறிசெய்வனே. (௪௬)

அவனையிடுபலியருளுகெனமொழியளவின்மறலியுமுளைவுறச்
சிவனைவழிபடுமகவையருளியசெனகசெனனியர்நிகரெனத்
தவனின்முதிர்தருமுனியும்வழுவறுதனதிலறனுடைவனிதையும்
துவனியறமனமகிழ்வொடினிதறுசுவைகொளமுதடுதொழிலராய். (௪௭)

---

* மோதியிடையிருள்யாமசரிதனை எனவும்பாடம்.

தண்டரளமலைவெண்கயிலைமலைசங்கமலையெனநங்கைமார்
மொண்டுசொரிதருகின்றவடிசிலுமுந்துகறிகளும்வெந்தபான்
மண்டுநறுநெயொடந்தவிடலையுமைந்தரனைவருமுண்டுதம்
பண்டிநிறைவுறுபின்புபிறிதொருபண்டிகெழுமியபண்டமே. (௪௮)

வையமுழுதுடையையனிளவலும்வைகலுடன்மனைவருவோ
ருய்யும்வகைபுகலையையுரையினையொய்யெனவிரைவொடுகைகொளா
வெய்யபகனுடல்பெய்தகுருதியின்மெய்யையெழிலணிசெய்தனன்
செய்யமலர்கொடுசெய்யதுகில்கொடுசெய்யகலவையின்மொய்கொடே. (௪௯)

தூற்றபலகறிசெற்றியமலைசெய்துப்பொரிமகிரியொப்பெனச்
சற்றுமிடனறமொய்த்தசகடிருசக்கிரவுருளைகளுய்க்கவே
யுற்றநிரைநிரைப்பத்திபடவலியொத்தபகடுகள்கட்டினா
னெற்றிமிசையொருகொற்றவடலரிநிற்பதெனவொளிர்பொற்பினான். (௫௦)

வேறு.

மண்டலங்கொள்வடிவுடனடற்பரிதிமண்ணில்வந்ததெனமறுகினிற்
கண்டகண்டமுனிகுலமடங்கவிருகண்களிக்கவருகாட்சியான்
வெண்டரங்கமெனவீசுபேயிரதமிஞ்சுகானநெறிமீதுபோ
யண்டரண்டமுகடுறவளர்ந்தனனரக்கனின்றவுழியறியவே. (௫௧)

களிந்தவெற்புதவுநீலமாநதியடுத்தகுன்றிலொருகழிமுழைத்
தெளிந்தபற்களொடுநாவைமென்றுநனிதின்றுவெம்பசிகொடயினான்
முளிந்துமுற்றுமனம்வேவவேவநெடுமூச்செறிந்துபுகைமூகனுடன்
விளிந்ததொத்துவழிகுழியநின்றுசுழல்விழிநிரைத்தயரும்வெகுளியான். (௫௨)

வெற்றெலும்பினுயராசனந்தனில்விகங்கநீழலிடைமேவரச்
சுற்றுநின்றுபலசம்புகங்கடுதிசொல்லவல்லன்மிகுதுன்முக
னுற்றுநின்றநிலைகண்டுகந்திவனையுயிரொழிந்திடவுடற்றினா
விற்றையுண்டிகெடுமென்றுபண்டியிலெடுத்தவல்சிறுகரிச்சையான். (௫௩)

வன்பினுலூகபதியளித்தநெடுவாரியாரமுதமுண்டகோ
முன்பினாகவுயர்சகடிருந்தெதிர்முகந்துகொண்டுவரைமுழையுளோ
யன்பினாலடையுமன்னமென்னநிறையன்னமுற்றவுமருந்தினான்
பின்பினாகவிதுகண்டுவெம்பசிகொள்பகனுமெய்தியிவைபேசுவான். (௫௪)

புலிதனக்கிடுவிடக்கைநின்றதொருபூனைதின்னுமதுபோலநீ
புலியனைத்தையும்விழுங்கினாவிதுபலிக்குமோவெளிமைபாரெனா
வொலிபடக்கிரியிலுருமெறிந்ததெனவோடிவந்துபிடரொடியவே
வலிபடப்பணிவிறற்றடக்கைகொடுமாறிபாறிமுறைவீசினான். (௫௫)

பக்கமும்பிடருமொக்கமுட்டிகள்படப்படக்கவளபாரமாய்
விக்கநினைவுனவயிற்றிரண்டருகும்வீழவீழுமுனவிழுங்கலும்
புக்கபண்டமுடனூனுமுடற்றசைபுசிப்பனென்றனிவைபோவதென்
றக்கடுங்கையுமிளைத்துவெஞ்சினமுமாறிநின்றனனரக்கனே. (௫௬)

அச்சகட்டினிலொரெட்டுணைச்சுவடுமற்றபின்சிறிதுமச்சமற்
றுச்சமுற்றவெயிலர்க்கனைத்தவனெடுத்தரித்துரைசெய்தொட்டினன்
மெச்சமெச்சுமுலகத்தரக்கர்களில்விக்ரமத்திறலின்மிக்கநீ
கச்சகச்சபலகத்தைவிட்டெனதுகட்டரத்தினொடுகட்டுவாய். (ருஎ)

சொல்லியென்பயனரக்கனீமனிதன்யானுனக்குரியதொழில்களா
மல்லினும்படைவிதத்தினுஞ்செருவில்வல்லவல்லனபுரிந்துபோர்
வெல்லநெஞ்சமுளதாகில்வந்துபொருவிறலிடம்பனையும்வென்றனைக்
கொல்லவந்தனனெனப்*புகன்றிருகைகொட்டிவாகுமிசைதட்டினன். (ருஅ)

பட்டவர்த்தனர்கள்பொற்சிரத்தின்மலர்பொற்புடைச்சரணபற்பனு
நெட்டிருட்சரனும்வெற்புவெற்பினொடுநிச்சயித்துடலநிற்பபோல்
வட்டம்வட்டம்வரவொட்டியொட்டியுறமற்றொழிற்செருவின்மட்டியா
முட்டியுத்தநிலைகற்றகற்றவகைமுற்றமுற்றவெதிர்முட்டினார். (ருகூ)

கரங்கரத்தொடுபிணங்கவுந்தமதுகால்கள்கால்களொடுகட்டவுஞ்
சிரஞ்சிரத்தினொடுதாக்கவுங்கொடியசிங்கவேறனையதிறலினு
ரூரங்களிட்டும்வளர்தோள்களிட்டுமெதிரொத்திமற்சமருடன்றபின்
மரங்களிட்டுமுயர்கற்களிட்டுநெடுவாதினொடிகலிமோதினார். (சூ0)

உலாவருந்தனதுதாதையொத்தவலியுடையகாளைகழலுதைபினல்
விலாவொடிந்துதடமார்பொடிந்துமிடல்வெரிநொடிந்துபடுவெம்பிணப்
புலாலளைந்தவிருகவுளொடிந்துபொருபுயமொடிந்துகடையொத்தவாய்
நிலாவெழுங்கொடியவெயிறொடிந்துசெயலின்றிவாணிருதனிற்கவே. (சூக)

உண்டியற்றயரும்பாதுதானனடியுண்டுமெய்த்தளர்வொழிந்தபின்
மண்டியிட்டெதிர்விழுத்திமார்பினிபமத்தகத்திடைமடங்கலிற்
றிண்டிறற்பெருமிடற்றைவன்பினொடுதிருகிவீசியொருசெங்கையாற்
பண்டியிற்கடிதினிட்டுமாருதிபுகுந்தனன்பழையபதியிலே. (சூஉ)

ஏகசக்கிரவனத்திருந்ததிறல்யாதுதானனையிமைப்பினிற்
சாகமுட்டியினடர்த்துமாமுனிவர்தம்பதிப்புறனடுத்ததோர்
வேகரிக்கடுவனத்திலிட்டுமலரோடைமூழ்கவிறல்வீமனு
மோகரித்தவுணரைத்தடிந்துகடன்முளரிநாயகனுமூழ்கினான். (சூங)

வாசமாமணிவிளக்கெடுப்பவிவன்வந்துதாமுறையுமனைபுகுந்
தீசனேநிமையெனத்தவம்புரியுமிருவர்தாள்களுமிறைஞ்சியே
நேசமானவருளன்னையைத்தொழுதுதம்முனைத்தொழுதுநெஞ்சுறத்
தேசினோடினோர்தொழுமகிழ்ச்சியொடுதழுவினன்முறைமைதிகழவே. (சூச)

அகமலர்ந்துமுனியாசிசொற்றிடவுமன்னையார்வவுரைகூறவு
முகமலர்ந்துரியதுணைவராண்மைநிலைமொழியவுஞ்சமரமொய்ம்பனைச்
சகமலர்ந்ததிருவுந்திமால்கொலிவனென்றுமற்றுளசனங்களு
மிகமலர்ந்துபுனலோடையிற்குழுமிநனிவியந்திசைவிளம்பினார். (சூரு)

வேத்திரகீயச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் சஎரு.

---

* புகுந்திருகைகொட்டிமார்பின்மிசைகுத்தினன் என்றும் பாடம்.

# திரௌபதி மாலையிட்ட சருக்கம்.



இங்கிவரிவ்வாறிந்தவிருக்கையிலிருக்குநாளி
லங்கண்மாஞாலமெங்குமாக்குமாளிகையின்வீந்தார்
பங்கமில்குணத்தான்மிக்கபாண்டவரென்றுமாழ்கத்
துங்கவேற்றுருபதன்றன்சூழ்ந்தது சொல்லலுற்றாம். (௧)

வரத்தினாற்பிறந்தவாறும்வான்மொழிபுகன்றவாறுஞ்
சிரத்தினால்வணங்கிக்கேட்பத்தேசிகனுரைத்தவாறு
முரத்தினார்கெடாதவாறுமுணர்ந்து தன்பேதைபின்னுஞ்
சரத்தினாலுயர்ந்தவின்மைத்தனஞ்சயற்குரியளென்றா. (௨)

தான்வரித்தவற்கேயெய்தவுரியளென்றனையையென்று
கான்வரிச்சுரும்புண்மாலைக்காவலர்க்கோலைபோக்க
மான்வரிக்கண்ணிக்கேற்றவதுவைநாண்மலர்பூவொன்றைத்
தேன்வரித்தென்னவந்து திரண்டது குமரர்சேனை. (௩)

ஆங்கது நிகழ்ந்தமாற்றமந்தணனொருவன்வந்தோ
னீங்கிவர்க்குரைப்பமைந்தரைவருமியாருங்கேட்டுப்
பாங்குடைப்பதியில்வாழும்பார்ப்பனமாக்களோடுந்
தாங்கருங்கொடியகானந்தம்மனத்தேகிற்போனார். (௪)

சாரதந்திரத்தின்மிக்கதபோதனஞ்சதுர்வேதங்கள்
பாரதந்தன்னோடைந்தாம்படியினாற்பகர்ந்தமூர்த்தி
நாரதமுனியையொப்பானராதிபர்நடந்துசெல்லு
நீரதநெறியில்வாவிநிறைந்தநீரென்னநின்றான். (௫)

வணங்கலும்வாழ்த்தியுந்தவந்துநீர்வாழ்வுசெய்தீ
ரிணங்கிநுங்கேண்மைகொள்வானிச்சையால்யாகசேன
னணங்கினையன்றுவேள்வியழலிடையளித்தானந்தச்
சுணங்கணிமுலையாளைச்சூட்டுவடொடையன்மாதோ. (௬)

இப்பகலிரவும்வைகாதேகியாங்கெய்துமங்க
ணப்பகன்மன்றல்பெற்றாற்றோற்றுதலாண்மையென்று
செப்பியேமுனிவன்போகச்சிறுவரும்பெரியசங்குன்
மைப்புறப்பார்த்தன்செங்கைமணிவிளக்காரப்போனார். (௭)

புத்திரன்போர்கங்கைப்பூந்துறையடைந்தபோதிற்
குத்திரவிஞ்சைவேந்தன்சூறுகிவெங்கொடும்போர்செய்யச்
சித்திரத்தேரோன்றன்னைத்தேவர்கோன்மதலைசெந்தீ
யத்திரத்திருந்தைத்தேரோனுக்கினைனிமைப்பினம்மா. (௮)

தோற்றவன்றிரிந்து மீண்டுதோழனவ்விசயற்காக
வாற்றரும்புனலும்யாறுமவன்றுணையாகநீந்திச்
சாற்றுமுற்கசதீரத்துத்தௌமியமுனியைக்கண்டு
போற்றிமற்றவன்றனோடும்*புன்னெறிப்புறம்விட்டாரே. (௯)

புலர்ந்தனகங்குற்போதும்பொழிதருபனியுஞ்சோர
மலர்ந்தனவனமுங்கண்ணும்வயங்கினதிசையும்பாரு
மலர்ந்தனதடமுங்காவுமார்த்தனபுள்ளுமாவுங்
கலந்தனகுருகும்பேடுங்கலித்தனமுரசுஞ்சங்கும். (௧௦)

குன்றமுங்கொடியகானுங்கூரிருட்கங்குனீங்கி
நன்றுநன்றுதவவந்தீர்நடந்துநீரிளைத்தீர்போலு
மென்றுகொண்டுவகையோடுமின்மலர்க்கழுநீர்வாச
மன்றலந்தென்றல்வீசிவழிவிடாய்தணித்ததன்றே. (௧௧)

வெறிபடுமுளரிமொக்குள்விரிபதநோக்கிச்சுற்றும்
பொறிவரிவண்டினீட்டம்புறத்திருந்திரங்கவண்டொன்
றிறகால்வீசியுள்புக்கின்மதுநுகர்தல்கண்டு
நெறியினன்னிமித்தமாகநெஞ்சுறநினைந்துசென்றார். (௧௨)

வண்டுறைமருங்கினங்கோர்மாங்கனிவீழ்தல்கண்டே
தண்டுறைமீன்களெல்லாந்†தத்தமக்கிரையென்றெய்த
விண்டுறைகிழியவோடிவென்றொருவாளைதன்வாய்க்
கொண்டுறைவலிமைநோக்கிக்குறிப்பினுமுவகைகூர்ந்தார். (௧௩)

மாக்குரலளகவல்லிவதுவையினழகுகாணத்
தாக்குரலடிகொள்யானைத்தரணிபரெவரும்வந்தார்
வீக்குநன்மிளிர்பொற்பூணீர்விரைவுடன்வம்மினென்று
கூக்குரல்விளிப்பபோலுங்கோகிலக்குரலுங்கேட்டார். (௧௪)

நீடுதவில்லையின்றேதிருபதிகன்னிமன்றல்
கூடுதலிவர்க்குண்டாகுங்கொற்றவர்குறைபெறாதே
யோடுதலுண்மையென்றுத்தோகைகளோகையோடு
மாடுதனோக்கிநோக்கியகமகிழ்ந்தேகினாரே. (௧௫)

பூவெலாஞ்சுரும்புமொய்ப்பப்புனலெலாம்புள்ளுவைக
மாவெலாந்துணையின்மேவமரனெலாம்வல்லிபுல்ல
வேவெலாம்பயின்றவிற்கையேற்றிளஞ்சிங்கம்போல்வார்
காவெலாமருங்குதோறுங்கண்டுகண்களித்துப்போனார். (௧௬)

வாரணமாவைசூழ்ந்தமாயவன்றோற்றம்போலப்
பேரொளிபம்பியார்க்கும்பேசருஞ்சிறப்பிற்றாகிப்
பூரணகும்பம்பொற்கோபுரங்களாற்பொலிந்துதோன்று
மாரவமிகுந்தபல்புள்ளகழிசூழ்புரிசைகண்டார். (௧௭)

---

* புனநெறி யென்றும் பாடம்.

† கங்கமக்கு என்றும் பாடம்.

மங்கலமுழவம்விம்மமன்னுபல்லியங்களார்ப்பச்
சங்கினமுழங்கவெல்லாத்தானையும்பரந்துசூழ
வெங்கணுநெருங்கிவைகுமிராசமண்டலங்களோடுந்
துங்கவேற்றுருபதன்றன்றன்றொல்லைமாநகரிபுக்கார். (கஅ)

தொடங்கியுந்தொடக்கந்தொட்டுத்துகளறவளர்ந்துமீள
மடங்கியுஞ்செல்லுகின்றமன்னுயிருலகமெல்லா
முடங்கியசார்ங்கச்செங்கைமுகுந்தன்வாய்ப்புகுந்தகாலத்
தடங்கியவுதரம்போன்றதந்தமாநகரியம்மா. (கசு)

குழைப்புறங்கடந்தசெங்கட்குறுநகைக்கொவ்வைச்செவ்வா
யிழைப்பொலிமுலையினாளுக்கிற்றைநாள்வதுவையென்று
மழைப்புறமாடமேறிவருநரைமலர்க்கைகாட்டி
யழைப்பனபோன்றவீதியணிகொடியாடையெல்லாம். (உ0)

விண்டலம்புதைத்தபைம்பொற்றுகிலிடுவிதானநீழன்
மண்டகிற்புகையின்மூழ்கியாவணமறுகிற்செல்வங்
கண்டுகண்டரியேறனையின்கவினுடைநெடுந்தோல்போர்த்துக்
கொண்டனசெயலாராங்கோர்குலாலனதிருக்கைசேர்ந்தார். (உக)

ஆங்கணற்றவத்தான்மிக்கவன்னையையிருத்திமைந்தர்
தாங்கண்முற்றுணையாய்வந்ததாபதர்தம்மோடெய்தித்
தூங்கணங்குரீஇயின்மஞ்சத்தலந்தொறுந்தூங்குகின்ற
தேங்கண்மாத்தெரியல்வேந்தர்சேர்ந்தபேரவையிலானார். (உஉ)

ஆதியிற்குந்திமைந்தரைவர்க்குமுரியளாமென்
றோதியவிதியினானெஞ்சுலப்புறுவுவகைகூர்வாள்
சோதிடம்பொய்யாதென்றுந்தோன்றுவருநரிபோரென்றுந்
தாதியர்தேற்றத்தேற்றத்தன்மனத்தளர்வுதீர்வாள். (உ௩)

சூட்டியதொடையன்மாலைத்தோழியர்வைகறோறுந்
தீட்டியபடங்களுந்தஞ்சிந்தையும்பொலிவுகொள்ளக்
கோட்டியசிலையினோடுங்கொடிமணித்தேரினோடுங்
காட்டியகோலமன்றிப்பிறிதொன்றுங்காண்கிலாதாள். (உச)

ஆண்டெரிப்பிறந்தபோதேயன்பினாலெந்தைநேர்ந்த
பூண்டெரிமார்பனின்றிப்பொன்னவைபொலியத்தோன்றி
யீண்டெரிமுன்னர்மன்னரிழிவுறவேட்டிலானேன்
மீண்டெரிபுகுவனென்னுமெண்ணமேவிழையுநீராள். (உரு)

கோண்பிறைநுதலாடன்னைக்கோதையர்பலருங்கூடிச்
சேண்புனல்பலகொண்டாட்டிச்செழுந்துகிலொழுதுசேர்த்திப்
பூண்பனவிசையப்பூட்டிப்புகைகமழ்தாமஞ்சூட்டிக்
காண்பவராண்மைதேயக்காமவேள்கலகஞ்செய்தார். (உசு)

வந்தனர்குமரர்யாரும்வருகெனமகிழ்ந்துபோற்றிச்
சந்தணிமுலையினாளைத்தாயினும்பரிவுகூர்ந்தோர்
கந்தனுமுவமையாற்றாக்காவலர்காமத்தீயி
லிந்தனமிடுவதேய்ப்பவேத்தவையேற்றினாரே. (௨௭)

வெங்கழற்படைக்கைவேந்தர்விழிகளால்விளங்குமேனிப்
பொங்கழற்பிறந்தபாவைபொற்பினைப்பொலியநோக்கிப்
பைங்கழைத்தனுவோன்செங்கைப்பகழியாற்பாவமெய்தி
யங்கழற்பட்டநெய்போலனைவருமுருகினாரே. (௨௮)

மங்குலின்மங்குன்முடிவயங்கொளிமறைந்துதோன்றாச்
செங்கதிர்ச்செல்வன்போலச்சீர்கெழுவடிவமாறி
யங்கவரிருந்ததன்மையறிந்ததோசெறிந்தபொய்கைப்
பங்கயம்போன்றதாலப்பரிவுறுபாவைபார்வை. (௨௯)

மனக்கடுங்காதல்விம்மமாலைதாழ்புயங்கள்வாட
வெனக்கெனக்கென்றென்றேமாந்திருந்தகாவலரைநோக்கிச்
சினக்கடமொழுகுங்கன்னக்*களிற்றினான்றிட்டத்துய்ம
னினைக்கவுமரியதொன்றைநினைவினோடுரைசெய்வானே. (௩0)

சிலையிதுசிலீமுகங்களிவைகடுந்திரிகை†வேகத்
திலைமுகத்துழலுகின்றவெந்திரத்திகிரிநாப்ப
ணிலையிலாவிலக்குமஃதேநெஞ்சுறயாவனெய்தான்
கலைவலீரவற்கேயந்தக்கன்னியுமுரியளென்றான். (௩௧)

வேறு.

இச்சொற்பழனப்பாஞ்சாலர்க்கிறைவன்புதல்வனியம்புதல்கேட்
டச்சொற்றத்தஞ்செவிக்குருமேறாகக்கலங்குமரவனார்
கச்சைப்பொருதுபுடைபரந்துகதித்துப்பணைக்குங்கதிராரப்
பச்சைக்குரும்பையிளமுலைமேற்பரிவானணைப்பிரிவுற்றார். (௩௨)

கண்போலம்புநுதல்போலுங்கடுங்கார்முகமுங்காண்டொறுமத்
திண்போர்வேந்தர்மனக்கலக்கஞ்செப்புந்தகைத்தன்றானாலும்
விண்போயுழன்றசுழலிலக்கைமெய்யேயெய்துவீழ்த்திமலர்ப்
பெண்போல்வாளைக்கைப்பிடிக்கும்போராசையினாற்பேதுற்றார். (௩௩)

திருந்தார்மன்றற்குழலணங்கின்செவிலித்தாயர்கடல்கடைந்து
வருந்தாவமுதநிகர்வாளைமயில்போற்கொண்டுமன்னவைபுக்
கிருந்தாரிருந்தகாவலரையின்னாரின்னாரிவரென்று
முருந்தார்பவளத்துவரிதழ்வாய்முகிழ்வாணகைக்குமொழிகின்றார். (௩௪)

மாற்றம்பிறிதொன்றுரையானிவ்வன்போர்வில்லின்வலிநோக்கிச்
சீற்றஞ்சிந்தைகொண்டழலப்பொய்யேமலர்ந்ததிருமுகத்தா
னேற்றந்தன்னில்வேறொருவரிப்பேருலகிலிலரென்னத்
தோற்றம்படைத்தோன்றனைக்காட்டித்துரியோதனன்மற்றிவனென்றார். (௩௫)

---

* களிறனான் என்றும் பாடம்.

† வேகத்திலையமொத்து என்றும் பாடம்.

மணியின்கிரணவெயிலெறிப்பமண்ணேழ்தாங்குநச்செயிறரூப
பணியின்முடிநாயகத்தலையின்பாங்கேநிரைத்தபஃறலைபோற்
றுணியுங்கொடுமைவகிரன்னதுணைவர்துச்சாதனன்முதலோ
ரணியுங்கழற்கார்ச்சுயோதனனுக்கநுகாசனத்தரிவரென்றார். (௩௬)

உலைவந்தயருஞ்சூன்மந்திக்குநுகாநிலங்கீண்டுதவுகுலக்
கலைவன்பலவின்சுளைகீறிக்களிப்போடளிக்குங்காந்தாரத்
தலைவன்சகுனியிவன்கண்டாய்தக்கோராடாச்சூதுக்கு
நிலைவஞ்சனைக்குந்தரணிபரில்யாரேயிவற்குநிகரென்றார். (௩௭)

பேசாதொடுக்கும்போறிவாற்பெரும்போர்வலிபாற்பிறப்பான்மெய்த்
தேசாலியற்றும்பலபடைபாற்றிண்டோள்வலியாற்செஞ்சிலைக்கை
யாசான்மைந்தனிவன்றனக்கிங்காரேயுவமையமரினு
மீசானனைமற்றொருசிறிதொப்பெனலாமல்லதிலையென்றார். (௩௮)

பெண்மைக்கிரதியெனவந்தபெண்ணாரமுதேபேருலகி
லுண்மைக்கிவனேவலிக்கிவனேயுறவுக்கிவனேயுரைக்கிவனே
திண்மைக்கிவனேநெறிக்கிவனேதேசுக்கிவனேசிலைக்கிவனே
வண்மைக்கிவனேகன்னனெனுமன்னன்கண்டாய்மற்றிவனே. (௩௯)

அலத்தான்முன்னம்பிளந்தபகையடர்ப்பான்கருதிப்பிளப்புண்ட
சலத்தால்யமுனைபிணித்ததெனத்தயங்கும்படிசேர்தணையினான்
குலத்தானுயர்ந்தவசுதேவன்குமரன்களபக்கொங்கையர்மெய்ந்
நலத்தான்மகிழுஞ்சிந்தையினானந்தாரிராமனிவனென்றார். (௪0)

இந்தக்குரிசில்யதுகுலத்துக்கெல்லாந்திலகமெனுமாறு
வந்துற்பவித்தப்பொழுதுவருடன்வளருங்கள்ளமாமாயன்
முந்தக்கஞ்சமாமனுயிர்முடித்தானிவற்குமுகிலூர்தி
யந்தப்புரத்திலாராமமந்தப்புரத்துக்காராமம். (௪௧)

தண்ணந்துளவோன்றனக்கிளவலிவன்காண்மின்னேசாத்தகியென்
றெண்ணும்போசகுலத்தலைவனெவருஞ்சூழவிருக்கின்றான்
கண்ணன்றன்னையவமதித்துக்கழறும்புன்சொற்கார்முகத்தைத்
திண்ணென்கரத்தானீங்கிவன்காண்சேதிப்பெருமான்சிசுபாலன். (௪௨)

தார்வண்டிமிரத்தேனொழுகுந்தடந்தோள்வீரன்சராசந்தன்
போர்வெஞ்சரத்தால்யாவரையும்புறங்கண்டன்றிப்போகாதான்
சீர்வண்மதுராபுரிவிடுத்துத்துவாரகையினிற்சென்றொதுங்கக்
கார்வண்ணனையுநெடுங்காலம்வென்றானிவன்காணென்றாரே. (௪௩)

பனைக்கைப்பிறைவெண்கோட்டயிராவதமேபோலும்பகட்டிலிவன்
வினைக்கட்புகுந்தாலெதிர்நின்றுவேறாரிவனைவெல்கிற்பார்
முனைக்கட்செங்கட்டீயுமிழு*முகத்தான்மாதேபகதத்தன்
றனக்குத்தானேநிகரென்னத்தருக்கொடண்டேயிருக்கின்றான். (௪௪)

* [illegible]

இவன்சல்லியனென்றுரைசான்றவிகல்வேன்மன்னர்க்கேறனையா
னிவன்றன்பகைவர்யாவரையுமிமையோராக்குமெழினீல
னிவன்றண்டமிழ்தோடல்வழுதியிவன்றேரிரவிகுலவளவ
னிவன்செந்தழலோன்மரபாகியீரேழுலகும்புகழ்சேரன். (௪௫)

வில்லாண்மையினுல்வெண்கருப்புவில்லோன்றனக்கேநிகரென்னப்
பல்லார்புகழும்பான்மையினுற்பதினெண்புவிக்கும்பதியாய
வெல்லாவரசுநின்பொருட்டாலீண்டேதிரண்டவின்னமுதச்
சொல்லாய்நல்லாய்மென்பூவாய்தோகாய்பாவாய்திரௌபதியே. (௪௬)

இவரிற்றனதுதோள்வலியாலரியேறென்னவெழுந்திருந்தத்
தவரிற்புரிநாணுறவேற்றித்தழல்கான்முனைவெஞ்சாயகத்தாற்
பவரிற்செறியநிரைத்துருளும்பல்வாய்த்திகிரிப்பயிலிலக்கைக்
கவரிற்செழுந்தார்புனைந்தவனைக்கைக்கொண்டிடுநீகடிதென்றார். (௪௭)

வேறு.

முத்தநகைப்பவளவிதழ்க்குயில்வெண்டிங்கண்முகத்தாளைக்கைத்தாயர்மொழிந்தகாலைச்
சித்திரமொத்துணர்வழிந்துதத்தம்மைம்பொற்றிகழரியாசனத்திருந்தார்சிற்சில்வேந்த
ரத்தனுவின்பெருமையையுமிலக்கத்துள்ளவருமையையுங்கருதாமலாண்மைகூறி
யெத்தனையெத்தனைவேந்தராசைகூரயானென்றெழுந்திருந்தார்யானைபோல்வார். ( )

தனுவெடுத்துநாண்பிணிப்பாக்கிளராநின்றநன்குலத்திலவனிபரைத்தடித்துவேதப்
பனுவலுக்குந்தவத்தினுக்கும்புரியவேள்விப்பார்ப்பனமாக்களினிடையேபாண்டுமைந்த
ரனுவுருக்கொண்டிருமாறியிருந்ததன்மையறிந்தருளிபலாயுதனோடருளிச்செய்தான்
மனுமுறைக்குவரம்பாகிவருத்தம்வீடமாநிலமீதவதரித்தவாசுதேவன். (௪௯)

பலருமுடனகங்களித்துமேருசாரப்பாரவரிசிலையினிலைபார்த்துமீண்டார்
பலருமொருகையிற்பிடிக்கவடங்காவில்லின்பருமைதனைக்குறித்துமனம்பதைக்கப்போனார்
பலருமலர்க்கைப்படுத்திட்பெயர்க்கமாட்டார்பணைத்தோளுந்தமையுமெனப்பயந்துநின்றார்
பலருமெடுத்தணிமணிநாண்பூட்டவாராப்பரிசொடுமற்றதன்வலிமைபகர்ந்தேவிட்டார். ()

வல்லியம்போனடந்துதனுவிருகையாலும்வாரியெடுத்தெதிர்நிறுத்திமல்லல்வாகுச்
சல்லியனுநாணேற்றமுடியாதந்தத்தனுவுடனேதன்றனுவுந்தகரவீழ்ந்தான்
வில்லியரின்முன்னெண்ணத்தக்கவின்மைவேந்தடுபோர்ச்சராசந்தன்வில்வேதத்திற்
சொல்லியவாறெடுத்தூன்றிமற்றைக்கையாற்றொல்வலிநாணியுமெடுத்துத்தோளுஞ்சோர்ந்தான்,

பூகதனுகியவன்றேபகைவரெல்லாம்போற்றவளர்ந்துலகாளப்புனைந்தமௌலி
மாகதனும்வில்லெடுத்துவரிநாண்வில்லின்மார்பளவும்போக்கினான்வன்போர்நீலன்
சாகதனென்றவைதுதிக்கநெடுநாண்கொற்றத்தனுவொருசாணெனக்கொணர்ந்தான்சாணேயல்ல
வேகதனுநால்விரலென்றுரைக்கநாணிவீக்கினான்வலம்புரித்தார்வேந்தர்வேந்தே. (௫௨)

கலைவருத்தமறக்கற்றகன்னனெனனுங்கழற்காளையானிருந்தகயிலையென்னு
மலைவருத்தமறவெடுத்தநிருதனென்னமன்னவையின்வலியுடனேவந்துதோன்றி
நிலைவருத்தமறநின்றுபரியகோலநீள்வரிநாண்மயிர்க்கிடைக்கீழ்நின்றதென்னச்
சிலைவருத்தமறவளைத்துவளைந்தவண்ணச்சிலைக்காறன்முடித்தலையைச்சிந்தவீழ்ந்தான்.

அரவநெடுங்கொடியுயர்த்தோன்முதலாவுள்ளவனைவருமங்கொருதனுவுக்காற்றாகி
யுரவுமெலிந்தெழின்மாழ்கிச்செயல்வேறின்றியுள்ளமழிந்திருந்ததற்பினுருமேறென்னக்
காவுடனந்தணர்நாப்பணிருந்தகொற்றக்கருமுகில்வாகனன்புதல்வன்கரியமேனி
யிரவிகுலச்சிறுவனைப்போலெழுந்துமன்றவிளங்கொடிதம்முனைநோக்கியிம்பினனே. ()

மன்மரபிற்பிறந்திருதோள்வலியாலிந்தமண்ணனைருமவர்க்கன்றிமறைநூல்வாணர்
தொன்மரபிற்பிறந்தவருமிலக்குவீழ்த்தாற்சூட்டுமோதொடையலிளந்தோகையென்னத்
தன்மரபுக்கணிதிலகமானவீரன்றகவன்றேமன்றனுக்குத்தாழ்வோவென்றான்
வின்மரபிற்சிறந்தநெடுவில்லையீசன்மேருகிரியெடுத்ததெனவிரைவிற்கொண்டான். (நிரு)

கிளர்மகுடவயவேந்தர்நாண்களெல்லாங்கீழாகத்தனிநெடுநாண்கிளரவேற்றித்
தளர்வறுசாயகந்தொடுத்துக்கற்றோர்யாருந்தனுநூலுக்காசிரியன்றானேயென்ன
வுளர்திகிரிச்சுழலிலக்கையவையோர்தங்களுங்கமுடன்விழவெய்தானுரவுத்தோளான்
வளருமருந்தவவேள்விமுனிவரார்த்தார்வாசநறுமலர்சொரிந்துவானோரார்த்தார். (நிசு)

தாஞ்சாரற்கரியதனுவளைத்தானென்றுதாரணிபர்தம்முகங்கருகத்தனுவினோடும்
பூஞ்சாரன்மணிநீலகிரிபோனின்றபூசுரனையிவனவனேபோன்மெனறெண்ணிப்
பாஞ்சாலர்பதிகன்னியிருதன்செங்கட்பங்கயத்தாற்பாங்காகப்பரிந்துநோக்கித்
தேஞ்சாரநறுங்கழுநீர்ச்செய்யதாமஞ்செம்மணிகாலருவியெனச்சேர்த்தினளே. (நிஎ)

அந்தாதுந்துபிமுழங்கச்சங்கமார்ப்பவானகதுந்துபிமுதல்வனாதியாக
வந்திருந்தபேரவையைமதியானாகிமாலையிடுபசுஞ்செம்பொன்மாலையோடுஞ்
சந்திரனுமுரோகிணியுமென்னமுன்னர்த்தான்வளைத்ததடஞ்சிலைகைத்தலத்திலேந்தி
யிந்திரசூனுவுமெழுந்தாங்கேகலுற்றானிருபுறமுந்துணைவர்வரவிணையிலாதான். (நிஅ)

பார்ப்பான்வந்தொருகோடியரசைச்சேரப்பரிவித்துப்பாஞ்சாலன்பயந்ததெய்வச்
சீர்ப்பாவைதனைவலியாற்கொண்டுபோகச்செயலின்றியிருந்தீரென்செய்தீரென்று
வேர்ப்பாடுறுதல்சிவந்தவிழியனாகிவிழியிலான்மகன்கழறவெகுண்டுமேன்மே
லார்ப்புராகக்கொதித்தெழுந்ததுகாந்தகாலத்தார்க்குமகராலயம்போலரசீட்டம். (நிகு)

முருத்துவாணகைத்துவர்வாய்முகத்தினளைமுத்தோன்பின்னிருத்தியமர்முருக்குமாறு
மருத்துவான்றிருமகனுமருத்தின்செல்வமைந்தனுமேபுரிந்திட்டார்மறையோருள்ளா
ருருத்துவாய்மடித்தெழுந்துகோருதட்டிட்டேன்றியதண்டெதிரோச்சியுடன்றவேந்தர்
கருத்துவார்தகவெருக்கொண்டோடவோடக்கையுரங்காட்டினர்வளர்த்தகனலேயன்னார்.

மிகைத்தமுனிவர்முனிந்தவுறுதிநோக்கிவென்றெடுத்தவிற்றடக்கைவிசயன்சற்றே
நகைத்துநகைத்தவரவரைவிலக்கியென்முன்னமன்வரினும்பிளப்பலெனநவிலாநின்றான்
புகைத்தகனல்விழிக்கன்னன்றனுக்காலெள்ளிப்பூசரனென்றவமதித்துப்புனைவில்வாங்கி
யுகைத்தபகழியுமுகைத்தானானுந்தன்கையொருகணையாலுடன்பிளந்தானுருமேறொப்பான். ()

குன்றன்மெய்வகுத்தனையவீமன்றன்மேற்கொல்லியல்செய்சல்லியனைக்குத்திவீழ்த்திக்
கன்றான்முன்விளவெறிந்தகண்ணனென்னக்கரன்முடியோடுறவளைத்துவான்மேல்வீசி
நின்றான்மற்றவனயலேதெறித்துவீழ்ந்துநெஞ்சொடிந்தானிருவருமுன்னில்லாராகி
வென்றானுந்தோற்றானும்வசைகேடவெம்போர்வேதியரோடற்றலெனமீண்டுபோனார். ()

வேறு.

வண்ணநூன்முனிவரல்லர்மருத்துவான்மருத்துநல்கு
மண்ணலங்குமரராமென்றயிர்ப்புறுமரசர்யாருங்
கண்ணனால்விலக்கப்பட்டுக்கடிநகர்தோறுந்தங்க
ளெண்ணமும்பயனும்வேறாவெய்தினரென்பமன்னோ. (௬௩)

அன்றிலக்கெய்தகோவுந்துணைவருமானவெம்போர்
வென்றுகொற்றவையோடொக்குமின்னிடைப்பொன்னுந்தாமுஞ்
சென்றுமட்கலஞ்செய்* கம்மிசெழுமனைமுன்றிலெய்தி
யின்றுபெற்றனமோரையமென்செய்வதிதனையென்றார். (௬௪)

உள்ளிருந்தன்னைமைந்தருரைத்தசொற்கேட்டுத்தேவர்
தெள்ளமுதென்னமக்காள்சேரநீரருந்துமென்னப்
புள்ளினமொடுங்குமாலைப்பொழுதிவள்புறம்பரெய்திக்
கள்ளவிழ்கூந்தலாளைக்கரும்பெனவிரும்பிக்கண்டாள். (௬௫)

என்னினைந்தென்சொன்னேன்மற்றென்செய்தேனென்றுசோரு
மன்னையைவணங்கிநின்சொலாரணப்படியதாகு
நின்னினைவன்றாலெங்கணெஞ்சினுநினைவுண்டென்றான்
றன்னிகரிலாதகேள்விசான்றசீர்த்தருமனென்பான். (௬௬)

பாரனைத்தினுந்தன்னைம்பாரப்பியபார்த்தனென்னும்
வீரனைப்பயந்தபாவைவிதிவழியிதுவென்றெண்ணி
மாரனுக்கரசுநல்குமங்கையுந்தானுமந்தக்
காரிருட்கங்குன்மைந்தர்கட்டுரைகசிந்துகேட்டாள். (௬௭)

பொற்றொடிக்கனகமாலைப்பொலங்குழைப்பூவைதன்னைப்
பெற்றபூபதியவ்வீரர்பெருமிதவாய்மையெல்லா
மொற்றரானுணர்ந்துநெஞ்சத்துவகையோடையமின்றி
மற்றைநாள்வந்துகொற்றவாண்மனைகொண்டுபுக்கான். (௬௮)

அடுத்தபல்பொருளும்வைக்கவாயுதமன்றிவேறொன்
றெடுத்திலரென்றும்வேதமுனிவரல்லரென்றுங்
கொடுத்தனசிறப்பினோடுங்குருமணித்தவிசினேற்றித்
தொடுத்ததார்க்குருக்களெனவேதுணிந்தனன்யாகசேனன். (௬௯)

* கன்மி என்றும் பாடம்.

கைவருசிலையின் வென்றுகைப்பிடித்தவனுக்கின்றே
மைவருகண்ணிருளைவதுவைசெய்திடுதுமென்ன
நெய்வருமுனைகொள்கூர்வேனிருபனைநோக்கியாங்க
ளைவரும்வேட்டுமென்றனசைவிலாவறத்தின்மைந்தன். (௭௰)

தருமன்மாமதலைசொல்லாற்றளர்வுறுகாலைமாலை
நிருபநின்மனத்திலையநீக்குகநீக்குகென்றுத்
துருபதன்முன்னர்வந்துதோன்றினன்சுருதியாவும்
விரைமலர்விதியின்மிஞ்சவிதித்தருள்வியாதனென்பான். (௭௧)

தொழுதுபொற்றவிசினேற்றிச் சூழ்ந்தனரிருந்துகேட்ப
புழுதுணர்கேள்விஞானமுனிகுலத்தரசபோல்வான்
பழுதறுகன்னிதன்னைப்பாண்டவரைவருக்கு
மெழுதருமறையின்வேள்வியியற்றுதற்கியற்கைகேண்மோ. (௭௨)

வேறு.

மூளாரழலுற்பவித்தாளிவண்முற்பவத்தி
ளாயினியென்றுரைசால்பெருநாமமிக்காள்
வாளார்தடங்கணவட்காரணரொணர்க்கென்றுங்
கேளானமௌற்கல்வியனென்பவன்கேள்வனானான். (௭௩)

காதிற்கலந்தகடைக்கண்ணிதன்கற்புமன்புஞ்
சோதித்தலுன்னித்தணியாததுவக்குநோயன்
கோதித்தநெஞ்சன்பெருமூப்பினன்கூர்ந்துநாளும்
வாதித்தலன்றிமகிழாமனைவாழ்வுபூண்டான். (௭௪)

கச்சிற்கடங்காமுலைடாளக்கணவனுண்ட
மிச்சிற்புறத்துவிரல்வீழவும்வீழ்தன்மிஞ்சிக்
குச்சித்தலின்றிநுகர்ந்தாள்கொடுங்காமநோய்கொண்
டிச்சித்தவின்பநுகராமலிளைத்தமெய்யாள். (௭௫)

அன்பன்றெரிவைவழிபாடுகண்டார்வமெய்தித்
துன்பம்பயந்தபிணியாலழிதோற்றமாற்றித்
தன்பங்கையீசன்றிறைநல்கமுன்சாபம்வாங்கும்
வன்பன்றனக்குங்கிடையாதவடிவுகொண்டான். (௭௬)

மின்னேயுனக்குமிகுகற்புடைமீனுமொவ்வா
வின்னேவரம்வேண்டுவவேண்டுகவீண்டையென்ன
நின்னையமென்றும்பிரியாநலனேர்கவென்று
டன்னேரிலாதமனைவாழ்விற்றவத்தின்மிக்காள். (௭௭)

குன்றுநதியுமாறும்பைங்கொடியுமாகித்
தான்றுந்துணையாய்ப்பலயோனிகடோறுமெய்தி
நின்றுஞ்சரித்துமருப்போகநெடிதுதுய்த்தா

(௭௮)

இந்தப்பிறப்பினலமெய்தியிறந்தபின்னுஞ்
சிந்தித்தவண்ணமிவளிந்திரசேனையாகி
யந்தப்பதியையடைந்தாண்மற்றவனுமஞ்சி
வந்தித்ததொல்லைப்பருமாதவமன்னிநின்றான். (௭௯)

அன்னோனகலவவன்மேலவளாசைமிஞ்சி
யென்னோபுரிவதினியென்றலுமேந்தல்கூற்றாற்
றன்னோர்வடிவினொருகூறொருதையலாகு
முன்னோனைநோக்கித்தவஞ்செய்தனண்மூரல்வாயாள். (௮௦)

ஐந்தானனத்தோனருள்செய்யவழகின்மிக்கா
ளைந்தானசொல்லாற்கணவற்றருகையவென்றா
ளைந்தானசொல்லானளித்தான்மற்றவனுமுன்னா
ளைந்தானபோகமிவளெய்தியவாறறிந்தே. (௮௧)

முன்னின்றதேவன்மொழியின்படிகங்கைமூழ்கித்
தன்னந்தனிநின்றழுகின்றவத்தையல்கண்ணீர்
பொன்னங்கமலவனமானபுதுமைநோக்கி
யென்னென்றிவளையிமையோர்பதியெய்தினனே. (௮௨)

அவனைத்தொடர்பால்வருகென்னவவனுமாங்கட்
சிவனைச்சிறிதுமதியாதெதிர்சென்றகாலை
யிவனுக்கென்மேன்மையெனச்சீறலுமெஞ்சினன்போற்
புவனத்தெவருநகையாடப்புலம்பிவீழ்ந்தான். (௮௩)

வெவ்வாயுதங்களுதவாமல்விபுதநாத
னிவ்வாறுவீழமழவாளியிமைப்பின்மீண்டு
மவ்வாசவற்குப்பிலமொன்றிலடைந்தவச்சிரக்
கைவாசவர்களொருநால்வரைக்காட்டினனே. (௮௪)

வன்பாதலத்தில்வருநால்வரும்வானின்வந்த
புன்பாகசாதனனுந்தன்னடிபோற்றிநிற்ப
வன்பான்மகிழ்நரிவட்கைவருமாதிரென்று
மென்பாவைபங்கன்விதிக்கப்புவிமீதுவந்தார். (௮௫)

தருமன்பவனன்றினநாதன்றனயர்தம்பால்
வருமிந்தநால்வரவர்நால்வருமாலைமார்பா
தெருமந்தவிந்தச்சிலைவீரனித்தேவர்க்கெல்லாம்
பெருமன்பிறப்பிற்கவனேமுன்பிதாவுமானான். (௮௬)

இம்மாறுதொல்லையருமாதவத்தெல்லைகண்ட
வம்மாதிவள்காதலரைவருமாகவென்று
தெம்மாதர்முற்பூண்கவர்மன்னன்றெளியுமாறு
வெம்மாதவத்தோன்பெருஞானவிழியுமீந்தான். (௮௭)

ஓதாதுணர்ந்துமறைநாலுமுருவுசெய்த
வேதாவுமொவ்வாவியாதன்மொழிவெள்ளநீராற்
கோதானநெஞ்சைக்குளிப்பாட்டினன்கோடிகோடி
தூதானவண்டுதுதைமாலைகொள்சோமகேசன். (௮௮)

வியப்போடுதொல்லைமுனிசொற்றலைமீதுகொண்டு
பயப்போன்மகன்மேற்புரிகின்றபரிவினுக்கும்
வயப்போர்நிருபர்பெருமைக்கும்வலிக்குமீடா
நயப்போடுமன்றலயர்வித்தனனங்கொர்நாளில். (௮௯)

பாடுஞ்சுருதிமறைவாணரும்பாரிலுள்ள
சூடுங்கனகமுடிவேந்தருந்தொக்குநிற்ப
நீடுங்கதிர்மாமணித்தூண்கணிரைத்தபத்தி
யாடுங்கொடிமண்டபமெய்தினரண்டர்போல்வார். (௯௦)

குறிக்கும்பணிலமுதலாயிரகோடியாகப்
பிறிக்குங்கருவியிடந்தோறும்பிளிறியார்ப்பச்
செறிக்குங்கழற்காலறன்மைந்தனைச்செம்பொன்வேதி
யெறிக்குங்கிரணமணிப்பீடமதேற்றினாரே. (௯௧)

இடத்தோளிவட்கும்வலத்தோளிவ்விறைவனுக்குந்
திடத்தோடுரைத்தகுறியின்பயன்சேர்ந்துதோய
விடத்தோடமுதங்கலந்தென்னமிளிரும்வேற்கண்
வடத்தோடுவிம்முமுலையாளைவலத்தில்வைத்தார். (௯௨)

கேள்விக்கொருவனெனுந்தௌமியன்கீதவேத
வேள்விக்குவேண்டுவனயாவும்விதியினீட்டி
மூள்வித்தசெந்தீக்கரியாகமுரசார்த்த
*வாள்வித்தகற்குவரமானசடங்குசெய்தான். (௯௩)

பன்மங்கலமுமுடன்வைகியபண்பினாளை
நன்மங்கலப்பூண்டுகிலோடுநயந்துசாத்தித்
தன்மங்கலந்தமனத்தோனையத்தையலோடுந்
தொன்மங்கலச்செஞ்சுடர்த்தீவலஞ்சூழ்வித்தார். (௯௪)

கங்குற்பவளவனமீதுகடற்றரங்கம்
பொங்கித்தரளத்திரள்சிந்திப்பொழியுமாபோ
லங்கிப்புறத்துத்திருக்காப்பணிபங்கையேந்திச்
செங்கட்கரியகுழலாள்பொரிசிந்தினாளே. (௯௫)

இவ்வாறுமன்றலயர்வித்தபினீன்றகாதல்
வெவ்வாரழலின்முறைமூழ்கினன்மீண்டுதோன்ற
மைவாரளகவடமீனிகர்கற்பினாளை
யவ்வாறுமற்றையொருநால்வருமன்றுவேட்டார். (௯௬)

* தாள்வித்தகற்கு என்றும் பாடம்.

மாரன்கரும்புவளரும்படிவார்த்தநீரா
லீரம்புலராக்கரத்தோருக்கியாகசேனன்
றேரும்பரியுங்களிறுந்திரள்சேனையாவும்
பாருந்தனமுழுமதென்றுபலவுமீந்தான். (௯௭)

வேறு.

ஆண்டுமன்றல்பெற்றங்குரித்தாரிகற்
பாண்டுமைந்தரெனுஞ்சொற்பாவலுந்
தாண்டுவெம்பரித்தேர்த்தார்த்தராட்டிரர்
மீண்டும்வந்தவர்மேல்வினைசெய்யவே. (௯௮)

சென்றசேனையுந்திட்டத்துய்மன்னுட
னின்றசேனையுநேருறுபூசலிற்
கொன்றசேனையொழிகுருசேனையை
வென்றசேனைவெகுண்டுவென்கண்டதே. (௯௯)

சாலும்வஞ்சச்சகுனியொடெண்ணிய
நாலுமைந்தருநச்செயிருகவும்
வாலுமெய்யும்* வருக்கங்களாகவு
மாலும்வெம்பகையாடரவானதே. (௧௦௦)

அந்தநாகமழலுமிழ்கண்விடஞ்
சிந்தமேல்விடுசீற்றமுந்தோற்றமு
முந்தவார்சிலைக்கைமுகில்வாகனன்
மைந்தன்வாளி† மழைகளின்மாய்ந்தவே. (௧௦௧)

சமரவேழமுகாசுரன்சாய்ந்தனன்
குமாரனெனக்கோநகுலன்றனு
லமரில்யானையணிமுகத்தோடுமெய்
தமர்படப்புறந்தந்தனன்கன்னனே. (௧௦௨)

முன்னிடச்சமர்மோதுஞ்சகுனியை
மின்னிடைப்புயங்கம்வெருக்கொண்டெனத்
தன்னிடக்கைத்தனுவொடுந்தேரொடும்
பின்னிடப்பொருதானவன்பின்னவன். (௧௦௩)

தண்மதிக்குடைத்தம்முனுந்தம்பியு
மெண்ணுமற்றையிளைஞர்கள்யாவருங்
கண்ணுறக்களங்காணுமுன்றீயினால்
வெண்ணெயொத்துடைந்தார்விறல்வீமனால். (௧௦௪)

விரோசனக்கதிர்மைந்தனும்வேந்தனுஞ்
சரோசனத்திறற்றம்பியுமாமனும்
புரோசனப்பெயர்ப்புன்மதிதன்னைநோக்
தரோசனத்துடனத்தினநண்ணினார். (௧௦௫)

---

* வருதினியாகவுமென்றும் பாடம்.

† மறைகளின் என்றும் பாடம்.

முந்துபோரின்முதுகிடும்வேந்தரால்
விந்தைதன்னையுமேதகவேட்டபி
னந்தமாநகரைவருமாமனும்
வந்தகண்ணனுமன்புடன்வைகினர். (க0சு)

தும்பைசூடியவேற்றுரியோதனன்
வெம்புபோரின்முதுகிட்டுமீண்டபின்
றம்பிகூறுதருமனுக்கியுமா
றம்பிகேயனமைச்சரொடெண்ணினன். (க0எ)

தாதினாற்பொலிதார்வரைமார்பரைத்
தூதினாற்றங்கடொல்பதிசேர்த்தினன்
காதினாற்பயனின்றெனக்கண்கள்போற்
கோதினாற்றெரியாமனக்கோளினன். (க0அ)

வீடுமற்கும்விதுரற்குமேற்கவந்
நாடுமுற்றுநரபதிநல்கவே
யாடுபொற்கொடியந்நகர்வைகினர்
நீடுவிற்றிறலோர்நெடுங்காலமே. (க0கூ)

திரௌபதிமாலையிட்ட சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—ருஅச.

---

# இந்திரப்பிரத்தச் சருக்கம்.

வேதமும்வேதம்விளம்புமெய்ப்பொருளுமப்பொருள்விதங்களும்பஞ்ச
பூதமும்புலனும்புலன்களின்பயனுமப்பயன்பொலிவுறநுகரு
ஞாதமுமுலகம்படைத்தளித்தழித்துஞானமாயகிலமுநிறைவுற்
றாதியுநடுவுமுடிவுமாய்நின்றவாதியானடியிணைபணிவாம். (க)

அத்தினபுரியிலையிருபதின்மரைவரென்றிரண்டறத்தம்மி
லொத்தனர்மருவத்தெவ்வர்மெய்வெருவவுளமகிழ்நாளின்மற்றொருநாண்
மைத்துனன்முதலாந்தமரையுந்தக்கமந்திரத்தவரையுங்கூட்டி
யித்தினமுயர்ந்ததினமெனமகுடஞ்சூட்டுதற்கெண்ணினானிகலோன். (உ)

செழுமுரசுயர்த்தவேந்தனுக்கின்றுதிருவபிடேகநாளென்று
முழுமுரசறைந்துநகரிகோடித்துமுடிபுனைகடிகொண்மண்டபத்தி
னெழுமுரசதிரப்பகீரதிமுதலாமெத்துறைப்புனல்களுமியற்றித்
தொழுமுரசுடன்வெள்வலம்புரிமுழங்கச்சுருதிமாமுனிவருந்தொக்கார். (ங)

அத்தியின்பலகைநவமணியழுத்தியாடகத்தமைத்தரிமுகத்தாற்
பத்திகொள்பீடத்தமுகுறவிருத்திப்பசும்பொனின்றசும்புகணிறைந்த
சுத்தநீர்வியாதன்றௌமியன்முதலோர்சொரிந்தனர்சோமன்வந்துதித்துச்
சித்திரகிரியினெடுநிலாவெள்ளஞ்சீருடன்வழிபவார்த்தெனவே. (ச)

உதயமால்வரையினுதயராகத்தோடுதித்ததேருதயனென்றுரைப்பத்
துதையளிததைந்தமாலைபான்சென்னிச்சோதிமாமகுடமுஞ்சூட்டிப்
பதயுகமாசர்முடிகளாற்சிவப்பப்பகர்விதிமுடித்தபின்பலரு
மிதயமொத்தமிர்தமொழியவரடைவேபிருகைசீராசனமெடுத்தார். (ரு)

ஒற்றையோடிரட்டைவலம்புரிமிழற்றவொருகுடைமதியெனநிழற்றக்
கொற்றவர்முன்பின்போதரமடவார்குழுப்பொரிசிந்திவாழ்த்தெடுப்ப
விற்றைநாளெவரும்வாய்த்தவாவென்னவேழயரிராசகுஞ்சரமேன்
மற்றைநால்வருந்தற்சூழ்வாத்தருமன்மைந்தன்மாநகர்வலம்வந்தான். (சு)

மாநகர்வலமாய்வந்துதன்குரவர்மலர்ப்பதமுறைமையால்வணங்கிக்
கோநகரிருக்கையடைந்தனனொருநாட்கொற்றவனேவல்கைக்கொண்டு
பேய்நகரெனுமாறிபாவரும்வழங்காப்பிறங்குநீள்கானிடையழிந்த
தூநகர்முன்னோரிருந்ததொன்றநந்தொன்னகர்வைகுமாதுணிந்தான். (எ)

அங்கண்பாஞாலமுழுவதுங்கொடுத்தற்காபார்தம்பதியினங்குறித்த
செங்கண்மான்முதலாங்கிளைஞருநல்வயிரத்தேர்மிசைச்சேனையுந்தாமும்
வெங்கண்மாசுணத்தோனென்னமெத்திசையும்வெளிப்படவேந்தரைவரும்போய்த்
தங்கண்மாதவத்தாற்காண்டவப்பிரத்தமென்னுமத்தமல்வனமடைந்தார். (அ)

போயவட்புகுந்தபொழுதுபைங்கடலும்பூவையும்புயலுநேர்வடிவின்
மாயவற்கெவ்வாறிவ்வுழியிவர்கள்வாழ்வதென்றொருநினைவெய்தி
நாயகக்கடவுடன்னைமுன்னுநலுநாகநாயகனொடுநடுங்கி
மேயகட்புலன்கள்களித்திடத்திருமுன்னின்றனன்விச்சுவகன்மா. (கூ)

நுண்ணிதினுணர்ந்தோருணர்தருஞ்சிற்பநூலறிபுலவனைநோக்கித்
திண்ணிதினமார்சேகரன்மொழிந்தான்றேவருமனிதரும்வியப்ப
மண்ணினும்புயங்கர்பாதலமுதலாமற்றுளவுலகினுநமதாம்
விண்ணினுமுவமையிலதெனக்கடிதோர்வியனகர்விதித்திநீயெனவே. (கய)

தேவினுந்தேவயோனியிற்பிறந்திருளினுஞ்சிறந்தயாவர்க்கும்
பூவினுமெவ்வெவ்வுலகினுமுன்னம்புந்தியாவியற்றியபுரங்கள்
யாவினுமழகும்பெருமையுந்திருவுமின்பமுமெழுமடங்காக
நாவினும்புகலக்கருத்தினுநினைக்கவரியதோர்நலம்பெறச்சமைத்தான். (கக)

மரகதங்கோமேதகந்துகிர்தரளம்வைரம்வைதூரியநீல
மெரிமணிபுருடராகமென்றிவற்றிற்காகரமிந்தமாநகரென்
றரிமுதலிமையோரனைவரும்புகழ்ந்தாராடகப்பொருப்பிணையழித்துத்
தரணியி*னகரொன்றமைத்தவாவென்றுதபதியர்யாவரும்வியந்தார். (கஉ)

என்பதியழகுகுலைந்ததென்றெண்ணியிந்திரன்வெறுக்கவுமியக்கர்
மன்பதிபொலிவுசிதைந்ததென்றிடவுமற்றுளவானவர்பதிகள்
புன்பதியாகிப்போயினவெனவும்புரையறுபுந்தியாற்புவிமே
னன்பதியிதுவொன்றியற்றினனென்றுநாரதாதிகடுதித்திடவும். (கங)

சந்திராபதமுந்தினகராபதமுமிருபொழுதினுமெழச்சமைத்த
மந்திராதிகளுமஞ்சமுமதிலுமகாதோரணமணிமறுகுங்
கொந்திராநின்றசோலையுந்தடமுங்கொற்றவன்கோயிலுநோக்கி
யிந்திரபதியவ்விந்திரன்பெயராலிந்திரப்பிரத்தமென்றிட்டான். (கச)

இமையவர்பதியிலுள்ளனயாவுமிங்குளவிங்குமற்றுள்ள
வமைவுறுபொருள்களங்கிலவெனுமாறமைத்தவான்றொல்பதியழகைச்
சமைவுறவிரித்துப்புகழ்வதற்குன்னிற்சதுர்முகத்தவனுமெய்தளரு
நமர்களானவிலமுடியுமோமுடியாதாயினும்வல்லவாநவில்வாம். (கரு)

*விதிமறைமுறையிற்சாந்திசெய்கடவுள்வேதியராரவமொருசார்
மதிமுறைதவறுவமைச்சர்சொல்விழையுமன்னவராரவமொருசார்
நிதிகெழுசெல்வத்தளகையோர்நெருக்கானிறைந்தபேராரவமொருசார்
பதிதொறுமுழவர்விளைபயனெடுக்கும்பறைகறங்காரவமொருசார். (கசு)

தோரணமஞ்சத்தலந்தொறுநடிக்குந்தோகையர்நாடகமொருசார்
பூரணைப்பொற்கும்பமுமொளிகூர்புரிமணித்தீபமுமொருசார்
வாரணமிவுளிதேர்முதனிரைத்தவாகமுஞ்சேனையுமொருசார்
நாரணன்வனசபதயுகம்பிரியாநலம்பெறுமாதவரொருசார். (கஎ)

சிற்பவல்லபத்தின்மயன்முதலுள்ளதெய்வவான்றபதியரொருசார்
வெற்பகமருவிவீற்றுவீற்றிருக்கும்விஞ்சையர்கின்னரரொருசா
ரற்புதவடிவினுருப்பசிமுதலாமழகுடையரம்பையரொருசார்
பொற்புடையமரர்புரியுமெய்ம்மகிழ்ந்துபொழிதருபொன்மலரொருசார். (கஅ)

வரையெலாமகிலுஞ்சந்தனத்தருவுமான்மதநாவியின்குலமுந்
திரையெலாமுத்தும்பவளவண்கொடியுஞ்செம்மணிகளுமரகதமுங்
கரையெலாம்புன்னைக்கானமுங்கண்டலடவியுங்கைதையங்காடுந்
தரையெலாம்பொன்னும்வெள்ளியும்பழனவேலிசூழ்சாலியுங்கரும்பும். (ககூ)

ஆலையிற்கரும்பின்கண்களிற்றெறித்தவாரமவ்வயற்புறத்தடித்த
சோலையிற்பயிலுங்குயிலையுஞ்சுருதிச்சுரும்பையுநிரைநிரைதுரப்ப
வேலையிற்குதித்தவாளையேறும்பர்வியனதிகலக்கிவெண்டிங்கண்
மாலையிற்பயிலும்வானமீன்கொடிபோல்வாவியிற்குளிக்குமாமருதம். (உ0)

புரிசையிற்குடுமிதொறுநிரைதொடுத்தபொற்கொடியாடையினிழலைக்
கிரிமிசைப்பறக்குமன்னமென்றெண்ணிக்கிடங்கில்வாழோதிமக்கிளைகள்
விரி†சிறைப்பறவின்கடுமையாலெய்திமீதெழுமஞ்செனக்கலங்கிப்
பரிசயப்படுதண்சததளப்பொகுட்டிற்பார்ப்புறைபள்ளிவிட்டகலா. (உக)

---

* இப்பாட்டினான்கடியினிறுதியிலும் 'ஆவணமொருசார்' என்றும் பாடம்.

† சிறைப்பாலின் என்றும் பாடம்.

கயற்றடஞ்செங்கட்கன்னியர்க்கிந்துகாந்தவார்சிலையினாலுயரச்
செயற்படுபொருப்பின்சாரலிற்கங்குற்றெண்ணிலாவெறித்தலினுருகி
வியப்பொடுகுதிக்குந்தாரைகொளருவிவிழைவுடன்படிவனசகோர
நயப்புடையன்னச்சேவல்பேடென்றுநண்ணலாலுளமிகநாணும். (௨௨)

அரிமணிச்சிலையின்சலாகையால்வட்டமாகவேயமைத்தசாலகந்தோ
றெரிமணிக்குழைபார்வதனமண்டலத்திலெழிலுடன்மிளிருமைத்தடங்கண்
விரிமணிக்கதிரோனளிக்கமுன்களிந்தவெற்பிடைவீழுமாநதியின்
புரிமணிச்சுழியிற்றுணையொடுமுலாவிப்பொருவனகயல்களேபோலும். (௨௩)

இனத்தினாலுயர்ந்தவிந்திரபுரியுமிந்திரப்பிரத்தமுமிரண்டுந்
தனத்தினாலுணர்வாற்கேள்வியாலழகாற்றக்கதொன்றியாதெனத்துலைகொண்
மனத்தினானிறுக்கவுயர்ந்ததொன்றொன்றுபயண்மிசையிருந்ததுமிகவுங்
கனத்தினாலன்றித்தாழுமோபாருங்கண்டதுகேட்டதன்றிதுவே. (௨௪)

நிறக்கவல்லிரும்பைச்செம்பொனாம்வண்ணநிகழ்த்தியவிரதமேநிகர்ப்பப்
பிறக்குமும்வனமுமொழித்தவணமைத்தபெரும்பதிக்குவமையும்பெறுமன்
மறக்கடுங்களிற்றுக்குபேரன்வாழளகைவடக்கிருந்ததுநெடுவானிற்
றுறக்கமுமொளித்ததிலங்கையும்வெருவித்தொடுகடற்சுழிப்புகுந்ததுவே. (௨௫)

வாவியும்புறவுஞ்சோலையுமலர்ந்தமலர்களுமணிகளின்குழாமு
மேவியெங்கெங்குமயக்கலிற்றத்தம்வேரியும்வாசமுந்தூதாப்
பூவினஞ்சுரும்பையழைக்கும்வண்பழனப்புதுவளஞ்சுரக்குநாடனைத்து
மோவியங்குறித்துப்பூமகள்வடிவையொப்பனைசெய்தவாறொக்கும். (௨௬)

பரிமளமதுபமூரல்பசுந்தொடையற்பாண்டவரைவருங்கடவு
ளெரிவலம்புரிந்துமுறைமுறைவேட்டவிளைநெழிலிளமயிலன்றி
வரிசையினணுகியுரிமையாலவனிமயிலையுமன்றலெய்தினர்போற்
புரிவளைதாளஞ்சொரிபுனலகழிப்புரிசைசூழ்புரங்குடிபுகுந்தார். (௨௭)

வேறு.

உரங்குடிபுகுந்ததிண்டோளுதிட்டிரன்முதலியோரப்
புரங்குடிபுகுந்து தங்கள்பொன்னெயிற்கோயிலெய்தத்
திரங்குடிபுகுந்தகல்விச்சிற்பவித்தகன்றனெஞ்சாற்
கரங்குடிபுகாமற்செய்தகடிநகர்காட்டலுற்றான். (௨௮)

நாபுரப்பதற்கேயேற்றநவிரறுவாய்மைவேந்தர்
கோபுரத்தும்பர்மஞ்சகோடியினின்றுதங்கண்
மாபுரத்துள்ளவெல்லைவளமனையாவுமாதர்
நூபுரத்தாவவீதியகலமுநோக்கினாரே. (௨௯)

அரவின்வெஞ்சுடிகைகொண்டவவிர்மணிச்சோதிமென்மேல்
விரவிவந்தெறிப்பப்பச்சைமெய்சிவப்பேறிற்றாக
விரவிதன்னிரதம்பூண்டவெழுபெயர்ப்பவனவேகப்
புரவியையையுற்றேகொல்புரிவலம்புரிவதென்பார். (௩௦)

அருளுடையறத்தின்வாழ்வாமங்நகரில்லமெங்கு
மிருளுடையிந்திரநீலத்தியன்றசாளரங்கனோக்கி
யுருளுடையொற்றைநேமியுறுபரித்தேரோன்சீறத்
தெருளுடைத்திமிரம்போனசின்னெறிபோலுமென்பார். (௩௧

சமர்முகப்பொறிகண்மிக்கதடமதிற்குடுமிதோறுங்
குமருறப்பிணித்தபைம்பொற்கொடித்துகிலசைவுநோக்கி
நமர்புரக்கிழத்தியும்பர்நாயகன்புரத்தினோடு
வமர்பொரப்பற்பல்கையாலழைப்பதுபோலுமென்பார். (௩௨

தசும்புறுமகிலின்றாபஞ்சாறடுகரும்பின்றாப
மசும்பறுமடையின்றாபமவிபெறுமழலின்றாப
விசும்புறநான்குதிக்குமிசைமிசையெழுதனோக்கிப்
பசும்புயலேழன்றினும்பலவுளவாகுமென்பார். (௩௩

அடுக்குறநிலஞ்செய்மாடத்தணியுறுபெரும்பதாகை
மிடுக்கினலனிலனெற்றிவிசையுடனெடுத்துமோத
வுடுக்களுநாளுங்கோளுமுள்ளமுமுடலுஞ்சேர
நடுக்குறுகின்றவிந்நகர்வழிபோகவென்பார். (௩௪

துதையளிமுரலும்வாசச்சோலையின்பொங்கர்தோறும்
விதமுறவெழுந்துகாளமேகங்கள்படிதனோக்கிக்
கதிர்மணியகழிமாமேகலையுடைநகரமாதின்
புகைநறுமலர்மென்கூந்தல்போலுமாகாண்மினென்பார். (௩௫

ஈட்டியமணியும்பொன்னுமெழில்பெறப்புடைகடோறும்
பூட்டியசிகரிசாலப்புரிசையின்புதுமைநோக்கிக்
கோட்டியநகரியென்னுங்குலக்கொடிமன்றலெய்தச்
சூட்டியசூட்டுப்போலத்துலங்குமாகாண்மினென்பார். (௩௬

பணையினம்பலவுமார்ப்பப்பைங்கொடிநிரைத்தசெல்வத்
துணைமணிமாடமன்னுந்தோரணவீதியாவும்
புணைவனநெருங்கநீடிப்பொழிபுயல்கிழிக்குஞ்சார
லிணைவரைநடுவட்போதும்யாறுபோலிலங்குமென்பார். (௩௭

கண்ணுறுபொருள்கள்யாவுங்கண்டுகண்டுவகைகூர
வெண்ணுறுகிளைஞரோடும்யாதவகுமாரரோடும்
பண்ணுறுவேதவாழ்நர்பலரொடும்வைகியாங்கண்
விண்ணுறுதபதிக்கம்மவிடைகொடுத்தருளினனே. (௩௮

கேசவன்முதலாவுள்ளகிளைஞருங்கேண்மைதப்பா
வாசவன்முதலினோருமன்னுதம்பதிகள்புக்கா
ரோசவன்றிகிரியோச்சியுதயபானுவுக்குமேலாந்
தேசவன்றனும்வையந்திசைமுறைதிருத்தியாண்டான். (௩௯

யாய்மொழி தலைமேற்கொண்டுமிளையவர்மொழிகள்கேட்டும்
வேய்மொழிவேய்த்தோள்வல்லிமென்மொழிவிரும்பலுற்றும்
வாய்மொழியறத்தின்மைந்தன்மாநகர்வாழுநாளி
லாய்மொழிப்பாடல்யாழோரந்தணனங்கண்வந்தான். (௪0)

இந்தநராதனைப்போற்றியிருபதம்விளக்கிவாசச்
சந்தனகருவின்றாபந்தவழ்மணித்தவிசினேற்றி
வந்தனவிதியிற்சற்றும்வழுவறவழிபாடெய்தி
யந்தநால்வருமவ்வேந்துமாதிவாசவர்களானார். (௪௧)

வரமிகுகற்பினளுமாமியும்வணங்கிநிற்பச்
சரிகமபதநிப்பாடற்றண்டுதைவருசெங்கையோ
னிருசெவிபடைவீடாகவெம்பிரானளிக்கப்பெற்ற
பெருமுனியவர்க்கோர்வார்த்தைபெட்புறப்பேசுவானே. (௪௨)

முராரியைமுராரிநாபிமுளரிவாழ்முனியைமுக்கட்
புராரியைநோக்கிமுன்னாட்புரிபெருந்தவத்தின்மிக்கார்
சுராரிகடம்மிற்சுந்தோபசுந்தரென்றிருவர்தங்க
டிராரிபேவலினல்வந்ததிலோத்தமைதன்னைக்கண்டார். (௪௩)

கண்டனுமவண்மேல்வைத்தகாதலானுழந்துநெஞ்சி
லீண்டியதுயரத்தோடுமிருவருநயந்தபோழ்தப்
பூண்டகுபொலிவினடன்பொருட்டமர்தம்மிற்பூண்டு
மாண்டனரென்னும்வார்த்தைமாநிலமறியுமன்றே. (௪௪)

நீவிரும்விதியால்வேட்டநேயமுண்டேனுமன்ற
லோவியமனையாடன்னையோரொராண்டொருவராக
மேவினிர்புரியுமங்ஙன்மேவுநாளனையோரிக்
காவியங்கண்ணினாளைக்கண்ணுறல்கடனதன்றே. (௪௫)

எண்ணுறக்காணிலோராறிருதுவும்வேடமாறிப்
புண்ணியப்புனல்களாடப்போவதேயுறுதியென்று
வண்ணவிற்றிறலினோர்க்குவாய்மலர்ந்தருளிமீண்டு
பண்ணுடைக்கீதநாதபண்டிதன்விசும்பிற்போனான். (௪௬)

சொன்னநாட்டொங்கிவைந்துசூரருந்தேவர்நாளுக்
கின்னநாளவதியென்றேயெண்ணிபாங்கிரதிகேள்வ
னன்னநாண்மலர்ப்பைந்தாமத்தறன்மகனாதியாக
மின்னனடன்னைவேட்டமுறைமையினன்மேவினாரே. (௪௭)

இந்திரப்பிரத்தச் சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—௬௩௧.

---

# அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்.



துன்பம்பயமிடிநோய்பகைசோரங்கொலையெய்தா
தின்பம்பொருளறன்யாவையுமியல்பாதலினெய்தித்
தன்பைங்குடைநிழன்மன்பதைதரியார்முனைமதியா
வன்பன்றனைநிகர்வாழ்வுறவருநாள்களிலொருநாள்.

அறையோதவனஞ்சூழ்புவியரசானவனைத்துந்
திறையோடிடமறநிற்பதொர்திருவாயின்மருங்கே
யிறையோடுயரிருகையுமெடுத்தெண்ணுறமுறையோ
முறையோவெனவொருவைதிகமுனிவந்துபுகுந்தான்.

கடைகாவலர்குறைகூறலும்விசயன்கடிதிற்றன்
புடைகாவலர்தொழவந்துபுவித்தேவனைமறையின்
றொடைகாவலவிதுவென்னெனவவனுந்தொடுகழலோய்
விடைகாவலர்நிரைகொண்டனர்வில்வேடுவரென்றான்.

அஞ்சாதொழிமுனிநீயுனதானின்கணமின்றே
யெஞ்சாவகைதருவேனெனவேவுக்கொருதிலகன்
வெஞ்சாபமெடுப்பான்வருவிசயன்றருமனுடன்
மஞ்சார்பொழில்விளையாடிடுமயில்சீறடிகண்டான்.

காணுமெய்நடுங்காவொளிகருகாமனமிகவு
நாணுவிரைவொடு*சாயகநாண்வெஞ்சிலைகொள்ளாச்
சேணுநெறிசெல்லாநனிசீறுவமர்வெல்லா
மாணுநிரைமீளாவொரிமைப்போதினில்வந்தான்.

தொறுக்கொண்டவருயிருந்தொறுநிரையுங்கவர்சூரன்
மறுக்கம்படுமறையோன்மனமகிழும்படிநல்கி
பொறுக்குந்தவமுனிசொற்படிபுனிதப்புனல்படிவா
னிறுக்குந்துலைநிகர்தம்முனைநிகழ்வோடுபணிந்தான்.

ஆடம்பரமன்வேடமகற்றித்தொழுதகுதொல்
வேடம்பெறுமறையோருடன்விசயன்புரவிசயன்
கூடந்தருபாகீரதிதோய்காலையிலவனே
சேடன்றலமடவார்புனலயர்வானெதிர்சென்றார்.

ஓடுங்கயல்விழியாரினுலூபிப்பெயரவளோ
டாடும்புனவிடைநின்றவனநுராகமிகுந்தே
நாடும்பிலவழியேயவள்பின்சென்றுநலத்தா
னீடுங்கொடிமணமெய்தினன்முகில்போலுநிறத்தான்.

---

* சாலையினுண் என்றும் பாடம்.

இம்மென்றளிமுரல்பாயலின்பத்தைவளர்த்தும்
பொம்மென்பரிபுரநாண்மலர்பொற்சென்னியில்வைத்துஞ்
செம்மென்கனியிதழாளொடுசென்றுணலமுற்று
னம்மென்கொடியனையாளுமிராவானையளித்தாள். (௯)

நாகாதிபன்மகண்மைந்தனலங்கண்டுமகிழ்ந்து
நாகாதிபன்மகன்மீளவுநதியின்வழிவந்து
நாகாதிபன்வண்சாரலினன்னீர்கள்படிந்து
நாகாதிபன்விடுமும்மதநாறுந்திசைபுக்கான். (௧௦)

நெளிந்தாடரவணையைநிறம்போலநிறக்குங்
களிந்தாநதிமுதலாகியகடவுண்ணதிபலவு
முளிந்தாரழலெழுகானெறிமுக்கோலினராகித்
தெளிந்தாறியபெரியோரொடுசென்றாடினனன்றே. (௧௧)

பத்திக்குவரம்பாகியபார்த்தன்பலதீர்த்த
மத்திக்கினுமெத்திக்கினுமாமென்றவையாடிச்
சித்திக்கொருவிதையாகியதென்னாட்டினையணுகித்
தத்திச்சொரியருவித்தடவரவக்கிரிசார்ந்தான். (௧௨)

இச்சைப்படிதன்பேரறமெண்ணான்கும்வளர்க்கும்
பச்சைக்கொடிவிடையோனொருபாகந்திறைகொண்டாள்
செச்சைத்தொடையிளையோனுகர்தீம்பான்மணநாறுங்
கச்சைப்பொருமுலையாளுறைகச்சிப்பதிகண்டான். (௧௩)

அயனார்புரிமகசாலையுமணியத்திகிரிக்கே
மயனார்செய்திருக்கோயிலுமாநீழலின்வைகெண்
புயனாருறைமெய்க்கோலமுமுள்ளன்பொடுபோற்றிப்
பயனார்புனனதியேழுமந்நகரூடுபடிந்தான். (௧௪)

பெற்றாள்சகதண்டங்களனைத்தும்மவைபெற்றா
முற்றாமுகிழ்முலையாளொடுமுக்கண்ணர்விரும்பும்
பற்றாமெனமிக்கோரிகழ்பற்றென்றினுமுண்மை
கற்றார்தொழுமருணாசலமன்போடுகைதொழுதான். (௧௫)

உருகுங்கமழ்நெய்பாலிருபாலுங்கரையொத்துப்
பெருகுந்துறையேழேழுபிறப்புங்கெடமூழ்கிக்
கருகுங்கருமுகின்மேனியர்கவிஞானியர்கண்ணிற்
பருகுஞ்சுவையமுதானவர்பாதந்தலைவைத்தான். (௧௬)

ஐயானனனியல்வாணனையடிமைக்கொளமெய்யே
பொய்யாவணமெழுதும்பதிபொற்போடுவணங்கா
மெய்யாகமவதிகைத்திருவீரட்டமுநேமிக்
கையாளனகீந்திரபுரமுங்கண்டுகைதொழுதான். (௧௭)

இன்னம்பலபலயோனியிலெய்தாநெறிபெறவே
முன்னம்பலாடிதோடவுமுடிதேடவுமெட்டா
வன்னம்பலபயில்வார்புனலணிதில்லையுளாடும்
பொன்னம்பலநாதன்கழல்பொற்போடுபணிந்தான். (கஅ)

இலங்காபுரிமுன்செற்றவனிருபோதும்வணங்கத்
துலங்கரடரவணைமேலறிதுயில்கொண்டவர்பொற்றாள்
பொலங்காவிரியிருபாலும்வரப்பூதலமங்கைக்
கலங்காரமளிக்குந்தென்னரங்கத்திடைதொழுதான். (கக)

வளவன்பதிமுதலாகவயங்கும்பதிதோறுந்
துளவங்கமழுதிசீதளதோயங்கள்படிந்தே
யிளவண்டமிழெழுதேடுமுன்னெதிரேறியதுறைசூழ்
தளவங்கமழ்புறவஞ்செறிதண்கூடல்புகுந்தான். (உ0)

வேறு.

குன்றிவிளவாடைவரும்பொழுதெல்லாமலர்ந்ததிருக்கொன்றைநாறத்
தென்றல்வரும்பொழுதெல்லாஞ்செழுஞ்சாந்தின்மணநாறுஞ்செல்வவீதி
நன்றறிவார்வீற்றிருக்குநான்மாடக்கூடல்வளநகரியாளும்
வென்றிபுனைவடிசுடர்வேன்மீனவனைவானவர்கோன்மதலைகண்டான். (உக)

அந்நிலத்தினவரல்லாவந்தணரோடிவனவனுக்காசிகூற
வெந்நிலத்திரெப்பதியிரெத்திசைக்குப்போகின்றீரென்றுபோற்றிச்
சென்னியர்க்கும்வில்லவர்க்குமணிமுடியாங்கனைகழற்காற்செழியன்கேட்பக்
கன்னியைக்கண்ணுற்றுடவந்தனனென்றனன்மெய்ம்மைக்கடவுள்போல்வான். (உஉ)

வெய்தின்மகபதிமுடியில்வளையெறிந்துமீண்டநாள்விண்ணின்மாதர்
கொய்துமலர்தொலையாதகுளிர்தருக்களொருகோடிகொண்டுபோந்து
மைதவழ்தன்றடங்*கோயில்வளருதமதனொருமருங்குநவைத்தகாவிற்
கைதவர்கோன்மற்றவர்க்குப்போனகஞ்செய்தருந்துமிடங்கற்பித்தானே. (உரு)

வேதியரோடக்காவிவிளைப்பாறியிருந்தளவின்மின்குழாம்போற்
றுதியருஞ்சேடியநந்தற்சூழச்சிலைமதனன்றனிசேவிக்கச்
சோதியர்ச்சிலம்பாற்றத்துணைநெடுங்கண்செவியளப்பத்தொடித்தோள்வீசி
யாதியாவிந்தையெனதிருபன்மகள்விளையாடற்காங்குவந்தாள். (உச)

பச்சென்றதிருநிறமுஞ்சேயிதழும்வெண்ணகையும்பார்வையென்னு
நச்சம்புமழுதூறநவிற்றுகின்றமட்டமொழியுநாணும்பூணுங்
கச்சின்கணடங்காதகனதனமுநுண்ணிடையுங்கண்டுசோர்ந்து
பிச்சன்போலாயினனப்பெண்கொடிமெய்ந்நலமுழுதும்பெறுவானின்றான். (உரு)

புத்திரர்வேறில்லாதுபுரிவரியதவம்புரிந்துபூழிவேந்தன்
சித்திரவாகனன்பயந்தசித்திராங்கதையென்னுஞ்செஞ்சொல்வஞ்சி
பத்திரமுநறுமலருமவயவம்போல்விளங்குவனபலவுங்கொய்து
மித்திரமாமகளிருடன்விரவியொருசெய்குன்றின்மேவினளே. (உசு)

---

*கோயிலவரோதமனைப்படப்பைவைத்த என்றும் பாடம்.

முன்னுருவந்தனைமாற்றிமுகில்வாகன்றிருமதலைமோகியாகித்
தன்னுருவந்தனைக்கொண்டுசாமனிலுங்காமனிலுந்தயங்குமெய்யோன்
பொன்னுருவமெனமலர்ந்துபொலிந்ததொருசண்பகத்தின்பூந்தண்ணீழன்
மின்னுருவநுண்ணிடையாள்விழிகளிக்கும்படிநின்றான்வீரரேறே. (௨௭)

வண்டானந்திரிதடத்துவரிவண்டினினம்பாடமயில்களாடத்
தண்டார்மெய்க்கிளிக்கூட்டஞ்சான்றோர்களுரைபயிற்றத்தமிழ்கண்மூன்றுங்
கொண்டாடியிளம்பூவைக்குழாந்தலைசாய்த்துளமுருகுங்குன்றினங்கட்
கண்டாளக்குமரனைத்தங்கொடிக்கபிலைப்புறங்காணுங்கண்ணினாளே. (௨௮)

செந்திருவையனையாளுந்திருமாலையனையானுஞ்சிந்தையொன்றாய்
வந்திருவர்விலோசனமுங்கடையின்றியுறவாடிமகிழ்ச்சிகூர்ந்து
வெந்துருவமிழந்தமதன்மீளவும்வந்திரதியுடன்மேவுமாபோற்
கந்தருவமுறைமையினாற்கடவுளர்க்குங்கிடையாதகாமந்துய்த்தார். (௨௯)

கூடியிருவருமொருவரெனவிதயங்கலந்ததற்பின்குறித்ததூநீ
ராடியவந்ததுந்தன்னையருச்சுனனென்பதுமிளமானறியக்கூறி
நீடியதென்றைப்புறுவர்நீயினியேகெனவுரைப்பநெடுங்கண்ணாள்போய்ச்
சேடியர்க்கஞ்ஞான்றுநிகழ்ந்தவெலாமகிழ்ந்துநகிச்செப்பினாளே. (௩0)

கவுரியர்கோன்றிருமகளைக்கண்ணனையார்கொண்டுபோய்க்கன்னிமாடத்
தவிருமணிப்பரியங்கத்தையமளியேற்றியபின்னநங்கன்போரா
னவிருடைமாமயலுழந்துநயனங்கள்பொருந்தாமனனூறுமற்
றவிர்கெனவுந்தவிராமற்றன்விரகங்கரையழிந்துதளர்ந்தாண்மன்னோ. (௩௧)

தங்கண்மலைச்சந்தனத்தைத்தழற்குழம்போவிதுவெண்ணுந்தாபந்தோன்றத்
தங்கள்கடற்றண்முத்தைக்கண்முத்தானீறாக்குந்தக்கோராய்ந்த
தங்கடமிழ்க்குழலிசையைத்தன்செவிக்குவிடமென்னுந்தபனனேகத்
தங்கள்குலக்கலைமதியைத்தபனனெனுமென்பட்டாடனிபொறாதாள். (௩௨)

அங்குயிர்போலிருமருங்குமாயமடமகளிரிருந்தாற்றவாற்றக்
கங்குலெனும்பெருங்கடலைக்கரைகண்டாள்கடற்புறத்தேகதிருங்கண்டா
ளிங்கிவள்போய்மலர்க்காவினெழில்விசயற்கிடழிந்தவின்னலெல்லாஞ்
சங்கெறியுந்தடம்பொருனைத்துறைவனுக்குச்செவிலியராந்தாயர்சென்றார். (௩௩)

ஐந்தருவினீழலின்வாழரியுடனேயோராரியாசனத்தில்வைகிப்
புந்தியுறவொருவருமுன்பூணாதமணியாரம்பூண்டகோமா
னந்தவுரைசெவிப்படலுமதிதூரம்விழைவுடன்சென்றுடுதீர்த்தம்
வந்ததுநந்தவப்பயனென்றாட்கொண்டான்மகோததியும்வணங்குந்தாளான். (௩௪)

வழுதிதிருமகள்கொடுத்தமையலினால்வடிவமுந்தன்மனமுமேவேறாய்ப்
பொழுதுவிடிவளவுமதன்பூசலிலேயருந்தழித்துப்பூவாய்வாளி
யுழுதகொடும்புண்வழியேயூசிநுழைந்தெனத்தென்றலூராலூர
விழிதுயிலாவிசயனுமவ்விபுதருடன்றுயிலுணர்ந்துவிதியுஞ்செய்தான். (௩௫)

பஞ்சவரினடுப்பிறந்தோன்பஞ்சவன்போலவையெய்திப்பஞ்சபாண
வஞ்சகன்செய்வஞ்சனையான்மதிமயங்கியிருந்தழியம்மதுரைவேந்தன்
சஞ்சரிகநறுமலர்த்தார்த்தனஞ்சயனென்றறிந்தெழுந்துதழீஇக்கொண்டாங்க
ணஞ்சலினியுனக்குரியாள்யான்பயந்தகடற்பிறவாவமுதமென்றான். (௩௬)

கேண்மதியோர்மொழிமுன்னங்கேண்மையினங்குலத்தொருவன்கிரீசன்றன்னைத்
தாண்மலரன்புறப்பணிந்துதவம்புரிந்தான்மகப்பொருட்டாற்றரித்தகொன்றை
நாண்மலரோன்வெளிநின்றந்நரபதிக்குநின்குலத்துநரேசர்யார்க்கும்
வாண்மருவுங்கரதலத்தோயோரொருமாமகவென்றுவரமுமீந்தான். (௩௭)

அன்றுரைத்தவரத்தின்வழியநேகாவனிபருமக*வளித்தாரொன்றான்
றென்றுரைக்கமறுதொழினீயொருமகவும்பெண்மகவாயுதித்ததென்பா
னன்றுரைக்குமொழியாயென்னவ்விபெறுமகவெனக்கேநல்கவேண்டு
மென்றுரைத்தான்மன்றல்பெறவிருந்தோனுமாமனுரைக்கிசைந்தானன்றே. (௩௮)

தொண்டிரைகைதொழுகழலோன்றிருமகட்குவதுவையெனச்சேரசோழ
ரெண்டிசையின்முடிவேந்தரெல்லோருமுனிகணத்தோரெவருமீண்ட
வண்டாபிரானளித்தசிலைபாண்டகையையலங்காரமனைத்துஞ்செய்து
மண்டபமொன்றினிலறுகால்வண்ணமணிப்பலகையின்மேல்வைத்தாரன்றே. (௩௯)

கோமடந்தைகளிகூரப்புகழ்மடந்தைகளிகூரக்கொற்றவிந்தை
மாமடந்தைகளிகூரமணவினையொப்பனைக்குரியமடந்தைமார்கள்
பூமடந்தையனையாளைப்பூட்டியவெண்டாளமணிப்பூண்களாலே
நாமடந்தைநிகராக்கிநாயகன்றன்வலப்பாகநண்ணுவித்தார். (௪௰)

இந்திரனுஞ்சசியுமெனவிறையோனுமுமையுமெனவெம்பிரானுஞ்
செந்திருவுமெனக்காமதேவுமிரதியுமெனவெஞ்சிலைவலோனுஞ்
சந்தணிபூண்முலையாளுஞ்சதுர்மறையோர்சடங்கியற்றத்தழல்சான்றாகத்
துந்துபியின்குலமுழங்கச்சுரிசங்கின்குழாந்தழங்கத்துலங்கவேட்டார். (௪௧)

வேறு.

நோக்கியகண்ணிமையாமனோக்கிநோக்கிநுண்ணியமென்புலவியிலேநொந்துநொந்து
தேக்கியசெங்கனியிதழாரமுதுண்டுண்டுசேர்த்தியகைந்நெகிழாமற்சேர்ந்துசேர்ந்து
தூக்கியபொற்றுலையினநுராகமேன்மேற்றொடரவரும்பெரும்போகந்துய்த்தார்முன்னைப்
பாக்கியம்வந்திருவருக்கும்பலித்ததல்லாற்பாயலைத்திப்படியார்பயன்பெற்றாரே. (௪௨)

பன்னாளினெடும்போகம்பயின்றபின்னர்ப் பப்புருவாகனனென்னும்பைதற்றிங்க
ளன்னையவள்பயந்தாள்பயந்தபோதேயம்மகவையுவகையுடனவனுமீந்தான்
றென்னாவென்றளிமுரலவேம்பின்றண்டார்த்தேம்பரிசில்வழங்குபுயத்தென்னர்கோவு
நின்னாலென்மரபுநிலைபெற்றதென்றுநேயமுடன்கவர்ந்துதுயர்நீங்கினானே. (௪௩)

பார்த்தனருச்சுனன் †கரியோன்விசயன்பாகசாதனிசவ்வியசாசிபற்குனன்பா
ரேத்துதனஞ்சயன்கிரீடிசுவேதவாகனெனுநாமம்படைத்தபிரான்யாழோரின்பம்
வாய்த்தவிதழமுதமொழிப்பேதைதாதைமனையிருக்கத்திருவழுதிவளநாட்டுள்ள
தீர்த்தமுழுவதுமாடியன்பாற்றென்பாற்றிருமலையுங்கைதொழுதுசிந்தித்தானே. (௪௪)

---

* அளித்தார்யானீங்கொன்று என்றும் பாடம்.

† விசயன்கரியோனண்புன்பாகசாதனிவிபற்சுபற்குனன் என்றும் பாடம்.

கன்றியவெங்கான்முதலோர்களத்தில்வீழக்கவிகுலநாயகனிதயங்கலங்கிவீழ
வொன்றுபடமரமேழுமுதநியேழுமூடுருவச்சரந்தொடுத்தவொருவில்வீரன்
றுன்றியெழுபதுவெள்ளக்குரங்கின்சேனைசூழ்போதவாய்த்ததிருத்துணைவனோடுஞ்
சென்றவழியின்றளவுந்துளவநாறுஞ்சேதுதரிசனஞ்செய்தான்றிறல்வல்லோனே. (சரு)

வன்றிரைவெங்களிற்றினங்களிரண்டுபாலுமலையாமலிருக்கணையமானேபோலுந்
தன்றலைகளமிழாமலெடுப்பான்மேருத்தாழ்கடலினீட்டியதோர்தடக்கைபோலு
மன்றிபிருபூதலமுமிருதட்டாகவகத்திபன்வாழ்தென்றினையுமணிமூக்கோணக்
குன்றினையுஞ்சீர்தூக்கிநிறுப்பதாகக்கோகனகனமைத்ததுலைக்கோலும்போலும். (சசு)
[கன்னித்

அண்டர்தமகங்கையினும்வானுண்டென்றெண்றரம்பைபாடவனியில்வந்தாடுந்
தண்டுறையுந்தண்பொருநைப்பாவநாசத்தடந்துறையும்படிந்துநதித்தடமேபோந்து
பண்டுமழுப்படையோனம்மழுவாற்கொண்டபாக்கியபூமியுஞ்சேரன்பதிகளியாவுங்
கண்டுமனங்களிகூரச்சென்றுமேலைக்கடல்கண்டானுரகதலங்கண்டுமீண்டான். (சஎ)

அந்தநெடுந்திசைப்புனல்களாடுநாளிலைந்துதடத்தரம்பையரோரைவர்சேர
விந்திரன்வெஞ்சாபத்தாலிடங்கராகியிடருழந்தோர்பழையவடிவெய்தநல்கிச்
சிந்துதிரைநதிபலவுஞ்சென்றுதோய்ந்துதிக்கனுடனரவுறவுசெய்யும்வேணிக்
கொந்தவிழுமலரிதழித்தொடையோன்வைகுங்கொடிமதில்சூழ்கோகன்னங்குறுகி
னானே. (சஅ)

ஆகன்னமுறச்செம்பொன்வரைவில்வாங்கியவுணர்புரங்கட்டழித்தோனடியில்வீழ்ந்து
கோகன்னவளம்பதியிற்றன்பின்வந்தகுலமுனிவர்தமையிருத்திக்கோட்டுக்கோட்டு
நாகன்னப்பெடையுடனேபாடுங்கஞ்சநறைவாவிவண்டுவரைநண்ணியாங்கட்
பாகன்னமொழிக்கனிவாய்முத்தமூரற்பாவைநலம்பெறமூக்கோற்பகவனானான். (சகூ)

வெங்கதிர்போய்க்குடதிசையில்வீழ்ந்தபின்னர்வீழாமன்மாலையின்வாய்மீண்டுமேந்தச்
செங்கதிர்வந்தெழுந்ததெனமீதுபோர்த்தசெய்யவாடையுந்தானுந்தீர்த்தவாரிச்
சங்கதிருமணிவீதிநகரிசூழ்ந்ததடஞ்சாரவிரைவதகசபிலநண்ணிப் [பர்சேர்ந்தான்.
பொங்கதிர்பைம்புயலெழுந்துபொழியுங்கற்குற்போபொருநீள்வடதருவின்பொதும்

இந்திரற்குத்திருமதலைமன்றலெண்ணியாதவர்கோன்வளம்பதியிலெய்தினனென்
றந்தரத்தைநீலத்தால்விதானமாக்கியண்டமுறவிடிமுரசமார்ப்பவார்ப்ப
வந்திரட்டைவரிசிலையாற்பஞ்சவண்ணமகரதோரணநாட்டிவயங்குமின்னான்
முந்துறத்தீபமுமெடுத்துத்தாரைமுத்தான்முழுப்பொரிசிந்தினகாலமுகில்களம்மா.

யாங்கருதிவருங்கருமமுடிப்பானெண்ணியிராமன்முதல்யதுகுலத்தோரிசையாரென்று
பாங்குடனேதனக்குயிராந்துளபமௌலிப்பாந்தாமன்றனைநினைந்தான்பார்த்தனுக்கப்
பூங்கமலமலரோடையனையான்முனும்பொன்னெடுந்தேர்ப்பாகனுமேயாகப்போந்து
நீங்கரியநண்பினனுய்நெடுநாணீங்குநேயத்தோவினைவின்வழிநேர்பட்டானே. (ருஉ)

யதியாகியவணிருந்ததோழன்றன்னையதுகுலநாயகன்பரிவோடிறைஞ்சவன்பா
லதியானநெடுஞ்சுருதியாசிகூறியாகமுறத்தழீஇமகிழ்வுற்றுலகீழன்
மதியார்செஞ்சடைமுடியோனென்னவைகிவந்தவாறுரைப்பநெடுமாலுங்கேட்டுத்
துதியாடிக்காலையிலேவருதுமென்றுசொற்றிமைப்பின்மீளவும்போய்த்துவரைசேர்ந்
தான். (ருங)

ஆதவன்வந்துதிப்பதன்முன்மற்றைநாளிலணிநகர்வாழ்சனமனைத்துமந்தக்குன்றின்
மாதவனதேவவினான்மழைக்காலத்துவாசவற்குவிழாவயர்வான்வந்தகாலை
யாதவரிற்போசரின்மற்றுள்ளவேந்தரியாவருஞ்சூழ்வாநறுந்தாரிராமன்வந்தான்
சூதடர்பச்சிளங்கொங்கைப்பச்சைமேனிச்சுபத்திரையுந்தோழியர்கள்சூழவந்தாள். ()

முக்கோலுங்கமண்டலமுஞ்செங்கற்றாசுமுந்நூலுஞ்சிகையுமாய்முதிர்ந்துதோன்று
மக்கோலமனைவருங்கைதொழுதுநோக்கியருணலம்பெற்றகன்றதற்பின்னைத்துலோகத்
தெக்கோலயோனிகட்குமுயிராய்த்தோற்றமீரைந்தாய்ப்பாற்கடலினிடையேவைகு
மைக்கோலமுகில்வண்ணன்றானுமெய்திமனவணக்கம்புரிவோனைவணங்கினானே. (௫௫)

துன்னியிருவருமொருப்பட்டிருந்தகாலைச்சுபத்திரையத்தடங்குன்றின்சூழலோர்சார்
மின்னியபைம்புயலினெழிலிரேகைபோலவெளிப்படலுமெய்புளகமேன்மேலேறிக்
கன்னியிளந்தளிர்க்கடம்புமலர்ந்ததென்னக்கண்டவிழியிமையாதகாட்சிகாணு
மன்னியமாதவத்தோனைமந்தமூரன்மாதவன்மைத்துனமையினான்மகிழ்ச்சிகூர்ந்தே. (

அடிகடிருவுளத்தெண்ணமெம்மனோர்களறியினிசையலர்பலரிங்கறிவுறுமற்
கடியயர்வுற்றும்பதிகொண்டடைகவென்றுகாவலர்க்குக்கடனென்றுக்கசியக்கூறிக்
கொடியிடைவெங்களபமுலைக்கன்னிமானைக்கூயணங்கேமெய்யையுறக்கொண்டகோலப்
படிவமுனிக்கிருபருவம்பணித்தவேவல்பரிவுடனீபுரியென்றுபணித்திட்டானே. (௫௭)

வேறு.

உள்ளடங்கியகாமவெங்கனல்புறத்தோடிக்
கொள்ளைகொண்டென்மறைத்தெனக்கூறையுந்தானு
மெள்ளவந்துதன்கடிமனைமேவியவேடக்
கள்ளவஞ்சனையறிந்திலள்கற்புடைக்கன்னி. (௫௮)

ஈங்குவந்ததென்றவப்பயனென்றுகொண்டெண்ணி
யாங்குவந்தொருமனையிடையருந்தவன்றயிலத்
தூங்குகண்ணினள்சுபத்திரைதோழியர்பலரும்
பாங்குவைகமற்றொருமனைபுகுந்துகண்படுத்தாள். (௫௯)

புடவியெங்கணும்புதையவான்பொழிதருபுனலா
லடவியாரழலவியவுமவிந்திலதையோ
தடவிவாடைமெய்கொளுத்திடத்தனஞ்சயற்கணங்கின்
விடவிலோசனக்கடைதருவிரகவெங்கனலே. (௬௦)

மதனலீலையிற்பழுதறவழிபடும்பாவை
வதனவாண்மதிவந்துமுன்னிற்கவுமருண்டச்
சதனமேவருந்தபோதனன்றனக்குவெம்மோக
விதனவல்லிருள்விடிந்திலதாரிருள்விடிந்தும். (௬௧)

அற்றைநாண்முதலநேகநாளகின்மணங்கமழுங்
கற்றைவார்குழற்கன்னிகைவழிபடக்கருத்தா
விற்றைமாமதன்பூசனுக்கென்செய்வேமென்றென்
றெற்றையுன்றில்போன்மெய்ம்மெலிந்துள்ளமுமுடைந்தான். (௬௨)

நல்லிலக்கணம்பலவுடையவயவநலத்தால்
வில்லிலக்கணத்தழும்புடைக்கரங்காளன்மிகவுந்
தொல்லிலக்கணம்பலவுடைச்சுபத்திரையொருத
னில்லிலக்கணவனேயிவன்யார்கொலென்றயிர்த்தாள். (சுங)

மங்கையங்கொருநாளவன்மலரடிவணங்கி
யெங்கும்வண்புனலாடுதற்கேகினீரெனினுந்
தங்குமாநகர்யாதெனத்தபோதனன்றனு
மெங்கண்மாநகரிந்திரப்பிரத்தமென்றிசைத்தான். (சுச)

என்றகாலையிலிந்திரன்மதலையையொழிய
நின்றபேரையநெடுங்கணுள்வினவலுநிருபன்
வென்றிமன்னவர்யாரையும்வினவிணிமின்னே
மன்றலந்தொடைவிசயனேமறந்ததென்னென்றான். (சுரு)

யாழின்மென்மொழியெங்கணுமகிழ்வளவனுக்
கூழினண்புடைமன்றலுக்குரியளாதலினால்
வாழிவெஞ்சிலைவிசயனைமறைத்தனளென்னுந்
தோழிநின்றவளொருத்திகைதொழுதனள்சொன்னாள். (சுசு)

பங்குனன்பெருந்தீர்த்தநீர்படிவதற்காகப்
பொங்குதெண்டிரைப்புவிவலம்போந்தனனென்றே
யங்குநின்றுவந்தவருரைத்தனரவனிப்போ
தெங்குளானெனத்தெரியுமோவடிகளுக்கென்றாள். (சுஎ)

பாங்கிசொல்லுரைதன்செவிப்படுதலும்விசயன்
றீங்கிலன்பலதிசைகளுஞ்சென்றுநீராடிக்
கோங்கிளங்கொழுமுகைநிகர்கொங்கையாள்பொருட்டா
லீங்குவந்துநும்மில்லிடையிருந்தனனென்றான். (சுஅ)

யதியுரைத்தசொற்கேட்டலும்யாதவிநுதல்வாண்
மதிவியர்த்தது துடித்ததுகுமுதவாய்மலரும்
புதியகச்சணிகுரும்பைகளரும்பினபுளகம்
பதியிடத்தரிவையர்க்குளமாதுலம்படாதோ. (சுகு)

உகவைமுத்தமென்பவளமுநீலமுமொளிர
வகவுபச்சிளந்தோகைபோனின்றவவ்வணங்கை
மிகவிருப்பநோய்வளர்தலின்மெலிந்ததோள்விசயன்
றகவுடைத்தனதடக்கையால்வளைக்கரந்தகைந்தான். (எ0)

தகைந்தபோதுயிர்ச்சேடியர்தவிர்கெனச்சிலசொற்
பகர்ந்துபோயொருமாதவிப்பந்தரிற்புகுந்து
புகுந்தநீர்மையைத்தேவகியறியுமாபுகன்று
ரகைந்தபல்பெருங்கிளைஞரிலார்கொலோவறிந்தார். (எக)

அறிவுருவகையலாயுதன்முதல்வடமதுரை
செறியும்யாதவர்யாரையுந்தன்னுடன்சேர்த்து
மறிகொள்செங்கையன்விழாவயர்வான்பெருந்தீவி
னுறியில்வெண்டயிருண்டவன்கொண்டுசென்றுற்றான். (௭௨)

உற்றகங்குலில்யாவருந்தணந்தவாறுணர்ந்து
பெற்றதன்பெரும்பிதாவினைமுன்னினன்பெரியோன்
சிற்றிடைப்பெருங்கொங்கையுந்தம்முனைத்தியான
முற்றமுன்னினளிருவருமுன்முன்வந்துற்றார். (௭௩)

இந்திராணியோடேய்தியவிந்திரன்றன்னை
யிந்திராபதியெதிர்கொளத்துவரைமாமுதூர்ச்
சந்திராதவமண்டபத்திடுபொலந்தவிசில்
வந்திராவணங்கியதிருமகனுடன்மகிழ்ந்தான். (௭௪)

பொருவரும்புருகூதனும்புலோமகன்னிகையு
மிருவருந்தமகலன்களாலிவரிருவரையு
மருவரும்படியணிதலினணிகெழுவனப்பா
லொருவரும்பிறரொப்பலரென்னுமாறுயர்ந்தார். (௭௫)

பாலருந்ததிநறுநெய்யாய்ப்பாடியிற்கள்ளத்
தாலருந்ததிவிரகனதருளினால்விரைவிற்
சாலருந்ததிதலைவனுந்தலைபெறும்பலநூண்
ணூலருந்ததியுறப்புகுந்தாசிகணுவன்றார். (௭௬)

தொடங்கிநாதவெம்முரசுடன்சுரிமுகந்தழங்கச்
சடங்கினாலுயராகுதித்தழலயன்சான்றா
விடங்கினான்மிதுவிசயனக்கன்னியைவேட்டான்
மடங்கினார்தமபதிதொறுமவ்வுழிவந்தார். (௭௭)

முன்னம்யாவையுமுடித்தருண்மொய்துழாய்முடியோன்
கன்னனாருயிர்கொளவளர்காளையைத்தழீஇக்கொண்
டன்னமென்னடையரிவையர்பொருட்டுநீயின்ன
மென்னவென்னமாதவவுருக்கொள்ளுதியென்றான். (௭௮)

வேறு.

காமற்பயந்தோன்றனதேவலிற்காமபாலன்
வாமப்பதிதன்னினும்வாசவமாபிரத்த
நாமப்பதியேதிசையாகநடக்கலுற்றான்
றாமக்குழலாடணித்தேர்விடச்சாபவீரன். (௭௯)

வென்றித்துவரைநகர்காவலர்தம்மைவென்று
மன்றற்குழலினிளையாளைவலிதினெய்திக்
குன்றச்சிறகரிந்தோன்மகன்கொண்டுபோனா
னென்றப்பலற்குக்கடல்வண்ணனியம்பினானே. (௮0)

சேலாம்பிறப்பிற்றிருமாலிது செப்புமுன்னே
காலாந்தகனும்வெருவுந்திறற்காளை தன்னை
நீலாம்பரனும்யதுவீரநிருபர்யாரும்
நாலாம்படையோடெதிர்சூழ்ந்தமர்நாடினாரே. (அக)

அஞ்சேலமரினுமர் தம்மையுமாவிகொள்ளோன்
செஞ்சேலனைவிழியாயெனத்தேற்றியந்த
மஞ்சேயனையதடந்தேரவனேரவந்த
வெஞ்சேனைமுற்றும்புறந்தந்திடவென்றுபோனான். (அஉ)

மடைபட்டவாளையகினாறுமருதவேலி
யிடைபட்டதங்கள்வளநாடுசென்றெய்தியாங்குத்
தொடைபட்டதிண்டோளறன்காளைதுணைவரோடு
நடைபட்டுருகியெதிர்கொள்ளநகரிபுக்கான். (அங)

முன்போர்விளைத்தமுசலப்படைமொய்ம்பினானுந்
தன்போலுயர்ந்தோரிலனான தடங்கண்மாலும்
பின்போயினியமொழியாயிரம்பேசிமன்றற்
கண்போடுதவுமுபசாரமனைத்துமீந்தார். (அச)

ஞாலத்தெரிவைகளிகூரநடாத்துசெங்கோற்
றாலத்துவசன்றுவராபதிதன்னில்வைக
நீலக்கடல்களிரண்டாமெனநெஞ்சொடொத்த
சீலத்தவனோடவண்வைகினன்செங்கண்மாலே. (அரு)

பன்னாளிவரிப்பதிசேர்ந்தபின்பங்கசாக
மின்னாளுமார்பற்குயிர்போலும்விசயனென்பா
னன்னாளினன்மைதருமோரையினல்கவஞ்சி
யன்னாளிடத்திலபிமன்னுவவதரித்தான். (அசு)

வேதஞ்சிறக்கமனுநீதிவிளக்கவிப்பா
ராதங்கமாறவருமைவரினைவர்மைந்தர்
பூதங்களைந்திற்குணமைந்தும்பொலிந்தவாபோ
லோதங்கியிலுற்பவித்தாள்வயினுற்பவித்தார். (அஎ)

அம்மாதுலனும்பயந்தோருமழகின்மிக்க
விம்மாமகாருக்கியற்றும்விதியேய்ந்தபின்னர்த்
தெம்மாறுவின்மைமுதலாயசெயல்கள்யாவுங்
கைம்மாறுகொண்டுநனிகைவருமாறுகண்டார். (அஅ)

அரிதிற்பயந்தவருவோருளுமாண்மைதன்னா
விருதுக்களின்மேவிளவேனிலின்றோற்றமேய்ப்ப
மருதுக்கிடைபோமதுசூதன்மருகன்வெம்போர்
விருதுக்கொருவனிவனென்னவிளங்கினானே. (அகூ)

உரனலமுகானுரையான்மற்றுவமைமயில்லா
நரநாரணர்க்குநலங்கூர்தருநண்புபோல்வா
னரனுர்விழியாலழிந்தங்கமநங்கமான
மரனுருடனண்பிசைந்தன்றுவசந்தகாலம். (௯0)

அருச்சுனன்றீர்த்தயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—௭உக.

## வசந்தகாலச்சருக்கம்.



நனியாடலனற்கடவுள்யமனிருதிநண்ணுதிசைநாள்கடோறு
முனியாமனடந்திளைத்துமுன்னையினும்பரிதாபமுதிர்ந்ததென்று
தனியாழித்தனிநெடுந்தேர்த்தனிப்பச்சைநிறப்பரியைச்சயிலராசன்
பனியாலவ்விடாய்தணிப்பான்பணிப்பகைவன்பணிசெய்வோன்பக்கஞ்சேர்ந்தான். (க)

கலக்கமுறவிளவேனிற்கலகமெழுந்திடும்பசுந்தண்காவுதோறுஞ்
சிலைக்கணிநாண்முறுக்குவபோற்றென்றலின்பின்சுழலளிகள்சேரவோட
வுலைக்கனலிற்கருங்கொல்லர்சிறுகுறட்டாற்றகடுபுரிந்தொதுக்கிமாரன்
கொலைக்கணைகள்சமைப்பனபோற்குயிலலகாற்பல்லவங்கள்கோதுமாலோ. (௨)

செங்காவிசெங்கமலஞ்சேதாம்படந்தொறுமுத்தீக்களாகப்
பைங்காவினெடுஞ்சினைக்கைகமலர்நறுந்தேனுகுநிகள்பலவும்வீழ்க்க
வுங்காரமதுகரங்களோங்காரச்சுருதியெடுத்தோதவேள்வி
வெங்காமனிரதியுடன்புரிந்ததனதென்றலந்தேர்மேற்கொண்டானே. (௩)

தேவியருந்திருமாலுஞ்செழுமலர்த்தார்த்தனஞ்சயனுந்தேவிமாரு
மேவியனந்தரம்வேனில்விழவயர்வான்முரசறைந்துவீதிதோறு
மோவியமுமுயிர்பெய்தவுபேந்திரனுமித்திரனுமுவமைசாலப்
பூவினமுஞ்சுரும்புமெனப்புரமுழுதும்புறப்படவண்பொங்கர்சேர்ந்தார். (௪)

கொண்டலெழுமின்னுடங்கக்கொடிஞ்சாபம்வளைவுறச்செங்கோபந்தோன்ற
வண்டளவுநறுங்குமிழும்வண்டணிகாந்தளுமலரமலைகடோறுந்
தண்டளவருவிவிழத்தையலார்வடிவுதொறுஞ்சாயற்றோகை
கண்டுநமக்கிளவேனில்கார்காலமானதெனக்களிக்குமாலோ. (௫)

பாராமனைகையாமற்பாடாமலாடாமற்பாதஞ்செங்கை
சொராமன்முகராகம்வழங்காமலிகழாமற்செவ்வாயூற
னோராமனிழலதனைநிகழ்த்தாமன்மலர்ந்தழகுநிறைந்தநீழ
லாராமந்தொறுந்தங்களவயவம்போல்வனகொய்தாரணங்குபோல்வார். (௬)

மாற்றுதபனிநீரான்மான்மதகுங்குமமலயவாசச்சந்தின்
சேற்றாலச்சோலையெலாஞ்செங்கழுநீர்த்தடம்போன்றசிந்தைத்தாப
மாற்றுதகாதலருக்கமுதானவிளநீராலடர்ந்தபூகத்
தாற்றாலம்மரகதச்செந்துகிராலப்பொழில்பொன்றதடங்களெல்லாம். (௭)

மெய்கொண்டமொழிவிசயன்மெய்யினெழிலினையாமன்மேன்மேனுக்கு
மைகொண்டகுழலொருத்திமற்றவன்செங்கையிற்சிவிறிமழைகண்டஞ்சிப்
பொய்கொண்டுவெகுத்தனையமருங்கசையத்தனபாரம்புளகமேறக்
கைகொண்டுமுகம்புதைத்துத்தன்விரற்சாளரங்களிலேகண்கள்வைத்தாள். (அ)

நங்கையங்கோர்கொடியனையாள்வதனமதிசலமதியாய்நடுங்குமாறு
பங்குனன்றன்றிருச்செங்கைப்பங்கயத்திசிவிறியினற்பரிவுகூரக்
குங்குமங்கொள்புனல்விடவுமிமைபாமற்புனல்வழியேகூர்ந்தபார்வை
செங்கலங்கற்புதுப்புனலுக்கெதிரோடிவிளையாடுஞ்சேல்கள்போலும். (கூ)

நறைகமழ்தண்டுழாய்மாலைநாரணற்குநண்பானநரனார்செங்கை
யுறையுமலர்ச்செந்திருவுமொவ்வாதபொற்புடையாளொருபொற்பாவை
நெறிதருபைங்குழலின்மிசைவீசியநீர்பெருக்காற்றினிறைநீர்வற்றி
யறல்படுநுண்கருமணலினரித்தொழுகுஞ்சின்னீரோடமைந்ததம்மா. (க0)

விளிந்துமயில்புறங்கொடுக்குமெல்லியலாளொருத்திநெடுவேயும்பாகுஞ்
சுளிந்துவருங்கடகளிற்றுச்சுவேதவாகனன்கடகத்தோளின்மீது
தெளிந்தநறுங்கத்தூரிச்சேறுபடுசிவிறியினீர்சிந்துந்தோற்றங்
களிந்தகிரிமிசைக்கடவுட்காளிந்திபரந்ததெனக்கவினுமாதோ. (கக)

பிறையனையதிலகநுதற்பேதையிளம்பிடியொருத்திபிடித்தசெங்கை
நறைகமழும்பொலஞ்சிவிறிநண்ணியசெஞ்சிந்தூரநாரம்வீச
வறைகழல்வெஞ்சிலைத்தடக்கையருச்சுனன்றன்றிருமுகத்திலானபோது
நிறைமதிமேல்வாளிரவிகரங்கணிரைத்தோடுவபோனிறத்தமாதோ. (கஉ)

பாண்டுமதலையுங்காதற்பாவையருந்துழாயோனும்பாவைமாரு
மீண்டுபெருஞ்சனத்துடனேயிவ்வண்ணமிடந்தோறுமினிதினாடி
யாண்டுவரிசிலைமதனுமவன்படையுஞ்சேவிப்பவழகுகூர
மீண்டுதமமனைதோறுநிரைநிரைவாள்விளக்கேந்தமேவினாரே. (கங)

நெடுவேனில்புகுதாமேயிளவேனிலகன்றதற்பினிகரில்கஞ்சப்
படுவேய்வெள்வளையமுந்தண்பட்டாலவட்டமுஞ்செம்பலச்சேறு
முடுவேய்நித்திலத்தொடையுமுடுநறுமண்டபத்தடமுமொழுகிநீண்ட
வடுவேய்கண்மடந்தையர்க்குமகிழ்நருக்குமமைந்தனவான்மனைகளெல்லாம். (கச)

திலகநுதற்குறுவியர்தஞ்செவிப்பூவிலளியினத்தின்சிறகர்க்காற்றாற்
புலர்மதுநுகர்மாதர்புன்முறுவலிதழூறல்புதிதின்மாந்தி
யிலகுபரிமளபுளகவீரமுலைத்தடமூழ்கியிரதிகேள்வன்
கலகமிடும்பரிதாபமகற்றினாரினிமையுடன்கலந்தகேள்வர். (கரு)

மாரவசந்தனையகன்றுவயங்குறுவெங்கோடையினன்மறுகியாற்றா
தாரமளிமதுமலரிலாரவடங்களிற்பனிநீராரச்சேற்றி
வீரநெடுங்குழலிசையிலியங்கியசாமரக்காற்றிலிளநிலாவிற்
பேரழலும்புகுந்ததெனப்பிணங்கினார்தங்கேள்வர்ப்பிரிந்தமாதர். (கசா)

கோடைவெயில்சுடச்சுடமெய்கொளுந்திபிறந்தனபோலக்கொண்டல்கோடை
வாடைசிறுதென்றலெனுமாருதங்களெம்மருங்கும்வழக்கமின்றி
யாடையில்வெண்சாமரத்திலாலவட்டத்தினிலுயிர்ப்பிலழகார்நெற்றி
யோடைமுகமதகயத்தின்றழைசெவியிற்பல்விறகிலொளித்தமாதோ. (கஎ)

*தாழினறுங்குவளையந்தார்த்தருமன்மகனாட்புனலுந்தரங்கவேலை
யூழிநெடும்பெரும்புனலுமுடலினுறுவெயர்ப்புனலுமூறியூறிப்
பாழிதொறுமிறைக்கின்றபைம்புனலுமல்லதுவெம்பருவந்தன்னாற்
பூழிபடிகமர்வாயநானிலத்துப்புகலுதற்கோர்புனலுமுண்டோ. (கஅ)

நீகாரமழைபொழியநித்திலவெண்குடைநிழற்றநீலவாட்கட்
பாகாருமொழிமடவார்மணிக்கவரியிருமருங்கும்பயிலவீசக்
கார்காலம்புகுந்துசெழுங்காளமுகிலிரண்டொருபாற்கலந்ததென்ன
வாகாரமழகெறிப்பவிருவருமாங்குடனிருந்தாரவிபோல்வார். (ககூ)

வசந்தகாலச் சருக்க முற்றிற்று.
ஆகச்செய்யுள்—எச0.

## காண்டவதகனச் சருக்கம்.



இனியபான்முகந்தொழுக்குமாகுதியெனவிலக்குமுப்புரிநூலுந்
தனதுவெஞ்சிகைக்கொழுந்தெனப்புறத்தினிற்றாழ்ந்தசெஞ்சடைக்காடும்
புனிதவெண்புகைமருங்குசுற்றியதெனப்புனைந்தவாடையுமாகி
மனிதவேதியர்வடிவுகொண்டவரெதிர்வன்னிவானவன்வந்தான். (க)

வந்தவந்தணன்வரவுகண்டிருவரும்வந்தெதிர்வணங்கித்தஞ்
சிந்தையன்பொடுவேதிகையெனத்திகழ்செம்பொனின்றவிசேற்ற
வந்தணாளனுஞ்சூழ்ந்தபொற்கண்ணினனவிமணங்கமழ்வாய
னுந்துவெம்பசிபெரிதுவல்லேயெனக்கோதனமிடுகென்றான். (உ)

கரியமேனியரிருவருஞ்செய்யபொற்காயமாமுனியுண்டற்
குரியபோனகமிடுதுமிக்கணத்தெனவுவகையோடுரைசெய்தா
ரரியவாயினும்வழங்குதற்கேற்றனவல்லவாயினுந்தம்மிற்
பெரியவாயினுமதிதிகள்கேட்டனமறுப்பரோபெரியோரே. (ங)

அளித்துமென்றசொற்றன்செவிப்படுதலும்பெற்றனன்போலாகி
யொளித்துவந்தனனிருபிறப்பினனலனுதாசனனென்னுமங்
களித்துவண்டிமிர்தொடையலீரெனக்குணக்காண்டவமெனுங்கானங்
குளித்தருந்துதற்கிடங்கொடானவ்வனங்கொண்டல்வாகனன்காவல். (ச)

மிடைந்தநால்வகைமகீருகங்களுநெடுவெற்பினங்களுந்துன்றி
யடைந்ததானவராக்கர்பேருரகருக்காலயங்களுமாகிக்
குடைந்துசோரிகொள்வாளுகிரரிமுதற்கொடுவிலங்கினமிக்குக்
கடைந்தகூரெயிற்றுலதக்கனும்வாழ்கானனமதுகண்டீர். (ரு)

* தாழிநறுங்குவளை என்றும் பாடம்.

புகுந்தியான்முகம்வைக்கினேழ்புயலையுமேவியப்புருகூதன்
றொருகுந்தாரதலவிறுதிபோனெடும்புனல்சொரிந்தவித்திடுமென்னை
முகுந்தனுனிரைபுரந்தவாறெனவொருமுனைபடவிலக்கிற்பின்
மிகுந்ததாகமுமெண்ணமுமுடிந்திடும்வேண்டுவதிதுவென்றான். (௬)

என்றபோதிலங்கினிச்சையின்படியுணவீந்தனமிமைப்போழ்திற்
சென்றுகொள்கெனத்தனஞ்சயன்கூறலுஞ்சிந்தைகூர்மகிழ்வெய்தி
மன்றலந்துழாய்மாயவனருளினால்வடிக்கணைமாளாமற்
றன்றதூணியுஞ்சாபமுமிரதமுஞ்சுவேதவாசியுமீந்தான். (௭)

ஈந்தவானரப்பதாகைநட்டிரண்டிவுளியுமுடன்பூட்டி
யாய்ந்தவன்றொழிற்பாகனுமருணனிலழகுறும்படிதூண்டக்
காய்ந்தசாயகநாழிகைகட்டியக்காண்டிவங்கரத்தேந்தி
வேய்ந்தமாமணிக்கவசமுமருக்கனிலழகுறமேற்கொண்டான். (௮)

நெஞ்சின்மேவிடுமூக்கமோடணிதிகழ்நெடும்புயம்பூரித்துச்
சிஞ்சினீமுகந்தெறித்தனன்றெறித்தலுந்தெறித்தபேரொலிநானின்
விஞ்சிவாழ்வனசத்துவமடங்கவுள்வெருவுறவுகாந்தத்து
மஞ்சினீடிருமொழியெனப்பரந்ததுவானமுகடுறமன்னோ. (௯)

ஆழிவாயொருவடவைபின்முகத்திடைபவதரித்தனனென்ன
ஆழிவாயுலகனைத்தையுமுருக்குமாறுடன்றெழுந்தனனென்ன
வாழிவாழியென்றருச்சுனன்கரத்தையும்வார்சிலையையும்வாழ்த்திப்
பாழிமேனியைவளர்த்தனன்பாவகன்பவனனும்பாங்கானான். (௧௦)

மூளமூளவெம்பசியொடுஞ்சினத்தொடுமுடுகிவெய்துறவோடி
வாளமாகவொளிர்பவளமால்வரைநெடுவாரியைவளைந்தென்னக்
காளமாமுகிலூர்திநந்தனநிகர்காண்டவந்தனையண்ட
கோளமீதெழவளைந்தனன்வரைபடிகொண்டலுஞ்சுடர்தீய. (௧௧)

ஆனவாகுலந்தன்னொடுதப்புதற்கணிபடப்பறந்தோங்குந்
தூநிறத்தனகபோதமொத்தனவிடையிடையெழுஞ்சுடர்த்தூமங்
கானமேதியுங்காடியுமேனமுங்கடகரிக்குலந்தாமும்
வானிலேறுவபோன்றனநிரைநிரைவளர்தருகருந்தூமம் (௧௨)

வளைத்தடந்தொறுங்கதுவியகடுங்கனன்மண்டவினகல்வானி
னிரைத்தெழுந்தசெம்மரகதகனகவாணீலவெண்ணிறத்தூமந்
தரைத்தலத்தினின்றண்டகோளகையுறச்சதமகன்றடஞ்சாப
முரைத்ததன்வளைவறநிமிர்ந்தழகுறவோடுகின்றதுபோலும். (௧௩)

கருதியாயிரகோடிவெம்புயங்கமிக்கானிடையுளவென்று
பருதிசூழ்வரவெருவுபல்குவடுடைப்பருப்பதங்களின்சாரற்
சுருதிவேள்விநூறுடையவன்சிறகறத்துணித்தவாய்தொறும்பொங்கிக்
குருதிபாய்வனபோன்றனகொளுந்தியகொழுந்தழற்கொழுந்தம்மா. (௧௪)

கோத்திரங்களின்கவானிடைக்கதுமெனக்கொளுந்தியுற்றெரிகின்ற
தீத்திறங்கள்செங்காந்தளுமசோகமுஞ்செங்குறிஞ்சியுஞ்சேரப்
பூத்தவொத்தனவன்றியுங்குலிகநீர்பொழியருவியும்போன்ற
பார்த்தகண்கள்விட்டேகலாவகைநிறம்பரந்ததாதும்போன்ற. (கரு)

தளைத்தபாதவத்தலைதொறும்பற்றினசருகுதிர்த்திளவேனிற்
கிளைத்துமீளவும்பொறியளியெழவளர்கிசலயங்களும்போன்ற
திளைத்தவேர்முதற்சினையுறவெரிவனதீபசாலமும்போன்ற
வளைத்தகானிடைமெலமெலவுள்புகுவன்னியின்சிகாவர்க்கம். (கசு)

தழைத்தபேரொளித்திவாகரன்கரங்கள்போய்த்தடவியவ்வடவிக்கட்
பிழைத்தகாரிருட்பிழம்பினைவளைந்துடன்பிடித்தெரிப்பனபோலு
முழைத்தவான்புழையொருகாத்திருபணைமும்மதப்பெருநால்வாய்
மழைத்தகுஞ்சரமுகந்தொறும்புக்குடன்மயங்கியபொறிமாலை. (கஎ)

அரியெனும்பெயர்பொருமையிற்போல்விரைந்தழற்கொழுந்தளைபற்றக்
கிரிமுழைஞ்சுகடொறும்பதைத்தோடினகேசரிக்குலமெல்லாம்
விரியுரோமவாலதிகளிற்பற்றலின்*விளிவுடைச்சவரங்க
ளெரிகொள்சோகவெங்கனலினுனின்றுநின்றிறந்தனசலியாமல். (கஅ)

எப்புறத்தினும்புகுந்துதீச்சூழ்தலினேகுதற்கிடையின்றித்
தப்புதற்கருத்தழிந்துபேரிரலையோடுழையினந்தடுமாற
மெய்ப்புறத்துவெண்புள்ளிசெம்புள்ளியாய்விடும்படிவிரைந்தோடி
யப்புறத்துவீழ்பொறிகளவ்வவற்றினையலங்கரித்தனவன்றே. (க௯)

காழுடைப்புறக்கழைகளின்றளைதொறுங்கால்பரந்திசைக்கின்ற
வேழிசைக்குளமுருகிமெய்புளகெழவிரைகொளுஞ்சுணங்க
டாழழற்சுடர்சுடச்சுடவெடித்தெழுசடுலவோசையின்மாய்ந்த
ஆழியிற்புயலுருமினுன்மடிந்திடுமுரகர்தங்குலம்போன்ற. (உ0)

அனையபோதிலவ்விபினசாலங்களினூர்தருக்களினீண்ட
சினைகடோறும்வாழ்சிகாவளகலாபமேற்செறிதருதீச்சோதி
பனையினீளுடற்பணிகளையலகினுற்பற்றலிற்†படர்பந்திப்
புனையுமாமணிநிழல்பரந்தெழுந்தெனப்பொலிந்திலங்கினமாதோ. (உக)

ஆசுகன்றனோடடவியைவளைத்தனனுசுசுக்கணிமேன்மேல்
வீசுகின்றனபுலிங்கசாலமும்புகல்வேறெமக்கிலதென்று
பாசிளங்கிளிபூவைகள்வெருவிமெய்பதைத்துளந்தடுமாறிப்
பேசுகின்றசொற்கேட்டலுமடங்கினபிறபறவைகளெல்லாம். (உஉ)

நெஞ்சிலீரமுநீதியுங்குடிபுகாநிருதர்சென்னியில்வன்னி
குஞ்சிநீடுறவளர்வபோலசைந்துசெங்கொழுந்துவிட்டனமேன்மேல்
வஞ்சிநேரிடையாக்கியர்நகமுழுமதிசிவப்புறத்தீட்டும்
பஞ்சிபோன்றனவவரவர்பதயுகம்பற்றியசிகைவன்னி. (உங)

---

* விழைவுடை என்றும் பாடம்.

† படப்பந்தி என்றும் பாடம்.

முப்புரங்களை முக்கணன்முனிந்தநாண்மூவரும்முழுத்தீயிற்
றப்பினருளர்காண்டவவடவிவாழ்தானவரியாநய்ந்தார்
பைப்புறத்தணிமணிபொளிபரந்தெனப்பம்பிறலைகளிற்பற்றி
வெப்புறுத்தலினுரகருந்தங்கள்வாய்விடங்கள்கொன்றெனவீழ்ந்தார். (உ௪)

புகைபடப்படக்கரிந்தனபொறியினிற்பொறியெழுந்தனவானின்
மிசைபடைத்தவச்சுரபதியாயிரம்விழிகளுங்கணப்போதிற்
றசைவறக்கழைமுதலியதருக்களின்சடிலவாரவமிஞ்சித்
திசையனைத்தினும்பரத்தலிற்செவிகளுஞ்செவிடுபட்டனசேர. (உ௫)

வேறு.

விரதமேல்கொண்டுசெம்பொன்மால்வரையைவிரிசுடர்சூழ்வருவதுபோ
லிரதமேல்கொண்டவருசனுஞ்சுதனுமிமைப்பினிற்பன்முறைதேர்ந்து
சரதமேல்கொண்டுசரிப்பதுந்தனதுதாவகம்பாவகன்புகுந்து
பாதமேல்கொண்டுநடிப்பதுங்கருதிப்பார்த்தனன்பாகசாதனனே. (உ௬)

முந்திவார்சிலைக்கைப்பற்குனன்றொடுத்தமுரணுடைமுரிவெங்கணைக
ளுந்திவாளுரகர்சூடிகாமகுடகோடிகளுடைத்தலினுடைந்து
சிந்திமீதெழுந்தமணிகளுமனலின்சிகைகளிற்றெறித்தெழுபொறியு
மிந்திராலயத்திற்கேற்றியதீபமென்னநின்றிலங்கினவெங்கும். (உ௭)

தானவர்புரங்கணீறெழமுனிந்ததமனியச்சிலைக்கைவள்ளலூர்தி
யானவனமதுபுரத்தையுஞ்சுடுவானழன்றனன்போலுமென்றஞ்சி
வானவர்நடுங்கவானவர்க்கரசாம்வலாரியுமனனுறத்தளர்ந்து
கானவருடனேதக்ககனென்னுங்கட்செவிகெடுமெனக்கரைந்தான். (உ௮)

பரந்தெழுபுகையாற்றத்தமவடிவம்பண்டையிற்பதின்மடங்காகச்
சுரந்திடுபுயல்களனைத்தையுநெடுநீர்சொரிந்தவித்திடுகெனச்சொல்லி
நிரந்தரமருதுவிடாதுதன்னிழல்போனின்றவானவசையுமேவிப்
புரந்தரன்றனுமீரிருமருப்புப்பொருப்பின்வெம்பிடர்மிசைப்புகுந்தான். (உ௯)

ஏவகவிருத்தச்செவ்வியின்றனுவுக்கேற்றநாண்முறுக்கிவிட்டென்னச்
சேவகவிமையோரெண்டிசாமுகத்துஞ்செஞ்சுடர்வாள்விதிர்த்தென்னப்
பாவகன்பகுவாய்நாவிதிர்த்தென்னப்பரந்தவப்பாவகற்றணவாந்
தாவகமுழுதும்வளைந்துகொண்டெழுந்தசலதரசஞ்சலாசாலம். (௩0)

ஏறியகளிறுபிளிறுநீடொலியுமெடுத்தவிற்றெறித்தநாணொலியுங்
கூறியவிமையோர்பெருநகையொலியுந்துந்துபிக்குழாமதிரொலியுங்
கூறியவனலன்சடிலவல்லொலியுங்குறைபடத்திசைதொறுமிகுந்த
வூறியபுவனபவனவேகத்தோடுருமுடைமுகிலின்வாயொலியே. (௩௧)

தூமமுமெமதுபவனனுமெமதுதோழனத்தோயமுமெமதே
யாமுமிங்கிவற்றோடொன்றுதலொழிதுமீரிருபொருள்களும்பிறிந்தான்
மாமுகிலெனும்பேரெங்குளதடர்த்துவாசவனென்செயுமெம்மை
யாமுறையறிதுமென்றுகொண்டறவுமகங்கரித்தனன்வெகுண்டழலோன். (௩௨)

மூண்டவெங்கனலையுருமின்வெங்கனலான்முருக்கியெங்கால்கையானெருக்கி
யாண்டவன்களிற்றின்கரநிகர்தாரையருவியின்கணங்களாலவித்துப்
பாண்டவன்பகழிதொடுக்கினுங்கண்ணன்பருப்பதமெடுக்கினுமெங்கள்
காண்டவம்புரத்துமென்றுகொண்டிழிந்துபொழிந்தனகணம்படிகனங்கள். (௩௩)

காலவாயருக்கன்பனிநுகர்ந்தென்னக்*கட்டறக்காண்டவமென்னும்
பாலவாயுள்ளசராசரமனைத்துநுகர்தலிற்பைம்புனல்வேட்டோன்
வேலையேழையுமொண்டேழுமாமுகிலும்விதம்படப்பொழிந்ததாரைகளாற்
றானுவேழினையுநனைத்தனனனைத்துந்தணிந்ததோதன்பெருந்தாகம். (௩௪)

எக்கடல்களினுமினிப்பசையிலதென்றேழிருபுவனமுநடுங்கத்
தொக்கடலுருமோடேழுமெழுகொண்டற்சேனையஞ்சுருவையான்முகந்து
மைக்கடல்வெளுக்கக்கருத்தமெய்ம்மகவான்வழங்கியவாகுதியனைத்து
நெய்க்கடல்சொரிந்ததென்னுமாறருந்திநீடுவான்முகடுறநிமிர்ந்தான் (௩௫)

தொழுதகுவிசயன்றானுவேழுடையோன்சுடர்முடிநனைந்திடுவதன்மு
னெழுமுகிலினமும்பொழிதருமாரியாவையுமேவினால்விலக்கி
முழுதுலகமுந்தன்னிடத்தடக்கியவான்முகடுறமுறைமுறைபடிக்கிக்
குழுமுவெங்கணையாற்கனற்கடவுளுக்குக்கொற்றவான்கவிகையுங்கொடுத்தான். (௩௬)

ஆழ்தருபாவையேழும்வற்றிடுமாறழித்தகாருமிழ்ந்திடுநெடுநீர்
தாழ்தருசரத்தான்மேய்ந்ததற்கிடையோர்தனித்திவலையும்பொசியாமல்
வீழ்தருமருவிபாவகன்றனக்குவிசயனன்றளித்தபொற்குடைக்குச்
சூழ்தரநிரைத்துத்தூக்கியமுத்தின்சுடர்மணித்தொடைபல்போன்றனவே. (௩௭)

மண்டிமீதெழுந்தவன்னியின்சிகைகளிந்திரன்மதலைவாளிகளாற்
கண்டகூடத்திற்கமைத்தசெம்பவளக்காண்டகுதூண்டிரள்காட்ட
வண்டகூடத்திற்கிந்திரன்பளிங்காலமைத்தபல்லாயிரகோடி
சண்டதூணங்கள்போன்றனபரந்துதனித்தனிமுகில்பொழிதாரை (௩௮)

தக்ககன்றன்னைக்கூயினர்தேடிச்சாயகமண்டபஞ்சுற்றி
மிக்கவிண்ணவர்கடிரிதரவவன்றன்மெல்லியன்மகவையும்விழுங்கி
யக்கணந்தன்னிலந்தரத்தெழலும்வீழ்த்தினனம்பினாற்றுணித்துச்
†செக்கனலுருவச்சென்னியையுரகர்கன்னியைத்திருமணஞ்செய்தான். (௩௯)

மருவயிற்சதகோடியினிறையைராவதத்தின்மும்மதத்தினானனைத்துக்
கருவயிற்றெழிலித்தாரையால்வருணக்கடவுடன்கணைகளாலவித்துச்
செருவயிற்புரள்வொதுக்கியத்தோழன்சிறுவனைச்சென்றெடுத்தணைத்தா
னொருவயிற்பிறந்தோனாதலின்மகவானுடனுடன்றிலனுதாசனனே. (௪௦)

அன்னவாயொடுதன்வாலதிதுணியுண்டலமருமச்சுவசேனன்
றன்னவாசவன்போய்வீடுகண்டுழியத்தனஞ்சயன்றனதுவெங்கணையான்
முன்னைவானவரைமுனைமுகந்தன்னின்முதுகிடமுதுகிடமுருக்கிப்
பின்னைவாரிதங்களேழையும்பொருதுபின்னிடப்பின்னிடப்பிளந்தான். (௪௧)

---

* கட்டழற்காண்டவமென்றும் பாடம்.

† செக்கர்நீடுவட்சென்னியை என்றும் பாடம்.

தீரமால்பொருதுவிடுகண்டதற்பின்செக்கர்மெய்த்தக்ககன்பயந்த
பாரமாசுணமவ்விசயனுக்கியாவர்பகையெனப்பலரையும்வினவிச்
சூரன்மாமதலைசரணமேயரணநமக்கெனத்தொழுதுபோயெய்தி
வீரமாமுனைவெம்பகழியாகியதெம்மேதினியினும்பெருவார்த்தை. (௪௨)

தோழன்மாமகனைக்கண்டபின்றனதுதோழனையொருவயிற்காணான்
வேழமாமுகத்திற்கைத்தலம்புடைத்தான்விழிகளாயிரங்களுஞ்சிவந்தான்
யாழமாதிரத்தினெதிரொலியெழுமாறெயிற்றிளநிலவெழநகைத்தான்
றுழமாநிலத்தினின்றமர்விளைக்குந்தன்பெருந்தனயனைமுனிந்தான். (௪௩)

மேகசாலங்களிளைத்ததுந்திளைத்துமேவிடுவிண்ணவரணிந்த
யூகசாலங்களுடைந்ததுங்கண்டானுருத்தெழுந்துள்ளமுங்கொதித்தா
*னேகசாபமுந்தன்னேகசாயகமுமிமைப்பளவையின்விரைந்தெடுத்தான்
பாகசாதனனுமேனையதிசையின்பாலரும்பகடுமேல்கொண்டார். (௪௪)

தேவருங்கோடிதேவருக்கொருவர்சிரங்களாய்நின்றமுப்பத்து
மூவருந்தத்தம்வாகமேல்கொண்டுமுந்துறவந்துவந்தணிந்தார்
யாவரும்புவனத்தின்றுகொலுகத்தினிறுதியென்றிரங்கினர்நடுங்க
மேவருமனிதரிருவரோடநேகவிபுதரும்வெகுண்டுபோர்விளைத்தார். (௪௫)

பச்சைவாசிகளுஞ்செய்யனவாகப்பாகரும்பதங்களேயன்றித்
தச்சவாளிகளாற்கரங்களுமிழந்துதனிப்பெருந்திகிரியுந்தகர
வுச்சமாமகத்திற்பண்டொடிந்தொடியாதொழிந்தனபற்களுமொடிய
வச்சமேதுணையாவருக்கனுமொழிந்தவருக்கர்பன்னொருவருமகன்றார். (௪௬)

மாறுபட்டுழியப்பற்குனன்கணையான்மழுக்களுஞ்சூலமுமுடைய
நீறுபட்டுடலினீற்றுடன்மடியநெடுங்கொடியூர்தியேறுகளு
மேறுபட்டழியச்சடையில்வார்நதியாலெறியதூளிவானெறியுஞ்
சேறுபட்டிடுமாறோடினார்மீளப்பதினொருதிறலுருத்திரரும். (௪௭)

எண்ணியவசுக்களெண்மரிற்கங்கையென்னும்யாய்வயிற்றினுற்பவித்த
புண்ணியனொழிந்தோரெழுவருந்தங்கள்புயவலிமையிற்பொருதிடுவார்
நண்ணியவமரின்விசையன்வெங்கணையாலுப்புலர்ந்துள்ளமுநடுங்கி
யண்ணியநிலயம்புகுந்தனரென்றுனிற்பரோவாயுள்வேதியரே. (௪௮)

அருணவெங்கனலோன்கனலொடுகலந்தானசுகனவற்குநண்பானான்
கருணையில்யமனுங்கானிடைமடியுங்கணத்திலேகவலையுற்றனனால்
வருணனுங்கடல்கள்வறத்தல்கண்டழிந்தான்மதியுமம்மதிமுடித்தவனு
மிருணிறவரக்கன்றனுமிங்கிவரோடெங்ஙனம்பொருதுமென்றிளைத்தார். (௪௯)

சொன்மழைபொழிந்து‡நாடொறுந்தனதுதோள்வலிதுதிக்குநாவலர்க்குப்
பொன்மழைபொழியுங்கொங்கர்பூபதிதன்பொற்பதம்பொருந்தலர்போலக்
கன்மழைபொழியுங்காளமாமுகிலுங்கடவுளர்த்துரந்தவன்கரத்தில்
வின்மழைபொழியக்கற்களுந்துகளாய்மேனியும்வெளிறிமீண்டனவே. (௫௰)

* ஏகசாயகமுமிந்திரதனுவுமென்றும் பாடம்.

‡ பாகையுந்தனதுசூரமுந்துதிக்குமென்றும் பாடம்.

மாயவன்றனக்குநேயமைத்துனனுமைந்தனத்தந்தையைமதியான்
றூயவெங்கணையாலவனிடித்துவசந்துணித்தமர்தொடங்குமவ்வளவிற்
காயமெங்கணுநின்றொலியெழப்பார்த்துகாயமில்கடவுளக்கடவு
ளாயகன்றனக்குப்பரிவுடனவைதீர்நல்லுரைநவின்றதையன்றே. (௫௧)

தமரினுமினியதக்கன்முதலேதப்பினன்குருநிலஞ்சார்ந்தான்
குமரனுநும்மாலுய்ந்தனன்றாமக்கொடியனுங்கொண்டலுக்கவியா
னமர்களிலிருவர்நரனுநாரணனுநமக்குமிங்கிவர்சிறிதிளையா
ரமரினையொழிமினமரினையொழிமினமாருமமரர்நாதனுமே. (௫௨)

என்றுகொண்டுரைத்தமொழிசெவிப்பட்டவெல்லையினிரவிமுன்னிருள்போற்
றூன்றுதன்சேனைச்சுரகணஞ்சூழச்சுரபதிதுறக்கமதடைந்தான்
வென்றுவெங்களங்கொண்டருச்சுனன்றனதுவெற்றிகொள்சங்கமுங்குறித்தா
னன்றுசெந்திருமாலருச்சுனன்பொருதவாண்மைகண்டதிசயித்தனனே. (௫௩)

வடமதுரையினுந்தென்மதுரையினுமதிகுலநிருபர்கன்னியரைக்
கடிமணம்புரிந்தோன்வின்மையின்வன்மைகண்ணுறக்கண்டவானவரும்
புடவியிலொருவரொடுமினிப்பூசல்பொரேனெனப்போனவாசவனு
முடிசடைமவுலிநாரதன்முதலாமுனிவருமுடிவறப்புகழ்ந்தார். (௫௪)

மாசுணத்தரசன்மந்திரமமைத்தவனத்திடையிருந்தமாமயனை
யாசுசுக்கணிசென்றடர்த்தலும்வெருவியருச்சுனனுவபயமென்றரற்றத்
தேசுடைத்திகிரிச்செங்கண்மால்கருணைசெய்தனன்றீவினையுறினும்
பேசுதற்கரியபெரியவர்நினைக்கின்யார்கொலோபிழைத்திடாதவரே. (௫௫)

அழைத்தடல்விசயன்றனைத்துணைசெய்கென்றுறுபத்தியோசனையாகித்
தழைத்தவவ்வனத்தைக்கனத்தைவெங்கண்டுதழலவனார்ந்திடுகாலைப்
பிழைத்தவர்மயனுந்தக்ககன்மகவும்பெருந்தவனொருவன்முன்கருப்ப
மிழைத்தநுண்சிறகர்க்கருநிறக்குரீஇயினினங்களுமன்றிவேறிலரால் (௫௬)

என்பிறகல்வதீரெழுபுவனமெம்பிரானருந்தியதென்னத்
தன்பசிதணியக்காண்டவவனத்திற்சராசரமுள்ளவையனைத்தும்
வன்புடனருந்தியுதரமுங்குளிர்ந்தான்வன்னிதன்வடிவமுங்குளிர்ந்தா
னன்புடையிருவர்க்காசியும்புகன்றனசைந்துபோய்த்துறக்கமுமடைந்தான். (௫௭)

அமரரைமுதுகுகண்டகாவலருமவரவராண்மைகளுரைசெய்
தமரிலன்றெடுத்தபல்பெருங்கொடியாலங்கரித்தமைத்ததந்தேர்மேற்
றமருடன்றுணைவர்நால்வருநகரச்சனங்களுமகிழ்ந்தெதிர்கொள்ளத்
தமரமும்முரசுமுழங்கவெண்சங்கந்தழங்கவந்தணிநகர்சார்ந்தார். (௫௮)

காண்டவதகனச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் ௭௧௮.

## ஆதிபருவ முற்றுப்பெற்றது.

இரண்டாவது

# சபாபருவம்.



## இராசசூயச்சருக்கம்.



பாண்டவர்கள்புரிந்ததவப்பயனாகியவதரித்துப்பகைத்துமேன்மேன்
மூண்டவினைமுழுவதுவுமுனைதோறுமுரண்முருக்கிமுகில்புகாமற்
காண்டவமுங்கனல்வயிற்றுக்கனறணியநுகருவித்துக்காக்குமாறே
பூண்டருளெம்பெருமானைப்போற்றுவாரெழுபிறப்புமாற்றுவாரே. (௧)

வியனும்பர்பலகணமுஞ்சுரபதியுஞ்சென்றெழில்கொள்விசும்பின்மேவ
நயனங்கண்முதலானவைம்புலனுமனமும்போனகரியெய்திப்
பயன்மிஞ்சுதொழிலினராய்ப்பாண்டவருந்திருமாலும்பயிலும்வேலை
மயனென்பான்வாய்புதைத்துவளப்படவந்தொருமாற்றம்வழங்கினனே. (௨)

உம்மாலின்றருவினையேனுயிர்பிழைத்தேனீர்தந்தவுயிர்க்குவேறோர்
கைம்மாறுவேறில்லைக்குருகுலம்போலெக்குலமுங்காக்கிற்பீர்
தெம்மாறவுலகாளுஞ்செங்கோன்மைக்குருபதிக்குச்சிற்பம்வல்லோ
ரம்மாவென்றதிசயிப்பவரியமணிமண்டபமொன்றமைக்கின்றேனே. (௩)

மேனாளிவ்வுலகாண்டவிடபருவனசுரகுலவேந்தர்வேந்தன்
றானாண்மையுடன்பெருதுதரியலரைத்திறைகொணர்ந்ததாராபந்தி
போனாலுமொளிவீசும்பலமணிகள்விந்துவெனும்பொய்கைதன்னி
லானாமற்கிடப்பனவுண்டவையிதற்கேயுபதானமாகுமென்றான். (௪)

என்பதன்முன்முப்பதின்மேலிரட்டிகொணூறுபிரவரெடுத்தபாரம்
வன்புடனேதரித்துவரையசைந்தாலுமசையாதவயிரத்தோளா
ரன்புமிகும்விழிக்கருணையறன்புதல்வனேவலினாலசுரத்தச்சன்
றன்பணியீதெனப்பணிப்பவொருநொடியிற்கொடுவந்தார்தளர்விலாதார். (௫)

மீதடுக்கிப்பசும்பொன்னாற்சுவர்செய்துமாகதத்தூண்வீதிபோக்கி
யோதிடத்திற்சுருங்காமற்செழுந்துகிருத்திரம்பரப்பியுலகோரேழு
மாதிடத்தான்வைகுதற்குவாய்க்குமதோவிதுவென்னவாம்பில்கேள்விச்
சோதிடத்தோர்நாளுரைப்பச்சுதன்மையினுழுதன்மைபெறத்தொடங்கினனே. (௬)

மனத்தாலுந்திருத்தகுநூல்வரம்பாலுமுரம்பயிறோள்வலியினாலு
மினத்தாலுந்தெரிந்துதனதெண்ணியவெண்ணினுக்கேற்பவெண்ணில்கோடி
தினத்தாலுஞ்செயற்கரியசெழுமணிமண்டபமீரேழ்திங்கட்செய்தான்
றனத்தான்மிஞ்சியதருமன்றம்பியர்க்குத்தண்டுடன்வெண்சங்குமீந்தான். (௭)

அத்தபதிதன்குறிப்பாலமைத்தபெருமண்டபத்தினளவுநீளம்
வித்தாரமோடுயர்ச்சியெனும்வனப்பனைத்துங்கண்டோர்கள்வியந்து கூறக்
கொத்தலர்தார்மணிமுரசக்கொடியுயர்த்தோன்கனற்பிறந்தகொடியுந்தானு
மெத்தமருமனமகிழக்குடிபுகுந்தானிறைஞ்சலருக்கிடியேறன்னான். (அ)

தம்பியர்களல்வருடன்றண்டுழாய்முடியோனுந்தானுமேனை
யம்புவிமன்னருமுனிவரனைவருஞ்சூழ்தரவிருந்தவமயந்தன்னிற்
றும்புருநாரதனென்னுமிருவரினுநாரதனுந்தோன்றலோன்றப்
பைம்பொன்மலர்தூயெதிர்போய்ப்பணிந்திறைஞ்சியென்செய்தான்பாண்டுமைந்தன். (கூ

ஏற்றினானாசனத்திற்றனித்தனியேயுபசாரம்யாவுந்தந்து
மாற்றினான்வழியிளைப்புமலரயன்போலிருந்தோனைமகிழ்ச்சிகூர்ந்து
போற்றினானீவரயான்புரிதவம்யாதெனப்புகழ்ந்தான்பொதியிற்றென்றற்
காற்றினாலரும்புநறுஞ்சூதம்போற்புளகரும்புங்காயத்தானே. (க0)

யான்புரிந்ததவமுலகில்பார்புரிந்தாரவனிபரிவிசையின்வீணைத்
தேன்புரிந்ததெள்ளமுதாலமுதுண்டோர்செவியிரதந்தெவிட்டுவிப்பாய்
மான்புரிந்ததிருக்கரத்துமதியிருந்தநதிவேணிமங்கைபாகன்
றான்புரிந்ததிருக்கூத்துக்கிசையமகிழ்ந்திசைபாடுந்தத்வஞானி (கக)

எனத்தருமன்மகன்கூறவிளையோர்கடனித்தனிநின்றிறைஞ்சநீலக்
கனத்தனையதிருமேனிக்கண்ணனுந்தன்மனங்களிப்பக்கண்ணினோக்கி
மனத்தினமுக்கணுநாதமாதவத்தோனுந்திட்டிராற்கிம்மாடகூடந்
தனத்தின்மிகுகுபேரனெழிலளகையினுமிலதென்றுசாற்றினானே. (கஉ)

மண்மிசைநால்விரனிற்குமணிமகுடத்தணியரங்கின்மண்ணுளோரும்
விண்மிசைவாணருநெருங்கவிராயவருமறைச்சடங்கினிராயசூயம்
கண்மிசைமாமணிநிகரென்கான்முளைபைப்புரிவியெனக்காலனூரிற்
பண்மிசைவீணையின்கிழவன்பாண்டுமொழிந்தனனெனவும்பகர்வுற்றானே. (கங)

தந்தைமொழிதனயருக்குச்சாற்றிமுனிபகன்றதற்பின்றம்பியான
விந்திரனுந்தன்மனத்திலெண்ணமுமீண்டாகுமெனவெண்ணிக்கூறு
மந்தரமேதமகமியற்றுதற்கென்றவனிபரையடையவாரிப்
பந்தமுறுபெருஞ்சிறையிற்படைகெழுவேற்சராசந்தன்படுத்தினானே. (கச)

சதகோடிதனக்கொளித்துத்தடங்கடலிற்புகுங்கிரிபோற்றளர்ச்சிகூர்ந்து
சதகோடிமுடிவேந்தர்தங்களுயிர்கொண்டொளித்தார்சமருக்காற்றார்
சதகோடிசுரும்பரற்றுந்தாராயச்சராசந்தன்றன்னையின்னே
சதகோடியிபமதுகைச்சதாகதிசெய்தனையொழியச்சாதிப்பார்யார். (கரு)

ஆரமணங்கமழசலமனேகமுளவானாலுமலையின்கூல
வாரிதியைமதிப்பதற்குவல்லதுமந்தரமன்றிமற்றுமுண்டே
போர்விசயமிவனுடன்முன்பொருதோரில்யார்பெற்றார்போதுமிப்போ
தாரணமாமுனிவராரெனப்புகன்றானறன்மகனுமஃதேயென்றான். (கசு)

அரிவிரசுந்துழாய்மகுடத்தரியுமிரண்டரிகளருளாண்மையோரு
மெரிவிரசுநெடுங்கானமிருதினத்தில்விரைந்தேகியெண்ணில்காவற்
கிரிவிரசநகரெய்திக்கிரித்தடந்தோண்மகதேசன்கிளருங்கோயிற்
கரிவிரசுங்கோபுரப்பொற்றிருவாயில்புகுந்துரைத்தார்காவலோர்க்கே. (௧௭)

வேறு.

வந்தனர்முனிவர்மூவரென்றுரைமின்மன்னவற்கெனவவருரைப்பத்
தந்திடுமெனவும்புகுந்துநீடம்பொற்றவிசிருந்தாசியுஞ்சாற்றக்
கந்தடர்குவவுத்தோளில்விற்குறியுங்காட்சியுங்கருத்துறநோக்கி
யந்தணரல்லீர்யாவர்நீரென்றானவ்வுரைக்கமலனுமுரைப்பான். (௧௮)

யான்விதுகுலத்தில்யாதவனிவரோகுருகுலத்தலைவனுக்கிளையோர்
மான்மதமலர்த்தார்மன்னகேளொருவன்வாயுவின்மதலைமற்றொருவன்
வான்மதிலுடுத்தபொன்னகர்க்கிறைவன்மதலைநின்வளநகர்காண்பான்
கான்மதக்களிற்றாய்முனிவராய்வந்தோங்காவலர்க்கணுகொணாமையினால். (௧௯)

என்றுகொண்டுண்மையாதவனுரைப்பவிருபுயவலியினெண்டிசையுஞ்
சென்றுகொண்டடர்த்துத்தெவ்வர்தம்முயிருந்திறைகளுமுறைமுறைகவர்ந்து
வென்றுகொண்டணிந்தவாகையோன்றனவுமிக்கனவெமதிண்மேருக்
குன்றுகொண்டமைந்ததோள்களெம்முடனீர்குறித்தமர்புரியுமென்றுரையா. (௨௦)

நீயெனிலாண்டேசொன்பதிற்றிரட்டிநெடுஞ்சிறைக்*கலுழன்முன்னெறிக்கொ
ளீயெனவோடிமதுரைவிட்டாழியெயிற்றுவாரகைப்பதிபுகுந்தாய்
நோயெனவசுரர்க்குடைந்துபொற்காவினுழைதருநூறுமாமகத்தோன்
சேயெனினிளையன்வீமனைவிசும்பிற்சேர்த்துவனெனவிழிசிவவா. (௨௧)

மந்திரச்சுற்றத்தவர்களையழைத்துமதலையைமகிதலந்தனக்கோ
ரிந்திரனெனவேமணிமுடிபுனைந்தன்றியாவருந்தேவரும்வியப்ப
மந்தரகிரியும்விந்தமுந்தம்மின்மலைவபோன்மல்லமர்மலைவான்
சந்தணிதடந்தோள்கொட்டியார்த்தெழுந்தான்றழலுமிழ்விழிச்சராசந்தன். (௨௨)

யாளிவெம்பதாகைவீமனுமவனும்யாளியும்யாளியுமெனவே
தாளினுஞ்சமரமண்டலங்களினுந்தாழ்விறற்புடக்கைமுட்டியினுந்
தோளினுஞ்சென்னித்தலத்தினு†மற்போர்சொன்னபோர்விதமெலாந்தொடங்கி
நாளினுந்திங்களொன்றினிற்பாதிநள்ளிரவினுஞ்சமர்நடத்தி. (௨௩)

பூதலநடுங்கவெழுகிரிநடுங்கப்போதகத்தொடுதிசைநடுங்க
மீதலநடுங்கக்கண்டகண்டவர்தமெய்களுமெய்யுறநடுங்கப்
பாதலநடுங்கவிருவர்மாமனமும்பறையறைந்தயர்வுடனடுங்கச்
சாதலங்கொழிந்தவிடரெலாமுழந்துதங்களிற்றணித்தணிதளர்ந்தார். (௨௪)

---

* கலுழன்முன்னேறி, யேயெனவோடிமதுரைவிட்டாழியெற்றுநீர்த்துவரையிலிறுத்தாய் என்றும் பாடம்.

† மற்றுஞ்சொன்னபோர் என்றும் பாடம்.

கொல்லவென்றெண்ணுமிருவருமொருவரொருவரைக்கொல்லொணுமையினுன்
மல்லமர்வலியுமிருபுயவலியுமிழந்துமாமகிதலத்துறலும்
கல்லடர்செம்பொன்வரையின்முக்குவடுகாலுடன்பறித்தகால்கண்டு
நல்லதன்மைந்தற்குணர்வுமீண்டெய்தல்த்துடனல்கியதன்றே. (உரு)

மீளவுமிருகனுவசனுற்றெழுந்துவிதலையின்விழுந்தமேவலனைத்
தாளொடுதாள்கள்வலியுறத்தன்பொற்றடக்கையான்முடக்கறப்பிடித்து
வாளுகிர்வாளரற்கனகனைப்பிளந்தவண்டுழாய்மணங்கமழ்மௌலிக்
கோளரியெனவேபிளந்தெறிந்தண்டகோளமும்பிளக்கநின்ருர்த்தான். (உசு)

பிளந்தெறிபிளவுமீளவும்பொருந்திப்பிளிறுமாமதகரிநிகர்ப்பக்
கிளர்ந்துவெஞ்சமரந்தொடங்கலுந்தனதுகேதனக்கேசரியனையான்
வளர்ந்ததிண்புயத்தின்வலியினுன்முன்னைமல்லமரெழுமடங்காக
வுளைந்திடமலைந்துவீழுமாறுதைத்தானேரிரண்டானதாலுடலம். (உஎ)

சீறியக்குரிசில்கீண்டபேருடலைச்சென்னிதாள்செவ்வையினிடமன்
மாறியிட்டிடுகென்ருருயிர்த்துணையாய்வந்தமாமரகதவடிவோன்
கூறியிட்டிடாமற்குறிப்பினுலுரைப்பக்குறிப்பையக்குறிப்பினுற்குறித்து
வேறிடப்புவியின்மிசையெறிந்தனனல்வீமன்வல்லபத்தை*யாருரைப்பார். (உஅ)

வேறு.

சந்தச்சிகரச்சந்தணியுந்தடந்தோளாண்மைச்சராசந்தன்
முந்தப்பொருதமல்லமரின்முரணேடழிந்துமுடிந்ததற்பி
னிந்தப்புதுமைதனைவியவாவேத்தாவிறைஞ்சாயதுகுலமா
மைந்தற்கொருவாசகமுரைப்பான்மணித்தார்ப்புயவாசவன்மைந்தன். (உகூ)

இன்றூரமரினிவன்கையாலிறந்தோனுடலமொன்றியது
மொன்றுயிரண்டுபட்டதும்யாமுணரும்படிநீயுரைத்தருள்வாய்
குன்றாலன்றுமழைதடுத்தகொற்றக்கவிகைக்கோபாலா
வென்றுனென்றபொழுதவனுமிறந்தோன்சரிதமினிதுரைப்பான். (ங0)

வானோர்பகைவர்களிலொருவன்மகதகுலத்துமாரதப்பே
ரானேன்வயிற்றிலவதரித்தானவன்காணிந்தவடல்வேந்தன்
மீனேதிருஞ்மேதினியின்வேந்தர்குலத்தைவேரோடுந்
தானேராழிதனிநடத்தித்தடிந்தானணிந்தசமர்தோறும். (ஙக)

எண்ணற்கரியமுடிவேந்தரெண்ணுயிரவர்பசுவாக
மண்ணித்தனையுந்தன்குடைக்கீழ்வைக்கும்படிமாமகப்புரிவான்
கண்ணிச்சிறையினிடைவைத்தான்கண்ணுயிரத்தோன்முதலாக
விண்ணிற்பயிலுந்தேவர்களுமிவன்போர்செல்லவொருவுவரால். (ஙஉ)

இவனைப்பயந்தோன்மகவொன்றுமின்றிச்சண்டகௌசிகப்பேர்த்
தவனைப்பணிந்துவரம்வேண்டத்தவனுந்தான்வாழ்தடஞ்சூதத்
தவனிக்கரியதீங்கனியொன்றளித்தானளித்தவக்கனியை
நவநித்திலவாணகையிருவரில்வாழ்பவர்க்குநல்கினனுல். (ஙங)

* யார்வியவார் என்றும் பாடம்.

காசித்தலைவன்கன்னியர்தங்கண்போல்வடுமுற்றியகனியை
யாசிற்பிளந்துதங்கொழுநனருளாலமுதொத்தினிதருந்த
மாசற்றிலங்குமகவிருவர்வயினும்பகிர்ந்துவளர்ந்ததற்பின்
பாசத்துடனேயோரொருவர்பயந்தார்வடிவிற்பப்பாதி. (௩௪)

ஒருவனிருவருதரத்துமுடனுற்பவித்தவுற்பாதம்
வெருவிமகதகுலவேந்தன்வியன்மாநகரின்புறத்தெறியப்
புரிசைவாயிற்கண்டவற்றைப்புசிப்பாளெடுத்துப்பொருத்தினளாற்
றருமமுணராமனத்தியொருதசைவாயரக்கிசரையென்பாள். (௩௫)

தன்னாலொன்றுபடுதலுமத்தனயன்றன்னைச்சராசந்த
னென்றுவழைத்தியெனமகதத்திறைவற்களித்தங்கேகினளா
லந்நாண்முதலப்பெயர்படைத்தானதனாலிவ்வாறுனதெனச்
சொன்னதுகேட்டுளமகிழ்ந்தார்சுரர்கோமகனுந்துணைவனுமே. (௩௬)

வினைமுற்றியபின்மூவருநல்வினையேபுரிபோர்மன்னவரை
யினைதற்சிறைவிட்டிகன்மல்லாவிறந்தோன்மகனையெழின்மகுடம்
புனைவித்தந்தநகரீசன்பொற்றாள்வணங்கவவனோடுந்
துணைபொற்றடந்தேரூர்ந்தறத்தின்சுதன்வந்தெதிர்கொண்டிடமீண்டார். (௩௭)

கருதற்கரியநிதியனைத்துங்கவர்ந்தோர்காட்டக்கண்டுவந்த
முரசக்கொடியோன்முன்வேதமொழிந்தோன்முதலாமுனிவரரு
மரசக்குழாமுமீண்டியபேரவையிற்கடவுளரசின்ற
வரிவிற்குமரன்மாதிரங்கள்வெல்வானேகும்வகையுரைத்தான். (௩௮)

சுருதிப்படியேவராரயசூயப்பெயர்மாமகந்தொடங்கக்
கருதிக்குணபாலெம்முன்னும்வடபால்பானுங்காற்றிசைக்க
நிருதித்திசைக்குநடுவெம்பியிவனுஞ்சிலைவேணிரைமணித்தேர்
வருதிக்கினிலிவ்விளையோனுமலைவானெழுகவருகவென்று. (௩௯)

எண்ணுஞ்சேனையுடன்விரைவினெழுந்தாரிவரீரிருவோரும்
விண்ணுங்கடவுளாலயமுமுதலாவுள்ளமேலுலகு
மண்ணும்புயங்கதலமுதலாமற்றெவ்வுலகுமாதிரமுந்
துண்ணென்றிட்டவைந்துவகைப்பெரும்பேரியத்தின்றுவனியினால். (௪0)

நானங்கமழுஞ்செங்கழுநீர்நறுந்தார்வேந்தர்நால்வரையு
மானம்பெறுதிண்சேனையுடன்வளர்மாதிரத்துவகுத்தேவி
மீனங்கமடமேனநரவரியாய்நாராய்மெய்ஞ்ஞான
வானந்தமுமாகியநாதனன்றேதுவாரபதியடைந்தான் (௪௧)

வேறு.

வான்மருச்சுதனுமீரிரண்டுகடல்வயவருதினியின்வர்க்கமு
நான்மருப்பொருகைமும்மதத்துவயநாகமேவிவளர்திசையின்வாழ்
கோன்மதிக்கநெடுவங்கமுந்திகழ்கலிங்கமுந்தெறுகுலிங்கமுந்
தான்மலைத்துமுனைமுரண்மிகுத்துவருதரிபலரைமுனைதள்ளியே. (௪௨)

மற்றுமற்றுமவண்மருவுபாடைகளின்மன்குலத்தொடுதடிந்துமே
லுற்றவுற்றவரையானம்பாவையுமொடிந்திடிந்துபொடிபுண்ணவே
யிற்றவிற்றபலதலைகளாலலையெறிந்துமோதிவருகுருதியின்
முற்றமுற்றவரையினமும்வார்குருதிநதியுமாயெழமுருக்கியே. (சங)

அந்தவந்தவவனிபரெலாமபயமபயமென்றடிவணங்கவே
வந்தவந்தநிதியாவைபுஞ்சிகரவடமகீதரமெனக்குவித்
தெந்தவெந்தநரபாலர்பாரினிகரென்னவென்னவவரிறையெனத்
தந்ததந்தவிததந்திமீதுகொடுதங்கண்மாநகரிசாரவே. (சச)

விசையவெம்பகழிவிசயன்வெவ்விசையொடிருநிதிக்கிழவன்மேவிவாழ்
திசையடைந்துகதிர்வியென்னும்வகைசீறிமாறுபொருதெவ்வரா
நிசையழிந்துவெளியாகநால்வகைநெருங்குசேனையொடுநிலனுநின்
றசையவன்பினுடனேகினனெழுபராகமெண்டிசையடைக்கவே. (சரு)

பாரதப்பெயர்கொள்வருடமாதிபலபாரினுள்ளநரபாலரைப்
பேரறக்குலமும்வேரறப்பொருதுபின்னுகன்கிரியுமிமையமுஞ்
சேரமொத்தியவனுள்ளகந்தருவர்கின்னரேசர்பலர்திறையிடப்
போரடர்த்துகமுடிந்தகாலையெழுபுணரியென்னநனிபொங்கியே. (சசா)

விந்தமால்வரையுமேமகூடமுடனிடதநாமநெடுவெற்புமா
மந்தராசலம்விசாலமாலியமணித்தடஞ்சிகரமலையுடன்
கந்தமாதனமுநீலசைலமுமெனப்புகன்றபலகிரியில்வா
ழுந்தராதிபர்நடுங்கமேருகிரியப்புறத்துநனியணுகியே. (சஎ)

அத்திசைக்கணரசானவுத்தரகுருக்கண்மேன்மையையடக்கிமே
லெத்திசைக்குமிவனன்றிவீரரிலரென்றுதேவருமியம்பவே
மெத்திசைப்பணிலவெழச்சமரவிசயகம்பமுநிறுத்தினன்
முத்திசைக்குமதிவெண்குடைக்கடவுண்முதல்வனைவரிபுதல்வனே. (சஅ)

கரிகள்கோடியிரதங்கள்கோடிபவனத்தினுங்கடுகுகவனவெம்
பரிகள்கோடிநவகோடிமாமணிகள்பல்வகைப்படுபசும்பொனின்
கிரிகள்கோடியெனவேகவர்ந்தெழுகிரிப்புறஞ்செறுகிரீடிவந்
தரிகள்கோடிகிளர்சோலைசூழ்தமதுசெல்வமாநகரியணுகினன். (சகூ)

வடாதுசென்றவரிசிலைமகீபனினுமெழுமடங்குமிகுவலியுடன்
குடாதுசென்றிளையவீரமாநகுலனகுலனென்றுகுலைகுலையவே
யடாதமன்னரையடர்த்தடுத்தவரையஞ்சலென்றமருடற்றினு
னிடாதவன்றனமெனக்கரந்தனர்களேனைமன்னவர்கள்யாருமே. (ருo)

மாளவத்தினொடுகர்ப்படம்பொரவகுத்தெதிர்ந்ததிரிகர்த்தமுந்
தூளவன்படையிருட்பிழம்பெழவருக்கனிற்பெரிதுசுடரெழுத்
தாளவண்கதியுடைத்துரங்கரதகசபதாதியொடுதகுசின
மூளவந்தெதிர்மலைந்தமன்னவரைமுதுகுகண்டமர்முருக்கியே. (ருக)

கூற்றிசைக்குமெனவுடன்வருங்கடிபகொடியசேனையொடிகுமானுங்
காற்றிசைக்குமெனவருணனுந்தனிகருக்குலைந்துளம்வெருக்கொளத்
தோற்றிசைக்கும்வசைகொண்டிமற்றவர்கள்சொரிதருந்திறைகள்வாரியம்
மேற்றிசைக்குமொருமேருவுண்டெனவுயர்த்தினனிகரில்வீரனே. (நிஉ)

அளவிலாததிறையோடிமத்திசையுதித்ததோரிரவியாமெனத்
துளவமாலைகமழ்மௌலிநாதனுறைதுவரையெய்தியுயர்சுருதியின்
கிளவியான்முனிவர்தொழுபதந்தொழுதுகேசரித்துவசவீரனுக்
கிளவன்மீளவுமரிப்பிரத்தகரெய்திமன்னனையிறைஞ்சினன். (நிஙு)

குன்றிசைத்தகசரததுரங்கமபதாதிசூழவிறைகொள்ளவு
நின்றிசைத்துவருபலபணைக்குலமிரைக்கவுங்கொடிநிரைக்கவுந்
துன்றிசைப்பனிநிலாவெழக்கவிகைபெண்ணிலாதனதுலங்கவுந்
தென்றிசைப்படர்தன்மேயினனதுலநிருபனுக்கிளையசெம்மலே. (நிச)

அத்திகைக்கணிருகடலினுக்குநடுவானமண்டலமனைத்தினு
மத்திகைப்புரவிமண்டலேசருமவயங்குமாமதுடமகிபநும்
புத்திகைக்கவவர்பொருதழிந்துதிறைபொழியவாரிவளர்புயகிரிப்
பித்திகைத்தொடையனீலனென்னுநரபதிபெரும்பதிபுகுந்தபின். (நிரு)

அந்தமாநகரிகாவலானசுடரங்கிசீறியெதிர்பொங்கிமேல்
வந்தவீரன்மிகுசேனையாவையுமயங்கவெம்புகையியங்கவே
கந்துசீறுகளியானைமன்னனதுகண்டிவெங்கனலவிப்பதோ
ரிந்துமாமுகசரங்களேழுநெடுநாவினனழியவேவினன் (நிசு)

அஞ்சியந்தவழலோனுமப்பொழுதொராந்தணாளன்வடிவாகியே
வஞ்சியங்தொடையன்மன்னன்முன்புவரவந்தமாமுனியைமன்னனீ
யெஞ்சிநின்றுசுடுகின்றகாரணமிதென்னையென்னலுமியம்பினன்
மஞ்சிவர்ந்தபுகைவானவன்றனதுவரவுநீலன்வழிபாடுமே. (நிஎ)

நீலனிட்டதிறையானகோலமணிநீலமாதிநவநிதியமுந்
சாலமிக்கதமனியமும்வெளவியுயர்சாரல்விந்தசயிலப்புறத்
தேலநெட்டடவிமுறியமோதிவெளியாகவேழ்கடலையுங்கடைக்
காலமுற்றியெழுகாலெனுப்படிகலக்கினனெழுகலிங்கமும். (நிஅ)

சென்னிநாடுகுடகொங்கநாடுதிறைகொண்டுதென்னனுறைசெந்தமிழ்க்
கன்னிநாடுறவுடன்புகுந்துமணிநித்திலக்குவைகள்கைக்கொளா
மன்னிநாடுகடல்கொண்டகைம்முனிவன்வைகுமாமலயநண்ணினன்
மின்னிநாடுறவிளங்குவெஞ்சமரவீரவாகைபெறுவேலினன். (நிகூ)

செகத்தியங்குதனியாழியைவரினுமிளையகாளையொடுசேனையங்
நகத்தியைந்தபொழுதவனிபவ்வமுழுநவ்வெனத்தலைநடுங்கவே
மிகத்தியங்கிநெடுமேருவெற்பின்மிசைமேவுவானவர்கண்மீளவு
மகத்தியன்றனைவடக்கிருத்தும்வகையுன்னினார்கள்சமமாகவே (கூo)

கன்னிலங்கொலெனவலியமெய்பெறுகடோற்கசன்றனையழைத்துநீ
தென்னிலங்கைதிறைகொண்டுமீள்கவெனவிளையதாதையுரைசெய்யவே
மின்னிலங்கணியெயிற்றரக்கர்குலவீரனாகியபீடணன்
றன்னிலங்கொதிகொளப்புகுந்தொருசழக்கறச்சமருழக்கினான். (சுக)

யாரையோவுரைசெய்நீயெனத்திறனிசாசராதிபனியம்பலும்
பாரையேழினையுமுழுதுடைக்குருகுலத்துமேன்மைபெறுபாண்டுவின்
போன்யான்விறலிடிம்பன்மாமருகனெனவரக்கர்பெருமான்மனத்
தூருமாதரவினோடழைத்தவனையுவகையோடுமிகவுறவுரா. (சுஉ)

நீயிலங்கையிடைவந்ததென்கொலெனநீதியானுயருதிட்டிரன்
ராயசூயமெனுநாமமாமகமுயற்றுவான்விறலொடெண்ணினா
னேயமானவிளையோர்களால்வருநெடுந்திசாமுகமடங்கவென்
றேயமாதிதிரட்டலுற்றனர்கள்யானுநின்னகரியெய்தினேன். (சுங)

அற்பினைத்துலகுமெண்ணவேயறனளித்தமன்னனழல்வேள்வியின்
கற்பினைக்குதவிதருகெனப்பழையகால்விழுத்தநெடுவேலைவீழ்
வெற்பினைப்புகலவந்தவீடணனளித்தநீடியர்வியன்றலைப்
பொற்பினைத்தருவொரேழுமேழுமுடனேகவர்ந்துகழல்போற்றியே. (சுச)

மீளவந்திளையதாதைபாதமுடிமீதுவைத்தொளிவிளங்குபொற்
பாளையம்பனைகள்பற்பராகமுதலானபன்மணிபரப்பினா
னாளிமண்டிலிமையோரொடொத்தபெருஞானபண்டிதனுநல்லறன்
காளைபைங்கழல்வணங்கினன்றனதுபதிபுகுந்துநனிகடுகியே. (சுரு)

வேறு.

ஆல்வரும்புரவித்திண்டோறன்மகனருசரான
நாலவருஞ்சென்றுதிக்கோர்நாலிரண்டினுந்தன்செய்ப
கோல்வரும்படியேயாக்கிக்கொணர்ந்தனதிறைகள்கண்டான்
மேல்வருமிராயசூயவேள்விநாம்விளம்பக்கேண்மோ. (சுசு)

இரணியனிரணியாக்கனென்றதானவரைவென்றுங்
கரணியவிலங்கைமூதூரரக்கனையருசனோடு
மரணமுற்றிடமுன்சீறிமாமனைமலைந்துமற்றை
முரணியபகையுந்தீர்ப்பான்மூர்த்தியாய்ப்பிறந்துளோனை. (சுஎ)

விரைவினிற்கொணர்தியென்றுவீணைநாரதனைப்போக்கித்
தரணிபர்க்கெல்லாமோலைதனித்தனிதிற்போக்கி
வரனுடைச்சுருதிநான்கும்வகுத்தவனாதியான
விருபிறப்பாளர்யார்க்குமுலூகனையேவினானே. (சுஅ)

தானவர்தச்சன்வந்துசமைத்ததோர்சிற்பந்தன்னை
வானவர்தச்சன்கண்டுமகிழுமண்டபத்தின்வேந்த
ரானவரெவருமீண்டியந்தணரெவருமீண்டி
மானவரெவருமீண்டிவரம்பறநெருங்கினாரே. (சுகூ)

வரவரவந்தவந்தமுனிவரைவணங்கியாசி
திமுறப்பெற்றுவேந்தர்சிறப்பெலாந்திருக்கணோக்கி
நரபதிதானுமற்றைநால்வருநீலமேனி
யிரவியையனையான்றன்னையுவகையோடெதிர்கொண்டாரே. (எO)

கரகதக்களிறுபோலுங்கனிட்டரீரிருவரோடுந்
துரகதத்தடந்தேர்விட்டுத்தூய்மணங்கமழும்பொற்றோண்
மரகதக்கிரியன்னானைவணங்கினர்தழுவிவெள்ளைத்
திருநிறத்தவன்றன்செம்பொற்றிருப்பதமிறைஞ்சினாரே. (எக)

இருபுடைமருங்குந்திக்கோரெட்டையும்வென்றோர்போத
நிருபதிதேரிற்போதநேமியான்களிற்றிற்போதச்
சுரர்பெருந்தச்சன்செய்ததொன்னகர்வீதிபுக்கார்
வருதிருப்பவனிகேட்டார்வளநகர்மாதரெல்லாம். (எஉ)

ஈரடிகளினுஞ்செம்பஞ்செழுதுவாரெழுதுமுன்ன
ரோரடியெழுதிமின்போலொல்கிவந்திறைஞ்சுவாரு
மாரமுதனையகண்ணினஞ்சனமெழுதுகின்ற
சீரியகோலுங்கையுந்திருத்தகத்தோன்றுவாரும். (எங)

விரிதுகில்வேறுடாமல்விரைகமழ்தூநீராடிச்
சுரிகுழன்மேகமாரிதுளித்திடவெதிர்கொள்வாருங்
கரதலமலரிற்சங்குங்கலாபமுஞ்சிலம்புமார்ப்பத்
தெருவெலாந்தாமேயாகிச்சீறடிசிவப்பிப்பாரும். (எச)

வார்குழைப்பற்பராகமணிவிளக்கேற்றுவாரு
நேரிழைமருங்குல்வாட்டுநிறைகுடம்பூரிப்பாருங்
காரிளங்கமுகும்பச்சைக்கதலியுநிரைத்துத்தோளாந்
தோரணநாட்டுவாருந்தூமலர்சிந்துவாரும். (எரு)

மாதர்களவர்க்குமுன்போய்வணங்குதற்குன்னிச்சிந்தை
யாதரவுடனேவந்துமாவணமறுகுறுமற்
றூதடர்கொங்கைபொற்றோள்சுரிகுழல்சுமக்கலாற்றுப்
பேதுறுமருங்குலோடும்பித்துறுபிடியன்னாரும். (எசு)

இவ்வகைகுழுக்கொண்டாங்கணெழுவகைப்பருவமாதர்
செவ்வியுமழகுந்தேசுஞ்செய்யபூந்திருவோடொப்பார்
மெய்வழிநின்றபோகமேகமேயனையான்றன்னை
மைவழிகண்ணினோக்கிமனனுறவணங்கினாரே. (எஎ)

வேறு.

மாடம்பயிலுமணித்தோரணவீதி
நீடஞ்சனக்கணெருங்கித்தடமாற
வாடம்பரக்கொண்டலன்னானையபாத
சூடங்கருதித்தொழுதார்சிலமாதர். (எஅ)

கங்கைதருபொற்கழலான்மணிமார்பிற்
கொங்கைமுகுளங்குழையும்படியாகச்
சங்கையறமெய்தழுவுதற்குத்தம்மினுந்தஞ்
செங்கைமலர்பதறச்சென்றார்சிலமாதர். (எகூ)

வண்டுமலர்கரும்பாம்வண்ணப்படையானைக்
கண்டனையகண்ணிறைந்தகாயாமலர்வண்ணன்
செண்டுதரித்தோன்றிருப்பவளத்தாரமுத
முண்டுமனத்தினுய்ந்தார்சிலமாதர். (அ0)

வஞ்சம்பயில்சகடவாளசுரன்மாளவிறற்
கஞ்சன்படவுதைத்தகாலானைக்கண்டுருகி
யஞ்சம்புமெய்யுருவவைம்புலனுஞ்சோகமுற
நெஞ்சந்தடுமாறநின்றார்சிலமாதர். (அக)

தங்கள்குலமுன்றிற்றலையாயமும்மதத்து
வெங்கண்மதமாமிசைவருவோன்மெய்ந்நோக்கி
யங்கண்மிளிரவநுப்புருவவின்முரியத்
திங்கணுதல்வேர்வோடநின்றார்சிலமாதர். (அஉ)

காலமுகிலுமலர்க்காயாவுமன்னதிருக்
கோலமுடையோன்நலவுமணிப்பூண்மார்பின்
மாலைநறுந்துளபமன்றலுக்குவாணயன
நீலவரிவண்டாகிநின்றார்சிலமாதர். (அங)

வேறு.

மங்கையர்பலருமிங்ஙன்மன்மதபாணநாண்கி
னிங்கிதவின்பமெய்தியின்னுயிரோடுநிற்பப்
பங்குறவந்தவந்தப்பாண்டவரைவரோடுங்
கொங்கவிழ்துளபத்தாரான்குந்திவாழ்கோயில்புக்கான். (அச)

கொற்றவரைவர்தம்மைக்குருகுலம்விளங்குமாறு
பெற்றவள்பாதம்போற்றிப்பிறப்பிறப்பறுக்கவல்லோன்
மற்றவள்வாழ்த்தவாழ்த்தமனமகிழ்ந்தழலின்வந்த
பொற்றொடிபணிவுமேனைப்பூவையர்பணிவுங்கொண்டான். (அரு)

அரசவைக்கணிசெய்சிங்கவாசனத்திருத்திவெற்றி
முரசுடைத்துவசவேந்தன்முகமலர்ந்திருந்தகாலை
விரைசெயப்புரவித்திண்டோர்வீமனைமுதலோரெங்கு
முரைசெலக்கவர்ந்தசெல்வங்காட்டிநின்றுரைசெய்தாரே. (அசு)

முன்னரமேதஞ்செய்வான்முடிச்சராசந்தனென்னுங்
கின்னரர்பாடுஞ்சீரான்கிளப்பருஞ்சிறையில்வைத்த
வந்நரபதிகளோடுமவன்மகன்மாகதேச
னெந்நரபதிகளுக்குமிரவியேயென்னவந்தான். (அஎ)

அரும்பனைக்கொடியோனுதியாவுயர்த்தவனீறுதும்
பொரும்படைச்சேனைவெள்ளப்பூருவின்குலத்துளோர்கள்
கரும்பனைத்தடக்கைவெங்கட்கரிமுதற்சேனையோடு
மிரும்பினைக்குழைக்குநெஞ்சர்யாவருமீண்டிமொய்த்தார். (அஅ)

இந்திரபுரிக்குமிந்தவிந்திரபுரிக்குந்தேவ
ரந்தாமறிவுறுமலதிசயித்துவகைகூரச்
செந்திருமடந்தைக்குள்ளசெல்வங்களனைத்துஞ்சேர
வந்ததுபோலும்வேள்விமாநகர்த்தோற்றமம்மா. (அகூ)

தோரணவீதிதோறுந்தூரியமுழக்கந்தன்னி
னாரணமுழக்கமிஞ்சவந்தணராகியுள்ளோர்
காரணமுணர்ந்தோர்வேள்விக்கனன்முகமாகத்தேவர்
பாரணம்பண்ணவிட்டபைம்பொன்வேதிகையிற்சேர்ந்தார். (கூ0)

சுடுமணற்கலுழனாகச்சுருதியின்படியேகோட்டி
நடுவுறத்திசைகணான்குநான்குவெள்ளேறுகோட்டி
வடிவுறச்சமைந்தசாலைமண்டபந்தன்னைநோக்கி
கடவுளர்க்கமைத்தபாகதலமெனக்கவினிற்றம்மா. (கூக)

வேறு.

திருந்தமெய்ஞ்ஞானமுந்தெளிந்ததெய்வத
வருந்தவமுனிவர்பேரவையின்மேன்மைபாற்
பெருந்தகைநாபியப்பெருமன்வாழ்வுபோன்
றிருந்ததுதுருபதிபாகசாலையே. (கூஉ)

யாதவகுலத்தினுக்கிறைவனாகிய
மாதவனிணையடிவணங்கிமற்றுள
பூதலத்தரசெலாம்பொருந்துபொற்பினா
லோதநீர்வண்ணன்வாழுலகுபோன்றதே. (கூங)

விதியினுமுயர்ந்ததொல்வியாதன்மேதினி
பதிகளாகியதிறற்பாண்டுமைந்தரை
மதியினிலொருபுடைவருகென்றன்பினாற்
றிதியுறச்சின்மொழிசெவியிற்செப்பினான். (கூச)

இங்கிதத்திந்திரரென்பர்யாவருஞ்
சங்கரன்விதியினாற்றரணிபாலராய்
வெங்கனற்றோன்றியமின்னையைவரு
மங்கலம்புவிமகள்வழக்கினெய்தினீர். (கூரு)

ஓரொருதலைவராயோரொராண்டுளங்
கூருவகையினெடுங்கொழுநராயினீ
ராரமுற்பிறந்தமானறத்தின்மைந்தற்குப்
போழல்வளர்த்திடும்பெற்றிபெற்றனள். (கூசா)

மைந்தர்நீர்நால்வருமகஞ்செய்வேந்தனே
தந்தையுந்தாயுமித்தருமவல்லியே
யிந்தவான்பிறப்பினுக்கிற்றைநாண்முதற்
குந்தியும்பாண்டுவுமென்றுகொண்மினே. (கூஎ)

கனல்வருமின்னையுங்கணவன்றன்னையு
முனிவரன்மொழிந்திடமுகூர்த்தமானபின்
புனைமுடிதிருக்குழற்புழுகுநானமு
மிணிமையிற்சாத்தினரெண்ணின்மாதரே. (கூஅ)

கதியொடுபிறைதவழ்கடுக்கைக்காட்டுநன்
னதிதருபுனல்கொடுநானமாட்டினர்
விதிமுறையறிந்தவர்*வேள்விக்கேற்பன
பதியுடனணிந்தனர்பாவைதன்னையும். (கூகூ)

வேறு.

மாலைமுன்வணங்கிக்கங்கைமைந்தனைவணங்கியாக
சாலையைநோக்கும்வேந்தன்றம்பியைநோக்கிமுந்நீர்
வேலையின்மணவிற்சானுமிருசனமருந்தத்தேவ
ராலயத்தமுதமன்னவடிசினீயளித்தியென்றான். (கoo)

நாவியின்மதமுஞ்சாந்துநறும்பனிநீருந்தாரும்
வாவியிற்காவிலுள்ளமலர்களுமற்றும்யாவு
மேவியவரிவில்லாண்மைவிசயனைநல்குகென்றான்
றாவிலைபளிதமேனைத்துணைவரைவழங்கச்சொன்னான். (கoக)

தானமுந்தியாகந்தானுந்தபனன்மாமதலையான
மானவன்கொடுக்கவென்றான்வரம்பிலாநிதிகள்யாவுங்
கானலங்கடல்சூழ்வையங்காவலன்காவலென்று
னேனையோர்பலரும்வேந்தனேவலின்முறைநின்றாரே. (கoஉ)

தழல்வளரோமகுண்டத்தலத்தினில்வலத்திலாதித்
தழல்வருபாவைவைகத்தருமன்மாமதலையாங்கட்
டழல்புரைவேதவாணர்தாளிணைவணங்கித்தானுந்
தழலெனவிருந்தானெல்லாவினைகளுந்தகனஞ்செய்வான். (கoங)

கடகரியுரிவைபோர்த்தகண்ணுதற்கடவுண்மாறி
யிடம்வலமாகப்பாகத்திறைவியோடிருந்தவாபோ
லுடல்கலைபுறப்புத்தோவிஞெளித்திடப்போர்த்துவேள்விக்
கடனினுக்குரியவெல்லாங்கவினுறச்சாத்தினானே. (கoச)

பொங்குறுமோமச்செந்தீப்புகையினைப்போர்த்ததென்னப்
பைங்கடல்பருகுமேகம்பரிதியைமறைத்ததென்ன
வங்குறப்புடனேவெங்கோட்டரிணத்தொக்கருணமேனி
யெங்கணும்புதைப்பவேள்வித்தொழிலிலேயிதயம்வைத்தான். (கoரு)

* வேள்விக்கொப்பனை என்றும் பாடம்.

தருமன்மாமதலையந்தச்சடங்குசொற்படியேதொட்டுப்
புரிவுடைத்திசைகணான்கும்புற்களாற்காவல்செய்து
விரிசுடர்த்தீகண்மூன்றும்விண்ணவர்முகங்களாகச்
சுருவையான்முகந்துநெய்யைச்சுருதியாலோமஞ்செய்தான். (கoசு)

முழுதுணர்வரம்பில்கேள்விமுனிவரர்குழாமுமென்று
மழிவிலாமலரோனாதியமரர்தங்குழாமுஞ்சூழ
வெழுசுடர்முத்தீப்பொங்கவெழுபகலோமஞ்செய்தான்
பழுதறுபாண்டுசெய்தமாதவம்பலித்ததொப்பான். (கoஎ)

வேறு.

இம்முறையிராயசூயமாமகத்துக்கெழுதொணாநான்மறையுரைத்த
வம்முறையிமையோரானவர்க்கெல்லாமரும்பெறலவியுணவருளி
மும்முறைவலம்வந்திருவருஞ்சுவாகைமுதல்வனைமுடியுறவணங்கித்
தெம்முறைபாசரிடுதிறையனைத்துந்தானமுந்தியாகமுஞ்செய்தான். (கoஅ)

ஏழுநாளிவ்வாறிமையவரெவர்க்குமிமகிரிதனிலயன்வேட்ட
வூழிமாமகம்போலியற்றியெண்டிசையினுயர்புனல்யாவையுஞ்சொரிய
வாழிவாய்முகிலுமின்னுமேயென்னவரும்புனலாடியபின்னர்
வாழிபாடினர்களாதன்முதலோர்மங்கலம்பாடினர்புலவோர். (கoகூ)

பெயர்பெறுமுனிவரெவர்க்குமெண்ணிரண்டாம்பேருபசாரமும்வழங்கி
யுயர்வறவுயர்ந்தவேள்வியினுயர்ந்தோனுயர்குலப்பாவையுந்தானு
மயர்வறுஞானவடிவமாய்நின்றமாயனைமனனுறவணங்கி
யபர்வறுகங்கைமகன்பதம்பணிவுற்றறன்மகன்வினவினனம்மா. (கக0)

பரிதியுமதியும்வன்னியுமுதலாய்ப்பல்வகைக்குலத்துமுற்பவித்த
நரபதிகுழாத்தில்யாவரேபெறுவார்நவிலுமுற்பூசைமற்றென்னக்
கருதியவசுக்களெண்மரிலொருவன்கங்கையின்றிருமகன்றெய்வச்
சுருதிமாமகஞ்செய்புனிதனைநோக்கித்தொன்முனிவரரையுநோக்கி. (ககக)

ஆர்கொலோவக்ரபூசனைக்குரியாரரசரிலந்தணீருரைமின்
பாரெலாந்தத்தங்குடைநிழற்புரக்கும்பார்த்திவர்யாரையுமுணர்வீர்
தாருலாமார்பீரென்றலும்வியாதன்றருமன்மாமதலையைநோக்கிக்
காரின்மாமேனிக்கரியசெந்திகிரிக்கண்ணனுக்குதவெனக்கதித்தான் (கக௨)

என்றபோதந்தவேத்தவையிருந்தோர்யாவருமிருந்துழியிருந்து
நன்றுநான்மறையோர்சிகாமணியுரைத்தநவிரறுநல்லுரையென்றார்
சென்றபோர்தோறும்வென்றியேபுனையுஞ்சேதிபதிசிசுபாலன்
கன்றினனிதயங்கருகினன்வதனங்கனலெனச்சிவந்தனன்கண்ணும். (ககங)

வேறு.

*கொச்சையிடையர்மகளிருக்குங்கூத்துக்குனித்துநவநீதப்
பிச்சைநுகருமிவனெமக்குமுன்னேபூசைபெறுவானோஞ்
சச்சைமறையின்முறையென்னோந்தருமன்புரிந்தமகமென்னோஞ்
செச்சைவடிவேன்முடியரசர்செங்கோலென்னோந்திருவென்னோம். (ககச)

---

* இச்செய்யுள்சிலஏட்டுப்பிரதிகளிற்காணப்படுகிறது.

வேறு.

பூபாலரவையத்துமுற்பூசைபெறுவார்புறங்கானில்வாழ்
கோபாலரோவென்றுருத்தங்கதிர்த்துக்கொதித்தோதினான்
காபாலிமுனியாதவெங்காமனிகாரணகவினெய்தியேழ்
தீபாலடங்காதபுகழ்வீரகயமன்னசிசுபாலனே. (ககரு)

சூரன்குலத்தோர்குபேரன்குலத்தோர்சுடர்ப்பாவகப்
போன்குலத்தோர்கண்முதலோரிருந்தார்கள்பெயர்பெற்றபேர்
வீரங்கொலோவாகுசாரங்கொலோசெல்வமிச்சங்கொலோ
பூரம்புராசிப்புவிக்கென்றுமுதுவோர்கள்பொதுவோர்கொலோ. (ககசா)

வேறு.

பராசரமுனிவன்மதலையாம்படியேபகர்ந்தனைபழுதிலாமாற்ற
மிராசமண்டலத்தின்மாபினால்வலியாலேற்றமுந்தோற்றமுமுடையோன்
சுராசுரர்வியக்குங்கஞ்சனைமலைவான்சூரன்மாமகன்வயிற்றுதித்தான்
றராதலமிசையேபிறந்திவன்கற்றதெத்தனையிந்திரசாலம். (ககஎ)

சொற்றவாநன்றுசுகன்றிருத்தாதைசூதிகைத்தோன்றியபொழுதே
பெற்றதாய்தானும்பிதாவுமுன்வணங்கப்பேசலாவுரையெலாம்பேசிக்
கற்றமாயையினாற்கன்னியங்கிருப்பக்காரிருட்காளிந்திநீந்தி
யற்றைநாளண்டரானவர்க்கெல்லாமரசனுக்கருமகவானான். (ககஅ)

ஈன்றதாய்வடிவங்கொண்டுளமுருகியிணைமுலைத்தடத்தணைத்தமுதம்
போன்றபால்கொடுப்பப்பொழிமுலைப்பாலோபூதனையுயிர்கொலோநுகர்ந்தான்
சான்றபேருரலானுறிதொறுமெட்டாத்தயிருடனறுநெய்பாலருந்தி
யான்றதாய்கண்டுவடத்தினிற்பிணிப்பவணிபுரனுடனிருந்தழுதான். (கககூ)

பாடினான்மறுகுபெருநகைவிளைப்பப்பாவையர்மனைதொறும்வெண்ணெய்க்
காடினானவர்கண்முகந்தொறுமெச்சிலாக்கினான்கன்றுமுன்னோட
வோடினானாவின்பேரிளங்கன்றையுயிருடனொருதனிவிளவிற்
சாடினானரவின்முதுகையும்புள்ளின்றனுவோடலகையும்பிளந்தான். (கஉ௦)

பின்னியகுஞ்சிக்கோவலர்பயந்தபேதையர்பலரையுங்கலந்த
கன்னியின்மருங்குமோரையின்மருங்கும்* கலையெலாநாணிடக்கவர்ந்தே
முன்னியவின்பச்செருக்கிலேமயங்கிமுரிவிற்காமனுமானா
னன்னியனல்லன்மற்றிவன்பெருமையாசரிலாரறியாதார். (கஉக)

வேறு.

அண்டர்க்கெல்லாமரசானவாகண்டலனுக்கண்டரினி
துண்டற்கமைத்தபாலடிசிலுண்டானொருநாளொருதானே
கொண்டற்கன்மாரியைமுன்னங்கோவர்த்தனமேகுடையாகச்
சண்டப்பிரசண்டவேகமுடன்றடுத்தானேறுபடுத்தானே. (கஉஉ)

---

* கலைநாடொறுமிடக்கற்றான் என்றும் பாடம்.

*பம்பிப்பரந்தபுன்மேயும்பசுவின்கன்றுங்கோபாலர்
தம்புத்திரருமம்புயத்தோன்றன்மாயையினலொளித்திடநா
ளெம்புத்திரருமெங்கோவினிளங்கன்றினமுமெனத்தெளிய
வம்பிற்புரிந்தமாயையிவனல்லாலியாவர்வல்லாரே. (௧௨௩)

அதிரப்பொரும்போரஞ்சினனோவஞ்சாமைகொலோதெரியாது
மதுரைப்பதியுந்தன்கிளையும்வாழ்வுந்துறந்துவாரிதிவா
யெதிரொப்பிலாததுவாரகையென்றியற்பேர்படைத்தமாநகரின்
முதிரப்பொரும்போர்த்தம்முனுடனிருந்தான்பன்னாண்முரணறுத்தே. (௧௨௪)

வேறு.

கஞ்சனெனுமாமனைக்கொலையயர்செய்தான்
வஞ்சனையினாலமருமெத்தனைமலைந்தான்
றஞ்சமெனவேமருவுதமரிலொருதானே
மிஞ்சிவிரகானுரியமேதினிபுரந்தான். (௧௨௫)

வேறு.

அன்னையுந்தாதைதானுமருஞ்சிறையகத்துவைக
முன்னிருமூவர்முன்னோர்தங்களைமுருக்குவித்தான்
பின்னொருதமையன்றன்னைப்பெற்றதாயிருவனென்றென்
றிங்கிலஞ்சொல்லவைத்தானிவனைவேறியாவரொப்பார். (௧௨௬)

என்றுகொண்டெண்ணியாவுங்கிசைந்தனவுரைகளெல்லா
மொன்றினொன்றுச்சமாகவுயர்ச்சியுந்தாழ்வுந்தோன்றக்
கன்றியமனத்தினோடிக்கட்டுரைசெய்தான்மன்றற்
றென்றலஞ்சோலைசூழுஞ்சேதிநாடுடையகோவே. (௧௨௭)

வேறு.

திண்ணியநெஞ்சினனானசிசுபாலன்றன்னெஞ்சிற்றீங்குதோன்ற
வெண்ணியமன்பேரவையினிரம்பியபுன்சொற்களெலாமெண்ணியெண்ணிப்
புண்ணியர்வந்தினிதிறைஞ்சும்பூங்கழலோன்வேறொன்றும்புகலானாகிப்
பண்ணியதன்புரவிநெடும்பருமணித்தேர்மேற்கொண்டான்பரிதிபோல்வான். (௧௨௮)

எந்நாட்டிலவனிபருமீண்டியவித்தொல்லவையினிசைத்தசேதி
நன்னாட்டுக்கதிபதியாநரபாலன்மாற்றநன்றானன்று
கன்னாட்டும்படியாகவிருவோரும்பொருதறிதுங்கடிதேகென்று
தன்னாட்டமிகச்சிவந்தான்கரியவடிவினிற்புனைந்ததண்டுழாயோன். (௧௨௯)

சேதிகுலநாபதியுஞ்செருப்புரிதற்கஞ்சுவனோதரிலானன்
மோதிவலம்புரியூதமுகிலினங்கண்முழங்குவபோன்முரசமார்ப்ப
வேதியரோடவையிருந்தவேந்தரெலாமதிசயிப்பவிமானந்தோறுஞ்
சோதிமுடியமரர்வாநகர்ப்புறத்திலமர்புரியத்தொடங்கினரே. (௧௩0)

* இச்செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளிலில்லை.

;திவருகதிப்பரியுமணிவயிரத்திண்டேருமனிலமென்ன
மா திவருகடகளிறுங்காலாளும்பொருது ரகர்முடிகள்சோர
ர தவனுநாபதியுமிருங்கிளையும்பெருங்கிளையோடெதிரிலாத
ச திகுலநாபதியுஞ்செய்தவமர்சுராசுரரிற்செய்தாருண்டோ. (௧௩௧)

வேறு.

ானைமேல்வருநிருபருந்திறல்யானைமேல்வருநிருபருஞ்
சானைமாமுகிலேழுமேநிகரென்னவம்புதொடுத்தலிற்
ானையாறுநிறைந்துபல்லணியாகிமிஞ்சியசதுர்விதச்
சனையாவையுமெய்சிவந்தனசிந்தைமாமலர்கருகவே. (௧௩௨)

ிரண்டுவெருதினிக்குளுமுயர்தடங்கிரியொப்பவே
'ரிரண்டுவிதத்திறனுமியம்பலுற்றனவெண்ணில்பல
றரிரண்டணிபுருளினோடுருள்சென்றுமுட்டின தீயிடிக்
ரிரண்டெதிர்மலைபுமாறெனவண்டபித்திகலங்கவே. (௧௩௩)

ங்கமொன்றுடனொன்றுசீறுசெருக்கெனும்படிசேனைவாய்
ங்கர்கொங்கணர்துளுவராரியர்மகதரொட்டியர்மாளவர்
ங்கர்கொங்கர்தெலுங்கர்சீனர்கலிங்கர்சிங்களர்கௌசல
ங்கர்சோனகரானவீரரதிர்ந்து தங்களினமர்செய்தார். (௧௩௪)

வருவரும்படிகம்புகொம்புவிதங்கொண்மாமுரசாதியா
ிருவர்தம்படைகளினுமுழியெழுந்தகாலெனவதிர்தலான்
ருவியெண்டிசைமுகமுநிற்பனமத்தவாரணகன்னமுந்
ிருவிரும்புபுயத்து வானவர்செவிகளுஞ்செவிடானவே. (௧௩௫)

ைடபடக்கிளையாகிவந்தெதிர்பூதுரந்தரர்யாவருந்
தாடைபடப்பரிவுறுமனத்தொடுதொந்தயுத்தமுடற்றினர்
தடையெடுத்தனரிருவரும்பெறுகொடியெடுத்தனர்கொற்றவெம்
டையெடுத்தனர்மாமறைப்பசுபாலனுஞ்சிசுபாலனும். (௧௩௬)

வலினல்வடிவாளினல்வரிவில்லினலுரைபெற்றவெங்
காலினலிருவருமுனைந்திருகுன்றமொத்தனதேரினர்
ாலினல்வருமத்தயானைகண்மலைவதொத்துமதித்தபோர்
நூலினல்வழுவறமலைந்தனர் நுண்மையாவினுநுண்ணியார். (௧௩௭)

வேறு.

வஞ்சினமுடுகவொருவருக்கொருவர்வெல்லலுந்தோற்றலுமின்றி
வஞ்சினமுரைசெய்துள்ளமுமெய்யும்வாகுபூதரங்களும்பூரித்
தஞ்சினர்தமைப்போலினைத்தபினினிவானேற்றுதல்கடனெனக்கருதிக்
ஞ்சனைமுனிந்தோனிவன்முடித்தலைமேற்கதிர்மணித்திகிரியேவினனே. (௧௩௮)

ியதிகிரிவீரரைத்துறக்கமேறவிட்டிடுமிரவியைப்போன்
மேவியபகையாமைத்துனன்முடியைவிளங்குகோளகையுறவீசி
ாவிகளனைத்துநிறைந்தொளிசிறந்தவச்சுதனலைகொள்பாற்கடலிற்
ீவியவமுதமமரருக்களித்தோன்றிருக்கரஞ்சென்றுசேர்ந்ததுவே. (௧௩௯)

சேதிமன்னவன்றன்முடியினைநெடியோன்றிகிரிசென்றரிந்திடவொருபொற்
சோதிமற்றவன்றனுடலினின்றெழுந்துசுடரையும்பிளந்துபோய்மீண்டு
மாதிரமனைத்துமொளியுறவிளக்கிமண்ணளந்தருள்பதமடைய
வேதியர்முதலோர்யாவரும்வேள்விப்பேரவைவேந்தருங்கண்டார் (கசO)

ஈதொருபுதுமையிருந்தவாவென்பாரிந்திரசாலமோவென்பார்
மாதொருபாகனல்லதிக்கண்ணன்மதிகுலத்தவனலனென்பார்
கோதொருவடிவாம்புன்மொழிகிளைஞர்கூறினும்பொறுப்பரோவென்பார்
காதொருகுழையோனிளவலைத்தேர்மேற்கண்டுதங்கண்ணிணைகளிப்பார். (கசக)

அதிசயித்திவ்வாறிருந்துழியிருந்தோரனைவருமாழியான்றன்னைத்
துதிசெயத்தருமன்சுதன்முதலெவருந்தொழுதெதிர்வந்துவந்திறைஞ்ச
விதியெனப்பொருதவெங்களத்திடையவ்வியாதமாமுனியெடுத்துரைப்ப
மதியுடைக்கடவுள்வீடுமன்முதலாமன்னவர்யாவருங்கேட்டார். (கசஉ)

ஐவகைவடிவாயெங்குமாய்நின்றவச்சுதனமலனனந்தன்
செய்யொளிதிகழும்*பங்கயக்கண்ணன்றிருமகள்கொழுநனைக்காணத்
துய்யசெய்தவத்துத்துருவாசமுனிவன்சேறலுஞ்சுடர்கொள்வைகுண்ட
மெய்யுறுகோயிற்றுவாரபாலகரவ்வேதபண்டிதன்றனைவிலக்க. (கசங)

விலங்கியவிருவர்தம்மையுமந்தவெஞ்சினமுனிவரன்வெகுண்டு
துலங்கியகோயிற்றுவாரம்விட்டவனிதோன்றுமின்போமெனச்சபித்தா
னலங்கலந்துளவமௌலியானதுகேட்டந்தணன்றனையெதிர்கொண்டு
கலங்கியதுவாரபாலர்நின்சாபங்கடப்பதெக்காலமோவென்றான். (கசச)

என்றலுமுனிவன்பரிந்திவரெழுகாலின்புறமன்பராய்வருத
லன்றிமும்மடங்குபகைவராய்வருதலல்லதிங்குன்பதமணுகார்
மன்றலந்துளபமாலையாயென்னமலர்மகண்மகிழ்நனுமவரைக்
கன்றியமறையோன்சாபநீர்கடக்குங்கருத்துமற்றியாதுகொலென்றான். (கசரு)

மற்றவரிறைவன்மலரடிவணங்கிவான்பிறப்பேழுறமாட்டே
முற்றுமுப்பவமுமுனக்குவெம்பகையாயுற்பவித்துன்பதமுறுவேம்
வெற்றிகொண்முதிர்போர்நேமியாயென்றார்விமலனுங்கொடியவெஞ்சாப
மற்றிடும்வகையவ்வரமவர்க்களித்தானசுரராயவரும்வந்துதித்தார். (கசசு)

இரணியனிரணியாக்கனென்றுரைக்குமியற்பெயரிருவருமெய்தி
முரணியகொடுமைபுரிந்துமூவுலகுமொய்ப்புடன்கவர்ந்திடுநாளி
னரணியினழல்போனரவரியுருவாயச்சுதன்றூணிலங்குதித்துத்
தரணியினுகிராற்பிளந்துமுன்னுகத்திற்றன்பகைசெகுத்தனன்பின்னும். (கசஎ)

அரக்கர்தங்குலத்துக்கதிபதியாகியாண்டுபோய்மீண்டுமங்குதித்துத்
தருக்குடனவர்களிருவருமுறையாற்றம்பியுந்தமையனுமானார்
சிரக்குவையுடனேபுயவரைநிரையுஞ்சிந்தவச்சிந்துவினிடையே
சரக்குவைசொரிந்தானமலனவ்வுகத்துத்தசரதன்றன்வயிற்றுதித்தே. (கசஅ)

---

* பங்கயச்சரணஞ்சிந்தனைசிந்தையணுகித், துய்யசெய்தவத்துத்துருவாசமுனிவன்றொழு வருகாலைவைகுந்த என்றும் பாடம்.

கணைவரும்வரிவில்வாழ்க்கைக்கடுங்கனலனையதோற்றத்
துணைவருந்தானுங்கங்காசுதனுமற்றெவருஞ்சூழ
வினைவருமரசரில்லாவிசலரியேறுபோல்வான்
கிணைவருமோதைமூதூர்க்கிளர்நெடும்புரிசைபுக்கான். (௩)

சென்றுழியெவருந்தத்தஞ்செழுமனைபெய்திவாசந்
துன்றியவமளிகட்குற்றுயில்புரிந்தெழுந்தபின்னை
நின்றவெம்பரிதித்தோற்றந்தொழுதுதந்நியமமுற்றி
வன்றிறலரசன்கோயின்மன்னவைவந்துசேர்ந்தார். (௪)

இறைஞ்சியவேந்தர்க்கெல்லாமிருப்பளித்தெதிர்ந்தவேந்தர்
நிறஞ்செறிகுருதிவேலானினைவினோடிருந்தபோதி
லறஞ்செறிதானம்வண்மையளவிலாதளித்துநாளும்
புறஞ்சுவர்கோலஞ்செய்வான்பூபதிக்குரைக்கலுற்றான். (௫)

தாதவிழ்துவளமாலைத்தருமன்மாமதலைபெற்ற
மேதகுவேள்விச்செல்வம்வேந்தரில்யாவர்பெற்றா
ரேதளவவன்றன்வாழ்க்கையாரினியெதிருண்டென்று
பாதகநினைவைத்தானும்பகர்ந்தனன்பரிவுகூர. (௬)

விதுரனைவினோதன்சொன்னவார்த்தையும்வேந்தர்வேந்த
னிதயமுமொன்றாய்நின்றவியற்கையைச்சகுனிகண்டு
புதைநகமடங்கலேறும்புறஞ்செலாதொதுங்குமாறுன்
மதகரிவிடுமோவென்றான்வசையிசையாகக்கொள்வான். (௭)

சொல்லிடைநஞ்சுகக்குந்துன்மதியுடையதம்பி
வில்லிடைநின்றுதம்முன்வெம்மனங்களிக்கச்சொன்னா
னல்லிடைநிறைந்ததேனுமமுதவெண்கிரணத்திங்க
ளொல்லிடையிரவிமுன்னரெவ்வழிநிகர்க்குமென்றே. (௮)

தமையனுந்தம்பிசொன்னதன்மையையுணர்ந்துநீதி
யமைதருதந்தைகேட்பவவன்பெருந்தாதைகேட்பக்
கமைபெறுவிதுரன்கேட்பக்கார்முகக்கன்னன்கேட்ப
விமையவன்றுரோணன்கேட்பயாவருங்கேட்பச்சொல்வான். (௯)

இந்திரன்முதலாவுள்ளவிமையவர்சிறப்புச்செய்யச்
சுந்தரப்பொற்றோள்வேந்தர்தொழில்புரிந்தேவல்செய்ய
மந்திரமுனிவர்வேள்விமறைநெறிமுறையிற்செய்யத்
தந்திரவெள்ளச்சேனைத்தருமனேதலைவனானான். (௰)

இனியவன்சின்னாட்செல்லினெம்மனோர்வாழ்வுங்கொள்ளுந்
துணைவரும்புரவித்திண்டேர்த்துணைவருஞ்சூரரானோர்
முனைவருகூர்முள்வேலைமுளையிலேகளையினல்லா
ளனிவரவயிர்த்தபோதுநவியமுமடியுமன்றே. (௧௧)

போதுறவிரைந்துமற்றப்புரவலன்செல்வம்யாவும்
பேதுறக்கவர்ந்திலேனேற்பின்னையார்முடிக்கவல்லார்
மோதுறப்பொருதேயாதன்மொழியொணுவஞ்சமொன்று
தீதுறப்புரிந்தேயாதல்கொள்வதேசிந்தையென்றான். (கஉ)

என்னலுமுரியதம்பியெழுவதேகருமமின்றே
செந்நெலின்வாளைபாயுஞ்செல்வநாடுடையகோமா
னென்னலங்கெய்தவீமனைகைத்ததுநேயமான
கன்னலின்மொழியாண்மூரல்விளைத்ததுங்கண்டிலீரோ. (கங)

எத்தனைதரணிவேந்தர்யாகநல்விழாவில்வந்தா
ரத்தனைபேரில்யாமுமொருவராயடங்கிநின்றேங்
கொத்தனையுகளுநன்னீர்க்குருநிலக்கோமானந்த
முத்தனையன்றிப்பின்னையாரையேமுதன்மைசெய்தான். (கச)

நந்தகோமகனுக்கெல்லாநல்கியமுதன்மைகண்டு
வந்தகோவெள்ளஞ்சோரவாய்திறவாமணிற்ப
வெந்தகோவிவனுக்கிந்தமுதன்மையென்றெதிர்ந்துமாற்றந்
தந்தகோமடியுமாறுசமரமும்விளைப்பித்திட்டான். (கரு)

தன்புயவலியுநான்குதம்பியர்வலியுமாயன்
வன்புயவலியுங்கொண்டேமண்ணெலாங்கவரவெண்ணி
யின்புயச்சிகரிமன்னர்யாரையுந்தன்கீழாக்கி
மின்புயலனையான்மேன்மைவிளக்கவேவேள்விசெய்தான். (கசு)

எல்லியல்பரிதியன்னயதுகுலமன்னன்றானுஞ்
சல்லியமிருபோர்செய்யச்சல்லியன்றன்மேற்சென்றான்
சொல்லியகருமம்வாய்ப்பச்சூழ்வலைப்படுத்திக்கொண்ட
வல்லியமென்னச்சூழ்ந்துமலைவதேகருமமென்றான். (கஎ)

வேந்தனுமொருப்பட்டந்தவெண்ணெய்வாய்க்கள்வன்மீளப்
போந்திவர்தமக்குமின்றுபொருதுணையாகமாட்டான்
சாந்தணிகுவவுத்தோளான்சல்லியன்வலியணிப்போ
தாந்தகவெண்ணில்வல்லேயைவரையடர்க்கலாமே. (கஅ)

வஞ்சனைகொண்டேயாதில்வாரணமணித்தேர்வாசி
நஞ்சனையவராலாதனுளையேயழித்தலவேண்டுங்
கஞ்சனைமலையவெண்ணிக்கரியபேய்முலைப்பாலுண்ட
நெஞ்சினனெய்தாமுன்னநீர்விரைந்தெழுமினென்றான். (கசு)

வெஞ்சிலைகுனித்தோரம்பியான்விடின்வெகுண்டவேந்த
ரெஞ்சிவிண்புகுவரல்லால்யாவரேயெதிர்க்கவல்லார்
வஞ்சனைகொண்டுவெல்லமதிப்பதுவாளால்வெல்ல
வஞ்சினமாயினன்றேவென்றனன்கர்கோமான். (உ0)

யாவருமொழிந்தவார்த்தையின்புறக்கேட்டுப்பின்னுந்
தாவருபுரவித்திண்டேர்த்தானையான்சகுனிசொல்வான்
மேவருகன்னனன்றிவிண்ணுளோரெதிர்ந்தபோதுங்
கோவருமுன்றிலானைக்கொடுஞ்சமர்வெல்லலாமோ. (உக)

இடிம்பனைப்பகனைவைவேலிகற்சராசந்தன்றன்னை
நெடும்பனைப்புயத்தால்வென்றநிகரிலாவீமனிற்கக்
கடும்படைப்பெருமையால்வெங்காணலாமென்பராயிற்
றொடும்படைத்தடக்கைவீரர்க்குத்தாஞ்சொல்லலாமோ. (உஉ)

* துப்புறழமுதச்செவ்வாய்த்திரௌபதிதுணைத்தோள்வேட்டுக்
கைப்படுசிலையினேடுங்காவலர்கலங்கிவீழ
மெய்ப்படுமுனியாய்வந்துவிசயன்வில்வளைத்தபோது
மிப்பொழுதிருந்தவீரர்யாவருமிருந்திலேமோ. (உங)

இப்பிறப்பொழியவின்னுமேழேழுபிறப்பினானு
மெய்ப்பிறப்பறநீதித்தருமனைவெல்லமாட்டோ
மொப்பறப்பணைத்ததோளாயுபாயமெங்கேனுமொன்றாற்
றப்பறச்சூதுகொண்டுசதிப்பதேகருமமென்றான். (உச)

தன்பெருமாமன்சொல்லத்தரணிபன்றம்பிதானும்
வன்பெருஞ்சேனைகொண்டுமலைவதற்கவர்களஞ்சா
ரின்பெருநேயமிக்கவிவன்மொழிப்படியேமாயப்
புன்பெருஞ்சூதுகொண்டுபொருவதேபுந்தியென்றான். (உரு)

கோமகனெஞ்சுநாவுங்குளிர்ந்துபேருவகைகூர்ந்து
மாமனைத்தவிசின்கண்ணேவருதியென்றிருத்திக்கொண்டு
பாமருபனுவன்மாலைப்பாண்டவர்தம்மைநின்கைக்
காமருசூதால்வெல்லுங்கருத்தெனக்குரைத்தியென்றான். (உசா)

மன்னநின்செல்வக்கோயின்மண்டபமொன்றுதேவர்
பொன்னுலகினுக்குமில்லையென்பதோர்பொற்பிற்றாகப்
பன்னுநூற்சிற்பந்தன்றுப்பமெழில்வினைஞர்தம்மா
னன்னிலைவிரிவுண்டாகநாளையேயியற்றுவிப்பாய். (உஎ)

மண்டபங்காணவெம்முன்வருகவென்றழைத்துவந்தாற்
கண்டுகண்களித்துமற்றக்காவலரிருந்தபோதிற்
புண்டரவிசாலநெற்றிப்புரவலபொழுதுபோக
வண்டரும்விரும்பும்வன்சூதாடுதும்வருகவென்பேம். (உஅ)

அதிர்முரசுயர்த்தகோவுமையெனத்துணியும்பின்னை
மதிமருளியற்கைத்தாதுமாயவெஞ்சூதுதன்னால்
விதியெனப்பொருதுவாழ்வுமேதகுமரசுந்தங்கள்
பதிமுதற்பலவுந்தோற்கும்படிசெகுத்திடுவலென்றான். (உகூ)

---

* துப்புறழதரச்செவ்வாய் என்றும் பாடம்.

இன்னதேகருமமென்றென்றிளைஞநம்பிநைந்துசொன்னா
னன்னதேகருமமாகவவர்வழியொழுகுநீரான்
றன்னதேயாகுமிந்தத்தலமெனுக்கருத்தான்மாமன்
சொன்னதேதுணிந்துமார்புந்தோள்களும்பூரித்திட்டான். (௫0)

வில்லினுயர்ந்தவென்றிவிதுரனைநோக்கிக்கொற்ற
மல்லினுயர்ந்தபொற்றோள்வலம்புரியாலைவேந்தன்
வல்லினுபாயஞ்செய்பமாதுலனுரைத்தவெல்லாஞ்
சொல்லினனவனுங்கேட்டுச்சொல்லெதிர்சொல்லலுற்றான். (௫௧)

வையமுமரசும்வாழ்வும்வாங்குகைகருத்தேயாயிற்
பொய்படர்சூதுகொண்டுபுன்மையிற்கவரவேண்டா
வையநின்றந்தையோலையைவருக்கெழுதிவிட்டான்
மெய்யுறமறுத்துச்சொல்லார்வேண்டினதருவரன்றே. (௫௨)

தந்தைதன்னேவலாலேதருமனுந்தம்பிமாரு
மிந்தமண்ணுடல்கைவிட்டெரிகெழுகானஞ்சேர்வர்
முந்துறநுமதேயாகுமுழுதும்வாழ்வெழுதுஞ்செம்பூட்
பைந்தொடையரசர்கேட்டாற்பாவமும்பழியுமாகா. (௫௩)

தீதினல்வரித்துநெஞ்சந்தீயவராடுமாயச்
சூதினல்வென்றுகொள்கைதோற்றமும்புகழுமன்று
போதினன்முகனுமாலும்புரிசடையவனுங்கேள்வி
யாதினாமறையுமுள்ளளவுமிவ்வசையறாதே. (௫௪)

என்றவனுரைப்பக்கேட்டேயெரியெழுமனத்தனாகி
யொன்றியகேண்மைத்தந்தைக்கொருபுடைவாரமுண்டோ
வன்றிறன்மைந்தர்வாழ்வுவாங்கியின்றெமக்குத்தந்தாற்
புன்றொழில்வசையேயன்றிப்புகழ்கொலோபுகலவதம்மா. (௫௫)

நினக்கிதுதொழிலாலென்றுநேயமுமவர்கண்மேலே
யெனக்குயிர்த்தந்தைநீயென்றியானுனைமகிழ்ந்துகாண்ப
னுனக்குமுன்கிளைக்குநாளுமுண்டியும்வாழ்வுமிங்கே
மனக்கருத்தங்கேயென்றான்மாசுணத்துவசனமாதோ. (௫௬)

மைந்தனங்குரைத்தமாற்றமனத்தினையீரப்பின்னும்
வெந்திறல்விதுரனுற்றுவிளம்புவனென்பமாதோ
புந்தியின்மறுவிலாதோய்புதல்வரிலொருசாரன்பு
தந்தையர்க்கில்லையென்றாயானுமத்தந்தையன்றோ. (௫௭)

நீங்களுமவருநேயநெறிமுறைதவறுதென்றும்
வாங்குநீருததியாடைமண்ணின்மேல்வாழ்தலுற்றாற்
பாங்கலாவரசரெல்லாம்பணிந்துநும்வாயினிற்ப
ரோங்கியபுகழும்வாழ்வுமொருப்படவளருமன்றே. (௫௮)

உங்களினவருநீருமுளம்பிரிந்தெதிர்ந்தீராகிற்
றங்களினெதிர்ந்தாரம்மாகுருகுலத்தலைவரொன்றாப்
பொங்களிநிகழுங்கஞ்சப்புரவலனெழிலுகண்ட
திங்களினுயர்ச்சிபோலத்தெவ்வருந்திகழ்வரன்றே. (௩௯)

ஆதலாலுறுதிசொன்னேனுமுறைதெரிந்துகோடி
யேதிலார்போலயானுமினியுனக்கியாதுஞ்சொல்லேன்
றீதலாதுணராவஞ்சச்சிந்தையார்பரிந்துகூறுங்
கோதலாதுனக்கிங்கேலாதெனச்சிலகூறினானே. (௪௦)

நிறுத்தறம்வளர்ப்போனெஞ்சினீதியுங்*குரவரேவன்
மறுத்தெதிருரைக்குமென்பால்வழுவுநீவரைந்துகண்டாய்
செறுத்தவராவிகொள்வாயடியனேன்செய்ததெல்லாம்
பொறுத்தருளென்னக்கையாற்போற்றினன்முறுவல்செய்தான். (௪௧)

செழுந்திருவிரும்புமார்பன்செப்பியகொடுமைகேட்டு
விழுந்திரண்மாலைத்திண்டோள்விதுரனும்வெகுண்டுமுன்னித்
தொழுந்தகைமௌலிவேந்தன்சூழ்ச்சியிற்கிசைவுறாம
லெழுந்துதன்கோயில்புக்கானிகலரியேறுபோல்வான். (௪௨)

புரிவிலாமொழிவிதுரன்போகலும்புரிவிலொன்றுஞ்
சரிவிலாவஞ்சமாயச்சகுனியுந்தம்பிமாரும்
விரிவிலாமனத்தோடெண்ணும்விசாரமேவிசாரமாக
வரிவிலான்விரைவினீண்டோர்மண்டபஞ்சமைக்கவென்றான். (௪௩)

பெருந்தகையேவன்மாற்றம்பிற்படாமுற்பட்டோடி
யிருந்ததொல்வேந்தர்தத்தமிருக்கையினியன்றவெல்லா
மருந்திறன்மள்ளராலுமணிமணித்தேரினாலும்
பொருந்தவேகொணர்வித்தாங்கட்பொற்சுவரியற்றினாரே. (௪௪)

சங்கையில்சிற்பநூலுற்றபதியர்தாவுகூரச்
செங்கையினமைத்தகோலச்சித்திரத்தூணநாட்டி
யங்கையிலருணரத்நத்தணிகொளுத்திரமுமேற்றிக்
கங்கையினுயர்ந்தமுத்தின்கற்றையான்முற்றும்வேய்ந்தார். (௪௫)

ஓவியஞ்சிறக்கத்தீட்டியொண்கொடிநிரைத்துச்செஞ்சொற்
காவியமாக்கட்கெல்லாங்கருத்துறுகவினிற்றாகி
வாவியபுரவித்திண்டேர்மன்னவனினைவுக்கேற்ப
வேவியவினைஞர்தம்மாலியல்புறச்சமைந்ததன்றே. (௪௬)

மன்னவைக்கானபைம்பொன்மண்டபஞ்சமைந்ததென்று
தன்னவைக்குரியோர்சொல்லச்சகுனியுந்தானுநோக்கிச்
சொன்னவைக்கேற்றதென்றுதொழுதகுதாதைதன்பான்
மின்னவைத்தொளிரும்வேலான்மேவினன்விளம்பலுற்றான். (௪௭)

* குரவன் சொல்லை என்றும் பாடம்.

அரும்பெறலையகேட்டியடியனேன்கருத்துமுற்றக்
கரும்புயறவழுஞ்சென்னிக்கதிர்மணிக்கூடமொன்று
பெரும்புகழ்நகரினீண்டுச்சமைத்தனன்பெருமைகாண
வரும்படிதூதொன்றேவுன்மைந்தரைவிரைவினென்றான். (சஅ)

மகன்மொழிநயந்துகேட்டுவாழ்வுறுதந்தைதானு
மிகநயந்துருகிநல்லவிரகினால்வெல்லலுற்றீ
* ரகநெடும்போர்செய்தாலுமைவரையடர்க்கொணாது
சகுனியையன்றிவேறார்தாவல்லார்தரணியென்றான். (சகூ)

விழியிலாவென்றிவேந்தன்விதுரனையழைத்துநீபோய்
மொழியிலாருலகின்மற்றுன்மொழியினைமறுக்கவல்லார்
பழியிலாவிசைகொணீதிப்பாண்டவர்வந்துன்மைந்தர்
வழியிலாவொழுகும்வண்ணமருட்டிநீகொணர்தியென்றான். (ருO)

தம்பியர்விழைவாற்கூடஞ்சமைத்தபேரழகுகாண
விம்பர்வந்தெமையுமெய்தியேகுகவிரைவினென்னப்
பைம்பொனினோலைமீதுபண்புறவெழுதியின்னே
யெம்பியுமேகுகென்றானேவலினவனும்போனான். (ருக)

காரெனக்களிறுசுற்றக்காற்றெனப்புரவியீண்டத்
தேரினுக்கொருவன்றன்னைச்சிலம்பெனத்தேர்கள்சூழ
வீரிற்பலரும்போற்றவிதுரனுமிரண்டுநாளாற்
பாரினுக்குபிரேபோலும்பாண்டவர்நகரிசேர்ந்தான். (ருஉ)

வேறு.

புரியுமொண்கதிர்கவினுறுபொலிவினாற்பொன்னுலகாமென்ன
வரியபைம்பொனின்மணிகளினிறைந்தசீரளகைமாநகரென்னத்
தெரியுமன்புடனறங்குடியிருப்பதோதெய்வவான்பதியென்ன
விரியும்வெண்கொடிப்புரிசைசூழ்வளநகர்விழிகளித்திடக்கண்டான். (ருங)

ஊடெலாநறும்பொய்கைநீள்வாவியினுடம்பெலாமலர்பூவின்
றேடெலாமெழுசுரும்பினமதுகாச்சொல்லெலாஞ்செழுங்கீதம்
பாடெலாமிளஞ்சோலைமென்பொங்கரின்பணையெலாங்குயிலோசை
நாடெலாநெடும்புனல்வயல்கழனியினடுவெலாம்விளைசெந்நெல்.

அருகெலாமணிமண்டபமவிரொளியாங்கெலாஞ்சிலம்போசை
குருகெலாம்வளர்பழனமப்புள்ளெலாங்கூடலின்புறவூடன்
முருகெலாங்கமழ்துறையெலாந்தரளம்வெண்முத்தெலாநிலாவெள்ளம்
பருகெலாம்புனனதியெலாநீரெலாம்பங்கயப்பசுங்கானம். (ருரு)

ஆனகம்பலமுழங்கவந்தெதிர்பணிந்தாதுலர்க்கமுதன்ன
போனகம்பரிந்திடுநெடுஞ்சாலையேபுகுந்தமாமறுகெல்லாம்
வானகந்தனையமையுமென்றும்பருமண்ணின்மேல்வரவெண்ணு
ஞானகஞ்சுகனகரினையெங்ஙனேநாம்வியப்பதுமன்னோ. (ருசு)

---

* அகனெடும்போர் என்றும் பாடம்.

வந்தனன்சிலைவிதுரனென்றோடிமுன்வந்தவருரையாமுன்
றந்தைதன்றனிவரவறிந்திளைஞருந்தருமனுமெதிர்கொண்டார்
சிந்தையன்புடன்றொழுதெழமைந்தரைச்செங்கையாற்றழீஇக்கொண்டே
யந்தணம்புலிகண்டபைங்கடலெனவவனுமெய்குளிர்ந்திட்டான். (ருஎ)

கொண்டுதந்தையைத்தாழும்வண்கொடிமதிற்கோபுரநெடுவீதி
யண்டராலயமெனத்தகுகோயில்சென்றடைந்தபினடல்வேந்தர்
வண்டுதாமரைமலரெனச்சூழலுமாமலரடிபணிந்தேத்தக்
கண்டுவாழ்வுடனவர்க்கருள்புரிந்துதன்கருத்தினால்விடையீந்தான். (ருஅ)

தானுமைந்தரோரைவருமொருபுடைதனித்திருந்துழிவண்டு
தேனுகர்ந்திசைமுரல்பசுந்தொடையலானிருந்ததகமொழிகின்றான்
* கோனுவந்துதன்றிருமுகமெழுதிநீகொணர்கமைந்தரையென்ன
யானும்வந்தனனேவலாலழைத்ததற்கேதுவுமுளதன்றே. (ருகூ)

நீபுரிந்தநல்வேள்வியின்கடன்கழித்தியாவருநெடுமாடக்
கோபுரந்திகழ்மூதெயில்வளநகர்க்கோயில்புக்கனமாக
நூபுரந்திகழிணையடிபரம்பையர்நோக்கருங்கவின்கொண்ட
மாபுரந்தரனிவனெனவிருந்தனன்வலம்புரிமலர்த்தாரான். (கூ0)

தம்பிமாரொடுந்தகையிலாத்துன்மதிச்சகுனிதன்னொடுமெண்ணிக்
கும்பமாமணிநெடுமுடிநிரைத்தவண்கூடமொன்றமைக்கென்ன
வம்புராசிசூழ்மண்டலத்தரசெலாமடங்குபேரவைத்தாக
வும்பராலயநிகரெனச்சமைத்தனரொட்பநூலுணர்வுற்றோர். (கூக)

பெற்றதந்தையோடுள்ளுறமுணர்வெலாம்பேசிமண்டபந்தன்னிற்
கொற்றவன்குடிபுகும்பொழுதுன்னையுங்கூட்டிமன்னவைமுன்னர்
மற்றுமாதுலனெஞ்சமோவஞ்சமோமாயமோவகுத்தாங்குக்
கற்றசூதுநின்னுடன்பொருநினைவினைகருத்தினித்தெரியாதே. (கூஉ)

திருதராட்டிரன்றிருமுகமிதுவெனச்சென்றிறைஞ்சினன்வாங்கி
விரதமாக்கமென்றறிந்தறம்பேணுவான்வினைஞர்கைக்கொடுத்திட்டா
னிரதமாற்றமங்கெழுதியபடியினாவிபம்பலுமதுகேட்டு
வரதனாற்பணிப்புறுதொழில்யாவர்நாமறுக்கவென்றுரைசெய்தான். (கூங)

மூத்ததாதைதன்னோலையுமிளையவன்மொழியுமொத்தமைநோக்கி
வார்த்தைவேறுமற்றொன்றையுமுரைத்திலன்மனுநெறிவழுவாதோன்
சேர்த்தநாகவெங்கொடியவனகொடியவன்சிந்தையினிலைதோன்றக்
கோத்தகோவைநன்றாயினுந்ததுவதோகுருகுலந்தனக்கென்றான். (கூச)

அடியுமாண்மையும்வலிமையுஞ்சேனையுமழகும்வென்றியுந்தத்தங்
குடியுமானமுஞ்செல்வமும்பெருமையுங்குலமுமினமுந்தேசும்
படியுமாமறையொழுக்கமும்புகழுமுன்பயின்றகல்வியுஞ்சோ
மடியுமான்மதியுணர்ந்தவர்சூதின்மேல்வைப்பரோமனம்வையார். (கூரு)

* கோனுவன்று என்றும் பாடம்.

குழகராயிளமடந்தையர்க்குருகுவோர்குறிப்பிலாமைபினுளும்
பழகுவார்மிகச்சிந்தைநோய்தாங்களேபடக்குமாறுணராம
லழகுபோறிவாகவேகொண்டவாறததொழில்புரியாமற்
கழகமாடவும்பெறுவரோவிதனினுங்கள்ளுணவினிதன்றே. (௬௬)

மேதகத்தெரிஞானநூற்புலவரும்*வேத்துநூலறிந்தோரும்
பாதகத்திலொன்றென்னவேமுன்னமேபலபடப்பழித்திட்டார்
தீதகப்படுபுன்றொழிலிளைஞரிற்சிந்தனைசிறிதின்றித்
தோதகத்துடனென்னையோசகுனிதன்சூதினுக்கெதிரென்றான். (௬௭)

தன்கருத்தினினிகழ்ந்தவாறிம்முறைதருமன்மைந்தனுங்கூறி
யென்கருத்தினுற்பெறுவதென்விதியினையாவரேயெதிர்வெல்வார்
மன்கருத்தையுமவன்றிருவுளநிகர்மகன்கருத்தையுநோக்கி
நின்கருத்தைநீயுரையெனவிதுரனுநிகழ்ந்தனவுரைக்கின்றான். (௬௮)

இங்குநீயெனக்கியம்பியயாவையுமியானுமன்னவர்கேட்ப
வங்குநீர்மையின்மொழிந்தனனென்மொழியார்கொலோமதிக்கிற்பார்
பொங்குநீருடைப்பூதலத்தலைவகேள்புனைந்தநின்னிதயத்துத்
தங்குநீர்மையிற்புரிகெனப்புதல்வனைத்தந்தையுந்தகச்சொன்னான். (௬௯)

அன்றுதாழ்புனற்றுறையினிற்கழுநிரைத்தரியவஞ்சனைசெய்தான்
குன்றுபோலுயர்வாழ்மனைக்கொடுந்தழல்கொளுத்தினன்கொலைசூழ்ந்தான்
வென்றுசூதினில்யாவையுங்கவரவேவிரகினாலழைத்திட்டா
னென்றுதானமக்கன்புடைத்துணைவனாயிருந்ததவ்விகலோனே. (௭0)

முளையிலேயுயிர்கொல்வதோர்கடுவிடமுற்றிவன்காழேறி
விளையிலேதுசெய்யாதுமற்றவருடன்விழையுநண்பினிவேண்டா
வளையிலேதமேபுரிந்துமேன்மலைந்திடும்வன்படைகொடுமோதிக்
களையிலேநமக்கிருப்புளதென்றனன்காற்றருள்கூற்றன்னான். (௭௧)

தேறலார்தமைத்தேறலுந்தேறினர்த்தேறலாமையுமென்று
மாறலாருடன்மலைதலுமாறுடன்மருவிவாழ்தலுமுன்னே
யாறலாதனவாசருக்கென்றுகொண்டாசநீதியிற்சொன்னார்
கூறலாதனசொல்வதென்செல்வதென்கொடியவனருகென்றான். (௭௨)

விசையனிவ்வகைமொழிந்ததுமுந்துறவீமன்மாற்றமுங்கேட்டே
யிசைபெறும்பெயர்நகுலனுந்தம்பியுமேதுதறகாதென்றார்
வசையறும்புகழ்த்துணைவரின்றுரைத்ததேவார்த்தையாயினும்பெற்ற
வசைவிலன்புடைத்தந்தைசொன்மறுப்பதோவென்றனனறஞ்செய்வான். (௭௩)

ஆவியார்நிலைபெறுபவர்நீதிகூரரியவான்புகழன்றிப்
பாவியானதங்கணுதுருதொழியினும்பலித்திடுநினைவின்றி
மேவியானுடைமையன்வந்திருக்கமேல்வேரிவண்டெழுமன்றற்
காவியார்தொடைக்காவலனேவனுமறுப்பதுகடனன்றே. (௭௪)

---

* வேதநூலென்றும் பாடம்.

நாளையேசூதுமெங்கைதவாழத்தினகர்க்கெனத்தருமன்றன்
காளையேவலின்முரசறைந்தெங்கணுங்காவலர்குழக்கொண்டார்
வேளையேறியவரும்படைத்தலைவருமேல்வரும்புனலூடு
வாளையேறுதண்பழனநாட்டெறிபடைமன்னரும்வந்துற்றார். (எரு)

மாதுரங்கமமணிநெடுந்தேர்மதவாரணம்வயவீரர்
சாதுரங்கமுந்தந்திரத்தலைவருந்தாணிமன்னருஞ்சூழ
மீதுராங்கவின்கெழுபெருஞ்சேனைசூழ்வேந்தன்மாநகர்நற்ற
போதுராங்கமுநெளிந்தனபஃறலை* பொறுமையினிருநான்தும். (எசு)

ஐந்துபூதமேநிகரெனப்புலன்களோரைந்துமேயெதிரென்ன
வைந்துகாவுமேபொருவெனப்பணிமுடியைந்துமேநேரென்ன
வைந்துவாளியேயுறழ்வெனவேள்வியோரைந்துமேயொப்பென்ன
வைந்துவாசமேதாமெனவைவருமைந்துதேர்மேல்கொண்டார். (எஎ)

விழியினெஞ்சின்வானெருப்பினீடுதவியின்விதிபடைப்பினிற்றோன்றிப்
பொழியும்வெண்கதிரவகைமதியுமப்பொழுதுதித்தனவென்ன
மொழியுமைந்துபொற்றனிக்குடைநிழற்றினமுழுமதிவடிவின்க
ணிழியும்வெண்சுடர்க்கற்றையிற்சாமரமிரட்டினவிருபாலும். (எஅ)

மைத்திறத்தினின்றதிர்வனமுதிர்வனவரைத்திறத்தினுமோங்கு
மெய்த்திறத்தனவெழுதிறத்தினுமிகவிடுவனமததாரை
யெத்திறத்தினும்பொருதொழில்புரிவனவேழுறப்புறத்தாழ்ந்த
முத்திறத்தனவெண்ணலப்பிறப்பினமுரிவெங்களியானை. (எகூ)

வன்றபோதனரினுமிகுபொறையனவலனுயர்வனவெண்கோ
வென்றபோதகத்தானையின்பெருமையையெங்ஙனம்புகல்கிற்பா
நின்றபோதுடன்முகிலிடைமறைந்ததுநிரைநிரைநெறிப்பட்டுச்
சென்றபோதுவெம்படைக்கடற்செய்தசேதுபந்தனம்போலும். (அ0)

சுற்றுநீளமுமுயரமுநிகர்ப்பனசுழியின்மிக்கனதீமை
யற்றுமேதகுநிறத்தனகவினுடையவயவத்தனவாகி
யெற்றுமாமணிமுரசமுஞ்சங்கமுமெனுங்குரன்மிகுத்திப்பார்
முற்றுமாதிரத்தளவுமைங்கதியினான்முடிப்பனவிமைப்போதில். (அக)

ஆளிநெஞ்சமும்வார்த்தையுஞ்செங்கையுமாசனத்தொடுதாளுங்
கோளிலனபுறக்குறிப்பனவெவற்றினுங்குறைகளற்றனவாகி
யாளிகுஞ்சரம்வானமுதலியவியக்கினல்விசும்பெங்குந்
தூளிகொண்டிடமிடைந்துவந்தனநெடுந்துரகதம்பலகோடி. (அஉ)

வடிவுடைச்சிலதுரகதமரகதவண்ணமிக்கனவாகிப்
படியினிற்சிறிதமைவுறமிதித்திலபவனவெங்கதிபோல
முடிவிலிப்படிமிசைவரக்கருதியேமுனிவானுயிர்க்கெல்லா
மடிபடைத்ததுபடைத்ததிங்கிவற்றினுக்கவயவங்குறையாமல். (அங)

---

* பொறுவினிதிருந்தாலும் என்றும் பாடம்.

நீடுமால்வரையடங்கலுநிலைபெறநிற்குமால்வரைமண்மே
லோடுமால்வரையிவையெனத்தனித்தனியூர்ந்ததேர்பலகோடி
நாடுமால்வரைகடல்வனமெனுநிலனுமேயொன்றாகக்
கூடுமால்வரையில்லெனப்பரந்தனர்கொடியவெம்படைவீரர். (அச)

அதிர்முழக்கினகருமுகிலேழுடையண்டர்கோனகல்வானுக்
கெதிர்முழக்கெனமுழங்கினதனித்தனியின்னியமிடங்தோறு
முதிர்முழக்கிபமவற்றினுமும்மடிமுழங்கினவவைதாமும்
பிதிர்முழக்கெனமுழங்கினவலம்புரியுரகரிற்பிழைத்தோர்யார். (அரு)

எடுத்தநீள்கொடியாடைவானகல்வெளியெங்கணுநெருங்கிக்கீழ்ப்
படுத்தவானமேவானமாமறைந்ததுமீதறப்பகிரண்ட
மடுத்தபூதிவானதிக்கிலதெனவன்புடனுபகாரங
கொடுத்தமீனெனக்கால்பொரப்பரந்துபோய்க்குளித்தனகுளிர்தோயம். (அசு)

அழுந்தமேலிடுசேனையான்மிகவுநொந்தமாருக்கரைசெய்யச்
செழுந்தராதலமடைந்தைபொன்னுலகிடைச்செல்லுகின்றதுபோன்மே
லெழுந்ததூளிகளிடைவிடாதெங்கணுமெழுந்தெழுந்தெதிரோடி
விழுந்ததூளியுந்தடுத்தனநிலனுறவிசும்புறம்படிநின்றே. (அஎ)

முன்னர்மாருதமதலையுஞ்சேனையுமுடுகிவன்பொடுபோதப்
பின்னர்வாசவன்மதலையுந்தானையும்பெருந்தகவுடன்போத
வந்நராதிபரிருவருமிருபுறத்தரும்படையுடன்செல்ல
மன்னராதிபன்றராகணத்திடைமதியெனப்புறப்பட்டான். (அஅ)

அங்கண்மாநிலத்தரசர்தம்மகளிர்பேரரும்பிடிமிசைபோதச்
செங்கண்மாமயில்பாகபத்தினியும்வண்சிவிகையின்மிசைபோத
வெங்கண்மாமணிமுரசுயர்த்தருளியமெய்தவாமொழிவேந்தன
றங்கண்மாநகர்கடந்துவண்சாயையுந்தபனனுமெனச்சென்றான். (அகூ)

## வேறு.

ஏவினபல்லியமிடத்திலேவரத்
தாவினகுக்கிலுந்தருமன்றன்னெதிர்
வாவினநொடிங்கலைவாதநூல்வலோ
ரோவினருரைக்கவுமுணர்கலாமையால். (கூ0)

மடந்தையரளகமுமாந்தர்மாலையு
முடைந்தகுகடகரிமதமுமுன்னியே
தடந்தொறுமுரலளிதமரினம்புறத்
தொடர்ந்துடன்வரவரச்சோலையெய்தினார். (கூக)

சம்பகம்பாடலந்தமாலநாண்மலர்
வம்பெழுமிலைச்சுவார்வாவியாடுவார்
செம்பலவாமிரங்கதலித்தீங்கனி
யும்பரினமிழ்தெனவுடனருந்துவார். (கூ௨)

பச்சிளங்கமுகின்மென்பாளைசூடுவா
ரச்செழுங்காய்கனிகவர்ந்தருந்துவார்
கொச்சையங்கடைசியர்குழுமிவாழ்த்தவே
வச்சிரம்போல்பவர்மருதநீங்கினர். (கூங)

தடாநிறைவெண்ணெயுந்தயிருங்கொண்டெதி
ரடாமுடைநாறுதோளாயர்கைதொழப்
படாமுதன்முல்லையின்பரிமளங்கொளாக்
கடாமலைவயவர்தண்கானமெய்தினர். (கூச)

தேனினஞ்செறிதருதெரியல்வேலினான்
றானிரங்கருண்மிகுதருமனாதலாற்
கானிலங்குறைதருகலைகளோடிள
மானினம்போர்கலாமருங்குவைகுமால். (கூரு)

செறுவிளங்காளையர்சேனையின்றிறம்
வெறுவிளம்பொதுவியர்விழைந்துகாண்பபோன்
மறுவிளங்கிதழிநீள்வனமுமாமலர்க்
கருவிளங்கண்கொடுகலந்துகண்டவே. (கூசு)

புழைநெடுந்தடக்கைவெம்போதகங்களை
மழைமுகிலெனக்களிமயில்களாடின
தழலெழுகானகந்தண்ணெனும்படி
செழுமதவருவியினறிவலைவீசவே. (கூஎ)

வனநெறிகடந்துபோய்மன்னவர்க்கெலாந்
தினகரனெனத்தகுசெய்யகோலினா
னினமுகிறவழ்தலினிரங்குபேரிசைத்
தனிதவண்கிரிநெடுஞ்சாரலெய்தினான். (கூஅ)

குன்றுறைகடகரிக்குழாங்கள்சேனையி
னொன்றியகளிறுகண்டுட்கியோடின
துன்றியபுறவிபச்சுவடுகண்டுடன்
சென்றிலவெகுண்டிவன்சேனையானையே. (கூகூ)

வாளியின்வரும்பரிமாவின்வண்குரத்
தூளிகள்விசும்புறத்துன்றியோங்கலா
லாளிகள்சிகரமென்றதிர்ந்துபாய்வன
மீளியர்வேலின்வாய்வீழ்ந்துமாய்ந்தவே. (கOO)

கார்தவழ்கொடுமுடிக்கானமால்வரை
வார்தவழ்முலையாமாதரார்செவி
தார்தவழ்தடம்புயத்தரணிமன்னவர்
தேர்தவழோதையிற்செவிடுபட்டவால். (கOக)

வரைநிலங்கழிந்தெறிமகரவாரிதித்
திரைநிலம்புகுந்தனன்சேனைசூழ்வரப்
புரைநிலங்கடந்தறபுரியுநீர்மையா
னுரைநிலங்கடந்தசீருரைகொள்பேரினான். (௧௦௨)

ஒளிநலந்திகழ்வளையுறங்குநன்னிழற்
களிநறுஞ்சுரும்பிமிர்கண்டல்வேலிசூழ்
புளினமுங்கானலும்பொற்பநோக்கினா
னளினமும்புறந்தருநயனவேந்தனே. (௧௦௩)

பெருங்கடமலைக்குலம்பெயர்த்தும்வந்தன
மருங்கடர்பேரணைவகுக்கவேயெனா
விருங்கடகளிறதேரெண்ணில்சேனைகண்
டருங்கடல்வாய்திறந்தலறியார்த்ததே. (௧௦௪)

நன்னெடுந்துறையெலாநாளிகேரமோ
டின்னெடும்பனங்கனியெடுத்தருந்தினார்
புன்னையின்புதுமலர்புனைந்துகைதையின்
மென்னிழல்வைகினார்விலாசவீரரே. (௧௦௫)

நாநலம்புனல்கெழுநாடுங்கானமு
மேனலம்புனக்கிரியிடமுநெய்தலங்
கானலுமிவ்வகைகடந்துகாவலன்
றாநலந்திகழ்பதிதோன்றவெய்தினார். (௧௦௬)

அத்தினபுரிதனக்கருகுவால்வளை
முத்தினநிலவெழமுகைக்குந்தாமரைத்
தொத்தினபொய்கையுஞ்சுரும்பருமலர்க்
கொத்தினசோலையுங்குறுகிவைகினார். (௧௦௭)

மொட்டினபருமணிமுடிகொடேர்ப்பரி
வெட்டினபரிகளும்வெம்மையாறின
மட்டினபரிமளமரங்கள்யாவையுங்
கட்டினகழைபொருகவளயானையே. (௧௦௮)

தரித்தனர்வீரருந்தீத்தமாதருஞ்
சரித்தனசும்மைகடங்குபண்டியும்
பரித்தனநன்னிறப்படங்குவீடுகள்
விரித்தனரிடந்தொறும்வேந்தரெய்தினார். (௧௦௯)

கைவருதண்டுடைக்காளைவெஞ்சிலை
தைவருசெங்கையான்றுரைவெம்பரி
மெய்வருகுமரன்மேல்விடலைவேந்தனோ
டைவருமமர்ந்தனராண்மையேறனார். (௧௧௦)

மறத்திருந்தானையான்வஞ்சமெண்ணினா
னறத்திருந்திலனெனாவஞ்சியந்தவூர்
புறத்திருந்ததுவெனப்புனிதனைபாசறை
நிறத்திருந்ததுபிறநிகர்ப்பவில்லையே. (௧௧௧)

மீண்டவர்வரிசிலைவிதுரனேவலாற்
பாண்டவர்வரவுமுனபணிந்துகூறவே
மாண்டவர்குறிப்புறுமாயவஞ்சகம்
பூண்டவர்களித்துமெய்யுளகமேறினார். (௧௧௨)

தேசறையிடங்களுந்தேங்கொள்கானமு
மூசறைமதுகரமொய்த்தசோலையும்
வீசறலவனநதிவிதமுமேல்கொளப்
பாசறையிருந்தவாபகரலாகுமோ. (௧௧௩)

விருந்துறுசேனைவெவ்வீரரின்னமு
தருந்தினர்மெய்தளிர்ந்தசைவுதீர்தலும்
வருந்தினரிவர்துயில்வதியவேண்டுமென்
றிருந்தபனனுமிவாக்கிரவுநல்கினான். (௧௧௪)

மண்வளர்பெரும்புகழ்மன்னரைவரும்
பண்வளர்நல்லிசைப்பலமகிபரும்
கண்வளர்பாளையங்காணவெண்ணியே
விண்வளர்குபேரனும்விழைந்துதோன்றினான். (௧௧௫)

மருண்மிகுசுரும்பினமணந்தசோலையி
னிருள்களினிடையிடையெறித்தவெண்ணிலா
வருணுடைமைந்தர்தோளணைந்தமங்கையர்
புரிதுழனெகிழ்ந்தவெண்போதுபோலுமே. (௧௧௬)

கானிடைசிலசிலகடிகொடேனுமிழ்
தூநிறமுல்லைகண்மலர்ந்துதோன்றமால்
வானிடைமுறைமுறைவளருமாமதி
மேனியினமிழ்துமிழ்விந்துவென்னவே. (௧௧௭)

பொருவில்வெண்டுகில்கொடிபொதிந்ததென்னவே
பரிநெடுந்தேர்மிசைப்பானிலாவெழக்
கிரணவெண்படைக்கெதிர்கெடாமனின்றபே
ரிருளெனவிளங்கினயானைவெள்ளமே. (௧௧௮)

பரியனகந்துகப்பரிந்துமாமதக்
கரிசிலபாகையுங்கைகடந்தன
வரிவையர்பலர்துயிலனந்தலோடுதஞ்
சுரிகுழன்மேகலைசோரவோடினார். (௧௧௯)

நீடுறுதருக்களினிரைத்தமாவதன்
கோடிறவெறிந்துகைக்கொள்ளுமோதையான்
மாடுறுபொங்கர்வாய்வதிந்தபுள்வெரீஇப்
பேடொடுசேவன்மெய்பிரிந்துநேடுமால். (கச0)

ஊதையின்மானசைவுறப்பொருவட
மோதுறு முளையுடன் முடுகுவேட்டமாய்த்
தீதறுபரிசிலசெல்வனபாசறை
மாதிரமுறப்பலவாளிபோதுமால். (கசக)

ஆடுவர்சிலர்சிலரைவர்வான்புகழ்
பாடுவர்சிலர்சிலர்பாயலின்புறக்
கூடுவர்சிலர்சிலர்கோதைமாதரோ
டூடுவர்சிலர்சிலரோகைவீரரே. (கசஉ)

பஞ்சவர்வாழ்வுறுபதம்பொறுமையின்
வஞ்சகமியற்றுவான்மனங்கொலென்னவே
மிஞ்சியகுளிர்மதிமேற்பொருதிகற்
செஞ்சுடரவன்குணதிசையிற்றோன்றினான். (கசங)

வேறு.

துயிலுணர்ந்துபைந்தொடையன்மார்பினன்
வெயிலெழுந்துதன் விரதமுற்றபின்
பயில்பெருஞ்சனம்பாசறைப்படுத்
தெயில்வளைந்தமாநகரியெய்தினான். (கசச)

இருமருங்கினுமிளைஞர்நால்வருந்
தருமவல்லியுந்தானுமாகவே
யருமடங்கலேறனையவாண்மையான்
குரவனின்புறுங்கோயினண்ணினான். (கசரு)

சிந்தையன்புறச்செல்வவாயிலோர்
வந்தமைந்தர்தம்வரவுகூறவே
முந்தையேவலான்மொழியவுள்புகுந்
தந்தமீளிசேவடிவணங்கினார். (கசசா)

தம்பிமைந்தரைத்தழுவிநும்மையின்
றெம்பிகாணநல்வினையியன்றிலா
னும்பிமாரொடுமொத்துவாழ்கநீர்
நம்பியென்று* நன்னயம்விளம்பினான். (கசஎ)

பாவைதன்செழும்பணிவுகூறலு
மேவிவாழ்கெனுமெய்களிக்கவே
தேவிதன்னுழைச்செல்கவென்றுகொண்
டேவிமைந்தரோடிவைவிளம்பினான். (கசஅ)

---

* தன்னயம் என்றும் பாடம்.

கருமநீதிசேர்கல்விமந்திரம்
பெருமையாண்மை* தாள்பீடுநீடுபேர்
தருமம்யாவுநுந்தன்மையாதலா
லருமையின்றியேயரசுசெல்லுமே. (௧௨௯)

இகலெறிந்துநீளிராயசூயமா
மகமுழந்ததும்வண்மைசெய்ததுந்
திகையடங்கலுந்திறைகொணர்ந்ததுந்
தொகுதிகொண்டதுந்துணைவர்கூறினார். (௧௩௦)

எண்டிசாமுகத்தெல்லையெங்கணுங்
கொண்டதாகுமுன்குருகுலத்துளோர்
துண்டியாமனுந்துணைவர்தம்மொடும்
பண்டுபோலமண்பரவவைகுவீர். (௧௩௧)

சேணிருந்துநுஞ்சீர்செவிப்படுத்
தியாணரன்புகூரினிமையனறியே
பூணலம்பெறும்பொறபொடுங்களைக்
காணுமாறுசெங்கண்படைத்திலேன். (௧௩௨)

நேயமுண்டுபோனெஞ்சொடின்னசொற்
றாயமைந்தரைச்சொல்லிநீவிர்போ
யாயையும்பணிந்தெந்தைதாண்மலர்ச்
சேயபங்கயஞ்சேர்மினென்னவே. (௧௩௩)

இருந்தமைந்தருமேவலோடுசென்
றருந்ததிக்குநேரன்னைதனையும்
பரிந்திறைஞ்சினார்பயிலவாழ்த்தினா
டிருந்துபூணினாள்சிறுவர்தம்மையே. (௧௩௪)

முந்தவந்துதாண்முளரிகைதொழு
மந்தண்வல்லியுமைவர்மைந்தரும்
வந்துநிற்றலுமகிழ்வொடுன்னினாள்
குந்திசெய்தவங்கூருமென்னவே. (௧௩௫)

வேயைவென்றதோண்மின்னையங்குவைத்
தியாயையும்பணிந்தெழில்கொடேளினார்
போயகண்டமும்போற்றுகங்கையாள்
சேயையன்புடன்சென்றிறைஞ்சினார். (௧௩௬)

வேந்தழைத்ததும்விதுரனேவலிற்
போந்தழைத்ததும்புகலவந்ததுந்
தாந்தழைக்கவேதந்தைதந்தைமுன்
றேந்தழைத்ததார்ச்செல்வர்கூறினார். (௧௩௭)

---

* நற்பீடுபேசருந், தருமம் என்றும் பாடம்.

புள்ளலங்கலார்புரிவுரைத்திடக்
கொள்ளைவன்றிறற்குருகுலேசனுங்
கள்ளவஞ்சர்வெங்கருவிசெய்பினு
முள்ளதுண்டெனுமுண்மைகூறினன். (கந௮)

தாதைதாதையைத்தாமகன்றுபின்
கோதைவெஞ்சிலைக்குருவைமைந்தனைக்
கீதநான்மறைக்கிருபனைச்சச பூம
பாதகஞ்செய்தார்பரிவொடேகியே. (கநகூ)

சதுரமாமறைத்தலைவர்தங்களா
லெதிர்மொழிந்தபோரசியெய்தியே
மதுரமனறனுண்மாலைமன்னனும
விதுரன்மந்திரமீளமன்னினா. (கச0)

தமதின்மெய்யுறத்தம்மதாகவே
யமிழ்தருந்தியங்கவரிருந்தபின
றிமிரநாசனைச்செய்யமேனியன
கமலநாயகன்கடலின்மூழ்கினான். (கசக)

தினகரன்கரந்திகழ்கமண்டலம்
பனிகொள்செக்கர்தம்படமதாகவே
யினியவந்தனைக்கெறியும்வேலைசேர்
புனிதரொத்ததப்புன்கண்மாலையே. (கசஉ)

காய்ந்தமெய்ச்செழுங்கதிரவன்கர
மேய்ந்தவப்பதத்தெழிலெறித்தலா
லாய்ந்துபத்திகொண்டடர்பசும்பொனால்
வேய்ந்ததொக்குமால்வேந்தன்மாடமே. (கசந)

மன்குலத்துளோர்வஞ்சகஞ்செயா
ரென்குலத்துளோரென்கொலீதெனத்
தன்குலத்துளோர்தமைவிலக்கவோ
நன்குலத்துளானுதயநண்ணினான் (கசச)

குருகுலாதிபன்கொடியநெஞ்சமே
யிருணிறைந்ததென்றியாம்வெறுக்கவோ
மரபிலாதியாமதியுமெண்ணினுட்
கரியனென்னுமாகாணலானதே. (கசரு)

உண்ணிலாவுபேரொளிமழுங்கிநீள்
வெண்ணிலாவினால்வெளுத்தவெங்கணுங்
கண்ணிலான்மகன்கருமையஞ்சியிம்
மண்ணிலார்வெளாவடிவமெய்தினார். (கசசு)

விந்தைவாழ்வுகூர்விறன்மிகுத்ததோண்
முந்தையோதைமாமுரசுயர்த்தவன்
சிந்தைகாமுறத்தெரிவைவந்திளந்
தந்தைகோயிலிற்றனுநண்ணினாள். (கசஎ)

மங்குல்சுற்றுமாமண்டபத்திடைக்
கங்குலிற்றடங்கண்டுயின்றபின்
பொங்குசூலைப்படும்பொற்றசும்பெனச்
செங்குலக்கதிர்த்திகிரிதோன்றவே. (கசஅ)

பாயன்மன்னுகண்படையுணர்ந்துளந்
தூயவன்பொலஞ்சுடர்பணிந்தபின்
சாயையன்னதன்றம்பிமாரொடுஞ்
சீயமென்னவேதிகழவைகினான். (கசகூ)

முனிவரர்க்கெலாமுதன்மையாகவே
தனதனிற்பெருந்தானமுய்த்திடுட்
பனுவல்வித்தகப்பாவலர்க்கெலாங்
கனமெனத்தருங்கனகமாரியே. (கநுo)

கண்டுகண்டுதன்கழல்வணங்குமா
மண்டலேசருமாலைமன்னருங்
கொண்டுவாழ்வுறக்குரகதங்குடை
தண்டுசாமரந்தந்திநல்குமே. (கநுக)

பூந்தண்மாமலர்ப்பூவைகொங்கைதோ
யேந்துதோளினனிவணிருந்துழிப்
பாந்தளங்கொடிப்பார்மகிபனைச்
சேர்ந்தமன்னர்தஞ்செயல்விளம்புவாம். (கநுஉ)

வேறு.

ானுமாமனுங்குறித்ததம்பிமாருமங்கர்தங்
கானுமாசிறந்தைதந்தைகொடுமரக்கைவிதுரனும்
ானுலாவுபுகழ்படைத்தமைந்தனுந்துரோணனு
மனையோரும்வந்துகூடியினிதிருந்தவெல்லையே, (கநுங)

ண்டபத்தினழகுகாணமன்னரைவர்தம்மைநீ
காண்டிமைப்பின்வருகவென்றுகொற்றவன்பணிக்கவே
'ண்டுசுற்றுமாலைமார்பன்வண்பிராதிகாமிவா
ரண்டர்கற்பமெனவிருந்தவரசர்தம்மையணுகினான். (கநுச)

சன்றியாகபதிகழற்றிருப்பதம்பணிந்துகீழ்
ன்றுவாய்புதைத்தறங்கணிலைபெறுஞ்சொனீதியாய்
வன்றிவீரன்மண்டபத்தின்விரிவுகாணவேண்டுநீ
புன்றுகூறியேவினனிங்கென்னையென்றியம்பினான், (கநுரு)

ராயசூயபன்னிதன்னையெந்தையில்லில்யாயொடும்
போயிருந்து வருகவென்றுபுரையிலாமனத்தினான்
சீயமன்னதுணைவரோடுசென்றுபுக்குநன்றியில்
பேயிருந்ததெனவிருந்தபீடிலானையெய்தினான். (௧௫௬)

மன்னிருந்தபேரவைக்கண்வந்துமுந்தைவரிசையான்
முன்னிருந்ததாதைதவமிசைமுதல்வன்ஞானவிதுரனென்
றின்னிருந்ததலைவர்தாளிறைஞ்சிமுன்னரிட்டதோர்
மின்னிருந்தவாசனத்தின்மீதிருந்துவினவினான். (௧௫௭)

இந்தமண்டபஞ்சமைந்தவினிமைதன்னையென்சொல்வேன்
முந்தைமண்டபங்களுக்குமுதன்மையானதேவரு
ரந்தமண்டபத்துமில்லையதனையன்றிமண்ணின்மே
லெந்தமண்டபத்துமில்லையிதனினுள்ளவெழிலரோ. (௧௫௮)

எனவியந்துதருமராசனினிதியம்பயாளிவெஞ்
சினவிலங்கலென்னுமாறுசேரவந்தவிளைஞரு
மனுவிளங்குமுறைமையான்வணங்கிமன்னர்மன்னன்முன்
றனதனங்கிருப்பதன்னதவிசின்மீதுவைகினார். (௧௫௯)

புரைகொள்பாவமேநிறைந்துபுண்ணியங்குறைந்துநீ
ணரகினாழிகாலம்வாழ்திநாகர்வாழ்வினுள்ளதுந்
தரணிமீதுபெறுகவென்றுதந்ததொக்கும்வானுளோ
ரரவவேறுயர்த்தவீரனன்றிருந்தபெருமையே. (௧௬௦)

மாயமொன்றுமெண்ணலாமனத்தின்மிக்கமாமனு
நீயுமின்றுசூதுகொண்டுநிகழ்விலாசமயர்விரோ
வாயவென்றியையனில்லிலமுதமன்னபோனகம்
போயருந்துமளவுமிங்கிருந்துபோதுபோகவே. (௧௬௧)

மீதெடுத்தவஞ்சராகிவெகுளிசெய்தல்பிறர்பெருங்
கோதெடுத்துரைத்தனண்புகொண்டயிர்த்தல்கொடியவெஞ்
சூதெடுத்துவிழைதலுற்றசூள்பிழைத்தலின்னவே
தீதெடுத்தநூலின்முன்புதீயவென்றுசெப்பினார். (௧௬௨)

வாதுகொண்டுகாதல்கூருமாமனோடுவஞ்சனைச்
சூதுகொண்டுபொருதழிந்துதோல்வியெய்தவேண்டுமோ
தாதுகொண்டுதேனிரங்குதாமமார்பநெஞ்சினி
ரேதுகொண்டதுநுமக்களிப்பனிம்பரென்னவே. (௧௬௩)

ஒப்பிலாதவேள்விமன்னனுரையுணர்ந்துசகுனியுந்
தப்பிலாதகவறுருண்டதாயமெங்குமொக்குமால்
வைப்பிலாண்மையன்றிவேறுவஞ்சமில்லையுண்டெனச்
செப்பிலார்கொலிவ்வனையாடவருகவென்றுசெப்புவார். (௧௬௪)

வேணுமாகில்வேணுமன்றிவிரகெனக்கழன்றுதா
னுணுமாகில்விடுதியேநடக்கவென்றுநவிலுவீர்
பூணுமாகிலினிமையோடுபொருதுமற்றிருந்தநீர்
காணுமாறுநாணுமின்றுகற்றவாறியற்றலாம். (௧௬௫)

நீடுகின்றதருமநீதிநிருபகேள்விழைந்துநா
மாடுகின்றசூதில்வெற்றியழிவுநம்மிலொக்குமால்
வாடுகின்றமிடியர்போலவஞ்சமென்றுரைத்துநீ
யோடுகின்றதொட்டுகின்றவொண்பொருட்குலோபியோ. (௧௬௬)

யானெறிந்தகவறுவெல்லினிசைவெனக்களித்திநீ
தானெறிந்தகவறுவெல்லினதினிரட்டிதருகுவேன்
றேனெறிந்துதேனுகர்ந்துதேனெடுக்குமாலையா
யானெறிந்தகொலைஞர்போலவஞ்சல்வருதியாடவே. (௧௬௭)

என்றுமாமனுற்றுரைப்பவிவைதமக்கவ்வவையில்வே
றென்றுமாறுரைத்திடாதிட்டிரன்னிருக்கவும்
வென்றுமாறடக்கும்வாகைவிசயனும்வெகுண்டுளங்
கன்றுமாறுரைத்தனன்கொல்கன்னனென்னுமன்னனே. (௧௬௮)

போதுபோகுமாறிருந்துபொருதும்வருதியென்னவுஞ்
சூதுபோருமஞ்சியேதொலைந்துளாந்துளங்குவாய்
மோதுபோரிலெங்ஙனுய்திபிளைஞரோடுமுடுகுதேர்
மீதுபோயுன்னகரிதன்னின்விரைவினெய்துகென்னவே. (௧௬௯)

இல்லெடுத்துவிரகினோடுமெமையழைத்துமாயைகூர்
வல்லெடுத்துவருதலான்மறுத்தனன்மகீபனுஞ்
சொல்லெடுத்துவைதவாய்துணிப்பனென்றுகன்னன்மேல்
வில்லெடுத்தனன்பொறுமல்வீரவாளிவிசயனே. (௧௭0)

ஏதிலாரினெம்பிநீயிருக்கவென்றிருத்திமுன்
காதிலாரெனுடன்முனைந்துகண்விழிக்கவல்லபே
ரோதிலாண்மைகுன்றுமென்றுருத்தெழுந்துமாயநின்
சூதிலாடல்புரிதுமென்றுதருமனுந்தொடங்கினான். (௧௭௧)

நின்னைவெல்வினொட்டம்யாவுநீகொடுக்கநீயிவன்
றன்னைவெல்வின்யான்விரைந்துதருவனென்றுதருமனைப்
பின்னைவெல்லொணாதெனப்பிணிப்புடன்மருட்டினான்
மின்னைவெல்லும்வெய்யசோதிவேலிராசராசனே. (௧௭௨)

அவிர்பசும்பொன்மீளியாளியாசனத்திழிந்துபூந்
தவிசிலொன்றிடப்புகுந்துதருமன்வைகமாமனு
நவிரறுந்திசைப்புறத்துநன்னிலங்குறித்துநீள்
புவிபெருங்கருத்தினோடிருந்தனன்பொருந்தவே. (௧௭௩)

*கவளமானபணையின்யாளிகால்வருத்தபலகையிற்
பவளமானநீலமானகருவிமுன்பரப்பினார்
தவளமானகவறுகைதரித்துமெய்தரித்ததார்
துவளமானநிருபர்தம்மிலாடவேதொடங்கினார். (கஎ௪)

ஈரம்வைத்தசிந்தைமன்னனிசைவெனக்கழுத்தின்முத்
தாரம்வைத்துநீயுமாறழைக்கவென்னமாமன்மேல்
வாரம்வைத்தநெஞ்சினானும்வருகவென்றுமாமணிச்
சாரம்வைத்தவலயமொன்றுதானுமுன்னர்வைக்கவே. (கஎரு)

இருவருங்கவற்றினாலெறிந்தபோதெறிந்தவா
றொருவருங்குறிக்கலாவுபாயமாயிருத்தலான்
மருவருஞ்புயத்தலங்கன்மாமன்வெல்லமன்னருள்
வெருவருங்களிற்றினானுமேல்விருப்பமிஞ்சினான். (கஎசு)

வைத்தவாரமவனெடுக்கமாயவன்கொடுத்தநன்
மெய்த்தவாததேர்குறித்துமீளவும்பரப்பினான்
மொய்த்தவாசமாலைமார்பின்முடிமகீபன்மகிழ்தரப்
பொய்த்தவாடல்வல்லமீளிபொருதுவென்றிபுனையவே. (கஎஎ)

தேர்கொடுத்தபின்னுமாறுசெப்பியுள்ளதேர்மதக்
கார்கொடுத்துமெண்ணிலாதகவனமாக்கொடுத்துமப்
பார்கொடுத்துமாசுகூர்பதங்கொடுத்துமரியதம்
மூர்கொடுத்துமதனினுள்ள†மொழிவுறாமலோடவே. (கஎஅ)

வெங்கிராதவனமெரித்தவிசயனுக்குவிஞ்சைய
னங்கிராமகிழ்ந்தளித்தவாடன்மாவுமளகநீள்
பொங்கிராமணஞ்சிறந்தபோகமாதர்பலருமன்
றிங்கிராநரேசனுற்றவிசைவினாலளிக்கவே. (கஎகூ)

யாவையுங்கொடுத்திருப்பவிளைஞரோடுமெய்த்தவக்
கோவையுங்குறிக்கவென்றுகுருகுலேசன்மொழியவே
யீவையுங்குறித்துவெற்றியெய்தவெய்தவிவர்கடம்
வீவையுங்குறித்துவென்றமேன்மையான்விளம்புவான். (கஅ0)

உன்னையுங்குறித்துவன்புரைத்ததம்பிமாரினந்
தன்னையுங்குறித்திசைந்துதருகவந்துபொருகெனப்
பின்னையுங்குறிப்புறாதுபொருந்துகைபிழைக்கமே
லென்னையுங்குறிப்பெனாமுன்விரகினால்வியம்பினான். (கஅக)

மெய்வருந்திறத்தினும்மைமெவெல்லுமாறுவேறலா
லைவருந்திருந்தவெங்களடிமையின்னராயினீர்
மைவருந்தடங்கண்வேள்விமாதுதன்னையொட்டிநீ
கைவருங்கவற்றினின்னமெறிகவென்றுகழறினான். (கஅஉ)

---

* கவளயானைபணையில்யாளி என்றும் பாடம்.

† ஒழிவிலாமலொட்டவே என்றும் பாடம்.

அன்னபோதிலருள்விதுரனந்தனைப்புகன்றெழா
நின்னபோதமன்றிவேறுநிருபர்தாநினைப்பரோ
வின்னபோதுமோரமக்கியற்கையன்றிதென்றுநீ
சொன்னபோதுநேயமைந்தர்சொன்னசொன்மறுப்பரோ (கஅரு)

திருகுநெஞ்சின்வஞ்சராகியிளைஞர்தீமைசெய்தகா
லுருகுகின்றதாதைநீயுடன்படுத்திருப்பதோ
மிருகமன்றுபறவையன்றிரக்கமின்றிமேவுநின்
னருகுவந்தணைந்ததெங்களறிவிலாமையாகுமே. (கஅச)

பின்பிறந்ததம்பிமைந்தர்பீடழிந்திரங்கவே
முன்பிறந்ததமையன்மைந்தர்மொய்ம்பிலுலடர்ப்பரோ
வன்பிறந்ததேனுநீதியழியநீநடத்தினு
லென்பிறந்துமுடியுமண்ணிலெண்ணில்காலமின்னுமே. (கஅரு)

வருமமிஞ்சவிவனைவென்றவஞ்சமன்றிமற்றிவன்
றருமவஞ்சிதனையிசைந்துபொருதுமென்கைதருமமோ
கருமமன்றுனக்குநாசகாலம்வந்ததாகலிற்
பெருமதஞ்சமின்றிநெஞ்சுபேருமென்றுபேசினன். (கஅசு)

விதுரனைந்துநீதிகூறவிழியிலாமையன்றியே
*வெதிரனுங்கொலென்னுமாறுவிழியிலானும்வைகினன்.
சதுர்புரிந்தசகுனிசொல்லையெதிர்புரிந்துதருமனு
மதிரவஞ்சமுதிரவந்தவருளிலானொடாடினன். (கஅஎ)

காயமுற்றும்வஞ்சமேகலந்ததன்னகள்வன்மே
னேயமுற்றுநின்றுதானுநிகர்பிடித்ததென்னவே
மாயமுற்றகவறுமந்தமாமன்வல்லபத்திலே
தாயமுற்றிடங்கொடாதுதருமனைச்சதித்ததே. (கஅஅ)

இன்னதாயம்வேண்டுமென்றெறிந்தபோதுமற்றவன்
சொன்னதாயமேபுரண்டுசேர்விலாமல்வருதலிற்
றன்னதாயவரசுவாழ்வுதாரணிமன்னனல்கினு
னன்னதாயபோதுநெஞ்சசைந்திலானசஞ்சலன். (கஅகூ)

வேறு.

மூரசினையுயர்த்தகோமான்மொழிந்தனமுழுதுந்தோற்றுப்
பாசுவதொன்றுமில்லாப்பான்மையோடிருந்தகாலை
விரைசெறியலங்கல்சோரமெய்குலைந்துள்ளம்வெம்பி
யாசவையிருந்தோர்தம்மிலருளிலுலழிந்துநொந்தார். (ககூ0)

குருமரபுடையவேந்தன்கொடியனேகொடியனென்பார்
மருமகனுயிருக்கிந்தமாமனேமறலியென்பார்
தருமனித்தனைநாட்செய்ததருமமும்பொய்யோவென்பா
ருருமினுங்கொடியவீமனுருத்தினியெழுமோவென்பார். (ககூக)

* பெதிரனுங்கொலென்னுமாறுபெரியதாதைவைகினன் என்று ஏட்டுப்பிரதிகளிலிருக்கிறது.

பாந்தளேறுயர்த்தவேந்தன்பார்த்திலனுறவுமென்பார்
மாய்ந்தவேயறமுந்தேசுமனுநெறிவழக்குமென்பார்
பூந்தழற்பிறந்தபாவைபுண்ணியம்பொய்யாதென்பார்
சேந்தனனிருகண்பாரீர்தேவர்கோன்மதலையென்பார். (௧௯௨)

பழியுடைத்தந்தையொன்றும்பகர்கலாதிருக்குமென்பார்
விழியுடையவரையன்றேமேன்மையோர்வெறுப்பதென்பா
ரழியுமேயிவனுன்மைந்தரரும்பெருஞ்செல்வமென்பார்
வழிவழியாகநிற்கும்வசையிவன்புரிந்ததென்பார். (௧௯௩)

இன்னனதரணிவேந்தரிருந்துழியிருந்துகூற
மன்னனுந்தம்பிதானுமாமனுமாருவண்மைக்
கன்னனுந்தம்மினெண்ணிக்கங்கைமாமகனைநோக்கிப்
பன்னகதுவசன்கேட்டோர்பலருமெய்பனிக்கச்சொல்வான். (௧௯௪)

தண்ணியதருமன்செய்தபாவமோசகுனிசெய்த
புண்ணியநெறியோவந்தப்பொதுமகள்யாகசாலை
நண்ணியதவறேமற்றைநால்வருந்தகைமைகூர
வெண்ணியமதியோவெண்ணினிங்ஙனம்விளைந்ததென்றான். (௧௯௫)

தகாமொழிதலைவன்கூறத்தவத்தினுயர்ந்தகோவு
நகாமாபியற்கையன்றாநம்பினும்புன்மைகூறன்
மிகாதினிநிகழ்ந்தசெற்றம்விடுகெனச்செவியிற்சற்றும்
புகாதுளம்வெகுளிகூரப்புரிந்தனன்போதமில்லான். (௧௯௬)

இரங்கிநின்றுருகுநெஞ்சினிளையதன்பிதாவைநோக்கி
யாங்கடிசமாவேலானழல்பொழியுருமிற்சொல்வா
னுரங்குடியிருந்ததோளானுரிமையினெமக்குத்தோற்ற
துரங்கமுங்களிறுந்தேருந்துறைதுறைகவரச்சொற் (௧௯௭)

தொல்லைமாநகருநாடுந்தோரணநாட்டச்சொற்றி
யெல்லையினிதிகளெல்லாமிம்பரேயெடுக்கச்சொற்றி
நல்லெழின்மடவார்தம்மைநம்பதியெய்தச்சொற்றி
சொல்லியவிளைஞர்தாமுந்தொண்டினாராகச்சொற்றி. (௧௯௮)

இவர்தமக்குரியளாகியாகபத்தினியுமான
துவரிதழ்த்தவளமூரற்சுரிகுழறன்னைபின்னை
யுவரலைப்புணரியாடையுலகுடைவேந்தர்காணக்
கவர்தரப்புகறியென்றான்கண்ணருள்சிறிதுமில்லான். (௧௯௯)

அறந்தருமைந்தன்றன்னையறனலாதியற்றிநம்பி
திறந்தருசெல்வம்யாவுந்தீமையிற்கவர்தலுற்றாய்
மறந்தருவலியுமன்றுமணந்தருவாழ்வுமன்று
நிறந்தருபுகழுமன்றுநெறிதருமதியுமன்று. (௨00)

திருத்தகமொழிந்தவெல்லாஞ்செய்தனையெனினுஞ்செவ்வி
மருத்தருதெரியன்மாலைமாசிலாமன்னர்முன்ன
ருருத்தருகற்பினாளையுரையலாதுரைக்குமாற்றங்
கருத்தினினினையல்கண்டாய்கடவுளர்கற்பம்வாழ்வாய். (உ0க)

விண்ணிலங்கருகித்தோன்றுமேதகுவடமீனன்றி
மண்ணிலங்குவமைசொல்லமடந்தையர்யாருமில்லாப்
பண்ணலங்கடந்தமென்சொற்பாவையைப்பழிக்கநீயின்
றெண்ணின்முன்கேட்டவார்த்தைக்கேற்றதன்னெண்ணமென்றான். (உ0உ)

கேட்டசொல்வினவுநாககேதனன்கேட்பமீண்டும்
வாட்டமிலன்பினோடுமனங்கனிந்துருகிவீழ
நாட்டமுநன்னீர்மல்கநாவமிழ்தூறப்பின்னுங்
கோட்டமில்சிந்தையானுங்குரிசிலுக்குரைக்கலுற்றான். (உ0ங)

தானவராகியும்மைத்தனித்தனியிறந்தோர்யாரு
மானவராகியிம்மைவந்தனரிம்பரென்றே
தானவர்பொறைபொறுபற்றாதலமென்னுஞ்செங்கண்
மானவராகவேதமலர்முனிதனக்குச்சொன்னாள். (உ0ச)

நான்முகன்றானுமேனைநாகருநாகர்கோனும்
பான்முகந்தெறியும்வேலைப்பாம்பணைப்பள்ளிகொள்ளுந்
தேன்முகங்களிக்கும்பச்சைச்செவ்விவண்டுளபமாலை
மான்முகங்கண்டுகூறவந்தவாமாலுங்கேட்டான். (உ0ரு)

மின்னிடைவிளங்குமேகமேனியானவனிமானை
நின்னிடைவந்துதோன்றுநிருபானவரையெல்லா
முன்னிடைகடையொன்றின்றிமுற்றும்வெம்முரண்கொள்காலன்
றன்னிடைவிடுதுமென்றுசாற்றியேதளர்வுதீர்த்தான். (உ0சு)

அந்தவன்றிகிரியானுநம்மிலோராசனாகி
வந்தவதரித்தானென்றுமண்ணெலாம்வார்த்தையான
தெந்தவல்வினையாலெவ்வாறெய்துமென்றிதற்கேசால
நொந்துகண்டுயில்பெறுதேனோதகப்புரிந்தேன்மன்னோ. (உ0எ)

ஒருதிறத்தவனிமுற்றுமொருமையாற்புரக்குநீவி
ரிருதிறத்தவருநும்மிலிகலுறுமனத்திரானால்
வருதிறத்தானைவேந்தர்வகைபடக்குழூக்கொண்டோடிப்
பொருதிறப்பதற்கேசற்றும்புரிவிலீர்புரிகின்றீரே. (உ0அ)

என்றவனுரைப்பத்தானுமெறிந்துகைநகைகொண்டாடி
யன்றவனிதயம்வெம்பவவமதிபலவுங்கூறி
நின்றவனொருவன்றன்னைநீநனிவிரைவினோடிச்
சென்றவணிருந்தகோலத்தெரிவையைக்கொணர்தியென்றான். (உ0கூ)

பெருந்தகையேவலோடும்பிராதிகாமியுமங்கேகி
வருந்தியமனத்தனாகிமாசறுமரபின்வல்லி
யிருந்துழியெய்துருமலிடைவழிநின்றுமீள
விரைந்தனனோடிவந்துவேந்தனுக்கேற்பச்சொன்னான். (உ௧0)

வேறு.

என்னைத்தோற்றுமனுநெறிகூறிசையோன்றன்னைத்தோற்றனனோ
தன்னைத்தோற்றுத்தனதுமனத்தளர்வாலென்னைத்தோற்றனனோ
முன்னைத்*தோற்றதோற்றபொருண்முற்றுங்கவருமுறையன்றிப்
பின்னைத்தோற்றபொருள்கவரப்பெறுமோநினைக்கப்பெறுதென்றாள். (உ௧௧)

செல்வப்பாவைதிருவுள்ளமிதுவென்றந்தத்தேர்ப்பாகன்
சொல்லப்பாவிதரியாமற்றுச்சாதனனைமுகநோக்கி
யல்லற்பான்மைபெற்றழிந்தவைவர்க்கொருத்தியாகியவம்
மல்லற்பானல்விழியாளைமன்பேரவையினழையென்றான். (உ௧௨)

நோன்றாள்வெங்கட்கடகளிற்றுநுழைவேலரசனுவறனுமே
யான்றார்கேட்கிற்செவிபுதைக்குமழல்கால்வெஞ்சொலறனில்லான்
றேன்றாநபனத்துணைவனைப்போற்றுணைக்கண்டுகிலிற்சூழ்ந்திருந்த
வீன்றாளில்லத்திருந்தாளையிகலோடெய்திவிவைசொல்வான். (உ௧௩)

தானேசூதுபொருதழிந்துதலைவன்றனக்குன்பதியான
கோனேசொல்லியாவையுமுன்கொடுத்தான்கொடுத்தபின்னிசைவு
யானேயென்றும்வீமன்முதலினையோரென்றுமென்வேள்வி
மானேயென்றுங்குறித்திழந்தான்வழக்கால்வென்றேம்வருவாயே. (உ௧௪)

பொன்னைச்சிரிக்கும்பூங்கோயிற்புனல்வாவியிலென்றெங்கள்குல
மன்னைச்சிரித்தசெங்கனிவாய்மாறுதிரங்கியழுதாற்ற
மின்னைச்சிரிக்குநுண்ணிடையாய்வேந்தர்க்கெதிருன்மெய்க்கணவன்
றன்னைச்சிரிக்கவிருக்கின்றசளநீகாணிற்றறியாயே. (உ௧௫)

தலத்துக்கியையாதைவரையுந்தழுவித்தழுவித்தனித்தனியே
நலத்துப்பொய்யேமெய்போலநடிக்குஞ்செவ்விநலனுடையாய்
குலத்திற்பிறந்தாயாமாகிற்கூசாதென்பின்போதுகெனப்
பெலத்திற்செங்கைமலர்தீண்டிப்பிடித்தான்சூழ்ச்சிமுடித்தானே. (உ௧௬)

†சிலைவாயங்கையவன்றீண்டச்செல்லாளாகியல்லலுழந்
துலைவாயழல்போனெடிதுயிராவுள்ளந்தளராவுடனடுங்காக்
கொலைவாயெயினர்கொல்லுநிலங்குறித்துச்செறித்தகொடியநெடு
வலைவாயொருதானகப்பட்டமான்போன்மாமிமருங்குற்றாள். (உ௧எ)

---

* தோற்றுத்தோற்ற என்றும் பாடம்.

† சிலைவாயணங்கை யென்றும் பாடம்.

பூவார்குழலிதளர்வொடுதன்புறஞ்சேர்பொழுதுஞ்சிறிதிரங்கா
ணீவாவென்றேயருகிருத்திநெடுங்கண்பொழியுநீர் துடையாண்
மேவாரல்லர்தமரழைத்தான்மேலுன்கருத்துவிளம்பிவரப்
பாவாயஞ்சாதேகென்றாள்பலபாதகரைப்பயந்தாளே. (௨௧௮)

தண்டார்விடலைதாயுரைப்பத்தாய்முன்னணுகித்தாமரைக்கைச்
செண்டாலவள்பைங்குழல்பற்றித்தீண்டானுகிச்செல்கின்றான்
வண்டார்குழலுமுடன்குலையமானங்குலையமனங்குலையக்
கொண்டாரிருப்பரென்றுநெறிக்கொண்டாளந்தோகொடியாளே. (௨௧௯)

சூழுங்கனல்வாயுருமன்றித்துளிவாய்முகிலுமகிதலத்து
வீழுங்கொல்லோவுற்பாதம்விரவிற்றென்றேவெருஉக்கொள்ளாத்
தாழும்பெரியகரியகுழலூரோடலையத்தழீஇக்கொண்டு
வாழுஞ்சுரும்புசுழன்றரற்றமண்மேல்விழுத்துவருகின்றான். (௨௨0)

தழலோவென்னுங்கற்புடையதனிநாயகிதன்றூமநறுங்
குழலோவுரகக்கொடிவேந்தன்குலமோகுலைந்ததிவணென்பார்
நிழலோபுவிக்குநெருப்பன்றேநெறியொன்றில்லாநீடுபொலங்
கழலோன்மதிவெண்குடையென்பார்கையாற்கண்டகண்புடைப்பார். (௨௨௧)

காட்டுந்திறல்வெஞ்சிலைவிசயன்கையால்வகிர்ந்துகடிகொண்மலர்
சூட்டும்பனிச்சையிவண்புழுதித்துகளேறியதென்றழுதுநைவார்
மீட்டுந்தடாமலேகென்றுவிட்டாண்மைந்தரிட்டவினை
கேட்டுங்கொடியள்காந்தாரிகிளையோடின்றேகெடுமென்பார். (௨௨௨)

இரும்போநெஞ்சமாமனிதற்கிசைந்தானெக்கவிருந்தென்பார்
பெரும்போரரசர்பெண்ணுடனேபிறந்துஞ்சிறப்பெறாரென்பார்
பொரும்போர்வீமன்பொறுத்தாலும்பொற்றேர்விசயன்பொறானென்பா
ரரும்போரரசர்தகாதென்றால்வருமோவிந்தவழியென்பார். (௨௨௩)

என்னேகுடியிற்பிறந்தாருக்கிருப்பன்றிவ்வூரினியென்பார்
முன்னேயோடிமுறையிட்டான்முனியுங்கொல்லோவெமையென்பார்
பின்னேயிரங்கியழுதழுதுபேதுற்றின்னல்பெரிதுழப்பா
ரன்னேதுன்பங்களைந்திடமாவாயென்றேயருள்புரிவார். (௨௨௪)

பறைவன்களிற்றுப்பல்புரவிப்பைம்பொற்றடந்தேர்ப்பாஞ்சாலர்க்
கிறைவன்பாவையாங்காணவிவையோபடுவதென்றுரைப்பார்
பொறைவண்சிந்தைத்தருமனுக்குப்பொய்ச்சூதறிந்தும்போரவென்ன
குறைவந்தது தன்விதிவலியாற்குறைந்தான்யாவுங்கொடுத்தென்பார். (௨௨௫)

நெடுமாநகரிற்சனமனைத்துநேயம்பெறக்கண்டிவைகூற
வடுமாமாபிற்குறத்தேடுமன்பேரவையின்முன்புக்காள்
கொடுமாமலர்க்கண்புனல்சோரக்குலைந்தேகிடந்தகுழல்சோரத்
தடுமாறுள்ளந்தனிசோரத்தலைநாணளித்தழல்போல்வாள். (௨௨௬)

நாணேமுதலாநாற்குணனுநண்ணுங்கற்புநயந்தணிந்த
பூணேயனையாளழுதாற்றிப்புன்போரவையிற்புகுஞ்சோகங்
காணேமென்றுநிலநோக்கிக்கதிர்வேனிருபரிருந்திரங்கக்
கோணேர்படாயிருந்தான்குருடென்றுரைக்குங்கொடியோனே. (உஉஎ)

மேகங்குருதிபொழிந்தகல்வான்மீனும்பகலேமிகவிளங்கிப்
பூகம்பமுமுற்றுற்பாதம்போதியாவும்புரிந்தனவா
னாகப்புனைபொற்றுவசனுடனவிலாநின்றநால்வருமே
சோகம்பிறவாதிருந்தார்மற்றொழிந்தார்யாருஞ்சோகித்தார். (உஉஅ)

வீமன்கதைமேற்கைவைக்கவிசயன்சிலைமேல்விழிவைக்கத்
தாமம்புனைதோளிளையோருந்தத்தங்கருத்திற்சினமூட்டத்
தூமம்படுசெந்தழலவியச்சோனைமேகஞ்சொரிவதுபோ
னாமந்தருமனெனத்தக்கோனிளையோராறநவிலுற்றான். (உஉகூ)

தேம்போதனைத்துமெய்சாயுஞ்சிலபோதலருஞ்சிலபோது
வேம்போதங்குவாழ்வவெலாம்வெங்காலுடனேவேவாவோ
வாம்போதாருமதுவன்றியாயபொருள்களம்முறையே
போம்போதனைத்தும்போமுன்னப்பொறுத்தீரின்னம்பொறுமென்றான். (உ௩0)

வாருங்கண்ணீர்வளர்கொங்கைவரைமேலருவியெனவீழத்
தாருங்குழலுமின்னுடனேதலஞ்சேர்கொண்டலெனவீழக்
கூருந்துயரினுடன்வீழ்ந்துகோகோவென்றுகோச்சபையிற்
சோருங்கொடியைமுகநோக்கித்துச்சாதனன்மெய்சுடச்சொன்னான். (உ௩க)

மன்வந்திருந்தசங்கத்துன்பாமனிருந்தானைவருமுன்
முன்வந்திருந்தார்முன்கொண்டமுறையான்முயங்குமுடிவேந்தர்
மின்வந்தனையநுண்ணிடையாய்விழிநீர்சொரிந்துமெலியவுனக்
கென்வந்ததுகொல்பொதுமகளிர்க்கரிதோவிழிநீரெளிதென்றான். (உ௩உ)

பொல்லாவசையேபுகழ்பூணுப்புல்லன்புகலவிதற்கொன்றுஞ்
சொல்லாதிருந்தபேரவையைத்தொழுதாளழுதாள்சோர்வுற்றாள்
மல்லார்திண்டோண்மாமாவோமந்தாகினியாண்மதலாயோ
வெல்லாநெறியுமுணர்ந்தவருக்கிதுவோமண்ணிலியல்பென்றாள். (உ௩௩)

இன்னற்படுஞ்சொற்பாஞ்சாலியிரக்கந்தனைக்கண்டிரக்கமுறா
மன்னற்கிளையோய்தவறுரைத்தல்வழக்கோவடமீனனையாளை
யென்னக்கழறிநீயுரைத்தவெல்லாமசற்கியம்பென்றான்
முன்னர்ப்புகலுங்குருகுலத்தோர்முதலாம்வாய்மைமொழியோனே. (உ௩ச)

மன்றோற்றனன்வெஞ்சூதாகில்வழக்காற்கொண்மின்மன்னவையின்
முன்றோற்றனனோவென்னையுந்தான்முன்னேயிசைந்துதனைத்தோற்ற
பின்றோற்றனனோகரியாகப்பெரியோருண்மைபேசுகென
மின்றோற்றனையநுண்ணிடையாள்விழிநீர்வெள்ளமிசைவீழ்ந்தாள். (உ௩ரு)

மையோடரிக்கண்மழைபொழியவாடுங்கொடியின்மொழிக்காகார்
வெய்யோனெண்ணந்தனக்காகார்விறல்வேல்வேந்தர்வெரூஉக்கொண்டு
பொய்யோவன்றுமெய்யாகப்புனையோவியம்போலிருந்தாரை
யையோவந்தக்கொடுமையையாமுரைக்கும்பொழுதைக்கதிபாவம். (௨௫௬)

அல்லார்கூந்தல்விரித்தமயிலனையாளரற்றவதற்கொன்றுஞ்
சொல்லாதுமர்கணம்போலத்தொல்போர்வேந்தர்சூழ்ந்திருப்ப
மல்லார்தடந்தோள்விகருணனும்வாய்மைக்கடவுள்வாள்வேந்தீர்
பொல்லாநெறியிலனைவீரும்போகாவண்ணம்புகல்வீரே. (௨௫௭)

முறையோவென்றென்றவனிதலமுழுதுமுடையான்முடித்தேவி
நிறையோடழிந்துவினவவுநீர்*நினைவுற்றிருந்தீர்நினைவற்றோ
விறையோன்முனியுமெனநினைந்தோவிருந்தானுறுதியெடுத்தியம்பல்
குறையோகண்கண்டதுநாளுங்குலத்துப்பிறந்தோர்கூறாரோ. (௨௫௮)

தன்னேரில்லாநெறித்தருமன்றனவென்றுரைக்கத்தக்கவெலா
முன்னேதோற்றுத்தங்களையுமுறையேதோற்றுமுடிவுற்றான்
†சொன்னேருரைக்குத்தான்பிறர்க்குத்தொண்டாய்விட்டுச்சுரிகுழலைப்
பின்னேதோற்கவுரிமையினாற்‡பெறுமோவென்றுபேசீரோ. (௨௫௯)

என்னாமன்னர்முகநோக்கியெல்லாரிதயங்களுமகிழச்
சொன்னானெவருந்தக்கோனென்றவனுக்கொருபேர்சூட்டினர்பி
னன்னாமனத்தோடழன்றுளநபனஞ்சிவக்கநஞ்சின்வடி
வன்னாவிளவன்முகநோக்கியருக்கன்குமரனறைகின்றான். (௨௬௦)

வேறு.

இருக்கின்றதரணிபரினின்னறிவாலுயர்ந்தனையோவிராசநீதி
குருக்கொண்டுமுதிர்ந்தனையோநினையொழிந்தால்வழக்கொருவர்குறிப்பாரற்றோ
மருக்கொண்டதொடைமுடியாய்மொழிகெனநின்னுடன்கேட்கவந்தாருண்டோ
வுரைக்கும்போ¶தெவருடனுமுணர்ந்தன்றோவுரைப்பதெனவுரைத்தான்மன்னோ. (௨௬௧)

தான்படைத்தபொருளனைத்துந் § தம்பியர்களுடன்றோற்றுத்தனையுந்தோற்றான்
மீன்படைத்தமதிமுகத்தாளிவன்படைத்தனமன்றிவேறேகொல்லோ
வான்படைத்தநெடும்புரிசைமாநகருந்தனதில்லும்வழங்குமாயின்
யான்படைத்தமொழியன்றேபெண்ணுமில்லெனப்பட்டாளில்லாளன்றோ. (௨௬௨)

மைக்கோதில்கலையுடையன்மதியுடையன்பொறையுடையன்வரிசையாகத்
தக்கோனென்றரசரெலாமுரைத்தபெயரிவன்றனக்கேதக்கதம்மா
மிக்கோர்மற்றுங்களைப்போல்வேறுண்டோமகிதலத்துவேந்தராகித்
தொக்கோர்யானுவன்றமொழிக்கெதிர்மொழியுண்டாமாகிற்சொல்லுவீரே. (௨௬௩)

---

* நினைவற்றிருந்தீர் நிறைவற்றோ என்றும் பாடம்.

† சொன்னேருரைக்கிற்றான்பிறர்க்குத் தொண்டாய்விட்டுஞ் சுரிகுழலை என்றும்

‡ பெறுமோவொன்றும் பேசீரோ என்றும் வாடம்.

¶ எவ்வுரையு முணர்ந்தன்றோ என்றும் பாடம்.

§ தம்பியர்களுடனேயத்தருமன்றோற்றான் என்றும் பாடம்.

என்னவெகுண்டிடுகின்றவெல்லைதனிலெழுவுறழ்தோளிராசராசன்
றன்னனையகொடுங்கோபத்தம்பியைபின்றம்பிதனைத்தக்கோனென்ற
மன்னவையினெதிரேயிம்மானமிலாவைவரையும்வழக்குவார்த்தை
சொன்னகிளிமொழியினையுந்துகிலுரிகெனவுருமிற்சொன்னான்மன்னோ. (உசச)

இத்தகவின்மொழிசெவியினெரிவாளியெனமூழ்கவிருந்தவேந்தர்
தத்தமனமடிந்துருகத்தருமன்மதிமுகநோக்கித்தம்பிநோக்கி
வித்தகவெங்கதைநோக்கவிறல்வீமன்விசயனுந்தன்வில்லைநோக்க
வொத்தமனனுடையிளையோர்*உருப்பமடக்கினனுண்மைக்குறுதிபோல்வான். (உசரு)

தருகதுகிலெனவெழுந்துதங்களைவன்பொடிதுச்சாதனன்சொலாமுன்
வருகவெனவரைமார்பின்வாங்காதவுத்தரியம்வாங்கியீந்தா
ரருகணுகிமடவரலையஞ்சாமற்றுகிலுரிவானமைந்தபோதி
லிருகைநறுமலர்தகையவெம்பெருமானிணையடிக்கேயிதயஞ்சேர்த்தாள். (உசசு)

ஆறாகியிருதடங்கணஞ்சனவெம்புனல்சோரவளகஞ்சோர
வேறானதுகிறகைந்தகைசோரமெய்சோரவேறோர்சொல்லுங்
கூறாமற்கோவிந்தாகோவிந்தாவென்றரற்றிக்குளிர்ந்துநாவி
லூறாதவமிழ்தூறவுடல்புளகித்துள்ளமெலாமுருகினாளே. (உசஎ)

அருமறைசொல்லியநாமமாயிரமுமுரைத்தழைக்கவமரர்போற்றுந்
திருமலர்ச்செஞ்சேவடியோன்றிருச்செவியிலிவண்மொழிசென்றிசைந்தகாலை
மருமலர்மென்குழன்மானின்மனநடுங்காவகைமனத்தேவந்துதோன்றிக்
கரியமுகிலனையானும்பிறரெவர்க்குந்தெரியாமற்கருணைசெய்தான். (உசஅ)

உடுத்ததுகிலுணர்வில்லானுரிந்திடவுமாளாமலொன்றுக்கொன்றாங்
கடுத்தநிறம்பற்பலபெற்றாயிரமாயிரங்கோடியாடையாகக்
கொடுத்தருளவுரிந்தனபட்டிருந்தபெருந்தனிக்கூடங்கொள்ளாதோடி
யெடுத்தனர்பற்பலவீரருரிந்தோனுஞ்சலித்திருகையிளைத்துநின்றான். (உசகூ)

கங்கைமகன்முதலானகாவலர்மெய்யுளநடுங்கிக்கண்ணீர்சோரச்
செங்கைமலர்குவித்திவளேகற்பினுக்குமரபினுக்குந்தெய்வமென்றா
ரங்கணகல்வானோருமானகமும்வலம்புரியுமதிரத்தங்கள்
பைங்கனகதருவின்மலர்மழைபொழிந்துகருணையினாற்பரிவுகூர்ந்தார். (உருO)

அழுதழுதுகொடும்புலிவாயகப்பட்டமான்பிணைபோலரற்றாநின்ற
வெழுதரியமடப்பாவைதங்கண்முகங்களைநோக்கியிரங்கிவீழ்ந்த
பொழுதுமனம்புகைமூளப்பூந்தடங்கணனன்மூளப்போரின்மூளப்
பழுதுபடாவடலண்ணன்மைப்பவனகுமரன்றடக்கைபடைமேல்வைத்தான். (உருக)

அருளாருந்தருமபதியாகாதென்றெமைப்பலகாலடக்கயாழ
மிருளால்வெம்பரிதிவடிவொளிப்பதுபோலமர்புரியாதிருக்கின்றேமான்
மருளான்மெய்ம்மயங்கியொருவலியுடையோர்தமைப்போல†மதத்தநீங்கள்
பொருளாகவிருந்தனமோநூற்றுவரும்வருகவெதிர்பொருகவென்றான். (உருஉ)

* உருப்பவடக்கின னென்றும் பாடம்.

† மதித்துநீங்கள் என்றும் பாடம்.

கொந்தளகமலர்சரியக்கூப்பிடுவாள்கொடுங்கற்புங்கூறைமாளா
மந்திரமுமடல்வீமன்மானமிலாதுரைக்கின்றவலியுங்காணத்
தந்தைவிழியிருள்போலத்தருமனத்தோனுந்துச்சாதனனைநோக்கிப்
பைந்தொடியைக்கொணர்ந்தினியென்மடியின்மிசையிருத்துகெனப்பணித்திட்டானே.

என்றபொழுதருந்ததிக்குமெய்த்தாதகற்புடையாளிடியேறுண்ட
வன்றலைவெம்பணிபோலநடுநடுங்கிமையனையுமறவாளாகிப்
புன்றொழிலோன்யானிருக்கக்காட்டியதன்றொடைவழியேபுள்வாய்கூத்தச்
சென்றிடுகவாருயிரென்றெவரும்வெருவுறச்சபித்தாடெய்வமன்னாள். (உருச)

அரசவையிலெனையேற்றியஞ்சாமற்றுகிற்றீண்டியளகந்தீண்டி
விரைசெயளியினம்படிதார்வேந்தரெதிர்தகாதனவேவிளம்புவோரைப்
பொருசமரின்முடிதுணித்துப்புலானுறுவெங்குருதியொழியவெற்றி
முரசறையும்பொழுதல்லால்விரித்தகுழலினியெடுத்துமுடியேனென்றாள். (உருரு)

பாஞ்சாலிக்காசவையிற்பழுதுரைத்தோனுடலெனதுபடையாமேழி
போஞ்சாலினிணஞ்சொரியத்துணைவரொடுகுலமாளப்பொருவேன்யானே
தீஞ்சாலிவிளைபழனத்திருநாட்டீர்கேண்மினெனச்செந்தீமூள
வேஞ்சாலினறுநெய்போல்வெஞ்சினத்தான்வஞ்சினமும்விளம்புவானே. (உருசு)

வண்டாருங்குழல்பிடித்துத்துகிலுரிந்தோனுடற்குருதிவாரியள்ளி
யுண்டாகங்குளிர்வதன்முன்னிக்கரத்தாற்புனலுண்ணேனொருகாலென்கைத்
தண்டால்வெம்புனலெற்றிமீதெழுந்துவிழுந்திவலைதண்ணீராகக்
கொண்டாவிபுரந்திடுவனிதுவிரதமெனக்கெனவுங்கூறினனே. (உருஎ)

பகலவன்றன்மதலையுயிர்பகைப்புலத்துக்கவர்வனெனப்பார்த்தன்சொன்
னகுலனுமற்றென்கரத்தாற்சௌபலநாயகனுயிர்க்குநாசமென்றான்
சகுனிதனையிமைப்பொழுதிற்சாதேவன்றுணித்திடுவேன்சமரிலென்றா
னிகனிருபரிவர்மொழிகேட்டெளிதோவிக்கொடும்பழியென்றேங்கினாரே. (உருஅ)

மேகங்கள்வழங்காமல்விண்ணதிர்ந்திட்டோர்கோளும்வெயிலைச்சூழ்ந்து
பூகம்பம்பிறந்துவெமருளும்பகலேவிழுந்துடனே*பொய்கைவாடி
யாகஞ்செய்நெடுஞ்சாலையின்பானுஞ்செந்நீராயிருந்தவேந்த
ராகங்களொளிமழுங்கிற்றவிதாவென்றணங்களையாளழுதபோதே. (உருகூ)

உற்பாதம்பெரிதெனநெஞ்சுகுவாருமென்னுமிவ்வூரென்றஞ்சி
நிற்பாரும்போம்வழிமேனினைவாரும்பலராகிநிகழ்ந்தகாலைக்
கற்பான்மிக்குயர்வேள்வி†கனல்சுமந்தமடவரலைக்கண்ணிலாதோன்
பொற்பாதம்பணிந்தேத்தியபாதம்புரிந்தவெலாம்பொறுத்தியென்றான். (உசுo)

உத்தமமாங்குலமயிலேயென்சிறுவரறியாமலுனக்குநேரே
மைத்துனராமுறையாலிவ்வழக்கலாதனசெய்தார்மதியிலாம
லெத்தனைதாழ்விவர்புரிந்தாரென்றாலுமவையொன்றுமெண்ணாதின்னே
பித்தர்மொழியெனக்கருதிமறந்தருளென்றுருகோடிபிதற்றினனே. (உசுக)

---

* பொய்கையாடி என்றும் பாடம்.

† கடன்சுமந்த என்றும் பாடம்.

மைவரையுந்தடங்கண்ணுண்மனச்சோகம்பலமுகத்தான்மாற்றிமைந்த
ரைவரையுந்தனித்தனியேமுகங்கொண்டுகொடுங்கோபமகற்றிநீங்கண்
மெய்வரையும்பொருபுயத்தீர்வற்போரிலிழந்தவியனிலமுந்தேருங்
கைவரையும்பரிமாவுஞ்செல்வமும்பாவையுமீண்டுங்கைக்கொள்வீரே. (௨௬௨)

கோமன்றிலநுந்ததியைக்கொண்டினிநீர்நில்லாமற்குறுகவூரே
போமென்றுவரவழைத்துத்தழீஇக்கொண்டென்கண்மலரேபோல்வானெம்பி
யாமென்றுமவனென்றுமிரண்டில்லைவிளையாட்டென்றிருந்தேனிவ்வா
றாமென்பதெனக்கொருவருரைத்திலரால்யானுமுதலறிந்திலேனே. (௨௬௩)

என்மைந்தரிவர்நீங்களவன்மைந்தரெனநினையேனிவரேயெம்பி
தன்மைந்தருங்களையேயென்மைந்தரெனவளர்த்தேன்சம்புநாட்டு
மன்மைந்தநுங்களைப்போல்வேறுபடாதித்தனைநாள்வளர்ந்தாருண்டோ
வின்மைந்தர்நடக்கவெனவிடைகொடுத்தான்விரகினுக்கோர்வீடுபோல்வான். (௨௬௪)

படைகொடுத்தானிவனிழந்தபார்கொடுத்தானரசாளப்பண்டுபோல்வெண்
குடைகொடுத்தான்குருகுலத்தேதலங்கொடுத்தானைவருக்குங்குலத்தேகொண்ட
தடைகொடுத்தானகப்பட்டுந்தலையழிக்கநினையாமற்றனையம்ம
விடைகொடுத்தானினிவிடுமேவயப்புலியைவாலுருவிவிடுகின்றீரே. (௨௬௫)

வேறு.

யாதொருகருமமேனுமெண்ணியேதுணிகவென்றுங்
காதலிற்றுணிந்துசெய்தாலெண்ணுதல்கடனன்றென்று
மோதுநூற்புலவர்சொன்னாறுமக்குளவுணர்வற்றன்றே
பேதுறவடர்த்தும்பின்னையுருகிநீர்பிழைசெய்தீரே. (௨௬௬)

தீயினாற்சுட்டசெம்புண்ணாறுமத்தீயிற்றீய
வாயினாற்சுட்டமாற்றமாறுமோவடுவேயன்றே
பேயினாற்புடையுண்டாரோமறப்பரோபெரியோரென்றான்
வீயினாற்றொடுத்ததண்டார்வேந்தர்க்குவேந்தன்மாமன். (௨௬௭)

சகுனிசொன்மருகன்கேட்டுத்தம்பியுமங்கர்கோவு
முகமுகநோக்கியெண்ணியெம்பிநீமொழிகவென்றான்
றுகிலினையுரிந்தவன்கைச்சூரனுந்தருமராசன்
மகனுடன்வெகுளிதோன்றவழக்குறமொழிதலுற்றான். (௨௬௮)

சரதமென்றுண்மையாகச்சபையினீயிசைந்துதோற்ற
விரதமுங்களிறுமாவும்பாவையுமீண்டுதாரோஞ்
சுரதமென்கொடியுநீருந்தொண்டொழிந்துரியீராமின்
விரதமுன்னறத்துக்கென்றும்பொய்கொலோமெய்யேயன்றோ. (௨௬௯)

தந்தைதனருளாற்பெற்றீருரிமையுந்தம்பிமாரும்
பைங்கொடிதானுநீயும்பதிபெயர்ந்துய்ந்துவேயின்
வெந்தழலார்ந்தகானின்வெளிப்படாதுறைமினின்றே
யிந்தமாதரணிகைவிட்டேகுமினெழுமினென்றான். (௨௭௦)

என்றலுந்தந்தைமைந்தனியம்பியவாய்மைகேட்டு
நின்றவாநில்லாவஞ்சநெஞ்சினனாகிமீண்டும்
வென்றிகொளரசனோடும்வெஞ்சிலைவிதுரனோடு
மொன்றியவமைச்சரோடுமுறுவனவுசாவலுற்றான். (௨௭௧)

மேல்வருகருமமெண்ணாவெகுளியான்மிக்கவீரர்
நால்வருமெம்மனோர்கணவின்றனைசிறிதுங்கேளார்
சேல்வரும்பழனநாடசெயலறிந்தெண்ணிவேத்து
நூல்வருமுறைசொல்லென்றானேன்சிலைநூலின்மிக்கோன். (௨௭௨)

வின்மகனுரைக்கவேனையமைச்சரும்விதுரன்றானும்
மன்முறைதவறினின்றேவசையும்வந்திசையுமென்றார்
கன்மனநெடுங்குன்றன்னான்கருதியக்கணத்தேமீளத்
தன்பனையாவர்நெஞ்சுஞ்*சருகெனத்தழைக்கச்சொன்னான். (௨௭௩)

உன்னுணர்வுனக்கேயுள்ளதுன்பெருந்துணைவரான
கொன்னுனைவேலோர்வென்றுகொண்டனகொடுத்தலொல்லார்
பின்னுறவுரிமையாவும்பெறாதிநின்பெருமைக்கேற்ப
முன்னுளோர்பலருஞ்செய்தமுறையேமுன்னுகென்றான். (௨௭௪)

அரசன்மற்றுரைத்தமாற்றமந்தணனுணர்ந்துசெல்வ
முரசதிரயோத்திமூதூர்மன்னவன்கதையுங்கூறி
யுரைசெய்தபடியேயுங்களுலகினை†யிழந்துசின்னாள்
வரைசெறிகானில்வைகிவருவதேவழக்குமென்றான். (௨௭௫)

அரிவையோடகன்றுநீவிரைவருமடவியெய்திச்
சுரர்தினமீராறங்கட்டின்னுதிர்மன்னுநாட்டி
னொருவருமறியாவண்ணமொருதினமுறைதிருங்கள்
பெருவிறலரசும்வாழ்வும்பின்னுறப்பெறுதிரென்றான். (௨௭௬)

மறைந்துறைநாளினும்மைமற்றுளோரீண்டினாரென்
றறிந்திடின்மீண்டுமவ்வாறரணியமடைதிரென்றான்
பிறந்தவிம்மாற்றங்கேட்டுப்பிதாமகன்முதலாயுள்ளோர்
சிறந்ததொன்றிதனினில்லையிசைத்ததேசெய்மினென்றார். (௨௭௭)

சுரிகுழல்குலையநின்றதிரௌபதிசுருதிமுந்நூல்
வரபதிமொழிந்தமாற்றங்கேட்டலும்வணங்கியைவ
ரரசருமெனதுமைந்தரைவருமியானுமீண்டு
‡முரிமையின்றெய்தவெஞ்சூதாடுதலுறுதியென்றாள். (௨௭௮)

---

* சருகெழத்தக்கசொன்னான் என்றும் பாடம்.

† இகந்து என்றும் பாடம்.

‡ உரிமையினெய்தவன்சூதொட்டுகலறுகியென்றாள் என்றும் பாடம்.

தையலங்குரைத்தமாற்றந்தருமனுங்கேட்டுநாங்கள்
கையறுதொண்டராகிக்கான்புகல்வழக்குமன்று
லையுறுதொருகாலின்னமாடுதுமருஞ்சூதென்றான்
மெய்யுறவிருந்தவேந்தர்மீளவுங்காணலுற்றார். (உஎகூ)

சத்தியவிரதன்றானுந்தன்பெருந்தேவிசொல்லப்
பத்தியால்வணங்கிமாயன்பன்னிருநாமமேத்தி
யொத்தவெண்கவறுவாங்கச்சகுனியாதொட்டமென்றான்
புத்தியாலவனும்யான்செய்புண்ணியமனைத்துமென்றான். (உஅ0)

உருட்டியகவறுநேமியுடையவனருளினாலே
மருட்டியசகுனியெண்ணின்வழிப்படாதுருண்டகாலே
யிருட்டியவிழியான்மைந்தனிதயமுமிருண்டுசோரத்
தெருட்டியவுணர்வின்மிக்கோன்செப்பியபாவும்வென்றான். (உஅக)

வென்றுதன்னிளைஞரோடுமேதகுபுதல்வரோடு
மன்றலந்தெரிவைபோடுமற்றுளோர்தங்களோடு
மன்றுதன்சுரவர்பொற்றுளன்புடன்வணங்கிக்கானஞ்
சென்றனனென்பமன்னேசெழுநிலமுடையகோமான். (உஅஉ)

ஒழிவுசெய்கருணைநல்வருள்ளமுமொழிபவேனை
வழுவறுமன்னருள்ளமம்மரோடயர்ந்துவிம்மக்
குழைவினுனுகர்தலின்றிக்கொற்றமாநகரிமாக்க
டழலெனவுயிர்த்துமாழ்கித்தனித்தனிபுலம்பலுற்றார். (உஅங)

நாட்டிடையெல்லைபொற்றுணறுமலர்சிவக்கவேகிக்
கட்டிடைபுகுந்தபோதுங்கலக்கமற்றுவகைகூர்ந்தான்
கூட்டிடையின்பதுன்பக்கொழும்பயன்றுய்த்துமாறி
வீட்டிடைபுகுதும்போதுமெய்ம்மகிழ்விபுதர்போல்வான். (உஅச)

சூதுபோர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் கஉகூகூ.

சபாபருவ முற்றுப்பெற்றது.

உ

மூன்றாவது

# ஆரணியபருவம்.

## அருச்சுனன்றவநிலைச் சருக்கம்.

பெருமிதவலியும்பாரும்பேணலார்கவரவின்சொற்
றருமனுந்தம்பிமாருந்தழலெழுந்தையலாளு
மருமகமுனிவர்முந்நான்காயிரர்சூழ்ந்துபோதக்
கருமுகில்படியுஞ்சாரற்காமியவனம்புக்காரே. (௧)

ஆரமுமகிலுநாறுமருவியுஞ்சுனையுமத்த
வாரணம்பிடிகளோடுவாரிதோய்கானியாறு
மீரமுநிழலுங்காயுங்கனிகளும்யாவுமீண்டிக்
காரினம்பொழியுமந்தக்கானகத்தழகுகண்டார். (௨)

அங்கிவர்புகுந்தபின்ன*ரங்கியின்புகையுமாறிப்
பொங்கியவோமத்தீயின்புகையினான்முகிலுண்டாகச்
சிங்கமுந்துதிக்கைமாவுஞ்சேர்ந்துடன்றிரியச்சூழ
லெங்கணுமழகுபெற்றதிமகிரிச்சாரல்போன்றே. (௩)

வேறு.

துருபனுந்திட்டத்துய்மனுஞ்சோமக
நிருபரானவர்யாவருநேர்ந்துடன்
விரவுதானைவிராடனுஞ்சுற்றமு
மருவினாரவ்வனத்திருந்தோரையே. (௪)

மற்றுமற்றுமகீபரிலன்பினா
லுற்றவுற்றவுறவுடையோர்களுங்
கற்றகற்றகலைவிதமாக்களுஞ்
சுற்றுமொய்த்தனர்தோமறுகேண்மையார். (௫)

மாதவத்தின்பயனெனமாதவன்
யாதவக்குலத்தேறிமையோர்பதி
யாதபத்துக்கருநிழல்போலருள்
வேதவித்தகவீரனுமேவினான். (௬)

பாரிழந்தவிப்பாதகச்சூதுகேட்
டீருநெஞ்சினரேமுறுநோக்கினர்
போறன்றருபிள்ளையைப்பார்த்தருள்
கூரவன்பொடிவையிவைகூறுவார். (௭)

* அங்கியும்புகையுமாறிப், பொங்கியவோமத்தீயாற்புகலருமுகிலுண்டாக என்றும் பாடம்.

மரபின்வல்லியைமன்னவையேற்றிய
குருகுலோசனைக்கொற்றவெஞ்சேனையோ
டிரியவெற்றுது மிப்பொழுதேயென
வுரமுஞ்சீற்றமுந்தோற்றவுரைசெய்வார். (அ)

தம்பிமாரைத்தனித்தனியேயுயிர்
வெம்பிவீழவிரைந்துவில்வாங்கியின்
றம்பர்காணவுயிரழிப்போமெனத்
தும்பைசூடக்கருதினர்சொல்லுவார். (கூ)

வஞ்சகச்சுபலன்றருமைந்தனை
வெஞ்சமத்தினில்வீழக்கணத்திடைச்
செஞ்சரத்தின்வழியுயிர்செல்லவே
யெஞ்சுவிக்கவெழுமென்றியம்புவார். (க0)

சீதவெண்குடைவேந்தர்தந்தேர்விடுஞ்
சூதன்மைந்தன்சுயோதனன்றோழனை
மாதிரங்களில்வானவர்காணவிப்
போதுடற்றுவமென்னப்புகலுவார். (கக)

உந்தவுந்தவொருவர்க்கொருவர்வாய்
முந்தமுந்தமுடுகுசினத்தரா
யந்தவந்தவனிபர்யாவரு
மிந்தவிந்தவுரைகளியம்பவே. (கஉ)

கேட்டிருந்தருள்கேசவன்வாசவன்
காட்டிருந்தனனென்னக்கவின்பெறுந்
தோட்டிருந்தளிதேனுகர்சோலையின்
மாட்டிருந்தமகீபர்க்குரைசெய்வான். (கங)

விடுகவிந்தவெகுளியைப்பின்புற
வடுகநுந்திறலாண்மைகடோன்றவே
வடுமனங்கொடுவஞ்சகஞ்செய்பவர்
கெடுவரென்பதுகேட்டறியீர்கொலோ. (கச)

இனயந்துரைத்தவியைபின்படியினி
வியந்திருக்கும்விபினந்தொறுமிருந்
துயர்நதபிற்செய்வினையைன்றன்னுத
லயர்ந்துரைத்தலலாதிலையாவதே. (கரு)

வேறு.

கேட்டிநீமூரசகேதுகிளைஞர்தம்மிருக்கைதோறு
மீட்டியபுதல்வருள்ளோர்யாரையுமிருத்தல்செய்து
காட்டிடைநீவிர்வைகிக்கடவநாள்கழித்துமீண்டு
நாட்டிடைவந்தாற்காண்டிநலனுளோர்நலன்களெல்லாம். (கசு)

அன்னையைச்சுபலன்பாவையருகுறவிருத்தியுங்க
டன்னையர்தம்மையாகசேனனூர்தன்னில்வைத்துப்
பின்னையும்வேண்டுவோரைப்பிரிவுறநெறியிற்போக்கி
நன்னயத்தொடுநீர்கானம்வைகுதனன்மையென்றான். (கஎ)

அச்சுதனுரைத்தமாற்றமறன்சுதன்மகிழ்ந்துகேட்டு
மெய்ச்சுதர்முதலாமற்றும்விளம்பியகிளையையெல்லா
மிச்சையின்படியேயாங்காங்கெய்துவித்திரானுண்டு
மச்சுறுகானில்வைகுமார்வமேயார்வமானான். (கஅ)

சோனைமாமுகிலின்மேனித்தோன்றலுந்துவரைபுக்கா
னேனையோர்தாமுந்தத்தமெயிலுடைநகரிபுக்கார்
ஞானயோகிகளுமொவ்வாநரேசனுந்தம்பிமாருங்
கானமேதாங்களாளுங்காசினியாகக்கொண்டார். (க௯)

அவ்வனந்தன்னில்வந்தவரசெலாமகன்றபின்னர்
வெவ்வனம்விடாதுமேவித்தவம்புரிவியாதனென்னுஞ்
செவ்வனமுனிவன்வந்தச்சேயவன்சேய்களான
விவ்வனசரிதர்தம்மையினைவுடனெய்தினானே. (உ0)

கண்டெதிர்சென்றுபோற்றிக்கண்ணினுஞ்சென்னிமீதுங்
கொண்டனரவன்றன்பாதங்குளிர்ந்தனருயிருமெய்யும்
புண்டாறுதலினானைப்பூசனைசெய்தபின்னர்
வண்டணிதாரான்செய்தவஞ்சனையனைத்துஞ்சொன்னார். (உக)

செறிந்தவர்க்கூற்றங்கோலாஞ்செய்தவமுனியுமுன்னே
குறிந்தனநிகழ்ந்தவெல்லாங்கூறுதல்கொடிதுபாவம்
பிறிந்தனதாயந்தன்னிற்பெரும்பகையினிதென்றன்றே
வறிந்தவருரைத்தாரையவவாவினுக்கவதியுண்டோ. (உஉ)

துன்றினரின்னலெய்தத்துன்னலராகித்தம்மி
லொன்றினர்செறினுமுள்ளதுண்டென்னுரைத்தேற்றிக்
கன்றினர்கவலைதீர்த்தான்கண்ணுடைக்கருணைமூர்த்தி
குன்றினதுயர்ச்சியந்தக்குன்றினுக்கறியவுண்டோ. (உங)

நீவிரேயல்விர்முன்னாணிலமுழுதாண்டநேமி
நாவிரிகீர்த்தியாளனளனெனுநாமவேந்தன்
காவிரியென்னத்தப்பாக்கருணையான்சூதிற்றோற்றுத்
தீவிரிகானஞ்சென்றகாதைநுஞ்செவிப்படாதோ. (உச)

தோத்திரமானதெய்வச்சுருதிகள்யாவுநான்காக்
கோத்தவன்பின்னுஞ்சொல்வான்குன்றவில்லவன்பானின்று
பார்த்தனேசென்றுபாசுபதக்கணைவாங்கினல்லா
லார்த்தபைங்கழலாயெய்தாதரும்பகைமுடித்தலென்றான் (உரு)

பரிவுடன்முனிவன்மாற்றம் பணிந்துதன்றலைமேற்கொண்டு
வரிசிலைக்குலகமெண்ணுமகபதிமகனைநோக்கிக்
கிரிசனையுன்னிவெள்ளிக்கிரிப்புறமெய்தியார்க்கு
மரியநற்றவஞ்செய்தேனுமவனருள்பெறுதியையா. (உகூ)

எனவிடைகொடுப்பமண்ணிலிணையிலாவியாதன்பாத
மனனுறவிறைஞ்சியாங்கோர்மந்திரமுறையிற்பெற்று
நனிமிகுதிதியுநானுநல்லதோர்முகூர்த்தந்தன்னிற்
றனிவதியியக்கர்காட்டத்தனஞ்சயன்சேறலுற்றான். (உஎ)

வெஞ்சலமனத்தாரானோர்விரகினாற்கூட்டங்கூட்டி
நஞ்சலதுவமையில்லாநவைபுரிந்தனர்களேனுஞ்
சஞ்சலமும்மைப்போலுந்தரணிபருறுதல்செய்யா
ரஞ்சலென்றுமீளவாரணமுனியும்போனான். (உஅ)

மரவுரியுடையன்சென்னிவகுத்தசெஞ்சடையன்றாணிச்
சாமுடனங்கியீந்ததனுவினன்றவத்தின்மேலே
புரிதருமனத்தனெல்லாப்புண்ணியங்களுக்குந்தானே
யுரைபெறுதசரதன்றன்மகனலாதுவமையில்லான். (உகூ)

நெறியிருபுறத்துமூசிநுழையொணாநெருக்கமிக்க
செறிதருவனமுஞ்சிங்கஞ்சிந்துரஞ்செருச்செய்சாரற்
பொறைகளும்வெம்பிசாசபூதமோடியக்கர்யாரு
முறைதருகுவடுநீங்கியுத்தரமுடிவுகண்டான். (௩0)

அத்திசையிமையமென்னுமசலவெற்படைந்துமிக்க
பத்தியோடம்மைதன்னைப்பயந்ததுன்றென்றுபோற்றிச்
சத்தியவிரதன்றம்பிதபோவனந்தோறுந்தங்கன்
முத்தழல்வளர்ப்போர்பாதமுளரிகண்முடிமேற்கொண்டான். (௩க)

சாரணரியக்கர்விச்சாதரர்முதற்பலருஞ்செஞ்சொ
லாரணப்படியேசூழ்ந்தவடவிகடோறும்வைகி
நாரணன்மலரோனும்பர்நாயகன்பதங்கணச்சிக்
காரணத்தவஞ்செய்வோரைக்கண்டுகண்டுவகைகூர்ந்தான். (௩உ)

அரியும்வெங்கரியுந்தம்மிலமர்புரிமுழக்கங்கேட்டுங்
கிரியினின்முழக்கங்கேட்டுங்கிராதர்போர்முழக்கங்கேட்டு
மெரிகிளர்முழக்கங்கேட்டுமெம்பிரானிமவான்றந்த
புரிகுழலோடும்வைகும்புண்ணியப்பொருப்பைச்சேர்ந்தான். (௩௩)

கைம்மலையுரிவையோடுகட்செவிக்கச்சுஞ்சாத்துஞ்
செம்மலைவிழியிற்காணுஞ்சிந்தையாற்கண்டுபோற்றி
யம்மலைச்சாரலூடுமருந்தவப்புரிநர்கூற
விம்மலைநீங்கியாங்கண்மெய்த்தவவிரதனானான். (௩௪)

எயிலொருமூன்றுஞ்செற்றோனேந்திழையுடனேவைகுங்
கயிலையின்பெருமைதன்னைக்கட்டுரைசெய்வதெங்ஙன்
வெயிலவன்முதலோர்நாளுமேம்படவலஞ்செய்வார்க
ளயிலுநல்லமுதோர்சூழ்வந்தன்புடன்போற்றுவாரே. (௩௫)

உருகியவெள்ளிபோலவுயர்முழைதோறும்வீழ
மருவிநீர்புனிதன்வேணியமருமாநதியிற்றோன்ற
வுருகியபனிவான்குன்றிலொண்பனிக்கடவுள்வந்து
மருவியதென்னத்தோன்றும்வருணமால்வரையின்றென்பால். (௩௬)

## வேறு.

ஆசினன்மறைப்படியுமெண்ணில்கோடியாகமத்தின்படியுமெழுத்தைந்துங்கூறிப்
பூசினன்வடிவமெலாம்விபூதியாலப்பூதியினைப்புரிந்தசடைப்புறத்தேசேர்த்தான்
றேசினலப்பொருப்பின்சிகரமேவுஞ்சிவனிவனேபோலுமெனத்தேவரெல்லாம்
பேசினார்வரிசிலைக்கைவிசயன்பூண்டபெருந்தவத்தினிலைசிலர்க்குப்பேசலாமோ. (௩௭)

ஒருதாளின்மிசைநின்றுநின்றதாளினூருவின்மேலொருதாளையூன்றியொன்றுங்
கருதாமன்மனமடக்கிவிசும்பினோடுங்கதிரவனைக்கவர்வான்போற்கரங்கணீட்டி
யிருதாரைநெடுந்தடங்கணிமையாதோராயிரங்கதிர்த்தாமரைப்போதென்னநோக்கி
நிருதாதியரின்மனுவாய்த்தவஞ்செய்வாரினிகரிவனுக்கார்கொலெனநிலைபெற்றானே.

தோற்றியதெம்மிடத்தேயித்தோன்றன்மலைகூட்டியபொற்றொடியென்றேதுரங்கம் [பொற்றோர்.
கூற்றியல்வெஞ்சிலைபாணந்தூணிகணிகுரக்குக்கொடிக்கோடுமுன்னங்கொடுத்ததேமென்றே
காற்றினுடன்விரைவுறச்சென்றருந்துமாறுகாண்டவம்பசிக்களித்தகனையென்றே
நாற்றிசையும்வளர்த்ததழற்கடவுட்டானுடலங்குளிர்ப்பிக்குமாறுபோன்றான். (௩௯)

வலப்பாகஞ்செழும்பவளச்சோதியென்னவானிலச்சோதியென்னமற்றைப்பாகங்
கலப்பானதிருமேனியணிந்தநீற்றுக்கதிர்முத்தின்சோதியெனமேனியின்ற
குலப்பாவையுடன்கயிலைக்குன்றில்வாழ்விற்குன்றாவுடையோன்றிருக்கோலங் *குறிப்பா
லுன்னிப், புலப்பாடுபுறம்பொசியமார்புந்தோளும்பூரித்தானுடல்புளகம்பாரித்தானே.

கருந்தாறுகல்லெனக்கருதிப்பிடியுங்கன்றுங்களிற்றினமுமுடனுரிஞ்சக்கறையானேறிப்
பொருந்துமுழைப்புற்றதெனப்புயங்கமூரப்பூங்கொடிகண்மரமென்றுபாங்கேசுற்றப்
பரிந்துவெயினண்மழைநாள்பனிநாளென்றுபாராமனெடுங்காலம்பயின்றான்மண்ணி
லருந்தவமுன்புரிந்தோரிலிவனைப்போன்மற்றார்புரிந்தார்சிவசிவவென்றறியவற்றே. (௪௧)

பகிரதனேமுதலானவெண்ணில்கோடிபார்த்திவருந்தவம்புரிந்தார்பைம்பொன்மேனி
யிகலவுணர்முதலானகணவரனைவரெத்தனைபேர்தவம்புரிந்தாரிமையோரேத்து
மகபதிதன்மதலையிவனெழுதொணாதவனப்பினுக்குவரிசிலைக்கைம்மதவேளொவ்வான்
சகலகலைகளுக்குமிவன்றானேயிங்ஙன்றவம்புரியநினைப்பதேசார்ந்தபாவம். (௪௨)

---

* குறிப்பாலுள்ளும் என்றும் பாடம்.

வேறு.

பண்ணுக்குவாம்பரித்தேராதவனும்பணிந்துபசுபதியைநோக்கி
மண்ணுக்குத்தவம்புரியுந்தனஞ்சயற்குக்கோடையினுமதியம்போன்று
னெண்ணுக்குவருந்புவனம்யாவினுக்குங்கண்ணுவானிவனேயன்றோ
கண்ணுக்குப்புனைமணிப்பூண்கண்ணோட்டமென்பதெல்லாங்கருணையன்றோ. (சங)

வேறு.

அங்கியாலங்கியை*வெதுப்பிவெம்மையைப்
பொங்கியவாயுவாற்போக்கிமெய்ச்சிரந்
தங்கியவமுதினுற்றண்ணெனும்படி
யிங்கிதத்தொடக்கினனிதயந்தன்னையே. (சச)

ஈண்டுதன்கருத்திறைவடியைந்தமாதவம்
பூண்டிளமதிமுடிப்புண்ணியன்றனை
வேண்டியவாறெலாம்விருப்பொடுன்னினான்
பாண்டியனுபர்குலப்பாவைகேள்வனே. (சரு)

நிரந்தரமனேகநாணினைவுவேறற
வுரந்தருபுலன்களைமொடுக்கியாயுத
மிரந்தனனவரையிடையியற்றுநற்றவம்
புந்தானறிந்துமெய்ப்புளகமேறவே. (சசு)

குருவுடன்விரதுறக்கூறியீசனை
மருவுறுகொன்றைநாண்மாலைமௌலியைக்
கருமயில்பாகனைக்காண்டல்வேண்டிய
திருமகன்றவநிலைதெரியவுன்னினான். (சஎ)

அரும்பகைவலிமைபாலவுணருர்சுடும்
பெரும்பிறையணிசடைப்பிஞ்ஞகன்றனை
திரும்பகழிகள்பெறவெண்ணியேகொலாம்
விரும்பியதித்தவம்வில்வலானரோ. (சஅ)

நற்றவத்துறுதியுநரன்கருத்துநா
முற்றறிகுவமெனமுன்னுஞ்சிந்தையான்
கற்றையஞ்சடையவன்கயிலையங்கிரி
யுற்றறிவுறுவதற்குபாயமெண்ணினான். (சகூ)

ஆனகையுருப்பசியரம்பைதொண்டைவாய்
மேனகைதிலோத்தமையென்றுவேலையின்
மானெனமயிலெனவந்தமாதரீ
ரானவாறறிதிர்போயவன்றன்னெண்ணமே. (ரு௦)

என்றுகொண்டிந்திரனியம்பமற்றவன்
றன்றியபோவைத்தோற்றமிக்கவர்
குன்றிரண்டெடுப்பதோர்கொடிமருங்குலார்
சென்றனரவனுழிச்செய்யவாயினார். (ருக)

---

* அவித்து வெம்மையை என்றும் பாடம்.

காமனைநினைந்தனர்காமராசனு
மாமலர்வாளியுமதுரசாபமுந்
தேமருமலர்க்கையிற்சேர்த்திச்சேனையோ
டாமுறைபுகுந்தனனானுமஞ்சவே. (௫௨)

செந்தமிழ்வரைதருதேரன்செக்கர்வா
னந்தியானையன்மதியாதபத்திரன்
சிந்துவெம்முரசினன்செவ்விகூரவே
வந்தனன்காலமும்வசந்தமாக்கியே. (௫௩)

வேறு.

கந்தனையளித்தகன்னியோர்பாகங்கலந்தமெய்க்கண்ணுதற்கெதிராய்ச்
செந்தமிழுரைத்தகுறுமுனியிருந்ததெய்வமால்வரையிடைத்தோன்றி
யிந்துவுமரவுமுறவுசெய்முடிமேலிருந்தமந்தாகினியருவி
வந்திழிபுனலுஞ்சந்தனங்கமழவந்ததுமந்தமாருதமே. (௫௪)

வம்பறுமதுரப்பல்லவங்கோதிமாமகரந்தமாகந்தக்
கொம்பெலாமிருந்துகுயிலினங்கூவக்கொற்றவெஞ்சிலையினன்முன்னஞ்
சம்பராசுரனைவென்றவீரனைப்பைந்தாமமாமணிமுடிசூட்டி
யெம்பிரான்முனிவுக்கஞ்சலென்பதுபோலியைந்ததுவசந்தகாலமுமே. (௫௫)

பூதமைந்தினையும்புலத்துடனொடுக்கிப்புரிசடையுடன்புருகூதன்
காதலம்புதல்வனருந்தவம்புரிதல்கண்டுபாவிப்பனபோல
மாதிரந்தொறுஞ்செம்பல்லவச்செந்திவளர்த்துவான்மணியினைநோக்கிப்
பாதமொன்றினினின்றுயர்ந்தனவொளிகூர்பலபுடைப்பாதவங்களுமே. (௫௬)

உள்ளுறக்கலக்கமறத்தெளிந்தசலத்துயர்தலைமுழையினின்றருவி
வெள்ளமொத்தமுதங்கரையறப்பொழியவெண்மையுற்றளியுடன்குளிர்ந்து
புள்ளுடைக்கொடியோரிருவருங்காணப்புண்ணியப்பொருப்பிடைத்தவஞ்செய்
வள்ளலொத்தனவச்சாரலைச்சூழ்ந்துவயங்குசீர்வாவியுஞ்சுனையும். (௫௭)

நீறுபட்டிலங்குமெய்ந்நிலவொளியானெஞ்சினிலிருளினையகற்றி
மாறுபட்டிடுமைம்புலன்களுமொடுக்குமாதவன்வாய்த்தசெந்தழலாற்
கூறுபட்டுமையோடொருவடிவானோன்குன்றுசூழுறைபொறையனைத்து
மாறுபட்டுருகிப்பெருகியோடினவாலம்மலைவெள்ளியாதலினால். (௫௮)

அலைத்தடங்கடலிலமுதொடுற்பவித்தாங்கமரர்வாழ்பதிகுடிபுகுந்தோர்
குலைத்துமென்றெண்ணியொருவருக்கொருவர்கொடியிடைநுடங்கவந்தந்த
மலைத்தடநெருங்கப்புகுந்தனர்குயிலுமயூரமுமானுமேயனையார்
நிலைத்தவம்புரிவோனைவகைநெருப்பினடுவுறநின்றவாகண்டார். (௫௯)

அந்தரத்தமரர்துந்துபிமுழங்கவநங்கனுந்துபியெதிர்முழங்க
வந்துபொற்சிலம்புமேகலைவிதமுமலர்க்கைவெள்வளைகளுமுழங்கப்
பந்தடித்திடுவாரம்மனையெறிவார்பயில்கழங்காடுவார்நெற்றிச்
சிந்துரத்திலகந்தீட்டுவாராகித்தனித்தனிதிசைதொறுஞ்சூழ்ந்தார். (௬0)

குயிலொடுகூவிக்கிஞ்சுகமலர்ந்துகொஞ்சுபைங்கிளிகளையழைப்பார்
மயிலினடிக்கத்தாமும்*வண்கலாபமணியணியொளியெழநடிப்பார்
வெயில்விடுபரிதிமதியுடன்வலஞ்செய்விடாகமுழுவதுமொலிப்பக்
கயிலையங்கிரியின்சாரலோவெம்மூர்க்கடவுளாலயமெனக்களிப்பார். (சுக)

கூந்தன்மாமுகிலைக்குலைத் துடன் முடிப்பார்குங்குமங்கொங்கைமேலணிவா
ரேந்துபேரல்குற்கலைநெகிழ்த்துடுப்பாரிட்டவுத்தரியமாற்றிடுவார்
பூந்துகிலணையநறுஞ்சுணைபடிவார்புழுகுசந்தனநறும்பனிநீர்
காந்திகொடெறிவார்காமவேதத்தைக்கருங்கடைக்கண்களான்மொழிவார். (சுஉ)

பண்ணுடையெழாலினின்னிசைவழியேபாடுவார்பைங்குழல்குறிப்பார்
பெண்ணுடைமடநாணகன்றபேரமளிப்பேச்செலாம்பேசிவந்தடுப்பார்
விண்ணுடையமிர்தம்பருகுவாருகிரான்மென்மலர்கொய்துமேலெறிவா
ரெண்ணுடைமடவார்புரிந்தனவிவ்வாறிங்கிதமெத்தனைகோடி. (சுங)

காவும்வண்புறவுங்கயங்களுமருங்கவர்ந்தவெங்கணைகளாமைந்து
பூவும்வந்துள்ளமுறவுறப்பட்டுப்புதையவும்புலன்வழியன்றி
மேவுதன்கருத்தின்வழியிலேநின்றவிசயனையங்கிபால்வில்லு
மேவுமுன்பெற்றவிறைவனையெய்தெய்திளைத்தனளிரதிகேள்வனுமே. (சுச)

கூற்றினையுதைத்தபாதமுமுடித்தகுஞ்சரத்துரிவையுமணிந்த
நீற்றொளிபரந்துநிலவெழுவடிவுநிலாவெயிலனுமிழ்விழியு
மாற்றறல்பரந்தகொன்றைவார்சடையுமல்லதையாவையுங்கருதான்
மாற்றமொன்றின்றிநின்றனன்வரைபோல்வச்சிராயுதன்றிருமகனும். (சுரு)

அன்றரனிருந்தயோகினையகற்றியறிவிலாதநங்கனுவெந்த
குன்றிதுதடங்களுயிரமுடையோன்கூறியகூற்றினைத்தேறி
யின்றவன்மதலைபுரிதவங்குலைத்தாலென்விளைந்திடுமெனவஞ்சி
நின்றிலன்மதனனிற்குமோசெற்றிசெநற்பினுனீறுபட்டுள்ளோன். (சுசா)

வானவர்பெருமானேவலால்வந்தவானவர்மகளிருந்தம்மா
லானவக்கிரீடையாவையும்புரிந்துமொருபயன்பெற்றிலரகன்றூர்
கானகமுழுதும்பரிமளம்பரப்பிக்கானவண்டிமிர்தரப்புகுந்த
வேனிலுமகன்றதருக்கனுங்குடபால்வெண்டிரைவேலைவாய்வீழ்ந்தான். (சுஎ)

வேறு.

இந்திரன்சுதன்றனெண்ணம்யாவதென்றினிதினெண்ணி
யிந்திரசாலமாகவேவிணுரெவருமெய்தி
யிந்திரநீலந்தன்னிலிறைவனுக்குரைத்தாரந்த
விந்திரன்றானுமைந்தன்றவம்புரியிருக்கைசேர்ந்தான். (சுஅ)

விருத்தமாமுனிவனாகிவிசயனைநோக்கியாது
கருத்துநீதவஞ்செய்கின்றகாரணமென்னையென்னத்
திருத்தகுசிந்தையோடுஞ்செந்தழலிடைநின்றோனு
மருத்துவானுருவமாறிவந்தவாறுணர்கிலாதான். (சுகூ)

---

* வண்சிலம்புமணியணியொலியெழ என்றும் பாடம்.

மாசறுமதியமன்னவாண்முகமங்கைபாகத்
தீசன்வந்தெய்துகாறுமித்தவம்புரிவேனென்ன
வாசறுகடவுளோர்க்குமருமறைதனக்குமெட்டாத்
தேசவன்வருமோவென்றுசிரித்தனன்றேவர்கோமான். (௭௰)

சிரித்ததேனென்னமீண்டுந்திருமகன்றன்னைநோக்கி
வருத்தமேயன்றியிந்தமாதவம்பயனின்றென்று
னுருத்திவனவனைநோக்கியுயிரிறுமளவுமிந்தக்
கருத்துநான்விடேனென்றான்கடுங்கனலூடுநின்றான். (௭௧)

மைந்தனிம்மாற்றங்கூறமனனுறமகிழ்ந்துதெய்வத்
தந்தையும்விருத்தவேடந்தன்னையொருகணத்தின்மாற்றி
யிந்திரனாகிமுன்னின்றிப்பெருந்தவத்தால்வந்து
பைந்தொடிபாகன்பாசுபதமுனக்குதவுமென்றான். (௭௨)

என்றுரைத்தமரர்கோமானேகியபின்னர்வெள்ளிக்
குன்றுடைப்புனிதன்பாதங்குறிப்புறமனத்தனாகி
நின்றுநற்றவஞ்செய்கின்றநெடுந்தகைசீர்மையெல்லாஞ்
சென்றுமைக்குரியரானசேடியர்செப்பினாரே. (௭௩)

மேனைமுன்பெற்றகிள்ளைவேலையுஞ்சேவினோடு
மானையும்பொருதசெங்கண்மாதவல்லிகேட்டுத்
தானையுங்கரியபேருந்தரியமுமாகச்சாத்த
வானையன்றுரித்தநக்கற்கடிபணிந்தருளிச்செய்தாள். (௭௪)

வேறு.

ஆலமுண்டமுதம்பொழிதருநெடுங்கணம்பிகையருண்மொழிகேட்டு
நீலமுண்டருண்டகண்டனுமிரங்கிநிரைவளைச்செங்கைபாப்கொடிது
காலமுண்டருள்கூற்றத்தின்மைந்தனுக்குங்காற்றின்மைந்தனுக்குநேரினையான்
ஞாலமுண்டவனுக்குபிணையெனச்சிறந்தோனரனெனுநாமமும்படைத்தோன். (௭௫)

ஆடியானனன்றன்மதலையர்விரகாலாடியசூதினுக்கழிந்து
காடுறாமுறையுங்கடனிராவரிற்கடவுளையகன்றருகாளை
நீடுபோமரிற்பகைவரைச்செகுக்குநினைவினனெருப்பிடைநம்மை
நாடியேயரியதவம்புரிகின்றானிதுமுன்னமேயறிவோம். (௭௬)

பருகுநீர்துறந்துகாற்றும்வெவ்வெயிலும்பாதவங்களின்சினையுதிர்ந்த
சருகுமேயொழியக்காய்கனிகிழங்குந்தானினிதருந்துதறவிர்ந்தா
னுருகுமாமனத்தைநாழுவந்திருத்தற்குறையதியாக்கிநம்மிடத்தே
செருகினானனைவயாவரேயிவன்போற்செய்தவஞ்சிறந்தவரென்றான். (௭௭)

போகமாய்விரிந்தும்போகியாய்ப்பார்த்தும்புலன்களின்வழிமனஞ்செலுத்தா
யோகியாயிருந்தும்யோகிகண்முதலாவுரைப்பரும்பலபொருளாயு
மேகமாய்நின்றுந்தத்துவமறைக்குமெட்டுதற்கரியதன்வடிவிற்
பாகமாய்விளங்கும்பைந்தொடியுடனேபரிவுடன்சின்மொழிபகர்வான். (௭௮)

கேட்டிநீசெவ்வாய்க்கிளிநிகர்மொழியாய்கிரீடியைத்துணைவர்களுடனே
காட்டிலேயொதுக்கியிளைஞருந்தானுங்கடியவஞ்சனையினாற்கவர்ந்த
நாட்டிலேவாழ்வோனேவலான்மூகநாமதானவனிவன்றன்னைக்
கோட்டிலேகொலைசெயேனமாய்வந்திக்குன்றிடையின்றுபுக்கனனால். (எகூ)

மற்றவன்விரைவினுடனமர்மலைந்துவாசன்*மதலையைவதைத்து
நற்றவமகற்றுமுன்னமேவிரைந்துநாமுயிர்கவருதல்வேண்டுங்
கொற்றவன்மதலைகேட்டனவரங்கள்கொடுத்தலும்வேண்டுமென்றெழுந்தான்
கற்றவர்வளைத்துத்திரிபுரமெரித்தோன்கற்றவர்கருத்தினாற்காண்போன். (அ0)

நனைமலர்சிதறித்தொழுதுமுன்னின்றநந்திமேனயனம்வைத்தருளி
வினைபடுகேழல்வேட்டைநாமின்றேவேடராயாடுதல்வேண்டு
நினைவுறவெமதுகணத்தொடிக்கணத்தேநீயுமவ்வுருக்கொளுகென்று
மனைவியுந்தானுங்கிராதர்தங்குலத்துமகிழ்நனும்வனிதையுமானார். (அக)

வேறு.

என்றபொழுதினினந்திமுந்திமுதற்கூற்றுதைத்தவிருதாள்போற்றி
வென்றிபுனைகணநாதர்க்குரைசெய்தானவர்களுமவ்வேடங்கொண்டார்
கொன்றைகமழ்முடியோனும்வேணியினைப்பின்னல்படுகுஞ்சியாக்கித்
துன்றுமயிற்பீலிநெடுங்கண்ணிதிருநெற்றியுறச்சுற்றினானே. (அஉ)

நீலமணித்திருக்கண்டநிலவெழவேபலகறைப்பூணிறையக்கட்டிக்
கோலமணிக்குழைகளினுங்குழையாகப்பிணையன்மலர்கொண்டுசாத்திச்
சேலையெனப்புலியதளுந்திருமருங்கிலுறச்சேர்த்திச்செய்யபைம்பொற்
காலிணையிற்செருப்பணிந்துசெய்யதிருவடிவுமிகக்கரியனானான். (அங)

இடக்கைமலர்வரிசிலையும்வலக்கைமலர்ப்பாணமும்வெந்நிடையேபாண
மடக்கியவெங்கொடுவரித்தோலாவநாழிகையுமிகவழகுகூரக்
கடக்களிறன்றுரித்தபிரான்கண்டவர்கள்வெருவவாமுன்கொண்டகோலந்
தொடக்கியுரைசெயநினைக்கிலாயிரநாவுடையோர்க்குஞ்சொல்லலாமோ. (அச)

வேறு.

குறைந்தசந்திரகிரணமும்பீலியுங்கொன்றையந்திருத்தாரும்
புறந்தயங்கிடவிழுந்தசெந்தனிச்சடைப்பொலிவையார்புகல்கிற்பார்
சிறந்தபைம்பொலங்கிரிமுடியடியுறத்தேவர்கோன்றிருச்செங்கை
நிறந்தருஞ்சிலைவளைவறவழகுறநிமிர்ந்துநின்றதுபோலும். (அரு)

வேறு.

வரையரசன்றிருமடந்தைவனமுலைமேன்மணிக்குன்றிவடமுஞ்செங்கை
நிரைவளையும்புலிப்பல்லாணிறந்திகழ்மங்கலப்பூணுநீலமேனி
விரைபகிலினறுஞ்சாந்தும்விரித்ததழைப்பூந்துகிலும்வேடமாதர்
நிரைநிரையேதனைச்சூழநின்றவடிவழகினுக்குநிகர்வேறுண்டோ. (அசு)

ஓரேனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்தப்
போரேனந்தனைத்தேடிக்கணங்களுடன்புறப்பட்டான்புனங்களெல்லாஞ்
சீரேனல்விளைகிரிக்குத்தேவதையாங்குழவியையுஞ்செங்கையேந்திப்
பாரேனையுலகனைத்தும்பரிவுடனேயீன்றுடன்பதிபின்வந்தாள். (அஎ)

---

* மதலையையாங்கண் என்றும் பாடம்.

அனந்தவேதமுமிறைவனேவலினால்ஞானிகளாயருகுசூழ
வனந்தகோடியிற்கோடிகணநாதர்வேட்டுவராயருகுபோத
வனந்தனாலினித்தரிக்கவரிதரிதிப்பூதலமென்றமரர்கூற
வனந்தமாமுகமாகியடிச்சுவடுநோக்கினானடவியெல்லாம். (அஅ)

மூகதானவனவன்மேன்முந்தியுயிர்கவருமெனுஞ்சிந்தையானப்
ப[illegible]தனிதவஞ்செய்பாக்கியபூமியைநோக்கிப்பரிவினோடு
மேகசாபமும்வணக்கியேகினானேகுதனுமிலங்குவெண்ணீற்
றுகனானோக்கப்பட்டனாகியதாலருந்தவன்மேலந்தவேனம். (அகூ)

அதிர்ந்துவருகேழலைக்கண்டருந்தவத்தையழிக்குமெனவஞ்சினானு
முதிர்ந்தசருகுணவொழியவுணவிலான்விரைவினிற்றன்னொருவில்வாங்கி
முதிர்ந்தசினத்துடனெய்தான்முகம்புதையவக்கணைக்குமுன்னேயண்டம்
பிதிர்ந்திடவின்னாணெறிந்துவேடனதனயாங்கம்பிளக்கவெய்தான். (கூ0)

இருவருமேவியவாளியுடனேபட்டுடலுருவியேனம்வீழ
வெருவருமாறடவியெலாந்தடவிவருவெஞ்சிலைக்கைவேடன்சேனை
யொருவன்முதலெய்திருக்கவவ்*விலக்கைநீயெய்ததாரனோவென்று
பொருவருமாதவம்புரியும்புருகூதன்மதலையுடன்பூசலிட்டார். (கூக)

வேறு.

புராதனாகமவேதகீதபுராணரூபமொழித்துவெங்
கிராதனாகியவடிவுகொண்டகிரீசனோடுரைசெய்குவான்
விராதனாதிநிசாசரேசரைவென்றுமுச்சிகரத்தின்மே
விராதவாறடலமர்புரிந்தவிராமனேநிகரேவினான். (கூஉ)

முன்புவிட்டவெண்வாளிகேழன்முகம்பிளந்துபினுருவநீ
பின்புவிட்டசரஞ்சிரத்திடையுருவுமாறுபிளந்ததால்
வன்பொடிப்படிபுகலுகின்றதுவன்மையோதிறல்வின்மையோ
வெண்பெயர்ப்பொறியேவுபாரிதனுடலினீவிடுமேவுபார். (கூங)

எனக்கருந்தவமுயறலாலுதிர்சருகலாலுணவில்லைபா
லுனக்குமுன்படைவேடருக்குநல்லுண்டிபாமிதுகொண்டுபோ
வனக்குறும்பொறைநாடவுன்படைவலிமைகொண்டுவழக்கறச்
சினக்கில்வெங்கணைவிடுவன்யானுயர்திசைதொறுந்தலைசிந்தவே. (கூச)

வேறு.

என்றமொழிசெவிப்படலுமெயினர்க்கெல்லாமிறைவனாகியவெயினனிவனைநோக்கிப்
பன்றிபெருமோகாத்தோடின்றுன்னாவிபருகிவிடுமெனமிகவும்பயப்பட்டாயோ, நின்று
பெருந்தவமுயல்வோர்தாங்கள்கொண்டநினைவொழியப்புறத்தொன்று நினைவரோசொல்
பொன்றிடினுநீயறியப்பசுத்தோல்போர்த்துப் புலிப்பாய்ச்சல்பாய்வரோபுரிவிலாதாய்.

* விலங்கை என்றும் பாடம்.

மறையவனோவொருகுடைக்கீழ்வையங்காக்குமன்னவனோ வைசியனோவடிவமாறிப்
பொறையுடனேதவம்புரியுமவுணர்மாக்கள்புத்தேளிர்நிருதரிலோர்புறத்துளானோ
நிறையுடன்மெய்ப்பிறைபோலவடிவந்தேய்ந்துநெருப்பிடைநீநிற்கின்றாய் நெடுநாளுண்டு
குறையுனக்கியாதுரையென்றானென்றபோதக்குருகுலநாதனுந்தன்னைக்கூறினனே.

கூறியசொற்கொண்டறிந்துவேடன்மீண்டுங்குருகுலத்தோரை வருணுங்குனிவிற்கற்றுச்
சீறிவருதுருபதனைத்தேரிற்கட்டிச்சென்றுகுருதக்கிணைசெய்சிறுவனீயோ, வீறியவெங்
குலத்திலொருவேடன்றன்னைவின்மைபொருதவன்றடக்கைவிரலுங்கொண்டாய், பேற
றவன்றொருமுனிவன்வார்த்தைகேட்டுப்பிளந்தனைபல்வேடுவரைப்பிறைவாயம்பால். (௯௭

கன்றிவருகனற்கடவுள் கையிற்றேருங்காண்டீவக்கார்முகமுங்கணையும்வாங்கி
யொன்றுபடக்காண்டவக்கானெரித்தநாளி லோருயிர்போற்பலயோனியுயிருமாட்டிக்
குன்றுதொறுங்குன்றுதொறுமிருந்தவேடக்குழாமனைத்துநீறுபடக்கொன்றாயென்ப
ரின்றுமெனைமுகநோக்கிவன்மைவின்மையிரண்டுக்குமன்னவநீயிகழ்ந்திட்டாயே. (௯௮

மல்லுக்கும் புயவலிக்குங்கலக்குறாதமனவலிக்குமறைபுடன்போர்வாளியேவும்
வில்லுக்குமுனின்மிகுத்தார் மண்மேலுண்டோவிசயனெனும்பெயர்க்குரியவிசயத்தாலே
சொல்லுக்குவிடேனின்றுநீயுநானுந்தோள்வலியுஞ்சிலைவலியுங்காண்டல்வேண்டும், கல்
லுக்குநிகர்மனத்தாயென்றானந்தக்காளையும்வில்வளைத்தொருவெங்கணைமேல்விட்டான்.

விட்டகொடுங்கணையையொருகணையால்வேடன் விலக்கிவரிசிலைக்குரியவிசயன்றன்மேற்
றொட்டனனேரிரண்டுகணையவைபோய்மார்புந் தோளுமுடன்றுளைத்தனவாற்றுளைத்த
போது, கட்டழலினிடைநின்றகாளைமீளக்கடுங்கணைகளொருமூன்றுகடிதின்வாங்கி
வட்டநெடும்பீலியணிமுடியுமார்பும்வாகுவுமேயிலக்காகவலியோடெய்தான். (௧௦௦)

எய்தகணைதிருமேனியெய்துமுன்னரிறுத்துணிந்தொன்றிரண்டாயிலக்குறாமல், வெய்தி
ன்வலியுடனெய்தான்மூன்றுவாளிவிண்ணவர்கோன்மகன்மேலும்வேறொன்றெய்தா
னேதினிவன்வினோதப்புறத்தொடுத்தானென்பதறியாமலெயினன்முடியணிந்தபீலி,கொய்
துநதியறல்சிதறப்பிறையுமானுங்குலையவொருகணைதாக்கக்கொடியோனெய்தான்.

அற்போலச்சூழ்கின்றகிராதரெல்லாமவன்முடிமேலிவனெய்ததறிந்துதீயினிற்போன்மே
லெழுதலுமங்கவரையெல்லாஞ்சிலுமெனக்கையமைத்துநீயின்றெய்த, விற்போர்கண்ட
னமடாவிற்பிடிக்கும்விரகறியோமுன்னிடத்தேவேதவிற்போர்,கற்போமென்றொருகணை
மற்றவன்மேல்விட்டான் கனகமலைச்சிலைவளைத்தகையினானே. (௧௦௨)

வேறு.

பீலிமுடியோன்விடுபிறைக்கணையைவேறொருபிறைக்கணையினால்விலகிவிற்
கோலிவடிவாளிமழைசிந்தினன்மழைக்கரியகொண்டலெனநின்றகுமரன்
†மூலிவடிவாமெயினன்மேலவைபடாமன்முனைமண்மிசைகுளிக்கமுரணார்
வேலியிடுமாறெனவிழுந்தனவிழுந்ததனைவிசயனனிகண்டுவெகுளா. (௧௦௩)

---

* கண்டனமேடா என்றும் பாடம். † மூலவடிவாம் என்றும் பாடம்.

வேணிமுடிவேடன்மிசைவேறுமொருசாயகம்விடுத்தனன்விடுத்தகணையின்
றூணியறமுன்பினொடுபின்புதொடுகின்றகணைநீவணறவெட்டுதலுமே
கோணியவிளம்பிறைமுடித்தவன்வெகுண்டுபலகோல்கள்விடவிந்த்ரகுமரன்
பாணியுடனேதொடைநடுங்கியயனின்றதொருபாதவமருங்கணுகினான். (கo௪)

கொண்டதவமேதனமெனப்புரியும்வில்லிமெய்குலைந்தயருகின்றநிலையைக்
கண்டருகுநின்றவிமவான்மகளுரைக்கமிகுகருணையொடிரங்கியவனைப்
பண்டுதவமேபுரியிளைப்பறமனத்தின்மிகுபரிவுடையனாகிவெகுளா
வெண்டிசையும்வென்றனலளித்தசிலைநாணிறவெயினர்பதியெய்தனனரோ. (கoரு)

உழுந்துருளுமெல்லைதனில்வில்லினெடுநாணறவுரத்தொடெதிரோடிவரிவிற்
கழுந்துகொடுமாமுடியின்மோதுமுனிழந்ததுயர்கண்ணிபடுபீலிமதியின்
கொழுந்தமுதுசோரவிடநாகஞ்சுடிகைத்தலைதுலைந்துமணிசிந்தநதிபா
ளெழுந்ததடுமாறியகல்வானிலுறவேடனுமிளைத்தவசமுற்றனனரோ. (கoசு)

விண்ணிலுறைவானவரில்யாரடிபடாதவர்விரிஞ்சன்முதலோருததிசூழ்
மண்ணிலுறைமானவரில்யாரடிபடாதவர்மனுக்கண்முதலோர்களதலக்
கண்ணிலுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள்கட்செவிமகிபன்முதலோ
ரெண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதனவிருந்துழியிருந்துழியரோ. (கoஎ)

வேதமடியுண்டனவிரிந்தபலவாகமவிதங்களடியுண்டனவொரைம்
பூதமடியுண்டனவிநாழிகைமுதற்புகல்செய்பொழுதொடசலிப்பில்பொருளின்
பேதமடியுண்டனபிறப்பிலியிறப்பிலிபிறங்கலரசன்றன்மகளார்
நாதனமலன்சமரவேடவடிவங்கொடுநரன்கையடியுண்டபொழுதே. (கoஅ)

என்பொடுகொழுந்தசைநிணங்குருதியென்னுமவையிற்றிரண்டானும்வயிரா
வன்பொடுவளர்ந்தமிருகாதிபதிகாரியெனும்வடிவமுறுபெற்றமறவோ
னன்பினொடுபோறம்வளர்த்தருளெயிற்றிமிகவஞ்சவபிராமவெயினன்
பொன்புரையுமேனியிலடித்தமைபொறாதுமற்போர்புரியுமாறுகருதா. (கoகூ)

உள்ளடிவிரற்றலைகள்புறவடிபாட்டினுடனுயர்கணைக்கான்முழந்தா
டள்ளியவூருவுயர்தாள்வரைகளொத்தகடிதடமுதரமார்புதிணிதோ
டுள்ளிவருசெங்கையொடுமுன்கையிடர்நெற்றியொடுகூடமெனவெண்ணுபடையால்
வள்ளலெனையாளுடையமாதவனுமாதவனுமல்லமர்தொடங்கியுறவே. (கக0)

மல்லமர்தொடங்கியிவரிருவரும்வெகுண்டுபொரமாதிரமுமாநிலமுமே
லெல்லையுமதிர்ந்துசுழல்கின்றபொழுதத்திசையின்பழுதில்கேள்வன்வெகுளா
நல்லிசைபுனைந்தமணிநூபுரவிசாலவொளிநண்ணுபதநாண்மலரினால்
வில்லியரிலெண்ணுதிறல்வில்லுடையகாளைதனைவிண்ணிலுறவீசினனரோ. (ககக)

விண்ணவர்தமூர்புகுதவிண்ணவர்பிரான்மதலைவிசையுடனெழுந்துமுகில்போன்
மண்ணினிடைவீழ்தருமுன்*மார்பகலமல்லதைவயங்குபுறமென்றுதெரியா
னெண்ணரியஞானவொளியாகிவெளியாகிவருமெயினர்பதியானகருணைப்
புண்ணியன்மகிழ்ந்துருகநின்றொலியுடன்பழையபூசல்பொர வெண்ணியெதிர்வான்.

---

* மார்பமுகமல்லதை என்றும் பாடம்.

வெய்பகணநா தர்கணதேவர்விபுதா தியர்விரிஞ்சிசிவயோகியருஞ்
செய்யசுடரோனளகையா திபதிகின்னரர்கள்சித்தர்பலசாரணர்மணிப்
பையரவினுடிபுருகூதனிவர்சூழ்தரவொர்பச்சைமயில்பா தியுடனெ
துய்யவிடைமீதொருசெழுஞ்சுடரெழுந்த துதொழுந்தகையதாகுமளவோ. (ககரு)

கைவிலுடனேயெயினர்கோடிபலர்சூழ்வரக்கன்னிமயில்பின்னர்வரவே
தெய்வமறைஞானிகடொடர்ந்துவரவந்துபொருசெய்யசிவவேடன்முடிமேற்
சைவமுறையேயிறைவர்தண்மலரிறைடொருகுசாத்தியொளிர்நாண்மலரெலா
மெய்வடிவுகொண்டனையகரியதவவேடனிணைவிழிமலர்பரப்பிமகிழா. (ககச)

தும்பைவகைமாலைசெறிவில்லமொடுகொன்றைமலர்சூதமறுகேகமழ்தருஞ்
செம்பவளவேணிமிசைதிங்கணதிசூடியருள்செம்பொன்வடமேருவனையா
னும்பர்மணியாழினொடுதும்புருவுநாரதனுமுருகியிசைபாடவருள்கூ
ரம்பையுடனேவிடையின்மீதொளிரநின்றதனையஞ்சலிசெய்தன்பொடுதொழா. (ககரு)

வேறு.

ஆடினன்களித்தனனயர்ந்துநின்றன
னோடினன்குதித்தனனுருகிமாழ்கினன்
பாடினன்பதைத்தனன்பவளமேனியை
நாடினனடுங்கினனயந்தசிந்தையான். (ககசு)

விழுந்தருவினையினின்மெலிந்துநாயினு
மழுந்தியபிறவியினையருவேன்முனஞ்
செழுஞ்சுடர்மணிப்பணித்திங்கண்மௌலியா
யெழுந்தருளியவிஃதென்னமாயமோ. (ககஎ)

ஆதியேயண்டமுமனைத்துமாயொளிர்
சோதியேகொன்றையந்தொங்கன்மௌலியாய்
வாதியேமரகதவல்லியாளொரு
பாதியேபவளமாம்பரமரூபியே. (ககஅ)

பையராவணிமணிப்பவளமேனியாய்
செய்யவாய்மரகதச்செல்விபாகனே
யையனேசேவடியடைந்தவர்க்கெலா
மெய்யனேயெங்குமாய்விளங்குஞ்சோதியே. (ககசு)

முக்கணுநிலவெழமுகிழ்த்தமூரலுஞ்
சக்கரவதனமுந்தயங்குவேணியு
மைக்கயன்மரகதவல்லிவாழ்வுறு
செக்கர்மெய்வடிவமுஞ்சிறந்துவாழியே. (கஉ0)

அன்புறுதருமனுக்கநுசனுயினே
னன்பரம்பொருளுக்குநண்புமாயினேன்
பொன்புரைமேனியாய்போற்றினேனுனை
யென்பெருந்தவப்பயன்யார்பெற்றூர்களே. (கஉக)

என்றுகொண்டிம்முறையிவனியம்பவே
மன்றலங்கொன்றையம்மாலைமௌலியா
னென்றியதவம்புரியும்பர்தம்பிரான்
றன்றிருமதலையைத்தழுவினானரோ. (கஉஉ)

தழுவினன்பெருந்துயாகற்றித்தண்ணளி
பொழிதருகண்ணினன்புரக்குஞ்சிந்தைய
னழிவறவொழிவறவமர்ந்தசோதியன்
பழுதறுமொழிசிலபகர்ந்துதேற்றினான். (கஉங)

சூதினில்யாவையுந்தோற்றுக்கானிடை
யேதிலர்போலநீரிளைத்துவாடினீர்
வாதுசெய்புலன்களையடக்கிமண்ணின்மே
னீதவம்புரிந்தமைநினையலாகுமோ. (கஉச)

மூகனென்றுரைக்குமம்மூகதானவன்
வேகமோடேனமாய்விரைவில்வந்தன
னாகவெங்கொடியவனவின்றவாய்மையால்
யோகுசெபுனதுயிருண்ணவெண்ணியே. (கஉரு)

வந்தவன்முந்துமுன்மங்கைதன்னுட
னிந்தவெற்புறைதருபெயினவேடமாய்ச்
சுந்தரமரகதச்சோதிவீரனே
யந்தவல்லசுரனையம்பின்வீழ்த்தினேன். (கஉசு)

நின்னுடனமர்செய்துநின்வின்னாணறுத்
தந்நெடிவில்லினாலடியுமுண்டன
னுன்னருமல்லினாலுதையுமுண்டன
னென்னினியுன்கருத்தென்றுகூறினான். (கஉஎ)

அந்தவில்விசயனுமவன்பதம்பணிந்
தெந்தைபாரதவமர்க்கிசைந்தவீரர்மெய்
சிந்தநின்பேர்பெறுதெய்வவாளியைத்
தந்தருளென்றனன்றவத்தின்மேனின்றான். (கஉஅ)

ஐயனுமம்மையோடருள்புரிந்துபின்
வெய்யபொற்றூணியும்வில்லுமந்திரமுந்
துய்யபாசுபதமெய்த்தொடையுமுட்டியு
மொய்யெனநிலையுடனுதவினானரோ. (கஉகூ)

பெற்றனன்விசயனும்பேயும்பூதமுஞ்
சுற்றியகணங்களுஞ்சுருதியோசையும்
வெற்றிகொள்பெற்றமும்விழைந்துசூழவே
*கற்றையஞ்சடையவன்கயிலையேகினான். (கங0)

---

* கற்றவருடையவன் என்றும் பாடம்.

ஏகியபின்னராயிரங்கணுதனு
மோகராதுந்துபிமுழங்கத்தேரின்மே
ஞகருமுனிவருநண்ணிவாழ்த்தவே
வாகைகொள்விசயனைவந்துபுல்லியே. (கரு.க)

நீபுரிதவப்பயனீடுவாழியே
சாபமுந்தூணியுஞ்சாமும்வாழியே
தீபமெய்யொளியுடன்சேர்ந்துபோர்செயு
மாபெருநீலமெய்வாழிவாழியே. (கரு.உ.)

என்றுகொண்டிணையடியிறைஞ்சுமைந்தனைத்
தன்றிருத்தேரின்மேற்றூழ்ந்தகைகளா
லொன்றியவுவகையோடேற்றியும்பர்கோன்
சென்றனன்றன்பெருந்தெய்வவானமே. (கரு.ரு)

ஒருபெருமாதலியூருந்தேரின்மே
லிருமரகதகிரியிருந்தவென்னவே
மருவருகற்பகமாலைமௌலியும்
விரிபுகழ்மைந்தனும்விளங்கினாரோ. (கரு.சா)

ஆயிரம்பொலங்கிரியழித்துவானின்மேன்
மாயிருமொருபுரம்வகுத்ததென்னவே
பாயிரமறைபுகழ்*பரமன்றேசெனச்
சேயிரும்பொன்னகர்திகழ்ந்துதோன்றுமால். (கரு.ரு)

விண்ணவர்முனிவருள்விளங்கிவாழ்தலா
னண்ணியமுடிப்பெயர்நாகம்பூணலா
லெண்ணருமகபதியிருந்தமாநகர்
புண்ணியன்வடிவெனப்புகழ்ந்திலங்குமால். (கரு.சா)

மாவலிசிறைப்படவைத்ததாண்மலர்
தாவியவிண்ணிடைத்தயங்குபொன்னகர்
தேவருந்தொழுகழற்றேவனுந்தியம்
†பூவிருந்ததுவெனப்பொலிந்துதோன்றுமால். (கரு.எ)

பொலிவுறுமந்நகர்புகுந்துதாதையுஞ்
சிலைகணைபெறுதிறற்றெய்வமைந்தனு
மெலிவுறுமின்னிடைநுடங்கமீனினும்
பலாசமாதரார்பரிவுகூரவே. (கரு.அ)

பருமணிவெயிலெழப்பணிலமாநிரை
தருமணிநிலவெழத்தடமணியப்பெருங்
குருமணிச்சிலம்பொலிகூருமண்டபத்
தொருமணியாசனத்தோங்கிவைகினார். (கரு.கூ)

---

* பாமதேசென என்றும் பாடம்.

† பூவிரிந்தது என்றும் பாடம்.

முருகவிழ்பரிமளமொய்த்ததண்டுழாய்
மரகதகிரிதிருமைத்துனன்றனைப்
பெருமிதவபிமனைப்பெற்றகாளையை
யருள்பெறுமுவகையோடன்னையெய்தினாள். (கசo)

அன்னையைமின்னிடையரியபாவையைக்
கன்னலையமுதொடுகலந்தசொல்லியை
யுன்னருந்தவப்பயனுற்றமைந்தனுஞ்
சென்னியாலவள்பதஞ்சேர்த்துநின்றனன். (கசக)

நின்றவக்குமரனைத்தழுவிநேயமோ
டொன்றியவுவகையளுரைவழுத்தினாள்
வென்றிகொளையநீவிபுதர்தம்பிரான்
றன்றிருச்செல்வமுந்தாங்குவாயென. (கசஉ)

ஆயிரம்பதின்மடங்காகவன்னையு
மாயிரும்புதல்வனைவாழ்த்திவாழ்த்தியே
தூயசெம்பருமணிசுடருமாளிகை
யேயினளிந்திரனிதயம்போன்றுளாள். (கசங)

அந்தரதுந்துபியதிரும்பேரொலி
முந்தியமறையொலிமுழங்குஞ்சங்கொலி
சிந்துரமதகரிசீறுநீடொலி
சுந்தரமுகிலொலிதூங்கத்தூங்குமால். (கசச)

பத்திகொணவமணிபயின்றுசெந்துகிர்க்
கொத்தொளிர்தளிருடன்குலவுகற்பகஞ்
சித்திரவிசயவில்விசயன்சென்னிமேல்
வைத்ததுமுருகவிழ்வாசமாலையே. (கசரு)

கிளரிசைத்தும்புருகிளருங்கற்பகத்
தளையவிழ்நாண்மலர்சாத்துநாரத
னளிபயிலமுதருண்டகமகிழ்ந்துளக்
களியொடுகின்னரர்கானம்பாடவே. (கசசு)

* தகையுளவகத்தியன்புலத்தியன்றவ
வகைபெறுவசிட்டனேழ்வசுக்களாதிய
ரகமகிழ்ந்துவகைகொளன்பினூற்றிரு
முகமலர்ந்தருமறைமுனிவர்வாழ்த்தவே. (கசஎ)

செம்மணிவெயில்விரிசிலம்புகொஞ்சவே
கைம்மணிவரிவளைகலந்துபொங்கவே
பெய்ம்மணிமேகலைபிறங்கியார்க்கவே
துய்ம்மணியொளியரமாதர்சூழவே. (கசஅ)

---

* தகையுளனகத்தியன்புலத்தியன் என்றும் பாடம்.

### வேறு.

இவ்வாறிவரிருவோர்களுமிணைமாமுகிலெனவே
செவ்வாளரிகிளர்கின்றதொர்செம்பொற்றவிசிடையே
மைவானகமுழுதுஞ்செழுமறையோசைவிளக்கு
மவ்வானவர்புடைசூழ்தரவழகெய்தியிருந்தார். (கசகூ)

இருந்தாரிவர்குளிர்சாமரையிருபாலுமிரட்டப்
பெருந்தாரகைமதியொத்தொளிபெறுகின்றகுடைக்கீழ்
முருந்தார்நகையரமாதரின்முதன்மைப்பெயர்புனையுஞ்
செருந்தார்குழலுடையாளரிதிருவூருவின்வந்தாள். (கரு0)

* மானேதருவிழியாடிருமாதேநிகரெழிலா
டேனேதிகழ்மொழியாள்பொரு †சிலையேதருநுதலா
டானேதனைநிகர்வாள்பெயர்தருநாடகமெல்லாங்
கானேசெறிதொடையாரிருகண்கண்டுகளித்தார். (கருக)

இந்நாடகவிதய்யாவையும்யாரேதனிபுரிவார்
மின்னாரிடைமின்னேரிழைமென்கொம்பையலாதா
ரென்னாவிழிகளியாமனமுருகாவிசையெழுதும்
பொன்னாடுடையவன்மைந்தன்வியப்போடுபுகழ்ந்தான். (கருஉ)

திகழ்கின்றனவுரைதந்தைசெவிப்போதுறமகிழா
விகல்கொண்டுயர்தோளாய்புதிதிந்நாடகமென்னா
மகவான்பெருமிதவாழ்வுறைவானோர்முதல்யாரு
மிகுகுங்குமமுலையாருடன்விடைகொண்டிடவிட்டான். (கருங)

மகனும்புகழ்புனைதந்தையுமந்தாகினியாடிச்
சிகரம்பயில்வரைபோலுயர்திருமண்டபமிசையே
யகிறுன்றியகுழலார்பலரரமாதரளிக்கு
சிகரம்பயிலமுதுண்டவர்நிறைவெய்தியிருந்தார். (கருச)

தருக்குங்களிபடுதுண்டவர்தனிவாழ்வுறுமெல்லைச்
சுருக்குங்கணமணிநீள்வெயில்சுடர்மாளிகைவேறொன்
றிருக்கும்படிவிசயன்பெறவீந்தான்விடையதுகண்
டருக்கன்குடகடன்மாளிகையணிதேரொடடைந்தான். (கருரு)

மேலைத்திசைகாலைச்சுடர்வீழ்தந்திடுமுன்ன
மாலைச்சுடர்காலைத்திசைவாழ்வுற்றிடவந்தான்
சோலைத்தருவருள்வாரிதிசூழ்வான்முகடேறிப்
பாலைப்பொழிவதுபோனிலவொளிகொண்டுபரப்பா. (கருசா)

---

* மனேர்தரு என்றும் † சிலையியபொரு என்றும் பாடம்.

அந்தச்சிலைமகவான்மகனம்மாளிகையிடையே
முந்துற்றதொர்தவிசிற்கருமுகில்போலவிருந்தான்
கந்தர்ப்பன்வெருண்டேவிய* கணைபட்டுளமுருகா
நொந்துற்றுழனடனம்புரிநுண்ணேரிழையங்கண். (கடுஎ)

அக்கங்குலினிடையேமலரரிசந்தனவாச
மைக்கங்குனிகர்க்கும்பருமணிநீலமணிந்தா
† ளுய்க்கும்பரிமளநீவிதவுடையானடையுடுத்தாள்
மெய்க்குந்தவவயவாளிகொள்விசயன்னுழைவந்தாள். (கடுஅ)

ஓராயிரமகல்வான்மணியொக்குந்தவிசிடையே
யீராயிரதீபங்களெறிக்குஞ்சுடரெழவே
வாராயிரமுகமானுகர் ‡ மஞ்சூர்தருநயனப்
போராயிரமுடையான்மகனெதிர்கொண்டிவைபேசும். (கடுக)

எந்தைப்பெயர்புனையாயுவெனும்போர்முடியிறைவன்
றந்தைக்குயிர்நிகராகியதளவத்திருநகையாய்
கொந்துற்றெழுகுழலாய்குழனிகராகியமொழியாய்
வந்துற்றதெனெனவன்னைமலர்த்தாள்களில்வீழ்ந்தான். (கசுo)

இவ்வாறிவனவடாள்களிறைஞ்சிப்புறநின்றான்
மெய்வாய்மையினுயருந்தவவிபுதாதிபர்மகனுஞ்
செவ்வாயிதழ்மடியாவிழிசிவவாவுளமழலா
வெவ்வாளரவுமிழுங்கடுவிடநேர்மொழிபகர்வாள். (கசுக)

இந்தத்தனியிரவின்கணின்னிருதோடழுவுறவே
வந்துற்றவெனைத்தாயர்தம்வகையிற்புகல்செய்யா
நிந்தித்தனைநீசெய்தவநெறியின்பயனெல்லாம்
வெந்துற்றருநீறெழவிடுவேனெனவெகுளா. (கசுஉ)

நின்போன்மாபுடையாரிருநிலமன்னரினுண்டோ
வன்போடழல்வருபாவையைபடைவுன்னியளித்தாய்
பொன்போலிரவிடையாடவர்புகலாமொழிபுகல்வாய்
வன்போவருணலமோபெருமிதமோவளர்புகழோ. (கசுங)

எனமன்னனைநீபேடியரியல்பாகெனவிதியா
நனைமென்குழன்மலர்மங்கையுநானுங்கலமுடையா
டனிகங்குலினிடைசென்றுயர்தன்கோயில்புகுந்தா
ளனலன்றருசிலைவீரனுமஃதெய்தினனந்தோ. (கசுச)

ஆடித்திருமுகமன்னவனநுசன்றருவிசயன்
பேடிப்பெயர்நாமோபெறுவோமென்றெழில்வடிவம்
வாடிப்பெரிதுளநொந்தணிமாசற்றதொர்தூசான்
மூடித்துயில்கொண்டான்மணிமுடிமன்னவர்திலகன். (கசுரு)

---

* கலகக்கணைபடவே என்றும் பாடம்.

† உய்க்கும்புகை நிகர்நீவிதவுடை என்றும் பாடம்.

‡ மஞ்சேநிகர் செங்கட் என்றும் பாடம்.

அக்காலையில்விசயன்றனதிடராரிருளகலச்
செக்காவியுமரவிந்தமும்வரிவண்டொடுதிகழ
மைக்காரிருள்வெள்ளம்பிலவெள்ளத்திடைவடியத்
தொக்கானுயர்குணதிக்கினிலகிலந்தொழுசூரன். (கசாரு)

வேறு.

கதிருதித்தவக்காலையின்மாமறை
முதல்வர்முப்பத்துமூவருஞ்சூழ்வரப்
புதல்வனுற்றதுணராண்புரந்தரன்
விதமணிப்பணிமண்டபமேவினன். (கசாசா)

கண்பரப்பியொர்கந்தருவன்றனை
விண்புரக்குமவ்வேந்தனிருந்தபின்
மண்புரக்கும்வரிசிலைவீரனை
யெண்பெறக்கொணர்வாயெனவேவினன். (கசாஅ)

மற்றவன்றிருத்தாண்மலர்போற்றியக்
கொற்றவன்றிருமுன்னர்க்குறுகியாங்
குற்றயாவுமுணர்ந்தனன்மீண்டுபோய்ச்
சொற்றனன்சுரர்கோமுன்சொன்றெழுதரோ. (கசாகூ)

சொன்னவாசகங்கேட்டசுரபதி
கன்னம்வெந்துகண்ணுயிரமும்புன
றுன்னவானவர்சூழ்வரத்தானும்போ
யந்நராதிபன்றன்னையணுகினன். (கஎ0)

அணுகிமைந்தனையன்பொடிறத்தழீஇக்
கணிகையிட்டகடுங்கொடுசாபநீ
தணிதியஞ்சலென்றுரைநதையலாற்
பிணிபுழந்துமுன்பேர்பெறும்பெற்றியான். (கஎக)

அன்னமென்னடையாயிழைதன்னுழைத்
துன்னினன்சுரரோடுஞ்சுரேசன்போய்
மின்னினுண்ணிடையாளும்வெருவுறு
மன்னவன்பதம்வந்துவணங்கினள். (கஎஉ)

வணங்குமுன்னமடநடையோதிமக்
கணங்கொலென்னக்கவின்பெறுகோதையைச்
சுணங்கருமுலைத்தோகையைவார்குழ
லணங்கையண்டரனைவரும்போற்றியே. (கஎந)

அன்னைநீயவற்காயினுமாசையி
னின்னறீர்ப்பதெவர்க்குமியல்பரோ
மன்னனாயினும்வான்பிழைசெய்தனை
னென்னநாகரவட்கிதங்கூறியே. (கஎச)

காமமிக்கவுங்கட்டுரைச்சாபநோய்
பூமிபொய்ப்பினும்பொய்ப்பதன்றலரோ
வேய்மலர்த்தொடையாநெஞ்சில்வேண்டுநா
ளாமவற்கிவ்வுருவருள்செய்திநீ. (௧௭௫)

என்றுவானவர்யாவருமேத்தவே
யன்றவற்கவ்வரங்கொடுத்தாளவள்
வென்றிவார்சிலைமீளியுந்தன்பெருந்
துன்றுகோலஞ்சிறந்திடத்தோன்றினான். (௧௭௬)

அருச்சுனன்றவநிலைச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் ௧௪௧௨.

---

# நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கம்.



அவ்வரந்தனக்குநல்குமன்னைதாள்வணங்கும்வென்றிக்
கைவருசிலையினானைக்கடவுளர்க்கிறைவன்கொண்டு
மொய்வருசுரர்கள்சூழமூதன்மைசேர்சுதன்மையெய்தி
வெவ்வரிமுகத்தபீடம்விளங்கவீற்றிருந்தகாலை. (௧)

தூண்டருதோளின்மொய்ம்பானம்வலிதொலைத்துமேன்மேன்
மூண்டெழுமவுணர்தம்மையிவனன்றிமுடிப்பார்யாரென்
றாண்டகையமரர்க்கெல்லாமவன்செயலடைவேசொல்லிக்
காண்டவமெரித்தவீரனிவனெனக்காட்டினானே. (௨)

அவ்வுரைகேட்டதேவரகமகிழ்ந்தவனுக்கன்பாற்
றிவ்வியமறையின்மிக்கதெக்கிணைபலவுஞ்செய்தார்
செவ்வியதாதைதானுஞ்சேணதித்தூரோட்டி
விவ்விரவாதவாசத்தாமமும்விழைந்துசூட்டி. (௩)

ஆயிரங்கதிருந்திங்களனந்தமுமடங்கமேன்மேற்
காய்கதிர்விரிவதியார்க்குங்கருத்துறக்காணவொண்ணாச்
சேயொளிதவழ்வதாகித்திசைமுகன்றனக்குநல்கு
மாயிருங்கிரணரத்நமவுலியுங்கவித்தானன்றே. (௪)

ஆடையும்*கலனுந்தெவ்வையடுந்திறற்படையுநல்கி
யேடவிழலங்கலானோராசனத்திருத்தியென்றுந்
தேடுதற்கரியதூயவமுதுசெம்பொற்கலத்திற்
கூடவுண்டமரர்க்கெல்லாங்குரிசிலாஞ்சிறப்புஞ்செய்தான். (௫)

அன்னதுநிகழ்ந்தகாலையவன்றிருத்தேவிகண்டு
துன்னியகோபச்செந்தீ†விழியுகச்சிலசொற்சொன்னாள்
மன்னியபுவியில்வைகுமானுடமன்னன்வந்துன்
றன்னுடனொக்கவுண்ணத்தக்கதோவுரைத்தியென்றே. (௬)

---

* கலனு மந்த்ரத் துடனடற் படையு நல்கி என்றும் பாடம்.

† விழியுகப் பொருது சொற்றாள் என்றும் பாடம்.

என்றலுங்கடவுள்வேந்தனி நபுயங்குலுங்கக்கு
மன்றலந்துளபமாயோன்மைத்துனனெனக்குமைந்தன்
கொன்றையஞ்சடையானோடுமமர்புரிகுரிசிறன்னை
நன்றியின்மனிதனென்றிங்கிகழ்வதேதாநங்கையென்றான். (எ)

ஆங்கதுகேட்டதேவரடிபணிந்தரியவேந்தே
பூங்கொடிதருவோடன்றுபுவியினிற்கவர்ந்தவீரற்
கோங்குமைத்துனனேயாகிலிதனின்மற்றுறுதியுண்டோ
வீங்கிவன்புகுந்தசூழ்ச்சிக்கேதுவுண்டாகுமென்றார். (அ)

தேவர்தம்முரையுந்தேவிசெப்பியவுரையுங்கேட்டுத்
தாவரும்புரவித்திண்டேர்த்தனஞ்சயன்றொழுதுசொன்னான்
யாவரும்பரவுமுன்றனுடனொராசனத்திருந்து
மேவருமுடியுஞ்சூடப்பொறுக்குமோவிமலவென்றே. (கூ)

அவனுரைமகிழ்ந்துகேட்டாங்கமரருக்கதிபன்சொல்வான்
புவனமூன்றினுக்குமுன்னைப்போலொருவீரனுண்டோ
சிவனருள்படையும்பெற்றாய்செந்தழலளித்ததெய்வக்
கவனவாம்பரியுந்தேருங்கணையுங்கார்முகமும்பெற்றாய். (கO)

பிரமனேமுதலாவெண்ணும்பேர்பெறுந்தேவரீந்த
வரமிகுமறையுங்கொற்றவான்பெரும்படையும்பெற்றா
யருமறைமுறைபேபார்க்கினமரர்மற்றுன்னினுண்டோ
திருவரும்வின்மைவீரசெப்புவதொன்றுகேளாய். (கக)

கற்றவர்கலைகள்யாவுங்கசடறக்கற்பித்தோர்கள்
பெற்றிடக்கொடுக்குஞ்செல்வமுண்டென்றுபெரியோர்சொல்வர்
கொற்றவவுனக்குநானுங்கூறுநற்குருவேயாகு
முற்றவாறெனக்குநீயுமொருவரந்தருகவென்றான். (கஉ)

தந்தைசொன்மகிழ்ந்துகேட்டுத்தனுவினுக்கொருவனான
மைந்தனுந்தேவர்க்கையமானுடர்செய்வதுண்டோ
சிந்தையினிகழ்ந்ததொன்றுசெப்புகென்றவனுஞ்செப்ப
விந்திரன்றானுமீண்டுமின்னனபகரலுற்றான். (கங)

ஆழிநீரழுவத்தென்றுமுறைபவராழியானு
மூழியினுதன்றானுமுருப்பினுமுலப்பிலாதோ
ரேழிருபுவனத்துள்ளோர்யாரையுமுதுகுகாண்போர்
கோழியான்றனக்குந்தோலாவவுணர்முக்கோடியுண்டால். (கச)

தவாதபோர்வலியின்மிக்கதவத்தினர்சாபம்வல்லோர்
சுவாதமேவிசியெல்லாவுலகையுந்துளக்குகிற்போர்
விவாதமேவிளைக்குஞ்சொல்லர்வெகுளியேவிளையுநெஞ்சர்
நிவாதகவசத்தரென்னும்பெயருடைக்கொடியநீசர். (கரு)

மற்றவரெனக்குநாளும்வழிப்பகையாகிநிற்போர்
கற்றவர்வணக்கினுற்குங்கடக்கரும்வலியின்மிக்கோர்
செற்றிடநின்னையன்றிச்செகத்தினிற்சிலர்வேறுண்டோ
வெற்றிவெஞ்சிலைகொள்வீரவிவ்வரம்வேண்டிற்றென்றான். (கசு)

செருவென்றமாற்றங்கேட்டுச்சிந்தையினுவகைபொங்க
மருவொன்றுமலங்கன்மார்பும்வாகுபூதரமும்பூரித்
துருவொன்றுமதனையொப்பானொருப்பட்டானுரைப்பதென்னே
திருவொன்றும்வண்மைவீரன்மறுக்குமோதேவர்கேட்டால். (கஎ)

காற்றெனக்கடியவேகக்கனலெனக்கொடியவென்று
மேற்றிசையெல்லையெல்லாம்வீதிபோயொல்லைமீள்வ
கூற்றமுமுகிலுமுட்கக்குமுறும்வெங்குரலும்மேன்மேற்
சீற்றமுந்திறலுமிக்கதீக்கதிசெலாததூய. (கஅ)

ஆயிரப்பத்துவெய்போரடற்பரிபூண்டதேரு
மாயிருங்கலையின்மிக்கமாதலிதனையுநல்கிக்
காயிருங்*கிரணரத்நகவசமுங்கொடுத்துப்பின்னர்
வேயிருந்தெரியலாற்குச்சுரபதிவிடையுமீந்தான். (ககூ)

விடையெனத்தொழுதுபோந்துவெஞ்சிலைவிஜேதவீரன்
சுடுசரத்தூணிகொற்றப்புயத்தினிற்றுதையத்தூக்கி
யிடுமணிக்கவசமெய்யிலெழிலுறப்புனைந்துதன்னைத்
திடமுடைச்சிங்கமன்னான்செருத்தொழிற்கோலஞ்செய்தான். (உ0)

மோதுபோர்தனக்குவேண்டும்படைபலவுங்கொள்ளாக்
கோதைவிற்றடக்கைவீரன்கொடிமணித்தேர்மேற்கொண்டு
மாதலிப்பெயராயந்தவஞ்சரெத்திசையரென்றான்
சூதனுமவனுக்கன்னோரியல்பெலாந்தோன்றச்சொல்வான். (உக)

தோயமாபுரமென்றுண்டுதொடுகடலழுவத்தோன்று
மாயமாபுரமேயொக்குமப்புரமதனில்வாழ்வோர்
தீயவரென்றுசெப்பிச்சித்திரசேனன்றன்னைத்
தூயநன்னெறிகாட்டென்றுசூதன்றேர்தூண்டுமெல்லை. (உஉ)

மொய்திறற்கடவுளோர்முப்பத்துமுக்கோடியாலுஞ்
செய்தமர்தொலைக்கவொண்ணாத்தயித்தியர்சேனைதன்னை
யெய்தொருமனிதன்வெல்வதேழைமைத்தென்றுநக்கார்
மைதவழ்கருங்கட்செவ்வாய்வானவர்மகளிரெல்லாம். (உங)

மங்கையர்வாய்மைகேட்டுமணிக்குறுமுறுவல்செய்து
கங்கையம்பழனநாடன்கடிமதில்வாயில்செல்ல
வங்கவன்றன்னைக்கண்டவணிகழலமரரெல்லா
மங்குல்வாகனனென்றெண்ணிக்கதுமெனவந்துதொக்கார். (உச)

---

* கிரணச் செம்பொற் கவச மென்னும் பாடம்.

கார்க்கோலமேனியானைக்கண்டபினையநீங்கிப்
போர்க்கோலமிவனுக்கெவ்வாறிசைந்ததுபுகறியென்று
தேர்க்கோலஞ்செய்வான்றன்னைச்செப்பினரவனும்போற்றி
வார்க்கோலபுரத்துவைகுமவுணரைவதைத்தற்கென்றான். (உரு)

என்றவனுரைத்தமாற்றமின்புறக்கேட்டுநெஞ்சிற்
றூன்றியவுவகைதூண்டச்சுருதியாலாசிசொல்லி
வென்றுமீள்கென்றுவாழ்த்திவிரைவினில்வீரன்றன்னைச்
சென்றிடுகென்றுதேவர்தந்தமிற்சிறப்புமீந்தார். (உசு)

சம்புவன்சம்புமாலியெனும்பெயர்த்தனுசர்தம்மை
யும்பர்கோன்வதைத்தவந்நாளூர்ந்ததெவ்வுலகுமேத்துந்
தும்பையஞ்சடையான்வெற்பைத்துளக்கியசூரன்மாள
விம்பவார்சிலையிராமன்வென்றநாளூர்ந்ததித்தேர். (உஎ)

ஆதலாலித்தேர்மேல்கொண்டடல்புனையவுணருக்குப்
பேதியாக்கவசம்பெற்றுப்பிறங்குபொன்முடியும்பெற்றாய்
கோதிலாயெங்கணெஞ்சிற்குறையெலாந்தீர்த்தியென்றார்
போதில்வாழயனுமொவ்வாவாய்மொழிப்புலவரெல்லாம். (உஅ)

வீரனுமுவகைதூண்டவிண்ணவர்மலர்த்தாள்போற்றிச்
சாரதிதடந்தேர்தூண்டத்தபனனில்விசும்பிற்சென்றான்
கார்நிறக்குன்றமொன்றைக்கனகவான்குன்றொன்றேந்திச்
சீருறப்பறந்துவானிற்றிசையுறச்செல்வதொத்தே. (உகூ

வேறு.

திரைகொழித்திடுஞ்சிந்துவின்சூழலிற்
குரகதத்தடந்தேர்போய்க்குறுகலு
மரகதக்கொண்டன்மாதலிக்கன்பினால்
விரகுறச்சிலமாற்றம்விளம்பினான். (௩0)

இப்புரத்திலவுணரியல்பெலாஞ்
செப்பெனக்குத்தெரிதரவென்றலு
மப்புரத்தவராண்மையுந்தோற்றமுஞ்
செப்பலுற்றனன்றிண்டிறற்றேர்வலான். (௩க)

தெழித்தசொல்லினர்சீற்றவெந்தீயுக
விழித்தகண்ணினர்விண்முகிலைக்கவி
னழித்தமேனியராழ்வெம்பிலத்தையும்
பழித்தகன்றபெரும்பகுவாயினார். (௩உ)

மண்ணுநீருமனலுமருத்துடன்
விண்ணும்வேண்டின்விரைவின்முருக்குவ
ரெண்ணெயூட்டியிருட்குழம்பாலெழில்
பண்ணியாக்கைவகுத்தன்னபான்மையார். (௩௩)

மற்புபாசலத்தின்வலியாலிகற்
சற்பராசன்றலைச்சுமைமாற்றுவா
ரற்பவாழ்வுடையம்போருகத்தர்தங்
கற்பகோடிகடையுறக்காண்குவார். (௩௪)

பாழியாடகவெற்பிற்படர்சிரங்
கீழதாகக்கிளர்மூச்சடக்கிநின்
றாழிநாளுந்தவமுயன்றேங்குவா
ராழிநீருமளவிடுந்தாளினர். (௩௫)

ஏதிசூலமெழுமழுவீட்டியின்
சாதிசக்கரந்தாங்குந்தடக்கையார்
மோதுபோரெனின்மொய்ம்புடன்முந்துவோ
ரோதமேழுமுடனுண்டுமிழுவோர். (௩௬)

கூருநல்லுரைகூறினுங்கூற்றுடன்
கார்தொறும்பிடிசேர்ந்தன்னகாட்சியார்
தேர்தொறுஞ்செருச்செய்யுமத்தேவரைப்
போர்தொறும்புறங்கண்டன்றிப்போகலார். (௩௭)

மூன்றுகோடியசுரர்முகிலெனத்
தோன்றுமேனியர்தோமறுமாற்ற
ரேன்றுபோர்பொரினெவ்வெவ்வுலகையுங்
கின்றுசோக்கிழிக்குமெயிற்றினர். (௩௮)

செப்புரத்தினிற்செஞ்சடைவானவன்
முப்புரத்தைமுனிந்தவங்நாளினுந்
தப்புரத்தர்சதமகன்றன்னைவென்
றிப்புரத்தையிவர்கவர்ந்தாரெனு. (௩௯)

தீதிலாத்திறற்சித்திரசேனனைக்
கோதிலாதகுனிசிலைவீரற்கு
மோதுபோர்தரமொய்ம்புடைவஞ்சர்பாற்
றாதுபோகெனப்போக்கித்தொலைவிலான். (௪0)

விண்ணின்மீதுவிரைவுறுந்தேரினை
மண்ணின்மீதுநடத்தினன்மாதலி
யண்ணலுந்தனருஞ்சிலைநாணியின்
றுண்ணெனோதைதொடாத்துரத்தினன். (௪௧)

தேரினார்ப்பொலியுஞ்சிறுநாணொனுங்
காரினார்ப்பொலியுங்கலங்கெங்கணும்
பாருமேற்றிசையும்பகிரண்டமுஞ்
சேருநாற்றிசையுஞ்செவிடாக்கவே. (௪௨)

அந்தவோசையவுணர்செவிப்புக
முந்தவோடிமுடுகிமுறுவலித்
திந்திரன்போரவந்தனனென்றுதஞ்
சிந்தைகன்றிவிழியுஞ்சிவந்திட்டார். (சங)

போயதூதனுஞ்செம்பொற்புரிசைசூழ்
தொயமாபுரந்தன்னிற்றுதைதந்தவம்
மாயவஞ்சர்மறுகவெம்புண்ணின்மேற்
றீயையொப்பனசில்லுரைசொல்லுவான். (சச)

ஒருகுலத்தினில்வேந்துமெவ்வாதுயர்
குருகுலத்திற்குனிசிலைவீரற்குத்
தருகயுத்தந்திறலுடைத்தானவர்
வருகமற்றும்வருதினிதன்னொடும். (சரு)

என்றுதூதனிசைத்ததுகேட்டலு
நன்றெனக்கைபுடைத்துநகைத்திடாக்
கன்றுநெஞ்சினர்கண்கள்செந்தீயுகத்
துன்றுகோபத்துடனவர்சொல்லுவார். (சசா)

பூசையொன்றுபுலியின்குழாத்துட
னுசைகொண்டுபொரவந்தழைப்பதே
வாசவன்பெருவாழ்வுக்கெலாமொரு
நாசம்வந்துபுகுந்ததெனுநகா. (சஎ)

வரையுளானுமலரினுளானும்வெண்
டிரையுளானுஞ்செகுப்பருநம்முடன்
றரையுளான்வந்துபோர்பொரத்தக்கதோ
வுரையுளாரென்றுரையீருணாவே. (சஅ)

தனுசர்தானைதனைமதியாதொரு
மனுசன்வந்துமலையமதிப்பதோ
வனுசருங்கொலையாடலவுணருங்
குனிசெயுஞ்சிலையென்றுகொதித்திட்டார். (சகூ)

செங்கணுகக்கொடியவன்செல்வமுந்
தங்கணுடங்கவரத்தரிப்பறப்
பொங்குகானிற்புகுஞ்சிலைவீரனே
வெங்களோடுமெதிர்க்கவந்தெய்தினன். (ரு௦)

என்றுகூறியிகலசுராதிபர்
துன்றுசேனைக்குழாம்புடைசூழ்வரச்
சென்றுகார்த்தத்திரைக்கடலார்ப்பபோ
லொன்றயாருமொருங்குசென்றுற்றனர். (ருக)

ஆனைதேர்பரியாளொடுநால்வகைத்
தானையோடுமெழுந்தனர்தானவர்
வானுமண்ணுந்திசையுமற்றெண்பெறு
மேனைலோகமுமெங்குநடுங்கவே. (டுஉ)

சங்கும்பேரியுந்தாரையுஞ்சின்னமுந்
துங்கமாமுழவுந்துடியீட்டமு
மங்கண்மாமுரசும்முகவந்தத்திற்
பொங்கும்வேலையொலியிற்புலம்பவே. (டுங)

சூலநேமியெழுமழுத்தோமரங்
கோலும்வார்சிலைகுந்தங்கொடுங்கணை
நாலுதானைநடுவுஞ்சுடரயில்
வேலும்வாளின்விதமுமிடையவே. (டுச)

*முந்துகோபவசுரர்முடுகுதே
ருந்துவீரனொருதனித்தேரினை
வந்துசூழவளைத்தார்மதுமலர்க்
கொந்துசூழ்வரிவண்டின்குழாத்தினே. (டுடு)

நீலமால்வரையொன்றினெருக்கிவீழ்
காலமாமுகிலென்னக்கடியவர்
கோலும்வார்சிலைக்கொண்டலன்னொன்மிசைச்
சூலநேமிசுடுசரந்தூவினர். (டுசு)

வேறு.

அக்கார்முகவீரனுமங்கவர்தம்
மைக்கார்முகிலென்னவழங்கியதிண்
மெய்க்காய்கணைசாபம்விசித்துவிடா
நக்கானிவைநின்றுநவின்றனனே. (டுஎ)

திக்கோடியதுந்திறலும்புகழுந்
தொக்கோடியுடற்றுபடைத்தொகையுங்
கைக்கோடியவெஞ்சிலையின்கணையான்
முக்கோடியுமின்றுமுருக்குவனால். (டுஅ)

முன்போர்தொறும்வந்துமுனைந்துவெரீஇ
வென்போகியவிண்ணுறைவீரரலேன்
பொன்போலுநும்மேனிபொடிச்செய்திடாப்
பின்போகுவனென்றிவைபேசலுமே. (டுகூ)

தழல்வந்தருள்பாவைதடந்துகிலுங்
குழலுங்கவர்தந்தடல்கூருமமக்
கழறுன்றியகானமளித்தவரைக்
கழல்வெஞ்சிலைவீரகடிந்திலையே. (சுO)

* முந்துதோயவசுரர் என்றும் பாடம்.

என்னுவசுரேசரிசைத்தனுமே
மன்னுகவீரனும்வார்சிலைநாண்
டன்னுகமுறத்தழுவத்தழல்வாய்
மின்னார்கணைதூவிவெகுண்டனனே. (௬௧)

பொய்த்தானவர்போரரியன்னவன்மேன்
மொய்த்தார்முகில்செங்கதிர்மூடுவபோல்
வைத்தாரைவடிக்கணைவாண்மழுவே
யுய்த்தார்வரைமே*லுருமேறெனவே. (௬௨)

என்முன்னவனென்முனைமுவெவரு
முன்முன்வரமுந்தமுருக்கினனாற்
றன்முன்னொருவீரர்தராதலமேல்
வின்முன்னினிலாவிறல்வில்விசயன். (௬௩)

ஒருதேர்கொடிவீரனுடன்றவர்தங்
கரிதேர்பரியாளணிகையறமுன்
னிருதேசரைவென்றவனேரெனமேல்
வருதேரணிதோறுமலைந்திடவே. (௬௪)

வீரன்சரம்வஞ்சகர்மெய்ம்முழுதுங்
கூறும்படிசென்றுகுளித்திடலா
லாரும்பொரவஞ்சினரப்பொழுதிற்
றேருந்தினரெண்ணிறயித்தியரே. (௬௫)

என்னேயொருமானுடனுக்கெவருங்
கொன்னேயடலாண்மைகொடுக்குமதோ
வின்னேயிவனுவியழித்திமையோர்
முன்னேவயவாகையுமுற்றுவமால். (௬௬)

காளப்புயலென்னநிறங்கரியார்
மீளப்படைகொண்டுவிரைந்துவெகுண்
டாளித்திறன்மொய்ம்பனையங்கடலால்
வாளக்கிரியென்னவளைந்தெவரும். (௬௭)

ஆர்த்தாரகல்வானமுமாழ்கடலுந்
தூர்த்தார்சுடர்வெம்படைகொண்டெவருந்
தேர்த்தானவர்வானுறைதேவருமெய்
வேர்த்தாரினிமேல்விளைவேதெனவே. (௬௮)

கூற்றொப்பனபல்படைகொண்டவன்மேற்
சீற்றத்தொடெறிந்தனர்தீயவரு
மாற்றற்சிலைவீரனுமவ்வவ்வெலா
மாற்றிச்சரமாரிவழங்கினனால். (௬௯)

---

* உருமுற்றெனவே என்றும் பாடம்.

அவன்விட்டசரங்களறுத்தணிதேர்
கவனப்பரிபாகுகலக்குறப்
பவனத்துடனங்கிபரந்ததுபோற்
றுவனித்தவர்வெம்படைதூவுதலும். (எ0)

கட்டார்முதுகார்முகவீரனுமுன்
கிட்டாவுலகோர்புகழ்கேழ்கிளர்சீர்
முட்டாமரைமேன்முனிவன்படையைத்
தொட்டானசுரேசர்தொலைந்துகவே. (எக)

காற்றும்மிகமண்டுகடுங்கனலாய்க்
கூற்றுயவராவிகுடித்துகுசெஞ்
சேற்றுலொருபாதிசிவந்ததுபா
ரேற்றுனொருபங்கெனவெங்கணுமே. (எஉ)

நூறுயிரதோரணிநூறியுமே
லாறுதசினத்துடனக்கணைபோய்
மாறுயவர்மார்பமும்வாண்முகமுஞ்
சீறுவெதிர்சென்றுசெறிந்ததுவே. (எ௩)

குருகோடியையுங்குருதிக்கடல்வா
யொருகோடிதயித்தியாருயிருண்
டருகோடியவாளியடர்ப்பதுகண்
டிருகோடியுமுற்றனமற்றிவன்மேல். (எ௪)

வேறு.

இருண்டது மண்ணும்விண்ணுமெல்லையெண்டிசையுமெங்கும்
புரண்டது குருதிவெள்ளமுழிவெங்கடலிற்பொங்கி
முரண்டகுதேரோன்றன்னைமொய்த்தவெம்பரிபோன்முடித்
திரண்டது திருகிமீண்டுந்திறலுடைத்தருவர்சேனை. (எ௫)

எங்கெங்கேயெங்கேவல்வின்மணிதனைன்றெதிர்ந்தோர்யார்க்கு
மங்கங்கேயங்கேயாகியவரொடுமடுபோர்செய்தான்
சங்கங்கேய்செங்கைநல்லார்விடுத்தனசுரும்பின்சாலங்
கொங்கெங்கேயெங்கேயென்றுதனித்தனிகுடையுந்தாரான். (எ௬)

கார்முகக்கொண்டலன்றன்மிசைக்கடுங்கணைகளேவித்
தேர்முகத்தியக்கமாற்றித்திதிமைந்தர்வெம்போர்செய்யப்
போர்முகத்தொருவரொவ்வாப்புரிசிலைவீரன்றானுங்
கூர்முகப்பகுவாய்மாயோன்கொடுங்கடும்பகழிகோத்தான். (எஎ)

விண்ணிடத்தசனிநாகர்மேல்வெகுண்டிடுவதென்ன
வெண்ணுடைச்சேனைவெள்ளமெங்கணுந்தானேயாகி
வண்ணவிற்படையிராமன்வாரிதிவெள்ளம்வீத்த
பண்ணெனப்படுத்தந்தப்பைந்துழாய்ப்பாமன்வாளி. (எஅ)

தசையும்வெம்பிணமுந்துன்றத்தனித்தனிபெருகியெல்லாத்
திசைதொறுங்குருதிநீத்தந்திரைக்கடற்சென்றுமண்ட
வசைவிலாவவுணர்மீண்டுமந்தரத்தொளித்துநின்று
விசயவில்விசயன்றன்மேல்வெகுண்டுவெம்படைகள்விட்டார். (எகூ)

விட்டவெம்படைகளெல்லாம்விண்ணிடைச்சுண்ணமாகக்
கட்டழகுடையவீரன்மகேந்திரக்கணையால்வீக்க
வெட்டுணைப்பொழுதில்வஞ்சரெழிலியின்படைமேல்வீச
வட்டவார்சிலையினானுமண்டழற்படையான்மாற்ற. (அ0)

மண்டிமேலெழுந்திங்கெல்லாவுலகையுமடிக்குமாயச்
சண்டவாயுவின்போர்வாளிதானவரவன்மேலேவ
* வண்டமுந்துளங்கவோங்குமருவரைப்பகழிவிட்டா
னெண்டிசைமுழுதுந்தன்பேரெழுதுபோர்விசயனென்பான். (அக)

காற்றும்வெங்கனலுங்காருமிடியுங்கன்மழையுமெங்குந்
தோற்றியவிருளுமின்னுந்திசைதொறுஞ்சூழ்ந்துபொங்கக்
கூற்றும்வாய்குழறியஞ்சக்கொடியமாமாயவாளி
யாற்றல்சாலரியன்றன்மேலெறிந்தடலவுணரார்த்தார். (அங)

கன்மழைசொரிந்துவேகக்கனன்மழைவீசியெங்கு
மின்மழைசிந்திமிக்கவசனியின்மழைகள்வீழ்த்திச்
சென்மழைசிதறியெல்லாத்திசைதொறும்பரந்துகொற்ற
வின்மழைபொழிவான்றன்னைவளைந்ததுவெய்யமாயை. (அச)

கோதிலாவிரதம்பூண்டகுரகதக்குழாமுமுட்கிச்
சூதனுந்தடந்தேருருந்தொழின்மறந்துயங்கிவீழத்
தாதவிழலங்கலானுமற்றவன்றன்னைத்தேற்றித்
தீதிலா † வமோகபாணஞ்சிந்தையாற்றொழுவிட்டான். (அரு)

மாயவல்லிருளையெல்லாம்வான்கதிர்ச்செல்வனென்னச்
சேயவப்பகுவாய்வாளிதிசைதொறுங்கடிந்தவெல்லை
யாயவம்முறைமைதப்பாவறம்பொருளின்பமுற்றுந்
தூயவரிதயமென்னத்தொலைந்ததுசூழ்ந்தமாயை. (அசு)

வஞ்சவாளவுணர்வெம்போர்மறந்துமெய்ம்மயங்கிமீண்டு
நெஞ்சினிலறிவுதூண்டநிரைநிரைதடந்தேர்தூண்டிச்
செஞ்சரஞ்சூலம்விட்டேறெழுமழுத்திகிரிவாள
மஞ்சனக்குன்றன்றன்மேலெறிந்துடனார்த்தகாலை. (அஎ)

கடுஞ்சிலைவிரைவும்வீரன்கைத்தொழில்விரைவுமேன்மேல்
விடுங்கணைவிரைவுமெண்ணில்வுபுதார்க்குங்காணொணாதாற்
கொடுந்தொழிலசுரர்மெய்பிற்குளித்தசெஞ்சரமுமன்னோர்
படும்படுந்துயருமெங்குங்காணலாம்பாருளோர்க்கும். (அஅ)

---

* அண்டருந்துளங்க என்றும் பாடம்.

† யோகபாணம் என்றும் பாடம்.

ஆய்ந்தநூலறிஞர்க்கீந்தவரும்பொருளென்னமேன்மேல்
வேந்தர்கோன்பகழியொன்றுகோடியாய்விளைந்ததெங்கு
மாந்தர்கைக்கொடாதபுல்லர்வனப்பிலாச்செல்வம்போலத்
தேய்ந்ததுவஞ்சநெஞ்சத்திறலுடைத்தனுசர்சேனை. (அஅ)

படாதொழியவுணர்மீண்டும்பரிபவப்படுத்தாவெம்மை
யடாவினியுன்னையின்னேயாருயிர்குடித்துமென்னுக்
கடாமலையவன்மீதுகடும்படைபலவும்விட்டார்
தொடாநெடும்பகழிதன்னாற்சூரனுந்துணித்துவீழ்த்தி. (அகூ)

உரங்களுந்தோளுங்கண்ணுமுதரமுமதரத்தோடு
சிரங்களுந்தாளுநாளுஞ்செய்தவமுயன்றுபெற்ற
வரங்களுமறையுமேன்மேல்வான்படைக்கலங்கள்வீசுங்
கரங்களுஞ்சரங்கள்கொண்டுகணத்திடைக்கண்டங்கண்டான். (கூ0)

அற்றனகுறைகளெல்லாமவயவம்பொருந்திமீண்டு
முற்றனமுனைறுகோடிசேனையுமுருத்தெழுந்த
வெற்றிவேற்குமரனன்னவிசயனுங்கைசலித்து
மற்றிதற்கென்செய்வேனென்றுநினைவுடன்மதிக்குமெல்லை. (கூக)

வென்றிகொள்வீரவாகைவேகவில்விசயகேளாய்
தென்றிசைமறலிபாலித்தீயவஞ்சகர்முன்பெற்ற
வன்றிறற்படையுமிக்கவரமுமெய்வலியுமுண்டா
லென்றசரீரிபின்னுமின்னவையுரைத்ததம்மா. (கூஉ)

வெய்யவெம்படைகட்கெல்லாம்விளிகிலர்மெய்ந்நூறுக்
கொய்யினுமுருவமீண்டுங்கூடுவர்குறிப்பினின்று
கையினுவுடன்வாய்சென்றுகலந்திடுங்கணத்தினம்பா
லெய்திடுகென்றுவீரற்குறுதியுமிசைத்ததன்றே. (கூங)

வானிடத்தருபிசொன்னவாசகமனத்திற்கொள்ளாத்
தேனுடைத்தெரியல்வீரன்றேரினைத்திரியவோட்டிக்
கானிடைக்கடவுள்வேடன்றருங்கணைகரத்திற்கொண்டு
தானுடைத்தனுவிற்பூட்டியநுப்படச்சமைந்ததோரார். (கூச)

தானவர்சமூகத்தோடுசமர்புரிந்தாற்றுதஞ்சி
மானவன்முதுகுதந்தானென்றுவாளசுரரெல்லாம்
வேனில்வேளனையான்றன்மேல்வெகுண்டுவெங்*கடலிற்பொங்கி
யானதங்கைவாய்சேர்த்தியாவலங்கொட்டியார்த்தார். (கூரு)

உரம்பட்டவஞ்சர்சேனையொருப்பட்டவுறுதிநோக்கித்
திரம்பட்டசிலைக்கைவீரன்சிலீமுகந்தெரித்தபோதச்
சரம்பட்டதனுசரங்கஞ்சங்கான்செங்கையம்பாற
புரம்பட்டபரிசுபட்டுப்பொடிந்தனபொடியாய்மன்னோ. (கூசு)

* கனலிற்பொங்கி என்றும் பாடம்.

உருத்தது மிகவுமண்டமுடைந்திடவுடன்றுபொங்கிச்
சிரித்தது தனுசர்மெய்யுஞ்சிந்தையுஞ்சோப்பற்றி
யெரித்தது தூரிராடிபிவனிடந்தன்னில்வந்து
தரித்ததுமீண்டுமெந்தச்சங்கரன் செங்கைவாளி. (கூஎ)

வேறு.

துவசத்தொடுதேர்களம்வீழச்சுடர்நிவாத
கவசத்தொடுமெய்கடல்வீழக்கடுகியற்றைத்
திவசத்திவருவரமங்கையர்வீழச்சென்று
ரவசத்துடனந்தகனூரிலசுரரெல்லாம். (கூஅ)

ஆர்த்தாரணிகூரலர்மாமழையால்விசும்பைத்
தூர்த்தார்துதித்தார்மதித்தார்நனிதுள்ளுகின்றார்
போர்த்தானவர்தஞ்செருக்காற்படும்புன்மையெல்லாந்
தீர்த்தானிவனென்றகல்வானுறைதேவரெல்லாம். (கூகூ)

கூரும்படையுங்குடையுங்கொடியுங்கொழித்துத்
தேருங்கரியும்பரியுந்திரைதோறுமுந்தி
யூருங்குருதிக்கடல்பொங்கியுவர்க்கடன்மேற்
போரும்பொரப்போயணியோடியுகுவபோலும். (க00)

தத்திக்குருதிக்கடல்பொங்கத்தனித்தனிநின்
றெத்திக்கினும்வெம்பிணக்குன்றமெழிலொடோங்கப்
பத்திப்படமேற்பருந்தின்குலம்பந்தர்செய்யக்
கொத்துற்றதண்டார்த்திறற்கோதண்டவீரனின்றான். (க0க)

மின்போனுடங்கவிடைவேல்விழிநீர்ததும்பப்
பொன்போனுருவங்கருகும்படிபூழிபோர்ப்ப
வன்போடவுணர்மடமாதரரற்றுமோதை
யென்போலுமென்னினிடிபோல்வந்திசைத்ததெங்கும். (க0உ)

இவ்வாறவுணர்மடமாதரிரங்கியேங்க
மைவாள்விழியின்வழியஞ்சனவாரிபாயத்
தெவ்வாறியபின்னருந்தீர்ந்திலதீர்ந்தவன்றே
கைவார்சிலையான்கடுங்கோபமுங்கண்சிவப்பும். (க0ங)

அன்னார்நகரத்தழகுந்தொல்லாணுநோக்கி
மின்னாரும்வேலான்விறன்மாதலிதன்னைமீண்டு
நன்னாகருரிற்றடந்தேரைநடாத்துகென்னச்
சொன்னானவனுந்துனைதேர்நனிதூண்டுமெல்லை. (க0ச)

செம்பொற்புரிசைதிகழ்கோபுரச்செம்பொன்மாடத்
தம்பொற்கொடிசேர்நகரந்தரத்தொன்றுகாணு
வம்பிற்பொலிதார்த்தடந்தேர்விடுமாட்சியானை
விம்பத்திறல்வார்சிலைவீரன்வினாவவன்னான். (க0ரு)

மன்னுந்தனுசகுலமாதரில்வஞ்சநெஞ்சக்
கன்னங்கரிய குழற்காலகைகாமர்சோதிப்
பொன்னங்கொடிபோலெழில்கூர்நுண்ணிடைப்புலோமை
யென்னும்பெயராரிருவோருளரென்று முள்ளார். (௧0௬)

அம்மாதர்தந்தைதனைநோக்கியனந்தகாலஞ்
செம்மால்வரையிற்றவஞ்செய்தனர்செய்தநாளின்
மைம்மான்விழியார்தமக்கந்தவனசவாண
னெம்மாவிசைத்தற்கிசையாதவரங்களீந்தான். (௧0௭)

தம்மக்களாயவசுரேசரதிதிதந்த
வம்மக்கடம்மாலழியாமைபுமாடகத்தான்
மும்மைப்புரம்போல்விசும்பூர்தருமொய்ம்பினிந்தச்
செம்மைப்புரமுங்கொடுத்தானத்திசைமுகத்தோன். (௧0௮)

பொன்காலுமெய்யர்பொறிகால்பொலங்குண்டலத்தர்
முன்காலனையுஞ்சமர்மோதிமுருக்குமொய்ம்பர்
மின்கால்படையர்விடங்காலும்விழியர்வெம்போர்
வன்காலகேடரெனும்பேர்திசைவைத்தவீரர். (௧0௯)

வருமுப்பொழுதுமறையந்தணரங்கைவாரி
யுருமுப்புயல்போற்கவர்வோர்முன்னுகாந்நாதன்
பொருமுப்புரத்திலுறைதானவர்போலும்வீர
ரிருமுப்பதினாயிரம்வஞ்சகரிந்துமுண்டால். (௧௧0)

தன்றேர்வலவன்மொழிகேட்டுத்தயங்குநீலக்
குன்றேயனையான்கொடும்போர்வஞ்சினங்கள்கூறி
யின்றேயிவராவியுந்தென்புலத்தேற்றிப்பின்ன
ரன்றேயினிநானமராவதிசெல்வதென்றான். (௧௧௧)

இந்தப்புரத்தின்மிசைத்தேரினையேவுகென்னக்
கந்தற்குவமைதருதிண்டிறற்காளைகூறச்
சிந்தைக்குமுந்துந்தடந்தேரைத்தனுசர்வைகு
மந்தப்புரத்தில்விடுத்தான்மற்றவனுமாதோ. (௧௧௨)

தோராவாரத்துடனேதிண்சிலைவலான்றன்
போராரவாரச்சிலைநாணொலிமீதுபோக
வாராரவாரத்திடிகேட்டவரவமொத்தார்
காராரவாரமெனப்பொங்குமக்காலகேயர். (௧௧௩)

வேறு.

இந்தவோதையெழிலியேழுமுழிநாளிடித்தெழு
மந்தவோதையோவதன்றியாழிபொங்குமோதையோ
கந்தவானின்மீதுதேர்கடாவுகின்றவோதையோ
வெந்தவோதையென்றுயிர்த்துயிர்த்துவஞ்சர்யாவரும். (௧௧௪)

தெழித்தார்ப்பியெயிறுதின்றுவைதுசெய்யகண்கடீ
விழித்துமீசைநுனிமுறுக்கிவெய்யவீரவாளுறை
கழித்தெழுந்துபொங்குகின்றகாளகூடமென்னவே
கொழித்தழன்றுமண்ணும்விண்ணுமின்றுகோறுநாமெனா. (ககரு)

ஓடுவாருமந்தவோதையெதிருடன்றுறுக்கிமே
னாடுவாருநமர்களாண்மைநன்றுநன்றெனாநகைத்
தாடுவாருமமரர்வாழ்வுபாழ்படுத்துமாயுதந்
தேடுவாருமெண்ணிறந்ததேர்களேறுவாருமே. (ககசு)

கூளிகோடியுய்ப்பகுஞ்சரங்கள்கோடியுய்ப்பபே
ராளிகோடியுய்ப்பவாயுகதிகொடந்தரத்தின்மேல்
வாளிபோலும்வாசிகோடிகோடியுய்ப்பவாயதே
ரோளியாகவாளினெல்லைமறையவுந்திமுந்தினார். (ககஎ)

அந்தகற்பொராற்றுநம்மைவல்லனல்லனபமுன்
றந்தவிந்திரன்றனக்குமொக்குமன்னதன்மைதான்
கந்தனென்னிலாறிரண்டுகண்கள்கைகளில்லையே
லெந்தவீரனம்மொடின்றெதிர்க்குமிந்தவீரனே. (ககஅ)

எண்டயங்குமெயிறுவெண்ணிலாவெறிப்பவெயின்மணிக்
குண்டலங்களழகெறிப்பமகுடகோடிகுலவியேன்
மண்டியெங்கும்வெயிலெறிப்பவஞ்சர்தம்வனப்பெலாங்
கண்டுகண்டருச்சுனன்கருத்துநொந்துகூறுவான். (ககக)

கன்னல்வேளைவென்றவிக்கவின்படைத்தகாட்சிபு
மின்னுபூண்விளங்குமார்பும்விபுதருக்குமில்லையா
லென்னபாவமிவரையாவியீடழிப்பதென்றுபோர்
மன்னர்மன்னன்முன்னுரைத்தவாய்மையுங்குறிப்புறா. (கஉ0)

வில்வளைத்துநிற்கநீலவெற்பதொன்றைவிண்ணிடைச்
செல்வளைத்ததென்னவந்துதீயவஞ்சர்யாவரு
மல்வளைத்தசிகரவாகுகிரியின்மீதுமார்பினுங்
கொல்வளைத்தபகழிதூவியின்னநின்றுகூறுவார். (கஉக)

உழுவைகண்டவுழைகள்போலவோடியோடிமேருவின்
முழைதொறும்புகுந்ததேவரேவல்கொண்டுமொய்ம்புட
னிழிவில்சந்தனங்கடாவியிங்குவந்ததென்னடா
புழுவிலொன்றுமொன்றுபூதலத்துளானொருத்தனீ. (கஉஉ)

என்றுகாலகேயர்நின்றிசைத்தசொற்செவிக்கொளா
நன்றுகாலகேயர்சொன்னவாய்மைநன்றெனாநகைத்
தொன்றுகாலம்வந்ததிங்குருத்துநாளுடன்றுமைக்
கொன்றுகாலனூரிலுங்களாவியுங்கொடுக்கவே. (கஉங)

காலகேயர்விசயனின்றுகட்டுரைத்தவுறுதிகேட்
டாலகாலமெனவுருத்தழன்றுபொங்கியபின்முனைச்
சூலநேமிபாலம்வெய்யசுடுசரந்தூர்த்தினார்
நீலமேனிசெம்புனீரினானிறஞ்சிவக்கவே. (கஉச)

விண்சுழன்றுதிசைசுழன்றுவேலையுஞ்சுழன்றுசூழ்
மண்சுழன்றுவரைசுழன்றுவானினின்றவானுளோர்
கண்சுழன்றுயாதினுங்கலங்குறாதகலைவலோ
ரெண்சுழன்றுமற்றுமுள்ளயாவையுஞ்சுழன்றவே. (கஉரு)

அவர்விடுத்தபடைகள்யாவுமழியவானுடைக்கணைக்
கவர்தொடுத்துவிலகிமீளவவர்கள்காயமெங்கணுந்
துவர்நிறத்தகுருதிசோர்தரச்சரந்தூர்த்தினன்
றவரினுக்கிராகவன்கொலெனவருந்தனஞ்சயன். (கஉசா)

பார்த்தனெய்தவாளிமெய்படப்படப்பதைத்துமீ
தார்த்தெழுந்துநகரினோடுமந்தரத்தினெல்லைபோய்
வார்த்தரங்கவேலையூடுமண்ணினூடுமறையவத்
தூர்த்தர்செய்தவஞ்சமாயைசொல்லலாகுமளவதோ. (கஉஎ)

அண்ணறேரின்முன்னதாகுமாவிறந்ததேரொடும்
விண்ணின்மீதுதிசையளக்கும்வெற்பின்மீதுபொழியுமெக்
கண்ணுமாகுமக்கணத்தின்மீளவுங்கரந்திடு
மெண்ணலாவதன்றதன்றியற்றுமிந்த்ரசாலமே. (கஉஅ)

அந்தவஞ்சர்புரியுமாயைவகையறிந்தருச்சுனன்
சிந்தைகன்றிவிழிசிவந்துதெய்வவாகைவில்லைபு
னைந்துடன்குனித்துவாளிவாயுவேகமுடன்விடுத்
தெந்தவெந்தவுலகுமப்புமாரியாலிபற்றினன். (கஉகூ)

தனிதமேகமன்னதேருமொன்றுதாவில்குன்றுபோற்
குனிதருங்கடுப்பின்மிக்ககொடியவில்லுமொன்றுமேற்
கனிவுறுஞ்சரக்குழாம்விசும்பினெல்லைகாட்டுமோர்
மணிதன்வின்மைநன்றுநன்றெனுமதித்தவஞ்சரே. (கஙo)

வேறு.

புருவவில்வளைவுறவிழிகனல்பொதுளாக்
கருமுகிலனையவர்கடிகினர்முடுகிச்
சரமழையிடிமழைதழன்மழைசொரியாப்
பெருமழையெனநனிபிளிறினரெவரும். (கஙக)

இவருயிர்கவர்தரவிடமிதுவெனவே
நவையறுதிறலுடைநகுசரமுகையா
வவரவர்கலமுமணிகிளர்கரமுந்
தவருடன்விழவிழவொருதனிபொருதான். (கஙஉ)

அவன்விடுமடுகணையடையவுநொடியிற்
பவனனதெதிர்சருகெனநனிபரியக்
கவனமொடெழுபரிரதகதிகுலையத்
துவனியொடெறிபடையெதிரெதிர்தொடவே. (கஙௗ)

வரிசிலைவிறலுடைமகபதிமகனு
மெரிவிழியவுணருமுறைமுறையிகலிப்
பொருதனர்ரகுபதிபுதல்வனுமடுபோர்
நிருதருமெதிர்பொருமமர்நிகரெனவே. (கஙச)

இப்படைகளினுயிரழிகிலரிவரென்
றப்படைகளையொழிதரவடலுடையார்
மெய்ப்புகும்விறலது விடையவனருளுங்
கைப்பகழியைமனனுறநனிகருதா. (கஙரு)

மூச்சிரமுடையதுமூவிருதிரடோ
ளச்சிரமுடனெதிரழல்பொழிதறுக
ணச்சரவனையது நகமிறுமுனைவாய்
வச்சிரமனையது வருதலுமகிழா. (கஙசா)

பசுபதியருளியபகழிமுன்வரலும்
விசயனுநறைவிரிமலர்கொடுபரவித்
திசைதொறுமமர்புரிதிறலுடைவடிவே
லசுரர்தமுடலுகவடலுடன்விடவே. (கஙஎ)

அக்கணைவிசையுடனகல்வெளிமிசைபோய்
நக்கதுபினையெயிறினநிலவெழவே
முக்கணுமழலுகமாரணெடுமுடுகிப்
புக்கது தனுசர்தமுடல்பொடிபடவே. (கஙஅ)

மாருதம்விசையுடன்வடவனல்கொளுவிக்
கார்தொறுநிரைநிரைகடிகுவததுபோற்
றேர்தொறுமமர்புரியவுணர்கடேகத்
தோரொருகணைபொருநொடியினிலுறவே. (கஙக)

மகபதியரிசிறைவரைநிகரெனவே
திகைதொறுமவுணர்கள்சிரநனிசிதறிப்
புகையொடுதெறுகனலகல்வெளிபொதுளக்
ககபடலமுமுறைகளுலினகளமே. (கச௦)

ஆடினவறுகுறையலகைகளுடனின்
றோடினதிசைதொறுமுகுகுருதியினீர்
நீடினபிணமலைநிரைநிரைநெறிபோய்த்
தேடினகதிர்களுமிசைவழிசெலவே. (கசக)

மாதவமிகுதிறலசுரரைமறலிக்
கோதனமிடுமவனொருசிலைவலிகண்
டாதபனருணனிலணிகிளருயர்தேர்ச்
சூதனும்விசயனதிணையடிதொழுதான். (கசஉ)

தள்ளினர்தமதுயர்சலமினியிலதென்
றுள்ளினர்விசயனதுறுதியுமுரானு
மள்ளினரமுதெனவகநனிமகிழாத்
துள்ளினரிமையவர்சுரபதிமுதலோர். (கசங)

வேறு.

தேனமர்கமலத்தோங்குந்திசைமுகன்வரத்தினாலோ
மானவன்விசயனுய்த்தவடிநெடுஞ்சரத்தினாலோ
தானவர்தானையெல்லாமடிந்தவத்தளர்வினாலோ
போனதுகரந்துவஞ்சவிரணியபுரமுமன்றே. (கசச)

வாணைகைதளவம்வாங்குமவுணர்தம்மகளிர்தெய்வப்
பூணொடுகுழைகள்வாங்கப்புனைவயவாகைவாங்கு
நாணுயர்தனுவின்வாங்கிரயந்தினைப்பாறிநின்றான்
றாணொடுபறம்புவாங்குஞ்சுடர்மணிக்கடகத்தோளான். (கசரு)

பார்கொண்டதசுரர்மெய்யிற்பாந்தசெங்குருதிவெள்ளங்
கார்கொண்டவிசும்புகொண்டதவர்பிணக்காயம்வானோ
ருர்கொண்டதுரிமையோடுமவருயிர்மீண்டுமென்றுந்
றூர்கொண்டவமரர்க்கெவ்வாறிவன்பகைதடிந்ததம்மா. (கசசு)

இவ்வகையசுரசேனையாவையுமிரியநூறிக்
கொய்வரும்வரிவில்வீரன்குரகதத்தேர்மேற்கொண்டான்
வைவருமுனைவேற்சித்திரசேனன்வாசவனுக்கோடி
நைவருதுயரிங்கநவின்றனன்புரிந்தவெல்லாம். (கசஎ)

சித்திரசேனன்மாற்றஞ்செவிக்கமுதாகக்கேட்டுப்
பத்திகொள்விமானச்சோதிப்பைம்பொன்மாநகரிகோடித்
தெத்திசையவருமேனையிமையவர்குழாமுஞ்சூழ
வித்தகவிசயன்றன்னைவிபுதர்கோனெதிர்கொண்டானே. (கசஅ)

கின்னரமிதுனவின்சொற்கீதங்களினிதுபாடத்
துன்னியெங்கெங்குஞ்சோத்துந்துபிக்குழாநின்றார்ப்பப்
பன்னருமறைகடெய்வமுனிவரர்பகர்ந்துவாழ்த்த
மன்னவர்மன்னன்றன்னைவாசவன்றழுவிக்கொள்ளா. (கசகூ)

கையுடைக்கயிலையன்னசடகரிப்பிடரின்வைத்து
மையுடைக்கொண்டல்வாகனகர்வலஞ்செய்தபோதின்
மெய்யுடைக்கலைகள்வல்லான்விஞ்சையனொருவன்கண்டு
பொய்யுடைத்தலத்தோர்க்கின்னபொறுக்குமோபுனிதவென்றான். (கருo)

விஞ்சையனுரைத்தமாற்றம்விபுதர்கோன்செவியிற்சென்று
நஞ்செனப்புகுதலோடுநயனங்கள்செந்தீக்கால
நெஞ்சினிலறிவிலாதாய்நீயிதுகேட்டியென்று
மஞ்செனக்கரியமெய்யான்மனங்கனன்றினையசொல்வான். (கருக)

ஆதிநாயகன்மாமாயனமரர்தந்துயருமேனைப்
பூதலமடந்தைக்குற்றபுன்மையுந்தீர்ப்பானெண்ணிச்
சீதைதன்கொழுநனான திண்டிறலிராமன்போல
ஓதநீருலகின்மீண்டுமருச்சுனனுருவங்கொண்டான். (கருஉ)

ஆதலான்மனிதனென்றிவ்வருச்சுனன்றன்னையின்னே
நீதியாலமரர்யாருநெஞ்சினிலிகழலென்று
மாதர்கள் வீதிதோறுமலர்மழைசொரிந்துவாழ்த்தக்
கோதிலாவமரர்கோமன்கொண்டுதன்கோயில்சேர்ந்தான். (கருங)

அரிமுகக்கனகபீடத்தண்ணலையிருத்தியண்ட
ரிருபுடைமருங்குநிற்பவிந்திரனிருந்தபின்னர்
மருவுபொற்றடந்தேரூருமாதலிதன்னைநோக்கிப்
புரிசிலைவிசயற்குற்றபோர்த்தொழில்புகனீயென்றான். (கருச)

மற்றவன்றொழுதுபோற்றிவானவர்குழுவுக்கெல்லாங்
கொற்றவவென்னாவின்றுகூறலாந்தகைமைத்தன்றா
லுற்றெதிர்மூன்றுகோடியசுரருமுடனேசேர
விற்றதுகண்டேன்பின்னர்வில்லினாணிடியுங்கேட்டேன். (கருரு)

ஆயதுநிகழ்ந்தபின்னாயனருள்வரத்தினாலே
யேயவாள்வலியின்மிக்கவிரணியபுரத்துளோரைத்
தீயவெம்பகழியொன்றாற்செற்றனனிமைப்பின்முற்று
மாயமோமனிதன்வில்லின்வன்மையோதெரிந்ததில்லை. (கருசா)

என்றுகொண்டியர்தேர்ப்பாகனிசைத்தனயாவுங்கேட்டு
வென்றிறலமரர்கோமான்மனமகிழ்ந்திருந்தபோதிற்
றுன்றியவமரர்யாருந்தனித்தனிசுருதியோடும்
வென்றிடுபடையுமற்றும்வேண்டுவபலவுமீந்தார். (கருஎ)

தேவர்பால்வரமுமெல்லாச்சிறப்புமின்னருளும்பெற்ற
காவலன்கடவுள்வேந்தன்கழலிணைபணிந்துபோற்றித்
தாவரும்புரவித்தானைத்தருமன்மாமதலைபொற்றாண்
மேவவேண்டுமின்னேவிடையெனக்கருளுகென்றான். (கருஅ)

மைந்தனங்குரைத்தமாற்றமனனுறமகிழ்ந்துகேட்டுத்
தந்தையுமின்னஞ்சின்னாட்டங்குகவிங்கென்றேத்திச்
செந்திருவனையதோற்றத்தெய்வமென்போகமாத
ரைந்தொடாயிரரும்வேறோரம்பொன்மாளிகையுமீந்தான். (கருகூ)

வரோதயமானதெய்வவான்*படைமறைகள்பின்னும்
புரோசனப்பகைவற்கீந்துபுரந்தரனிருந்தபின்னர்ச்
சரோருகாண்டம்விண்டாலொருமயிர்சலிக்குமுன்கை
யுரோமசமுனியைநோக்கியுரைத்தனனுற்றவெல்லாம். (கசுo)

வரிசிலைவிசயன்வந்துவான்றவம்புரிந்தவாறு
மரிவையோர்பாகனன்பாலவற்கருள்புரிந்தவாறு
மிரியவெம்பகையையெல்லாமிவன்றனிதடிந்தவாறுந்
தருமனுக்குரைத்தியென்னத்தபோதனமுனியும்போனான். கசுக

நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் கடுஎசு.

---

# புட்பயாத்திரைச் சருக்கம்



மற்கொண்டு வருத்தனையசிகாத்திண்டோள் வாளரக்கர்குலத்தோடுமடியப்புன்னம், விற்கொண்டுசரந்தொடுத்துப்புரையில்கேள்வி விண்ணவர்தந்துயர்தீர்த்தவீராமன், கற்கொண்டவகலிகைதன்னுருவமீளக்கவின்கொள்ளக்கொடுத்ததிருக்கமலபாதந், சொற்கொண்டு துதித்தெழுந்து துள்ளினானந்தொழுமவரேபெருபிறவித்துவக்கற்றாரே. (க)

இப்பால்வெஞ்சிலைவிசயனின்பமெய்தியிந்திரன்றனருகிருப்பவிமையோருரி
லப்பானற்றவம்புரியுந்தழல்கூர்வேள்வியந்தணர்தங்குழாஞ்சூழவழுநர்மன்னி
லொப்பாருமிலாதமடமயிலினுடுமுயர்வனத்தினிடைநாளுமொருநாள்போலத்
தப்பாலறம்வளர்க்குநீதிவேந்துந்தம்பியரும்புரிந்ததினிச்சாற்றுகிற்பாம் (உ)

விறல்விசயன்றனைப்பிரிந்தவருத்தமேன்மேல்விஞ்சவொருதஞ் சமறவெம்பியம்பொற், சிறகிழந்தபறவையெனத் துணைவரோடுந்திறல்வேந்தன்சிந்தனையுற்றிருந்தகாலைப், பொறையறிவுநிறைதருமமுடையவாய்மைப்போர்வேந்தேயஞ்சலெனப்புகழ்ந்துவாழ்த்தி, மறைபொருபொன்வடிவுகொடுவந்ததென்ன மாமுனிபுங்கைப்பினிடைவந்துற்றனே. (ங)

வந்தபெருங்கடவுண்முனிவரவுநோக்கி வாள்வேந்துந்தம்பியருமகிழ்ச்சிகூர்ந்து, சிந்தைவிழிமலரொடுபேருவகைபொங்கச் சென்றெதிர்போய்வணங்குதலுஞ் சிந்தைவிலாத, வந்தமுனிவானுமவர்க்கன்பாற்‡றுன்பமனுகாதவந்தமிலாவாசிகூறிப், புந்தியுடனிருத்தசெழும்புனிதகோலப்புலித்தவிசினிருந்தனைவேபுகன்றனெல்லாம். (ச)

---

* படைக்கலன்கள் என்றும் பாடம்.

‡ துன்பமகலமிகவந்தமிலாவாசி என்றும் பாடம்.

வாள்விசயன் புரவிசயன் றன்னைநோக்கி மன்னுதவம்புரிந்ததுவுமகிழ்ச்சிகூர்ந்தவ்,
வேள்விசயந்தவிர்த்தபிரானருளால்வேண்டும்விறற்படைகளளித்ததுவும் விபுதர்கோமா,
னுள்விசயம்பெறக்கொடுபோயும்பருரினளிர்மகுடம்புனைந்ததுவுநாளுந்தன்பொற், றோள்
விசயந்தொலைத்ததிறலவுணர்சேனைசுடுசரத்தாற்றொலைத்ததுவுஞ்சூழ்ந்தயாவும். (ரு)

தன்னருகேயமரரெலாமினிதுபோற்றத் தனஞ்சயனங்கிருந்ததற்பின்றயங்குஞ் சோதி,
மன்னுமெழிற்காந்தர்ப்பமென்னுநாமவரைவழியேவருவதுவுமருவுகாத, லுன்னுடைய
பெருந்துயரந்தணியுமாறு முரைத்தருள்கவெனவும்பர்கோமானுன்பா, லென்னைவிடுத்த
னன்வந்தேனென்றனெல்லாவுலகமுடிந்திடுநாளுமீறிலாதான். (சு)

மாமுனிதன்மொழிகேட்டுப் புரையில்கேள்விமன்னவனுந்தம்பியரும் வருத்தமா
றிக், காமியமென்றுரைபெறுசீர் வனத்தைநீங்கிக்கடவுண்முனிதன் னொடுமக்கணத்தி
னேகி, நாமமதுகரதீர்த்தமுதலாவுள்ள நற்றீர்த்தமெவற்றிலும்போய்நானமாடித், தாம
மதிதவழ்சிகரத்திந்த்ரநீலசயிலத்தின்சுனைகெழுதண்சாரல்சார்ந்தார். (எ)

அக்கிரியின்புதுமையெலாமடைவேநோக்கியங்குள்ளவருவிநறும்புனலுமாடித், தக்கபுகழ்
விசயனருந்தவம்புரிந்தசாரலிதுவென்றுதவமுனிவன்சாற்ற, மிக்க களி யுவகைநிகழ்
நெஞ்சராகிவிசயனைக்கண்டனர்போலவிரும்பிக்கண்டு,தொக்கமுனிகணத்தொடும்போய்த்
தசாங்கனென்னுந்தொல்லைமுனிதபோவனத்தின்சூழல்சார்ந்தார். (அ)

அங்குள்ளதபோதனர்தம்பாதம்போற்றியவருரைத்தவாசியும்பெற்றப்பாலேகி
யெங்குள்ளகடவுணெடும்புனலும்யாறுமெய்ப்புனலுந்தப்பாமலினிதினாடி
வங்கமெறிகடல்கடைந்துவானோர்க்கெல்லாமருந்துவிருந்தருளியமந்தரமுங்காட்டிக்
கங்கைநதி தநியாயுஞ்சிகரச்சாரற்காந்தர்ப்பமெனும்வரையுங்காட்டினானே. (கூ)

அந்தவுயர்கிரியினெடுஞ்சாரலூறுமருந்தவஞ்செய்முனிவரரையடைவேகாட்டி,யிந்
தவனந்தனக்கெமையாளுடையான்குன்றமீரைம்பதியோசனையென்றெடுத்துக் காட்டிக்,
கந்தனெனவெக்கலையும்வல்லஞானக்கடவுண்முனிவிசாலயனாலயமுங்காட்டி,யுந்துநெறிச்
செங்கோலாயிதனிலோராண்டிருத்தியெனவுரோமசனுமுரைத்திட்டானே. (க0)

அம்முனிவன்மொழிப்படியேவரம்பில்கேள்வியறன்மகனுந்தம்பியருமரிவையோடு,
மெம்முகமுந்தம்முகமாவிலையுங்காயுமினியகனியுடனருந்தியிருக்குநாளின், மைம்முகில்
வாகனன்கனகமுடிமேலம்பொன்வனசமலரொன்றுதழன்மயின்முன்வீழச், செம்மலரைச்
செங்கண்மலர்தன்னானோக்கிச் செய்யமலர்க்கரத்தேந்திச்சிந்தித்தாளே. (கக)

இந்தமலருலகனைத்துமீன்றகோல வெழின்மலரோவிரவிதிருக்கரத்தில்வைகு, மந்
தமலரோவமுதிற்பிறந்தபாவையமர்ந்துறையுமணிமலரோவவனிதன்னி, லெந்தமலருங்
கருகக்கமழாநின்றதெங்கெங்கு மிதன்மணமேயென்றுபோற்றிக், கந்தவகன்மைந்தனுக்
குக்கனலோனல்குங்கனங்குழைசென்றுவகையுடன்காட்டிச்செல்வாள். (கஉ)

இம்மலருக்கொருமலருமவனிதன்னிலெதிரில்லையென்றிதழாயிரத்தின்மிக்க, வம்மலரைக்கைம்மலரிற்கொடுத்தீதொக்கு மணிமலர்நீயெனக்கருளவேண்டுமென்னச், செம்மலையிற்றிகழ்சிகரத்திண்டோள் வீமன்றெய்வ முனிபுங்கவன்றன்றிருத்தாள் போற்றி, மென்மலரைத்திருமுன்புவைத்துநின்றுவினவினனவனுமெதிர்விளம்புவானே. (௧௩)

என்பலவுமியாமுரைப்பதிந்தப்பூவினியல்பினையும்பெருமையையுமியக்கர்தங்கண், மன்பதியிலுள்ளதன்றிவரம்பிலாதவானுலகிலுளதென்னின்மற்றுமுண்டோ, வுன்பிறருக்கிதுகோடற்கெளிதோமாயனும்பர்பதிபுகுந்தொருமைப்பேதைக்கீந்த, பின்பிதனைக் கண்டறிவாரில்லையென்றுபேசினன்யாவரொடும்பேச்சிலாதான். (௧௪)

இயக்கர்பதிதனிலுளதென்றிசைத்தமாற்ற மின்புறக்கேட்டொருகாலு மீறிலாத, வயக்கொடுவெஞ்சராசனமும்வன்போர்வாகைமறத்தண்டுங்கரத்தேந்திமடந்தைநெஞ்சிற், றுயக்கமறவிக்கணத்திற்றெய்வபோக சுரபிமலரளித்திடுவனென்றுசொல்லிச், சயக்காடமுறுதறுகட்சயிலமன்னசதாகதிமைந்தனுமிமைப்பிற்றனிசென்றானே. (௧௫)

கைக்காற்றுந்தொடைக்காற்றுமூச்சுக்காற்றுங் கனகமணி வரைபோலக் கவின் கொள்சோதி, மெய்க்காற்றும்பரந்தெழுந்துவனத்திலுள்ளவெற்புநெடுந்தருவனைத்து மொடிந்துவீழ, வெக்காற்றுமுடன்றெழுந்தவுகாந்தகாலமெனச்சென்றுனினவளைக ளெண்ணில்கோடி, செய்க்காற்றுஞ்செழுந்தாளநிலவுவீசச்சேதாம்பல்பகன்மலருஞ்செல்வநாடன். (௧௬)

இலங்கைநகர்தன்னில்விறலிராமதூதனிகலரக்கன்சோலையெலாமிறுத்தவாபோ
னிலங்குலுங்கவரைகுலுங்கவனத்திலுள்ளநெடுந்தருக்கள்யாவையும்வேருடனேராக்கி
விலங்கினொடுபுள்ளினமுடையத்தாக்கிமெய்ந்நடுங்கித்தடுமாறிவெம்பியுள்ளங், கலங்கி
விழக்கனமதிர்வபோலவார்த்துக்காஞ்சனப்பேரெழில்வனமுங்கடந்திட்டானே. (௧௭)

அவ்வனத்தையிகந்தனந்தகாதமேகியங்கிடைவிட்டுத்தரத்தினப்பாலேகி, மெய்வனப்புமடல்வலியுமிகுந்தவாகைவீமனெனும்பேர்திசையின்விளக்கும்வீரன், மைவனப்பினுடன்படியுஞ்சினைக்கைவாசமலர்ப்பொழிலினொருபருங்கேமத்தமாவின், கைவனப்புந்தழைசெவியுமருப்புஞ்சேரக்கவினளிக்குங்குலைக்கதலிக்காடுகண்டான். (௧௮)

அக்கதலிவனந்தனக்குக்காவலாயவடலரக்கரனேகருடனடுபோர்செய்து
மிக்கதலங்குருதியினல்வெள்ளமாக்கிவெகுண்டவர்தம்மாவியையும்விண்ணிலேற்றித்
திக்கதலமூதலாமெவ்வுலகுமேங்கச்சிங்கநாதமுஞ்செய்தான்செய்தகாலை
யுக்கதலைமணியுரகராசற்கென்றுமும்பர்படிக்குமபமெம்மானுரைக்கலாமோ. (௧௯)

வரைகலங்கவனங்கலங்கக்கலங்குறாதமண்கலங்கவிண்கலங்கமகாமுந்நீர்த்
திரைகலங்கத்திசைகலங்கவீறிலாதசெகங்கலங்கவுகங்கலங்கச்சிந்தைதூயோ
ருரைகலங்கவுளங்கலங்கத்துளங்கிமெய்யினூன்கலங்கவிலங்கொடுபுள்ளினங்கள்யாவு
நிலைகலங்கவுலகினுயிர்படைத்ததம்பினில்கலங்காதனவுண்டோநிகழ்த்தினம்மா. (௨௦)

### வேறு.

அந்தவோதையப்பொழிலிடைத்தவம்புரிந்தருளு
மந்தராசலமனையதோண்மாருதிகேட்டு
விந்தமன்னதிண்புயாசலவீமனுக்கெதிர்போய்
முந்தமற்றவன்வருநெறியதனிடைமுன்னி. (உக)

வெற்பிரண்டினில்வேலைமுன்கடந்ததாணீட்டிப்
பொற்புயாசலமிரண்டையுமிருவரைபோக்கி
யற்பவாழ்வுடையரக்கன்மாநகரமுனூட்டுஞ்
சிற்பவாலதிதிசையெலாஞ்சென்றுநின்றோங்க. (உஉ)

எம்பிரான்றனக்கொழியமற்றியாவர்க்குந்தெரியாச்
செம்பொன்மாமணிக்குண்டலமிருபுறந்திகழ
விம்பமால்வரைமீதொருமேருவையொக்கு
மம்பொன்மால்வரையிருந்தெனவிருந்தனனுமான். (உங)

குகைத்தடங்கிரியனையதோள்கொட்டியார்த்தரப்பி
*நகைத்துநாகமுநடுங்கிடநடந்தனனடந்து
மிகைத்தவாளரிபோல்வரும்வீமன்முன்கண்டு
திகைத்துநின்றனன்மறமையுந்திறமையுமுடையான். (உச)

அண்டர்தானவராக்கருமணுகுறுவனத்தி
லெண்டிசாமுகமெங்கணுமிரிந்திடவார்த்து
மண்டிமேல்வருமாறுடனாடாவென்றான்
சண்டவாயுவின்றனயனைமற்றவன்றமையன். (உரு)

தம்முனாகியவானரஞ்சாற்றியவுரைகேட்
டெம்முனாகிவந்திருந்தநீயார்கொலென்றிசைத்தான்
றெம்முனையினுஞ்செவ்விமென்போகமாமகளிர்
தம்முனையினுநாத்தவறுவடல்வீமன். (உசா)

துன்னும்வெஞ்சிலைவலிகொலோதோளிணைவலியோ
வென்னைநீபுகலாரடாவென்பதிங்கெவனோ
வுன்னை†நீயறியாநெறியுணர்விலாமனிதா
மன்னும்வாறனைக்கடந்துபோவல்லையேலென்றான். (உஎ)

உரங்கொள்வீமனம்மாருதியுரைத்தசொற்கேளா
வரங்கொள்வார்சிலையிராகவன்மாப்பெருந்தூதன்
றரங்கவாரிதிதாவுமென்றம்முன்வாலன்றிக்
குரங்கின்வாலிதுகடப்பதிங்கரியதோகூறாய். (உஅ)

---

* நகைத்துநாகமுநாகமுநடுங்கிடநடந்து என்றும் பாடம்.

† நீயறியாய்நெறி யென்றும் பாடம்.

என்றுதன்றிருத்துணைவனின்றிசைத்ததுகேட்டு
*நன்றுநன்றுநீநவின்றதுநன்றெனநகையாத்
துன்றுவார்சிலைமணிதனைச்சுமந்துதோள்வருந்தும்
புன்றொழிற்சிறுகுரங்கையோவென்னொடும்புகல்வாய். (௨௯)

குரக்குநாயகனவ்வுரைகூறலுங்கேட்டுத்
தரைக்குநாயகன்றடம்புயங்குலுங்கிடநகையா
வரக்கர்நாயகனூரழலூட்டியிவ்வகிலம்
புரக்குநாயகன்றன்னையோவிழித்துநீபுகல்வாய். (௩௦)

பின்னும்வார்சிலைபிராகவன்பெருமையுமனுமான்
மன்னுதோளிணைவலிமையுமாருதிசாற்ற
வன்னபோழ்தினிலகமகிழ்ந்தருளுடனோக்கி
யென்னகாரியம்வந்ததிங்கியார்கொனீயென்றான். (௩௧)

தாமமாருதியுரைத்தசொற்றம்பியுங்கேட்டு
நேமிமாநிலம்புரக்குநன்னீதிவேற்றரும
நாமநாயகற்கிளையவனானுக்குமூத்தோன்
வீமன்வாயுவின்புதல்வன்யானென்றனன்விறலோன். (௩௨)

அன்னவாசகமவனுரைத்தலுமிகலனுமான்
கன்னபாகமுஞ்சிந்தையுமூன்றுறக்களித்து
மின்னுவார்சிலைபிராகவன்மெய்ப்பெருஞ்சீர்த்தி
சொன்னவாறுநன்றுனக்கிதார்சொற்றவரென்றான். (௩௩)

வரத்தினாலருமறையினால்வார்சிலைபயிற்றும்
பரத்துவாசன்முன்பகர்தரக்கேட்டனன்பலகாற்
றிரத்தினாலுயரிராகவன்சிலைவலியென்று
னுரத்தினாலொருவீரருமொப்பிலாவுரவோன். (௩௪)

குந்திகான்முளைகூறியவாசகங்கேட்டுப்
புந்தியானுபரஞ்சனைபுதல்வனும்புகல்வான்
சிந்துசீகரச்சிந்துமுன்கடந்துசெந்தீயா
னுந்துவாள்வலிநிருதரூரொருங்குசுட்டவனும். (௩௫)

அந்தவார்சிலைபிராமனுக்கடிமையாயென்றுஞ்
சிந்தையாலவன்றிருப்பதஞ்சிந்தைசெய்பவனு
முந்தையாகியவாயுவுக்குற்பவித்தவனு
மிந்தவாழ்வுடையனுமனேயென்றனனிகலோன். (௩௬)

என்றவாசகமிருசெவிக்கமுதெனக்கேட்டுத்
துன்றுநெஞ்சினிலுவகையன்றுதித்தனன்றுள்ளி
யென்றும்யாமுயறவப்பயனிருந்தவாவென்னாச்
சென்றிறைஞ்சினன்றிரைக்கடல்கடந்தசேவடிமேல். (௩௭)

---

* நன்றுநன்றிதுநவின்றதுவெனமிகநகையா என்றும் பாடம்.

தம்பியைத்துணைத்தாழ்தடக்கைகளாலெடுத்து
வம்புசேர்மணிமால்வரைமார்புறவணைத்துப்
பம்புசெந்தழற்கானிடைப்பதமலர்சிவப்ப
வெம்பிநீதனிநடந்தவாறென்கொலென்றிசைத்தான். (௩௮)

தாயத்தாரும்வல்வஞ்சனைச்சகுனியுங்கூடி
மாயத்தாலொருகவறுகொண்டெங்கண்மண்கொண்டு
நேயத்தானெடுங்கானகநேர்ந்தனரென்றான்
சீயத்தாலரசிழந்திடுஞ்சிம்புளேறனையான். (௩௯)

திகந்தமெட்டினுந்தன்மணமொல்லெனச்செல்லச்
சுகந்தபுட்பமொன்றியாமுறைவனத்தினிற்றோன்றத்
தகைந்தவப்புதுமலர்தனைத்தழன்மகள்காணூ
வகைந்தவித்துணைமலரெனக்கருளுதியென்றாள். (௪0)

ஆதலாலிவண்யானுமின்றணுகினனென்று
நீதியானுயர்தம்முனைநெடுந்தகைபோற்றக்
கோதிலாதவக்குரிசிலுங்குமரனைநோக்கித்
தீதிலாயிதுகேட்கெனச்செப்புவன்மாதோ. (௪௧)

அருநிதிக்கிழவன்றனதளகைமாநகரின்
மருமிகுத்தநீண்மஞ்சனவாவியின்கரையிற்
றருமலர்ப்பெருஞ்சோலையிற்றங்குமம்மலர்சென்
றுரிமையுற்றதுகோடன்மற்றும்பர்க்குமரிதால். (௪௨)

ஈறிலாவிகலரக்கரோடியக்கர்தங்காவல்
கூறும்வாசகம்பொய்ப்பவர்கூர்தவமுயலும்
பேறிலாதவர்பேரருளிலாதவர்பிறிது
மாறிலாதவர்தமக்குமங்கணுகுதலரிதால். (௪௩)

அறிவும்வாய்மையுந்தூய்மையுமன்புமின்னருளும்
பொறையுஞானமுங்கல்வியும்புரிபெருந்தவமு
நெறியுமானமும்வீரமுநின்னவாதலினுற்
பெறவுனக்கரிதாயதேதென்றனன்பெரியோன். (௪௪)

முன்னவன்புகலுறுதிகூர்மொழியெலாங்கேட்டுப்
பின்னவன்றொழுதிவையிவைபேசினன்பின்னு
மன்னர்மன்னவனறமுண்டுமறமுண்டுவழக்கே
யுன்னினுன்னருளுண்டுதிண்டோளுரமுண்டால். (௪௫)

தேவர்காக்கினுந்தயித்தியர்காக்கினுஞ்சிறந்த
மூவர்காக்கினுமுறைமுறைமொழிந்தமூவுலகில்
யாவர்காக்கினுமிக்கணத்தியக்கரூரெய்திக்
காவின்மேற்பயில்கடிமலர்கவருவேனென்றான். (௪௬)

ஆண்டவன்புகலுறுதியுமாண்மையுங்கேட்டு
நீண்டதோள்வயமாருதிநெடிதுவந்தருளிப்
பாண்டவன்றனைப்பண்புறப்பரிவினுனோக்கி
வேண்டுநல்வரம்வேண்டுகவிண்டை நீயென்றான். (சஎ)

நெடியகானகநீங்கியாநெறியினோரலரைக்
கடியவெஞ்செருப்புரிபெருங்குருதிவெங்களத்தி
லடிகளாங்கெழுந்தருளிவந்தருச்சுனன்றடந்தேர்க்
கொடியின்மீது நின்றுவந்துகூத்தாடுதியென்றான். (சஅ)

நீட்டுமவ்வரமவனுக்குநேர்ந்தனனனுமான்
மீட்டுநல்வரமொன்றுமுன்வேண்டினன்வீம
னீட்டுமாநிதியிலங்கைதீயிட்டநாளிசைந்த
மோட்டுருத்தனைக்காட்டுகென்றிறைஞ்சினன்முதல்வன். (சகூ)

வேறு.

என்றடல்வீமனிசைத்திடுமுன்ன
மொன்றியிவ்வேழுலகங்களுமொன்று
மன்றுளதார்புனைவாமனனைப்போ
னின்றுநிமிர்ந்தனனித்தமுமுள்ளான். (ருo)

படியினதெல்லைபதத்தினதெல்லை
மடியினதெல்லைபவ்வானினதெல்லை
யடியினதெல்லையளப்பரிதென்றான்
முடியினதெல்லைமொழிந்திடலாமோ. (ருக)

அந்தரமெங்குமடக்கியமெய்யிற்
சுந்தரவாலதிசுற்றியதோற்ற
முந்தியநீளுடல்வாசுகிமுன்னாண்
மந்தரவெற்பைவளைத்ததுமானும். (ருஉ)

நீளகல்வானநெருங்கமருங்கே
தோள்புறம்வாலதிசூழ்தரநிற்போ
னுளொடுதாரகைஞாயிறுமுதலாங்
கோளணிசூழ்வருகுன்றமுமொத்தான். (ருங)

இவ்வகைமுன்னமிலங்கையெரித்தான்
மைவருநாகர்* பணாஞ்சுழியத்திண்
மெய்வகைகொண்டதுகண்டுவியந்தார்
மைவகைசேரகல்வானவரெல்லாம். (ருச)

மேலளவாதுவிளங்கியசொன்மெய்க்
நூலளவாகியநுண்ணறிவோர்போன்
மாலளவன்றிவணங்குதலில்லான்
காலளவல்லதுகண்டிலன்வீமன். (ருரு)

* பணங்கள்சலிக்க என்றும் பாடம்.

அருக்கனின்மும்மடியாரொளிவீசு
முருக்கிளர்மேனியையூடுறநோக்கா
வெருக்கொடுதாண்மிசைவீழ்ந்தனன்மீண்டுஞ்
சுருக்குகவென்றுதுதித்தனன்வீமன். (௫௬)

அந்தமுமாதியுமற்றவருக்கஞ்
செந்தமிழ்செய்துதிரட்டினரைப்போ
லந்தரவானுமகண்டமுமொன்று
வுந்தியமேனியொடுக்கினனம்மா. (௫௭)

இந்திரசாலமியற்றினரைப்போன்
மைந்தொடுதொல்லையில்வடிவுகொள்பொழுதத்
தந்தமிலாயடியேன்பிழையெல்லாம்
புந்தியுறாதுபொறுத்தருளென்றான். (௫௮)

திருவடிதன்னிருசேவடியிற்போய்
மருவடிதார்புனைமாருதிதொழுவே
*யருள்வடிவாகியகண்டமுமெங்கு
மொருவடிவானவனுற்றுரைசெய்வான். (௫௯)

உன்னருகேபயிலும்பியரோடு
மின்னருகேபயில்வேந்தொடும்வாழ்வுற்
றென்னருகேவருகென்றனனென்றுந்
தன்னருகேதமுறாததவத்தோன். (௬௦)

அங்கவனம்மொழிகூறலுமையா
வெங்கணுநின்னுயரின்னருளுண்டே
பங்கயமாநிதிவாழ்பதியெய்தச்
சங்கையினன்னெறிசாற்றுகவென்றான். (௬௧)

என்றலுமிந்தவனத்தினதெல்லை
யொன்றியயோசனையோரிருநூறு
சென்றபின்யோசனைசிற்சிலசென்றான்
மன்றன்மலர்ப்பொழில்வாவியின்மன்னும். (௬௨)

அப்பொழில்காவலராக்கரநேக
ரெப்பொழிலுந்திறைகொள்ளுமெயிற்றார்
துப்புடனேயவராவிதொலைத்தாற்
செப்பியமாமலர்சென்றுறலாகும். (௬௩)

அல்லதுநீடளகாபதிதானு
மெல்லியலும்பொழின்மேவியபோது
நல்லுறவாகிநயத்தொடுசென்றான்
மல்லன்மலர்தருவோடுவழங்கும். (௬௪)

---

* அருவடிவாகி என்றும் பாடம்.

உறுதியுமொன்னலருக்கமுமேகு
நெறியினதெல்லையினீர்மையுநெறியிற்
குறிகளும்யாவையுமன்பொடுகூறி
யறிவுடையான்விடையன்பொடளித்தான். (சுரு)

மொய்ம்புடைமாருதிதாளிணைமுன்று
வெம்பியகானிடைமேவியபயனிங்
கெம்பெருமானுனையெய்தினனென்று
நம்பியுநாழிகையொன்றினடந்தான். (சுசு)

அக்கணமாசுவிறைசுகன்மைந்தன்
மிக்குயர்விஞ்சையர்நாட்டிடைவிட்டுத்
திக்குறைநாகர்திரண்டுறுதிக்குஞ்
சக்கரநாகமதன்புடைசார்ந்தான். (சுஎ)

தவாமறைவாணர்தவம்புரியுந்தண்
கவானுடைநீள்குகரத்துயர்கலைசே
ருவாமதிசூழ்வருமோங்கலொடொக்குந்
திவாகரமால்வரைசேர்ந்திடுமெல்லை. (சுஅ)

அஞ்சனமேகமொடாலமளாவி
வஞ்சனைகொண்டுவகுத்தனமெய்யான்
குஞ்சிகள்வானினிடைக்கொடியோடிச்
செஞ்சுடர்காறருகின்றசிரத்தான். (சுகூ)

குளிர்வரையொன்றியநீள்குகரம்போ
லளவில்பெரும்பகுவாயதின்மதியின்
பிளவெனலாவளையும்பிறழுந்தண்
ணிளநிலவென்னவிலங்குமெயிற்றான். (எ0)

ஆறிருகாதமகன்றுயர்தோளா
னாறிருகாதநெடிக்குணடப்பா
னேறுடையான்முதல்யாவர்களெனினு
மாறொடுகாதிமலைந்திடவல்லான். (எக)

எண்டிசையுந்திறைகொண்டிகலோடும்
புண்டரிகப்பெயர்நாடுபொறித்தோன்
றிண்டிறன்மாருதிசேய்வருவானைக்
கண்டனனங்கழல்கான்றிடுகண்ணான். (எஉ)

உருத்துமுகிற்குலமுருமுடன்மட்கச்
சிரித்திதழ்கவ்வியெயிற்றிணைதின்றுங்
கரித்துவசன்றனைநோக்கியரக்கன்
கருத்துடனின்றிவைகட்டுரைசெய்வான். (எங)

யானுறைகானகமென்றிமையோருந்
தானவர்தாமுமிதற்கிடைசாரார்
மானுடனீயிவண்வந்ததுசுவையா
மூனிடவோவிஃதுரைத்திடுகென்றான். (எச)

வென்றியரக்கன்விளம்புதல்கேளாக்
குன்றனதோள்களுஞ்சுநுங்கநகைத்தாங்
குன்றனதாவியுமுண்டிடவந்தே
னென்றனன்முன்னமிடிம்பனைவென்றோன். (எரு)

மற்றதுகூறமறத்தொடரக்க
னுற்றெதிரோடியுறக்கியபோதக்
கொற்றவனுங்கதைகொண்டுடன்மண்டிப்
பற்றினன்வந்தவனுவிபறிப்பான். (எசு)

குன்றொடுகுன்றமர்கூடுவதேபோ
னின்றுநெடும்பொழுதாகமலைந்தும்
வன்றிறலுந்தமவாகுவின்வலியு
மொன்றுமிளைத்திலரொத்தவுரத்தார். (எஎ)

எல்லையிலாவமரிங்கிவரிவ்வா
றெல்லையின்மோதியுடன்றிடுபோழ்திற்
றெல்லையிலோர்முனிசொல்லியசாப
மல்லலரும்பிவழங்கியதன்றே. (எஅ)

ஒன்றினுமாவியுனக்கிவனெல்கா
துன்றிடுதோண்மிசைதோமரமேவிக்
கொன்றிடுவாயினிவாயுகுமாரா
வென்றதுவானினிடத்தசரீரி. (எகூ)

அங்கசரீரியாற்றிய *மாற்றஞ்
சங்கையுறுதுசமீரணிகேட்டுப்
பங்கயநாமநிசாசரபதிதன்
றுங்கவயப்புயமேற்கதைதொட்டான். (அ0)

தொட்டகொடுங்கதைதோளுறுமுன்னர்ப்
பட்டுளநொந்துபதைத்தடல்வஞ்சன்
வட்டநெடுங்கடலூடுமருத்தன்
றிட்டபெருங்கிரியென்னவிழுந்தான். (அக)

வேறு.

ஏற்றத்தோடிகலியிவ்வாறிடைவழியதனில்வந்து
சீற்றத்தோடெதிர்ந்தவெம்போர்த்திண்டிறலரக்கன்றன்னைப்
பாற்றுக்கும்பருவாய்ப்பேய்க்கும்பருந்துக்கும்வருந்தநின்ற
கூற்றுக்கும்விருந்துசெய்தக்கொற்றவேற்குரிசில்போனான். (அஉ)

---

* சாபம் என்றும் பாடம்.

எண்டிசையமார்போற்றுமிந்துமால்வரைசென்றெய்திப்
புண்டரீகன்றனுடம்பொருக்கெனநோக்கியப்பாற்
றெண்டிரையளித்ததெய்வச்செல்வமாநிதிகளோங்கு
மண்டர்மாநகருமொவ்வாளகைமாநகரங்கண்டான். (அ௩)

அந்தமாநகரின்றென்பாலகல்விசும்புறநின்றோங்கும்
விந்தமாமென்னநின்றுவிளங்குதோள்வீமசேனன்
முந்தைமாருதிநண்போடுமொழிவழியெய்தியந்தக்
கந்தவான்பொழிலுநன்னீர்க்கடிமலர்த்தடமுங்கண்டான். (அ௪)

ஆயிடைக்குறுகுமெல்லையப்பொழிறப்பிற்காப்போர்
சேயிடைப்பரந்தமார்பர்சேணிடைகடந்ததோளர்
வாயிடைப்பிறைகளென்னவளைந்தவாளெயிற்றர்வஞ்சத்
தீயிடைச்சோரிதோய்ந்ததிரண்டெனச்சுழல்செங்கண்ணர். (அ௫)

சூழிருட்பிழம்புநஞ்சுதோய்ந்தன்னதுவக்கருண்ணி
ஞழிகையொன்றினெல்லாவுலகையுநலியுமீட்டார்
வாழிமந்தரமத்தாகவாசுகிகயிறுமாயோ
ஞழிநீர்கடைந்தநாளுமமுதெழக்கடைந்தவீரர். (அ௬)

மறத்தொடுவஞ்சமானநண்பெனவளர்த்துநாளு
மறத்தொடுபகைக்குநெஞ்சர்பிலத்தினுமகன்றவாயர்
புறத்தினின்முகத்தர்மார்பிற்புழைமுழைமுகக்கரின்ன
திறத்தினர்குஞ்சிச்செந்தீச்சிரத்தினர்வரத்தின்மிக்கோர். (அள)

கரங்களாயிரத்தர்நண்ணுங்கால்களாயிரத்தர்குஞ்சிச்
சிரங்களாயிரத்தர்பூழைச்செவிகளாயிரத்தர்வென்றி
யுரங்களாயிரத்தரூழிதவமுயன்றுரிமைபெற்ற
வரங்களாயிரத்தர்மிக்கமறைகளாயிரத்தர்மன்னோ. (அஅ)

வைத்தாரைவாளம்வில்வேன்மழுவெழுத்திகிரிசூலங்
கைத்தாரைபடக்கொண்டென்றுங்கண்ணிமையாதுகாப்போர்
மைத்தாரைமாரியொப்பார்மானுடநாற்றங்கேட்டு
மொய்த்தாரக்கடவுள்வாசமொய்ம்மலர்ச்சோலையெல்லாம். (அ௯)

மண்டியெங்கெங்குமேன்மேன்மறிகடன்முகக்குநீலக்
கொண்டலிற்குமுறியார்த்துக்குறுகியகொடியநீசர்
சண்டவேகத்தினெய்துஞ்சதாகதிதனயன்றன்னைக்
கண்டனர்சூலபாசகாலனைக்கண்டதன்னோர். (௯0)

எற்றவென்பாருஞ்சூலத்தெறியவென்பாருமெய்திப்
பற்றவென்பாருமாவிபறிக்கவென்பாரும்யாக்கை
சுற்றவென்பாருஞ்சென்னிதுணிக்கவென்பாருமாகி
யுற்றனராக்கர்தூருயிரருத்துரைக்கலுற்றார். (௯௧)

இந்திரன்முதலாவுள்ளவிமையவர்தாமுமிந்தக்
கந்தவான்சோலைகண்ணுற்காணவுங்கருதிநைவார்
வந்ததென்மதியிலாதமானுடாவுன்றனுவி
சிந்துமுன்செப்புகென்னுத்தெழித்தனர்தீயோரெல்லாம். (கஉ)

அருளிலாவரக்கரிவ்வாறகங்கரித்தாற்றுமிந்தப்
பொருளிலாவுரைகட்கெல்லாமுத்தரம்புகலானுகி
யிருளிலாமுத்தமன்னவெயிற்றரும்பிலங்கநக்கான்
றெருளிலாமதனைமுன்னமெரித்திடுஞ்சிவனைப்போல்வான். (கங)

தனிதமேகம்போலார்க்குநமதுயிர்சரத்திற்சாய்த்திப்
புனிதவான்பொழிலில்வாசப்புதுமலர்கொய்யவந்தேன்
குனிதவர்சொண்டுமுன்னுங்குலங்கரிசறுத்தவீரன்
மனிதனேவானுளானேமறந்திரோவஞ்சரென்றான். (கச)

மாவிந்தமனையபொற்றோண்மாருதிவாய்மைகேட்டுப்
பூவிந்தவனத்தினீயோபறித்தியென்றழன்றுபொங்கி
நாவிந்தவுரைதந்தினுமிருப்பதோநானுக்கென்னுக்
கோவிந்தனெடுத்தகுன்றிற்கொண்டலின்குழாத்திற்சூழ்ந்தார். (கரு)

வானகமறையவீசிவான்படைக்கலங்கள்வால
சேனனேமுதலாவுள்ளசேனையின்றலைவரார்த்தார்
கானுடைத்தொடையலானுங்காலனுக்காவியன்ன
தானுடைத்தண்டமேந்திப்புகுந்தனன்சலிப்பிலாதான். (கசு)

தண்டினலவர்கள்விட்டபடையெலாந்தகர்த்துமீள
மண்டினனுழுவைகண்டவாளுகிர்மடங்கலொப்பான்
மிண்டினருடலம்யாவுமெய்தலைதம்மினென்றக்
கிண்டினன்மூளைச்சேற்றிற்கிடத்தினன்படுத்துமன்னோ. (கஎ)

தாக்கினன்சிலரைத்தண்டாற்றடக்கையாற்சிலரைவானிற்
றூக்கினன்கறங்கினின்றுசுழற்றினன்சிலரையெற்றி
நூக்கினன்சிலரைத்தாளானெறுக்கினன்சிலரைவாளால்
வீக்கினன்சிலரையாவிவேறிட்டான்சிலரைவீமன். (கஅ)

பிடித்தனன்சிலரையள்ளிப்பிசைந்தனன்சிலரைமண்ணி
லடித்தனன்சிலரையங்கமசைத்தனன்சிலரையெண்ண
முடித்தனன்சிலரைப்போகமுகிழ்த்தனன்சிலரைக்கண்ட
மொடித்தனன்சிலரையஞ்சவுறுக்கினன்சிலரைமன்னோ. (கக)

காக்கமுந்ததனினுனுங்கனவரைத்தோளினுனும்
வரக்கொடுங்கதையினுனுமாமரப்பணையினுனு
முரக்கடுங்காலினுனுமொருக்கினுனுரைப்பதென்னோ
வரக்கரையென்றாற்பின்னைவிடுங்கோலோவனுமன்பினுனேன். (௧௦௦)

இப்படியெதிர்ந்தசேனையாவையுமிமைக்குமுன்னந்
துப்புடன்றொலைத்துவாயுசுதனின்றவுறுதிநோக்கி
மைப்படிவரைகள்போல்வார்வாளெயிற்றரக்கர்பின்னுங்
கைப்படைகொண்டுநூறுயிரரொருகணத்திற்சூழ்ந்தார். (க0க)

அவர்வெகுண்டழன்றுமேன்மேலலைகடல்போலவார்த்துப்
பவர்கொண்டபனகமென்னச்சூழ்வரும்பரிசுபாராக்
கவர்கொண்டதொடையலானுங்கதையொழிந்திலங்குசெங்கைத்
தவர்கொண்டுநெடுநாணண்டந்தகர்தரத்தழங்கவார்த்தான். (க0உ)

அன்னநாணொதையெங்குமகண்டமும்பொதுளத்தாக்க
மன்னுநாகங்களெட்டுமெதம்புலர்ந்துயங்கிவீழத்
துன்னும்வாய்நஞ்சுசுக்கிச்சுழன்றுமண்சுமக்குங்கொற்றப்
பன்னகாதிபனுமுள்ளம்பதைத்துவெம்படங்கள்சோர்ந்தான். (க0ந)

உரம்படச்சரங்கண்மேன்மேலுறக்கிவெல்வீமனுந்தச்
சிரங்களிற்றோளின்மார்பிற்கண்களிற்செருகச்சென்று
கரன்படைக்குழாத்துமுன்னங்காருத்தன்கதிர்கொள்கூர்வாய்ச்
சரம்படத்தளர்ந்ததென்னத்தளர்ந்ததத்தளர்வில்சேனை. (க0ச)

சக்கரஞ்சூலம்பாசந்தண்டம்*வேல்கப்பணம்வாண்
முற்கரங்கணையம்விட்டேறெழுக்கொழுமுசுண்டிருந்த
மெக்கரங்களினுமேந்தியாவருமிவன்மேலேவி
யக்கணந்தன்னின்மீண்டுமெகங்கரித்தார்த்தகாலை. (க0ரு)

அப்படைத்தொகைகளெல்லாமறுத்தறுத்தவர்கடத்த
மெய்ப்படச்சரங்கள்சிந்திச்சிரங்கள்வெவ்வேறதாக்கி
யிப்படிக்கரக்கர்சேனையாவையுந்துணித்துமீண்டுஞ்
செப்படிப்பவரினின்றுசிரித்தனன்சிங்கம்போல்வான். (க0சு)

வேறு

அந்தவயப்படையவ்வாறுதல்கண்டு
கந்தமலர்ப்பொழில்காக்குங்காவலாளர்
புந்திமயக்குறநொந்துபுகுந்தவெல்லா
முந்தியரக்கர்பிரானுக்கோடிமொழிந்தார். (க0எ)

எம்பெருமானினிகேட்டியென்றிறைஞ்சி
வம்பவிழ்சோலையிடத்தோர்மனிதன்வந்து
பம்பியசேனையிடத்தெழுமதமும்பாயு
மும்பலின்வாவிபுகுந்துழக்குகின்றான். (க0அ)

என்றவர்வாய்கைபுதைத்திசைத்தல்கேட்டுக்
குன்றுடனென்றுபுயங்குலுங்கநக்குக்
கன்றியசிந்தையனங்கிகால்செங்கண்ணோ
னென்றியமங்குலினீடுருத்துரைத்தான். (க0கூ)

* வேல்சாபம்வாளம் என்றும் பாடம்.

தன்றுணைநின்றசங்கோடணனைநோக்கி
வன்றிறல்கூடால்வேகமனிதன்றன்னைச்
சென்றவனைச்செருத்தல்செய்யாதின்னே
துன்றுபுயங்கடுவக்கியெய்தச்சொன்னான். (கக0)

அந்தவியக்கர்பிரானுமக்கணத்தில்
வந்துநிதிக்கிழவன்றன்பாதமன்னித்
துந்துபிகொட்டவளப்பில்சேனைசூழ
வுந்தியிமைப்பின்மலர்த்தண்சோலையுற்றான். (கககு)

மன்னுகுருக்கள்குலத்துமன்னர்மன்னன்
றன்னையியக்கர்குலத்திலெண்ணுந்தலைவர்
துன்னு*படைக்கடலோடும்பொங்கிச்சூழ்ந்தார்
மின்னிமுழக்கியிடிக்குமேகம்போல்வார். (ககஉ)

மானவரக்கர்குலத்தைவானிலேற்றி
யூனுடைரத்தமுகுக்குஞ்சோலையூடே
தானைவாளைத்திடநின்றசாபவீரன்
யானையினங்கள்வளைக்குமாளிபோன்றான். (ககங)

விண்ணிலியக்கர்படைக்கலங்கள்வீசி
யெண்ணிலர்சுற்றும்வளைத்தெதிர்ந்தபோதில்
வண்ணவரிச்சிலைகோலிவாயுமைந்தன்
றுண்ணெனவுட்கவடிச்சரங்கடொட்டான். (ககச)

தொட்டசரங்கடுளைத்துமார்புந்தோளு
முட்டவிசும்பினதெல்லையெங்குமுடப்
பட்டதொழிந்துபடாதசேனையெல்லாங்
கெட்டனபட்டதுரைக்கவுண்டோகேட்கின். (ககரு)

மன்னளகாபதிசேனைநாதன்மார்பிற்
றன்னடையாளமுறத்தண்டாலேதாக்க
மின்னிடைநாகம்வெருக்கொண்டென்னமீண்டான்
றன்னெதிர்வீரரிலாதான்சங்கோடணனே. (ககசு)

கருத்தொடுசென்றளகேசன்பாதகமலஞ்
சிரத்தினில்வைத்திவைநின்றுசெப்பலுற்றா
னுருத்திரன்மானுடவுருவங்கொண்டதன்றேல்
வரத்திவன்மானுடனல்லன்மன்னவென்றே. (ககஎ)

பண்புடனிக்கணம்வேண்டுநிதிகள்பலவு
நண்பொடவற்கெதிர்சென்றுநல்காயென்னின்
விண்புகுமிப்புரம்வேந்தவென்றான்மெய்யிற்
புண்புகவுட்கியுளைக்கும்வேழம்போல்வான். (ககஅ)

* படைக்கலமோடும் என்றும் பாடம்.

கோதிலியக்கனியாவுங்கூறக்கேட்டுத்
தாதையுருத்திரசேனன்றன்னைநோக்கி
மாதர்மலர்ப்பொழிலூடுவந்தமனித்த
னேதிலருத்தியனென்னக்கேட்டியென்றான். (ககசு)

தந்தையுரைத்தருள்வாய்மைதலைமேற்கொள்ளா
மைந்தனுமப்பொழிலூடுசென்றுமன்னிச்
சிந்தியரக்கர்சிரங்கள்குன்றஞ்செய்து
கந்தனினிற்குமறத்திறனைக்கண்டான். (கஉ0)

கண்டுமருத்தருள்காளைதன்னைநோக்கி
வண்டுமிடைப்பயிலாதகாவில்வந்து
மிண்டுமரக்கர்குலத்தைவீணேயாவி
கொண்டுபடுத்தனையார்நீகூறுகென்றான். (கஉக)

நின்னளகாபதிமைந்தர்சாபநீக்க
முன்மருதூடுதவழ்ந்தவாகைமொய்ம்பற்
கின்னருண்மைத்துனன்மண்ணில்யாரும்போற்று
மன்னவன்வீமன்மருத்தின்மைந்தனென்றான். (கஉஉ)

மாயவனற்புதனுதன்கண்ணான்வையந்
தாயவன்மைத்துனனுக்கினையதனிநீ
யேயவனத்தினில்வந்ததென்கொலென்றான்
றாயவனுற்றனயாவுந்தோன்றச்சொன்னான். (கஉ௩)

மற்றவனவ்வுரைகூறமகிழ்வோடந்தண்
பொற்றருநண்பினைவழங்கிப்போகென்றருளி
வெற்றியுருத்திரசேனன்மீண்டுவந்தாங்
குற்றதுதாதைதனக்குரைத்திருந்தான். (கஉச)

வேறு.

அண்ணற்றருப்பெற்றபின்னந்தவயமீளியக்காவினிற்
றண்ணித்திலப்பொய்கைபடிவுற்றினமுதன்னதண்ணீர்குடித்
தெண்ணற்றகழுதாடலதுகண்டிருந்தங்கிளைப்பாறினான்
மண்ணுக்கும்விண்ணுக்குமறலிக்குமுறவானவடிவாளினான். (கஉரு)

இவ்வாறிவன்செய்கையிவன்வந்ததறியாமலெழில்கூர்வனத்
தவ்வாறுபயில்கின்றவருள்வாரிதானுற்றவதுகூறுவாங்
கைவார்கதைக்காளையைக்கண்ணுறச்சூழல்காணாதுமுன்
செவ்வாய்மடப்பாவைநின்றாளைநீகூறெனச்செப்பினான். (கஉசு)

வானின்றுமலரொன்றுதன்முன்புமின்போலவந்துற்றதுந்
தானின்றிம்மலர்போலமலர்தேடிநீயின்றுதருகென்றதுந்
தேனின்றதொடையானுமளகேசனகர்மீதுதனிசென்றதுங்
கானின்றகுழலாளுமன்னற்குமுன்கட்டுரைத்தாளரோ. (கஉஎ)

கருமத்தின்வடிவானமடமங்கையிவ்வாறுகழறுதமு
னுருமுத்துவசன்மைந்தன்முன்போகவன்போடுமுளனொந்துளான்
மருமத்துவேறைத்தபுண்மீதுகனலுற்றதெனமாழ்கினன்
றருமத்தினுருவாகியெழுபாருநிலையிட்டதனியாண்மையான். (கஉஅ)

வாளிப்பரித்தேர்மணிவ்வாறுதுயரெய்திமனனஞ்செயக்
கூளிக்குழாம்வானின்மிசையுய்த்ததெனநற்கொடித்தேரின்மேற்
காளக்கருங்கொண்டல்போல்வந்துவீமன்றருங்காளைமுன்
னுளிப்பெருங்கொற்றவெற்றித்திருத்தாதையடிமன்னினன். (கஉக)

மின்றுரைபடவெண்ணிலாவீசுமேகங்கொலெனவந்துமு
னின்றானைமுகநோக்கிநீதிக்கொர்வடிவாமனிவைகூறுவா
னுன்றுதைதமியேனொ*டுயவாமலொருவாசமலர்கொண்டிடச்
சென்றானெனச்சிந்தைநொந்தன்புடன்பின்னுமிவைசெப்புவான் (க௩0)

எம்பிக்கொரிடையூறுவந்தெய்துமுன்யாமியக்கேசனூர்
வம்புற்றமலர்வாவிசென்றெய்திவிரைவோடுவருவோமெனு
வெம்புற்றபைங்கானினிடைமின்னுமிளையோருமுடன்மேவவே
கம்பிக்குநெஞ்சோடவன்றேரின்மீதக்கணத்தேறினன். (க௩க)

காக்கும்பகம்பக்கடாயானைமன்னன்கருத்தோடுசென்
றரக்கன்றடந்தேரிலவனோடுநீடந்தரத்தேகினன்
பரக்கும்பெரும்புண்பமும்பாவமுந்தாவில்பகிரண்டமும்
புரக்கும்பெருஞ்சோதியும்பொங்குமாமாயையும்போலவே. (க௩உ)

கானெல்லைசெல்லாதுகதிரோனெடுந்தேரெனக்கங்கைசேர்
வானெல்லையுறவோடியொருநாளுகடிகைக்குள்வயமன்னுதே
ருனெல்லையில்லாதுபுகமண்டமிகமண்டுமதிரத்துடன்
றேனெல்லையில்லாதுருக்கும்பெருஞ்சூழல்சென்றுற்றதே. (க௩௩)

ஆனைக்குழாநூறுமரியேறெனப்பொங்கியளகேசன்வெஞ்
சேனைக்குழாநூறியதனூடுபயில்வாயுசிறுவன்றனைத்
தானைப்பெருங்கொற்றமன்கண்டுதானுற்றதளர்வாறினு
னேனைத்திருத்தாதையைக்கண்டுதேர்நின்றிழிந்தின்புறா. (க௩௪)

மைக்காளமுகிலன்னமகனுந்தனடிமன்னவயவீமனுங்
கைக்கானினறைவாசமலர்கொண்டறன்காளைகழனல்கியே
முக்காலும்வலம்வந்துமுறையோடுதொழுவானைமுகநோக்கிநின்
றெக்காலுநாவந்ததிசையாதவிசையோனுமிவைகூறுவான். (க௩௫)

என்னேவலாலன்றியிமையோருமெய்தாதவிக்காவினீ
யின்னேவலால்வந்துவிரகாகவினைசெய்தவிதுமேன்மையோ
வுன்னேவல்புரிவாருமுளரும்பிமாரென்றுருத்தானரோ
தன்னேவலாலிந்தவுலகேழும்வலம்வந்ததனியாழியான். (க௩௬)

---

* உரையாமலென்றும் பாடம்.

என்றிந்தவுரைகூறிமுனிவாறியிறையோனுமிகலோனுடன்
சென்றந்தண்மலர்வாவிபடிவுற்றுவாசத்திருத்தார்புனைக்
தன்றந்தவிடம்விட்டிமைப்போதிலத்தேரின்மிசையேறியே
மின்றந்தவிடைபாஞ்சாலியோருமுறைகானினிடைமேவினான். (ககஎ)

மேவிப்பெருந்தெய்வமுனிபாதமலர்சென்னிமிசைவைத்துமென்
காவிக்கயற்கண்ணிணைச்*சேயிதழ்ப்பாவைகளிகூரவே
வாவிச்செழுந்தாமமலர்நல்கியொல்காதுவலிகூருநல்
லாவிக்கின்னமுதானநிருதற்குவிடையன்றளித்தானரோ. (கக அ)

வேறு.

மின்புரைமருங்குன்மின்னும்வேந்தருமந்தக்கானி
லன்புடைமுனிவன்கூறவவன்மலர்ப்பாதம்போற்றித்
துன்பமுந்தனியுமாறிநாடொறுந்தேரகைபாகன
றன்பெருங்கதையுங்கேட்டுத்தங்கினரென்பமாதோ. (ககக)

புட்பயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் ளஎகஉ.

---

# சடாசுரன்வதைச் சருக்கம்

அழுதும்வாண்முறுவலரும்பியுங்களித்துமாடியும்பாடியுமகிழ்ந்துந்
தொழுதுமாதரித்தும்விழுந்துமேலெழுந்துந்துதித்திடத்தன்பதந்†தந்தான்
முழுதுமாயோங்குமுச்சுடராகிமூலமாய்ஞாலமாய்விண்ணா
யெழுதொணுமறைக்குமெட்டொணுவடிவத்தெம்பிரானும்பர்நாயகனே. (க)

இந்தநீள்வனத்தின்மன்னவரிவ்வாறின்பமுற்றிருந்தவந்நாளி
லந்தமாவனத்தின்சூழலிற்பயிலுமருந்தவமுனிவர்பலருந்
தந்திபெருமூவையாளியெண்கிவற்றாற்றுமிடருழந்துமெய்தளர்ந்து
வந்துமாமகிபர்க்கபயமென்றவர்வாழ்வனத்திடைப்புகுந்துமன்னினரால். (உ)

அருந்தவமுனிவரெனைப்பலரிவ்வாறபயமென்றழுங்குசொற்கேட்டுப்
பெருந்திறலரசனவர்பதம்வணங்கிப்பேசுகநுங்குறையென்னப்
பொருந்தியகொடியவிலங்கினூற்றமக்குப்புகுந்துளயாவையும்புகன்றே
வருந்தியதுயரந்தவிர்த்திநீயென்றார்மன்னனுமகத்துறைநேர்ந்தான். (ங)

மறத்துடன்றெழுந்துவணங்கிமுன்னின்றவாயுவின்மதலையைநோக்கித்
திறத்தகுமுனிவரிடுக்கணீபையச்சென்றுதீர்த்திடுகவென்றேவி
யறத்தினதுருவாயகண்டமும்புரக்குமாசனுங்கிருந்துழிவந்து
புறத்தொருநிருதன்புகுந்தவஞ்சனையும்புரிந்ததும்புகலலாமளவோ. (ச)

---

* சேய்தழற்பாவை என்றும் பாடம்.

† தருவான் என்றும் பாடம்.

தோளிரண்டினுநாடொறுமிரண்டந்தண்சுரும்பினைவிரும்பினன்சுமந்து
தாளிரண்டுடையதொருகருங்குன்றஞ்சரிப்பபோலகண்டமுஞ்சரிப்பான்
கோளிரண்டஞ்சிப்பிறையிரண்டகல்வான்குகையிடைப்புகுவதேபோல
வாளிரண்டன்னவெயிறிரண்டொளிகூர்வாணிலாவமுங்கியவாயான். (ரு)

முருக்கினுண்மலருங்கறுத்திடச்சிவக்குமொய்யழல்பெய்செழுங்கண்ண
னரக்கினுமுருக்கிக்கம்பிசெய்தென்னவயிர்பொலங்குஞ்சியன்வஞ்சத்
திருக்கினலறங்கள்யாவையுஞ்செகுக்குந்தீயவன்றீமையேபுரிந்து
தருக்கினலமரர்யாரையுஞ்செகுக்குஞ்சடாசுரனெனும்பெயர்ச்சமுக்கன். (சு)

அந்தணர்வடிவங்கொண்டிலங்கையில்வாழாதிவாளரக்கனைப்போலச்
செந்தழலளித்தமடமயிலிருந்தசிற்பவண்சாலையினெய்திக்
கொந்தவிழலங்கற்கொற்றவரறியாவகையொருகோண்மறைபிதற்றிப்
பைந்தொடிதனைக்கொண்டந்தரந்தன்னிற்பறந்தனன்பழியுணராதான். (எ)

அபயமென்றவளந்தரத்தின்மீதரற்றுமவ்வுரைகேட்டுமாத்திரிதன்
னுபயமைந்தரும்வார்சிலைகரத்தேந்தியுருத்தெழுந்துருமெனவோடி
யிபநிங்கிடமுன்வளைத்திடுங்கொற்றத்தியாளிபோலிருபுறஞ்சூழ்ந்து
கபமுகிலென்னமின்னுநம்பெயர்வான்றனக்கெதிர்நின்றிவைநவில்வார். (அ)

மறையவர்வடிவங்கொண்டுவந்தருளில்வஞ்சகநீவஞ்சனையாகப்
பிறர்பெருந்தாரம்வெளவியந்தரத்திற்பெயர்வதுபெருமையோபித்தா
நெறியலாநெறிசெய்துன்குலத்தொருபோர்நிருதன்முன்பட்டதுநினையாய்
முறையலாதியன்றுன்னுயிரினைமுடிக்குமுராணுடைத்தறுகண்மாமூர்க்கா. (கூ)

என்றிவ்வாறுரைத்துச்சரத்தின்மாமரியிருவரும்விரைவுடனேவக்
கன்றிவாளரக்கன்கனமெனவதிர்ந்துகண்சிவந்துருத்தெழுமெல்லை
யொன்றிவாழ்மறையோருந்துயரொழித்தாங்கொருநொடிப்பொழுதினின்மீளும்
வென்றிவாள்விமனுற்றதுநிருதன்வெகுள்வதும்விசும்பிடைக்கண்டான். (க0)

கண்டனனிரண்டுகண்களுங்கருத்துங்கனன்றுசெந்தீச்சுடர்காலக்
கொண்டவெஞ்சினத்தீக்கதுவியெண்டிசையுங்குலைகுலைந்துடன்வெருஉக்கொள்ள
வண்டமுங்குலுங்ககநகைத்தெதிர்ந்துரப்பியார்த்தனனமுன்றுதோள்கொட்டி
மண்டிமேனடந்தானுகாந்தகாலத்துமருத்தெனமருத்தின்மாமைந்தன். (கக)

பகன்விறலிடிம்பன்பண்பில்புண்டரீகனிவருயிர்பறித்தளகேச
னகரிடையரக்கர்யாரையுஞ்சோரநல்லுயிரொல்லையிற்செகுத்து
வகைபடமறவியுடனுறவாக்கியாணுலகளித்தனனின்ற
சிகைபுனதுயிருமிக்கணத்தளிப்பன்றெனப்புலக்கிழவனுக்கென்று. (கஉ)

நெடும்பணைப்பொருவின்மாமரமொன்றுநெறியிடைநேர்ந்ததங்கதனைப்
பிடுங்கினன்விசும்பிலெறிந்தவன்றன்னைப்பிளந்தனன்பிளந்தவப்பொழுதி
லடும்படைத்தடக்கையரக்கனுந்திருகியணங்கைவிட்டக்கணத்தழன்று
படும்பணைக்குன்றமொன்றுவேரோடும்பறித்தவன்மேற்படவெறிந்தான். (கங)

விட்டகுன்றினைத்தன்மேற்படாவண்ணம்விசும்பிடைப்பொடிபடக்கதையாற்
றெட்டனன்பின்னும்விசும்பினின்றவன்றன்றோளிணையொசிதரத்தாவிக்
கட்டினன்குறங்கைக்குறங்கினால்வீசிக்கம்பமுற்றகிலமுங்கலங்கக்
கிட்டினன்றலத்தின்மிசையடலரக்கன்கீழ்ப்படமேற்படவிழுந்தான். (௧௪)

முன்னம்வாளெயிற்றோரரக்கனைவெள்ளிமால்வரைமுனிந்ததென்றதற்குப்
பொன்னின்மால்வரையோரரக்கனைத்தானும்புவிப்படுத்தரைப்பதேபோலக்
கன்னம்வாய்நெரியக்கரங்களான்மயக்கிக்கழுத்தையும்புறத்தினிற்றிருப்பித்
துன்னுதோளிணையுந்தாளும்வன்னெஞ்சுஞ்சுழிதரத்தாளினாற்றுகைத்தான். (௧௫)

விழுந்தவாளரக்கன்றருக்குநெஞ்சொடிந்துவெருண்டிவன்றனைத்தள்ளிமீண்டு
மெழுந்துதோள்கொட்டியார்த்தழன்றுருமேறெனக்கொதித்திடுதலுவீம
னெழுந்தவெவ்விரலாற்பிடித்தவனகலத்தடிகொடுமிதித்துவெண்பிறையின்
கொழுந்துபோலெயிற்றோரிரண்டையுங்கஞ்சன்குஞ்சரமெனப்பிடுங்கினனால். (௧௬)

புலவுகால்*வயிரவாளெயிறிரண்டுமுதலொடும்போனவாணிருத
னிலவிலாநிசியுமின்னிலாவிடிகொணீலமாமுகிலையுநிகர்த்தான்
குலவுதோள்வாயுகுமரன்மேன்மீளக்கொதித்தெழுந்திருகரங்கொண்டு
மலையின்மேலுருமுறநெனமற்றவன்றன்மார்பகஞ்சுழிதரப்புடைத்தான். (௧௭)

முட்டியால்வஞ்சமூர்க்கனுஞ்சமரமொய்ம்பனுமுறைமுறையாக
மட்டியேமுதலாவுள்ளமற்றொழிலின்வல்லனவல்லனபுரிந்து
கட்டியேகுறங்குகுறங்குடன்பகைப்பக்கரங்கரத்தொடுநனிபிணங்க
வொட்டியேமுடுகியொருவருக்கொருவருரத்துடன்மோதினருரவோர். (௧௮)

முருக்கிவெஞ்சமரமிவ்வகைவெம்போர்மெய்ப்பனீடியோர்முழந்தாளா
லரக்கனையகலத்தழுக்கியிட்டவன்றனவயவமியாவையுமொன்றாச்
சுருக்கியந்தரத்திற்சுழற்றினனெறிந்தான்றொடுகழலிராகவன்றம்பி
குரக்குநாயகன்முன்விரலினாற்றெறித்தகுன்றெனச்சிந்திவீழ்ந்திடவே. (௧௯)

எறிந்தவாளரக்கன்விசும்பினதெல்லையெவ்வளவவ்வளவும்போய்
மறிந்தமால்வரைபோன்மீளவும்புவிமேன்மாசுணநடுங்குறவீழ்ந்து
செறிந்தபேருடலுமாவியுஞ்சிந்தத்தென்புலத்திமைப்பினிற்சென்றா
னறந்துறந்தென்றுமடாதனசெய்தாலார்கொலோபடாதனபடாதார். (௨௰)

வேறு.

வாளரவுமண்டமிழும்வாண்மதியும்வஞ்சக்
கோளுழுவைகொள்ளவிடார்கொண்டுகுலைகுலையா
நாள்வலியினுய்ந்தமடநவ்வியுநிகர்த்தாள்
காளவிடமுண்†டமுதடக்குமிருகண்ணாள். (௨௧)

* வாயின் வாளெயிறு என்றும் பாடம்.

† அமுதளிக்குமென்றும் பாடம்.

அடாதுசெய்சடாசுரனதாவியையுமம்பொற்
படாமுலைகடாமுடையபைந்தொடியையும்போய்த்
தடாவமர்விடாதுடையதம்பியரையுங்கொண்
டிடாவிறல்கொண்மாருதியிருக்கும்வனமுற்றான். (௨௨)

உற்றபடிதம்முனிருதாடொழுதுரைத்தான்
மற்றவனுமங்குறையுமாமுனிவரோடுங்
கொற்றமிகுதம்பியரொடுங்குழுமியன்றே
நற்றபதிநாரணனதாச்சிரமநண்ணி. (௨௩)

அங்கவன்மலர்ப்பதம்வணங்கியருள்பெற்றுக்
கங்கைவளநாடர்கலைதேர்முனிவரோடுந்
தங்கினர்கள்சிற்சில்பகறங்கியபினப்பாற்
சிங்கமெனவெண்ணில்வரைசேர்நெறிகள்சென்றார். (௨௪)

வெணில்வரைமார்பரிவையோர்புகழுமெட்டுக்
கோணுடையமாமுனிவணங்குறுகியன்னான்
மாணுடைமலர்ப்பதம்வணங்கினர்துதித்தார்
தாணுவனையானுமவர்தம்மையெதிர்கொண்டான். (௨௫)

அன்பொடொருநாளெனவனந்தநெடுநாளங்
கின்பமொடிருந்தனர்களெக்கதையுங்கேட்டாண்
டொன்பதுகழித்தனர்களிவ்வகையொருங்கே
பின்பவணிகழ்ந்ததொருபெற்றியுரைசெய்வாம். (௨௬)

சடாசுரன்வதைச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—௧௭௬௮.

---

## மணிமான்வதைச்சருக்கம்.



அங்கிவரமர்ந்துறையுநாளிலணியோடும்
பொங்கியொருமாநதிபுதுப்புனல்வரப்போய்
மங்கைமுனிமங்கையர்கடங்களொடுவாசப்
பங்கயநெடுந்துறைவிரும்பினள்படிந்தாள். (௧)

அப்புனலிலார்தருமணங்கமழவந்தண்
மெய்ப்பதுமநாண்மலர்மிதந்துவரமீதே
மைப்பதுமவாள்விழிமடந்தையதுகாணாக்
கைப்பதுமநாண்மலருறக்கடிதெடுத்தாள். (௨)

எடுத்தமலர்கைக்கொடொரிமைப்பின்மயிலன்னா
ளடுத்துவயமாருதியையம்மலரவன்கைக்
கொடுத்திம்மலரெங்குளதுகூறுகெனவமரிற்
றொடுத்தவயவாகைபுனைதோன்றலிவைசொல்வான், (௩)

முன்புமுன் மலர்க்குழறனக்கிமலர்முன்பா
லன்புடனியக்கர்பதிநின் றமருள்செய்தே
னின்புறவிமைப்பொழுதினின் றமிதளிப்பேன்
றன்புறறழற்கடவுடந்தவொருதோகாய். (௪)

இந்தமலரிந்திரபுரத்தெனினுமின் றுன்
னந்தமில்கருங்குழறனக்கருள்கிலேனேன்
முந்தரவுயர்த்தவன்முதற்பகைமுடிக்கு
மைந்துடையவன்றெனதுவாருகிரியென்றான். (௫)

என்றினையவாசகமுரைத்திகலினென்றும்
வென்றிதருதண்டுசிலைகொண்டுவிறலோடுந்
தன்றுணைவரொன்றுமுணராதபடிதானே
சென்றனனிடிம்பனையடுந்திறலின்மிக்கான். (௬)

குன்றமொரிரண்டவையெனக்குலவுதோளான்
மன்றன்மலர்கொண்டுவருமாநதியின்வழியே
சென்றுபலயோசனைகடுங்களொடுநாளு
மென்றும்வலம்வந்தருளிரத்நகிரியெய்தி. (௭)

மாகதமணிப்பணிசெய்மாளிகைகளொருசா
ரரிமணியழுத்தியனவாலயமதொருசா
ரெரிமணியழுத்தியனவில்லின்விதமொருசார்
தருணமணிமுத்தினியலுஞ்சதனமொருசார். (அ)

கின்னரர்பயிற்றுமெழுகீதமெழுமொருசார்
மின்னனையபாவையரும்விஞ்சையருமொருசா
ரன்னநடைமங்கையருமாரணமுமொருசார்
மன்னுமலியக்கருமடந்தையருமொருசார். (௯)

சூலுடையமந்தியயர்வுற்றதுயர்தீரக்
காலுடைநெடுங்கடுவன்வார்கழைநறைத்தேன்
மாலைவரிவண்டுரியமோதிவழையிலையிற்
கோலியதன்வாயிடைகொடுத்திடுவதொருசார். (௧0)

கடக்களுழிபாய்மதகதக்களிறுமந்தண்
மடப்பிடிகளுந்தமின்மணந்திடுவதொருசா
ரடர்த்தறுகுமாளியுமதிர்ந்துமுழைதோறும்
புடைத்தெதிர்மலைந்துமிகுபோர்புரிவதொருசார். (௧௧)

தண்டரளமாதிநவரத்நவொளிதானே
யெண்டிசைவிளக்கும்வரையின்புதுமையெல்லாங்
கண்டுவகைகொண்டுநனிகண்ணிணைகளித்தான்
புண்டரிகவாணிருதனைப்பொருதழித்தான். (௧௨)

அக்கிரியினின்றுமிழிவுற்றள்வில்செல்வ
மிக்கவளகேசனகர்வெய்தின்விரைவெய்தித்
தொக்கமணிவாயிலொருநாலுமொருதானே
புக்குவடமேற்றிசையினின்றிதுபுரிந்தான். (கஈ)

வேறு.

சீர்த்தாரைகளுதிரத்திசைமருவுங்கரிசிதறக்
கார்த்தாரைகள்கற்றூரைகளுருமேறுடுகக்க
வார்த்தாழ்கடலுலையக்கதிர்மணிவெள்வளைவாய்வைத்
தார்த்தானுகலந்தத்தெழுமடன்மாருதமனையான். (கச)

அந்தத்தமரஞ்சென்றயாளகாபுரியுறைவோர்
சிந்தைத்துயருறமற்றவர்செவியிற்செறிவுறலு
மிந்தத்தொனிபுரிவானிவனெவனோவெனவெவரு
* முந்திக்கரிபரிதேரிவைகொண்டேயுடன்மொய்த்தார். (கரு)

அவ்வேலையினொருவிஞ்சையனஞ்சாவலிநெஞ்சன்
வெவ்வேலையின்மிகவோதைசெய்மீளிக்கெதிர்செல்லாக்
கைவேலினனிவனுமெனக்கண்டான்வெருக்கொண்டான்
வைவேனிருதரில்வஞ்சமுமாமாயையும்வல்லான். (கசு)

இம்மானவனெழில்கூர்ரதிபதியைப்பொருமெரிகட்
கைம்மானவனருளுங்களிமயிலோனெனமுதனுண்
மைம்மான்விழிமொழியப்பொழில்வந்தோனெனக்கருதா
விம்மாநமர்க்குரையாடுதுமெனவெய்தினின்மீண்டான். (கஎ)

மேனுளொருமலர்காரணம்விறல்வாணிருதரைமேல்
வானுடர்தமுலகத்துடன்மறலிக்கிடுமறவோ
னுமுனிவினன்மீளவுமணுகுற்றனனென்னச்
சேனைபதிமணிமானுழைவந்தேயுரைசெய்தான். (கஅ)

அவன்வந்திதுபகாரதமுனதிவேகமொடமுலாச்
சிவனண்பனதுயிர்நண்பனும்விழிசெந்தழல்பொழியப்
பவனன்றருசிறுமானுடனவனேபடிமுதலாம்
புவனந்தொழுபெருமானகரிடைவந்திவைபுரிவான். (கக)

தும்பிக்குலமிரதத்தொகைதுரகத்திரள்காலாள்
பம்பிப்பணிவிதமோவிட்டப்பணியோவிடநடவா
நம்பிக்கினியுரையாடலநாமேயவனுடலங்
கம்பித்திடப்பொருதாவியுங்கவர்வோமெனக்கழறு. (உ0)

பண்ணார்படைநஞ்சேனையின்பரவைக்கதிபதியா
மெண்ணாயிரமியக்கேசருமிவன்மேலெழுகென்னத்
தண்ணார்மதிக்கவிகைத்திறற்சாலேந்திரன்முதலோர்
விண்ணுடரும்வெருவச்செருப்புரிவான்விரைவுற்றார். (உக)

---

* முந்தக்கரிபரிதேரிவைமேல்கொண்டுடன்மொய்த்தார் என்றும் பாடம்.

தாமப்புரிசையின்வாயிலெழுந்தானையில்வெள்ள
நேமிக்கிரிநெரியப்புரிநெடுவெள்ளநிகர்ப்பத்
தூமக்கனல்சொரிகண்ணினரெண்ணுயிரர்தொலையாச்
சேமக்கவசியர்வீமனைத்திரையாழியிற்சூழ்ந்தார். (உஉ)

உதிக்குஞ்சுடரோராயிரமுருக்கொண்டெனவொளிகூர்
விதிக்குஞ்சமர்தொலையாவிறல்விச்சாதரவெள்ளக்
கொதிக்குங்கடலிடைநின்றிடுகுமரன்குரைகடன்முன்
மதிக்கும்படிநெடுமாவிடுமாமந்தரமொத்தான். (உ௩)

ஊழ்வந்துதன்னெதிருந்தலுமுயர்வானுலகுறுவான்
சூழ்வந்தபெருஞ்சேனையைத்தொலையா*வமர்பொருவான்
காழ்வந்தகதாபாணியுங்காணார்முனைக்கென்றும்
வீழ்வந்தகொடுஞ்சாயகம்வின்னாணில்விசித்தான். (உ௪)

அக்காலையில்விறலோனிலையறிவானுயரறிவாற்
றக்கார்புகழ்சாலேந்திரன்றன்சேனையைத்தகையாக்
கைக்கார்முகவயமாருதிதிருமுன்கடிதோடிப்
புககாவொருதேர்மேனனணியிவைநின்றுபுகன்றான். (உ௫)

சிவனேதிசைமுகனேவதிர்திரையாழியிற்றுயில்கூர்
பவனேபருவரைமார்புறப்பகிருஞ்சுடர்வடிவே
லவனேதிறனரவாகனனளகாபுரிவருவோ
னெவனேவுனதுயிர்சிந்துமுன்யார்நீபுரையென்றான். (உ௬)

என்னவ்வவனுரையாடலுமிவனின்புறநகையா
முன்னேயொருமலர்காரணமுனைவோருயிரெல்லாம்
பொன்னுடர்தமுலகுய்த்திடுபுகழோனிகலடுபோர்
மன்னுகவமதியாவிறல்வயமாருதியென்றான். (உ௭)

மருவீசுபொலந்தாமரைமலரின்னபுமொருகாற்
றருவீரெனினுமதாருயிர்யானுந்தருகுவனாற்
பொருவீரெனில்யமனார்பதிபுகுவீரினியென்றா
னொருவீரருமுவமைக்கெதிரில்லாவிறலுரவோன். (உ௮)

வேறு.

என்றுவயமாருதியிசைத்தமொழிகேளா
வென்றிதிகழ்வாகைபுனைவிஞ்சையர்பிரானுங்
குன்றனையதோளிணைகுலுங்கநகைசெய்யாக்
கன்றினன்வெகுண்டுகனல்காலுமிருகண்ணான். (உ௯)

தேனிடறுவாசமிகுதெய்வமலரென்னே
மானுடர்கள்சூடவருவார்கண்மதியற்றோய்
கானுடைய†வாழ்க்கைபுரிநின்னுயிர்கணத்தென்
னூனிடறுவாளிகடமக்குணவளிப்பேன். (௩0)

* அவர்புரிபோர்க் காழ்வந்த என்றும் பாடம்.

† வாகைபுரியென்றும் பாடம்.

மற்றிவன்வெருண்டிவையுரைத்துவருசேனைக்
கொற்றவரைநின்றுநனிகூவியெதிரேவிச்
சுற்றுமிகல்வெம்படைகடூவியிகலோனைப்
பற்றுமின்விரைந்தினியெனப்பகரலுற்றான். (௩௧)

பற்றுமெனவந்தபடைவீரருயிரெல்லாங்
கொற்றமிகுவெங்கணைகுளிக்கும்வகைதொட்டே
செற்றமிகநின்றெதிர்சிரித்தனனுருத்தான்
பற்றலர்புரம்பொடிபடுத்தவனையன்னான். (௩௨)

இவ்வகைபொழிந்தவடிவாளியினியக்கர்
மெய்வழிசெழுங்குருதிவேலையிடைவீழ்ந்தா
ரவ்வளவில்விஞ்சையரநேகருதுகாணாக்
கைவரிவில்கொண்டவன்றிசைக்கணைதொடுத்தார். (௩௩)

தொடுத்தசரவார்சிலைதுணித்துநனிமேன்மேல்
விடுத்தபடையும்பொரவெகுண்டுமுனைவாய்வந்
தடுத்தவர்கடோளுமணிமார்புமிருதாளு
நடுத்தறியவெங்கணையுகைத்தனனகைத்தான். (௩௪)

மண்டுதிறல்விஞ்சையர்மடிந்தசெயல்யாவுங்
கண்டுசிலசாரணர்கறங்கனையதேர்மேற்
கொண்டுகடலென்னவுருமென்னநனிகொதியாத்
தண்டுகொடெதிர்ந்தனர்கடண்டதரனோடும். (௩௫)

வார்சிலையொழிந்துவிறன்மன்னுவயவாகைப்
போர்செய்கதைகொண்டெதிர்புகுந்துபொரலுற்றான்
பார்செய்பயனன்னநிருபற்கிளவல்பார்மேற்
கார்செயுருமேறுருமுடன்கனல்வதேபோல். (௩௬)

தண்டினொடுதண்டெதிர்தகர்ப்பவெழுபொறியு
மண்டுமுடியோடுமுடிமன்னவெழுபொறியுந்
திண்டிறல்வயப்பொருநர்செங்கணுமிழ்பொறியு
மண்டமுழுதும்பொதுளிமீதுபுகுமப்பால். (௩௭)

மட்டவிழலங்கன்மறவோனுடன்வயப்போர்
தட்டமர்புரிந்துதனுவுஞ்சிரமும்வேறுப்
பட்டவரெனைப்பலர்படாதவர்விடாதன்
றிட்டனர்புறந்திறலியக்கர்குலமெல்லாம். (௩௮)

தொடிக்கரமிழந்திருதுணைப்புயமிழந்தாங்
கடிப்பதமிழந்தவயவங்களடைவேபோ
யிடிக்குரலின்விஞ்சையரெதிர்ந்தயரவாங்கே
கொடிக்குடமிழந்தனர்மருத்துதவுகூற்றால். (௩௯)

அன்னநிலைகண்டடலரக்கரொடியக்கர்
பின்னருமெனைப்பலர்பிறங்கலைநிகர்க்குங்
கன்னமதமாவிரதகற்கியிகல்காலாண்
மன்னுதிறன்மானுடமடங்கலைவளைத்தார். (௪௦)

வளைத்துவயவெம்படைகள்வீசிமறிகடல்போ
லுளைத்தொருவர்போலெவருமுருமெனவுருத்துப்
புளைத்தரதமாபுரவிபோதகமிசைப்போய்
விளைத்தனர்பெருஞ்சமரம்விஞ்சையர்களெல்லாம். (௪௧)

தேரணியும்வெம்பொறியெனச்செறிபுகர்க்கைக்
காரணியும்வாயுநிகர்கற்கியணியும்போர்ப்
பேரணிகலன்றனிபிறங்குமணிமார்பன்
றாரணியெனத்தனதுதண்டுகொடுடைத்தான். (௪௨)

நெரிந்தனரதந்துனையுநேமியுடன்வேழஞ்
சரிந்தனநெடுங்குடரிரிந்துதலைதாள்போய்
முரிந்தனபெரும்புரவிவெள்ளமுனைதோறும்
விரிந்தனருராங்கடவுள்விஞ்சையர்கண்மன்றே. (௪௩)

மீளியொருதண்டுகொடுவிண்டெதிர்வெகுண்டோர்
மூளைநிணம்வாயுகமுருக்குதலுமொய்ம்பிற்
றாளுடைமருத்தெதிர்சரிக்கும்வகைபெய்தும்
பூளைவனமொத்தனர்பொருநரெல்லாம். (௪௪)

சிந்துரமணிக்கொடிகொடோர்புரவிகாலா
ளந்தகபுரத்தணுகலுற்றவொழியப்போய்த்
தந்தமபுரத்தணுகலுற்றனசயப்போர்
மந்தரவரைப்புயனுதின்றனன்மறத்தால். (௪௫)

இருவரொருநீணெறியியங்கலர்தியங்கா
வரியுழுவைகண்டுடையுமானினமதேபோல்
வெருவியுளநொந்துதிறல்விஞ்சையர்களெல்லாம்
பொருவிலளகாபுரிபுகுந்தனர்விரைந்தே. (௪௬)

இஞ்சிமதில்வாயரணம்யாவுமிகல்புரிவா
னஞ்சினர்கள்விஞ்சையரடைந்தனர்களழகார்
மஞ்சனையமேனிமணிமான்முனமடைந்தே
துஞ்சினரொழிந்தவரவற்றொழுதுசொன்னார். (௪௭)

அந்நிலையுணர்ந்துமணிமானுமவிர்சோதிப்
பொன்னனசலமொத்துயர்புயத்துணைதுடிப்ப
மன்னுபுருவச்சிலைவளைத்துமழைமுகில்போன்
மின்னிலகநக்குருமெனத்தனிவெகுண்டான். (௪௮)

## வேறு.

வானிலவுணரைமோதிமுனைதொறும்வாகைபுனைமணிமானுமச்
சேனைமுதல்வரைவேகமுறநனிசீறியுரைபலகூறிறு
ஞனிலனதுடல்வீழவமரிடையாவிகவர்தாவஞ்சிநந்
தானையரியெதிரேகுகரியினமாகிவெருவொடுசாய்வதே. (௪கூ)

என்றுதனதெதிர்நின்றவரையிகழ்வுற்றுமொழிபலசொற்றமற்
குன்றமெனவமர்வென்றிதருவதொர்கும்பமதகரிமேல்கொளா
வொன்றுபடவுலகின்றுபொடிபடவுந்துகரிரதமுந்தெனச்
சென்றுபுடைவருகின்றபடையொடுதெண்டதரனெதிர்மண்டினன். (௫0)

மண்டியெதிர்வருகின்றபொருநரைவன்புபெறுபுயமுன்பனுங்
கண்டுமுகிழ்நகைகொண்டுதனதிருகண்கள்கனலுகநின்றபி
னெண்டிசையும்வளைகின்றவிமையவரென்றிஞெளிதிகழ்குன்றினீர்
மொண்டமுகிலெனவொன்றுபடமிசைமூசியெறிபடைவீசவே. (௫க)

வீசுபடையொருகோடிவிசைபடவோடிமிசைவரவீமனும்
பாசதரனெதிர்நீலமயிலொருபாகனிகரெனவேகியா
வாசைதொறுமுகில்போலவளைபவராகமிருபிளவாவுளங்
கூசியலமருமாறுதருவளர்கோடுகொடுநனிசாடினன். (௫உ)

ஆயுமொழுதளகாதிபதியுயிராயவணிமணிமான்விறற்
சேயமெனவவன்மீது பலபடைசிந்தியமர்செய்துமுந்தினன்
வாயுகுமரனும்வேகமுடனவன்மார்புகிழிதரமோதினன்
காயபலமொடுதாயமுறவொருகாயமிருகடகக்கையால். (௫௩)

முன்புபெறுபுயமொய்ம்பனவன்மருமத்தின்விசைபடமொத்தலு
மென்புதசைநிணமிந்திரியம்வலியென்பவைநிலைசிந்தியே
துன்பமுறமனநொந்துதளர்வொடுதுத்திமணியுரகத்தின்மேல்
வன்பினுடனுருமுற்றதெனவொளிமட்கிவெருவுடனுட்கினன். (௫௪)

## வேறு.

வஞ்சனைபுரியுமாமாயப்போர்க்கலாற்
றுஞ்சலனிவனெனத்துணிந்துசூழ்ச்சியா
னஞ்செனவெகுண்டுதன்னபனந்தீயுக
விஞ்சையன்கதுமெனவிசும்பிலேறினன். (௫௫)

புகையொடுபரந்துகால்பொங்கமங்குல்கள்
வகைபடவெழுந்துமாமாரிசிந்திடச்
சிகையனல்விண்ணெலாஞ்செருக்கமண்ணெலாந்
துகள்படத்திசையெலாஞ்சூழ்ந்துதோன்றினன். (௫௬)

அப்பொழுதினிலிகலரிப்பதாகனு
முப்புரஞ்சுடுமுகினிறத்துவாளிமுன்
னொப்பறவருளுடனுதவுஞ்சோரிவாய்
வைப்பெரும்பகழியொன்றேவிமாற்றினான். (௫௭)

அசைமணிக்கொடிகொடோருக்கன்றன்னெதிர்
நிசியெனப்பறந்தது நீலமேனியான்
வசையறக்குரிசிலுக்கருளும்வாளியாற்
றிசையுறப்பரந்தமர்செய்தமாயையே. (௫௮)

விறல்புனைவீமனும்விஞ்சைவேந்தனு
நிறைபுவிவிசும்பினின்றுபோர்செய்தா
ரெறுழ்வலியிராகவற்கிளையவார்சிலைச்
சிறுவனுமிந்திரசித்துமென்னவே. (௫௯)

அந்தவஞ்சனையெலாமகன்றுபோனபின்
விந்தமொத்துயர்ந்ததோள்வீமசேனன்மேற்
சந்திரன்மிசைவருதழலாரவெனச்
சுந்தரன்வெருண்டொருசூலம்வீசினான். (௬0)

சூலமுந்தனதுமேற்சூலமேவினான்
கோலமும்பொடிபடக்கொதித்துமீளியு
மூலபங்கயமறைமுனிவன்வாளியை
யாலமுந்துளிர்வுறவழலவீசினான். (௬௧)

பிரமன்வெஞ்சரம்வலிபெற்றவிஞ்சையன்
மருமமெங்கணுஞ்செறிந்துருவமாழ்கியே
யுருமின்வெங்குரலுடனொடுங்கிமண்மிசைக்
கருமுகில்வீழ்ந்தெனக்கலங்கிவீழவே. (௬௨)

அந்தரனந்தரம்புகவனந்தரந்
தந்திரத்தலைவருந்தளர்ந்துசாய்ந்தன
ருந்தினர்கரிபரியிரதமூர்புக
முந்தினதமதுயிர்கொண்டுமுந்தினார். (௬௩)

விரிதிரையுவரிநீரென்னவெஞ்சினக்
கரிபரியாளெலாங்கலந்துகுத்தமெய்ச்
சுரிபெருங்குருதியின்சுழலியாற்றினின்
றரிமகனடலரிநாதஞ்செய்யவே. (௬௪)

வேறு.

இத்தலைவயவீமனிகல்பொருதிவணின்று
னத்தலையுயிர்போலுமனுசனையெதிர்காணான்
மொய்த்தலைதொறுமேறுமுழுமணிமூரல்சங்கஞ்
செய்த்தலைதுயிலுடன்றேவியையினவுற்றான். (௬௫)

மன்னவன்மொழிகேளாமான்மதர்விழிமானு
நன்னதிதனிலின்றோர்நறுமலரதுகாணு
வின்னமுமொருகானீயிம்மலர்கொணர்கென்றே
னன்னவன்விசைசென்றானளகைநன்னகரென்றாள். (சுசு)

மன்றல்செய்குழலாடன்வாசகமெனுநஞ்சாற்
பொன்றினனெனமன்னன்புலம்பியபொழுதன்பா
லொன்றியமுனிரோமனுரையெனுமமுதாலே
துன்றியதுனிதீராச்சோகமொடுரைசெய்வான். (சுஎ)

கூற்றுவனிகர்நாகக்கொடியவன்முதலாயோர்
நூற்றுவரையும்யானேநூறிவிண்ணுலகின்மே
லேற்றுமவ்வளவும்யானின்பயநுகரேனென்
றாற்றுதியுயிரையாவம்மொழிபழுதாமோ. (சுஅ)

துனைவருகடலாடைசூழ்வருமெழுபூவோ
நனைகெழுமொருபூவோநன்றெனநகைசெய்யா
வுனையொருவனையும்யானுளனெனிலொருவேனுக்
கனைவருமுளர்யானுயாருயிருளனம்மா. (சுகூ)

முன்செய்வெவ்வினையாலோமுடிவினல்வினையாலோ
மின்செய்தகழலானவ்விசயனுமகல்வுற்றான்
பொன்செய்தமுடியானும்போயினனினிநானிங்
கென்செய்வதெனமன்னன்முனியடியிணைவீழ்ந்தான். (எo)

அஞ்சலையுரவோனுமாருயிரழிவில்லான்
விஞ்சையரொடும்வெம்போர்விளைந்ததங்கொருகோடி
வஞ்சனைமணிமானம்மாருதிவிடுமம்பாற்
றுஞ்சினனவன்மேலுந்துனிவருமினிமாதோ. (எக)

இவன்மிசையிடையூறென்றெய்துறுவதன்முன்யா
னவநிதிகளினுதனன்னகருறவேண்டுங்
கவரெயிறுளபேழ்வாய்க்கடோற்கசன்வருமாறிங்
கவனிபநினையென்றானரசனுநினைவுற்றான். (எஉ)

புந்திசெய்தவன்முன்னம்புதல்வனுமொருதேர்மேல்
வந்தனன்விரைவோடும்வணங்கினனிருதாண்மே
லெந்தைசொலடிநாயேன்பணிவிடையெதுவென்றான்.
றந்தையுநிருதன்றன்றாதைதன்னிலைசொன்னான். (எங)

அக்கணமதுகேளாவவனவரையுங்கொண்
டிக்கணமிடையூறுமெழுமெழுமெழுமென்று
முக்கணனுயிர்நண்பன்வாழ்தருமுதூர்வாய்த்
திக்குறநெடுவானிற்சென்றனனொருதேர்மேல். (எச)

சென்றொருநொடிவேலைச்சிறுவனுமறவீம
னின்றமர்புரிவெம்போர்நிலமணுகுறுமுன்னம்
வென்றிகொளூரவோனும்வேந்தனையெதிர்கொள்ளா
மன்றல்கொண்மலர்தூவிவணங்கினனிருதாண்மேல். (எரு)

சதித்தனைசதிசெய்தாய்தம்பியுமலைவாளா
வதைத்தனைமணிமான்றன்மன்னுயிர்தனைமன்னோ
நிதித்தலைவனுநீடுஞ்சேனையுமினிநின்மேற்
கொதித்தெழுமுதனுளிற்கோபமுளதந்தோ. (எசு)

பொற்றொடிமொழியாலிப்போதொருபொருளாக்கிச்
செற்றனைசிவனன்பன்சேனையைநீயென்னாக்
கொற்றவனிளையான்மேற்கொதித்தனன்மொழிபோதங்
குற்றதையுரைசெய்வானோடினனொருதூதன். (எஎ)

அழுதறல்குதிபாயுங்கண்ணினனயிலம்பா
லுழுதுடன்முழுதெல்லாமுழனுடனுகுபுண்ணீர்
வழிதரமனமெல்லாமறுகுறவிறைபொற்றா
டொழுதனனியல்பெல்லாந்துணிவுறும்வகைசொன்னான். (எஅ)

வேறு.

அழுங்கினான்மன்னனல்லறிவுமாவியு
மழுங்கினான்வடிவமுமுடியும்வல்விடம்
விழுங்கினானெனநனிவெதுண்டுநெஞ்சுறப்
புழுங்கினானிவையிவைபுகறன்மேயினான். (எகூ)

ஒருவனாமானுடனேனைதமாகர்
வருவனும்விறன்மணிமானொடுஞ்சமர்
பொருவனுமவனுயிர்போனறவென்றிடர்
தருவனுமென்பெயர்தனதனாகுமாம். (அ0)

அடுப்பனுமளகையபறிவின்மானுடன்
றொடுப்பனும்பொருசாஞ்சூழ்ந்தசேனையைப்
படுப்பனுமதுகொடுபதுமந்தன்னைவந்
தெடுப்பனுமென்பெயரிராசராசனும். (அக)

இந்திரனல்லனுமீசனல்லனுஞ்
சந்திரனல்லனுந்தபனனல்லனும்
வந்தொருவலியிலாமானுடன்கொலாங்
கந்தருவரையெலாங்களத்தினூறுவான். (அஉ)

வென்றகோச்சித்தரும்விஞ்சைவேந்தரு
நின்றகின்னரரும்வாணிருதரும்புடை
துன்றுசாரணர்களுஞ்சூழ்பின்மொய்ம்பனை
யென்றுகொண்டெழுந்தனனியக்கர்தம்பிரான். (அங)

உருத்திரசேனனப்பொழுதுணர்ந்து தன்
கருத்தொடுதாதைபொற்கழல்வணங்கியே
மருத்தருள்பவன்வரலாறுமற்றவன்
றிருத்தகுதுணைவர்தஞ்செயலுங்கூறுவான். (அச)

எந்தைகேளிவனைமானுடனென்றெண்ணலை
முந்தைமுப்புரம்பொடி படுத்தமூர்த்திதன்
சிந்தையாலைவரிந்திரரைச்சென்மென
வந்தனர்நிலமகள்வருத்தமாற்றுவான். (அ௫)

தருமனென்பவனிவன்றமையன்றம்பியும்
வரிசிலைவிசயனென்றொருவன்மற்றவன்
புரிதிறலசுரரைப்பொருதங்கிந்திரன்
றிருவமருலகெலாந்திருத்திவைகினான். (அசு)

வேடமோமானுடம்வெகுண்டபோதலா
லாடவர்பெருமையையறியலாகுமோ
நாடியசிறுகுறளொன்றுநம்பகே
ணீடியமுகடுறநிமிர்ந்ததில்லையோ. (அஎ)

மற்றுளவரையெலாநடுங்கவார்பிறைக்
கற்றைபஞ்சடையவன்கயிலைமாக்கிரி
யுற்றுடனெடுத்தவனுயிரும்வாழ்க்கையுஞ்
செற்றவன்மனிதனோதேவனோவையா. (அஅ)

மட்டவிழ்தொடைமணிமாலையோர்முனி
யொட்டியவரிசிலைமனிதனாலுயிர்
பட்டழிகுவையெனப்பகர்ந்துசாபமன்
றிட்டதுமுணர்ந்தவற்கிரங்கலெந்தைநீ. (அகூ)

அருத்தியேதென்றவற்கருளிபையவிங்
கிருத்தியேல்வாழ்வுமின்னுயிருமெய்தலாந்
திருத்தியசேனையுநீயுஞ்சென்றுமே
லுருத்தியேலுறுபயனொன்றுமில்லையால். (கூ0)

என்றிவைதிருமகனியம்பியேத்தவு
நின்றிலனெனதுயிர்நேயநண்பனைக்
கொன்றவன்றன்னுயிர்கொள்வன்யானெனாச்
சென்றனன்புட்பகத்தேரின்மீதரோ. (கூக)

மண்ணெலாமிரதமுங்களிறும்வாசியும்
விண்ணெலாம்விமானமும்விபுதரீட்டமும்
பண்ணெலாமுரல்வனபணையின்குப்பையு
மெண்ணலாமாவதோவியக்கர்சேனையே. (கூஉ)

விண்டலமுறவருசேனைவேலையு
மண்டலமுறவெழுமகரவாரிபோ
லெண்டிசையுறப்பரந்தெழுந்தசேனையுங்
கண்டனன்கண்ணுறக்கருணைக்கண்ணனே. (௯௩)

உணங்கினனுடல்முமுணர்வுமாவியும்
பிணங்கினனிளைஞனைப்பேதைபங்கனை
டிணங்கினன்புகழெலாமேத்திநெஞ்சுற
வணங்கினன் மணிமுடிமன்னர்மன்னனே. (௯௪)

அனகனேயமலனேயளகைவேந்தனே
தனதனேசங்கரன்றன்சகாயனே
புனிதனேகுபேரனேபுலத்தியன்குல
செனிதனேசெல்வனேதேவதேவனே. (௯௫)

வெறுப்பதோவிளைந்ததுமிகையதாயினு
மறுப்பதோவென்மொழிமாறுகொண்டெதிர்
செறுப்பதோவிளையவர்செய்ததீமைகள்
பொறுப்பதேபெரும்புகழ்புனிதமூர்த்தியே. (௯௬)

எனவிவனிவைபகர்ந்திசையவேத்தனு
முனிவொடுவயிரமுமுராணுமாறியே
மனனுறமகிழ்ந்தெதிர்வந்துமார்புறத்
தனதனுந்தருமனைத்தழீஇக்கொண்டானரோ. (௯௭)

நிலத்தியறண்ணளிநிருபநீமதி
குலத்தியனுடன்வருகுமாரனாதலாற்
சலத்தியறருமுரண்டணிந்தென்பாலெனப்
புலத்தியன்மகன்மகன்புகன்றுபோற்றினன். (௯௮)

என்னகர்நின்னகரென்றுவேறிலை
நின்னகரிதுமுதனீங்கள்வாழ்வுறுந்
தொன்னகரெனதெனத்துணைவர்தம்மொடு
மன்னனைத்தன்னகர்கொண்டுமன்னினன். (௯௯)

திருத்தகுநகரியுஞ்சிறப்புஞ்செல்வமு
மருத்தகுகற்பகவனமும்வாவியுங்
குருத்தகுமணிகளின்குழாமுங்கோயிலுங்
கருத்துறமகிழ்ந்துகண்களிப்பக்காணவே. (௧௦௦)

காட்டினன்றன்மனக்கருணைவெள்ளநீ
ராட்டினனன்கலத்தமுதமன்புட
னூட்டினனுகந்துபசரித்துச்செங்கையா
னீட்டினனுடையநிதிகள்யாவுமே. (௧௦௧)

அத்தினபுரிதனக்கதிபநீவர
வித்தினமென்றவப்பயனிருந்தவா
நித்தனையெனதுயிர்நேயநண்பினு
லொத்தனையெனவிவையுரைசெய்தானரோ. (௧௱௨)

வேறு.

நெருநலிந்திரபுரத்திலிந்திரனும்யாமுநீடவையிருந்தபின்
புருநலங்* திகழும்விசயனென்னவவனொருவனெய்துதலுமவனையித்
திருநலம்புதியசெம்மல்யாவனெனமற்றவன்செயலும்வெற்றியுங்
குருகுலம்பெறுகுலேசனென்பதுவுநின்றவானவர்கள்கூறினார். (௧௱௩)

அந்தவிண்ணுலகினின்றுநின்றுணைவனமரர்சூழவாநாளையே
யிந்தமண்ணுலகுநீயும்வாழ்வுபெறவிந்திரன்றனுடனெய்துமா
லெந்தமண்ணுலகுநின்னதாகுமிடருற்றிரங்கலெனமகிழ்வினிற்
கந்தவண்ணமலருங்கொடுத்துவிடைநல்கினனளகைகாவலன். (௧௱௪)

ஐயநின்னையறியாமனின்னகரிலனுகினன்சிறுவனுதலிற்
செய்ததீமைகள்பொறுத்தியொன்றுநனிதிருவுளத்திடைகொளேலென
மொய்கொடாமமுடியுறவணங்கிமுடிமன்னர்மன்னனிளையோரொடு
மைதவழ்ந்துலவுமாடநீள்புரிசைஞாயில்வாயிறனிலெய்தினன். (௧௱௫)

மாசிலாதமுடிமன்னர்மன்னனுடன்வந்தமாமுனிவரர்க்கெலா
மேசிலாநெறியினெண்ணிரண்டுவகையாயபூசைகளியற்றியே
காசிலாமணியுமாடையுங்கலனுநல்கமல்கிவளர்செல்வனுக்
காசிகூறியுடனேதபோவனமடங்கினாவரடங்கவே. (௧௱௬)

குந்திமைந்தரொருநால்வரும்புதியகொடிமருங்குன்மடவல்லியுஞ்
சிந்தையன்புடையமுனியும்வாணிருதசேகரன்றனதுதேரின்மேற்
பந்திபந்திபதினாயிரம்பதின்மடங்குகூளிகள்பரிக்கவா
னுந்திமுன்பயிலுநந்திசேனன்வனமொருநொடிப்பொழுதிலெய்தினார். (௧௱௭)

எய்தியந்தமுனிசெய்பதாண்மலர்மனஞ்செய்தன்புடனிறைஞ்சியே
செய்தியாவுமவனுக்குநண்பொடுரைசெய்துசூழ்வரவிருந்தபின்
வெய்தின்வந்தடலரக்கர்நாயகன்விபத்தினுக்குதவியானதுங்
கொய்திலங்குவடிவாளினான்விறலும்யாவுமேன்மையொடுகூறினான். (௧௱௮)

வெங்கராவின்முழைவாய்புகுந்தலறிவேழமூலமெனவிரைவினிற்
பொங்கராவணைதுறந்துவந்தெதிர்புரந்தபுண்ணியனையொக்கவே
தங்கராபதநெருங்குதொங்கலணிதாமவேலடலரக்கநீ
யங்காரகமணியாரமார்பநினதையனுருயிரளித்தியே. (௧௱௯)

தொடைகொடுத்தளகைநாதனன்றுதவுதுகில்கொடுத்துமதிமுத்தவெண்
குடைகொடுத்துநவமணிகொடுத்தமரிலென்றும்வென்றிதருகொற்றவெம்
படைகொடுத்தடலரக்கனுக்குயர்பதங்கொடுத்துமிகுபரிவுடன்
விடைகொடுத்தனனனந்தரஞ்சமரவீரவாகைபுனைவேலினான். (௧௱௰)

---

* திகழு மதனராசனெனவொருவனெய்திடவுமவனை என்றும் பாடம்.

வணங்கியன்புடன்மகிழ்ந்து மன்னரைவலம்புரிந்துமனனஞ்செயா
நிணங்கமழ்ந்தொழுகிவழியவாளொபிறுநிலவெழும்புழைகொள்வாயினன்
றுணங்கைகொண்டலகைகோடிவானின்மிசைதுள்ளியூருமிரதத்தின்மே
லிணங்கிமீளவும்விநாழிகைப்பொழுதினில்விடிமபவனமெய்தினன். (௧௧௧)

வேறு.

அப்பொழுது வானுலகமதனினிடைநின்று
மைப்பொலியுமேனிவிசயன்வனமடைந்தான
செப்பரியவைவர்களுந்தேவியுடனேயவ்
வொப்பரியதெய்வவனமொன்றினருறைந்தார். ௧௧௨

மணிமான்வதைச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் ௧௭௫0.

# துருவாசமுனிச் சருக்கம்.



சாபத்தானுஞ்சாபமொழிதன்னல்வளருந்தவத்தானுங்
கோபத்தானும்பேர்படைத்தகொடியமுனிவன்றுருவாசன்
றீபத்தான்மெய்வகுத்தனையான்றிகழ்பன்முனிவர்புடைசூழ
வாபத்தால்வந்தடைந்தவர்போலடைந்தானந்தவடவியின்வாய். (௧)

அருமாதவப்பேறனதெமக்கம்மாவென்னச்செம்மாந்து
குருமாமாபோரைவருந்தங்குஞ்சித்தலைமேலடிவைத்தெம்
பெருமானிங்கேயெழுந்தருளப்பெற்றேமென்னப்பெரிதுவந்த
கருமாமுனியைப்பூசித்தாரவனும்புகன்றானசியரோ. (௨)

இட்டதவிசின்மிசையிருத்தியெரிகான்வந்தவினைப்பாற்றித்
தொட்டகழற்கானுதிட்டிரன்கைதொழுது திப்பத்துருவாசன்
வட்டமணித்தேரவனுச்சவானத்தடைந்தான்யாமருந்தப்
பட்டவுணவிங்கமுதசெயப்பருவமிதுவென்றுரைசெய்தான். (௩)

மூத்தோன்குளித்துவருகவெனமுனிவருடனம்முனிதடத்துப்
போய்த்தோய்வதற்காங்கெழுந்தருளப்புரசைக்களிற்றுமுரசுயர்த்தோன்
வாய்த்தோன்வரவுக்கென்புரிவோமதிப்பீரெனத்தன்றம்பியர்க்கும்
வேய்த்தோள்வேள்விமடந்தைக்குமுரைத்தாங்கவரைவினவினால். (௪)

மேவாருரைக்கவிவன்வந்ததல்லாற்பிறிதுவேறில்லை
யாவாவிதற்கின்றென்செய்வோமாமறுகாமெழுந்து
கோவானவனும்பலபடையுங்குன்றச்சென்றுபொருதிமைப்பிற்
சாவாநிற்பதுறுதியினியென்றான்வன்றுட்சமீரணியே. (௫)

கருதிக்கடவுளனையானைச்சுனைநீர்படிந்துவரச்சொல்லிக்
கருதிப்பிறநாம்புரியுமதுகடனேவென்றான்கழல்விசயன்
மருதிற்கிடைபோமவன்விரைந்துவருமாறுழைமினெனமொழிந்தா
னொருதிக்கினும்வெம்புரியேற்றக்கொத்தோரில்லாவுரவோனே. (௬)

பாதேயாகவிந்தவிபத்தேகும்பொழுதைக்கிசையளிக
டேதேயென்னும்பசுந்துளபத்திருமாறன்னைச்சிந்தியுமிப்
போதேவருமிங்கவன்வந்தாற்போமிக்கவலையெனப்புகன்றான்
சாதேவனுமங்கவனிசைத்தசொல்லுக்கிசைந்தான்றருமனுமே. (எ)

என்னேயென்னேயாதவன்வானிடையுங்கடந்தான்முனிவன்வரு
முன்னேநுகர்ந்தாஞ்சாகபலமூலம்பலபேர்முனிவரொடுங்
கொன்னேமுனியுமுனிக்கினியென்கொல்லோபுரிவதெனநின்ற
மின்னேரிடையாணடுநடுங்கிவிளைவதென்னோவெனப்பயந்தாள். (அ)

தப்போதாமற்றம்பியர்க்குந்தருமக்கொடிக்குமிதமாக
வப்போதுணரும்படியுணர்ந்தானசோதைமகனையறத்தின்மக
னெப்போதியாவரெவ்விடத்திலெம்மைநினைப்பாரெனநின்ற
வொப்போதரியானுதிட்டிரன்றனுழைப்போதிடைவந்துதித்தானே. (கூ)

திருக்கண்கருணைபொழியவருந்திருமாலவரைத்தேற்றிமுத
லருக்கனுதவும்பாண்டத்தினன்னமுளதோவெனவினவ
முருக்கினிதழைக்கருக்குவிக்குமுறுவற்செவ்வாய்த்திரௌபதியு
மிருக்குமுறையோரன்னங்கண்டெடுத்தாள்கொடுத்தாளிறைவன்கை. (க0)

அந்தவன்னஞ்சதுர்மறையுமன்னமாகியருள்செய்தோன்
முந்தவுலகமுழுதுண்டமுளரியிதழினிடைவைத்தான்
வந்துசுனையில்வந்தனைசெய்மறையோரெவரும்வாரிதிமுன்
றந்தவமுதுண்டவர்போலத்தாபந்தணிந்துதண்ணென்றார். (கக)

உதரங்குளிர்ந்துவடிவுகுளிர்ந்துள்ளங்குளிர்ந்துமறைநாறு
மதரங்குளிர்ந்துகண்குளிர்ந்தாங்கருமாமுனிவனதிசயித்து
மதராஞ்சனக்கட்டிருவாழுமார்போன்மாயாவல்லபத்தா
லிதரங்கடந்தானுதிட்டிரனென்றிவன்பான்மீண்டுமெய்தினனால். (கஉ)

உண்டோமுண்டோமும்பருக்குமுதவாவோதக்கடலமுதங்
கண்டோமுன்னாளெவ்வுலகுங்காணுமுருந்தன்கழலிணைகள்
வண்டோலிடுந்தார்ப்போறத்திமகனேயுன்னையாசென்று
கொண்டோரல்லாலெதிர்ந்தோரில்யாரேவாழ்வார்குவலயத்தில். (கங)

நென்னற்புயங்ககேதனன்றன்னிலயந்தன்னிற்றீம்பாலுங்
கன்னற்கட்டிமுதற்பலதீங்கனிநெய்யுடனேயினிதருந்தி
யின்னற்பசிதீர்பொழுதத்திலென்பால்வாங்கொளெனவுரைப்ப
முன்னர்ப்பலவுமுரையாமலொன்றேமொழிந்தான்முடிவேந்தன். (கச)

எம்மிற்றுய்த்தவோதனம்போலெம்மோடிகலிவனம்புகுந்தோர்
தம்மிற்சென்றுநாளைநுகரிதுவேயெனக்குத்தரும்வாமென்
றும்மிற்செல்வமுடையவன்போலுரைத்தானதனாலுயர்ந்தோர்க
டம்மிற்சிறந்தோய்வந்தனம்யாமென்றானந்தத்தவமுனியே. (கரு)

பரங்கொண்டுலகமுழுது மிசைபரப்பிப்புரப்பான்பாண்டுவெனு
மூரங்கொண்டுயர்ந்தோனளித்தருளுமரவோய்நீயிங்குனக்கான
வரங்கொண்டிடுகவெனமுனியைவணங்கிப்பகைத்தோர்மாற்றங்க
டிரங்*கொண்டொன்றுங்கொள்ளாதியென்றான்வளையாச்செங்கோலான். (கசு)

அன்னோன்மொழிகேட்டம்முனியுமடைந்தான்றன்போருந்தவக்கான்
முன்னோனுமருந்தனுந்தன்முந்நீர்த்துவரைநகர்புக்கான்
பின்னோர்வணங்கப்போழலிற்பிறந்தான்மகிழப்பொருட்குத்
தன்னோடொருவர்நிகரில்லானிருந்தானந்தத்தனிவனத்தே. (கஎ)

துருவாசமுனிச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—கஅசுஎ.

# பழம்பொருந்துசருக்கம்.



அந்நெடுவனத்திற்சின்னாளகன்றபினமித்திரன்பே
ரென்னுமாமுனிவற்கென்றேயாவருமருகுசெல்லா
நன்னலமிகுத்தநெல்லிநறுங்கனியொன்றுகண்டாள்
கன்னலும்புளிக்குமின்சொற்†கயிரவங்கருகும்வாயாள். (க)

இக்கனியெனக்குநீநல்கென்றுவில்லெடுத்துக்கொண்ட
மைக்கனிக்களவுமானும்வடிவுடைவிசயனோடு
மெய்க்கனிவுடைமைதோன்றவிளம்பினாள்வீசுதென்றன்
முக்கனிகமழுஞ்சோலைமுகிறவழ்நாடன்பாவை. (உ)

சோமகர்க்கரசன்பாவை‡சொல்லுமுன்வில்லுவாங்கி
மாமுனிக்குணவாய்நின்றமதுராவாமலகந்தன்னை
யேமுறைதொடுத்துவீழ்த்தியிதனுமாங்கட்கண்டோ
ரேமுறக்காணிலிப்போதென்படுமிறுத்தோனென்றார். (௩)

கண்டவம்முனிவர்சொல்லக்கடவுளர்கோமான்மைந்தன்
கொண்டவக்கனியையுத்தகொற்றவன்றிருமுன்வைத்து
மண்டமுற்பாவைசொல்லான்மதியிலேனெய்தேனென்றான்
றிண்டிறற்றேவர்க்காகத்திதிமைந்தராவிகொண்டான். (ச)

காடுறைவாழ்க்கையெய்திக்காய்கனிமூலந்தின்று
நீடுறுகாலம்போக்கிநீங்கலாதிருக்குநம்மை
நாடொறுமிடையூறன்றிநண்ணுவதில்லையாயி
னேடுறுதாராய்செய்வதென்கொலென்றியம்பினானே. (ரு)

அவ்வுரைவீமன்கேட்டாங்கமித்திரன்வந்தபோதே
யிவ்வுரைகேட்கினம்மையெரியெழச்சபித்தறிண்ணம்
வெவ்வுரையுரையாமுன்னமெய்ம்முனிதன்னைப்போற்றிச்
செவ்வுரைகூறினம்மைச்சீறுமோசீறல்செய்யான். (சு)

* கொண்டென்றுங்கொளாதி என்றும் பாடம்.
† கயிரவமனையவாயாள் என்றும் பாடம்.
‡ சொல்லுமுனமித்திரப்பேர் என்றும் பாடம்.

பொறுத்திடுமேவிடாவைம்புலத்தினுதலாலே
மறுத்திடானையநின்றன்மாசிலாவாய்மையென்ன
நிறுத்திடுந்தலையோடொப்பானினைவினுக்கிசையத்தெவ்வைச்
செறுத்திடுவிசயன்மீளச்செப்பினன்செப்பமாக. (எ)

செய்தவனினிதுமாந்தத்தேவர்நாளொன்றுக்கொன்றுந்
தைதவமில்லாநெல்லிக்கனியினைக்கருதுற்ற
*வெய்தவன்றன்னையன்றியாரையுமிடான்வெஞ்சாப
மெய்தவறுதசொல்லாய்வெருவுதலென்கொலென்றான். (அ)

வேந்தனம்மாற்றங்கேட்டுவில்வலான்றன்னைநோக்கி
யேந்திழைசொல்லவோராதினியவிக்கனியின்றீர்ந்தாய்
மாந்தரின்மடங்கலொப்பாய்வருத்தநீயுழக்கயாமோ
பேர்ந்துபோய்ப்பிழைப்போமென்றான்பிதாவினுங்கருணைமிக்கான். (௯)

அம்முனிவந்தவாபத்ததனினுங்கொடிதிக்கானத்
திம்முனியுணவுகொண்டதெனவெரீஇநுதலன்றானும்
வெம்முனிவகற்றிநாமுமேம்படவேண்டினின்னந்
தெம்முனிதிகிரியானைச்சிந்தனைசெய்தியென்றான். (௧0)

விளைதவமுனிவன்கண்டுவெகுளுமுனவன்றாள்போற்றிக்
கிளைபடுநெல்லிவாசக்கேழுறுகனிமுன்வைத்தா
லுளைவுறமுனியானம்மையுறுதிமற்றிதுவேயென்று
விளையவன்றானுந்தம்முனினைவினுக்கேற்பச்சொன்னான். (௧௧)

†பெண்மொழிகேளாரென்றும்பெரியவரெனக்கொண்டிந்த
மண்மொழிவார்த்தைபொய்யோவருத்தநீருற்றவெல்லா
மெண்மிகவெண்ணின்முன்னமென்பொருட்டன்றோவென்று
கண்மலர்நுவிசோரக்கனற்பிறந்தாளுஞ்சொன்னாள். (௧உ)

தம்பியர்தாமும்வேள்வித்தையனுமுரைத்தமாற்றங்
கிம்புரிநெடுங்கோட்டம்பொற்கிரிவல்லோன்கேட்டபின்னர்
வெம்பரிநகுலன்சொல்லேவிதியெனக்கருதியப்போ
தெம்பெருமானையுன்னவிவனெதிரவனும்வந்தான். (௧௩)

வேறு.

கண்டிருகண்ணுமிதயமுங்களிப்பக்கட்செவிப்போணைமறந்து
வண்டுவரையின்வாழ்தண்டுழாய்மாலைமாதவன்வருதலுமெதிர்கொண்
டண்டருமிறைஞ்சற்கரியதாளிறைஞ்சியாங்குறுமிடரினையவற்குத்
திண்டிறலறத்தின்றிருமகனுரைப்பத்திருச்செவிசாத்தினுஞ்செப்பும். (௧௪)

திண்மையானுயர்ந்தநீவிரைவிருமித்தீயிடைப்பிறந்தசேயிழையு
முண்மையாநெஞ்சினிகழ்ந்தபட்டாங்கீண்டுரைத்திடக்கோட்டின்மீண்டொன்றும்
வண்மையானுயர்ந்திரென்றுசெம்பவளவாய்மலர்ந்தருளினான்மாயோன்
றண்மையார்கருணைத்தாரபதிமுதலோர்சாற்றுவார்தம்மனத்தியல்பே. (௧௫)

---

* எய்தவென்றன்னை என்றும் பாடம்.
†பெண்மதிகொள்ளாரென்றும் பாடம்,

வெல்லுகவறமுமெய்மையும்பொறையுமேகமேனியனும்வெல்லாமற்
செல்லுகபாவம்பொய்மொழிகோபந்தயித்தியர் குலமெனத்தெளிவுற்
றல்லும்வெம்பகலுமென்மனநிகழுமலகையாமன்னையுமுன்னந்
கொல்லுதல்புரிந்தோயென்றனன்முரசங்கோட்டியகொற்றவெங்கொடியோன். (கசு)

பிறர்மனையவரைப்பெற்றதாயெனவும்பிறர்பொருளெட்டியேயெனவும்
பிறர்வசையுரைத்தல்பெருமையன்றெனவும்பிறர்துயரென்றுயரெனவு
மிறுதியேவரினுமென்மனக்கிடக்கையெம்பிரானிவையெனவுரைத்தான்
மறலியு* மடியுமாறுமல்லியற்கைவலிமைகூர்வாயுவின்மைந்தன். (கஎ)

ஊனமேயானவூனிடைபிருக்குமுயிரினைத்துறந்துமொண்பூணு
மானமேபுரப்பதவனிமேலெவர்க்கும்வரிசையுந்தோற்றமுமாபு
ஞானமேயானதிருவடிவுடையாய்ஞாலமுள்ளளவுநிற்றலினு
லீனமேயுயிருக்கியற்கையாதலினுலென்றனன்வீமனுக்கிளையோன். (க௮)

குலமிகவுடையரெழின்மிகவுடையர்குறைவில்செல்வமுமிகவுடையர்
நலமிகவுடையரென்னினுங்கல்விஞானமற்பமுமிலாதவரை
வலமிகுதிகிரிச்செங்கையாய்முருக்கின்மணமிலாமலரெனமதிப்பேன்
சலமிகுபுவியிலென்றனன்வாகைத்தார்புனைதாரைமாவல்லான். (க௯)

ஒருமொழியன்னைவரம்பிலாஞானமுற்பவகாரணனென்றுந்
தருமமேதுணைவன்கருணையேதோழன்சாந்தமேநலனுறுதார
மரியதிண்பொறையேமைந்தன்மற்றிந்தவறுவருமல்லதாருறவென்
றிருவரிவிளையோன்மொழிந்தனன்றன்பேரிதயமாமலர்க்கிடையெடுத்தே. (உ0)

ஐம்புலன்களும்போலைவரும்பதிகளாகவுமின்னம்வேறுருவ
னெம்பெருங்கொழுநனுவதற்குருகுமிறைவனேயெனதுபேரிதய
மம்புவிதனிற்பெண்†பிறந்தவரெவர்க்குமாடவரிலாமையினல்லா
‡னம்புதற்குளதோவென்றனள்வசிட்டனல்லறமனைவிபோன்மனையாள். (உக)

$ அறுவருமிவ்வாறுண்மையேயுரைத்தாராதலானிரைநிரைப்படியே
மறுவணிதுளபமார்பனுங்கேட்டான்மாமுனிக்கோதனமான
நிறைசுவையமுதகெல்லியின்கனியுநின்றகொம்பணைந்ததாலென்றும்
பெறுமுறைபெறுமேயுள்ளவாறுரைத்தாற்பெரியவர்பேசும்வாசகமே. (உஉ)

முளைத்தெழுகமலத்தரும்பெனவரும்புமுகிழ்முலைப்பொதுவியர்மலர்க்கை
வளைத்தழும்பகலாமரகதமலைபோல்வடிவழகுடையவெம்மாயோ
னுளைத்தெழுதாங்கப்பாற்கடன்§மறவாதுறைபும்வண்டுவரைபைநோக்கி
யிளைத்தவரின்னலொழித்துமீண்டகன்றுனிவருமீண்டிறைஞ்சிபாங்கிருந்தார். (உ௩)

பழம்பொருந்துசருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்-கஅ௩0-

---

* மடியமோதுமல் என்றும் பாடம்.

† பிறந்தவரெவரும் என்றும், ‡ நம்புதற்குளரோ என்றும் பாடம்.

$ அறுவருமிவ்வாறுரைத்தனருண்மையவரவர்வினைவினின்படியே என்றும் பாடம்.

§ மறந்தேயுறையும் என்றும் பாடம்.

# நச்சுப்பொய்கைச்சருக்கம்.



சேயபங்கயச்சிறுவிரலங்கையிற்றிரட்டியநறுவெண்ணெ
யாயர்மங்கையரிடவிடவமுதுசெய்தாடியதிருக்கூத்து
நேயமுங்குறுமுறுவலும்புரிந்துபார்த்தருளியநெடுங்கண்ணு
மாயவன்றிருவடிவமுமழகுமென்மனத்தைவிட்டகலாவே. (௧)

வண்டுசிந்தியமதுத்துளிமுகில்பொழிமழைத்துளியொடுஞ்சேர்ந்து
கண்டுசிந்தையுநயனமுமுருகுபைங்கானிடைக்கழிகேள்வி
விண்டுசிந்தனென்றொருமுனியருந்தவவிபினமேவினராகிக்
கொண்டுசிந்தனையறவிருந்தனர்குலக்குந்திமுன்பயந்தோரே. (௨)

ஆண்டுமற்றவருறைதருகாலையிலரவவெங்கொடியோனு
மூண்டழற்பொறிகன்றியமனத்தினர்மூவருமுடன்முன்னி
மீண்டுமிப்புவிவேண்டுவரிருக்கினும்விரகுடன்முற்கோலிப்
பாண்டுபுத்திரர்க்கோறுமென்றருளிலாப்பாவியர்துணிந்தாரே. (௩)

காளமாமுனிதனைக்கொடுவருகெனக்கலந்தநீற்றொளிகூருந்
தூளமாமுனியொருவனோடறிவிலாச்சுயோதனனுரைசெய்ய
வாளமாநிலமுழுதுடைமன்னனில்வந்தனன்விரைவிற்போய்
மீளமாமறைவேள்விகூர்முனியொடும்விடுத்தமாமுனியம்மா. (௪)

ஒருமுனிக்குலங்களுக்குமுன்செய்கலாவுயர்வுடையுபசாரம்
பெருமுனிக்களித்திறைஞ்சிநீபுரிதவப்பெருமையால்வளர்கின்ற
திருநிலப்பரப்பெங்குமென்னுணையேயென்னைநீயீடேற்றத்
திருவுளத்தருள்செய்குகவெனவவன்சேவடிகளில்வீழ்ந்தான். (௫)

நன்கலாவிதமனைத்தையுந்தெரிக்குநன்னாவுடைமுனியென்னை
யென்கொலாமிவணழைத்ததின்றெனவவணிருந்தமாமனைநோக்கத்
தன்கலாமனந்தோன்றவச்சகுனியத்தவமுனிவனைப்போற்றி
மின்குலாவருவேணியாய்நீயிவன்வெம்பகைகளைகென்றான். (௬)

கொடுத்துமாநிலத்தின்னிசைவளர்க்குமக்கொடியபாவியுமைவர்
விடுத்தபாரினம்வேண்டுவரிருக்கினவ்வேந்தரைவிண்ணேற்றற்
கடுத்தவோமம்வஞ்சகங்களாலியற்றுதியாயினிவ்வெழுபாருங்
கொடுத்திநீநிலைபெறவரவெழுதியகொடியவன்றனக்கென்றான். (௭)

கன்னன்வாசகங்கேட்டபோதிரண்டுதன்கன்னமுநெருப்புற்ற
தென்னவேவவைம்புலன்களுநெஞ்சமுமிடியின்வாயரவொத்தான்
பின்னையாதவனுரைப்பதுதவங்களும்பெருந்தகைமையும்பொன்றி
முன்னரேழெழுபிறப்பினல்வினைகளுமுடிந்தவின்றெனமுன்னி. (௮)

எண்வகைப்பெருந்திசையினுநினதுபேரிசையிலாத்திசையில்லை
மண்ணனைத்துநின்றனிக்குடைநிழலிலேமனுமுறைமையின்வாழுங்
கண்ணனுற்றதிக்கருமநீயெக்குறைகண்டுவெங்கழற்காலாய்
விண்ணகத்துநானேற்றுதல்புரியினும்வீவரோவீவில்லார். (௯)

தொடங்கியான்புரிதீவினையென்னையேசுடுவதல்லதுகொற்ற
மடங்கல்போல்பவர்தங்கண்மேற்செல்லுமோமாயவனிருக்கின்று
னிடங்கொள்பாரகம்பெறுவதற்கெண்ணுநின்னிச்சையின்படியேகி
விடங்களாலுயிரொழிப்பவர்க்கொத்துநான்வீவதேமெய்யென்றான். (௧௦)

அசைவிலாமனத்தருந்தவமுனிவனையனைவரும்பணிந்தேத்தி
யிசையுமாறுசெய்தோமவான்பொருள்களுக்கியாவும்வேண்டுவநல்கத்
திசையெலாமுகமுடையவனிகர்தவச்செல்வனுஞ்சென்றான்வெவ்
வசையினன்மிகுகொடியகோலரசனுமகிழ்ந்துதன்மனைபுக்கான். (௧௧)

போனமாமுனிதன்றபோவனத்தொருபுடையிடைநெடுங்கள்ளிக்
கானமானதுபுகுந்துபாரிடங்களுங்கழுகினங்களுந்துன்றி
யானையோடிடநரிதுரந்திடுநிலத்தெரிவெயிற்கழைமுத்தம்
வானெலாநெடுந்தாரகைபோலெழுமால்வரைப்புறஞ்சார்ந்தான். (௧௨)

அண்டர்யாவருமானுடமுனிவருமகலிடந்தனின்மற்றுங்
கண்டகண்டவர்யாவரும்வெருவரக்கடும்பலிபலநல்கி
யுண்டியால்வளர்ந்தாரழல்கோளசையூடுறும்படியோம
குண்டமெவ்வளவவ்வளவிந்தனங்கொடுந்தருக்களிற்சேர்த்தான். (௧௩)

மிக்கமந்திரயாமளமுதலியவேதமந்திரந்தம்மிற்
றக்கமந்திரந்தெரிந்துகொண்டாசறுசடங்கமுந்தப்பாமற்
றுக்கமந்திரமொன்றினுக்கோரெழுசுருவையினறுநெய்வார்த்
தொக்கமந்திரமனைத்தினுங்கொடுமைகூரோமமும்புரிந்தானே (௧௪)

தன்றனிச்சையினன்றியேழ்கடலுடைத்தராதலந்தனையாளு
மன்றனிச்சையிற்புரியுமவ்வேள்வியில்வந்துறுபெரும்பூதஞ்
சென்றெயிற்றிளநிலவெழத்துணைவிழிதீயெழவெயில்வாய்கார்க்
குன்றெனப்பொலிந்தெழுந்ததுமுனிவனுங்கூசிமெய்துலைந்திட்டான். (௧௫)

வேறு.

இப்பாலிவ்வாறுமஞ்செய்திவணிப்பூதமினிதெழுப்ப
வப்பாலிருந்தவனசரிதரைவர்க்கமைந்தவாறுரைப்பா
முப்பாலினுக்குமுதற்பாலாய்மும்மைப்புவனங்களுங்காக்குந்
தப்பாவாய்மையறக்கடவுளறிந்தானெண்ணந்தப்புவிப்பான். (௧௬)

தன்மைந்தனுமத்தம்பியருஞ்சரியாநின்றதபோவனத்து
நன்மைந்தரிலோர்முனிமைந்தனன்னூலுடன்பூணசினத்தை
வின்மைந்தரையுமதியாமல்விரைந்துட்புகுந்துவிசைத்தகல்வான்
றன்மைந்தனைப்போலோருழைகொண்டோடிற்றென்றற்சொலவுண்டோ. (௧௭)

மறைவாய்ச்சிறுவன்கலைத்தோலைமான்கொண்டோடிவானிடையிற்
பொறைவாய்ப்புகுந்ததபயமெனப்புகுந்தாங்கழுதுபுலம்புதலு
நறைவாய்த்தொடையலறன்மகனுமிளையவீரர்நால்வருந்தந்
துறைவாய்ச்சிலையோடம்பேந்தித்தொடர்ந்தாரதனைச்சூழ்புலிபோல். (க௮)

அகப்பட்டதுபோன்முன்னிற்குமருகெய்தலுங்கூராசுகம்போன்
மிகப்பட்டோடுந்தோன்றுமல்வெளிக்கெயொளிக்கும்விழியிணைக்கு
முகப்பட்டிடுமீண்டைவருந்தம்முரண்டோள்வன்மைதளர்வளவுந்
தகைப்பட்டொழிந்தாரதிலாசையொழிந்தாரிந்திரசாலமெனு. (க௯)

தடங்கானகமும்வானகமுஞ்சாரற்பொருப்புந்தாழ்வரையு
மடங்காவரும்போய்ச்சூழ்போதுமப்போதந்தமான்கன்று
தொடங்காவிவையிளைப்பித்ததொழிலைச்சொல்லினொருநாவுக்
கடங்காதின்னுமாயிரமுண்டாலதற்குமடங்காதே. (௨0)

கானீதிவர்க்குத்தலைதெரியாக்கானங்கருத்துமிகக்கலங்கிப்
பானீயத்துக்கைவருமெய்ப்பதைபாகிற்பரெனவறிந்து
தூநீர்நச்சுச்சுனையாயச்சுனைசூழ்வரவோர்தொன்மாமா
யானீயவனென்றெண்ணுமலெல்லாமானேனிருந்தானே. (௨க)

வேறு.

தருமனுந்தம்பிமாருந்தாலுவும்புலர்ந்துதாகத்
துருகியமனத்தராகியுடறளர்ந்தயருமாங்க
ணெரியுறுகானம்போல்வானிளவலைநோக்கியின்னே
மருவரும்புனல்கொண்டோடிவருதிநீவிரைவினென்றான். (௨௨)

அக்கணத்தினிற்சகதேவனடவிகடோறுந்தேடி
யெக்கணுங்காணுகியென்றுதேய்குன்றென்றேறி
மிக்கவண்சீதவாசவிரிசுனையொன்றுகாணாப்
புக்கனன்பருகலுற்றான்பொலிவறப்புலர்ந்தநாவான். (௨௩)

செழும்புனலுதரந்தன்னிற்சேருமுனாவிபொன்றி
விழுந்தமையறிவுறாதுமீளவுநகுலன்றன்னை
யழுங்கினனேவச்*சென்றாங்கவனுமப்பரிசின்மாய்ந்தா
னெழும்படைவிசயன்றன்னையேவினனவனும்போனான். (௨௪)

தம்பியர்கிடந்ததன்மைகண்டுமத்தலைவன்மேன்மேல்
வெம்புறுகொடியதாகமிகுதியால்விரைந்துவாரிப்
பைம்புனலருந்தியவ்வாறிறந்தனன்பரிதாபத்தோ
டெம்பியரென்செய்தாரென்றிறைவனுமினைந்துசோர்ந்தான். (௨௫)

வீமனங்கவனைத்தேற்றிமெலிவுறுசோகத்தோடு
மீமமொத்தெரியுங்கானமெங்கணுந்திரிந்தங்கெய்திச்
சாமுறைத்தம்பிமாரைக்கண்டருந்தடத்துநீரை
யாமெனக்கருதாதாலமாகுமென்றகத்திற்கொண்டான். (௨௬)

---

* சென்றானவனுநீரருந்தி மாய்ந்தான் என்றும் பாடம்.

பின்னவர்மூவர்சேரப்பிணங்களாய்க்கிடத்தல்கண்ட
மன்னவன்றனக்குத்தாகமாறுமோவளர்ந்துமேன்மே
லென்னவன்பட்டானென்பதியம்புதற்கெட்டுமோமுன்
சொன்னவன்றானுமிந்தச்சோகமோதொகுக்கமாட்டான். (உஎ)

குசையுடைப்புரவித்திண்டேர்க்குரக்குவெம்பதாகையானை
யசைவில்பொற்சயிலமன்னவாண்டகைமனத்திறனைத்
திசையனைத்தினுந்தன்னாமந்தீட்டியசிலைபின்வெம்போர்
விசையனைத்தன்கண்ணீரான்மெய்குளிப்பாட்டினானே. (உஅ)

நற்றுணைச்சிறுவனோடுநகுலனைநோக்கியந்தோ
வெற்றுணையிழந்தேனென்னுமென்செய்வதினிநானென்னு
முற்றுணைவனுமக்கானின்முடிந்திடுமொழியவேறோர்
பிற்றுணைகாண்கலாதேனயாரொடுபேசுவேனே. (உகூ)

மணிமுரசுயர்த்தோனீண்டுவருதலுங்கூடும்வந்தா
லணிதருநச்சுத்தோயமருந்தவுங்கூடுமென்றுப்
பணியுடன்செய்வான்போலப்பருமணலேட்டிற்கையாற்
றுணிவுறவெழுதியந்தத்தோயமேதானுந்துய்த்தான். (௩0)

பொருப்பினும்வலியகொற்றப்புயமுடைவீமனென்று
லருப்புடை* யறலினஞ்சமஞ்சுமோவாலமென்னு
முருப்பினையறிந்தும்வாரியுண்டுதன்னுயிருமிந்தா
னெருப்பினுஞ்சொல்லினாவேகினைப்பினுநெஞ்சம்வேமால். (௩க)

ஆருயிர்பொன்றுங்காலையமுதரும்விடமாமென்று
பாருளோருரைக்குமாற்றம்பழுதறப்பலித்ததால
மாருதிமுதலாவுள்ளமன்னவர்நால்வர்தம்மோ
டோருயிரானமற்றையொருவனேயொருவனானான். (௩உ)

கட்புலனாகவேறோர்யோனியுங்காண்கலாத
வெட்புலந்தன்னிற்சோகமிஞ்சவேதாகமிஞ்சி
யுட்புலனழிந்துபின்போமுள்ளமோடயங்கிவீழ்ந்தா
னட்புலந்தவரான்முன்னநாகநகரண்ணினானே. (௩௩)

ஈங்கிவருயங்கிவீழ்ந்தவெல்லையிலெரிசெய்யோமத்
தாங்கவனெழுந்தபூதமம்முனிதன்னைநோக்கிப்
பாங்குடன்புரியுமேவல்பணித்தருளென்னநெஞ்சிற்
றீங்கிலாமுனியும்பூதவாசுடன்செப்புவானே. (௩௪)

நின்றிடாதிமைப்பிற்குந்திமைந்தராய்நெடியகானிற்
றுன்றிடாவைகும்வேந்தர்துணைவருமிருந்தசூழற்
சென்றிடாவொன்றுமைந்துசெயற்கையாமுடலைச்சேரக்
கொன்றிடாவருதியென்றுகூறியவுறுதிகேளா. (௩ரு)

* அறலின்றுக மஞ்சுமோ' என்றும் பாடம்.

ஐம்பெரும்பூதமொக்குமப்பெரும்பூதஞ்சாதிச்
செம்பொனிஞெளிருமேனித்தெய்வமாமுனியைநோக்கி
வெம்புகானுறைவோரின்றென்விழிக்கிலக்கல்லரானு
லெம்பிரானினையேகொல்வனெனத்தொழுதேகிற்பன்றே. (௩௬)

காட்டுறுகோடைவெப்பங்களேகுவான்கரியமேக
மோட்டுருக்கொண்டுமின்னுன்முளைத்தெழுமெயிறுதாங்கித்
தோட்டுணைபுடைகொண்டெங்குஞ்சூறைபோன்மரங்கள்வீழ்த்திக்
காட்டுறைவாழ்க்கையானைக்கண்ணுறக்கண்டதன்றே. (௩௭)

அந்தணன்சொன்னவேந்தரைவரிலறனுல்வந்த
மைந்தன்மற்றிவனையாவிமாய்ந்ததோர்வடிவனுகிச்
சந்தனதருவிற்சார்ந்துசாய்முடித்தலையனுகி
மந்திரமறந்தவிஞ்சைமாக்களின்வடிவுசோர்ந்தான். (௩௮)

சிறந்தமெய்ந்நிழல்போற்சூழ்ந்துணைவருஞ்சோவிட்டுத்
துறந்தனர்போலும்யாண்டுந்துப்பிலாவெப்பந்தன்னு
லிறந்தனனிவனுமற்றிங்கென்செய்வேனென்றென்றெண்ணி
நிறைந்தநீர்ச்சுனையின்மற்றைநிருபர்நால்வரையுங்காணு- (௩௯)

பச்செனும்புனலான்மிக்கபங்கயச்சுனையுங்கொல்லு
நச்சுவெஞ்சுனையேபோலுநால்வருஞ்சேரமாண்டா
ரிச்சுனையருந்திப்போலுமென்னினைந்தேதுசெய்தார்
நிச்சயங்கொடிதுகெட்டேனிந்தவிட்டோமென்னு. (௪0)

காவலன்வார்த்தைகேட்டுக்காளமாமுனிவனென்னு
நாவலனுமைத்தீயினம்மையுற்பவித்துவிட்டான்
மேவலர்கொல்லுமுன்னேவீந்தனரிந்தப்பாவங்
கேவலமல்லவென்றுகிளர்சினமூண்டுமீண்டே. (௪௧)

காலங்கண்மூன்றுமெண்ணுங்கடவுணீகலக்கமெய்தி
ஞாலங்கொணசையினில்லாநயனிதன்மகன்சொற்கேட்டுச்
சீலங்கொள்வாய்மைபாய்செந்தீயெழுகானிற்சின்னீ
ராலங்கொல்பான்மையாரையார்கொல்வானருளிச்செய்தாய். (௪௨)

பூண்டவெள்ளரவத்தோடுபுனைமதிவேணியார்க்குத்
தாண்டவநடனஞ்செய்யத்தக்கதோர்தழல்வெங்கானிற்
பாண்டவர்தம்மைக்கொல்லப்பணித்தனையொருகாலாவி
மாண்டவர்பின்னும்பின்னுமாள்வரோமதியிலாதாய். (௪௩)

நீயிதற்கிலக்கமாகிநின்றனையென்றுகோபத்
தீயெழப்பொடிக்குங்கண்ணுஞ்சிரிப்பெழுமெயிறுமாகி
மூவிலைச்சூலந்தன்னுன்முனிதலைதுணிந்துவீழ
வேவலிற்பழுதில்பூதமிவனையேயெறிந்ததன்றே. (௪௪)

எறிந்தது மீண்டுமோமவெரியிடையொளிக்குக்காணிற்
செறிந்தமாமுனிவர்யாருந்தேவரோடிரங்கியார்ப்ப
வறிந்தவரவனியாளுமரசனைவெறுக்கத்* தம்பி
யிறந்தவர்மீண்டுமாவிபெற்றவாபேசக்கேண்மோ. (௪௫)

வேறு.

மூச்சறப்புலர்ந்துயங்கியமுரசவெங்கொடியோன்
மாச்சினைத்தடஞ்சந்தனமகீருகநிழலில்
வீச்சுறப்பயிறென்றலாமெய்யுயிரெய்தி
நாச்சுவைப்படுஞானநன்மந்திரநவிலா. (௪௬)

தனைப்பயந்தநற்றருமதேவதைதிருவருளால்
வினைப்பயன்களாலுறுதுயர்யாவையும்வீட்டிச்
சுனைப்பெரும்புனற்றடகமுமடிக்கடிதோன்ற
நினைப்புமெய்தியத்தம்பியர்தம்மையுநினைந்தான். (௪௭)

ஆனதன்மனவலியுடனுண்டுநின்றெழுந்து
கானகத்திடைநீங்கியவறன்றருகாளை
போனதம்பியர்சேவடிச்சுவட்டினிற்போயத்
தூநிறப்புனலுண்டுவீழ்துணைவரைக்கண்டான். (௪௮)

ஊறிலாமைகண்டற்றனரில்லெனவுணர்ந்து
மாறிலாதவரெங்ஙனமாருயிர்மாய்ந்தார்
சேறிலாதவெஞ்சுரத்திடைச்செழும்புனலுகரும்
பேறிலாமையினிறந்தனர்போலுமிப்பெரியோர். (௪௯)

அண்டகோளகைபனைபதோராதபத்திரத்தான்
மண்டலங்களீரொன்பதும்புரந்திடவல்லான்
சண்டமாருதிபெழுதியதாழ்மணலெழுத்தைக்
கண்டுநெஞ்சமிக்கயத்தறலென்பதுகண்டான். (௫௦)

வெஞ்சமஞ்செயவநவர்கொண்மீண்டுமென்றருளில்
வஞ்சகன்செய்தவஞ்சனையிதுவெனமதித்து
நஞ்சநீர்கொடுதானுந்தன்றுவினைநினைக்கு
நெஞ்சழுங்கியந்நிறைபுனற்கயத்திடைநோக்கான். (௫௧)

திருந்து † நல்வரைச்செங்கையாலள்ளியநீரை
யருந்துமவ்வயினகல்விசும்பிடையசரீரி
கருந்தடம்புனனஞ்சிதுநுகர்வதுகருதேல்
விருந்தர்நால்வருமென்மொழிகேட்டிலர்வெய்யோர். (௫௨)

உன்னையான்வினவுரைதனக்குத்தராமுரைத்துப்
பின்னைநீநுகர்பெறுதுபெற்றனையவிப்புனலை
யன்னைபோலுயிரனைத்தையும்புரந்திடுமரசே
‡ யென்னையோபெருந்தாகம்விஞ்சிடினுமின்றெனவே. (௫௩)

* தம்பி, யிறந்தவர் மீண்டு மாவி பெற்றவா றியம்பக் கேண்மோ என்றும் பாடம்.
† நல்வரைக்குறிதிகழ் செங்கையாலள்ளி, யருந்தும் என்றும் பாடம்.
‡ என்னையா என்றும் பாடம்.

பெருநலம்பெறுமகனையப்போறக்கடவு
ளிருவிசும்பினிலருவமாயியம்பியமாற்றந்
திருவுளந்தனிற்கொண்டுதன்செங்கைநீர்வீழ்த்திப்
பொருவிலாமகன்புகலுவபுகறிநீயென்றான். (ருச)

சொல்லுநூல்களிற்பெரியதேதரியமெய்ச்சுருதி
யில்லறத்தினுக்குரியதேதெண்ணுடையில்லாண்
மல்லன்மாலையின்மணமுளதேதுவண்சாதி
நல்லமாதவமேதுதங்குலம்புரிநடையே. (ருரு)

முனிகுலந்தொழுகடவுள்யார்மோய்த்தூய்முகுந்த
னனைமணங்கமழ்குழலினர்க்கியற்கையாதுயர்நாண்
தனமிருந்தவர்க்கேதாண்டகைபெறுதான
மினியதேதிருசெவிக்கினங்குதலையரின் சொல். (ருசு)

நிற்பதேதுகொனீடிசையோன்றுமேநிற்கும்
கற்பதேதுகொல்கசடறக்கற்பதேகல்வி
யற்பமாவதேதனைத்தினுமயற்காத்தேற்றல்
சிற்பமாமிவைசெப்பெனச்செப்பினன்சிறுவன். (ருஎ)

இவ்வகைப்பலவினவலுமியம்பியமகனை
யவ்வயிற்பெரிதுவந்துகண்ணினுக்கிலக்காகிச்
செவ்வையிற்பொலஞ்சிலம்பெனச்சேர்ந்துமெய்தழுவி
வெவ்வயிற்புரிவிரகெலாம்விளம்பினன்மாதோ. (ருஅ)

வேறு.

அறப்பெருங்கடவுளென்றறிந்துதாதையைச்
சிறப்புடன்சேவடிசென்னிசேர்த்திய
மறப்பெரும்புதல்வனைமகிழ்ந்துநம்பிய
ரிறப்பினையொழிப்பதற்கேதுவுண்டென. (ருகூ)

நச்சுநீர்குடித்துயிர்நீத்தநால்வரி
னுச்சமாமன்புடையொருவன்றனைநீ
யிச்சையானிம்மறையியம்பியெண்ணிலோ
ரச்சமற்றழையெனவருள்செய்தானரோ. (சுo)

தாதைகூறியமறைதனைக்கொண்டேசுத
னேதமுற்றிடாவகையிளையதம்பியை
யூதைவந்துள்புகவுணர்ச்சிநல்கினன்
வேதமுநிகரிலாவிரதவாய்மையான். (சுக)

கண்டுநின்றறப்பெருங்கடவுள்வாயுவின்
றிண்டிறன்மாமகன்றேவர்கோமகன்
மண்டமழல்விடத்தினன்மடியமாமருத்
தண்டர்நல்கிளவலையழைத்ததென்னென்றான். (சுஉ)

குத்திரமிலாமொழிக்குந்திக்கியானொரு
புத்திரனுளனெனப்புரிந்துநல்கினாய்
மத்திரைக்கொருமகவில்லைவல்லவர்
சித்திரம்வகுத்தெனத்திகழுமேனியாய். (௬௩)

என்றுதன்றந்தையோடியம்பத்தந்தையு
மன்றலந்தொடைமுடிமைந்தனுக்கமர்
வென்றிடுமறைகளும்வில்லொடேவுவே
லென்றபல்படைகளும்யாவுநல்கினான். (௬௪)

கருதலனழைத்ததுங்காளமாமுனி
புரிதழல்வளர்த்ததும்பூதம்வந்தது
மருகிவர்நச்சுநீரருந்திமாய்ந்ததும்
விரிசினத்துடனதுமீண்டுபோனதும். (௬௫)

முனிவனைக்கொன்றதுமுனிவன்வாய்மையிற்
றனிவனத்துழையினைத்தொடர்ந்துபோயதுந்
தனிவனத்திடைவிடத்தடாகஞ்செய்தது
மினிமையிற்புத்திரற்கியாவுங்கூறினான். (௬௬)

நன்பெருவனஞ்செறிநாளகன்றன
பின்பிறரறிவுறாப்பெற்றிபெற்றுநீர்
துன்புறாதிருமெனச்சொல்லியேகினா
னன்பினாலருள்புரிந்தரியதாதையே. (௬௭)

தம்பியரனைவருந்தத்தமாவிபெற்
றும்பரிற்றலைவனாமுரியதந்தையை
வம்பவிழ்மலரடிவணங்கிநெஞ்சுட
னம்பகமலர்ந்துதம்மடவிபெய்தினார். (௬௮)

நீதறக்கானிடைச்செறிந்தவைவரும்
பேதுறத்தொடர்ந்தொருபிணைபின்போனது
மேதமுற்றிறந்ததுமெழுந்துமீண்டது
மாழ்துயர்த்திரௌபதிக்கறியக்கூறினார். (௬௯)

நச்சுப்பொய்கைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௧௬௩௧.

ஆரணியபருவ முற்றுப்பெற்றது.

நான்காவது

# விராடபருவம்.



## நாடுகரந்துறைசருக்கம்.



அங்கையினேமிசங்குவாடண்டோடற்சராசனந்தரித்தநள்வோன்
சங்கையின்மறைகளாயிரங்களுக்குஞ்சாற்றுதற்கரியதத்துவத்தோன்
கங்கையினறலுங்காளியன்முடியுங்காளிந்திக்கரையுமேகமழும்
பங்கயமலர்களிரவுநன்பகலும்பணிந்துபாடுதுமவன்புகழே. (க)

அரவவெங்கொடியோனேவலின்படியேயைவருமாறிரண்டாண்டு
துருபதனளித்தபாவையுந்தாமுஞ்சுருதிமாமுனிகணம்பலவும்
பரிவுடன்மலரும்பலங்களுங்கிழங்கும்பாசடைகளுமினிதருந்தி
யொருபகல்போலக்கழித்தனரறிவுமொடுங்கியபுலன்களுமுடையோர். (உ)

தொல்லறக்கடவுளருளுடனளித்ததோன்றறன்றுணைவரைநோக்கிக்
கல்லமலர்கிரியுங்கானமுமிடமாக்கழித்தனமொழிந்தனகால
மெல்லையோராண்டுமியாவருமுணராதிருப்பதற்காமிடம்யாதோ
சொல்லுமினென்றுமென்றலுந்தொழுதுசுரபதிமகனிவைசொல்வான். (ஙு)

நீதியும்விளைவுந்தருமமுநிறைந்துநிதிகண்மற்றியாவையுநெருங்கி
யாதியின்மனுநூல்வழியினிற்புரப்பானவனியைமனுகுலத்தரசன்
மாதிரமுழுதுமவன்பெரும்புகழே* வழங்குவதமரரும்வேள்வி
வேதியர்பலருமுறைவதுமவனேவிராடர்கோன்மச்சநாடையா. (ச

ஆங்கவனகரியெய்திமற்றின்றேயைவருமணியுருக்கரந்து
தீங்கறவுறைவதல்லதுவேறோர்சேர்விடமிலதெனச்செப்பத்
தேங்கியவருளுக்கிருப்பிடமானசிந்தையான்சிந்தையாற்றுணிந்து
பாங்குறையாசர்யாரையுந்தத்தம்பதிகளேசெல்கெனப்பகர்ந்தான். (ரு

முனிவராயுள்ள† தபோவனத்தவரைமுடியுறத்தனித்தனிவணங்கிக்
கனிவுறுமன்பாலென்றுநாளுமைக்காண்பதென்றவர்மனங்களிப்ப
வினியனவுரைகள்பயிற்றியாவரையுமேகுவித்திற்றைநாளிரவிற்
றினகரனெழுமுன்செல்வமச்செல்வந்திகழ்தருநகர்க்கெனச்செப்பா. (சு

---

* வழங்குவதியாவரும் வேள்வி என்றும் பாடம்.

† தபோதனத்தவரை என்றும் பாடம்.

கல்கெழுகுறும்புஞ்சாரலங்கிரியுங்கடிகமழ்முல்லைப்புறவு
மல்குநீர்ப்பண்ணைமருதமுங்கடந்துவன்னியிற்பிறந்தமாமயினும்
வில்கெழுதடக்கைவிளைஞருந்தானும்விராடர்கோன்றனிக்குடைநிழலிற்
பல்குலமாக்கள்வாழ்வுகூர்வளநாடடைந்தனன்பாண்டவர்தலைவன். (எ)

தாரதலமுழுதுமுடையகோமகனுந்தம்பியர்நால்வருந்திருவு
மிராவிடைவிரைவினெறிடைக்கடந்தோரெண்ணமுமிருக்கையும்வாய்ப்பக்
காமுலாவருபைந்தடமும்வண்காவுங்கனகவான்புரிசையுஞ்சூழ்ந்த
விராடன்மாநகரியெல்லைபுக்கொருபான்மயானபூமியினிடைவிரவா. (அ)

யாமளமறையால்யாவரும்பணிவானெழுவகைத்தாயரிலொருத்தி
சாமளவடிவோடந்நகர்*வாழ்வாள்சங்குதண்டங்கையிற்றரிப்பாள்
கோமளவல்லிக்கொடிநிகர்காளிகோயிலின்முன்னரோர்வன்னி
நாமளவிடுதற்கரியபல்கிளையானலம்பெறுபாதவநண்ணு. (கூ)

தத்தமபடையுங்கவசமுமனைத்துந்தனித்தனியைவருந்தரித்த
மெய்த்திறலுடையயாவுமத்தருவின்கோடரத்தொளித்தொருவிரகால்
வைத்தனராகியாவருமுணராவகையருமறைகளும்பயிற்றி
முத்தலைவடிவேற்காளியைவணங்கிமுன்னினர்புரிதொழின்முற்றும். (க0)

தம்பியர்வணங்கித்தனதுதாளிணையிற்றங்கவோர்தாபதவடிவு
மும்பரும்வியப்பக்கங்கனென்றுரைக்குமொருதிருநாமமுந்தரித்து
வெம்பரிதியினுஞ்செம்மைகூர்வடிவம்வெண்புரிநூலொடுமிலங்க
வைம்புலன்மகிழ்ச்சென்றுகண்டிறைவந்தடிதொழவாசியுமுரைத்தான். (கக)

பாரையாநீவிரெங்குநின்றிவண்மற்றெழுந்தருளியதெனவினவப்
பாரையாளுடையயுதிட்டிரன்பாங்காப்பயிற்றனனவன்பெருவனத்திற்
சேருநாளுடன்போய்த்திரிந்தனனின்பாற்சிலபகல்வைகுமாறென்னி
வீரவார்கழலாய்வந்தனனென்றான்வேள்வியாற்கேள்வியான்மிக்கோன். (க௨)

மன்முனிமொழிந்தவாய்மைகேட்டந்தமனுகுலமன்னனுமகிழ்ந்து
தன்மனநெகிழ்ந்தநெகிழ்ச்சியுமுணர்வுந்தகைமையுமுவகையிற்றோன்ற
வென்மனைவயினின்றெய்தியபயனியானெழுபிறப்பினும்புரிந்த
நன்மையின்விளைவேவேண்டுநாளின்றென்னுதிரெனநவின்றான். (கங)

தண்டினுக்கொருவன்புயவலிக்கொருவன்றனுவினுக்கொருவனென்றுரைக்குந்
திண்டிறற்பவனகுமாரனுஞ்சின்னாள்சென்றபின்றெள்ளமுதனைய
வுண்டியைக்குறித்துக்கற்றதன்கல்விப்புரிமையைக்குறித்ததொழிற்கு
மண்டலத்தரசேயொருவன்யான்வீமன்மடையனென்றரசவைவந்தான். (கச)

வந்துதன்றம்முன்மலரடிமுன்னிமலர்க்கையான்முடியின்மேல்வணங்கி
யைந்துபல்வகையிற்கறிகளும்வெவ்வேறறுசுவைமாறுமாறடைப்பேன்
வெந்திறன்மல்லும்புரிதொழிலுடையேன்விருதுடைப்பலாயனனென்பே
ரிந்திரனுலகுதன்னிலுமெண்ணிலென்றொழிற்கெதிரிலையென்றான். (கரு)

---

* வாழ்வாள் பலபடைதனதுகைதரிப்பாள் என்றும் பாடம்.

என்றபோதவனைவிராடனுமகிழ்வுற்றிருகையுஞ்சென்னிமேலிருத்திப்
பொன்றிகழ்மணிப்பூண்மென்றுகில்பலவும்புரவிபோதகங்களும்வழங்கி
யின்றுதொட்டடைக்க*மைம்பெருஞ்சுற்றத்தொருவனீயென்றநிதொழிற்கு
நின்றவரெவர்க்குந்தலைவனாமுரிமைநிலைபெறவழங்கினன்மாதோ. (௧௬)

நீடியசிலைக்கைத்தேவர்கோன்மதலைநிருத்தநல்லரங்கினின்முன்னாள்
வாடியமருங்குற்பணைத்தபூண்கொங்கைவாட்டடங்கண்கள்வார்குழைமே
லோடியவதனத்துருப்பசிபணியாலுறுவதற்கோரியாண்டமைந்த
பேடியின்வடிவந்தரித்தனனாண்மைக்கிமையவரெவரினும்பெரியோன். (௧௭)

வாயுவின்மதலைசென்றுகண்டதற்பின்மற்றைநாளொற்றைவெண்கவிகைச்
சேயொளிமகுடச்சென்னியானிருந்தபேரவைசிறப்புறச்சென்று
தூயவெண்புரிநூன்முனிதிருக்கழலிலொருபுடைதோய்தரத்தலைசாய்த்
தேயவெஞ்சிலைக்கையருச்சுனன்கோயிலிருப்பதோர்பேடிநானென்றான். (௧௮)

நாதமுமியலுமேதகுநடனநூனவிறருமரங்கினுக்குரியேன்
பேதையர்தமக்குநடம்பயிற்றுவிப்பேன்பெயர்பிருகந்நளையென்ப
வாதிபநினதுசெல்வமாநகரிலிருப்பதற்கெண்ணிவந்தடைந்தேன்
வேதமுமுலகுமுள்ளநாளளவும்விளங்குகநின்மரபென்றான். (௧௯)

வித்தகனனவெக்கலைகளும்பயின்றவிராடனும்பேடிதன்மொழிகேட்
டித்திறமுடையார்வேலைசூழுலகினில்லையென்றினிதுரைத்தருளி
யத்தகவுடையான்மகிழ்வுறக்கலனுமாடையும்வேண்டுவவழங்கி
யுத்தரைதனக்குப்பாங்கிநீயென்றங்கரியதன்மகளுழைவிடுத்தான். (௨0)

பின்னருஞ்சின்னாளகன்றபினகுலன்போழகினுக்குவேளனையான்
மின்னுடைவடிவேல்வேந்தர்கோன்விராடன்வெம்பரியேறுமுன்றிலின்வாய்
மன்னியதொழில்கூர்கம்பியுங்கயிறுமத்திகையுடன்காத்தேந்தி
யுன்னயமுதலாம்புரவிநூலறிவோனுளநிகழ்தருக்கொடுசென்றான். (௨௧)

சென்றவன்றன்மேற்புரவிமேலிருந்தோன்செழுந்தடங்கண்மலர்பரப்பி
வன்றொழிற்புரவிவான்றொழிற்குரியோயெவ்வயினின்றுவந்தனைநீ
யென்றலுமவனுமியம்பினன்விசயற்கிளையவனகுலனென்றெல்லாக்
குன்றினுந்தன்பேரெழுதினோனவன்றன்கொற்றம்யார்கூறுதற்குரியார். (௨௨)

மற்றவன்றனதுவாசிமந்துரைக்குத்தலைவராய்வாழுமாக்களில்யா
னுற்றவனொருவன்வாம்பரிவடிவுமுறைதருசுழிகளுமொளியும்
பற்றியநிறனுங்கந்தமுங்குரனும்பல்வகைக்கதிகளும்பிறந்த
சொற்றகுநிலனுமாயுவுமுணர்வேன்றுயருறுபிணிகளுந்தவிர்ப்பேன். (௨௩)

மண்டலம்வீதிகோணமேமுதலாம்வாசிகளூர்தொழில்வல்லேன்
றிண்டிறற்றடந்தேர்பூண்பதற்குரியசெயலுடைப்பரிகளுந்தெரிவேன்
வண்டிமிரலங்கன்மாலையாய்பாண்டுமைந்தர்போய்வனம்புகுந்ததற்பி
னுண்டியுமிழந்தேனுறுதியுமிழந்தேனுன்புகழ்கேட்டுவந்துற்றேன். (௨௪)

---

* மெய்ப்பெருஞ்சுற்றமென்றும் பாடம்.

என்னவப்புரவி*யேற்றுநாயகன்வந்தியப்பியவின்மொழிகேட்டு
மன்னவர்க்கெல்லாமொதுங்குநீணிழலாய்வயங்குமாமதிக்குடைமன்னன்
முன்னவர்க்குள்ளவரிசைகள்யாவுமும்மடங்காகவேவழங்கி
யந்நகர்த்துரங்கமவையனைத்தினுக்குமதிபதியெனும்பதங்கொடுத்தான். (உரு)

கிளைபடுபுரவிபுரந்திடுந்தாமக்கிரந்தியாம்பெயர்புனைநகுலற்
கிளையவனந்தகோபன்மைந்தனைப்போலிடையர்தங்கோலமேதெய்தித்
துளைபடுகுழையிலொருகுழையணிந்துதோளிலோர்தொடித்தடிதழுவி
விளைபுகழ்விராடன்வேத்தவையதனைவேறொருநாளினடைந்தான். (உசு)

ஆர்கோனீயென்னவறன்மகனுடனோராசனத்திருந்தபூபதியைச்
சீருறவேறோர்விரகினால்வணங்கிச்செப்பினனன்னசாதேவன்
பார்கொளநினைந்துசுயோதனன்விடுப்பப்படர்வனம்புகுந்தபாண்டவரிற்
றார்கொள்வேலிளையோன்றனதுகோபாலன்றந்திரிபாலன்யானென்றான். (உஎ)

ஆங்கவனிவ்வாறுரைத்தலுமவனையருகுறவருகெனவழைத்துப்
பாங்குறத்தக்கவழக்கமும்வழங்கிப்பல்வகைநிரைகளுநீயே
யீங்குமப்படியேபுரத்தியென்றுரைத்தானிவனுமவ்வரசனேவலினும்
மிங்குறக்கைகொண்டவ்வவர்க்கெல்லாந்தகைபெறுஞ்செம்மலாயினனே. (உஅ)

வேறு.

ஓமமகவாழ்விறாநிருவர்க்கு
மாமயிறிரௌபதியும்வண்ணமகளாகித்
தேமருவுதார்முடிவிராடனிருதோள்சேர்
கோமகளைநாடியவள்கோயிலிடைபுக்காள். (உகூ)

மதுமலரின்வாழ்திருவும்வந்துதொழவுரியா
ளதுமலினளாகியொருதன்னிடைநடந்தாள்
பதுமவிழியாயெனும்வாயிலவர்பால்போய்
மதுரமொழியாளழைமின்வாணுதலையென்றாள். (௩0)

வந்தவளிருந்தவன்மருங்கணையும்வேலை
யந்தணுபசாரமுடனருகுறவிருத்திச்
சந்தொடகில்பூவிலைகடசவுடன்வழங்கி
யெந்தநகரீருரைமின்யாருணரவென்றாள். (௩௧)

தான்விரதமாயைபுரிசகுனிபொருசூதாற்
கான்விரதமாகவுறைகாவலர்கள்கோயின்
மான்விரதநோக்கியர்மருங்குறவிருந்தேன்
யான்விரதசாரணியெனும்பெயரினேனே. (௩௨)

பூசுவனசுற்றுவனபூண்பனமுடிப்ப
தேசொடுவனப்புநனிதிகழும்வகையணிவேன்
வாசவனொடொத்தமனுகுலவாசன்மனைவி
யேசறவுனக்கெதுவையாறுவதெனெண்ணம். (௩௩)

---

* ஏறுநாயகனென்றும் பாடம்.

எந்தைதமனையிற்பயிலிளம்பருவநாளிற்
கந்தருவர்காவல்புரிகற்புடையளானே
னிந்துநுதலாய்மணிதர்யார்முகமுநோக்கேன்
வந்தனனின்மாளிகையின்வைகும்வகையென்றாள். (ரு௪)

வண்ணமகள்கூறியவைமகிழ்வினொடுகேட்டுத்
தண்ணொளிவெரீஇயினன்சுதேட்டினைவிரும்பி
விண்ணவர்கள்பாவையரின்மேவுதியெனக்குக்
கண்ணிணையுநீயுனதுகாவலெனதுயிரும். (ரு௫)

அன்னையெனுமாறுநெறியானமுறைகூறி
யென்னருகிருத்தியெனவெரியின்வருமின்னு
மின்னனையநுண்ணிடைவிராடபதிதேவிக்
கென்நலமுநாடொறுமியற்றினளிருந்தாள். (ரு௬)

மைவருதடங்கண்மடமாதுமதிமாபோ
ரைவருமறைந்தனர்களாயுறையுநாளின்
மெய்வருவழாமொழிவிராடபதிதிருநா
டெய்வருபெருந்திருவொடோங்கியதையன்றே. (ரு௭)

குருக்களவனூரினிடைகுருநிலனோடொப்புற்
றிருக்கும்வழிமாமழைபுமெவ்விளைவும்விஞ்சித்
தருக்கினுடன்யானைமுதருணைகளும்விஞ்சிச்
செருக்குமுடன்விஞ்சியதுசெப்பவரிதம்மா. (ரு௮)

நாடுகரந்துறைசருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் ௧௬௭.

---

# மற்போர்ச்சருக்கம்.

அல்லினுக்கிந்தவென்னவாங்கவருறையுநாளில்
வில்லினுக்கிராமனென்னவேலினுக்கிளையோனென்னச்
சொல்லினுக்குததிதேய்கைத்தொன்முனியென்னவன்போர்
மல்லினுக்கொருவன்யானேவாசவனென்றுவந்தான். (௧)

அண்டமாமுகடோடொத்தசென்னியனவனிமுற்றுங்
கொண்டமாமேருவொத்தகுங்குமக்கடகத்தோளான்
சண்டமாருதத்தோடொத்தவலியினன்றந்தியெட்டின்
கண்டமார்முகத்தினீண்டகையெனத்திரண்டகாலான். (௨)

ஆயிரமல்லர்தன்னையணிநிழலென்னச்சூழப்
பாயிரும்புரவித்திண்டேர்மிசைவரும்பரிதிபோல
மாயிருஞாலந்தன்னின்மற்றிவற்கெதிரின்றென்னச்
சேயிருந்தடக்கைவேந்தன்றிருந்தவையதனைச்சேர்ந்தான். (௩)

மன்னனைவணங்கிநின்றுவலியுடைமல்லின்போருக்
கென்னலதில்லையிந்தவெழுகடல்வட்டத்தென்றன்
கொன்னவில்வேலினானுங்கொடுப்பனகொடுத்துமுன்னந்
தன்னுழைவைகுமல்லர்தங்களைநோக்கினானே. (௪)

அந்தமற்றொழிலின்மிக்கோரநேகர்நீடசனியொப்பார்
வந்தமற்றலைவன்றன்னைவருகிநீயெம்மொடென்று
முந்தமற்கலைநூல்சொன்னமுறைமையினரசன்காணச்
சந்தமற்சமரஞ்செய்தார்தனித்தனியொருவராக. (௫)

தத்தியுந்தோளுந்தோளுந்தாக்கியுஞ்சென்னிகொண்டு
மொத்தியும்பற்பல்சாரிமுடுகியும்வயிரக்கையாற்
குத்தியுங்காலுங்காலுங்கோத்துமற்கூறுதோன்ற
வொத்தியும்பாறையென்னவுரனுடனுரங்கள்சேர்த்தும். (௬)

ஓரொருமல்லராகவொருதனிமல்லன்றன்னோ
டாரமருடற்றிமல்லரனைவருமழிந்தபின்னர்
வீரரில்வீரனைவென்றிவேல்விராடன்மெச்சித்
தேரின்மேல்வந்தமல்லன்றனக்கெலாச்சிறப்புஞ்செய்தான். (௭)

அன்றுபோய்மற்றைநாளினரசனோடறத்தின்மைந்தன்
வென்றமாமல்லன்றன்னைவெல்லுதற்குரியமல்ல
னின்றுநின்மடையர்தம்மிற்பலாயனனென்போன்றன்னை
யன்றிவேறில்லையென்றானரசனுமழைமினென்றான். (௮)

பைம்பொன்மாமேருவெற்பின்பாரளவைச்சோதிநேமி
விம்பமாய்வளைந்ததென்னவிளங்குபொற்கச்சைவீக்கித்
தம்பமாமென்னத்தக்கதண்டொடுதாளிவீழா
வும்பராரமுதமுண்டவரவினான்விரைவின்வந்தான். (௯)

கதையுடைக்காளைவந்துகடுந்திறன்மல்லன்றன்னோ
டுதயமோடத்தமென்னுமோங்கலோரிரண்டுசேர்ந்து
துதைவுறப்பொருவதேபோற்றோள்புடைத்துருமினார்த்துப்
பதயுகத்தாலுந்தத்தம்பாணிகளாலுஞ்சேர்ந்தார். (௧௰)

உதைத்தனர்வீசிவன்போடுரங்கொடுகரங்களொற்றிப்
புதைத்தனர்விரல்கண்மெய்யிற்புருவமுமூக்கும்வாயுஞ்
சிதைத்தனர்புயங்களென்னுஞ்சிலம்புகடாக்கத்தாக்கப்
பதைத்தனரோடியோடிப்பற்றினர்மீளமீள. (௧௧)

கற்றனகாயமெல்லாங்கண்டுகண்களிக்கக்காட்டி
யுற்றனர்நின்றபோதிலூதைதயின்புதல்வனூரு
மற்றவன்மருங்குபற்றவன்கரமிடறுபற்றச்
செற்றனனிடிம்பன்றன்னைச்செற்றவெங்கொற்றத்தோளான். (௧௭)

தேர்மிசைவந்தமல்லன்சிதைந்தபேருடம்பினோடும்
பார்மிசைகிடக்கநின்றுபணைப்புயங்கொட்டியார்த்தான்
சீர்மிகுமல்லன்றன்னைச்சிறப்புறத்தழுவியெல்லாப்
போர்முகங்களுக்குநின்னைப்போல்பவரில்லையென்றான். (௧௮)

*மன்னவர்களிக்கத்தக்கவரிசைகளனைத்துநல்கி
முன்னவனாகிவைகுமுனிமனங்களிக்குமாறு
தன்னருகணுகவைத்துத்தலத்தெதிரில்லையிந்த
வின்னமுதடுவோர்க்கென்றானியற்றிறல்விராடன்றானே. (௧௯)

மற்போர்ச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௨0௧௧.

## கீசகன்வதைச்சருக்கம்.



அன்னநாளினின்மன்னவன்றேவியாமன்னமென்னடையாளமுதன்னசொற்
சொன்னசாயற்சுதேட்டிணைதன்றிருத்துணைவர்நூற்றொருநால்வரிற்றோற்றமு
மன்னுமாண்மையுந்தேசுஞ்சிறந்துளான்வருதினிக்குத்தலைவன்முற்றோன்றிய
கன்னல்வேளனையான்றன்றுணைவியைக்காணவந்தனன்காண்டகுமேனியான். (௧)

தம்பியப்பெருந்தையலைநூபுரத்தாளின்வீழ்ந்துதகவுடன்மீட்டு
மம்பரத்தவர்கற்பகக்காநிகாந்தவந்தப்புரத்தகன்காவினில்
வெம்புகர்க்களிற்றைவர்தந்தேவியாம்விரதசாரணிமென்மலர்கொய்திளங்
கொம்பொடொத்திடைசோரப்பணைத்தபொற்கொங்கையாளிவன்முன்னர்க்குறுகினாள்.

இயற்கையானகவினுடைப்பாவையையிறைவன்றேவிக்கிளையவன்கண்டனன்
செயற்கையாநலங்கண்டிலன்யார்கொலித்தெரிவையென்றுதன்சிந்தையினோக்கினான்
மயற்கையாலழிந்தானைம்புலன்களும்வழக்கொழிந்துமதிமருண்டானிணைக்
கயற்கையானக்கயற்றடங்கண்ணியைக்கண்டகாட்சியிற்காமுகனாகியே. (௩)

இந்திரன்னகர்ப்பாவைகொலோமடலேந்துபங்கயத்தேவிகொலோவியற்
சந்தமாருந்தடவரைத்தையலோதாரணிக்குள்வருந்தனித்தெய்வமோ
முந்தராவுறைபாதலந்தன்னில்வாழ்மோகினிக்குயிலோமுரல்கின்றிடு
முந்துநீரமங்கைகொலோவெழிலோவியத்தொளியோவெனவுன்னினான். (௪)

அருகுநின்றமகளிரைமற்றிவளார்கொலென்னவறியான்வினவினான்
வரிநெடுங்கண்மகளிருமாதரார்வண்ணமாமகளென்றனர்மையலா
லுருகுகின்றவக்காளையுநாணமுற்றொடுங்கிநின்றவுயிர்தவப்பாவைத
னிருபதங்களில்வீழ்ந்தெனதாவிநீ†யென்றுமீளவுமெத்தனைகூறினான். (௫)

---

* மன்னவர்க்களிக்க என்றும் பாடம்.

† என்றுநின்றங்கினியனகூறினான் என்றும் பாடம்.

கூறுகின்றமொழிகளுக்குத்தரங்கொடாதுநின்றதொர்கொம்பரின்வாய்மறைந்
தேறுகின்றபழிகளும்பாவமுமிம்மைதானுமறுமையும்பார்த்திலை
மாறுகின்றிலைசொல்லத்தகாதபுன்மாற்றமின்னமுமன்னுயிர்யாவும்வந்
தாறுகின்றகுடைநிழல்வேந்தனுக்கழிவுசெய்தியறிவிலிபோலுநீ. (௬)

மாரசாயகத்தாலுயிர்மாளினும்வசையிலாதமரபின்வந்தோர்பிறர்
தாரமானவர்தம்முகம்பார்ப்பரோதக்கவர்க்குத்தகவிவையேகொலாந்
சோரனாதலிற்சொற்றவையினித்தவிர்சுரேசராவர்தங்காவலென்றேளிணை
வீரபோவென்னருகுறிலாவிபோம்விழித்திமைக்குமுன்னென்றுவிளம்பினாள். (௭)

பேதையிப்படிக்கூறவுங்காதலைப்பெருகுசிந்தையன்பின்னையுமுன்புறு
வாதரத்தெனதாருயிர்போகினுமமையுமென்றவளம்புயச்சீறடி
மீதுநெற்றிபடத்தொழுதான்வடிவேற்கணாளும்வெகுண்டுவிரைவினிற்
றாதுளங்கனிவாய்முத்தவாணகைச்சுதேட்டிணைப்பெயராளுழைத்துன்னினாள். (௮)

நடுங்குமெய்யினள்பேதுறுநெஞ்சினளானநீர்மையளாவினுணீரிலா
தொடுங்குமென்னடையுடன்மையினாற்புனலுகுத்தகண்ணினளோவியம்போன்றுளாள்
கடுங்கண்யானைப்பிடரிருந்திந்நிலங்காக்கும்வெண்குடைக்காவலன்றேவிகே
டொடுங்கழற்கழலானின்றுணைவனெற்சுட்டியாயிரஞ்சொல்லல்செல்லினன். (௯)

விரதசாரணியென்பதுந்தேவரென்மெய்ப்புராக்கும்விரதமுமிங்குனக்
கிரதமாகவரமனைக்கெய்துமுனியம்பினேனென்னையாவருமிச்சியார்
சுரதமாடுமகளிரைத்தேடிநின்றுணைவன்வேட்கையுஞ்சோகமுமாற்றிநி
சரதமாகநினையாதொழிநெறிதப்பிலாருயிர்தப்புமென்றோதினாள். (௧௦)

கேகயங்களனுமெழிற்சாயலாள்கிளந்தவாசகங்கேட்டிடிபேறுறு
நாகமென்னநடுங்கியப்பூங்கொடிநயனநீர்துடைத்தேற்றதுநன்றெனா
வேகமுற்றமனத்தொடுதம்பியைமிகமுனிந்துதன்விடனுகாவகை
பேசுகென்றனளென்றதுஞ்சோகமோடேகினாளறம்பாவமென்றெண்ணலாள். (௧௧)

சென்றுதன்மனைபுக்கபின்மன்மதன்செருவினொந்தவிசிந்தையனுப்பமலர்
மன்றன்மெல்லணைவீழும்வெம்பாலைபால்வருத்ததேவிம்மலாளைதாவெனுந்
தென்றறன்னையுந்தியெனுந்திங்களைத்தினகரன்கொலென்றெங்குஞ்செயலழிந்
*தன்றவன்கருங்கங்குலிற்பட்டபாடவனையல்லதையார்பகர்வார்களே. (௧௨)

பாவிதன்மனைச்சேடியரானவர்பலரும்வந்துபடியுடைமன்னவன்
றேவிதன்னைவணங்கியக்காமுகன்சிந்தைநோயுஞ்செயலும்புகன்றெழிற்
காவியங்கண்ணவளைத்தனதுகண்காணினுந்தணியுங்கடுங்காதலு
மாவியும்பெறுமெய்யனுகானினதாளையென்றனராதாமாற்றுவார். (௧௩)

பாசகாரிகளாமைம்புலன்களும்பரிவுகூரப்பரிந்துயர்ந்தோர்புகல்
வாசகாதிகள்கற்றுந்தெளிந்திலமதனவேதத்தின்மார்க்கமும்பார்த்திலெ
நாசகாலம்வரும்பொழுதாண்மையுஞானமுங்கெடுமோகறுந்தார்முடிக்
கீசகாவென்றழுதனளம்மொழிகேட்டபோதக்கிளிநிகர்மென்சொலாள். (௧௪)

---

* தன்றகன் என்றும் பாடம்.

ஆகுலத்தொடுநெஞ்சந்தளர்ந்து தன்னருகினின் றவருந்ததியேநிகர்
மீகுலக்கொடி தன்னிருதாண்மிசைவீழ்ந்து நின் றன்விழியருளிண்டெனிற்
கோகுலத்திலுயர்ந்தவென்காதலன்கேவலுநீதியுங்குன்றுவெனதுணை
நீகுலைக்கிலனைத்துமின்றேகெடுநேரிழாயிது நெஞ்சுறக்கேட்டியால். (௧௫)

இளையனுதலினென்னிளையோன்மனத்தெண்ணமின்றியிகன்மதனம்பிறை
லிளையுமேனியனுகிநின்மெய்ந்நலமாதரித்தின்றடாதுசெய்நீர்மையால்
விளையுமேகொடுவெம்பழியிப்பழிவிளைவுறாமல்விரகினக்காதனைப்
களையுமாறெண்ணினுங்கவனுவியுங்காத்துநின்பெருங்கற்பையுங்காக்குமால். (௧௬)

எண்ணுகின்றனன்யானென்றுநீமறுதெனதுவாய்மையெதிர்கொண்டிளையவ
னெண்ணுமில்விடைச்சென்றிந்தநாண்மலர்நறைகொண்மாலையைநல்கினைமீளுவாய்
கண்ணினின்னுருக்காணினுமற்றவன்கன்னமின்புறக்கட்டுரைகேட்பினும்
வண்ணமாமகளேயுயிர்நிற்குநீவாழியேகிவருகெனவாழ்த்தினாள். (௧௭)

மொழியலாதமொழியைச்சுதேட்டிணைமொழிந்தபோதுமுதுக்குறைவுள்ளவப்
பழியிலாமொழிப்பாவைவெம்பாதகம்பகர்தியென்னைவெறுத்தொழிபாவைநீ
யழிவிலாதபெருங்கிளைக்கல்லல்சூழ்வுவந்ததறிந்திலையென்றுதன்
வழிகளாரஞ்சொரியக்கொடுத்தபூவேரிமாலைகொண்டேகினண்மின்னனாள். (௧௮)

ஆண்டுவந்ததுருபதன்மாமகளடைந்தநாட்டொட்டமாரொரைவரே
தீண்டலன்றியொருவருமென்னைமெய்தீண்டுவாரிலையென்றென்றுசெப்பவு
நீண்டசெங்கைத்தரணிபன்காதலிநினைவிலாமனெறியற்றதம்பிபான்
மீண்டுமவ்வழியேகென்றுரைப்பதேவிதியையாவர்விலக்கவல்லார்களே. (௧௯)

வேறு

மாதவள்கீசகன்மனையிலேகவற்
போதகலவுமவன்புலம்பல்போகவும்
பாதமில்வன்றிறற்பாகனூர்ந்ததே
ராதபனுதயவெற்பணுகினனரோ. (௨௦)

தருக்கியகாமுகன்றகாதுசொல்லவே
யுருக்கிளர்சாயலோடுளமழிந்துபோய்
முருக்கிதழ்வல்லிதன்முளரிச்செங்கையா
லருக்கனைபிறைஞ்சினாளழிவில்கற்பினான். (௨௧)

துரங்கமோரெழுடன்சோதிகூர்மணிக்
கரங்களோராயிரங்கவினத்தோன்றினாய்
வரங்கொள்வேனின்னையான்மரபுபொன்றுமென்
றிரங்குறுமென்னகத்திடரைநீக்குவாய். (௨௨)

என்றுகொண்டென்றினைப்பணிந்துமன்றலாற்
கன்றியகீசகக்கலகன்முன்புபோய்
மன்றலந்தொடையலும்வழங்கிமெய்வெரீஇ
நின்றனளாணிலைநின்றகற்பினாள். (௨௩)

காமருகுளிரிபைங்கதலிமெல்லடை
தாமரைவளையம்வண்டாதருமல
ராமுறையனைத்துமெல்லமளிமேல்விரித்
தீமவல்லெரியின்மேலென்னவைகினான். (உ௪)

சாந்தொடுதண்பனிநீருந்தாமமு
மேந்தியகரத்தினரேழைமார்பலர்
காந்தியகனன்மிசைகாட்டுநெய்யென
வேந்தனதுடலகம்வெதும்பவீசினர். (உ௫)

தாக்கியகாமநோய்தழைக்கவன்புற
நொக்கியதிசையெலாங்காணுநோக்கினான்
பாக்கியநெஞ்சுறப்பலித்ததென்னவே
நீக்கியமடந்தைமுனிற்றல்கண்டுளான். (உ௬)

வந்தனளென்னுடைமாதவப்பயன்
வந்தனளென்னுடைவழிபடுந்தெய்வம்
வந்தனளென்னுடையாவிவாழ்வுற
வந்தனளென்னுடைவண்ணமங்கையே. (உஎ)

வருகநீயருகுறமதுரவாசகந்
தருகநீயிருசெவிதழைக்கவுள்ளநின்
றுருகநீதழுவுகவுடலந்தேழுறப்
பருகநீவழங்குகபவளவாயென. (உஅ)

கிடந்தவனெழுந்தொருகேடிவந்துரு
மடந்தையைத்தழுவுவான்வந்துசார்தலும்
விடந்திகழ்விழியிறுவோடவேட்கையாற்
றொடர்ந்தனனறிவிலாச்சோரன்றானுமே. (உகூ)

ஓடியமடக்கொடியுலகுகாவலன்
சூடியமணிமுடிதுலங்குகோயிலின்
வாடியகொடியெனவந்துவீழ்ந்தன
ளீடியவேத்தவைநிருபர்காணவே. (௩0)

தொழுந்தகைமனுகுலத்தோன்றல்கண்ணெதிர்
விழுந்தழுதெரிவையைவேட்கைநோயினா
லழுந்தியகாமுகனச்சமின்றியே
செழுந்துணைக்கைத்தலந்தீண்டவுன்னினான். (௩க)

உன்னுமவ்வளவையிலுருளையொன்றுடைப்
பொன்னெடுந்தேரவன்புகலமற்றொரு
வன்னெடுங்கிங்கரன்சூறைமாருத
மென்னவந்தடித்தயலெடுத்துவீசினான். (௩உ)

கண்டனனிருந்தமண்காவல்வேந்தனு
மெண்டகுநெறிமுறையிடறுகீசகன்
றிண்டிறல்வலிமையுஞ்செயலுஞ்சிந்தையிற்
கொண்டொருவாய்மையுங்கூறவஞ்சினான். (௩௩)

அடுதொழிற்பலாயனனழுதமின்னையுங்
கடுமையிற்பின்றொடர்காளைதன்னையும்
படருறக்கண்டுதன்பாங்கர்நின்றதோர்
விடவியைப்பிடுங்குவான்வெகுண்டுநோக்கினான். (௩௪)

கனிட்டனதெண்ணமக்கங்கனுகிய
முனித்தகையுணர்ந்தவன்முகத்தைநோக்கியித்
தனிப்பெருமராமரந்தழல்கொளுந்திடா
துனக்கடுமிந்தனமன்றென்றோதினான். (௩௫)

சீரியகங்கனன்றுரைத்தசெம்மொழி
பாரியதாமெனப்பலாயனன்கொளா
வீரியமகத்துளோநிறுத்தும்வேலையிற்
கூரியவிழியினளழுது கூறுவாள். (௩௬)

நீண்டுதறகாதெனச்செம்மையொன்றிலான்
வேண்டியசெய்வது வேத்துநீதியோ
வாண்டகையிதற்குரியல்லவாமெனு
வீண்டொருமொழிகொடாதிருப்பதென்கொலோ. (௩௭)

அன்புடைத்தேவிதன்னருகுதோழியாய்
நின்பெருங்கோயிலினீடுவைகினே
னென்பெருவினையினாலின்றுன்கண்மைந்துனன்
றன்புயவலியினாற்றழுவவுன்னினான். (௩அ)

பெருந்தகையன்றிதுபேசலன்றிநீ
யிருந்தனையுனக்கரசெங்ஙன்செல்வது
வருந்தினர்வருத்தநீமாற்றலாயெனி
லருந்திறலரசநின்னாணைபொன்றுமே. (௩௯)

எனவிவள்புலம்பிமெய்யேய்ந்தபூழியுங்
கனதனநனைத்திடுங்கண்ணினீருமாய்
மனமிகமறுகிடமன்னன்றேவிபா
லினைவுடனெய்திவீழ்ந்தேங்கிவிம்மினாள். (௪௦)

பூதலமாண்மையாற்புரக்குமன்னவர்
தீதொழில்புரிஞரைத்தெண்டியாரெனி
னீதியுஞ்செல்வமுநிலைபெறுங்கொலோ
வேதிலர்தமரெனவிரண்டுபார்ப்பரோ. (௪௧)

யாருமில்லொருத்திநின்னில்லில்வைகினு
லார்வமுற்றவள்வயினன்புகூர்வது
வீரமோதருமமோவிருப்பமோவிவை
பூரியாலாதவர்புரிதல்போதுமோ. (௪௨)

கீசகனுயிரினுங்கேடுசெய்தன
னசைநோய்மன்பதையனைத்தினிக் குழன்
டேசிது நினக்குமென்றிருந்தவேங்கொடும்
வாசகம்பலசொனுண்மறைவலானுமே. (௪௩)

முன்னுறமுனிவரன்மொழிந்தவாய்மையு
மின்னலோடமுதவளிசைத்தவாய்மையுங்
கன்னமூடுறச்சுடக்கருத்தழிந்துபோய்
மன்னனுந்தன்றிருமனையிலெய்தினன். (௪௪)

கண்ணெருப்பெழவிருகைந்நெருப்பெழ
வுண்ணெருப்பெழத்தனதுடனெருப்பெழ
மண்ணெருப்பெழவருமடையிலெய்தினன்
றிண்ணெருப்பினுமிகுசினங்கொள்வீமனே. (௪௫)

வேறு.

பன்னிருவரினுநாடொறுங்கனகபருப்பதம்வலம்வருங்கதிரோன்
மின்னிகர்மருங்குல்விரதசாரணிபால்வினவுறுதுயரமதனைத்து
தன்னொருபரிற்றோன்றலைவெறுத்துத்தனிப்பெருந்தேர்குடபொருப்பின்
சென்னியினுருளவுருட்டிடப்திசையுஞ்சிவப்புறத்தானுமெய்சிவந்தான். (௪௬)

குந்திதன்புதல்வரைவருஞ்சோகமுதிர்ந்திடவிதயமுங்கொதித்தார்
வெந்திறல்வடிவேல்விராடனுந்தனதுவேத்தியல்பொன்றலின்வெறுத்தான்
செந்திருவனையசுதேட்டிணையென்னுந்தெரிவையுந்தெருமாலுழந்தா
ளந்தமாநகரிலனைவருநகைந்தாரார்கொலோவாகுலமுறாதார். (௪௭)

அனைவருந்துயின்றகங்குலும்பானாளானபினமுதகண்ணீரோ
டினைவருந்தையல்கண்கணீர்மல்கவிறைமகன்மடைப்பளியெய்தி
நினைவருசெற்றமுடித்திடவல்லார்நீயலதில்லையிக்கங்குற்
கனைவருகழலாய்புரிவதியாதென்றன்காளையுங்கனன்றிவைசொல்வான். (௪௮)

பொறையெனப்படுவதாடவர்தமக்குப்பூணெனப்புகலினும்பொருந்தார்
முறையறப்புரிந்தாலக்கணத்தவர்தம்முடித்தலைதுணிப்பதேமுழுப்பூ
ணறைமலர்க்குழலார்தமக்குமெய்ப்பகலாநாணமேநலஞ்செய்பூணனினு
நிறையுடைப்பெரும்பூணமளிவாய்நாணிகழ்வுறாநிகழ்ச்சியேயன்றோ. (௪௯)

அரசவைப்புறத்திற்சௌபலன்சூதிலழிந்தநாளினுமெமையடக்கி
முரசவெங்கொடியோன்றேசழித்தனனுவின்றுமம்முறைமையேமொழிந்தான்
புரசைவெங்களிற்றின்மத்தகம்பிளக்கும்போருகிர்மடங்கல்போலின்னே
தரிசறப்பொருதுகீசகனுடலந்துணிப்பன்யான்றுணைவரோடென்றான். (௫0)

மருத்தின்மாமதலைவார்த்தைகேட்டந்தமருச்சகன்மடக்கொடியுரைப்பா
ளுரைத்தநாளெல்லாஞ்சிலபகலொழியவொழிந்தனவொழிவிலாவுரவோ
யருத்தியோடொருவரறிவுறுவண்ணமிருந்தசீரழிவுறுமென்னுங்
கருத்துநின்றம்முற்குண்மையிற்றடுத்தான்காலமுந்தேயமுமுணர்வான். (ருக)

பாயும்வெஞ்சிறகர்க்கலுழன்முன்பட்டபாந்தள்போற்கீசகன்பதைப்பக்
காயுமதிந்தக்கங்குலிற்கடனன்றொருபகலிருபகல்கழிந்தா
னேயமோடின்றுவந்துகந்தருவர்நேர்படமலைந்தனரென்னுந்
தூயசொல்விளையப்பொருவதேயுறுதியென்னவத்திரௌபதிசொன்னாள். (ருஉ)

ஐயெனவிவனுந்தன்னைமுன்பயந்தவாரழலனையகற்புடைய
தையறன்மொழியைத்தானுமுட்கொண்டுகதுசெயல்விரகுடன்சாற்றி
வெய்யதன்சினமுந்தன்புயவலிபோன்மேலுறமேலுறவளர
நெய்புறுகனலிற்பொங்கியக்கங்குனீந்தினன்வேந்தனுக்கிளையோன். (ருங)

அற்றைநாளிரவிற்றன்பரிதாபமறியவறிவுடைக்கொடியு
மற்றைநாளந்தச்சூதேட்டிணைகோயின்மன்னவன்மைத்துனன்வரலுங்
கற்றைவார்குழலிற்பூழியுங்கண்ணீர்கலந்தவான்கொங்கையுஞ்சுமந்தாங்
கொற்றைமென்கொடிபோனின்றனளவனுமுளாங்கவரவணிலைகண்டான். (ருச)

வேறு.

கலைமதிகண்டகாந்தக்கல்லெனவுருகிச்சிந்தை
தலைமகனல்லான்வஞ்சந்தனக்கொருவடிவமானோ
னிலைபெறுகற்பினாளைநேருறநோக்கிப்பின்னு
முலைவுறுகாதன்மிஞ்சவுரனழிந்துரைக்கலுற்றான். (ருரு)

மன்னவன்வாழ்வுமிந்தவளநகர்வாழ்வுமெல்லா
மென்னதுவலிகொண்டென்பதின்றுனக்கேற்பக்கண்டா
யுன்னைமெய்காக்குந்தேவருறுதியுமானுங்கண்டா
யென்னைகொல்லினியுன்னெண்ணென்றிருகரங்கூப்பினானே. (ருசு)

கருத்தினிமுடியுமென்றுகடுங்கனன்முகத்திற்றோன்று
திருத்தகுபாவையந்தத்தீயவன்றன்னைநோக்கி
வருத்தநீயுறவுமுன்னர்மறுத்தனன்மரபினாலுஞ்
சரித்திரத்தாலுங்கொண்டதவரவிதத்தினாலும். (ருஎ)

கந்தருவருமற்றென்னைக்காப்பதுமறந்தார்போலு
மிந்திரனெனினுமாதரெளிமையினொருப்பட்டெய்தார்
புந்தியிலொன்றுங்கொள்ளேலாரிருட்பொழுதின்று
சந்தணிகுவவுத்தோளாய்தனித்துநீவருதியென்றாள். (ருஅ)

அக்கொடியுரைத்தமாற்றமவன்செவிக்கமுதமாகிப்
புக்குயிர்நிறுத்திமெய்யும்புளகெழவிளகிநெஞ்ச
மிக்கதோர்வேட்கைகூரவிடுத்தலின்வேந்தன்கோயிற்
கொக்கின்மேற்குயில்கள்கூவுங்குளிர்பொழிற்குறியுஞ்சொன்னாள். (ருகூ)

குருட்டியன்மதியினானைக்கோதிலாவறிவின்மிக்கான்
மருட்டினளாகிப்பந்தவளர்தடம்பொழிலினோர்சா
லிருட்டிடைநிலவுகாட்டுமின்பமண்டபத்தில்வம்மோ
வுருட்டடந்தேரோயென்றாளவனுமஃதொருப்பட்டானே. (௯0)

குறியவன்றனக்குநேர்ந்தகொடியவெங்கொலைவேற்கண்ணா
டறிபொருகளிற்றினன்னசமீரணன்மகனையெய்திச்
செறிவொடக்காளையோடுசெப்பியயாவுஞ்செப்பிப்
பிறிதொருகருத்துமின்றிப்பெரும்பகல்போக்கினாளே. (௯௧)

எல்லையெண்டிசையும்போனவிருளெலாமீண்டதென்ற
வெல்லையின்றலைவனைவிரவியுங்குடவெற்பெய்த
வெல்லையில்காதலோனுமிடையிருளிடையேயந்த
வெல்லையைநோக்கிச்சென்றான்யமன்றிசையென்னமன்னோ. (௯௨)

வடுவறத்தெவ்வர்போருமன்னவனுணவுங்கையா
லடுதொழிற்குரியசெம்பொன்வரையிரண்டனையதோளா
னுடுமுகத்தின்மைவானமொளியறவிருண்டகங்கு
னடுவுறப்பொழுதிற்செவ்விநவ்வியர்கோலங்கொண்டான். (௯௩)

அங்கியிற்றோன்றுநாளாயணியுடனன்றிக்கொள்ளப்
பொங்கியவிருளின்முன்னம்புகாறவப்பொங்கருக்கி
தங்கியதவளமாடந்தன்னிடைப்புகுந்துசான்ற
விங்கிதத்துடனேநோக்கியிருந்தனனிமைப்பிலாதான். (௯௪)

அணங்கனசாயலாளையப்புறங்கரந்துவைத்த
மணங்கமழலங்கன்மார்பன்மண்டபத்திருந்தகாலைப்
பிணங்கலனணிந்ததன்னபேரெழிற்பெற்றியானெஞ்
சுணங்கநாப்புலரவந்தவ்வுயர்பொழிலூடுசேர்ந்தான். (௯௫)

வேறு.

சாந்திறன்மெழுகியதவளமாளிகை
யேய்ந்தபொற்றாணிடையிலங்குமின்னெனச்
சேர்ந்துறைபெண்ணுருக்கண்டுசிந்தையிற்
கூர்ந்தபோர்க்கொடியறைந்திக்கூறுவான். (௯௬)

என்பெருந்தவப்பயனென்றறிந்திலேன்
மின்புரைமருங்குலாய்வேட்கையிஞ்சலாற்
புன்பிழைசெய்தனன்பொறுத்திநீயென
வன்புடன்சிலப்பணியடியில்வீழ்ந்துமேல். (௯௭)

பைந்துலைக்குரும்பையைப்பழித்தகொங்கையாய்
மங்குலைப்புழுகளைவைத்தகூந்தலாய்
கங்குலிற்கால்வழிகாட்டவந்ததின்
றிங்குலப்புறமெனதாவியீயவோ. (௯௮)

கிஞ்சுகமலர்ந்து தின்கிள்ளைவாய்மையா
லஞ்சலென்றோருரையளித்தல்காண்கிலே
னஞ்சனவிழிக்கடைநயந்தபார்வைகொண்
டெஞ்சுமென்னுயிரினையெடுப்பதென்றுநீ. (சுகூ)

வழிபடுதெய்வமுமற்றுமுற்றுநீ
யிழிபடுபிறர்முகமென்றுநோக்கலேன்
கழிபடருற்றதென்காமநோயெனு
மொழிபலகூறினன்முகம்புகுந்துளான். (எ0)

கீசகனிம்முறைகிளந்தபற்பல
வாசகங்கேட்டலுமலங்கொணெஞ்சுடைப்
பூசகர்பூசைகொள்ளாதபுன்பவ
நாசகக்கடவுள்போனகைத்துநோக்கியே. (எக)

பெண்ணுடையுருக்கொளும்பெற்றமாமகன்
கண்ணுடைப்பொறியெழுங்கனலின்வந்திட
மண்ணுடைக்காவலன்மைத்துனன்றனை
யெண்ணுடைக்கைகளாலிருகைபற்றினான். (எஉ)

பற்றினன்பற்றியபாணியாலெழச்
சுற்றினன்கறங்கெனத்தூணமொன்றினோ
டெற்றினன்சென்னியையெடுத்ததன்வினை
முற்றினனெடும்பெருமூச்சனாகியே. (எங)

வீமனைப்பிடித்தகைவிலக்கிமற்றவன்
மாமுகத்திருகையுமாறிமோதினன்
றீமுகத்தவனையச்செம்மன்மீளவுஞ்
சாமுகத்தவனெத்தள்ளிவீழ்த்தினன். (எச)

ஓரொருகுத்தொருவுருமுவீழ்ந்தென
மேருவொடொத்ததோள்வீமன்குத்தனு
மீரிடத்திலும்விலாவெலும்புநெக்கன
கூருகிர்த்தலைகளாற்குருதிகக்கவே. (எரு)

கேளொடுகெடுதருகீசகன்கழற்
றாளொடுதாளுறத்தாக்கிமற்கெழு
தோளொடுதோளுறந்தோய்ந்துகன்னல்வில்
வேளொடுவெருநலம்விஞ்சமேவினன். (எசு)

தாழ்வரைத்தடக்கையாற்றையலாளைநிர்
காழ்வரப்பொருதிறற்காளைதன்னையுஞ்
சூழ்வரச்சூறையிற்சுற்றிப்பார்மிசை
வீழ்வரப்புடைத்தனன்மிடல்விஞ்சினன். (எஎ)

விழுந்தவன்மீளவும்வெய்துயிர்த்தன
னெழுந்துதன்பகைவனைதிருண்டகுஞ்சியைப்

யழுந்தவல்விரல்களாற்சுற்றியாய்மரக்
கழுந்தெனப்புடைத்தனன்கைகள்சேப்பவே. (௭௮)

புடைத்தனனிவனவன்புடைத்தகைகளை
விடைத்தனனகற்றிமெய்ம்மேவுபூதியுந்
துடைத்தனனாகியத்தோன்றல்வாயினை
யுடைத்தனனொருகையாலொருகைபற்றியே. (௭௯)

வீரமும்வலிமையும்விரகுமொத்தவர்
தீரமுந்தெளிவுநாஞ்செப்பற்பாலவோ
நேரமுஞ்சென்றதுநிசையெனுமிரு
கூரமுஞ்செற்றமுமுடையதோன்றலே. (௮0)

மன்னவன்மைத்துனன்மார்பொடிந்திடச்
சென்னியுந்தாள்களுஞ்சேரவொன்றிடத்
தன்னிருசெங்கையாற்றுக்கிவான்றசை
துன்னியமலையெனச்சுருக்கினானரோ. (௮௧)

மாற்றினனவன்பெருமைபலாவிபைக்
கூற்றினார்கைக்கொளக்கொடுத்துத்தன்சின
மாற்றினனத்திறலார்கொல்வல்லவர்
காற்றினல்வருதிறற்காளையல்லதே. (௮௨)

பண்ணியவினைகளின்பயனலாதுதா
மெண்ணியகருமமற்றியாவரெய்தினார்
திண்ணியகீசகன்செய்ததீங்கிவன்
புண்ணியமாமதாற்புகல்வதென்கொலாம். (௮௩)

செங்கைகாலுடலொடுசென்னிதுன்றிட
வங்கையாலடக்கிநின்றநேகமாயிரம்
வெங்கையானையின்மிடல்வீமன்வெப்பன
கொங்கையாடன்னையுங்கூவினானரோ. (௮௪)

பூங்கொடியனையவள்புறவடிப்புறத்
தோங்கியகீசகனுடற்பிழம்பினை
நீங்கியவாய்மைகணிகழ்ந்ததன்னவே
பாங்கினில்வைத்தடற்பவனன்மைந்தனே. (௮௫)

விடுங்குழைமாமயமொன்றுவேறுடன்
பிடுங்கினன்கைகளாற்பிசைந்துதீட்டுச்
சுடுங்கொலென்றஞ்சிலன்சுவாலைசெய்தவா
னெடுங்கணாள்கண்டுதன்றுயர்நீங்கவே. (௮௬)

வேறு.

வாசமென்குழன்மாதுநல்லாயுனை
யாசைகொண்டவரிப்படியாவர்கா
ணேசின்மங்கைநல்லாயினியேகென
மாசிலானுமடைப்பள்ளியெய்தினான். (௮௭)

தோட்டுமென்மலர்ச்சோலையினுழைதையு
மோட்டுவன்காழ்ட்டியினுழைதையு
மாட்டுவண்சுதைமண்டபத்தோதையுங்
கேட்டுணர்ந்தனர்கீசகன்றம்பிமார். (அஅ)

தொய்யிலாதிசுதேட்டிணைக்கொப்பனை
கையிலாரழுகேறக்கவின்செயுந்
தையலாள்பொருட்டாகத்தனக்குறு
மையலான்மிகவாடிவருந்தினன். (அகூ)

வண்டறுதமலர்க்குழல்வல்லியைக்
கண்டகாவிலிக்கங்குற்பொழுதிடைச்
சண்டவேகக்களிறன்னதன்மையான்
கொண்டமாவிற்குறுகினன்போலுமால். (கூ0)

தூவிவாசந்துளிமதுச்சோலையி
லேவலாலியற்றும்மெழிற்பாவைமெய்
காவலாகியகந்தருவப்பெயர்த்
தேவரால்வெஞ்செருவுளதானதோ. (கூக)

அழிந்தகீசகனன்றிமற்றுண்டென
மொழிந்ததம்பியர்நூற்றொருநூழுவருங்
கழிந்ததீயுமிழ்கண்ணினராயுயி
ரொழிந்துபோதுமென்றுன்னினரோடினர். (கூஉ)

நகரியெங்கும்வெருவரநள்ளிரு
ணுகருமாறுபன்னூறொளித்தீபமோ
டகருநாறுதண்காவிலரும்பக
ளிகருமென்னநெருங்கினர்நேடினர். (கூங)

சுதைநிலாவொளிசூழ்மண்டபத்திடைச்
சிதையுமெய்யொடுஞ்செம்பொற்சிலம்பெனக்
கதைவலான்வெங்கடுங்கொடுங்கைகளால்
வதைசெய்தம்முன்வடிவுகண்டார்களே. (கூச)

பழுதுடைப்பெரும்பாதகன்மாண்டமை
தொழுதுரைத்துச்சுதேட்டிணைதன்னொடு
மழுதாற்றியயலறியாவகை
யெழுதழற்கணிடுவதற்கெண்ணினார். (கூரு)

எண்ணிலாமனத்தெம்முனையெண்ணுடை
விண்ணுளார்சிலர்வீத்ததற்கேதுவாம்
வண்ணமாமகடன்னையும்வன்னியா
லண்ணலோடுமடுதுமென்றார்களே. (கூகூ)

சொல்லுமாடவர்சொல்லினாலயினுங்
கொல்லுமோகனருஞ்பெற்றகோதையை
மல்லன்மாலையினார்வந்துபற்றலு
மல்லல்கூரவாற்றினளாலவள். (கூஎ)

வெருவருங்கருங்கங்குலில்வெங்கொலை
நிருபவெண்ணைநெருப்பிடைவீழ்ந்துவான்
கருதினார்கண்மெய்காக்குங்கடவுள்காள்
வருதிரென்றுகண்வார்புனல்சோரவே. (கூஅ)

மடைப்பெரும்பள்ளியெய்தியமாருதி
கிடைப்பதன்றிக்கிளர்பெரும்போரெனத்
*துடைப்பரும்பவனத்தனல்சோர்தரப்
புடைப்பவோடினன்போர்மதமாவனன். (கூகூ)

அகப்பொழிற்கண்டவம்மரம்யாவையு
மிகப்பிடுங்கினன்வேரொடுங்கோட்டொடு
முகப்புடைத்தனனோடத்தொடங்கினார்
தகச்செயாமதிக்கீசகன்றம்பியார். (க00)

போனபோனதிசைதொறும்போய்த்தொடர்ந்
†தானவானவனைக்கவக்கோட்டினான்
மானமும்மவராவியும்வாங்கினா
னேனையோர்களுந்தம்முனைடைந்திறார். (க0க)

துவன்றுகற்புடைத்தோகையைவிட்டுமுன்
னுவன்றகீசகர்நூற்றொருவரு
மவன்றன்வாகுவினழிவுண்டபின்
கவன்றதாலக்கடிநகரெங்குமே. (க0உ)

கற்கும்யாழுடைக்கந்தருவர்க்கெதிர்
நிற்பரோவுடனேர்பொரமானவர்
கிற்குமைந்துடைக்கீசகர்பாவமுந்
தற்கினன்மடிந்தார்தகவொன்றிலார். (க0௩)

என்றுமாநகர்யாவுநடுங்கிடத்
துன்றுகங்குலிற்சோரர்தம்மாருயிர்
பொன்றுவித்தபொருநனும்பூவையுஞ்
சென்றுதத்தமசேர்விடநண்ணினார் (க0ச)

கரியகங்குல்கனையிருட்போர்வையோ
டரியவந்தவிருள்வலிதன்னினும்
புரியினன்றுபுரிந்தவப்போரும்வன்
கிரியின்மன்னுங்கிளர்விளக்கானதே. (க0ரு)

* துடைப்பரும்புவனத்தினிற்சோர்தர என்றும் பாடம்.

† ஆனைமானவனக்கொடுங்கோட்டினன் என்றும் பாடம்.

புலியினும்பெரும்போரிற்றனித்தனி
வலியராகியமைத்தனர்யாரையும்
பலியிடுங்கந்தருவரைப்* பார்க்கவே
மெலிவுழந்தனன்விற்கைவிராடனே. (க0சு)

காண்டகுந்தமவேடங்கரந்துறை
யாண்டுசென்றதினிச்சிலநாளென
மீண்டுதோன்றுதுமென்றுவிரதராம்
பாண்டுமைந்தரும்†பான்மையினண்ணினார். (க0எ)

கீசகன்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் உககஅ.

---

# நிரைமீட்சிச்சருக்கம்.



தொழுவார்தம்வினைதீரமுற்கோலமாய்வேலைசூழ்பாரெயிற்
றுழுவானைநன்னாமமொன்றாயினுங்கற்றோருநவோதினார்
வழுவாதசுரராகநரராகபுள்ளாகமாவாகபுன்
புழுவாகவொன்றிற்பிறந்தாலுநரகிற்புகார்காணுமே. (க)

மூதாரழற்பாலைவனமுந்தடஞ்சாரன்முதுகுன்றமுஞ்
சூதாடியழிவுற்றடைந்தோர்கள்சரிதங்கள்சொன்னோமினிப்
பாதாரவிந்தத்துமருவார்‡விழக்கொண்டுபாராளும்வெங்
கோதார்மனத்தோன்விராடன்றனிரைகொண்டகோள்கூறுவாம். (உ)

ஈராறுமொன்றுஞ்சுரர்க்குள்ளநாள்சென்றவினிநம்முடன்
பாராளவருமுன்னராடலைவருறைநாடுபார்மின்களென்
$றோராயிரங்கோடியொற்றர்விடுத்தானவ்வொற்றர்களும்
வாராழிசூழெல்லையுறவோடிவிரைவின்கண்வந்தார்களே. (ங)

காடென்றுமலையென்றுநதியென்றுகடலென்றுகடலாடைசூழ்
நாடென்றுநகரென்றுநாடாததிசையில்லைநாடோறும்யாந்
தோடென்றுதாதென்றுதெரியாதுமதுமாரிசொரிமாலையாய்
நீடென்றுவலமேவுமவனிக்குளவரில்லை§நின்பாதமே. (ச)

முன்னொற்றையிருசங்கமுடனூதவெதிர்சென்றுமுனைவெல்லுமா
மன்னொற்றரிதுகூறமந்தாகினிமைந்தன்மகன்மைந்தனுக்
குன்னொற்றருணர்தற்குவருமோவறன்காளையுறைநாடுகார்
மின்னொற்றுமழையுண்டுவிளைவுண்டெனத்தேடும்விரகோதினான். (ரு)

---

* பற்றவே என்றும் பாடம்.
† பாவையுமெண்ணினார் என்றும் பாடம்.
‡ விழக்கண்டு என்றும் பாடம்.
$ ஓராயிரம்பேர்களொற்றர் என்றும் பாடம்.
§ நின்னாணையே என்றும் பாடம்.

ஒற்றுளிலொருவன்பணிந்தென்றுமெவ்வாழ்வுமுண்டாகியே
விற்றுணைவெம்போர்விராடன்றன்வளநாடுமேம்பட்டதான்
மற்றாழ்புயக்கீசகன்றானுமொருவன்ன*மகள்காரணத்
திற்றானெனுஞ்சொல்லுமுண்டென்றுநிருபற்கெடுத்தோதினான். (௬)

வண்டார்விராடன்றன்வளநாடுதண்டான்மலிந்தேதொறுக்
கொண்டாலவன்சூழவிற்சூழும்வினையங்கூறிப்போரிருப்
புண்டாகினிரைமீளுமின்றுகின்மீளாதெனனுட்சோளிதல்
றெண்டாழுமிதயத்துநிருபற்குரைத்தானிரவிமைந்தனே. (௭)

தக்கோர்தருஞ்சொற்கள்கேளாததுரியோதனஞ்சொல்லினான்
மிக்கோர்மிலைச்சுஞ்செழுந்தாமவிறல்வெட்சிமிலைந்தோளினான்
றிக்கோதையெழவிம்மமுரசங்களாசானதிரிகத்தர்கோ
†னக்குரோணிபடையோடுபோயானடித்தானவன்சார்பிலே. (௮)

கரைகாணவரிதானகடலொத்தவெஞ்சேனைகைசூழவுந்
தானைகாவல்பெறுதோளினண்மைப்பெருங்கேளிதற்சூழவும்
விரைகாலுமலரோடையெனுமாறிருக்கும்விராடற்குநன்
னிரைகாவனின்றோர்பணிந்தோதினார்தெவ்வர்நிரைகொண்டதே. (௯)

செருமிக்கபடையோடுசதியாகமதியாதுதிரிகத்தர்கோ
‡னிருமிக்கவொட்டாதவென்பூமிதனில்வந்துநிரைகொள்வதே
பருமிக்கமதயானைதேர்வாசியாளின்னபண்செய்புமென்
றுருமிக்கமுகில்போலுரைத்தானெ§ரக்குரோணிபுனைதானையான். (க௦)

ஒண்டேளிவானம்புதைக்கப்பஃறியசாலமொடெட்டிடத்
திண்டேசியணியாகநிரைகொண்டவெஞ்சேனைசென்றெய்தினான்
ஞெண்டூரும்வயறோறும்வளைநித்திலஞ்சிந்திநிலவூரவே
வண்டூதமலருந்தடம்பொய்கைசூழ்மச்சவளநாடனே. (கக)

உட்பேடியாய்வைகும்விற்சானையல்லாதவொருகால்வரு
நட்பேறுபூபாலனுடனேகினார்போர்க்கலங்காணவே
கொட்பேறிநிரைகொண்டவெஞ்சேனையுஞ்செல்கொடுஞ்சேனையும்
பெட்பேறியமர்செய்யமுன்னிட்டதுருசேனைபின்னிட்டதே. (கஉ)

மெய்க்கொண்டபுண்ணோடுதன்சேனைநில்லாமல்வென்னிட்டபின்
கைக்கொண்டநிரையைக்கடத்திப்பொலம்பொற்கழற்காலினான்
செய்க்கொண்டகழுநீரலங்கற்கரத்தைத்திருத்தாமன்மேன்
மைக்கொண்டலெனவில்வளைத்தாறுபத்தம்புமழைசிந்தினான். (கங)

மாமச்சவுடல்புன்புலான்மாறிவண்காவிமணநாறுமக்
கோமச்சவளநாடனுங்கொற்றவரிவிற்குனித்தைந்துசெந்
தாமச்சரங்கொண்டுதேர்பாகுகொடிவாசிதனுவுந்துணித்
தாமச்சமுறமற்றவன்கோலமார்பூடம்பேவினான். (கச)

---

* மகள்காதலால் என்றும் பாடம்.
† அக்கோணி என்றும் பாடம்.
‡ நிருமிக்கவெட்டாத என்றும் பாடம்.
§ அக்கோணி என்றும் பாடம்.

தனைத்தேராழித்தேரானைநிரைகொண்டுபோகின்றதனுவீரனுந்
துணைத்தேரும்வேறொன்றுமேல்கொண்டுநாலைந்துதொடையேவியே
வினைத்தேரும்வயமாவும்வெம்பாகும்விழவெய்துவின்னாணினான்
முனைத்தேர்முகத்திற்பிணித்தானவன்சேனைமுகமாறவே. (௧௫)

வேறு.

திண்டிறற்சிலைவிராடனைத்தேரொடும்பிணித்துக்
கொண்டுபோதலுங்குருகுலக்கோமகன்முனிவன்
கண்டுதன்றிருத்தம்பியைக்கடைக்கணித்தருள
மண்டுதீயெனவெழுந்தனன்மடைத்தொழில்வல்லான். (௧௬)

உகத்தினீறுதோறுறைதயோடுறைதயாந்தாதை
நகத்திறலுயர்நகங்களைநறுக்குமாபோலத்
திகத்தபூபதிதேரினைவெறுந்தேராற்
றகர்த்துவில்லொடுமகப்படுத்தினனவன்றனையும். (௧௭)

வீரியந்தனக்கொருவனும்விராடனையொருபொற்
றேரிலேறுகென்றேற்றியத்தேரினிற்றிகத்தன்
சோரிபாய்தடந்தோள்களைவடத்தினாற்றுவக்கி
மூரியேறெனமீண்டனன்முறிந்ததச்சேனை. (௧௮)

பொருமுகத்தினிற்புனைவனைப்புயமுறப்பிணித்து
வெருமுகத்தினில்வீடுகொள்வீமனைவிராடன்
செருமுகத்தினிலெனக்குநீசெய்தபேருதவிக்
கொருமுகத்தினுமில்லைகைம்மாறெனவுரைத்தான். (௧௯)

சேவலானெனத்தபித்தியனனையவத்திகத்தர்
காவலானையக்கான்மகன்பிணித்தமைகண்டு
மாவலான்வயமாப்பதினாயிரம்வெளவக்
கோவலானவன்கொண்டகோமீளவுங்கொண்டான். (௨௦)

துன்னலன்றனைத்தோளுறத்துவக்கிமுன்றந்த
பன்னுநான்மடைப்பலாயனற்கண்டுபாவித்தாங்
கன்னகாலையிலருக்கனைத்தேரொடுமணைத்து
மன்னுதன்றிசைவன்சிறைப்படுத்தினன்வருணன். (௨௧)

கங்கனென்றுதன்னருகிருந்தருளியகடவுட்
டுங்கமாமுனிசொற்படிதோள்வடநெகிழ்த்துச்
சிங்கமன்னவத்திகத்தனைச்செல்கெனவிடுத்தா
னங்கமாமதிலபோத்திமன்றேருமொன்றளித்தே. (௨௨)

போரணிப்படையொடுமவன்போனபின்றனது
தோரணிப்பெருஞ்சேனையைரவிகுலதிலகன்
போரணிப்படவகுத்துமற்றியாரினும்பெரியோ
னீரணிப்புடைவருமெனக்கங்குலங்கிருந்தான். (௨௩)

கெட்டவெம்படைகெட்டமைசுயோதனன்கோமா
முட்டவெண்டிசாமுகங்களும்பேரிகைமுழங்கத்
தொட்டபைங்கடற்சூரியன்றோன்றுமுன்றோன்றி
வட்டமாமதில்விராடனூர்*வடதிசைவளைந்தான். (௨௪)

வளையநாடொறுமன்னவன்வருநிரைபரப்பி
விளையுநன்பெருவிளைவெலாம்வெங்கனல்சொளுந்தி
யளையுமாமணியானிரைகவர்தலுமாய
ருளையவோடிவந்தூர்புகுந்தத்தரற்குரைப்பார். (௨௫)

குடைநிறைப்பனகுவிமுலைக்கோநிரைமீட்டான்
றிடனுடைப்புயமன்னவன்றென்றிசைச்சென்றான்
வடதிசைப்புலமுழுவதுமாசுணக்கொடியோ
னடல்வயப்படைபரப்பிற்பரந்ததையன்றே. (௨௬)

நாட்டிலுள்ளனபலன்களுங்கவர்ந்தனர்நறுந்தண்
காட்டிலுள்ளனசுரபியினங்களுங்கவர்ந்தார்
கூட்டிலுள்ளுறைகளுழனின்குஞ்சுபோலிவணீ
வீட்டிலுள்ளுறைகின்றதென்வேந்தர்மாமதலாய். (௨௭)

என்றபோதிலப்புதல்வனைப்பரிவுடனின்று
னின்றமங்கையர்தங்களைநிரைநிரைநோக்கிச்
சென்றகாவலன்வருந்துணைச்செருக்கயிற்படைதொரான்
டொன்றவேகிளைம்யெயிற்புறங்காயினென்றுரைத்தான். (௨௮)

உரைத்தவன்னையைக்கதுமெனவுத்தரன்வணங்கி
நரைத்தவோதிநின்றிருமொழிநன்றெனநகையா
வரைத்தவாரமுமாரமுமாலையுமணிந்தென்
வரைத்தடம்புயம்வளர்த்ததுமகளிர்போர்பொரவோ. (௨௯)

கனைகடற்படையுடனிரைக்கணங்கவர்ந்தவரை
முனைபடப்பொருதிமைக்குமுன்முதுகுகண்டிடுவேன்
வினைமுகத்தினையறிந்துதேர்†விசையுடன்விடவென்
னினைவொடொப்பதோர்சாரதிநேர்ந்திலனென்றான். (௩௰)

உத்தரன்புகலுறுதிகேட்டொப்பனைக்குரியாள்
கொத்தரம்பொருகூரயிற்குமரனைக்குறுகி
வித்தரம்பெறுதேர்விடுமவிசயனுக்கிவனொன்
றுத்தரம்பெறுபேடியைக்காட்டினளன்றே. (௩௧)

என்றபோதவன்பயந்தவட்கியம்பியதுரைப்ப
நின்றபேடியைநிரைவளை தழுவிநீசெரில்
வென்றுபோர்முனையரசரைவிடலைவெய்தீண்டுந்
துன்றுதாரிணையெனவியந்தின்னவைசொன்னாள். (௩௨)

---

* வடாதுறவளைந்தான் என்றும் பாடம்.

† விரகுடன் என்றும் பாடம்.

நாடிவாசியினல்லனநான்கவைபூட்டித்
தேடியாயுதஞ்சிலைமுதற்றெரிந்தவைகொண்டு
கோடிகோடிபைங்கோதையர்குழீஇயினர்வாழ்த்தப்
பேடிதேர்விடச்சென்றனன்சுதேட்டிணையிள்ளை. (௩௩)

விலங்கன் மாமதில்களும்புறவீதியுங்கடந்தாங்
கிலங்குநேமியொன்றுடையதேரென்னலாந்தேர்மேற்
றுலங்குபேரொளியருக்கனிலுருத்தெழுதோற்றத்
தலங்கலுத்தர னுத்தரதிசையைவந்தடைந்தான். (௩௪)

*விண்கொளாமதிமேன்மைகொண்மீனினமென்ன
மண்கொளாவிறன்மன்னுடைவரம்பில்வான்படையை
யெண்கொளாமனத்திராகவன்றிருக்குலத்திளைஞன்
கண்கொளாவகைபுகுந்து தன்கண்ணுறக்கண்டான். (௩௫)

கைந்நடுங்கவுங்கானடுங்கவுங்கருத்தழிந்து
மெய்ந்நடுங்கவுநாப்புலர்ந்துயிர்ப்புமேல்விஞ்சிச்
சொன்னடுங்கவுஞ்சுடர்முடிநடுங்கவுஞ்சோர்ந்தான்
மைந்நெடுங்களிற்றரனுடைவிராடர்கோன்மைந்தன். (௩௬)

அஞ்சலஞ்சனீபகைவரையாருயிர்படுக
றஞ்சலென்றிவையிரண்டலாற்றுணிவுவேறுண்டோ
வெஞ்சமந்தனில்வந்துபுண்படாதினிமீண்டால்
வஞ்சநெஞ்சுடைவஞ்சியரென்சொலார்மறவோய். (௩௭)

நிலையுமுட்டியுநிலைபெறநின்றுநேர்படத்தின்
சிலைவளைத்துவெஞ்சிலீமுகஞ்சிற்சிலதொடுத்து
மலையிலக்கெனயாரையுமலைந்திடுமலைந்தா
லலைகடற்புவியரசரிலாரெதிர்நிற்பார். (௩௮)

தூண்டுமாவிவைசொரிமதக்களிறிவைதுரங்கம்
பூண்டதேரிவைபதாதிமற்றிவையெனப்புகல
வீண்டுநின்றவையாவையுமியாவெனத்தெரியா
மீண்டுபோவதேயுறுதியென்றனனிகல்வீரன். (௩௯)

வெயர்த்தமேனியைநறும்பனிநீரினால்விளக்கி
யயர்த்துநீமுதுகிடாதொழியிமைப்பொழுதையா
வுயர்த்தபல்கொடிப்பகைஞரைத்தனித்தனியோட்டிப்
பெயர்த்துநல்குவேனிரையுமென்றுரைத்தனள்பேடி. (௪௦)

கொடித்தடந்தனித்தேரினின்றுகைத்துமுன்குதியா
வடித்தலம்பிடரடித்திடவோடலுமவனைத்
தொடித்தடம்புயமிரண்டையுந்தொடர்ந்துபோய்த்துவக்கிப்
பிடித்துவந்தொருநொடியினிற்றேருடன்பிணித்தான். (௪௧)

* விண்கொளாதகோளுள் விறன்மீனினமென்ன என்றும் பாடம்.

பிணித்ததேரினைப்பெற்றபூம்பிற்படக்கடாவித்
திணித்தநம்பெருநம்பொதும்பரிற்சேர்த்திபசிலையுந்
துணித்துமேவலர்முடியுகுசோரிதோய்தொடையுங்
*கணித்தவெல்லையிற்றொண்டுமீண்டயர்க்களங்கலந்தான். (௪௨)

எரிப்புறத்தருத்தருபடையாவெனவினவக்
கிரிப்புறப்பெருங்காளுறைகிரீடியவென்னத்
தெரிப்புறப்புகலெவ்வயிற்சேர்ந்தனனவனென்
றரிப்புறத்தடங்கண்ணிணைக்கேட்டனனவனும். (௪௩)

கிரீடியெங்குளனென்றெனைக்கேட்டநீகேண்மோ
விருடியாகிநின்றுதையோராசனத்திருக்கும்
புருடனிப்பதிபுகுந்தநாள்வந்துடன்புகுந்தோ
ரலிடமானதன்விதியினாற்பேடியுமானான். (௪௪)

யாண்டுசென்றிலதின்னமும்பீரிருகடிகை
வேண்டுமாவினியீண்டையவ்விசயனுந்தோன்று
மீண்டுபோகலைவிடுவிடுவிரைபரித்தடந்தேர்
தூண்டுநீயெனத்தோளிலத்துவக்கையும்விடுத்தான். (௪௫)

அறிந்துதாள்விழுந்தெழுந்துபின்னுக்கவனருளாற்
செறிந்தமால்பெருஞ்சிறப்பையச்சிறுவனும்பெற்றுப்
பிறிந்தபற்பலபோணிநால்வகைப்படையு
முறிந்துபோகவத்தேர்விடுதொழிலினின்றுண்டான். (௪௬)

ஓடினானுமித்தேர்விரைந்†தூர்பவனென்றும்
பேடிநாமுதலையுமம்பெருந்தகையென்று
நாடினார்பலர்நந்திபாவர்த்தநாண்மாலை
சூடினானெடுஞ்சேனையிற்றுரோணனேமுதலோர். (௪௭)

பேடியன்றுதன்பெண்மையையாண்மையாப்பிறர்கொண்
டாடவந்தவெஞ்சாபமுந்தொடிக்கையிலாக்கிக்
கோடியம்புகளோரொருதொடையினிற்கோத்து
வீடுவிப்பனியஞ்சிடாவிடுகதேரென்றான். (௪௮)

என்றபோதவன்றேரினையிமைப்பினிற்செலுத்தச்
சென்றுபோர்முனைச்சிலைவிடுகிலீமுகங்களினாற்
கொன்றபோர்மன்னரிறிலர்குருகுலத்தவராய்
நின்றபோர்முடிமன்னருஞ்சலித்துளமெலிந்தார். (௪௯)

அன்றுபோலருச்சுனனம்பிகாபதியாற்
றுன்றுபோர்புரிதவத்தினாற்சுடுகணைபலபெற்
றன்றுபோரினிலவுணரையமருக்காக
வென்று‡போனகநுகர்ந்துபொற்றருமலர்வேய்ந்தான். (௫௦)

---

* கணித்தவேலையில் என்றும் பாடம்.

† ஊர்பவனம்மா என்றும் பாடம்.

‡ பொன்னகரமர்ந்து என்றும் பாடம்.

தன்னிலத்தினிற்கூறுமுயறந்தியின்வலிதெதன்
றென்னிலத்தினிற்பழமொழியறிந்திலையிறைவ
வெந்நிலத்தினுமுனக்கெளிதாயினுமிவர்நந்
நன்னிலத்தினில்வரவமர்தொடங்குதனன்றால். (ருக)

என்றுகூறினன்விதுரனுமேனையங்கருகு
நின்றவீடுமன்றுரோணனுநினைவிதுவென்று
ரனுநாகவெங்கொடியவன்கொடியநெஞ்சழன்றுன்
குன்றமாயினுநீறெழுமருகுறக்குறுகின். (ருஉ)

தேருமங்கொருதேர்தனித்தேரின்மேனின்று
வீரவெஞ்சிலைவளைத்தகைவீரனும்பேடி
யாருநெஞ்சழிந்தஞ்சுவதென்கொலென்றிசைத்தான்
சூரன்மாமகனாகியசூரிற்சூரன். (ருங)

கொண்டகோநிரைகோவலர்கொண்டுமுன்போகத்
தண்டுநிற்கெனத்தம்பியரனைவருந்தானுந்
திண்டிறற்பெரும்பேடியைத்தேர்மிசைக்கண்டு
மீண்டுவீரெனக்கூறியேசுயோதனன்மீண்டான். (ருச)

மானமாமுடிமன்னரைவிலக்கிவல்விரைந்து
கோநிரைக்குலங்கொண்டுபோங்கோநிரைதுரந்து
போனபேடிவெம்பூசலும்பொழுதுறப்பொருது
தாநிறத்தினன்றுடைத்தொழுக்கனைநீட்டான். (ருரு)

முந்தவான்றொறுநீட்டலுமுங்கவர்பொதுவர்
வெந்தநெய்யெனவாரவமடங்கினர்மிகவு
மந்தநெய்யிளிற்பாற்றுளியுகுத்தெனவார்த்தார்
வந்தமச்சர்கோமகனொடும்வந்தகோபாலர். (ருசு)

பாலெடுத்தபொற்குடங்கள்மடியினபருவச்
சூலெடுத்தநல்வயிற்றினமழவிடைதொடர்வ
கோலெடுத்தினங்கோவலர்கூவினர்துரப்ப
வாலெடுத்தனதுள்ளிமீண்டோடினவனமே. (ருஎ)

கடிகைகாலவன்சென்றபின்கடைசிவந்தகன்ற
நெடியகண்ணியன்றிட்டவெஞ்சாபமுநீங்கக்
கொடியின்மீதெழுமனுமனைக்குறிக்கவக்கொடியு
முடிகொடன்றனியிரதமுமுன்வரக்கண்டான். (ருஅ)

உரியதேரினைமீதுகொண்டுத்தான்செலுத்தக்
கரியமேனியன்செய்யதாமரைத்தடங்கண்ணன்
புரியவாங்கியசிலையினனின்றனன்பொலம்பொற்
கிரியின்மீதெழுமரகதகிரியெனக்கிளர்ந்தே. (ருகூ)

படுங்குறும்பணிபுதைத்தவிர்பரிதிதன்னுருவ
மொடுங்குமாறெனவொளித்ததன்பேட்டுருவொழித்து
நெடுங்கொடுங்கணைநிருபன்வெஞ்சேனையின்வேந்தர்
நடுங்குமாறுமுன்றோன்றினனரனெனுநாமன். (சு0)

செருச்செய்வான்வருசேனைவெண்டிரையைப்புக்கடப்பான்
பருச்சிலம்பினின்றுகைதருபாவனைபோல
வுருச்செழுஞ்சுடரெறிப்பநின்றுலாவின* னுண்மைக்
கருச்சுனன்றடந்தேர்க்கொடியாடையிலனுமன். (சுக)

மருமிகுந்தொடைத்தடம்புயமகபதியதலை
பெருமிதம்படவளைத்தவிற்பிறங்குநாணொலியாற்
செருமியெங்கணுங்கரிபரிதேர்பிசைநின்றோ
ருருமின்வெங்குரல்கேட்டகோளுரகரோடொத்தார். (சுஉ)

குறித்தசங்கொலிசிங்கநாதத்தொலிதுவனிற்
செறித்தநாணொலிசெவிப்படச்சிந்தனைகலங்கிப்
பொறித்தபாவையினுத்தரன்பொறிமயக்குற்று
மறித்துள்வீழ்ந்தனன்மாவிடுதொழிலையுமறந்தே. (சுங)

தாழ்ந்தவாடையினுயர்கொடித்தண்டுடைத்தேர்மேல்
விழ்ந்தபாகனைமீளவும்விரகுறத்தேற்றிச்
சூழ்ந்ததன்பெருந்துணைவனைச்சுதினொற்றுரந்து
வாழ்ந்தமன்னன்மேலேகினான்வரிசிலைவல்லான். (சுச)

மச்சநாடன்மாமதலையம்மன்னவன்மொழியா
லச்சமற்றிருந்தனனுகோலநுனைவிற்கொள்ள
வுச்சவானிடைப்பகலவனூர்ந்ததேர்பூண்ட
பச்சைவாசியினோடினசுவேதவெம்பரிமா. (சுரு)

உரவினால்வடபேருவைக்கொடுமுடிபொடித்து
விரவிவெண்பெருநாகத்தின் [illegible]
பரவினிங்காயான்வெல்வதென்னுறவலிபன்பதாகை
யரவையற்றிவன்பதாகையிலனுமன்வந்திருந்தான். (சுசு)

வட்டமாகவில்வளைத்தெதிர்மண்டலநிலையுந்
தொட்டவாளியானடிமுதன்முடியுறத்துளைப்புண்
டிட்டமாமணிக்கவசமும்பிளந்தெதிர்ந்துள்ளார்
பட்டொழிந்தனரொழிந்தவர்யாவர்புண்படாதார். (சுஎ)

வேகவற்றியநதியனவிதநடைப்புரவி
பாகவற்றினைத்தலையறமலைந்துபாழ்படுத்தி
மாகவற்றினிற்பொய்த்தசூதாடியவஞ்ச
நாகவற்றியபுன்மொழிநிருபனைநகைத்தான். (சுஅ)

* உண்மை, யருச்சுனன் என்றும் பாடம்.

பாகும்வாசியுமமைந்ததோர்தேர்மிசைப்பாய்ந்து
மாகுசூழவுந்தப்பியவரிதிறமாபோ
லேகுகின்றபேரிராசராசனையெதிர்ந்தகைந்து
கோகுநட்டிடுதனஞ்சயனிவையிவைகூறும். (௬௯)

வேறு.

கார்முகங்கைத்தலத்திருப்பக்கைம்மிகு
போர்முகந்தனினினீபுறந்தந்தேகினா
னூர்முகக்களிற்றின்மேலுலாவும்வீதியின்
வார்முகக்கனதனமாதரென்சொலார். (௭௦)

இருபுறஞ்சாமரமிரட்டத்திங்கள்போ
லொருகுடைநிழற்றவிவ்வுலகநின்னதா
மருவலர்கைதொழவாழுகின்றநீ
பொருமுனைகாண்டலும்போதல்போதுமோ. (௭௧)

உன்பெருந்துணைவரோடுன்னையோர்கணத்
தென்பெருங்கணைகளுக்கிரைகளாக்குவேன்
வன்பெருங்கொடிமிசைமடங்கலேற்றினான்
றன்பெரும்வஞ்சினந்தப்புமேகொலாம். (௭௨)

எங்களைக்கானில்விட்டிராவியேகவெண்
டிங்களைப்போனெடுந்திகிரியோச்சினீர்
சங்களை* பயில்வளநாடன்றண்டினா
லுங்களைக்களப்பலியூட்டுநாளையே. (௭௩)

இரவலரினையவரேத்துநாவலர்
விரவியதூதுவர்விருத்தர்வேதிய
ரரிவையர்வெஞ்சமரஞ்சுவோர்பெருங்
குரவரென்றிவர்களைக்கோறல்பாவமே. (௭௪)

பற்பலவுரையிவன்பகருமேல்வையிற்
சொற்பயினான்மறைத்துவசன்வீடுமன்
கற்பகநிகர்கொடைக்கன்னனாதியோர்
மற்புயநிருபனைவந்துகூடினார். (௭௫)

மின்னுடன்மின்மினிவெகுளுமாறுபோற்
றன்னுடனிகரிலாத்தடக்கைவண்மையான்
மன்னுடனிகல்வதுவார்த்தையன்றினி
யென்னுடன்மலைதிநீயெனாக்கூறினான். (௭௬)

கரக்கவுண்மதம்பொழிகாய்களிற்றைவிட்
டுரக்கொடுவரியின்மேலோடும்யாளிபோ
†னிரக்குமந்நிருபனுநிற்கவந்துபோ
ரிரக்குமக்கன்னன்மேலிரதமேவினான். (௭௭)

---

* பயில்வயனுடன் என்றும் பாடம்.

† நிரைக்கொடுவெம்படைநிற்க என்றும் பாடம்.

இரதமுமிரதமுமெதிர்ந்தபோதிரு
குரதுரகதங்களுங்குமுறியார்த்தன
வரைகருமாகருமுடன்றுகூவினார்
விரைதறுவலோத்தனர்வீரர்தாமுமே. (எஅ)

இருவருமெதிரெதிரேவும்வாளியால்
வெருவருமிருளுறவிசும்புதூர்த்தனர்
பொருவருமமர்செயும்போதுதாக்கிய
மொருவருமிளைத்தில*ரொத்தவான்மையார். (எகூ)

மற்றொருதொடையினிற்சுவேதவாகனன்
முற்றொருகணைத்தொடைமூன்றுகோல்விட
விற்றொருகணைத்தொடையிவுளிபாகுதே
ரற்றொருவினனடலாண்மைபங்கர்கோன். (அ0)

ஒருவிலிட்டோடிமற்றொரார்தேர்மிசை
மருவிலிட்டெதிருறத்தமோதிய
முருவிலிட்டனகணையொன்றுபோர்ப்பரி
வெருக்கெட்டனனவன்மீளமீளவே. (அக)

இம்முறைவந்துகூக்கெதிர்ந்துவெஞ்சமர்
மும்முறைமுறிதலுமுனிவன்மாமக
னம்முறைமுதுகிடமருக்கன்மைந்தனைச்
செம்முறைமையிற்சிலவார்த்தைசெப்புவான். (அஉ)

தேருமொன்றொருவனேதேரிலாளுமிங்
கியாருமஞ்சுதிரனை†யிகழ்ந்துரைத்தநீ
போருடைத்தேர்நிகல்போதுமோதனுந்
தாருடன்பொலிதருதாமமார்பனே. (அங)

சொல்லலாமிருந்துழிச்சொன்னசொற்படி
வெல்லலாமென்பதுவிதிக்குங்கூடுமோ
மல்லலாளியைப்பலவளைந்துகொள்ளினுஞ்
சொல்லலாமிருக்குமோகுஞ்சரங்களால். (அச)

‡கொழுந்துமம்பிலுமிகக்கொடியகூற்றினை
பழுதறாவின்றன்பகருவேலையின்
முழுதுணர்முனிவையுமுந்தைதன்னையுந்
தொழுதுபற்குனன்சிலைதொடைகளேவினான். (அரு)

தாளிணையிறைஞ்சியதனஞ்சயன்செறும்
வாளிகண்டுளமிகமகிழ்ச்சிகூரவ
மீளிமையுடையவ§வீரன்மீகெழுந்
தூளிசெய்தேரினைத்துரோணனுந்தினன். (அசு)

---

* உவமைவேறிலார் என்றும் பாடம்.
† இகழ்ந்துரைக்கநீ என்றும் பாடம்.
‡ கொழுவயிலம்பினுங்கொடிய என்றும் பாடம்.
§ வீரன்செலினகெ, தாளி என்றும் பாடம்.

### வேறு.

உந்துதேர்முனியையந்தவுதிட்டிரனிளவனேக்கிச்
சிந்தையிலன்புகூரச்சேவடிபணிந்துபோற்றி
யந்தணராசேயுன்றனருளினலடலிகீங்கி
வந்தனமென்றுசிற்சில்வாசகமியம்புவானே. (அஎ)

யாதுமொன்றறியாவென்னையிவனலாதிலையென்றிந்த
மேதினிமதிக்குமாறுவின்முதற்படைகள்யாவுந்
தீதறத்தந்தவுண்மைத்தெய்வநீயென்றுற்பஞ்ச
பாதகந்தன்னிலொன்றுன்பதயுகம்பிழைப்பதையா. (அஅ)

மன்னொடுசூழநின்றமாசுணமுயர்த்தகோவை
மின்னொடுமுருமேறென்னவெகுண்டமர்புரிவதல்லா
னின்னொடுங்கிருபனோடுநின்மகனோடுமுந்தை
தன்னொடும்புரியேன்வெம்போர்தக்கதோசாதம்பாவம். (அகூ)

அம்முனிதன்னேடிவ்வாறருச்சுனன்புகலவல்விற்
கைம்முனிவனுஞ்செஞ்சோற்றுக்கடன்கழித்திடுதல்வேண்டிந்
தெம்முனைமதியாவீரதேவர்தம்பகையைவென்ற
வெம்முனைகாணுமாறுன்வில்வலிதந்திடுகவென்றான். (கூ0)

குருவுமக்குருவைத்தப்பாக்குருகுலக்கோவுந்தங்
களருவரைத்தோளிணையறைதரப்பிறைவில்வாங்கிக்
கருவுயிர்த்தெழுந்தகாலமழைமுகில்கள்கொண்டென்ன
வொருவருக்கொருவர்வாளியோரொருகோடியெய்தார். (கூக)

அதிரதர்தம்மையெண்ணிலணிவிரன்முடக்கவொட்டா
முதிர்சிலைமுனியும்* வீரமுனிவிலாமுகனும்விட்ட
கதிர்முனைப்பவனவேகக்கடுங்கொடும்பகழியாவு
மெதிரெதிர்கோத்தவல்லாற்பட்டிலவிருவர்மேலும். (கூஉ)

வண்டுதான்மூரலுங்கஞ்சமாலையான்பயிற்றுவித்துப்
பண்டுதான்கண்டகூற்றிற்பதின்மடங்குயர்ந்தபண்பான்
மிண்டுதானவரைவென்றவிறலுடைவிசயன்வின்மை
கண்டுதானவன்றனோடுகற்பதற்குன்னினானே. (கூங)

ஏறுதேர்முரியவேதமெழுதியதுவசம்வீழத்
தாறுபாய்புரவிநான்குஞ்சாரதிதலையுஞ்சிந்தக்
கூறுபோர்†நாணியோடுகுனிசிலைதுணியப்பின்ன
ராறுகோறொடுப்பவெள்கியாரியன்முதுகிட்டானே. (கூச)

தந்தைபோரழிந்துபோனசாபலங்கண்டுவெம்பி
யிந்திரன்மதலையோடுமெதிர்த்தனனிவுளித்தாமா
முந்துறவிருவர்வில்லுமுரண்படக்குனித்தபோரி
னந்தணன்கணையான்மன்னன்வில்லிணையற்றதன்றே. (கூ௫)

---

* மூரன்முனிவிலா என்றும் பாடம்.
† நாணியற்றுக்குனிசிலை என்றும் பாடம்.

வல்வினிலழிந்து நின்முன்மன்னவைதன்னினன்று
சொல்லியகாலஞ்செல்லாமுன்னிவர்தோற்றஞ்செய்தார்
புல்லியகாளினின்னம்போகாகீபுகறியென்று
வெல்படைவேந்தன்சொல்லவீடுமன்மீண்டுஞ்சொல்வான். (௧௦௫)

செந்நெலேகன்னல்காட்டச்சேர்ந்தயற்செறுவினின்ற
கன்னலேகமுகுகாட்டுங்கங்கைநீர்நாடகேண்மோ
வின்னலேயுழந்தோர்காலமிருந்துவினியக்கந்தன்று
மென்னனோசென்றதென்றுநெஞ்சினிலுழன்றிடாதான். (௧௦௬)

ஆரவிளையுயர்த்தகோமானவ்வுரைகேட்டபோழ்தே
பாரவைமினிரவிகண்டபனிமதிபோலமாழ்கி
வரவரவறிதுமென்றுமாபெருஞ்சேனையோடு
மிரவிடையாருந்துஞ்சவெயில்வளைநகரிபுக்கான். (௧௦௭)

வேந்தனைமுதுகுகண்டவெந்திறல்வீரன்மீண்டு
போந்துமுன்வைத்தவன்னிப்பொதும்பரின்புறத்துவந்து
வாய்ந்தவாயுதங்கள்யாவும்வைத்தெழில்வடிவமாற்றி
யாந்தகவெண்ணிப்பேடியாயினனென்பமாதோ. (௧௦௮)

இவ்வெயிலெறிக்கும்பைம்பொனிலங்குதேர்மீண்டுமேகக்
கைவ்வெயிலெறிக்கும்பைம்பூட்களைதன்றேறிவேறி
வெவ்வெயிலாறும்வண்ணம்விரைந்துபோய்விராடனூரு
மவ்வெயில்சூழ்ந்தகாவினமர்ந்தனனரசரேறு. (௧௦௯)

ஆறியபசுந்தண்காவினசைவொரீஇயிருந்தவீர
னேறியகாளிற்பல்யாண்டிருந்தபினேனையாண்டு
மாறியவடிவத்தோடிவ்வளநகர்வைகினேமென்
றூறியவமுதச்சொல்லாலுத்தரற்குரைசெய்தானே. (௧௧௦)

பேடிதேர்செலுத்தச்சென்றபிள்ளையும்பெரும்போர்வென்று
கோடிதேர்முதுகுகண்டுகோநிரைமீட்டானென்றென்
றோடிநீர்சொன்மினென்றுதூதரையோடவிட்டா
னீடுநீர்பாக்குங்கங்கைநாடுடைநிருபர்கோமான். (௧௧௧)

இங்கிவனிவ்வாறப்பமுற்பகலேகியாங்கட்
கங்குலிற்சேனையோடுங்கண்படையின்றிவைகிச்
செங்கதிரெழுந்தபின்னர்த்தென்றிசைப்பூசல்வென்ற
வெங்கழல்விராடன்றானுமீண்டுதன்னகரிபுக்கான். (௧௧௨)

தடம்பதியடைந்தகாலைத்தன்மனையிருந்தபேடி
திடம்படுதடந்தேருரத்திருமகன்சென்றசெய்கை
விடம்படுவெகுளிவேற்கட்சுதேட்டிணைவிளம்பக்கோட்டாங்
குடம்புயிரின்றிவீழ்ந்ததென்னுமாறுருகிவீழ்ந்தான். (௧௧௩)

சந்தனவனமும்வாசத்தண்பனிநீரும்வீசி
வெந்திறல்வேந்தன்றன்னை*மெய்ம்மெலிவிருந்துதேற்றி
மைந்தனிப்பொழுதேவென்றுவருகுவனென்பார்நேர்ந்தா
னந்தமெய்ப்பேடியாகிலென்றனனந்தநாளன். (௧௧௪)

அறன்மகன்வாய்மைதேறியாசனுக்கிருந்தவெல்லை
மறனுடையுரககேதுவன்சமரழிந்தவாறு
முறமலைந்தொருதன்றேர்கொண்டுந்தான்வென்றவாறுந்
தொறுநிரைமீட்டவாறுந்தூதர்போய்த்தொழுதுசொன்னார். (௧௧௫)

பிதுளமுகவாரிசெவிகளிற்செறிந்ததென்னத்
தூதர்வந்துரைத்தசொல்லாற்சோகமுந்துனியுமாறித்
தாதையன்றேதுசெய்தான்றனைமொழிந்துள்ளசேனை
யாதிபரெவருமெய்திப்பண்ணலையெதிர்கொள்கென்றான். (௧௧௬)

சோரர்தங்கருவைத்தங்கள்கருவெனத்தோள்வலிந்தி
பார்வமுற்றுருகுநெஞ்சினறிவிலார்தம்மைப்போல
வீரன்வெஞ்சமரம்வெல்லவிராடனுந்தான்வென்றனைப்
போரினையென்றுமேனிபுளகெழப்பூரித்தானே. (௧௧௭)

பூழிகளடக்கிச்செம்பொற்பூரணகும்பம்வைத்து
வாழையுங்கமுகுநாட்டியணிபொலிந்தோரணநிரைச்
சூழவன்பதாகைகட்டித்தோரணம்பலவுநாட்டி
யேழுயர்மாடமூதூரெங்கணுங்கோடித்தாரே. (௧௧௮)

மகன்வருபவனும்வென்றுதானும்வருகவென்றுந்
கமழ்நறைமகிழ்ந்துவேந்தனந்தனன்றன்னைநோடா
பகழுணியடுத்துவெல்லவென்றியுந்தான்புகன்றேவா
ரிகலழிந்தென்னவிப்போரழிந்திபேடியென்றான். (௧௧௯)

என்றவன்மொழிந்தபோதிலெல்லினில்வெந்தைபோதி
வன்றிறலுரககேதுவலியழிந்துடைந்துபோக
வென்றவன்பேடியேதன்மெய்க்கரிக்ராப்போரி
னின்றுநின்சிறுவன்வெல்லவல்லனோநிருபவேறே. (௧௨௰)

பிருகந்நளையென்றேதுப்பேடியைப்பேடியென்று
கருதரியவனைமுன்னங்கானவேமேர்த்தகாலை
யொருதனித்தடம்பொற்றேர்மேற்பம்பருக்கரசுமப்ப
ரிகலையுமிதின்வென்றானென்றனனந்தநாளன். (௧௨௧)

கோடியின்கோடியானகுருக்களைவென்றசேனைதன்னை
யோடியென்புதல்வன்றானோவொருதனியொருத்தன்வென்றா
னீடியநிரையுமீட்டேமீண்டனனென்னாநீயப்
பேடியைவிறல்கொண்டாடிப்பேசுதிப்பிரமமூர்த்தி. (௧௨௨)

* மெல்லெனவிருந்து என்பதும் பாடம்.

புன்னவையானமாற்றம்புகன்றனனெனினுங்கேட்டாங்
கின்னவைநன்றுநன்றெனறிதம்படமொழிவதல்லான்
மன்னவையிருந்துநாளும்வழிபடுமாந்தர்மன்னா
சொன்னவைமறுத்துமாறுசொல்வரோசுருதிவல்லாய். (கஉந)

என்னவுமிடங்கொடாமலெதிருறவிருடிமீண்டுங்
கன்னன்விற்றுரோணன்மைந்தன்காங்கேயன்முதலினோரை
மன்னவவெல்லநின்சேய்வல்லனோவந்துசொன்னாற்
பின்னைநீதெளிதியென்றான்பிடிநடைப்பேடிதன்னை. (கஉச)

*கொடுவிலாண்மையினாலின்றென்குமரன்வென்றிடவுஞ்சற்று
நடுவிலாதவரிற்பல்காலென்கொனீநவில்வதென்னைக்
கடுவிலாடரவிற்பொங்கிக்கவற்றினாலெறிந்துநக்கான்
வடுவிலாமுனியைமன்னன்வடுப்படுமாறுமன்னோ. (கஉரு)

எற்றியகவறுநெற்றியெதிருறவிருந்தகங்க
னெற்றியிற்சென்றுவாசநிறைத்தகுங்குமத்தின்சேற்றுற்
பற்றியதிலகம்போலப்படுதலும்பாங்கர்நின்ற
வற்றியவோடையன்னவனப்பினாண்மருண்டுகண்டாள். (கஉசு)

பல்கியகிளையுந்தேசம்பார்த்திவன்வாழ்வுந்தாங்க
வெல்கியநகருமின்றேயழியுமென்றஞ்சியேகொ
ணல்கியநேயமேகொணயனநீர்மல்கமல்க
மல்கியகுருதிதன்னைமாற்றினாள்வண்ணமாதே. (கஉஎ)

கண்ணினீர்மல்கவண்ணக்காரிகைகலையாலந்த
வண்ணமாமுனிவன்சோரிமாற்றியகாலையுற்
றெண்ணமுஞ்செயலும்வேறுயென்செய்தோமென்செய்தோமென்
றண்ணலுந்தன்னைநொந்தாங்கருஞ்சினம்பாவமென்றான். (கஉஅ)

ஆயிடையத்தநக்குன்றுக்காதபனனையனுக்
சேயிடையெதிர்கொள்கொற்றச்சேனைமன்னவர்கள்சூழ
வீயிடைவரிவண்டார்க்கும்வியன்பெருங்காவுநீங்கிப்
போயிடைநெருங்கிவேந்தன்புதல்வனப்புரத்தைச்சேர்ந்தான். (கஉகூ)

பரந்துவெம்படைகண்மின்னப்பல்லியம்பணிலமார்ப்பச்
†சுரந்துமும்மதமும்பாயுந்துதிக்கைவாரணங்கள்சூழப்
புரந்தரனகரிற்காளப்புயல்வருமாறுபோல
வுரந்தருபேடிதன்றேருரவேவீதியுற்றான். (கந0)

வென்றுமீள்குமரன்றன்னைவீதிகடோறுமாத
ரன்றெதிர்கொண்டுபொன்னீராசனமெடுத்துவாழ்த்தக்
குன்றெறிந்தவனைக்கண்டகுன்றவில்லிமைப்போன்முந்தச்
சென்றவன்பிதாவுந்தேர்மேற்சிக்கெனத்தழீஇக்கொண்டானே. (கநக)

---

* கொடுவிலாடமரின்றென் என்றும் பாடம்.
† சுரந்தெழுமதமும் என்றும் பாடம்.

ஆளையையிங்களிற்றார்தம்மையாருமறியாமலிந்நகர்க்கணடங்கிநின்றார், நாளையே வெளிப்படுவர்நெருநலேதந் நாளுள்ளகழிந்தனவானயந்துகேண்மோ, வேளை யேயனைய வெழிற்றோளைவாகை வேளையேயனையவிறல்விசயனென்னுங், காளையேயடியேனுக்கிளைய காதற் கன்னிகைக்குவரனென்றுகருதுவாயே. (௧௪௦)

மகனிவைமற்றுரைத்தளவிற்றாதைகேட்டு மனநடுங்கிநெகிழ்ச்சியுடன் மகிழ்ச்சி கூர்ந்தான், பகலமரிலேறியமெய்ப்பாரகமாறப் பகலோனும்புனல்படிவான்பரவைசேர்ந் தான், நகவுடையபாண்டவரும்வண்ணமாதுந் தனித்தெண்ணிப்பராயசரிதர்போலப், புகலரியபழையதமவடிவங்கொண்டார் போனபகலவனுதயப்பொருப்பின்மீண்டான். ()

நிரைமீட்சிச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—உஉருக.

---

# வெளிப்பாட்டுச்சருக்கம்.



எக்கடலுமெக்கிரியுமெவ்வுலகுமுலகிற்<br>
றக்கபலயோனிகள்சராசரமனைத்து<br>
மிக்கவிதியால்விதிசெய்வித்திருவினைவிதிக்குஞ்<br>
செக்கமலநாபிமுகில்சேவடிதுதிப்பாம். (௧)

அருக்கனடிகைதொழுதனந்தரமருக்க<br>
னுருக்கருகவேயருணவுருவழகெறிப்பத்<br>
திருக்கிளர்நலம்பெறுசெழுந்தெரிவையோடுங்<br>
குருக்குலம்விளங்கவருகோமகனிருந்தான். (௨)

காற்றின்மகனுங்கடவுளாதிதிருமகனு<br>
மாற்றமுதிராயுண்மறைவாணர்மகாரு<br>
மேற்றமுறையாலடியிறைஞ்சியிசையோடுந்<br>
தோற்றமுறுமாறருகுசூழ்தரவிருந்தார். (௩)

தன்னைநிகர்கிற்பவரிலாததனுவல்லோ<br>
னென்னைதிருநெற்றியிலிருந்ததவடென்றுன்<br>
பின்னையும்வெறுத்தொளிருமேதகுசிறந்தான்<br>
பின்னையவனுக்குநிகழ்பெற்றியுரைசெய்தான். (௪)

உரைத்தபொழுதிப்பொழுதிவ்வூரிகொளுத்தித்<br>
தரைத்தலைவனைத்தலைதடிந்திடுவனென்று<br>
விரைத்தடவரைப்புயன்வெகுண்டுவில்லெடுத்தா<br>
னிரைத்துவருகாண்மகனுமெரிவிழிசிவந்தான். (௫)

ஒன்றுதவிசெய்யினுமவ்வுதவிமறவாமற்<br>
பின்றைவர்செய்பிழைபொறுத்திடுவர்பெரியோர்<br>
நன்றிபலவாகவொருதவறுபுரிவரேனுங்<br>
கொன்றிடுவதன்றிமுதுகயவர்நினையாரே. (௬)

*அனலுமுதுகானகமகன்றுகெடுநாணந்
நினைவுவழுவாமலிவணீழலிருந்தோஞ்
சினமிகுதலிற்றவறுசெய்தனனெனப்போய்
முனிதல்பழுதாகுமெனமுன்னவன்மொழிந்தான். (௭)

குந்திவயின்வந்ததமகுருகுலம்விளக்கு
மைந்தரசுமன்றுதனகன்கடையிருக்கச்
சிந்தனையொடுந்திறைகொள்செல்வநிதியோடு
மைந்தனெடுமெய்தியவர்மலரடியின்வீழ்ந்தான். (௮)

விராடனைநறுங்குவளைமாலையிளம்பார்த்தற்
றராபதியொழுங்கெதிர்தழீஇயிவணிருத்திப்
பாரவருபெரும்புகழ்படைத்தவருனைப்போ
லராவின்முடிமேலுலகிலார்கொலுளரென்றான். (௯)

அறைமுரசுயர்த்தவனையவனுதலரையபா
பொறையுடையவர்க்கலதுபுகழ்புனைதலுண்டோ
†நிறையமுதநற்குணமிலாதவரிடத்திற்
குறைதிருவளர்க்கினுமடைகொண்டநலமென்றான். (௧௦)

இத்தகைமெய்த்தாயினொத்துயருடைத்தா
தெத்தகையென்னநெடிதாளினியிருந்தோந்
‡செக்கெல்வயலுற்றுழுதுசேலுகளுநாடா
நின்னினுமுயர்ந்தவர்நியமையுண்டோ. (௧௧)

நின்புதல்வருந்திறல்வருத்தினியுநீயு
மென்புயமெனச்சமரிலென்னருகுநின்றால்
வன்பினொடுவஞ்சனைசெய்மன்னர்படையாவுந்
தென்புலமடைந்திடமலைப்பலிதருகின்றாய். (௧௨)

எனமுரசுயர்த்தவனியம்புதலுமகிழா
மனனிடரகற்றினனம்மச்சவளநாடன்
றனயனுமடக்குதிதக்கதெனவென்று
வினிமையொடறத்தின்மகனுக்கிவையிசைப்பான். (௧௩)

எத்தனையுநீழல்செய்தனிக்கவிகையெந்தா
யித்தனையுமின்னதுநின்னேவலினையாமும்
பத்தரையொராரைகொள்பல்படையுநின்னே
யுத்தரையும்விசயனுக்குரியவென்றான். (௧௪)

---

* அனலின்முதிர்கானகம் என்றும் பாடம்.

† அறிவுமுதனற்குணமடாதவரிடத்தில் என்றும் பாடம்,

‡ செந்நெல்வயல் என்றும் பாடம்.

வில்விசயனுத்தரன்விளம்புதலும்வீரங்
கல்விசெய்கலைத்திறன்வனப்புடையகாளா
யில்விசயமெய்க்குணனின்மிக்கவிளையாளென்
*றெல்விசயமுற்றசுதனுக்குரியளென்றான். (௧௫)

வேறு.

விசயன்றெருத்துநயமாகவிராடனெஞ்சுக்
கிசையும்படிசொற்றவரோடுமிருந்தபின்னர்
வசையின்றிவாழுந்தமராகியமன்னர்க்கெல்லாந்
திசையுந்தமதுசெயறாதரிற்செப்பிவிட்டார். (௧௬)

வெளிநின்றமாற்றம்வெளியானபின்வெண்டயிர்த்தண்
டுளிநின்றமேனித்துளவோன்றன்றுணைவரோடு
†மளிநின்றமாலைபுனைதங்கையபிமனோடுந்
தெளிநின்றவேற்கைச்சிவேதனொடும்வந்துசேர்ந்தான். (௧௭)

கண்டான்மகிழ்ந்தானறன்மைந்தனைக்கைதழீஇயுங்
கொண்டானவன்றனிளையோர்கைகுவித்துவீழ்ந்தா
ரெண்டானவரோடிசைந்தெண்ணிப்புவனமேழு
முண்டானுரைத்தானுரைத்தக்கவுரைகளெல்லாம். (௧௮)

சிவன்றன்னைநோக்கிச்சிவேதன்றவஞ்செய்தவாறு
மவன்றன்னருளாற்பலவாயுதம்பெற்றவாறு
மிவன்றன்பகைசெற்றதும்யாவுமியம்பியுள்ளங்
கவன்றன்புறுமல்விராடன்றன்கவற்சிதீர்த்தான். (௧௯)

தெம்மைந்தரென்னுங்களபங்களைச்சிங்கசாப
வெம்மைந்தின்வேறற்‡கமைந்தோனொருவீரனனை
தன்மைந்தனைக்கண்டுருகுந்திறற்றந்தைதாளி
லெம்மைந்தனும்வீழ்ந்துடன்வைகினனார்வமிக்கே. (௨0)

பாஞ்சாலர்போசகுலமன்னவர்பாண்டிவேந்தர்
வாஞ்சாமனத்தின்வயமத்திரர்மாகதேயர்
பூஞ்சாபவெற்றிக்கொடிக்கேரளர்பொன்னிநாடர்
தாஞ்சால்புடனப்பதிவந்தனர்தானையோடும். (௨௧)

---

* எல்விசயமென்றும் பாடம்.

† அளிநின்ற நெஞ்சிற் குருமைந்த ரறுவ ரோடும் என்றும் பாடம்.

‡ அமைந்தோனொரு வீர ரான, தம்மைந்த ரைக்கண் டுருகுந்தந் தையர்க டாளி, லம்மைந்த ரும்வீழ்ந் துடன்வைகின ரார்வ மிக்கே என்றும் பாடம். இது, மேற்பதினேழாஞ் செய்யுளின் பாடபேதத்திற்கியைந்தமை காண்க.

வந்தோகைபோலப்பிருபாநம்வணங்கிவைகுந்
கந்தோடடர்கைக்கின்கோபக்களிற்றுவேந்த
ரந்தோநெடுநாளகன்கானிலடைந்திரென்று
நொந்தோரையாற்றிநலவானந்துதிகொள்வேலான். (௨௨)

தேனிற்குளித்தசிறைபம்புபச்சேக்கைபன்னம்
வானிற்பறந்துபுலர்த்தும்புனன்மச்சநாடன்
வேனிற்சிலைவேள்விராடன்புரமேயவன்றே
கானிற்றிரிந்தபரிதாபங்கழிந்ததென்றான். (௨௩)

புண்ணுக்குநகிப்பறைபாலகப்பட்டமான்போல்
மண்ணுக்கிறைவன்மொழிதேறிமகன்செப்வந்த
வெண்ணுக்கழிந்தேனினிச்செய்வதென்யாருநீயிர்
கண்ணுக்கிமைபோலிருந்தீர்களென்காவலர். (௨௪)

அரசர்க்கடைவேபவைபின்கணவையனைத்து
முரசக்கொடிபோனயமாகமொழிந்தபோது
விரைதுற்றுதார்ச்சல்லியன்முன்புவினைந்தவெல்லாம்
பரசுற்றகன்றன்பிழைகொன்றபகப்போல்வான். (௨௫)

காடக்கடவெங்களியானைகவனமான்றேர்
தூரகப்பதாதிப்படைதம்மொடுஞ்சூழ்ச்சியாக
விரகிற்புகுந்துநெறிபின்கண்விருந்துசெய்த
வுரகக்கொடியோற்கரும்போரினுதவிசெய்வான். (௨௬)

நஞ்சோடுசாலுமமரின்கணமர்களென்று
நெஞ்சோடியைந்ததுணையென்றுநினைத்தல்செய்யார்
செஞ்சோறுசாலவளித்தன்றுமண்செய்யும்வார்த்தை
வெஞ்சோரிவேலானிலைபெட்டனன்பின்னின்றே. (௨௭)

ஓமஞ்செய்த்தீயிற்பொரிசிந்தவிலுந்தியாசத்
தாமக்கமழுப்பலவாசத்தொடையல்சூட்டிக்
காமன்றிருமைத்துனற்கன்பொடக்கன்னிதன்னை
மாமன்றலங்கேபுரிவித்தனன்மச்சர்கோமான். (௨௮)

முன்னிச்சமருக்கொருப்பட்டமுடிமகிபர்
சன்னிக்குவேண்டுங்கடனுபலிகணல்கி
வன்னிப்பொதும்பர்வயின்வைத்தவயங்குசோதி
மின்னிற்றிகழ்வெம்படையாவையுமீண்டுகொண்டார். (உக)

சேயோன்விழவுவிழைவோடுசிறந்தபின்னர்
மாயோனுமற்றக்குருமைந்தருமன்னர்யாரும்
*போயோரைநவ்வீதியுலாவிபுகுந்து தங்க
ளாயோதனத்துக்குறுநீர்மைகளாயலுற்றார். (௫0)

வெளிப்பாட்டுச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் உஉஅக.



விராடபருவ முற்றுப்பெற்றது.

* போயோகையோடும் என்றும் பாடம்.

உ

ஐந்தாவது

# உத்தியோகபருவம்.

## உலூகன்றூதுச்சருக்கம்.



மீனமாகியுங்கமடமதாகியுமேருவையெடுக்குந்தா
ஏனமாகியுநரவரியாகியுமெண்ணருங்குறளாயுங்
கூனல்வாய்மழுத்தரித்தகோவாகியுமரக்கரைக்கொலைசெய்த
வானநாயகனாகியுநின்றமான்மலரடிமறவேனே. (௧)

வல்லினாலவன்கொண்டமண்மீளவும்வல்லினாற்கொளலன்றி
வில்லினாலமர்மலைந்துகொள்ளுதுமெனல்வேத்துநீதியதன்றாற்
சொல்லினாலொருதூதினிலறிபலாஞ்சுயோதனனினைவென்று
கல்லினால்வருகன்முகில்விலக்கியகரியமாமுகில்சொன்னான். (௨)

உரியவம்புவியுதிட்டிரன்றனையவனுற்றவர்பலர்காண
வரியவன்பெருஞ்சூதினால்வென்றுபல்லாண்டடிப்படவாண்டான்
றிரியவன்புடனாங்குதற்கெண்ணுமித்திமெதிகொடிதென்று
கரியவன்புகல்கட்டுரைகேட்டபின்காமபாலனுஞ்சொன்னான். (௩)

இளையசாத்தகிதனைப்பனைமிகக்கரிதிதபயாமினுநாவில்
விளையுமாற்றினின்றிருவடிவினுமிகவெள்ளையாகியதென்ன
வளையவார்த்தைதகளுரைத்தனனுரைத்தனுமுற்றவரிடைக்கண்கள்
களையுமாப்புபலிருவருமொழியினுங்கட்டுரைபிழையென்றான். (௪)

பேருலூகனும்பிளைபுகல்கியபெருந்திறப்புடைப்பரித்திண்டேர்க்
காருலூகலகொடிக்களிறுடைக்கண்ணனிலாவரசன்பாற்
சீருலூகனைத்தூதுசென்றிவர்மனஞ்செப்பிடீர்கெனப்போக்கி
யோருலூகலமுடன்றவழ்ந்தவன்றனதூர்புகுந்தனனன்றே. (௫)

இந்தவந்தணனியிசைத்தனவெலாமன்புடனினிதாக
வந்தவந்தனுரைத்தபினவனிதவனிதந்திலனாகின்
முந்தவந்தண்மாமுரசகேதனனிருமுகம்வாவிடிகென்று
வந்தவந்தமன்னவர்களுந்தந்திருப்பாசறையடைந்தாரே. (௬)

அரசர்போனபின்மால்பணிதவறுறுதம்முனிதன்னைநோக்கி
முரசகேதனனீயெழுந்தருள்கெனமுனிவனைத்தொழுதேத்தி
விரைசெய்தார்புனைவீமனெந்தைமெய்விதுரன்வேதியர்கோவைப்
பாசிலேயபடியென்றுபின்னரியசொற்பணித்தருளொனப்போந்தான். (௭)

போனநான்மறைப்புரோகிதனத்தினபுரிபுகுந்தெரிபைம்பொன்
மானவார்கழற்றிருதராட்டிரனெனுமன்னவைதனிலெய்த
ஞானமாமுனிவரவுகண்டெதிர்கொளாநயந்திருபதம்போற்றி
யானமாமணியாசனத்திருத்தினரவவெங்கொடியோனே. (௮)

விந்தமன்னதோள்வீடுமன்முதலியோர்விழைவுடன்றொழுதேத்தி
வந்தவாறுரைத்தருள்கென*வறன்மகன்வந்தனைமுதற்கூறி
யந்தணுகியகந்தடர்கடகளிற்றரசனுமவன்றந்த
மைந்தர்யாவருங்கனனுஞ்சகுனியுமனங்கனன்றிடச்சொல்வான். (௯)

ஆண்டுபன்னிரண்டடவியுற்றொருவருமறிவுறாவகைமற்றோ
ராண்டுமன்னியபாண்டுவின்மதலையரைவரும்வெளிப்பட்டா
ராண்டுமன்னர்முன்சூதுபோர்பொருதழிந்தளித்திடுதலினீர்கொண்
டாண்டுவந்தபார்நும்மொழிப்படியவர்க்களித்திரோவளியீரோ. (௧௦)

முன்னமும்பொருசூதுபோர்மோதுபோர்முனிவுடன்கருதாம
லின்னமும்பொரவேண்டுமேற்பொருதிடமிலஞ்சிபிற்பொலஞ்செங்கா
†லன்னமுங்கிரிமயில்களுமுடனவிளையாநெல்வளநாட்டீர்
பின்னமும்பிறவாதினிப்பண்டுபோற்பெறும்பெருவாழ்வும். (௧௧)

அன்றியேயவருடன்மலைகுவமெனவழிவினைக்கருதாமல்
வென்றியேநினைந்தெதிர்த்திரேலுங்களால்வெல்லுதலரிதம்மா
கன்றியேயடல்வீமனும்விசயனுங்களம்புகிலனைவீரும்
பொன்றியேவிடுகின்றனிர்முனிவர்சொற்பொய்க்குமோபொய்யாதே. (௧௨)

என்றுபூசுரனியம்பலுங்குங்குமமெழிலுறுமிணைமேருக்
குன்றுபூசியதனையபொற்றடம்புயக்குருகுலவபவேந்த
னின்றுபூசைபோலிருந்துழியுரைக்குமீதிகலதன்றிருவர்க்குந்
துன்றுபூசபோலிற்காணலாமாண்மையுந்தோள்வலிமையுமென்றான். (௧௩)

கல்விதூயநெஞ்சிலாதவச்சுயோதனன்கழறியமொழிகேட்டு
வில்விதூரனிவ்வேதியன்மொழிப்படிமேதினிவழங்காமற்
புல்விதூடகரினுமுணர்விலாதவர்புகலும்வாசகங்கேட்கிற்
செல்விதூரியளாய்விடுஞ்சுற்றமுஞ்சேனையுங்கெடுமென்றான். (௧௪)

திரத்துவாய்மைநீதவறிமற்றவருடன்சேனையுந்திறலுங்கொண்
டுரத்துவாளமருடற்றலோபெரும்பிழையுடன்றனையாமாகிற்
சரத்துவாய்தொறுஞ்சோரிகக்கிடவிடுந்தனஞ்சயன்றனுவென்று
பரத்துவாசனும்பகர்ந்தனன்கிருபனும்பகர்ந்ததேபகர்ந்திட்டான். (௧௫)

காடுமன்னுநின்புதல்வருக்கறுதிசெய்காலமோகழிந்தன்று
நாடுமன்னவகொடாமல்வெஞ்சமர்பொரநாடினையெனினுன்னைக்
கோடுமன்னுவிலருச்சுனற்கெதிரெவர்குனிக்கவல்லவரென்று
வீடுமன்றிருத்தனயனோடுறுதிகள்வெகுண்டுரைத்தனனன்றே. (௧௬)

---

* முனிவனும்வரன்முறையடைவாக என்றும் பாடம்.

† அன்னமுங்குருகினங்களும் என்றும் பாடம்.

முன்னமேயுகிரிழந்தவெம்புலியெனமுரணழிமுனிமைந்தன்
றன்னைமற்றவனிடத்துநீகற்றவெஞ்சரத்தின்வென்றமையல்லா
லென்னசேவகங்கொண்டுநீயாரையுமிகழ்ந்துரைப்பதுவென்று
கன்னனுந்திறற்காங்கெயன்றன்னொடுகண்சிவந்துரைசெய்தான். (கஎ)

தூமவெங்கனற்றோன்றியதோகையைத்தொடைபல்சூட்டியநாளி
னுமவெஞ்சிலைநாணொடுத்தனையடர்நரனொடும்போர்செய்தாய்
தாமவெண்குடைநிருபனையந்தரசரிதர்கொண்டேகாமல்
வீமன்வெஞ்சிறை*மீட்டநாளினுந்திறல்வினைபுரிமுனைவென்றாய். (கஅ)

†ஒருநன்மாநெடுந்தேரினையறிவுறவுத்தான்விரைந்தூர
நெருநலானிரைகவர்தருமுகத்தினுநின்றனைநெடும்போது
மருநறுவுமிழ்துழாயவன்றேர்விடமலையுநாள்வயவாளி
வெருநர்மேல்விடாவிசயனைநீயலால்வெல்லவல்லவருண்டோ. (ககூ)

கங்கைமாமகனிவைவைபுகலவுங்கன்னனைக்கசிந்துட்கொண்
டங்கைகொட்டிநக்கிருந்தவந்தனையுமவமதித்தெமதேபார்
தங்கள்கானகந்தமதெனப்புகன்றனன்சர்ப்பகேதனனந்தப்
பங்கயாசனமுனிவனுமீண்டுபோய்ப்பாண்டவர்க்கவைசொன்னான். (உ0)

ஆங்கவர்க்கிவையனைத்துமுரைத்தனனெவ்வலாமநந்தகைபுறச்சொல்லி
யிங்குவந்தெழில்பாதவற்கிபம்பலும்பாதவன்மகிழ்வுற்று
வாங்குவெஞ்சிலைவிசயனாயிரவினில்வரவிடுகெனமீள
வோங்குமாதவனாகனைப்போக்கினனவனும்வந்துரைசெய்தான். (உக)

உலூகன்றூதுச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள்-உ௲௨0.

# வாசுதேவனைப்படைத்துணையழைத்த சருக்கம்.



அராவணைதுறந்துபோந்தன்றசோதைகண்களிப்பநீடு
தராதலம்விளங்கவெண்ணெய்த்தாழிசூழ்தரநின்றாடுங்
குராமலர்க்கமழுங்கூந்தற்கோவியர்குரவைகொண்ட
புராதனன்றனையேயேத்திப்புனிதர்தாள்போற்றிசெய்வாம். (க)

புரோகிதன்றூதுவந்துபோனபின்புயங்ககேது
விரோசனன்சுதனைக்கங்காசுதனொடும்வெகுளிமாற்றித்
துரோணனைமுதலாமிக்கதொன்மதியமைச்சரோடுஞ்
சரோருகசதனமென்னத்தனித்திருந்தெண்ணினானே. (உ)

---

* மீட்டகாளிலும் என்றும் பாடம்.

† ஒருதன்மா என்றும் பாடம்.

தேயமெங்கெங்குஞ்செங்கோல்செலுத்துமத்திகிரிவேந்த
ராயவர்தம்மைக்கூட்டவடைவினிற்றாதுபோக்கிக்
காயமுமுயிருமாகிப்பொருடொறுங்கலந்துநின்ற
மாயவன்றன்னைக்கூட்டவளர்மதிற்றுவரைசேர்ந்தான். (௩)

மாடநீள்வீதிமூதூர்வயங்குமாமதிலின்றோற்ற
மேடவிழ்துளபமாலங்கிருந்தனனென்றுகேட்டுச்
சேடன்வந்தனந்தகோடிசெங்கதிர்மணியின்பத்திச்
சூடிகாமகுடத்தோடுஞ்சூழ்ந்ததோர்தோற்றம்போலும். (௪)

கார்க்கடல்வண்ணன்றன்பாற்கண்டுயிலொழிந்துபோந்து
மேற்கடற்றுவரைமூதூர்மேவிநும்விரகுநோக்கிப்
போர்க்கடற்பொறிகள்யாவும்பொறுத்தவப்புரிசைதன்னைப்
பாற்கடல்வளைத்ததொக்கும்பன்மலர்கழியம்மா. (௫)

ஈண்டுநீவரினுமெங்களொழிலுடையெழிலிவண்ணன்
பாண்டவர்தங்கட்கல்லாற்படைத்துணையாகமாட்டான்
மீண்டுபோகென்றென்றந்தவியன்மதிற்குடுமிதோறுங்
காண்டகுபதாகையாடைகைகளாற்றடுப்பபோன்ற. (௬)

அருள்குடியிருக்குங்கண்ணனவதரித்தனனென்றெண்ணித்
தரணியின்மீதுவந்துதன்னுடைச்சோதிவைகும்
பரமமாஞானபோகப்பதிகுடியிருந்ததன்ன
திருநகர்வீதிபுக்கான்சிந்தசித்துணர்விலாதான். (௭)

வந்தமையறிந்துகொற்றவாயிலோர்தம்மைநோக்கி
யந்தன்மாமதலைவந்தாலறிவியாதழைதியென்று
சந்திரனொடுங்கிநிற்பத்தபனனேசரிக்குமாறு
பந்தனையிலாதான்யோகத்துயில்வரப்பள்ளிகொண்டான். (௮)

பொற்புடைப்புனிதன்கோயிற்புறத்தினிலனிகநிற்பச்
சுற்பவெம்பதாகைவேந்தன்றடையறத்தனிசென்றெய்தி
யுற்பலவண்ணன்பள்ளியுணர்தருகாறுமிட்ட
சிற்பவண்டவிசினேறித்திருமுடிப்பக்கஞ்சேர்ந்தான். (௯)

வந்திலன்விசயனென்றுவான்றுயில்புரிந்தவண்ணல்
சிந்தனைசெய்யும்வேலைச்சிந்தையிற்கடியதேரோன்
*பந்தனையறுக்கும்பாதபங்கயம்பணிந்துநிற்ப
முந்துறவிழித்துநோக்கிமுகமலர்ந்தருள்செய்தானே. (௧௰)

நின்றவனிருந்தவேந்தன்வரவினைநிகழ்த்தகேட்பப்
பொன்றிகழ்படையோனந்தப்பொய்த்துயிற்பாயனீங்கி
மன்றலந்தொடையன்மார்பாவரவெமக்குரைசெயாதென்
னென்றுராநெருங்கப்புல்லியின்சொலாலுவகைசெய்தான். (௧௧)

* வந்துமாலைப்பணிந்துமன்னையும்வணங்கிநிற்ப என்றும் பாடம்.

இருவிரும்வந்தவாறென்னியம்புமனிருக்கிலர்பாரிலே
மருவிரிதாமபமாலைமாகதவண்ணனையாதனுதியர்கைக்கொளார்
செருவினியெமக்குவெம்போர்செய்துவீடர்தன்மையாய்
பொருவிலோயென்றுகொண்டவ்விருவருமன்றினிநீகொள்வாய். (௯)

உற்றமருதவிசெய்வானுதிட்டிரன்றனக்குமுன்புவெம்
சொற்றனமாங்கனிக்குத்தானிலுனர்பொழுதத்தினானு
விற்றிறல்விசயன்முந்தவிழிக்கிலக்காறுமென்று
பற்றறத்துணிந்துசொன்றன்பாண்டவர்சகாயனானன். (௧௦)

முடைகமழ்முல்லைமாலைமுடியவன்றன்னைப்போரிற்
படைபெடாதொழிமினென்றுபன்னகதுவசன்வேண்ட
நெடியமாமுகிலுநேர்ந்துநினக்கினிவிசயபோரி
லடுபடையின்றிச்செய்புமாண்மையென்னாறுதியென்றான். (௧௪)

செருமலியாழியங்கைச்செழுஞ்சுடர்நின்றெண்டேரிற்
பொருபரிதாண்டினிந்தப்பூதலத்தரசரொன்றே
வெருவருமியக்கர்விண்ணோர்விஞ்சையரெனினுமென்னக
வரிசிலைகுழையவாங்கிவாளித்தலைதுமிப்பனென்றான். (௧௫)

அடர்சிலைவிசையனிவ்வாறிசைத்தனுமலன்வஞ்சப்
படவரவுயர்த்தவென்றிப்பார்த்திவன்றன்னைநோக்கி
நடையுடைப்புரவித்திண்டேர்காளிவற்கூர்வதன்றி
யிடைபடையேவிநம்மோடமர்செயேன்வேந்தவென்றான். (௧௬)

எம்மையேயொழிபவுன்னையாதவகுலத்துளோர்க
டம்மையுமெம்முனநாலகேதனவையுஞ்சேரச்
செம்மையோடுதவியாகக்கொண்டுநீசெல்கவென்று
மும்மையுமுணர்ந்தநாதன்முன்னுறப்பின்னுஞ்சொன்றான். (௧௭)

இருதவன்மாவக்குரோணிகிளர்படையோடுநின்பால்
வருமெனென்றுரைத்துவேண்டுமதுரவாரணகளுங்கூறி
மருதுபோழ்க்திட்டசெக்கண்மாயவன்விடைப்பவேகிக்
கருதலான்வினயமொன்றுங்கண்ணன்முன்றோன்றக்கண்டான். (௧௮)

கண்ணனங்கருளிச்செய்தகட்டுரைப்படியேசங்க
வண்ணனுக்கிளவல்சொன்னமாற்றமுமரசன்சாற்றி
யெண்ணருந்தொகைகொள்சேனையாதவகுமாரரோடே
யண்ணலேவருகென்றேதியத்திறுபுரிபுக்கானே. (௧௯)

கூறியவேககாகக்கொடியவனகன்றபின்னர்த்
தேறியவிளையிளைஞென்றொழும்புனற்றுவரைநீங்கி
யாறிருநாமத்தோனுமையிருநாமத்தேனு
மூறியகருணைநெஞ்சினுதிட்டிரனிருக்கைபுக்கார். (௨௦)

வாசுதேவனைப்படைத்துணையழைத்தசருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் ௨௩௦.

# சஞ்சயன்றூதுச்சருக்கம்.



*ஒருகுலத்திடையவதரித்தணிபொதுவர்சிற்குடிலுறைவதோர்
மரகதப்புயறனையெடுத்தொருமகவெனத்தனதிறுதியா
லரிதுபற்றியவலகைசெற்றிடவணிமுலைப்பயநுகர்வுறு
மருதிடைத்தவழ்பொருவில்வித்தகன்மலரடித்துணைவாழ்த்துவாம். (௧)

நஞ்சநாகமுயர்த்தமீளிதனகர்புகுந்துழிநண்பறக்
கஞ்சமாமனைவென்றவன்செயல்கண்ணிலானொடுரைத்தபின்
வஞ்சமைந்தரொடியவிமீளவுமண்கொடாதகுறிப்பினன்
சஞ்சயன்றனைவருகவென்றிருதாள்பணிந்திவைசாற்றுவான். (௨)

குருகுலத்தரசர்க்குறுந்தொழில்கூறுநற்குருவாதலா
லிருகுலத்தினுமுற்பவித்தவரென்றுநின்சொன்மறுத்திடார்
பெருகுலைக்கனலன்னபிள்ளைகள்பேசுகின்றபிணக்கறுத்
தொருகுலத்தவருதகிரும்புவியாளுமாறினியுட்கொளாய். (௩)

அறத்தின்மைந்தனுமிளைஞரும்புவியாசையற்றகலடவியின்
புறத்திருந்துதவஞ்செயும்படிபுரிவுரைத்தருள்போமெனச்
செறுத்திடுந்திருதராட்டிரன்றனசிந்தையொப்பனசெப்பினான்
மறுத்திலன்பெருமுனியுமற்றவர்பாடிவீடுறமன்னினான். (௪)

சென்றவம்முனிசெலவறிந்தெதிர்சென்றுதத்தமசென்னிதா
ளொன்றவைத்துவணங்கியாசியுரைக்குமெய்ப்பயனுற்றபின்
மன்றலந்துளவோனுநல்லறன்மைந்தனுந்திறலநுசருந்
துன்றுபொற்றவிசினிலிருத்தவிருந்துசில்லுரைசொல்லுவான். (௫)

புடவியாளுதல்விட்டுநன்னெறிபுரியுமாதவர்தம்மினீ
ரடவியாளவும்வல்லிராயினி†ராதலானலமானதே
மடவியார்நிலையற்றசெல்வமகிழ்ந்துவாழ்தினமாறினால்
விடவியாழலுற்றெனப்பெருநரகிலாழ்வுறவீழ்வரால். (௬)

உற்றயோனிகடம்மிலுற்பவியாமன்மானுடவுற்பவம்
பெற்றுவாழுதலரிதுமற்றதுபெறினுமாயைசெய்பெருமயக்
கற்றுஞானிகளாய்விளங்குதலரிதுவீடுறுமறிவுபின்
பற்றுமாறரிதிங்குனக்கிவைபண்பினோடுபலித்தவே. (௭)

திகந்தவெல்லையுறப்பெரும்புவிசெல்லநேமிசெலுத்தினு
மகந்தையோடமராடவெண்ணிடுமரவகேதனனுங்களோ
டுகந்துவாழவொருப்படானினியுற்றதாயமுமுரிமையு
மிகந்துமாதவமுயறலேகடனீறிலாவுலகெய்தவே. (௮)

---

* ஒருதலத்திடை என்றும் பாடம்.

† ஆதலாலறமானதே என்றும் பாடம்.

பராசரன்குலமாகினும்பெறு* பயனிறுக்கிலர்பாரிலே
துராசரன்பிலரென்சொலின்றுசுயோதனாதியர்கைக்கொளார்
சராசரங்களனைத்துமாகியசுகனையேநிகர்தன்மையாய்
நிராசர்நின்னளவிற்குறித்தவையுறுதியென்றினிநீகொள்வாய். (௯)

பாரிலாசையுநின்னிராசபதத்திலாசையுமன்னுவெம்
போரிலாசையுநேயமங்கையர்போகமன்பொடுபுதித்துறாஞ்
சீரிலாசையும்விட்டுநன்னெறிசேரவுன்னுதிநீயெனத்
தாரிலாசையறத்துறந்தருள்சுருதிமாமுனிசொல்லவே. (௧௦)

செம்மையல்லதுவிரகிலாதுதெரிந்தமேதகுசிந்தையான்
மும்மையுந்தெரிமுனியுரைத்தசொன்முன்னிபொன்றுறாமுறுவல்செய்
திம்மையேவசைநிற்கவீடுறவெண்ணிநீபுகலென்னினும்
வெம்மையேழ்நரகுந்தனித்தனிவீழ்வதேகலமிகவுமே. (௧௧)

நின்னறத்தினினீர்மைதன்னைவிளங்குமாறுநிகழ்த்தினு
மன்னறத்தினைவிட்டுநல்லறமன்னரானவர்முயல்வரோ
வென்னறத்தினினின்றுதெவ்வரைபிருவிசும்பினிலேற்றினும்
பின்னறத்தினினினைவுகூருமெனக்கனன்றிவைபேசினன். (௧௨)

முனியுமப்பெருமுராசுயர்த்தவனும்புகன்றனமுன்னிகா
மினியுரைப்பதுசுடனெனத்துணைவிழிசிவப்பெழவெழுமியின்
றனிதமுற்றெழுவுருமின்வெஞ்சினமூளமற்றிவைசாற்றுவான்
கனியெனத்தினகரனைவெளவியகட்டவுண்மாருதிதுணைவனே. (௧௩)

எமக்குநீபிரமப்பெருங்குருவெங்களோடெதிராதுவார்
தமக்குமொக்குமொருமையிலேயருள்சாரவோதுதறக்கதோ
வமர்க்குநென்னலுனூகநாமனெடுந்திபிட்டனனாகினுஞ்
சுமக்குமேதினியாளுவோர்வினைவேறுபட்டதுசொல்வரோ. (௧௪)

இடக்கணாகவலக்கணாகவிரண்டுமொக்குமெனாமலே
பிடர்க்கணேமதியானகண்ணிவிபெற்றியல்லனபேசினான்
கடற்பெரும்படைசூடிநாளையணிந்தவெய்யகளத்தினு
னடற்கடுங்கதையாலடித்திடுமதிசயந்தனைப்பபேகேள். (௧௫)

உவந்துநீமொழிதவமருந்தவமல்லவொன்னலருடனுதுஞ்
சிவந்தசோரியின்மூழ்கிமாழ்குசிரங்கள்போய்க்கடமாடுமக்
கவந்தகானகமேவியூடுறாதியவெவ்வினைகளைவதே
தவந்தனிற்றலையானவீடுறுதவமெமக்கிதுசாலுமே. (௧௬)

போரதாகியபூமிசாலையில்வேலைசூழ்தருபூமியின்
பாரமானசுயோதனாதியரென்னுநூறுபசுப்படுத்
தீரமானதுபாமனத்தொடிராயசூயமகஞ்செயும்
வீரமாமுனிதன்னைவெங்களவேள்வியும்புரிவிப்பனே. (௧௭)

* பயனினைக்கிலர் என்றும் பாடம்,

நேமியானிவைசொன்னவீரனைநிற்கவென்றுநிறுத்தியுட்
காமியாதமுனிக்குநல்லுரைகட்டுரைத்தனனிவர்களிப்
பூமியாளுதலவர்களுக்கமருலகமேறுதல்புரிதவம்
யாமியாதுமுரைத்துமென்பயனீயெழுந்தருளென்னவே. (கஅ)

இருந்தபேரவைவிட்டுமற்றவரிதயமிப்படியெனநினைந்
தருந்தவக்கடன்மீளவத்தினபுரியடைந்தவனிபனுடன்
பரிந்தறன்றருகாளைசொற்றதும்வீமனின்றுபகர்ந்ததுங்
குருந்தொசித்தருண்முகிலுரைத்ததுமுண்மைபாம்வகைகூறினான். (கக)

சஞ்சயன்றூதுச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—உகூசகூ.

## கிருட்டிணன்றூதுச்சருக்கம்.



பேர்படைத்தவிசயனுடன்மும்மைநெடும்பிறவியினும்பிரியானாகிச்
சீர்படைத்தகேண்மையினாற்றேருர்தற்கிசைந்தருளுஞ்செங்கண்மாலைப்
பார்படைத்தசுயோதனற்குப்படையேடனமரிலெனப்பணித்தகோவைக்
கார்படைத்தநிறத்தோனைக்கைதொழுவார்பிறவாழிக்கரைகண்டாரே. (க)

ஞானமன்பொடினிதுரைத்துஞானமுனியகன்றதற்பின்சாமபேத
தானதண்டமெனநிருபர்தருமமுறைமைபிற்புகலுந்தகுதிநோக்கித்
தூநறுந்தண்டுளவோனைத்தாதுவிடுவதற்கெண்ணிச்சுயோதனாதிக்கட
மேனலந்தண்கிரிப்பெருந்தேனிறைக்குமெழிற்குருநாடனியம்புவானே. (உ)

செஞ்சொன்முனிசஞ்சயனுக்கியாமுரைத்தகருமமுமுன்சென்றகாலை
யஞ்சொன்முனிபுரோகிதனுக்கவனிசைத்தகருமமுநீயறிதியன்றே
நஞ்சுதனைமிகவருந்திநன்மருந்துமந்திரமும்விரைந்துநாடா
தஞ்சினர்தங்களைப்போலவிருக்குமதோயார்மனத்துமிருக்குஞ்சோதீ. (௩)

அருஞ்சமரம்புரியும்வகையவர்துணிந்தாராலுமறமொன்றின்றிப்
பெருஞ்சமரம்விளைக்குமதுகடனன்றென்றருள்வெள்ளம்பெருகக்கூறும்
பொருஞ்சமரநெடுமுரசப்பூங்கொடியோன்றனைநோக்கிப்*புயப்போர்வாண
னிருஞ்சமரந்தொலைத்தபிரானிளைஞரையுமுடனிருத்தியியம்புவானே. (௪)

செய்வாரினைமுகனுந்திருநாடுபெறநினைவோசென்றுமீளப்
பையராவருங்கானிற்பயின்றுதிரிதாநினைவோபகைத்தபோரி
லுய்வாரெனவிரைவினுருத்தெழுந்துபொரநினைவோவுண்மையாக
வைவாமவனிபர்க்குநினைவேதென்றருள்புரிந்தானமார்கோமான். (௫)

வயிரமெனுங்கடுநெருப்பைமிகமூட்டிவளர்க்கினுயர்வரைக்காடன்னச்
செயிரமரில்வெகுளிபொரச்சேரவிருதிறத்தேமுஞ்சென்றுமாள்வோங்
கயிரவமுந்தாமரையுங்கமழ்பழனக்குருநாட்டிற்கலந்துவாழ
வுயிரனையாய்சந்துபடவுரைத்தருளென்றானறத்தினுருவம்போல்வான். (௬)

* புயல்போல்வாணன், என்றும் பாடம்.

அரவுயர்த்தோனுடன்மருகூதாடி நீர்வென்றவக்காளவன்றான்சொன்ன
விரதமொழிதவிராமல்வெங்கானம்போய்மீண்டீர்வெப்பொனுங்கள்
குருநிலத்திற்பாதியினிக்கொடாதிருந்தாலாங்கவனைக்கொன்றுபோரி
லிருநிலத்தையாளவினித்துணிவதேகடனென்றானெம்பிரானே. (எ)

குரவரையுங்கிளைஞரையுங்குலத்துரிபதுணைவரையுங்கொன்றுபோர்வென்
றரவநெடுங்கடலாடையவனியெலாந்தனியாளுமரசுதன்னிற்
காவுறையுமனத்தாதைமுனிக்குரைத்தமொழிப்படியேகானந்தோறு
மிரவுபகற்பலமூலசாகநுகர்ந்துயிர்வாழ்தலினிதுநன்றே. (அ)

கோதிலானிந்தமொழிகூறுதலுமாமாயன்கூறலுற்றான்
மோதமருக்கிளைத்துநீர்மொய்த்தபெருங்கானகத்தேமுடுகிச்சென்றாற்
பூதலத்தோரேசாரோபுகன்றபெருவஞ்சினமும்பொய்த்திடாதோ
நீதியோர்வெனவுரைத்தானங்கதற்குநிகழ்தருமனிகழ்த்தலுற்றான். (கூ)

நீதூதுநடந்தருளியெமதுநினைவவர்க்குரைத்தானினைவின்வண்ணந்
தாதூதியளிமுரலுந்தண்பதியுந்தாயமுந்தாரானாகின்
மீதூதுவளைக்குலமும்வலம்புரியுமிகமுழங்கவெப்பகாலன்
மாதூதர்மனங்களிக்கப்பொருதெனினும்பெறுவனிதுவசையுமன்றே. (க0)

முந்தூர்வெம்பணிக்கொடியோன்மூதூரினடந்துழவர்முன்றிறேறு
நந்தூரும்புனனாட்டிற்றிறம்வேண்டேனொன்றுகல்காணகி
லைந்தூரேவேண்டவையிலெனிலைந்திலம்வேண்டவைமறுத்தாலடுபோர்வேண்டு
சிந்தூரத்திலகநுதற்சிந்தூரத்தின்மருப்பொசித்தசெங்கண்மாலே. (கக)

மூத்தோன்மற்றிவையுரைப்பவிளையோன்வெஞ்சினமனத்தின்மூளமூளா
நாத்தோம்பிலுரைபகறக்கதுமெனவுற்றெழுந்திறைஞ்சிஞாலமெல்லாம்
பூத்தோனேபூந்தவிசிற்பூவைபுணர்மணிமார்பாபுன்மைபாவுந்
தீர்த்தோனேயூனமிலான்மானமிலாதுரைப்பதற்கென்செய்வதென்றான். (கஉ)

விரிகுழற்பைந்தொடிநாணிவேத்தவையின்முறையிடுநாள்வெகுளேலென்று
மாபினுக்குநமக்குமூலதுள்ளளவுந்திராதவசையேகண்டா
யெரிதழற்கானகமகன்றுமின்னமும்வெம்பகைமுடிக்கவிளையாநின்று
யரவுயர்த்தோன்கொடுமையினுமுரசுயர்த்தோயுனதருளுக்கஞ்சினேனே. (கங)

காணுளவுனைவிடுத்தகண்ணிலாவருளிலிதன்காதன்மைந்தன்
முறைஞருந்தரணியெல்லாமொருகுடைக்கீழ்ப்போளத்தருவானின்றே
மேனுணம்முரிமையறக்கவர்ந்தபெருந்துணைவருமனவெறுந்தவன்னாட்
வாளுளவானவர்கோன்றன்பதமற்றவன்றனக்கேவழங்குவேனே. (கச)

போர்முடித்தானமர்பொருதுபுலம்புறுசொற்பாஞ்சாலிபூந்தண்கூந்தற்
கார்முடித்தானிளையோர்முன்கழறியவஞ்சினமுடித்தான்கடவுட்கங்கை
*நீர்முடித்தானிரவொழித்தவீயறியவசையின்றிநிலைநின்றோங்கும்
பேர்முடித்தானிப்படியேயார்முடித்தாரிவனுடனேபிறப்பதேகான். (கரு)

---

* நீர்முடித்தானவனறிய நீயறிய என்றும் பாடம்.

அணிந்துவருஞ்சமரிலெதிர்ந்தாவுயர்த்தோனுடனரசருடலமெல்லாந்
துணிந்திரண்டுபடப்பொருதுதொல்லைபுலகரசாளத்துணிவதல்லாற்
றணிந்தறமுங்கிளையுறவுங்கொண்டாடித்தானின்னந்தனித்தூதேவிப்
பணிந்திரந்துபுவிபெற்றுண்டிருப்பதற்கேதுணிகின்றான்பட்டபாடே. (கசு)

பரிவுடன்மற்றிவைகூறும்பவனகுமாரனைமலர்க்கைபணித்துநோக்கிக்
குருகுலத்தோர்போரேறேகுற்றமதுபார்க்குங்காற்சுற்றமில்லை
யொருகுலத்திற்பிறந்தார்களுடன்வாழும்வாழ்வினைப்போலுறுதியுண்டோ
விருவருக்கும்வசையன்றேவிருநிலங்காரணமாகவெதிர்ப்பதென்றான். (கஎ)

உரிமையுடன்றம்பியரன்றுணர்வறியாமையினவைக்கணுரைத்தமாற்றம்
பரிபவமோகேட்டோர்க்குப்பரிபவமென்பதுபிறராற்பட்டாலன்றோ
கருதிலிதுமற்றெவர்க்குமொவ்வாதோகண்மலரிற்கைபடாதோ
பொருதொழிலுங்கடைநிலத்திற்கிடந்ததேயெனமொழிந்தான்புகழேபூண்பான். (கஅ)

சூடுகின்றதுழாய்முடியோன்சுரருடனேமுனிவர்களுஞ்சுருதிநான்குந்
தேடுகின்றபதஞ்சிவப்பத்திருநாடுபெறத்தூதுசெல்லவேண்டா
வாடுகின்றமடப்பாவைதனைவரமுமெனவரமும்வழாவண்ணங்
கோடுகின்றமொழியவன்பாலெனைத்தூதுவிடுகவினிக்கொற்றவேந்தே. (ககூ)

மலைகண்டதெனவெண்கைம்மறத்தண்டின்வலிகண்டுமகவான்மைந்தன்
சிலைகண்டுமிருவர்பொருந்திறல்கண்டுமெமக்காகத்திருமானின்ற
நிலைகண்டுமிவன்விரித்ததுழல்கண்டுமிமைப்பொழுதினோரார்தம்மைக்
கொலைகண்டுமகிழாமலவன்குடைக்கீழுயிர்வாழக்குறிக்கின்றாயே. (உ0)

வெம்புயவீமனும்வெகுண்டு மீண்டுமிவையெடுத்துரைப்பமேகமேனிப்
பைம்பொனெடுந்தனித்திகிரிப்பாந்தாமன்கருணையுடன்பரிந்துநோக்கி
யம்புவியின்முன்பிறந்தோரரசநெறிமுறைபுரைத்தலதுகேளாமற்
றம்பியருமறுப்பரோதலைவவினிக்கடுங்கோபந்தணிகவென்றான். (உக)

மைக்காலமுகிலூர்திவானவர்கோன்றிருமதலைவணங்கிநின்று
முக்காலங்களு*முணருமுகுந்தனுக்குமுதல்வனுக்குமொழிவான்மன்றே
வக்காலம்பொறுத்தவெலாமமையாமலின்னமிருந்தறமேசொன்னா
லெக்காலம்பகைமுடித்துத்திரௌபதியுங்குழன்முடிக்கவிருக்கின்றாளே. (உஉ)

தேவராயினும்பழையதயித்தியராயினுமற்றுஞ்செப்புகின்றோர்
யாவராயினுமெதிர்ந்தோருயிருணவென்றிருப்பதுவேயென்கைவாளி
மூவராயவர்களுக்குமுதல்வனுகியமூர்த்திமுகிறேய்ப்பூக
மீவாளுகளும்வயற்குருநாடென்னிவனவன்பால்வேண்டுமாறே. (உங)

தீண்டாதகற்புடையசெழுந்திருவைத்துகிலுரியச்செயலொன்றின்றி
நீண்டானேகரியானேநிமலாவென்றரற்றினளாய்நின்றசோர
மாண்டார்போலதுகண்டுமன்னவையில்யாமிருந்தமாசுதீர
வேண்டாவோவேண்டுவதுமேம்படுநல்லறமேயோவேந்தர்வேந்தே. (உச)

---

* உணருமுதல்வனுக்கு முருகமன மொழிவான் என்றும் பாடம்.

பொன்னூருந்திகிரியினான்போனாலும்பொறைவேந்தன்புகன்றவெல்லாஞ்
சொன்னாலுமவன்கேளான்விதிவலியாற்கெடுமதிகண்டோன்றூதன்றே
யெந்நாளுமுவர்நிலத்தினென்முளைவித்திடினும்விளைவெய்திடாது
பன்னாகந்தனக்கமிர்தங்கொடுத்தாலும்விடமொழியப்பயன்கொடாதே. (௨௫)

பார்த்தனிவைபுகன்றிறைவன்பணித்தருளவிருந்ததற்பின்பரிவினோடுந்
தீர்த்தனிருபதமிறைஞ்சித்தருமனையுங்கைதொழுதுசினங்கொள்வேலா
னீத்தநெடுங்கடலெழுபாடலைவர்பெறுவரெனுநிகழ்ச்சிபொய்போ
கோத்தருமந்தனிலாண்மைகூறுதோகூறுகநீகொற்றவேந்தே. (௨௬)

கேவலந்தீர்வலியபகைகிடக்கமுதற்கிளர்மழைக்குக்கிரிபோன்றேந்து
கோவலன்போயுரைத்தாலுந்தருநாடுமரசுமவன்கொடுக்கமாட்டா
னாவலம்பூதலத்தரசர்காடிரந்தோமெனநம்மைநகையாவண்ணங்
காவலன்றன்படைவலியுமெமதுதடம்புயவலியுங்காணலாமே. (௨௭)

அன்னநடையாம்பதனையவுணர்கவர்ந்திடவிமைபோராசுக்காக
முன்னமவருடன்பொருதுசிறைமீட்டானங்குலத்துமுதல்வனன்றே
மன்னவையில்யாங்காணமடவாளைத்துகிலுரிந்தவலியோன்றன்பா
லின்னமிரந்தவனகுடைக்கிழிருந்தக்காலம்மையுலகென்சொலாதே. (௨௮)

கானகம்போய்க்கரந்துறைந்துகடவநாட்கழித்ததற்பின்கானநீங்கி
யீனமிலாவகைவந்தார்நந்துணைவரெனச்சிறிதுமிரங்கானாகின்
மாநகரும்வளநாடுமுரிமையுந்தனமொழிப்படியேவழங்கானாகிற்
றானறியாதவன்பிறர்போய்க்கற்பித்தாலறிவனோதரணிவேந்தே. (௨௯)

நகுலனிவையுரைத்ததற்பின்னன்றெனக்கைபுடைத்தருளிநகுலன்சொல்லு
மிகல்விசயன்றன்மொழியுந்திறல்வீமனியம்பியதும்யாவுங்கேட்டோம்
புகலரியவுணர்வுடையோய்புகழுடையோய்திறலுடையோய்புகனீயென்ன
முகிலனையதிருமேனிமுகுந்தனுக்குடனமுருகமொழிகின்றனே. (௩0)

சிந்தித்தபடிநீயுஞ்சென்றாலென்றொழிந்தாலென்செறிந்தநூறு
மைந்தர்க்குமுதல்வனிலம்வழங்காமலிருந்தாலென்வழங்கினாலென்
கொந்துற்றகுழலிவளுமுடித்தாலென்விரித்தாலென்குறித்தசெய்கை
யந்தத்தின்முடியும்வகையடியேற்குத்தெரியுமோவாதிமூர்த்தி. (௩௧)

முருகவிழ்க்கும்பசுந்துளபமுடியோனேயன்றலகைமுலைப்பாலுண்டு
மருதிடைச்சென்றுயர்சகடம்விழவுதைத்துப்பொதுவர்மனைவளர்ந்தமாலே
யொருவருக்குந்தெரியாதிங்குன்மாயையானறிவேனுண்மையாகத்
*திருவுளத்துக்கருத்தெதுவோவதுவெனக்குங்கருத்தென்றான்றெய்வமன்னான். (௩௨)

இவ்வண்ணஞ்சாதேவனியம்புதலுநகைத்தருளியிகலோர்சொன்ன
வவ்வண்ணம்புகலாமல்விரகுரைத்தானிவனென்னவவனோடாங்கோர்
பைவண்ணமணிக்கூடந்தனிலெய்திப்பாரதப்போர்பயிலாவண்ண
†மெவ்வண்ணஞ்சொல்லுகநீயுபாயமெனத்தொழுதுரைப்பானிகல்கொள்வேலான். ()

---

* திருவுளத்திலெதுநினைந்தாயது என்றும் பாடம்.

† உய்வண்ணஞ்சொல்லுகநீ யுபாயமெனத் தொழுதுரைப்பா னுரங்கொள் வேலான் என்றும் பாடம்.

வேறு.

நீபாரதவமரில்*யாவரையுநீறாக்கிப்
பூபாரந்தீர்க்கப்புரிந்தாய்புயல்வண்ணா
கோபாலாபோரேறேகோவிந்தாநீயன்றி
மாபாரதமகற்றமற்றார்கொல்வல்லாரே. (௩௪)

பாராளக்கன்னனிகற்பார்த்தனைமுன்கொன்றணங்கின்
காரார்குழல்களைந்துன்காலிற்றளைபூட்டி
நேராகக்கைப்பிடித்துநின்னையும்யான்கட்டுவனேல்
வாராமற்காக்கலாமாபாரதமென்றான். (௩௫)

முன்னநீகூறியவையெல்லாமுடித்தானு
மென்னைநீகட்டுமாறெவ்வாறெனமாய
னுன்னைநீதானுமுணராதாயுன்வடிவந்
தன்னைநீகாட்டத்தளைந்திடுவன்யானென்றான். (௩௬)

மாயவனுமன்மன்மனமறிவான்கட்டுகவென்
றாயவடிவுபதினாறாயிரங்கொண்டான்
றூயவனுமூலமாந்தோற்றமுணர்ந்தெவ்வுலகுந்
தாயவடியிணைகடன்கருத்தினாற்பிணித்தான். (௩௭)

நீதேவனென்றறிந்துநெஞ்சாற்றளைக்கட்டுஞ்
சாதேவன்கண்களிக்கத்தானேயாய்முன்னின்றான்
பூதேவருங்கனகப்பூங்காநிழல்வைகு
மாதேவருந்தேடிக்காணாமலரடியோன். (௩௮)

அன்பாலின்றென்னையறிந்தேபிணித்தமைநன்
றென்பாதந்தன்னையினிவிடுகவென்றுரைப்ப
வன்பாரதப்போரில்வந்தடைந்தேமைவரையு
நின்பார்வையாற்காக்கவேண்டுநெடுமாலே. (௩௯)

என்றென்றிறைஞ்சியிருதாமரைத்தாளி
லொன்றுங்கதிர்முடியாற்கோமென்றுரைத்தருளி
யின்றிங்கிருவேம்பிப்போதுரைத்தமொழி
யொன்றும்பிறரறியவோதாதொழிகென்றான். (௪0)

ஆண்டிருந்தவவைநீங்கியறிவுடையோரிருவோரும்
பாண்டவர்கண்முன்னெய்திப்பழுதில்புகழ்ப்பாஞ்சாலி
நீண்டகருங்குழல்சோரநின்றாளைமுகநோக்கி
யீண்டவரிலிளையோனுஞ்சந்துமிகவினிதென்றான். (௪௧)

* ஐவரையுநோக்கிப், பூபாரந்தீர்க்கப்பிறந்தாய் என்றும் பாடம்.

தருமனுக்குங்கருத்திதுவேதமருடன்போர்புரியாம
லிருநிலத்திலுடன்வாழ்தலெனக்குநினைவென்றுரைத்தான்
வரிமலர்க்கண்புனல்சோரமலர்மறந்தகுழல்சோர
விரைமலர்ச்செஞ்சேவடிக்கீழ்வீழ்ந்தழுதாண்மின்னனையாள். (சஉ)

சாலக்கனகன்றனிமைந்தனைமுனிந்த
காலத்தவனறைந்தகற்றூணிடைவந்தாய்
மூலப்பேரிட்டழைத்தழும்மதமால்யானைக்கு
நீலக்கிரிபோன்முன்னின்றநெடுமாலே. (சஙு)

கற்றைக்குழல்பிடித்துக்கண்ணிலான்பெற்றெடுத்தோன்
பற்றித்துகிலுரியப்பாண்டவரும்பார்த்திருந்தார்
கொற்றத்தனித்திகிரிக்கோவிந்தாநீயன்றி
யற்றைக்குமென்மானமார்வேறுகாத்தாரே. (சச)

மன்றிலழைத்தெனக்குமர்சளித்தமன்னவன்பாற்
சென்றுதமக்கைந்தூர்திறல்வீரர்பெற்றிருந்தா
லன்றுவிரித்தவருங்கூந்தல்வல்வினையே
னென்றுமுடிப்பதினியெம்பெருமானேயென்றாள். (சரு)

தண்டிருந்ததிவன்கரத்திற்றனுவிருந்ததவன்கரத்தில்
வண்டிருந்தபூங்குழன்மேன்மாசிருந்ததெனவிருந்தாள்
கண்டிருந்தீரெல்லீருங்கருதலர்பாலூர்வேண்டி
யுண்டிருந்துவாழ்வதற்கேயுரைக்கின்றீருரையீரே. (சசு)

சண்டமுகிலுருமனையபசாசகந்தன்றனக்கஞ்சி
வண்டுவரையாளுகவடமதுரைகைவிட்ட
திண்டிறன்மாதவன்மதியோநிகழ்தருமன்றன்மதியோ
பண்டுமவர்கருத்தறிந்துபார்போய்வேண்டுவதென்றான். (சஎ)

சாத்தகிநின்றிவையுரைப்பச்சடைக்குழலாளழுதாற்றக்
கோத்தருமன்முதலாயகுலவேந்தரையும்
பார்த்தருளியருள்பொழியும்பங்கயக்கணெடுமாலு
மேத்தரியபெருங்கற்பினிளையாளுக்கிவையுரைப்பான். (சஅ)

தொல்லாண்மைப்பாண்டவர்க்குத்தூதுபோய்மீண்டதற்பி
னல்லாயுன்பைங்கூந்தலுனேமுடிக்கின்றே
னெல்லாருங்காணவினிவிரிப்ப*தெண்ணரிய
புல்லார்தமர்தப்புராமாதர்பூங்குழலே. (சகூ)

மைக்குழலாய்கேளாய்மருவாருடற்புலத்துப்
புக்குழலாருங்கொழுவாம்போர்வாளபிமன்னுத்
தொக்குழலும்வெங்கோன்மைத்தொல்வேந்தர்தங்குலமு
மிக்குழலுஞ்சோமுடியாதிரானென்றான். (ருO)

* எண்ணியவப், புல்லார் என்றும் பாடம்.

பெண்ணீர்மைகுன்றாப்பெருந்திருவின்செங்கமலக்
கண்ணீர்துடைத்திருந்தகண்ணிற்கருணையனுந்
தெண்ணீரினாற்பொருந்தத்தேற்றினான்சாற்றுகின்ற
மண்ணீரனலனிலம்வான்வடிவாமாமாயான். (௫௧)

துன்றுபிணியோர்துறந்தோரடங்காதோர்
கன்றுசினமனத்தோர்கல்லாதவரிளையோ
ரொன்றுமுறைமையுணராதவர்மகளி
ரொன்றுமிவர்*மந்திரத்தினெய்தப்பெறாதாரே. (௫௨)

என்னக்கழறியிருந்தோருரைதவிர்த்து
நின்னொப்பவரில்லாய்நீயேகெனவுரைப்ப
மன்னர்க்குமன்னவன்பான்மாயோனுந்தூதாகிப்
பொன்னாற்றநேமிப்பொருபரித்தேர்மேற்கொண்டான். (௫௩)

சங்குமணிமுரசுஞ்சல்லரியுந்தாரைகளு
மெங்குமுழங்கவெழில்வெண்குடைநிழற்றப்
பொங்குகவரிபுடையிரட்டவெண்ணில்லா
வங்கமொருநான்குமவனிபருந்தற்சூழ. (௫௪)

கல்வரையும்பாலைக்கடிஞ்சுரமுங்கான்யாறு
நல்வரையுநீர்நாடுநாளிரண்டிற்சென்றருளித்
†தொல்வரையகோபுரமுநீண்மதிலுஞ்சூழ்ந்திலங்கு
மல்வரையதோளான்வளமாநகர்கண்டான். (௫௫)

வேறு.

மேவுசெந்துகிர்த்திரளுமாமரகதவிதழுங்
கோவைவெண்கதிர்த்தரளமுநிரைநிரைகுயிற்றித்
தாவும்வெம்பரித்தேரினான்றனக்கெதிர்சமைத்த
தாவணங்களிற்றோன்றினபச்சிளங்கமுகம். (௫௬)

வம்புலாமகில்சந்தனம்வருக்கைமாகந்தஞ்
சம்பகந்தமாலம்பலதிசைதொறுந்தயங்க
வும்பர்நாயகன்வரவுகண்டுளங்களிகூர்ந்து
தும்பிபாடினதோகைநின்றாடினசோலை. (௫௭)

அணிகொளத்திருப்புரியெனுமணங்குசெந்திருவின்
கணவனுக்கெதிர்காட்டுநீராசனங்கடுப்ப
மணமிகுத்தசெந்தாமரைமலருடன்சிறந்த
புணரியிற்பெரும்புனலையுங்கொள்வனபொய்கை. (௫௮)

* மந்தணத்தின் என்றும் பாடம்.

† தொல்வரைசேர் கோபுரமும் என்றும் பாடம்.

நடந்தநாயகன்கோலமாய்வேலைசூழ்ஞால
மிடந்தநாளிடையதுவழியாகவந்தெழுந்து
படர்ந்தபாதலகங்கையப்* படாமதில்சூழ்ந்து
கிடந்ததாமெனச்சிறந்ததுதாழ்புனற்கிடங்கு. (ருகூ)

அடிநிலத்திலேபடிவனவிடிமுகிலனைத்து
முடிநிலத்தினுக்குடபதத்தினுமுடிவில்லை
நெடியசக்கரப்பொருப்பையுநிகரிலாவதற்கோர்
படிவகுத்ததாமெனும்படிபரந்ததுபுரிசை. (சு0)

பகலினுங்கடும்பரிதிதன்கதிர்பரப்பாம
லிகலிவெங்கணுமெறிந்துகால்பொருதலினெற்றிப்
புகலுகின்றமந்தாகினித்தரங்கமேபோல
வகல்விசும்பிடைமிடைவனநெடுங்கொடியாடை. (சுக)

புயங்கபூமியோபுரந்தரற்கமைத்தபொன்னுலகோ
தயங்குசெல்வநீடளகையோவிகலோனுந்தரத்த
வியங்குகார்வரைமுழைதொறுமெழுவனபோல
வயங்குகாரகினறும்புகைபுயிர்ப்பனமாடம். (சுஉ)

மன்னர்வேழமுஞ்சேனையுமெதிரெதிர்மயக்கப்
பின்னுமுன்னுமெய்மருங்கினும்பெயரிடம்பெறுமந்
துன்னிநின்றவரொருபினெருங்கினொடா
வென்னுமோசையேபுன்னைவீதிகளெல்லாம். (சுங)

வரையெலாம்பலவனமெலாங்கடலெலாம்வளர்ந்த
தரையெலாம்படுபொருளெலாந்தனித்தனிகுவித்த
நிரையெலாங்கவராவணச்சீர்மையைப்புலவோ
ருரையெலாந்தொடுத்துரைப்பினுமுவமைவேறுளதோ. (சுச)

விரவுகான்மலரினும்பலவீரரின்விதங்கள்
பரவைவெண்மணலினும்பலபுரவியின்பந்தி
யிரவில்வானமீனினும்பலயானையினீட்ட
நிரைகொள்கார்த்துளியினும்பலதேரணிநிலையே. (சுரு)

ஆசிலாமறையந்தணராலயமொருபான்
மாசிலாமுடிமன்னவர்மாளிகையொருபாற்
காசிலாமதியமைச்சர்தங்கடிமனையொருபாற்
பேசிலாவளவணிகர்தம்பேரிடமொருபால். (சுசு)

மங்கலந்திகழ்மனையெலாம்வலம்புரியோசை
திங்கடோய்நெடுந்தலமெலாஞ்செழுஞ்சிலம்போசை
யங்கண்மாநகரனைத்துமுமுரசதிரோசை
யெங்கணுங்கடவுளரிடந்தொறுமுழவோசை. (சுஎ)

* படைமதில் என்றும் பாடம்.

முன்றிலின்கணின்றிடம்பெறுவாசர்மாமுடிக
ளொன்றொடொன்றுறைந்தெற்றிமேலிலாவிர்பொறிசிதறிச்
சென்றசென்றவெத்திசைதொறுந்திகழ்ந்தது செம்பொற்
குன்றெனும்படிகுருகுலநாயகன்கோயில். (௬௮)

என்றிசைக்குநல்லொளிதிகழெழின்மணிமகுடக்
குன்றிசைக்கும்வண்கோபுரமிசைக்குறுகித்
தென்றிசைக்குளிர்செண்பகமலருடனகிறந்து
நின்றிசைக்கும்வண்சோலைவாயமர்ந்தனனெடுமால். (௬௯)

அன்றுதூதுகொண்டிலங்கைதீயினைந்தவனைவர்க்
கின்றுதூதுவந்தெயிற்புறத்திருந்தனனென்றுத்
துன்றுதூதுவண்டினமுரன்றுடையலங்கறனக்குச்
சென்றுதூதுவரியம்பினர்சேவடிவணங்கி. (௭0)

தொல்லைநாயகன்வந்தனனென்றலுஞ்சுநட்பார்
மல்லன்மாலையானேவலான்மாநகர்மாக்க
ளெல்லைநீண்மதில்வட்டம்யோசனையெழுநூறுஞ்
செல்வமாநகர்த்தெருவினையொப்பனைசெய்தார். (௭௧)

மின்னுமாமுகிற்பல்லியவிதங்கண்முன்முழங்க
மன்னர்மன்னவனெழுந்தனன்மாலெதிர்கொள்வா
னென்னைநீயவற்கெதிர்செல்வதென்றுதன்மருகன்
றன்னைவன்போடுதகைந்தனன்கொடுமைகூர்சகுனி. (௭௨)

சீர்வலம்புரிதிகிரிசேர்செங்கையான்றனக்குக்
கார்வலம்புரிகோயிலுங்காட்டியுமமைத்துப்
போர்வலம்புரிநிருபருமிளைஞருஞ்சூழ்போற்றத்
தார்வலம்புரியவனிருந்தனன்பொலந்தவிசின். (௭௩)

தொல்பகீரதிமைந்தனுந்துரோணனுஞ்சுதனும்
வில்விதூரனுங்கிருபனுமுதலியவேந்தர்
மல்குழூவிருபத்துநூறாயிரர்மகிழ்ந்து
செல்வநாயகற்கியோசனையிரண்டெதிர்சென்றார். (௭௪)

வந்துவந்திருமருங்கினுமன்னவர்வணங்கப்
பைந்துழாய்முடிப்பரமனுங்கண்மலர்பரப்பி
யந்தமாநகர்புகுந்தபினரசனிற்புகாமற்
புந்திகூருரவிதுரன்வாழ்வளமனைபுகுந்தான். (௭௫)

வேந்தர்யாரையும்விடைகொடுத்தகன்றபின்விமலன்
வாய்ந்தமாளிகைநடுவணோர்மண்டபங்குறுகி
யாய்ந்தவல்லவர்நவமணியழுத்தியவரியே
றேந்துமாசனமிடப்பொலிந்ததன்மிசையிருந்தான். (௭௬)

இருந்துவந்தருளிறைவனைப்பிறைஞ்சினனிறைஞ்சிப்
பொருந்துவந்தனைப்பிறப்பையுமிறப்பையும்பிரித்தான்
மருந்துவந்தனையமரருக்கருளியமாயோன்
விருந்துவந்தனனென்றுளமுருகியவிதுரன். (௭௭)

கோடுகொண்டகைக்குரிசிலைமலர்ந்தகோகனகக்
காடுகண்டெனக்கண்டுதன்கண்ணிணைகளியாத்
தோடுகொண்டதார்விதுரனிப்பிறப்பையுந்தொலைத்தான்
வீடுகண்டவர்க்கியம்பவும்வேண்டுமோவேண்டா. (௭௮)

உள்ளினுள்ளுணர்ந்துள்ளமுமுருகினனெழுந்து
துள்ளினன்விழுந்திணையடிசூடினனுயரத்
தள்ளினன்மலர்த்தடக்கையாற்றழுவவமுதை
யள்ளினனெனக்கண்களாலருந்தினனளியோன். (௭௯)

முன்னமேதுயின்றருளியமுதுபயோததியோ
பன்னகாதிபப்பாயலோபச்சையாலிலையோ
சொன்னநால்வகைச்சுருதியோகருதிநீயெய்தற்
கென்னமாதவஞ்செய்ததிச்சிறுகுடிலென்றான். (௮௦)

மும்மையாகியபுவனங்கள்முழுவதையுமருந்து
மெய்ம்மையாளுடைநாயகன்விருந்தினுக்கிசைந்தா
னம்மவென்றனரொற்றராயிரமடையர்
தம்மைநோக்கினனவர்களும்விரைவுடன்சமைத்தார். (௮௧)

வந்தகொற்றவெல்வரிசிலைவான்வசுந்தரிக்குக்
கந்தடர்ப்பனகரிக்கும்வெங்கவனவாம்பரிக்கு
மைந்துபத்துநூறாயிரமரசர்க்குமெவர்க்கு
மிந்திரற்குமெய்தாவமுதெனும்படிபெற்ற. (௮௨)

அமைத்தவாசனன்னா[illegible]ஞ்சனமாதுக்
சமைத்தபல்கறிபடியி[illegible]நுகர்ந்தி
யுமைக்குநாயகனாவொழுந்தருளினனுதவ
விமைப்பிலாரமுதருந்தியவியல்பெனவிருந்தார். (௮௩)

வாசநீருடன்சுன்னமுமுறைமுறைவழங்கப்
பூசறுத்துழிப்பூசினர்சூடினர்புனைந்தார்
வீசுசாமரமிரட்டவெண்மதிக்குடைநிழற்றக்
கேசவன்மணிக்கேசரித்தவிசிடைக்கிளர்ந்தான். (௮௪)

ஞானகஞ்சுகவிதுரன்வாழ்மனையிற்பகலும்
போனகம்பரிவுடனுகர்ந்திருந்தவப்பொழுதிற்
றானுமேருவுக்கப்புறத்தவ்வழுந்தருந்தப்
பானுவும்பெருங்குடதிசைப்பரவையிற்பாய்ந்தான். (௮௫)

கருதியந்தணர்யாவருந்தங்கடன்கழிப்பச்
சுருதியென்னும்வெஞ்சாபமேலம்புகைதொடுத்துப்
பருதிதன்பெரும்பகைவர்மேல்விடுத்தலிற்பரந்த
குருதியாமெனசிவந்தெழச்சிவந்தது குடபால். (௮௬)

தரங்கவாரிதிப்புறத்தெதிர்மலைந்தவெஞ்சமரி
னுரங்கொள்கூர்நெடும்படைகளானுடன்றமந்தேகர்
துரங்கமேழுடைக்கடவுளை நிரைநிரைதுணித்த
கரங்கள்போன்றனகரைதொறும்வளர்துகிர்க்காடு. (௮௭)

நீதியிற்புகல்பகலெலாநீரரமகளிர்
மீதுறைத்தெழும்வெவ்வெயில்படாவகைவிரித்துப்
போதுபுக்கதென * றிதம்படச்சுருக்கியபூம்பட்
டாதபத்திரம்போன்றனதாமரையடவி. (௮௮)

கலந்துமங்கலமுழவுவெண்சங்கொடுகறங்க
மிலைந்தபூங்குழல்வனிதையர்மெய்விளக்கெடுப்பக்
கலந்ததாமரைத்தடமெலாங்குவிந்தது கண்டு
மலர்ந்ததாமரைவாவிபோன்றது நகர்வட்டம். (௮௯)

உரகபுங்கவன்மணிமுடியொப்பனதீப
மிருமருங்கினுமாயிரமாயிரமேந்த
வரிசுமந்தபோராசனத்தழகுடனிருந்த
புரவலன்றனைப்புண்ணியவிதுரனும்போற்றி. (௯0)

பொங்கராவணைபொலிவறப்போந்தபின்பொதுவர்
தங்கள்பாடியில்வளர்ந்துமாமருதிடைத்தவழ்ந்த
கங்கைமாநதிகால்வழிகருணைபங்கடலே
யிங்குநீதனிநடந்தவாறுரைத்தருளென்றான். (௯௧)

தோட்டுவந்துசெந்தேனுகர்சுரும்புசூழ்தொடையாய்
காட்டுவந்துமுன்றிரிந்துதங்கடவநாட்கழித்து
நாட்டுவந்தபேரைவர்க்குநற்குநாடு
கேட்டுவந்தனமென்றனன்விதுரனுங்கேட்டான். (௯௨)

முழக்கினுயர்முரசுயர்த்தவன்றனக்குரிமை
வழக்கினலறிந்துடலரவுயர்த்தகோன்வழங்கான்
றழக்கினவிருதிசையினுமாசெழச்சமரி
லுயக்கிலலதுணர்வனோவென்றவனுரைத்தான். (௯௩)

வாளைவாவியினுகண்டெழுவளரிளங்கமுகின்
பாளைவாயளிமுரன்றெழும்பழனநாடுடையா
னாளைவாழ்வவர்க்களித்திலனெனிலெதிர்நடந்து
மூளைவாயுகமுடிப்பர்வெம்போரெனமொழிந்தான். (௯௪)

* இனமபட என்றும் பாடம்.

விரைந்துபாய்பரிமன்னவரிதப்படமேவியுற்
றிரந்துவேண்டினுங்கிளைஞருக்கொருபொருளியார்
பரந்தபோரினிலெதிர்த்தவர்படப்படப்பகழி
துரந்தபோதவர்க்குதவுவர்சொன்னவையெல்லாம். (கூரு

என்றுபாரினிலியற்கையும்விதுரனுக்கியம்பி
வென்றுபோர்கெழுநேமியான்விடைகொடுத்தருளிக்
குன்றுபோற்புயக்காவலர்கொடுந்துடிகறங்க
மன்றனுண்மலர்ப்பாயலின்மீதுகண்வளர்ந்தான். (கூசு

குளிருமாமதிமுகத்தொளிர்குமுதவாய்மலர்த்தித்
தளவவாணகைபரப்பிவளைசததளமலர்க்கை
யளவிலேகுவித்தளியொடுமகன்றிலாமையினாற்
களிகொடோள்விலைக்கணிகையைப்போன்றதக்கங்குல். (கூஎ

அளைந்தவாரிருட்கடல்பொருதொருபுடையண்டம்
பிளந்ததாமெனக்கரும்படாம்பிறப்பதென்ன
வளைந்தவேழ்கடல்வற்றமேல்வடவையின்முகத்திக்
கிளர்ந்ததாமெனக்கிளர்ந்தனவிரவியின்கிரணம். (கூஅ

இகலும்வாளரவுயர்த்தவனிருந்ததொல்பதியி
லகிலநாயகனொருதனிகடந்தவாறறிந்து
மகரவாரிதியகன்றுயாமருக்குறவணைந்த
திகிரிபோலவந்தெழுந்தனனிரவிகீழ்த்திசையில். (கூகூ

வேறு.

சோதிவானநதிமைந்தனும்பழையசுருதிபாலுயர்துரோணனு
மாதியாகவுயிரினும்வியப்புறவமைத்தமன்னவரநேகரு
நீதியாறுவகையைந்துபத்தொடறுபத்தொராயிரவர்நிருபருந்
தீதிலாததிறலக்குரோணிபதியென்றுபெற்றமிகுசேனையும். (க00

தொக்கவெண்கவரியாலவட்டநிரைசோட்டைவாள்பிறைநுதியுடன்
கைக்களாசியிவைகொண்டுலாவிவருகன்னிமங்கையர்களனைவரு
மிக்கவேதியர்கள்வல்லபல்கலைவிதத்திலுள்ளவர்கள்யாவருந்
தக்கதம்பியரும்வந்துசூழவுயர்தரணிமேனிருபர்தம்பிரான். (க0க

நிரைகதிர்க்கனகநீள்சுவர்ப்பவளவுத்திரத்திடைநிரைத்தவொண்
பருமணிக்கிரணபற்பராகவயிரத்துலாமிசைபரப்பிவெண்
டரளவர்க்கவயிடூரியப்புதியகோமளப்பலகைதைத்துயர
மரகதத்திரளொருகோடிதூணிரைவகுத்தமண்டபமருங்கரோ. (க0உ

முட்டநித்திலநிரைத்தபந்தரினகைத்தசீரரிமுகத்தகால்
வட்டமெத்தைகொடமைத்தபீடமிசைவாசவன்கொலெனவைகினான்
பட்டவர்த்தனருமகுடவர்த்தனரும்*வந்துசேவடிபணிந்தபி
னிட்டபொற்றவிசின்முறைமையாவினிதிருக்கவென்றவரையேவியே. (க0௩

---

* வந்துவந்தடி என்றும் பாடம்.

காவன்மன்னவர்முகங்கடோறமிருகண்பரப்பியமர்கருதுவோ
ரேவலின்கண்வருதூதனுமிடையனின்றுகம்மவையிலெய்தினு
லோவலின்றியெதிர்சென்றுகண்டுதொழுதுறவுகூறிலினியுங்களூர்
தீவலஞ்செயவடர்ப்பனென்றுநனிசீறினன்முறைமைமாறினன். (க௦௪)

இந்தவண்ணமுரைசெய்துமன்னவையில்ராசராசனுமிருக்கவே
தந்தவண்ணனுடன்வந்தவண்ணலொளிதங்குகண்டுயிலுணர்ந்தபின்
கந்தவண்ணமலர்கொண்டுகைதொழுதுகாலையிற்பலகடன்கழித்
திந்தவண்ணமுனிருந்தபேரவையிலேயினனிசைகொள்வேயினன். (க௦ரு)

தன்னுகங்கைமகனுந்துரோணனொடுசுதனுநீதிபுனைவிதுரனு
மன்னர்மன்னனையொழிந்தமன்னவரும்வந்துசேவடிவணங்கினார்
கன்னனுந்தலைகவிழ்ந்திருந்தனனழன்றனஞ்சகுனிகருகினன
முன்னநின்றவர்களிட்டபீடமிசைமொய்துழாய்முகிலுமெய்தினன். (க௦சு)

முன்னகங்குடைகவித்தகாமுகின்முன்னிருந்தபின்முகங்கொடா
தென்னகந்தனையொழித்துநென்னலிடையிகுமாநகரிலெய்தியும்
பொன்னகங்கொள்புயவிதுரனில்லிடைபுகுந்ததென்கொலிதுபகலெனப்
பன்னகந்தனையுயர்த்தகோவுமுரைபகராலுமெதிர்பகருவான். (க௦எ)

என்னிலின்னிலொருபேதமில்லையிதுவென்னிலின்னிலதுவென்னினு
மின்னிலின்முனிலதவிறனெடும்படைவிதுரன்வந்தெதிர்விளம்பினு
னுன்னிலின்னமுளதோவென்றுபஞ்சவருரைக்கவந்ததொருதூதன்யா
னின்னிலின்னடிசிலுண்டுநின்னுடன்வெறுக்கவெண்ணுவதுநீதியோ. (க௦அ)

அரவமல்கியபதாகைபாய்மதியமைச்சராயரசழிப்பினுங்
குரவர்கல்லுரைமறுக்கினும்பிறர்புரிந்தநன்றியதுகொல்லினு
மொருவர்வாழ்மனையிலுண்டுபின்னுமவருடனழன்றுபொரவுன்னினு
மிரவியுள்ளளவுமதியமுள்ளளவுமிவர்களேநரகிலெய்துவார். (க௦கூ)

சீதநாண்மலர்மடந்தைகேள்வனிவைசெப்பவுந்தெரியவொப்பிலா
நாதநாயகன்முகத்தில்வைத்தவிழிநயனனுமிங்கிதஞ்செயாத்
தூதனாகிவருதன்மைசொல்லுகெனமன்னர்மன்னனிதுசொன்னபின்
வேதனுறுமலருந்திவண்டுளபவிரைசெய்தாரவனுமுரைசெய்வான். (கக௦)

சூதினலரசிழந்துநின்றுணைவர்சொன்னசொல்லும்வழுவாதுபோ
யேதிலார்களெனநொந்துதண்ணிழலிலாதகானினிடையெய்தியே
தீதிலாவகைகுறித்தநாள்பலகழித்துவந்தனர்செகத்தினிற்
கோதிலாதகுருகுலமகீபவவருரிமைநண்பொடுகொடுத்தியே. (ககக)

சொல்லவாவுரகதுவசநின்னுரியதுணைவர்தங்களையழைத்துநீ
வல்லவாறுசிலநாடளித்தவர்கடம்முடன்கெழுமிவாழ்தியே
னல்லவாய்மைநிலையுடைமையென்றரசர்நாடொறும்புகழ்வர்நண்புகொண்
டல்லவாமெனமறுத்தியேலறமுமாண்மையும்புகழுமல்லவே. (ககஉ)

என்றுகேசவனியம்பவங்கெதிரிராசராசனுமியம்புவா
னன்றுசூதுபொருதுரிமைபாவையுமிழந்துபோயினர்களவரு
மின்றுநீவிரகின்மீளவுங்கவரவெண்ணினனவரிலெளியனோ
சென்றுகானிலவரின்னமுந்திரிவதுறுதியென்றனனிசிறியே. (கக௩)

நீவெறுக்கிலெனிருந்தமன்னவர்நினைக்கிலென்பலநினைக்கிலென்
போய்நகைக்கிலெனுரைத்தவுண்மைமொழிபொய்த்ததென்றமர்புகலிலென்
வேய்மலர்த்தொடையலைவரொன்றுடன்மிகைத்துவெஞ்சமர்விளைக்கிலென்
னீயிருக்குமிடமெனினுமிப்புவியில்பானவர்க்காசினிக்கொடேன். (ககச)

கார்வழங்குருமெனச்சினத்தினொடுகண்ணிலான்மதலைகழறவும்
பார்வழங்கிலினியில்லையேலவரிபாரதப்போரினும்வழங்குவாய்
தார்வழங்குதடமார்பவென்னவுந்தானுமன்னவன்மறுக்கவைந்
தூர்வழங்குகெனவுற்றிரந்தனனிவ்வுலகெலாமுதவுமுந்தியான். (கக௫)

மாடளிக்குலநெருங்குபைந்துளபமாலையாய்மகாவேலைசூழ்
நாடளித்திடவுமைந்துபேருடையநாளித்திடவும்வேண்டியோ
காடளிக்கவதனிடை* திரிந்துறைகரந்துபோயினர்கள்காணவோர்
வீடளிக்கினும்வெறுப்பெனாவிதற்கிசைவன்றெதிர்விளம்பினான். (கக௬)

தந்தைதாதனுறுதன்மைகண்டிளையதாய்பயந்தவிதுதம்பியர்க்
கிந்தவாழ்வுமரசுங்கொடுத்தவனுமின்குலத்தொருவனிங்குளான்
முந்தமாநிலமளித்திளைக்குமுயர்முறைமையாலரியவாசகந்
னைத்துமாகநீகொடாதொழிதியென [illegible]. (கக௭)

ஒருகுலத்தினிவிரண்டுமன்னவருடன்பிறந்துரிமைபெற்றனி
ரிருகுலத்தவருமொக்கவாழ்வுறுதலைக்குலத்தினும்பிறக்கையே
பொருகுலக்களிறனைத்திசைக்கரியதுபுகழ்பரப்பிவெபுவியிடெங்
குருகுலத்தவரியற்கைகன்றெனமொழிந்தனன்கரியகோவலன். (கக௮)

பேராவணைதுறந்தமாயனிவைபேசவன்பினொடுபின்னையுஞ்
சீராவினையுயர்த்தகோவும்விழித்திடெனும்படிசெயிர்த்துளை
பேராரத்நபன்மணிநெடுஞ்சுடிகையாயிரங்கொடுபொறுத்தபார்
வீரரானவர்தல்லவோவுரிமைவேண்டியோவெனவிளம்பினான். (கக௯)

பொய்வளர்ந்தமொழிமன்னன்மற்றிவைபுகன்றபின்புபவனன்மைந்த
லைவர்தங்களரசுங்கொடாமலடலாண்மைகொண்டெதிரடர்த்தியேல்
மெய்விளங்கவருகுருநிலத்தினிடைவந்துவெஞ்சமர்விளைக்கவே
கைவழங்குகெனநின்றதூணிடையறைந்துரைக்குமிகைகாவலன். (கஉ0)

புன்பிறப்புடையபொதுவர்தங்களொடுபேறிலானிரைபரந்திரீஇ
முன்பிறப்புமுறைவாலோடுகோலியநுகம்பிணித்ததுமறந்துநீ
மன்பிறப்பினுயர்குருகுலத்தவர்தம்வாய்மைதானுமொருமாசிலா
வென்பிறப்புமுணராமலோசவையிலிந்தவாசகமியம்பினாய். (கஉக)

* திரிந்தெழில்கரந்து என்றும் பாடம்.

ஏவிலங்குசிலையைவர்வந்தனுகில்யானயர்ந்தெளிதிருப்பனோ
கோவிலங்குபொரவஞ்சுமோகரடகுஞ்சரஞ்சரங்கள்பகைகொண்டகான்
மேவிலங்குமுன்மலைத்தல்கையறையவேண்டுமென்றதுநின்மேன்மையோ
நாவிலங்குமெனவெண்ணியோமிகவுநன்றுநன்றரசர்ஞாயமே. (கஉஉ)

அளிவருங்குழல்பிடித்துமன்னவையிலைவருக்குமுரியாளைநா
னெளிவருந்துகிலுரிந்தபோதருகிருந்துகண்டவர்களல்லவோ
துளிவரும்புனல்பரிந்தருந்தியிடுசோறுதின்றுயிர்சுமந்துதோ
ளொளிவரும்படியிருந்தபாவியருமின்றுமானநிலையுணர்வரோ. (கஉங)

அன்னையானவருமிருவராமுதலளித்ததந்தையர்களைவராம்
பின்னையாசைகொடுகுருகுலத்துரிமைபெறுவராமொருபிறப்பிலோர்
மின்னையாமவர்களைவரும்பரிவினோடுதனித்தனிவிரும்புவா
ரென்னையாமவரொடொருகுலத்தரசனென்பதம்மவினையென்கொலாம். (கஉச)

ஞாலமுற்றுமுடையவன்மொழிந்திடநகைத்துவண்டுவரைநாதனுஞ்
சால*முற்றுமினியவர்கருத்தெனநினைந்துபேரவைதணந்துபோய்க்
கோலமுற்றசிலைவிதுரன்வாழ்வுபெறுகோயில்சென்றுநனிகுறுகினான்
சீலமற்றவர்சினத்தபோதுமொருதீதிலாதவர்செயிர்ப்பரோ. (கஉரு)

கரிந்துமாலைசருகாகவும்புதியகமலவாண்முகம்வெயர்க்கவுந்
திருந்துகண்ணிணைசிவக்கவுங்கொடியசெய்யவாயிதழ்துடிக்கவு
மிருந்தபேரவையினெடுதுயிர்த்திடுமிராசராசனவனுக்கிவன்
விருந்துசெய்தவுறவென்கொலென்றரசரேதிர்விதுரனைவிளம்புவான். (கஉசு)

வன்பினாலவனிவெளவ†வென்றெனதுமனையிலுண்டியைமறுத்தவன்
றன்பதாகினியொடினிதருந்தும்வகைதன்னிலின்னமுதியற்றினா
னென்பிதாவொடுபிறந்துமின்றளவுமென்கையோதனமருந்தியு
மன்புதானுடையனல்லனென்பகைதனக்குமுற்றபகையல்லவோ. (கஉஎ)

முதல்விளைந்தொருவனுடனியைந்தபொருள்பற்றியின்புறமுயங்கினு
மதிகமென்றபொருளொருவன்வேறுதரினவனையேயொழியவறிவரோ
பொதுமடந்தையர்தமக்குமண்ணிலிதுபுதுமையல்லவவர்புதல்வனும்
விதுரனின்றவனொடுறவுகொண்டதொர்வியப்பையென்சொலிவெறுப்பதே. (கஉஅ)

இன்னவாறிவனுரைத்தபோதவனெழுந்திருந்துவசையென்னைநீ
சொன்னவாய்குருதிசோரவாள்கொடுதுளைத்துநின்முடிதுணிப்பன்யான்
மன்னவாகுருகுலத்திலேயொருவன்மைந்தனானுயிரைவௌவினா
னென்னவானவர்நகைப்பரேயெனிபுரைத்தநாவுடனிருத்தியோ. (கஉகூ)

ஈண்டவர்க்குதவியாயதூதெனவிசைப்பவற்குலகமெங்கணு
நீண்டவற்குதவியாயினேனெனநினைத்துநீயெனையடர்த்தியோ
மாண்டவர்க்குதவியாயபோறமுமிசையுமாண்மையும்வளர்த்திடும்
பாண்டவர்க்குதவியாகிலென்னைமுடிமன்னரானவர்பழிப்பரோ. (கங0)

---

* முற்றுமவர்நினைவெனப்பெரிதுவந்துபேரவை என்றும்பாடம்.

† என்றுகொலென்மனையில் என்றும்பாடம்.

சொல்லிரண்டுபுகலேனினிச்சமரினின்றவெங்கணைதொடேனெனு
வில்லிரண்டினுமுயர்ந்தவில்லதனைவேறிரண்டுபடவெட்டினான்
மல்லிரண்டினையுமிருவராகிமுன்மலைந்தகாளமுகில்வந்துதன்
னில்லிரண்டுதினம்வைகுதற்குலகிலெண்ணிலாததவமெய்தினான். (கூக)

அந்தவில்லினைமுறித்தவில்லிதனதாலயப்புகுதவச்சுதன்
சந்தவில்லுமரன்வில்லுமொப்பதொருதாமவில்லினைமுறிப்பதே
முந்தவில்லிபரிலெண்ணும்வில்லுடையவிசயன்வந்தமரின்முடுகினு
லெந்தவில்லியெதிர்நிற்கும்வில்லியினியென்றுகாவலரிரங்கினார். (கூஉ)

காரனைத்தும்விடுதாரையன்னபலகணைகளேவியமர்கருதும்வில்
வீரனைப்பழுதுரைத்தநீபகைமையெங்ஙனேதனிசொல்வெல்லுவாய்
பாரனைத்துமினிமைபவாரணும்வகைபண்ணுவித்தனையறிந்ததன்
போரனைத்துமெனவுள்ளழிந்துசிலபேசினானும்பர்பிதாமகன். (கூங)

பிதாமகன்பரிவுடன்மொழிந்துசிலபேசநாசமுறுபோரினும்
*மதாணிமார்பனும்விதூரனல்லதுவில்வல்லவீரர்பிறரில்லைபோ
வுதாசிலனுயர்ங்கர்சோனவரியிலொன்றுமேபமையுமுந்நெழும்
பதாதியோடமரிலைவரும்படமலைந்திடப்பாணிபாடவே. (கூச)

நீயிருக்கநெடுவிற்கையாசிரியனவனிருக்கநிகரற்றவன்
சேயிருக்கவிறன்மன்னரிப்படிதிரண்டிருக்கவெதிர்சென்றுநின்
வேயிருக்குமிதழிமாலையனுக்குநல்விருந்துசெய்தவன்வெறுக்கிலென்
போயிருக்கிலென்முறிக்கிலென்சிலைமலைந்துநம்மொடைவர்போர்செய்வார். (கூரு)

என்றுகூறவிறலங்கர்பூபதியும்யாவிருக்கவிகல்விசயனைச்
சென்றுசீறியுயிர்கொள்ளவல்லவர்கள்யாவரென்றுநனிசெப்புவீர்
குன்றிலுல்விளவெறிந்தகோவலவனின்றுதேர்நனிநடாவிடு
மன்றுபோரினிடைகாணலாகுமெனநாடல்வெஞ்சிலைபிறன்மையே. (கூசு)

அம்பரத்தவருடன்றுசீறினுமொரம்பிலேயழிவர்திண்ணம்யான்
வெம்பணிப்பகழியேவிலாவியுடன்மீளுவானமரில்விசயனோ
விம்பரிற்புகலவிருதளத்திலுமெனக்குநேரொருவரில்லையென்
றம்பர்கற்பகமுநாணவண்மையினுயர்ந்தவீரனிவையுரைசெய்தான். (கூஎ)

திசையனைத்திலும்வளைந்ததானவரையிராவிவந்ததொருதிசையின்வாய்
நிசியெனப்பொருதுவானவர்க்கரசளித்துவந்தவிறனிர்மையான்
விசயனுக்குநிகர்நீகொலோகடவுள்வெண்மதிக்குநிகர்வெள்ளியோ
வசைவில்விற்றொழிலும்வல்லையோவெனவோரசைவிலாதவனறைந்தனன். (கூஅ)

அவன்மொழிந்தமொழிதன்செவிப்படலுமருகிருந்தமுதருந்துநீ
யிவனுடன்சிலர்பகைக்கின்மற்றவர்தமிசையுமாண்மையுமியம்புவாய்
புவனமொன்றுபடவரினுமென்றனொடுபொருவராயினெதிர்பொரவிடாய்
சிவனுமென்கணையையஞ்சுமென்றுநனிசீறினானிரவிசிறுவனே. (கூகூ)

---

* விதாரமொய்ம்பனும் என்றும் பாடம்.

இரவிமைந்தனொடுகங்கைமைந்தனை நிர்வாய்மைபொன்றையுமிசைத்திலன்
பொரவறிந்திடுதமன்றுவெஞ்சமரிலென்றெழுந்து தனிபோயினு
னரவவெங்கொடியுயர்த்தகோவுமிகலாசருக்குவிடைநல்கினுன்,
விரவுபைந்துளபமாலையான்விதுரன்மனையிலுற்றது விளம்புவாம். (௧௪௦)

வேறு.

பொருசிலைமுறித்தவீரன்கோயிலிற்புகுந்துநேமிக்
குரிசிலைவணங்கியாங்கணிருப்பவக்குரிசிலுனுக்கி
யிருசிலையுண்டென்றிந்தவிருநிலத்தியம்புவில்லி
ஞெருசிலைமுறித்தசீற்றமெனகொலோவுரைசெயென்றான். (௧௪௧)

ஆவதுகருதானுகிலமைச்சர்சொற்கேளானுகில்
வீவதுகுறிபானுகில்விளைவதுமுணரானுகி
னுவதுகாவானுகிலவனுக்காநடந்துபோரிற்
சாவதுபழுதென்றன்றேசகத்துளோர்சாற்றுகின்றார். (௧௪௨)

செல்வம்வந்துற்றகாலைத்தெய்வமுஞ்சிறிதுபேணுர்
சொல்வனவறிந்துசொல்லார்சுற்றமுந்துணையுநோக்கார்
வெல்வதேநினைவதல்லால்வெம்பகைவலிதென்றெண்ணுர்
வல்வினைவிளைவுமோரார்மண்ணின்மேல்வாழுமாந்தர். (௧௪௩)

நினைக்கவுந்தொழவுமெட்டாநீயெழுந்தருளப்பெற்றுந்
தனக்கிதுதகுதியென்றுதமருடன்வாழவெண்ணுன்
மனக்கடுங்கனவினுன்றன்மதத்தினுலுரைத்தவெஞ்சொ
லெனக்கிசையாமல்யானுமிருஞ்சிலையிறுத்ததென்றான். (௧௪௪)

மாயனுமகிழ்ந்துநோக்கிமாசுணமுயர்த்தமன்னன்
போயருஞ்சேனையோடுபோர்க்களங்குறுகும்போது
நீயவனருகுநில்லாதொழியினுன்னையமைந்தர்
தாயமுஞ்செல்வமுற்றுந்தரணியும்பெறுவரன்றே. (௧௪௫)

ஏற்றியநறுநெய்வீசியிந்தனமடுக்கினுலுங்
காற்றுவந்துறாதபோதுகடுங்கனல்கதுவவற்றே
நீற்றணிநிமலனன்னநின்கைவில்லிற்றதாகிற்
சீற்றவேலரசன்சேனைதென்புலம்படர்கைதிண்ணம். (௧௪௬)

பன்னியவுரையில்கேள்விப்பயனுகர்மனத்தாய்நின்னை
மன்னவன்மொழிந்தவெல்லாம்பொறுத்தியென்றருளிமாயோ
னந்நகர்தன்னில்வண்மையருளழகாண்மைபேசுங்
கன்னனைப்பயந்தகாதற்கன்னிதன்கோயில்புக்கான். (௧௪௭)

மண்டலமதியமன்னமாசறுமுகத்தினுளுந்
திண்டிறன்மருகன்றன்னைச்சென்றெதிர்கொண்டுகண்டு
வெண்டிரைமகரவேலைவிரிபுனன்முழுகந்துதோன்றுங்
கொண்டலைமகிழ்ந்துகாணுங்குளிர்பசுந்தோகைபோன்றாள். (௧௪௮)

யானுறையிலின்வந்ததென்னமாதவமென்றெண்ணிக்
கானுறைமைந்தர்தம்மைக்கண்டனன்போன்றானாகித்
தேனுறைதுளவினான்றன்செய்யமாமுகத்தைநோக்கி
வானுறைபுரிசைமூதூர்வந்த*தென்கருதியென்றான். (கசகூ)

நின்பெரும்புதல்வர்சொல்லநெடும்புனனாடுவேண்டி
வன்பணியுயர்த்தகோமான்மனக்கருத்தறிபவந்தேன்
றென்புலவேந்தன்வெஃகச்செருத்தொழில்புரிவனென்று
னென்பலசொல்லிநாளையெதிர்க்கவேயிசைந்ததென்றான். (கரு௦)

என்றலுந்தந்திசாலமிரங்கினனெதிர்ந்தபோரில்
வென்றிடுவார்கள்பாரோவினியிருவமர்க்களத்திற்
பொன்றிடுவார்கள்யாரோவென்றுளம்புலர்ந்துநொந்தா
ளன்றவடன்னைத்தேற்றியாழியானுரைக்கலுற்றான். (கருக)

தன்மைநானுரைப்பக்கேணின்றந்தைதன்மனையினியுங்
கன்னியாயிருந்துவாழுங்காலையோர்முனிவன்வந்து
சொன்னநன்மந்திரத்திற்சூரியன்றன்னைநீயு
முன்னினையவனுடன்றுவந்துநின்முன்புநின்றான். (கருஉ)

கதிரவனருளினாலோர்கணத்திடைக்காதல்கூர
மதலைபங்கொருவன்றன்னைப்பயந்தபின்வடுவென்றஞ்சி
மிதவையம்பேழைதன்னிற்பொதிந்துவிடவப்போதந்
நதியுமம்மகவைக்கங்கைநதியிடைப்படுத்ததன்றே. (கருங)

காதனின்புதல்வன்றன்னைக்கண்ணிலாவரசன்பொற்றேர்ச்
சூதன்வந்தெடுத்துக்கொண்டுசுதனெனவளர்த்தகாலை
யாதவனிவனையாருங்கன்னனென்றழைக்கவென்றான்
றாதையும்விரும்பிச்சொன்னநாமமேதக்கதென்றான். (கருச)

பண்புடைக்குமரன்கற்றபடைத்தொழில்பலவுங்கண்டு
நண்புடையுரிமையெல்லாநல்கிமாமுடியுஞ்சூட்டி
வண்பணியுயர்த்தகோமான்வாழ்வதற்களித்தான்மற்றைத்
திண்பரித்தேர்வல்லோரிலவனையார்செயிக்கவல்லார். (கருரு)

அந்தநின்மைந்தன்றனைபருஞ்சிலைவிசயனோடு
வந்தெதிர்மலைபநின்றானுறவுமற்றறியமாட்டான்
சிந்தையினையந்திரவிதன்னைத்தெளியச்சொல்லிக்
கொந்தவிழலங்கலானைக்கூட்டிக்கவிரைவினம்மா. (கருசு)

தம்பியரைந்துபேருந்தனித்தனியேவல்செய்ப
வம்பவிழலங்கலோடுமாமணிமகுடஞ்சூடி
யம்புவிமுழுதுநீயேயாளலாம்வருகவென்று
லும்பர்காவனையகையானுன்னுரைமறுத்தானாகில். (கருஎ)

---

* என்னருடியென்றான் என்றும் பாடம்.

எரியமுதருந்தக்கானமெரித்தநாளகன்றுபோன
வரவினையங்கர்கோமானுசுகமாகக்கொண்டான்
வரிசிலைவிசயன்றன்மேன்மறுகணைதொடுக்காவண்ண
மொருவரம்வேண்டுகென்றானுற்றவர்க்குறுதிசூழ்வான். (கருஅ)

மன்றலந்தெரியல்வெய்யோன்மதலையென்மைந்தனென்ப
தன்றெனக்குரைத்தாயாகிலவனுடனணுகவொட்டேன்
சென்றுயிரொழிக்குமாறுசெருவினைவிளைத்துப்பின்னை
யின்றெனக்குரைத்தாயையாவென்னினைந்தென்செய்தாயே. (கருகூ)

கான்பட்டகனவிற்பாயுங்கடுங்கணைவிலக்கினேனேல்
வான்பட்டபுரவித்தேரோன்மகன்படுமகவான்மைந்தன்
றான்பட்டுமடியுஞ்சென்றுதடாதினியிருந்தேனாகில
யானபட்டகொடுமைநன்றென்றென்பட்டாளிரங்கிவீழ்ந்தாள். (கசுo)

தேக்குந்தியகிலுஞ்சாந்துஞ்சிந்துநீர்நதிசூழ்செல்வக்
கோக்குந்தியாசன்பாவைகுலைந்தழுங்கொடுமைகண்டு
மீக்குந்தியுறிகடோறும்வெண்ணெயுந்தயிருமுண்ட
வாக்குநதிமலரோன்பினனுமனத்தளாவகற்றினானே. (கசுக)

பைவருந்தலைகளைந்துபடைத்தபன்னகமேபோல
வைவரும்படுதனன்றோவங்கர்கோன்படுதனன்றோ
வுய்வருஞ்சமரிலாவியொருவர்போயொருவருய்பார்
நைவருந்துயரமாற்றி* நடப்பதேநன்மையென்றான். (கசுஉ)

காளமாமுகிலின்மேனிக்கரியநாயகனுந்தேற்றி
மீளமாதவத்தின்மிக்கவிதுரன்வாழ்மனையினெய்த
வாளமால்வரையில்வெய்யோன்குறுகினன்வருணான்றிக்கி
னீளமால்யானைநெற்றிநிறத்தசெந்திலகம்போன்றே. (கசுங)

நாற்றிசையுலகுதன்னினான்மறையுணர்ந்தோர்தாமும்
போற்றிசைமாலையென்னும்பொற்புடையணங்குவைக
மாற்றிசைவிலாதசெம்பொன்மண்டபந்தன்னிலாதி
மேற்றிசைக்கடவுளிட்டவெயின்மணிப்பீடம்போனான். (கசுச)

கொண்டமென்சிறைவண்டெண்ணுங்கொழுநருக்கிடங்கொடாமன்
முண்டகக்குலத்துமாதர்முகங்குவிந்தூடிநிற்பக்
கண்டெதிர்நின்றகாதற்கயிரவக்கணிகைமாதர்
வண்டுறைநின்றுதங்கள்வாய்மலர்ந்தழைக்கலுற்றார். (கசுரு)

கானெலாமலர்ந்தமுல்லைககனமீதெழுந்ததென்ன
வானெலாம்வயங்குதாரைநிரைநிரைமலர்ந்துதோன்ற
வேனிலானவிழவினைவைத்தவெள்ளிவெண்கும்பமென்னத்
தூநிலாமதிபம்வந்துகுணதிசைத்தோன்றிற்றம்மா. (கசுசு)

---

* நடப்பதேகருமமென்றான் என்றும் பாடம்.

தூவியனிலவுதோன்றத் துணைவரைப்பிரிந்தோர்கண்கள்
காவியுமாம்பலும்பைங்கருவிளமலரும்போன்ற
மேவியமகளிர்கண்கண்மீனெறிபாவையேழுந்
தாவியலுழையுங்காதற்சகோரமும்போன்றமாதோ. (௧௬௭)

அரவியலல்குலாருமகிழ்நருமன்புகூர
விரவியவமளியெய்தவீதிமாநகரியெங்கும்
பரவையினிமிர்ந்தவோதையமர்ந்தபின்பரித்தேர்வேந்த
னிரவிடைச்சூழ்ந்தவண்ணமின்னதென்றியம்புகின்றாம். (௧௬௮)

தந்தையுந்தம்பிமாருங்கன்னனுஞ்சகுனிதானுஞ்
சிந்தையிற்றெளிந்தகல்விச்செழுமதியமைச்சர்தாமு
முந்தரவுயர்த்தகோமானேவலான்முழுதுமெண்ணி
மந்திரமிருப்பான்வந்தோர்மண்டபங்குறுகினரே. (௧௬௯)

தீதறுமதிவல்லோரைச்செழுமதிக்குடையானோக்கிப்
பாதவவனத்திற்போனபாண்டவர்தம்மைமீண்டு
மேதகவழைத்துநாடுவேண்டுமினென்றுமூட்டும்
யாதவன்றனித்துவந்தானென்செய்வதியம்புமென்றான். (௧௭௦)

பொரும்படைமைந்தன்கூறத்தந்தையும்*பொருந்தச்சொல்வா
னிரும்புலிவலேயிற்பட்டால்விடுவரோவெயினரானோர்
வரம்பில்வெஞ்சேனையோடும்வளைந்தினிமாயன்றன்னைக்
கரும்பொழுதகலுமுன்னேகொல்வதேகருமமென்றான். (௧௭௧)

கண்ணிலானுரைத்தமாற்றங்கேட்டலுங்காவலோரின்
மண்ணிலாரிதற்குமுன்புதூதரைவளைந்துகொன்று
ரெண்ணிலாவிந்தவெண்ணமெவ்வழிக்கற்றதென்று
வெண்ணிலாமுறுவல்செய்துவிகர்னனும்விளம்பலுற்றான். (௧௭௨)

மூத்தவரிளையோர்வேதமுனிவரர்பிணியின்மிக்கோர்
தோத்திரமொழிவோர்மாதர்தூதரென்றிவரைக்கொல்விற்
பார்த்திபர்தமக்குவேறுபாவமற்றிதனினில்லை
பூத்தெரிதொடையாய்பின்னுநரகினும்புகுவரென்றான். (௧௭௩)

பழியுடைப்பகைஞரேனுந்தன்பெரும்பதியில்வந்தா
லழிவுறக்கோறல்பாவமாண்மையுமல்லவென்பார்
கழிகடற்சேனையோடுகங்குலின்வளைந்திட்டாலு
மெழிலுடைக்கொண்டல்வண்ணனகப்படானெவர்க்குமென்றான். (௧௭௪)

வெம்புயவலியான்மாதைவிரிதுகிலுரிந்தவீரன்
றம்பியைமுனிந்துசீறித்தமையனைநோக்கிச்சொல்வான்
வம்பவிழலங்கன்மார்பாமந்தணமுரைக்கலுற்று
விம்பர்மற்றியாதுசொல்லவிளைஞரையழைத்ததென்றான். (௧௭௫)

* பொருதுகொல்லு, மிரும்புலி என்றும் பாடம்.

அதிரதர்முதலாவுள்ளவவன்பாவலரைந்துந்றப
வெதிர்முகிறவழுங்கோயிலெரியினையெங்குமூட்டி
விதுரனுமவனுஞ்சேரவெந்திடமலைவதல்லான்
மதிபிறிதில்லையின்னேவல்விரைந்தெழுமினென்றான். (கஎசு)

செங்கதிரெழுந்துசீறிற்செறியிருணிற்பதுண்டோ
விங்கிவனிருந்தவில்லிலெரியிடவேண்டுமோதான்
வெங்கணையொன்றினாலேவிளிந்திடவென்றிகொள்வேன்
கங்குலினெழுமினென்றுகன்னனுங்கனன்றுசொன்னான். (கஎஎ)

பதிப்பெயர்ந்தேகிநாளைப்பகைவரைக்கூடுமாயின்
விதிப்பயனென்னநம்மைவெஞ்சமர்வெல்லவொட்டான்
மதிப்பதென்வேறுகள்ளமாயனைமனையிற்கோலிச்
சதிப்பதேகருமமென்றுசௌபலன்பின்னுஞ்சொல்வான். (கஎஅ)

சொல்லுவதியற்கையன்றுகுழிபறித்தரக்கரோடு
மல்லரையிருத்திமேலோராசனம்வகுத்துநாளை
யெல்லிடையழைத்துவீழ்த்தியிகலுடன்விலங்குபூட்டிச்
சொல்லருஞ்சிறையில்வைத்தலாதருக்குரிமையென்றான். (கஎகூ)

மாதுலனுரைத்தமாற்றமருகனுமிசைந்துகங்குற்
போதிடையநேகமல்லர்வருகெனப்புகன்றுதானு
நீதியினிருந்துதாழ்நிலவறைசமைத்தபின்ன
ராதிநூறாயிரம்போராக்கரையதனுள்வைத்தான். (கஅ0)

மல்லர்பப்ரவர்தம்மைமற்றதினிரட்டிவைத்தான்
வில்லுடைவீரர்தம்மைவேறதினிரட்டிவைத்தான்
பல்படைவல்லோர்தம்மைப்பதின்மடங்கதனில்வைத்தா
னெல்லிலோர்கடிகைதன்னிலிறைவனையழைக்கவென்றான். (கஅக)

பெரும்பிலவறையைவேயின்பிளப்பினாலிறைத்துமூடி
யரும்பெறன்மணிகளாலோராசனமதன்மேலாக்கிச்
சுரும்பிமிர்மாலைதூக்கித்தொழிலுடைவிதானமேற்றி
வரம்பிலாவென்றிவேலான்மாறிலாவண்ணஞ்செய்தான். (கஅஉ)

அடியவர்மனத்திலுள்ளவாரிருட்கங்குறீர்க்கு
நெடியவனிருக்கவென்றுநிலவறைவிரகிற்செய்த
கடியவனியற்கையஞ்சிக்கங்குலுங்கடிதிற்போகப்
படியவர்துயிலும்போகப்பரிதியுமுதயஞ்செய்தான். (கஅங)

சிரந்தருசுடிகைநாகத்திரண்மணிபலவுஞ்சிந்தி
நிரந்தரமருவிவீழுநிறந்திகழுதையக்குன்றிற்
பரந்தெழுமருக்கன்சூழ்ந்தபடரிருட்கங்குல்கண்டு
புரந்தரன்கோயிலிட்டபொங்கொளித்தீபம்போன்றான். (கஅச)

தொடர்ந்தொளிருதயாகத்தோடுறநெருங்கிமேன்மே
லடர்ந்தரிபாந்துகாமனுகமவேதம்பாடத்
தடங்கயன்மலேந்துலாவத்தாமரைமுகமுங்காதன்
மடந்தையர்முகமுஞ்சோமணம்பெறமலர்ந்தமாதோ. (கஅரு)

இருந்துயிலுணர்ந்தவேந்தர்யாவருமிரவிற்சுற்றும்
வருந்துயிலிலாதகண்ணன்வாழ்பெருங்கோயில்புக்கார்
பெருந்துயிலனந்தபோகப்போணைதுறந்தமாலு
மருந்துயிலெழுந்துகாலையருங்கடன்முறையிற்செய்தான். (கஅசு)

மாதவனிருந்தகோயில்வந்தடிவணங்கிமன்னன்
றூதுவராழியங்கைத்தோன்றலேதுளபமாலே
யாதவகுலத்தோரேறேயெழுந்தருள்கென்றுனின்றெம்
மேதகுமாசனென்றூர்முகுந்தனும்விரைந்துசென்றான். (கஅஎ)

கந்தடுகளிற்றுவேந்தன்கண்ணிலாவரசுங்கங்கை
மைந்தனுமுதலாவுள்ளமன்னருமதிவல்லோருந்
தந்திரவசையுமேனையிளேருருந்தன்னைச்சூழ
விந்திரனிருக்கையன்னகோயிலூடினிதிருந்தான். (கஅஅ)

நாமவேலாசரோடுநால்வகைச்சேனையோடு
மாமுகில்வண்ணன்வந்தானென்றனர்வரவுகண்டோர்
வீமலர்த்தொடையினுனும்வேத்திரத்தவரைநோக்கித்
தாமரைத்தடகண்மாயன்றன்னையேவிடுமினென்றான். (கஅகூ)

தன்பெருஞ்சேனைநிற்கத்தண்டுழாயலங்கலானு
மின்புறநகைத்துவேந்தரிருந்தபோவையினெய்த
மின்புணர்துவசநாகவிடநிகர்மனத்தினுனு
மன்பொடுகிரியானையதன்மிசையிருக்கவென்றான். (ககூ0)

வேறு.

இறைவனெழிற்கதிர்மணிகளழுத்தியதவிசினிருத்தலுமே
நெறுநெறெனக்கொடுநிலவறையிற்புக்நெடியவனப்பொழுதே
மறலியெனத்தருகி நபணியற்றியவிரகைமனத்துணரா
முறுகுசினத்துடனடியதலத்துறமுடிககனத்துறவே. (ககூக)

அஞ்சினமஞ்சினமென்றுவிரைந்துயரண்டர்பணிந்திடவுந்
துஞ்சினமின்றெனவஞ்பணியின்கிளைதுன்பமுழந்திடவும்
வஞ்சமனங்கொடுவஞ்சகனின்றிடுவஞ்சனைநன்றிதென
நெஞ்சில்வெகுண்டுலகொன்றுபடும்படிநின்றுநிமிர்ந்தனனே. (ககூஉ)

மல்லாரக்கர்குலத்தொடுபப்பார்வாளினர்வேலினர்போர்
வில்லினரிப்படிதாற்றநிலத்தறைமேவியவீரரெலாந்
தொல்லேபிடிக்கயர்வுற்றுயிரிற்றுறுசுடிகையராவெனவே
கல்லெனவுட்கினர்தத்தமுடற்பலகால்கொடுதைத்திடவே, (ககூஙு)

அற்புதபங்கயநற்பதமுந்தலினக்குழியின்புடையே
சற்பதலந்தொறுமற்றுவிழுந்தனத்தநெடுந்தலைபோய்
முற்பவனன்பொரமுக்குவடுந்துணிபட்டுமுடங்கியபொன்
வெற்பெனநின்றனர்வெற்றுடலங்கொடுவிற்படைகொண்டவரே. (௧௯௪)

மேல்வலிபுற்றெதிர்வீசியெழிற்கருமேகநிறத்திருமால்
கால்விசையிற்படமோதுதலிற்பொருசாமர்புயத்துணைபோய்
நீலநிறக்கவின்வாசவன்வச்சிரநீள்படையிற்சிறகிர்
மால்வரையொத்தனர்வாகைபெறக்கதிர்வாள்களெடுத்தவரே. (௧௯௫)

வெயில்விடுவைத்தலையமளிமிசைத்துயில்விபுதர்களுக்கரியோன்
பயிலவுதைத்தலினவர்களுரத்திடைபதமலர்பட்டுருவா
மயில்கடவிக்கடவுளர்பகையைக்கதிர்மகுடமுருக்கியவே
ளயில்கொடுகுத்தியநெடுவரையொத்தனரயில்களெடுத்தவரே. (௧௯௬)

மின்சுடிகைப்புயகங்கள்வெருக்கொளும்வெங்கருடக்கொடியோன்
வன்பதபற்பகங்கொடெடுத்துயர்வண்ககனத்திடலான்
முன்புவனத்திடைவந்துகவிக்கிறைமொய்ம்புணாப்புகல்போ
தென்புமலைக்குறுபண்பையடுத்தனரெஞ்சியபப்பரரே. (௧௯௭)

மைந்துபடைத்துயர்பஞ்சவர்சொற்படிவந்தமலர்க்கழலா
லுந்தியுதைத்துடலம்புதையப்பிலமொன்றியொளித்திடலா
லந்தணன்முற்பகல்வந்துபுடைத்திடவஞ்சிநிலத்திடைவீழ்
விந்தமொடெத்தனர்வன்குழியிற்றிகழ்வெங்கணரக்கருமே. (௧௯௮)

அந்தவிடத்தெறிபம்பரமொத்துடலஞ்*சுழலச்சுழலக்
குந்தியுறித்தயிருண்டவர்பொற்கழல்கொண்டுசுழற்றுதலான்
முந்தமரர்க்கமுதந்தரமைக்கடன்முன்சுழலச்சுழலு
மந்தரமொத்தனர்குந்தமெடுத்தெதிர்வந்துமலைந்தவரே. (௧௯௯)

முட்டியதொல்குருதிக்கடன்மல்கலின்முட்டிகொள்பல்விரலா
னெட்டுடல்பல்வகிர்பட்டதனுள்விழநித்தர்செய்தொல்வினையான்
மட்டறவல்விறலுற்றெதிர்செல்கவிமைக்கடலெல்லையிலே
யிட்டனகல்வரையொத்தனர்வெல்கழலெக்குலமல்லருமே. (௨௦௦)

எப்புவிநிற்பனவெக்கிரிநிற்பனவெக்கடனிற்பனவென்
றிப்புவனத்துயிர்முற்றுமயக்குறவுட்கினரெய்த்திமையோர்
மைப்புயலொத்தொளிர்பச்சைநிறத்தினன்†மற்கமலக்கழலா
லொப்பறமட்குழியுற்றவரைப்படவொத்திமிதித்தலுமே. (௨௦௧)

கொண்டன்முழக்கெனவம்புவியைக்கடல்கொண்டெழுதற்கதிருஞ்
சண்டமுழக்கெனவன்பவனக்கிளைதந்தமுழக்கெனவே
வண்டினமொய்த்தெழுவண்டுளபத்தொடைவண்டுவரைத்திருமா
லண்டமுகட்டுறநின்றுசிரித்தனனங்கணெருப்பெழவே. (௨௦௨)

---

* சுழலச்சிறிதே என்றும் பாடம்.

† வர்க்கமலர்க்கழலால் என்றும் பாடம்.

ஒன்றுபடக்கடலம்புமுகப்பனவும்பர்குலத்தருவுஞ்
சென்றுமுறிப்பனவெண்டிசையிற்குலசிந்துரமெற்றுவவெண்
குன்றமுடைப்பனபைம்பொனுரக்கிரிகொண்டுதிரிப்பனவா
லன்றுதனித்தனிநின்றுமலைத்தருளங்கைகள்பற்பலவே. (௨0௩)

துகிரிதழ்வைத்துநல்வளைகண்முழக்கினதொடர்சிலகைத்தலமே
யகிலம்வெருக்கொளவரிமழுவெற்றினவசிலகைத்தலமே
புகலும்வடிக்கணை*பலவுமெடுத்தனபொருசிலகைத்தலமே
திகழ்விசயத்தொடுசிலைகள்குனித்தனசிலசிலகைத்தலமே. (௨0௪)

வெங்கணையத்திரள்குந்தநிறப்படைவெம்புழலக்கைகள்போர்
பொங்கியவச்சிரமுந்துகலப்பைகள்புங்கழுவர்க்கமயி
லெங்குமலைத்தெழுசெஞ்சுரிகைத்திரடண்டமிவற்றினொடுந்
தங்கியசக்கரபந்திதரித்தனதண்பலகைத்தலமே. (௨0௫)

மேலெழுபூங்கதிர்வாளுறைபோம்படிவீசினவான்புடையே
தோலினமேந்தினநீள்கவணேந்தினசோரிகள்சோர்ந்திடவே
ஞாலமெலாம்பொருதோமரம்வாங்கினநாவொருமூன்றனவாஞ்
சூலமொடோங்கினபாசமொடோங்கினசூழ்சிலபூங்கரமே. (௨0௬)

சிலசிலகைத்தலமடிகழலிற்பலசெறிகழல்கட்டினவே
சிலசிலகைத்தலமிறுகுபுயத்திடைசெறிதொடையிட்டனவே
சிலசிலகைத்தலமணிகொளுரத்திடைபணிகடிருத்தினவே
சிலசிலகைத்தலம்விரல்கொடுசுட்டினசெறுநர்திகைத்திடவே. (௨0௭)

மாயிருஞாலமெலாம்வெயில்போயொருமரகதசோலையுறப்
போயிருபாலும்வளைந்துவளைந்தெதிர்பொருமுனைவெம்படையோ
டாயிரமாயிரமங்கைபுறப்படவண்டருமாதவரும்
பாயிரநான்மறைபாடிவியந்துபணிந்துபுகழ்ந்தனரே. (௨0௮)

ஆரணனேபரனேபுவனங்களனைத்தையுமன்றுதவுங்
காரணனேகருணாகரனேகமலாசனிகாதலனே
வாரணமேபொதுவேயொருபேரிடவந்தருளும்புயலே
நாரணனேமுனியேன்முனியேலெனநாகர்பணிந்தனரே. (௨0௯)

மாதவனேமுனியேலெமையாளுடைவானவனேமுனியேல்
யாதவனேமுனியேலிதயத்திலிருப்பவனேமுனியே
லாதவனேமுனியேன்மதிவெங்கனலானவனேமுனியே
ணீதவனேமுனியேன்முனியேலெனநின்றுபணிந்தனரே. (௨௧0)

கங்கைமகன்கதிரோன்மகனம்பிகைகாதன்மகன்றனய
ரங்கவையின்கணிருந்தநராதிபரடையவெழுந்தடைவே
செங்கைகுவித்தசிரத்தினராயுணர்வொன்றியசிந்தையரா
யெங்கள்பிழைப்பினையின்றுபொறுத்தருளென்றுபணிந்தனரே. (௨௧௧)

---

* உ. தணையெடுத்தன என்றும் பாடம்.

கண்ணபொறுத்தருள்வெண்ணெயருந்தியகள்வபொறுத்தருள்கார்
வண்ணபொறுத்தருள்வாமபொறுத்தருள்வரதபொறுத்தருணீ
திண்ணமனத்துணர்வொன்றுமிலாதவர்செய்தபெரும்பிழையென்
றண்ணன்மலர்க்கழல்சென்னியில்வைத்தெதிரன்றுதுதித்தனரே. (௨௧௨)

தேவரும்வாசவனுந்தவருந்திசைமுகனுநராதிபரும்
யாவருமன்பினொடாயிரநாமமுமெண்ணியிறைஞ்சுதலான்
மூவருமொன்றெனநின்றருளுந்தனுமுனிவுதவிர்ந்தருளா
மீவருமண்டமுறுந்திருமேனியொடுங்கினன்மீளவுமே. (௨௧௩)

தன்னினுயர்ந்தவர்யாருமிலாமுகில்சதுர்மறையின்படியே
யெந்நிலமுந்திருவடியின்மறைந்திடவிப்படிநின்றிடவும்
பின்னையுமஞ்சியயர்ந்திலனெஞ்சுபெயர்ந்திலனுசனமுஞ்
சென்னியினுங்கரம்வைத்திலன்வண்புகழ்சிறிதுமொழிந்திலனே. (௨௧௪)

தொல்லவையின்கணிருந்தநராதிபதுன்மதியாலெனைநீ
கொல்லநினைந்ததுநன்றெனவன்றிறல்கூறினனெம்பெருமா
னெல்லையினின்குலமுற்றுமடிந்திடவுற்றுமலைந்தொர்சணத்
தெல்லையின்வெஞ்சமர்நூறுவன்யாவருமேறுவர்வானுலகே. (௨௧௫)

அஞ்சினைநின்னையழித்திடநின்னுடனன்றுபெருஞ்சமர்வாய்
வெஞ்சுடராயுதமொன்றுமெடுக்கிலமென்றுவிளம்பியது
மெஞ்சமலைந்தெதிர்வந்துயிர்கொள்ளுதுமென்றுதனித்தனியே
பஞ்சவர்கூறியவஞ்சினவாசகமும்பழுதாமெனவே. (௨௧௬)

என்றுரையாடிநெடுங்கடல்வண்ணனெழுந்தருளப்பிறகே
சென்றனரெம்முடிமன்னவரும்பணிசேர்கொடியோனையலார்
நின்றுபசாரமுரைத்தவர்தம்மைநிறுத்தியநந்தரமே
வன்றிறலங்கர்பிரானொடுகூறினன்மற்றொருவாசகமே. (௨௧௭)

வண்மையினுயரங்கர்குலாதிபமதிகுலம்வாழ்வுறவந்
துண்மையினுயர்மன்னவரைவருமுன்னினுனக்கிளையோர்
பெண்மையினுயர்குந்திவயிற்றிடைபெருமையினுலிதயத்
திண்மையினுயர்நின்னையுமன்பொடுதினகரனல்கினனே. (௨௧௮)

ஏயுநெடுங்கொடிமுரசுடையோனையெழிற்றருமன்றரவே
வாயுவழங்கினன்வீமனைநல்கினன்விசயனைவாசவனு
மாயுநிகழ்ந்திடுவேதமருத்துவரன்பொடளித்தனர்செந்
தேயுவெனுந்திறனகுலனையுஞ்சகதேவனையும்பெரிதே. (௨௧௯)

அந்தணன்முன்றருமந்திரமொன்றினிலறுவரையுங்கடவுட்
குந்தியயந்தனள்யானினியென்பலகூறுவதுங்களினீ
ரிந்தநிலம்பெறுவீர்தவிர்கிற்பெறுயாரினிவேறரியார்
வந்தினிநும்பியர்தம்மொடுசேர்கெனமாயன்மொழிந்தனனே. (௨௨௦)

வேறு.

கன்றால்விளவின்கனியுகுத்துங்கழையானிரையின்கணமழைத்துங்
குன்றான்மழையின்குலந்தடுத்துங் குலவுஞ்செல்வக்கோபாலா
வின்றாலெனதுபிறப்புணர்ந்தேதனென்றன்புநகியெம்பியர்பாற்
சென்றாலென்னைநீயறியச்செகத்தாரென்றுஞ்சிரியாரோ. (உஉக)

ஆரென்றறியத்தகாதவெனையரசுமாக்கிமுடிசூட்டிச்
சீருந்திறமுந்தனது பெருந்திருவுமெனக்கேதெரிந்தளித்தான்
பாரின்றறியநூற்றுவர்க்கும்பழிதீர்வென்றிப்பாண்டவர்க்கும்
போரென்றறிந்துஞ்செய்ந்நன்றிபோற்றாதவரிற்போவேனே. (உஉஉ)

இரவிக்குரியதிருமதலையிவ்வாறுரைக்கவிசைவண்டு
விரவிப்புயிலுந்துழாய்முடியோனவேறோர்மொழியும்விளம்பாம
லுரவிற்றடந்தோளூரவோனையேகென்றருளியொருசார்வெம்
புரவித்தாமாநின்றானைவருகென்றழைத்துப்புகல்கின்றான். (உஉங)

போயேகானம்பலதிரிந்துபுகன்றவிரதம்பொய்யாதோ
ராயேவந்தபாண்டவர்களைத்தூர்வேண்டமறுத்ததற்குச்
சேயேயனையசிலைமுனிவன்சேயேநாளைச்செருக்களத்தி
னீயேகரியென்றெடுத்துரைத்தானெடியோன்றளபமுடியோனே. (உஉச)

ஆறுவுனதாண்மைக்குநிகரவனிதலத்தில்வேறுண்டோ
ஞாறுநிபனேபோர்க்களத்திறுகக்கொடியோன்பணிந்துன்னைச்
சேறுபநியாகென்றாலுஞ்செலுத்தேனனறுநீமறுத்தி
யாறுலுய்வரைவருமற்றவர்பாலுனக்குமன்புண்டே. (உஉரு)

ஆயோதனத்திலடலரியேறனையான்றன்னையிவ்வாறு
மாயோனுரைத்துத்தன்விரலின்மணியாழியைமண்ணிடைவீழ்த்தான்
சேயோனதனையெடுத்தவன்றன்செங்கைகொடுக்கவாங்காமற்
றாயோயூர்கோள்பரிதிதனைச்சூழ்ந்ததகல்வான்மீதெனவே. (உஉசு)

வரித்தாமரைக்கட்டிருநெடுமால்வான்வாய்நோக்கவரிவிற்கைப்
பரித்தாமாவுமாழியுடன்பரிதிவடிவந்தனைப்பார்த்தான்
கிரித்தாழ்கவிகைக்கருங்கள்வன்கிளர்நூன்முனிவன்மைந்தனையும்
பிரித்தானவனுஞ்சூளுற்றானென்றாரிருந்தபேரவையோர். (உஉஎ)

தனிவந்தகனுந்தூதனைப்போய்த்தானேபணிகித்தடஞ்சாப
முனிவன்புதல்வன்மோதிரந்தொட்டருஞ்சூண்முன்னர்மொழிகின்ற
னினிவந்துறவாய்நின்றாலுமெங்ஙன்றெளிவதிவனையெனத்
துனிவந்தரசர்முகநோக்கிச்சொன்னானிடியேறன்னானே. (உஉஅ)

துளியார்மதுவின்வலம்புரித்தார்த்துரியோதனன்றான்சொல்லியது
மொளியாரவையில்வாள்வேந்தரொருவர்க்கொருவநுரைத்தனவுங்
களியானையனுஞ்செவிப்படலுங்கலங்கிச்சித்தமிவரெனைத்
தெளியாவண்ணம்பேதித்தானதிருமாலென்றேசிந்தித்தான். (உஉக)

தண்ணந்துளபமுடியோனுந்தனித்தங்கிருந்து தன்மனத்தி
னெண்ணம்பலித்ததெனமகிழ்ந்தேயிளையோன்றனக்குவிடைநல்கி
விண்ணின்றமரர்மிகத்துதிக்கவிதுரன்மனையின்மேவியபின்
றிண்ணங்கடவுட்குலவரசன்வருமாறறிந்துசிந்தித்தான். (௨௩௦)

அந்தக்கணத்தில்வந்திறைஞ்சுமாகண்டலனைத்தழீஇக்கொண்டு
கந்தத்துளபமுடியோனுங்கண்ணுங்கருத்துங்களிகூரத்
தந்தத்தொழிலினரிசுமந்ததவிசினிடையேயுடனிருத்தி
முந்தக்கருதுகின்றவினைமுடிப்பானுபாயமொழிகின்றான். (௨௩௧)

கிரியின்சிறகையரிபடையாய்கேண்மோவாண்மைக்களமீதில்
வரிவெஞ்சிலைக்கைவிசயனுக்குமாறாய்முனிந்துவருகின்ற
வெரியுங்கனல்வாய்விடவரவொன்றிவனுக்குற்றபகையான
வரியின்புதல்வன்றனக்கொருபேரம்பாகியதாரறியாதார். (௨௩௨)

கன்னன்விசயன்றனைக்கொல்லிற்கடற்பார்முழுதுங்கண்ணில்லா
மன்னன்புதல்வன்றனக்கேயாமொழிந்தோர்தாமுமடிந்திடுவார்
முன்னஞ்சூதினமொழிந்தபகைமுடியாதிருக்கிலவர்க்கல்ல
நின்னெஞ்சறியயானறியநினக்கேவசையுநிலையாமே. (௨௩௩)

கவசங்கனககுண்டலமென்றிரண்டுபுனையிற்கற்பாந்த
திவசம்பொரினுங்கன்னனுயிர்செகுப்பார்மண்ணிற்சிலருண்டோ
வவசங்கிளைஞருறத்துணைவராற்றக்களத்திலடுகுரக்குத்
துவசம்படைத்தோன்படும்பயந்ததுணைவாவின்னேசொன்னேனே. (௨௩௪)

வல்லார்வல்லகலைஞருக்குமறைநூலவர்க்குங்கடவுளர்க்கு
மில்லாதவர்க்குமுள்ளவர்க்குமிரந்தோர்தமக்குந்துறந்தவர்க்குஞ்
சொல்லாதவர்க்குஞ்சொல்பவர்க்குஞ்சூழுஞ்சமயாதிபர்களுக்கு
மல்லாதவர்க்குமிரவிமகனரியதானமளிக்கின்றான். (௨௩௫)

மைந்தற்குறுதிநீவேண்டில்வல்லேமுனிவர்வடிவாகிச்
சந்தப்பனுவலிசைமாலைத்தாருகரனைவிரைந்தெய்தி
யந்தக்கவசகுண்டலங்களளிப்பாயென்றுலவனென்று
மிந்தப்புவியின்மறுத்தறியானுயிரேயெனினுமீந்திடுவான். (௨௩௬)

இரண்டுமவன்பனிகவரிவிருந்தேரூர்ந்திப்படியரசர்
திரண்டுவரினும்வெஞ்சமரிற்றிண்டோர்விசையனெதிர்நில்லார்
முரண்டுபொருவிற்கன்னனுந்தன்முன்னையெய்திமுடிசிதறிப்
புரண்டுமறியுமெனவணங்கிப்புத்தேளரசன்போகின்றான். (௨௩௭)

வேறு.

தண்டுதாளெனக்குனிந்துடலலமரத்தாளிணைதளர்ந்துதள்ளாடக்
கண்டியாவருங்கைதொழக்கவித்தகைக்குடையுடன்கங்கைநீர்நுரையை
மொண்டுமேலுறச்சொரிந்தெனவிரிந்தவெண்ணரையுடன்மூப்பொருவடிவங்
கொண்டதாமெனவொருமுனியாகியக்கொற்றவன்வாயில்சென்றடைந்தான். (௨௩௮)

அடுத்ததானமும்பரிசிலுமிரவலர்க்கருளுடன்முற்பகலளவுங்
கொடுத்து நாயகன்புகுந்தனனுளைநீர் குறுகுமினென்றவன்கோயிற்
றடுத்தவாயிலோர்மீளவுமுணர்த்தலிற்றலைவனுந்தருகெனவிரைவின்
விடுத்தனான்மறைமுனியைமுன்காண்டலும்வேந்தனுந்தொழுதடிவீழ்ந்தான். (உ௩௯)

என்னமாதவம்புரிந்தனன்பரிந்துநீரீண்டெழுந்தருளுதற்கென்று
பொன்னினாசனத்திருத்திமெய்யன்புடன்பூசையுமுறைமையிற்புரிய
வன்னவேதியன்றளர்ந்தவென்னடைக்குலானதேயிற்பசலென்று
சொன்னவேலையினகைத்துனக்களிப்பனீசொன்னவையாவையுமென்றான். (உ௪0)

அருத்தியீதல்பொற்சுரதருவினுக்குமற்றரிது நீயளித்தியோவென்று
விருத்தவேதியன்மொழிந்திடநகைத்து நீமெய்யுயிர்விழைந்திரந்தாலுங்
கருத்தினோடுனக்களித்திலேனெனிலெதிர்கறுத்தவர்கண்ணிணைசிவப்ப
வுருத்தபோரினிற்புறந்தருநிருபர்போயுறுபதமுறுவனென்றுரைத்தான். (உ௪௧)

வந்தவந்தணன்கவசகுண்டலங்களைவாங்கிநீவழங்கெனக்கென்னத்
தந்தனன்பெறுகெனவவன்வழங்கவிண்டலத்திலோர்தனியசரீரி
யிந்திரன்றனைவிரகினான்மாயவனேவினான்வழங்கனீயெனவுஞ்
சிந்தையன்கணோர்கலக்கமற்றளித்தனன்செஞ்சுடர்த்திலகானசிறுவன். (உ௪உ)

அண்டர்யாவருமலர்மழைபொழிந்தனரந்தரதுந்துபியார்ப்பக்
கொண்டல்வாகனன்கொண்டமெய்யொழிந்துதன்கோலமெய்யுடன்வெளிநின்றான்
கண்டுமாமனமுருகியேகளித்திடுங்கன்னனுக்கந்நெடுங்கடவுண்
மண்டுபோரினில்வயந்தருமிதுவெனமற்றொருகொற்றவேலளித்தே. (உ௪௩)

வெலற்கருந்திறல்விசயன்மேலொழித்துநீவெஞ்சினமடங்கல்போலொருசிற்
கலக்கமொன்றறப்பொருதிறல்புனைந்திடுகடோற்கசக்காளைதன்னுயிரே
யிலக்குவந்தெதிர்மலைந்தபோதிதற்கெனவேவெனமறையையுமியம்பிச்
சொலற்கரும்புகழ்ச்சுரபதிகொடுப்பவத்தோன்றலுந்தொழுதுகைக்கொண்டான். (உ௪௪

நிரந்தரம்புகழ்நிலைபெறுங்கன்னனைநெஞ்சுறமகிழ்ந்தவணிறுத்திப்
புரந்தரன்பசுந்தண்டுழாயணிந்திடும்புயல்வணனிருந்துழிப்போந்தே
யிரந்துசென்றுதான்மொழிந்ததுமவ்வளவீந்ததுமாங்கவற்கிசைத்தான்
வரந்தருந்திருமாலதைவினவியவ்வாசவன்றனக்குரைவழங்கும். (உ௪௫)

உண்மையாகவெஞ்சமர்முகத்தெதிர்படையொன்றும்வந்துடன்றவொட்டாத்
திண்மையாலுபர்கவசகுண்டலங்களைச்சென்றிரந்தவற்கிவன்கொடுத்தா
னெண்மையாயினுங்கிளைஞரேயேற்பினுமீவிலாப்புன்செல்வரீயார்
வண்மையாளர்தம்மாருயிராயினுமாற்றலார்கேட்பினுமறாரே. (உ௪௬)

வாசவன்றனக்குவிடைகொடுத்ததன்பின்வந்தகாரியந்தனைமுடிப்பான்
கேசவன்றனதுதாதையோடுதித்தகேண்மைகூர்தெரிவையைக்கிட்டித்
தேசவன்றந்தகுருசில்பால்விரைவிற்செல்கெனப்பயந்தசேயிழையும்
பாசவன்பாசமுன்னுறவிட்டப்பாதபங்கயஞ்சிவப்பித்தாள். (உ௪௭)

வந்து குந்தி நின்கோயிலெய்தினளெனவாயிலோருரைத்திடமைந்தன்
முந்து மன்புடன்றெழுதெதிர்கொண்டுநன்முறைமையாலாசனத்திருத்தி
யிந்துவின்கதிர்கண்டுமேன்மேலுற்றிரங்கிவான்கரைகடந்தேறுஞ்
சிந்துவெண்டிரைச்சிந்துவொத்துருகுந்தெரிவையோடுரைசிலசெப்பும். (உசஅ)

அன்னைவந்ததென்னருந்தவப்பயனென்றன்பினுலின்புறவணங்கி
யென்னைவந்தவாறென்னமற்றவளுமீன்றதாயானுனக்கென்று
முன்னைவந்தொருமந்திரந்தவமுனிமொழிந்ததுங்கதிரவனருளாற்
பின்னைவந்ததும்பேதைமையில்விடுத்ததும்பிழையிலாதுரைத்திடக்கேட்டே. (உசகூ)

மாயனார்விரகிதுவெனமனத்தினின்மதித்துவந்தளித்திடும்வள்ள
னீயனாளைப்பயந்தவளென்னினுநின்மொழிநெஞ்சுறத்தேறேன்
பேயனார்சிலர்பேரறிவின்மையாற்பெற்றதாயெனக்கெனவந்து
தூயநாகரினமைந்ததோர்துகிலாற்றன்பழூற்றென்புருவானார். (உ௫0)

அடாதுசெய்தவர்படாதுபட்டனரெனுமங்கர்கோன்றன்மொழிகேட்டுத்
தடாதவன்புடைக்கெடாதநூன்மொழிபகர்தையலுமையலிற்றவிர்ந்து
படாமதெனகையிற்றருகெனவருதலும்பபந்திலேஎனனிலெனைமுனியென்
றெடாவிரித்தலைத்துடற்படப்போர்த்தெதிர்ன்றதாயாமெனவிருந்தாள். (உ௫க)

இருந்ததாயீன்றவன்றுபோலுருகியிருதடங்கொங்கைபால்சொரிந்தா
ளருந்துவான்போல* விரவிசேய்விரும்பியாதரத்துடன்புளகானன்
புரிந்ததாயன்போடிறுநறுத்தழுவிப்பொன்முடிமோயினளுயிராப்
பரிந்துநானன்றேயுனைவளர்த்தெடுக்கப்பாக்கியஞ்செய்திலேனென்றாள். (உ௫உ)

வருகவென்மதலாயிளைஞராவருநின்மலரடியன்பினால்வணங்கி
யுரிமையான்மனமொத்தேவலேபுரியவொருதனிச்செய்யகோலோச்சி
யரசெலாம்வந்துன்கடைத்தலைவணங்கவாண்மையுஞ்செல்வமும்விளங்கக்
குருகுலாதிபர்க்குக்குரிசிலாய்வாழ்வுகூர்வதேகடனெனக்குறித்தாள். (உ௫௩)

பெற்றநீர்மகவன்பிலாமையோவன்றிப்பெரும்பழிநாணியோவிடுத்தி
ரற்றைநாட்டொடங்கியென்னையின்றளவுமாருயிர்த்துணையெனக்கருதிக்
கொற்றமாமகுடம்புனைந்தரசளித்துக்கூடவுண்டுரியதம்பியருஞ்
சுற்றமானவருமென்னடிவணங்கத்தோற்றமுமேற்றமுமளித்தான். (உ௫ச)

மடந்தைபொற்றிருமேகலைமணியுகவேமாசறத்திகழுமேகாந்த
விடந்தனிற்புரிந்தேநாணயர்ந்திருப்பவெடுக்கவோகோக்கவோவென்றான்
றிடம்படித்திடுவேலிராசராசனுக்குச்செருமுனைச்சென்றுசெஞ்சோற்றுக்
கடன்கழிப்பதுவேயெனக்கினிப்புகழுங்கருமமுந்தருமமுமென்றான். (உ௫௫)

பின்னையும்பற்பன்மொழிந்தபின்பலவும்பேசியென்பூசலோவிளைந்த
துன்னிநீரிங்குவந்ததென்காவாதுண்மையாலுள்ளவாறுரைமி
னென்னமைந்தனுமிப்பரிசினுலுரைப்பவீன்றறத்தறந்தவன்றையினு
மன்னைநெஞ்சழிந்தேயிருகணீர்சொரியவலறிவாய்குழறிநொந்தழுதாள். (உ௫சு)

* இளவலுமுருகியந்தியான்கண்டகன்றனென் என்றும் பாடம்.

ஆண்டுமாமகனுமிருகணீர்துடைத்தவ்வன்னையைப்பன்முறைதேற்றி
மூண்டவல்வினையின்பயனலாதியார்க்குமுயற்சியால்வருவதொன்றுண்டோ
வேண்டும்யாவையுமேதருகுவேனீரும்வேண்டியவேண்டுகவென்னப்
பாண்டுவின்றிருமாமனைவியுமதற்குப்பண்பினாலின்னனபகர்வாள். (உருஎ)

பார்த்தன்வெஞ்சமரினினுடன்மலைந்தாற்பகைப்பெரும்பாந்தளம்பகழி
கோத்தலும்பிழைத்தானமறித்துநீவிடுத்துக்கோறலென்றொருவரங்குறித்தாள்
வாய்த்தமற்றவர்களிளைஞரொனறவரைமலையலென்றொருவரங்குறித்தாண்
மூத்தவன்காதலிளைஞர்தம்பொருட்டாண்மொழிந்தமைகேட்டிவைமொழிவான். (உருஅ)

தெறுகணையொன்றுதொடுக்கவுமுனைந்துசெநச்செய்வோன்சென்னியோடிருந்தான்
மறுகணைதொடுப்பதாண்மையோவல்லோமனமோமன்னவர்க்கறமோ
வுறுகணையொன்றேபார்த்தன்மேற்றொடுப்பனொழிந்துளோருபவரென்றுரைத்தான்
றறுகணாலர்க்குந்தறுகணனவர்க்குந்தண்ணளிநிறைந்தசெங்கண்ணான். (உருகூ)

பெருவரமிரண்டும்பெற்றபின்றன்னைப்பெற்றதாயினைக்கரங்குவித்துத்
தருவரமெனக்குமிரண்டுளவுலகிற்சராசரங்களுக்கெலாந்தாயீர்
வெருவருமமரிற்பார்த்தனாலடிபடேன்வீழ்ந்தபோதவனிபாறிய
மருவருமுலைப்பாலெனக்களித்துந்தமகனெனும்வாய்மையுமுரைப்பீர். (உசு0)

உய்வருதிறல்வெம்போர்முடிப்பளவுமுமக்குநான்மகனெனுந்தன்மை
யைவருமறியாவண்ணநீர்காப்பீரல்லதங்கவர்சிறிதறியின்
மைவருங்கடற்பாரனைத்தையுமெனக்கேவழங்குவர்வழங்கினால்யானென்
கைவருந்துணைவன்றனக்கலால்வழங்கேன்கடைப்பிடிகருமமீதென்றான். (உசுக)

என்றலுமதுகேட்டீன்றதாயொக்குமென்றுகொண்டவ்வரநேர்ந்து
வன்றுயர்மேன்மேல்வளரயான்றளராவகையுயிருனக்குமுற்பெயர்வ
தென்றினியெனத்தன்கண்கணீர்சொரியவினைந்துநைந்தழுதழுதிரங்கி
யென்றருண்மதலைதனைத்தழீஇநிறுத்தியாதவனிருந்துழிச்சென்றாள். (உசுஉ)

கண்ணனுங்குந்திகன்னனோடுரைத்தகருத்தெலாந்திருத்தமாக்கேட்டாங்
கெண்ணமுமுடிந்ததெனமகிழ்ந்தந்தவணங்கையுமில்லிடையிருத்தித்
தண்ணளியுடன்றன்பின்வருநிருபர்தம்மையுமுறைமுறைநிறுத்திப்
பண்ணமைதடந்தேர்மீதுகொண்டன்றேபாண்டவருறைநகரடைந்தான். (உசுந)

தூதுபோயரவத்துவசனோடுறுதிசொன்னதுமறுத்தவன்சினந்து
மோதுபோர்புரியத்துணிந்ததும்விதுரன்மூரிவில்லிறுத்ததுங்கங்குற்
போதுபோய்வஞ்சம்விளைத்ததுங்கன்னன்புரந்தரற்கீந்ததும்பயந்த
மாதுபோய்வரங்கள்பெற்றவையொழியமற்றெலாமைத்துனர்க்குரைத்தான். (உசுச)

கிருட்டிணன்றூதுச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் உசுச.

# படையெழுச்சிச்சருக்கம்.



படர்ந்துகானகந்திரிந்துமீண்டன்புடன்பணிந்தபஞ்சவர்க்காகக்
கடந்தஞானியர்கடவுளர்காண்கலாக்கழலிணைசிவப்பேறத்
தொடர்ந்துநான்மறைபின்செலப்பன்னகத்துவசன்மாநகர்த்தூது
நடந்தநாயகன்கருமுகில்வண்ணமென்னயனம்விட்டகலாதே. (௧)

மூகுந்தன்வாசகங்கேட்பதன்முன்னமேமுரசுயர்த்தவன்முன்னி
மிகுந்தகோபமோடிக்கணமுடிப்பன்யான்வெம்பகைபினியென்னுத்
தகுந்தராதிபர்தன்னுடனியைந்தவர்தமக்குவெஞ்சமர்மூளப்
புகுந்தவாறெலாந்தூதரிற்போக்கினுனேலயின்புறத்தம்மா. (௨)

எட்டுத்திக்கினுமுள்ளமன்னவருடன்யாகசேனனும்வந்தா
றிட்டத்துய்மனுந்திட்டகேதுவும்விறற்சிகண்டியுமுறைவந்தா
ரொட்டிப்போர்பொருமுத்தமோசாவும்வேனுதாமனுமுடன்வந்தார்
பட்டப்போதகந்தேர்பரியாளொனும்படையுடைப்பாஞ்சாலர். (௩)

விராடபூபனுஞ்சதானிகநிருபனும்விறற்சுவேதனுமாதி
வராககேதுவுமுத்தராகுமாரனுமச்சநாட்டவர்வந்தார்
பாராவுபேருடைச்சேரசெம்பியருடன்பாண்டியனமுதலோருங்
குராநறும்பொழிற்கேகயத்தலைவநங்குந்திபோசரும்வந்தார். (௪)

அரக்கிதந்தருள்கடோற்கசக்காளையுமபிமனுெடிராவானும்
விரிக்கும்வெண்குடைவிந்தனுஞ்சோமனும்வீரகீர்த்தியும்போரிற்
செருக்குநெஞ்சுடைப்புண்டலன் *செபசனன்செருவிடைத்தெவ்வோடத்
தூக்கும்வெம்பரித்திரௌபதரைவருஞ்சூழ்படையுடன்வந்தார். (௫)

சீனர்சாவகர்மத்திரர்மாளவர்தெலுங்கர்வெங்கலிங்கேசர்
சோனகாதிபர்கன்னடர்மாகதர்துலுக்கர்குச்சரரொட்ட
ரானவெம்படையாதியாய்நடப்பனவையிரண்டெண்பூமித்
தானைமன்னரும்வந்தனரிந்தமண்டலத்திலார்வாராதார். (௬)

பாங்கினல்வருமசுடவர்த்தனருடன்பட்டவர்த்தனருள்ளார்
வாங்கும்வெஞ்சிலைமன்னவகுமாரின்மண்டலீகரினுள்ளார்
தாங்குமாமொழிமந்திரிகளிலீகற்றந்திரிகளினுள்ளா
ரோங்குநீள்கொடிப்பதாகினிதிரண்டவாறுன்னியாருரைக்கிற்பார். (௭)

யானைதேர்பரியாளொனுந்திறத்தினுலிலக்கணத்தெண்பட்ட
சேனையேழுமக்குரோணிகடிரண்டனதிரைக்கடலேழென்னச்
சோனைமாமுகிலேழுமொத்ததிர்ந்தெனத்துந்துபிக்குலமார்ப்பத்
தானைமன்னரைத்தனித்தனிமுறைமையாற்றருமனுமெதிர்கொண்டான். (௮)

* செயவிறற் சேனனுந் தெவ்வோட என்றும் பாடம்.

தான்வணங்குநர்தன்கழல்வணங்குநர்தங்களைத்தழீஇக்கொண்டு
தேன்வணங்குதார்மன்னவரிருந்தபின்சென்றவர்முகநோக்கி
யான்வணங்கிமாமாயனைத்தூதுவிட்டெனதுபாரெனக்கென்ன
வான்வணங்கினும்வணங்கலாமுடியினான்மறுத்தமர்புரிகென்றான். (௯)

கேண்மையாலெனதரசுநீதருகெனக்கேட்கவுமதியாம
லாண்மையாலவன்மறுத்தமையெனக்குயிரனையநீரறிமின்கள்
வாண்மையால்வரிவின்மையான்மேன்மையால்வலியுரைக்கலனுங்க
டோண்மையாலமர்தொலைத்தடல்வாகையுஞ்சூடுவனினியென்றான். (௧0)

வெங்கண்மாமுரசுயர்த்தவனிம்மொழிவிளம்பலும்விளக்கஞ்செய்
திங்கள்சூழ்தருதாரையின்கணமெனச்சேர்ந்தமன்னவரெல்லா
மெங்களாவியுமெம்பெருஞ்சேனையும்யாவையுநினதென்றார்
தங்கள்வீரமுமானமுமரபுநல்வாய்மையுந்தவறில்லார். (௧௧)

சுற்றுமன்னவர்சொற்றசொற்களிற்பகைதொலைத்தனன்போலாகிச்
செற்றுவார்கழற்சிவேதனைத்தன்பெருஞ்சேனையின்பதியாக்கி
யற்றைநாண்முரசறைந்தமர்குறித்தலுமரவமின்மகன்றெவ்வர்
கொற்றவெம்படையனைத்துமோரம்பினாற்கொல்வனோர்தினத்தென்றான். (௧௨)

பாண்டுவின்றிருமைந்தர்களைவரும்பார்த்திவருடன்கூடி
யீண்டிருந்தனரிவ்வழிச்செருக்குறித்தெழின்மேனியனோடுந்
தூண்டும்வெம்பரித்தேர்த்துரியோதனன்றூதுபோய்ப்பரந்தாமன்
மீண்டுவந்தபின்னவ்வழிப்புரிந்தனவிளம்புகின்றனமன்றோ. (௧௩)

வேறு.

முந்தரவுயர்த்தோனோலைமுடியுடையரசர்காண்க
வெந்திறலவரோடும்வெஞ்சமர்விளைந்ததாலே
தந்தமகிளைஞரோடுஞ்சதுரங்கத்தினோடும்
வந்தவர்தமக்கேவாழ்வுமுழுதுமென்றெழுதிவிட்டான். (௧௪)

மித்திரானமன்னர்விறலுடைத்துணைவரோடும்
புத்திரரோடுந்தத்தம்போர்புரிசேனையோடுஞ்
சத்திரநிழல்விடாததன்மையராகிச்சூழ
மத்திரபதியும்வென்றிமருகருக்காகவந்தான். (௧௫)

இடைப்படுநெறியில்வைகுமிவனதுவரவுகேட்டுத்
தொடைப்படுதும்பைமாலைச்சுயோதனன்சூழ்ச்சியாக
மடைப்படுவிதியிற்செய்தவிருந்தினான்மருண்டவற்கே
படைப்படுசேனையோடும்படைத்துணையாயினானே. (௧௬)

சல்லியன்றனுமாயச்சகுனியுந்தறுகண்வெம்போர்
வல்லியமனையவென்றிமாகதர்பதியுங்கொற்ற
வில்லியல்கடகத்திண்டோள்விந்தான்விந்தனென்று
சொல்லியநிருபர்தானையாறொடுங்கடலிற்சூழ்ந்தார். (௧௭)

கலிங்கர்கோன்சோமதத்தன்கௌசிகன்காம்பிலீசன்
றெலுங்கர்கோன்போசனுதிகேகயன்றிகத்தபூபன்
வலங்கொள்வேற்கவுண்டராசன்மாளவன்வளவன்சோன்
றுலங்குநீரோகனீகனெனும்பலவேந்தர்தொக்கார். (கஅ)

பங்களங்குருரஞ்சீனம்பப்பரங்கொப்பம்வங்கஞ்
சிங்களந்துளுவமங்கமாரியந்திகத்தஞ்சேதி
கொங்கணங்கடாரங்கொங்கங்கூபகமிரட்டமொட்ட
மெங்கணுமுள்ளவேந்தர்யாவருமீண்டிமொய்த்தார். (கக)

அண்ணலந்துரகத்தாமாவாதியாங்குமாராலு
மெண்ணிருபத்துநூறும்யாதவகுமாராலும்
வண்ணவேற்பூரிகௌரி*மாமுதற்குமாராலு
மெண்ணருஞ்சேனைவெள்ளமெங்கணும்பரந்தமாதோ. (உ0)

தம்பியாளைவருந்துச்சாதனன்முதலாவுள்ளோர்
வெம்பரிதடந்தேர்வேழம்வேல்சிலைவடிவாள்வல்லோ
ரம்பரத்தளவுமுந்நீரம்பரமெழுந்ததென்ன
வும்பருமிம்பராருமுரகரும்வெருவவந்தார். (உக)

வீடுமன்கிருபன்கன்னன்விற்கையாசிரியன்மைந்தன்
பாடுசேர்விகத்தசேனன்பகதத்தன்முதலாவுள்ளோ
ராடல்வெம்பரிதேர்யானையணிகினித்தலைவர்செம்பொற்
கோடியர்குன்றஞ்சூழ்ந்தகுலகிரியேழுமொத்தார். (உஉ)

நதியெனைப்பலவும்வந்துசிந்துவினண்ணுமாபோ
லெதிரறப்பொருதுவெல்லுமிராசமண்டலங்களெல்லாஞ்
சதமகற்குவமைசாலுந்தரணிபன்றன்னைச்சூழ்ந்து
பதினொரக்குரோணிசேனைபார்மிசைப்பரந்தவன்றே. (உ௩)

பரசுடையிராமன்பாதபங்கயஞ்சென்னியேந்தி
வரிசிலைவேதங்கற்றுமற்றவன்றனையும்வென்ற
குரிசிலைக்கங்கைதந்தகுருகுலக்கோமான்றன்னை
யரசன்வெஞ்சேனைக்கெல்லாமதிபதியாக்கினானே. (உ௪)

படையெழுச்சிச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—உ௬௩௭.

## முகூர்த்தங்கேள்விச்சருக்கம்.



சயம்படுமனத்தனுயகண்ணிலாவரசன்மைந்தன்
வயம்படநினைந்துகங்குல்வகுத்ததோர்சூழ்ச்சிதன்னாற்
பயம்படுமல்லரோடுபாதலமடியநீண்ட
சயம்படுகமலத்தாளன்றலைமிசையகல்கிலாவே. (க)

* மன்னவகுமாரராலும் என்னும் பாடம்.

அளப்பிலாச்சேனைநாதனடிபணிந்தவனிவேந்தன்
களப்பலிக்குரியார்யாவர்கடவநாள்யாவதென்னத்
தளப்பிலாமுகூர்த்தம்வல்லோன்சாதேவனல்லதில்லை
யுளப்பொலிவுடையாயின்றேயுற்றவற்கேண்மினென்றான். (௨)

ஒன்றநம்படைகளெல்லாமொருபகற்பொழுதிற்கொல்வா
னின்றனனிராவானென்பானீயவன்றன்னைவேண்டிற்
கொன்றெனைப்பலிகொடென்றுகூறுமக்குமாற்கொன்றால்
வென்றுனக்கரசும்வாழ்வுமெய்தலாம்விரைவினென்றான். (௩)

என்றலுமவனுமாங்கோரியந்திரவெகினமூர்ந்து
சென்றனனவனுங்கேட்டுச்சிலையில்வெங்கதிரைத்திங்க
ளொன்றியபகலிராவிற்களப்பலியூட்டினல்லால்
வென்றிடலரிதென்றிட்டான்கிளைஞரைவேறிடாதான். (௪)

ஐவரிலிளையோன்றன்பான்முகூர்த்தங்கேட்டவர்சேயான
பைவருமுடியோன்றன்பாற்சேறலும்பணிந்துதாதை
யுய்வருவரங்கேட்டென்னையூட்டுகபலிநீயென்றா
னெய்வரிசிலையினானும்பெற்றனனென்றுமீண்டான். (௫)

முகூர்த்தங்கேள்விச்சருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள்—௨௯௪௨.

---

# களப்பலியூட்டுசருக்கம்.



குன்றெடுத்தாயர்மாதர்குரவைகொண்டொருவிளாவிற்
கன்றெடுத்தெறிந்துவெய்யகாளியற்கிருதாணல்கி
யன்றெடுத்திறுத்தவில்லேயனையவில்விழவுகாண்பான்
சென்றெடுத்திறுத்துநின்றசெங்கண்மாலெங்கள்கோவே. (௧)

கொடுத்தனன்பலிக்குத்தன்னைக்குமரனென்றறிந்துகுன்ற
மெடுத்தவன்றிதிபண்ஞன்கிளிடையுவாவின்றாகென்று
தொடுத்தநான்முனிவரோடுஞ்சொல்லினன்சுடர்கடம்பி
லடுத்திதுவென்னையென்னவன்றதுவாயதன்றே. (௨)

ஆயபின்றருமற்குற்றவாறெலாம்விளம்பியின்று
நீயவன்றனக்குமுன்னேகளங்கொளநேரினல்லாற்
போயவன்றன்னைவேறலரிதெனப்புகன்றுசெங்கண்
மாயவனென்னைவல்லேவன்பலியூட்டுகென்றான். (௩)

தருமனுந்தம்பிமாருஞ்சாற்றியமாற்றங்கேட்டே
யுருமெறிபுயங்கம்போலவுள்ளழிந்துள்ளாய்நின்ற
கருமுகில்வண்ணன்பாதகமலத்தில்வீழ்ந்துவாழ்வும்
பொருமுனைவயமும்வேண்டேம்பொன்றுதலையுமென்றார். (௪)

அப்பொழுதரவமைந்தனரவுயர்த்தவற்குநேர்ந்தே
னிப்பொழுதுமக்குநேர்ந்தேனெனைப்பலியிடுமினென்ன
மைப்புயல்வண்ணனின்னையல்லதுமண்ணிலென்னை
யொப்பவரில்லைநம்பிலொருவரேவேண்டுமென்றான். (௫)

அடியனேனிருக்கநீயேயரும்பலிக்கிசைவாய்போரின்
மடியநேரலரைக்கொன்றுவாழ்விவர்க்களிக்கநின்றாய்
கடியநேர்பலிதந்தாலுங்காயமர்சிலநாட்கண்டு
முடியநேரலர்வெம்போரின்முடிவெனக்கருளுகென்றான். (௬)

அவ்வரமவற்குநல்கியத்தினத்தவ்விராவிற்
றெவ்வரையொளித்துத்தங்கள்சென்மதேயத்திற்சென்றார்
மெய்வருகாளிமுன்னர்மெய்யுறுப்பனைத்தும்வீரன்
கொய்வருநிலையிற்கொய்துகொடுத்தனனென்பமன்றே. (௭)

ஆண்டகைகன்னிமுன்னரவயவமனைத்துமீந்து
காண்டகமலர்ந்ததீபமெனமுகங்கவினநின்றான்
பாண்டவர்யாமளத்தின்படிபகடாதியாக
வேண்டியபலிகளீந்துவென்றியும்வேண்டிமீண்டார். (௮)

களப்பலியூட்டுசருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள்-௨௯௫0.

---

# அணிவகுப்புச்சருக்கம்.

:(o):

மற்றைநாள்வசுதேவன்மாமகன்மண்டலீகருமன்னருஞ்
செற்றுநீடவைபுக்கிருந்தசிவேதனோடிவைசெப்பினா
னிற்றைநாளதிரதர்மகாரதர்சமரதாதியரெவரொடுங்
கொற்றவஞ்சிமிலைச்சியேகுககுருநிலத்திடையென்னவே. (௧)

அதிரதாதிபர்தானும்வீமனும்விசயனுந்திறலபிமனுஞ்
சிதைவிலாதசிகண்டிசாத்தகிதிட்டத்துய்மன்விராடர்கோன்
மதுரமாமொழிதருமனோடிவர்மாரதாதிபர்சமரதப்
பதிகளானவர்யாகசேனனுதாமனுத்தமபானுவே. (௨)

நண்ணுமர்த்தரதர்க்குநாயகர்நகுலனுஞ்சகதேவனு
மெண்ணும்வெற்றிபெறுங்கடோற்கசனென்னும்வீரனுமாகவே
மண்ணகத்தணிபணிகளாகமகீபர்தம்மைவகுத்துளான்
விண்ணகத்தணிவிபுதர்சேனையில்வேளொடொத்தனன்வீரனே. (௩)

நெருங்குவெம்படைகண்டுவந்தபினைம்புலன்களுநெஞ்சமு
மொருங்குசென்றெனமன்னரைவருமாலும்வெஞ்சமமுன்னவே
மருங்குநின்றவிராமனும்பின்மதித்தபோர்முடிவளவும்பான்
பொருங்கடும்புனனதிகளாடுவனென்றுநண்பொடுபோயினான். (௪)

போனவெம்பலபத்திரன்பொருபூசலிற்புகுதேனென
மானவெஞ்சிலைமுன்னிறுத்தவிதூரனோடுமகிழ்ந்துபோய்க்
கானகங்களில்வரையில்வாழ்முனிகணம்விரைந்தெதிர்கொள்ளவே
நானமெங்கணுமாடுவானிருநாலுதிக்கினுநண்ணினான். (௫)

இடிபடப்படவருமுகிற்குலமெனநிரைக்கடலெனநெடுங்
கடிபடப்படவதிர்பணைக்குலமெனவதிர்ப்பனகறைகள்போ
லடிபடப்படவுரகர்பைத்தலையணிமணிக்கணமடையவும்
பொடிபடப்படவுடனடப்பனபுகர்முகக்கரிநிகரமே. (௬)

உருண்மணித்திகிரியின்முனைப்படிலுயர்பொருப்பையுமுரகர்வா
ழிருநிலத்திடைபுதைபடப்படவெதிர்நடப்பனவிவுளியின்
குரதுகட்கொடுகலகமிட்டணிகொடிநிரைத்துகில்கொடுபொலந்
தருநிலத்தவர்விழிதுடைப்பனசாதமிப்படியிரதமே. (௭)

பலவகைப்படுகவனமெய்க்கதிபவனமொப்பனபாவைசூ
ழுலகனைத்தையும்வெளியிலுய்த்தவினுரகருக்குமொருதவியா
யிலகுசக்கரசிகரிசுற்றடியெனவளைப்பனவெழுபெயர்க்
குலமுகிற்றலைகிழியவைப்பனகுரவிதத்தனபுரவியே. (௮)

புருவவிற்குனிவெழவுயிர்ப்பொடுபுகையெழத்துகிர்புரையும்வாய்
மருவுமுத்திளநிலவெழத்தனிமனநெருப்பெழவளர்தடக்
கரதலத்தயில்வெயிலெழப்புனைகலன்வனப்பெழமினிருநீ
ணிரையிமைப்பறுவிழிசிவப்பெழநிருதரொத்தனர்விருதரே. (௯)

கொடிநெருக்கவுமதியெனத்திகழ்குடைநெருக்கவுநடைகொளா
ளடிநெருக்கவுமிபநெருக்கவுமயநெருக்கவுமெழுதுகட்
பொடிநெருக்கவும்வளர்புயத்தொடுபுயநெருக்கவுமொளியுறு
முடிநெருக்கவுமுறைநெருக்கினர்முரசமொத்தசொல்லரசரே. (௧௦)

பகன்மறைத்திருள்வரவிடுத்தெறிபவனமெய்க்கதிபுடனுலா
யகனிலத்திடைவருநதிப்புனலறுவருத்துயர்நதியின்வா
யுகள்வரிக்கயலினமுமொத்தனவுடுகுலத்துடனொளிர்பெருங்
ககனவட்டமுமறையவிட்டனகவசமொத்தனதுவசமே. (௧௧)

உறவின்மிக்கவர்பகையினெய்த்தவருதவுமப்படைகுடைநிழற்
செறிதலத்தினில்வளர்நகர்ப்படைதிரள்வனப்படைபொருள்விலைத்
தருகண்மெய்ப்படையுறுதியிற்பொருதமதகப்படையெனவிரா
யறுவகைப்படைகளும்வகுத்தனவணிகளுட்கினபணிகளே. (௧௨)

சதியெனைப்பலவெனமுழக்கினசதவிதப்பணைதவளமா
மதியெனைப்பலவெனநிழற்றினமகிபர்பொற்குடைமழைகொள்வா
னதியெனைப்பலவெனநிரைத்தனநவமணிக்கொடிநளினவெம்
பதியெனைப்பலவெனவெறித்தனபலவகைப்படைகுலவவே. (௧௩)

பிடர்வலிக்கடகரிகளிற்செறிபிடிகளிற்புனைமுடிகளிற்
படர்நிழற்கவிகையின்மிசைத்துகள்பரவிமொய்த்தெழுபுரவியிற்
சுடர்வடித்தபடைகளினிரைப்படுதுகிலுடைக்கொடிகளின்விரா
யடர்பொருப்பினமிடையிடைப்பயிலடவியொத்தது புடவியே. (௧௪)

வளைமுழக்கினநெடுகுகொட்டினவயிரொலித்தனமருடியின்
கிளையிமிழ்த்தனமுழவதிர்த்தனகிணையுரற்றினபலவிதத்
துளையிசைத்தனமுரசிரைத்தனதுடியரற்றினசெவிடுபட்
டுளையவிப்படிபடைபுறப்படவுலகமுற்றது கலகமே. (௧௫)

செங்கண்மாலுயிர்தருமன்மார்புசிவேதனனமிருபுயம்
வெங்கண்வீமனும்விசயனுந்திறல்மின்மருத்துவர்மைந்தர்தா
ளங்கண்மாமுடியரசர்மற்றுளவவயவாதிகளாகவே
தங்கள்பூமியிலானபோதொருவடிவமொத்தது தானையே. (௧௬)

## வேறு.

இங்கிவர்வயப்படைகுறித்தகுருபூமியிடையிவ்வகையெழுந்ததினிமே
லங்கவர்செயப்படைபெழுச்சியுரைசெய்குவமருந்திதிமயக்கிவிரையக்
கங்குலினழைத்துரககன்னிமகனைப்புகல்களப்பலிகொடுத்தனரெனச்
செங்கணரவத்துவசமீளியுமுணர்ந்துதனசேனைமுதல்வற்குரைசெய்வான். (௧௭)

கொதிகொள்சினநெஞ்சின்வலியின்றியவரஞ்சுபுகொடுத்தனர்களப்பலிநமக்
கெதிரொருவர்நிற்குமவரில்லையெனும்வீரநிலைபானறிவனீயறிவையே
யதிரதர்கண்மாவிரதர்சமரதர்களத்ததராகநம்மனீகினிபின்மா
மதுகைமுடிமன்னரைவகுத்தெழுகவென்றனன்மனத்தசைவிலாதவலியோன். (௧௮)

ஆனதெனவீடுமனுமதிரதரின்மிக்கதனுவாசிரியனும்புதல்வனுந்
தானுமுயர்பூரிசரவாவுமிவர்சோமவரதத்தபகதத்தர்கள்வழா
மானமிகுதுன்மருடனான்றலைவர்மாரதரில்வன்கிருதபன்மனரசன்
ஞானகிருபன்சகுனிசல்லியசயத்திரதர்நன்சமரதத்தலைவரே. (௧௯)

அங்கர்பெருமான்விருடசேனனரசற்குரியவநுசரிவரத்தரதரிற்
றுங்கவயவீரரெனவிம்முறைவகுத்திரகதுவசனுடனேயுரைசெய்தான்
கங்கைமகனேடுபலகூறிநனிசீறியுயிர்காய்வனெனவாளுருவிநீ
பொங்கமரின்மாளுமளவும்படைதொடேனெனமொழிந்தனனிசாரிபுதல்வன். (௨௦)

யானைமிசைதேரின்மிசையிவுளிமிசைபோம்வயவரேதிசிலைவேல்வயவரிற்
றானைகளொராறுமுகிலேழுமெனவண்பணைதயங்குதிசைசூழவரவு
மேனைநரபாலரணிதோறும்வெயில்வாளிரவியென்னவிருபாலும்வரவுஞ்
சேனைமுதனாதனொடுமெய்த்துணைவர்தங்களொடுசென்றனனிராசதிலகன். (௨௧)

பொழியுமுகில்பற்றியெழுமிளவெயிலெறித்தனையபுகானபணைக்கைகொடுகார்
கிழியும்வகையெற்றிமிசையொளிருநவரத்நகணகிரணவுடுவைக்கவர்வபோர்
விழிவழிநெருப்புருகிவழியநுதலிற்றிலகம்வெயில்வழியமுற்றுநிலவே
வழியுமதியத்தின்வகிர்நிகர்பணைமருப்பினிடைமகரிகைதரித்தமதமா. (௨௨)

நடுநிலமுரைக்கினுயரவணிதலமொக்குமிசைநவமணியழுத்தியனவா
னுடுநிகாமொக்குமுருளுருளைகளருக்கனுடனுடுபதியையொக்குமகுடங்
கொடுமுடிகளொக்குமிவுளிகடிசையனைத்துமெறிகுரைபவனமொக்குமடைவே
யிடுதுகினிரைத்தகொடிசொரியருவியொக்குமெழுகுலகிரிகளொக்குமிரதம். (உ௩)

யவனசவனத்தினிடைவளர்வனகதத்திளுடுமிரவிபுரவிக்குநிகர்வ
புவனதலமுற்றுமுடன்வளையவொரிமைப்பொழுதில்வருவனபுறப்புணரியைக்
கவனமொடெழுப்பிவிடுதுகள்கொடுநிறைப்பவிரைகதிகளின்விதத்தைமொழியிற்
பவனகதியைத்தொடர்வபரிமளவுயிர்ப்புடையபலவகைநிறத்தபரிமா. (உ௪)

அரவின்விடமொத்தவெரிசினமுநிலைபெற்றுடையவசலநிகரொத்தமனமும்
புரவியுடனொத்தகதிவிரைவுமுருமொத்தவதிர்குரலுமெழுவொத்தபுயமு
முரவனிலமொத்தவலியுரமுமதனொத்தவொளியுருவமுமனைத்துமருவிப்
பரவைபுணலொத்தபலவணிபடவகுத்தபலபடையுடனடக்குநடையார். (உ௫)

குடைநிலவெறிக்கவிருபுறமுமசைபொற்கவரிகுளிர்நிலவெறிக்கவெறிகைப்
படைவெயிலெறிக்கவணிமுடியுடன்மணிப்பணிகள்பலவெயிலெறிக்கவுடனே
யிடையிடையெடுத்தகொடிநிரையிருளெறிக்கவெழுதுகளிருளெறிக்கவெழுபா
ரடையவொர்தினத்தின்வலம்வருதிகிரியொத்தனர்களவணிபரெனைப்பலருமே. (உ௬)

முழவுமுதலெற்றுவனகடிபடுபணைக்கருவிமுழுமணிமுதற்கருவிபைங்
குழன்முதலமைத்தபலவகைபடிதுளைக்கருவிகுலவளைநரப்புநிரையா
ழுழைமுதலெழுப்புவனவிசைபடுமிசைக்கருவியுழையுழையதிர்த்தவுடனே
யெழுகடல்கொதித்ததெனவெழுபுவிமறித்ததெனவெழுமுகிலிடித்ததெனவே. (உ௭)

முறைமைதவறற்றகடிமுரசெழுதுபொற்றுவசமுதல்வனுயிர்மைத்துனையால்
விறலுதவுதற்குவருகரியவன்மணித்துவசமிசைகருடனிற்குமெனவோ
வெறியுமுருமுத்துவசன்மதலைவிதலைச்சமரினிறுதியைவிளைக்குமெனவோ
வறைவளியெதிர்த்துவரவெருவொடுபுறக்கிடுவதரசனுரகத்துவசமே. (உ௮)

உயர்முறைமைதப்புமவர்குடைநிழலிவிற்றையளவுளகுறையகற்றியினிநா
னியல்புடைநெறித்தருமனொருகுடைநிழற்றவவணிடையினிதிருக்குவனென
வியனதிமுழுப்புனலின்முழுகிவருதற்கவணிமிசையுறநடப்பதெனவே
பயில்படைநடக்கவகன்முகடுறநிரைத்தரியபகலையுமறைத்ததுகளே. (உ௯)

பொருபடைகொடிப்படை*யுறப்படுபெரும்படைபுகுந்துகுருபூமியுறவே
யிருபடையுமொத்துடனெருங்கினசுராசுரரெதிர்ந்துபொருபூசலெனவே
யொருபடையெனப்படமொராயிரமுநொந்துரகனூரநெரியவேழுலகமும்
வருபடைநிலத்தினிடைவந்தளவிலேயுததிவையமெனதாய்முடியுமே. (௩௦)

எண்ணறுபரப்பினிடையோசனைகளத்தினிடையிருபடையுநிற்பவெவருந்
துண்ணெனவெருக்கொளமுனின்றருள்பகிரதிசுதன்றனைவியாளனுவசன்
கண்ணெதிர்நிரைத்தபடையாவையுமுருக்கியுயிர்†கவரவெதுநாள்செலுமெனப்
பண்ணளிநெருக்கொழியமாதரிருகண்ணளிபடாததொடைமீளிபகர்வான். (௩௧)

* புறப்படு என்றும் பாடம்.

† கவரவெகுநாளென்றும் பாடம்.

ஒருபகலில்யான்மலைவன்முப்பகலிலேமலைவனுபநிடதவிற்கைமுனியும்
வருபகலோரைந்தின்மலைவன்பரிதிமைந்தன்முனிமைந்தனொருநாழிகையினிற்
பொருபடையடங்கமலையும்புவியும்வானொடுபுரந்தானிருந்தவுலகும்
வெருவாமுனைந்தொருகணத்தினிடையேமலைவன்வில்விசயனென்றனனரோ. (௩௨)

யானையொடுதேர்புரவியாளிவையநேகவிதமெண்ணரியதானையுடனே
சேனைமுதலாய்முனைபினின்றருள்பிதாமகனுமற்றுளசெழுங்குரவருந்
தானைநெடுவாரியிடைதேரிடையருக்கனெனநின்றதுரியோதனனும்வான்
மீனைநிகர்கேளிருமணிந்தநிலைகண்டுருகிவிபுதர்பதிமைந்தன்மொழிவான். (௩௩)

நின்றமர்தொடங்கநினைகிற்பவர்பிதாமகனுநீள்கிளைஞருந்துணைவருங்
கொன்றிவரைவாகுவலியிற்கவர்வதித்தரணிகொள்பவனுமென்றுணைவனே
யென்றுபலபேசியதிபாதகமெனக்கருதியான்மலைவுறேனினியெனு
வன்றுவசுதேவன்மகனோடுரைசெய்தானமரிலவனுமிவனோடுரைசெய்வான். (௩௪)

அணிவகுப்புச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் உகூஅச.

---

## உத்தியோகபருவ முற்றுப்பெற்றது.

## ஆறாவது

# வீட்டுமபருவம்.



## முதற்போர்ச்சருக்கம்.



மேவருஞானானந்தவெள்ளமாய்விதித்தோனாகி
மூவருமாகி*யந்தமூவர்க்குமுதல்வனாகி
யாவரும்யாவுமாகியிறைஞ்சுவாரிறைஞ்சப்பற்ப
றேவருமாகிநின்றசெங்கண்மாலெங்கள்கோவே. (௧)

மாயையென்றொருத்திதன்பான்மனமெனுமைந்தன்றோன்றித்
தூயநல்லறிவன்றன்னைத்தோற்றமின்றாக்கிவைத்தான்
றாயொடுதந்தைமக்கடாரமென்றிவர்பால்வைத்த
நேயமுமவன்றனாலேநிகழ்ந்ததோர்நினைவுகண்டாய். (௨)

குயின்றவைம்பொறிவாய்நின்றுகுறித்தவைம்பொருளுந்தானே
யயின்றுமுக்குணங்களோடுமறுவகைப்படைகளோடும்
பயின்றராசனுமந்தமனமெனும்பகைவனுக்குத்
துயின்றபோதொளித்துநின்றதோன்றலுந்தோன்றுங்கண்டாய். (௩)

அந்தநல்லறிவன்றன்னையறிந்தவாறிஞராவார்
தந்தையால்வகுக்கப்பட்டசராசரப்பொருள்கடோறும்
வந்தவன்றீம்பானெய்போலுயிர்க்குயிராகிவாழும்
பந்தமதுணர்ந்துநேரேபார்க்குங்காற்பகைபார்கண்பார். (௪)

உம்பருமுனிவர்தாமும்யாவருமுணராவொன்றை
யிம்பரின்றனக்குநானேயிசைவுறவுணர்த்தாநின்றே
னைம்பெரும்பூதத்தானுமமைந்தனவுடலம்யார்க்கு
நம்பனுமொருவனுள்ளேஞானியாய்நடத்துகின்றான். (௫)

என்னைநீபுகலக்கேண்மோவெங்குமாயாவுமாகி
மன்னியபொருளும்யானேமறைக்கெலாமுடிவும்யானே
யுன்னையான்பிரிவதில்லையொருமுறைபிறந்துமேனு
னான்னிலாவெறிக்கும்பூணாய்நரனுநாரணனுமானோம். (௬)

பின்னொருபிறப்பின்யாமேயிராமலக்குவப்பேர்பெற்றோ
மிந்நெடும்பிறப்பினீயும்யானுமாயீண்டுநின்றோ
நின்னிடைமயக்குமிந்தநேயமுமொழிகவென்று
தன்னிலையவற்குக்காட்டித்தத்துவந்தெளிவித்தானே. (௭)

* மீனமுதலியபாவங்களாகி யென்றும் பாடம்.

ஆங்கவன்றெளிந்துதேறியறம்பொருளின்பமுற்றிப்
பாங்கினானின்னையெய்தும்பயனெனக்குரைத்தாயென்று
பூங்கடிக்கமலநாறும்பொன்னடிபோற்றியான்செய்
தீங்கெலாம்பொறுத்தியென்றுசெருச்செயுமாறுபூண்டான். (௮)

பூண்டவெம்பரித்தேர்மீதப்பொய்யிலாமெய்யினானும்
பாண்டவர்தாமுமாகப்பகிரதிமைந்தன்றன்பா
லீண்டினானெய்திநீயேயிவருடன்மலையின்மற்றுன்
காண்டகுபோரின்வென்றுகளங்கொளத்தகுமோவென்றான். (௯)

மற்றவன்றருமராசன்மைந்தனேயவனிக்கெல்லாங்
கொற்றவனாகுமென்னைக்கொல்லநீயுபாயங்கேண்மோ
வற்றைவெஞ்சமரிற்சீறுமம்பையென்றொருத்திதானே
செற்றிடத்தவமுஞ்செய்துசிகண்டியாய்ப்பிறந்துநின்றாள். (௧௦)

பன்னுசீரியாகசேனன்குமரனைப்பத்தாநாளி
லென்னெதிரமரிற்காட்டிலியான்படையாவுந்தீண்டேன்
பின்னவன்வெகுண்டுசெய்யும்பெருமிதங்கண்டுமீண்டு
கன்னனைவெல்லநின்றநாளைகைக்கணையால்வீழ்வேன். (௧௧)

நின்றனையருளோடாங்கேநீலமாமேனியாய்நீ
வென்றிமற்றிவரோயல்லால்வேறியாரெய்துகிற்பா
ரென்றனனென்றபோதப்பிதாமகனிருதாள்போற்றி
நின்றவர்தம்மைக்கொண்டுசிலைமுனிநிலையிற்போனான். (௧௨

போயவர்குருவின்பாதம்போற்றிமுன்னிற்பச்செங்கண்
மாயவனவனைநோக்கிவாகையந்தாமஞ்சூட
நீயிவர்க்களித்தியாகிலுண்டலானின்னைவையந்
தாயவர்தமக்கும்வேறலரிதெனச்சாற்றினானே. (௧௩)

மன்மகன்றருமன்வென்றுவையகமெய்திநிற்பா
னென்மகனெனக்குமுன்னேயிறந்தனனென்றுவானில்
வின்மகபதியையொக்கும்வேந்தன்முன்சொல்லிற்றான்
றன்மகன்மகனேபின்னைச்சாபமொன்றெடுக்கிலேனே. (௧௪)

என்பெருஞ்சாபங்கைவிட்டியானெதிர்நிற்றலானுந்
தன்பெருஞ்சாபத்தானுஞ்சமரிடைத்திட்டத்துய்மன்
வன்புடனெனக்குக்கூற்றாய்மலைகுவன்மலைந்தவன்றே
நின்பெருங்கருத்துமுற்றுமேகுவீர்நீவிரென்றான். (௧௫)

முனிவனைவிடைகொண்டேகிமுகுந்தனுந்தாமுமுன்னந்
தனிவனந்திரிந்துமீண்டோர்தானையங்கானிற்புக்கார்
பனிவனநிறைந்தபொய்கைக்கரைநிழற்பரப்புந்தேமாங்
கனிவனமென்னயார்க்குமுதவிகூர்கருணைக்கண்ணார். ௧௬)

கொற்றவர் தம்மையேழக்குரோணிவெஞ்சேனையோடும்
பற்றுடையசலமாகும்பான்மையால்வியூகமாக்கி
வெற்றிதந்தருள்கென்றேத்திவிந்தையைவணங்கிமாயோன்
சொற்றபின்றாசியோடுதூசிசென்றுற்றதன்றே. (௧௭)

வேறு.

புரசையானைப்பொருபரித்தேருடை
யரசன்மாத்துவசத்தனவாதலாற்
குரைசெய்வான்பணைக்குப்பைகள்யாவினு
முரசசாலமுழங்கினசாலவே. (௧௮)

மலர்ந்தபற்பவனநிகர்பைந்துழா
யலங்கல்வித்தகனேந்தினவாதலால்
வலம்புரிக்குலம்வாழ்வுபெற்றேமெனச்
சலஞ்சலத்தொடுஞ்சங்கொடுமார்த்தவே. (௧௯)

சென்றுதேர்களுந்தேர்களுஞ்சேர்ந்தன
வென்றிவேழமும்வேழமுமூர்ந்தன
நின்றவாசியும்வாசியுநேர்ந்தன
வென்றிவீரரும்வீரருமேவினார். (௨௦)

பாரவாளமும்வாளமும்பாய்ந்தன
கூரவேல்களும்வேல்களுங்குத்தின
வீரசாபமுஞ்சாபமும்வீக்கின
தூரவாளியும்வாளியுந்தோய்ந்தவே. (௨௧)

இட்டதார்முடிமன்னவரோடெதி
ரிட்டதார்முடிமன்னவரெய்தினார்
பட்டவர்த்தனப்பார்த்திவர்தம்முடன்
பட்டவர்த்தனப்பார்த்திவரெய்தினார். (௨௨)

மந்திரத்தவர்தம்முடன்மாமதி
மந்திரத்தவர்வந்தெதிர்மோதினார்
தந்திரத்தவர்தம்மிசையேசெலத்
தந்திரத்தவர்சாபகமேவினார். (௨௩)

மண்டலீகர்தம்மார்புறையாகவே
மண்டலீகர்தம்வாட்படையோச்சினார்
சண்டவார்சிலைசாமந்தர்வாங்கவே
சண்டவார்சிலைசாமந்தர்வாங்கினார். (௨௪)

முடியிழந்தநிருபர்முகுந்தனை
விடிபடுந்தலைராகுவொடேயிணை
ரடியிழந்தவராதபன்றேர்விடுந்
தொடிநெடுங்கைவலவனிற்றோன்றினார். (௨௫)

பூபர்தங்கள்புயங்களுமார்பமுஞ்
சாபவெங்கணைதைத்தருசோரியாற்
றீபமென்னவுஞ்செம்மலர்க்கோடுடை
நீபமென்னவுநின்றனராண்மையால். (௨௬)

கையில்வாளிதொலைந்தபின்காய்ந்து தம்
மெய்யில்வாளிகள்வாங்கிவில்வாங்கினார்
பொய்யிலாமொழிப்பூபதிசேனையின்
மையிலாண்மையினார்சிலமன்னரே. (௨௭)

வலக்கையற்றுவிழவுமனத்தொரு
கலக்கமற்றவெங்கார்முகத்தார்சிலர்
துலக்கெயிற்றுக்கணைதொடுத்தார்தொடை
யிலக்கமற்றபடையிலக்காகவே. (௨௮)

தாளிரண்டுடைச்சிங்கமன்னார்சிலர்
வாளிரண்டோர்தொடையினில்வாங்கினார்
கோளிரண்டுமெனக்குறுகார்தடந்
தோளிரண்டுந்துணிந்தெதிர்வீழவே. (௨௯)

ஓடிமுட்டவிற்றேர்களுடைந்தன
நாடிமுட்டவினாகங்கள்வீழ்ந்தன
கூடிமுட்டவிற்கொய்யுளைமாய்ந்தன
சாடிமுட்டவினாள்களுஞ்சாய்ந்தனர். (௩0)

பற்றிநின்றொருவன்படைவாளொரு
த்துற்றவன்றலைசிந்திடவோச்சினா
னற்றதன்றலைகொண்டவனுந்தனைச்
செற்றவன்றலைசிந்திடவீசினான். (௩௧)

புங்கமெய்புதையப்புதையச்சிலர்
சிங்கமென்னச்செருக்களத்தாடினார்
தங்கமிட்டபைங்காவணநீழலி
லங்கைகொட்டியலகைநின்றாடவே. (௩௨)

வாளியாயிரந்தைத்தவழியெலா
மோளியாகவொழுகுங்குருதியாற்
றாளிலாணடத்துந்தடந்தேருடை
மீளியாமெனநின்றனர்வீரரே. (௩௩)

வெட்டினார்படைமெய்யிற்படாமைநின்
றொட்டினாரிமைப்போதினிலோடியே
தட்டினாருடலைத்தழுவிக்கொடு
கட்டினார்விழுந்தார்சிலகாளையர். (௩௪)

வேறு.

கொங்கர்போசலர்போசர்சிங்களர்குருதராரியர்துளுவருங்
கங்கர்சோனகர்யவனர்சீனர்கலிங்கர்தத்தர்தெலுங்கரும்
வங்கர்கோசலர்தமிழர்குண்டலரொட்டர்மாளவர்மகதரு
மிங்குமங்குமணிந்துநின்றவரெதிர்முனைந்தனரிகலியே. (௩௫)

விசயன்வெஞ்சிலைவீடுமற்கெதிரமர்தொடங்கலும்வெருவவெண்
டிசையுமொன்றவளைந்துகொண்டனவிருவர்தம்பொருசேனையு
மிசையெழுந்துகளாலிமைத்தனர்மேலைநாகரும்வெங்கழுத்
தசையநின்றுசுமந்திளைத்தனர்கீழைநாகருமடையவே. (௩௬)

உகவைதன்னொடுவீடுமற்குறுமுதவியாகமகீபனுஞ்
சகுனிசல்லியனிவரையும்பலதம்பிமாரையுமேவினான்
மிகுகொடுஞ்சினவீமன்விந்தானபிமனுதியர்விசயனுக்
கிகனெடும்படையரசனேவலினுதவியாம்வகையெய்தினார். (௩௭)

வன்பணைக்கொடிமீதுபன்னிருவாளிமெய்க்கவசத்தின்மே
லொன்பதிப்படியேவிவீடுமன்மெய்ந்நடுங்கவுடற்றினான்
மன்பரப்பொடுசகுனிசல்லியன்வந்ததம்பியரானவரும்
பின்படப்பலகணைதொடுத்தனன்வருசதாகதிபிள்ளையே. (௩௮)

ஏசிலாதுயர்தன்பிதாவினெழிற்பிதாமகனேறுதேர்
வாசிநாலும்விழத்தொடுத்தனன்வாளியாலபிமன்னுவு
மாசிலாவிறலுத்தரன்றிறன்மத்திராதிபனுடனுடன்
ரூசிலாவடலப்புமாமழைசிந்தினன்முகிலஞ்சவே. (௩௯)

வாவிமேல்வருபுரவிவீழவும்வலவன்வீழவுமற்றுளா
ராவிவீழவுமவனெடுத்தவில்லற்றுவீழவுமமர்செய்தான்
பாவியோடினிவில்லெடுப்பது பாவமென்றொருபாரவே
லேவினானெதிர்சென்றுசல்லியனிவனும்வானகமேவினான். (௪௦)

*இன்றுபட்டனன்மச்சர்கோமகனென்றுதங்களினேரலா
ரொன்றுபட்டுமிகைத்தெழுந்தனரூழிவாயெழுமதிபோ
லன்றுபட்டகலக்கமப்படியைவர்தம்படையமரின்மேல்
வென்றுபட்டமணிந்தவாரணமென்னவந்தனன்வீமனே. (௪௧)

தாமன்மேல்வரவாவுடைந்திடுதமமெனும்படிதண்டுடன்
வீமன்மேல்வரவாவுடைந்தனர்மேவலார்கள்வலம்புரித்
தாமன்மேல்வரவாவுகண்டுதரிக்கிலாதெதிர்சென்றனன்
காமன்மேலரனென்னநெஞ்சுகனன்றுகண்கள்சிவக்கவே. (௪௨)

செண்டினால்வசுகிரிதிரித்திடுசெழியனென்னவெடுத்தகைத்
தண்டினாலெதிர்சென்றுதோணிதிரியவன்பொடுசாடினான்
மண்டினார்மணிமுடியும்வேழமும்வாசியும்பலதுணிபடக்
கிண்டினான்முனைநின்றபன்னககேதுவோடமர்மோதினான். (௪௩)

* நின்றுபட்டனன் என்றும் பாடம்.

மோதியாயிரபேதமாகமுனைந்து தங்களிலிருவருஞ்
சாதியா தனவில்லைமீளிமடங்கலேறனை தன்மையார்
காதியாடமர்புரியுமேதினிகாவலன்குனிகார்முகஞ்
சேதியாவொருகைகொடேறியதேரெடுத்தெதிர்சிந்தினன். (௪௪)

ஆரழிந்தனவுருளழிந்தனவச்சழிந்தனவச்சிரத்
தேரழிந்துகொடிஞ்சியும்பலசின்னமானதுமன்னனும்
போரழிந்தனனென்றுசேனைபுறக்கிடாவருபொழுதினிற்
கூரழிந்ததெனக்குறித்தணிநின்றகாவலர்கூடினர். (௪௫)

பரித்ததேரொடுபரிதியைச்செறிபரிதிபோலிருபக்கமுந்
தரித்தவேலினர்தாரைவாளினர்தாமவில்லினராகவே
விரித்தவெண்குடைமன்னர்சூழ்தரவீமனிற்பதொர்மேன்மைகண்
டெரித்தநெஞ்சொடுவிரைவினைமைத்துனரானகொற்றவரெய்தினர். (௪௬)

எய்துமைத்துனரெய்துதெவ்வரொடெண்ணில்போர்செயவிண்ணிடைச்
செய்துபெற்றனதேரினின்றுமிழிந்துவானனிசீறினன்
மொய்திறற்பவமானனன்றுமுறித்தமுக்குவடென்னவே
கைதவப்படைமன்னர்மாமுடிசிதையவங்கொருகதையினால். (௪௭)

அம்பரத்தவர்கண்டுநின்றவரதிசயித்திடவாளின்மே
விம்பரிப்படிதெவ்வர்வெம்படையிரியவன்பொடுதிரியவே
தம்பிபட்டனனென்றுகொண்டெழுசாகரத்தெழுதழலெனத்
தும்பையுற்றமிலைச்சியீசனளித்தவில்லொடுதோன்றினன். (௪௮)

சங்கினங்கண்முழங்கவும்பணைமுரசினங்கடமுழங்கவுந்
துங்கவெங்களிறிவுளிதேரொடுதானைமன்னவர்சூழவு
மெங்குநின்றனனெங்குநின்றனன்மத்திரத்தரசென்றுபோ
யங்குநின்றமகீபர்வெந்திடவவனைமுந்துறவணுகினன். (௪௯)

வேறு.

சல்லியனெனப்பெயர்தரித்துவருகோமுன்
வல்லியமெனத்தகுசிவேதனமர்வல்லான்
பல்லியமுழக்கியதெனப்பலவும்வீரஞ்
சொல்லியொருவர்க்கொருவர்தொடுசிலைகுனித்தார். (௫௦)

ஒருவருமிவர்க்குநிகரில்லையெனவுற்றே
யிருவருமலைந்திடவிராசகுலராசன்
பருவரல்கொண்மத்திரபதிக்குதவியாகென்
றருவரையொடொத்தபுயராறுவரைவிடுத்தான். (௫௧)

தரணிபதிதம்பியர்கடானையொடுவந்தே
யிரணமுகமொன்றுமயிலோனெனவெதிர்த்தார்
திரணறைகொடார்புனைசிவேதனவரந்தக்
கரணம்வறிதாகும்வகைகணைபலதொடுத்தான். (௫௨)

முரண்டெதிருமன்னவர்முரண்கொள்சிலையோரான்
றிரண்டுசிலையாகவொருவீரனிவனெய்தான
றிரண்டுவருமன்னர்முடிசிந்தியுடன்மண்மேற்
புரண்டுவிழவாளிமழைதூவுபுயல்போல்வான். (௫௩)

தேரும்விசைகூரிவுளியுஞ்செறிபணைக்கைக்
காருமயில்வாள்சிலைதரித்துவருகாலாள்
யாரும்வெடிபூளைவனமென்னவொருதானை
யூருமொருதேரனிலமொக்குமெனநின்றான். (௫௪)

பட்டனவொழிந்தபலபடையுமிவனம்பிற்
கெட்டநிலைகண்டுரகசேதனனுரைப்பத்
தொட்டவரிவில்லினொடுசூறையனிலம்போல்
விட்டபரிமாவிரதவீடுமனெதிர்ந்தான். (௫௫)

மத்திரனைவிட்டுமிசைவந்தமகிபதிமே
லத்திரமும்விட்டவனடற்சிலையறுத்தான்
சித்திரமெனும்படிதிகைத்தனன்விராடன்
புத்திரன்விடுங்கணைபொறாதுபுலிபோல்வான். (௫௬)

வீடுமனுமீளவொருவிற்கொடுசிவேதன்
சூடுமுடிவீழவொருசுடுகணைதொடுத்தான்
கோடுசிலைவாளிபலகொண்டிவனவற்றோர்
நீடுகொடியாடையைநிலத்துறவழித்தான். (௫௭)

பின்னையுமவன்றனிபிடித்தவரிசாபந்
தன்னையுமிவன்பலசரங்கொடுதுணித்தான்
பின்னையுநகும்பகழிவீடுமன்வெகுண்டாங்
கென்னவமர்செய்வதினியென்றுதளர்வுற்றான். (௫௮)

தளர்ந்தநிலைகண்டுதுரியோதனனரும்போர்
விளைந்ததுசிவேதனுடன்வீடுமனிளைத்தா
னிளந்தலையுறாதபடிபேணுமினெனப்போய்க்
கிளர்ந்தமுடிமன்னர்பலர்கிட்டினர்விரைந்தே. (௫௯)

அந்தமுடிமன்னவரனேகரையுமுன்னம்
வந்தவழிமீளவும்வரும்படிதுரந்தான்
றந்தம்வரிவில்லுமணிதாரும்விடுதேருஞ்
சிந்தவெரிகால்வனசிலீமுகம்விடுத்தே. (௬௦)

வெவ்வனலனேர்குருராசனையும்வேறோ
ரைவரையுமேவினன்முனைந்தனர்களவருஞ்
செவ்வரைகள்போல்பவர்சிரங்களும்வளைக்குங்
கைவரிவிலுந்துணிபடக்கணைதொடுத்தான். (௬௧)

கங்கைமகன்மற்றுமொருகார்முகம்வளைத்துச்
சிங்கமெனவப்பொழுதுறுக்கியெதிர்சென்றா
னங்கவனகைத்தொருதனம்புகொடுமீளப்
பங்கமுறவிற்றுணிபடுத்தியெதிர்நின்றான். (௬௨)

ஆனபொழுதந்தரநெருங்கியமர்காணும்
வானவர்விராடபதிமைந்தனைமதித்தார்
வேனிலவன்மேனுதல்விழித்தவனளிக்குங்
கூனல்வரிசாபமிதுகொண்டனன்வரத்தால். (௬௩)

ஏறனையவீடுமனிளைத்தபடிகண்டால்
வேறவனைவில்லவரில்வெல்லவுரியார்யார்
மாறுபடுவெஞ்சமரில்வஞ்சனையிலன்றிக்
கோறலரிதென்றனர்குலப்பகைமுடிப்பார். (௬௪)

ஓகைநிகழெண்வகைவசுக்களிலொருத்த
னாகியநராதிபதியம்முறையறிந்தான்
வாகைவரிவில்லொழியவாளயில்களென்னும்
வேகமுறுவெம்படைகள்கற்றிலைகொல்வெய்யோய். (௬௫)

என்றெதிர்சிவேதனுடையம்புதனும்வெள்கிக்
குன்றுசிலைகொண்டவனளித்தசிலைகொள்ளான்
வென்றிவடிவாளுருவிமேலுறநடந்தா
னின்றவனும்வேறொருநெடுஞ்சிலைகுனித்தான். (௬௬)

வாளினெதிர்வெஞ்சிலைவளைத்துவயவீரன்
றோளிணையிலொன்றுதுணியக்கணைதொடுத்தான்
காளையொருகைவிழவுமற்றையொருகையான்
மீளவும்வெகுண்டுசுடர்வாளினையெடுத்தான். (௬௭)

எடுத்தவடிவாளினொடுமெண்ணில்பலபாணந்
தொடுத்துவருவீடுமனைமாமுடிதுணிப்பா
னடுத்துவருபோதவனழன்றொருசரத்தா
னடுத்தகையுறாமலவனல்லுயிர்கவர்ந்தான். (௬௮)

வேறு.

பூழிபடநிலமிசையப்பொற்சுண்ணங்கமழ்மேனிப்புதல்வன்வீழ
வாழிமொழிந்துளமகிழ்ந்தாரந்தரத்துந்துபிமுழங்கவானோருள்ளா
ரூழிபெயர்ந்துலகேழுமுள்ளடக்கித்திசைநான்குழுகளித்தேறி
யாழிபரந்தார்ப்பதெனவார்த்தனரப்பெருஞ்சேனையரசரெல்லாம். (௬௯)

உடைந்ததடந்தேருருள்களுக்குருதிப்புனறோறும்பர்வானி
லடைந்தவயவருக்குவழியாயசுடர்மண்டலத்தின்சாயைபோலு
மிடைந்தகுடைகாம்பற்றமிதப்பனவுங்கரியபுகர்வேற்கண்மாதர்
குடைந்தநறும்பரிமளச்செங்குங்குமநீரிடையெழுந்தகுமிழிபோலும். (௭௦)

வெங்கலங்கற்கடுங்குருதிவெள்ளத்துக்கொடியாடைமிதக்குந்தோற்றஞ்
செங்கலங்கற்புதுப்புனலில்விளையாடித்திரிகின்றசேல்கள்போலும்
பொங்கலங்களிருபர்தலைபுனைமகுடத்துடன்கிடப்பபொறியார்வண்டு
தங்கலங்கல்வண்கனகசததளபங்கயமுகுளசாலம்போலும். (௭௧)

எண்ணிழந்தகுருதிநதியிருமருங்குங்கரிபரியாள்கரைகளாகக்
கண்ணிழந்தபறையிடையேசெருகியகால்வாய்த்தலையின்கண்கள்போலு
மண்ணிழந்துபடுமரசர்மணிக்கலங்கள்பலசிந்திவயங்குதோற்றம்
விண்ணிழந்துபரந்தசெழுங்கடலிடையேமீனினங்கள்வீழ்ந்தபோலும். (௭௨)

பட்டநுதற்களியானைப்பாண்டவர்தம்படைத்தலைவன்பட்டானைத்
தொட்டகழற்றடமகுடச்சுடர்வடிவாண்மகிபரெலாந்துணுக்கமெய்தி
விட்டபங்கியல்பாடிவீடணைந்தார்வெயிலோனுமேல்பாற்குன்றிற்
கிட்டவவ்வன்வடிவழிக்குருதியினாற்சிவந்ததெனக்கிளர்ந்ததம்மா. (௭௩)

திருநெடுமான்முதலானநேர்வேந்தர்விராடனுமைச்சென்றன்மைந்த
ரிருவருமின்றொருபடியேவெஞ்சமரிலெஞ்சினரென்றிரங்கலையா
பொருமுனையில்வீடுமனைப்புறங்கண்டுநிருபரெலாம்போனறவென்று
விரகுடன்வாளெடுப்பித்தபிறகன்றேதொடுசரத்தால்வீழ்ந்ததென்றார். (௭௪)

பேய்செய்தவரங்கனையபெருங்கானிற்றிரிவோர்க்குப்பெற்றகாதற்
றாய்செய்தவுதவியினுந்தகுமுதவிபலசெய்தாய்சமரூடின்றுன்
சேய்செய்தவுயிருதவிதேவரெலாந்துதிக்கின்றார்செறிந்தோர்தம்மி
னீசெய்தபேருதவியார்செய்தாரெனவுரைத்தானெறிசெய்கோலான். (௭௫)

உன்னுயிர்போனீவளர்த்தவுத்தரன்றனுயிருமுநுத்தெழுஞ்சுவேதன்
றன்னுயிரும்போரரசர்தாமிருந்துகொண்டாடச்சமரிலீந்தா
ரென்னுயிருநினதன்றியாரதினிச்சதுர்முகத்தோனீன்றபாரின்
மன்னுயிருக்குயிரனையாயெனவுரைத்தான்வளமலிசீர்மச்சர்கோமான். (௭௬)

முப்பொழுதுமுணர்கேள்விமுகுந்தனுடன்பாண்டவருமுடிசாய்த்தாங்க
ணெப்பொழுதுவிடிவதெனநினைதருமெல்லையின்வல்லேயிரண்டுபோரு
மப்பொழுதுகாண்டற்குவருகின்றானெனத்தடந்தேரருக்கன்வந்தான்
மைப்பொழுதுஞ்சுவேதனைநிர்மத்திரத்தான்வருதினிபோன்மாய்ந்ததம்மா. (௭௭)

முதற்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—௨௭௯.

# இரண்டாம்போர்ச்சருக்கம்.



எந்தவெந்தயோனிபேதமெங்குமெங்குமுள்ளன
வந்தவந்தயோனிதோறுமாவியானதன்மையைச்
சிந்தையின்கணொருகணத்திணிகழுமாறுதேவர்கோன்
மைந்தனுய்ந்திடப்புகன்றவள்ளறாள்வணங்குவாம். (௧)

சோனைமேகமென்னவாளிதூவுதிட்டத்துய்மனைச்
சேனைநாதனைநீசெருச்செய்கென்றுசெப்பினன்
வானையாதியானபூதபேதமாகிமாயையா
யேனைஞானரூபியாகியாவுமாயவெம்பிரான். (௨)

ஐவர்சேனையிங்கெழுந்ததங்கெழுந்ததடலுடைத்
தெவ்வர்சேனைவெகுளியோடெழுந்திரண்டுசேனையும்
பவ்வமோரிரண்டெழுந்துபடர்வதென்னவெருவரும்
கவ்வையோடுவந்துவெங்களத்திடைக்கலந்தவே. (௩)

வெம்பராகம்வெளியிலுற்றெழுந்தபோதுவேழவிற்
சம்பராரிதகனநாளிலன்றெழுந்ததன்மையென்
றும்பரார்நடுங்கினாருருத்துவீழுமுருமென
விம்பரார்நடுங்கினாரிரங்குபல்லியங்களால். (௪)

அளவின்மன்னரேறுதேர்களாறிரண்டுபத்துநூ
றிளவலோடுகசதுரங்கமங்களோடுமிடம்வரப்
பளகமன்னவெழுபதுற்றபத்துநூறுதேரொடும்
வளவராதிமன்னரோடுநகுலராசன்வலம்வர. (௫)

*மிடல்கொள்வாளமைச்சரோடுவிரைவின்வீரர்பின்வர
முடுகுசேனையபிமன்வீமன்விசயன்மாயன்முன்செல
நடுவுநால்வகைப்படும்பதாதியோடுநாயகன்
கடகநாதனுடனணிந்துநின்றனன்களத்திலே. (௬)

மாடிரண்டுமெண்ணில்கோடிமன்னர்சேனைநிற்கவும்
பீடுகொண்டநேகமன்னர்போரணிக்கணிற்கவுஞ்
சூடுதும்பைமண்டலீகர்தூசியாகநிற்கவும்
வீடுமன்மகீபனோடுநடுவண்வந்துமேவினன். (௭)

வீசுகொண்டலுடனெதிர்ந்துகோடையுந்திவீசவே
மூசுகொண்டலோரிரண்டுமுடுகிநின்றுபொழிவபோற்
றூசிநின்றவீரரோடுதூசிவீரர்வில்வளைத்
தாசுகங்கள்வீசவீசவந்தரம்புதைந்தவே. (௮)

சொற்கையாதவாய்மைவல்லதுருபதன்குமாரனும்
விற்கையாசிரியனுமுற்றெதிர்ந்துதம்மில்வெகுளவே
பொற்கைவெஞ்சராசனம்பொழிந்தகோலிழிந்தவா
னுற்கையென்னவொருகைமாமுகங்களூடொளித்தவே. (௯)

வீரசாபமுடனுரைக்கும்வெய்யசாபம்வல்லவத்
தீரன்வாளியாலழிந்துசிலையுமேறுதேரும்விட்
டாரமாமதிக்குடைந்தவிருள்கொலென்னவேகினா
னாரவாரமுடன்மலைந்தவைவர்சேனையதிபனே. (௧௦)

---

* மிடலும்வாண்மிலேச்சரோடு வீட்டும்வீரர்பின்வர என்றும் பாடம்.

உடைந்துடைந்துசேனைமன்னன்வருதல்கண்டுருத்துவான்

கடைந்தகுன்றொடொத்ததேர்கடாவிவந்துமுனிவனோ
டடைந்தமன்னருட்கியோடவொருகணத்திலமர்செய்தான். (௧௧)

உக்கிரமாகவீமன்வந்தவுறுதிகண்டநேகபோர்
விக்கிரமமதத்தடக்கைவேழவீரர்தம்முடன்
வக்கிரசாபமழைபொழிந்துவடகலிங்கமன்னவன்
சக்கிரதேவன்முகிலெறிந்தவுருமெனத்தலைப்பெய்தான். (௧௨)

வேறு.

கதிக்கடுங்தேரினின்றிழிந்துகாலிங்கன்
மதிக்குமும்மதகரிவந்தயானையுந்
துதிக்கைவன்கரங்களாற்சுற்றியெற்றினன்
விதிக்கொருவிதியனான்வீமசேனனே. (௧௩)

மின்பொழிபடையுடைமேவலாருட
லென்புகவிபங்களையெடுத்தெறிந்தனன்
தன்பெருந்துணைவனுந்தாமமாருதி
வன்புடன்பறித்தெறிவரைகளென்னவே. (௧௪)

வெம்பிமேல்வருதிறல்வீமன்மும்மதத்
தும்பிமேல்விழவிழத்தும்பிவீசுவ
பம்பிமேலெறிதருபவனனாற்கட
லம்பிமேல்விழவிழுமம்பிபோன்றவே. (௧௫)

வருகளிறொருகையால்வாங்கிவீசவிற்
பொருபணைமண்ணுறப்புதையவீழ்ந்தன
விரிதிரைநெடுங்கடல்விசும்புதூர்த்தநா
ளிருநிலமிடந்திடுமேனம்போன்றவே. (௧௬)

கழலணிபொலங்கழற்காளைகைகளா
லெழவெழமதகரியெடுத்துவீசலின்
விழுவனவன்றிமேல்விசையிற்போவன
பழையகல்சிறகுடன்பறப்பபோன்றவே. (௧௭)

புகலுறுகலிங்கர்கோன்போரில்வெந்திட
விகலுடனெடுத்தெடுத்திவனெறிந்தபோ
தகல்வெளிமுகடுறவதிர்ந்துமேலெழு
முகபடமுகில்கள்வான்முகில்கள்போன்றவே. (௧௮)

வெந்நிடுகடகரிவீரன்வீமன்முன்
முன்னணிகலங்குறமுறிந்தவாறுகண்
டென்னிதுவெனமொழிந்தேறுதேரொடுந்
தன்னொருசிலையொடுந்தானுந்தோன்றினான். (௧௯)

களத்திடைமடிந்தனகலிங்கன்வேழமென்
றுளத்தழல்கண்ணிணைசிவப்பவுந்திடத்
தளத்தரணிபரெனுந்தானையானைகள்
வளைத்தனமருத்தின்மாமடங்கறன்னையே. (௨௰)

கந்தடர்களிற்றுடன்கலிங்கபூபதி
மைந்தருஞ்சேனையும்பொருதுமாய்ந்தபி
ணிந்திரனுறசிறகிழந்தகுன்றுபோற்
சிந்தைநொந்துடன்றனன்சேனைமன்னனே. (௨௧)

வீமனுந்தனதுதேர்மேல்கொண்டாங்கொரு
தாமவேலவன்புயத்தடத்திலோச்சினான்
மாமருமாலையான்றனுமற்றவே
றோமமொன்றினாற்றுணித்துவீழ்த்தினான். (௨௨)

வேறு.

ஓடுமிரதத்திவுளிநாலுமுடலற்றுவிழவோரொர்கணைதொட்டிரதமு
மீடுகுலையத்துவசம்வீழவனிகத்தவருமேகவெதிர்முட்டுதலுமே
நீடுவரையொப்பதொராகதாயுதமெடுத்தணுகிநேர்படவடித்தனனரோ
வீடுமன்மனத்தனையதேர்வலவனைக்கடிதின்வீமனெனும்வெற்றியுரவோன். (௨௩)

வேகமுடனிப்படியவ்வீமனுமுடற்றியடல்வீடுமனொடொத்தமுதுபோர்
மோகரவிதத்தரசர்மாமகுடர்தந்தமுடன்மூளைகடெறிக்கவடியா
நாகமொடெடுத்திவுளிதேர்சிதறிமுற்றவொருநாழிகையிலெற்றிவரவே
யாகவமுழுக்கவுருமேறெறிவதொக்குமெனவாரவமிகுத்ததறவே. (௨௪)

மீளவும்வளைத்தசிலைவீடுமனெதிர்த்ததரால்வீமனொடிருத்திருவருங்
காளமுகிலுக்குமுகினேர்மலைவதொக்கவெரிகாலுநயனக்கடையினார்
மூளவெதிர்முட்டியிருசேனையுநிலத்துதிரமோதுபொழுதத்துவெருளா
வாளபிமன்வெற்றிவரிவார்சிலைகுனித்துவயவாளிகடொடுத்துவரவே. (௨௫)

வார்சிலையைவட்டவடிவாம்வகைவணக்கியெதிர்மாறுபடவுற்றுவருவோ
ரோரொருவர்நெற்றிதொறுமோரொருவடிக்கணைகளைந்திருவவிட்டுநகுவோன்
மேருவைவளைத்துநெடுவாசுகிபிணித்துமழைமேகநிகர்மெய்க்கணைதொடா
வாரழலினமுப்புரமுநீறெழநகைத்தவரவாபரணனொத்தனனரோ. (௨௬)

மேவலர்விதப்படையும்வீடுமனுமுட்டும்வகைவீமனும்விறற்புதல்வனும்
பூவலயமுற்றுமெழுகாலவிறுதிப்பரவைபோலிகல்விளைத்தபொழுதிற்
கூவலினிலைப்புனலுமீதெழுவதொத்ததெரு*கோபமொடுசேர்ப்பதுவசக்
காவலனுரைப்பவிருவோரையும்வளைத்தனர்கள்காவலரனைப்பலருமே. (௨௭)

தானவர்சமத்துமிருதோள்வலியுமற்றுமுனைதானைபுறகிட்டழியவே
வானவர்துதிக்கவயவாகைபுனையக்கடவுள்வாழ்வினிதளித்துவருவோன்
மீனவனெனத்தகையகாளையொடெடுத்தகதைவீமனைவளைத்தனரெனக்
கூனல்வரிவிற்பகழிதூவியிரதத்தின்மிசைகூவியவரைக்குறுகினான். (௨௮)

* கோபமொடுமெத்தினபுரிக் என்றும் பாடம்.

வீசுபகழித்துளியின்மேகமெனவிற்கொடிவன்மேனுறநடக்குமளவிற்
றேசுடையருக்கனெதிர்முடுபனியொத்தரசர்தேரணிகெடச்சிதறினார்
மாசுணமணிக்கொடிமகீபதிபடைத்தலைவன்வார்சிலைவளைத்திலனெடும்
பாசறைபுகக்கடவினார்கடகளிற்றினணியாய்பரியணிப்படைஞரே. (௨௯)

வேலையமுதுக்குவருவானவர்களொத்தனர்கள்விடுமன்முதற்படைஞரா
ராலநிகரொத்தனனனீகினிதொலைத்தொருதனுண்மைநிலையிட்டுவருவோன்
மேலினியிமைப்பொழுதுநாம்வெளியினிற்கிலிவன்மேலிடுமெனக்கருதினான்
போலெழுவயப்புரவியூருமிரதத்திரவிபோயுதயகிரிச்சொருகினான். (௩௦)

ஆதபனொளித்ததிசையோவொளிசிவந்ததறவாழ்குருதிமெத்துகையினால்
மாதிரமுழைக்கடலுமாநிலமுமுட்டவொருமாசறுசிவப்புவடிவா
யேதிலிருள்புக்குலவலாமிடமறக்*கடையினேறனலியொத்ததிகலிப்
பாதகமிகுத்தகொலைவாணிருபர்தத்தமதுபாடிநகர்புக்கனர்களே. (௩௧)

கூளிகள்செருக்கிநடமாடுகளம்விட்டரசர்கோமகனையுற்றளவிலே
வாளபிமனுக்குமொருதேர்விசயனுக்குநம்வரூதினிபுறக்கிடுவதே
நாளைமுதுகிட்டவரையாருயிர்செகுத்திடுவனென்னவுரைத்தனனரோ
மீளவுமுதித்தனன்விரோசனன்முதற்பகலில்வீரர்விறலைக்கருதியே. (௩௨)

இரண்டாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள்—௨௭௯.

---

# மூன்றாம்போர்ச்சருக்கம்.



தந்தமுறியிலவர்வைத்ததயிர்பால்வெண்ணெயிட்டாமற்
குந்தியுரலின்மிசையேறியிளங்கோவியர்முன்கூத்தாடி
நந்தன்மனையிலசோதையிருநயனங்களிக்கவிளையாடு
மைந்தனிருதாளொருநாளுமறவாதாரேபிறவாதார். (௧)

ஏலாவமரின்மூன்றுநாளிரண்டுபடையுந்திரண்டேறக்
காலார்திண்டேர்விடுமனுவகுத்தான்கடுங்காருடவியூக
மேலாம்வென்றிப்பாண்டவர்தம்வெஞ்சேனையைக்கொண்டஞ்சாமற்
றேலாவர்த்தசந்திரப்பேர்வியூகம்வகுத்தான்றுளவோனே. (௨)

போரேதொடங்கியிருபடையும்புகுந்தபொழுதிற்றுகடொலைத்த
காரேதொடங்கிக்கார்கோள்வெங்கடுங்கால்கலிகொண்டார்ப்பனபோல்
வாரேதொடங்கும்பணைக்குலமுமணிக்காகளமுமுடன்முழங்கப்
பாரேதொடங்கியெவ்வுலகுமடைவேசெவிடுபட்டனவே. (௩)

சொல்லார்கேள்விக்கங்கைமகன்றுரோணன்முதலாமதிரதரு
மெல்லாவிரதகயதுரங்கமேலாளுடனேகாலாளும்
வில்லான்முன்னாட்டமைத்தாரந்தவீரன்றனையுஞ்சிறுவனையு
மல்லால்வஞ்சமல்லடர்த்தமாயன்றனையும்வளைத்தாரே. (௪)

---

* கடலினேறனலி என்றும் பாடம்.

சூரர்க்கெல்லாமுதலெண்ணுந்துரியோதனனுந்தம்பியரு
மாரக்கவிகைக்காந்தாரன்முதலாவுள்ளவவனிபருஞ்
சேரத்திரண்டுகரிகளொருசிங்கம்வளைத்ததெனச்சிங்க
வீரத்துவசனின்றுழிப்போய்வளைத்தார்சமரம்விளைத்தாரே. (௫)

வரத்தான்மறையாற்றும்பெற்றவரிசாபங்கள்பிடித்ததனிக்
கரத்தான்மறைந்ததவரவர்தங்கடைக்கண்படைக்கண்விரைந்துவிடுஞ்
சரத்தான்மறைந்ததகல்வானந்தரணிதலமச்சரந்துணித்த
சிரத்தான்மறைந்ததுகுருதிச்சேற்றான்மறைந்ததிசைநான்கும். (௬)

துவசம்பிளந்துதேருருந்துரகம்பிளந்துசுடர்மணிப்பொற்
கவசம்பிளந்துமார்பகமும்பிளந்தூடுருவக்கடோற்கசன்று
னவசந்திரமாமுனைவாளிதொடுத்தான்றொடுத்தநாழிகையி
னவசம்பிறந்துதம்பியர்முன்விழுந்தானொருவர்க்கழியாதோன். (௭)

நாகந்துவசமெனவுயர்த்தோனடுங்காமுன்னநண்ணலரை
மாகந்தனிற்சென்றமர்கடந்துவருமைந்துடையோன்றிருமைந்தன்
வேகம்படநின்றொருசமரவேலான்மீண்டுமவ்வேந்தன்
பாகன்றனதுமருமத்திற்பாய்ந்தானவனுமாய்ந்தானே. (௮)

விழுந்தான்வேலாற்றேர்ப்பாகன்வெஞ்சாயகத்தால்விறல்வேந்தர்
தொழுந்தாளரசன்றானுமுயிர்சோர்ந்தானென்னுந்தொனிகேட்டுச்
செழுந்தார்வாகைவிசயனையுந்திருமாலையும்விட்டொருமுனையா
யெழுந்தான்மந்தாகினிமைந்தனிளைத்தோர்நமக்கோரெயில்போல்வான். (௯)

வண்டாரலங்கல்வலம்புரியோன்மார்பந்துளைத்தவாளிவழி
கண்டானெடுத்துத்தாழ்ந்ததிருக்கையாலணைத்துக்காற்றேரிற்
கொண்டானுவிதருமருந்துங்கொடுத்தானவனுங்கொடுத்தமருந்
துண்டானுண்டகணத்தினின்மீண்டுணர்ந்தானுலகேழுடையானே. (௧௦)

மன்னன்றனையச்சந்தனுவின்மைந்தன்பெரும்போணிநிறுவிப்
பொன்னங்குன்றேயிவன்சிலையுமிவனேகாணும்புராரியென
மின்னுங்கழற்கால்வீமனுடன்வெம்போர்விளைத்துவிடலையராய்
முன்னின்றவரும்பின்னிடத்தன்முனைவாளியினால்வினைசெய்தான். (௧௧)

மருமங்களினும்புயங்களினும்வதனங்களினுங்கண்களினுஞ்
செருமும்படிவெங்கணைமாரிசிந்திச்சிந்திச்சிரந்துணித்துத்
தருமன்சேனைப்பரவையெலாந்தானேயாகித்தலைநாளிற்
பொருமந்தரமால்வரைபோலத்திரிந்தான்வெம்போர்புரிந்தானே. (௧௨)

மலையொத்ததிருங்கடகளிறும்வயமாவணியுமான்றேருந்
தொலையத்தொலையாவரையுஞ்சுடுவெங்கணையாற்றுரந்துதுரந்
தலையத்தாங்கமெறிகடல்வாய்வடவானலம்போலவனின்ற
நிலையைக்கண்டுங்காணான்போனின்றான்விசயனிகரில்லான். (௧௩)

## வேறு.

கானெரிதுற்றெனவீடுமனிப்படிகாதிமலைந்திடவே
மானநினைத்திலைசாபமெடுத்திலைவாளிதொடுத்திலைநீ
யேனிதுனக்கெனமாயனுரைத்தவனேறிரதத்திழியா
வானதெனக்கினியாகவெனத்தனியாழியெடுத்தனனே. (கச)

ஆழியெடுத்தனன்வீடுமனைப்பொருதாவியழித்திடுவா
னாழிமுகக்கனல்போலெழமப்பொழுதோடியருச்சுனனுந்
தாழிதனக்குமுன்வீழ்கொடுத்தருடாளிணையைப்பிடியா
வாழியுனக்கிவனோவெதிர்வித்தகமாயவெனத்தொழுதான். (கரு)

வாசவன்முற்பெறுகாளைதொழத்தொழமாறுபடச்சினவுங்
கேசவனிப்படிமேல்வருகிற்பதுகேவலமுற்றனரா
நர்சநமக்குறுகாலநணித்தெனநாடிநடுக்கமுடன்
றேசணிபொற்றடமேருவெனத்திரிதேரினைவிட்டிழியா. (கசு)

ஆரணகற்பிதமாதவவச்சுதவாழியிடைத்துயிலுங்
காரணசிற்குணரூபமலர்க்கொடிகாதன்மனத்துறையு
நாரணவற்புதவானவருக்கொருநாயகநிற்பணியும்
வாரணமுத்திவிசாலதலத்திடைவாழ்வுறவைத்தவனே. (கஎ)

ஆவியழித்தனைதூணிலுதித்தடலாடகனைத்தலைநாண்
மாவலியைச்சிறுமாணுருவத்துடன்வார்சிறைவைத்தனையா
லேவிலரக்கனைவீழவடர்த்தனையானொரிலக்கெனவோ
நீவலியிற்சினமூளுமனத்தொடுநேமியெடுத்ததுவே. (கஅ)

வானரகிற்புகுதாமலெனக்குயர்வானுலகைத்தருவா
னீநினைவுற்றதுபோனபிறப்பிலென்னீடுதவப்பயனே
யானுமினிப்பிறவாமலளித்தருளீசவெனப்பரவா
ஞானமனத்தொடு*நாகுழறப்பலநாடியுரைத்தனனே. (ககூ)

ஆரியனப்பொழுதாறினனிற்கவுமாடலருச்சுனனுந்
தாரைவடிக்கணையாயிரமெய்ப்பதொர்சாபம்வளைத்ததிரா
யாரெதிர்நிற்பினும்யாவர்தடுப்பினும்யானினியிப்பகலே
சேரமுருக்குவனேறெனத்தனதேர்மிசைபுக்கனனே.

நீறுபடுத்தினன்மாமகுடத்திரணீணிலவைப்படையச்
சேறுபடுத்தினன்மூளைகளிற்றசைசேர்குருதிப்புனலா
லாறுபடுத்தினனோரொருவர்க்கெதிராயிரம்வைக்கணையா
வீறுபடுத்தினன்வீடுமன்விட்டவர்யாவர்பிழைத்தவரே. (உக)

வாயுவடிக்கணைவாசவன்வைக்கணைவாருணமெய்க்கணைசெந்
தீயின்வடிக்கணைதேவர்சுடர்க்கணைசேரவிடுத்தமையா
லாயுமுனைப்படுதோரணிபட்டனவாளணிபட்டனவெங்
காய்கரிபட்டனபாய்பரிபட்டனகாவலர்பட்டனரே. (உஉ)

---

* நாகுழறிப்பலநாமமுரைத்தனனே என்றும் பாடம்.

நாடியொளித்தனர்சூழ்புனன்மத்திரநாடன்முதற்பலருங்
கூடியொளித்தனர்மாரதரிற்றிறல்கூரும்வயப்படையோ
ரோடியொளித்தனராடமரிற்றுரியோதனனுக்கிளையோர்
வாடியொளித்தனர்மாகதரொட்டியர்மாளவர்குச்சரரே. (௨௩)

வேறு.

பார்த்தனம்பினன்மேவலார்படைப்பரவைசாயவேவிரவுகோவியர்
தூர்த்தனனபுடனகண்டுவந்துதன்றெருக்கசேனையின்பக்கமெய்தினன்
சேர்த்தவெம்பனைக்கொடிமகீபனும்வில்விஜேதனுஞ்செல்வமைந்தனுங்
காத்துநின்றுதங்காவலன்றனைக்கொண்டுபாசறைகடிதினெய்தினர். (௨௪)

வெஞ்சரத்தினால்விசயன்வென்றபோர்மிகுகளத்தின்வாய்விசையொடற்றன
குஞ்சரத்தின்வீழ்கைகளுகமேதருதிவட்டமும்பரிதிவட்டமே
பஞ்சரத்தொடுந்திரியுமாணையின்பக்கமெங்கணும்பட்டுமூழ்கிய
செஞ்சரத்தின்மேற்சிறகர்பண்டுவச்சிரமரிந்திடுஞ்சிறகர்மானுமே. (௨௫)

கொற்றமன்னர்சென்னியினணிந்தபொற்கோலம்யாவையுந்தாளமாகவே
யற்றைவெஞ்சமத்தடலருச்சுனன்றன்மைபாடிநின்றலகையாடுமான்
முற்றவெம்பிணக்குவையும்வேழமுமுடிதுவர்சியுந்தேருமொய்ம்புறத்
துற்றகுன்றெனவொன்றுபட்டெழச்சொரியுமூளையாறருவியொக்குமே. (௨௬)

பமரமும்மதக்கரிவிலாவின்வேல்பட்டவாய்நிணம்பறியநிற்பன
குமரன்வேலினவாயனலமூர்தருங்கோடுடைத்தடங்குன்றமொக்குமா
லமரர்கோன்மகன்செங்கையம்பினாலற்றவீரர்தந்தலைகள்கவ்வியச்
சமரபூமிசேர்ஞாளிமானுடத்தலைவிலங்கினின்றன்மைசாலுமே. (௨௭)

அன்றுவெஞ்சரத்தொடுதறிந்தவாளரசர்சோரிமெய்ப்பட்டதாதலிற்
சென்றுசெங்கதிர்ச்செல்வன்வாருணத்திசையடைந்துவெண்டிரையின்மூழ்கின
னின்றருச்சுனன்பொரமறந்ததுநெடியசெங்கண்மானேமிதொட்டதும்
பின்றைவில்லெடுத்தவன்மலைந்ததும்பேசினன்மகீபதிபிதாமகன். (௨௮)

தருமன்மாபெருஞ்சேனைதன்னுளார்தங்களாதரத்தொடுதனஞ்சயன்
பொருவிலாண்மையும்வீமன்மாமகன்பொருதவீரமும்புகழ்ந்துபாடினா
ரரவகேதனன்சேனைதன்னுளாரழிந்தமன்னருக்கழுதாற்றினா
ரிருவர்சேனையுங்கண்படாமலன்றிரவுபட்டதென்னென்றியம்புவாம். (௨௯)

நென்னலங்கையிற்கொண்டதன்னையேநேமியாகவந்நீலமேனியா
னின்னமும்பொரத்தேடுமாகவத்தின்றுமென்றுகொண்டெண்ணியேகொலோ
தன்னெடுந்தனிச்சயிலமும்பொலந்தமனியத்தடஞ்சயிலமாகவே
மின்னெடுஞ்செழுங்கதிர்பரப்பினன்வெய்யவேழ்பரித்தேர்விபாகரன். (௩௦)

மூன்றாம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள் ௨௮௨௫.

# நான்காம்போர்ச்சருக்கம்.



தேடியவகலிகைசாபந்தீர்த்ததா
ணீடியவுலகெலாமளந்துநீண்டதா
ளோடியசகடிறவுதைத்தும்பாம்பின்மே
லாடியுஞ்சிவந்ததாளென்னையாண்டதாள். (௧)

நற்பகலிடைவருநளினநாயகன்
பொற்பகலுறவொளிபுரியுநேமியான்
பிற்பகலணியையும்பிறங்குசேனையான்
முற்பகல்வியூகமேயாகமுட்டினான். (௨)

கார்முகில்வண்ணனைக்கண்டுகாணலார்
தாமுமவ்வியூகமேசமைத்துமுந்தினு
ரேமமோடெதிர்முனைந்திருவார்சேனையும்
போர்முரசெழவெழப்பொங்கியார்த்தவே. (௩)

எழிருபுவனமுமேந்துமேருவைச்
சூழ்வனகிரிக்குழாஞ்சுற்றுமாறுபோற்
பாழியம்புயகிரிப்பவனைனமந்தனை
வேழவெம்படையுடைவேந்தர்சூழவே. (௪)

வேறு.

ஆலாலமெனக்கதுவாவதிரா
மேலாள்விழவீமன்வெறுங்கைகளா
லேலாவுடலென்புகமோதவெறுந்
தோலாயினசிற்சிலதோலினமே. (௫)

மேல்வாய்தமகையொடுமேலெழவுந்
தோல்வாயவைகீழ்விழவுந்துணியா
மால்வாரணம்வாய்கள்கழன்றனமுன்
னால்வாயெனுநாமநலம்பெறவே. (௬)

மதிவெண்குடைமாருதிவன்புடனே
குதிகொண்டொருகைகொடுகுத்துதலா
லதிர்சிந்துரவல்லுரமத்தனையு
மெதிர்சிந்துரமாகியிளைத்தனவே. (௭)

உடலிற்றசையாவுமுடைந்துநெடுங்
குடலற்றுவிழும்படிகுத்துதலான்
மிடல்பற்றியவீமன்வெறுங்கைகளா
லடலத்திகளத்திகளாயினவே. (௮)

கந்தாவகன்மொய்ம்புறுகாளைபுயக்
கந்தாலமர்செய்து கலக்குதலிற்
றந்தாவளசேனை தரிப்பறவே
தந்தாவளமுற்றனசாயுறவே. (௯)

வெவ்வாயுவின்மைந்தன் வெகுண்டொருதோன்
மொய்வாகுவில்லைத்தெதிர்மோதுதலாற்
கைவாலதிமெய்தலைகால்கள்கரந்
தவ்வாரணம்வாரணமாகியதே. (௧0)

தம்பித்தனகாருடல்பேருயிருங்
கும்பித்தனவாயுகுமாரனிவ
னம்பொற்கரபங்கயமன்னுதலிற்
றும்பிக்குலமாயின தும்பிகளே. (௧௧)

மின்னுகமணிப்புயன்வெங்கதையான்
முன்னுகமலைந்து முருக்குதலா
லெங்நாகமுநாகமெனும்படியே
மன்னுகவமெங்குமடிந்தனவே. (௧௨)

கோடுங்காமும்பறியக்குதிகொண்
டோடுங்குருதிப்புனலூடுடல
மூடும்படியாவருமூழ்குதலா
லாடுங்கயமாயினவக்கயமே. (௧௩)

வீசுந்தமகைம்முதன்மெய்ம்முழுதுங்
கூசும்படிசிற்சில்குழம்புகளாய்
மூசுங்களபக்குலமொய்ம்பனுடற்
பூசுங்களபக்களிபோன்றனவே. (௧௪)

கிரியேயெனவந்தெதிர்கிட்டினபுன்
பொரியேயெனவானிடைபுக்கனபோ
ரரியேறனையான்வலிமைக்கவர்தங்
கரியேகரியல்லது கண்டவர்யார். (௧௫)

இவ்வாறுவெகுண்டிவனேற்றுதலுங்
கைவாரணவேலைகலக்கமுறத்
தெவ்வாகியமன்னவர்தேர்களொடும்
வெவ்வாசிகடம்மொடும்வெந்திடவே. (௧௬)

உடைகின்றமைகண்டுரகத்துவசன்
குடையுங்கொடியுங்குளிர்மாமுரசும்
படையுஞ்சிலதம்பியரும்பலரும்
புடைகொண்டுவரப்போனனவன்மேல். (௧௭)

வீமற்கெதிர்நின்றவன்வில்லறவுஞ்
சேமக்கவசஞ்சிதைவுற்றிடவு
நாமக்கணையேவினனுயகனு
மாமுத்தமதிக்குடைமன்னவனே. (௧௮)

ஆறம்பினிலற்றாவத்துவச
னூறம்பகன்மார்பினுழைந்தனபின்
வேறம்புதொடுத்திலன்வீமனவன்
மாறம்புதொடுத்தனன்மற்றிவன்மேல். (௧௯)

சிங்கக்கொடியற்றணிதேர்சிதைவுற்
றங்கத்தினுழைந்தனவம்புகளுந்
துங்கக்கடகத்திரடோள்புடையா
வெங்கட்கனல்வீமன்வெகுண்டனனே. (௨௦)

நொந்தானிவனென்றுநுதிக்கதிர்வே
லந்தார்முடிமன்னரநேகருடன்
வந்தார்பலர்தம்பியர்மைத்துனருங்
கொந்தார்தொடைவீரகுமாரருமே. (௨௧)

மலருங்குடைமன்னவர்வந்தமைகண்
டலருங்கொடிவாளரவோனருகே
பலருங்கரிதேர்பரியாளுடனே
சிலரும்புவிபாலர்திரண்டனரே. (௨௨)

வேறு.

எதிர்ந்தார்மன்னரிருதிறத்துமொருவர்க்கொருவரிடையிடைநின்
றதிர்ந்தார்சிறுநாண்பேரொலியாலுடையாவல்லவகிலாண்ட
முதிர்ந்தார்போரிற்றொடுகணைபான்முரட்டோடணிந்துமுடிதுணிந்து
முதிர்ந்தார்தத்தமுடலிலத்திலுயர்ந்தாராவியுயர்வானில். (௨௩)

நாமத்தெரியல்வலம்புரியோன்றடந்தாமரைக்கைத்தனுத்தறியச்
சேமக்கவனப்பவனகதிப்பரிமாநான்குஞ்சிரந்துணிய
மாமொட்டொடிந்துகொடிஞ்சியுடன்மான்றேர்சிதையமார்புருவ
நாமக்கணைகள்பலபடவில்லுகைத்தானின்றுகைத்தானே. (௨௪)

முன்னாளமரிற்கடோற்கசன்றன்முனைவெஞ்சரத்தான்மூழ்குவித்தான்
பின்னாண்மீளப்பிறைக்கணையாற்பிளந்தானவனைப்பெற்றெடுத்தோ
னென்னாவிரங்காமெய்ந்நடுங்காவெடுத்தாரணைத்தார்சகுனியுமப்
பொன்னார்தடந்தேர்ச்சல்லியனுமுதலாவுள்ளபூபாலர். (௨௫)

தம்முன்றளர்ந்தநிலைகண்டுதரியாராகித்தம்பியர்க
ளெம்முன்பொருதற்கிசைவார்களிசைவீரென்றென்றிகல்கூறித்
தெம்முன்செவிகள்செவிடுபடச்சிறுநாணெறிந்துதேர்கடவி
முன்முன்கடிதிற்கணைபொழிந்தார்முகுந்தன்றடக்கைமுகில்போல்வார். (௨௬)

வின்மேல்விசையிற்கடும்பாணமேன்மேனிறுத்திவேந்தரைப்பார்த்
தென்மேனினைவென்றவரவர்பேரிரதந்துணித்துச்சிலைதுணித்துத்
தன்மேல்வந்ததம்பியரிற்றரியாதுடன்றவைவர்க்கு
மன்மேலெய்தவாளியெனத்தொடுத்தானைந்துவயவாளி. (உஎ)

சேனுவிந்துசுதக்கணன்பொற்றேர்ப்பிங்கலசன்சலாசந்த
னுவீமவாகுவெனுமடல்வாணிருபரைவரையும்
வானாடாளும்படிவிடுத்தான்வன்பாற்றம்மையைவரையுங்
கானாள்கென்றகாவலனைப்போல்வான்வீரக்கழல்வீமன். (உஅ)

ஒருபால்வீமன்சிலைவிசயனொருபாலொருபாலபிமன்னு
வொருபானகுலன்சாதேவனொருபாலொருபாலுரகேச
னொருபாலரக்கன்பாஞ்சாலனொருபாலடலுத்தமபானு
வொருபாலுடன்றுபொரப்பொரவேயுடைந்ததாசன்பெருஞ்சேனை. (உகூ)

விண்ணாடருக்காவெஞ்சமத்திலசுராதிபரைவென்கண்டோன்
மண்ணாளரசர்மகுடசிகாமணியேபோல்வானமாமரபாற்
பண்ணார்பஞ்சகதிமான்றேர்ப்பகலோனன்னபகதத்த
னெண்ணார்துரக்கவரும்படையையஞ்சலென்றெதிர்சென்றான். (௩0)

அலைகால்வெள்ளக்கருங்கடல்போலதிராநின்றவாகவத்தின்
மலைகால்பெற்றுவருவதுபோல்வருதிண்பணைக்கைமாமிசையான்
சிலைகால்வளைத்துத்தீவாய்வெஞ்சரங்கொண்டடையார்சிரங்கொண்டான்
கொலைகால்செங்கட்கரியநிறக்கூற்றந்தனக்குங்கூற்றன்னன. (௩க)

தாராரோடைத்திலகநுதற்சயிலம்பதினாயிரஞ்சூழ
வாராநின்றமதகயத்தின்வன்போர்வலியுமனவலியுஞ்
சேரார்வணங்குமபகதத்தன்றிண்டோள்வலியுஞ்சிலைவலியும்
பாராநின்றகடோற்கசன்றன்படையின்றளர்வும்பார்த்தானே. (௩உ)

வேறு.

ஆயபோதிலாயிரநூறுமதமாவு
மேயதீயகாலனையொக்குமேலாளுஞ்
சாயகம்முஞ்சாபமும்யாவுந்தானேயா
மாயவேடங்கொண்டவனேடுமலைவுற்றான். (௩௩)

சங்கமுதத்தார்முரசார்ப்பமுழவார்ப்பப்
பொங்கும்பூழியாழிவறக்கும்படிபோதச்
சிங்கங்குன்றிற்செல்வதுபோலச்சிலையோடு
மெங்குந்தானும்வேழமுமாகியெதிர்சென்றான். (௩ச)

மைபோலார்த்துமும்முறைதானமழைசிந்திக்
கைபோய்முட்டிக்கையொடுதத்தங்கால்வீசி
மெய்போல்வெம்போர்செய்தனவீரன்விறல்வேழம்
பொய்போனின்றவநுபகதத்தன்போர்வேழம். (௩ரு)

நின்றார்நின்றபடிகடிதாகநெடிதோடிச்
சென்றார்கண்டசிந்துரம்யாவுந்தீயம்பிற்
கொன்றார்மற்றக்கொற்றவர்யாருங்கொலையுண்டார்
வென்றானன்றேவீமன்மகன்சேனையில்வீரர். (௩௬)

ஆனதானதாகவமெங்குமானைப்போர்
போனபோனமைந்தர்பிழைப்பீர்போமென்றென்
றானமெய்தாதவ்விறைபோனானுயிரோடும்
போனகண்டகாய்கதிரோனும்புறமிட்டான். (௩௭)

பூந்தண்மாலைப்பஞ்சவரானைப்போர்வென்று
சேர்ந்தசேர்ந்தமன்னவரோடுந்திறலோடுந்
தாந்தம்பாடிவீடுபுகுந்தார்தரையாளும்
வேந்தனோடும்பாசறைபுக்கான்வீடுமன். (௩௮)

பூண்பாய்மார்பிற்புத்திரர்தம்மைப்பொலிவோடுங்
காண்பாளைவர்க்கண்டிலள்பெற்றகாந்தாரி
சேண்பாலெய்தச்சென்றனரோவென்றிருகண்ணீர்
தூண்பாலாகிச்சோர்தரவுள்ளஞ்சோர்வுற்றாள். (௩௯)

கொன்னேகுந்திமைந்தரிருக்கக்கொலையுண்டார்
முன்னேமுன்னுமுன்னமுடிந்ததெனமுன்று
பின்னேயென்னமெய்குலையாமண்மிசைவீந்தா
ளென்னேயென்னேயென்றினையாநின்றென்செய்தாள். (௪௦)

வீறார்கற்பின்மின்னனையாளைவிறன்மைந்த
ரேறாமன்றிலேற்றவுமாமன்றென்றுதா
னாறுவன்பிற்கண்ணாறைமன்னனொருதேவி
யாறாவெள்ளத்துன்புறவன்றேபடியிட்டாள். (௪௧)

ஆளாய்மாய்ந்தவேந்தரிடந்தோறுமோசை
கேளாவெப்போதேகுவமென்றக்கிளர்கங்குல்
மீளாவோடிற்றத்திசைவானோன்மிளிர்சென்னிச்
சூளாமணிபோல்வந்ததுகாலைச்சுடரம்மா. (௪௨)

நான்காம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்-௨௮௬

# ஐந்தாம்போர்ச்சருக்கம்



கருமாமுகிற்கோலநெஞ்சத்திருத்துங்கருத்தெய்துமே
லருமாதவன்றானுமவன்முத்திதருகைக்குமவனேகுருத்
தருமாலைமணநாறுதாளானைவண்டேறுதண்ணந்துழாய்
மருமாலைபுனைகின்றதிருமாலையல்லாதுவல்லார்கள்யார் (௧)

வரசங்கமுந்தாரையுஞ்சின்னமும்பொன்மணிக்காளமு
முரசங்களுந்துந்துபியுமெங்குமெழவிம்மமுழவிம்மவே
கரைசிந்துதிரைசிந்துநுரைசிந்துவிரைசிந்துகணமென்னவே
யரசன்பெருஞ்சேனைவெள்ளம்புறப்பட்டதணியாகவே. (௨)

விருதாயிரங்கோடிமுரசாயிரங்கோடிமேன்மேலெழப்
பொருதானையுடன்வந்தணைந்தார்புறந்தந்தபூபாலருங்
கருதாவரக்கன்கொடுந்தானையிறைவன்கடுந்தானையென்
றிருதானையும்போலவெதிருற்றவிருமன்னரிருதானையும். (௩)

அரக்கர்க்குமுதல்வானளித்தோருமெமரின்றுமவர்போலுமைத்
துரக்கைக்குநின்றேனெனத்தெவ்வர்தம்மோடுசொல்விற்றெனக்
குரக்குக்கொடித்தேரின்மிசையேறிவிசையோடுகூத்தாடவே
புரக்கைக்குநின்றோனுடன்செங்கண்விசயன்புறப்பட்டனன். (௪)

அரனின்றனன்போலவவணின்றதேரொத்தவணிதேர்மிசைப்
பொரநின்றநதிமைந்தனொடுசென்றுமுனைநின்றுபொரவெண்ணியே
சரநின்றகுனிசாபவிசயன்றனைக்கொண்டுசங்கங்குறித்
துரநின்றவவனெஞ்சுடைப்பாகன்மான்றேருகைத்தூரவே. (௫)

ஊர்கின்றதேரோடியுயர்கங்கைமகனின்றவொருதேருடன்
சேர்கின்றவெல்லைக்கலிங்கேசர்முதலானதெம்மன்னர்போய்
நேர்கின்றவிசயன்றனுடன்மோதியவனைவுநெடுவாளிபட்
டூர்கின்றபுண்வாயில்வார்கின்றசெந்நீரினிடைமூழ்கினார். (௬)

செல்லுங்கலிங்கேசரலையுண்டநிலைகண்டுசிவனென்றுபார்
சொல்லும்பெருஞ்செம்மல்பல்லங்களவன்மேற்றொடுத்தேவினான்
கொல்லுங்கொடும்பாணமவையைந்துவிசயன்கொதித்தேவினான்
வில்லுந்தன்வின்னாணும்விறலம்புமுடனற்றுவிடைகொள்ளவே. (௭)

இவர்கொண்டசெற்றத்தொடிவ்வாறுபோர்செய்யவிகல்வீமனைப்
பவர்கொண்டநெடுவேலைபோல்வந்துமொய்த்தார்கள்பலமன்னருங்
கவர்கொண்டமுனைவாளியவர்மார்புதோளுங்கழன்றோடவே
தவர்கொண்டுசெற்றான்முன்னளகேசனமர்வென்றதனியாண்மையான். (௮)

துச்சாதனன்றம்பிமார்மைந்தர்மற்றுஞ்சகுனிசல்லிய
னெச்சாபமுடிமன்னரும்பின்னருந்துன்னியெதிர்சீறினா
ரச்சாபமொன்றாலுமன்றவ்வவர்க்கம்பநேகந்தொடுத்
துச்சாசனஞ்சொல்லிநின்றானவ்வடன்மன்னருடனோடவே. (௯)

செருத்துப்புடைத்தோடிவருதம்பியர்க்கண்டுசெற்றத்துடன்
கருத்துப்புகைந்துட்கலங்கிக்கடைக்கண்கள்கனல்காலவே
மருத்துத்தருங்காளைநின்றானையின்றுவிமலைவேனென
வுருத்துத்தடந்தேரின்மிசைவந்தடுத்தானுரககேதனன். (௧௰)

போராதநிலைநின் றுவன்போடுசாபம்பிடித்தெங்கணுஞ்
சோராதவயவாளியீரைந்துசேரத்தொடுத்தேவினு
ஞாராவமுடனிட்டகவசம்பிளந்தோடியாண்மைக்கெலாம்
வீராபிடேகஞ்செய்வயவீமனகன்மார்பின்மிகமூழ்கவே. (௧௧)

ஈமந்தொறுஞ்சென் றுநடமாடுகழலையனைதிராய்வருந்
காமன்றனுடன்மேல்விழித்திட்டநுதலிற்கனற்கண்ணெனத்
தாமப்புனைந்தாரமணநாறுமார்பத்தடந்தோயவே
வீமன்றொடுத்தானொரைதிரம்புபார்மன்னன்மிடல்சாயவே. (௧௨)

வேறு.

ஓரம்பினுளைந்தேதழலகுடையானலமாவே
வீரம்புனைவீமன்குனிவில்லோடெதிர்நிற்கப்
போரம்பாவுலகாள்பவர்புகழ்பூரிசவாவந்
நிரம்புதொடுத்தானொருதேர்மேலினனிவன்மேல். (௧௩)

இவனுண்மையைமதியாதெதிரெய்தானெனவெய்திற்
பவனுகதிபெறுதேரினனளினுபதிபிளவ
லவனுருயிர்கவர்வேனெனவடபோன்றுதொடுத்தான்
றவனுன்மறைதெரிபூரிசவாவுஞ்சரம்விட்டான். (௧௪)

ஏணற்றுயர்வரைமார்பினரிருவோர்களுமொருவோர்
காணற்றொழிலரிதாமுறைமடிதிற்கணைதொடவே
நாணற்றனவெஞ்சாபமுநடுவற்றனவெனினுங்
கோணற்றனபுகல்வாறெநருகுறையற்றதவர்க்கே. (௧௫)

ஒருகேடகவுரைதேறினருளமேயெனவமரிற்
பொரு*கேடகடவுங்கனபொற்றேர்மிசையிழியா
முருகேடவிழ்தார்மார்பினர்முனைவாளமிரண்டோ
டிருகேடகமிருகையினுமிருவோருமெடுத்தார். (௧௬)

படிவாயுபதியுந்தினபதியும்பொருதெனவே
தொடிவார்கரதலமொன்றியதுறுதேரிடைமறையா
வடிவாண்முனையசையாவிசைவருசாரிகள்பயிலா
விடிவாய்முகிலதிராவெதிரெதிர்சீறினரிப்பால். (௧௭)

தோலாதடலொடுசீறினதுரகத்தொடுதுரக
மேலாளொடுமேலாள்வரிவில்லாளொடுவில்லா
ளேலாமுடியரசோடரசிரதத்துடனிரதங்
காலாளொடுகாலாண்மதகரிமாவொடுகரிமா. (௧௮)

---

* கேடறநடவும் என்றும் பாடம்.

நீடுங்கடகரியின்கரநிரையற்றனநதியா
யோடுங்குருதியின்வாளைகளெனவோடினவொருசார்
கோடுஞ்சிலையம்பிற்றலையரியுண்டனகுறைநின்
றாடுந்தொறுமுடனாடுவவலகைக்குலமொருசார். (௧௯)

கோல்கொண்டவைசிலைகொண்டவைவாள்கொண்டவைகூர்வாய்
வேல்கொண்டவையவைதம்முடன்விழுகைக்குலமொருசார்
கால்கொண்டுகுசெந்நீர்விரிகளமேககனமதா
மால்கொண்டகரிக்கோடிளமதியாவனவொருசார். (௨௰)

முந்நீர்தருபவளங்கொடுமுன்னஞ்சமைவனபோற்
செந்நீரின்மிதந்தோடுவதோழிகளொருபா
னன்னீர்மழைபொழிசெம்புனனதிவாய்வருநுரைபோ
லந்நீரிடைபுகுமூளைகளலைபாய்வனவொருசார். (௨௧)

வையாரயில்கணைதோமரம்வாள்கப்பணமுதலாங்
கையாயுதமுழுகுந்துளைவழிசெம்புனல்கால
மெய்யாயிரவிதமாய்விழுவெம்போரிடையிருபத்
தையாயிரமுடிமன்னவரகல்வானமடைந்தார். (௨௨)

இவ்வாறுமுனைந்தாருயிரிருசேனையுமடிய
மைவானுலகிடமற்றதுவயவீரர்நெருக்கா
லவ்வானவர்தமதாலயம்வலம்வந்தவருக்கன்
செவ்வானுறுகுடபால்வரையிடமென்றதுசேர்ந்தான். (௨௩)

எப்போதுமருப்போரினிவிதயங்களிகூர்வார்
கைப்போதுறுபடைசெம்புனல்வழியேயுயிர்காய்வா
ரொப்போதலரியாரிருதிறமன்னருமொருவா
வப்போதணிகத்தோடுமகன்பாசறைபுக்கார். (௨௪)

இரவென்றிருள்கெழுநஞ்சினிளந்திங்களெயிற்றோ
ரவுண்டதுதான்மீளவுமிழ்ந்தென்னவருக்க
னுரவுங்குடதிசைநீணிறவுந்திக்குளொளித்தோன்
விரவுங்குணதிசைவேலையின்மிசைவந்துகிளர்ந்தான். (௨௫)

ஐந்தாம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௨௮௰.

---

## ஆறாம்போர்ச்சருக்கம்.



கோயிலாளுடையபைங்கொண்டலார்கண்டுயில்
பாயலாய்வாழநீபாக்கியஞ்செய்ததென்
றீயலாதுவமைவேறில்லெனத்தீயநின்
வாயெலாநஞ்சுகால்வாளெயிற்றரகமே. (௧)

பயிலும்வெம்பாசறைப்பாண்டவரைவருந்
துயிலுணர்ந்தணிபசுந்துளபமாலடிபணிந்
தயிலுநஞ்சனையபோரடுகளங்குறுகினார்
சயிலவெங்கடகரித்தானையுந்தாமுமே. (௨)

பகுத்தபல்லணிகளின்பான்மையக்குரோணியாய்
மிகுத்தவெஞ்சேனையாம்வெள்ளநீர்வேலையைத்
தொகுத்துவண்டிமிர்தொடைத்துருபதன்றிருமகன்
வகுத்தனன்புறமிடாமகரமாவியூகமே. (௩)

போகமுந்தருமமேயானமெய்ப்புனிதனு
நாகவெங்கொடியுடைநாயகக்குரிசிலும்
வேகவெம்படையுடைவேந்தருஞ்சேனையு
மாகவங்குறுகினாராவம்பெருகவே. (௪)

பொருஞ்சமங்கருதியாள்புரவிதேர்போதகந்
தெரிந்துகொண்டிருதிசையினுஞ்செல்லவே
பெருஞ்சனந்தன்னையப்பீடுடைவீடுமன்
கரிஞ்சமென்றுள்ளபேர்வியூகமுங்கட்டினான். (௫)

இந்திரன்முதலியவிமையவர்தங்களா
லந்தரமிடனறவரவுளைந்தலமர
வந்துவந்திருபெரும்படைஞருமாறுபட்
டுந்தினார்முந்தினாரொட்டினார்முட்டினார். (௬)

பரவிநால்விதவயப்படைஞருஞ்சூழவா
னிரவினான்வெம்பகையிருளினுக்கென்றுதன்
புரவிநான்மறையெனப்பூண்டதேர்தூண்டினான்
விரவினான்வீமன்மேல்விற்கையாசிரியனே. (௭)

சிலைவரம்*பெறுதிறற்றேசிகன்சீறவு
நிலைபெறும்புகழினானெஞ்சினஞ்சவிசெயா
மலையினும்பெரியதேர்வலவனும்புரவியுந்
தலையறும்படிசரந்தனுவளைத்துதையினான். (௮)

சூழிவெங்கசரதுரகதநிருபரை
வீழவெங்கணைகளான்மெய்துளைத்தளவிலே
தாழநின்றிலனெழிற்சல்லியன்றன்னொடே
தோழவின்றமர்செய்கென்றொருதிசைத்தோன்றினான். (௯)

வல்லைவெஞ்சமர்செயவல்லைநீவருகென
வில்லையுந்துணிசெய்துவெல்லவந்தவனையுந்
தொல்லைவெங்கரியெனத்தேரொடுந்தோண்மடுத்
தெல்லையப்புவியின்மேலெற்றினான்வீமனே. (௧௦)

* பெறுதவிற்றேசிகன் என்றும் பாடம்.

சல்லியன்றன்பெருஞ்சலிவுகண்டங்கையி
னெல்லியங்கனியினிநேரலாருயிரெனப்
பல்லியங்களுமெழப்பாந்தளம்பொற்கொடி
யல்லியந்தெரியலானங்குவந்தணுகினான். (கக)

வெம்புயவீமன்மேல்வில்வளைத்தாயிர
மம்புகண்மாரிபோலார்த்தெழவீசினார்
தும்பையந்தார்முடிச்சூழ்படைமன்னருந்
தம்பியர்யாவருமாமனுந்தானுமே. (கஉ)

தோன்றரித்துவசனுஞ்சோகமில்பாகனூர்
வான்றடந்தேரொடும்வருகெனச்சென்றெதி
ரூன்றினான்மைந்தருமிளைஞருமுயிரையே
போன்றமைத்துனரும்வாணிருபரும்புடைவர. (கங)

நின்றிருசேனையுநேர்படவேலினும்
வன்றிறல்வில்லினும்வாளினுமலைவுறக்
குன்றநேர்தோளினாரிருவருங்கொக்கரித்
தொன்றினார்வில்வளைத்தொருவருக்கொருவரே. (கச)

அவனுமம்பிவனுரத்தழுத்தறவெழுதினா
னிவனுமம்ப்வன்மணித்தோளின்மேலெழுதினான்
புவனமெங்கணுமிகப்பொறியெழப்போர்செய்தார்
பவனனுங்கனலியுநிகரெனும்பரிசினார். (கரு)

வரத்தின்முன்பெறுகதைவன்மையும்வின்மையுஞ்
சிரத்தினின்றெண்ணவோர்பேர்பெறுஞ்சேவகன்
சரத்தினுங்கடுகுதேர்ச்சர்ப்பகேதனனையன்
றுரத்தின்வெங்கணைகள்பட்டுருவவில்லுதைபினான். (கசு)

தான்விடுங்கணைகளிற்றம்பியர்தம்மையுந்
தேன்விடுந்தெரியலானெய்துபுண்செய்துபின்
னூன்விடும்படிதுளைத்துருவுபல்பகழியால்
வான்விடும்பேரையும்வானிலுய்த்தனனரோ. (கஎ)

வாவருங்கவனமாக்கடுகுதேர்வலவர்போ
யேவருஞ்சிலைகள்பேயிருபுயவலிமைபோ
யாவரும்பண்டுதாமிடுபுறமிட்டனர்
தேவருங்கண்டுவந்தலர்மழைசிந்தினார். (கஅ)

வேறு.

ஏயவரிசிலைவீமனொடுபொருபோரிலெவ்வரும்வெந்திட
மேயவிழியிலையாயபதிதருவீரர்பலரும்விகன்னனு
மாயமுதிர்சினமூளவிரைவுடன்மீளவரவபிமன்னுவுந்
தூயவரிசிலைவாளிகொடுதனதேர்கொடவொதிர்துன்னினான். (கசு)

மானவபிமனுஞானவிகன்னைவாளிபலபலவேவவே
லானவிரதமுமாவும்வலவனுமாழிகளுமுடனற்றபின்
றானவிரதமுறுமல்லிசையொடுதத்தியருகுறுசித்திர
சேனனெனுமிளையோனதணிபெறுதேரின்மிசைகடிதேறினான். (௨0)

மற்றையிளைஞருமைத்துனனுமதமத்தகயபகதத்தனுஞ்
செற்றவிகனனுமுற்றுமிவனொடுசெற்றியமர்பொருகிற்றினார்
வெற்றியபிமனும்விற்கையுடனவர்விட்டகணைகள்விலக்கிமார்
பெற்றுகணையனைவர்க்குமவரவரெய்த்துவிழவிழமோத்தினான். (௨௧)

நெடியவரிசிலைநிமிரமுறைமுறைநெடியவிசையுடன்வீசினா
னிடியுமுகிலெனவகிலவெளிமுகடிடியவதிர்பெருநகையுடன்
கொடியவிகனனைமடியவவனுடல்கொடியகுடருகுருதிநீர்
வடியவிருபுயமொடியவுதையினன்வடியகணையொருநொடியிலே. (௨௨)

மன்னர்மணிமுடிமன்னுகன்னகழன்மன்னனிளவல்விகன்னனை
முன்னருறுகணைபின்னர்விழவிழமுன்னரமர்பொரமுன்னினான்
பொன்னசலநிகரன்னபுயவபிமன்னுமொருவனுமின்னுநா
மென்னவமர்பொரவின்னாணுகுவதென்னவெருவினர்துன்னலார் (௨௩)

அன்றையமரினிலொன்றுபடவவரங்கமயர்வுறுபங்கமே
தென்றுமொழிவதுதந்தமனையுறவெந்தநிருபருமுந்தினார்
வென்றுபொருமுனைநின்றவபிமனைவிஞ்சுமுவகைகொணெஞ்சுடன்
சென்றுதழுவினரிந்துவரவெழுசிந்துவெனமகிழ்தந்தைதமரார். (௨௪)

கோடுமுதலொடுவாளிகளினிறவீழ்வபலகடகுஞ்சரங்
காடுபடுதுளவோன்முன்வரவிடுகஞ்சன்மழகளிறொக்குமா
லோடுகுருதியினூடுவடிவொருபாதிபுதைதருமோடைமா
நீடுமுதலையின்வாயின்வலிபடுநீலகிரியைநிகர்க்குமால். (௨௫)

மாலுமதகடசாலுநுதலுமருப்புமொருகையும்வதனமுந்
தோலுமொழியவுளானதசைபலபேய்களுகர்தருதும்பிமா
நாலுமறைகளுமோலமெனவகல்வானமெனமுழுஞானமே
போலுமெனவொளிர்மேனியுடையவர்போர்வைபுரியதள்போலுமே. (௨௬)

சேனையிபமுகமற்றுவிழுவலசென்றுதசைவழிகவ்விவிண்
போனவயவர்கள்படைகொடெதிரெதிர்பூசலபுரியிருபூதமுஞ்
சோனைமழைமுகில்வாகன்முதலசுரேசர்தொழுதுதிக்கவே
யானைமுகவசுரேசனுடனமராடுமுதல்வனைபொக்குமே. (௨௭)

இமையமணுகினன்விசயன்மதலையையின்றையமரினியுங்களுக்
கமையுமெனமுதலனிகமடையவுமணியுமவனிபர்நால்வருந்
தமையனொடுதமபதியினணுகினர்தங்கவிரைவொடுகங்குல்போய்ச்
சிமையமணுகினன்மீளவனியிருள்சிதையவுதயதிவாகரன். (௨௮)

ஆறாம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—௨௯௧௮.

---

# ஏழாம்போர்ச்சருக்கம்.



உரனும்வேதமுந்தொடாநந்தகோனுடனசோதைகண்டுருகவாழ்வுகூர்
தரணிமீதுசெங்கையுமாமுழந்தாளும்வைத்துவைத்தாடுமாயனார்
விரவிநின்றமாமருதினூடுதாமெத்தெனத்தவழ்ந்தருளிமீளவும்
புரியுநீள்கடைக்கண்ணும்வண்ணமும்போற்றுவார்கண்மெய்ப்புளகமேறுமே. (க)

இருவர்சேனையுஞ்சேனைமன்னருமிகலியேபலதிசைகளெங்கணு
முரசமாதிவெம்பணைமுழங்கவேமுன்னைவெங்களம்பின்னுமெய்தினார்
மரகதாசலம்போலுமேனிமாமாயனச்சுமாசுணவியூகமுந்
தரணிகாவலன்றன்பிதாமகன்சகடவியூகமுந்தானவகுக்கவே. (உ)

மன்றனிம்பநாண்மாலைமௌலியான்மாறன்மீனவன்வழுதிபஞ்சவ
னன்றுபஞ்சவர்க்காகவேயுடன்றந்தணற்றுடைந்தஞ்சியோடினான்
றுன்றுமாயமால்யானைகொண்டுபோர்யானைமன்னரைத்தொல்லமர்க்கணே
வென்றுகண்டவர்புறமவர்க்கிடான்மீளவந்தனன்வீமன்மைந்தனே. (௩)

முகினிறங்கொண்மாமேனிமாயனார்முன்பிறக்கவேபின்பிறந்தவன்
புதுநிலந்தனிற்சற்றுநின்றிலன்பொருசுதாயுதன்போர்பொறுமையிற்
சகுனியும்பெருஞ்சேனைமுன்வரத்தக்கசல்லியனனுமோடவே
மிகுநிறங்கொள்பைந்தாமவாகைபோர்வென்றுசூடினான்வீமசேனனே (௪)

உயர்ந்தமேருவோடொத்திலங்குதேருலகளந்ததாள்வலவனூரவே
செயந்தன்மாபெருந்துணைவன்வன்பெருஞ்சேனைதன்னொடுஞ்சென்றுபற்றினான்
வியந்ததேரின்மேன்முப்புரங்களும்வென்றமீளிபோனின்றவீடும
னியைந்துபோரினுக்கெதிரவில்வலோரிருவர்விற்களுமெதிர்வளைந்தவே. (௫)

ஒருவரெய்தவம்பொருவர்மேலுறாதோரொரம்பினுக்கோரொரம்புதொட்
டிருவருமம்புகுந்தெய்தவல்லபமின்னதாகுமென்றன்னலாகுமோ
வரிவில்வெங்கடகரியின்வந்ததாரகனுமாமயிற்குகனுமன்றியே
மருவுவெங்குரற்கொண்டல்வாகனும்வலனும்ராமராவணருமென்னவே. (௬)

கரியணிக்குளெக்கரிகள்புண்படாகடவுதேரிலெத்தேர்கலக்குறா
பரிநிரைக்குளெப்பரிதுணிப்புறாபாகர்தம்மிலெப்பாகர்வீழ்கலார்
நரனும்வெற்றிகூர்வசுமுறறபோர்நவிலுகிற்கினூநடுங்குமா
லிருதளத்தினுமிருவரம்பினுமேவுணாதபேரெந்தமன்னரே. (௭)

வேறுபோரினிப்பொருதல்வேண்டுமோவிசயன்வீடுமனென்னும்வீரர்தஞ்
சீறுபோரிடைத்திசையடங்கலுஞ்சிவந்தகோலமெய்க்கவந்தமாடுமாற்
கூறுபோர்பொரக்கருதிவெங்களங்கொண்டுதங்களிற்கொல்லுற்றநா
ளாறுபோரினும்பட்டபேரினுமறுமடங்குபோன்றுபட்டதே. (அ)

பாரவாளினுங்கூரவேலினும்பகழிவாயினும்பட்டபட்டபேர்
வீரவானின்மேல்வழிநடத்தலான்மெய்தளர்ந்துவேதனைமிகுத்தபின்
சோரநீருநும்பாடியெய்துவீர்செருவினைந்ததிச்சேனையென்றுபோ
யாரவாரநீடாழியெய்தினைழியொன்றுடைத்தேருக்கனே. (௯)

வெங்களந்தனிற்பகன்மலைந்தபோர்மெய்விடாய்கெடக்கைவிடாதுபோய்த்
திங்களின்குலத்திருவர்தம்பெருஞ்சேனைமன்னனும்பாடியெய்தினா
ரிங்களந்தவாறப்புறத்துவானெல்லைதானளந்திந்தமன்னவர்
தங்கள்வெஞ்சமங்காணமாமணிச்சயிலமெய்தினான்றபனன்மீளவே. (௰)

ஏழாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

ஆகச்செய்யுள்—௨௧௨௮.

# எட்டாம்போர்ச்சருக்கம்.



பூத்தநாபியந்தாமரைப்பூவில்வந்துபல்பூதமுஞ்
சேர்த்தநான்முகப்புனிதனுமுனிவர்யாவருந்தேவரு
மேத்தநாளுவேதங்களுந்தேடநின்றதாளெம்பிரான்
பார்த்தன்மாமணித்தேர்விடும்பாகனானதெப்பான்மையே. (௧)

நெருநலிப்பெருஞ்சேனையோநிலைதளர்ந்ததச்சேனையைப்
பொருநிலத்தினிற்புறமிடப்பொருதுமென்றுறக்கருதியே
வருநிலத்தெழுந்தூளியால்வானயாறுநீர்வற்றவுந்
தருநிலத்துளோர்காணவுந்தருமன்வந்தனன்சமரிலே. (௨)

வென்றுபோனபோர்மேன்மையால்விலோதனப்பணிக்காவல
னின்றும்வேறுமென்றக்களத்தெண்ணில்சேனையோடெய்தினான்
றன்றுகங்கையின்றிருமகன்சூசியூகமுந்துளபமால்
வென்றிகூர்பெருஞ்சகடமாம்வெய்யயூகமுஞ்செய்யவே. (௩)

தொலைவிலங்கழற்றுணைவரேதுணைவராகவெஞ்சூறைபோற்
கொலைவிலங்கையன்பிறைமுகக்கூரவாளியன்றேரினன்
மலைவிலங்குதோள்வீமனைவளைத்துவந்தெதிர்திளைத்தனன்
றலைவிலங்கனுக்கரசெனத்தகும்வலம்புரித்தாரினான். (௪)

தும்பிமேன்மதத்திடைவிழுந்தும்பிபோல்விறற்றோன்றனுந்
தம்பிமாருமுற்றெய்தவெஞ்சாயகங்கண்மெய்தைக்கவே
வெம்பிவீமனுந்தன்சரம்விண்டலத்திலிவ்வேந்தனுக்
கெம்பிமாரிலின்றெண்மர்போயிடம்பிடிக்கவென்றேவினான். (௫)

முந்தவன்றுசென்றுசுகன்மைந்தனுசுகமூழ்கவே
சுந்தரன்விசாலக்கணன்வீரவாசிபௌண்டனு
மந்தமாமகோதரனுடன்மாகவிந்துவும்பயனுஞ்
சிந்தினார்களந்தன்னிலாதித்தகேதுவுஞ்சோரவே. (௬)

அற்றகந்தரமுயிரினோடந்தரம்புகத்துள்ளவு
மிற்றபேருடம்பவனிமேலெடுத்தவில்லுடன்வீழவு
முற்றதம்பியர்மாய்தல்கண்டுள்ளுடைந்துபோயுரனுடைக்
கொற்றவன்பெருங்குருகுலக்குரிசிலின்றுழிக்குறுகினான். (௭)

தன்பிதாமகன்செய்யதாடனதுமௌலிமேல்வைத்துநின்
றன்பிதாவின்மேலன்பினுலகமும்பியர்க்குதவுவா
யென்பிதாவுநீயாயுநீயென்றிருந்தனனெம்பிமார்
மூன்பிதாமநத்தென்னுமம்முதல்வனுன்முடிவெய்தினர். (அ)

நீவினைத்தலைச்சேனையின்றலைவனாகிமுன்னிற்கவே
வீவெனக்குவேறில்லையென்றெண்ணினேனெனவேந்தர்வேந்
தோவிபத்தின்மெய்யுணர்வழிந்துள்ளழிந்துகொண்டுரைசெய்தான்
வாவிநித்திலமென்னவேமலர்ந்தகண்கணீர்மல்கவே. (௯)

வேறு.

இரங்கனீசிறிதுமையவெரிபடையெடுப்பதியாரு
முரங்கள்போயமரிற்சாகாதுய்ந்தனரோடவன்றே
சரங்களாலயிலால்வாளாற்றம்பகைசெகுத்துத்தாமுஞ்
சிரங்கள்வேறுடல்கள்வேறாக்கிடப்பதேசெல்வமம்மா. (௰)

இருந்தனம்படைத்தமாக்களின்பமுமறனுமஞ்சார்
விருந்துதெதிர்சிறிதுமஞ்சார்மேம்படவாழுமில்லோர்
பொருந்தியவிறப்பையஞ்சார்போதமெய்யுணர்ந்தமாந்த
ரருந்தவமுனிவரஞ்சாரரசருமடுபோரஞ்சார். (௧௧)

இன்னமொன்றுரைப்பக்கேண்மோவிருசெவிக்கேறுதேனு
முன்னரசாண்டவேந்தர்முறைமையிற்சிதைந்ததுண்டோ
மன்னவைதன்னினின்றமாசிலாவடமீன்போல்வா
டன்னிருகண்ணீரின்னமிவைகொலோதருவதம்மா. (௧௨)

கால்வருகவனமான்றேர்க்கன்னனுங்கன்னபாக
மால்வருகலுழிவேகமாவலான்சகுனிதானு
நூல்வருபழுதில்கேள்விநம்பியுநீயுமிந்த
நால்வருங்குறித்தவெண்ணநாளையேதெரியுமையா. (௧௩)

விதுரனும்வெஞ்சொலாற்றன்வில்லினையொடித்துநின்று
னதிரதனுலன்றியங்கர்கோனமரில்வாரான்
முதிர்படைவிசயன்வீமன்மூண்டமர்புரியுங்காலை
யெதிரினிநானுநீயுமல்லதிங்கிலக்குவேறார். (௧௪)

புரிந்தறம்வளர்க்குநீதிப்பொய்யிலாமெய்யனங்கே
செருந்தவிழ்துளபமாலைத்திருநெடுமாலுமங்கே
யருந்திறலமரிற்பொன்றுதங்கிருந்தவரையிங்கு
மிருந்தவர்காண்பதல்லால்யார்கொலோவிறக்கலாதார். (௧௫)

விடுகநீகவலவேண்டாமேலுனக்குறுதிசொன்னேன்
முடுகவாளமரிற்சென்றுமுன்முனேந்தாரையின்றே
யடுகமற்றென்றிலொன்றிலாங்கவர்தங்கள்கையாற்
படுகவாவென்றுதேர்மேற்சென்றனன்பரிதிபோல்வான். (௧௬)

காயிருங்களிற்றின்மேலான்கடோற்கசக்காளை தானே
ராயிரம்வடிவாய்முந்தியரசர்பேரணியையெல்லாந்
தோயிருட்பிழம்போடுற்றசேனையம்புயலிற்றோன்றி
மாயிருவிசும்பிற்றாரகணமெனமாய்த்துவந்தான். (கஎ)

ஒருபுடையிவன்போர்செய்யவொருபுடையுரககன்னி
யருளுடைமைந்தனெண்ணிலாயிரமுருவமாகி
யிருபுடையினும்போர்வேந்தரெலிகள்போலேங்கியம்பாற்
பொருபடையுருண்டுபோசப்பொருவில்வெம்பூசல்செய்தான். (கஅ)

இப்பகன்முடியுமுன்னேயாரையுமுடிப்பனென்னப்
பைப்பகன்மகுடமைந்தன்பலபெரும்படையுமாகி
யப்பகலடுபோர்செய்யவன்றமரழிந்துமாய்ந்த
மெய்ப்பகனிளவலந்தவீமனமேல்வெகுண்டுவந்தான். (க௯)

என்னுடன்பிறந்தோன்றன்னையுதிட்டிரனிளவல்கொன்றான்
றன்னுடல்பிளப்பேனென்றுதானைவல்லரக்கரோடு
மன்னுடன்சொல்லிநிற்பானவந்தெதிர்மலைந்தகாலை
மின்னுடைமுகில்போற்சென்றானவீமனுக்கிளையோன்மைந்தன். (உ0)

வலம்புரித்தாமவேந்துக்காகவேமலைவான்வந்த
வலம்புதனோடுஞ்சென்றோடங்கஞுமரக்கர்மாயக்
குலம்பழுதற்றமைந்தன்கொண்டபல்லுருவத்தோடும்
புலம்புறப்பொருதானந்தவரக்கனும்புறந்தந்தானே. (உக)

அஞ்சினன்போனபின்னராவினையடர்க்குமாய
வெஞ்சினக்கலுழனாகியுருமெனமீளவந்தா
னஞ்சினையுமிழும்வெவ்வாய்நாகங்களனைத்துமொன்றா
யெஞ்சினபோலநின்றானிருதனுக்கிறுதிசெய்தான். (உஉ)

நின்றவன்றன்னையந்தநிருதனும்வடிவாளோச்சிக்
கொன்றனன்கொன்றானுக்குருகுலத்தரசன்சேனை
வென்றனனரக்கனென்றுவிரிகடல்போலவார்த்த
தன்றவனடர்த்தமாயமார்கொலோவடர்க்கவல்லார். (உ௩)

வேறு.

பூஞ்சாயகன்கைப்பொருசாபம்பொசிந்துகண்ணாற்
றீஞ்சாறுபாயுஞ்செழுநீர்வயற்செந்நெல்வேலிப்
பாஞ்சாலநாடர்பலரும்படப்பணம்விட்டார்
தாஞ்சாபம்வாங்கிமறைமைந்தனுந்தந்தைதானும். (உ௪)

பட்டான்றுணைவனெனக்கேட்டுப்பரிவுபொங்க
விட்டான்மணித்தேர்வளைத்தான்றனிவெய்யசாபந்
தொட்டான்பகழியபிமன்னுத்தொடுத்தலோடுங்
கெட்டாரரசன்பெருஞ்சேனையிற்கேடில்வேந்தர். (உ௫)

மைந்தன்களத்தின்மடிந்தானெனவாயுமைந்தன்
றந்தம்பரியுண்டெதிர்சீறியதந்தியென்ன
வெந்தங்கமுற்றுமனந்தீயெழமேனடந்தான்
சிந்தந்திகழவெழுதுந்திறற்சிங்கமன்னான். (௨௬)

சினத்தோடுநம்மேல்வருகின்றனன்செம்மலென்னா
வினத்தோடுசெல்லும்பிறைவாளெயிற்றேனமென்ன
மனத்தோடியைந்ததிருத்தம்பியரோடுமன்னர்
சனத்தோடும்வந்தானெதிர்சீறித்தரணிவேந்தன். (௨௭)

திளைத்தாரரசர்திகிரிக்கிரியென்னவோடி
வளைத்தார்கனகவரைபோல்வருமன்னன்றன்னை
யுளைத்தாரனைவோர்களுமோரொருபாணமேவித்
துளைத்தார்கிளைத்தார்விளைத்தாரமர்தூண்டுதேரார். (௨௮)

எடுத்தானொருதன்சிலைவீமனுமெண்ணில்பாணந்
தொடுத்தானவர்மேலிமைப்போதையிற்சூழ்ந்துளோரைக்
கெடுத்தானரசற்கிளையோரெதிர்கிட்டிமீண்டும்
படுத்தானெழுவரிவன்வாளியிற்பட்டுவீழ்ந்தார். (௨௯)

அறமிக்கசொற்குண்டலபோசனாதியக்கன்
றிறமிக்கதீர்க்கநயனன்சிலைத்திம்மவாகு
மறமிக்கவேற்குண்டலன்குண்டலதாரன்மன்னாற்
றுறைமிக்ககேள்விக்கருடத்துசனானதோன்றல். (௩0)

இப்பேரெழுவர்சிரமேழுமெழுந்துதுள்ளி
மைப்பேரெழிலியகல்வானிடைவந்தவெல்லை
யொப்பேதெனவாசவன்கேட்டலுமோங்கல்விந்தை
கைப்பேரெழிற்பைங்கழங்கென்றனர்கண்டவானோர். (௩௧)

அறந்தந்தவாழ்க்கைமுடிக்கின்றனையாகிநீயு
மிறந்தந்தரத்திலினியேகுகவென்றுசீறி
மறந்தந்தசீயக்கொடியோன்கொடிமாசுணத்தோன்
புறந்தந்தபோரிற்புறந்தந்தனன்போகலுற்றான். (௩௨)

கந்தேதயனையபுயவீமன்கணைகள்பட்டுத்
தந்தோழிந்துபடுமன்னவர்தானையென்ன
மந்தேகரெல்லாமலைவுற்றுமடிந்துவீழச்
செந்தேரருக்கன்குடபாற்றிசைசென்றுசேர்ந்தான். (௩௩)

தளவொத்தமூரற்றலமானைத்தருமன்மைந்தன்
வளமிக்கவெம்போர்க்களம்வென்றுவதுவைசெய்வா
னுளமுற்றளித்தகலன்போலுமுகுகலன்கள்
பிளவுற்றவேழமுதனித்திலப்பெட்டிபோலும். (௩௪)

பூட்டற்றவில்லின்மிசைசோரிப்புனலின்வீரர்
வாட்டற்றவீரல்பலசுற்றிவயங்குதோற்றம்
வேட்டற்பொருட்டாற்புவிமானுக்குவேந்துசூட்டுஞ்
சூட்டற்றுமுற்றுங்குடர்வாசத்தொடையலற்றே. (௯௫)

குலமாநிருபருடல்சோருங்குருதிவெள்ளப்
பலமாநதிபோய்த்திரைவேலையிற்பாய்ந்ததோற்ற
நிலமான்விளிம்புசிவப்பேறியநீலவாடை
நலமாகமன்றற்குடுத்தென்னநவிலலாமே. (௯௬)

தன்பாடிபுக்கான்புறந்தந்ததரணிவேந்தன்
மின்பாடிலங்குங்கணைவெஞ்சிலைவீமனோடு
மன்பாடிபுக்கான்பெரும்போரிடைமாய்ந்தமன்னர்
தென்பாடிபுக்கார்குடிபுக்கதுசேர்ந்தகங்குல். (௯௭)

அன்றேகளத்திற்பலியூட்டியவாண்மைவீர
னின்றேயிறந்தானிதற்குன்னியிரங்கலீரென்
றொன்றேமொழியுமுரவோன்முதலைவருக்குங்
குன்றேகவித்தகுடைக்கோவலன்கூறினனே. (௯௮)

உன்னிக்களத்திலுயிர்வீடுமுரகமைந்தன்
சென்னிக்கதிர்மாமணிசிந்தியசோதியெல்லாந்
தன்னிற்கவர்ந்தானெனப்பண்டையிற்றுமமேனி
மின்னிப்பரிதிகுணபாற்றிசைமேவினனே. (௯௯)

எட்டாம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௨௯௯.

# ஒன்பதாம்போர்ச்சருக்கம்.



போராறுமூழ்கிமறைநூல்பிதற்றிடறும்பிளந்துபிறவித்
தூராறுமாறுநினையாமலுங்கடொழிலேபுரிந்தசமய
ரோராறுபேதசமயங்களுக்குமுருவாகிநின்றவொருவ
னீராறுநாமமுறைசெய்துமண்கொடிடுவார்கள்காணுமிமையோர். (௧)

முன்போருடைந்துதனதில்லடைந்தமுடிமன்னன்முன்னையிரவிற்
றன்போலுமாமனவனோடுகேடுதருதம்பியோடுகருதிப்
பின்போதில்வண்மைபொழிவானையோடியழையென்றுபேசவவனு
மின்போலிறந்தவிளையோர்கள்பாடுவினவாவிருந்தபொழுதே. (௨)

மாவில்லெடுத்தென்னிளையோர்கள்கந்தவனமைந்தன்முன்புசிவன்முன்
பூவில்லெடுத்தமதனனைவாறுபுகல்கிற்பதல்லவனிகக்
கோவில்லெடுத்தென்மறைநாலும்வல்லகுருவில்லெடுத்தெனினிமே
னீவில்லெடுக்கிலனைவேமுமுய்துநினையாரும்வாகைபுனையார்.

என்னுஞ்சொலண்ணல்*செவியேறநெஞ்சமெரியேறவெய்தின்மொழிவான்
முன்னுந்தைதந்தையுரைசெய்தமேன்மையறியாய்கொலம்பொன்முடியாய்
தன்னுந்துதேரும்வரிவில்லுமுண்டுசரமுண்டுநாளையவனே
யுன்னுங்களத்திலவர்வானமாளவுலகாளுவிப்பனுனையே. (௪)

விற்கவ்வுவாளியடலைவர்மீதுவிடவஞ்சிவீரரெதிரே
புற்கவ்வுமாகில்விரைவோடுகங்குல்புலராமுன்வந்துபொருவேன்
சொற்கவ்வையாகநினையற்கொன்றுசுரர்நாடளிப்பனினியுன்
சிற்கவ்வைதீரவவருக்குநின்றதிருமாலினுக்குமெனவே. (௫)

துச்சாதனுவிம்மொழிசென்றுதங்கைசுதனுக்குரைக்கவெனவே
நச்சாடராவையனையானுமங்கொர்நொடியுற்றபோழ்தினடவா
வெச்சாபமன்னுமணியூகமானவிரதந்தனக்குநடுவோ
ரச்சாணியானவவனுக்கிவன்சொலடைவேபுகன்றனனரோ. (௬)

பேரன்புகன்றமொழிகேள்விசெய்துபெரியோன்முகிழ்த்துநகையா
வீரம்புகன்றெனினிநானுமக்குவிசயற்செறுத்தன்முடியா
தீரந்துறந்தவொருநூறுபேரைமருடந்துணிப்பலெனவே
நேரன்றவைக்கனுரைசெய்தவாய்மைநிறைவேறுநாளையுடனே. (௭)

ஒருநாளுநீவிர்பொறுமின்களும்மையுலகாளுவிக்கவருவோர்
வருநாடொடங்கியமர்செய்துதெவ்வைமடிவிப்பர்சொன்னவகையே
குருநாடுமற்றைவளநாடுமெய்திநுமரோடியைந்துகுழுமிப்
பெருநாளிருந்தனிவாழ்திரென்றுவிடைநல்கிவிட்டபிறகே. (௮)

கண்ணுந்துயின்றுதுயிலும்முணர்ந்துசிறுகாலையுள்ளகடனு
மெண்ணுங்கருத்தின்வழியேயியற்றியிகன்மன்னர்சூழவரவே
மண்ணுங்குலுங்கவரையுங்குலுங்கவெழுதூளிமாதிரமுமால்
விண்ணும்புதைக்கவடலாகவத்தின்மிசைசென்றுபுக்குவிரகால். (௯)

நாகங்குறித்தகொடிமன்னர்மன்னைநடுவேநிறுத்தியடைவே
பாகங்கடோறுமொருகோடிமன்னர்பகதத்தனோடுநிறுவிப்
பூகம்பமாகவினமோடலம்புதனுமுன்புபோகவொருபேர்
யூகஞ்சருப்பதோபத்திரமாகவணிசெய்துமானவுரவோன். (௧௰)

நின்றானமர்க்கணவரங்குநிற்கவிவரிங்குநென்னனிருதண்
கொன்றானெனத்தன்மதலைக்கொரெண்மரெழுவோரைநீடுகொலைசெய்
தொன்றாகமன்னர்பலராவிகொண்டவுரவோனுமும்பர்பகைபோய்
வென்றானுமற்றையிளையோருமொன்றின்விரகற்றகோவுமுதலோர். (௧௧)

மற்றுள்ளமன்னர்புடைபோதமுன்னர்மழைமேனிமாயன்வரவே
யுற்றுள்ளவீரரொடுசேனைநாதனணிநிற்கவொண்கொயுளைமா
மூற்றுள்ளவெங்குமெழுபூழிதுள்ளமுரசங்கடுள்ளமிகவுஞ்
செற்றுள்ளமேவுகனறுள்ளவந்துசெருவெங்களத்தினிடையே. (௧௨)

---

* செவியேறவெய்தினிடிபோலதிர்ந்துமொழிவான் என்றும் பாடம்.

செம்பற்பராகமுடிமாமதாணிசெறிதொங்கல்வாகுவலயம்
பைம்பற்பராகமலர்வல்லியோடுதிருமேனிசோதிபயில்வான்
வெம்பற்பராகவரையூகமாகமுறையாலணிந்துவெயில்கா
லம்பற்பராகபதியென்னநிற்கவமராடலுற்றபொழுதே. (௧௩)

வேறு.

இந்திரனுமேனையிமையோர்களுநடுங்க
வந்தரமுமெண்டிசையுநின்றதிரவதிரா
வெந்திறலலங்கல்புனைவீமனுடன்மலைவான்
வந்தனனலம்புதன்வலம்புனைபுயத்தான். (௧௪)

செருவில்வெருவாநிருதசேகரன்வயப்போர்
மருவுசுடர்வாளினுடன்வந்தநிலைகாணு
விரவிவருதேரனையதேரின்மிசையிழியா
வுருவுருமெனுவிரைவினோடியெதிர்வந்தான். (௧௫)

யாளியொரிரண்டிகல்புரிந்ததெனவிகலா
மீளிமையினுலும்வலியாலும்விறன்மிக்கோன்
வாளின்மிசைவாளதனைவைத்தடலரக்கன்
றோளிலொருதோணிலனுறும்படிதுணித்தான். (௧௬)

அற்றதிரடோடுணியவச்சமறவேநின்
றற்றழியும்வாளுரகமென்னவுளனுகி
மற்றையொருதோளின்மிசைதட்டியினிமற்போர்
பற்றுகெனவீமனுடல்பற்றுபுபுகுந்தான். (௧௭)

குத்துவர்திரிப்பர்நெருக்குன்றனையதோள்கொண்
டொத்துவர்வயப்புலிகளென்னவுடனோடித்
தத்துவருரத்தொடுரமுழ்கமுதுகர்போன்
மொத்துவர்சினத்தொடெதிர்முட்டுவர்சிரத்தால். (௧௮)

மல்வலியழிந்துபிறைவாளெயிறரக்கன்
வில்வலியறிந்திடுதுமென்றுவில்லெடுத்தான்
கல்வலியதோள்விடலைகன்றிவில்லெடுத்தான்
றெல்வலியினோடிருவருங்கணைதொடுத்தார். (௧௯)

கணைகளவையொன்றினுடனொன்றெதிர்கடித்துப்
பிணைபடவிழுந்தசெயல்கண்டுநனிபேதுற்
றிணையிலதிவர்க்கினியிரண்டணிகினிக்கும்
புணையுமிவரொன்றனர்புரந்தரனொடிமையோர். (௨௦)

மலையினையும்வாசுகியையும்பொருவுநாணுஞ்
சிலையுமறமேலொருசெழுங்கணைதொடுத்தான்
றொலைவில்பகையானபகன்மார்புமிருதோளுங்
குலைகுலையுமாறுநனிகுத்தியுயிர்கொண்டான். (௨௧)

மந்தரமுமந்தரமுமென்னவமர்மலைவா
னந்தரமிதல்லவெனவந்தரநெறிப்போய்க்
கந்தரநெடுங்கிரிகரத்தினிலெடுத்தச்
சுந்தரன்வயங்குதிரடோடனிலெறிந்தான். (௨௨)

எறியுமளவிற்குரிசிலிளவறிருமைந்தன்
குறியினெடுவெஞ்சிலைகுனித்தநகுநின்றான்
பொறியிலவன்வீசியபொருப்பொரணுவாகி
முறியும்வகைபல்பகழிமுகிலெனவிடுத்தான். (௨௩)

வில்லபிமன்வெங்கணைகள்விசையொடவனெறியுங்
கல்லசலநீறுபடுவித்ததிறல்கண்டே
கொல்லவினிவேண்டுமெனவெய்யதொருகூர்வேல்
வல்லடலரக்கனகன்மார்பின்மிசைவிட்டான். (௨௪)

விட்டவடிவேலுருவவேலுருவுமுன்னே
பட்டவனும்வீழவிருபாலும்வருசேனை
முட்டவுமிவன்கணைமுனைக்கெதிரிலக்காய்க்
கொட்டனர்நிசாசரர்கள்கிரிகளெனவீழ்ந்தார். (௨௫)

ஆறுபடிநூறுபடியாயிரமரக்கர்
மாறுபடுபாடைவடமன்னரொருகோடி
யூறுபடவெங்கதைகொடன்றவனுடைக்கச்
சேறுபடுமூளைகடெறித்தனசிரத்தால். (௨௬)

முற்பகலின்மைந்தனைமுருக்கியவரக்கன்
பிற்பகலில்வீழவடிவேல்கொடுபிளந்தான்
சொற்பகலிலானிளவலென்றனர்துதித்தா
ரற்பகலிலாவுலகில்வாழமரரெல்லாம். (௨௭)

காசியர்கள்சேதியர்கண்மாளவர்கலிங்கர்
பூசலிடையேழுபதினாயிரவர்பொங்கிக்
கேசவனடாவுகிளர்தேர்கெழுசுவேத
வாசியுடையான்விசயன்வாளியின்மடிந்தார். (௨௮)

வேறு.

ஆரகத்தடந்தேர்த்தனஞ்சயன்கைவரிவெஞ்சாபஞ்சொரிகணையா
லூரகத்துவசன்பெருஞ்சேனையொருசாருடையவொருசாரிற்
சருகொத்தனிலகுமாரன்கைத்தண்டாலுடையக்கண்சிவந்து
கருகித்திருகிமேனடந்தான்கங்காநதியாடிருமைந்தன். (௨௯)

பட்டக்களிற்றுப்பாய்புரவிப்பைம்பொற்றடந்தேர்ப்பாஞ்சாலர்
திட்டத்துய்மன்முதலானோர்சிகண்டியுடனேயெதிர்தோன்ற
வட்டக்கவிகைவீடுமனுமன்னற்கிளையகாளையரு
மெட்டுத்திக்கிற்காவலருமவரோடெய்தியிகல்செய்தார். (௩0)

வரிவெஞ்சிலைக்கைக்கௌரவர்க்குமுதலாமுதல்வன்வடிக்கணைக
டெரியுங்கணத்திற்றெரியாமற்றேருந்தாமுஞ்சிலர்பட்டார்
கரியுந்தாமுஞ்சிலர்பட்டார்கலிவாய்மதுகைக்கால்வேகப்
பரியுந்தாமுஞ்சிலர்பட்டார்படாதாருண்டோபாஞ்சாலர். (௩௧)

நீயுங்ககனங்குடியேறநின்பேருடலநீணிலத்திற்
றேயும்படிநிற்பொரநின்றேனென்றுசொல்லாயிரஞ்சொல்லிச்
சேயுந்தனக்குநிகரில்லாச்சிகண்டிகடுங்காற்சிலைவாங்கிக்
காயுங்கணைகட்கிலக்கானான்காமன்கணைக்குங்கலங்காதான். (௩௨)

வில்லோன்சரங்கள்படநகைசெய்தவன்மேற்றனதுவில்வளையாத்
தொல்லோனின்றநிலைகண்டுதுச்சாதனன்றன்சுடுசரத்தாற்
பல்லோர்வியப்பத்தங்கள்குலப்பகைவன்சேனாபதியிளவல்
செல்லோடணவுநெடுங்கொடியுந்தேருஞ்சிலையுஞ்சிதைவித்தான். (௩௩)

இவனேவிலக்காமென்பகழிக்கென்பான்போலவெங்குலத்தி
லவனேசெங்கைச்சிலைவீழ்த்தானரசன்றம்பிக்கழிந்திவனுந்
தவனேதயத்திலிருளென்னச்சாய்ந்தானென்றுதனஞ்சயன்றன்
பவனேதயத்தேர்நடவிட்டான்பணியார்தாமும்புறமிட்டார். (௩௪)

பார்த்தன்கணையாற்பட்டவரைப்பங்கேருகத்தோன்பலகோடி
நாத்தந்திலனேயெண்ணுதற்குநாமார்புகலத்தேமாலை
மாத்தந்திகளும்புரவிகளுந்துணியத்துணியவழிசோரி
நீத்தந்தன்னால்வடவைமுகநெருப்பொத்ததுகார்நெடுவேலை. (௩௫)

மன்னுஞ்சேனைபடக்கண்டவாட்சந்தனுவின்றிருமைந்தன்
பின்னுந்தனதுசிலையேந்திப்பேணாரெவரும்பின்காட்டத்
துன்னும்பகழிமழைபொழிந்துதுரக்கும்பொழுதுவிராடபதி
யென்னுங்குரிசிறனக்கிளையோனிராமற்கிளையோனெனத்தக்கோன். (௩௬)

பண்ணும்பரிமான்றேருடையான்படைத்தேர்மன்னர்பலர்சூழ
வெண்ணுஞ்சிலைக்கைச்சதானிகன்வந்தெதிரூன்றுதலுமெண்டிசையு
மண்ணுந்திகைக்கும்படிமலைந்தான்மன்பேருயிருக்காருயிருங்
கண்ணும்போல்வான்கருதலர்க்குக்கடுங்காலெழுப்புங்கனல்போல்வான். (௩௭)

உற்றுச்சமரில்வில்லெடுத்தவுரவோன்றன்னையுடலேசடு
மற்றுச்சென்னிவேறாகிவீழத்துணித்தேயம்பொன்றாற்
செற்றுக்கங்கைமகனிற்பச்சேராரோடத்தேரோனு
மிற்றுத்தெறித்தமகுடமெனவீழ்ந்தான்புணரிக்கிடையந்தோ. (௩௮)

திலத்திற்சின்னம்படமுன்னஞ்சிவேதனுயிர்கொண்டுடல்சிதைத்தான்
றலத்திற்கனகமுடிசிந்தச்சரத்தாலழித்தான்சதானிகனை
வலத்திற்றிகிரிதனையுருட்டுமான்றேர்மச்சத்தவனிபர்தங்
குலத்திற்கிவனேகூற்றென்றார்கூற்றுங்குலையுங்கொலைவேலார். (௩௯)

சேந்தநெடுங்கண்முரிபுருவத்திட்டத்துய்மன்சேனையொடுஞ்
சார்ந்தநிருபரைவரொடுந்தானுந்தன்பாசறையடைந்தான்
பாந்தளுயர்த்தவரசுடனும்பைம்பொற்கவரிமதிக்கவிகை
வேந்தருடனும்போய்ப்புகுந்தான்றன்பாசறையில்வீடுமனும். (௪0)

சென்றபரிதியாயிரம்பொற்சிகரப்பொருப்புக்கப்புறத்து
நின்றவிருளையிப்புறத்துநீங்காவண்ணங்குடியேற்றி
யொன்றவுலகமுற்றதுயிலுணர்த்துவான்போலுதயமெனுங்
குன்றமிசைநின்றனைவரையுங்காத்தாலெழுப்பக்குணக்கெழுந்தான். (௪௧)

ஒன்பதாம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்-௩00அ

---

# பத்தாம்போர்ச்சருக்கம்.



வலியிலன்றுதந்தைசெற்றமைந்தனுக்குவந்தபோர்
நலிவெலாமகற்றுநாமநாவிரண்டெழுத்துடன்
பொலியுநாமமறைகள்சொன்னபொருள்விளக்குநாமமுன்
கலியனெங்கண்மங்கையாதிகண்டுகொண்டநாமமே. (௧)

தருமராசன்மதலைபஞ்சசயனநின்றெழுந்தபின்
கருமமானகாலையிற்கடன்கழித்துநேமியம்
பெருமனோடுசென்றுதக்கபெற்றிபேசிவெற்றியிற்
பொருமகீபர்சூழநின்றவிளைஞரோடுபோதவே. (௨)

திரண்டுபல்லியங்கடேவர்செவிபுதைக்கவாணிடைப்
புரண்டெழுந்ததூளிகண்புதைக்கமெய்பதைக்கவே
முரண்டொடங்குசேனைவந்துமுன்னர்நாளையூகமே
யரண்டொடங்குயூகமாகவாகவத்துளணியவே. (௩)

வீடுமன்னெனுந்தடக்கைவீரமன்னும்வெஞ்சுடர்க்
காடுமன்னுபரிதியைக்காங்குவித்திருந்தபின்
றோடுமன்வலம்புரித்துலங்குதாமநிருபனு
நீடுமன்னர்பலரும்வாயிலிருபுறத்துநிற்கவே. (௪)

வனைந்திலங்குகழலுமுத்துவடமும்வார்குவலயமும்
புனைந்தசெம்பொன்மவுலியோடுபொற்பின்மீதுபொற்பெழ
முனைந்தடங்கவின்றுநாமுடித்தும்வெய்யபோரெனா
நினைந்துதன்பணைப்பதாகைநீடுதேரிலேறினன். (௫)

சுற்றருதவில்வினன்ஞெடையிடைந்ததூணியன்
கொற்றவாகைவாளினன்கூரவீரவேலினன்
மற்றுமாயுதங்களோடுமன்னரோடும்வார்முர
செற்றுமாரவத்திஞேடுமடுகளத்தினெய்தினன். (௬)

தானுமுன்னணிந்தவாறுதானையைநிறுத்தியச்
சேனைமன்னன்வந்துநின்றநிலைமைகண்டுசெங்கண்மால்
வானினின்றிழிந்தகங்கைமைந்தனுக்குவானுலாம்
யானமின்றளித்தியென்றுவிசயனோடிசைக்கவே. (௭)

போரினண்டர்பகையைமுன்புபொருதுவென்றவின்மையான்
முரிவெங்கொடிக்குரங்குமுன்னடக்குமேன்மையான்
வாரிதங்கொண்மேனியான்வனம்புகுந்துவருதலான்
யாருமின்றிராமனென்னவிசையநின்றவிசயனே. (௮)

சிலைபதாகையிவுளிதேர்செழுங்*கனலளித்தன
வலவன்யாரெனிற்குறிப்பொடென்னையாளவந்தநீ
தலமகீபரல்லதேவர்தானவரெதிர்ப்பினுங்
கொலைபடாமலேவர்போவர்குன்றெடுத்தகோவலா. (௯)

எந்தையாகதுணைவராகதனயராகவெந்தைதன்
றந்தையாகநீயுரைக்கில்யாரையுந்தறிப்பன்யான்
முந்தையாரணங்களுக்குமுடிவினின்றபொருளோயென்
சிந்தையாரமுற்றுவித்துவினையறுத்தசெம்மலே. (௧௦)

என்றபோதுவந்துதேவவிரதனின்றவெல்லையிற்
குன்றமன்னதேர்கடாவியருகணைந்தகொற்றவ
ரொன்றுபட்டசேனையோடியாவருமுடன்றுபோய்
நின்றசேனைநிருபன்மேனிரைத்துவாளிதூவவே. (௧௧)

பலருமெய்தவாளிமெய்படப்படப்பனித்துநாப்
புலரநொந்துகங்கைமைந்தனிதய முப்புழுங்கினன்
மலருகின்றவாரபனிக்குடைந்துசாலமாழ்கிநீ
டலருமந்தநிறமழிந்தவம்புசாதமென்னவே. (௧௨)

துன்னிமித்தமும்பலதொடர்ந்துசெய்யவெய்யவா
மந்நிமித்தநன்னிமித்தமாகுமென்றகந்தெளிந்
துன்னிமித்திரர்க்குநாளுமுதவிசெய்யுமுறநியோன்
வின்னிமித்தவாளியாலவ்வாளிகள்விலக்கினன். (௧௩)

துருபதேயர்†மகதநாடர்வெங்கலிங்கர்சோனகர்
கருநடேசர்‡சிங்களர்கடாரபூபர்கௌசலர்
தருமராசன்மதலைசேனைமுதுகிடச்சரங்கள்போ
யொருவர்போலவனைவர்மேலுமுறவெய்துறக்கினன். (௧௪)

---

*கனலளித்தனன் என்றும் பாடம்.

† மச்சநாடர் வெங்கலிங்கர் என்றும், ‡ சிஞ்சியர் என்றும் பாடம்.

முடிதுணிந்துபின்புவீழமுன்னடந்துடற்றுவா
ரடிதுணிந்துவிழவிருந்தலங்கல்வில்வணக்குவார்
கொடிதுணிந்துவிற்றுணிந்துகோறொடுத்தகையுடன்
றொடிதுணிந்துசோரிவெள்ளநதியினூடுசுழலுவார். (கரு)

மருத்தெறிந்தபூழியென்னவந்தவாமடங்குவா
ருருத்தெறிந்தவுருமிடிந்தவுரகமென்னவுட்குவா
ரொருத்தரோடவென்னிதென்றநேகரஞ்சியோடுவார்
விருத்தன்வில்வளைத்தவாண்மைவிசயனுக்குமிசையுமோ. (கசு)

வேறு.

வெம்புயவிசாலவடமேருவொரிரண்டுடையவீடுமனைநீடுமுனைவா
யம்புதமெழுந்துபொழிகின்றவழிபோடிவருமனிலமெனவந்தணுகினோர்
செம்பியனுமாகிருபனுஞ்செறிதுரோணனொடுசேயொடுசயத்திரதனுந்
தம்பியருமாமனுஞ்சயிந்தவரொடுவெய்யபகதத்தனொடுசல்லியனுமே. (கஎ)

மனஞ்செய்வலிகூர்கசதுரங்கம்பதாதியிரதத்துடன்வளைந்துபலருந்
தனஞ்சயமடங்கலெதிர்சாபமும்வளைத்தெதிர்சரங்களுமுகைத்தமர்செய்தார்
கனஞ்சலதிமொண்டுகொடெழுந்தனையவண்ணனொருகார்முகம்வணக்கியொருநூ
றினஞ்சரமொரோர்தொடையிலேவியவரேவுசரம்பாவுமெதிரேவிலகினான். (கஅ)

தேருதயபானுவெனநின்றவிசயன்றனெதிர்தெவ்வர்பணியென்னவகலத்
தாருதயமாநிருபர்வேலைசுவறத்தனதுதண்டுதனிகொண்டுகுதியா
வோருதவியின்றிமுடியோடவர்சிரங்களுமுடைந்துமுதுகிட்டுடையவே
மாருதசகாயனெனமாருதனெனக்கடவுண்மாருதசுதன்கடுகினான். (கசு)

ஏறிவருதேருடனெடுத்தெறிதருஞ்சிலரையிருபணைகள்பற்றியிறுகச்
சீறிவரும்யானையொடெடுத்தெறிதருஞ்சிலரையைந்துகதியுஞ்சிவணவே
மாறிவருவாசியொடெடுத்தெறிதருஞ்சிலரைவஞ்சினமும்வெஞ்சினமுடன்
கூறிவரும்வாளசரேறியணிநின்றாரதுஞ்சாதுரங்கம்விழவே. (உ0)

முநதுபடைவீரர்மிகநொந்துகதைவீமனெதிர்முதுகிடுதல்கண்டுமுனியா
வைந்துறழுநூறுபடியாயிரவர்வின்மையிலருச்சுனனையொத்தவடலோ
ருந்துரகசேதனுரைப்பழகிலேழுமுடனூழியிறுதிப்பொழிவபோல்
வந்துவடிவாளிமழைசிந்தினர்பராக்கிரமவாசியிபமாவிரதரே. (உக)

வெவ்வனமெரிக்கடவுளுண்டிடவணக்குமொருவில்லியுமவ்வில்லொடெதிர்போ
யவ்வவர்தொடுத்துவிடுமம்புகளனைப்பலவுமவ்வவைதொடுத்துவிலகிக்
கைவரிவிலறுநெடுநாணிநடுவற்றுவளர்கைத்தலமுமற்றுவிழவே
வைவரிவடிக்கணைகளேவினன்மணித்திகிரிவலவன்விடுதேரில்வருவோன். (உஉ)

தருமன்முதலைவரையும்வென்றிடுதுமென்றுதுச்சாதனனொடவரிளையோர்
பொருமுனையின்வீடுமன்முனின்றவர்களல்லதுபுகன்றநரபாலரெவரும்
பருமமதமாபுரவிதேர்கொடுபரந்தனர்படாதவர்கெடாதகதையுஞ்
செருமுனைசராசனமுமுடையவிருவோருநனிசீறியமர்செய்தபொழுதே. (உ௩)

விண்ணவரினுற்றெழுவர்கண்டுகளிகூரவிறல்வீடுமன்விருப்பினுடனே
கண்ணினைநெருப்பெழவுடன்றினிநமக்குமிதுகாலமெனமாலைபுனையும்
வண்ணவரிவிற்றலைவணக்கிவிதமானபலவாளிகடெரிந்துதருமற்
கெண்ணுமிரதத்தலைவரானவரையும்விட்டிலனிமைப்பொழுதினெய்தனனரோ. (௨௪)

எத்தனைமுடித்தலைகளெத்தனைபுயக்கிரிகளெத்தனைகரக்கமலம்வே
றெத்தனையுடற்சுமைகளெத்தனையுறுப்பினிணமெத்தனைகொடிக்குடர்களோ
டெத்தனைநிணத்தடிகளெத்தனைநரப்புவகையெத்தனையெலும்புநிரைமே
லெத்தனைமணித்தொடைகளெத்தனைமலர்க்கழல்களிற்றனகளத்தினிடையே. (௨௫)

விரிந்தனவுரங்களும்வெகுண்டனமனங்களும்விழுந்தனபசுங்குருதிநீர்
சொரிந்தனவெலும்புகளழிந்தனகொழுந்தசைநிமிர்ந்தனநரம்பின்விசியுஞ்
சரிந்தனபெருங்குடர்துணிந்தனசிரங்கடைதவழ்ந்தனநெடும்புருவமு
மெரிந்தனமுகங்களுமிடிந்தனமனங்களுமிறந்தனர்கடுங்கணிளையோர். (௨௬)

சோமகரின்மச்சரிற்றென்னரிற்றுளுவரிற்றுருபதேயரில்வளவரிற்
றேமருவலங்கற்குலிங்கரிற்சோரிற்*சிஞ்சியரில்வெஞ்சமர்விடா
மாமகுடவர்த்தனரின்மண்டலிகரிற்பட்டவர்த்தனரின்மற்றிவ்வுரவோ
னேமருகணைக்கிலக்காகாதமன்னவர்களெம்மன்னரென்றுமொழிவாம். (௨௭)

வேறு.

மேலெழுந்துதம்படையைநீடுகங்கைமைந்தனடுமேன்மைகண்டிரங்கிவெகுளா
ஞாலமுண்டசெம்பவளவாய்மலர்ந்துகொண்டிவனைநாமுரண்டொடங்கவிதுவே
காலமென்றுமன்றல்கமழ்கார்முகுந்தன்வெம்புரவிகால்கொள்சந்தனங்கடவவே
கோலவெஞ்சரங்களடைவேதெரிந்துகொண்டுசிலைகோலினன்றனஞ்சயனுமே. (௨௮)

ஓதம்வந்தெழுந்ததெனமேகநின்றதிர்ந்ததெனவூழியும்பெயர்ந்ததெனவே
மாதிரங்களுஞ்செவிடுபோயகண்டமும்பொதுளிவாய்பிளந்ததண்டமுகடுஞ்
சீதரன்செழுந்துளபமாதவன்றயங்கருணைசீதபங்கயங்கொடிருவி
ஞதனவெஞ்சமங்கருதியூதுகின்றசங்கின்முழுநாதம்வந்தெழுந்தபொழுதே. (௨௯)

தூரியங்கறங்கநரபாலர்சங்கினங்களணிதோறுநின்றுநின்றுகுமுறத்
தேர்களுந்துரங்கமொடுவேழமுங்கலந்துவருசேனைமண்டலங்களுடனே
போர்பெறுஞ்சிகண்டிதலையாகமுன்புகொண்டுலகுபேருமன்றுமின்றுகோலெனப்
போர்தொடங்கிவென்றிபுனைவீடுமன்றடங்கணைதிர்போயினன்றனஞ்சயனுமே. (௩௦)

சாதிவெங்கொடும்பகழியேவுதிண்சிகண்டிதலைகாணலுங்குனிந்துநகைபா
வாதியம்பையின்றுபகைமீளவந்ததென்றுதனதாயுதந்துறந்துவிரைதேர்
மீதுகங்கைமைந்தனொருதான்வெறுங்கைநின்றளவின்மேனடந்துசென்றுபொருதுச்
சாதனன்சரங்கள்பலதூவினன்பரிந்தெதிரிசாபமுந்துணிந்துவிழவே. (௩௧)

சாகநின்றிலன்றுருபதேயனெஞ்சமின்றிவரிசாபமின்றிவண்கொடிகொடேர்
வாகமின்றிவந்துவழிமீளநின்றசந்தனுகுமாரனுஞ்சரங்கள்விடவே
யூகமும்பிளந்துசுராசன்மைந்தன்முந்திரதமூருஞின்றசெங்கணெடுமான்
மேகமுங்கருஞ்சடலுநீலமுங்கலந்ததிருமேனியுஞ்சிவந்ததறவே. (௩௨)

* சிங்களரில் என்றும் பாடம்.

போனதிண்சிகண்டிதனைமீளவுங்கொணர்ந்துபலபூசலுங்கடந்திரதமே
னீநிலஞ்சனின்கணையுமேவுகென்றுவெஞ்சமரினோர்நடந்துசென்றுவிசயன்
கூனலங்கிதந்தசிலைகோலியம்பொடம்புபலகூடநெஞ்சழன்றுதையினான்
வேனிலம்புமுன்புதைதையாதிலங்குமம்பொன்வரைமேனியெங்கணும்புதையவே. (௩௩)

தோளுநெஞ்சமுஞ்சிரமுமார்பமுந்தொடங்கிநிலைதோறும்வந்துவந்துருவவே
சாளரங்கொளங்கவழியோடுகின்றவிந்துமுகசாயகங்கைகொண்டுபிடியா
நாளறிந்தெதிர்ந்துபொருவோனுமைந்தனன்றுமுதனுமமுஞ்சிகண்டியிவனெய்
வாளியொன்றுமிங்கெமையுறாதனஞ்சயன்செய்பெருவாழ்வீதென்றறிந்துமகிழா. (௩௪)

நாமவெங்கொடுங்கணையினுமுநொந்தனஞ்சமாநாளுமின்றுமுந்தவினிநீர்
போமடங்கலுந்தையையனீள்பதம்பொருந்தியுறுபோரறிந்துகொண்டுபொருவீ
ராமதன்றியென்செயினுமாவதொன்றுமின்றுதனியாண்மைபொன்றலென்றருகுசேர்
கோமடங்கறம்பியர்களாகிநின்றமைந்தரொடுகூறினன்பணங்கொடியனே. (௩௫)

கோடுகொண்டசெம்பவளநாதம்வந்துவந்துசெவிகூடமுன்புநின்றநிலையே
நாடிநெஞ்சழிந்துதிருநாமமன்புடன்றனதுநாகுழன்றுகொண்டுநவிலா
வோடுகின்றவம்பொழியநீடுடம்படங்கமுனையூரநின்றவம்பொரணையா
வீடுமன்கிடந்தகிடைதேவர்கண்டுவந்தனர்கண்மேல்விழுந்ததம்பொன்மலரே. (௩௬)

போரிலெஞ்சினன்குருகுலேசனென்றுகண்டபுருகூதன்மைந்தனும்புனைதுழாய்
வீரனுந்துனைந்துவருதேரினின்றிழிந்திருகண்வீழுமம்பினின்முழுகினார்
சேரவந்திரண்டுவகையாகிவெங்களங்குறுகுசேனையுந*திரண்டலறவே
யாருநெஞ்சழிந்தனர்கள்யாருநொந்துநைந்தனர்கள்யாருநின்றிரங்கினர்களே. (௩௭)

வேறு.

ஆகமெங்குந்தங்குமம்பினணைமேல்வீழ்வான்
யோகங்கொண்டேயுயிரையோடாவண்ணநிறுவி
மாகஞ்சூழும்பரிதிவடபாலெய்துமளவு
நாகங்காணேனென்னஞானத்தோடேவைக. (௩௮)

இங்குந்தருமன்முதலாவுள்ளமன்னரெவரு
மங்குந்துரியோதனனையாதியானவரசர்
†பொங்குங்கடலாலுலகம்பொன்றுமன்றுபோலே
சிங்கமன்னான்பாதஞ்சென்னிறமேற்கொண்டழுதார். (௩௯)

மறமும்வாகுவலியும்வல்வின்முதலெப்படையின்
றிறமுந்தேசும்வாழ்வுஞ்சீருங்கேள்விச்செல்வு
நிறமுமுண்மையறிவுநெறியும்புகழுந்திகழ்பே
ரறமும்பொன்றுநின்னோடேயாவந்தோவந்தோ. (௪0)

* திரண்டுவரவே என்றும்பாடம்.

† பொங்குங்கனலால் என்றும்பாடம்.

தந்தையின்பமெய்தத்தவமேயின்பமாகச்
சிந்தைதெளியுஞானச்செல்வர்செஞ்சேவகனே
முந்தைமரபுக்கெல்லாமுதல்வாஞாலமுழுது
மெந்தையாளவைப்பாரினியார்கோவேயென்றார். (௪௧)

அழுதமைந்தர்தம்மையஞ்சலென்றென்றாற்றி
யெழுதுதொல்லைவினையையாரேவிலக்குகிற்பா
ருழுதுவாளியுருவவுங்கண்முன்னர்வீழ்ந்தேதன்
பழுதொன்றில்லையிதுவேபயனென்பவத்தாலென்றான். (௪௨)

சரத்தின்சயனம்பஞ்சசயனங்களினுமினிதென்
சிரத்தின்றாழ்வுதீர்ப்பாய்திண்டோள்விசயாவென்ன
வரத்தின்பயனாலுயிரைநிறுத்துமன்னன்மகிழ
வுரத்தினம்பான்முடியையுயரும்வண்ணமுயர்த்தான். (௪௩)

சொரியுங்கண்ணீர்துடைத்துத்துரியோதனனைநோக்கி
வரியுஞ்சாபக்கன்னன்மன்னர்க்குருமேறன்னான்
றெரியுங்காலத்தவனைச்சேனைத்தலைவனாக்கிப்
புரியும்போருநாளைப்புரிமினென்றுபகன்றான். (௪௪)

கோயிறருமன்செய்பக்கூர்வெஞ்சரமேயணையா
நோயிலயர்வுமெய்யினுழையக்காலநோக்கி
வீயின்முத்தியில்லையெனவிருந்தானிருந்தாச்
சேயின்முனிவர்கேள்வித்தெள்ளாரமுதநுகர்வான். (௪௫)

இன்றுன்மைந்தன்பட்டானென்றுதந்தைக்கிசைப்பான்
சென்றுபரிதிமேலைத்திக்கினெல்லைசேர்ந்தா
னன்றவ்வருணனான்பாலழுதசெந்நீராறப்
மன்றவெங்கும்பரந்ததொக்குஞ்செக்கர்வானம். (௪௬)

பாண்டுமன்னன்புதல்வர்படையும்பாடிபுக்க
தாண்டுபாடிபுக்கதரவத்துவசன்படையு
மீண்டுமுதல்வன்பட்டதெந்தைக்குரைமினென்று
தாண்டுமான்றேர்மைந்தன்சஞ்சயனைவிடுத்தான். (௪௭)

முனியுநகரிற்சென்றுமுதுதானனனுக்குரைப்பக்
கனியுமன்பின்வெள்ளங்கண்ணீராகிச்சொரிய
வினியென்மைந்தர்க்குறுதியில்லையென்றென்றேங்கிப்
பனிவெண்மதியங்கண்டபங்கயம்போலானான். (௪௮)

மண்மேல்விழுந்தானெழுந்தான்மானம்போனதென்றான்
கண்மேலெற்றியின்றேகண்ணுமிழந்தேனென்றான்
விண்மேலுள்ளோர்செல்வம்வீறுபெற்றதென்றான்
புண்மேலயிலுற்றென்னப்புலர்ந்தான்முதல்வன்புதல்வன். (௪௯)

செங்கணரவக்கொடியோன்சேனாபதியாய்நாளை
யிங்குழுனையினிற்பார்யாரென்றெண்ணுமெல்லை
யங்கர்பூபன்யானேயமரிற்றலைவனாகிக்
கங்கைமைந்தன்சொன்னபரிசேகாப்பனென்றான். (௫௦)

தானாதிகனே நீவெஞ்சமரிற்சேனைத்தலைவ
னாலரசாய்நிற்பார்யாரென்றவனைவிலக்கி
மீனார்கொடியோன்றன்னைவென்றவேதக்கொடியோய்
சேனாபதியாகென்றான்றீவாய்நாகக்கொடியோன். (௫௧)

சிலையாசிரியன்வேந்தர்வேந்தன்சேனைக்கெல்லாந்
தலையாய்மன்னர்யாருந்தன்னைவந்துசூழக்
கொலையார்பகழிவெள்ளமார்பந்தோறுங்கோத்துத்
தொலையாவெம்போர்தொலைக்கத்துணிந்தானெவருந்துயின்றார். (௫௨)

வருணன்மைந்தன்பாடுவருணற்குறைத்துமீளத்
தருணமைந்தன்விசயஞ்சதமகத்தோன்கேட்ப
விருணிறைந்தகங்குலெங்கிமுன்னேயோட
வருணன்பொற்றேர்தூண்டவருக்கன்குணபாலடைந்தான். (௫௩)

பத்தாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

ஆகச் செய்யுள் ௩௦௬௧.

---

வீட்டுமபருவமுற்றுப்பெற்றது.

---

௭

ஏழாவது

# துரோணபருவம்.



## பதினோராம்போர்ச்சருக்கம்.

---

காயமும்புலனுமந்தக்கரணமுமாகியெல்லாத்
தேயமும்பரந்துநின்றுமீளவுஞ்சிதைத்துச்சுத்த
மாயமுமாகிநீங்கிவருபெருஞானானந்த
மாயவெம்பெருமானென்னையாண்டருளாழியானே. (௧)

பகிரதிமைந்தன்சேனாபதியெனப்பத்துநாளு
மிகல்புரியியற்கையெல்லாமியம்பினமினிமேலந்தத்
துகளறுகேள்விவேள்வித்துரோணவாசிரியன்செய்த
புகலருமைந்துநாளைப்பூசலும்புகலலுற்றாம். (௨)

சென்றனன்கங்கைமைந்தன்றினகரன்மைந்தன்செல்லா
னின்றனன்றுரோணன்மைந்தனீடமர்முனைந்துசெய்யான்
வென்றனமினிநாமென்றுமெய்ம்முகில்வண்ணன்சொல்லக்
குன்றனகுவவுத்தோளார்வெங்களங்குறுகினாரே. (௩)

மாதனத்தளகையாளுமன்னெனவானிற்பாக
சாதனக்கடவுளென்னத்தரும்பெருந்தரணிவேந்தன்
சேதனப்படைஞரோடுஞ்சேனையின்காவலான
வேதநற்குருவினோடும்வெங்களம்வந்துசேர்ந்தான். (௪)

மதியிலாவிசும்புஞ்செவ்விமணமிலாமலருந்தெண்ணீர்
நதியிலாநாடுந்தக்கநரம்பிலாநாதயாழு
நிதியிலாவாழ்வுமிக்கநினைவிலாநெஞ்சும்வேத
விதியிலாமகமும்போன்றவீடுமனிலாதசேனை. (௫)

பகடுதேர்புரவிகாலாள்பலவகைப்பட்டசேனை
சகடமாவியூகமாகவகுத்தனன்றனுநூல்வல்லான்
றிகடரு*கவுஞ்சயூகமாகவேதிட்டத்துய்மன்
றுகடருசாதுரங்கம்யாவையுந்தொகுத்துநின்றான். (௬)

படையுடையிருவர்சேனாபதிகளும்பனிவெண்டிங்கட்
குடையுடைநிருபர்சூழவரூதினிக்குழாங்கள்சூழ
நடையுடைத்தடந்தேருந்திநாகரும்பணிக்கும்வண்ணந்
தொடையுடைவாளிமாரிசோனையம்புயலிற்பெய்தார். (௭)

மருத்துவர்மைந்தர்தம்மிலிளவலும்வலியசூதன்
கருத்துடன்பொருதுவென்றமாமனுங்கலந்துதம்மி
லொருத்தரையொருத்தர்வேறலரிதெனவுடன்றுவேக
சரத்தொடுசரங்கள்பாயச்சராசனம்வாங்கினாரே. (௮)

ஒருகணைதொடுத்துப்பாகனுயிர்கவர்ந்துயர்த்தகேது
விருகணைதொடுத்துவீழ்த்திரதமாத்தொலையநான்கு
பொருகணைதொடுத்துவஞ்சன்பொருவருமார்பிலாறு
வருகணைதொடுத்துவாகைமிலைந்தனன்வஞ்சமில்லான். (௯)

உகுநிணச்சேற்றிலூன்றியோடுதற்குன்னுவான்போற்
சகுனியத்தேரினின்றுமிழிந்துகைத்தண்டமேந்த
நகுலனுக்கிளையகோவுநகுமணிவலயத்தோண்மேன்
மிகுதிறற்றண்டுகொண்டேவெந்திடப்பொருதுமீண்டான். (௧௦)

---

* கரிஞ்சயூகம் என்றும் பாடம்.

மதாசலமகுடமான்றேர்வாம்பரிவயவர்வெள்ளப்
பதாதியெம்மருங் கும்போதப்பார்த்திவர்நிழலிற்போதப்
பிதாமகனிறந்தானென் றுபேதுறுநிருபன்போந்து
சதாகதிமைந்தனோடுந்தாக்கினன்றபனன்போல்வான். (௧௧)

அரிக்கொடியரியேறன்னனரவவெங்கொடியுமற்று
வெருக்கொள்போரரவமன்னன்வில்லுமூனற்றுவீழ
வெரிக்கணையேவிச்சூழ்ந்ததரணிபரெதிர்ந்தவேந்தர்
கரிக்குலமிவுளிதிண்டேர்மடியவெங்கணைகடொட்டான். (௧௨)

பல்லியமுழங்கமன்னர்படப்படப்பரித்தேரோடும்
வில்லியருனைவேந்தன்வெந்திடும்விரைவுகாணுச்
சொல்லியவிற்கைவாயுசுதனுடனொருமேறென்னச்
சல்லியன்முனைந்து வீரசகாயமேவினனே. (௧௩)

தம்முனோடிடன்றுவந்தசல்லியகுமாரன்றன்னை
யெம்முடனெதிர்ப்பையாகிலிமைப்பொழுதிகல்செய்கென்று
வெம்முனைகடந்தபொற்றேர்வெஞ்சிலைகுலன்றோன்றி
யம்முனைகவர்ந்தமாடவவனுடனடுபோர்செய்தான். (௧௪)

மோகரித்தொன்றிரண்டுமூன்றுநாலைந்தம்பேவிப்
பாகனைச்சிலையைப்பொற்றேர்ப்பதாகையைப்பரியைவீழ்த்தி
யாகமுற்றுருவவெய்தானருச்சுனனிளவன்மாறுப்
போகமத்திரத்தார்கோவும்புறந்தந்துபோகலுற்றான். (௧௫)

சையமோரிரண்டுதம்மிற்பொருதெனத்தடந்தேருந்தி
வெய்யவன்மகனும்வீரவிராடனுமெதிர்ந்தவேலை
வையகங்கம்பமுற்றுமாசுணநடுங்கமேன்மே
லெய்யும்வெங்கணையால்வானத்தெல்லையுமறைந்ததன்றே. (௧௬)

துருபதயாகசேனநிருபனுந்தும்பைசூடி
வருபகதத்தனென்னுமடங்கலேறனையகோவு
மொருபகன்முழுதுந்தங்களுக்குமுமானுந்தேசும்
பொருபடைவலியுங்காட்டிப்போதகப்பூசல்செய்தார். (௧௭)

துன்றுவெங்கழற்காற்சோமதத்தனுஞ்சூழ்ந்துநின்ற
வன்றிறல்வேந்தர்தாமும்வாளமர்புறந்தந்தோட
வன்றுவீடுமனைவென்றவாண்டகைசிகண்டியென்பா
னின்றுபோர்செய்தவீரமெம்மனோர்க்கியம்பலாமோ. (௧௮)

வேறு.

தேர்த்திரள்பரித்திரள்கரித்திரள்சேனையின்
கோத்திரள்புடைவரக்குடைவரக்கொடிவரப்
பார்த்திவன்மதலையும்பார்த்தன்மாமதலையுந்
தூர்த்தனர்விசும்பையுந்தொடுத்தனதொடைகளால். (௧௯)

மொய்கணைபிற்படமுந்துதேருந்தவும்
பெய்கணைகணையுடன்பிணைனிமுனவீழவு
மெய்கணையபிமனுமிலக்கணகுமாரனுங்
கைகணைதரநெடுங்கார்முகம்வாங்கினார். (௨௦)

இன்சிலைமதனவேளெனவருங்குமாரனவ்
வன்சிலைவில்லிதான்மகிழ்வுறுங்குமாரனை
நன்சிலைநடுவறநாணொடுந்துணியவே
தன்சிலைகொண்டுவெஞ்சாயகமேவினான். (௨௧)

அற்றவிற்றுணிகளாலரியையும்பாகையுஞ்
செற்றனன்சென்றனன்றேரோடுந்தேருறக்
கொற்றவர்நூற்றுவர்க்குரியவக்குமாரனைப்
பற்றினனுயிரோடும்பாண்டவர்குமரனே. (௨௨)

வீயினால்வென்றபோர்வில்லினைக்கண்ணுதற்
றீயினால்வென்றவன்றிகழ்தருஞ்சிந்தையோன்
காயினான்வார்குழல்கைப்படுத்தெதிருறப்
போயினானவனெடும்பொன்னெடுந்தேரின்மேல். (௨௩)

முந்துவாளபிமனம்முரிவிற்குமாரனை
யுந்துதேர்மீதுகொண்டோடலுமொருபுடைச்
சிந்துபூபதிசெயத்திரதன்வெஞ்சினமுற
வந்துவெந்துணிசிலைவாளியிற்றகையவே. (௨௪)

மடங்கலைவளைவதோர்சிலம்பினூல்வலையெனத்
தொடங்கியமன்னவன்றானொருந்தொலைந்தபின்
றிடங்கொடோளங்கர்கோன்முதலியதேர்மன
ரடங்கவந்தபிமனொடொருவனோடமர்செய்தார். (௨௫)

வந்தவர்வந்தவர்வானுதனிலைதொறுஞ்
சிந்துரத்தூளியாற்றிலகமிட்டனனெனக்
கொந்துறுகணைமழைக்குருதிநீர்மல்கவே
வெந்திறல்வில்லின்வெங்கண்டனன்வீரனே. (௨௬)

சென்றதேர்யாவையுந்தன்னொருதேரினால்
வென்றுமாமன்னவன்மகனையுமீதுகொண்
டன்றுபோம்வெஞ்சிலையாண்மைகண்டபிமனை
வன்றிறற்சல்லியன்வந்துமுன்வளையவே. (௨௭)

சித்திரபானுவிற்சீறிமுற்செல்லுமம்
மத்திராசனைவருகநீவருகவென்
றத்திரநாலிரண்டவன்முகத்தடைசினான்
மித்திர்செல்வமாம்விசயன்மாமதலையே. (௨௮)

தோளிரண்டினுநடுத் துளைப்படப்பாகன்மேன்
மீளவுங்கொடியதோர்வீரவேலேவினு
னீளவெங்கதையுடனீள்வரையிழிதரும்
யாளிபோற்சல்லியனிரதம்விட்டிழியவே. (உகூ)

வன்புடனபிமன்மேன்மற்றவன்வருதலு
மன்புடன் கண்டுபோனிலன்மாமதலைபோ
யென்புடன்புயநெரிந்தினமணிமகுடமு
முன்புடன்சாயவேதண்டினுன்மொத்தினுன். (௩0)

தலக்கணேசல்லியன்வீழ்ந்தலுந்தந்தையோ
டலக்கணுற்றடியனேனுண்மையென்றுமெனக்
குலக்கணியானவிற்குமரனின்றயர்தலு
மிலக்கணகுமாரனுந்தனதுதேரேறினன். (௩க)

தரையில்வீழ்சல்லியன்றன்னையுந்தனதுபே
ரிரதமேலேற்றியவ்விலக்கணகுமாரனுங்
குரிசிலையன்றயக்கொண்டுபோயினனரோ
கிருதவன்மாவெனுங்கிளர்முடிநிருபனே. (௩உ)

பொரும்பொருமுனைதொறும்புண்ணியன்சேனையிற்
பெரும்பெருந்தாணிபர்பேறுடன்வேறலா
லரும்பெருங்கொடியின்மேலாவவேறெழுதினுன்
றிரும்பினன்பல்வகைச்சேனையுந்தானுமே. (௩௩)

வேறு.

தண்டேகொண்டுவீமனெனுஞ்சண்டபவனந்தாக்குதலாற்
றிண்டேரென்னப்பட்டவெலாஞ்சிதைகின்றனகண்டிதயம்வெரீஇப்
பண்டேயுள்ளவோராழித்தேரோடொளித்துப்பரிகளுடன்
கொண்டேயருக்கனவ்வளவிற்குடபான்முந்நீர்குளித்திட்டான். (௩௪)

சென்றநிருபர்புறநாணத்திண்டோளபிமன்முதலான
வென்றிநிருபர்குழுஉக்கொண்டுவிறலார்சேனைவேந்தனுடன்
மன்றல்கமழுந்துளாய்மவுலிமாலுந்தாமும்பாடிமனை
யொன்றியினிதிற்கண்டுயின்றாருரனுந்திறலுமுடையோரே. (௩௫)

பானுளளவுந்துயிலாமற்பாந்தட்டுவசன்றனக்குயிர்நண்
பானர்பலரும்வாள்வேந்தரமைச்சர்பலருமிளையோருஞ்
சேனுபதியுஞ்சூழவிருந்தபிமன்கையிற்றிருமைந்தன்
றுனுடமரிலகப்பட்டதாழ்வுக்கிரங்கியுள்நொந்தார். (௩௬)

தனுவேதத்தின்கேள்விக்குஞ்சதுர்வேதத்தின்வேள்விக்குஞ்
செனுவேயுன்னையல்லதினிச்செய்துமுடிக்கவல்லவர்யார்
மனுவேயன்னையவுதிட்டிரனைநாளைச்சமரின்மற்றிதற்கோ
ரனுவேயென்னவசப்படுத்தினல்லாற்செற்றமறுதென்றான். (௩௭)

பெற்றோன்றனினுஞ்சதமடங்குவலியோன்வீமன்பின்னிற்கப்
பொற்றோள்விசயன்முன்னிற்கப்பொரும்போர்முனையிற்போருதவி
யற்றோர்போலவில்வலியாலறத்தோன்றன்னையகப்படுத்தன்
மற்றோர்பிறப்பிற்றெரியாதிப்பிறப்பின்முடிக்கமாட்டேமால். (௩௮)

செவ்வாய்வைக்கும்வலம்புரிக்கைத்திருமால்செம்பொற்றேரூர
வெவ்வாய்வாளிவில்விசயன்மெய்மைத்தருமனணிநின்ற
வவ்வாயிமைப்பேரதனுகாமற்காப்பார்சிலருண்டாமாகி
லிவ்வாய்நாளையகப்படுத்தித்தராலாமென்றனெழின்மறையோன். (௩௯)

திகத்தராசன்முதலாகச்சஞ்சத்தகரிற்சிலமன்ன
ருகத்திற்கடையிற்கனல்போல்வாரொருவர்க்கொருவருரைமுந்திச்
சகத்துக்கொருவனெனும்விசயன்றம்முற்குதவிசெய்யாமன்
மகத்திற்சனிபோல்வளைக்குவம்யாமெனவஞ்சினமும்பலசொன்னார். (௪௦)

அருளேவடிவுகொண்டனையோனருகங்கமரிலனுகாம
லுருளேரிரதத்தருச்சுனனையொருநாண்முழுதுந்தகைந்திலமேன்
மருளேகொண்டுகுடிவருந்தமனுநூல்குன்றிவழக்கழியப்
பொருளேவெஃகுமாசரைப்போற்புகுவேம்யாமுநரகென்றார். (௪௧)

மறனிற்சிறந்தபுயவலியால்வரைபோன்றனிலன்மைந்தனெனப்
புறநிற்பானைத்தம்முனிடைப்போகாவண்ணந்தகைந்திலமே
லறனிற்கொண்டதன்மனையாளமரித்தலத்தினழுதிரங்கப்
பிறனிற்றேடும்பெரும்பாவிபெறும்பேறெமக்கும்பேறென்றார். (௪௨)

கன்றால்விளவின்கனியுதிர்த்தோன்கடவுந்திண்டேரவனைக
வன்றட்டடக்கைமாருதியேயாகவமரின்மறித்திலமே
லென்றுநாளைமுனிபோரினெங்ஙனறியினுஞ்செய்ந்நன்றி
கொன்றார்தமக்குக்குருகுலத்தார்கோவேயாமுங்கூட்டென்றார். (௪௩)

*இவ்வாறுரைத்தவேந்தர்தமக்கெய்துஞ்சிறப்புச்செய்தகற்றிக்
கைவார்சாபமுனிவான்றன்கழற்கால்வணங்கியேகுகெனச்
செவ்வாய்மலர்ந்துமானத்தாற்றிறலால்வாழ்வாற்செகத்தொருவ
ரொவ்வாவரசன்றன்கோயிலடைந்தான்விபுதர்க்கொப்பானே. (௪௪)

கங்குற்சிலைநூன்முனிவனுடன்கழற்காலரசன்பணித்தமைகேட்
டங்குத்தரியாதிவன்கரத்தேயநாள்கூர்நெஞ்சனகப்படுமென்
றிங்குத்துயில்வார்யாவரையுமிருபாளையத்தினிடங்தோறுஞ்
சங்கக்குரலாற்றுயிலெழுப்பித்தபனன்குணபாற்றனைசேர்ந்தான். (௪௫)

பதினோராம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௩௧௦௩.

---

* வெவ்வேறுரைத்த வேந்தர்க்கு வேண்டுஞ்சிறப்புச்செய்தகற்றி என்றும் பாடம்.

# பன்னிரண்டாம்போர்ச்சருக்கம்.



பொய்யாததவமுனிபின்போயருளித்தாடகைதன்
மெய்யாவநிகரென்னவெஞ்சரத்தாலழுத்தியபின்
மையாழிமுகில்வண்ணன்வாங்கியனபூங்கமலக்
கையராலுமொருசாபங்காலாலுமொருசாபம். (௧)

அற்றாபதிகருதியாசானேடுரைத்தவெலா
மொற்றாலக்கணத்தேயுணர்ந்தமுரசக்கொடியோன்
மற்றாவணைதுறந்தமாயனுக்கும்விசயனுக்குஞ்
சொற்றாபதநெருங்கத்தொடைத்தும்பைபுனைந்தானே. (௨)

கருங்களவின்கனிவண்ணன்கனைகழற்கால்வேந்தரொடும்
பெருங்களஞ்சென்றெய்தியபின்பேணார்கள்வெருக்கொள்ள
விருங்களிறுதேர்பரியாளிருமருங்கும்புடைசூழ
வருங்களிகொள்வரூதினியைமண்டலமாவகுத்தானே. (௩)

பின்னிறுத்திமாருதியைப்பேரணியிற்பலவகையா
மன்னிறுத்திநிருபாலுமருத்துவர்மைந்தரைநிறுத்தி
மின்னிறுத்துநெடுவாளிவிசயனையுங்குமரனையு
முன்னிறுத்திநடுநின்றான்முரசநிறுத்தியகொடியோன். (௪)

இப்பான்மற்றிவர்நிற்பவிரவுரைத்தமொழிப்படியே
தப்பாமற்றிகத்தகுலத்தலைவனுஞ்சஞ்சத்தகருந்
துப்பார்வெஞ்சிலைத்தடக்கைத்துரோணன்முதலனைவோரு
மப்பால்வந்தணிமகரவியூகம்வகுத்தணிந்தாரே. (௫)

காரணிபோற்பொருப்பணிபோற்காற்றணிபோற்களிற்றணியுந்
தேரணியும்பரியணியுந்திரிகத்தகுலபதியு
நாரணகோபாலரெனுநராதிபரும்வாள்விசயன்
காரணமாவறைகூவிக்கடுங்கொடுங்கார்முகம்வளைத்தார். (௬)

ஆர்த்துவருமவர்நிலைகண்டர்ச்சுனைநீரிமைப்பொழுது
காத்திடுமினெனநின்றகாவலரோடுரைசெய்து
கோத்தருமன்பணித்ததற்பின்கோதண்டமுறவாங்கிப்
பார்த்தனுமன்றவரெதிர்போய்ப்பலவாளிமழைபொழிந்தான். (௭)

தூளியேயண்டமுறத்தூர்த்துமுதலகல்விசும்பை
வாளியேதூர்க்கும்வகைமலைவாங்குசிலைவாங்கி
யாளியேறனையானுமவனிபருங்கவந்தமுடன்
கூளியொடாடக்கொடுஞ்சமரம்விளைக்குங்கால், (௮)

தடித்தலைவேற்சயத்திரதன்சவுபலன்குண்டலன்முதலா
முடித்தலைவாளடனிருபர்முப்பதினுயிரர்சூழ
*விடித்தலைமாமுரசியம்பவிபதாகப்படைசூழக்
கொடித்தலைமான்றடந்தேரான்குனிசிலையின்குருவந்தான். (௯)

வந்தகுருக்குருகுலமாமன்னுடன்போர்புரிவதன்மு ன்
பந்தமுறப்பாஞ்சாலர்பல்பதினுயிரர்சூழ
முந்தவயப்பணைமுழங்கமுழங்கொலிநீர்கொதிப்பதுபோ
லந்தமுனிக்கெதிர்நடந்தானவர்சேனுபதியே. (௧0)

இருவர்பெருஞ்சேனையுமுற்றெதிரெதிராயுதமெடுத்தங்
கொருவரொருவரைவேறற்கொண்ணுதலமருடற்றச்
செருவிலரியேறனையான்றிட்டத்துய்மனும்வெருண்டு
பொருசிலைவெங்கணைபொழிந்தான்போர்வேந்தர்பலர்மடிந்தார். (௧௧)

துன்முகனைப்புறங்கண்டு துன்மருடன்முனைசாய்த்துக்
கன்முகமாங்காந்தாரர்கலிங்கர்கவுசலர்நிடதர்
புன்முகராயினைத்தோடப்பொருதழித்தான்பொருதழிந்த
மன்முகவெம்பெருஞ்சேனைமறையவன்பாலடைந்தனவே. (௧௨)

மறைவாய்வெஞ்சிலைமுனிவன்வருதினிதன்னிலையழிந்து
குறைவாவந்தமைகண்டுகோதண்டமெதிர்வாங்கித்
துறைவாய்வெங்கனல்போலுந்துருபதன்கைச்சிலைதுணியப்
பிறைவாய்வெங்கணைதொடுத்துப்பிறைமுடிபோனெனச்சென்றான். (௧௩)

சத்தியகேதுவின்சாபஞ்சரமொன்றாலிரண்டாக்கிச்
சித்திரவெஞ்சிலையாண்மைச்†சிகண்டியையுஞ்சிலையறுத்திட்
‡டுத்தமபானுவைமுதலாவுள்ளகொடுந்திறல்வேந்தர்
தத்தமுயிருடன்போகத்தானைபெலாமடிவித்தான். (௧௪)

தாண்டியவெம்பரிநகுலசாதேவர்வெந்திட்டார்
பாண்டியனுமுதுகிட்டான்பாஞ்சாலர்புறமிட்டா
ரீண்டியவெங்களத்தவிந்தாரெத்தனையாயிரம்வேந்தர்
தூண்டியவெம்பரிநெடுந்தேர்த்துரோணன்கைத்தொடையாலே. (௧௫)

வடுத்தருவெஞ்சிலைமுகமும்வணக்குகொடுஞ்சராசனமு
மெடுத்துமனங்கதுவுசினமெழுப்பவெழுந்தோர்கொடியி
னடுத்தகைவின்வானவருநடுக்குறுவெம்போர்முனையி
லடுத்தனர்வன்றபோதனனுமடற்றருமன்குமாரனுமே. (௧௬)

---

* இடித்தலைமா முகிலனைய விபதாகம் புடைசூழ என்றும் பாடம்.

† சிகண்டியையுந்தோழித்திட்டென்றும் பாடம்.

‡ உத்தமோசாமுதலா என்றும் பாடம்.

## வேறு.

அதிர்த்தனசங்கசாலமுதலனைத்துவிதங்கொள்காகளமு
முதிர்த்தனவண்டகோளமுறவொலித்துடிவின்குழாமுழுதும்
விதிர்த்தனசெங்கைவாளொடயில்விழித்தனகண்கடையுமிழ
வெதிர்த்தனதங்கள்சேனைகளுமெதிர்ப்படுமைந்தர்போர்செயவே. (௧௭)

மதித்துமதங்களேழினுமெய்வனப்புறுகொண்டன்மானவன
கதித்துநெடுங்கைவீசியுடுகணத்தைமுகந்துவாருவன
மிதித்தூரகண்பணமுடிகள்விதிர்த்துவெருண்டிலாவுவன
கொதித்திருகண்களாலுமெரிகொளுத்தினகும்பவாரணமே. (௧௮)

வரைக்குலமென்றுகூறிடினவ்வரைக்குவயங்குநேமியில
நிரைக்குநெடும்பதாகையிலநிறத்தகொடிஞ்சியாதியில
வுரைப்படவுந்துபாகரிலவுகைத்ததுரங்கராசியில
விரைத்துவிரைந்துலாவலிலவெனச்செருமண்டுதேர்பலவே. (௧௯)

உகத்தின்முடிந்தநாளலையொடொலித்தெழுசங்கவேலையென
மிகப்புகைகொண்டுவானுலகும்வெடித்திடமண்டுதேயுவென
நகச்சிகரங்கள்சாயவெதிர்நடப்பனசண்டவாயுவென
விகற்செய்துசெம்பராகமிசையெழுப்பினதுங்கவாசிகளே. (௨௦)

விளைத்தனர்தொந்தமாகவமர்மிகைத்தனர்தந்தம்வீரமுட
னுளைத்தனர்சிங்கசாபமெனவுறுக்கினர்சென்றுமேன்முடுகி
வளைத்தனர்கொண்டவார்சிலைகள்வடித்தசரங்களாலுழுது
திளைத்தனர்வென்றிகூறும்வகைசெருக்களமெங்குமாடவரே. (௨௧)

மிகைத்தனர்தும்பைமாலைமுடிமிலைச்சினரின்றுசாவுமென
நகைத்தனர்தங்கடேருமெதிர்நடத்தினர்சண்டவேகமொடு
பகைத்தனரங்கம்யாவுமிசைபடப்படநஞ்சுகால்பகழி
யுகைத்தனரன்றையாடமரினுதிட்டிரனுந்துரோணனுமே. (௨௨)

சினத்துமுனைந்தபோரில்வருசிலைக்குருவின்பதாகையற
மனத்தினுமுந்துமாதுணியவயத்துடனுந்துபாகன்விழ
வனைத்துருளுஞ்சதாவிபிடவடுக்குறநின்றதேரழிய
வினத்தொடையைந்துபூபதியுமிமைப்பொழுதின்கணேவினனே. (௨௩)

தனித்துமலைந்தபோரிலெழுதலத்தரசன்கைவாளிகளி
லனத்தம்விளைந்துநாணொடுவிலறத்துணியுண்டதாகவமுன்
முனிக்குலமென்றுமாதிமறைமுதற்குருவென்றுமேன்மையுற
வினிக்கணையொன்றுமேவுகிலமிளைப்பறவஞ்சலேகெனவே. (௨௪)

அறத்தின்மகன்றனுண்மையினையழித்துயிரெஞ்சிடாவகைதன்
மறத்தொடுகொண்டுபோவலெனமதித்தெதிர்வந்தசாபமுனி
திறத்தினிவன்கையேவுகணைசெயித்ததுகண்டுநாணிமெலி
வுறத்தளர்சிந்தையோடுதனதுடற்சுமைகொண்டுபோயினனே. (௨௫)

வேறு.

தருமன்மைந்தனுடன்மலைந்துசமரிலஞ்சியோடியுங்
கருமநன்றுபடநினைந்தகலசயோனிபின்னையு
முரண்மிகுந்துடற்றவேகொன்முந்தவோடவேகொலாம்
விரைவுடன்சினங்கடாவவேறொர்தேரிலேறினான். (௨௬)

தங்கண்மன்னனம்முனைத்தனித்துவென்றவின்மையுந்
துங்கவென்றியின்றியேதுரோணனூரழிந்தது
மங்குளங்கனன்றுமீளவணிகொடேரினனதுந்
சிங்கமென்னவருகுநின்றசிறுவர்கண்டுசீறியே. (௨௭)

முந்திமுந்திமச்சராசனோடுசேனைமுதல்வனுங்
குந்திபோசனுநியானகுலமகிபர்யாவரும்
வந்துசூழவேழமீதுவயமடங்கல்செல்வபோ
லந்தவேதமுனியையோடியக்கணத்தில்வளையவே. (௨௮)

கன்னனுதிசகுனியாதிகலிங்கதேசனுதியா
மன்னனுதியாகவங்குமறையவன்பெரும்படை
தென்னனுதிகுலனுதி* திட்டத்துய்மனோடபி
மன்னனுதியாகவிங்குதிட்டிரன்வருதினி. (௨௯)

நின்றசேனைமன்னர்தாமுநின்றவந்நிலத்திடைச்
சென்றசேனைமன்னர்தாமுமெங்கணுஞ்செருச்செய்தா
ரென்றுகூறியெதிருரைத்தல்யாவருக்குமுடிவுறு
தொன்றுறாறுசின்னமாவுடைந்ததோரொருடலமே. (௩௦)

வேல்விதத்தும்வாள்விதத்தும்வில்விதத்துமங்கெநங்
கோல்விதத்துமுடிதுணிந்தகொற்றமன்னர்சற்றலார்
நூல்விதத்துமிக்ககேள்விரோன்சிலைக்கைமுனிபடைக்
கால்விதத்துரதுரங்கயவிதத்துவயவரே. (௩௧)

குத்துவார்படைக்கலங்கள்கொண்டுமற்குறிப்பினான்
மொத்துவாரிரண்டுதேருமுட்டவிட்டுமொய்ம்பினு
லொத்துவார்களிற்றினின்றுமொருகளிற்றின்முதுகுறத்
தத்துவார்துரங்கமங்கடாரையாகவேறுவார். (௩௨)

கொற்றவாளின்முடியிழந்தகுறையுடம்புவாளுடன்
கற்றசாரியோடுமெக்கணக்கறிந்துபுகழுவா
ரற்றகால்களற்றகைகளாயுதங்களாகவே
யெற்றுவார்படைக்கலனிழந்துநின்றவீரரே. (௩௩)

---

* திட்டத்துய்மனுதிமால், பின்னனுதியாகவிங்குதிட்டிரன்பெரும்படை என்றும் பாடம்.

சொன்னவாறுகுறியுமுள்ள துரகதந்துணிந்தன
கன்னவாறுசொரிமதக்களிற்றினங்கள்வீழ்ந்தன
பின்னவாறுபட்டனபிறங்குதேர்பதாதிக
ளின்னவாறுபட்டனவெனக்குறித்தியம்பொணு. (௩௪)

உங்கள்சேனைகெட்டதென்றுதிட்டிரன்றளத்துளார்
திங்களன்னகும்பயோனிசேனைதன்னையிகழுவா
ரெங்கள்சேனைகெட்டதுங்களிறைவன்வின்மையாலெனத்
தங்கள்சேனையந்தணன்றளர்ந்ததற்கிரங்குவார். (௩௫)

இருதளத்துநின்றமன்னரிருவராகவிகலியே
யொருதளத்துமன்னரென்னவொத்துநின்றுடற்றிஞர்
பொருதளத்தினிங்ஙனின்றுபோர்புரிந்தபொழுதிலே
வருதளத்தொடுதவிஞன்மருத்துவீமன்மைந்தனே. (௩௬)

நிருதகன்னிமகனுநேமிநீலவண்ணன்மருகனுங்
கருதிநெஞ்சழன்றுவந்தகாவன்மன்னர்யாவருஞ்
சுருதியன்னதூமொழித்துரோணன்மேனடக்கவே
பரிதிகண்டபனியெனப்பகைத்தளம்பறந்ததே. (௩௭)

பறந்துபோய்நெடும்பணிப்பதாகையானுடைய்திஞர்
பிறந்துபோய்வளர்ந்தபின்பிறப்புணர்ந்தபெருமனுந்
துறந்துபோயவிதுரனமுன்றுணித்தவில்லெனத்துணிந்
திறந்துபோனமன்னரன்றிநின்றமன்னரெவருமே. (௩௮)

வதிட்டனுந்துதிக்கும்வாய்மைவரிசிலைக்கைம்முனிவரே
டுதிட்டிரன்புரிந்தபோருரைக்கவேயுணர்ந்துளான்
பதிட்டிதம்பிறந்தநின்றுபாண்டவர்க்குஞாலமென்
றதிட்டமொன்றுமுணர்கலாதுமனிலவேகமாயினுன். (௩௯)

விட்டவிட்டாததுரங்கவேழவாகனத்தொடுந்
தொட்டதொட்டசிலையொடுந்துணிந்துவெங்களத்திடைப்
பட்டபட்டநிருபர்தங்கள்பாடுகாணவெண்ணியோ
முட்டமுட்டவேகுகென்றுதன்படைக்குமுந்திஞன். (௪௦)

முந்தவந்தமன்னனுமூர்ண்கொள்வாகையரசரும்
வந்தவந்தசேனையும்வகுத்தணிந்துமுனையவே
யந்தவந்தமுனைகடோறுமந்தவந்தவீரர்மெய்
சிந்தவந்துடற்றினன்சிலைத்தடக்கையபிமனே. (௪௧)

சிந்திவாளிமழைகளோடுசிலைவளைத்துமுடுகுதே
ருந்திவாரிமேகமென்னவமர்செய்தானுமொருவனே
யந்திவானமொத்ததுற்றகுருதிநீரிலக்களந்
தந்திவாசிதேர்களோடுடைந்ததெண்ணிறுனையே. (௪௨)

ஏறுதேரழிந்துசாபமிற்றுமுற்றுமின்றியே
வேறுதேருமேறிநின்றுவில்லெடுத்தவேதியன்
கூறுதேருதிரட்டிரான்குனித்தவிற்குடைந்துபன்
னூறுதேர்தனைப்புரக்கநொய்தினிற்கழற்றினான். (சங)

முனியுமேனையானைதேரின்முடுகிவந்தநிருபருங்
குனிசிலைக்கையபிமன்வெங்கணைக்குவெந்கொடுக்கவே
யினிநமக்குநல்லகாலமென்றுசீறியெய்தினான்
றனிதமிக்கசலதமன்னசதமகன்சகாயனே. (சச)

வேறு.

அதிதவளமத்தவாரணமுமுதலமுதமதனத்திலாழிமிசைவரு
மதகளிறுசுத்தமாகவிவனுமமகபதியெடுத்தகார்முகமுமவ
னெதிர்தரவெடுத்தசாபமிவனுடனிகல்செயநினைக்கயாவருளரென
விதமுறவகுத்தயானையணியுடன்விருதுபகதத்தராசனுதவவே. (சரு)

இருபதுபதிற்றுநூறுகளிறுளவிவனினுமிகுத்தவீரர்கடவுவ
ரொருபதுபதிற்றுநூறுமழகளிறவமையெனமிக்கவாகுவலியினன்
முருகனெனவெற்றிநேமிமுகிலெனமுரணவுணருக்குவாழ்வுகெடவுயர்
சுரபதிதனக்குவாழ்வுவரும்வகைசுரருலகளித்ததோழனிவனரோ. (சசு)

எழிலணிதடக்கைமேருகிரிநிகரிபசிரமதைக்கமோதியுருமென
மொழியுறவதிர்த்துநீடுபுயகிரிமுறைமுறைதடிக்கவேகமொடுபுகை
பொழிசினமனத்தினுளவிரொளிபுனைநுதல்வெயர்க்கவாயுகதியென
விழிவழிநெருப்புவீழவிரைவுடன்விறன்மிகுகளத்திலானபொழுதிலே. (சஎ)

பொருதுபுறகிட்டசேனையிவன்வருபொலிவொடுபுறக்கிடாதுதிருகின
வாவினையுயர்த்தகோவுமிளைஞருமவணிபருமொத்துமீளமுடுகினர்
முரசெழுதுபொற்பதாகைநிருபனுமுதலமர்செகுத்தவாகையபிமனு
மிருகைமலர்கொட்டியாடியெதிர்கொளவிருபடையுமுற்றபூசல்விளையவே. (சஅ)

நிசிசரனெடுத்தவாதிகயிலையுநிகரலவிதற்கெனமுன்வருகரி
விசையுடனடத்திவீமனெவணவன்விறன்முடிதுணித்துமீள்வனினியென
வசைபலபிதற்றிவேகமுடன்வரும்வலியபகதத்தன்வாகுகிரிகளை
யொசிதரவளைத்துமார்புசுழிதரவொருகைகொடுகுத்திவாயுகுமாரனே. (சகூ)

கதைகொடுபணைக்கைவீசியெதிர்வருகடகரியினெற்றியோடையணியொடு
புதைபடவடித்துமீளவிசையொடுபுரவியிரதத்தின்மீதுகுதிகொள
விதயமலர்செற்றமுளவிவனவனெதிர்சிலைவளைத்துவாளிநிரைபட
வுதையவுதைபட்டவாளிதனதுகையுயர்கதையுடைத்துவீழமுனையவே. (ருo)

ஒருவரையொருத்தர்வேறலரிதரிதொருபடிசெருச்செய்தாலுமினியென
விருவருமெடுத்தசாபமொலிபடவெதிரெதிர்தொடுத்தவாளிநெடுமழை
யொருவருடலத்தினுழ்கிமுனையுறவுருவுதொழிலற்றுநூலின்முறைமையி
னிருவருமவிலக்கவோடிவிலகினவெதிரெதிர்கடித்துவானமறையவே. (ருக)

மகரிகைமருப்புநாலுமுளவெனில்வலியகுணதிக்கில்வாரணமுமினி
நிகரலவிதற்குநாமமுறைசெயினிலையுடையசுப்பிரதீகமிதன்வலி
பகரிலிபமெட்டுநாணுமெதிரெறிபடைகளுணர்வுற்றபோரிலெரிவரு
புகர்முககரக்கபோலமதகரிபொருதொழிலுரைக்கலாகுமளவதோ. (௫௨)

கரிகளையெடுத்துவானினிடையிடைகாறுதிகொடெற்றுநீடுபிறைநிக
ரிருபணைமருப்பினாலுமவரவரெதிரெதிருடைக்குநேமியிரதமு
மூரானுடையசித்திரவால்கொடொருபடியொலியொடுபுடைக்கும்வாசிவிழவிழ
வரவபயமிட்டுவீழநடைபயிலடிகொடுதுகைக்கும்வீரரணியையே. (௫௩)

அமர்செய்பகதத்தனாலுமவன்விடுமருவிமதவெற்பினாலுமணிகெழு
தமபடையிளைத்ததாகவிரகொடுதருமனுணர்வுற்றுவேறோர்திசையினி
லிமிரமுரசெற்றுபூசல்புரிதருமிளையவனடத்துதேரின்வலவனை
நிமலனையனைத்துமானவொருவனைநினையினன்மனத்தினோடுபாவியே. (௫௪)

வேறு.

நினைவுற்றபொழுதெழுதுமுரசுற்றகொடிநிருபனியமித்தபடிதரியலார்
முனைமட்கவமர்பொருதுசெயமுற்றியுவகைபெறுமுகிலொத்தவடிவினெடுமால்
புனைவிற்கையடுபகழிதிசைசுற்றுமறையநணிபொழிகொற்றவிசயனுடனே
வினைமுற்றியுயர்தருமனுடனிற்றையரியவமர்விளைவுற்றதெனவுரைசெய்தான். (௫௫)

ஒருபத்தொடுறழொருபதுறழ்பத்தொடுறழொருபதுடையெட்டுநிருபருயிர்நீ
தெரிவித்தபகழிகொடுமடிவித்துவலிமையொடுசிலைவெற்றியுறவமர்செய்தாய்
மூராணற்றதிவணினியுனுயிரொத்ததமையனொடுமுனைபுக்குவிரைவினனுகா
வரையொத்தகளிறுடையபகதத்தனுயிர்கவரவருகிற்றிநொடியிலெனவே. (௫௬)

அரியொத்தபரிகடவிமனமொத்தவிரதமிசையமரர்க்குமுதல்வன்மகனோ
டெரிபற்றிவருமனிலமெனவெற்றிவரிவளையுமிகழ்வைத்தவொருநொடியிலே
கிரிமுற்றுமரிவதொருகிளர்வச்சிரமெனவுதயகிரியுற்றபரிதியெனவே
கரிசுற்றும்வரவிகடகடக்கைம்மலையில்வருகணைவிக்கிரமனையணுகினான். (௫௭)

அனிலத்தின்மதலையொடுவயிரத்துமலையுமுனையமர்விட்டுமுகிழ்நகைசெயா
வினியிற்றையமரிலரிதெளிதொட்டியெதிர்பொருதலெனமத்தகரியின்மிசையான்
மனமுற்றுமழல்கதுவமொழிமுற்றுமிடிநிகரவலிபட்டசிலையைவளையா
மினலொத்தகணைபலவும்வசையற்றபுகழுடையவிசயற்குமிசையுதவினான். (௫௮)

அவன்விட்டசுடுகணைகள்கொடிமற்கடமுநடுவணறவெட்டியதிதவளமா
கவனத்தின்முடுகியடுபரிகொத்தியுடலிவிடுகவசத்தைமறையநுழையூச்
*சிவமுற்றமலரினுறைபிரமற்குமுணர்வரியதிகிரிக்கைவலவனையுமே
சவனத்தின்மிகுதுயரமுறுவிக்கவவசமிகுதளர்வுற்றதனுவிசயனே. (௫௯)

உரமிக்கதனுசிலைகுனிவித்துமதியின்வகிருவமிக்குமடுபகழியால்
வரமிக்கதவளநிறமதவெற்பையெதிர்கடவிவருவெற்றியவனிபதிநீள்
கரமுற்றசிலைகவசமறவெட்டிவிடுகணைகள்கணைவிட்டுவிலகவவன்மா
சரம்விட்டொரயில்விசயனிரதத்தின்வலவன்மிசைதமரத்தினுடனெறியவே. (௬௦)

* சிவனுக்குமலரிலென்றும் பாடம்.

எறிகுற்றவயிலசுரருயிர்செற்றவயிலதனையெதிர்முட்டவிடுபகழியாற்
றறிவித்துமகபதிதன்மகன்முக்கணிறைவனொடுசரியொத்துமுறுவல்புரியா
வெறிமத்தகாடமுகபடசித்ரபுகர்கொண்முகவிகடக்கைகம்மலையணியெலா
முறியத்தன்வரிவிலுமிழ்முனைபட்டபகழிமழைமுகில்வர்க்கமெனமுடுகினான். (௬௧)

அணிகெட்டமதகரிகள்கரமற்றுவிழமுதியசிரமற்றுவிழவருகுதாழ்
மணியற்றுவிழநெடியகுடலற்றுவிழமுழைகொள்வயிறற்றுவிழவுடலெலாந்
துணிபட்டுவிழவிசிறுசெவியற்றுவிழவலியதொடையற்றுவிழமகரிகைப்
பணிபெற்றபணைகளொடுபதமற்றுவிழவுழுதுபடிவித்தபலபகழியே. (௬௨)

பெயர்பெற்றகரிவயவர்பிணமிக்கவமரினிடைபிறகிட்டுமுறியுமளவே
சயசக்கிரதானையிவன்வழிபட்டபொழுது தருதழலுக்கிரமுடையதொருவேல்
வயமுற்றசிலைவிசயனுடலத்தினெறிவது தன்வடிவத்தினுறவுதவினா
னயர்வுற்றவுணர்வினலமெனமுத்திமுதல்வனெனவருகுற்றரதவலவனே. (௬௩)

பருமித்தகளிறுவிடுபகதத்தனெறியுமது பகைசெற்றுவருகொடியவேல்
மருமத்தினிடைமுழுகுபொழுதத்திலது புதியமணிவர்க்கமிகுதொடையலாய்த்
திருமித்தபடிதனது புயவெற்பின்மிசையொளிர நிகரற்றகருணைவடிவைக்
கருமத்தின்முதலையிமையவர்சித்தமொடுதொழுது கரையற்றபுகழுரைசெய்தார். (௬௪)

இதுநிற்கயமனைநிகர்பகதத்தனுயிர்கவரவிது பக்குவமெனவிசயனோ
டுதரத்தின்முழுதுலகுதுடிவைத்தபுயனுரைசெய்து அறுதிக்கண்விடுபகழிதா
னிதயத்திணுடனருளவுயர்வச்சிரன்மதலைதொழுதிருபொற்கைமலர்கொடுகொளா
வதிரத்தனெதிர்களிறுபொரவிட்டநொடியிலவனகலத்தினுருவவிடவே. (௬௫)

பரிதத்தவருமிரதமிசைதத்தவெதிர்முடுகுபகதத்தனுடன்முழுதுநீ
டெரிதத்தியுகுவதெனவுகுவித்தகுருதிநதியிடைதத்தவிகெழுவுதோட்
கிரிதத்தமகுடமொடுதலைதத்தவொருரசதகிரிதத்திவிழுவதெனவே
கரிதத்தமறியலைகைகடைதத்தியுவகையொடுகளமுற்றுநடநவிலவே. (௬௬)

வேறு.

பகதத்தனும்பட்டவனூர்ந்தபகடும்பட்டுப்புடைசூழச்
சிகரக்கிரிபோலணிநின்றசேனைக்களிறும்பட்டமைகண்
டிகலிற்பொழிகார்வெஞ்சிலைக்கையிமையோர்தலைவன்குமரனையும்
புகழ்தற்கரியபாகனையும்புகழாரில்லைப்பூபாலர். (௬௭)

விருதுஞ்சங்கும்பல்லியமுமேன்மேலதிரவிற்போரிற்
பொருதின்றிவனைக்கொன்றன்றிப்போகோமென்னப்புடைசூழ்ந்தார்
மருதுஞ்சகடும்விழவுதைத்தவலவன்கடவவாயுவெனக்
கருதும்புரவித்தேருருங்கழற்காவலன்மேற்காந்தாரர். (௬௮)

காந்துந்தறுகட்காந்தாரர்கடுவெங்கனல்போற்கண்சிவந்தங்
கேந்துஞ்சிலையாற்சரமழைபெய்தெழிலிக்கணம்போலெதிரூன்றச்
சாந்தும்புழுகுங்கமழ்வாகுச்சகுனிதனயர்தலைப்போரிற்
சேர்ந்தன்றிறந்தார்விடசெயனுஞ்செயனுமெனும்போர்ச்செயவீரர். (௬௯)

சஞ்சத்தகர்விண்குடியேறத்தானேயடர்த்தான்பகதத்தன்
விஞ்சைக்கடவுள்சிகரநிகர்வேழத்துடனேவிழப்பொருதான்
வஞ்சச்சகுனிமைந்தரையுமலைந்தான்விசயன்வடிக்கணையா
லெஞ்சப்பொருதநரபாலர்க்கிலக்கேதன்றங்கெண்ணுதற்கே. (எ0)

இங்கிப்படிபோருடன்றெழுந்தசகுனியிவன்கையெரிகணையாற்
பங்கப்பட்டவாசொழியப்படாதவரசர்பலரோடுஞ்
சிங்கத்தனியேறெனச்செம்பொற்றேர்மேனின்றதருமனுடன்
புங்கப்படையாலமர்புரியப்புகுந்தான்மதுகைப்புலிபோல்வான். (எக)

சோரத்துடனீபொருதடர்த்தசூதன்றிவைமெய்துளைத்துருவும்
வீரப்பகழியனையிவற்றால்வெல்வேனெனப்போர்வில்வாங்கி
வீரக்கருணைமுகத்தண்ணலெய்தானவற்றுக்கெட்டாமற்
பேரப்போத்தேர்கடவிப்பின்னிட்டவர்க்குமுன்னிட்டான். (எஉ)

உடனேவந்துபொருநிருபரொருவர்க்கொருவருதிட்டிரன்கை
விடனேர்கணையாலேவுண்டுவிளிந்தாரொழிந்தார்வெஞ்சமத்திற்
கடனேதெமக்கென்றூர்புகுந்தார்காலைச்செந்தாமரைமலர்ந்த
தடநேரென்னநிறம்பெற்றதப்போதந்தச்சமபூமி. (எ௩)

ஆசாரியனுந்திருமகனுமடல்வேலங்கர்பெருமானுந்
தூசாருரகக்கொடிநெடுந்தேர்த்துரியோதனனுந்தம்பியரும்
வீசாநின்றமாருதம்போன்மேல்வந்தடுத்தவீமனுடன்
கூசாதெதிர்ந்துவெம்பகழிகோத்தார்விசும்பைத்தூர்த்தாரே. (எச)

கெடுமோகருடனுரகர்க்குக்கிரிவெஞ்சாபந்தனையரிக
ளடுமோசக்கிரபாணியுடனமருந்துவரோவசுரேசர்
நெடுமேருவின்முக்குவடொடித்தானேயப்புதல்வன்பேருடலிற்
படுமோதொடுத்தபகழிபருப்பதஞ்சேர்மழைபோற்பாறினவே. (எரு)

பொல்லாவவுணர்வைகியமுப்புரநீறெழவன்றாள்வளைத்த
வில்லாமென்னவலியவிறல்வில்லொன்றெடுத்துவிறல்வீம
னெல்லாமன்னவருமூர்ந்தவெல்லாவிரதங்களுமிமைப்பின்
வல்லானெறிந்தபம்பரம்போற்சுழலும்படிகால்வளைத்தானே. (எசு)

ஒன்றுமுதலாப்பலபகழியோரோர்தொடையிற்றொடுத்தேவி
யன்றுமுதன்மையுறமலைந்தவரசருடலந்தொறுமூட்டி
யின்றுமுதலாயோதனத்திலேறுமென்னும்படியாகக்
கொன்றுமுதற்பின்வருமுரகக்கொடியோன்மனமுங்கொதிப்பித்தான். (எஎ)

கொதித்தானரசனெனவரிவிற்குனித்தாரிளைஞர்குனித்ததுகண்
டதிர்த்தான்வீமன்றன்கணையாலறுத்தான்வில்லுமணிநாணும்
விதித்தான்வரினும்வீமனுடன்விற்போர்புரிதலரிதென்று
மதித்தார்தம்முனினைத்தவெல்லாமுடிக்குஞ்சமரவரிவில்லார். (எஅ)

நின்றார்நின்றபடிகொடித்தேர்நிருபன்றனையுமிளைஞரையும்
வன்றாள்வரிவிற்குருவினையுமைந்தன்றனையுங்கன்னனையும்
பொன்றாழ்மார்பிற்பல்படைக்கைப்பூபாலரையுங்கொல்லாமற்
கொன்றான்வாயுகுமரன்றன்கோலாகலவெங்கொடுங்கணையால். (௭௧)

இளைத்ததடையப்பெருஞ்சேனையினிநாமொன்றுக்கிடரகோம்
வளைத்தசிலையோடிவணிற்கமாயன்றன்னோடிவணிற்கத்
துளைத்தகணையாற்றுரோணன்வலிதொலைத்தோணிற்கமலைந்திவரைத்
திளைத்தலரிதென்றக்களத்திற்பொன்றுவரசர்சென்றாரே. (௮௦)

பெரும்பேரறத்தின்றிருமகவைப்பிடிப்பானெண்ணிமுடிப்பான்போற்
பொரும்போரரசருடன்வந்தபொற்றேர்முனியும்புறம்போனான்
*பரும்போருரகக்கொடிவேந்தன்பட்டான்மிகவும்பரிபவமென்
றரும்பேரரசர்களித்தாடவருந்தம்பாசறையடைந்தார். (௮௧)

காரிற்குளிர்ந்துகுழைந்தசெழுங்கானம்பூத்ததெனக்கவினிப்
பாரிற்பிறந்துசிறந்தவிந்தப்பன்மாநிறத்தபரியினத்தும்
போரிற்புகுந்துமடிந்ததற்குப்புறந்தந்தஞ்சிப்போவான்போற்
றேரிற்றுரகங்கொண்டோடிக்குடபாலடைந்தான்றினகரனும். (௮௨)

வேறு.

அறந்தந்தமைந்தற்கும்வீமற்கும்விசயற்குமபிமற்குமே
புறந்தந்தவயவீரரெல்லாருமரசன்புறஞ்சார்பிருந்
திறந்தந்தயூகத்துவாராதமன்னர்க்கிரங்காவழா
மறந்தந்தவேழத்துடன்பட்டபகதத்தன்வலிகூறினார். (௮௩)

மன்னர்க்குமன்னன்றன்முன்வைகுமுனிதன்னைமதியாமனீ
தென்னற்கலங்காமனுரைசெய்தவுரையின்றுநில்லானதே
கன்னப்பெயர்க்காளைமறைபந்தணர்க்கென்னகட்டாண்மையுண்
டென்னச்சிரித்தான்வணங்காதவர்க்கென்றுமிடியேறனான். (௮௪)

தெருமந்தசிந்தைச்சிலைக்கைக்குருக்கண்சிவப்பேறவே
யுருமுந்திகைக்கக்கொதித்தங்கர்பதியோடுறக்கூறுவான்
கருமந்தவாவில்விறற்கன்னனேயல்லகழன்மன்னரிற்
றருமன்றன்முன்னிற்கவல்லார்கள்யாரித்தளந்தன்னிலே. (௮௫)

இன்றல்லநாளைக்குமாநின்னவைக்கண்ணிருந்தோர்களிற்
சென்றல்லலுறமோதியறன்மைந்தனைத்தங்கள்சிலையாண்மையால்
வென்றல்லதணுகாதவீரர்க்குவிடைநல்குவிறன்மன்னநீ
நன்றல்லவீரத்திலோரஞ்சொலுவதென்றானனிசீறினான். (௮௬)

வில்லாண்மையாவர்க்குமின்றென்றெனைப்போலமிகுவஞ்சினஞ்
சொல்லாமலறன்மைந்தனைப்போர்மலைந்துங்கடோளாண்மையால்
வல்லாரினிக்கொண்டுவம்மின்கள்வந்தாலிம்மண்ணென்றுமோ
வல்லாதவுலகிற்குமிருநாலுதிக்கிற்குமவர்வீரரே. (௮௭)

---

* பரும்பேருரகக்கொடி என்னும் பாடம்.

எம்போலவரிவில்லெடுத்தெய்யயார்வல்லரெனும்வீரரும்
வெம்போரில்வந்தாலொராணுவுக்குநில்லாதுவிளிகிற்பரால்
வம்போதியென்பேறுவல்லாண்மைபுனையந்தவில்லாளிகூ
ரம்போடிராமன்கையடலம்புழுவமிக்கிலதிபாவமே. (அஅ)

கொத்தொத்ததொடையொத்தவளவொத்தசிறகொத்ததூதையொத்தவந்
தொத்தொத்துமுனையோடுமுனைதத்திவிழுமாறுடன்றேவினன்
றத்தொத்தபுரவித்தடந்தேர்மனென்னோசொதித்ததும்
வித்தொத்ததென்வாளியவன்விட்டவடிவாளிவிளைவொத்ததே. (அகூ)

வன்மைக்குவயவீமன்வின்மைக்குமுகிலூர்திமகனன்றிவே
றின்மைக்குமாவிந்தைகிரிகன்னிகரியென்பரெம்மன்னரும்
வின்மைக்கும்வன்மைக்குமிளையோரையனையாரைமிகவெண்ணலாந்
தன்மைக்குநிலையானதருமற்குநிகர்யார்தனித்தெண்ணவே. (கூ0)

அதிர்வார்களதிர்மின்களதிரப்பொரும்போரிலறன்மைந்தனோ
டெதிர்வார்களுண்டாகிலிக்கங்குல்சென்றாலினிக்காணலா
முதிராவாய்மையாலெனனபயனென்றுவெஞ்சாபமுனியேகினான்
கதிர்வார்முடிக்கோவுமரசர்க்குவிடைதந்துகண்டுஞ்சினான். (கூக)

மகதத்தரிற்சூரசஞ்சத்தகரிலுள்ளமகிபாலரும்
பகதத்தனுந்துள்ளியெதிர்வந்தகாந்தாரபதிமைந்தருந்
தகதத்தவெனவெங்களத்தூடுவிழவென்றதனுவேதியுஞ்
சுகதத்தமுறவோடிவென்றோர்களுங்கண்டுயின்றார்களே. (கூ௨)

நிலையானவயவீரருந்தேவராய்நின்றநிலைகண்டுவெண்
கலையானிரம்புஞ்செழுந்திங்களோகக்கடைக்கங்குல்வா
யலையாழிமுழுநீலவுறைநின்று* மாணிக்கமணியாடிபோ
லுலையாதவொளிகொண்டகதிராயிரத்தோனுமுதயஞ்செய்தான். (கூ௩)

பன்னிரண்டாம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச்செய்யுள்—கூககூ.

---

# பதின்மூன்றாம்போர்ச்சருக்கம்.

சங்கையிலாவகையமடறாலுயிர்தளர்பொழுதத்தருகே
மங்கையர்சூழவிருந்தழுதுள்ளமயக்கினும்யான்மறவேன்
கங்கையுநான்மறையுந்துளவுங்கமழ்கழலிணையுந்திருமா
லங்கையின்மீதொளிர்சங்கமுநேமியுமஞ்சனமேனியுமே. (க)

---

* மாணிக்கவணியாழிபோல் என்றும் பாடம்.

நஞ்சவியாளமுயர்த்தபதாகைநராதிபனேவலினால்
விஞ்சவருதினிமன்னர்திரண்டனர்விசயனையேயிடுவா
னெஞ்சவராலழிவுண்டதபோதனனொருநவினுங்கடுகிப்
பஞ்சவர்கோமுதல்வன்றனைவன்பொடுபடைபொரவெண்ணினனே. (௨)

இலக்கணமைந்தனுமைந்துடைமன்னவனிளைஞருமெம்முனையுங்
கலக்குறவென்றகலிங்கருமுட்படுகாவலர்பற்பலருஞ்
சிலைக்கைவயம்பெறுசிந்துநராதிசெயத்திரதன்சிரமா
நிலக்கணெழுந்துகள்வானிடைசென்றிடநின்றனர்போரணியே. (௩)

அக்கரம்யாவுமுணர்ந்தசிலைக்குருவாசுரசேனைநடுச்
சுக்கிரனார்நிகரென்னவகைப்படுதூசியின்மாமுறையே
யெக்கரமும்படைகொண்டெழுசேனையையெயில்கள்வளைப்பனபோற்
சக்கரயூகம்வகுத்திரதத்திடைசயமுறநின்றனனே. (௪)

ஒப்பறுபோரினில்வாகைபுனைந்தவுதிட்டிரனன்றடையார்
தப்பறவெண்ணியவெண்ணமுணர்ந்துதனஞ்சயனுக்குரைத்
தப்பறுகோடையில்வெங்கதிரோனெனவாகவனீள்வரிவிற்
றப்புறுசிந்தைதமகீபர்வருதினிசூழநடந்தனனே. (௫)

ஈரிருதேரினர்மூவகையானையரெண்ணறுமாமிசையோ
ரோரிருநாலுடையையிருபூமியிலுள்ளபதாதியுடன்
பாரிருநாலுதிசாமுகமும்படையோடுபரந்துவரும்
பேரிருமானவருதினியின்றிரள்பேசுறலாமளவோ. (௬)

வருபடைதன்னைநிறுத்திவிதம்படமகரவியூகம்வகுத்
தொருபகல்யூகமுமிப்பகலுக்கினியொப்பிலவென்றிடவே
குருபதியுந்திருமாலுமதிக்கவணிந்தடுகோளரிபோற்
றுருபதன்மைந்தனுநின்றனனந்தரதுந்துபிமீதெழவே. (௭)

இத்தகவாகவணிந்திருசேனையுமெதிர்முனையும்பொழுதின்
முத்தகவெண்குடைமன்னவனேவலின்முற்பகலின்படியே
மத்தகமாமுதலாகியநான்மைவருதினிதன்னொடுசந்
சத்தகர்வந்தறைகூவவெகுண்டுதனஞ்சயனேகினனே. (௮)

மால்விடுதேர்மிசையான்வரிசாபம்வளைத்ததுமல்லிகல்வெங்
கோல்விடுபூசலும்வில்லுடனேபொழிகொண்டல்வியப்பெனலா
மேல்விடுதேர்களும்யானையும்வாசியும்வீரருமெய்யுருவக்
கால்விடுதாரையெழுஞ்சருகென்னவுடைந்தனர்கையறவே. (௯)

பட்டவரெத்தனையாயிரர்நின்றுபடாமலுயிர்ப்புடன்வெந்
நிட்டவரெத்தனையாயிரரஞ்சவினேருகவென்றமர்வாய்
விட்டவரெத்தனையாயிரர்தங்குலமேன்மையும்வெந்திறலுங்
கெட்டவரெத்தனையாயிரரன்றுகிரீடிதொடுங்கணையால். (௧௦)

ஓரொருடம்பினிலாயிரமாயிரமுற்பலவாளிபடத்
தாரைபடும்படிபொழிமுகிலொத்தனர்சமர்முனையிற்றரியார்
மாரனையங்கமெரித்தருள்கண்ணுதல்வடிவமெனும்படியே
பாரொருபாதிசிவந்ததுமேனிபரந்தெழுசோரியினால். (௧௧)

இந்திரன்மாமகனிங்கிவர்தம்முடனிம்முறைபோர்புரியச்
சந்திரசூரியமண்டலமொத்தணிதானையிரண்டுமுனைந்
துந்தியவேலையினுந்திகளுனுடையுந்திரதத்திடைபோ
யந்தணன்மேல்வரிசாபம்வளைத்தனனவர்படைத்தலைவன். (௧௨)

நூலொடுசாபம்வளைத்தவன்மற்றிவனெய்தினுகைத்தவடிக்
கோலொடுகோன்முனையற்றுவிழுந்தொடுகுனிசிலைநாணழியச்
சேலொடுசேல்பொருசீலமெனும்படிதேர்களிரண்டுமணிக்
காலொடுகால்பொரவன்றுவசத்தொடுகவசமழித்தனனே. (௧௩)

அருமுனியாதிவதிட்டனுமன்குலவாதியுமந்தணனும்
பெருமுனிதானுமுடற்றியபோர்சிலர்பின்பொருதாருளரோ
வொருமுனியேழ்கடலுங்கரமொன்றிலொடுக்கினன்மன்னனைமேல்
வருமுனிவென்றனன்முனிவருடன்பொரவல்லவர்யார்புவிமேல். (௧௪)

வந்தெதிர்முட்டுதலுந்தனதேரினைமாறுபடத்திருகிச்
சிந்தையுமானமுமட்கவீரமும்விட்டொருசெயலறவெந்திடலுந்
தந்திரநாதனுடைந்தனனென்றிருதானையின்மன்னவரு
மந்தணனுண்மையும்வன்மையும்வின்மையுமன்றுதுதித்தனரே. (௧௫)

வேதியன்விட்டசரங்களினொந்துவெரீஇவருமன்னவனைத்
தாதவிழ்பொற்றொடைமார்பிலணைத்துயர்தருமனுரைத்தருள்வா
னீதவறிற்பினையார்நிலைநிற்பவர்நிருபர்சிகாமணியே
மோதியிளைத்தனையாறுகெனப்பலமுகமன்மொழிந்தனனே. (௧௬)

நன்னெதிர்மாமயிலோனெனநின்றதனஞ்சயன்மாமகவைப்
பொன்னெதிர்பேரொளியருள்வடிவாகியபூபதிவருதியெனு
நின்னெதிர்போரினினிற்பவர்வேறிலர்நேமிவியூகமுநீ
முன்னெதிராவமர்புரிபொழுதன்றிமுரண்குலையாதினியே. (௧௭)

என்னைவளைத்திடநென்னலுடன்றுவெநிட்டவிலாசிரியன்
மன்னைவளைத்தொருசக்கரயூகம்வகுத்தெதிர்நின்றனனு
னின்னையளித்ததாபதிதன்னையுநின்னையுமேயொழியப்
பின்னையெடுத்தவிலோடெதிர்சென்றுபிளந்திடவல்லவர்யார். (௧௮)

புல்லுகவென்றனன்மார்புறவன்பொடுபுல்லியிமைப்பொழுதிற்
செல்லுகவென்றனன்வன்சமரத்திடைசென்றுமிகப்பகையைக்
கொல்லுகவென்றனனின்புயமேவருகொற்றவைதன்னருளால்
வெல்லுகவென்றனனன்றுதுரோணனைவென்றபெருந்தகையே. (௧௯)

## வேறு.

மூத்ததாதைதன்னைவலிற்கழன்முளரிகைதொழுதாளுறச்
சேர்த்தநாணுடைவில்லன்வெய்யதெரிந்தவாளியன்முதுகுறக்
கோத்ததூணியன்வாண்முகதற்பலகொற்றமுற்றியபடையினன்
பார்த்தன்மாமகனிரதமீதுயர்பரிதியாமெனவேறினான். (உ0)

வீரவார்கழல்கழலின்மீதுவிளங்கமார்பினில்வெண்ணிலா
வாரமாலைதுலங்கமாசுணவலயம்வாகுவிலழகெழச்
சேரவானமதிருளகற்றுமிரண்டுசெஞ்சுடரென்னவே
சாரமாமணிகுண்டலங்கள்வயங்கமௌலிதயங்கவே. (உக)

இனஞ்செய்கேண்மைகொடுருபதேயனுமெண்ணில்கோடிமகீபருங்
கனஞ்செய்தூரியமெழவெகுண்டெறிகாலெனும்படிகைவரத்
தினஞ்செய்நாதனடாவுதேர்நிகர்தேர்விரைந்துசெலுத்தினான்
றனஞ்சயன்றலைநாண்முயன்றதவம்பலித்தனதன்மையான். (உஉ)

ஓதைகொண்டணிநின்றசக்கரயூகமன்னருந்தொறுங்
கோதைதங்குகரத்தில்வில்லுதைகூரவாளிகுளிக்கவே
சீதைகொண்கனுமேவலாருயிர்தென்புலத்திடுதன்பெருந்
தாதையுந்தரமெனவிமைப்பிடைதாவுதேரினனேவினான். (உ௩)

அச்சுதப்பெயர்மாதுலன்புகலரியமந்திரமன்பினோ
டுச்சரித்தொருநொடியினிற்பலகோடிபாணமடற்றினா
னெச்சிரத்தையுமெய்ப்புயத்தையுமிடைதுணித்தனனடையமுன்
வச்சிரத்தவனுரைசெய்சக்கரமாறிலாவணிபாறவே. (உச)

மல்லலம்புயவபிமன்வெஞ்சரமழையனைத்தையுமாலெனப்
பல்லவெங்கணைகொடுவிலக்கிமுனைந்துவந்தெதிர்பற்றினான்
வெல்லவந்ததுரோணமாமுனிவிறலழிந்ததுகுருவெனுஞ்
சொல்லழிந்ததுவில்லழிந்ததுதேரழிந்ததுதொடைகளால். (உரு)

தந்தைவெந்நிடுமுன்னர்முப்புரதகனனேநிகர்மகன்மிகச்
சிந்தைகன்றிவெகுண்டுதேரொடுசென்றுகால்வளைசிலையினா
லுந்துகின்றசிலீமுகம்பலபகைமுகங்களினுருவவே
முந்தினானவனப்புமாரியின்முழுகினானுடன்முற்றுமே. (உசு)

கன்னனென்றுலகெண்ணும்வீரனுமொய்ம்புடன்பலகணைகள்வான்
மின்னெழுங்கொருகோடியென்னநிறுத்திமெய்யுறவீசினா
னன்னவன்பகழிக்குலங்களநேகமோகரமாகையா
லென்னவெஞ்சமமினிநமக்கெனவேறுதேருடனேகினான். (உஎ)

கிருபமாமுனிதானுமேதகுகிருதவன்மனுமோர்புறத்
திருவராண்மையுநிலைபெறும்படிசென்றுதூவினரேவினா
லொருவனேயிவனிவனெடுத்ததுமொருசராசனமம்பிலே
வெருவியோடினர்தங்களோரிருவில்லுமற்றுவெறுங்கையே. (உஅ)

சகுனியுந்திருமகனுமற்றுளதமருமேலிடுதானையோ
டிகனெடுங்களம்வென்றுகொள்குவமென்றுவந்தெதிரணுகினார்
மகன்விழுந்தனன்மார்பின்மூழ்கியவாளியொன்றினின்மற்றுளார்
மிகநடுங்கியொடுங்கியோடினார்வீழுமன்னர்கள்வீழவே. (௨௯)

வின்முகத்தெழுவாளிவாளிவிலக்கவந்தவிகன்னனுந்
துன்முகன்றலையாகமற்றுளதுணைவருஞ்சமர்துன்னினார்
நன்முகம்பெறுவிசயன்மைந்தனுநானுமக்கெதிரன்றுநீர்
பின்முகம்படவோடியின்றுயிர்பிழையுமென்றுரைபேசினான். (௩0)

மற்றுமற்றுமுனைந்துவந்துமலைந்தவெஞ்சினமன்னர்மெய்ம்
முற்றுமுற்றுமிவன்கைவாளிகண்முனைபுதைந்திடமூழ்கலா
விற்றவிற்றபடைக்கலங்களுமெய்த்தவெய்த்தபதாதியு
மற்றவற்றவிதங்கொள்வாகமுமாகியேகினரடையவே. (௩௧)

இளையவன்றனிமதலைதெவ்வரிளைக்கவிப்படியிகல்செயத்
தளையவிழ்ந்தவலங்கன்மீளிசமீரணன்றிருமதலைபோய்
வளையவன்சிலைமன்னவன்கழன்மலர்வணங்கிவணங்கலா
ருளையவந்தமர்முடுகிநின்றமைகண்டுசோகமொடுரைசெய்தான். (௩௨)

தேரநேகமநேகநேமிதுரங்கமங்களநேகநீள்
வேலநேகமநேகம்வாள்வரிவில்லநேகவிதம்படக்
காலநேகமெழுந்ததொத்தமராடுகின்றகளத்திடைப்
பாலனேகடிதேகிவெம்முனைபயிலுவானொருபாவமே. (௩௩)

எனக்குநீவிடைநல்குகென்றவனிருபதந்தொழுதியாரினுந்
தனக்குநேர்தனையல்லதில்லெனவெல்லவல்லதொர்தண்டினான்
மனக்குநேர்வருதேரினன்பலமண்டலீகருமன்னருஞ்
சினக்குழாமுறுசேனையும்புடைசூழவன்றெதிர்செல்லவே. (௩௪)

சாயையொத்தெழுசேனையோடெதிர்தடவிமன்குலவடவியிற்
றீயையொத்துவிளங்குமாருதிசென்றுமண்டியதிசையெலா
மாயையொத்தொருவடிவுமின்றிவருத்தசக்கரமண்டல
மீயையொத்ததுகலுழனொத்தனனீறிலாவரியேறனான். (௩௫)

கலிங்கர்சோனகர்மகதர்கன்னடர்கங்கர்கொங்கணர்கௌசலர்
தெலுங்கராரியர்துளுவர்பப்பரர்சீனர்சாவகர்சிங்களர்
குலிங்கர்மாளவர்களமரொட்டியர்குகுரர்கொப்பளர்கூபகர்
புலிங்கசாலமெனச்சதாகதிபுதல்வனோடுறுபோர்செய்தார். (௩௬)

பொருதபற்பலபாடைமன்னவர்பொன்னிலங்குடிபுகுதவே
விருதவித்தகனுடன்வரும்பலபாடைமன்னவர்வெட்டினொ
*ரொருதிறத்தசிலிமுகங்களுறுக்கியோடியுடன்றநா
ணிருதர்பட்டதுபட்டிறந்தனர்நேமியுட்படுநிருபரே. (௩௭)

---

* ஒருதிறத்துவலீமுகங்கள் என்றும் பாடம்.

மண்டுகொண்டலின்மிகவதிர்ந்துமருத்தின்மைந்தனுருத்தெழுந்
தண்டுகொண்டுவியூகமாகியசக்கரத்தையுடைத்தலால்
விண்டுகொண்டுமுருக்குமாறுதிமீளவந்தனனுமெனக்
கண்டுகொண்டனன்வெஞ்சினக்கனனின்றுகாய்தருகண்ணினான். (௩௮)

வேறு

நபமுகின்முழங்கியேறிபிடிவிடநடுநடுங்கிமாயுமாவென
வுபரிபெழுகின்றசீயம்வரவரவுடையுமிபசங்கமொடுவனமென
வபிமனொருவன்கைவேவினமபடையபடையநெளிகின்றதாயபொழுதினில்
விபினமிசைமண்டுதீயொடனிலமும்விரவுமியல்பந்தவீமனனுகிலே. (௩௯)

சகுனியுடன்விந்துபூரிமுதலியதரணிபாடங்கவேகிமகபதி
மகன்மகனொடிங்குறுதபடியெதிர்வளைமின்வருகந்தவாகன்மதலையை
விகனனுமடங்கல்போலுமினொருநும்விருதர்பலருந்துரோணன்மதலையு
மிகன்மலையிலிந்தராழிகையிலிவரிருவரையும்வென்றுகோறலெளிதரோ. (௪0)

எனவுயர்புயங்ககேதுவுரைசெயவிவனைவிடைகொண்டுவீரனைவரு
முனைபடவணிந்துகாலமுகிலெனமுரசினமுழங்கவோடியெதிரெதிர்
கனலெனவெகுண்டுசேனைபலபலகசரததுரங்கராசியுடன்வர
வனிலகுலமைந்தனனபதியொடுமபிமனொடும்வந்துபோரின்முடுகவே. (௪௧)

விழிமலர்சிவந்துகோலமநிறுதல்வெயர்வரவிரண்டுதோளுமுறைமுறை
யழகுறவிளங்கமூரனிலவெழவணிமகரகுண்டலாதிவெயிலெழ
முழவினொடுசிங்கநாதமெழவெழமுடுகியெதிர்சென்றுமோதியவரவ
ரெழில்வடிவமெங்கும்வாளியுதையினனிரதமிசைநின்றவாயுமதலையே. (௪௨)

மணிமுடிசிரங்களோடுதறிபடவலையமொடணிந்ததோள்கடறிபட
வணிகழலொடுந்துதாள்கடறிபடவயிலொடுகரங்களானதறிபட
நணியவிரதங்கள்சாயவிவுளிகணடுவறவளைந்தசாபமுதலிய
துணிபடவழிந்துமீளநடவினர்துவசபுயகன்பதாதிநிருபரே. (௪௩)

விசயன்மகனுந்தன்மீதுவரும்வரும்விருதருடலங்கள்யாவுநிரைநிரை
தசைகுருதியென்புமூளையிவையிவைதரணிமிசைசிந்திவேறுபடவிழ
வசையவிரதங்கடாவிவளைதருமணிசிலையுமம்புமாகிமுனைமுனை
திசைதொறுநடந்துசீறரவியெதிர்திமிரபடலங்களானவடையவே. (௪௪)

இருவரெதிரும்பொருமன்முடுகியவிருபடையுநெந்துமீளவவனிபன்
வெருவொடுதளர்ந்துபோனநிருபரைமிகவசைமொழிந்துபோதநகைசெய்து
கருகிமுகநெஞ்சுகோபவனல்கொடுகதுவிநயநங்கள்சேயநிறமுற
வருகுவருசிந்துராசதிலகனொடுபரிமிதமின்சொலாகவுரைசெய்தான். (௪௫)

மறனுடையைசெம்பொன்மேருகிரிநிகர்வலியுடையைவென்றிகூறுமாசிய
லறனுடையைபஞ்சபாணனெனவடிவழகுடையைநின்றசேனையாசரி
ணிறனுடையைதிங்கள்சூடியனதிநிறைபுனல்பாந்துலாவுமவுலியர்
திறனுடையமனறனுருமலரடிதெளிவொடுபணிந்தனானமுடிவினை. (௪௬)

வயவிசயனின்றதேர்கடவிவரும்வலவன்மருகன்றனோடுவனைபுனை
புயமுடையதண்டவீமனுறிலிருபொருநரையுமின்றுபூசல்பொரவரி
தயலிவரகன்றுபோகிலமர்பொரவறவுமெளிதுண்டுபாயநுதலெரி
நயனனருள்கொன்றைமாலைதனையிவர்நடுவிடிலிரண்டுபாலுமகல்வரே. (சஎ)

அரன்முடியணிந்ததாமமிதுவெனவடிகொடுகடந்துபோகவெருவுவர்
பரவைநிகர்நம்பதாதியவனிபர்பலருடன்வளைந்துகோலியமரிடை
வாமுறவணங்குநாளிலருள்செய்துமனமகிழுமங்கைபாகனுதவிய
வரனுடையதண்டினாலிவ்வபிமனையுயிர்கவர்தலின்றுசாலவுறுதியே. (சஅ)

எனவிவன்மொழிந்தபோதிலவனிவனிணையடிவணங்கியாதுநினைவினி
யுனதுநினைவெஞ்சிடாமலபிமனையுயிர்கவர்வனென்றுதேறவுரைசெய்து
கனகதருமன்றன்மாலையெனவொளிர்கடியிதழியந்தண்மாலைபரமனை
மனனுறவுணர்ந்துநாவினிகழ்தருமறையொடுவளைந்துவீழவெறியவே. (சகூ)

எறிதொடையல்சங்கபாணிமருமகனிகலுமமர்வென்றுமீளுமளவைபி
னெறியிடைவிளங்கிவாளகிரியெனநிமிர்வுறவளைந்துசூழவருதலு
மறிவுடனிறைஞ்சியாதிபகவனதணிமுடியலங்கலாகுமடையலர்
முறியவினிமண்டுபோரிலமர்செய்துமுடிதுமெனவந்துமீளமுடுகவே. (ருO)

வேறு.

பரிசனகுமாரன்விடு
மெரிகணைகளான்முடுகு
தரியலர்பதாதிபடை
நெறியவருகாலையிலே. (ருக)

விறலபிமனின்றகள
முறுதுமினியென்றுநனி
குறுகலும்விலங்கியது
நறையிதழியந்தொடையே. (ருஉ)

இன்றமரின்யாருமுயிர்
பொன்றிடினுமீசனணி
கொன்றைகடவேனெனமுன்
னின்றனனராதிபனே. (ருங)

முந்துவடிவாளமரின்
வந்தனுகுவான்மதலை
நிந்தனைகொலாமிதென
நொந்துசிலகூறினனே. (ருச)

இந்தமதுமாலையிடை
தந்தபிமனுருயிரை
யுந்திவிடவோவெளிது
சிந்துபதிசேவகமே. (ருரு)

விரகுபடவெப்பொழுது
முரணமர்தொடக்கும்வலி
யுரகதுவசற்கொழிய
வரசரிலெவர்க்குளதோ. (ருசு)

தன்மகனையுஞ்சமரில்
வன்மையொடுகொன்றொழிய
மன்முனைதிரண்டிடினு
மென்மகன்மடிந்திடுமோ. (ருஎ)

என்றிதழிமாலைதனை
நின்றுதொழுதன்பினொடு
சென்றனனிடிம்பைமுன்
வென்றதிறல்வீமனுமே. (ருஅ)

மாலைகடவாமல்வரு
பாலனரசர்க்குநடு
வேலைவடவைக்கனலி
போலொளிரநின்றனனே. (ருகூ)

யாளியெனநின்றவய
மீளியைவளைந்துபல
வாளிகள்பொழிந்தனர்கள்
கூளிகணடஞ்செயவே. (சுO)

பற்பலருமர்த்ததார்
விற்பலவணக்கியெதிர்
சொற்பொலிவயப்பகழி
சிற்சிலதொடுத்தனரே. ௬௧

பெய்கணையடங்கவிவ
னெய்கணைவிலக்கியிட
மொய்கணையனந்தமவர்
மெய்கணையவுந்தினனே. (௬௨)

கன்னனுமடங்கலபி
மன்னுவுமுடன்றுமுனை
முன்னிரதமுங்கடவி
மன்னமர்தொடங்கினரே. (௬௩)

அங்கர்பதிதேரிலிவன்
வெங்கணைகளுனுவிட
மங்குலெனநாலுதுர
கங்களும்விழுந்தனவே. (௬௪)

தொடுத்தசிலைகோலியவ
னெடுத்தசிலைபுங்கொடியு
நடுத்தறியவெட்டிமுனை
கெடுத்தனனனந்தரமே. (௬௫)

இரவிமகனேகுதனு
மரவதுவசன்றுணைவர்
விரவினர்வளைந்துதம
புரவியணிதேர்படவே. (௬௬)

விட்டவிரதத்தினொடு
வட்டவரிவிற்குரிசி
ளொட்டகணைதைக்கவவர்
கெட்டுமுதுகிட்டனரே. (௬௭)

சகுனிகர்துரோணனொடு
மகன்விசயன்மைந்தனெதிர்
முகனமரில்வந்துபுர
தகனனெனநின்றனரே. (௬௮)

நிற்குநிலைநின்றுவரி
விற்களும்வளைத்தனர்க
ளுற்கைகளினூறுபல
பொற்கணைதொடுத்தனரே. (௬௯)

வருகணைவிலக்கியெதிர்
பொருகணைகளாலே
யொருவனொரிமைப்பொழுதி
லிருவரையும்வென்றான். (௭0)

தேர்முகமிழந்துமிரு
கார்முகமிழந்தும்
போர்முகமிழந்துமவர்
நேர்முகமிழந்தார். (௭௧)

துன்முகனுமன்றமரின்
முன்முனமர்செய்தே
வன்மிகமறிந்ததென
நன்முடிதறிந்தான். (௭௨)

சித்திரவில்வீரனெனு
மத்திரர்பிரானும்
புத்திரிலாதியுரு
மித்திரனும்வந்தார். (௭௩)

வந்தபிமனோடமரின்
முந்தியிருவோருஞ்
சிந்துகணைமாரிகளி
னந்தரமறைத்தார். (௭௪)

அவரவரெடுத்தவிரு
தவருநடுவெட்டா
விவர்கணைவிலக்குவன
கவர்கணைதொடுத்தான். (௭௫)

மைந்தனொருவாளியினி
லந்தரமடைந்தா
னொந்துபலவாளியொடு
தந்தைபுறகிட்டான். (௭௬)

வென்றமரில்வாளபிம
னின்றநிலைகண்டே
யொன்றுபடமாவிரதர்
சென்றனருடைந்தே. (௭௭)

கெட்டவர்களின்னரென
முட்டவுரைக்கொண்ணு
பட்டவரநேகரிவன்
விட்டகணையாலே. (௭௮)

வேறு.

முற்சக்கரயூகம்பிளப்புண்டபின்முன்பினோடும்
பொற்சக்கரமென்ன*வெறித்தாமம்பொலிந்துசூழ
விற்சக்கரமாகமணித்தேரினின்மீதுநிற்பான்
கற்சக்கரமாகநடுவூர்செங்கதிரோடொத்தான். (௭௯)

வடாதுந்தெனாதும்பராசர்வகுத்தநேமிக்
குடாதுங்குணாதுமவற்றுட்படுகோணநான்கும்
விடாதுந்துதேரின்மிசையெங்கும்விராயபோது
சடாதுங்கமௌலிப்புரசூதனன்றன்னையொத்தான். (௮௰)

வின்மைந்துகொண்டுதகுவோர்தமைவென்றவீர
னன்மைந்தனுக்குமுதுகிட்டனரென்றுநாணி
மன்மைந்தரெண்ணில்பதினாயிரர்வந்துசூழத்
தன்மைந்தனையுமுடனேவினன்சர்ப்பகேது. (௮௧)

மேல்வந்தவேந்தன்மகனும்பலவேந்துமூழிக்
கால்வந்துவேலைக்கடறன்னைக்கலக்குமாபோ
னால்வந்தகொற்றச்சிலையாசுகநொய்தினேவி
மால்வந்தகைக்குன்றனையானைமுன்வந்துசூழ்ந்தார். (௮௨)

முன்முன்புமுந்திப்பலரேவியமூரிவாளி
தன்முன்புதூவுமலர்போலிருதாளில்வீழ
வின்முன்புடையோனொருவில்லின்விசித்தவம்பாற்
பின்முன்புபட்டபலகோடிபிறங்குசேனை. (௮௩)

வேறு.

அரவுயர்த்தவன்மதலையொடடலுடையரசர்புத்திரரனைவருமெழுபரி
யிரவிபொற்கதிர்தெறுதலினிரிதருமிருளெனத்திசைதிசைதொறுமுதுகிட
வுரனுடைப்பனைமுழவுறழ்திணிபுயனொருசமர்த்தனுமொருதனியிரதமும்
விரவிமுற்பொருகளமழகுறும்வகைவிறல்வயப்புலியெனவெதிர்முடுகவே. (௮௪)

வளையமுத்துதிர்விழியுடைவரிசிலைமதனனன்மைத்துனனவனிபர்பலரையு
மிளையெனப்புறமிடவமர்பொருத்பினிளையவித்தகனெதிருறவருதலு
முளையெயிற்†றிளநிலவெழவகல்வெளிமுகடுடைப்படவொர்நகைசெய்துகடவின
னுளைவயப்பரியிரதமுமிரதமுமாறொடொத்தினவுருள்களுமுடையவே. (௮௫)

ரகுகுலத்தவனிளவலுநிசிசரரிறையளித்தருளிளவலுமிருவரு
நிகரெனத்துணைவிழிகடைநிமிர்தரநெறிகடைப்புருவமுமிகமுரிதர
முகிலிடித்தெனவெழுகடல்களுமிகமொகுமொகுத்தெனவனிலமுமனிலமு
முகமுடித்தெனமுறைமுறைபலபலவுரையெடுத்தனரொருவரொடொருவரே. (௮௬)

---

* எறிதாமம் என்றும் பாடம்.

† இளவிகலரியெனவெளி என்றும் பாடம்.

ஞெலிமரத்தினுமனனெரியெழவெழநிருபர்விட்டனகசரததுரகமு
மெலிவெழப்பிறகிடவுநின்றொருதனிவிறல்குறித்திரதமுமெதிர்கடவினை
யொலிபடுத்தெதிர்வரின்விரிசுடரெதிருலவுவிட்டிவினுயிரழிகுவையென
வலியுறுத்தினனவனிபன்மதலையைவலியவச்சிரன்மதலைதன்மதலையே. (அஎ)

இவனுமப்பொழுதெதிரொலியெனநனிபிகலருச்சுனன்மதலையைபுனதுயி
ரவனிபர்க்கெதிர்கவருவனொருநொடியளவைவிற்பொருதெனமுனையணுகினன்
சிவன்வளைத்தபொன்மலையினும்வலியினசிலைவளைத்தனரிருவருமெறிதரு
பவனன்மைக்கடல்வடவையின்முனிதருபவனமொத்தது படுகளமுழுதுமே. (அஅ)

துரகதத்துடல்கெழுமினசிலகணைதுவசமற்றிடவிரவினசிலகணை
யிருவர்நெற்றியுமெழுதினசிலகணையிருபுயத்திடைசொருகினசிலகணை
யரணியொத்தெரிகதுவினசிலகணையகன்முகட்டையுமுருவினசிலகணை
முரணிலக்கணகுமரனுமபிமனுமுடுகியிப்படிமுரணமர்புரியவே. (அகூ)

மழைமுகிற்குலநிகர்திருவடிவினன்மருகன்முட்டியுநிலையுமெய்வலிமையு
மழகுறத்தொடுகணைகுருபதிமகனவயவத்தினிலடைவுறமுழுகின
கழல்களற்றனவிருதொடைநழுவினகவசமற்றதுகரமலர்புயமுடன்
முழுதுமற்றனவொளிவிடுநவமணிமகுடமற்றதுமுகிழ்நகைமுகனொடே. (கூ0)

வேறு.

இலக்கணகுமரன்வெங்கானெரித்தவன்குமரனேவா
லலக்கணுற்றுவிமாய்ந்தானமரிடையென்றுகேட்டுக்
கலக்கணீர்சொரியநின்றுகண்ணிலிகுமரன்வெம்பி
வலக்கணோர்முனிவரோடுமன்னவரோடுஞ்சொல்வான். (கூக)

மன்னவர்மைந்தரோடென்மைந்தனைக்கொன்றமைந்தன்
றன்னையுமிமைப்பிற்சென்றுசயமுறச்செகுத்திலீரேற்
பின்னையிவ்வரசும்வேண்டேன்பெருமிதவாழ்வும்வேண்டே
னென்னுயிர்தானும்வேண்டேனென்றனனிராசராசன். (கூஉ)

தனித்தனியரசரெல்லாந்தாளிணைபணிந்துபோற்றிப்
பணித்துயிர்பொன்றிவீழப்பார்த்தன்மாமகனைபின்னே
குனித்தவின்னிமிராவண்ணங்கொடுஞ்சமர்க்கொன்றிலேமே
லினித்தனுவென்றுபோரிலெடுக்கிலேமிறைவவென்றார். (கூங)

குன்றவில்லவனையொக்குங்குமரனும்பகைகளாறும்
வென்றவின்முனியுமற்றும்வேந்தராயருகுதொக்கு
நின்றவில்விருதர்யாருநிருபன்மாமதலையாவி
பொன்றவில்வளைத்தோன்றன்னைப்புலிவளைந்தென்னச்சூழ்ந்தார். (கூச)

போரொருமுகத்தாலன்றிப்பொருப்பொன்றிற்புணரியேழுங்
காரொருமுகமாய்மொண்டுகணக்கறப்பொழியுமாபோற்
றேரொருவளையமாகச்சென்றுதிண்சிலைகள்கோலி
யோரொருவீரர்கோடியாசுகமுடற்றினாரே. (கூரு)

தரணிபரெய்தவெய்தசரங்களைச்சரங்களாலே
முரணறவிலக்கிப்பாதமுடியளவாகவந்தக்
கரணமும்புலனுமெய்யுங்கலங்கியக்கணத்தில்யாரு
மரணமென்றுன்னவல்வில்வளைத்தனன்வளைவிலாதான். (௯௬)

ஆகவந்தன்னின்முந்தமனுகுலத்தரசன்பட்டான்
கேகயன்குமரன்மாய்ந்தான்கிருபன்வில்லொடிந்துமீண்டான்
மாகதக்குரிசிலோடுமகுடவர்த்தனரநேகர்
நாகமுற்றனர்கள்கோடிநரபதிகுமரர்வீந்தார். (௯௭)

சிலையழிந்தவரநேகர்தேரழிந்தவரநேகர்
தலையழிந்தவரநேகர்தாளழிந்தவரநேகர்
நிலையழிந்தவரநேகர்நெஞ்சழிந்தவரநேகர்
துலையழிந்தவரநேகர்தோளழிந்தவரநேகர். (௯௮)

இனைவருஞ்சகுனிமைந்தரெழுவருந்துணைவருள்ளா
ரனைவருமாவிமாளவமரழிந்தவனும்போனான்
றனைவரும்புரவித்தேர்த்துச்சாதனன்றுணைவரோடு
முனைவருமளவிற்பாலன்முனைவெரீஇமுதுகுதந்தான். (௯௯)

காவலருடைதல்கண்டுகன்னனையரசன்பார்த்துக்
கேவலமல்லவிப்போர்கிரீடிவந்திவனைக்கூடி
னீவலையாகிற்சென்றுநேர்மலைந்தடர்த்தியென்னக்
கோவலன்மருகன்றன்னைக்குறுகினன்கொடையான்மிக்கோன். (௧௦௦)

மன்முரிகுவவுத்திண்டோள்வாசவன்பேரன்றன்னோ
டன்முரியிரவிமைந்தனருஞ்சமர்விளைத்தகாலைச்
சென்முரிந்தென்னவேறுதேர்முரிந்தெடுத்தவாகை
வின்முரிந்துள்ளந்தானுமிகமுரிந்துடைந்துமீண்டான். (௧௦௧)

தேறினன்றேறித்துச்சாதனன்றருஞ்செம்பொற்றேரி
னேறினன்மீளவில்லுமெரிகணைபலவுங்கொண்டு
தூறினனபிமன்செங்கைத்தொடைகளாலெதிர்த்தலஞ்சி
மாறினன்முகமுந்தேரும்வரிவில்லுமழிந்துமன்னோ. (௧௦௨)

தூண்டினன்மேலாளாகித்துணைப்பரித்தடந்தேர்தூண்டி
மீண்டனன்காலாளாகிவிழுந்தனன்றெளிந்துமீளத்
தாண்டினபரித்தேர்தேடிச்சாபமுந்தேடிநெஞ்சாற்
பூண்டனன்பொருவான்றன்னைப்பொருகணைப்புயங்கம்போல்வான். (௧௦௩)

விற்குனித்திரவிமைந்தன்விடும்விடுங்கணைகள்பட்டுப்
பற்குனன்மைந்தன்றிண்டேர்ப்பரிகளும்பாகும்பட்டு
முற்குனித்தெய்தவில்லுமுரிந்ததுமூரித்தேரு
நிற்குநன்னிலைமைகுன்றிநேமியுநெறிந்ததன்றே. (௧௦௪)

தன்னையத்தனயன்செய்ததாழ்வெலாந்தனயன்றன்னை
பின்னையத்தந்தைசெய்துபின்னிடாதசைந்துநிற்ப
*முன்னையபுரவித்தேருமுரிவெஞ்சிலையுமின்றி
மின்னையொத்திலங்கும்வாளோடவனிமேல்விரைந்துபாய்ந்தான். (௧0௫)

வாளொடுபரிசையேந்திமண்டலம்பயிற்றியிற்றை
நாளொடுதுறக்கமெய்தநயந்தனனின்றவீரன்
றோளொடுபுரையுஞ்செம்பொன்மேருவைச்சுடரோனுகச்
கோளொடுசூழ்வதென்னச்சுழற்றினன்குமாரனே. (௧0௬)

வேறு.

தேர்போனதுபரிபோனதுசிலைபோனதுசிறுவன்
போர்போனதினிச்சென்றமர்புரிவோமெனநினையாக்
கார்போனனியதிராவிதழ்மடியாவெறிகடல்வாய்
நீர்போனுடன்மொய்த்தார்வெருவுறவோடியசிருபர். (௧0௭)

துச்சாதனன்மகன்மன்னர்தொழுந்துச்சனியென்னு
நச்சாடரவனையானினிநானேபழிகொள்வே
னிச்சாயகமொன்றுலெனவெய்தானவன்முடியோ
டச்சாயகம்வடிவாள்கொடறுத்தானடலபிமன். (௧0அ)

துரியோதனன்மகனும்பொருதுச்சாதனன்மகனும்
புரியோதனமுனைவென்றமைபுரிவின்முனிகருதா
வரியோமெனுமறைபாலடலம்பாயபமெய்தான்
வரியோவிடுகழலானவைவாள்கொண்டுதுணித்தான். (௧0௯)

சொரியுங்கணைமழையேவுதுரோணுரியன்வில்லும்
பரியுங்கடவிரதத்தொடுபாகும்பலபலவாய்
முரியும்படிவடிவாள்கொடுமோதாவமர்காதா
விரியுஞ்சுடரனதின்றனன்விசயன்றிருமகனே. (௧௧0)

ஒருக்காலழிதோன்றியுமுருளாழிகொடேர்மே
லிருக்கால்வரமுக்கால்வரவெக்காலுமழித்தே
பெருக்காறணைசெய்தொத்தவிர்பிள்ளைப்பிறையனையான்
செருக்கானகைசெய்தான்வரிசிலையாசிரியனையே. (௧௧௧)

முன்னுஞ்சுருதியினுயர்முனிவீரனைமுனியாப்
பின்னும்பனிவரைபோலொருபெருந்தேர்மிசைகொள்ளா
மன்னுஞ்சிலைகுனியாமுனைவடிவாளொடுகையு
மின்னும்பிறைமுகவாளியின்வீழும்படிவிட்டான். (௧௧௨)

பேணுருயிர்பருகும்பசிபெட்பப்பகுவாய்வெங்
கோணுகமுலாவந்தெதிர்கொடுநாவெறிவதுபோற்
பூணுர்கடகக்கையொடுபுகர்வாளமுமண்மே
னீணுகர்வியக்கும்படிவிழமீளியுநின்றுன். (௧௧௩)

* உன்னயப்பூரவித்தேரு மொத்தவெஞ்சிலையுமின்றி என்றும் பாடம்.

இருதோள்களிரொருதோண்முனியிகல்வாளியின்விழவு
மொருதோள்கொடுபொருநிற்பதொர்மதவாரணமொத்தான்
கருதோகையொடளகாபதிதனையோர்கதிபெறமுன்
மருதோரடியிணைசாடியமாயன்றிருமருகன். (௧௧௪)

தன்மாதுலன்முதனூலுரைதருமந்திரமொன்று
லென்மாமணியுருளொன்றினையெறிசக்கரமாக்கிக்
கன்மாரிவிலக்குங்கிரியெனமேல்வருகருதார்
வின்மாரிவிலக்காவதுகொடியாரையும்வீழ்த்தான். (௧௧௫)

ஒருகையினிலுருணேமிகொடோடித்திசைதோறும்
வருகையறவெறிவானுயர்வனமாலியையொத்தா
னிருகையொருவரைமண்ணிலிறைஞ்சாமுடியிறைவன்
பொருகையறவபிமன்பொருபோர்கண்டுபுழுங்கா. (௧௧௬)

வேறு.

ஒருவனம்படைத்தலைவர்களைவரையுமொருகைகொண்டடற்றிகிரியின்விழவெதிர்
பொருவதென்கொலிச்சிறுவனொடொருபடிபொழுதுசென்றதெப்பொழுதமர்முடிவது
வெருவருந்திறற்றரணிபர்களிலிவன்விளியவென்றிடத்தகுமவரிலரினி
யருளுடன்சயத்திரதனையழையெனவவனும்வந்துபுக்கனனொருநொடியிலே. (௧௧௭)

அருகுநின்றகொற்றவர்களுமவரவரியதிண்டிறற்குமரருமமரிலுன்
மருகனும்படப்பொருதனன்மகபதிமகன்மகன்றனைப்பசுபதியருளிய
வுருகெழுங்கதைப்படைகொடுகவருதியுயிரையென்றெடுத்துரைசெயவரசனை
யிருகையுங்குவித்தருளுடன்விடைகொளுமெழில்கொள்சிந்துவுக்கொருதனிமுதல்வனே. (௧௧௮)

உரகவெங்கொடித்தரணிபனலமருமுளமகிழ்ந்திடக்கதிபலபடவரு
துரகதம்பிணித்தணிகொளிரதமிசைதுவசமுந்தொடுத்தடலுடைவலவனை
விரைவுடன்செலுத்துகவெனவுரைசெய்துவிழிசிவந்துசிற்றிளமதிபுனைதரு
கரகவண்புனற்சடைமுடியவனடிகருதிநின்றெடுத்தனனொருகதையுமே. (௧௧௯)

மறலிதண்டெனக்கொலைபுரிதொழின்மிகவலியதண்டுகைக்கொளுமளவினிலிவன்
விறல்புனைந்தகைத்திகிரியையொழியமுன்வினையழிந்துபற்றலர்முதுகிடவிழு
திறல்விளங்குபொற்கதைகொடுவிரைவொடுதிருகிநின்கதைதக்கிதுகதையெனவுரை
யுறவிளம்பியப்பொருகளமுழுவதுமுருமெறிந்ததொத்துவகையொடதிரவே. (௧௨0)

சினவுசிங்கமொத்திருவருமுறைமுறைதிருகிவெஞ்செருப்புரிதலினெழுமொலி
கனல்வளைந்துசுட்டணிலமுமெறிதருகடலதிர்ந்தெனக்கனமதிர்வனவென
மினல்பரந்தெழத்திசைகளின்முடிவுறவெடிகொடண்டபித்தியுமுடைதரவெழு
மணமழன்றுபொற்கிரிநிகர்தமபுயவலிமைகொண்டடற்றினர்வயமலியவே. (௧௨௧)

உரியசிந்துவுக்கரசனதிருபுயமொடியவெண்புகைக்குடன்முரிதரவுர
னெரியவெங்குடர்க்கொடிகெடுவளையமுநிமிரவன்றொடைப்புடைமிடைநடையுற
வரியகண்கனற்பொறியெழமணிமுடியழகழிந்துபொற்பிதிர்படவுதிர்பட
வெரியெழுஞ்சினத்தொடுதனதொருகையினிலகுதண்டமிட்டிகலுடனெறியவே. (௧௨௨)

வசையறும்புகழ்க்குருகுலதிலகனைமருதிரண்டொடித்தவர்திருமருகனை
விசயன்மைந்தனைப்பனைமுகின்மிசைவருவிபுதர்தங்குலத்ததிபதிபெயரனை
யசைவில்வன்றிறற்பகைமுனைநிருபரையடையவென்றகட்டழகுடையபிமனை
யிசைகொள்சிந்துவுக்கரசனுமொருகதைதனிருகைகொண்டெடுத்திகலுடனெறியவே. ( )

கரமிழந்துமற்றொருகரமிசையொருகதைகொள்வெஞ்சினக்களிறனையவனிவ
னிரதமுந்தகர்த்துறுகதியுடன்வருமிவுளியுந்துணித்தடலுடைவலவனை
முரணுடன்புடைத்தணிதுவசமும்விழமுதுகுகண்டபிற்சரபமதெனும்வகை
யரன்வழங்குபொற்கதையுடனவனியிலவனுமுன்குதித்தடலுடன்முனையவே. (கஉச)

பதயுகங்களொத்தியவலிபலகணபணவுரகர்பற்பலமுடிசிதறின
வெதிர்கொடண்டமொத்தியவொலிதிசைகளிலிபமடங்கமெய்ப்பிடியொடுசிதறின
கதியில்வந்தசித்திரமெனமுறைமுறைகதுவிமண்டலித்தொருபகன்முழுவது
மதிசயம்படப்பொருதனரெதிரெதிரபிமனுஞ்சயத்திரதனுமமரிலே (கஉரு)

உலைவிறண்டினிற்பரிசனன்மதலையுமுவமையின்றெனப்பகழியின்மழைபொழி
சிலையின்வன்றொழிற்றிறனுடைமகபதிசிறுவனுந்தனக்கெதிரிலனினியென
மலையும்வெஞ்சமத்தொருதனிமுதுபுயவலிமைகண்டுபொற்புறுகழலபிமனை
யலைநெடுங்கடற்றரணிபரனைவருமமருந்துதித்தனர்முகடதிரவே. (கஉசா)

கழுகுபந்தரிட்டனமிசைவிசையொடுகழுதினங்களிட்டனபலகரணமு
மெழுகவந்தமிட்டனபலபவுரிகளிருபுறங்களிட்டனவெதிரழிபடை
பொழுகுசெம்புனற்குருதியின்வருநதியுததியுஞ்சிவப்புறும்வகைபெருகலின்
முழுகியெஞ்சியிட்டனசுழியிடையிடைமுகிலின்வெங்குரற்கசரதுரகமே. (கஉஎ)

முறைமையின்றியெத்தரணிபர்களுமெதிர்முடுகவந்துமுற்றெறுதலினவரவர்
பொறையழிந்துகெட்டனைவரும்வெருவொடுபுறமிடும்படிக்கொருதனிபொருதபி
னிறைவலம்புரித்தொடைகமழ்புயகிரிநிருபதுங்கன்மைத்துனனுளம்வெருவர
வறைபெருங்கதைப்படைகொடுவலியுறவமர்புரிந்திளைத்தனனடலபிமனே. (கஉஅ)

இவன்மயங்கிமெய்த்தளர்வுடன்மெலிவுறுமிறுதிகண்டினித்தெறுவதுகடனென
வவனிகொண்டபற்குனன்மதலையையவனருகுவந்தடித்தணிபுயவலிகொடு
சிவனையஞ்செழுத்துரைசெய்துதொழுதொருசிகரதண்டம்விட்டெறிதலினெறிதரு
பவனனன்றுகுத்தினகிரியெனவிசைபடவிழுந்ததப்பருமணிமகுடமே. (கஉகூ)

தலைதுணிந்துதத்திடவிழவிவனொருதனதுதிண்கையிற்கதைகொடுதரியல
னிலையறிந்துபுக்குரனுறவெறிதலினெரிநெரிந்ததத்தரணிபனுடலமு
மலைமறிந்ததொத்தபிமனதுடலமுமகிதலந்தனிற்றரியறவிழுதலி
னலையெறிந்துமைக்கடல்புரளுவதெனவரவம்விஞ்சியிட்டதுகளமடையவே. (கங0)

வேறு.

மாயனுந்திருமாமன்றனஞ்சயனுந்திருத்தாதைவானோர்க்கெல்லா
நாயனும்பிதாமகன்மற்றொருகோடிநராதிபராநண்பாய்வந்தோர்
சேயனுமபிமனுவாஞ்செயத்திரதன்கைப்படுவான்செயற்கைவெவ்வே
றுயநாளவனிதலத்தவ்விதியை*வெல்லும்விரகார்வல்லாரே. (கங௧)

* வெல்லும்வகை என்றும் பாடம்.

49

செடன்முடிநெளியவருசெம்பொற்றேரழிவதோவந்தோவந்தோ
கேடகம்வாளணிவலயங்கிளர்புயத்தோளறுவதோவந்தோவந்தோ
கூடகவெங்கதையொன்றாற்சிந்துபதிகொல்வதோவந்தோவந்தோ
*வாடமரிலொருவரும்வந்துதவாமலிருப்பதோவந்தோவந்தோ. (௧௩௨)

கன்னனையுந்தேரழித்தான்கந்தனிலும்வலியனேயந்தோவந்தோ
மன்னவரைவருமிருக்கமைந்தனுயிரழிவதேயந்தோவந்தோ
பொன்னுலகோர்வியந்துருகிப்புந்தியினான்மலர்பொழிந்தாரந்தோவந்தோ
வன்னநெடுந்துவசனிவற்காயுமிகக்கொடுத்திலனேயந்தோவந்தோ. (௧௩௩)

சரமறுத்தான்வில்லறுத்தான்கொடியறுத்தான்றேரறுத்தான்சமரபூமி
யுரமறுத்தான்முதற்பொருதவுதயதினகரன்மைந்தனுடன்றுசீறிக்
கரமறுத்தானடுப்பொருதகார்முகத்தின்குருவிசயன்காளைதன்னைச்
சிரமறுத்தான்பின்பொருதசயத்திரதனிவன்வீரஞ்செப்பலாமோ. (௧௩௪)

எட்டானைத்தம்பமுடன்சயத்தம்பநாட்டியபோரிறைவன்மைந்தன்
பட்டானென்பதுகேட்டுத்திருகினார்முதுகிட்டுப்பறந்தவீர
ரொட்டாமற்செயிரமரினுயிரிழந்ததன்புதல்வற்குருகுஞ்சோகம்
விட்டான்வெஞ்சமரமினிவென்றோமென்றுட்கொண்டான்வேந்தர்வேந்தன். (௧௩௫)

ஓரிரண்டுவயவர்முனைந்துடன்பொருதனுலகியற்கையொருவன்றன்மேற்
போரிரண்டுபுறமும்வளைந்தோருகோடிமுடிவேந்தர்பொருதுகொன்றார்
தேரிரண்டுகிடையாததுறையன்றோகளத்தவிந்தான்சிறுவனென்றென்
றீரண்டுபெயரொழியமற்றுள்ளாரழுதிரங்கியென்பட்டாரே. (௧௩௬)

தாள்விசயம்பெறமுனைந்துசக்கரயூகம்பிளந்துதானேநின்று
வாள்விசயன்றிருமதலைவானோரும்வியந்துரைக்கமாய்ந்தானென்று
வெள்வியினாலுண்மையினாற்றிண்மையினாற்றண்ணளியால்விறலாற்பன்னூற்
கேள்வியினான்மிகுந்தெவர்க்குங்கோளானவுதிட்டிரனுங்கேட்டானன்றே. (௧௩௭)

பிறந்ததினமுதலாகப்பெற்றெடுத்தவிடலையினும்பீடுந்தேசுஞ்
சிறந்தனையென்றுனைக்கொண்டேதெவ்வரைவென்றுலகாளச்சிந்தித்தேன்யான்
மறந்தனையோவெங்களையுமாலையினல்வளைப்புண்டுமருவார்போரி
லிறந்தனையோவென்கண்ணேயென்னுயிரேயபிமாவின்றென்செய்தாயே. (௧௩௮)

தேனிருக்குநறுமலர்த்தார்ச்சிலைவிசயனிருக்கவரைத்திண்டோள்வீமன்
றானிருக்கமாநகுலசாதேவர்தாமிருக்கத்தமராய்வந்து
வாணிருக்கின்முடிவானமாகதமாமலையிருக்கவாழ்வானெண்ணி
யாணிருக்க†வினையறியாவிளஞ்சிங்கமிறப்பதேயென்னேயென்னே. (௧௩௯)

நின்றனையேயெனைக்காத்துநீயேகென்றியானுரைப்பநெடுந்தேரூர்ந்து
சென்றனையேயிமைப்பொழுதிற்றிகிரியையுமுடைத்தனையேதெவ்வரோட
வென்றனையேசுயோதனன்றன்மகவுடனேமகவனைத்தும்விடங்காலம்பிற்
கொன்றனையேநின்னாண்மைமீண்டுரைக்கக்கூசினையோகுமரரேறே. (௧௪௦)

---

* ஆடமரிலருகொருவர்வாராமலிருப்பதோ என்றும் பாடம்.
† வினைவறியா என்றும் பாடம்.

உனக்குதவியொருவரறவொருதனிநின்றமருடற்றியொழிந்தமாற்றந்
தனக்குநிகர்தானானதனஞ்சயனுங்கேட்கினுயிர்தரிக்குமோதா
னெனக்கவனிதரவிருந்ததித்தனையோமகனேயென்றென்றுமாழ்கி
மனக்கவலையுடனழிந்துமணித்தேரின்மிசைவீழ்ந்தான்மன்னர்கோவே. (கசக)

சங்கலாரிடைவளைத்தசக்கரத்தைபுடைப்பதற்குத்தமியேனெய்தி
யங்குலாவருமிரதத்தாசரையுந்தொலைத்துன்னையடுப்பான்வந்தேன்
பங்கெலாமரகதமாம்பவளநிறப்பொருப்புதவுபைம்பொற்கொன்றைத்
*தொங்கலானுனைவளைத்தசூழ்ச்சியையின்றறிந்திலனேதோன்றலேநான். (கசஉ)

மின்னுமலிடித்ததெனவீழ்த்தபொலந்தொடையானும்விடையோனீந்த
பொன்னார்வெங்கதையானுமல்லதபிமனையமரிற்பொரவல்லார்யார்
தன்னுண்மைநிலைநிறுத்திச்சங்கமுழக்கியவீரசிங்கசாப
வென்னனையிறந்துபடவின்னமுநானிவ்வுயிர்கொண்டிருக்கின்றேனே. (கசங)

எடுத்தபடையனைத்தினுக்குமெதிரில்லையெனக்கலைகளெல்லாமுன்னை
யடுத்ததுகண்டையாநின்னாருயிர்க்குக்கரைந்துகரைந்தையுற்றேன்யான்
விடுத்தபெருந்தாதையிருவிழிகளிப்பப்பகைவென்றுமீளாதென்னைக்
கெடுத்தனையேபிழைத்தனையென்றினியொருவர்வந்துரைக்கக்கேளேன்கொல்லோ. ()

என்றென்றுவீமனுந்தன்னிளையோருமழுதாற்றவிறந்தோன்வீர
நன்றென்றுதளமிரண்டினராபாலர்பலர்திரண்டுநவிலாநிற்ப
வன்றென்றுமனமருளுற்றபிமனுடலைக்குன்றையடித்துமேலைக்
குன்றென்றுதடமாறிப்பின்னையும்போய்த்தனதுதடங்குன்றுசேர்ந்தான். (கசரு)

வேறு.

இந்நிலத்தவனிபாலரிவ்வகையிரங்கியேங்கந்
தெந்நிலத்தெதிர்ந்துவாராத்தென்னிலந்தன்னிலேற்றி
யெந்நிலத்தினுந்தன்றன்மைக்கெதிரிலாவிசயன்றானு
மந்நிலத்தகன்றுமீண்டானுற்றவாறறிகிலாதான். (கசசு)

போனதுவருவதெல்லாம்புரையறவுணருகிற்கு
மானதிர்கனகத்திண்டேர்வலவனுமதுரைமன்னன்
றேனதிர்கடுக்கைமாலையிடிசெயத்திரதன்றன்னு
லானதுங்குறித்துவானோரசையுங்குறிக்கலுற்றான். (கசஎ)

மதித்தலுமனத்திற்றோன்றும்வலாரியைக்குறிப்பினாலுன்
கதித்தடந்திண்டேர்மைந்தனுயிரைநீகாத்தியென்னத்
துதித்தவன்றொழுதுமாயச்சூழ்ச்சியான்முனியுமாகி
விதித்தலைப்பட்டகாதற்சுதனுடன்விளிவேனென்னா. (கசஅ)

நெறியிடையிவர்கள்காணநெருப்பினைவளர்த்துத்தானும்
பொறியுறவீழுங்காலைப்புவனங்களனைத்துமீன்றோ
னறிவுடைவிசயற்கிந்தவந்தணன்றழலில்வீழா
தெறிகணைவரிவில்வீரவிலக்குநீயீண்டையென்றான். (கசகூ)

* தொங்கலாற் கோறல் புரிசூழ்ச்சியை என்றும் பாடம்.

என்றலும்விசயனெய்தியெந்தைநீயெரியில்வாளா
பொன்றலுய்ந்திருந்தாலின்னம்புதல்வரைப்பெறலுமாகு
நன்றலதவத்தின்மிக்கோய்நல்லுயிர்செகுத்தலெனறுக்
குன்றினும்வலியதோளான்முனிவனைத்தழுவிக்கொண்டான். (௧௫0)

வீதலும்பிழைத்தலுநும்விதிவழியன்றிநம்மா
லாதலுமழிவுமுண்டோநின்னில்வேறறிஞருண்டோ
பூதலந்தன்னில்யாவர்புதல்வரோடிறந்தாரையா
சாதலிங்கியற்கையன்றென்றருளுடனெடுத்தகாலை. (௧௫௧)

தன்மகவுடன்றிமூழ்கத்தவிர்ந்தநற்றவனுமீள
வின்மகனுகினறவிசயனைவெகுண்டுநோக்கி
யென்மகனிறக்கவென்னையிருத்தினையாயினம்ம
நின்மகனிறந்தாலென்சொன்மறுதொழிசீயுமேன்றான். (௧௫௨)

ஐயெனத்தொழுதுவீரனந்தணனுயிரைமீட்டு
மையெனக்கரியமேனிவலவனுந்தானுந்திண்டே
ரொய்யெனச்செலுத்துகாலைவேலையிலோதைதானும்
பொய்யெனப்பரந்தோரோதைசெவிகளைப்புதைத்ததன்றே. (௧௫௩)

பாசறையணுகுமுன்னம்பாசடைப்பதுமம்போல
மாசறவிளங்குமேனிவண்டுழாயலங்கன்மூர்த்தி
யாசறுவரிவிற்காளையங்கையுமருகுநீங்காத்
தேசுறுபடைகள்யாவுமொழித்தனன்றீமைதீர்ப்பான். (௧௫௪)

அங்கையார்த்தனைத்துளோருமாற்றுபோரவங்கேட்டுக்
கங்கையம்பழனநாடன்கண்ணனைவணங்கிநோக்கி
யிங்கயலெழுந்தகோடம்யாதெனயாதுஞ்சொல்லான்
பங்கயநெடுங்கண்சேப்பநித்திலம்பரப்பினானே. (௧௫௫)

வன்கணனிளகிச்செங்கண்மாலடிவீழ்ந்துமேன்மே
லென்கணுந்தோளுமார்புமிடனுறத்துடிக்கைமாறு
நின்கணுமருவிசோரநின்றனையின்றுபோரிற்
புன்கணுற்றவர்கண்மற்றென்புதல்வரோதுணைவர்தாமோ. (௧௫௬)

திருவுளத்துணராதில்லைசெப்புகென்றயர்வான்றன்னை
மருவுறத்தழுவித்திககண்மாபினுக்குரியசெல்வா
வெருவுறப்பகையைவென்றவீரனென்மருகனென்றென்
றருவரைத்தோளினானுக்குற்றவாறனைத்துஞ்சொன்னான். (௧௫௭)

மைத்துனனுரைத்தமாற்றமைத்துனன்செவிக்குத்தீக்கோ
லொத்திருபுறனும்வேவவுள்ளுறச்சுட்டபோது
புத்திரசோகமென்னுநஞ்சினுற்பொன்றினன்போ
லத்திடங்தேரினின்றுமவனிமேலயர்ந்துவீழ்ந்தான். (௧௫அ)

அயர்ந்தனன்விழுந்தகோவையச்சுதன்பரிவோடேந்திப்
புயந்தழீஇயெடுத்துவாசப்பூசுநீர்தெளித்துமாற்றப்
பயந்தரு*கொடியகூடபாகலந்தணிந்துமெல்லக்
கயந்தெளிவுற்றதென்னக்கண்மலர்ந்தழுதலுற்றான். (௧௫௯)

போரினிற்றுணைவரோடும்புயங்ககேதனனைவென்று
பாரெனக்களித்திநீயேயென்றுளம்பரிவுகூர்ந்தே
னேருனக்கொருவரில்லாய்நீகளம்பட்டாயாகி
லாரினிச்செருக்கவல்லாரைவருக்குரியகோவே. (௧௬௦)

சக்கரம்பிளந்தவாறுந்தரியலருடைந்தவாறுந்
துக்கரமானகொன்றைத்தொடையலால்வளைத்தவாறு
மெய்க்கரந்துணிந்தவாறுமீண்டுருத்தடர்த்தவாறு
முக்கிரமுடனென்முன்னேயோடிவந்துரைசெய்யாயோ. (௧௬௧)

பன்னகவரசன்பெற்றபாவைமாமதலைதன்னை
முன்னுறமுனையிற்றோற்றேன்மூர்க்கனேன்முடியாதுண்டோ
வுன்னையுமின்றுதோற்றேனுன்னுடன்றொடர்ந்துவாரா
தின்னமுமிருக்கின்றேன்யானென்னுயிர்க்கிறுதியுண்டோ. (௧௬௨)

கதிரவனுதிக்குமுன்னேகண்டுயிலுணர்த்தியென்னை
யதிரமர்க்கோலங்கொள்வானறிவுறுத்துரைக்கவல்லாய்
முதிரமர்முருக்கிமீண்டேனித்தனைப்போதுமுன்போ
லெதிர்வரக்காண்கிலேனிங்கில்லையோவென்செய்தாயோ. (௧௬௩)

தந்திரமியாவுமின்றித்தனித்துநீதானேபோர்செய்
தந்தரமடையுமென்றிவ்வகலிடந்துறந்தவையா
மைந்துடனம்மைக்காணமகன்மகன்வருகின்றானென்
றிந்திரனேவவுன்னையிமையவரெதிர்கொண்டாரோ. (௧௬௪)

தோழிந்தெடுத்தவில்லுஞ்செங்கதிர்வாளுமின்றி
யோருதவியும்பெறாமலொழிந்துயிரழிந்தமைந்தா
போரமருடற்றிநீயப்பொன்னகரடைந்தபோதுன்
பேரமாண்மைகேட்டுப்பிதாமகனென்சொன்னானே. (௧௬௫)

மற்புயக்குன்றிலொன்றுவாளுடன்வீழ்ந்தபின்னும்
பொற்புறப்பொருதநீயப்பொன்னுலகடைந்தகாலை
யற்புதப்படைகள்வல்லாயபிமனேயமரருநின்
கற்பகக்காவும்வானிற்கங்கையுங்காட்டினாரோ. ௧௬௬

வளைத்தவின்னிமிராவண்ணம்வாளியான்மாவுந்தேருந்
துளைத்துமுன்காலாளாகத்துரோணனைத்துரந்தவீரா
திளைத்தவெஞ்சமரினைந்துதனஞ்சயன்சிறுவன்மேனி
யிளைத்ததென்றிந்திராணியின்னமுதூட்டினாளோ. (௧௬௭)

---

* கோடிகூடப்பாகலமென்றும்பாடம்.

வேறு.

என்னமகவான்மகனிரங்கினனரற்ற
முன்னவர்கள்பின்னவர்கண்முறைமுறைபுலம்பச்
சென்னிகரம்வைத்தனைவருங்கலுழிசெய்ய
வன்னபொழுதாரணமளித்தமுனிவந்தான். (கசுஅ)

வந்தமுனிமற்றுமுடன்வருமுனிவரோடு
மந்தநரபாலர்கண்ணருப்புனறுடைத்துக்
கந்தனிகர்மைந்தனொடுகையறநினைக்கும்
பந்தனையறுக்குமொழிபற்பலபகர்ந்தான். (கசுகூ)

தாயரொடுதந்தையர்கடாரமொடுதனையோர்
தூயதுணைவோர்களொடுசுற்றமெனநின்றோர்
மாயையெனும்வல்லபமயக்குறுமயக்கா
லாயவுறவல்லதவரார்முடிவில்யாமார். (கஎ0)

வந்துபிறவாதமனையில்லைமுலைமாறித்
தந்துபரியாமலொழிதாயர்களுமில்லை
புந்தியுணர்வற்றவர்புலம்புறுவதல்லா
லிந்தவுலகத்தறிஞர்யாதினுமயங்கார். (கஎக)

உம்மையினும்யாருறவுணர்ந்திலமினிப்போ
மம்மையினும்யாவருறவாவரெனவறியே
மிம்மையினிகழ்ந்தவுறவித்தனையிரங்கன்
மும்மையுமுணர்ந்துவருமுதறிவினீரே. (கஎஉ)

ஆற்றியுமதாண்மையழியாமலிருமென்றென்
றேற்றியடைவேசுருதியாவையுமெடுத்துத்
தேற்றியுரைசெய்துதனசேவடியிறைஞ்சிப்
போற்றியமகிபரையிருத்திமுனிபோனான். (கஎ௩)

தேற்றினுமகப்பரிவுதேறலரிதன்றே
யாற்றவரிதாதலினருச்சுனனரற்று
மாற்றரியபோழல்வளர்த்தியெனவல்லே
யேற்றதுணராதுதனதிளவலொடுரைத்தான். (கஎச)

மத்திரைமகன்கனல்வளர்க்கவதனூடே
மித்திரரும்யாவரும்விலக்கவும்விலங்கான்
சித்திரவில்லோடுயிர்செகுப்பனெனநின்றான்
புத்திரரிலாவிடர்பொறுத்திடனுமாமோ. (கஎரு)

அன்பொடுதுழாய்முதல்வனப்பொழுதழைக்க
முன்புதழன்மூழ்கலொழிமுனிவிரைவின்வாரா
நின்புதல்வனேடெரியினீபுகுதனெறியோ
வென்புதல்வனோடெனையிறப்பதுதவிர்த்தோய். (கஎசு)

வழிப்படவழக்கின்வழிவருகவெனமுனிவன்
மொழிப்படிபொறுத்தழலின்மூழ்குதொழின்மாறி
விழிப்புனலின்மூழ்கிமனம்வெந்துதளர்வுறுவோன்
பழிப்படுசாத்தின்முனிபாதவமதானான். (௧௭௭)

காமர்பிறையன்னசிறுகாலைதனைவாளா
வேமமுறுவெஞ்சமரிலேவினர்களொன்றோ
மாமுரசணிந்தகொடிமன்னனையும்வண்டார்
வீமனையுநின்றவிளையோரையும்வெகுண்டான். (௧௭௮)

சிந்துபதியாகியசெயத்திரதனைத்தே
ருந்தமரிணையுருமேறெனவுடற்று
வந்திபடுமவ்வளவிறைவிகவரேனேல்
வெந்தழலின்வீழ்வனிதுவேதமொழியென்றான். (௧௭௯)

இன்றமரில்வாளபிமனின்னுயிரிழக்கக்
கொன்றவனைநாளையுயிர்கோறல்புரியேனேன்
மன்றிலொருசார்புறவழக்கினையுரைக்கும்
புன்றொழிலர்வீழ்நரகுடுக்குழலுவேனே. (௧௮௦)

மோதமரினென்மகன்முடித்தலைதுணித்த
பாதகனைநாளெதிர்படப்பொருதிலேனேற்
றாதையுடனேமொழிதகாதனபிதற்றும்
பேதைமகனெய்துநெறிபெற்றுடையனாவேன். (௧௮௧)

சேயனையவென்மதலைபொன்றவமர்செய்தோன்
மாயமுனடர்த்துவயவாகைபுனையேனேற்
றாயர்பசிகண்டுநனிதன்பசிதணிக்கு
நாயனையபுல்லருறுநரகிலுறுவேனே. (௧௮௨)

வஞ்சனையிலென்மகனைநெஞ்சமுன்மலைந்தோ
னெஞ்சமெரியுண்ணவமர்நேர்பொருதிலேனேற்
றஞ்செனவடைந்தவர்தமக்கிடர்நினைக்கு
நஞ்சனையபாதகர்நடக்குநெறிசேர்வேன். (௧௮௩)

வினையிலென்*மகன்றனுயிர்வேறுசெய்வித்தோனைக்
குனிசிலையினானுயிர்கோறல்புரியேனேன்
மனைவியயலான்மருவல்கண்டுமவள்கையாற்
றினையளவுமோர்பொழுதின்றவனுமாவேன். (௧௮௪)

இன்னணமிருந்தவர்கள்யாவருநடுங்க
மன்னவையிலன்றுபலவஞ்சினமுரைக்கச்
சொன்னவுரையானகனல்சுட்டசெவியோடும்
பின்னையறன்மைந்தனெடுமாலினொடுபேசும். (௧௮௫)

* மகன்றனுடல் என்றும் பாடம்.

வேறு.

வடிசுடர்வாளியான்மொழிந்தவஞ்சினப்
படிசயத்திரதனைப்படுத்தல்கூடுமோ
பொடியனவிவன்புகிற்புகுந்து நால்வரு
மிடிபொருமரவெனவிறத்தறிண்ணமே. (௧௮௬)

முப்பது கடிகையின்முரண்கொண்மொய்ம்பனைத்
தப்பறக்கொல்லுவேனென்றுசாற்றுமா
லப்பெருஞ்சேனையில்வனையுள்ளுறத்
துப்புறவணிந்திடிற்றுன்னலாகுமோ. (௧௮௭)

எஞ்சின்மற்றென்செய்வேனென்னுமேல்வைபி
னஞ்சலென்றறன்மகனவலமாற்றினன்
கஞ்சவான்பொய்கையிற்கராவினவாய்ப்படு
குஞ்சரந்தனக்கருள்கொண்டன்மேனியான். (௧௮௮)

இந்திரன்காக்கினு*மியமன்காக்கினுஞ்
சிந்துவின்றலைவனைத்தேவர்காக்கினுங்
கந்தனிற்சிறந்தநின்கனிட்டனாலயே
மைந்துறப்பொருதவன்மகுடங்கொள்ளுமே.

வெயிலெழுவதன்முனிவ்விசயன்றன்னொடுங்
கயிலையம்பொருப்பனைக்கண்டுமீளவுந்
துயிலுணர்த்திடும்படிதோன்றுவோமெனா
வயிலணியாழியானவனொடேகினன். (௧௯௦)

ஏகியநெறியிடையிளைத்துவாசவற்
காகியகுமரன்மெய்யயர்ந்துவீழ்தலும்
போகியினறிதுயில்புரியுநான்மறை
யோகியங்கையினணைத்துயக்கமாற்றியே. (௧௯௧)

உண்டிலையடிசிலுமுண்ணுந்தீம்புனல்
கொண்டிலைபசிக்கனல்கொளுந்திவீழ்ந்தனை
மண்டிலைவேலினுய்மகவினன்பினுற்
கண்டிலையுலகியல்காட்டக்காட்டவே. (௧௯௨)

மாங்கனிவாழையின்கனிவருக்கையின்
றீங்கனிகன்னலிற்செய்யசீருள
வேங்கனற்பசியுநின்விடாயுமாறவே
யீங்கினிதருந்துதியேந்தலென்னவே. (௧௯௩)

சரிந்தவர்சரிவறத்தாங்குநாயகன்
பரிந்திவையுரைத்தலும்பாவைபங்கன்மேற்
புரிந்திலனின்னமும்பூசையென்றனன்
வரிந்தவெஞ்சிலைக்குமண்மதிக்கும்வீரனே. (௧௯௪)

---

* ஈசன்காக்கினும் என்றும் பாடம்.

மருவருகானகமலரிறைலைமைப்
பொருவருபூசனைபுரிதியையநீ
யிருவருமொருவரேயென்பதின்றுபோ
யருவரையவனடியடைந்து காண்டியே. (ககரு)

என்றரியியம்பலுமிருமருங்கினு
நின்றநன்மலர்கொடுநிகரில்கேள்வியான்
மன்றலந்துழாய்முடிமாயன்மேன்மன
மொன்றியேசிவாகமவுரையிற்சாத்தினான். (ககசு)

சாத்தினன்றெழுது பின்றலைவன்றண்மலர்த்
தீர்த்தமுங்கனிகளுந்தெவிட்டவுண்டுதன்
காத்திரந்தேறினன்கருத்துந்தேறினன்
பார்த்தன்முற்றவப்பயன்பலித்தவாறரோ. (ககஎ)

போயருநெறியிடைப்புள்ளின்வேந்தனைத்
தூயவனினைத்தலுமவனுந்தோன்றினான்
மாயனைத்தோளினும்வலாரிமைந்தனைச்
*சேயெனக்கரத்தினுஞ்சேரவேந்தியே. (ககஅ)

நீலமுற்றியமலையிரண்டொடொன்றுபோற்
சீலமுற்றியமலைசெல்வதென்னவே
யாலமுற்றுயர்களத்தையன்வெள்ளியங்
கோலமுற்றியமலைநூறுகின்றனரோ. (ககக)

மாற்றினால்விளங்குபொன்வடிவன்வெஞ்சிறைக்
காற்றினால்விசையுறக்கழன்றுபோயின
வாற்றினலறம்புரியம்மையோடொரு
கூற்றினான்வரைபடிகொண்டலேழுமே. (உ00)

†பறிந்தனகொடுமுடிபலவும்வேரொடு
மறிந்தனசாரலின்மரங்கள்யாவையு
மறிந்தனமயின்முதலானபுள்ளினஞ்
செறிந்தனபணிந்தனசெய்யதாள்களே. (உ0க)

‡பாண்டவசகாயனூர்பறவையின்குலத்
தாண்டகையிருசிறகசையுமோதையாற்
காண்டகுசடைமுடிக்காலகாலன்மெய்ப்
பூண்டனபணிகளும்புரண்டுவீழ்ந்தவே. (உ0உ)

வரிந்தபைங்கழைகழல்வயினதேயனை
விரிந்தவெண்கிரியரமாதர்மீது கண்
டெரிந்திடுவச்சிரனிந்தமால்வரைக்
கரிந்திலன்சிறகெனவையமெய்தினார். (உ0௩)

---

* சேயதன்கரத்தினும் என்றும் பாடம்.

† உ0க, ‡ உ0உ இவ்விரண்டுசெய்யுளும் இப்பொழுதுகிடைத்த ஏட்டுப்பிரதிகளிலுள்ளன.

நிறைமதிநிகரெனநிறத்தவெள்ளியம்
பொறைமலைதிசைதொறும்பொழியும்வாரணிலா
நறைமலரிதழிசேர்நாதன்வார்சடைப்
பிறைமதிநிலவினும்பிறங்கவீசுமால். (௨௦௪)

நீரறுதருக்களுந்தழைக்கநின்றுமுன்
னாரதன்முதலியோர்நவிற்றுநாதயாழ்
பாரதவமர்புரிபச்சைமாமுகி
லாரதர்விடாயைவந்தாற்றுகின்றதால். (௨௦௫)

சங்கரன்மணிவரைச்சாரன்மாருதந்
திங்களினிலவுமிழ்செக்கர்வேணிமேற்
கொங்கவிழ்செழுமலர்க்கொன்றைவாசமுங்
கங்கைநுண்டிவலையுங்கலந்துவீசுமால். (௨௦௬)

அங்குளவிடாகத்தநேகமாயிரம்
பொங்கழலுமிழ்விழிப்புயங்கமாமணி
யெங்கணுமிருளறவிலங்குசோதியாற்
கங்குலும்பகலவன்கரங்கள்காட்டுமால். (௨௦௭)

* செந்திருமடமயில்கேள்வன்சென்றமை
யந்திவானிறத்தவனறிந்துமுன்னமே
நந்தியுமுரைசெயக்கேட்டுநன்றெனப்
புந்தியான்மகிழ்ந்தெதிர்போந்துபுல்லினான். (௨௦௮)

* ஆங்கொராசனத்திடையிருத்தியையனைப்
பாங்கினல்வினவினன்பவளமேனியா
னீங்கிவன்பிறந்ததுமிளைத்தபார்மக
ளங்கறப்புரிதருசெயலுமியாவுமே. (௨௦௯)

---

* ௨௦௮-முதல் ௨௨௦ வரையுள்ள செய்யுட்கள் இப்பொழுதுகிடைத்த ஏட்டுப்பிரதிகளி லுள்ளவை.

¶ செந்திருமடமயில்கேள்வன்சென்றுசெவ்
வந்திவானிறத்தினனருள்செய்வாய்மையா
னந்தியுள்விடுத்திடநரன்றனோடுதன்
புந்தியின்மகிழ்ந்துமந்திரத்துட்போயினான்.

¶ புரநகையாலெரிபுராரிதன்முன
நரனொடுநாரணனணுகியன்பினாற்
சரணபங்கயமுறத்தாழ்ந்துபன்முறை
காணுறமகிழ்த்திதுகழறன்மேயினார்.

¶ பொங்கராவெயின்மணிப்பூணும்பேணுநீற்
றங்கராகமுமுவந்தணியுமேனியாய்
சங்காமேருவெஞ்சாபம்வாங்கிய
செங்காசிவசிவதேவதேவனே.

* கேசவன்புரிவெலாங்கிரீசனென் னுமத்
தேசவன்றெளிவுறச்செப்பிவிட்டபின்
வாசவன்புதல்வனைவருகவென்றலும்
பாசவன்புடனவன்பணிந்துபோற்றினான். (௨௯௦)

---

¶ விண்ணிடைத்திரிபுரம்வெந்துநீறெழப்
பண்ணுடைச்செந்தழல்பரப்புமூரலா
யெண்ணுடைக்காமனையெரித்தபோழ்நுற்
கண்ணுடைக்கடவுளேகாலகாலனே.

¶ தருவதுமுயிரெலாங்காக்குந்தன்மையு
முருவறவொழித்தலுமுன்றனுடலே
கருவாராதொழிந்தவர்கருத்திற்கண்டுதே
ருருவனேயெம்மனோர்க்குரைக்கற்பாலயோ.

¶ நித்தனேநிமலனேநிகழ்நின்றுமனே
யத்தனேயடியவர்க்கெளியவண்ணலே
பித்தனேயாதியந்தங்கள்பேசொணு
முத்தனேயுயிர்தொறுமூலாயமுன்பனே.

¶ என்றுபற்பலவுரையெடுத்துக்கூறியே
நின்றுளநெக்குநெக்குருகிநேயமோ
டொன்றுகண்ணருவிகளுகுத்தனேக்கியே
யன்றுமாபதியவர்க்கருள்செய்தானரோ.

¶ கண்ணன்மேலணிமலரனைத்துங்காயெரி
வண்ணன்மேற்காண்டலுமகிழ்ந்துமேதினி
யுண்ணுமாதவன்சிவனுருவமென்றுணர்ந்
தண்ணலுமுடல்புளகரும்பினனரோ.

¶ இமையநல்வரையினிதீன்றகன்னிகை
யுமையவள்கணவனெவ்வுயிர்க்குநாயகன்
சமைவுறத்துதித்திடுமடியர்தம்முக
மமைவுறுதிருவுளத்தருளினேக்கியே.

¶ வேண்டுவதென்னெனவிண்டுதாழ்ந்தெழீஇப்
பூண்டருள்கருணையம்புனிதவிங்கிவ
னுண்டருள்படைகளாலவுணர்க்காய்ந்தன
னீண்டுநல்குதிவிறலெய்தும்வண்ணமே.

¶ தானவர்ப்பொருபடைகொண்டுதாரணி
மானவர்ப்பொருவதுவழக்கன்றுதலாற்
கூனல்விற்கணையொடுகுறைவுறுததோர்
தூநிறத்தடமருள்கென்றுசொற்றனன்.

¶ இவ் வடையாளமுள்ள கக-செய்யுளும் இதற்குமுன்பதித்த அச்சுப்பிரதிகளிலுள்ளவைகள்.

* கண்ணன்மேலணிமலரீனத் தூங்காய்கனல்
வண்ணன்மேற்காண்டலுமனங்களிப்புறு
வெண்ணின்மேலிரண்டெனவிலதென்றவ்விற
லண்ணன்மேனியும்புளகரும்பினனரோ. (௨௧௧)

* பொங்கராவெயின்மணிப்பூணும்பேணுநீற்
றங்கராகமுமுவந்தணியுமேனியாய்
சங்கராமேருவெஞ்சாபம்வாங்கிய
செங்கராசிவசிவதேவதேவனே. (௨௧௨)

* விண்ணிடைத்திரிபுரம்வெந்துநீறெழப்
பண்ணுடைச்செந்தழல்பரப்புமூரலா
யெண்ணுடைக்காமனையெரித்தபேரழற்
கண்ணுடைக்கடவுளேகாலகாலனே. (௨௧௩)

* கையுறுசிலையுடன்கானவேடனென்
றையுறவருகுவந்தணுகிமெய்யுடன்
மெய்யுறவமர்புரிவிநோதநாடொறு
மையுறுகண்டனேமறப்பதில்லையே. (௨௧௪)

* உமையவள்கணவனேயுகாந்தகாலனே
யிமையவில்வீரனேயென்றுகொண்டிவ
னமைவுறத்துதித்தவினவனுமற்றிவன்
சமைவுகண்டையனோடுவகைசாற்றினான். (௨௧௫)

* ஆற்றினைதுயர்மயலனைத்துமெய்யுறத்
தேற்றினைசிந்தையைத்தெளிந்தவாய்மையான்
மாற்றினைமும்முறைப்பிறப்பும்வந்துநின்
கூற்றினையடைதலாற்பிறவிகொள்ளுமே. (௨௧௬)

* வேண்டுவதென்கொன்மற்றென்னவீரனும்
†பூண்டதோர்பறையறைந்தன்றிப்போகலே
னாண்டநாள்படைகளாலவுணர்க்காய்ந்தன
னீண்டருளுதிவிறலெய்தும்வண்ணமே. (௨௧௭)

* தானவர்ப்பொருபடைகொண்டுதாரணி
மானவர்ப்பொருவதுவழக்குமல்லவால்
கூனல்விற்கணைகளுங்குறைவுறாததோர்
தூணிழற்பொய்கையுங்கொடுத்திதோன்றலே. (௨௧௮)

## வேறு.

* என்றலுமீசனகைத்துரைசெய்தனன்யானெனநீயெனவே
றன்றிவையாவுமளித்திடுதற்குனையல்லதுவல்லவர்யார்
நின்றதோர்தூணிடைவந்தனையானைமுனின்றனைகஞ்சனையுங்
கொன்றனைமன்னவையூடரியப்பலகூறைகொடுத்தனையே. (௨௧௯)

---

† பூண்டதோர் பகையறுத்தன்றி என்றும் பாடம்.

* முன்னுருவாயினைநின்றிருநாபியின்முளரியின்வாழ்முனிவன்
றன்னுருவாகியிருந்துபடைத்தனைபலசகதண்டமுநீ
நின்னுருவாகியளித்திடுகின்றனைநித்தவிபூதியினு
லென்னுருவாகியழிக்கவுநின்றனையேதமின்மாதவனே. (௨௨௦)

ஆயிடைநின்றகிரீடியையுக்கணனங்கொருபொய்கையிலே
போயிடைமூழ்கெனவப்புனலூடொர்புயங்கமெழுந்ததுதன்
வாயிடைவந்தனன்மாணுருவாயொருமாமுனியம்முனியச்
சேயிடைநீரிலெடுத்தனன்மற்றொருசிலையுடன்வாளியுமே. (௨௨௧)

முப்புரநீறெழுநாளினியற்றியமுட்டியுநன்னிலையு
மப்புரசூதனனேவலினந்தணனமரர்பிரான்மதலைக்
கொப்புறவோடுபயிற்றியிதங்கொடுருத்திரமாமறையுஞ்
செப்பினனலவைபெற்றனனென்றுசெயத்திரதற்செறுவான். (௨௨௨)

யாதொருபோதுநினைத்தனையவ்வழியெய்துமுனக்கிவையென்
றோதியநேகவரங்கள்கொடுத்தபினுமையொருகூறுடையோன்
பூதலமாதிடர்தீரவருஞ்சமர்புரிதொழின்முற்றியபின்
†சீதரநின்பதமேவுகவென்றருள்செய்துவிடுத்தனனே. (௨௨௩)

எண்ணியகாரியமெய்தியிறைஞ்சியவிந்திரன்மாமகனுந்
திண்ணியநேமிவலம்புரிவாள்கதைசிலையுடைநாயகனும்
புண்ணியன்மால்வரைநின்றுரகாரிபுயங்களும்வன்கரமு
நண்ணியகாலையில்வெள்ளியெழுந்ததுஞாயிறெழுந்திசையே. (௨௨௪)

இங்கிவர்மூவருமேகினர்மீளருமனெறிமுரசக்கொடியோ
னங்குரையாடியதுரைசெயின்மண்மிசையார்வியவாதொழிவார்
பங்குனனோதியவஞ்சினமும்பசுபதியிடையேகியதுங்
கங்குலினேவினனுரைசெய்கவென்றுகடோற்கசமீளியையே. (௨௨௫)

மற்றவன்முந்துறுதந்தையைவந்துவணங்கிமுன்வஞ்சனையிற்
செற்றவர்தம்முடனுற்றதுசொல்வதுசேவகமோவறிவோ
கொற்றவர்மாமுடிகமழ்கழலாய்வலிகூர்திறலுஞ்செயலு
மற்றவர்போலவுரைப்பதென்னென்றுளழன்றுபுகன்றனனே. (௨௨௬)

திறனறியாமலுரைத்தனைமாருதிசிறுவனெனும்படிநீ
‡மறநெறியேன்றுவயிர்த்தவர்கொல்வதுவஞ்சனையோவிரகோ
வறநெறியேபொருதல்லதுவெல்லுதலாண்மைகொலோவழகோ
விறனெறியாவதுபொய்யிலதென்றனன்மெய்ம்மையுணர்ந்திடுவான். (௨௨௭)

நிருதனைகைத்துவணங்கிநிணங்கமழ்நீளிலைவேலினெடுங்
கருதலர்துற்றியபாசறையன்றோர்கணப்பொழுதிற்புகுதா
வொருதனிலக்கணமைந்தனிறந்தனனென்றழுதுள்ளழியும்
விருதுடைவித்தகன்வாயிலினின்றுவிளித்தனனோருரையே. (௨௨௮)

---

† சீதரநீவருகென்றுதழீஇயுரைசெய்தனன்மீளவுமே என்றும் பாடம்.

‡ மறநெறியன்றுவயிர்த்தவர்சொல்வது என்றும் பாடம்.

எதிரெதிர்கொற்றவன்வாயிலினின்றவர்யாரெனவெய்துதனு
மதிர்முரசக்கொடியோனரவக்கொடியாசனிடைப்பகர்வான்
முதிரவுரைத்ததொர்மொழியுளதம்மொழிமொழிதரவந்தனன்யா
னெதிராவெற்றியரிக்கொடியோன்மகனென்றனன்விக்கிரமனே. (௨௨௯)

அம்மொழிதீயுருமேறெனநீடவையாசர்செவிப்படவோர்
செம்மொழியற்றவன்மொழிவழிசென்றொருசிறிதுமதித்தருளா
னும்மொழிவிட்டொருமெய்ம்மொழிகேண்மெனநோதகுநெஞ்சினனும்
வெம்மொழிவித்தகவெம்மொழிநுந்தைதன்மெய்ம்மொழியென்றனனே. (௨௩௦)

தன்றிருமைந்தனைமௌலிதுணித்தசயத்திரதன்றனைவாள்
வென்றிகொள்*காவலர்காவன்மிகுப்பினும்வெயிலவன்வீழ்வதன்முன்
கொன்றிடுவேனதுதப்பினருங்கனலூடுகுதித்திடுவே
னென்றுமொழிந்தரன்வாழ்கயிலாயமுமெய்தினன்வில்விசயன். (௨௩௧)

வஞ்சனையாலமரிற்பகைதன்னைமலைப்பதுபாதகமென்
றஞ்சினனாதலினீயறியும்படியையன்விடுத்தனனா
லெஞ்சினனானையுன்மைத்துனனென்றுகொளென்றனன்வன்றிறல்கூர்
நெஞ்சினில்வேறொருசஞ்சலமற்றநிசாசரன்மாமருகன். (௨௩௨)

வேறு.

மன்மைந்தர்பலரொடும்போய்மறித்தொருவர்மீளாமன்மலைந்துவீழ
வென்மைந்தனிறந்திடவும்யாதொன்றும்புகலாமலிருக்கின்றேன்யான்
றன்மைந்தனிறந்தனனுந்தான்றழலின்மூழ்குவனென்சபதங்கூறி
வின்மைந்தின்மிகுந்தவருக்கழுதிரங்கியாற்றுவதுவீரந்தானோ. (௨௩௩)

பயத்திரவினடுங்கியான்பருப்பதம்புக்கவன்கொடுத்தபடையும்வாங்கி
வயத்திரதமால்கடவவந்தெதிர்தோன்றுவனாகின்மகரமோதுங்
கயத்திரவிவிழுவதன்முன்கையறுதன்புதல்வனைப்போர்க்களத்தின்மாளச்
சயத்திரதன்றொடுங்கணையாற்றான்படுதலுறுதியெனச்சாற்றுவாயே. (௨௩௪)

என்னினும்பார்தனக்குரியன்சிலைத்தொழிவிற்சிலைக்குருவாயெவரும்போற்று
மன்னினுந்தான்மிகப்பெரியன்றண்டெடுத்தாலுந்தையினும்வலியன்சால
வுன்னினுந்தோன்றானுடையன்மதியாமலிப்படிநீயுரைக்கலாமோ
தன்னினும்போர்க்கெளியனோசயத்திரதன்றானென்றுசாற்றுவாயே. (௨௩௫)

ஆளையாணிலையறிவதல்லதுமற்றறிபவர்யாரணிந்தபோரி
னாளையார்வெல்வரெனத்தெரியுமோவெனநவின்றுநகைத்தான்மன்னோ
பாளைவாய்நெடுங்கமுகின்மிடறொடியக்குலைத்தெங்கின்பழங்கள்வீழ
வாளைபாய்குருநாடுமெந்நாடுமுழுதாளுமன்னர்கோமான். (௨௩௬)

தாரரசன்மகன்றுச்சாதனன்மகன்சல்லியன்மகன்வேற்சகுனியென்னும்
பேரரசன்மகன்முதலாவெத்தனைபேர்பட்டாலும்பெரியதன்றே
பாரரசாளுதற்கிருந்தபார்த்தன்மாமகனொருவன்பட்டானாகி
லாரரசுக்கினியுரியாரந்தோவென்றுரைத்தான்மற்றங்கர்கோமான். (௨௩௭)

---

* காவலர்வீரர்தடுப்பினும் என்றும் பாடம்.

அங்கிருந்து சயத்திரதனுவிகவர்ந்திடுவலெனவாண்மைகூறிப்
பங்கிருந்தவுமாபதிபாற்பணிந்துவரம்பெறச்சென்றான்பார்த்தனுகிற்
கொங்கிருந்ததாராய்நின்குடைநிழற்கீழ்துகாலங்கூட்டங்கூடி
யிங்கிருந்தவேழையரேமென்செயமற்றிருக்கின்றேமென்றுஞ்சொன்னான். (உ௩௮)

இவன்மொழிந்தவிகழுரைகேட்*டிடிம்பன்மாமகன்வெகுளூற்றென்சொன்னா
மவனிதலமுழுதுமினியரசாளநினைந்திருந்தீரறிவிலீர்காள்
சிவனெரிசெய்புரம்போலும்பாடிவீடழலூட்டிச்சேனையாவும்
பவனன்மகன்மகனென்னும்பரிசறியத்தொலைத்திடுபடுத்துவேனே. (உ௩௯)

தசைகுருதிநிணமொழுகத்தனித்தனியேயெதிர்த்தவரைத்தலைகள்சிந்த
விசையன்வரவேண்டுமோமற்றுள்ளார்திரண்டுவரவேண்டுமோதா
னிசைபுலருமுனமுனைந்துநீறாக்கிவிடுதுவனெக்கிருபன்சொன்ன
வசைவின்மொழிமறுத்துடற்றலாகாதென்றிருக்கின்றேனறிகிலீரே. (உ௪0)

இருவரொதிரெதிர்தம்மிலிகல்பொருதவுலகியற்கையாருங்கூடிப்
பருவமுறுத்தனிக்குதலைப்பாலகனுக்காற்றாமற்பறந்துபோனீ
ரொருவனெடுந்தேரழிக்கவொருவன்மலர்க்கைதுணிக்கவொருவன்பின்னைப்
பொருவனெனவறைகூவிப்பொன்றுவித்தானிதுகொண்டோபுகல்கின்றீரே. (உ௪௧)

வரைக்குவமைபெறுந்தடந்தோள்வீமன்மகனிப்படியேமதியாதுகி
யுரைக்குமொழிகேட்டிருந்தவுரகமணிக்கொடிவேந்தனுருத்துநோக்கி
யிருக்குமெழிலவைக்கேற்பவியம்பாமற்றன்மதத்தாலியம்புகின்ற
வரக்கிமகனுடனென்றுங்கழறுதீரென்றுரைத்தானரசர்யார்க்கும். (உ௪உ)

அந்தவுரைமீண்டிவன்கேட்டாங்கவனைநகைத்துரைப்பானரக்கரேனுஞ்
சிந்தனையில்விரகெண்ணார்செருமுகத்தில்வஞ்சகமுஞ்செய்யாரையா
வெந்திறல்கூர்துணைவருக்குவிடமருத்தார்நிரைக்கழுவில்வீழச்செய்யா
ருந்துபுனலிடைப்புதையாரோரிரிலிருப்பகற்றாருரையுந்தப்பார். (உ௪௩)

செழுந்தழல்வாழ்மனைக்கொளுவார்செய்ந்நன்றிகொன்றறியார்தீங்குசூழு
ரழுந்துமனத்தழுக்குறாரச்சமுமற்றருளின்றிப்பொய்ச்சூதாடார்
கொழுந்தியரைத்துகிலுரியார்கொடுங்கானமடைவித்துக்கொல்லவெண்ணா
ரெழுந்தமரின்முதுகிடாரிவையெல்லாமடிகளுக்கேயேற்பவென்றான். (உ௪௪)

தேனிடறிப்பாண்முரலுஞ்செழுந்தாமவிசயனுடன்செருவில்வந்தான்
மானிடரிற்பொரவல்லார்சிலருண்டோதெரியாதுவானுளோரிற்
கோனிடையுற்றருகிருந்ததிறல்வேந்தர்காத்திடினுங்குறித்தவீரன்
றனிடருற்றுயிரழிகைதப்பாதென்பதுமுரைத்துத்தனயன்மீண்டான். (உ௪௫)

வேறு.

அரக்கனப்போலவையகன்றபின்பகை
துரக்கும்வெங்குனிசிலைத்துரோணன்றன்னொடும்
பரக்கும்வெண்டிரைக்கடற்பாரெலாமுடன்
புரக்கநின்றவன்சிலபுகழ்ந்துகூறுவான். (உ௪௬)

* இடிம்பிமகன் மிகவெகுளூற்று என்றும் பாடம்.

கொடிநெடுஞ்சேனையைக்கூறுசெய்துநீ
கடிகைமுப்பதுமுடன்காக்கவல்லையேல்
வடிவுடைச்சிந்துமாமகனுமுய்குவன்
வெடியனற்குளிக்குமவ்விசயன்றானுமே. (௨௪௭)

நாளையோர்பகலுமேநமக்குவெய்யபோர்
காளையானைவருங்காமின்காமினென்
றாளையுமடுகளிற்றாழிமன்னவன்
வேளைபுக்கவரினும்வீழ்ந்துவேண்டினான். (௨௪௮)

மணிமதிலரணெனமன்னுசேனைய
யணிபடநிறுத்தியாமளவுங்காப்பன்யான்
பணிவுறுபுண்ணியபாவமுற்றுவ
துணிவுறத்தெரியுமோதும்பைமாலையாய். (௨௪௯)

முப்பதுகடிகையின்மொழிந்தவஞ்சினந்
தப்பதுபடாதெனிற்றனஞ்சயன்சிலைக்
கொப்பதொன்றில்லைமற்றுரைத்தவாசெய
லப்பதுமாசனன்றனக்குமாகுமோ. (௨௫0)

மல்லினான்மல்லரைமலைந்தமாலவற்
புல்லினானென்னினுஞ்சிந்துபூபனை
வில்லினால்வெல்லரிதென்றுமீளவுஞ்
சொல்லினான்மறைமொழித்* துரோணன்றானுமே. (௨௫௧)

கோப்பலருடன்பலகூறன்மற்றவர்
நாப்பலநவிலினுநாளைவான்பகற்
றுப்புலிநிகர்சயத்திரதன்றன்னுயிர்
காப்பல்யானென்றனன்கதிரின்மைந்தனே. (௨௫௨)

அன்மருளிரவிவீழளவுநாளையித்
தென்மருடெரியல்வேற்சிந்துவேந்தனைக்
கன்மருடிகிரியிற்காப்பன்யானென்றான்
றான்மருடணனெனுந்துணைவன்றானுமே. (௨௫௩)

விரற்புனைகோதைவல்வில்லின்வல்லவர்
குரற்படச்சேவகங்கூறுகிற்பரோ
வுரற்புரைநீடியோடையானையாய்
சரற்புயலானதுதணிதஞ்செய்யுமோ. (௨௫௪)

பொருதொழில்வீதம்படப்புரிந்தகாலையில்
விருதர்களிருவரும்வேறல்கூடுமோ
வொருதலைநின்றிவனுடற்றும்வின்மையுங்
கருதலன்வின்மையுங்காண்டிகாவலா. (௨௫௫)

---

* துரோணசாதனே என்றும் பாடம்.

என்றுசேனாபதிமகனியம்பின
னின்றகாவலர்களுநிசைபுலர்ந்துழிச்
சென்றுபோர்புரிந்து நின்றெவ்வர்யாரையும்
வென்றுமீளுது மெனவிடைகொண்டாரரோ. (உ௫௬)

பூதனைமுலைநுகர்பூந்துழாய்முடி
நாதனும்விசயனுநலத்தொடேவிய
தூதனுமருக்கனுந்துயிலுணர்த்தினார்
சேதனர்புகழ்மொழித்திகிரிவேந்தையே. (உ௫௭)

கயிலைபுக்கதுமான்கணையுஞ்சாபமும்
வியன்மலர்ப்பொய்கையும்விசயற்கீந்ததும்
புயலெனக்கரியமெய்ப்பூந்துழாயவன்
றுயிலுணர்குரிசிலுக்கடைவிற்சொன்னபின். (உ௫௮)

பைதிகழ்மணிப்பணிப்பதாகையானிடை
யெய்தியங்குரைத்தது மிருந்தமன்னவர்
வெய்துறப்புகன்றது மீண்டுவந்ததுங்
கொய்திறற்கடோற்கசன்றானுங்கூறினான். (உ௫௯)

ஆகச்செய்யுள்—௩,௪௫௮.

பதின்மூன்றும்போர்ச்சருக்க முற்றிற்று.

---

# பதினான்காம்போர்ச்சருக்கம்.

அரியதண்கலைவாண்மதியமுங்கொதிகொளாலமுந்தனதிடத்தடக்கி
யுரியவொண்கங்காநதிக்கொருபதியாயுரைபெறுமுயர்மகோததியிற்
பரியதிண்சிலையோடம்பெலாமுகந்துபற்குனப்பொருப்பிடைப்பொழியுங்
கரியபைம்புயலைக்கைதொழுமவரேகருவிலேதிருவுடையவரே. (௧)

காலையாதவனைத்தருமன்மாமதலைகைதொழுகடன்முடித்தருளிச்
சாலையார்தழல்செய்வேள்வியந்தணர்க்குத்தானமுந்தருவனவழங்கி
மாலையாமளவிற்றனஞ்சயன்மொழிந்தவஞ்சினம்வழுவறமுடிப்பான்
வேலையாரரவப்பலபணைமுழங்கவெம்முரட்சேனையோடெழுந்தான். (௨)

அடைந்தவரிடுக்கணகற்றுதற்கெண்ணியாடகப்பெருப்பினாற்கடலைக்
கடைந்தமுதளித்தகருணையங்கடலேகடும்பரிச்சந்தனங்கடவ
மிடைந்தொளியுமிழும்வேற்படைத்தடக்கைவீமனுமிளைஞரும்பலருங்
குடைந்திருபுறனுங்கைவரமகவான்குமாரனுமமர்க்களங்குறுக. (௩)

சோனையம்புயவிற்கணைதொடும்பதாதிதுரகதந்துரகதத்தடந்தேர்
யானையென்றுரைக்குநால்வகையுறுப்புமிராசமண்டலமுகமாகத்
தானையங்கடலையிடனுறவகுத்துத்தான்முதற்போரணியாகச்
சேனையின்பதியாமைத்துனனின்றான்றேவரும்யாவரும்வியப்ப. (௪)

பாப்புவெம்பதாகைப்பார்த்திவன்பணியாற்பத்திரண்டியோசனைப்பரப்பிற்
றீப்புறஞ்சூழநடுவணிற்ப தபோற்செயத்திர தனையிடைநிறுத்திக்
கோப்புறப்பரிதேர்குஞ்சரம்பதாதிகூறு நான்முறையணிநிறுத்திக்
காப்புறத்திசைகளெட்டினுநெருங்கக்காவலர்யாரையுநிறுத்தி. (ரு)

தூசியின்முதனுள்வஞ்சினமொழிந்த துன்மருடணன்றனைநிறுத்தி
யூசியுநுழையாவண்ணம்விற்பதாதிவபவரையுரனுறநிறுத்தி
வாசியிபத்திற்றேரிலெண்பட்டமன்னரையிருகையுநிறுத்திப்
பேசியகன்னன்சகுனிசல்லியரைப்போரணியாகவேநிறுத்தி. (சு)

அணிகளொந்தைந்தாலவகைவியூகமாகியசேனையின்சிரத்து
மணிமுடிபுனைந்துவைத்தெனவலங்கல்வலம்புரிமார்பனைநிறுத்திப்
பணிவுறுமவுணர்பதாகினிவகுத்தபார்க்கவனிவனெனப்பயில்போர்த்
துணிவுடன்பஃறேர்சூழ்வரச்சகடதுண்டத்துநின்றனன்றுரோணன். (எ)

மந்தணமிருந்துகங்குலின்முதனுண்மன்னனோடியம்பியவகையே
யந்தணனணிந்தவிரகினைவிமானத்தமரருமதிசயித்துரைத்தார்
சந்தணிகடகவாகுநீள்சிகரச்சயத்திரதனைபொருபகலிற்
கொந்தழலுரோடத்தனஞ்சயன்பொருதுகோறலோவரிதெனக்குறித்தே. (அ)

செய்த்தலைக்கயலும்வாளையும்பிணங்குஞ்செழும்புனற்சிந்துநாட்டரசைக்
கைத்தலத்தடங்கும்பொருளெனக்காத்துக்காவலர்நின்றபேரணிகண்
டுத்தமோசாவுமுதாமனுமுதலோரோரிருபுறத்தினுஞ்சூழ
வித்தகவலவன்முன்செலத்தடந்தேர்விசயனவ்வினைஞர்மேனடந்தான். (கூ)

போர்முகத்தடங்காமடங்கலேறனையான்விதம்படப்பொழிசிலீமுகங்கள்
கார்முகத்தெழுந்ததாரைபோல்வழங்கக்கார்முகத்தொலியினாற்கலங்கித்
தார்முகத்தரசன்றம்பியோடணிந்தசாதுரங்கமுமுடனுடைந்து
நீர்முகத்துடைந்தகுரம்பெனத்துரோணனின்றுழிச்சென்றடைந்தனவே. (க0)

புரவிமுப்பதினாயிரங்கொடுமூனைந்துபொருதிறற்கிருதவன்மாவுங்
கரவிறற்கரிநூறாயிரங்கொண்டுகாத்துச்சாதனன்றானு
மிரவியைக்கண்டமின்மினிக்குலம்போலீடழிந்திடவுடன்றெங்குஞ்
சரவிதப்படையால்விண்டலந்தூர்த்துத்தானைகாவலன்முனைச்சார்ந்தான். (கக)

வேறு.

சென்றவிற்றனஞ்சயற்குமுனைகுலைந்தசேனைவாய்
நின்றவத்துரோணனுக்குநீடுபோர்விளைந்ததா
லொன்றொடொன்றுதுரகதங்களுருமின்மிஞ்சியதிர்வுறக்
குன்றுகுன்றொடெற்றெனக்கொடிகொடேர்குலுங்கவே. (கஉ)

முட்டியாலுநிலையினாலுமொய்ம்பினாலுமூராணுறத்
தொட்டவில்லுமிர்வறத்தொடுத்தவின்மையாலுமுன்
கிட்டியாசிரியனுமக்கிரீடியும்பொரப்பொரப்
பட்டவில்லையிருவர்மேலும்விட்டவிட்டபகழியே. (கங)

தேரிரண்டுமிடம்வலந்திரிந்துசூழவரமுனைந்
தோரிரண்டுதனுவும்வாளியோரோர்கோடியுதையவே
காரிரண்டெதிர்ந்துதம்மின்மலைவுறுங்கணக்கெனப்
போரிரண்டுவீரருக்குமொத்துநின்றபொழுதிலே. (௧௪)

இகல்செய்வெஞ்சிலைக்கைவீரவிந்நிலந்தனக்குநின்
பகைவனின்றவந்நிலம்பதிற்றிரண்டியோசனை
புகலுகின்றபொழுதுசென்றதென்றவட்பொருமன்மா
லுகளுகின்றபரிகொடேரையுள்ளுறச்செலுத்தினான். (௧௫)

எதிர்த்ததேர்விழித்திமைக்குமளவின்மாயமீதுவெனக்
கதித்துரங்கவிசையிலோடுகண்கரந்துகழிதலு
மதிர்த்தடர்ந்துபின்றொடர்ந்தடுத்தபோதருச்சுனன்
கொதித்துவந்தகுருவொடம்மதிருகிநின்றுகூறுவான். (௧௬)

ஐயநின்னொடமரிழைத்தலமருக்குமரிதுநின்
செய்யபங்கயப்பதங்கள்சென்னிவைத்தசிறுவன்யான்
வெய்யவென்சொல்வழுவுறாமல்வேண்டுமென்னமுறுவலித்
தெய்யவந்தமுனிவுமாறியேகுகென்றியம்பினான். (௧௭)

ஈசனால்வரங்கள்பெற்றவிந்திரன்றன்மதலைகாம்
போசனாதியெண்ணின்மன்னர்பொருதழிந்துவெருவியுட்
கூசநாலுபாலுநின்றநின்றசேனைகொன்றுபோய்ப்
பாசநாமவணியினின்றவீரரோடுபற்றினான். (௧௮)

முன்னர்முன்னர்வந்துவந்துமுனைகடோறுமுந்துறு
மன்னர்தந்தம்வில்லும்வேலும்வாளும்வென்றிவாளியிற்
சின்னபின்னமாகவெய்துசெல்லுமத்தனஞ்சயன்
கன்னனின்றவுறுதிகண்டுகண்ணனோடுமுரைசெய்தான். (௧௯)

விலங்கிநம்மையமர்விளைக்கவிடதன்விற்சுதக்கண
னலங்கல்வேலவந்திமன்னனவன்மகன்றனுதியா
வலங்கொள்வாகைவீரர்சேனைவளையநின்றகன்னனைக்
கலங்குமாறுபொருதுபோகவேண்டுமென்றுகருதியே. (௨௦)

ஒக்குமென்றுசெங்கண்மாலுமுளவுகோல்கொடிவுளியைப்
பக்கநின்றபானுமைந்தன்முனையுறப்பயிற்றலு
மிக்கவெம்பதாதியோடுசூழநின்றவிருதருந்
தொக்குவந்துவிசயன்மீதுசுடுசரந்தொடுக்கவே. (௨௧)

சரந்தொடுத்தவயவரைச்சரத்தினிற்றனித்தனி
யுரங்குளிக்கவாகுவீழவுதரமூழ்கவொளிமுடிச்
சிரங்களற்றுமறியவென்புசிந்தவாய்கடுளைபடக்
கரந்துடிக்கவிருபதங்கடறியவேகலக்கினான். (௨௨)

கலக்கமுற்றுவில்விழுந்து கவனமாவிழுந்துமே
விலக்கமற்றகளிறிழுந்து கொடிகொடேறிழுந்துபோ
யுலக்கவிட்டளக்கர்வாயுலம்பவோடுகலமெனத்
துலக்கமிக்குவருதல்கண்டுசூருநின்றுதுதிசெய்தார். (உ௩)

துதியினுயர்ந்தவண்மையுடையபானுசூனுவுங்
கதியினுயர்ந்தமாவொடொத்ததேர்கடாவிமூன்
மதியினுயர்ந்தகொற்றவலவனுந்துதேருடன்
விதியினுயர்ந்தசாபவெஞ்சமந்தொடங்கினான். (உ௪)

தொடங்குபோரில்வலியினுமதனினுந்துலங்குமெய்
விடங்கினும்வின்மையானுமூவமைதம்மில்வேறிலார்
விடங்கொள்வாளிமின்பரப்பிவெய்யநாணிடிக்கவே
மடங்கல்போலிரண்டுவில்லுமண்டலம்படுத்தினார். (உ௫)

மண்டலம்படுத்தவில்லின்வலிகொள்கூரவாளியால்
விண்டலம்புதைந்து தங்கண்மெய்படாமல்விலகினார்
குண்டலங்கள்வெயிலுமூரல்குளிர்நிலாவும்வீசவே
*மண்டலம்புகாமனோர்வயங்குவாண்முகத்தினார். (உ௬)

முகத்தினின்றகன்னனோடுமுடிமகீபரோடுநின்
றிகற்செய்கின்றகடிகையோரிரண்டுசென்றதென்றுள
மிகக்கனன்றுதேரும்வில்லுமெய்யணிந்தகவசமுந்
தகர்த்து மார்பின்மூழ்கவாளியேவினன்றனஞ்சயன். (உ௭)

தனஞ்சயன்கையம்பினொந்து தபனன்மைந்தன்மோகியா
மனந்தளர்ந்திளைத்தபின்னர்வருணராசன்மாமகன்
கனன்றெழுந்துசேனையோடுவந்துகார்முகங்குனித்
தினங்கொள்வாளியேவினனெதிர்ந்தபோரிலீறிலான். (உ௮)

ஈறிலாதவீரன்வந்தெதிர்த்தகாலைவீரரின்
மாறிலாதவிசயன்விட்டமறைகொள்வாளியாவையுஞ்
சேறிலாதசெறுவில்வித்தசெந்நெலென்னவவனுடற்
பேறிலாமன்முனையுறப்பிளந்துகீழ்விழுந்தவே. (உ௯)

விழுந்தவாளிகண்டுபின்னும்விசயன்மூரிவிற்குனித்
தழுந்தவாளியொன்றுபத்துநூறுவன்பொடடைசினு
னெழுந்தவாளிவாளியால்விலக்கவேவியாசுகங்
கழுந்ததாகவவனெடுத்தகார்முகங்கலக்கினான். (௩0)

முகங்கலங்கமெய்கலங்கமுடிகலங்கமூரிமார்
பகங்கலங்கமற்றோர்தண்டருச்சுனன்றன்மேல்விட
நகங்கலங்கவுருமின்வந்தததனையும்பர்நாயகன்
சகங்கலங்கவேற்றனன்றனதுமெய்யினுகவே. (௩௧)

---

வண்டலம்புகமலநேர் என்றும் பாடம்.

ஆகவத்தில்விசயனுய்யவையன்மெய்யிலறையுமுன்
மோகரித்தெறிந்ததெவ்வன்முடிதுளங்கிமண்மிசைச்
சோகமிக்குவிழுதல்கண்டுசூரகாரியாதலான்
மாகமுற்றவமரர்செம்பொன்மழைபொழிந்துவாழ்த்தினர். (௩௨)

வாழிவாழிகுந்திமைந்தன்வலவன்வாழிவாழியே
வாழிவாழியவனியுய்யவந்தநாதன்வாழியே
வாழிவாழிகாளமேகவண்ணன்வாழிவாழியே
வாழிவாழிவாசுதேவன்வாழிவாழிவாழியே. (௩௩)

வேறு.

என்றியாவருந்துதிசெயவிரகினலெறிந்தகாவலன்றன்னைக்
கொன்றபோது தன்னுயிர்பெறுதனஞ்சயன்கொண்டல்வண்ணனைப்போற்றி
நின்றன்மேனியிலெறிகொடுங்கதைபடவெறிந்தவனெடுவானிற்
சென்றமாயமொன்றிருந்தவாறடியனேன்றெளியுமாறுரையென்றான். (௩௪)

பன்னவாதையென்றொருத்திதாய்தந்தையும்பரவைமன்னவனந்த
மன்னவன்றாப்பெற்றனன்பலபடைமறையொடும்வலிகூரத்
துன்னுநாமமுஞ்சுதாயுமற்றொருவராற்றோற்றுயிரழிவில்லான்
முன்னிராயுதன்மிசையிவன்படையுறின்முடிவுறும்வரம்பெற்றான். (௩௫)

எறிந்தவெங்கதைகொன்றிடும்படைக்கலனெடுத்தவருடற்பட்டா
லறிந்துநாணிடையேற்றலினவனுயிரழிந்ததென்றருள்செய்தான்
பிறிந்தயோனிகளனைத்துமாய்முதலுமாய்ப்பெருமிதமறந்தீண்டிச்
செறிந்தவர்க்கொருசகாயனுமருந்துயர்தீர்த்திடுந்தேர்ப்பாகன். (௩௬)

சுதாயுதந்தனக்கரியநாயகன்மிசைக்கதைபடச்சிதைவுற்றுச்
சுதாயுவென்பவன்பலபெரும்படையுடன்றுறக்கமெய்தியபின்னர்ச்
சதாயுவென்றவனிளவன்மற்றவனினுஞ்சமர்புரிந்தவன்றானுங்
கெதாயுவாயினன்கிரீடியோடெதிர்த்தவர்பாவரேகெடாதுய்வார். (௩௭)

ஆயிரம்பதின்மடங்குதேரிபமதன்மும்மடங்கடல்வாசி
யாயிரஞ்சதமதனின்மும்மடங்குகாலாளுடனணியாக்கி
யாயிரம்புயத்தருச்சுனனிகரெனவாழியாற்றணிப்புண்ட
வாயிரம்புயத்தவனெனவெதிர்த்தனனுடலாயிரவாகு. (௩௮)

உரங்கொளாயிரம்பொலங்கிரியனையனவோரொருகுனிவிற்செங்
கரங்களாயிரங்கொடுவளைத்தாயிரங்கண்ணன்மைந்தனைநோக்கி
வரங்களாயிரமறையொடும்பெற்றவன்மதிவகிர்முகமான
சரங்களாயிரமாயிரமொருதொடைதனிலெழும்படியெய்தான். (௩௯)

எடுத்தபோதிலொன்றருங்குதைநாணிடையிசைந்தபோதொருபத்துத்
தொடுத்தபோதினூறுகைத்தபோதாயிரமெனவருஞ்சுடர்வாளி
யடுத்தபோர்முடிமன்னவன்விடுவிடுமநேகமாயிரம்புந்
தடுத்தபோதொருதனுவுமைஞ்ஞூறுடற்றனுவுடனெதிர்நின்ற. (௪௦)

அலிமுகந்தொழுமிளவல்வாணனைப்புயமழித்தமாமறையொன்று
வலிமுகங்கொடியுயர்த்தவன்செவியினிலுரைக்கமற்றதுபெற்றங்
குலிமுகஞ்செறிவரிசிலைகால்பொரக்குனித்துவன்பொடுதொட்ட
சிலிமுகங்களிற்றுணித்தனனுயிரஞ்சிகரவாகுவுஞ்சேர. (௪௧)

மீதலந்தனக்கிறைவன்வச்சிரத்தினால்வெற்பினஞ்சிறகற்றுப்
பூதலந்தனில்விழுந்தபோல்விழுந்தனபுயங்களாயிரமும்போய்க்
காதலங்களைதடம்படிந்தேகுதல்கண்டுகாமுகனாகிப்
பாதலம்புகுந்தின்பமெய்தியவிறற்பார்த்தன்வெங்கணையாலே. (௪௨)

அன்றருச்சுனனாயிரம்புயங்களுமரிந்தனன்மழுவீர
னின்றருச்சுனனிவன்புயமரிந்தனனென்றிமையவரேத்தத்
தன்றருச்சுனநான்மறையுரானுடன்றோடாமுன்றவழ்ந்தேரடிச்
சென்றருச்சுனமிரண்டுதைத்தருளினோன்செலுத்துதேரவன்சென்றான். (௪௩)

கடிகைமுப்பதுஞ்சிந்துவுக்கரசனைக்காக்குமாறறைகூவி
யிடியிடித்தெனப்பல்லியமதிர்தரவெழுகடற்படையோடும்
படிநடுக்குறப்பணிக்குலநெளித்திடப்பட்டவர்த்தனருள்ளார்
முடிதரித்தவரனைவருந்திரண்டொருமுனைபடவெதிர்சென்றார். (௪௪)

பரிதியால்வளைப்புண்டசெம்பரிதியிற்பற்குனன்றனுவாங்கித்
தெரிசரங்களோரொருவருக்காயிரஞ்சிரமுதலடியீறு
நெரிதரும்படிதொடுத்துவெங்கொடிபரிநேமியந்தேர்கோடி
கரிகளுந்துணிபடப்படமலைந்தனன்கடிகையொன்றினின்மாதோ. (௪௫)

போரில்வெவ்விடாய்தணிவுறக்களத்தினிற்புறங்கொடுத்தவர்சோரி
நீரின்மூழ்கியுங்கழுகிடுகாவணநீழலாறியுஞ்சென்றார்
தேரில்வாசியிற்களிற்றில்வந்தவர்களிற்சேவடிசிவப்பேற
யாரியார்குதித்தோடுதலொழிந்தவரெறிபடைவீழ்த்திட்டே. (௪௬)

நின்றுபட்டனர்தனித்தனியமர்புரிநிருபர்முந்துறவோடிச்
சென்றுபட்டனர்சேனைமண்டலிகர்வெஞ்சினம்பொழிசிறுசெங்கட்
குன்றுபட்டனபட்டனநவகதித்துரகதக்குலம்யாவு
மன்றுபட்டவர்க்குறையிடப்போதுமோவநேகநாளினும்பட்டார். (௪௭)

அநேகமாயிரம்பேர்படக்கவந்தமொன்றாடுமக்கவந்தங்க
ளநேகமாயிரமாடவெஞ்சிலைமணியசைந்தொருநூலார்க்கு
மநேகநாழிகையருச்சுனன்சிலைமணியார்த்ததக்களம்பட்ட
வநேகமாயிரம்விருதரையளவறிந்தார்கொலோவுரைக்கிற்பார். (௪௮)

வேறு.

வெவ்வாசிநெடுந்தேர்மிசைநிமிராவரிவிற்கொண்
டிவ்வாறமர்புரிவேலையிலெழுசெங்குருதியினா
லவ்வாடாவுடையானழியாயோதனமந்திச்
செவ்வானகமெனவந்துசிவப்பேறியதெங்கும். (௪௯)

முருகாரிருசிறைவண்டினமுளரிப்புதுமலர்விட்
டருகார்பொழினிழலூடணியலர்நாண்மலருறவே
யிருகாலமுமுக்கால்விடுகைம்மாரியிருக்கா
லொருகாலருமறையோர்விடுபதநண்ணினனுதயன். (௫0)

விரவார்முனையடுதேர்நுகவெவ்வாசிகள்புனலுண்
டிரவாவிடிலோடாதினியென்றையனுரைப்ப
வரவாபரணன்றந்தருளருமாமறைவருணச்
சரவாய்வரவெய்தானவனெழலுற்றதொர்தடமே. (௫க)

ஆழம்புணரியினும்பெரிததினும்பெரிதகலஞ்
சூழெங்கணும்வண்டாமரைதுறையெங்கணுநீலங்
கீழெங்கணுநெடுவாளைவரால்பைங்கயல்கெண்டை
வீழெங்கரையருகெங்கணும்வளர்கின்னரமிதுனம். (௫௨)

ஒருபால்வளர்போதாநிரைகருநாரைகளொருபா
லொருபாலுமாமகிழ்நேமிகளன்றிற்குலமொருபா
லொருபான்மடவன்னம்புனலரமங்கையரொருபா
லொருபாலிருபாலுந்தவழொளிநந்துறைபுளினம். (௫௩)

தலமாமகளுந்தித்தடநிகரானதடங்கண்
டலமாறுகொளிருதேர்வழியுடைவள்ளலுரைப்பக்
குலமாமணியனையான்விரைதேர்நின்றெதிர்குதிபா
வலமானதுரங்கங்களைவள்வார்விசிநெகிழா. (௫௪)

குவளைப்பரிமளமேவருகுளிர்வாரிபருக்கிப்
பவளத்துவர்வாயானிருபாதங்கைவிளக்கித்
தவளக்கிரியொருநாலெனமேன்மேலொளிதருபோ
ரிவுளிக்குமிளைப்பாறவிளைப்பாறினனிப்பால். (௫௫)

அப்பாலிவனுடனேபொருதனிலத்தெதிர்சருகோ
டொப்பாயுளம்வெருவெய்தியுடைந்தோடியவீரர்
தப்பாரொருவருமின்றடுசமரந்தனில்விசயன்
கைப்பாய்கணைபொரநேர்ந்தவர்கழன்மன்னவவென்றார். (௫௬)

துரியோதனனவர்சொல்லியசொற்றன்செவிக்கடவே
யரியோடெதிர்பொரவஞ்சியவடல்வாரணமனையா
னெரியோடியபுரியென்னவிளைத்தாரணவேள்விப்
பெரியோனடியெய்திச்சிறுமையினுவிவைபேசும். (௫௭)

அதிரேகவிறற்பற்குனனம்போடெதிரம்பிட்
டெதிரேறியவயமன்னரிலெம்மன்னர்பிழைத்தார்
கதிரேகிடுமுன்றுச்சளைகணவன்றலைகடிதிற்
பிதிரேறுவதல்லாததுபிழைப்பிப்பவரிலரால். (௫௮)

காணுதவிடத்தாண்மையுறக்கூறுவர்கண்டா
லேணுடமர்முனைதன்னிலிமைப்போதெதிர்நில்லார்
நாணுதுமுன்வெந்நிட்டிடுநஞ்சேனையடங்கச்
சேணுடுறுமின்றேயொருசெயல்கண்டிலமையா. (ருக)

குனிநாணுடைவரிவிற்படைவிசயற்கெதிர்குறுகித்
தனிநானவனுயிர்கொள்ளுதறவிர்கிற்குதலல்லான்
முனிநாயகவேறோர்விரகில்லைத்திருமுன்னே
யினிநாடியடும்போர்விரைவொடுகாணுதியென்றான். (௬௦)

முனியுந்தரணிபனோடுசின்மொழிநன்கினுரைக்குந்
துனிகொண்டுளமழியாதொழிதுணிவுற்றனைமுதலே
யினியஞ்சியிளைத்தெண்ணிடுமெண்ணத்தகவன்றா
லனிகங்களழிந்தானுநின்றாண்மைக்கழிவுண்டோ. (௬௧)

உரனால்வருதேரோன்றனினுற்றோரிருவரையு
நரநாரணரிவரென்பர்கண்*ஞானத்தினுயர்ந்தோ
ரரனார்திருவருளாலுமுனையடல்வாளிகள்பலவும்
வரனாலுயர்மறையும்பிறர்மற்றார்நனிபெற்றார். (௬௨)

தவரோடவனின்றால்விதிதானுந்தரமல்ல
னெவரோமலையோடும்பொருதிருதோள்வலிபெற்றா
ருவரோதநிறத்தோனவனுயர்தேர்நனியூர்வா
னவரோடினியமர்வெல்லுதலாராயினுமரிதால். (௬௩)

அதிகம்பகைதமரோடுறலாகாதெனவரசர்க்
கெதிரன்றவையிடையேவசையேதேதுபுகன்றாய்
விதுரன்றனதுளநொந்தடல்வில்லுந்துணிசெய்தான்
மதியின்றிறனறிவோர்மொழிவழிவந்திலைமன்னா. (௬௪)

மன்னாகவமதியாவிறல்வயவன்றனைவிசயன்
றன்னாலொருபகலேயுயிர்தபவித்திடலாமோ
மின்னார்வடிவேலாயிவைவிதியின்செயலன்றோ
வென்னாவொருகவசந்தனையிவன்மெய்யினிவிட்டான். (௬௫)

வேறு.

பங்கயாசனன்வாசவற்களித்ததுவாசவன்பயில்போரி
லங்காவினுக்குதவியதங்காவெனக்கருளியதிந்தத்
தொங்கன்மாமணிக்கவசமெவ்வீரருந்தொழத்தகுகழற்காலாய்
புங்கவாளியிற்படைகளிலொன்றினும்பொன்றிடாதிதுவென்றான். (௬௬)

---

* ஞானத்தினுயர்ந்தோர் என்றும் பாடம்.

இட்டபொற்பெருங்கவசமோடெழுந்தனனிராசராசனுமுள்ள
பட்டவர்த்தனர்மகுடவர்த்தனர்களும்பலபடைஞருங்கூடி
யெட்டிபத்தின்வெஞ்செவிகளுஞ்செவிடுறப்பல்லியமெழுந்தார்ப்ப
முட்டவிட்டனர்தனஞ்சயனின்றமாமுனையில்வேன்முனையொப்பார். (௬எ)

சென்றசென்றவெஞ்சேனைகளிளைப்பறத்தெய்விகத்தினில்வந்த
மன்றலம்பெரும்பொய்கைநீர்பருகியப்பொய்கையின்வளநோக்கி
யென்றுமென்றுநாறுங்கர்புனலன்றுநல்லின்னமுதிதுவென்பார்
தென்றலந்தடஞ்சோலையிற்கரைதொறுஞ்சேர்ந்துதம்விடாய்தீர்வார். (௬அ)

மத்தவாரணங்கொண்டுசெந்தாமரைவனங்கலக்குறுவிப்பார்
தத்துடாய்பரிநறும்புனலருத்துவார்தாமுநீர்படிகிற்பார்
கைத்தலங்களிலளியினமெழுப்பிமென்காவிநாண்மலர்கொய்வா
ரித்தலந்தனிலிம்மலர்ப்பரிமளமில்லையென்றணிகிற்பார். (௬௯)

இன்னவாறுதம்மசைவொழிந்தியாவருமிபாததுரகத்தேர
டன்னவாவியைவளைத்தனர்கடல்வளையாழிமால்வரையென்னத்
துன்னுமாமணித்தேரினின்றிழிந்துதன்சுவேதமாநீருட்டு
மன்னுவார்கழன்மகபதிமதலையவ்வருதினிக்கடல்கண்டான். (எ0)

கண்டபோதுபின்கண்டிலன்கண்டவக்கடவுள்வாவியைநன்னீ
ருண்டவாசியைத்தேருடன்பிணித்துவில்லோரிமைப்பினில்வாங்கி
வண்டுழாய்மதுமாலையாய்வளைந்துமேல்வருவருதினிதன்னை
யண்டரூர்புகவிடுத்தபின்றேரின்மேலாகுமாறருளென்றான். (எக)

கன்றுசிந்தையன்கோபவெங்கனல்பொழிகண்ணினன்காலாளாய்
நின்றுதேரினுங்களிற்றினும்பரியினுநிரைநிரைதாங்கம்போற்
சென்றுசென்றடுவீரரைத்தனித்தனிசரத்தினுற்சிரஞ்சிந்திக்
கொன்றுகொன்றுசூழ்வரக்குவித்தனன்மணிக்குன்றுதானெனநின்றான். (எ௨)

தலைவனுமுனிகிருபனுங்கிருதனுந்துரகதத்தாமாவு
மலைவுறுமனத்தரசருஞ்சேனையுமுனைந்தணியணியாகச்
சிலைவலானெதிர்மிசைபடத்தேர்மிசைவிசையுறச்சிலைவாங்கி
வலையவாகுவின்வலியெலாங்காட்டினார்வரங்கொள்வாளிகள்வல்லார். (எ௩)

கைதவன்குலக்கன்னிகேள்வனுமொருகணைக்கொருகணையாக
வெய்துவெங்கணையாவையும்விலக்கிமேலிரண்டுநாலெட்டம்பால்
*வெய்தினெய்தவரவரவர்கொடிகளும்வில்லும்வாசியும்வீழக்
கொய்துகொய்துபல்பவுரிவந்தனன்விறற்குன்றவில்லியொடொப்பான். (எ௪)

தேரினின்றவர்பாரினின்றவன்மிசைவிடுகணைத்திரண்மின்னுக்
காரினின்றுபாதலமுறவுரகர்மேற்கனன்றுவீழ்வனபோன்ற
பாரினின்றவன்றேரினின்றவர்மிசைவிடுகணைபாதாலத்
தூரினின்றுருமையும்விழுங்குவமெனவுரகரேறுவபோன்ற. (எ௫)

* வெய்திநேமியந்தேரொடுகொடிகளும் என்றும் பாடம்.

வேறு.

சேணிலத்தின்மிசைநின்றமர்தொடங்கினவர்தேர்களிற்றனதறிந்தனநெடுந்துவச
நாணியற்றனவொடிந்தனதடஞ்சிலையுநாகமுற்றவரொழிந்தனரிரிந்தனர்க
ணீணிலத்தினிடைநின்றசமர்வென்றவனுநேமிவச்சிரமகுடம்புனைகொடிஞ்சியுடை
யேணிலத்திவுளிமுந்தமுனையுந்திரதமேறியிட்டனன்முகுந்தனுடனின்புறவே. (௭௬)

ஏறியிட்டவன்விரைந்திரதமுங்கடவியேகலுற்றபினியம்பலதழங்கியெழ
வேறுபட்டமருடைந்தவர்களுந்திருகிமேவிடச்சகுனியுந்தினகரன்சுதனு
மாறியிட்டரதகுஞ்சரதுரங்கமமுமாகவிப்படிபொரும்படையொடன்றநனி
சூறியிட்டனன்வலம்புரியலங்கல்புனைதோளிலெப்புவனமுந்தனிசுமந்தவனே. (௭௭)

யோதனத்திலிவனென்கணைதிரின்றளவும்யோசனைக்குமிடைநின்றிலன்முனைந்துசமர்
மோதுகைக்குநினைவுண்டுகொலெதிர்ந்துமிகமோகரித்துவருகின்றதுதெரிந்ததிலை
யாதுபெற்றெனனெடுஞ்சிலைகொல்வெங்கணைகொலேதமற்றகவசங்கொலிரதங்கொலென
மாதவற்கிடைவணங்கிபிதுவென்கொலெனவாசவக்கடவுண்மைந்தனுரைதந்தனனே. ()

ஈசனப்பொழுதுணர்ந்தருளிவென்றியரியேறுவிற்குரியபற்குனனுடன்பழைய
வாசவற்கயன்வழங்குகவசந்துவசமாசுணற்கருளினன்கலசசம்பவனு
மாசுகத்தினிலொழிந்தபலதுங்கமுனையாயுதத்தினிலழிந்திடவதன்றதனை
நீசெகுத்திடுதியென்றுதுரகங்களையுநேர்படக்கடவினன்கதிவிதம்படவே. (௭௯)

கானகத்தினிடைமண்டியெரியங்கிதருகார்முகத்தின்வலிகொண்டுமுனைவெஞ்சமரின்
மேனடக்குமவர்தங்கண்மகுடங்களினுமேருவொத்துயர்புயங்களினுமுந்தியினு
மானனத்தினுநுழைந்துருவவெம்பரிதியாயிரக்கிரணமும்புடைபரந்ததென
வானகத்துவெளியின்றியணிபந்தரிடவாளிவிட்டனன்மனஞ்செய்துதனஞ்சயனே. ()

நாதெறித்தனதுரங்கமநெடுஞ்சிலைகணாணியற்றனவுடைந்தனதடந்திகிரி
பாதமற்றனமதங்கயவிதங்கள்பொருபாகர்பட்டனர்மறிந்தனநெடுந்துவச
மோதுதற்கெதிர்முனைந்தவர்சிரங்கள்பொழிமூளையிற்களமடங்கலுநெகிழ்ந்தரச
ராதபத்திரமழிந்தனவிவன்றனுடனார்சரத்தொடுசரந்தொடவியைந்தவரே. (௮௧)

ஆரமர்க்கண்மிகநொந்திரவிமைந்தனெடிதாகுலத்தொடுமிரிந்தனன்விரிந்தமணி
வார்கழற்சகுனியுந்துணைவருந்தமுகமாறியிட்டனர்மறிந்தனர்கலிங்கர்பலர்
சீருடைக்கிருபனுங்கிருதனும்பழையசேதிவித்தகனுமஞ்சினரொடுங்கினர்கள்
பூரிபட்டிலனெருங்கியணிநின்றுபொருபூபர்பட்டனரொழிந்தவர்புறந்தரவே. (௮௨)

தேவருக்கரசனுந்துகணபந்திநிகர்தேரிடைப்பணிநெடுங்கொடிநுடங்கியெழ
மாவுகைத்துவலவன்றிறலுடன்கடவமாமுடிக்கண்மகுடந்திகழவன்றுபெறு
காவன்மெய்க்கவசமுந்தனிபுனைந்துசிலைகால்வளைத்தவிர்பெரும்பிறைமுகஞ்செய்கணை
தூவியுற்றெதிர்முனைந்தனனனந்தவொளிதோய்கழற்றரணிமண்டலதுரந்தரனே. (௮௩)

கோமகக்குரிசின்முந்தவிடுமெம்புபலகோறுடுத்தெதிர்விலங்கிவிசயன்றனது
தீமுகக்கணையனந்தநிலையொன்றின்முனைசேரவிட்டனன்விடும்பொழுதினந்தவிறன்
மாமணிக்கவசமெங்குமுடனென்றியொருமால்வரைப்புயவினுண்டுளிவிழுந்தபரி
சாமெனத்தலைமழுங்கியவையொன்றுமவனுகமுற்றிலவசைந்திலனசஞ்சலனே. (௮௪)

வீரன்விட்டனசரங்களவனுண்கவசமேலுறப்படுதலின்றிவீழுகின்றநிலை
யோரிமைப்பினிலறிந்துகுமரன்கையயிலோடுரைக்கவுவமம்பெறுவிடங்கொளயி
றேரினிற்பொலியநின்றிருகைகொண்டுநனிசீறிமெய்ப்படவெறிந்தனனெறிந்தளவில்
வார்சிலைக்குருவின்மைந்தனதுகண்டதனைவாளியிற்றுணிபடும்படிமலைந்தனனே. (அ௫)

வாகைநெட்டயிறுணிந்திடலும்வன்பினுடன்மாதிரைத்திரதமுங்கடவிவந்துமுத
லாகவத்தினிலுடைந்தவாடங்கழையாயெதிர்த்தொருமுகம்படநெருங்கிமிக
மோகரித்துவருகின்றசெயல்கண்டமார்முவருக்கரியவன்கழல்பணிந்துபரி
தாகமுற்றமர்தொடங்கவுமறந்துகமழ்தாரருச்சுனனுயங்கினனனந்தரமே. (அ௬)

கோமணிக்குழலுகந்துபுறவின்கணுயர்கோவலர்க்குநடுநின்றுமூண்வளர்ந்தமுகில்
காமனுக்கினியதந்தைசமரம்பொருதுகாதன்மைத்துனனயர்ந்தநிலைகண்டுபல
தாமரைக்குளொருதிங்களெனவங்குலிகொடாழ்தடக்கைகளிரண்டொருமுகம்பயில
மாமணிக்குழன்மணங்கமழ்செழும்பவளவாயில்*வைத்தனனலந்திகழ்வலம்புரியே. ( )

நாகர்பொற்றருவையம்புவியிலன்றுதருநாதன்வச்சிரவலம்புரிமுழங்குகுரன்
மேகமொக்குமெனவெண்டிரையெறிந்துபொருவேலையொக்குமெனவெங்கணுமெழுந்த
தாகமுற்றுறநெகிழ்ந்துபுளகம்புரியவாகவத்தெழுகடுஞ்சினமடிந்தவிய பொழு
மோகமுற்றனரெதிர்ந்துபொருமண்டலிகர்மோழைபட்டதுகொலண்டமுகடுஞ்சிறிதே.

பாணிறப்புரவியுந்தியிரதங்கடவுபாகன்மற்றவர்மயங்கியதுணர்ந்தருளி
மேனிலத்துநரகன்றனுயிர்கொண்டதொருவேல்கொடுத்திதனில்வென்றிடுதியென்றளவில்
வானவச்சிரன்மகன்கடிதுவந்துபெருவாழ்வுபெற்றனமெனும்பரிவினன்றனது
ஞானபத்தியொடெழுந்துவலம்வந்துதிருநாண்மலர்ப்பதம்வணங்கியதுகொண்டனனே. (அ௯)

மாறுபட்டிவனையின்றுயிர்கவர்ந்துவிடின்மாமருத்தின்மகன்வஞ்சினமழிந்துவிடு
மூறுபட்டுவெருவும்படிபெறிந்தமரிலேனுவிப்பதுபெருந்தகைமையென்றுகொடு
நூறுபட்டமகவின்றலைவனெஞ்சமிகநோதகக்கடிதெறிந்தனனெறிந்தளவி
னீறுபட்டதுபெருங்கவசம்வந்தவழிநேர்படத்திருகினன்சமரினின்றிலனே. ௯0

ஆறுபத்திருபதைம்பதுபெரும்பகழியாகவிட்டுவரிவன்சிலையும்வெம்பரியு
மேறுபைத்தலைநெடுந்துவசமும்புதியவேழதட்டிரதமுந்துணிசெய்தங்கருகு
சீறுதற்குவருதிண்குருவின்மைந்தனொடுதேரருக்கன்மகனுஞ்சகுனியும்பலரும்
வீறுகெட்டிருபதங்கெடுவிரைந்துசெலமீளவிட்டனன்முனெண்டிசையும்வென்றவனே.

வேறு.

வேர்த்தெதிர்விசயன்வென்றகளத்தி
லார்த்தெதிர்வந்தாரார்கொல்பிழைத்தா
ரேத்தியபதினெண்பூமியினெண்ணும்
பார்த்திவர்பற்பலவாயிரர்பட்டார். (௯௨)

* வைத்தனன் வலம்புரி வலம்புரியே என்றும் பாடம்.

தம்பியருந்துச்சாதனன்முதலோ
ரம்பிலழிந்து தம்மாருயிருய்ந்தா
ரெம்பெருமானன்றெரிகணையேவ
வம்பாமுற்றதனைவருமுற்றார். (கூரு)

மாரதர்வீந்தாரதிரதர்மாய்ந்தார்
சாரதிகளும்வன்றலைகளிழந்தார்
நாரதன்முதலோர்நாகரநேகர்
பாரதமின்றேபற்றறுமென்றார். (கூச)

இந்தவயப்போரிம்முறைவென்று
பைந்துளவோனும்பார்த்தனுமாகச்
சிந்துமகீபற்றேடிமணித்தே
ருந்துறுமெல்லையுற்றதுரைப்பாம். (கூரு)

வள்ளல்குறித்தவலம்புரிநாதத்
தெள்ளமுதந்தன்செவியுறுபோழ்தி
னுள்ளணிநின்றமுரசமுயர்த்தோன்
றள்ளுறுநெஞ்சிற்சங்கையனானன். (கூகூ)

தன்றுணைநின்றசாத்தகியைக்கூய்
வென்றிடுபோரில்விசயனிளைத்தா
லன்றிமுழக்கானதிர்வளையையன்
சென்றறிகுதிநீயென்றுரைசெய்தான். (கூஎ)

வன்கட்டிண்டோண்மன்பலர்நிற்க
வென்கட்டந்தானின்னுரையென்னா
மன்கட்டாரோன்மலரடிவீழ்ந்தான்
றன்கட்டாண்மைத்தன்முனொடொப்பான். (கூஅ)

கண்ணுறநில்லார்கடவுளர்முதலாம்
விண்ணவரேனும்விசயன்வெகுண்டான்
மண்ணிலெதிர்க்குமன்னவர்யாரோ
தண்ணளிநெஞ்சுந்தருமமுமிக்கோய் (கூகூ)

என்றறன்மைந்தனேவறலைக்கொண்
டன்றொருதேர்மேலதிரதரோடுஞ்
சென்றனன்வெய்திற்றேவகிமைந்தன்
றுன்றியசெருவிற்றூசிபிளந்தே. (க00)

விருதொடுமுந்தவிளங்கியகொற்றக்
கிருதனையாதிக்கேழலொடொப்பா
னொருதனுவுங்கொண்டோர்பரிமாவு
மிரதமும்வில்லுமிமைப்பிலழித்தான். (க0க)

பன்மகர் நூறுயிரவர்பரித்தே
ரன்மிக நூறுயிரவரழிந்தார்
மன்மதவெங்கைமலைமிசைவீரன்
றன்றூன்மலைந்தான்றார்ச்சலந்தன். (௧0௨)

தார்ச்சலசந்தன்சாத்தகியெனுங்
கார்ச்செலவாயகணைமழையாலே
போர்ச்சலமில்லாப்புகர்மலையோடு
மேற்சலமெய்திவெங்கனலானான். ௧0௩)

நாட்டமிலாதநாபதிமைந்த
ரீட்டமதாகவீரிருவோர்கள்
கூட்டம்பெய்யக்கொடுமூனைவென்றான்
வேட்டம்போனவெங்களிறொப்பான. ௧0௪)

*யாரும்போரிலெளிவாவீரஞ்
சாருஞ்சாபந்தன்னொடுநேமித்
தேருந்தானுஞ்சென்றிடுவோனைக்
கூறுஞ்சாபக்குருவெதிர்கண்டான். (௧0௫)

வேறு.

ஏகலைகலென்னுடனினியமர்புரிந்தேகென்
றாகுலம்படத்தகைந்தனனடற்சிலையாசான்
மேகவண்ணனுக்கிளவலும்வேதியருடன்போர்
மோகரிப்பது தகுதியன்றெனக்கெனமொழிந்தான். (௧0௬)

இருவருந்தமதிருசிலையெதிரெதிர்குனித்தா
ரிருவரும்கொடும்பகழிகளெதிரெதிரெய்தா
ரிருவருந்தமதேர்சிலையாவையுமிழந்தா
ரிருவரும்பெரும்பொழுதமர்திளைத்தனரிளைத்தார். (௧0௭)

இளைத்துவேதியனிற்பமன்னவனிளைப்பாறி
யுளைத்தடம்பரித்தேருமற்றொன்றுமேல்கொண்டு
வளைத்தவில்லொடுமென்னணிகலக்கிமேல்வருவோன்
கிளைத்தபல்பெருங்கிரணனில்வயங்கொளிகிளர்ந்தான். (௧0௮)

யானைதேர்பரிவீரரோன்பது நிலத்துத்
தானையோடுதுச்சாதனனடுத்தெதிர்தடுத்தான்
சோனைமேகமொத்திவன்பொழிதொடைகளாற்கலங்கிப்
பூனைபோலழிந்திருபதஞ்சிவந்திடப்போனான். (௧0௯)

இடையில்வந்துவந்தெதிர்த்தவர்யாரையுங்கடந்து
புடைவருந்தனதனிகினிநிழலெனப்போதத்
தடையறும்படிதருக்குடன்சார்பெருப்பருவ
விடைநடந்தெனநடந்தனன்விசயனின்றுழியே. (௧௧0)

---

* ஆரும்போரிலழிதா என்றும் பாடம்.

பின்னருங்கொடிமுரசுடைப்பெருந்தகைவருந்தி
முன்னநின்றவாயுவின்மகன்முகனுறநோக்கி
மன்னரெண்படுவருதினிவாரியினுப்ப
னென்னராயினரும்பியுமெம்பெருமானும். (ககக)

தகலருந்திறற்சாத்தகிதன்னையும்விடுத்தேதம்
பகனுமேற்றிசைப்பட்டது பாஞ்சசன்னியமும்
புகனுகின்றது போர்முகத்ததிர்குாற்பொம்ம
விகல்வலம்படநீயுமங்கேகுதியென்றான். (ககஉ)

சொன்னவார்த்தையும்பிற்படமுற்படத்தொழுது
தன்னொடொத்ததோள்வலியுடைத்தரணிபாநேகர்
மன்னுநால்வகைப்படையொடுந்திரண்டிருமருங்கும்
பின்னுமுன்னுமொய்த்துடன்வரப்போயினன்பெரியோன். (ககந)

கலிங்கர்மாகதர்மாளவர்கௌசலர்கடாரர்
தெலுங்கர்கன்னடர்யவனர்சோனகரொடுசீனர்
குலிங்கராரியர்பப்பரர்குச்சரர்முதலோர்
விலங்கினார்களைவிண்ணுறவிலக்கிமேல்விரைந்தான். (ககச)

உரங்கவெங்கொடியுயர்த்தகாவலன்றனக்கிளையோர்
துரங்கமாதிகொள்பலர்பெருஞ்சேனையிற்சூழ்ந்தோ
ரிரங்குமாழ்கடல்பேருகவிறுதியிலெறியுந்
தரங்கநேரெனவிடையிடைதனித்தனிதகைந்தார். (ககரு)

முல்லைமல்லிகையுற்பலங்குமுதமாமுளரிப்
பல்லம்வாளயில்சூலமென்பனமுதற்பகழி
யெல்லையில்லனவிடையறுவகைதொடுத்தெதிர்ந்தார்
வில்விதங்களில்யாவையும்பயின்றகைவிறலோர். (ககசா)

விந்தன்விந்தரனிருவருமேலிடுமுனையிற்
றந்தம்வாசியுந்தேர்விடுபாகருந்தாமு
மந்தரந்தனிற்றலைகள்போய்முகில்களையலைப்பச்
சிந்துசோரிபோய்ப்பெருங்கடலலைத்திடச்சிதைந்தார். (ககஎ)

போர்க்குமுந்துறுதேரினன்குண்டலபோசி
தீர்க்கலோசனன்றிண்டிறற்சித்திரசேனன்
மார்க்கநேர்படவிலங்கிமாமறலிநேர்வரினுந்
தோற்கலாதவர்மூவருந்தம்முயிர்தோற்றார். (ககஅ)

சோரமுப்பதுகுமாரர்கள்சென்றமர்மலைந்தோ
ரோரொருத்தருக்கோரொருசாயகமுடற்றிச்
சூரன்மெய்த்துணைநோதகும்படியுடன்றலைத்தான்
மாருதச்சுதன்வல்லவில்லாண்மையார்வல்லார். (ககக)

ஆயுவற்றவர்சுயோதனனிளைஞரேழைவர்
வாயுபுத்திரன்வாளியாலாருயிர்மடியச்
சாய்தலுற்றது சடக்கெனத்தாணிபன்வியூகந்
தேயுவொத்திவன்சேறலுந்திமிரநேரெனவே. (கஉ0)

வேறு.

ஏகுகின்றது கண்டுபெருங்கடலேழுமொண்டுவிழுங்கியதிர்ந்தெழு
மேகமம்புபொழிந்தெனவெங்கணும்விசுமம்புவிரைந்துவிரைந்திட
யூகமின்றுபிளந்து தனஞ்சயனோடிவன்புகுதந்திடினம்படை
யாகுலம்படுமென்றுதடஞ்சிலையாரியன்சமரந்தனின்முந்தவே. (கஉக)

ஆதியந்தணன்வந்தது கண்டிகலாணிலன்சினமின்றிநலம்பெறு
நீதியன்றுனுடன்சமர்செய்திடனீபெருங்குருநின்கழலென்றலை
மீதுகொண்டனனென்றுவணங்கவும்வேதியன்கைமிகுந்துபுகுந்தெதிர்
மோதியம்பு*தெரிந்தனன்வன்றிறன்மூரிவெஞ்சிலையுங்குனிகொண்டதே. (கஉஉ)

வீரனென்றுமொழிந்திலன்வந்துமுன்வீழ்சரங்கள்விலங்கிவயம்புனை
தேரினின்றுமிழிந்து நடந்தெதிர்சேரவந்துசெழுஞ்சிலையின்குரு
ஆருகின்றவயங்கிரதந்தனையோரிரண்டுகொரங்கொடிவன்புடன்
வாரியுந்தவெறிந்தனன்வண்புயல்வானினின்றவரஞ்சியொதுங்கவே. (கஉங)

நாகவிந்தம்வளர்ந்துவளர்ந்தகனகமொன்றியதென்றுநடுங்கிட
மேகபந்திகலங்கவெழுந்தது மீளவும்புவியின்கண்விழுந்தது
பாகனங்கநெரிந்தது நொந்தது பார்முகந்துளைவிண்டனமண்டுருள்
வேகவெம்பரியுந்தலைசிந்தினவேதியன்றனதெங்புமொடிந்ததே. (கஉச)

வீழவிங்குமவன்றனைவென்றிவன்மேனடந்துழியெண்டிசையும்படை
சூழவந்துவளைந்தனரந்தகனூதர்தங்களினும்பெருவஞ்சக
ரேழுமண்டலமும்புதையும்பரிசேறுகின்றதரங்கநெருங்கட
லூழியும்பெயர்கின்றதெனும்படியோதைவிஞ்சவுடன்றுசினங்கொடே. (கஉரு)

காரிலங்குமடங்குபுலம்பினகாகளஞ்சுரிசங்குமுழங்கின
பேரிபம்பினகொம்புதழங்கினபேரியங்கள்பெயர்ந்துகறங்கின
பூரியும்பொருதஞ்சியவந்தியர்பூபனும்புறமன்றிடவெங்கணை
மாரிசிந்திமலைந்தனன்வெஞ்சினமாறழன்பவனன்றிருமைந்தனே. (கஉசு)

மாசுணந்தலைநொந்துசுழன்றனமாதிரங்கண்மருண்டுகலங்கின
வீசுதெண்டிரையம்புவெதும்பினமேலையண்டமுழும்விண்டுபுகிர்ந்தன
பூசலின்கணுடன்றுகழன்றவர்போர்தொடங்கநினைந்துபுகுந்தன
ராசுகன்றிருமைந்தனுடன்சுடரானவன்குமரன்சமர்முந்தவே. (கஉஎ)

கோபம்விஞ்சினர்விஞ்சைவரம்பெறுகூர்சரங்கடெரிந்தனர்கொண்டனர்
சாபமுங்குனிதந்தெதிருந்தினர்தாரைவெம்பரிதங்கிரதங்களு
நீபமெங்குமலர்ந்தெனமண்டுசெந்நீர்பரந்திடநின்றுமுனைந்தெழு
பூபர்தங்களுடம்புசிவந்தனர்பூரமெங்குமலைந்துபுரண்டவே. (கஉஅ)

---

* தெரிந்தன என்றும் பாடம்.

மாருதன்புதல்வன்றொடுமம்பினின்மாவிரண்டுமிரண்டும்விழுந்தன
சோரும்வன்றுவசந்தறியுண்டது சூதனுந்தலைசிந்தினன்முந்திய
தேருமுந்துருளுந்துகள்கொண்டனசேமவெங்கவசந்துளைவிஞ்சிய
தாரவெண்குடையம்புலியும்பிறையானதஞ்சலினெஞ்சுமழிந்ததே. (௧௨௯)

வேறு.

அழிந்துகன்னனுங்கால்விசையினிலிவனம்பினுக்கெட்டாமல்
வழிந்துபோதல்கண்டடல்விடசேனனவ்வள்ளலுக்கெதிரோடி
யிழிந்து தன்பெருந்தடமணித்தேரின்மேலேற்றலுமிவனேறிக்
கழிந்தநீர்க்கணைகோலுவான்போலவன்கண்ணெதிருறச்சென்றான். (௧௩0)

சென்றுமீளவும்வீமனோடெதிர்ந்துவெஞ்சிலையமர்புரிந்தந்தக்
குன்றுபோனெடுந்தேருநுண்டுகள்படக்குலைந்துவெங்கொடுத்தோடக்
கன்றிநாகவெங்கொடியவன்கண்டுதன்கண்ணிகரிளையோரை
யொன்றிநீர்விரைந்துதவுமென்றிருவரையொருகணத்தினிலேவ. (௧௩௧)

கன்னனைக்கடிதுற்றிருவருமதுகயிடவரெனத்தக்கோர்
மன்னனுக்கரியனையவீமனுக்கெதிர்வரிசிலையுறவாங்கி
யந்நிலத்தினிலவனுடனெடும்பொழுதமர்புரிந்தவன்கையிற்
செந்நிறக்கொடும்பகழியாற்றம்முடல்சிதைந்துவானிடைச்சென்றார். (௧௩௨)

தனது கண்ணெதிரிருவருமழிந்தபின்றபனன்மைந்தனுநொந்து
கனதுரங்கமழுந்குதேர்வயப்படைக்காவலன்முகநோக்கி
யுனது தம்பியரிருவரைச்செற்றவன்முடித்தலையொடியேனே
லெனதுபுன்றலையவன்கையிற்கொடுப்பனென்றேறினனொருதேர்மேல். (௧௩௩)

குனித்தசாபமுந்தொடுத்தசாயங்களுங்குலவுமால்வரைத்தோளுந்
துணித்தநெஞ்சமுமுரிந்தனபுருவமுமெரிந்தகண்களுந்தோன்றப்
*பணித்ததேரொடும்போருடன்றெழுதரும்பரிதியின்விரைந்தெய்தி
யினித்தராதலமுரககேதனற்கெனவிளவலோடிகல்செய்தான். (௧௩௪)

ஆற்றையொத்தனகால்வழியளைபுகுமாமைகொளடன்மள்ளர்
சேற்றையொத்தனநித்திலமெடுத்தெறிசெல்வநீள்குருநாடன்
காற்றையொத்தனன்வலியினாற்சினத்தினாற்கதிரவன்றிருமைந்தன்
கூற்றையொத்தனன்பிறப்பிலேதுவக்குளோர்குணங்களுங்கொள்ளாரோ. (௧௩௫)

தேறல்வண்டிமிர்தெரியலான்றினபதிசிறுவனைமுகநோக்கி
யாறல்வெஞ்சமத்தென்னுடன்முனைந்தனைமுனைந்தனையானாலும்
வேறலென்கடனின்னைமன்னவையின்முன்விளம்பியவசனத்தாற்
கோறலெம்பிதன்கடனெனவரிசிலைகுனித்தனன்கொடித்தேரோன். (௧௩௬)

இலக்கமற்றவெங்கணைகளாலிருவருமெதிரெதிரமராடிக்
கலக்கமுற்றபின்றினகரன்மதலையக்காற்றின்மைந்தனைச்சீறி
யலக்கணுற்றிடப்பலபெருங்கணைதொடுத்தவன்விடுங்கணையாவும்
விலக்கிவச்சிரத்தேரும்வெம்புரவியும்விறற்றுவசமும்வீழ்த்தான். (௧௩௭)

* பணித்தகோளொடும் என்றும் பாடம்.

காலினால்வருங்காலின்மைந்தனைக்கடுங்கதிரவன்றிருமைந்தன்
வேலினாலடர்ந்தெறிதலுமெறிந்தசெவ்வேலிருதுணியாகக்
கோலினாலவன்றுணித்துமீளவுமழல்*கொளுந்தியதொருதண்டு
நாலினான்முழமுடையதுகன்னன்மேலெறிந்தனனகைசெய்தான். (௧௩௮)

தேரவன்றிருமைந்தனேறியதடந்தேரும்வாசியுஞ்சிந்தி
யூரவந்தவெம்பாகனுந்தலைபிளந்தோடலுற்றனன்பின்னும்
வீரனும்பெருவலியுடன்வருகெனவேறொர்தேர்மேற்கொள்ளத்
தூரநின்றவரிவருமுடன்றமைசுயோதனன்கண்ணுற்றான். (௧௩௯)

கண்டுதுன்முகனெனுந்திறலிளவலைக்கடிதினேவலுங்கங்குல்
வண்டுசெஞ்சுடர்வளையவந்திறந்தெனவலியவார்சிலைவாங்கிக்
கொண்டுதிண்டிறல்வாளியான்மலைமிசைக்கொண்டல்பெய்வதுபோல
மண்டுபோர்புரிந்தண்ணல்கைப்பகழியால்வானிமைப்பினிலுற்றான். (௧௪0)

தாளினோடியகன்னன்மன்னவன்விடுதம்பிவீழ்தலும்வீமன்
றோளினோடிமண்மிசைபுதைதரவொருதோமரந்தனையேவ
வேளினோடிசைவீமன்மேலதுசெலும்வேலையின்விடவெவ்வாய்க்
கோளினோடியகுரிசில்கைக்கணையினாற்கோளழிந்ததுமன்னோ. (௧௪௧)

மன்னர்மன்னவன்றம்பியரிருவரைமாருதிமிசையேவ
முன்னர்வந்தவரிருவரும்பட்டபடமுனைந்தபோர்மதியாமன்
பின்னிருங்கணைவிகருணன்முதலியோர்வீமன்மேலோரைவர்
பின்னருஞ்செலநால்வரைப்பிறைமுகக்கணையினாற்பிளந்திட்டான். (௧௪௨)

வேறு.

பகருநால்வரும்பட்டபின்பைங்கழல்
விகருணன்பொரவெஞ்சிலைவாங்கலும்
புகலும்வஞ்சினம்பொய்க்கினுநின்னுட
னிகல்செய்யேனெம்பியேகுகென்றனரோ. (௧௪௩)

சுடுவுரைக்கனலன்னதுச்சாதனன்
வடுவுரைக்கவுமன்னுறைமன்றிடை
நடுவுரைக்குநன்றவுடையாயுனைக்
கொடுவுரைக்கணையேவினுங்கொல்லுமோ. (௧௪௪)

பாரறிந்தபழிக்குட்படாதநின்
னேரறிந்தும்பொரநெஞ்சியையுமோ
போரறிந்துபொருகவென்றனெடுஞ்
சீரறிந்தவர்செய்ந்நன்றிகொல்வரோ. (௧௪௫)

வீமனிப்படிச்சொல்லவும்வேரியந்
தாமமுற்றதடவரைத்தோளினான்
மாமணிச்சிலைவாங்கியவ்வீமன்மேற்
றீமுகக்கணையுஞ்சிலசிந்தியே. (௧௪௬)

* கொளுத்தியென்றொருதண்டு என்றும் பாடம்.

எம்முனோர்களெனைவருமுங்கையில்
வெம்முனைக்கணையால்விளிந்தேகவு
மும்முன்யாரொருவேனுமுய்வேன்கொலோ
வம்மின்வார்சிலைவாங்குகென்றேதினன். (கசஎ)

மிகநகைத்தும்வெறுத்துந்திரிபுர
தகனனொத்தசமீரணன்மாமகன்
முகனுறச்சென்றுமூரிவில்வாங்கிமே
லிகனிறக்கணையேவினனென்பவே. (கசஅ)

ஏவினாலிவ்விருவரும்வெஞ்சம
மேவினார்மெய்ப்படாமல்விலக்கினார்
கூவினாரைறகூவிப்பொருதிளைத்
தோவினார்தமையேநிகரொத்துளார். (கசகூ)

விகனன்விட்டகணைகளின்வீமன்மெய்
யிகன்மணிக்கவசம்பிளந்தேறுதே
ரகலரிக்கொடியற்றுக்கொடிஞ்சியுஞ்
சகலமுற்றுத்தனுவுமுரிந்ததே. (கரு௦)

மின்னையொத்தவிறற்படைமாருதி
பின்னைவிட்டபிறைமுகவார்கணை
யன்னைசித்தமலமரப்பின்னவன்
றன்னைவெற்றிமகுடந்தடிந்ததே. (கருக)

கோவிகன்னன்கொலைபடப்பற்பல
ராவிகன்னமறைமணையாலறப்
பாவிகன்னன்பதைக்கவென்றேகினன்
மேவிகன்னகம்போற்புயவீமனே. (கருஉ)

அன்றுசாதத்தலைகைகளாடவே
சென்றுசாத்தகிதன்னுடன்சேர்ந்தனன்
றுன்றுசாத்திரத்தின்படிசூழ்முனை
வென்றுசாத்தியவாகைகொள்வில்லினன். (கருங)

அங்கிதன்னொடனிலமுஞ்சேர்ந்தெனச்
சங்கபாணிதன்றம்பியும்வீமனுஞ்
செங்கலங்கலஞ்சேற்றிடைமூழ்கிய
வெங்களத்துவிசயனைக்கூடினார். (கருச)

வேறு.

தேவரும்பரவுபாகன்செலுத்துதேர்விடலையோடு
மூவருஞ்சுடர்கண்மூன்றுமூண்டெனத்திரண்டகாலை
மேவருஞ்சமரின்முன்னம்வெங்கொடுத்துடைந்தவேந்தர்
யாவருந்திருகிவந்தாங்கெதிரெதிரடர்ந்துசூழ்ந்தார். (கருரு)

சாத்தகிதானும்பூரிசவாவும்வெஞ்சாபம்வாங்கிக்
கோத்தனர்பகழிசென்றுகுறுகினதேருந்தேருஞ்
சேர்த்தனர்மலைந்தகாலைச்சிலைதுணிவுண்டுதேர்விட்
டேத்தருந்தடக்கைகொட்டியிருவருமல்லினேர்ந்தார். (கருசு)

மல்லினின்வென்றுவீழ்த்திமாயவன்றம்பிதன்னைக்
கொல்லுவான்முனைந்துமற்றைக்கோமகனடர்த்தனைக்கிக்
கல்லினின்மாரிகாத்தோன்கண்டுவில்விசயனோடுஞ்
சொல்லினன்பகைவன்றன்னைச்சுடர்முடிதுணித்தியென்றே. (கருஎ)

இருவருமுனைந்தபோரிலிளைத்தவர்க்குதவியாகப்
பொருவதுகடனன்றென்றுபோற்றியவிசயன்றன்னை
வெருவரமுனைந்துசீறிமீளவும்விளம்பமாயன்
றிருவுளமறிந்துதெவ்வன்றிண்புயந்துணியவெய்தான். (கருஅ)

புயந்துணிவுண்டபூரிசவாவினைப்புரிந்துதள்ளிச்
சயம்புனைவாளிற்றும்பைத்தார்புனைதலையுங்கொய்து
வயம்புனைந்திளவனிற்பமன்னறமன்றிப்போரென்
றியம்பியவிராசராசற்கெதிர்மொழியியம்பலுற்றான். (கருகூ)

றென்னனீரபிமன்றன்னைநேருறவென்றபோரு
முன்னமேசிவேதன்றன்னைவீடுமன்முடித்தபோரு
மன்னறமுறைதவாமன்மலைந்தனிரென்றுநக்கான்
றன்னைவந்தடைந்தோர்க்குற்றதளர்வெலாமொழிக்குந்தாளான். (கசுO)

பின்னரும்விசயனிற்பப்பேணலார்பின்னிட்டோட
மன்னரின்மலைந்தோர்தம்மைவாளியால்வானிலேற்றி
முன்னவனோடுமந்தமுகில்வண்ணனிளவலோடுந்
தன்னுரைவழுவாவண்ணந்தரியலர்படையைச்சார்ந்தான். (கசுக)

அருக்கனோர்கணத்திலத்தமடையுமவ்வளவுங்காக்கிற்
செருக்கிளர்விசயனின்றேதீயிடைவீழ்தறிண்ண
நெருக்குபுநின்மினென்றுநிலவறையதனிலந்த
மருக்கமழ்தொடையலானைவைத்தனர்மருவலாரே. (கசுஉ)

நச்சளையரவமென்னநடுங்கினனின்றகாலைத்
துச்சளைகணவன்றன்னைத்தோற்றமொன்றுங்காணான்
பச்சளைமுடைகொண்மேனிப்பாடிமாமகளிர்பைம்பொற்
கச்சளைபுளகபாரக்கனதனங்கலந்ததோளான். (கசுங)

வேறு.

பாராழியவலமறப்பாண்டவர்தம்மிடர்தீரப்பார்த்தன்வாழப்
போராழியறிதுயிலும்பெருமிதமுமுடன்மறந்துபிறந்தமாயோ
னோராழியெழுபரித்தேருடையானைமாயையினாலொழிக்கத்தன்கைக்
கூராழிபணித்தலுமக்களம்போலச்சிவந்தனவக்குடபாலெங்கும். (கசுச)

அயத்திரதமிடப்பசும்பொனுவதுபோலருச்சுனனூரறிஞனுக
நயத்திரதமொழிக்கீதைநவின்றபிரான்மயக்கறியார்நாள்செய்வான்றன்
வயத்திரதமறைந்ததெனவலம்புரித்தாரவன்சேனைமன்னர்யாருஞ்
செயத்திரதன்றனைக்கொண்டுசெருமுனையில்விசயனெதிர்சென்றுசேர்ந்தார். (௧௬௫)

எண்சிறந்தமகன்றலையைநிலத்திட்டான்றலைதுகளாகென்றுநாடித்
தண்சமந்தபஞ்சகமென்றொருமடுவிலிவன்றாதைதருப்பிக்கின்று
னெண்சரங்கொண்டிவன்றலைமற்றவன்கரத்திற்போய்விழநீயுடற்றாகென்று
திண்சயங்கொள்விசயனுக்குச்சிந்துபதிதனைக்காட்டித்திருமாலசொன்னான். (௧௬௬)

என்னுமொழிதனைக்கேட்டுக்காண்டீபமெடேன்கணையுமினித்தொடேன்யான்
சொன்னமொழிபிழையேனென்றெதிர்நடந்தான்சுடரெரியிற்றோய்வேனென்ன
வன்னதுகேட்டாழிமாலதிகோபமுடன்சீறவதனாற்பார்த்தன்
றன்னசிலைதனையெடுத்துக்கணைதொடுக்கமதித்தான்சொற்றவறிலாதான். (௧௬௭)

வரத்தினின்முன்பெறுசாபம்வாங்கியருச்சுனன்சிந்துமகிபன்மௌலிச்
சிரத்தினிலெய்தலுந்துணிந்ததொருசரத்தாற்றுணிதலுமச்சிரம்வீழாமற்
சரத்தினைமேன்மேலெய்ந்தடத்திருந்துதருப்பித்ததாதைதன்பொற்
கரத்திடையேவீழ்வித்தானவனதனைநிலத்திட்டக்கணத்தின்மாய்ந்தான். (௧௬௮)

முன்பட்டானருக்கனெனவெளிப்பட்டான்வெளிப்பட்டுமுடிவிற்சிந்து
மன்பட்டான்மாமாயன்மாயமிதென்றறியாமன்மகன்போய்ப்பட்ட
பின்பட்டானவன்றந்தையினிப்பட்டாரெவருமெனப்பிழைபட்டான்போ
லென்பட்டானரவுயர்த்தோனெரிப்பட்டான்விசயனெனவெண்ணிநின்றான். (௧௬௯)

கன்னசவுபலர்முதலாங்காவலருஞ்சுயோதனனுங்கரந்தான்வெய்யோன்
சொன்னமொழிபிழைத்தான்வெஞ்சுவேததுரங்கமனென்றுதுள்ளியார்த்தா
ரன்னபொழுதெம்பெருமான்பணிகொண்டசுடராழியகற்றநோக்கி
யின்னமொருபனைத்தனைப்பொழுதுண்டெனநின்றனனெழுபரிவுளித்தேரோன். (௧௭௦)

விரியோதநெடுங்கடலில்வீழ்வதன்முன்விரைந்துராகன்விழுங்கினானோ
வெரியோடிமகனிறக்குமெனமகவான்மறைக்கமுகிலேவினானோ
கரியோன்கைத்திகிரியினான்மறைத்தனனோவிருள்பரந்தகணக்கிதென்னோ
பொன்னோர்கடிருவுள்ளம்பேதித்தாலெப்பொருளும்பேதியாதோ. (௧௭௧)

உந்திரதத்தனிவலவனுபாயத்தால்வருணன்மகனுயிரைமாய்த்தான்
மந்திரமொன்றறிவித்துவயப்பூமாயிரதத்தேர்தனைமடிவித்திட்டான்
[illegible]தன்சங்கமுழக்கினான்ற[illegible]ன்மாய
விந்திரசாலமுஞ்செய்தானிந்திரனசேயவெல்லாமல்யார்வெல்வாரே. (௧௭௨)

முடையெடுத்தநவநீதந்தொட்டுண்டுங்கட்டுண்டுமுன்னாகக்
குடையெடுத்துமழைதடுத்தும்வஞ்சனைக்கோர்கொள்கலமாங்கொடியபாவி
படையெடுத்துவினைசெய்யேனெனப்புகன்றமொழிதப்பிப்பகைத்தபோரி
னிடையெடுத்தநேமியினால்வெயிலைமறைத்தானின்னமிவ*னென்செய்யானே. (௧௭௩)

---

* என்செய்வானோ என்னும் பாடம்.

ஒற்றைநெடுந்திகிரியினன்மறைவதன்முனைவரையுமுடன்றுமோதிச்
செற்றிடுதல்யான்படுதறிண்ணமெனச்சேனையொடுஞ்சென்றுசூழ்ந்தான்
கொற்றவனதுரைகேட்டுக்கொடிநெடுந்தேர்நரபாலர்சபதங்கூறி
மற்றவனோடொருகணத்தில்வம்மினெனத்தனித்தனிபோய்மலைதலுற்றார். (கஎச)

துருபதனுஞ்சாத்தகியுந்திரௌபதிமைந்தருமுடுகித்தொட்டசாபக்
குருவுடனேபோர்செய்தார்தம்பியருஞ்சுயோதனனுங்கொற்றவேந்த
ரொருபதினாயிரவரும்போய்வீமனுடனுடற்றியவனூர்ந்ததேரும்
வரிசிலையுமழித்தனர்பினவனும்வெறுங்கரதலத்தால்வன்போர்செய்தான். (கஎரு)

பரியெடுத்துப்பரியெற்றிப்பரித்தோராற்றேரெற்றிப்பனைக்கைவேகக்
கரியெடுத்துக்கரியெற்றிக்*காலணிகர்காலாளாற்காலாளெற்றிக்
கிரியெடுத்துவிரியாழிகடைந்ததடந்தோளிருடிகேசனென்ன
வரியெடுத்தகொடிவிடலைதோள்வலியாலுழக்கியரிநாதஞ்செய்தான். (கஎசு)

நிருபர்தொழுங்கனைகழற்காலிலவேந்தன்றம்பியரினெடும்போதாக
விருவர்புறங்கொடாமலதிர்ந்தெதிர்ந்திருதோள்வலிகாட்டவிருவரோடு
மொருவரொருவரையறியாவண்ணமிவனொருவனுமேயுடன்றுசீறிப்
பொருதுபிருதனையும்விறற்சூசிதனையும்வானிற்போக்கினானே. (கஎஎ)

இகலிடிம்பன்மருமகனுந்திருமகனுங்குருமகனோடெதிர்ந்துபல்கா
லகலிடஞ்செஞ்சேறுகவமரருடனசுரரைப்போலமர்செய்காலைப்
பகலுடன்காரிருள்பகைத்தாற்பலிக்குமோவஞ்சனபன்மனையப்போதிற்
புகலிடம்பொன்னுலகாக்கிப்போக்கினனொருகணையாற்புரவித்தாமா. (கஎஅ,

மகன்பட்டசினங்கதுவவரையுறழ்தோட்கடோற்கசன்மாமலைகள்வீசி
யகன்பட்டநுதல்வேழமன்னன்மேலெறிந்தெறிந்திட்டார்த்தகாலைக்
குகன்பட்டந்தனக்குரியகோமுனிவன்மாமைந்தன்வீமன்கையிற்
பகன்பட்டபாடெல்லாம்படுத்தியொருகதாயுதத்தாற்படியில்வீழ்த்தான். (கஎகூ)

மோகித்துவிழுமாக்கன்மீண்டெழுந்துமோகரிக்கமுடிமகிபன்
வேகித்துக்கன்னனைப்பார்த்திவனுயிரைவீட்டுகெனவேகத்தண்டாற்
சோகித்துத்தளர்ந்தான்மேற்றொடேன்விசயனுயிருணவென்றொடையோசாலத்
தாகித்ததிப்பொழுதேகொன்றுனக்குக்கடன்ஞாலந்தருவேனென்றான். (கஅ0)

நிருபனுடனிரவிமகன்புகன்றவுரைகேட்டருகேநின்றவிற்கைக்
கிருபன்மிகநகைத்தெதிரேகிட்டினன்முதுகிடுவைகிரீடிதன்னைப்
பொருபகழிக்கிரையாகப்போக்குகின்றேனெனமொழிவைபோர்வல்லோர்க
ளொருவழியத்தம்வலிமையுரைப்பரோவெனவுரைத்தானுரையான்மிக்கோன். (கஅக)

அம்மொழிதன்செவிசுடப்போயக்கணத்தேவிசயனுடனங்கராசன்
வெம்முனைசெய்போரழிந்துதேரழிந்துவெந்நிட்டான்மீண்டுமீண்டு
மம்முறையிற்பற்குனனாலாவியொழிந்தவராசரநேககோடி
யெம்மொழிகொண்டுரைப்பரிதாலுரைக்கவெமக்காயிரநாவில்லைமாதோ. (கஅஉ)

---

* கால்பனிக்கக்காலாளால் என்றும் பாடம்.

அந்தமுனைதனின்மீண்டுமந்தணன்றன் றிருமதலைகுந்திபோசன்
மைந்தரிருவரையிரண்டுவடிக்கணையான்மடிவித்தான்மாயோன்வன்கைச்
செந்திகிரிதனிலடங்கி யடங்கியதன்கிரணத்தின்சிறுமைநாணி
யுந்து திரைச்சிந்துவினிலோராழித்தேரோனுமொளித்திட்டானே. (௧௮௩)

வேறு.

இசையினும்பெருகநன்றெனத்தனதியற்கையான்மிகவளர்த்திடும்
வசையினுக்கரியவிருள்பரந்துழிவயங்குதீபநெடுவாளினு
ணிசையினும்பொருதுமென்றுதெவ்வர்முனைநேர்நடந்தனனெருங்குகுன்
றசையினும்புடவியசையினுஞ்சமரிலசைவிலாததனியாண்மையான். (௧௮௪)

பகலிராவரவழைத்தனன்பகைவர்பாகனென்றுபடுபகலையவ்
வகலிராவினிலழைத்தனன்கொலெனவண்டகூடமுறவிருளறுத்
திகலிராகவொளியுமிழ்விளக்கினமெடுக்கவென்றுகடிதேவினான்
றகலிராததொர்மனத்தினான்வலியதனதனோர்தருதனத்தினான். (௧௮௫)

பொங்கியாடரவெழுந்தநேகவிதமானதென்றமரர்புகலுமா
றங்குவாளரவுயர்த்தகோனினைவறிந்தளப்பரியவாகவ
மெங்குமானைபரிதேர்கடோறுமொளிர்தீபகாளமெடுக்கவே
சங்குதாரையெழநின்றனன்றருமன்மதலைதம்பியர்கடம்மொடும். (௧௮௬)

கருதிவாகைபுனைவிசயன்மேல்விசயகன்னன்முந்தியமர்கடுகினான்
கிருதவன்மனெனும்விருதன்மாமுரசகேதனன்றனெதிர்கிட்டினான்
சுருதிமாமுனிதுரோணனும்பழையதிட்டத்துய்மனொடுதுன்னினான்
பொருதுமாய்வனெனவீமனோடுயர்புயங்ககேதுமிகுபோர்செய்தான். (௧௮௭)

சல்லியன்பெருதசல்லியத்தொடுசதானிகன்றனொடுபோர்செய்தான்
வல்லியம்புனைகடோற்கசன்றனொடுபோர்செய்தான்முனிவன்மைந்தனு
மெல்லியங்குசுடரினுமணிச்சுடர்களெழுமடங்கொளியெறிக்கவும்
பல்லியம்பலமுழங்கவுந்தரணிபாலரிப்படிபகைக்கவே. (௧௮௮)

எற்றருந்தபனனேகினனினியெனக்குவாசிகொடிநீடுதேர்
முற்றருங்கனலினொளியெழுந்ததெனமுரண்மிகுந்திடமொழிந்துபோர்
விற்றருங்கணைகளால்விழப்பொருதுவெயிலவன்சுதனைமீளவும்
பிற்றரும்படிபிளந்தனன்றனுசர்பின்னிடப்பொருதபெற்றியான். (௧௮௯)

ஒருதன்வாகுவலியாலும்வார்சிலைபுதைத்தவாளிவலியாலுமொண்
குருதிபொங்கவடுதருமராசன்ரகுகுலவிராமனிகராயினான்
கிருதவன்மனெனவருநராதிபதிகெட்டுமாவிரதம்விட்டுவா
ணிருதர்சேகரனொடுவமையாயினனெடுங்களத்திலெதிர்நின்றிலன். (௧௯௦)

வாளமாகவில்வணக்கியும்பர்பதிமைந்தன்வாளிரவிமைந்தனைக்
கோளமானகுடையிரதம்வாசிசிலைகொடிமுருக்கியமர்கொள்ளவே
மீளமீளவுமழிந்தழிந்தவனோர்வேலினாலெறியவேலையுந்
தூளமாகவடிவாளியாலெதிர்துணித்துவன்பொடுதுரக்கவே. (௧௯௧)

முன்சதாகதிமுருக்கமேருகிரிமுடிமுரிந்தெனமுரண்கொள்போர்
வன்சதானிகன்வளைத்தவிற்கணையின்மத்திரத்தலைவன்மனமுரிந்
தென்செய்தான்முடிவிலோடினான்விறலிடிம்பிமைந்தன்முனிமைந்தன்மேன்
மின்செய்தாரையயிலேவினானவன்விரைந்துதேரின்மிசைவீழவே. (௧௯௨)

தானைகாவலனுமுந்துறப்பொருதுதரணிமன்னன்விடுசமர்முகச்
சேனைகாவலனையோடவோடவொருதெய்வவாளிகொடுசீறினா
னானைதேர்புரவியாளொடுற்றெதிரணிந்தமன்னவர்களனைவரு
மேனைமன்னவர்தமக்குடைந்துமுதுகிட்டுமன்னனருகெய்தினார். (௧௯௩)

அன்னபோதினிலநேகநூறுபதினாயிரந்திறலரக்கரோ
டின்னவாறெனவுரைக்கவேநிகரிலாததிண்டிறலலாயுதன்
கன்னசௌபலர்தமக்குநண்பனிருள்கங்குலோர்வடிவுகொண்டனான்
மன்னர்யாவரும்வெருக்கொளச்சமரின்மன்னர்மன்னனடிமன்னினான். (௧௯௪)

இன்றிராவிடியுமுன்னர்வெஞ்சமமெதிர்ந்தபஞ்சவர்களஞ்சிடக்
கொன்றுபார்முழுதுநின்னதாகவுயர்வானுளோர்பதிகொடுப்பன்யா
னென்றுகோடிசபதம்புகன்றெதிரெடுத்ததீபமுமிருண்டிடச்
சென்றுவீமனொடுகிட்டினான்விசைகொடேரிரண்டுமுடன்முட்டவே. (௧௯௫)

வேறு.

பணைத்திருபுயக்கிரிவளரமாற்றலர்பயப்படவயப்படுபயமினூற்றுவர்
துணைப்பெறமனச்சினமுடுகநாக்கொடுசுழற்றுகணைநுப்பெழநிருதர்பார்த்திவ
னிணைப்பிறையெயிற்றிளநிலவினாற்செறியிருட்கிழிதரப்பகைமுனையிலேற்குமு
னணைத்திருபுறத்தினும்வருமிராக்கதரதிர்த்தனரெதிர்த்தனரமனைநோக்கியே. (௧௯௬)

இருட்கிரியெனத்தகுகரியதோற்றமுமெயிற்றினிணப்பிணமுடைகொணாற்றமு
முருக்கலர்வெளுத்திடுமருணநாட்டமுமுகிற்குரலினைத்திடமுதிரும்வார்த்தையு
மருட்படுகருத்திடைகதுவுசீற்றமுமதக்கடகளிற்றதிமதமுமாய்ப்புடை
நெருக்கினர்தருக்கினர்விறனிசாசரர்நிமிர்த்தனர்வடிக்கணைசிலைகள்கோட்டியே. (௧௯௭)

அருக்கனைமறைத்தவர்கடவுதேர்த்தலையருச்சுனன்முதற்பலதுணைவர்சாத்தகி
செருக்குடையமைத்துனர்குமரர்காத்திடுசெருக்களம்வெருக்கொளவளையுமாத்திரை
மருச்சுதன்வளைத்ததொர்தனுவினாற்சிலவடிக்கணைதொடுத்தலுமிரவுலாய்த்திரி
துருத்தனும்வளைத்தனனெடியகாற்சிலைதொடுத்தனனிலக்கறுதொடைகள்வாய்க்கவே.

மருச்சுதன்வடிக்கணையமரர்மாற்றலன்வடிக்கணைதடுத்தும்வல்லிரதமாற்றியும்
விருப்புடன்விரித்தணிதுவசம்வீழ்த்தியும்விறற்பரிகளைத்துணிதுணிகளாக்கியு
முரத்தொடுசெலுத்தியவலவன்மாத்தலையுருட்டியுமணிச்சிலையொடியநூக்கியு
மிருட்டொளியுடற்பலதுளைகளாக்கியுமிமைப்பொழுதினிற்றிறன்மடியமாய்க்கவே. ( )

நிலத்திடைகுதித்தனன்வடவைபோற்பெருநெருப்பெழவிழித்தனனெடியமூச்சுடன்
வலத்துயாலப்படைநிசிசரோத்தமன்வரைத்திரளெடுத்தெதிர்முடுகியோச்சலு
முலப்புயநிமிர்த்தொருகதையினாற்றனதூரத்துடனடித்தவைபொடிகளாக்கின
னிலக்கமில்சுரர்க்கிடமுதவுகோத்திரவெழிற்குவடொடித்தவனுதவுகூற்றமே. (௨00

பாத்துவசனுக்குறவுரியகோத்திரிபரிச்சுடருடைப்பெயர்முனிகுலோத்தமன்
மரித்தனனெனத்தனியயில்கோடோச்சியமணிச்சிறுபொருப்பினைநிகர்கடோற்கச
னெரித்தலையரக்கனொடெதிரியாய்ச்சமரெனைத்தருமருச்சுதன்முனைதல்கீழ்த்தொழி
லுரத்துடன்மலைத்திவனுயிரைமாட்டுவனுருத்தெனவுடற்றினனுறுதிதோற்றவே.

இடிக்குரலெனத்தலையுரகர்சாய்த்தனரெதிர்க்குரலெழுப்பினகுலசிலோச்சயம்
வெடித்ததுமுகட்டியர்கடகமேற்றலைவிபத்தெனவிபத்திரள்வெருவுதாக்கின
துடித்தனரியக்கரொடமராத்தியர்துணுக்கெனவிமைத்தனர்திசைகள்காப்பவ
ரடிக்கடிபடித்துகள்பரவைதூர்த்தனவரக்கனுமரக்கனுமமரிலார்க்கவே. (உ0௨

சிரித்தனருருத்தனரணுவின்மோட்டுடல்சிறுத்தனர்பெருத்தனர்மதனிளைக்கினி
லெரித்தனரிரித்தனர்ககனமேற்படவெடுத்தனர்படுத்தனர்புடவிகீழ்ப்பட
முரித்தனகிரிக்கொடுமுடிகளாற்சினைமுரித்தன*மரத்தனதுணிகளாற்கடி
துரித்தனர்துவக்குரநெரியமேற்பமுவொடித்தனரிளைத்தனருருவம்வேர்க்கவே. (உ0௩

சிலைப்படையயிற்படைதெளியும்வாட்படைதிறற்பலபடைக்கலவலிமைகாட்டியும்
வலப்படவளைத்துமல்வலிமைகாட்டியும்வயத்தொடுசெயப்புயவலிமைகாட்டியு
முலைப்படுகனற்சினமுதிர்கடோற்கசனுடற்றியவரக்கரையொருவர்போற்பொரு
தலப்படையரக்கனதுயிரைமாய்த்தனனடற்றேருடைகளிற்றேருடையடைசிவீழ்த்தியே.()

புரத்தினையெரித்தவர்கயிலைமாக்கிரிபுயத்தினிலெடுத்திசைபுனைபராக்கிரமன்
வரத்தினில்வனத்திடைதிரியுநாட்சிலமணித்தரொடெதிர்க்கவும்வயிரியாய்த்தில
னுரத்துடன்மருச்சுதனுதவிராக்கதனொருத்தனுமெனைப்பலருடனுமேற்றெதிர்
துரத்தலின்மறத்தினனிவனெனப்பலர்துதித்ததிசயித்தனர்சுரரும்வாழ்த்தியே. ()

வேறு.

அன்றுகங்குலிற்பலபதினாயிரமரக்கரோடலாயுதன்றன்னைக்
கொன்றுவெம்பணிக்கொடியவன்சேனையைக்குரங்குகொள்கோதைபோற்கலக்கி
யொன்றுபத்துநூறாயிரங்கோடியாமுருவுகொண்டிவுளிதேர்களிறுட்
சென்றிமைப்பொழுதளவையில்யாவருந்தென்புலம்படருமாசெற்றான். (உ0௬)

சண்டமாருதமாயெழுந்திடுமொருகாற்சலதியாயெழுந்திடுமொருகாற்
கொண்டலாயுதகம்பொழிந்திடுமொருகாற்குன்றமாயுயர்ந்திடுமொருகான்
மண்டுபாவகனாயெரிந்திடுமொருகால்வல்லிருளாய்வருமொருகாற்
பண்டுதான்வல்லமாயைகள்பலவும்பயிற்றினன்மாருதிபயந்தோன். (உ0௭)

இம்பர்வாளரக்கனிணத்தொடுபிணந்தின்றிடங்கொள்வாய்கொடுமடுத்திலனேற்
றும்பிமாபரிமாவீரரென்றிவர்மெய்துணித்தவிற்சொரிந்தசெஞ்சோரி
யம்புராசிகளிலண்டகோளகையிலடங்குமோவண்டமும்பிளந்திட்
டும்பர்வாரியையுங்கலக்குமேமிகவுமுண்மைநாமுரைசெயும்பொழுதே. (உ0௮)

---

* மரத்தின தடிகளால் என்றும் பாடம்.

கட்செவியெழுதுங்கொடியுடைக்கொடியோன்கன்னனைக்கடைக்கணித்தருளி
விட்சுரபதிவந்தன்றுனக்களித்தவேலினல்வீமன்மாமகனை
யுட்செறிசினமும்வலிமையுமுயிருமுடனழிந்தும்பரூர்புகுதப்
புட்செறிதொடையாய்கொல்கெனவிரைவிற்புகைந்துநாப்பொறியெழப்புகன்ருன்.(௨௦௯)

புகன்றபோதருக்கன்புதல்வனுமாயப்போரிதுகங்குலிப்பொழுதே
யகன்றிடுமகன்ருலிவனுயிர்பிறிதோரம்பினலகற்றுவித்திடலா
மிகன்றபோர்முனையினுளையிவ்வடிவேலெறிந்துநானிமையவர்க்கிறைவன்
மகன்றனுருயிர்கொன்றனதுவெண்குடைக்கீழ்வைப்பனிவ்வையகமென்ருன். ( ௧௦)

என்றலுமரசன்யாமுமெம்படையுமிரவிடைப்பிழைக்கநீயிவனைக்
கொன்றுபோர்பொருதுசிலைவிசயனையுங்கொல்லுதியெனமனங்கொதித்துக்
கன்றலுமவ்வேலக்கணத்தவன்மேற்காலவெஞ்சூலமொத்தெறிந்தான்
றென்றலுநிலவுநிகரெனத்தன்னைச்சேர்ந்தவரிளைப்பெலாந்தீர்ப்பான். (௨௧௧)

எறிந்தவேல்பகைவன்மார்பகந்துளைத்திட்டிடிந்திரனிடத்துமீண்டெய்த
மறிந்தமால்வரைபோலரக்கனுமுகம்பார்மருங்குறவிழுந்துயிர்மடிந்தான்
செறிந்தருகணைந்தசேனையும்பயந்தோர்சிந்தையுஞ்செயலறக்கலங்க
வறிந்தவர்க்கன்றியறிபொணுவையனவர்துயரகற்றுமாறுரைப்பான். (௨௧௨)

இந்தவேல்கவசகுண்டலங்கவர்நாளிந்திரனிரவிமைந்தனுக்குத்
தந்தவேலிதனையாவர்மேல்விடினுந்தரிப்பறத்தெறுமவன்வரத்தா
லுந்தவேலமரில்விசயன்மேற்றொடுக்குமுரகவம்பினுக்குயிருய்ந்தா
லந்தவேலையின்மற்றெறிவதற்கிருந்தானுற்றலாற்கூற்றினுங்கொடியோன். ௨௧௩)

*அலப்படையவனுமநேகமாயிரம்போரரக்கரும்விளியுமாறடர்த்தோ
னுலப்படையவுந்தானுய்யவுமரசனுரைத்தலாலோச்சினனிவன்மேல்
வலப்படமுனையிலின்றமக்கவனிவழங்கினன்கண்ணனேயென்ருன்
குலப்படவரவின்முடியின்மேனடித்தகூத்துடைக்கோவியர்கூத்தன். (௨௧௪)

தருமனுமருத்துமடன்மருத்துவருந்தந்தவர்மருத்துவான்மகனைப்
பெருமையும்வலியுநல்வினைப்பயத்தாற்பெற்றனமெனவுறத்தழுவி
யருமையினளித்தமகவுடைச்சோகமாற்றியங்குவகையாரனர்
கருமமுமுலகத்தியற்கையுமுணர்ந்தோர்கலங்குதலுறுவரோகலங்கார். (௨௧௫)

இராவணன்படுபோர்க்களமெனக்கிடந்தவிந்தவெங்களத்திடைமீண்டு
மராவுயர்துவசனுணையால்வரிவில்லாரியனனீகினியுடன்போய்
விராடனும்யாகசேனனுமுதலாம்வேந்தரோடெதிர்ந்தமர்மலைந்து
தராதிபர்பலரோடவ்விருவரையுஞ்சரங்களாற்சிரங்களைத்தடிந்தான். (௨௧௬)

துருபதன்மடிந்தவெல்லையிற்றிட்டத்துய்மனும்வெகுண்டுளஞ்சுடப்போ
யிருபதமரசர்முடிகமழ்முனியையென்றுவஞ்சினமெடுத்துரைத்தான்
பொருபகைமுனையிலெந்தையையென்முன்பொன்றுவித்தனையுனைநானி
னிருபர்தம்மெதிரேநின்மகன்காணநீடுயிரகற்றுவனென்றே. (௨௧௭)

* நலப்படைவடிவேல் விசயனைச்செருக்கு நால்வருமழிவது திண்ணம், மலப்படாதரவக் கொடியவனுரையாலந்தவேலோச்சினனிவன்மேல் என்றும் பாடம்.

மாமனைமகுடந்துணித்தனனெவரும்வணங்குதாண்முனியெனவயிர்த்துக்
காமனையழகுங்கந்தனைவிறலுங்கவர்ந்தவெங்கார்முகவீரன்
சோமனைவகிர்செய்தனையவெம்முனையதொடைகளாற்சுரும்புசூழ்கமலத்
தாமனைமுதுகுகண்டனன்முன்னந்தயித்தியர்முதுகிடத்தக்கோன். (உகஅ)

பூத்தகிக்குலமுமால்வரைக்குலமும்புகரிபக்குலங்களும்புகழக்
காத்தகிலமுந்தன்குடைநிழற்படுத்துங்காவலர்நீதியைக்கடந்தோன்
சேத்தகில்புழுகுசந்தனங்கமழுந்திருப்புயத்தணிதருந்திருத்தார்ச்
சாத்தகிமுனைச்சென்றம்முனைக்காற்றுதரியெதிர்கரியெனத்தளர்ந்தான். (உகசு)

அனைவருமொருவர்போலுடைந்தவனியாளுடையரசனுடைமரிற்
றனைவருதடந்தேர்துரகதங்களிறுமுதலியயாவையுந்தோற்று
நினைவருவிறலோர்தனித்தனிநெருக்கிநின்றழிநின்றழித்துரக்க
வனைவருங்கழற்கால்கொப்புளமரும்ப*வாசறைப்பாசறையடைந்தார். (உஉ0)

முற்பொழுதொருபொற்றிகிரியான்மறைந்ததாழ்வறமுளரிமுகத்தி
லறபொழுதடைந்தவாயிரஞ்சுடருமநேகமாயிரஞ்சுடராய
நற்பொழுதிதுவென்றியாவரும்வியப்பநாகாலயம்வலம்புரிந்து
பிற்பொழுதவற்றைக்கவர்ந்துசென்றுதயப்பிறங்கலிற்பிறங்கினன்பெரியோன். (உஉக)

ஆக செய்யுள் - ரு, ௬௭௬.

பதினான்காம்போர்ச்சருக்க முற்றிற்று.

## பதினைந்தாம்போர்ச்சருக்கம்.

சித்தசித்தொடீசனென்றுசெப்புகின்றமூவகைத்
தத்துவத்தின்முடிவுகண்டசதுர்மறைப்புரோகிதன்
கொத்தவிழ்த்தசோலைமன்னுகுருநிசையாதிநெஞ்சிலே
வைத்தமுத்திநாதனன்றிவானநாடர்முதல்வன்யார். (க)

எடுத்ததீபவொளியுமேனையிருளுமேகவேழுமாத்
தொடுத்ததேருக்கர்சோதிதொழுதுதங்கடொழில்கழித்
தெடுத்தகோபமுமாநின்றிரண்டுசேனையரசரும்
கடுத்துளங்கருத்துவெய்யகண்சிவந்துகடுகினார். (உ)

நாலுசாபநிலையும்வல்லநாலுவீமனகுலனு
நாலுபாகமான்சேனைநாதனுஞ்சிரங்களா
நாலுகூறுசெய்துதானுநானுமுந்தநடவினு
னுலுவேதமுடிவினுக்குமாதியானநாரணன். (ரு)

வாலவீமனென்றுபார்மதித்தவான்மைமன்னனுஞ்
சூலபாசபாணிதன்னொடொத்தசோமதத்தனு
மாலகாலமெனவுருத்தடர்த்தபோரின்முந்துறக்
காலனாரிலேகினார்கிரீடியேவுகணைகளால். (ச)

* ஆசறுபாசறை என்றும் பாடம்.

என்முனென்முனென்றமன்னர்யாரும்யாருமிகலவே
முன்முனின்றியாவரோடுமூரிவில்வணக்கினான்
வின்முனெண்ணவில்லுமில்லைவெஞ்சமத்துமற்றிவன்
றன்முனெண்ணவீரரில்லையெனவருந்தனஞ்சயன். (௫)

ஈரிரண்டுமுகமும்வந்தெதிர்ந்தவீரர்சேனைக
ளீரிரண்டும்வேறுவேறுபட்டுவெந்நிடப்புடைத்
தீரிரண்டொர்தொடையில்வாளியேவியேவியிகல்செய்தா
னீரிரண்டுமையிரண்டுமானவிஞ்சையெய்தினான். (௬)

புந்திகூர்துரோணனுக்கியாவரும்புறந்தரக்
குந்திபோசனெண்ணிலாயிரங்குறித்ததேர்களோ
டுந்திமீளமுடுகியந்தமுனிவனோடுடன்றபோ
தந்திவானமொத்ததம்மவமர்புரிந்தவாகவம். (௭)

குருவொடுற்றடர்ந்துகுந்திபோசன்விற்றுணிக்கவே
வருசமத்துமத்திரன்றன்மருகனோடுமுடுகினான்
முரண்மிகுத்தகோபவங்கிமூளவந்தமாளவன்
கருநிறத்தனந்தசாயியிளவலோடுகடுகினான். (௮)

முனிவன்மைந்தனிந்திரன்றன்மைந்தனோடுமுடுகினான்
றினகரன்றன்மதலைகாவின்மைந்தனோடுசீறினான்
றனுவின்விஞ்சுதென்னனோடுசகுனிபோர்தொடங்கினா
னினியகண்டமுஞ்சிதைக்குமிறுதிகாலமென்னவே. (௯)

எந்தவெந்தமன்னர்தம்மிலிருவராகியமர்செய்தா
ரந்தவந்தவீரர்செய்தவாண்மைசொல்லுமளவதோ
முந்தமுந்தவென்றுவென்றுமோகரித்ததெவ்வர்தாம்
வந்தவந்தவழிமடங்கநின்றதவ்வருதினி. (௧௦)

தேயுவாளிவருணன்வாளிதேவர்வாளிதிண்மைகூர்
வாயுவாளிமுதலனைத்துவாளியாலுமலைதலா
லாயுநூன்முனிக்குடைந்ததன்புமிக்கதந்தையுந்
தாயுமாகிமண்புரந்ததருமன்விட்டதானையே. (௧௧)

வேறு.

குருவுமக்குருகுலேசன்கொற்றவெஞ்சேனைதானும்
பொருகளங்கொண்டுவாகைபுனைந்தவனின்றபோதி
லொருவரையொருவரொவ்வாவும்பர்மாமுனிவர்யாருந்
துருவனுமுவமை*சாலாத்துரோணனைவந்துசூழ்ந்தார். (௧௨)

மகத்தியன்மரீசியாதியெழுவருமலபச்சார
லகத்தியன்முதலாவுள்ளவனைவரும்வருதல்கண்டு
செகத்தினினிறைந்தகேள்விச்சிலைமுனியெதிர்சென்றேத்தி
முகத்தினலிறைஞ்சிநிற்பமொழிந்தனர்மொழிகள்வல்லார். (௧௩)

* சாலத்துரோணனை என்றும் பாடம்.

மறைகெழுநூலுந்தேசுமாசிலாத்தவமுஞான
முறைவருமுணர்வுமல்லான்முனிவரர்க்குறுதியுண்டோ
துறைகெழுகலைகள்வல்லாய்துன்னலர்ச்செருக்கும்போரு
நிறைதருவலியும்வாழ்வுநிருபர்தம்மியற்கையன்றோ. (க௪)

தொடுகணைவில்லும்வாளுந்துரகமுங்களிறுந்தேரும்
விடுகவெஞ்சினமும்வேண்டாவிண்ணுலகெய்தல்வேண்டிங்
கடுகநின்னிதயந்தன்னிற்கலக்கமற்றுணர்வினென்று
படுகவென்றுரிமைதோன்றப்பகர்ந்தனர்பவமிலாதார். (க௫)

ஆனபோதாசானெஞ்சிலருமறையந்தத்துள்ள
ஞானமும்பிறந்துபோரிலாசையுநடத்தலின்றித்
தூநலந்திகழுஞ்சோதிச்சோமியமடைந்துநின்றான்
யானமும்விமானமல்லாவிரதமேல்விருப்பிலாதான். (க௬)

கோடையால்வற்றிமீண்டுங்கொண்டலானிறைந்ததெண்ணீ
ரோடையாமென்னநின்றோன்முன்னரேயுரைத்தவார்த்தை
மாடையாலிந்திரநீலமணிவரைவளைத்தாலனன
வாடையானறிந்து *சொற்றவவதியீதென்றுகொண்டான். (க௭)

கடல்வடிம்பலம்பநின்றகைதவன்றன்னோடோதிச்
சுடுகனலளித்ததிட்டத்துய்மனையவன்மேலேவி
வடுவுரைமறந்துஞ்சொல்லாமன்னறன்மைந்தனோடு
மடியவரிடுக்கண்டீர்ப்பானுமுறையருளிச்செய்வான். (க௮)

மந்தரமனையபொற்றோண்மாருதிமாளவக்கோ
னிந்திரவன்மாமேற்சென்றெரிகணைதொடுத்தபோரி
லந்தரமடைந்ததையவச்சுவத்தாமாவென்னுஞ்
†சிந்துரமதனைவென்றித்திசைக்களிறொப்பதன்றே. (க௯)

மதலைபேரெடுத்துப்போரின்மடிந்தவாறுரைத்தபோதே
விதலையனாகிப்பின்னைவில்லெடான்வீதறிண்ண
முதலமர்தன்னிலந்தமுனிவரன்மொழிந்தமாற்ற
நுதலுதிநீயேசென்றுநுவலுதிவிரைவினென்றான். (௨௦)

வையினால்விளங்குநேமிவலம்புரிவயங்குசெம்பொற்
கையினானந்தனாளன்கையறல்புகன்றகாலை
மெய்யினால்வருத்ததன்னமெய்யுடைவேந்தன்கேட்டுப்
பொய்யினாலாள்வதிந்தப்புவிகொலோவென்றுநக்கான். (௨௧)

அண்ணியகிளையுமில்லுமரும்பெறன்மகவுமன்புந்
‡திண்ணியவறிவுஞ்சீருஞ்செல்வமுந்திறலுந்தேசு
மெண்ணியபொருள்கள்யாவுமியற்றியதவமுமேனைப்
புண்ணியமனைத்துஞ்சேரப்பொய்ம்மையாற்பொன்றுமன்றே. (௨௨)

---

* கோறற்கவதி என்றும் பாடம்.

† சிந்துரம் வலத்தாலந்தத்திசைக்களிறொப்பது என்றும் பாடம்.

‡ திண்ணியமனமுங் கேள்விச்செல்வமுநிதியுந்தேசும் என்றும் பாடம்.

என்றுகொண்டினங்கொள்கோவினிடர்கெடவெழிலியேழுங்
குன்றுகொண்டடர்த்தமாயன்கூறவுமறுத்துக்கூறக்
கன்றுகொண்டெறிந்துவெள்ளிற்கனிநனியுதிர்த்துவஞ்சம்
வென்றுகொண்டவனுமீளவிளம்புவனென்பமாதோ. (௨௩)

உம்மையின்மறுமைதன்னிலுறுபயனிரண்டும்பார்க்கி
னிம்மையில்விளங்கும்யார்க்குமவரவரியற்கையாலே
மெய்ம்மையேயொருவர்க்குற்றவிபத்தினைமீட்குமாகிற்
பொய்ம்மையுமெய்ம்மைபோலப்புண்ணியம்பயக்குமாதோ. (௨௪)

வல்லவரனந்தகோடிமறைகளின்படியேயாய்ந்து
சொல்லியவறங்கள்யாவுநின்னிடைத்தொக்கவாற்றாற்
புல்லியபொய்யொன்றென்னும்பொருபெருநெருப்புக்கீர
மில்லைநீயொன்றுமெண்ணுதியம்புதிபிதனையென்றான். (௨௫)

போரறமலைந்துவென்றுபோதத்தாற்பவங்களேழும்
வேரறவெல்லநிற்பான்வீடுறநினைறவெல்லை
வாரறவயமாவோட்டிவயங்குதேர்கடவிச்சென்று
போறன்மைந்தனுவிற்பிழையறப்பேசுவானே. (௨௬)

*அத்தனேயடுவல்லாண்மையச்சுவத்தாமாவென்னு
மத்தவாரணத்துக்கையோமாருதிசிங்கமாலு
னைத்தனைகோடிசேனையிக்களத்திறந்ததந்த
வித்தகன்மலைந்துசெற்றவிரகையென்சொல்வதென்றான். (௨௭)

தீதிலானுரைத்தமாற்றஞ்செவிப்படுமளவினெஞ்சிற்
கோதிலானெடுத்தவில்லுங்கொடியவெங்கணையும்வீழ்த்திப்
போதிலானிறந்தான்போலும்புதல்வனென்றினைதலின்றி
யேதிலான்போலநின்றான்யார்கணும்பந்தமில்லான். (௨௮)

முள்ளியனுளக்கோயின்முனிநடுத்தலையைமுன்னங்
கிள்ளியபிணகபாணிகிரீசனேடொத்தவீரன்
றுள்ளியபரித்தேர்த்திட்டத்துய்மனதம்புசென்று
தள்ளியதப்போதந்தத்தவமுனிதலையையந்தோ. (௨௯)

வேறு.

பட்டனன்வாசபதிநிகர்சேனுபதியென்னக்
கெட்டதுநாககேதனன்வீரங்கிளர்சேனை
தொட்டவில்லாண்மைத்துரகததாமாவெதிரோடிக்
கட்டழல்வேள்வித்தாதையிறந்தகளங்கண்டான். (௩0)

கண்டான்வீழ்ந்தானம்முனிபாதங்கமழ்சென்னி
கொண்டான்மோதிக்கண்பொழிநீரிற்குளித்திட்டான்
வண்டார்சோரமண்ணுடல்கூரவன்னஞ்ச
முண்டார்போலவெண்ணமழிந்தானுளநொந்தான். (௩௧)

---

* அத்தனேயெனும்வல்லாண்மை யென்றும் பாடம்.

வன்பின்மிக்கவீடுமெனுன்னைமன்னுகென்
றன்பினிப்பாராளவுமன்றேயருள்செய்தான்
முன்பினெண்ணவுவமையிலாதாய்முடிவாயோ
வுன்பின்வந்தேனுன்னைபிழந்துமுய்வேனோ. (௩௨)

வில்லாய்நீவெம்போர்முனைவெல்லும்விறலாய்நீ
சொல்லாய்நீதொல்வேதியருட்குந்தொழிலாய்நீ
வல்லார்வல்லகலைகளனைத்தும்வல்லானே
யெல்லாமின்றேபொன்றினவுன்னோடெந்தாயே. (௩௩)

## வேறு.

கற்கொண்டுகன்மழைபூன்காத்தகள்வன்கட்டுரைத்தமொழிப்படியேகருதார்போரின்
முற்கொண்டவிரதமறந்தியாருங்கேட்பமுரசுயர்த்தோன்பொய்சொன்னான்முடிவிலந்தச்
சொற்கொண்டுவெறுங்கையனுமளவிற்றிட்டத்துய்மனெனகின்றகுருத்துரோகிகொன்றான்
விற்கொண்டுபொரநினைந்தாலிவனேயல்லவிண்ணவர்க்குமெந்தைதனைவெல்லலாமோ. ()

இப்புதல்வன்றிருத்தாதைபாடுநோக்கியிவ்வகையேயிரங்குதலுமிராசராச
னப்புதல்வன்றன்னையெடுத்தாற்றித்தேற்றியம்புயக்கணருவிதுடைத்தளிசெய்காலை
யெப்புதல்வருடனும்விறற்குந்திமைந்தரியாவரையுஞ்சென்னிதுணித்தியாகசேனன்
மெய்ப்புதல்வன்றனையுமறமலைவனென்னுவில்வளைத்தான்சொல்வலோயாவேதநாவான். ()

பாகசாதனன்மதலைதெய்வப்பாகன்பாகடருநெடும்பணைக்கைப்பகட்டின்மேலான்
மேகமேனியன்விரைவிற்றங்கள்சேனைவேந்தையெலாஞ்சென்றெய்திவில்வாள்வேலும்
வாகனுதியுமகற்றிநின்மினென்னமாருதிமைந்தனையொழிந்தோர்மண்ணின்மீது
யோகஞானியராகியனைத்துளோருமொருவரைப்போனிராயுதாரயொடுங்கிநின்றார். ()

மாற்றரியமறையொடுநாராயணன்றன்வாளிதொடுத்தலுமந்தவாளியூழிக்
காற்றெறியோடெழுந்ததெனக்கார்கோண்மொண்டுகாரேழுமதிர்ந்ததெனக்கனன்றுபொங்கி
யேற்றரிபோற்குழாங்கொண்டவயவர்தம்மையெய்தியபோதனைவருந்தம்மிதயமொன்றிச்
சாற்றரியவுணர்வினராயேத்தியேத்தித்தாடோய்செங்காமுகுளந்தலைவைத்தாரே. (௩௭)

பாருருவித்திசையுருவியண்டகூடம்பாதலத்தினுடனுருவிப்பாந்துசீறி
யோரொருவருடலின்மிசைமயிர்க்காறேறுமோரொருவெங்கணையாய்வந்துற்றகாலை
நேரொருவர்மலையாமற்றருமன்சேனைநிருபரெலாநிராயுதராய்நிற்றல்கண்டு
போருருவமுனிமைந்தன்றொடுத்தவாளிபொருபடைகொண்மாருதிமேற்போனதாலோ.

காற்றின்மதலையுந்தனதுதடந்தேருந்திக்கண்சிவந்துமனங்கருகிக்கால்வில்வாங்கிக்
கூற்றமெனவெதிர்சென்றுமுனிவன்மைந்தன்கொடுங்கணையைமதியாமற்கடுங்கணாளன்
வேற்றுருவங்கொடுகனலிமுதலாவுள்ளவிண்ணவர்தம்பகழிகளாய்மேன்மேல்வந்த
மாற்றரியபகழிகளையொன்றுக்கொன்றுமாறானபகழிகளான்மாற்றினனே. (௩௯)

மூச்சினாலடியுண்டுங்கடுங்கட்கோபமுதுகனலாலெரியுண்டுமுனைகொள்வாளி
யோச்சினாலொடியுண்டுங்குனித்தவிற்காலுதையினாலுதையுண்டுநெடுநாணோசை
வீச்சினாலறையுண்டுங்கடகவாகுவெற்பினாலிடியுண்டும்வெகுளிகூரும்
பேச்சினால்வெருவுண்டும்படாததுண்டோபேரனிலன்மகனாலப்பெருமன்வாளி. (௪௦)

தாள்வலியாலெனைப்பலபல்வினைசெய்தாலுந்தப்பவொணாவிதிபோலத்தடந்தோள்வீமன்
றோள்வலியால்விலக்கவுமத்தொடைபோய்வாசத்தொடைமிடைமார்பகமணுகச்சுராரிதோள்கள்
வாள்வலியாலரிந்தபிரான்கையில்வில்லும்வாளியும்வாகனமுமுடன்மாற்றுவித்தா
னாள்வலியார்தமைச்சிலராற்கொல்லலாமோநாரணன்சாயகமிகவுநாணிற்றன்றே. (௪௧)

வேறு.

விட்டவெம்பகழிநாணிமீளுதலும்வில்லின்வேதமுணர்முனிமகன்
வட்டவெஞ்சிலையின்மீதுபாசுபதவாளிவைப்பதுமனஞ்செயா
முட்டவன்பினொடுநின்றகாலையில்வியாதனென்றுரைகொண்முனிவரன்
றொட்டதண்டுமிதியடியுமாகியுயர்சுருதிவாய்மையொடுதோன்றினான். (௪௨)

நின்றசாபமுனிமைந்தன்வந்தமுனிநிருபனைப்பரமனிகரெனச்
சென்றுகைதொழுதுபாசிடப்பரிவுதீர்கருத்தினொடுசெப்பினா
னன்றுபோரிலழியாகசேனன்மகனழலினூடுவருசாபமும்
வென்றிவாகைபுனைவிசயனோடுகருமேகவண்ணன்வருவிதியுமே. (௪௩)

வரத்தினாலுனதுதந்தைபோரினின்மடிந்ததன்றியொருவயவர்தஞ்
சரத்தினாலவனைவெல்லவல்லவர்தராதலத்தின்மிசையில்லையா
லுரத்தினால்விறன்மயூரவாகனனையொத்தவீரவினியுள்ளுறச்
சிரத்தினாலனையடிவணங்கியிடர்தீருமாறுநனிசிந்தியாய். (௪௪)

ஒன்றவைம்புலனைவென்றுநீடுதவமுரிமையிற்புரிதியுற்பவம்
பொன்றவென்றுறுதிகூறியன்பொடுபுகுந்ததெய்வமுனிபோதலு
மன்றவென்றுமிவர்செற்றதிற்சதமடங்குசெற்றனர்களின்றெனா
நின்றவென்றும்வெளிநிற்றலஞ்சிநெடுநீலவேலையின்மறைந்ததே. (௪௫)

இருள்பரந்ததினியமையுமிற்றையமரென்றுதுன்றுகழல்விட்டதா
ளருள்பரந்தவிழியறனின்மைந்தனொடுசேனைபாசறையடைந்தபி
னுருள்பரந்தரததுரககுஞ்சரபதாதியோடுகடிதோடினான்
மருள்பரந்ததனிநெஞ்சனாகியுடன்மன்னர்மன்னனெனுமன்னனே. (௪௬)

தனதுபாசறையிலானவக்குரிசில்சஞ்சயன்றனையழைத்துநீ
நினதுகாதலுயிரனையவெங்கைதனைநிசிதனிற்கடிதினெய்தியே
புனைதுழாய்மவுலிவிரகினான்முரசுயர்த்தபூபனுரைபொய்த்தது
மெனதுவாழ்வுவலிவென்றிதேசுறுதியாவுமாமுனியிறந்ததும். (௪௭)

தனஞ்சயன்றலைதுணிக்கநின்றவரிசாபகோபமுதிர்சாயகத்
தினஞ்செய்நாதனருள்செல்வமாமதலைசேனைநாதனினியாவது
மினஞ்செய்வண்டுமூராருமமார்பனொடியம்பிமேனிகழ்வயாவையு
மனஞ்செய்திவ்விரவுபுலருமுன்கடிதின்வருகவென்றனன்வணங்கியே. (௪௮)

அந்தவந்தணனுமந்தணோடிவையனைத்துமோதியபினந்தனுஞ்
சிந்தைநொந்தழுதிரங்கியாவும்வினைசெய்திரங்குவதுதீதென
மந்தணம்பெருகவெண்ணிமீளவிடவந்துநள்ளிருளின்மைந்தனுக்
குந்தைதந்தவுரையிதுவெனப்புரையிலுரைபுரோகிதனுமோதினான். (௪௯)

புதல்வனைதிறலங்கர்பூபனிருள்புலருமுன்பொருபடைக்குமா
முதல்வனுமெனமகிழ்ந்துவாளிரவிமுந்துதேர்கடவியுந்தின
னதலமாதியுலகேழுமாளுடையவரவின்மாமணியனைத்தும்வந்
துதயமால்வரையினுச்சியுற்றதுகொலென்னமேதினியுரைக்கவே. (௫௦)

பதினைந்தாம்போர்ச்சருக்க முற்றிற்று.

---

ஆ. செய்யுள்—௩,௭௨௧.

துரோணபருவ முற்றுப்பெற்றது.



உ

எட்டாவது

# கன்னபருவம்.

## பதினாறாம்போர்ச்சருக்கம்.

மாதுலனாகியுமேதிலனாகியவஞ்சககஞ்சன்வரவிட்ட
பூதனைதன்னுயிர்முலைபொழிபாலொடுபோதரவுண்டபுயல்வண்ணா
மாதவயாதவவாசவகேசவமாயாவாயாமதுசூதா
வாதியுமந்தமுமாகியநின்புகழல்லாதுரையேனடியேனே. (௧)

கங்கைமகன்சிலையின்குருவென்பவர்காதிமலைந்தேகையற்றா
ரிங்கினியென்னுயிர்நண்பனையல்லதுவெல்லவல்லோரிலரென்றே
யங்கர்பிரானைவருந்தினியின்பதியாகென்றருள்செய்தவனோடும்
வெங்களமுற்றனனஞ்சுமிழுங்கொடிவேகநாகவிறலோனே. (௨)

சொற்றவறாததுரோணனைமௌலிதுணித்ததிட்டத்துய்மன்னுங்
கொற்றவரைவருமற்றுள்பூபரும்வைனதேயக்கொடியோனு
முற்றெழுகசாதுரகபதாதிகளானசேனையுடனேசென்
றிற்றையருஞ்சமம்வெல்லுதலெங்கடனென்றுதுன்றியெதிர்கொண்டார். (௩)

கற்கியும்வண்டினமொய்க்கமதம்பொழிகரியுந்தேருங்காலாளும்
பொற்கொடியுங்குடைவர்க்க*முமாலையுமொன்றொண்ணும்பூபாலர்
நிற்குநிலந்தொறுநிற்குநிலந்தொறுநின்றுநின்றுவினைசெய்ய
மற்கெழுதிண்புயவர்க்கன்மகன்பெருமகரவியூகம்வகுத்தானே. (௪)

---

* முன்னுளரொன்னும்பூபாலர் என்றும் பாடம்.

பானுவின்மைந்தன்முனைந்துமகீபதிமைந்தன்சேனாபதியானான்
போனவருஞ்சமர்போகதனித்தனிபொருதுவேறும்போரென்றே
சேனையின்மன்னவர்யாவரும்வெம்பரிமாவின்மேலுந்தேர்மேலும்
யானையின்மேலுமிருந்தவரவ்வவர்தம்மோடம்மவிகலுற்றார். (௫)

நாமமிரண்டொடுபத்துடைநாயகனவிலவெஞ்சேனையினாதன்
மாமருகொற்றவருந்தினிவேலையைமருவாரஞ்சிவெருவெய்த
நேமிவியூகமதாகவகுத்திடைநின்றுபோர்செய்நிலையத்தில்
வீமன்வயம்புனைதேரினைவிட்டொருவெம்போர்வேழமேல்கொண்டான். (௬)

அடிக்கைகனத்துமதம்பொழியாழியினளவும்புகராலழகெய்தி
மடிக்கினுமண்ணுறுகையதுசெந்நிறவாயதுதேய்மதிதன்னை
யொடித்திருபக்கமும்வைத்தெனமகரிகையொன்றியொன்றியொன்னார்மெய்
யிடிக்குமருப்பதுபுன்னையினுண்மலரெனனுஞ்சீரதிருகண்ணும். (௭)

திலகமுமோடையுமிலகுறுநெற்றியதாலவட்டச்செவியாலே
பலதிசைமாருதமுய்ப்பதுசெம்புகர்பட்டின்றொழிலிற்பயில்கிற்ப
துலகினைமேல்கொளுமவனதெனக்களியூறியதாலங்குலமொத்துக்
குலவியமத்தகமொத்தகழுத்திலுயர்ந்ததம்பொற்குவடென்ன. (௮)

உரத்தினின்முச்சுழியுடையதுதாள்வலிகற்றூணொப்பென்றுரைசெய்யுந்
தரத்ததுவெண்ணெய்நிறத்ததகத்ததுதண்ணாந்துளவனிலையொத்த
திரத்தினதாமைகிடந்தவெனும்புறவடியதங்கந்திண்ணென்றே
யுரத்ததுநல்லுதரத்ததிளங்கமுகொத்ததம்மவாலதி. (௯)

தூணும்விலங்குமுறிப்பதுபாகுபரிக்கோல்யாவுந்தூரத்தே
காணினுநின்றுகொதிப்பதுதன்னிழல்கண்டுசீறுங்கருத்தது
நீணடமுதலியதொழிலொருநாலுநிரந்ததுமேருநிகரென்னச்
*சேணுயர்போதரவெழுமழமுடையதுதெவ்வரஞ்சுமவ்வேழம். (௧௦)

ஆசிலருந்திறலாசுகன்மைந்தனுமாண்மைக்கெண்ணுமடல்வீரன்
காசிநரேசனு†மேழுயரேழ்மதமாரிசிந்துங்கரிமேலார்
தூசியின்வந்துமுனைந்துமுனைந்திருதோளுந்தோளும்போர்செய்ய
வாசவரோரிருவோரிருகார்மிசைமலைவதெனமலைவுற்றார். (௧௧)

வேறு.

அங்குசம்வார்த்தைவன்றாளடைவினிற்பயிற்றியேனை
வெங்கதிநடையோடோட்டம்விதமுறவிரைவிற்காட்டி
யங்கசாரியினன்னூலறிஞர்கொண்டாடவூர்ந்து
செங்கையிற்சிலையுங்கோலித்தீவிழித்துடன்றுசேர்ந்தார். (௧௨)

கோடுகைமுதலாவொன்பதுறுப்பினுங்கோறல்வல்ல
நீடுயர்மாவுமாவுநெருப்பெழமுனைந்துசீற
வாடவர்தாமுமெண்ணிலம்புமாமழைகளைவிச்
சேடனுமமரர்கோவும்வெருக்கொளச்செருச்செய்தாரே. (௧௩)

---

* சேணுயர் போரளவுடைய திறத்தது என்றும் பாடம்.

† ஏழுயர் வெம்மதமாரி என்றும் பாடம்.

ஆசுகன்குமரன்வல்விலாசுகம்பொருமலஞ்சிக்
காசிமன்கேமதூர்த்திகாயயிலொன்றுவாங்கி
வீசியக்காளேமார்பினெறிதலும்வீமனேவொன்
றேசிலவ்வேலுங்தெவ்வன்யானையுந்துணியவெய்தான். (௧௪)

கேமனக்கரியினின்றுங்கிரியினின்றிழியுமாளி
யாமெனத்தரணியெய்தியடல்வயிர்த்தண்டொன்றேந்தி
வீமனன்றார்ந்தவெங்கைவெற்பினேப்புடைத்துவீழ்த்தான்
பூமருதாரினுனும்பூவின்மேற்சுரும்பிற்பாய்ந்தான். (௧௫)

கரியமர்க்கொருவரானவிருவருங்காலினின்று
பரியவக்கதைப்போர்வல்லபார்த்திவர்பலருங்காணக்
கிரியொடுகிரிசெய்பூசலிதுவெனக்கிளக்குமாறு
புரிவிலார்பொருதபோர்மற்றியாவரேபுகலவல்லார். (௧௬)

தண்டொடுதண்டமேந்திச்சாரிகைபலவுங்காட்டிக்
கொண்டலின்முழக்கீதென்னக்குரைகடலொலியீதென்னக்
கண்டவர்க்கன்றிக்கேட்டார்க்குரைப்பருங்கணக்கிற்றாக்கிக்
கொண்டுவன்காயமொன்றாற்கேமனைவீமன்கொன்றான். (௧௭)

எறிந்ததண்டமரிற்கேமனிறந்தனனென்றபோழ்தின்
முறிந்ததுவேலைஞாலமுழுதுடைதிருபன்சேனை
யறிந்தெதிருன்றிவென்றியாண்டகைக்கன்னன்மீளப்
பிறிந்தபல்லணியுமொன்றப்போரணியாக்கிநின்றான். (௧௮)

போரணிகலஞ்சேர்மார்பன்போரணியாக்கிநின்ற
போரணிமிக்கசேனைப்பொலிவுகண்டொலிகொள்வண்டார்
தாரணியலங்கன்மௌலித்தருமன்மாமதலைசேனை
யோரணியாகக்கூடியுடன்றெதிர்நடந்ததன்றே. (௧௯)

வேறு.

மகரிகையுமிருபணைகளும்விரிநுதன்மருவுகலனொடுமினலெனவொளிவிட
விகலியளிமுரலிருகவுளினுமுடனிழிபமதமழைசுமிழிகளெழவெழ
வகலமுடையனமுதுகிருபுடையினுமணியுமணிகணகணவெனவதிர்தரு
ககனமுகிலெனவுயர்வடிவுடையனகதியின்விததியின்முடுகினகரிகளே. (௨௰)

நிறனின்மிகுவனநவமணிகளினியனெடியகொடுமுடிநிகர்வனமகுடமு
மறையுமருவியையுவமைகொள்சவரமுமடவிநிகரெனவசைவுறுதுவசமு
முறையினறைகமழ்தொடைபடுமலர்களுமடுகுமிடனுடைமுழைகளுமுடையன
விறகர்கொடுபலமலைதிரிவனவென *விகலிவிசைபெறநடவினவிரதமே. (௨௧)

அடலில்வலிமையில்விரைவினினுயர்வனவகிலபவனமுநொடியினில்வருவன
பொடியின்மிசைவெளிபுதைதரவிடுவனபுணரியிடையலையலையொடுபொருவன
மிடலிலடுபடைமடிதரநிமிர்வனவிரியுநறுமலர்கமழ்முகவுயிரன
படியிலொருபடிநிலையறுகதியனபவனமெனநனிபரவினபரிகளே. (௨௨)

---

* இகலிசைபெற என்றும் பாடம்.

அரியவிலையனவணிகலனடையவுமறவின்முழுகினவருகவமணியென
வரிவின்முதலியபலபடைகளுமுடல்வலியசெலவுறுபவனசகுலமென
நெரியவருவனவகைபடுமிடலணிதிமிரவெழுவனதிரைகெழுதிரையென
விரிவினளவறுசலதிதிகரெனவெகுளிமிகுகதிகடுகினர்விருதரே. (உ௩)

முரசுகாடிகைகிணை துடிபெருமாமுருடுபடுபறைமுதலியகருவிக
ளரசவரிவளைகொடுவயிரெழுகுழலாவலிருதுகண்முதலியகருவிக
ளுரைசெய்கருவிகண்முழுவதுமெழுவகையுலகுமுடிவுறவுகவுறுதியிலெழு
கரைசெய்கடலெனவெறிவளியெனமிசைகளுவியுருமெறிகனமெனவதிரவே. (உச)

எறியுமுரசமுமெரிவிழியுரகமுமெழுதுகொடியுடையவரிருபடையினும்
வெறிகொண்மதமலைகளுமதமலைகளும்விசயமிகுவனவிரதமுமிரதமு
நெறிகொணவகதியிவுளியுமிவுளியுநிருதர்குலநிகர்விருதரும்விருதரு
நறியதொடைமுடிநிருபருநிருபருநடலையமரிடையடலுடனடலவே. (உரு)

இரவிமதலையுமிரவிதன்மதலையிருவர்மதலையுமிருவருமெதிரெதிர்
புரவிமிசைவிசைபடவலமிடநிகழ்புரிவினுடனமாபொருபலகதிகளி
னரவினதிபதிமுடிகெழுசுடிகையினருணமணிவெயிலவனியிலெழுநனி
பரவியிருள்வரநிரைநிரையெழுதுகள்பகல்செயொளிவெயில்பருகினசெருகியே. ( )

அசைவிறுடையடிகசைகுசையுளநினைவறியுமுணர்வினவளமையுமுடையன
வசையில்சுழியனபழுதறுவடிவினவருணமொழிதூரன்மனவலிமிகுவன
விசைகொள்பலகதியினும்விரைவுறுவனவிபுதர்குலபதிவிடுபரிநிகர்வன
விசைகளொருபது திசைகளுமெழுதியவிறைவரிருவருமிசைகொளுமிவுளியே. ( )

முடியுமொருகவிகையுமிருகவரியுமுதிருமெரிவிடமுரணரவெழுதிய
கொடியுமுடையவனெனுவனுமுரசுயர்கொடியிலெழுதியகுருபதியிளவலு
நெடியவரிசிலைநிலைபெறவளைபவுநிமிரவிடுகணைநிரைநிரைமுடுகவு
மிடியிலெழுமடியதிர்குரல்விளையவுமிவுளியமர்கடிதிகலொடுபுரியவே. (உஅ)

நகுலன்விடுகணைவிதரணகுணபதிநடவுகுரகதநடையயில்தூரமற
விகலும்வரிசிலைநடுவறவடமறவிடுகவசமறவெழுதருமிருபுய
சிகரிபுதையவுமுரமுழுகவுநுதலிலதமெனவொளிதிகழவுமலைதலின்
மகிழ்வுசினமெனுமிருகுணமுடனமனமழுகநிலனிடைவலனுறவிழியவே. (உகூ

இழியுமளவையின்விணையுடைவலவனெரிரதம்விரைவொடுகொடுவரவிரிகதிர்
பொழியுமளவெயிலிரவிமுனுதவியபுதல்வன்விறலொடுபுதுதனுமுபரிபரி
யொழியநகுலனுமொருதனிரதமிசையுபரிசரெனவுரவொடுபுதுதர
விழியின்மணிநிகர்வலவனும்வலவனும்விசையகுரகதம்விசையொடுகடவவே. ௩0)

கடவுமிரதமுமிரதமு*முயர்கதிகடுகிவருதலுமிருவருமிருசிலை
யடரவளைவுறநெடியினிலெயிறுடையயில்கொள்பகழிகளளவிலசிதறினர்
புடவியுறவகல்வெளிமுழுவதுமிவர்பொழியுமழையெழுபுயன்மழையெனவிழ
வுடலமுகுகுருதியினனையினருகுதவிசெயவருதரணிபருநுளவே. (௩க

* உருள்கதிகடுக என்றும் பாடம்.

இருவர்பரிகளுமூரனூறமுழுகினவிருவர்வலவரும்விழவெரிகதுவின
விருவரிரதமுமழியமுனைமுடுகினவிருவர்துவசமுமறவிசைகடுகின
விருவர்சிலைகளுநடுவறமருவினவிருவர்கவசமுமிடையிடைகெழுமின
விருவர்கவிகையுமறிதாவருடினவிருவருடலமுமெழுதினகணைகளே. (௫௨)

## வேறு.

கன்னனும்பரிநகுலனுந்தமகாலினின்றிடவே
பின்னரும்பொருபாகர்தந்தபிறங்குதேர்மிசையார்
முன்னரம்புதொடுத்தபோரினுமும்மடங்குபொரா
மன்னர்யாருமதிக்குமாறுமலைந்துபோர்செயவே. (௫௩)

அல்லிநாண்முகையம்புயங்களலர்த்துநாதன்மகன்
சொல்லினாலுயராயுள்வேதியர்சுதனையின்றமரிற்
கொல்லினாதவறுங்கொலென்றொருகோலினாலழியா
வில்லினாணழியாநடக்கெனமீளவிட்டனனே. (௫௪)

நின்றமாநகுலற்குவன்றுணையாகிநின்றிடலான்
மன்றன்மாலைவிசாலமார்பினன்மகதபூபனையும்
வென்றிவேன்முருகற்குநேர்புகழ்விடதான்றனையுங்
கொன்றுவாசவன்மைந்தன்மாமுனைகுறுகவேகினனே. (௫௫)

மடங்கன்மேலெழுமதமுமேலிடவருபணைக்கரிபோல்
விடங்கொள்சாயகவில்லிசென்றுதன்விற்குனித்தடுபோர்
தொடங்குமுன்பலர்வில்லெடுத்தவர்சொல்லும்வில்லியவன்
றிடங்கொண்மார்பினிலம்பிரண்டுதெரிந்துவிட்டனனே. (௫௬)

அருணவெங்கதிராயிரத்தவனன்பினாலுதவுங்
கருணனுஞ்சிலபகழியோரிருகண்ணர்மார்பில்விடா
வருணமும்பெயரும்பிறிந்திலர்மனனுமொன்றெனவே
தருணவாணிலவெழுநகைத்துரைதந்துபோயினனே. (௫௭)

அன்றுபோர்புரிசேனையின்பதியானவீரனைநீ
யின்றுபோயினிநாளைவாவெனவினிதியம்பினனால்
வென்றிகூர்வரிவின்மையாலடல்வெவ்வரக்கரைமுன்
கொன்றகாளையையொத்தபேரிசைகொண்டவாண்மையினான். (௫௮)

அல்லியம்புயமனையகண்ணினனநுசனுங்குனிவிற்
சல்லியன்பெயரெனவிளங்கியதானைமன்னவனும்
பல்லியங்கடுவைப்பநீடுபணைப்பகட்டுடனே
வல்லியம்பொருமாறெனப்பொரமாறிலாரொருபால். (௫௯)

மாரனுக்கிளையாமலம்பையைமாதவத்துவிடுந்
தீரனுக்குமொராழிகொண்டுசெலுத்துதேருடைவெஞ்
சூரனுக்கெதிராகிமேனிதுலங்குசேரனெனும்
வீரனுக்குமிகுத்தபேரமர்விளையவேறொருபால். (௬0)

முழுதுணர்ந்தருண்முனிவரன்புகன்மும்மைவண்டமிழும்
பழுதறும்படிதெளிஞரேறியபலகையொன்றுடையான்
வழுதியுந்தனிமதிநெடுங்குடைமன்னன்மாதுலனும்
பொழுதுசென்றிடுமளவுமவெஞ்சமர்புரியவேறொருபால். (சக)

குரவர்சொற்கண்மறுத்துவன்பொடுகொண்டபாருடையா
னரவுயர்த்தவனுக்கனந்தரமானதம்பியுடன்
கரவுசற்றுமிலாதசிந்தையன்வாயுவேககதிப்
புரவிவித்தகனிளவல்சென்றமர்புரியவேறொருபால். (சஉ)

வேரியம்புயன்வேதம்யாவையும்வில்லின்வேதமும்வல்
லாரியன்றருகடவுண்மைந்தனுமனிலன்மைந்தனுமே
தூரியம்பலகோடிகோடிதுவைப்பவெஞ்சமரே
காரியம்பிறிதில்லையென்றுகலந்துமோதினரே. (சந)

சுரருலோகமகிழ்ந்தணைந்ததுரோணன்மாமகன்மேல்
வருசதாகதிமகனைநாவிருவாளியேவிவெகுண்
டிரதநேமிகுலைந்துசூதனெடிவுளிநாலும்விழப்
பொருதுசீறினன்முற்பயந்தபுராரியேயனையான். (சச)

மீளமற்றொருதேரிலேறியவீமன்வெஞ்சினமேன்
மூளமற்புயகிரிதடித்திடமூரிவில்வளையா
வாளமொப்பெனமற்றவன்கொடிவாசிபாகொடுதேர்
தூளமுற்றிடமுதுகிடும்படிதொட்டனன்கணையே. (சரு)

கருதிவாய்த்ததுபோரெனுமெய்களித்தகைகயனுஞ்
சுருதகீர்த்தியுமுடன்மலைந்துதொடங்கினொருபாற்
கிருதபார்த்திவனுடன்மலைந்துசிகண்டிகெட்டனன்மா
விரதமேற்கொடியாடைவீழ்தரவேகினனொருபால். (சசா)

தருமபூபதிசேனையின்பதிசாபவாசிரியன்
கிருபனோடுமலைந்துவெஞ்சமர்கெட்டுவீடிரதம்
புரவிபாகுதரித்ததிண்சிலைபொன்றவன்றுயிரோ
டரிதுபோயினன்வேள்வியாகுதியங்கிவாய்வருவோன். (சஎ)

திங்களைத்தலையாகமன்னவர்செப்புமாமரபோர்
தங்களிற்பகையாகிவானவர்தானவர்க்கெதிரா
யெங்களுக்கெழுபாரடங்கலுமென்றுபோர்புரியும்
வெங்களத்தினியற்கையெங்ஙன்வியந்துகூறுவதே. (சஅ)

வேறு.

இற்றகைகால்செறிகளமுழுதுங்கழுகிட்டனகாவணமே
*யுற்றதுகொள்ளலகைக்குலம்வெங்களமுரைபெருகாவணமே
வெற்றுடன்மன்னர்சரிந்த†குடைக்கண்விரிந்தனசாமரமே
கொற்றமிகும்பறையோசையழிந்துகுலைந்தனசாமரமே. (சகூ)

---

* உற்றனகொள் என்றும், † குடற்கண் என்றும் பாடம்.

மின்புயல்வாய்விரிகின் றனவொ த்தனவிரி நுதலோடைகளே
யென்புறவூறிவிழுங்கடதாரையினேயினவோடைகளே
முன்புடைவாலதிசெற்ற து வெம்புகர்முகமுழுகுஞ்சரமே
வன்புடைமால்வரைமறிவனபோலமறிந்தனகுஞ்சரமே. (ருo)

பட்டமணிந்த நுதற்கிடையேவிழு தும்பிகள்பட்டனவே
தொட்டியுடன்பொருசமர்முனேசிறிய தும்பிகள்பட்டனவே
வெட்டியறண்புதல்வன் றன்வரு தினிவென் றுகளித்தனவே
யிட்டகுமண்டையபேய்பிணமிக்கனவென் றுகளித்தனவே. (ருக)

பழுதறவீழ்படைமன்னவர்பேருடல்பற்பலவம்பினவே
பொழிகுருதிப்புனன்மூழ்கினர்மேனிபுலாவினவம்பினவே
தழல்விழிவாரணவீரர்முடித்தலைதடிவனசக்கரமே
யழலுமிழ்வாளிகள்சு ற்றினமீளவுமாவனசக்கரமே. (ருஉ)

முழுகியவாளிகள்குழுமியவீரர்முகத்தினவெண்ணிலவே
விழிவழிதீயெழமுறுவல்பரப்பவிரித்தனவெண்ணிலவே
யுழைமழைவீழ்வனபலபடையெங்கூமிழ்ந்தனவெவ்வெயிலே
யழிவில்வருதினிருமெயிலுக்கெதிராவனவெவ்வெயிலே. (ருங)

சரமழைகாவலர்தங்கண்மனேவனசம்புகமேயினவே
யிரைகவர்புள்ளினொடுள்ளுறவாவனசம்புகமேயினவே
வரைசிறகற்றுவிழுந்தனவென்னமறிந்தனவாரணமே
யருகுநடிப்பனவலகைகள்பாடுவயாமளவாரணமே. (ருச)

செயிருடையாடவர்சோரிபரக்குசிவந்த து பாரிடமே
வயிறுபெருகுருதிச்சுவையாகவளர்ந்தனபாரிடமே
பயிலமறைத்தனபாறுபருந்தொடுபலகழுகந்தரமே
யெயிறுடைவாளிதுணிப்பவிழுந்தனவெத்தனகந்தரமே. (ருரு)

உம்பலநேகமிளம்பிடியென்னவொடிந்தனகோடுகளே
செம்புனல்யாறிருபக்கமும்வீழ்துறைசெய்தனகோடுகளே
தும்பிகளாலறையுண்டனகொற்றவர்சூழ்மனவம்புயமே
வெம்புகர்வாளிலழிந்தனமால்வரைவிதமனவம்புயமே. (ருசு)

தாள்வலியாடவர்சிரமுருளும்படிதைத்தனசாயகமே
யாழ்குருதித்தடமொத்தனவவரவருடல்சாயகமே
யேழ்புயல்வானமிருண்டிடவெங்குமெழுந்தவிருந்துகளே
வீழ்பசியாலுழல்பேயொடுபாரிடமிக்கவிருந்துகளே. (ருஎ)

செய்கடலாமெனவந்து சிவந்தகவந்தமலைந்தனவே
கைகொடுகால்கொடுதம்மின்வெகுண்டுகவந்தமலைந்தனவே
வைவகையானகதிக்குரகாவுமழிந்தனவாசிகளே
மெய்வகையாவிவைகூரெரிகோல்விடும்வீரர்கைவாசிகளே. (ருஅ)

தாரைகளொற்றைதயங்கியநீள்வயிர்சங்குமுழக்கினவே
யோரிமையிற்சிலயானை துரங்கமசங்குமுழக்கினவே
சேரவளைத்தவிலொன்றொருகோடிசிலீமுகமேவினவே
வீரருயிர்ப்புடல்விட்டமங்கையர்மெய்ம்முகமேவினவே. (ருக)

பொருகடலொத்தபெருங்குருதிக்கடல்போதவிரைந்தனவே
விரவுறுதேவர்விமானம்விசும்பிடைபோதவிரைந்தனவே
கருமுகின்முட்டினபட்டவர்கட்கனல்காலுமருப்புகையே
சுரிகையொடற்றுவிழுந்தனமங்கையர் துணியிலருப்புகையே. (௬0)

கடகரியேனமொடொத்தனவம்பொடுபோனகரத்தனவே
புடவியின்மீதுறைநிறைமதியம்பலபோனகரத்தனவே
படுதிறல்வேலவர்கண்மணிசென்றுபறித்தனவாயசமே
யடுபணையானையின்வெங்குடர்சென்றுபிடுங்கினவாயசமே. (௬௧)

அணிதொடைதேன்மதுகரநிரைசாலவருந்தவிளைத்தனவே
மணிமுடிபாரமுறப்பலகாகம்வருந்தவிளைத்தனவே
கணைபலவீரர்முகத்தனதோளனகண்ணனமார்பனவே
நிணமொடுமூளைநெடுங்குடர்பூதநிரைக்கணமார்பனவே. (௬௨)

ஆவமொடொத்தனவாடவர்நெஞ்சுகளாகியபோதகமே
பூவலயத்துடலாருயிர்வானிடைபுக்கனபோதகமே
மேவுநரிக்குவிளைந்தனவெங்கரிவீழ்தலையோதனமே
நாவலருக்குழைப்பரிதந்தநனந்தலையோதனமே. (௬௩)

வேறு.

போராண்மைசெய்சேனைபதிபின்னிட்டிடுமுன்னே
தோராண்மையும்வில்லாண்மையுமுடையானெதிர்செல்லத்
தாராரகல்வரைமார்பினர்சஞ்சத்தகர்தாமு
நாராயணகோபாலருமணியாகநடந்தார். (௬௪)

சட்கோணநெடுந்தேர்மிசைவருசத்தியசேனன்
புட்கோவெழுதியசீர்பெறுபொன்னங்கொடிவலவன்
றுட்கோடுளமறுகும்படிசுடுதோமரமொன்றான்
மூட்கோலுடன்வடமுஞ்சிதைவுறமோதினன்முரணால். (௬௫)

புடையுண்டுளமுராகிப்புயல்போல்வண்ணனைகைத்துத்
தொடையுண்டமலர்த்தும்பைசுமக்குந்திரடோளா
ருடையுண்டதொர்கடலாமெனவோடும்படியவர்மேற்
றடையுண்டதடந்தேரினைவிட்டான்முனைதரவே. (௬௬)

சென்றாடமர்புரிசேனையுடன்சித்திரசேனன்
வன்றாள்வலிமிகுமந்திரபாலன்றனைவானோர்
தன்றாதையளிக்கும்பல்சரத்தால்விழமோதிக்
கொன்றான்மிடல்வழுவாதகுரக்குக்கொடியுடையோன். (௬௭)

முன்னாண்முதனாளினுமுனைதோறுமுடற்றித்
தன்னாலுயிர்கவராதவர்சஞ்சத்தகர்யாரு
நன்னாரணகோபாலருநாகங்குடியேறப்
பொன்னாண்வரிசிலைகோலினன்மாலோனுயிர்போல்வான். (௬௮)

சஞ்சத்தகர்கண்ணன்றருதனயோர்பலரடைவே
வெஞ்சப்பொருதனன்வெஞ்சிலையிமையோர்பதிமகனென்
றஞ்சிக்களமுழுதுங்கழுகாடக்குறையாடக்
குஞ்சத்தொடுகுடைவீழ்தரமுதுகிட்டனர்கூடார். (௬௯)

முதுகிட்டவர்துரியோதனன்முன்வீழ்தலுநூற்றைம்
பதுகற்கியுநாலாயிரம்விகடப்பொருபகடு
மதுகைப்படுதேராயிரமுங்கொண்டெதிர்வந்தா
னெதிர்கைப்படவொருமன்னருமில்லாவமர்வல்லான். (௭௦)

குருமித்துநடக்கின்றனனிவனோடுகொடுங்கா
ருருமிற்பொருகுவமென்றுள*முகளித்தெழுமுனைமே
னிருமித்துநடந்தான்மனுநீதிக்கொருநிலையான்
றருமத்தினதுயிரென்றுரைதக்கோர்சொலமிக்கோன். (௭௧)

வேறு.

துனைவெங்கபோலவிகடகடகரிதுரகம்பதாதியிரதமளவில
வெனநின்றசேனைமுடுகியயில்சிலையெறிதுங்கவாளொடிகலியெழவெதிர்
குனிசங்குதாரைவயிர்கண்முதலியகுணில்கொண்டுசாடுபறைகண்முதலிய
தனிதங்கொண்மேகமெனவுமலைபொருதமரங்கொள்வேலையெனவுமதிரவே. (௭௨)

கதிகொண்டசேனைநடவவெழுதுகள்ககனஞ்சுலாவியணிலகதியுற
முதிர்சண்டசூரகிரணமிருளெழமுகில்பஞ்சபூதவடிவுபெறவிய
னதிவண்டலாகவமராநறைதருநகரம்பொன்வீதிபுழுதியெழமுழு
மதியங்கமாசுகழியநிரைநிரைவளரண்டகூடமுகடுபிதிரவே. (௭௩)

குதிகொண்டவாசிவயவர்பலரொடுகுதிகொண்டவாசிவயவர்குறுகினர்
துதிவெங்கைவேழமறவர்பலரொடுதுதிவெங்கைவேழமறவர்துதையின
ரதிர்சண்டவேகவிரதர்பலரொடுமதிர்சண்டவேகவிரதராணுகினர்
பொதிவெம்பதாதிவிருதர்பலரொடுபொதிவெம்பதாதிவிருதர்பொதுளவே. (௭௪)

புரிசெம்பொனேமிவிசையொடுருகிரிபொருவன்புபோலநவமணியினொளி
விரிதந்தசோதிபடலமிகுவனமிசைகொண்டதேர்கள்கடவவலவர்க
ளெரிசெங்கணாகவாசுமுராசமுமெழுதும்பதாகைநிருபரிருவரு
முரிதந்தசாபமுடுகுபகழியின்முகிறங்குவானமுழுதுமறையவே. (௭௫)

அறன்மைந்தன்வாளியடையநயனமிலவன்மைந்தன்வாளிவிலகவிரகுடை
விறன்மைந்தன்வாளியடையவிரகிலிவிடுபுங்கவாளிவிலகமுறைமுறை
மறமும்பொருதசினமுமிருபுயவலியுந்தவாமலரிதுபொருதபி
னிறமொன்றுமேழுபகழிமுழுகினநிருபன்றன்மார்புகுருதிபொழியவே. (௭௬)

* உகளித்தெழுமேன்மே, னிருமித்துமுனைந்தான் என்றும் பாடம்.

விரிகின்றநீலகிரியிலிளவெயில்விழுகின்றதாரையனையவழகொடு
சொரிகின்றசோரியுடையமகிபதிசுளிவின்றிமீளவொருகைநொடியினின்
முரிகின்றநீடுபுருவநிகரெனமுனைகின்றசாபமுரியவிரைவொடு
தெரிகின்றகோல்கண்முழுகியறனருடிருமைந்தன்மார்புகுருதிபொழியவே. (௭௭)

மருமங்கள்சோரிவடியவிருவருமலைகின்றபோதின்மதுகைநிலையொடு
தருமன்குமாரனைகைகொடவனிபர்தலைவன்குமாரனுரகதுவசமு
மருமந்ததேரும்விசயவலவனுமடல்கொண்டுபாய்புரவியுமழிவுற
வுருமஞ்சநாணியெறியுமொலியெழவொளிவிஞ்சுநாலுபகழியுதையவே. (௭௮)

இழிதந்துமீளவிமயமனையதொரிரதங்கடாவியெதிரியுரனிடை
யழிதந்துமீளவயில்கொண்முனையதொராயில்கொண்டுவீசியெறியுமளவினின்
மொழிதந்தவேலின்முனையுமொடிவுறமுரிவுண்டுகீறிவழியில்விழவெதி
பொழிதந்ததாலோர்பகழியறனருள்புதல்வன்கைவாகைபுனையும்வரிவிலே. (௭௯)

பிளவுண்டுவேல்விழுதலின்மகிபதிபிழைகொண்டவேழமனையமெலிவின
னுளநொந்துநாணவுருளுமிரதமுமுடைதந்துபோருமொழியும்வகைசில
கிளரம்புவீசியொருபவளமுதுகிரிநின்றதாகுமெனமுனிலைபெறு
வளமைந்தன்வாய்மையுரைசெய்தனன்மிசைவருமும்பர்யாருமிதயமகிழவே. (௮௦)

அளிதங்குமாலையரசரவையிலுனதிவஞ்சமாமனவணிகவர்வுற
வெளிவந்தசூதுபொருதவிரகரிதெளிதின்றுபூசலெனமுன்விரவினை
யொளிவிஞ்சுதேருமுடையபடைகளுமுடையுண்டுநீயுமுறுதிதவறினை
தெளிவென்பதாசுமிலதுன்மனமுறுசெருவென்றவீரமமையுமமையுமே. (௮௧)

அனிலன்குமாரனரசசனியெனநுசன்சொல்வாய்மைபழுதுபடுமென
வுனையின்றுகோறலொழிவதலதுநினுரமென்கொலாகுமெனதுகணையெதிர்
புனைதும்பைமாலைசருகுபடவெழுபொடிமண்டவோடிமறைகவிரைவுட
னினியெங்களாண்மையுரைசெய்தெதுபயனெதிர்வந்துநாளையணிகவிகலியே. (

முதிர்குந்திபோசன்மகடன்மகனிவைமொழிதந்தபோழ்துபெருகமுறுவல்செய்
ததிருஞ்சுயோதனனுமொருயர்கதையவன்மன்றன்மார்பினுரமொடெறிதர
வெதிர்சென்றுநீதிபுனையுநிருபனுமெறிதண்டுகூறுபடவுமெறிபவன்
விதிருண்டுபாரில்விழவுமொருதனிவிறலுந்துவேல்கொடுருவவெறிபவே. (௮௩)

வேறு.

சூழ்ந்ததுவிதிகொல்பாகுந்துரகமுந்தேரும்வீழ
வீழ்ந்தனன்வேந்தர்வேந்தன்மெய்தவாவேந்தன்வேலாற்
றாழ்ந்ததுநமதுகொற்றமெனநடித்தரிப்பொன்றின்றி
யாழ்ந்தபைங்கடலோடொப்பானடுத்தனனங்கர்கோமான். (௮௪)

முற்படுதினத்திற்றந்தைமுடிந்தமெய்வருத்தத்தோடு
கற்படுபுண்ணின்மீளாத்தடிபடுகணக்கிற்றாக
வெற்படுதடந்தோள்வேந்தன்வீழ்ந்தனனென்றுவெய்தி
னெற்படுபரிதியென்னத்தோன்றினனிவுளித்தாமா. (௮௫)

வேட்டவெங்களிறேடொப்பான்மேதினிக்காசன்விற்போர்ப்
பூட்டறுபுரவித்தேரும்பொன்றியபுலனுமாகி
யோட்டமிருனையான்கைவேலினுலுடைந்தமாற்றங்
கேட்டனனவர்க்குமுன்னேகிருபவாசிரியன்வந்தான். (அசு)

காப்புடையொற்றைநேமிக்காவலன்றுமமார்பி
னுப்புகல்வாய்மையான்றனுண்மலர்ச்செங்கைவைவேல்
கோப்புறவீழுமுன்னர்க்கொதித்தெழுமனத்தனுகித்
தாப்புலிபாய்ந்ததென்னச்சல்லியன்றானும்வந்தான். (அஎ)

எப்பெருஞ்சேனையோடுமெக்குலவேந்தும்வந்து
தப்பருங்கொற்றவேற்கைத்தருமனைவளைந்தகாலை
யப்பெருந்தானைதனிலருச்சுனனுதியான
வொப்பருந்தாணிபாலரிவற்கும்வந்துதவினுரே. (அஅ

இருபடையரசுந்தம்மிலீரிரண்டங்கமாகி
வருபடைகொண்டுநின்றுவல்லவாபூசருக்கப்
பொருபணியுடைப்பதாகைப்பூபதிதனையுங்கொண்டாங்
கொருபடைக்கொளாமலொன்னலருடைந்துபோனுர். (அகூ)

நாகையாப்புகழான்பெண்ணைநதிவளஞ்சுரக்குநாடன்
வாகையாற்பொலிதிண்டோளான்மாகதக்கொங்கர்கோமான்
பாகையாட்கொண்டான்செங்கைப்பரிசுபெற்றவர்கள்போல
வோகையாற்செருக்கிமீண்டாருதிட்டிரன்சேனையுள்ளார். (கூ0)

அருக்கனுந்தருமன்மைந்தனுண்மையுநிலையுங்கண்டு
வெருக்கொளுநிருபரென்னமேற்றிசைவேலைமூழ்கிச்
சுருக்கமில்கங்குற்காலஞ்சென்றபின்சுதன்மேலன்'பு
பெருக்கவுண்டாகமீண்டுங்குணகடற்பிறந்திட்டானே. (கூக)

பதினுரும்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - ரு, அஉ0.



# பதினேழாம் போர்ச்சருக்கம்.

ஈரொருபிறப்பினொருசிறுகுறளாயாவருந்தேவரும்வியப்பக்
காரொருவடிவுகொண்டெனச்சென்றுகாவல்கூர்மாவலியளித்த
நீரொருகரத்தில்வீழமுன்றாங்கநீணிறமகரநீரடுத்த
பாரொருகணத்திலளவிடுங்கமலபாதனுர்நாதனுர்நமக்கே. (க)

அற்றைவெஞ்சமரிலமர்முனைந்தாற்றுதழிந்துபோமவனிபர்பலரு
மற்றைநாளகிலபுவனமுமின்றேமடியுமென்றனைவருமயங்க
வொற்றைவெண்சங்கும்பல்வகைப்பறையுமோதவான்கடலெனவொலிப்பக்
கற்றைவெண்கவரிகால்பொரத்தனிப்பொற்கவிகைநீழலிற்களங்கலந்தார். (௨)

எண்ணிருதினத்திற்பட்டபல்படையுமீண்டுமீண்டெழுந்தனவென்ன
வண்ணமோராளவில்வாசியுந்தேருமதசயிலமும்பதாதிகளும்
விண்ணுமண்ணகமுந்தெரிவுறவழக்கினவெங்களமுழுவதுங்கனல
வண்ணலந்தடக்கைக்கெதிரிலாவண்மையாண்டகைபாசுடனடைந்தான். (௩)

சென்னியின்மகுடமணிவெயிலெறிப்பத்திருக்குழைமணிவெயிலெறிப்ப
மன்னியபொலம்பூண்மணிவெயிலெறிப்பவனைகழன்மணிவெயிலெறிப்பத்
தன்னைமுன்பயந்தோனன்னிலும்வடிவந்தயங்குசெஞ்சுடர்வெயிலெறிப்பக்
கன்னனன்றிருந்தவழக்கினையாரேகண்டுகண்களிப்புறுதொழிந்தார். (௪)

ஒருங்களப்பரியபதாகினிக்குழாமுமுயிர்க்குயிரானதம்பியரு
மருங்களக்கனிகொள்வண்ணனுந்தானுமறனருளறனுடையரசன்
பெருங்களப்பரப்பினணிபெறவணிந்துபேருலகுய்யுமாறிருண்ட
கருங்களத்தவனைக்காசினித்தேர்மேற்கண்டெனக்காணுமாநின்றான். (௫)

நின்றவக்குரிசிலருச்சுனன்றேர்மேனின்றருணீலமேனியனை
மன்றலந்துளபமாலைமாதவனைவழிபடுமவர்க்குவான்றுணையைத்
தன்றடங்கண்ணேறுடிதய புதத நுமபத்தாளிணை முடியுறவணங்கி
யின்றைவெஞ்சமரிலிரவிதனைசேயவானெப்துமோவியம்புதியென்றான். (௬)

இத்தினமிரவிசிறுவனும்விசயனேவிறைவிறந்திடுநாளைத்
தத்தினபுரவித்தேர்ச்சுயோதனனுஞ்சமீரணனறனயனன்மடியு
மத்தினபுரியுமீரிருகடல்சூழவனியுநின்னவாமென்றான்
சித்தினதுருவாயகண்டமுந்தாளுஞ்செய்யகட்கருணையந்திருமால். (௭)

செங்கண்மாலுரைத்தவின்சொலாரமுதஞ்செவிப்படச்சிந்தனைதெளிவுற்
றெங்கண்மானமுந்தொல்லாண்மையும்புகழுநீயலால்யார்நிலையிடுவார்
வெங்கண்மாசுணத்தோன்வஞ்சனைக்கடலின்வீழ்ந்தழுந்தாவகையெடுத்தின்
றங்கண்மாநிலமுந்தந்தனையெனப்போறத்தின்மாமகனிவையுரைப்பான். (௮)

பொங்கழற்சிந்தைச்சுயோதனன்கங்கைப்புனல்விளையாட்டிடைப்புதைத்த
வெங்கழுமுனையில்விழாமலோரளியாய்வீமனுக்காருயிரளித்தாய்
பைங்கழலரசவையினில்யாழும்பாரத்திருந்தலமரப்பயந்த
நுங்கழலனையாளுணமுந்துகிலுநோக்கினைகாக்குநாயகனே. (௯)

கானகமருங்கின்மேவலன்பணியாற்கடும்பசியுடன்வருங்கடவுண்
மானவமுனிவன்றுபமுஞ்சாபவருத்தமுமுறுவகையொழித்தா
யானொருபொருளாத்தூதுசென்றருளியெதிரிலாவிதுரன்வெஞ்சிலையும்
பானுவின்மதலைகவசமுமகற்றிப்பரிந்துபல்வினைகளும்புரிந்தாய். (௰)

களப்பலியாககன்னிகைபுதல்வன்கருதலான்றனக்குநேர்ந்திடவும்
கிளப்பருந்திதியைமயக்கிவான்மதியங்கிளரொளியருக்கனைக்கேட்ப
வளப்படுந்திதியின்முந்துறவெமக்கேவழங்கிநம்படிமதிகொளுத்தி
யுளப்பொலிவுடனேவிசயனுக்கருளாலுருளுடைக்கொடிகொடேரூர்ந்தாய். (கக)

அஞ்சியோவன்றியருள்கொலோவறியேனுகவத்தடுதொழின்மறந்த
வெஞ்சிலைவிசயற்குள்ளவாறுணர்த்திமீளவும்பொரும்படிவிதித்தாய்
வஞ்சினமறந்துநேமியுந்தரித்துவலம்புரிகுறித்துமூதாதை
துஞ்சிடவமரிற்சிகண்டிசெய்தவத்தின்றொடர்பயன்வழாவகைதுரந்தாய். (கஉ)

ஒருபகல்விசயன்மார்பமூடுருவவொழுகுவெங்கடத்தொருத்தலின்மேல்
வருபகதத்தனெறிந்தவேலுன்றன்வண்டுழாய்மார்பகத்தேற்றாய்
பொருபகையரசர்பலர்படவபிமன்பொன்றியபொழுதுசெந்தழலி
னிருபதமுனியால்விழாவகைவிலக்கிநிசியில்வெங்கயிலையுங்கண்டாய். (கங)

வருணன்மாமதலைவாசவன்மதலைமார்பினிலெறிந்தவெங்கதையைக்
கருணையான்மருமம்புதையவேற்றந்தக்காளைகையறும்படிகண்டாய்
தருணவாணிருபர்மயங்கிவீழ்தரவெண்சங்கமுமுழக்கிநேமியினு
லருணனுதபத்தைமறைத்திரவழைத்தாங்கபிமனுக்கரும்பழிகொண்டாய். (கச)

எவருஞ்சாபபண்டிதன்புதல்வனேவியவாளியால்யாங்கள்
வீவருந்தன்மையறிந்துவாகனமும்விறற்படைகளுமொழித்திட்டாய்
மூவருமொருவராகிநின்றருளுமூர்த்தியேபார்த்திவர்பலருந்
தேவருமுணரார்நின்செயலெனமால்சேவடிகளின்முடிசேர்த்தான். (கரு)

கண்ணனுங்கருணைக்கண்ணனைப்பிறைஞ்சிக்கைகளாற்றழுவியைவிருநீ
ரெண்ணருமமரிலிறக்கிலீரஞ்சலென்றுபசாரமுமியம்பிப்
பண்ணமர்தடந்தேர்ச்சேனையின்பதியைப்பார்த்தணிவகுக்கெனப்பணித்தா
னண்ணலந்திட்டத்துய்மனுந்தெவ்வரஞ்சிநம்படியணிவகுத்தான். (கசா)

வேறு.

ஐவர்பதாகினிவெள்ளமணிந்தவாகண்டுவிறற்கோனெடுவிற்கையங்கர்கோமான்
பைவருமாசுணக்கொடியோன்றன்னைநோக்கிப்பரிததடந்தேர்நரபாலர்பலருங்கேட்கக்
கைவருபல்படைக்குமொருவீரரொவ்வாக்கட்டாண்மையராசேயிக்களத்திலின்றே
கொய்வரு* தார்ப்புயப்பகைவர்சிரங்களெல்லாங்குறையுடலங்கூத்தாடக்கொய்வேனென்றான். ()

கார்ப்பாகசாதனன்றன்மகனுக்கெல்லாக்கலகமுஞ்செய்வஞ்சனையேகற்றகள்வன்
றேர்ப்பாகனாய்நின்றானவனுக்கொப்பார்தேவருலகினுமில்லைதிசைகளெல்லா
மார்ப்பாகமோதிவருங்கவனமாநெஞ்சறிவானும்போரில்விரகறிவிப்பானும்
போர்ப்பாகாய்த்தேர்கடவுசெயல்வல்லானும்புனைதாமச்சல்லியனேபுவியிலென்றான்.

* தார்ப்போர்ப்பகைவர் என்றும் பாடம்.

அவனின்றென்மணிநெடுந்தேர்கடவுமாகிலருச்சுனனுக்கடலாழியவனேயன்றிச்
சிவன்வந்துதேர்விடினுங்கொல்வேனந்தத்தேர்நின்றாரிருவரையுஞ்செங்கோல்வேந்தே
பவனன்சேய்முதலானதுணைவரோரோர்பகழிமுனைதனக்காற்றார்பாவையாடைப்
புவனங்களனைத்தையுநின்குடைக்கிழாக்கிப்புரிதிறல்வாகையுநினக்கேபுனைவிப்பேனே. ()

நஞ்சோற்றம்பெறநுகர்வுற்றிருண்டகண்டர்நற்றொண்டர்வடிவமெனநண்ணும்வெண்ணீ
றஞ்சோற்றுமடற்கைதைகமழுங்கானலகன்குருநாட்டரியேறேயானின்றீம்பால் [ற்
வெஞ்சோற்றேடினிதருந்தியமுதருந்தும்விண்ணவர்போலிந்நெடுநாள்விழைந்துவாழ்ந்தேன்
செஞ்சோற்றுக்கடனின்றேகழியேனுகிற்றிண்டோள்கள்வளர்த்ததனாற்செயல்வேறுண்டோ. ()

ஒருருமொருகுலமுமில்லாவென்னையுங்கள்குலத்துள்ளோரிலொருவனுக்கித்
தேரூருமவர்மனைக்கேவளர்ந்தவென்னைச்செம்பொன்மணிமுடிசூட்டியம்புராசி
நீரூரும்புவிபாலர்பலரும்போற்றநின்னினுஞ்சீர்பெறவைத்தாய்நினக்கேயன்றி
யேரூருங்கதிர்முடியாயுற்றபோரில்யார்க்கினியென்னுயிரளிப்பதியம்புவாயே. (உக)

கன்னனிவையெடுத்துரைப்பமகிழ்ந்துகேட்டுக்காந்தாரன்றிருக்குலத்துக்கன்னியீன்ற
மன்னர்பிரானிமைப்பொழுதிற்பழுதிலாதமத்திரராசனையெய்திமதுபசாலந்
தென்னதெனவெனமுராலுஞ்செவ்விமாலைத்திருத்தோளாயானென்றுசெப்பிநலவ்
வின்னுரைகேட்டொருவாநீநல்கல்வேண்டுமென்றனையெனக்கரங்கொண்டிறைஞ்சினனே. ()

செறுத்தவர்தம்பெருவாழ்வுமுயிருமாற்றிச்சேர்ந்தவர்கள்புரிந்தபெருந்தீமையெல்லாம்
பொறுத்துலகமுழுதாளுந்திகிரியோயான்பொருளாகவொருவாநீபுகலுவாயேன்
மறுத்துரையேனுரைத்தருளென்றுரைத்தானந்தமத்திரபூபனுமவனுமருவலரைக்
கறுத்தமழைமுகில்வெளுக்கக்கருகுமேனிக்கண்ணனைப்போலெங்களைநீகாத்தியென்றான். (உ௩)

வாவுமாமணிநெடுந்தேராசர்க்கெல்லாம்வாய்ப்பானநீயெனையும்பரப்பதன்றி
யேவுமாதொழில்புரிந்துன்குடைக்கீழ்வைகுமென்போல்வாருனைப்புரத்தலிசைவதொன்றோ
தேவுமாய்மானுடமாய்மற்றுமுற்றுஞ்செப்புகின்றபலகோடிசராசரங்கள்
யாவுமாய்விளையாடுமாதிமூர்த்தியாதவனுக்கியானெதிரோவெதிரிலாதாய். (உச)

நேர்செலுத்துந்தனிச்செங்கோலுடையாயாதுநினைவுனக்கென்றவன்வினவநிருபன்றானுந்
தார்செலுத்தும்பெருஞ்சேனைசூழநின்றசல்லியனைமுகநோக்கித்தனஞ்சயற்குத்
தேர்செலுத்துமுகுந்தனைப்போனீயுமின்றுதேரிரவிமகன்றிண்டேர்செலுத்தினல்லாற்
போர்செலுத்திமைவரையும்வென்றுவாகைபுனைதனமக்கரிதென்றுபோற்றினனே. உ௫)

புல்லியசொன்மதியாமலென்னைநோக்கிப்புகன்றனையாற்புன்மேயும்புல்வாய்க்கென்றும்
வல்லியமாப்பணித்ததொழில்புரியினன்றேமத்திரத்தான்கன்னனுக்குவலவனுவான்
சொல்லியநாவென்படுமெற்றொருவன்சொன்னற்சுயோதனனுதலிற்பொறுத்தேன்சொன்னதென்
சல்லியன்மாமனங்கொதித்துப்புருவங்கோட்டித்தடங்கண்ணுமிகச்சிவந்தான்றறுகண்ணனே. [று

சதுர்விதத்தேர்வீரருக்குத்தடந்தேரூருஞ்சாரதிதன்றனயனுக்குத்தடந்தேரூர்தன்
மதுமலர்த்தார்வலம்புரியாயிழிவன்றோசீமதித்தவிறற்கன்னனுக்குமெனக்குமிப்போ
தெதிர்மலைக்குஞ்சேனைதன்னையிருகூறாக்கியிகல்புரிந்தாலென்கூற்றையிரியவென்றக்
கதிரளித்தோன்கூற்றினையுமழித்திலேனேற்கடவுவன்றேரவற்கென்றுகனன்றுசொன்னான். ()

செங்கோலமலரிலிருந்தனைத்துமீன்றதிசைமுகன்றானறம்வளர்க்குந்தெய்வப்பாவை
பங்கோனுக்காதிமறைப்புரவிபூண்டபடிக்கொடித்தேர்கடவுதனிப்பாகனானான்
பொங்கோதப்பாற்கடலானிவனென்றியாரும்புகல்கின்றவசுதேவன்புதல்வன்வந்து
வெங்கோபவிசயனுக்குச்சூதனானான்விசயனுமன்றுத்தான்றேர்விசையினூர்ந்தான். ()

பூந்தராதலமுழுது மதித்தவாண்மைப்போர்வேந்தேயுனைப்போலப்புகழேபூண்டு
வேந்தராயமர்க்களத்திலதிசயித்தவீரரானவர்க்கிது தான்மேம்பாடன்றோ
மாந்தராயெக்கலையும்வல்லார்க்கன்றிவாசிநெடுந்தேரூரவருமோவென்றென்
றேந்தராவெழுதியபொற்கொடியோன்சொல்லியிறைஞ்சுதலுமுடன்பட்டானென்செய்வானே.()

மகபதிதன்மகனுக்குவசுதேவன்றன்மகன்பாகனானதுபோல்வயங்குசோதிப்
பகலவன்றன்மகனுக்குநிகரிலாண்மைப்பல்விதப்போர்ச்சல்லியன்றேர்ப்பாகனானான்
புகலரியதும்பையுடன்வெற்றிவாகைபுனைந்திடுமிக்கணத்தில்வலம்புரித்தார்வேந்த
னகலுததியுடையாடையவனிமுற்றுமவனதினியெனவார்த்ததரசன்சேனை. (கூ0)

பெற்றிழந்தகவசமுங்குண்டலமுமீளப்பெற்றனன்போலடலருக்கன்பெற்றபிள்ளை
மற்றையணிவிரன்முடக்கவிணையிலாதமத்திரபூபனைத்தழுவிமணித்தேரேற்றப்
பற்றலர்நெஞ்சலமருமாறவனும்பாகர்படிவங்கொண்டமர்க்கமைந்தபரிகள்பூட்டி
யுற்றவடிக்கயிறுடனேயுளவுகோல்கொண்டூர்ந்தனனலநுணனுக்கேயுவமைசால்வான். ()

பணிநிறுத்தியெழுதுறுபொற்பதாகையானைப்படாதொழிதம்பியரோடும்பார்க்கவன்போ
லணிநிறுத்திக்கிருபகிருதரையும்பல்போராசரையுமிருமருங்குமணிகளாக்கி
நுணிநிறுத்திச்சகுனிமுதலானோர்தம்மைநுவலருநாளுடுக்கோளினடுவண்வான
மணிநிறுத்திவைத்ததெனப்பவளமேருவரைநின்றதெனநின்றான்வண்மைவல்லான். ()

வேறு.

கோவல்சூழ்பெண்ணைநாடன்கொங்கர்கோன்பாகைவேந்தன்
பாவலர்மானங்காத்தான்பங்கயச்செங்கையென்ன
மேவலரெமரென்னாமல்வெங்களந்தன்னினின்ற
காவலன்கன்னன்கையும்பொழிந்ததுகனகமாரி. (கூங)

அந்தணர்பரிசின்மாக்களவனிபர்முதலோர்யார்க்குஞ்
சிந்தைகள்களிக்கத்தானதியாகமுஞ்சிறப்புநல்கிக்
கந்தனோர்வதனமாகியவதரித்தன்னகன்னன்
சந்தணிகுவவுத்தோளான்சல்லியன்றனக்குச்சொல்வான். (கூச)

மேகவாகனன்பாற்பெற்றவெயிலவனியமதங்கி
யாகியமுனிவற்கீந்தவரும்பெருஞ்சாபம்பெற்றே
னாகவெம்பகழிபெற்றேனாரணற்கொத்தவுன்னைப்
பாகனுமாகப்பெற்றேன்பாக்கியம்பலித்தவாறே. (௩௫)

எனக்கெதிர்விசயனல்லதில்லையவ்விசயனென்பான்
றனக்கெதிரென்னையன்றித்தரணிபர்யாருமில்லை
மனக்குநேரானதோழன்மகிதலமுழுதுமெய்தக்
கனக்குரற்களிற்றோயின்றுகாண்டியென்னாண்மையென்றான். (௩௬)

என்றலுமத்திரேசனிளநகைசெய்துநீநின்
வென்றியும்வலியுங்கற்றவின்மையும்விளம்பவேண்டா
வொன்றோடொன்றிரண்டுதேருமுருளுடனுருள்களொத்துச்
சென்றெதிர்முனைந்தபோதுன்சேவகந்தெரியுமாதோ. (௩௭)

ஒருவரையொருவரொவ்வாவுரனுடைவீரர்நீங்க
ளிருவரும்பொரும்போர்தோறும்யாங்களும்பாங்காய்நின்றோம்
வெருவரன்மறந்துமில்லாவிசயனையொருபோதத்துந்
திருவரும்வண்மையோய்நீசெயித்திடக்கண்டிலேமால். (௩௮)

வயிர்த்திருவோருஞ்சொன்னவஞ்சினமுடிக்குமாறு
செயிர்த்திடுமிற்றைப்பூசறெரியுமோதெரிந்ததில்லை
யயிர்த்தனமென்றுதேரூராண்டகையுரைப்பநீட
வுயர்த்தனனாகிமீளவுத்தரமுரைக்கலுற்றான். (௩௯)

இந்திரன்மகனுக்கென்னையெதிரில்லையென்றுநின்ற
தந்திரபாலர்முன்னர்ச்சல்லியவிகழ்தல்வேண்டா
மந்திரவாசித்திண்டேர்வல்லையேயூர்வதன்றி
வெந்திறல்விளைக்கும்வெம்போர்வினைக்குநீயார்கொலென்றான். (௪௰)

*வலியுடைத்தேரோன்சொன்னவாசகம்வலவன்கேட்டுக்
கலியுடைத்தடந்தேர்விட்டுக்காலினின்றுடைவாள்வாங்கி
யொலியுடைப்புரவித்திண்டேருனக்குநானூருவேனோ
வெலியுடைப்பூசல்பூனைக்கெதிர்ப்படினென்படாதோ. (௪௧)

உருவுருமென்னச்சீறியுடன்றபினுதயன்காதன்
மருவுறுமைந்தன்றானும்வாளொடுமண்ணிற்றாவி
யிருவருமிரண்டுகாயமிகலுழனுரககேது
வெருவருஞ்சிந்தையோடுவெய்திற்போய்விலக்கினானே. (௪௨)

மூளும்வெஞ்சினத்தைமாற்றிமுனூறுத்தவர்கடம்மை
மீளவுந்தேரிலேற்றிவெஞ்சமர்விளைமினென்றான்
மாளவும்பாண்டுமைந்தர்வையகமுழுதுந்தானே
யாளவுங்கருதியெல்லாவரசையுமழிக்குநீரான். ௪௩

* வலியுடைத்தோளான் என்றும் பாடம்.

வனைகழற்கிருதவன்மன்வரிசிலைக்கிருபன்றானே
தனைநிகர்சகுனிதாமாச்சாலுவன்றிகத்தராச
னிணையபொற்றடந்தேர்வீரர்யாவருமெண்ணில்சேனைக்
கனைகடலோடுசூழ்ந்துகன்னனைக்காத்துநின்றார். (சச)

நின்றவக்கன்னன்றன்னைநெஞ்சுறமகிழ்ந்துநொக்கி
வென்றனம்பூசலின்றேவிசயனுந்தாதைதன்பாற்
சென்றிடுமென்றுதேறிச்செப்பினன்சிற்சின்மாற்ற
மன்றலஞ்சுரும்புமாறாவலம்புரிமாலையானே. (சரு)

சதமகன்மகன்றேர்ப்பாகன்றன்வயிற்கேண்மைவிஞ்சி
விதுரனுமமாசெய்யாமல்வெஞ்சிலையிறுத்துப்பின்னும்
யதுகுலத்தலைவனானவிராமனுந்தானும்பாரி
னதிமுதற்றீர்த்தம்யாவுமாடுவானயந்துபோனான். (சசு)

கங்கைதன்வயிற்றிற்றோன்றித்தாதைதன்காதறீர்ப்பா
னெங்களுக்கரசும்வாழ்வுமிருநிலமுழுதுந்தந்து
வெங்களத்துதயன்போலவீடுமன்களத்தையெல்லாஞ்
செங்களப்படுத்திமீண்டுந்தேவரிலொருவனானான். (சஎ)

கரிமுகக்கடவுளன்னகடும்பரித்தாமாவென்னுங்
குரைகழற்றுணைத்தாட்சிங்கக்குருளையைப்பயந்ததாதை
யருமறைக்கயனையொப்பானடற்சிலைக்கரனையொப்பான்
றிருவருட்கரியையொப்பான்றிருத்தகுவீடுசேர்ந்தான். (சஅ)

சாயலாற்சிறந்ததோகைச்சாமளத்தடம்புள்ளூர்திச்
சேயலாற்றேவர்வாழ்வுதேவருக்கியாவரீந்தார்
நீயலாற்சமரிலென்னைநிலையிடற்குரியாருண்டோ
தோயலாற்பயந்தகாதற்சூரனையனையசூரா. (சகூ)

மித்திரரென்றுநோக்காதென்னுடன்விளைந்தநண்பான்
மத்திரநிருபன்மைந்தன்வந்தெனக்குதவியானான்
குத்திரனல்லன்செம்மைக்கொள்கையன்மறையின்மிக்க
வத்திரசாபம்வல்லானிவனொடாரமர்செய்கிற்பார். (ரு0)

எம்மொழிமறுமலின்றுன்னிரதசாரதியுமானா
னன்மொழியன்றிவேறுநவைமொழிநவிறறேற்றான்
றன்மொழியுறுதியாவுந்தருமெனக்கைக்கொளாமற்
புன்மொழியாடினும்பிற்புலப்பதுபுன்மையன்றோ. (ருக)

இதயமும்வலியுந்தேயத்தியற்கையும்வினையும்பற்பல்
கதிகளுமுணர்ந்துபூணுங்கவனமாத்தெரிந்துபூட்ட
லெதிரிதன்விசயங்கூறலிடிக்குநண்பாதல்வெம்போர்
முதிரிடங்காலமெண்ணல்சூதர்க்குமுறைமைகண்டாய். (ருஉ)

வேறு.

என்னமன்னர்மன்னவன்முகம்புகுந்திருவருக்குநல்லுரையெடுத்துரைத்
தந்நிலத்திலேநிற்கவல்விரைந்தறன்மகன்படைக்கதிபனென்றுமூன்
சொன்னதிண்டிறற்றுருபதேயனுஞ்சோமகேசராயுள்ளசூரருங்
கன்னனின்றவம்முனையினெஞ்சினுங்கடுகுதங்கடோட்கடவினார்களே. (ருங)

சென்றவீரருஞ்சிலைகள்கால்பொரத்திண்சிலீமுகஞ்சோவேவினார்
நின்றவீரருந்தனுவளைத்துமேனெடியசாயகமிரவிசிறு
ரொன்றமாநிலம்பொன்றமீதெழுந்தோதமூர்வதொத்தும்பாஞ்சிறு
ரன்றையாகவந்தனினிகழ்ந்தபோராரையாரையென்றிசைப்பதே. (ருச)

ஏறுதோழிந்திவுளியாவழிந்தேவபாகழிந்தெண்ணிலெண்ணிலார்
நூறுநூறுகோனுழையமெய்யெலாநொந்துதுஞ்சினார்முந்துபோர்செய்தார்
வேறுவேறுபல்கோடிவீரர்கண்மேருவொப்பதோர்வில்வளைத்திடச்
சூறைமாருதம்போல்விபாகரனசுதனடாவுதேர்சூழவந்ததே. (ருரு)

முட்டவந்துதம்பின்கொடாமன்மேன்மூன்கொடுத்துபாமூனைகொள்வாளியிற்
பட்டொழிந்தவவ்விருவர்சேனையின்பதிகளுஞ்சயம்படவுடற்றினார்
விட்டபாணம்வந்திருவராகமும்வெளியடைக்கவேவில்வளைத்தபின்
றிட்டதுய்மனுங்கன்னனுக்கிடைந்தேதறுதேருடன்றேறிபோடினன். (ருசா)

சோமகேசரிற்பட்டொழிந்தவெஞ்சூரர்தம்முடன்றுரோணசூதனன்
காமபாணமேயெனவிலக்கருங்கணைகண்மெய்யுறக்கைகழன்றபின்
ருமமார்பூடித்தம்முனைவலிற்றன்னையொத்ததாள்வீரர்தம்மொடும்
வீமசேனன்மற்றவரைவென்றபோர்விசயகன்னன்மேல்வெய்திணைத்தினன். (ருஎ)

காலினால்வருங்காளைமைந்தனுங்கதிரினால்வருங்காளைமைந்தனு
மாவினால்வருங்களிறுவாசிமாமன்னுதேரொனும்வாகனத்தினார்
வேலினாலெறிந்தமருடற்றியும்வெய்யவாளினால்வெட்டிமுட்டியுங்
கோலினாலெறிந்துருவவெற்றிவிற்கோலிபுங்களங்குறுகினார்களே. (ருஅ)

மைந்தர்போர்விதங்கண்டுகண்டுதார்மருவுமம்புயத்திருவருங்களித்
துந்துமாநெடுந்தேரிரண்டும்வந்துள்ளமானதேரொக்கலாவவே
யந்தரம்புதைந்தும்பாரெலாமஞ்சியோடுமாறப்புமாரியுஞ்
சிந்தவெண்டிசாமுகமுமண்டமுஞ்செவிடுபட்டிடச்சிலைவணக்கினார். (ருகா)

செல்வணக்கிமேல்கிழெனும்பெருந்திசையிரண்டினுந்திகழும்விற்கள்போல்
வில்வணக்கியவ்விருவரும்பொரும்வெஞ்சமத்தில்வினையுரத்தினு
மல்வணக்குதோளினுமிலக்கிலாவாளிபெய்தொறெளியாகவே
கல்வணக்கெழுப்புரமெரித்தமுக்கண்ணினன்வலக்கண்ணளித்துளான். (சாO)

வலக்கணனசெஞ்சுடரிடக்கணும்வாகுவுந்துடித்தாகுலத்துடன்
கலக்கணீர்பொழிநதினையும்வேலையிற்கனற்படும்புனிற்றடியடுக்கனைக்
கிலக்கணந்தவாவீமன்வாளியீரிரண்டுநாலிரண்டெண்ணிரண்டினு
லிலக்கணைய்தவெப்தனனுதாரிதனணிகணீடுதேராகமெங்குமே. (சாக)

வேதமாகிநின்றவனையெய்தபோர்வில்விமுன்னவன்சல்லியன்றனொ
டோதினானிவற்கெம்பிவஞ்சினமொழியுமென்றுகொண்டுயிர்வழங்கினேன்
சூதனாகிநீவந்துதேர்விடுந்தொலைவிலாதபோர்வலியையன்றியே
யாதுகூறலாம்வன்மையின்மைதான்யாதெனாவிமைப்போதிலேகினான். (சுஉ)

வேறு.

அங்கர்குலநரபாலனும்வாழ்வுடையங்கர்களுருபுணைசாய்தரவூழியின்
மங்குநிகர்பலகோல்விடுவீமனுமைந்தரனைவருமாறடுகாலையில்
வெங்கைவரிசிலைகால்பொரயாரினும்விஞ்சுதிறல்விடசேனனெனாவரு
செங்கணவன்வசுதேவன்முனாளருள்சிங்கவரசிளையானெடுசீறியே. (சுங)

திண்சிலையினெடுநாணொலியோடணிசிஞ்சிதமுமெழமாவிளையோனிணை
வண்புயமும்வியன்மார்பமுமூடுறவன்புபெறுபலவாளிகளேவலு
நண்பொடவணிவனேறியதேர்கொடிநன்புரவிகுடைபாகிவைவீழ்தர
வொண்பிறையின்முகமானசிலீமுகமொன்பதுதையினன்வாகுவுமார்புமே. (சுச)

குன்றிலருவிகள்போன்மததாரைகள்கொண்டகடதடவாரணமாமிசை
சென்றுசிலகணையேவினரோரிருசிந்துகிரணதிவாகரராமென
வின்றுவயனுமுவீர்புதுநீர்வருமென்றுவரிமணலேகுறிகூறிட
வன்றுவருகுடகாவிரிநாடனுமம்பொனவரிகழன்மாகதர்கோவுமே. (சுரு)

கங்கைநதியிடைவேயொடுபாகடர்கம்பநிகளமதாசலநீரணை
வங்கமறிகடல்சூழெழுபார்வலம்வந்தமனுகுலசோழனைமாகத
னங்கணையரிளமாமுலைதோய்புயமந்திவெயினிகர்சோரியின்மூழ்குற
வெங்கணழலுதிராவதிராவெதிர்மின்கொலெனவிணைவாளிகளேவவே. (சுசு)

வஞ்சிமதுரைபுகாருடையான்வடமண்டலிகர்திறைவாரியநேரியன்
விஞ்சிமுனைதொறும்வாளசுரேசரைவென்றபொழுதடல்வானவர்கோனரு
ணஞ்சுபொழியெரிகாலொருகோல்கொடுநம்பர்சிலைமலைபோலவனேறிய
குஞ்சரமும்விழமாகதர்கோனுயிர்கொண்டுதிருகினன்வார்சிலைகோலியே. (சுஎ)

அண்டர்குலபதியாம்விடைவாகனனம்பொன்முடிமலர்நாறிடுதாளின
னெண்டிசையுமனுநீதிசெய்கோலினனெங்குமொருகுடையாவிடுநீழலன்
மண்டுகிரணசிகாமணிமோலியன்வண்டுமதுநுகர்தாதகிமாலையன்
மிண்டுமுதுபுலியேறுபதாகையன்வென்றிவளவனையார்நிகர்வீரரே. (சுஅ)

வேறு.

யாதேவலென்றுபலமன்னருமீண்டவிப்பார்
மீதேவல்கொள்ளும்விறற்சென்னிகைவில்லின்வன்பாண்
மோதேவுபட்டுமுகமாறிமகதர்கோமான்
சாதேவன்வீழவுதிட்டதுதானைவெள்ளம். (சுகூ)

புறமிட்டதானைநிலைகண்டுபொருதுசோதி
நிறமிட்டவிற்கைத்துரோணன்மகனெஞ்சுகன்றி
மறமிட்டவாளிபலதூவிவருதனைக்கி
யறமிட்டசிந்தையாசன்றனைநாசர்தம்பில். (எ0)

இன்றேமுடிப்பன்வினையென்றிரண்டிந்திரநீலக்
குன்றேநிகர்ப்பத்திருமாலொடுங்கூடிநிற்பான்
சென்றேயதிரப்பரித்தாமனைச்செங்கையம்பால்
வென்றேயிமைப்பின்வெறுங்காலினின்மீளவிட்டான். (௭௧)

துரியோதனன்றனிளையோரிற்சுதக்கணப்பேர்ப்
பெரியோன்முறிந்தபெருஞ்சேனைபின்பின்புநின்றான்
பரியோடுமான்றேர்ப்பராப்போடும்பதாதியோடுங்
கரியோடுமூழிக்கனலென்னக்கனன்றுவந்தான். (௭௨)

முகிலின்சிலையிற்சிலைகோலிமுனைகொளம்பு
பெருகலந்தொடுத்துவருகாளைப்பெட்பினோக்கி
நகுலன்சிறிதுநகைசெய்துநகைசெய்வாளி
யகலந்தொடுத்தாங்கவன்றன்னையுமஞ்சுவித்தான். (௭௩)

மட்டுப்படாமல்வருதெவ்வர்மலையினின்றே
தட்டுப்படாதின்றெமரானவர்தானையென்றுப்
பட்டுப்படாதவடிவேனரபாலர்சூழ
முட்டுப்படாதமுரட்கன்னன்முனைந்துசென்றான். (௭௪)

பாஞ்சாலரிற்கேகயரிற்பலபாடைமாக்க
ளாஞ்சார்பினில்வந்தடைந்தோர்களிலன்றுபோரின்
மாஞ்சாரொழிந்தபலமன்னருஞ்சூழவண்டு
பூஞ்சாறருந்துநறுந்தாமம்புனைந்ததோளான். (௭௫)

மன்னன்றருமன்றிருமைந்தன்மலையவந்த
கன்னன்கருத்துங்கடுஞ்சேனையுங்கண்டுமேற்போய்ப்
பொன்னம்பொருப்போரிரண்டென்னவெம்பூசல்செய்தா
ரின்னந்தமக்குத்தகையன்றியெதிரிலாதார். (௭௬)

உதையன்புதல்வன்பெருஞ்சேனையுதிட்டிரன்கைக்
குதையம்பில்வீழ்ந்தாரினையோரெனக்கூறநேற்று
ரிதையம்பழுதிவிவனசேனையவன்கையம்பா
லுதையுண்டுவீழ்ந்தாருரைத்தாலுமுரைக்கலாற்றார். (௭௭)

பொற்பூசலென்னவிருசேனையும்போரின்மீண்டு
மற்பூசல்செய்யவொளிசெய்புமமன்னர்தம்மின்
முற்பூசலம்பிற்பிளந்தண்டமுகடுவிள்ள
விற்பூசலெய்திப்புரிந்தார்விலின்வேதம்வல்லார். (௭௮)

கொலையம்புமாளாமணியாவமுங்கொண்டசெங்கைச்
சிலையுங்கிரிகளிரண்டென்னத்திரண்டதோளு
நிலையுங்குறிப்புஞ்சிறுநாணொலிநின்றவாறு
மலையுந்திறலும்புகழ்ந்தண்டரும்வாழ்த்தினரே. (௭௯)

தாழுங்குறித்துக்கரைசெய்யுந்தரங்கவேலை
யாழும்புராசியெழுபார்தனியாளநிற்போன்
சூழும்பொன்மாலைத்துணைத்தோள்களினெட்டுமார்பி
னேழும்புமெய்தானிருள்சாயுமிரவிமைந்தன். (அ0.

தன்றேருமார்புஞ்சரமூழ்கவெஞ்சாபம்வாங்கி
நின்றேனைவாய்மைநிலைநின்றநிருபரேறும்
வன்றேருறநாண்வலித்தோரிருவாளியேவிச்
சென்றேரிமைப்பிற்சிலையுந்திறலம்பும்வீழ்த்தான். (அக)

வேறோர்வரிவில்வெயிலோன்மகன்வெய்தின்வாங்கி
நூறோடுநூறுதொடுத்தேவுநுதிகொளம்பாற்
கூறோரிரண்டுபடயாரையுங்கொன்றபோழ்தி
னூறோடிவிட்டதடையாருடலற்றசோரி. (அஉ)

சாதேவன்றண்டதரன்றண்டகன்சித்திரதேவன்
றீதேதுமில்லாத்திறற்சாத்தகிசித்திரகீர்த்தி
தாதேறுதார்த்தம்பியரோடிகற்றண்டநாதன்
மீதேறுதேருந்தகர்ந்தொண்சுடர்வில்லுமற்றார். அங)

முன்சேனையோடும்வலியுற்றுமுனைந்துகொற்ற
மன்சேனைநாதன்பொழிவாளிமழையின்மூழ்கித்
தன்சேனைநாதன்முதல்யாருந்தளர்தல்கண்டு
நன்சேனைநாளுமுடன்சூழநடக்கலுற்றான். (அச)

வேறு.

கிருபனென்றெண்டிசையும்வரிசிலைக்குரைசெய்முனிகிருதவன்மன்சிந்தைவிரகு
டைச்சகுனியெனு, நிருபாங்கங்கடொறுநிரையினிற்றளையுநவநெடியவம்பைம்பதறுப
துபடப்படமுடுகி, முரண்மிகுந்திண்கடவுண்முரசுடைக்கொடிகொளணிமுகிலின்வந்
தண்டர்குலமுதல்வனத்தனுவினொடு, தரணியின்கண்சமரமலைவதொத்திரதமிசைதரு
மன்மைந்தன்பரிதிபுதல்வனைக்குறுகினனே. (அரு)

தருமன்மைந்தன்பரிதிபுதல்வனைக்குறுகியிருசரமவன்செங்கைவரிசிலைதுணித்தி
டவுமெகி, யிருசரந்துன்றியுயர்கொடியறுத்திடவுமுடனிருசரஞ்சென்றுதனியிரதமொட்
டிடறிடவு, மொருசரம்பொங்குதிறலவலவன்மெய்ப்புதைதரவுமொருசரந்திண்கவனது
ரகதத்துரானுறவும், வரமிகுந்துங்கதனுவினைவளைத்தெரிகொள்சிலவடிசரங்கொண்டவ
னதிருபுயத்தெழுதினனே. (அசு)

வடிசரங்கொண்டவனதிருபுயத்தெழுதியபின்வடகலிங்கக்குருமகதமொட்டியமு
தல, படிதொறுந்தங்கள்குடைநிழல்பரப்பியவரசர்பலருடன்பைம்பொன்முடிமகுடவர்த்
தனர்பலரு, மிடிமுழக்குங்குரலினதிபயத்தொடுபிலனிலிழிபுயங்கங்களெனவொருவரு
க்கொருவர்நடை, யடிதளர்ந்தஞ்சலியுமுதுகுமிட்டவரொழியவடையவன்றும்பர்பதிகு
டிபுகப்பொருதனனே. (அஎ)

அடையவன் றும்பர்பதிகுடிபுகப்பொருது தன தணிகொள்சங்கம்பவளவிதழின் வைத்தருளுதலு, முடையுமண்டத்திசைகள்செவிடுபட்டிடும்மொருலகுபொன் றும்பணிகள்பிலழுமுற்றுறவிடிய, மிடைவழங்குந்தரணிவளர்சனத்தொடுமடியுமெனமுழங்கும் பெரியவரவமெக்கடலுமெழு, கடையுகங்கண்டவடவையின்முகத்தெரிகனலிக துவிமண் டும்பவனனொலியினிற்கடுகியதே. (௮௮)

கதுவிமண்டும்பவனனொலியினிற்கடுகியணிகவசமுங்குண்டலமுமகபதிக்கருள்கு ரிசில், சதுர்முகங்கொண்டதொருகனகமொட்டிரதமொடுசதுர்விதந்தங்குகதியிவுளி யொப்பறவடசி, மதுபமொனறும்புதியதெரியன்மத்திரநிருபவலவனுந்தும்பொழுதில தனின்மிக்கெழுமடிய, மதிரவெங்குந்தனதுவலைமுழக்கினினயாவறனின்மைந்தன்சமர முனைமுகத்தணுகினனே. (௮௯)

அறனின்மைந்தன்சமரமுனைமுகத்தணுகியவனகலமுந்திண்புயமும்வடிசுடர்ப்ப கழிபல, வுறவுமஞ்சங்கண்முடியுருளையற்றிரதநடுவுடையவுந் துங்கவரிசிலைகுணத்துட னறவு, மறம்விளங்கும்பரிகடுணிகள்பட்டிடவும்விறல்வலவனங்கஞ்சிதறியுரனிலுற்றன முதுகு, பறியவுந்தண்டுமுரசெழுதுபொற்றுகிலினெடும்பரியவுஞ்சண்டதனுவுறவளைத் தனனிவனே. (௯0)

வேறு.

இவனுமவனைப்புயமுமுரமுமுமுகத்துவசமிடியபயமணிமொட்டிரதமொடியவரிவிற் றுணிய, நவநடைவயப்புரவிவிறல்வலவன்மெய்ப்புதையநகுசரநிரைத்தொருவினடுவுறவ ணக்கினபி, னவனுமிவனைப்பொருதுமுனமிவனைமலைத்தபடியடையவுமழித்தனனிவ்வ டன்மிகுகளத்திலென, வுபநிடதவித்துமுதலவனிபரெனைப்பலருமுராமுமவர்கற்றகலையு றுதியுமுரைத்தனரே. (௯௧)

உறுதியுடன்மற்றொரதமிசைகொளுமுதிட்டிரனுமொருகையில்வயச்சிலையுமொரு கையில்வடிக்கணையும், விறலினொடெடுத்தெதிர்செல்பொழுதருண்மிதுத்தமொழிவெயி லவனளித்தருளும்விதரணகுணக்குரிசின், மறமுறவிடுத்தகணைபொடியுறவியற்றியவன் மதுமலருரத்தைவழிவழிதுளைபடுத்துதவி, னெறிபடைவிடுத்திரதமிசையுறவிளைத்து முதுகிடவறன்மகற்கிரவிமகனிவையுரைத்தனனே. (௯௨)

உரையுடையைகற்றகலையுணர்வுடையைதக்கமதியுளமுடையைமிக்ககிளையுறவுடை யைசத்தியகுண, வரையுடையையெத்திசையும்வழுவறவளர்த்தபுகழ்வரிசைகொளறத் திளைஞர்வழிபடுமதிப்புடையை, தரைமுழுதுமுத்தநிலவுமிழ்குடைநிழற்றவொருதனி நனிபுரக்குமுயர்தலைமைபெறுகிற்றிபகை, கரையழியவுற்றபொழுதுயிர்கொடுபுறக்கிடு தல்கடனலவுனக்குநிலைகருதியணிநிற்றியென. (௯௩)

கருதியணிநிற்றியெனவுறுதிசமரத்துரைசெய்கருணனைமதித்துமிகுகருணையவ னிற்பளவில், விருதர்தலையற்றுருளவிருதர்மதவத்திகளின்விரிதலைகளற்றுருளவிறலிவு ளிமெய்த்துணிய, விரதம்வயிரச்சுருளைமுடிகொடலையற்றுருளவிருபுறமுமுட்டிவிறலொ ருகதைகொடெற்றியெதிர், பொருசமர்முருக்கிவருபுரையில்பவனக்கடவுள்புதல்வனெ ரிமைப்பொழுதின்முதல்வனையடுத்தனனே. (௯௪)

வேறு.

முதல்வன்வெந்நிடுதல்கண்டுமுடியுடைவேந்தரோடும்
விதலையில்வயிரநெஞ்சின்வீமன்வந்துறலுங்காவின்
புதல்வனைப்பொருதுவேறலரிதெனப்பொலம்பொற்றேரோன்
மதலையைநோக்கிப்பாகன்வன்பகைதோன்றச்சொன்னான். (௬௫)

காமனேயென்னநின்றகன்னன்விற்கையில்வாங்கி
வீமனேயாகவென்றிவிசயனேயாகவெற்றித்
தாமனேகாண்டியிற்றைச்சமரிலென்றழல்வாயொற்றைத்
தூமநேர்பகழிகாற்றூர்தூண்டுதியிரதமென்றான். (௬௬)

என்றுமுன்மருத்தின்மைந்தனிரதமேல்வரிவில்வாங்கிக்
கன்னனதுரையும்வில்லுங்கணத்திடைச்சிதைந்துவீழ
முன்னொருவாளிதொட்டானெதிரியுமுரண்விலொன்றாற்
பன்னிருவாளிமீளிமார்பிடைப்பரப்பினானே. (௬௭)

பாய்ந்தவப்பாணந்தன்னைப்பாணியாற்றிமிர்ந்துவீமன்
காய்ந்தவாளனையதாரைக்கடுங்கொடும்பகழியொன்று
லேய்ந்ததேருக்கன்மைந்தனிதயத்தழுழ்குவித்தான்
வேய்ந்ததாரவனுந்தேரின்மிசையயர்வுற்றுவீழ்ந்தான். (௬௮)

வீழ்தலுமன்னர்மன்னன்வெட்படைவெந்நிட்டோட
வாழ்வறவீழ்ந்தோன்றன்னைமத்திரத்தலைவன்றேற்ற
வேழ்பரித்தேரோன்மைந்தனெழுந்துபின்சாபம்வாங்கிச்
சூழ்படைவீரர்யாருந்துஞ்சிடத்துணித்திட்டானே. (௬௯)

கைத்தலவண்மைவேந்தன்கார்முகம்பொழிந்தவம்பா
லெத்தனைநிருபர்மாய்ந்தாரெண்ணுதற்கியாவர்வல்லார்
பத்திகொள்சாதுரங்கப்படைஞர்பாஞ்சாலர்தம்மிற்
செத்தனரெழுவர்சிங்கசேனனையுள்ளிட்டாரே. (௱)

சேனையுமுறிந்துவீமசேனனுமுதுகிட்டோடக்
கானமர்துளவோன்கண்டுகடும்பரிநெடுந்தேர்தூண்ட
யானைமேற்சிங்கஞ்செல்வதென்னவந்தெய்திட்டான்
வானவர்க்கரசன்மைந்தன்மைந்துடைவரிவில்லோனே. (௱௧)

சென்றவன்சேனைதன்னினிருபருஞ்செருச்செய்கிற்பா
னின்றவன்சேனைதன்னினிருபருநேர்ந்தகாலை
யென்றவன்மதலையேவுமிமையவர்தெவ்வையோட
வென்றவனேவுந்தம்மில்விசும்பிணைவேய்ந்தவாலோ. (௱௨)

இரவிதன்மதலைக்காகவிமைத்தகண்விழிக்குமுன்னர்ப்
புரவியந்தாமாவென்னும்பூசுரன்றேரிற்றோன்றி
யரவணைச்செல்வன்மெய்யுமருச்சுனன்மெய்யுஞ்செக்கர்
விரவியவானமென்னவெஞ்சரம்புதைவித்தானே. (௱௩)

விசயனும்வெகுளூற்றந்தவேதியன்வில்லுந்தேரு
மசைவுறமுடுகியெய்தானவனுமற்றிவனைவேறோர்
குசையுடைப்புரவித்தேருங்குனிவருஞ்சிலையுங்கொண்டு
நிசியினையருக்கன்போலநிலைதளர்ந்திடுவித்தானே. (௧௦௪)

தளர்ந்தவத்தளர்ச்சிகண்டுதனஞ்சயன்றன்னைத்தேற்றிக்
கிளர்ந்தடர்புரவித்தாமாக்கேவலமல்லனையா
பிளந்திடுங்கிவனையென்னப்பிறைமுகப்பகழியொன்று
உளம்புகத்தொடுத்தான்பாகனுரைமுடிவதன்முனம்மா. (௧௦௫)

எய்தவப்பகழியொன்றுலீசன்மாமதலைமாழ்கி
வெய்துயிர்த்திரதமீதுவீழ்ந்தனன்வீழ்ந்தோன்றன்னைக்
கைதவச்செயலினுன்றுச்சாதனன்கண்டுமுன்னைச்
செய்தவப்பயன்போல்வந்துதேரொடுங்கொண்டுபோனான். (௧௦௬)

போனவப்புரவித்தாமாப்புரிந்துபோர்தொடங்குமெல்லைச்
சேனைகணன்கினோடுஞ்சித்திரவாகனென்னு
மீனவன்வழுதிமாறன்வெண்மதிமரபில்வந்தோன்
வானவர்முதல்வன்சென்னிவரிவளையுடைத்துமீண்டோன். (௧௦௭)

சென்றெதிருன்றிவெவ்வேற்சேயனன்றேரின்மேலும்
வன்றிறல்வலவன்மேலும்வாட்பரிமாவின்மேலுந்
துன்றியகணைகளேவித்தொடுசிலைதுணித்துவீழ்த்தா
னன்றவன்செய்தவீரமாசரிலார்செய்தாரே. (௧௦௮)

வேறொருதேர்மேற்கொண்டுவிதிதருமாபினேனுஞ்
சீறிவெங்கணைகளூறுதெரிந்தொருசிலையும்வாங்கிக்
கூறியசெஞ்சொலேடுகுறித்தெதிர்கொண்டவைகை
யாறுடையவனையஞ்சவருஞ்சமருடற்றினானே. (௧௦௯)

அந்தணனேவையெல்லாமவனிபனவ்வவம்பான்
முந்துறவிலக்கித்தங்கண்மூவகைத்தமிழ்போலச்
சிந்தையிற்குளிக்குமாறுசிலீமுகமூன்றுவிட்டான்
றந்தையைமுதுகுகண்டோன்றனயனுக்கிளைக்குமோதான். (௧௧௦)

காலினாற்றுகைத்துவேலைக்கணைகடலேழுமுன்னாள்
வேலினாற்சுவற்றுங்கொற்றவெங்கடல்விலோதவீரன்
மாலினாற்பொருகைவேழம்வாசிதேர்பதாதிமாயக்
கோலினாற்சுவற்றினனக்குறுகலார்சேனைவெள்ளம். (௧௧௧)

சங்கரனருளால்வந்தசதுர்மறைக்கமரன்மீளப்
பொங்கழற்கடவுளென்னப்பொருசிலைவெய்தின்வாங்கி
மங்குல்போற்பொழியும்வாளிமழையினாலழித்ததந்தோ
செங்கயனெடும்புதாகைத்தென்னவன்செம்பொற்றேரே. (௧௧௨)

சிங்கவேறனையானந்தத்தேரினின்றிழிந்துமுன்னந்
தங்கண்மால்வரையில்வைகுந்தமிழ் முனிதன்னைப்போலப்
பொங்குவெண்டரங்கமுந்நீர்ப்புணரிகளேழுஞ்சோ
வெங்கையால்வாருங்கொற்றவேழமாமேற்கொண்டானே. (௧௧௩)

மலையினிற்பிறந்தவாரமணங்கமழ்வடிவிற்றங்க
ளலையினிற்பிறந்தவாரமழகுறவணிந்தகோமான்
கொலையினிற்சிறந்தகோட்டுக்குஞ்சரங்கொண்டுமீண்டுஞ்
சிலையினிற்குருவின்மைந்தன்றேரொடுஞ்செருச்செய்தானே. (௧௧௪)

மோதிமத்தாரைமாறுக்கைம்முகமுழுத்தசெக்கர்ச்
சோதிமத்தகவெங்குன்றின்றழைசெவித்துளங்குகாற்றுற்
சாதிமைத்துரோணன்மைந்தன்றனித்தடந்தேரிற்கொற்ற
வோதிமப்பதாகையாடையப்புறத்தொடுங்கிற்றம்மா. (௧௧௫)

கூற்றெனக்கொண்டலென்னக்குரைகடலென்னச்சூறைக்
காற்றெனக்கொடியகோபக்கடும்பெருங்கடமாவி
னாற்றெழுமதங்களேழுமொழுகிமண்ணுடைந்துதாழுஞ்
சேற்றிடைப்புதைந்ததந்தச்சேயனுன்றேரின்காலே. (௧௧௬

மறையவன்செம்பொற்றேரைவளைந்துமண்டலங்களோட்டிப்
பிறைமுகக்கணையாலந்தண்பிறைக்குலவழுதியெய்ய
நிறைவயப்புரவித்தாமநேருறவிலக்கித்தன்கை
யறைசிறைப்பகழியொன்றாலானையைவீழ்வித்தானே. (௧௧௭)

பாண்டியன்கைவில்லோடும்பதாதியாய்ப்பகழிசிந்தி
யீண்டியவிவுளித்தாமணிருதடந்தோளுமார்பும்
வேண்டியவாறுசோரிவீழ்தரப்பொருதபின்னர்த்
தூண்டியதுரோணன்மைந்தன்றுடையொன்றுற்றுணும்வீழ்ந்தான். ()

பட்டனன்முனிவன்கையிற்பஞ்சவனென்றுவேந்தர்
கெட்டனர்முரசந்தீட்டுங்கேதனன்சேனையுள்ளார்
தொட்டனர்வரிவில்வாளிதொடுத்தனரடுத்துமேன்மேல்
விட்டனர்வேந்தர்வேந்தன்சேனையில்வேந்தருள்ளார். (௧௧௯)

வேறு.

விற்கையாரியன்மகன்விசும்பின்வீழ்தரு
முற்கையாமெனவிடுமொளிகொள்வாளியாற்
கொற்கையானிறந்தபின்கோழியானெனுஞ்
சொற்கையாமனுகுலத்தோன்றறுன்றினன். (௧௨0)

தேரின்மேனின்றுநீசிறுகட்செம்புகர்க்
காரின்மேல்வீரனைக்கணையிற்காய்வதே
பாரின்மேலார்கொலிப்பாதகஞ்செய்தார்
நீரின்மேலெழுத்தெனநிலையிலாண்மையாய். (௧௨௧)

ஆர்ப்பனமறைமொழிந்தனைவர்யாவருந்
தீர்ப்பனவேள்விகள்செய்வதன்றியே
கூர்ப்பனபலபடைகொண்டுபோர்செயப்
பார்ப்பனமாக்களும்பாரின்வல்லரோ. (கஉஉ)

தாதையைக்கொன்றவெஞ்சாபவீரனைக்
கோதைவிற்கணைகளாற்கொன்றிலாதநீ
பூதைதழற்சருகுபோலோடலல்லதை
மோதயிற்படைகொடுமுனையவல்லையோ. (கஉங)

என்றுமின்மொழிமொழிந்திவுளித்தாமன்மேற்
றுன்றுவில்வளைத்தனன்சோழபூபதி
குன்றுடன்குன்றமர்குறிக்குமாறுபோற்
சென்றுசென்றடுத்தனதேருந்தேருமே. (கஉச)

இருவர்செங்கரங்களுமிரண்டுகால்களு
மூாறுறப்பிணித்தநாணோசைவீசவு
மருவுபொற்றோளுறவலியின்வாங்கவும்
விரைவுடன்வளைந்தனவில்லும்வில்லுமே. (கஉரு)

புகலருமறையவன்புராரியாதியாந்
நிகழொளியிமையவர்சிறப்பினீந்தன
விகன்முனைமுனையுறவெதிர்ந்துதள்ளவே
யகல்வெளிபுதைத்தனவம்புமம்புமே. (கஉசு)

சாருலகெய்தியதுரோணன்மைந்தனை
யிருகணைபுயத்தினுமிரண்டுமார்பினு
மொருகணைநுதலினுமுருவவேவினான்
மருவிரிதாதகிவாசமாலையான். (கஉஎ)

பிறைமுடிச்சடையவன்பிள்ளைவள்ளுகிர்
விறலுடைப்புலிக்கொடிவீரன்மெய்யெலாம்
புறவினுக்கரிந்தநாட்போலமேல்விடுந்
திறலுடைவாளியாற்சிவப்பித்தானரோ. (கஉஅ)

துளவணிமுடியவன்றுள்ளுகன்றினால்
விளவினையெறிந்தெனவீரவேலினால்
வளவனும்வெருண்டுபின்மயூரவாகன
னிளவலையெறிந்தனனெவருமஞ்சவே. (கஉகூ)

உருத்திரன்றுதவினுற்பவித்தவக்
கருத்துடைமுனிவன்மெய்கலங்கிவீழ்தலுந்
திருத்தகுசகுனியுஞ்சிற்சில்வேந்தரும்
வருத்தமோடெடுத்தவன்வருத்தமாற்றினார். (கஙO)

அவனொடுமீளவந்தபயன்றனொடு
கவனமான்றேருடைக்காவன்மன்னவர்
சிவனொடுமமர்பொருந்தெவ்வரென்னவே
துவனிசெய்முரசெழத்துன்றுபோர்செய்தார். (௧௫௧)

துன்மருடணன்மகன்சுவாகுதுன்முகன்
வின்மகன்சுவாதுவாள்வெயில்விபாகரன்
றன்மகன்றிருமகன்சங்கனென்பவர்
மன்மகார்பலரொடுமடிந்துவீழவே. (௧௫௨)

பண்ணகவிசையளிபாடுதண்டலைக்
கண்ணகன்காவிரிநாடன்கைக்கணை
மண்ணகநெருக்குறமலைந்தமன்னரை
விண்ணகமிடனறவிரைவினேற்றவே. (௧௫௩)

முன்னியசிலைமறைமுனிவன்மைந்தனுந்
தன்னிகரிலாவிறற்சகுனியாதியாத்
துன்னியநிருபருந்தொல்லமர்க்குநீ
சென்னியென்றவன்புகழ்செப்பிமீளவே. (௧௫௪)

வேறு.

சோனாமேகம்பொழிவதுபோற்றுச்சாதனனுந்தம்பியரும்
வானாடேறவழிதேடிவருவார்போலவெருவாமன்
மேனாண்மொழிந்தவஞ்சினங்கண்முடிப்பானின்றவீமனெதி
ரானாவாளிமழைதூவியடல்வெஞ்சிலையோடடுத்தாரே. (௧௫௫)

உருத்தின்றரசரைவரையுமுடனேகொல்வனெனவெண்ணிக்
கருத்தின்படியேவிரைந்தோடுங்கவனப்புரவிக்காற்றேரிற்
செருத்திண்பணைகண்முழங்கவருசெங்கோன்மன்னற்கிளையோனை
மருத்தின்புதல்வன்கண்டுமழைமுகில்போலெதிர்வாய்மலர்ந்தானே. (௧௫௬)

துச்சாதனனேயுனைப்போலுஞ்சூரருளரோசூரரெலா
மெச்சாநின்றார்வேத்தவையின்மேனாணீசெய்விறலாண்மை
யச்சாரிரதப்போர்க்குமுனக்கார்வேறெதிருண்டம்மவிரைந்
திச்சாபோகமாகவிருந்தின்றேமறவிக்கிடுநாளே. (௧௫௭)

இன்றேவுன்றன்சென்னிதுணித்திழிசெம்புனலிற்குளித்திடுநா
ளின்றேவழலினூற்பவித்தாளிருளாரளகமுடித்திடுநா
ளின்றேதாகங்கெடநாவுக்கிசைந்ததண்ணீர்பருகிடுநா
ளின்றேவுரைத்தவஞ்சினங்களெல்லாம்பயன்பெற்றிடுநாளே. (௧௫௮)

வென்றேயவனிமுழுதாளும்வீரோதயனின்றம்முனையுங்
கொன்றேநாளையமரெதிர்கொள்ளக்கடிதின்வரவிடுவ
னின்றேநீபோயிடம்பிடிப்பாயெண்ணாவெண்ணமெணிமன்றி
லன்றேகலகம்விளைத்தென்றுமழியாவரசையழித்தோனே. (௧௫௯)

வீமன்கருத்தோடிவைமொழியவேறுத்தரமற்றொன்றின்றி
யூமன்றனைப்போலவனிற்கவுடனேயிளையோரோனபதின்மர்
நாமம்பெறுகோலோரொருவர்நாலாககடந்தவழி
தூமங்கிளரவொருகணைத்திற்றொடுத்தாரெதிர்வந்தடுத்தாரே. (௧௪௦)

தொடுத்தார்தொடுத்தகணையனைத்துஞ்சூரன்றானுந்தன்கணையாற்
றடுத்தான்மீளவோரொருவர்க்கோரோர்பகழிதனுவாங்கி
விடுத்தானவருமிரதமிசைவீழ்ந்தார்வீழ்ந்தவீரரைவந்
தடுத்தார்விரைவிலகல்வானத்தழகார்காதலரம்பையரே. (௧௪௧)

உயிர்க்காருயிராந்தம்பியர்களோரோரொன்பதின்மர்வீமன்கைச்
செயிர்க்காய்கணையாற்சிரந்துணிந்துதேர்மேல்வீழச்சினங்கதுவிப்
பயிர்க்காமாரிபொழிந்துவருபருவப்புயல்போற்பாவனனை
மயிர்க்காறொறுமம்பினஞ்சொருகமன்னற்கிளையோன்மலைந்தானே. (௧௪௨)

தன்மேலுரககேதனனுக்கிளையோன்றொடுத்தசரங்களெல்லாங்
கன்மேன்மேகத்துளியென்னக்காய்ந்தானவற்றைக்கடிதுதறி
மண்மேற்கொண்டபுயமுறவில்வாங்கிக்கொடும்போர்வாளிபல
மென்மேலெய்தானெதிர்ப்பட்டால்விடுமோபின்னைவிறல்வீமன். (௧௪௩)

தூவாநின்றவேவனைத்துந்துச்சாதனன்றன்றொடைபிழைபா
வேவால்விலக்கியேழுகணையெய்தானெய்தகணையேழு
மாவானவற்றின்றலைநான்குமடங்கற்கொடியுமணித்தேரு
மேவாநிருபன்மலர்த்தடக்கைவில்லுந்துணித்துவீழ்த்தனவே. (௧௪௪)

இத்தேரழியவேறொருதேரேறிப்பாவையிடைச்சூழன்ற
மத்தேயனையான்சிலைவாங்கிமன்னற்கிளையவயமீளி
யத்தேரழிபக்கொடிவலவன்வயமாவனைத்துமற்றுவிழப்
பத்தேயெய்தாங்கிணைவாளிபகைவன்புயத்திற்படவெய்தான். (௧௪௫)

காரிற்கரியகுழற்றுண்டிக்கலைபன்றுரிந்தகழற்காளை
பாரிற்குதித்தோரதிபாரப்பைம்பொற்கதையாற்பாவனன்றன்
றேரிற்புடைக்கத்தேர்சிதைந்துசிந்திற்றவனுஞ்சிலைமாற்றிப்
போரிற்சிறந்ததண்டமுடன்புவிமேற்பாய்ந்தான்புலிபோல்வான். (௧௪௬)

வேறு.

இருவரும்புயங்களினப்பிமொத்தினரிகல்புரிந்துதண்டுறகப்பிடித்தனர்
மருவியொன்றொடொன்றனல்கக்கமொத்தினர்வலமிடங்கொண்மண்டலமுறப்பயிற்றின
ரருகுசென்றுசென்றடிவைத்தடுத்தனரகலநின்றுநினைறெரிமைப்பின்முட்டினர்
திருகுவெஞ்சினத்திடியொத்துரப்பினர்திசையின்மண்டிபக்கிரிசத்தமிட்டவே. (௧௪௭)

வெகுளிகொண்டுகொண்டெதிர்கொக்கரித்தனர்விசையுடன்சினந்துயரக்குதித்தன
ருகவைவிஞ்சவெங்கதையைச்சுழற்றினருயர்விசும்பெறிந்தொருகைப்பிடித்தனர்
முகமலர்ந்துநின்றதிரச்சிரித்தனர்முதிர்வஞ்சினம்பலகட்டுரைத்தனர்
மகிபர்கண்டகண்டவர்சித்தமுட்கிடவரையிரண்டுவெஞ்சமர்கற்பதொக்கவே. (௧௪௮)

இகலிவெங்கொடுங்கதைபொத்துமொத்தொலியிடியின்வெங்கடுங்குரலொத்தொலித்தன
மகிதலம்பிளந்தது சர்ப்பவர்க்கமும்வயிறழன்றுநஞ்சுகள்கக்கியிட்டன
திகிரியந்தடங்கிரிபக்குநெக்கது செவிடுகொண்டயர்ந்தன திக்கயக்குல
முகடுவிண்டதண்டமுமப்புறத்துறமுகில்களும்பெருங்குகைபுக்கொளித்தவே. (௧௪௯)

விழிகளுஞ்சிவந்தனநெற்றியிற்பொறிவெயர்வுவந்தரும்பினவிப்பிழுத்தென
மொழிகளுங்கிளம்பினநெட்டிடிப்பெனமுரிமுரிந்தவண்புருவச்சிலைத்துணை
யெழிலுடன்பரந்திறுகித்தடித்தனவிமையமந்தரங்களொடொத்தபொற்புய
மழியுமங்கமென்றுருசற்றிளைத்திலரமரிலன்றருங்கதையிட்டடிக்கவே. (௧௫0)

எதிர்மலைந்தவெஞ்சமரிப்படிக்கிவரிரிதலின்றிமொய்ம்புறவுத்தரிக்கவு
மூதரநெஞ்சுரம்புயமெய்க்கழுத்தெனவுரைசெயங்கமொன்றினுமூற்றுறைத்தில
கதைகளும்பிளந்தொடிபட்டெடுத்தனகரதலங்களுங்கருகிச்சிவந்தன
முதிர்சினங்கொளுந்தலின்முற்றும்விட்டிலர்முரணுடன்றொடங்கினர்முட்டியுத்தமே. ()

விரல்களைந்தையுஞ்செறியக்குவித்தொளிமிகுநகம்புதைந்திடவுட்புதைத்திரு
கரதலங்களுஞ்சிகரப்பொருப்பிடைகரியகொண்டன்மண்டுருமொத்திடித்திட
வருளுடன்சிறந்தறனுற்றகொற்றவனநுசனுந்தயங்குரகத்தனிக்கொடி
நிருபர்தம்பெருந்தகைமுற்கனிட்டனுநினைவுடன்கலந்தெதிர்குத்தியிட்டபின். (௧௫௨)

அனிலன்மைந்தனென்றுரைபெற்றகொற்றவனரசன்முந்துதம்பியைமத்தகத்திடை
கனல்கொளுந்தவந்ததிரத்தகர்த்திருகவுணெரிந்துவண்செவியுட்கரக்கவு
மூளைசிதைந்துரம்பெறுபற்றெறிக்கவுமொழிகளுந்தளர்ந்தனமுற்றொளிக்கவு
மினலினுஞ்சிவந்தொளிமிக்கவற்புதவிழிபிதுங்கவும்பெருகக்கலக்கியே. (௧௫௩)

பதயுகங்களங்குலிதொட்டுறுப்புளபலவுமென்புடன்றசைபற்றுவிட்டற
விதவிதம்படும்புடைபட்டிடிப்புறவிசிநரம்புசந்துகளிற்றெறித்திற
மதுகையந்தடம்புயவெற்பறப்பலவரையுடன்பொருந்தியநற்கழுத்தற
முதுகினுங்கவின்பெறவுற்பவித்தெனமுகனையும்புறந்திருகத்திருப்பியே. (௧௫௪)

மயிரைவன்கரங்கொடுறப்பிடித்தெதிர்வரவிழுந்திடும்படிபற்றியிட்டுட
லயிர்படுங்கடுந்தரையிற்றுகட்படவடியிரண்டினுஞ்சரியத்துகைத்தெழு
செயிருடன்பெருந்தொடைதொட்டிழுத்தணிதிகழுரம்புகுந்தவுணக்குலத்திறை
யுயிர்கவர்ந்தசிங்கமொடொப்புறத்தனதொளிசிறந்தனன்கடிதுக்கிரத்தொடே. (௧௫௫)

உகிரெனும்பெரும்பெயர்பெற்றசொட்டைகளுருவியெங்கணும்புதைபட்டுரத்தலம்
வகிரவுங்கொடுங்குடர்வட்டமற்றுகுவயிறுதொங்கவுங்கிழிவித்தபிற்செறி
துகிர்பரந்தசெம்பவளொத்தநெட்டுடல்சொரிதருஞ்செழுங்குருதிப்பெருக்கிடை
பகிரதன்றருங்கடவுட்டுறைப்புனல்படியுமும்பர்தம்பரிசிற்குளிக்கவே. (௧௫௬)

வேறு.

மன்னற்கிளையோனைவாட்டருமனுக்கிளையோன்
றுன்னிப்பிளந்துசுராருலகமேற்றுதலுங்
கன்னற்குமற்றுள்ளகாவலர்க்குமில்லாமல்
வெந்திட்டதம்மன்னன்வீரப்பெருஞ்சேனை. (௧௫௭)

வண்டாரவாரமுறுநறும்பூந்துளபத்
தண்டார்முடியோனும்விற்கைத்தனஞ்சயனுங்
கண்டாரவர்முதலாங்காவலருங்கைகலந்தார்
வெண்டாரகைபரந்தவிண்ணொத்ததாகவமே. (௧௫௮)

வேகமிகுஞ்செந்தீயின்மேனுளவதரித்த
தோகைகுழலுந்துகிலுமுடன்றொட்டனவென்
றாகமுறப்பிளந்தவாண்டகைமீண்டவ்வீரன்
பாகமுறுகைவிரல்கள்பத்துந்துணித்தானே. (௧௫௯)

தண்ணீர்நிகரெனத்துச்சாதனன்றன்மெய்யிலிழி
புண்ணீர்பருகப்புகுவோனையாவருக்குங்
கண்ணீர்வரத்தடுத்தான்காணுங்காலெத்திறத்தும்
வெண்ணீர்மையில்லாதமேகந்தனைப்போல்வான். (௧௬௦)

குடியாமலக்குருதிகொப்பளித்துவாகை
முடியாநின்றெண்ணெண்ணமுற்றினனென்றங்கட்
படியாளுஞ்செங்கோன்மைப்பார்த்திவருக்கெல்லாங்
கொடியார்மடங்கலெனக்கூத்தாடிநின்றார்த்தான். (௧௬௧)

துன்பமுறுந்துன்னீதித்துச்சாதனன்போர்செய்
தொன்பதின்மர்தம்பியரோடும்பரூர்புக்கானென்
றன்புடையதம்முன்னடிவீழ்ந்தகங்கரித்தான்
வன்புடையதாதையினுமிக்கவலியோனே. (௧௬௨)

பாண்டவர்கள்சேனைமதிகண்டபௌவமெனக்
காண்டவமன்றுண்டகனல்போனணிதருக்கி
மூண்டநிலைகண்டுமுதுகிடுவன்சேனையுடன்
மீண்டுமெதிரூன்றாமல்வெய்யோன்மகனின்றான். (௧௬௩)

மேல்கொண்டுபாண்டவர்தம்வெஞ்சேனைசூழ்ந்திடவு
மால்கொண்டவர்போலமாண்டாயெனக்கூறிக்
கால்கொண்டதிண்டேர்கடாவினன்கையுளவு
கோல்கொண்டான்கன்னனுமக்கூற்றுக்கெதிர்கூறும். (௧௬௪)

வேந்தனனையவிறற்றம்பிவீமன்கை
மாய்ந்தநிலைகண்டுமனந்தளர்ந்ததல்லாது
கூர்ந்ததிறன்மத்திரத்தார்கோவேவெருவுமோ
பாந்தளெதிர்செல்லப்பறவைக்கரசென்றான். (௧௬௫)

முன்னமமரின்முதுகிட்டமன்னரையு
மன்னவர்கண்மன்னனையும்வன்போரணியாக்கிப்
பொன்னசலம்போலும்புனைபொற்கொடிநெடுந்தேர்க்
கன்னனெதிரூன்றினான்காயுங்கனல்போல்வான். (௧௬௬)

சேனாபதியானதேர்த்துருபதேயனும்வான்
மீனாமெனப்பரந்தவேந்தருடனே தனக்குத்
தானாண்மைக்கொப்பாந்தருமனையுஞ்சேனையையு
மாநாகமுட்கவகுத்தாங்கெதிர்நடந்தான். (௧௬௭)

பொன்னார்முரசமுதற்போர்வெம்பணையாலும்
வின்னாணொலியாலும்விண்ணோர்செவிடுபடப்
பன்னாமபேதப்படையொளியாலும்பலபூண்
மின்னாலுங்கண்கள்வெறியோடிவிட்டனவே. (௧௬௮)

யாமினியிலெவ்வுயிர்க்குமேற்றதுயின்மாற்றுவோன்
மாமதலைகோமதலைமான்றேர்விடசேன
னாமமணித்தேர்மேனகுலன்மேற்சென்றுசில
தாமமுனைவாளிதழற்பொறிபோற்சிந்தினனே. (௧௬௯)

வெம்புரவித்திண்டேர்விசயற்கிளையோனுஞ்
செம்பதுமக்கையிற்சிலைநாணொலியெழுப்பிக்
கம்பமதமால்யானைக்கன்னன்மகனேவியகூ
ரம்படையவம்பாலறுத்தறுத்துவீழ்த்தினனே. (௧௭0)

அண்டர்பெருமானுக்கம்பொற்கவசமுடன்
குண்டலமுமீந்தோன்குமரன்கொடுங்கணையான்
மண்டுகனலருந்தவன்காண்டவமெரித்த
திண்டிறலோன்றம்பிதடந்தேர்க்கால்களையழித்தான். (௧௭௧)

மற்றொருதேரேறிமருத்துவர்தம்மைந்தனுமக்
கொற்றநெடுங்கச்சைக்கொடியோன்றிருமைந்தன்
வெற்றிவிலோதனமும்வெஞ்சாபமுமுடனே
யற்றுவிழவெய்தானவனாண்மைக்காரெதிரே. (௧௭௨)

மீண்டவனும்வேறொருவின்மேருவெனவாங்கிப்
பாண்டவனைவீழும்படியெய்தான்வீழ்ந்தோனை
மூண்டவனற்செங்கண்முரண்வீமன்கொண்டேகக்
காண்டவநீறாக்கினான்கண்டானவன்போரே. (௧௭௩)

நன்றாண்டிகழ்மதியாநாகம்பருமத்தா
வன்றாண்டிரைமதியாவண்டர்க்கமுதளித்தோன்
முன்றாண்டியதேரிற்சென்றான்முனைவாளி
மின்றாண்டில்வீசிவிடசேனமீன்படுப்பான். (௧௭௪)

தம்பிபடுந்துன்பந்தமையனையுங்காண்பனென
வெம்பியெதிர்சென்றுவிடசேனன்வில்வாங்கிப்
பம்பிவருகொடித்தேர்ப்பார்த்தனையும்பாகனையு
மம்பின்மறைத்தானடலேறரியனையான். (௧௭௫)

வின்னாணும்விற்பிடித்தவெவ்விரலும்வின்னடுவு
முன்னைதும்பைமுடித்தோன்முடித்தலையும்
பின்னாகவாங்கும்பிறையம்பும்பேரமரி
லொன்னார்முனைதடிந்தோனோரம்பிலறுத்தான். (௧௭௬)

வீழ்ந்தான்விடசேனன்வேந்தரெலாம்வெஞ்சமரிற்
றாழ்ந்தார்புறங்கொடுத்தார்தந்தைதடந்தேர்க்காலைச்
சூழ்ந்தார்சிலவீரர்தோலாதெதிர்நடந்து
வாழ்ந்தார்சுரராகிவான்மாதர்மெய்கலந்தே. (௧௭௭)

வேறு.

சாய்ந்தனன்களத்தருச்சுனன்சரத்தினாற்றனயனென்றவற்றந்த
வேந்தனுங்கருத்தழிந்துதன்றேர்மிசைவீழ்ந்தனனவன்பொற்றே
ரூர்ந்தசல்லியன்றேற்றினன்பற்பலவுரைகளாலவ்வெல்லைப்
பாந்தளங்கொடிப்பார்த்திவனின்றுழிச்சென்றனன்பரித்தாமன். (௧௭௮)

தப்பருஞ்சமர்விளைத்தனிர்நீயுமத்தருமன்மைந்தனும்வென்றே
மெய்ப்பெரும்புகழ்புனை*குருகுலத்திடைவீடுமன்முதலான
வெப்பெருந்திறற்குரவருங்கிளைஞருமேனைமன்னரும்யாரு
மொப்பரும்பெருஞ்சாதுரங்கத்துடனுடன்றுயிர்மாய்ந்தாரே. (௧௭௯)

வளையிலாதனமங்கலவிழவுநல்வரம்பிலாமரபுந்தொல்
விளைவிலாவரும்புலமுழுத்தீயிலாவேதியர்மனைவாழ்வுந்
துளையிலாமணிமுத்துமந்தண்புனற்றுறையிலாவளநாடுங்
கிளையிலாவாசியற்கையுநன்றெனக்கேட்டறிகுவதுண்டோ. (௧௮௦)

தும்பிமாபரிமாவுளதேருளசுருங்கினசுருங்காம
னும்பிமார்களிலிருந்தவர்தம்மொடுநுவலரும்பலகேள்வித்
தம்பிமாரொடுநும்முனாகியவிறற்றருமன்மாமகனோடும்
பம்பிமாநிலம்புரப்பதேகடனெனப்பார்த்திவற்குரைசெய்தான். (௧௮௧)

ஆரியன்றிருமகனிவையுரைசெயவரசனுமவைகேட்டுக்
காரியம்புகல்வதுபுவியாட்சியிற்கருத்துடையவர்க்கன்றோ
தூரியங்கறங்கமரிடையுடல்விழச்சுரருலகுயிரெய்த
வீரியம்பெறலெனக்கினிப்பயனெனவிளம்பினன்விறல்வேலோன். (௧௮௨)

முனிமகன்புகல்கட்டுரைமறுத்தபின்முனிவுறுவகைபோருக்
கினிமைகொண்டசொற்பலமொழிந்தவனொடுமிரப்பவருள்ளங்கைக்
கனியெனுங்கொடைக்கன்னனைத்தழீஇயவன்கண்ணுகுபுனன்மாற்றிப்
பனிநெடுங்குடைப்பார்த்திவனுவன்றனன்பார்த்தனதுயிர்கொள்வான். (௧௮௩)

மலைகலங்கினுமாதிரங்கலங்கினுமாதிரங்களில்விண்ணோர்
நிலைகலங்கினுநெடுங்கடல்கலங்கினுநிலங்கலங்கினுஞ்சேடன்
றலைகலங்கினும்பேரவைமூன்றினுந்தளர்விலாதவர்கற்ற
கலைகலங்கினும்போர்முகத்தென்மனங்கலங்குமோகலங்காதே. (௧௮௪)

* குருநிலத்திடை' என்றும் பாடம்.

என்மகன்றலையென்னெதிர்துணியவம்பேசியபுருகூதன்
றன்மகன்றலைதுணிப்பனிக்கணத்திலோர்சாயகந்தனிலென்று
மன்மகன்றனக்கிரதமூர்மத்திரமகிபதிக்குயர்வேள்வி
யின்மகன்றனக்குளமகிழ்ந்துரைத்தனன்வெயிலவன்மகனம்மா. (௧௮௫)

சுரிமுகங்களிற்பேரியங்களிலெழுதுவனியாற்பகிரண்ட
நெரியுமென்றயனஞ்சினன்சேனையினெருக்கினாலெனைத்துள்ள
கிரிகளுஞ்சரிந்திடுமெனவஞ்சினன்கிரீசனுங்கிளராழி
யரியுமஞ்சினன்றாளியாலலைகடலலையவற்றிடுமென்றே. (௧௮௬)

பரியுடன்பரிநெருங்கினநெருங்கினபடையுடன்படைமத்தக்
கரியுடன்கரிநெருங்கினநெருங்கினகடவுதேருடன்றேரும்
விரிநெடுங்குடைகுடையொடுநெருங்கினவிலோதமும்விலோதத்தோ
டரியெறிந்திடநெருங்கினவாடையுமாடையுமலமந்தே. (௧௮௭)

பரியில்வீரரும்பரியில்வீரரும்வயப்படையெறிந்தனர்கொற்றக்
கரியில்வீரருங்கரியில்வீரருமமர்கடுகினர்காற்றேராங்
கிரியில்வீரருங்கிரியில்வீரருமெதிர்கிடைத்தனர்பதசாரித்
தெரியல்வீரருந்தெரியல்வீரரும்பலசெருப்புரிந்தனரன்றே. (௧௮௮)

எடுத்தவேல்களும்வேல்களுமுனைந்தனவிலக்குறக்கொடும்பாணந்
தொடுத்தசாபமுஞ்சாபமும்வளைந்தனதொடியுடைக்கரசால
மடுத்தவாளமும்வாளமும்பொருதனவங்குலிகளிற்சுற்றி
விடுத்தநேமியுநேமியுந்துணித்தனவீரர்சென்னிகள்வீழ. (௧௮௯)

அறன்மகன்பெருஞ்சேனையினிருபருமரவவெங்கொடியாடை
மறன்மகன்கொடுஞ்சேனையினிருபரும்வஞ்சினம்பலகூறித்
திறன்மிகுந்ததஞ்சேனையோடெதிரெதிர்சென்றுசென்றிடந்தோறு
முறமலைந்தனரொருவருக்கொருவர்தோளுரமும்வீரமுமொத்தோர். (௧௯௦)

வேறு.

இளைஞரும்பெருஞ்சேனையுமிருபுடைநடக்கக்
கிளைஞர்யாவருநேமியங்கிரியெனச்சூழ
விளையும்வெஞ்சினவீமன்முன்போதரவிசயன்
வளைநெடுஞ்சிலைகணைமழைபொழிந்திடவந்தான். (௧௯௧)

கிரிசன்மைந்தனுங்கிருபனுங்கிருதவன்மாவும்
வரிபொலங்கழற்சகுனியுமுதலியமறவோ
ரெரியும்வெங்கனற்கண்ணினரெயிலெனச்சூழத்
தெரியும்வாளிவன்சிலையுடைக்கன்னனுஞ்சென்றான். (௧௯௨)

மல்வளைத்ததோள்வலனுறவலனுறத்தத்தம்
வில்வளைத்தனர்விசையுடன்சிலீமுகந்திகிரிக்
கல்வளைத்தபார்தனக்கிடுகாவணம்போலச்
சொல்வளைக்கிலர்தொடுத்தனர்தும்பையந்தொடையார். (௧௯௩)

வேறு.

மருவருஞ்சுருதிகூறுநிலைநானும்வழுவா
திருவருஞ்சிலைவணக்கியதுமெய்தவிரகு
மொருவருஞ்சிறிதுணர்ந்திலருகாந்தமெனவே
வெருவருஞ்செயலில்விஞ்சினர்கள்விஞ்சையருமே. (௧௯௪)

ஒன்றொடொன்றுமுனையோடுமுனையுற்றுறவிழு
மொன்றொடொன்றுபிளவோடவிசையோடுபுதையு
மொன்றொடொன்றுதுணிபட்டிடவொடிக்குமுடனே
யொன்றொடொன்றிறுகுகௌவுமெதிரோடுகணையே. (௧௯௫)

இடம்புரிந்திடில்வலம்புரியுமெண்ணின்முறையால்
வலம்புரிந்திடிலிடம்புரியுமண்டலமுமாய
நடம்புரிந்துபவுரிக்கதிநடத்துமெதிரே
சலம்புரிந்ததிரமுட்டுமிருசந்தனமுமே. (௧௯௬)

ஆசுபோமிவுளிமாகடவியாழிபிரத
மூசுபோரிலொருவர்க்கொருவர்முந்தவிடலால்
வாசுதேவனையுமத்திரமகீபதியையுந்
தேசவேறுதெரிகிற்றிலர்கடேவர்களுமே. (௧௯௭)

மறமுமொத்த*வழுவற்றசுழியொத்தவலிகூர்
புறமுமொத்தகதிபற்பலவுமொத்தபுகல்வா
ணிறமுமொத்தவுயரம்பருமைநீளமெனுமெய்த்
திறமுமொத்தவிருதேரில்வருதிண்பரியுமே. (௧௯௮)

நிலையிரண்டினுநின்றநிமலர்க்குநிகர்வோர்
மலையிரண்டினைவளைத்தெதிர்மலைந்ததெனவே
யலையிரண்டெனவதிர்ந்துபொருமவ்விருவர்கைச்
சிலையிரண்டுநிமிராதுகணைசிந்தினர்களே. (௧௯௯)

தேவதத்தமுமுழக்கியுயர்தேவர்பலரா
லாவமெத்தும்வகைபெற்றபலவம்புதெரியா
†மூவர்தத்தம்வடிவாமுதல்வன்மெய்ப்புதல்வன்மேற்
பூவின்மொய்த்தவறுகாலினிரைபோலவிடவே. (௨௦௦)

பரிதியன்போடுவழங்கியபராபரமேனும்
பெருவலம்புரிகுறித்துவிறலங்கர்பெருமான்
வரிநெடுஞ்சிலைவலாரிதிருமைந்தன்விடுதிண்
சரமடங்கவமர்தந்தசரமெய்துதறிபா. (௨௦௧)

---

* அழுகொத்த சுழி என்றும் பாடம்.

† மூவர் சுத்தவடிவாம் என்றும் பாடம்.

வயக்கதிர்க்கணைவிதங்கள்கொடுமாயன்விடுதே
ரியக்கமற்றிடவியற்றினனோர்கூடமிவனுந்
தியக்கமுற்றிடமயக்கிநெடுமால்செய்விரகா
லுயக்கமிக்கசரகூடமுளதாயதவனும். (௨0௨)

வேறு.

மாயாசர*கூடம்வளைத்திடலால்வலையுட்படுவீரமடங்கலெனச்
சாயாபதிமைந்தனுநின்றனன்மெய்தளர்வுற்றனனின்றதனஞ்சயனு
மேயாவிதுவென்கொன்முனைந்துபொராதெழுதோவியமாயினையென்றுவிறற்
காயாமலர்வண்ணன்விளம்புதலுங்கவிவெங்கொடியோனிருகைகுவியா. (௨0௩)

வன்போர்புரிவெங்கணையங்கர்பிரான்மறனாலுயர்பேரறனார்குமரன்
றன்போலவிளங்கினனாதலினென்றனுவுங்குனியாதுசரங்கள்செலா
வன்போடியனுள்ளமெனக்கினிமேலவனோடமர்செய்தலுமிங்கரிதால்
வெங்போகுவனென்றலுமேயிறைவன்விசையோடிரதத்தினைமீளவிடா. (௨0௪)

முகில்வண்ணனும்வாசவன்மாமகனுமுரசக்கொடிமன்னவன்முன்புசெலப்
பகலின்பதிமைந்தனையின்னமுமிப்பகல்சாய்வதன்முன்புபடுத்திலையா
லிகலெங்ஙன்முடித்திடுநின்கையில்வில்லிதுவென்னவிலென்றுதிருத்தமையன்
புகலுஞ்சொலவன்செவியிற்புகவேபுண்மேலயிலுற்றதுபோன்றதுவே. (௨0௫)

கூரார்முனைவாளிகொளிச்சிலையைக்குறையென்னெதிர்கூறினரம்புவிமேல்
யாராயினுமாவிசெகுத்திடுமாலிதுவஞ்சினமாதலினிப்பொழுதே
தாரார்புயவென்றியுதிட்டிரனைத்தலைகொய்வனெனத்தனுவுங்குனியா
†வாராமுன்விலக்கியருச்சுனனைவருகென்றுதழீஇமதுசூதனனே. (௨0௬)

குரவோர்களைநீயெனினுங்கொலையிற்கொடிதென்றுயர்கேள்வியர்கூறுவரா
லுரவோனையுமம்முறைகொன்றதனோடொக்குஞ்சிலபுன்சொலுரைத்திடுவா
யிரவோர்தமதின்முகம்வண்மையினாலிதயத்தொடுகண்டுமகிழ்ந்துபெறும்
பரவோதநெடுங்கடல்சூழ்புவியிற்பரிதாபமொழித்தபணிக்குடையோய். (௨0௭)

என்னாவுரைசெய்தலுமஞ்சியிளைத்திருகைகொடிறைஞ்சிநராதிபனைத்
தன்னாவிசையாதனசிற்சிலசொற்றளர்வோடெதிர்நின்றுதனஞ்சயனுஞ்
சொன்னானறன்மாமகனோருரையுஞ்சொல்லாமலினித்துறவெய்துவனென்
றுன்னாவிரைவோடிரதத்தினிழிந்துயர்கானடைவானுணர்வுற்றனனே. ௨0௮)

நரநாரணர்சென்றுதராபதிதாணளினத்தில்விழுந்தொருநாயகமா
வரனாமவனைப்புனைதேர்மிசையேவைத்துத்துணிமாறிடுமாறுரைசெய்
தானாமெனநீயணிநின்றிடயாமனலம்பெனவோடியிமைப்பிடைமுப்
புரமேயகமாயதயித்தியரிற்பொருவோனுயிர்கைக்கொடுபோதுவமே. (௨0௯)

விடைகொண்டனமென்றுவணங்கிநிலாமதியம்பகலேயொளிவிட்டதெனக்
குடைகொண்டுநிழற்றவிரண்டருகுங்குளிர்சாமரமாருதமாறுபொரப்
புடைகொண்டுமகீபர்திரண்டுவரப்புனைதேர்மதமாபுரவித்திரள்கைப்
படைகொண்டபதாகினிமுன்பின்வரும்படியேகினர்மாதவபற்குனரே. (௨௧0

---

* கூடமறைத்திடலால் என்றும் பாடம்.

† வாராவெகுள்கின்ற கிரீடியை நீவருகென்று என்றும் பாடம்.

வெங்கோதைநெடுஞ்சிலையின்சிறுநாண்விசைபோதையும்வெவ்விருதோதையும்வெண்
சங்கோதையும்வண்பணையோதையுநால்வகையாகியதானைநெடுங்கடலின்
பொங்கோதையுமண்டமுடைந்திடவப்புறமுற்றகலாதுசெவிப்படமற்
றிங்கோதையெழுந்ததறிந்திலராவிமையாவிழியோர்முதல்யாவருமே. (உ௧௧)

தாமங்களின்வைப்பருள்காளையுமச்சரகூடமறுத்தணிதானையொடும்
வீமன்றனொடும்பொருகின்றமைதன்விழிகண்டுகளித்திடவில்விசயன்
காமன்றனைநீறெழவென்றநுதற்கண்போலெரிகின்றகருத்துடனே
மாமந்தரவெற்பனதேர்கடவும்வலவன்றனொடாகவமன்னினனே. (உ௧௨)

அங்கிக்கதிர்தந்தகொடுஞ்சிலைநாணாவக்கணையஞ்சவெறிந்துமிகச்
சங்கித்தடலங்கியளித்ததனிச்சரமேவினன்வந்துதனஞ்சயனும்
பொங்கிக்கனல்சாலமெழுந்ததெனப்புகையும்படிபோயகல்வானதியின்
கங்கிற்பொறிவிட்டதுதாரகையின்கணமென்னவெறிந்ததுகாய்கனலே. (உ௧௩)

இணையின்றியெழுந்துசுடுங்கனலால்விரதங்களும்வேன்முதலெப்படையும்
கணையுஞ்சிலையுங்கவனப்பரியுங்கரியுங்கரியானவைகண்டியமன்
றுணைவன்றுணைவாருவளர்ந்திடவுந்துணைவார்புருவங்கடித்திடவும்
பணைவெங்குரல்கன்றிமுழங்கிடவும்பௌவத்தரசன்றருபாணமெடா. (உ௧௪)

பவ்வம்புனல்வற்றமுகந்துவலம்படவம்பரமூடுருவப்பரவா
வெவ்வம்புதமேழுமுடன்பொழியும்வெள்ளம்புரைவெள்ளமிகச்சொரியச்
செவ்வம்பரமொத்தகளத்திடையச்செய்யோன்மகன்வன்பொடுசீறிவிடு
மவ்வம்புநொடிப்பொழுதத்தறவோனநுசன்றழலம்பையவித்ததுவே. (உ௧௫)

வாயுக்கணையேவினன்வானவர்கோன்மைந்தன்றிகழ்பேரொளிவான்மணியின்
சேயுற்றுரகேசன்வழங்கியதிண்டிறல்வெங்கணையொன்றுதெரிந்தனனு
லாயுப்புறமிட்டுவிடப்பொருவோனவ்வெங்கணையங்குமலைந்திடுவோன்
வீயுற்பலமாமுனைவெங்கணைமேல்வீசிப்பொருமுன்புவிழுங்கியதே. (உ௧௬)

என்னம்புதனக்கெதிரில்லையெனுவிருளம்பினையேவினன்வில்விசயன்
கன்னன்கலையெட்டுடனெட்டுடைவெண்கதிரம்புதொடுத்ததிர்கன்றினனுன்
முன்னம்புசிதைந்துசிதைந்தழியாமுகமாறியிமைத்துவிழிக்குமுனே
பின்னம்புதொடர்ந்துசெலச்செலவேயிலமூழ்கியதென்னபெரும்பிழையோ. (உ௧௭)

மகவானருள்வாளிதொடுத்தனனம்மகவான்மகன்வாசிகளேழுடைவெம்
பகவானருள்வாளிதொடுத்தனனப்பகவானருடிப்பாகபராயணனுந்
தகவாளியிரண்டுமுடன்கதுவித்தாழாதுயராதுசமம்பெறவே
முகவாய்கள்பிளந்தனமற்றுளபோர்முனைவாளியுமிப்படிமுட்டினவே. (உ௧௮)

உரமந்தரவெற்பினுமிக்கபுயத்துரவோனுளம்வெஞ்சினமுறியெழப்
பிரமன்கணையேவுதலுஞ்சமனுர்பின்னோன்முடுகிப்பிறைமாமவுலிப்
பரமன்கணையேவினனக்கணையப்பகவன்கணைநீறுபடுத்துதவிற்
சரமங்கவைவேறுதொடுத்திலர்கைத்தனுவுங்குனிவித்திலர்தார்முடியோர். (உ௧௯)

இவ்வாறிமையோர்கள்வரங்களினாலிருவோர்களுமெய்தியமாமறைகூர்
வெவ்வாளிகளோடியுடற்றுதலால்வெஞ்சேனையடங்கமடங்கியபின்
மைவானளகந்திசைவாண்முகமாமலையாமலைவாரிதிவண்டுகிலஞ்
செவ்வாறுபடுத்தலின்மேதினியாடிருமேனியணிந்ததுசெவ்வணியே. (௨௨௦)

வேறு.

மகபதிமைந்தனைமீளவுந்தினகரன்மகனுயிர்கொண்டிடவேணுமென்றுறுசின
மிகமிகவன்சிலைகோலியொண்கிரிபலமிடைவனம்வெந்திடவோடியந்தரமிசை
புகைகதுவும்படிசீறிவெம்பொறிவிடுபுரிதழன்மண்டியநாளிலம்பெனவரு
மிகலுடைவெம்பகுவாய்களைந்துடையதொரெழில்கொள்புயங்கனையேவவென்றுசவியே.

பரிமளசந்தனதீபமுங்கமழ்புகைபணிமலருங்கொடுபூசையும்பரிவுட
னருளிவணங்கியெடாவிடும்பொழுதினிலடல்வலவன்சிலகூறினன்பரிவொடு
விரிதுளவம்புனைமாயன்வஞ்சனையுளன்விசயனகன்றடமார்பகம்புதைதர
வுரகநெடுங்கணையேவுகென்றிடவவனுறுதிநினைந்திலனுதவன்குமரனே. (௨௨௨)

மழுவுறுசெங்கையிராமனென்பவனருள்வரிசிலைகொண்டணிநாணிதன்செவியொடு
தழுவுறமண்டலமாய்வளைந்திடமூதுதறுகணெடுஞ்சினமூளும்வெங்கணையினை
யெழிலிமதங்கயவாகனன்றனயனதெழில்பெறுகந்தரமேதுணிந்திடும்வகை
யழலெழுநெஞ்சொடுநாடிநின்றுதையினனளிமூரல்பங்கயநாயகன்குமரனே. (௨௨௩)

வலவனெனுந்திருமாலதன்றனைகெழுவரவையறிந்தணிதேரின்வன்றிகிரிக
ளிலகியவங்குலியாறிரண்டவனியினிடைபுதையும்படிதாழநின்றிடுதலி
னலர்கதிர்தந்தருள்காளையம்பெனவிடுமரவுதனஞ்சயன்மார்பையுங்களனையும்
விலகியவன்றனதாதையன்றுதவியவெயின்மகுடந்தனைமோதிவந்திடறவே. (௨௨௪)

இடறியதிண்பணிவாளிபின்பறிதலுமெதிர்பொரவெஞ்சிலைகோலிநின்றவனணி
பிடரினுமுண்டுகொல்பார்வையென்றிடவலிபெறநிலைநின்றிருதோள்களும்பரிவுற
வடவியின்வெந்துதன்வால்குறைந்திடவிடுமயின்முகவெங்கணையாலதன்பருமைகொ
ளுடலமிரண்டுடலாய்விழுந்தலமாவுதையினனும்பர்பிரானருள்குரிசிலே. (௨௨௫)

பிறகுபுரிந்தெழில்கூர்தனஞ்சயன்விடுபிறைமுகவெங்கணையாலழிந்திடுபணி
திறனுடன்முன்றுணிசேருமைந்தலையொடுதிரியவும்வந்தெனையேவுகென்றலறவு
முறவொடுகுந்திவழாவரம்பெறுதலினுரைவழுவும்பெரிதாகுலம்புரியினு
மறுகணையொன்றுதொடேன்முனிந்திநியெனவரிகழலங்கர்குலாதிபன்புகலவே. (௨௨௬)

எரியிடைவெந்துடல்வாலுமுன்றறிதலினிடாறவுய்ந்திடநீபெரும்புகலென
விரைவொடுவந்தெனைவாளிகொண்டிடுகெனவிசயனைவென்றிடுமாறுளங்கருதவு
மொருதனிவெஞ்சிலைகால்வளைந்திலதுகொலொருபடியும்பிழைபோனதன்றுருடையென
வரிகழலங்கர்பிரானைநொந்துரைசெய்துமறலியிடந்தனிலானதன்றுரகமே. (௨௨௭)

வேறு.

நாகாயுதந்தப்பிநானுய்ந்தபொழுதத்துநாகக்கொடிச்
சேகானநெஞ்சத்தவன்சேனையிற்றன்செருச்சேனையிற்
பாகார்கடாயானைநரபாலர்மகிழ்வோடுபரிவெய்தினு
ரேகாதசந்தன்னிலெக்கோனுநிகரென்னவிகலின்றியே. (௨௨௮)

அருமார்பிலக்காகவெய்யென்னவெய்யாவகங்காரமும்
வருமாசுணந்தன்னைமறுகாலுமேவாமன்மறைசெய்ததும்
பொருமாறுநினைவற்றதுங்கண்டுகாரொத்தபோர்மீளியைத்
திருமாலொடொப்பானுமுளநொந்துநொந்தம்மசிலகூறுவான். (உஉகூ)

என்றனுமரிதித்தடந்தேர்*விரைந்தூர்தலினியென்றுமற்
றுன்றனுமரிதந்தவிசயன்றனுயிர்கொள்ளலுன்னித்தபோர்ப்
பன்னகதுவசற்குமரிதாலுனைக்கொண்டுபாராளுமா
றென்றுவிழ்ந்தானவன்றேரின்மிசைநின்றுமிசைநின்றுளான். (உகூ0)

என்றேயெழிற்குந்திவயினல்குதனியாளியிகலேறனன்
வன்றேர்செலுத்திப்பெரும்போர்முடிப்பிக்கவருசல்லியன்
றென்றேரிசைச்செவ்விநறைநாறுமலர்விட்டசிறைவண்டெனத்
தன்றேரின்மேல்கொண்டுதனிவில்லுமீளத்தரித்தானரோ. (உகூக)

கதவாசிநடையற்றுவலியற்றுவரிவிற்கொள்கணையாவையும்
விதவாழிநிலனுற்றவிரைதேருமெய்வன்புமெலிவுற்றபின்
புதவாமன்மழுவாளியுரைசெய்தசாபத்தையுறவுன்னினு
னதவாமுராட்போர்தனக்கஞ்சுமோவென்றுமடலங்கர்கோன் (உகூஉ)

இயற்கைப்பெருங்கொற்றவலியன்றியார்யாரிடத்தும்பெறுஞ்
செயற்கைப்படைத்திண்மைகைவந்திலாவெய்யசெய்யோன்மகன்
வெயர்க்கத்தனுதல்கண்சிவப்பேறமனம்வெம்பமண்மீதிழிந்
தயர்க்கச்சபித்தோனைவந்தித்துவேறோரடற்றேரின்மேல். (உகூங)

ஏறித்தன்வலவன்செலுத்தத்தடக்கையிலிகல்வில்லுடன்
சீறிக்கொடுஞ்சாயகங்கோடிமுகிலூர்திசேய்மேல்விடக்
காறிக்கனன்றக்கடுந்தேர்செலுத்துங்கரும்பாகனோர்
கூறிக்கொடுத்தாருக்கன்குமரனவன்மைகுறைகின்றதே. (உகூச)

குறையற்றதன்வில்லைமகவற்குமாரன்குனித்தாசுகஞ்
சிறையற்றகிரிபோலநிற்கின்றதினகாரிசிறுவன்றன்மெய்
மறையத்தொடுத்தானுயிர்க்காலவிப்பான்மயிர்க்காறெறூங்
கறையற்றமதிபோலநிலவினுமுத்தக்கழற்காளினான். (உகூரு)

வேறு.

எத்தலங்களினுமீகையாலோசைவாகையாலெதிரிலாவீரன்
மெய்த்தலமுழுதுந்திறந்துகுருதிவெயிலவன்கரங்கள்போல்விரிய
கொத்தலரலங்கன்மகுடமுங்கவசகுண்டலங்களுமுருக்குலைந்துங்
கைத்தலமறந்ததில்லைவிற்குனிப்புங்கடுங்கணைதொடுத்திடுங்கணக்கும். (உகூகூ)

அத்தவெற்பிரண்டிற்கிடையெனப்போயாதவன்சாய்தல்கண்டருளி
முத்தருக்கெல்லாமூலமாய்வேதமுதற்கொழுந்தாகியமுகுந்தன்
சித்திரச்சிலைக்கைவிசயனைச்செருநீயொழிகெனத்தேர்மிசைநிறுத்தி
மெய்த்தவப்படிவவேதியனாகிவெயிலவன்புதல்வனையடைந்தான். (உகூஎ)

* விரைந்தோடவினியூர்தன்மற்றென்றும் பாடம்.

தாண்டியதரங்கக்கருங்கடலுடுத்ததரணியிற்றளர்ந்தவர்தமக்கு
வேண்டியதருதிநீயெனக்கேட்டேன்மேருவினிடைத்தவம்பூண்டே
னீண்டியவறுமைப்பெருந்துயருழந்தேனியைந்ததொன்றிக்கணத்தளிப்பாய்
தூண்டியகவனத்துரகதத்தடந்தேர்ச்சுடர்தரத்தோன்றியதோன்றல். (உ௩அ)

என்றுகொண்டந்தவந்தணனுரைப்பவிருசெவிக்கமுதெனக்கேட்டு
வென்றிகொள்விசயன்விசயவெங்கணையான்மெய்தளர்ந்திரதமேல்விழுவோ
னன்றெனநகைத்துத்தரத்தகுபொருணீநவில்கெனநான்மறையவனு
மொன்றியபடிநின்புண்ணியமனைத்துமுதவுகென்றலுமுளமகிழ்ந்தான். (உ௩௯)

ஆவியோநிலையிற்கலங்கியதியாக்கையகத்ததோபுறத்ததோவறியேன்
பாவியேன்வேண்டும்பொருளெலாநயக்கும்பக்குவந்தன்னில்வந்திலையா
லோவிலாதியான்செய்புண்ணியமனைத்துமுதவினேன்கொள்கநீயுனக்குப்
பூவில்வாழயனுநிகரலனென்றாற்புண்ணியமிதனினும்பெரிதோ. (உ௪௦)

என்னமுன்மொழிந்துகரங்குவித்திறைஞ்சவிறைஞ்சலர்க்கெழிலியேறனையான்
கன்னனையுவகைக்கருத்தினோக்கிக்கைப்புனலுடன்றருகென்ன
வன்னவனிதயத்தம்பின்வாயம்பாலளித்தலுமங்கையாலேற்றான்
முன்னமோரவுணன்செங்கைநீரேற்றுமூவுலகமுமுடன்கவர்ந்தோன். (உ௪௧)

மல்லற்றொடையனிருபனைமுனிவன்மகிழ்ந்துநீவேண்டியவரங்கள்
சொல்லுகவுனக்குத்தருதுமென்றுரைப்பச்சூரன்மாமதலையுஞ்சொல்வா
னல்லல்வெவ்வினையாலின்னமுற்பவமுண்டாயினுமேழேழ்பிறப்பு
மில்லையென்றிரப்போர்க்கில்லையென்றுரையாவிதயநீயளித்தருளென்றான். (உ௪௨)

மைத்துனனுரைத்தவாய்மைகேட்டையன்மனமலருகந்துகந்தவனைக்
கைத்தலமலரான்மார்புறத்தழுவிக்கண்மலர்க்கருணைநீராட்டி
யெத்தனைபிறவியெடுக்கினுமவற்றுளீகையுஞ்செல்வமுமெய்தி
முத்தியும்பெறுதிமுடிவிலென்றுரைத்தான்*மூவருமொருவனாமூர்த்தி. (உ௪௩)

போற்றியகன்னன்கண்டுகண்களிப்பப்புணரிமொண்டெழுந்தகார்முகிலை
மாற்றியவடிவும்பஞ்சவாயுதமும்வயங்குகைத்தலங்களுமாகிக்
கூற்றுறழ்கராவின்வாயினின்றழைத்தகுஞ்சரராசன்முனன்று
தோற்றியபடியேதோற்றினான்முடிவுந்தோற்றமுமிலாதபைந்துளவோன். (உ௪௪)

அமரரானவருமமரயோனிகளுமமரருக்கதிபனானவனுங்
கமலநான்முகனுமுனிவருங்கண்டுகனகநாண்மலர்கொடுபணிந்தார்
சமரமாமுனையிற்றனஞ்சயன்கணையாற்சாய்ந்துயிர்வீடவுஞ்செங்க
ணமலநாரணனைக்காணவும்பெற்றேனென்றுதன்னகமிகமகிழ்ந்தான். (உ௪௫)

### வேறு.

அருந்தழன்மாமகம்புரிந்துங்கடவுட்கங்கையாதியாம்புனல்படிந்துமனிலயோகத்
திருந்துமணிமலர்தூவிப்பூசைநேர்ந்துமெங்குமாகியவுன்னையிதயத்துள்ளே
திருந்தநிலைபெறக்கண்டும்போகமெல்லாஞ்சிறுக்கியனைத்துயிருக்குஞ்செய்யவொண்ணாப்
பெருந்தவங்கண்மிகப்பயின்றும்பெறுதற்கெட்டாப்பெரும்பபனின்றிருவருளாற்பெறப்
பெற்றேனே. (உ௪௬)

---

* மூவரிலொருவனாமூர்த்தி என்றும் பாடம்.

நீலநெடுங்கிரியுமழைமுகிலும்பவ்வநெடுநீருங்காயாவுநிகர்க்குமிந்தக்
கோலமும்வெங்கதைவாளுஞ்சங்குநேமிகோதண்டமெனும்படையுங்குழையுங்காது
மாலைநறுந்துழாய்மார்புந்திரண்டதோளுமணிக்கழுத்துஞ்செவ்விதழும்வாரிசாதக்
காலைமலரெனமலர்ந்தமுகமுஞ்சோதிக்கதிர்முடியுமிம்மையிலேகண்ணுற்றேனே. (உசஎ)

தருமன்மகன்முதலானவரியகாதற்றம்பியரோடெதிர்மலைந்துதறுகணாண்மைச்
செருவிலெனதுயிரனையதோழற்காகச்செஞ்சோற்றுக்கடன்கழித்தேன்றேவர்கோவுக்
குரைபெறுநற்கவசமுங்குண்டலமுமீந்தேனுற்றபெருநல்வினைப்பேறுனக்கேதந்தேன்
மருதிடைமுன்றவழ்ந்தருளுஞ்செங்கண்மாலேமாதவத்தாலொருதமியன்வாழ்ந்தவாறே.

வான்பெற்றநதிகமழ்தாள்வணங்கப்பெற்றேன்மதிபெற்றதிருவுளத்தான்மதிக்கப்பெற்
றேன்பெற்றதுழாயலங்கற்களபமார்புந்திருப்புயமுந்தைவந்துதீண்டப்பெற்றே [றேன்
ஊன்பெற்றபகழியினாலழிந்துவீழ்ந்துமுணர்வுடனின்றிருநாமமுரைக்கப்பெற்றேன்
யான்பெற்றபெருந்தவப்பேறென்னையன்றியிருநிலத்திற்பிறந்தோரில்யார்பெற்றாரே. ()

என்றுமகிழ்வுறவணங்குமெல்லிமைந்தனின்புறவண்புறவினிலானிரையின்பின்போய்க்
கன்றுகொடுவிளவெறிந்தகண்ணன்றானுங்கன்னனுக்குக்கட்டுரைப்பான்கடவுளாத
னன்றனதுகவசமுங்குண்டலமும்வாங்கவழைத்தேனுங்குந்தியைக்கொண்டரவவாளி
யொன்றொழியத்தொடாதவரங்கொள்வித்தேனுமுற்பவத்தினுண்மையுனக்குணர்வித்தேனும். ()

தக்ககன்றன்மகவானவுரகவாளிதனஞ்சயனைச்சதியாமற்சாய்வித்தேனு
மெய்க்கருணைநின்பொருட்டால்யானேயென்றுமீண்டும்போய்த்தேர்வலவன்விசயற்கானே
னெக்கடலுமெக்கிரியுமெல்லாமண்ணுமிமையோருமானுடருமெல்லாமாகி
மைக்கணிளங்கோவியர்நுண்டுகிலுநாணும்வரிவளையுமடநெஞ்சும்வாங்குமாலே. (உருக)

பகலவன்றன்மதலையைநீபகலோன்மேல்பாற்பவ்வத்திற்படுவதன்முன்படுத்தியென்ன
விகல்விசயனுறுதியுறவஞ்சரீகமெனும்பாலவனிதயமிலக்கமாக
வகலுலகில்வீரரெலாமதிக்கவெய்தானந்தவாசுகமுநுவியப்பாலோடித்
தகலுடையார்மொழிபோலத்தாணியூடுதப்பாமற்குளித்ததவன்றானும்வீழ்ந்தான். ()

கருடனதுதிருத்தோளிற்கண்டகோலங்கண்ணினுநெஞ்சினுநிற்கக்கருணையாதி
புருடனதுதிருநாமந்தனதுநாவிற்போகாமனனிவிளங்கப்புதைந்துவாளி
வருடமுடல்குளிப்பிக்கச்செம்பொற்றேர்மேன்மன்னரெலாம்புடைசூழவையங்காக்குங்
குருடன்மகனருகிருந்துசோகங்கூறக்குற்றுயிரினுடன்கிடந்தான்கொடையான்மிக்கோன். ()

முந்தியெதிர்பொரும்விசயன்றொடுத்தகோலான்முடிசாய்ந்தின்றைவருக்குமுன்றோன்வீழ்ந்தா
னந்திபடுவதன்முன்னேயாவிபோமென்றசரீரியெடுத்துரைப்பவன்னையான
குந்திதனதுளமுருகக்கண்ணீர்சோரக்குழல்சரியப்போர்க்களத்துக்கோகோவென்று
வந்திருகைதலைபுடைத்துத்தலைநாளீன்றமகவின்மேல்வீழ்ந்தழுதாண்மன்றேமன்றே. (உருச)

என்றேயென்றுன்னையுழைக்கன்னிமாடத்தெழிலிரவிதிருவருளாலீன்றேனீன்ற
வன்றேபொற்பெட்டகத்திற்கங்கையாற்றிலாமுறையாலுனைவிடுத்தேனருளிலாதேன்
வென்றேமண்கவர்தருமன்மதலைக்காவிமித்திரனனது கேட்டுன்வீரங்கேட்டு
நன்றேயென்றவப்பயனென்றுன்னிவாழ்ந்தேனுகழுநீயரசாளநடக்கின்றாயோ. (௨௫௫)

ஓரஞ்சுபேருளராலறந்தவாதவுதிட்டிரனாதியருரகக்கொடியோனாதி
யீரஞ்சுபதின்மருளர்தம்பிமார்களிங்கிதங்களறிந்தடைவேயேவல்செய்யப்
பாரஞ்சுமொருகுடைக்கீழ்நீயேயாளும்பதமடைந்தும்விதிவலியாற்பயன்பெறாமற்
காரஞ்சுகாதலத்தாயந்தோவந்தோகடவுளர்தம்மாயையினாற்கழிவுற்றாயே. (௨௫௬)

என்றென்றேயமர்க்களத்தினின்றவேந்தர்யாவருங்கேட்டதிசயிப்பவேங்கியேங்கி
யன்றன்போடெடுத்தணைத்துமுலைக்கணூறலமுதூட்டிநேயமுடனணித்தாவீன்ற
கன்றெஞ்சவினைந்தினைந்துமறுகாநின்றகபிலையைப்போலென்பட்டாள்கலாபம்வீசிக்
குன்றெங்குமிளஞ்சாயன்மயில்களாடுங்குருநாடன்றிருத்தேவிகுந்திதேவி. (௨௫௭)

வேறு.

அன்னைமடியினுங்காத்துமுடல்கிடப்பவங்கர்பிரானவிதாதை
தன்னைமருவுறத்தழுவித்தானமுறக்கிளர்ந்ததவண்டுமொருமன்
மின்னைவலியுறநீட்டியண்டமுகடசையாமல்விண்ணோர்தச்சன்
பொன்னையழகெழப்பூசியொளிபிறங்கநாட்டியதோர்பொற்றூணொத்தே. (௨௫௮)

மருத்துதவவருசண்டமருத்தாலுமருத்துவான்வழங்குஞ்சோதி
யுருத்திகழுங்கரியசுடருருத்தெழுவெங்கனலாலுமுகாந்தந்தன்னி
னிருத்தமிடும்பெரும்பவ்வநெடுநீத்தம்வறப்பதுபோனிருபன்சேனைப்
பெருத்தகடல்சுவறியவப்பெருமைதனையெப்படிநாம்பேசுமாறே. (௨௫௯)

அணையார்தம்படைக்கடலினருநிலைக்குக்கரையேறலானகோலப்
புணையாயெத்திறங்களினும்பகிராமலுற்றதெலாம்புகலத்தக்க
துணையாயென்னுயிர்க்குயிராந்தோழனுமாகியவுன்னைத்தோற்றேனாகி
விணையாருமிலாவரசேயாரைக்கொண்டரசாளவிருக்கின்றேனே. (௨௬௦)

சூழ்வேலையுலகாளுஞ்சூழ்ச்சியுமிப்பெருஞ்செல்வத்துவக்குநெஞ்சால்
வீழ்வேனோவமராடவீமனொடுதலைநாளில்விளைந்தசெற்றந்
தாழ்வேனோவுனையெழிந்துந்தம்பியரையொழிந்துமினித்தனித்துநானே
வாழ்வேனோவாழ்வேயென்மனவலியேவருகின்றேன்வருகின்றேனே. (௨௬௧)

எனக்கொண்டுசுயோதனன்பேரிரக்கமுடனழுதரற்றவிருந்தவேந்தர்
மனக்கொண்டவருத்தமுடன்வலியிழந்தோமெனக்கலுழவானினெங்கு
மினக்கொண்டன்முழங்குவபோலந்தரதுந்துபிமுழங்கவிமையோரார்ப்பக்
*கனக்கொண்டகதிர்புதல்வன்பாடறிந்துமூழ்கியதாற்கடலினூடே. (௨௬௨)

பேரறத்தின்மகன்முதலாம்பிள்ளைகளைவருந்தம்மைப்பெற்றபாவை
யார்கயற்கண்புனல்சொரியவழுகின்றாரரவினைக்கேட்டாழியானை
யோரிமைப்பில்வினவியிடவுள்ளபடியுரைத்ததற்பினுருமேறுண்ட
கூரெயிற்றுநாகம்போற்குலைகுலைந்துதம்முனைப்போய்க்குறுகினாரே. (௨௬௩)

---

* கனற்கொண்ட என்றும் பாடம்.

கன்னியிளம்பருவத்திலரியமாவெனுங்கடவுள்காதல்கூர
மன்னியமந்திரமெமக்குமின்றளவுமுரைத்திலையான்மறந்தாய்கொல்லோ
பின்னியசெஞ்சடைக்குழலாயீதென்னபோறிவுபெற்றதாயி
னந்நியநன்றாயிருந்ததிப்படியேபிழைப்பிப்பதறிந்திலேமே. (உசுச)

ஊற்றிருந்தவிழியினளாயுனைப்பயந்தாண்மனமறுகவுயிராய்நின்ற
காற்றிருந்தவிடந்தேடிக்கணைபலவுமுடல்குளிப்பக்கண்ணுவின்று
கூற்றிருந்தபதிதேடிக்குடியிருக்கநடந்தனையோகொற்றவேந்தாய்
விற்றிருந்திங்கைவேமுமடிவருடப்புவியாளவிதியிலாதாய். (உசுரு)

ஊன்றொடுத்தவயவாளியெத்தனையாயிரந்தொடுத்தேனாகத்தானீ
தான்றொடுத்தகடுங்கணைக்குத்தப்பினேனெனமகிழ்ந்தேன்சஞ்சரீகத்
தேன்றொடுத்தமலரலங்கற்றினநாதன்சேயேநின்றிருமார்பத்தில்
யான்றொடுத்தநெடும்பகழியெனைக்கெடுப்பதறிந்திலேனென்செய்தேனே. (உசுசு)

யாயுரைத்த* தல்லாதவெமருரைத்ததசரீரியென்னுந்தேவின்
வாயுரைத்ததின்றளவுங்கேட்டிலேங்கேட்டனமேல்வாட்டமுண்டோ
பேயுரைத்துத்தாலாட்டமுலைப்பாலோடுயிருண்டபித்தாவீண்டை
நீயுரைத்தபிறகறிந்தோமெம்முனையின்றெமைக்கொண்டேநேர்செய்தாயே. (உசுஎ)

ஆடகனைப்புதல்வனைக்கொண்டழிப்பித்தாயிலங்கைநகர்க்கரசையன்று
வீடணனைப்பகையாக்கிக்கிளையுடனேவீழ்வித்தாய்வேலைசூழ்ந்த
நாடறியப்புகுந்தெமக்குநாயகமாங்கன்னனையுநரன்கையம்பா
லீடழியப்பொருவித்தாயிமையோர்கள்வல்லவிரகியார்வல்லாரே. (உசுஅ)

இவ்வகையேதிருத்தமையனிணையடிக்கீழ்வீழ்ந்தலறியாயுந்தாங்க
ளைவரும்போய்த்தம்பாடிவீடடைந்தாராகுலத்தாலழிந்தநெஞ்சார்
பைவருமாசுணத்துவசப்பார்த்திவனைக்கொண்டேதம்பாடிபுக்கார்
தைவருதிண்சிலைத்தடக்கைச்சகுனிதனைமுதலானதரணிபாலர். (உசுகூ)

பதினேழாம்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆகச் செய்யுள்—சய0அகூ.

கன்னபருவ முற்றுப்பெற்றது.

* அல்லாறுவேறுரைத்தது என்றும் பாடம்,

ஒன்பதாவது

# சல்லியபருவம்.

## பதினெட்டாம் போர்ச்சருக்கம்.

மீனாமைகோலநெடுநரசிங்கமாகிநிலம்விரகாலளந்தகுறளா
யானாதுசீறுமழுவல்வில்லுவெல்லுழனையலமுற்றசெங்கையவராய்
வானோர்வந்துதொழமண்ணோர்யாவரையுமடிவிக்கவந்தவடிவாய்
நானாவிதங்கொள்பரியாளாகநின்றருளுநாராயணாயநமவே. (௧)

சிதையத்தன்மைந்தனையடுந்தன்மைகண்டுமொருசெயலின்றிநீடுதுயர்கூ
ரிதையத்தனாகியகல்பகலோன்மறித்தவுணரெதிரஞ்சுமாறுபொருதா
னுதையத்தடங்கிரியுமொளிர்பற்பராககிரியொப்பாகவீசுகதிரிற்
புதையப்பரந்தவகவிருளுந்துரந்துரகர்புவனத்தினூடுபுகவே. (௨)

கண்டுஞ்சலின்றியிரவிருகண்ணிலான்மதலைகண்ணீரின்மூழ்கியெவரைக்
கொண்டிங்கெடுத்தவினைமுடிவிப்பதென்றுயர்சகுனியோடுமெண்ணியிருள்போ
யுண்டுஞ்சுகித்துமலர்மதுவொன்றுசாதிமுதலொண்போதுவிட்டுஞிமிறும்
வண்டுஞ்சுரும்புமரவிந்தத்தடத்துவரவருவோனைவந்தனைசெய்தான். (௩)

தொல்லாண்மையெந்தைமுதுதந்தைக்குமைந்துறுதுரோணற்குமண்ணினிகர்வே
றில்லாதவண்மைபுனைவெயிலோன்மகற்குமுடனெண்ணத்தகுந்திறலினன்
வில்லாண்மையாலும்வடிவாளாண்மையாலுமயில்வேலாண்மையாலுமவனே
யல்லாதுவேறுசிலரிலரென்றுசல்லியனையதியாதரத்தொடழையா. (௪)

நீயேயெனக்குயிருநீயேயெனக்குளமுநீயேயெனக்குநிதியு
நீயேதுணைப்புயமுநீயேவிழித்துணையுநீயேயனைத்துநிலையு
நீயேமுனைச்செருவிலதிரதரின்மாரதரினிகரற்றகோவுமதனா
னீயேமுடித்தியெனதெண்ணத்தையென்றுவகைநிகழாவியந்துபுகழா. (௫)

மன்பட்டவர்த்தனருமணிமகுடவர்த்தனருமுறையால்வணங்கவொளிகா
னன்பட்டமுந்தனதுகையாலணிந்துபடைநாலுக்குநாயகமெனா
மின்பட்டவோடைநுதலிபாசன்வன்பிடரின்மிசைவைத்துகந்தனனரோ
வென்பட்டதப்பொழுதுகுருசேனைமெய்ப்புளகமெழவொண்கண்முத்தமெழவே. ( )

சேனாபதிக்குவரிசைகள்யாவுநல்கியுயர்தெய்வீகமானபுனலிற்
றூநானமாடிமறைவாணர்க்கநேகவிததானஞ்சொரிந்துதுகிலுந்
தேனாரலங்கல்பலகலனோடணிந்துபொருதேரிற்புகுந்தனன்வழா
வானாருநாதனதிர்முகிலிற்புகுந்ததெனவன்போடுமன்னர்தொழவே. (௭

கிருபாரியன்கடவுண்மருகன்றிகத்தபதிசாலுவன்கிருதன்முதலோ
ரிருபாலுமன்னர்வரமுனிவார்பெருஞ்சேனையெங்கணுஞ்சூழவரவே
நிருபாதிபன்றனது சேனாதிபன்றனொடுகீள்களம்புக்கனனரும்
பொருபாரதச்சமரமின்றேமுடிப்பலெனுமெண்ணத்திஞேடுபொரவே. (அ)

தாமன்றாதிபர்கள்பலரொடும்வலப்புடைசலிப்பின்றியணியவிறல்கூர்
மாமன்றாதிபர்கள்பலரொடுமிடப்புடைவகுப்பொடணியத்தினகரன்
கோமைந்தன்மைந்தரொருமூவரொடுசேனையுங்கொண்டுறவணிந்தனனிகற்
சாமந்தன்மண்டலிகர்முடிமன்னர்சூழ்வாத்தாணிபதிபின்னணியவே. (கூ)

ஒருவருமெனக்குநிகரில்லையெனுமத்திரன்புத்திரனையுரகதுவசன்
பொருபடைமுனைக்குரியசேனாபதிப்பெயர்புனைந்தமைபுகன்றனமினிக்
குருகுலம்விளங்கவருகுந்திமைந்தர்களிரவிகுமானைக்கொன்றவிரவிற்
ப்ருவான்மிகுந்துளமினைந்தும்பாசறைபுகுந்தனும்வியந்துபகர்வாம். (க0)

வேறு.

செவ்விரவிதிநமகனைச்செகம்புரக்குங்காவலனையிரவலோருக்
கெவ்விரவும்விடிவிக்குமிருகரத்துவள்ளலைப்பின்றிழந்தோமென்று
விவ்விரவுநறுமலர்த்தார்த்தருமன்முதலைவருந்தம்விழிநீர்சோர
வவ்விரவிலிமைப்பொழுதுந்தரியாமலழுதாற்றியலமந்தாரே. (கக)

சாயைவெறுத்தனளவளிற்றலத்தேவிமிகவெறுத்தாடபனனீன்ற
சேயைவெறுத்துயிர்கவர்ந்தானுறவறியான்றபித்தியர்போர்செயித்தானென்று
மாயைவெறுத்திடவினைத்தமாயோனைவெறுத்தனன்வன்மனத்தியான
யாயைவெறுத்தனன்பின்னைவிதியைவெறுத்தனன்வீமற்கிளையகோவே. (கஉ)

அற்றையிராவிடிவளவுந்தனித்தனியேயாகுல முற்றனிலன்மைந்தன்
மற்றைநால்வருமானுமன்னவருநம்வருந்தினியுமநங்குதழ
விற்றைநாள்வஞ்சினத்தின் றுறை முடிக்கவேண்டுமெனுமிதயத்தோடும்
பிற்றைநாண்முரசதிரவளைமுழங்கக்களம்புகுந்தான்பிதாவைப்போல்வான். (கங)

விம்முபெருநம்பணையொலியால்விண்டதுகொலண்டமெனவிண்ணோரஞ்சக்
கைம்முகமாமுதலானகடுஞ்சேனைப்பாஞ்சாலன்காதன்மைந்த
னெம்முகமுந்தானாகியிரதமூர்ந்தணிவகுக்கவிளையோர்யாருந்
தம்முனைவந்தடிவணங்கிப்புடைசூழ்ந்தார்சிறிதுமனஞ்சலிப்பிலாதார். (கச)

அத்திரயூகமதாகவரும்பெருநஞ்சேனையைவகுத்தாங்கதிபனாகி
மத்திரபூபதிநின்றவலியினைக்கண்டதிசயித்துமாலைநோக்கி
யித்திறமாகியபடையோடெப்படிநாஞ்சிலபடைகொண்டெதிர்ப்பதென்றான்
குத்திரமாகியவினைகளொருகாலுந்திருவுளத்திற்குடிபுகாதான். (கரு)

வீடுமனைச்சிலைக்குருவாம்வேதியனைநம்முனைமுன்வீடுசேர்த்த
நீடுமணிப்பொலங்கழலோர்நின்னருகேநிற்கின்றார்நிகரிலாய்கே
ளாடுதிரைக்கடனீந்தியேறினர்க்குக்கழிகடத்தலரியதொன்றோ
தோடவிழ்தாாச்சல்லியனுக்கிளைப்பரோவெனமொழிந்தான்றுளபமாலை. (கசு)

வில்லியரில்வேலாளில்வாளெடுத்தோர்தம்மிலொருவேந்தரொவ்வார்
செல்லியல்வெங்கரியாளிற்றேராளிற்பரியாளிற்சிலர்வேறெவ்வார்
மல்லியல்பொற்றோள்வலிக்குந்தண்டிக்குமெதிர்ந்துபொரவல்லார்யாரே
சல்லியனுக்கொப்பார்நின்றம்பியரிலிலரென்றுஞ்சாற்றினனே. (கள)

அருவரைபோலிரண்டிருபாலமைந்தனையதடம்புயங்கண்டவனிவேந்தர்
வெருவருபோர்மத்திரத்தான்வேறொருவர்மேற்செல்லானினமேலன்றி
யிருவருமேமுனைந்துமுனைந்திரவிகடல்விழுமளவுமிகல்செய்தானு
மொருவரொருவரைவேறலொண்ணாதின்றமக்கென்றுமுரைசெய்தானே. (கஅ)

பார்த்தனொருவனுஞ்சென்றுபரித்தாமாவுடன்மலையப்படைஞரோடு
மாத்திரிமைந்தரிவிளையோன்சௌபலனைவெல்லவிகன்மாவலோனு
மூத்தவன்மைந்தரைவெல்லமுனைப்பவனன்மைந்தனொடுமூண்டுவெம்போர்
கோத்தருமமத்திரத்தார்கோவையுயிர்கவர்தியெனக்கூறியிட்டான். (கக)

## வேறு.

திருபையானுயர்கேசவனிங்கிதக்கேள்விகளுணர்வுறக்கேட்டுத்
துருபதேயனுந்தன்பெருஞ்சேனையைத்துணறியவியூகமாத்தொடுத்து
நிருபர்யாவருஞ்சூழ்வரத்தாழ்சலநிதியெனவிதியெனநின்றான்
பொருபதாகினியிரண்டினுமுனையுறப்போர்வலோர்தூசிகள்பொரவே. (உ0)

ஆயபோதினிற்குருபதிபதாகினிக்கதிபதியாயபூபதியம்
மாயவன்புகன்மொழிப்படிதருமன்மாமதலைமேல்விரைவுடன்வந்தான்
காயும்வெங்கனற்கண்ணினன்செவியுறக்கார்முகங்குனித்தசெங்கரத்தான்
றீயவாகியசிலீமுகமுரானுறச்சொரிதருசிங்கவேறனையான். (உக)

எதிரிதேர்வரும்வன்மைகண்டிமிழ்முரசெழுதியகொடிநராதிபனுங்
கதிரினேழ்பரித்தேரினுங்கடியதன்கவனமான்றேரெதிர்கடவி
முதிரமேல்வருங்கணைகளைக்கணைகளான்முனைகொடுமுனைகொள்கார்விசும்பிற்
பிதிர்படும்படிதொடுத்தனன்றொடித்தடக்கையினிற்பிடித்தவிற்குனித்தே. (உஉ)

கொடிஞ்சிமாநெடுந்தேர்களிற்பூட்டியதுரகதக்குரம்படப்படமண்
ணிடிஞ்சுமேலெழுதூளிமுற்பகல்வருமிரவினைநிகர்ந்ததவ்விரவு
விடிஞ்சதாமெனப்பாந்ததத்தேர்களின்மின்னியமணிகளின்வெயில்போய்ப்
படிஞ்சதூளியோர்நடம்பயிலரங்கினிற்பரப்பியவெழினிபோன்றதுவே. (உரு)

தன்பெருந்தனிச்சங்கினைமுழக்கினன்றருமன்மாமதலைவெம்போரில்
வன்பெரும்பணைச்சங்கினைமுழக்கினன்மத்திராதிபன்றிருமகனு
நன்பெருந்துளைச்சங்குகளெழுப்பியநாதம்வான்முகடுறநண்ணி
மின்பெரும்புயலேழுமொத்ததிர்தலின்மிகுகுரற்றணிதமொத்துளதே. (உச)

வில்லெடுத்தனர்வலியுடைநிலையினர்வீக்குநாண்விரல்களிற்றெறித்து
மல்லெடுத்ததோள்வலனுறவளைத்தனர்வடிக்கணைமுனையுறவடசிச்
செல்லெடுத்தபேரிடியெனமுறைமுறைதொடுத்தனர்தேர்களுஞ்செலுத்திக்
கல்லெடுத்தெதிர்மலைந்தவாலியுமணிக்கழுத்துடையவனுமேயனையார். (உரு)

எய்தவம்புகளிருவர்மெய்யினும்படாதிடையிடையெஃகுடைத்தலைகள்
கொய்தவம்புகளாகியேழுழவனும்வீழ்ந்தனகூறுவதெவன்கொல்
கைதவம்புகலுதற்கிலாவெண்ணுடைக்கருத்தினர்திருத்தகுவரத்தாற்
செய்தவம்புரையறப்பலித்தனையவர்திருக்கணுங்கைகளுஞ்சிவந்தார். (௨௬)

கிரித்தடங்குவடணைந்தகேசரிநிகர்சல்லியன்முரசகேதனன்றன்
பரித்தடந்தனித்தேர்விடும்பாகனைப்பாணமொன்றுற்றலைதுணித்து
வரித்தடஞ்சிலைநாணறுத்தொருமுனைவாளியால்வடிக்கணையொன்றால்
விரித்தவெண்குடைமகுடமுமொடித்தனன்வில்வலோரெவரினுமிக்கோன். (௨௭)

வலவன்வீழ்ந்ததுந்தனுவிறுணற்றதுமனத்தழுக்காறிலாவாய்மைப்
புலவன்வெண்குடையொடிந்ததுமேல்வருபோற்றலனேற்றமும்பொருமற்
குலவுதிண்சிலைக்குரிசிலைத்தம்முனைக்கொண்டவீரியமெலாங்கொண்டான்
கல்வமாமயிலொழித்துப்பஞ்சானனமெழுதியதனிக்கொடிக்கந்தன். (௨௮)

தனதுதிண்கையிற்சரத்தினுந்தம்பிகைச்சரம்விரைந்துடற்றவிற்றடக்கைக்
கனதனுத்தனையூன்றிநின்றிருவருங்கணக்கறமலையுமாகண்டா
னெனதுதோள்களிவிளையவன்றனக்குவேறியாதெனுமெண்ணுடைமனத்தான்
வினதைகாளையோடுவமைகூர்வலியினான்வேந்தர்யாரினும்புகழ்மிக்கோன். (௨௯)

எந்தவெந்தவெஞ்சாயகமறையுடனிமையவர்முனிவரர்கொடுத்தா
ரந்தவந்தவெஞ்சாயகமடங்கலுமவரவர்முறைமையிற்றொடுத்தார்
முந்தமுந்தமற்றுள்ளவாயுதங்களுமுடிமுதலடியளவாக
வுந்தவுந்தவெங்குருதியுமூளையுமுகவுகவுடற்றினாருரவோர். (௩0)

மத்திரப்பெயர்ச்சிங்கவேறனையவன்வன்கைவான்படைகளின்மயங்கிப்
பத்திரப்பெயர்ப்பருத்தகைச்சிறுத்தகட்பாய்மதப்பருஉப்பகடனையான்
சித்திரக்கதிர்மணிமுடிப்பிடிகைத்திண்டிறற்றிகிரியந்தேர்நின்
றத்திரத்தைவிட்டொருதனிக்கதையுடனதிர்ந்துபோயவனியிலானான். (௩௧)

பகைவனேறியதேர்விடும்வலவனுந்திகிரியும்பாய்பரிமாவும்
புகையெழும்படியிமைத்தகண்விழிக்குமுன்பொடிபெழவிடியெனப்புடைப்ப
வகைகொடார்முடிமத்திரத்தலைவனுமாமறத்தோமரப்படையான்
மிகைகொள்வன்றிறல்வீமனைநெற்றியிலெற்றினன்வெற்றிகூர்ந்திடவே. (௩௨)

வேறு.

தோமரந்தன்னால்வாயுசுதனமராழ்ந்தபோதி
லேமருவரிவிற்றானையிருபெருஞ்சேனையோரு
மாமருதடந்தேர்வாசிமத்தவாரணங்களூர்ந்து
தீமருகானமென்னத்தனித்தனிசெருச்செய்தாரே. (௩௩)

தேரவன்மைந்தன்மைந்தர்சித்திரசேனனேனைச்
சூரியவன்மன்சித்திரகீர்த்திமுச்சுடரோடொப்பார்
வீரரில்வீரனானவெம்பரிநகுலனோடும்
போரில்வந்தெதிர்ந்துதானைபோயுழிப்போயினாரே. (௩௪)

தசையுறவளர்ந்தபொற்றேர்ச்சகுனியுந்தனயராகி
யிசையுடன்வளர்ந்தவீரரிருவருமிரதமேலோர்
நிசையுறுமதமாவந்துநெருப்பெதிர்ப்பட்டதென்ன
விசையனதிளவலோடுசெருச்செய்துவெந்நிட்டாரே. (ருரு)

புயங்கவெம்பதாகைநச்சுப்பொங்கழற்புயங்கம்போல்வான்
றயங்குவெங்கழற்காற்கேதுதானெனுந்தனுவலோனை
வயங்குவெஞ்சிறகர்ப்புங்கவயங்கொள்கூர்வாளியொன்றா
லியங்குகவானினூடென்றிமைபவனுக்கினானே. (ருசு)

இருபெருஞ்சேனையோருமிப்படிச்செருச்செய்காலைத்
தருமன்மாமதலைதன்மேற்சல்லியன்றானுமீளப்
பொருபரித்தடந்தேருந்திப்புகைகெழுமுனைகொள்வாளி
யொருதொடைதன்னிலோரேழுரத்துடனழுத்தினானே. (ருஎ)

பின்னரும்விரைவினோடும்பெய்கணைமாரிசிந்தி
முன்னருமுனையினின்றோர்முதுகிடமுரண்டுசீறித்
துன்னருந்தடந்தோராண்மைச்சுமித்திரன்முதலாவுள்ள
மன்னரையிமைத்தகண்கண்மலருமுன்மடிவித்தானே. (ருஅ)

தனக்கெதிர்தானேயானசல்லியன்றானுமீளச்
சினக்கனன்றானவாளச்சிலம்பெனச்சிலையும்வாங்கிக்
கனக்குலமேழுஞ்சேரக்கன்மழைபொழிந்ததென்ன
முனைக்கடுங்கணையால்வீமன்வடிவெலாமூழ்கவெய்தான். (ருகூ)

அறைகழல்வீமன்றானுமங்கர்கோன்பாகன்றானு
முறைமுறைபுரிந்தவெம்போர்மொழிவதற்கியாவர்வல்லார்
நறைகெழுதும்பைமாலைநகுலசாதேவரென்னு
மிறைவருஞ்செங்கண்மாயனிளவலுமிவன்மேற்சென்றார். (சO)

சென்றுவெஞ்சிலைகள்கோலிச்சிலீமுகமுறப்புத்தோறு
மொன்றெனவநேகமேவியொருமுகமாகப்போர்செய்
தின்றிவனுவிகோறுமென்றுசல்லியன்மேற்றங்கள்
வன்றிறல்யாவுங்காட்டிமாறில்போர்மலைந்திட்டாரே. (சக)

மதம்படுவேழமன்னமத்திரராசன்றானும்
விதம்படத்திரண்டுபோர்செய்வீரர்தம்மெய்களெல்லாஞ்
சதம்படுபகழியோரோர்தனுக்களினூருவியோட
விதம்படவெய்துநக்கானேவினுக்கிராமன்போல்வான். (சஉ)

*தம்பியர்தளர்ச்சிகண்டுசமீரணன்புதல்வன்சீறித்
தும்பைமாமாலைவேய்ந்துதொடுகணைவலிதின்வாங்கி
வெம்புபோர்மத்திரேசன்வியன்கொடிபாகுவாசி
செம்புனீர்சொரிகளத்திற்சிதறிடவறுத்துவீழ்த்தான். (சங)

---

* தம்பியர்தளர்ச்சிகண்டுசமீரணன்புதல்வன்மீள
வெம்பரித்தேரின்மேலான்வில்லினைத்திகிரியாக்கிச்
சம்பரன்பகைவனென்னச்சல்லியன்றேரும்பாகு
மம்புவிதன்னில்வீழவையிருகணைகளேவி. (சங) என்றும் பாடம்.

*உற்றிருபுறத்துந்திண்டேர்க்குராறுறவுதவியாய
கொற்றவர்பலரும்வீழக்கொடிகுடைகவரிவீழச்
சுற்றியநேமிவாசிதுளைக்கரக்கோட்டுநால்வாய்ப்
பொற்றைகடுணிந்துவீழப்புங்கவாளிகளுந்தொட்டான். (௪௪)

துருபதன்முதலாவுள்ளோர்சோமகர்முதலாவுள்ளோர்
நிருபர்தங்குலத்துளோனைநிருபர்களாகியுள்ளோர்
தருமனமாமதலையோடுந்தம்பியரோடுங்கூடி
யொருமுகமாகிமேற்சென்றுறுசெருப்புரியும்வேலே. (௪௫)

வேறு.

அறுதியாகவின்றருஞ்சமர்முடித்துமென்றறத்தின்மைந்தனுக்கன்பா
லுறுதிகூறியபாகவெவ்விரைவுடனூர்ந்தவெம்பரித்தேரோன்
பெறுதியாகமாதவம்புரிசிலைமுனிபெற்றவீரனுக்கின்றே
யிறுதிநாளெனவாங்கவனணிந்தபேரிகலணியிடைச்சென்றான். (௪௬)

சென்றுபோர்புரியளவையினருச்சுனன்செழுமணிமுழுநீலக்
குன்றுபோனிறம்பவளவானகுன்றெனக்குருதியிற்சிவப்பேற
வொன்றுபோல்வனபிறைமுகக்கடுங்கணையொருபதுதொடுத்திட்டான்
வென்றுபோர்புரியவுணருர்நீறுசெய்வீரன்மைந்தனையொப்பான். (௪எ)

தொடுத்தவம்பினையம்பினால்வானிடைத்துணித்திடைநணித்தாக
விடுத்தவம்பினன்மருவலன்பாகனும்வெம்பரிகளும்வில்லு
நடுத்தறிந்திடமார்பினுந்தோளினுநாலிருகணையெய்தா
னெடுத்தவெஞ்சிலைதறிதலுமவனுமாவிரதம்விட்டிழிந்தானே. (௪அ)

இழிந்துமீளவும்வேறொருவில்லெடுத்தெரிமுனைபுகைகாலப்
பொழிந்தவாளியோராளவிலவற்றையும்பொடிபடுத்தினன்பார்த்தன்
கழிந்தநீர்க்கணைகோலிவந்தெதிர்ந்துதன்கார்முகக்கட்டாண்மை
யழிந்துபோயினன்முனிமகனெனவெழுந்தார்த்ததுபெருஞ்சேனை. (௪௯)

செருப்புலக்கையாமுரலிடைவிருதராங்கினைக்குரல்களைச்சேர
மருப்புலக்கைகொண்டிடிக்கும்வெஞ்சினமனமத்தவாரணமன்னான்
பொருப்புலக்கையுற்றலமரவரிந்தவன்புதல்வன்மேலொருபார
விருப்புலக்கைகொண்டெறிந்தனனவனுமஃதெண்முறிடவெய்தான். (௫0)

உலக்கையெட்டுறுப்பானபின்றொருதனித்தண்டுகொண்டுயர்கேள்வி
யலக்கைவித்தக்கிளவறேர்விட வருமருச்சுனன்றடந்தோளா
மிலக்கையுற்றிடவெறிந்தனனெறிதலுமிவனவனெறிதண்டை
வலக்கையிற்றொடுகணைகளாற்பலதுணியாகவில்வளைத்தானே. (௫௧)

---

* மற்றவன்புதல்வர்யாருமனங்கலக்குற்றுவீழ
வுற்றிருபுறனுந்திண்டேர்க்குராறுறவுதவியாய
கொற்றவர்பலரும்வீழக்கொடிகுடைகவரிவீழப்
பொற்றவர்துணிந்துவீழப்புங்கவாளிகளுந்தொட்டான். (௪௪) என்றும் பாடம்.

பூத்தபைங்கொடியனையமெய்ப்பூணணிபொதுவியர்தனந்தோயுந்
தூர்த்தன்வெம்பரித்தேர்விடுமளவுமிச்சுரபதிமகனோடுங்
கோத்தவம்பினிற்பலபடைகளிலமர்கொள்ளுதலரிதென்று
பார்த்தன்முனைபுநின்றமர்புரிந்திலன்கடற்பாரபுகழ்பரித்தாமா. (௫௨)

மற்றவன்றனைமுதுகுகண்டவன்றிருமாதுலன்கிருபப்போர்க்
கொற்றவன்புறந்தரமலைந்தேனைவெங்கொடுஞ்சிலைக்குலவேந்தர்
முற்றும்வெந்நிடப்பொருது சல்லியனொடுமுனைபடவெதிரமோதிச்
செற்றவன்புடையனபுடைத்தம்முனைத்தெம்முனைகெடச்சேர்ந்தான். (௫௩)

தயங்குவெண்குடைச்சல்லியன்றண்டுடைச்சமீரணன்மகன்றன்னொ
லுயங்குவெம்பரிபாகுதேர்வரிசிலையுயர்த்தவண்கொடியற்றுத்
தியங்குகின்றபேரிறுதிகண்டுயங்குதல்சிந்தையிற்சிறிதற்ற
புயங்ககேதனன்கண்ணினுக்கிமையெனப்பொருபடையுடன்சேர்ந்தான். (௫௪)

சாத்தகிப்பெயரவன்சமீரணன்மகனகுலன்வெஞ்சாதேவன்
பார்த்தனென்றிவரனைவருமிவர்பெரும்படைத்தலைவனுஞ்சேர
வார்த்தெழுந்துமேல்வருதல்கண்டணிகழலாளியேறனையானும்
பேர்த்துமுந்துறத்திருகினனரசொடும்பெரும்படையொடுமம்மா. (௫௫)

தண்டுழாய்முடிமாயவன்றம்பியைச்சாயகம்பலகோடி
கொண்டுதேர்முதலியாவையுமழித்துமெய்குலைந்திடும்படிமோதி
மண்டுபாய்பரிநகுலனையன்புடைமருகனென்றெண்ணுமற்
கொண்டல்வாயிடிநெருப்பெனச்சிற்சிலகூரவாளிகளெய்தான். (௫௬)

ஒருகொடுங்கணைதொடுத்தலும்வெங்கொடுத்தோடினன்சாதேவ
னிருகொடுங்கணைக்கிலக்கமாயினன்மருத்தீன்றவனிருதோளும்
பொருகடுங்கணைமூன்றினாலருச்சுனன்புயமுமார்பமும்புண்செய்
தருகொடுங்குறநுதலின்மேலம்புநான்கறத்தின்மைந்தனையெய்தான். (௫௭)

அறத்தின்மைந்தனதானனங்குருதியாலருக்கன்மண்டலம்போல
நிறத்தவாறுகண்டருகுறக்கதைகொடுநின்றவாயுவின்மைந்தன
மறத்தடம்புயவரிசிலைச்சல்லியன்மணிமுடிகழன்றோடிப்
புறத்துவீழ்தரவெறிந்தனனெறிந்தமைபுயங்ககேதனன்கண்டான். (௫௮)

வேறு.

தன்படைத்தலைவனைத்தண்டினாலெறி
வன்புடைத்தடம்புயமருத்தின்மைந்தன்மேன்
மின் *படைத்தொருகணைவிசையினேவினான்
புன்படைப்பினிலயன்படைத்தபூபனே. (௫௯)

* படைத்தொளிர்கணை என்றும் பாடம்.

காமனைச்சம்பரன்கனன்றபோரென
வீமனைப்போர்செய்து வெல்லமுன்னிய
தீமனத்தரசனைச்சிலீமுகங்களின்
மாமுனைப்படுத்தினன்மறித்து வீமனே. (௬௦)

யாளிகளிரண்டெடுத்திகலுமாறுபோன்
மீளிகளிருவருங்குனித்தவில்லுமிழ்
வாளிகளிருவர்தம்வடிவிற்பாயுமுன்
றாளிகள்பட்டனதுணிந்து வானிலே. (௬௧)

தாண்முதன்முடியுறச்சரங்களேவியும்
வாண்முதற்படைகளான்மலைந்து மற்றவர்
தோண்முதலுறுப்பெலாஞ்சொரிகாலவே
நீண்முதற்றீபமேநிகருமாயினர். (௬௨)

வன்பரிபாகுதேர்மதிநெடுங்குடை
மின்பொழிகணையுமிழ்வில்விலோதன
மென்பனயாவையுமிற்றுவீழமா
றொன்பதுபடியமருடற்றினரோ. (௬௩)

இரணவித்தகனிவனெதிர்ந்தவேலினான்
முரணுடைச்சுயோதனன்முதுகுதந்தபி
னரணுடைப்படைக்கரசானமத்திரன்
மரணமிப்பொழுதெனவந்துமேவினான். (௬௪)

வேறு.

நேரிலாதகிருபப்பெயர்விறற்குருவுமீடுசாலுவனுமற்புயமணிச்சிகர
வீரனெனசகுனிப்பெயர்படைத்தவனும்வீறுசால்கிருதபற்பனுமெனப்புகலு
மாரமார்பினர்முதற்படைஞரிற்றலைவரானவீரருரகத்தினர்களிற்றினர்க
ளேறுமேறுமிரதத்தினரெனைப்பலருமோதவாரியெனமந்திரனொடொத்தனரே. (௬௫)

வீமசேனனுமவற்கிளையபச்சைமயில்வேளின்வானவர்குலப்பகைதொலைத்தவனு
மேமகூடகிருத்தமவயப்புரவியேறுவீரனுமவற்கிளையவித்தகனு
நாமமாயிரமுடைக்கடவுளுக்கிளையனாயிரேறுவினைப்பெற்றொளிர்நிறத்தவனு
நேமிசூழ்தரணிபெற்றிடநினைத்தமர்செய்சேதிமானுமெதிருற்றினர்துணைச்செயவே. (௬௬)

ஆடன்மாவுமலையொப்பனமதக்கரியுமாழிசேர்பவனமொத்தவிரதத்திரளு
நாடுபோரிலரியொத்தவனிகத்திரளுநாலுபாலு*மெழுவுற்றமருடற்றினர்க
ளோடியோடியெதிருற்றவர்முடித்தலைகளூறுசோரியுததிக்கிடைவிழுத்தினர்கள்
கோடிகோடிதமரப்பறைமுழக்கினொடுகோடிகோடுகள்குறித்தவிருபக்கமுமே. (௬௭)

ஆனபோதிருகளத்திலுமிகுத்தவிறலாண்மைவீரரொருவர்க்கொருவர்மெய்க்கவச
மானமேயெனநினைத்துவரிபொற்சிலையும்வாளுமேலுமுதலெத்திறவிதப்படையு
மேனிபூடுருவவெட்டியநிலைக்குவமைவேறுகூறவிலதெப்படிமலைத்தனர்க
டானவானவர்கள்யுத்தமுமரக்கரொடுசாகைமாமிருகயுத்தமுநிகர்த்தனவே. (௬௮)

---

* எழுவொத்தமரென்றும் பாடம்.

வீமசேனனொடருச்சுனன்வயப்புரவிவீரமாநகுலனட்பினவனுக்கிளைய
தாமமீளியளிமொய்த்ததுளவப்புதியதாரினனருசன்விற்குருவைமுற்பொருத
சோமசேசபதிமெய்ப்புதல்வன்மற்றுமுளசூரரானவரைமுற்றுறவிலக்கியெதிர்
மாமனாகியுமிகைத்துவருமத்திரனைவாவெனாவமர்தொடக்கினனுதிட்டிரனே. (௬௯)

வீரசாபமொரிமைப்பினில்வளைத்தெதிர்கொள்வேகசாயகவிதத்திறமெனைப்பலவு
மாரசாயகமெனச்சிகரமற்புயமுமார்புமுழ்கவுடன் ...ற்றமுனையிற்புதைய
வீரமானகுருதிப்பிரளயமெய்ப்புறமும்யாறுபோல்பெருகவெற்றுதனும்வெற்றிபுனை
சூரர்யாரினுமிகுத்திருண்முடிக்கவருசூரனெனவியப்புடையமத்திரனே. (௭0)

ஆரவாரமுரசக்கொடியுயர்த்தவனதாகமீதணிமணிக்கவசமற்றவிழ
ஆருநேமியிரதத்துவயிரச்சுடையவோடுவாசிதலையற்றி ...நிலத்துருள
நேரிலாவலவனெற்றிதுளைபட்டுருவநீநொறுடிபிடித்ததனிவிற்றுணிய
வீரவாய்முனைநெருப்புமிழ்வடிக்கணைகளைவினனொருநொடிக்குளொதிரற்றிடவே (௭௧)

வீறுசாலருளறத்தின்மகனப்பொழுதுவேறொர்தேர்மிசைகுதித்திமைபவெற்பினிடை
யேறுகேசரியொடொத்துளநெருப்புமிழ்வீறிலார்புரமெரித்தவனிகர்க்குமென
மாறிலாதவெஞ்சத்தியையெடுத்துநெடுவாயுவாகுமெனவிட்டனனிமைப்பொழுதி
லாறுபாயருவிமுக்குவடிறுத்தசெயலானதான்முனைகொண்மத்திரனமுடித்தலையே. (௭௨)

வேறு.

தொட்டவரிசிலைத்தடக்கையிராமனென்னத்தொடுத்தகணைதப்பாமற்றொழாதவேந்த
ரிட்டகவசமுமார்பும்பிளந்தபின்னரெடுத்தவொருவடிவேலாலிளையோனென்ன
மட்டவிழுந்தும்பையந்தார்த்தருமன்மைந்தன்வாகுவலியுடனெறியமத்திரேசன
பட்டனனென்றணிகுலைந்துமுதுகிட்டோடிப்படாதுபட்டதுயர்த்தபணிப்பதாகன்சேனை (௭௩)

மதிகண்டபெருங்கடல்போற்குந்திமைந்தர்வன்சேனையார்ப்பதுமன்னன்சேனை
நுதிகொண்டகனல்கொளுத்துமிராமபாணநுழைகடல்போனொந்ததுநோக்கிநோக்கிக்
கதிகொண்டபரித்தடந்தேர்ச்சல்லியன்றன்கண்போல்வாரெழுநூறுகநீந்தோர்கள்
விதிகொண்டபடைபோல்வெம்படைகளேவிவெம்முரசக்கொடிவேந்தன்மேற்சென்றாரே. (௭௪)

அவரளவோவரவுயர்த்தவரசன்றானுமாகுலத்தோடருஞ்சமரிலரியேறென்னக்
கவரிபுடைபணிமாறத்தவளக்கொற்றக்கவிகையொருதனிநிழற்றக்கரைகாணாத
வுவரிநிகர்பெருஞ்சேனைவெள்ளஞ்சூழவுயிரனையதுணைவருடன்மாமன்சூழத்
தவர்முதலாம்படைகளொடுதன்னைவென்றுதாணிகொளவருநிருபன்றன்னைச்சார்ந்தான்.

வீமன்முதற்றம்பியரும்பொருவிலாதவெஞ்சேனைத்தலைவருநம்போர்வென்றிகூருஞ்
சோமகருமுதலாயதறுகண்வீரர்தம்பிகளையரியினங்கடொக்குமாபோற்
றுமமணித்தடஞ்சிகரத்தோளுமார்புஞ்சாமுமுகத்தனுவணக்கிச்சாய்ந்தசோரி
பூழுழுதும்பரந்துவரப்பொருதவீரம்புலவோர்க்குமதிசயித்துப்புகலலாமோ. (௭௬)

தன்றமையன்றனைப்பொருது வெல்லவந்ததானையெலாநெருக்கித்தராணிபாலும்
புன்றமையனெதிரவனுக்கிளையவீரர்பொரவந்தோரெழுவரையும்புவிமேல்வீழ்த்தி
யின்றமையுஞ்சமராமினிக்காண்டல்பாவமெனறிமையோர்திசையிப்பவிமயம்போல
நின்றமைகண்டானிலனைமகிழ்ந்துநோக்கிநெஞ்சுறவன்றென்செய்தானெடியமாலே.(எஎ)

செயகந்தன்செயவன்மன்செயசேனன்சேனுவிந்துசயத்திரதன்றிறலார்விந்து
வயமொன்றுவிக்கிரமனென்போராவிவாறுபொருந்தறபின்மதகளேழுங்
கயமொன்றுசொரியவெதிர்நின்றதென்னக்களிதுவலம்புரிவீமனமுழக்கக்கண்டங்
கயனின்றவலம்புரித்தாரண்ணல்சோர்ந்தானருசர்மேலன்பெவர்க்குமாற்றலாமோ. (எஅ)

தனக்குநிகர்தானனகிருதவன்மன்றம்பியர்களெழுவர்படத்தம்முன்பட்ட
மனக்கவலைபறிந்துபெருஞ்சேனையோடுமற்றவன்றம்பியரைவரோடும்வந்து
சினக்கதிர்வேல்வீமனுயிர்செகுப்பாமெனண்ணிச்செருச்செய்தானிமைப்பளவிற்றிருகியோட
வெனக்கிவரேயமையுமெனப்புறக்கிடாதவ்விளையவர்மேற்கடுங்கணையைந்தேவினனே. (எகூ)

சித்திரவாகுவினோடுபெலசேனன்போர்ச்செயசூரன்சித்திரனுத்தமவிந்தென்றே
யத்திரவில்லாண்மையினிற்றிகழாநின்றவைவரிவர்யாவரையுமடர்ப்பான்வந்தோர்
சத்திரமயாவையுமேவிச்சகசூழத்தச்சமர்விளைத்தாரெடும்பொழுதுசமீரணன்றன்
புத்திரனுன்முனைசென்றவெழுவரோடும்பொன்னுலகக்குடிபுகுந்தார்புலன்கள்போல்வார். (அ0)

ஏற்றிடைவெங்கனலுழைந்ததென்னமுன்னமெழுவருடன்றனக்கிளையோரைவர்சோக்
கூற்றிடையேகுதலுமிகக்கொதித்துநாகக்கொடிவேந்தன்முடிவேந்தர்பலருஞ்சூழ
நாற்றிசையுமெழுந்துபெருங்கடலைமோதிநடுவடவைக்கனலவித்துநடவாநின்ற
காற்றெனவேபாண்டவர்தம்படலந்தோறுங்கணைமழைகள்விசயகொட்டினனே. (அக)

தன்கரத்தில்விற்றுணியவேறோர்வில்லாற்சாதேவன்வலம்புரிப்பூந்தாமவேந்தன்
வன்கரத்துமார்பகத்தும்புயத்துஞ்சோரவைவாளிதுளிப்பித்தான்மற்றுமற்று
முன்களத்திலெதிர்ந்துளோரிருசேனைக்குமுன்னெண்ணுந்திறலுடையோர்முன்னேமுன்னே
பின்களத்தைச்சோரியினூற்பரவையாக்கிப்பிறங்கலுமாகவுனர்மடிந்தவண்ணமெல்லே. (அஉ)

காந்தகனுமிழ்சினவேற்கைக்காந்தாரர்காவலனுஞ்சகுனிபுந்தன்கனிட்டனை
வேந்தனுமன்னவனுடன்பல்வேந்தரோடும்வெம்பனைக்கைப்பலகோடிவேழத்தேர்
மேந்துதடம்புயச்சிகிரிவீமன்றன்சேனைகண்மலைந்துதொலைந்திரிந்தாரிவரைப்பல்ல
லூர்ந்தமணிப்பணிக்கொடியோனிளைஞர்மீளவொன்பதின்மரவனுடன்வந்துடற்றினாரே. (அங)

பிறங்கியவுத்தமனுதயபானுகீர்த்திபெலவன்மன்பலவீமன்பிரபலதானன்
மறங்கிளர்விக்கிரமவாதசுசீலனாசீலன்வருபெயர்கொளொன்பதின்மர்வாளிலெற்றத்
திறங்கொள்கசாதுரகபதாதிகோடிசேரவோரணத்தவிபசிலைகால்வாங்கிக்
கறங்கெனவேசூழ்வந்துபொருதான்வீமன்கட்டாண்மைக்கிதுபொருளோகருதுங்காலே. (அச)

பாண்டவரில்வீமன்கைப்படையான்முன்னம்பட்டொழிந்தோரொழிந்தோர்கள்பலருங்கூடிக்
காண்டகையகேசரிவெஞ்சாபமன்னோர்கண்ணிலன்மதலைபரக்களத்திலன்று
மூண்டுபெரும்பணித்துவசமுன்னோன்காணமுனைதமர்செய்தவணியின்மேன்முடிகள்வீழத்
தீண்டரியதிருமேனிதேரில்வீழச்சேணடைந்தாராமபையர்கள்சிந்தைவீழ. (அரு)

தனக்கிளையோர்தொண்ணூற்றொன்பதின்மர்தாமுஞ்சயவீமன்சரத்தாலுந்தண்டினாலுங்
கனக்குடிவிற்குடிபேறக்கண்டுகண்டுகைசோரமெய்சோரக்கண்ணீர்சோர
வெனக்குறுதியுரைத்தவர்தம்முரைகேளாமலென்செய்தேனெப்பொருளுமிழந்தேனென்று
மனக்கவலையுறுமன்னன்றன்னைநோக்கிமாமனுமற்றொருகோடிமாற்றஞ்சொன்னான். ()

## வேறு.

அருத்துசாலையைபோல்வாழுமதுசர்யாரும்வானேற
வுருகிமாழ்கிநீசோகமுறினுமீளவாரார்கண்
மருகவாழிகேள்போரின்மடிவுறுதபூபாலர்
முருகவேளையேபோல்வர்முரணுறுதகூர்வேலோய். (௮௭)

கிருதநாமனுல்வேதகிருபனுதியோரான
நிருபர்சேனைசூழ்போதகிமிரவோடிமாறுது
பொருதுசீறிமேன்மோதுபுலியினேறுபோல்வாரை
முரசகேதுவோடோடமூரணுபோரின்முள்வோமே. (௮௮)

எனமகீபன்வாடாமலினியவாய்மையேகூறி
யனிகராசியோடேகியமரில்வீமன்மேன்மோத
முனைகொள்வீமனுமாறுமுறுவல்வாணிலாவீச
மனனிலோடுதேர்மாறிவலிகொள்பாரிலானனே. (௮௯)

தரணிதாழுமாபோது சகுனிசேனைவானேற
முரணுவாகுவான்மோதிமுடுகுநீள்கதாபாணி
யரணியாகவேயேனலட்டவியானதானீடு
மிரணபூமிமால்யானையிரதம்வாசிகாலாளே. (௯0)

அலகில்வேலைபோல்சேனையதிபனுவிபோமாறு
பலமதாகமேன்மோதுபடைஞர்சாயவேநாமு
மிலகுவாளம்வேனேமியெவருமேவுவேமாக
தலைவர்களெனுவீரசகுனி*கூறினன்மீள. (௯௧)

விரகுறுதகுதாடுவிடலைமீதுசாதேவ
னிரதமேவியோர்வாளியெழில்கொண்மார்பிலேவாமுன்
மருகனுனபூபாலன்மதிகொண்ஞானிபூண்மார்பி
லுருவவீசினான்மாமனுதவியாவொர்கூர்வேலே. (௯௨)

எதிரிலாததோளாண்மையினவறேரின்மேல்விழ
வுதவியாகவேலேவுமுலகுகாவலன்மார்பின்
முதுகிலோடவேநூறுமுழுகவேவினான்வாளி
யதலபூமியூடாழியமுதமாரும்வாயானே. (௯௩)

சமரில்வீமனேவோடுதலைவன்வீழவேபூமி
யமானனதாமாவொரயிலைவீமன்மேலேவ
வெமர்களாவிபோல்வானெடிகல்செயாமலீசான
குமாரனுவிபோமாறுகுடைதுநாமெனுவீரன். (௯௪)

---

* கூறினன்முன என்றும் பாடம்.

தனுவின்வேதநூல்வாசிதனயனைதாமாவை
முனைகொண்மார்பின்வாய்மூழ்கிமுதுகிலோடவேயெழு
வினைகொள்வாளிமெலேவிவிதமதாகவேபோர்செய்
மனுகுலேசனீள்சாபவலிமைகூறவாராதே. (௯௫)

மருகன்வீழவேசாபமறைவலானுமார்மாலை
விருதனோடுபோராடிவெரிநிடாவிடாதோட
வருகுசூழுமாசூராடையவோடவோடாது
திருகினனராவேறுதிகழ்பதாகையான்மாமன். (௯௬)

சகுனியாவிபோமாறுசபதவாய்மைகொடாமன்
மகிபனேவுவேல்போலவழுவுறாமன்மேலோட
வுகவையோடுமாமாயனுதவுகூர்நீள்வேலை
யிகலொடேவினன்வீமனிளவலானபோர்மீளி. (௯௭)

வேறு.

தாவியவெம்பரிமாவிரதத்திடைசாதேவ
னேவியவேலொடுசௌபலராசனிறந்தானென்
றேவியதெங்கணும்வெஞ்சமர்பார்முழுதுடையானு
மாவியழிந்தவுடம்பெனவன்மையழிந்தானே. (௯௮)

தும்பியில்வாசியினீடிரதத்திலொர்துணையின்றிப்
பம்பியசேனையழிந்துவரும்படிபாராதான்
றம்பியர்யாவருமாதுலனும்பலதமரும்போ
யம்பியிழந்தபெருங்கடல்வாணரினலமந்தான். (௯௯)

ஒருமதிவெண்குடையிருகவரிக்குலமுருஞ்சீ
ரிரதமதங்கயபிவுளிபணிக்கொடிமுதலான
வரசர்பெருந்தகையரசுடையாளமனைத்தும்போய்த்
திருநயனங்களிலும்பதமலர்கள்சிவப்பேற. (௧00)

அயனிடையசுரர்குருப்பெறலுற்றதவன்பான்முன்
கயமுனிபெறவிமையோர்குருவிரகொடுகைக்கொண்டு
பயமுறமாமுனிவர்க்குரைசெய்ததுபார்மீதே
யுயர்மறையொன்றுளதம்மறையொருமுனியுரைசெய்தான். (௧0௧)

அந்நெடுமாமறையாலமரத்திடையழிசேனை
யின்னுயிர்பெற்றிடும்வகைகொடுமீளவுமிகல்வேனென்
றுன்னியுளந்தெளிவுற்றொருவர்க்குமிஃதுரையாதே
தன்னொருவெங்கதையோடுதராபதிதனிசென்றான். (௧0௨)

தூயநலந்தருகங்கையெனப்பலசுரருந்தோய்
பாயதடந்தனின்மூழ்கினனம்மறைபயில்வேனென்
றாயுமனங்கொடுசேவடிமுன்பினதாவேகிச்
சேயவன்வெண்டிரைவாரியின்மூழ்கியசெயலொத்தான். (௧0௩)

வேறு.

கம்பித்துவந்தபுலனைந்துங்கலக்கமாற
வெம்பித்தடங்கிமனஞ்சித்தொடுமேவல்கூரத்
தம்பித்ததோயத்திடை*வாயுத்தசமுமொக்கக்
கும்பித்துஞானப்பெருந்தீபங்கொளுத்தினானே. (க0ச)

பன்னாளும்யோகம்பயில்வோரிற்பதின்மடங்காத்
தனனாகமுற்றுமெலிவின்றித்தயங்குமாறு
நனனாளமூலநளினத்தைமலர்த்திநாவா
லுனனாமலுன்னு†மறைமந்திரமோதினானே. (க0ரு)

இதயஞ்சிறிதுங்கலங்காதவிறைவனிவ்வா
றுதகந்தனிற்புக்குயர்மந்திரமோதுமவேலை
மதவெங்கயப்போர்வளவற்குமுதுகுதந்த
விதமண்டலீகர்புலிகண்டமிருகமொத்தார். (க0சு)

பரபாவகமாம்பரித்தாமனும்பாய்பரித்தேர்க்
கிருபாரியனுங்கிருதப்பெயர்க்கேடிலோனு
மொருபாவிறைகொண்டொழிசேனையுந்தாமுமீண்டு
பொருபாரதப்போர்புரிசௌபலன்பொன்றல்கண்டார். (க0எ)

கண்டார்மிகவும்பரிவோடுகலக்கமுற்றார்
தண்டாரகைதோய்விசும்பொத்தசமரபூமி
கொண்டான்முரசக்கொடியோனெனக்கோபமிஞ்சி
விண்டார்மிகவும்வியந்தாரவர்வீரமம்மா. (க0அ)

பூணாரமார்பின்வலத்தேபுரிபூந்தண்மாலைக்
கோணார்சிலைக்கைநெடுநாகக்கொடிகொள்வேந்தைக்
காணார்களத்திலொருபானுங்கருகியுள்ளம்
வாணாடருக்கன்குடிபோமகல்வானொடொத்தார். (க0கூ)

தனிவந்துதோன்றுதலுஞ்சஞ்சயனென்னும்வேத
முனிவன்றனைக்கண்டிருதாளின்முடிகள்சேர்த்தி
யனிகங்கெழும்போரரசன்றனையங்கைநெல்லிக்
கனிகண்டனையாயெவட்காண்குதுங்காட்டுகென்றார். (கக0)

இவ்வோர்விரைவினிவன்றன்னைவினவவஞ்ச
லவ்வோனுயிருக்கழிவில்லையமரின்மோதி
வெவ்வோடையானைவிறன்மன்னவர்வீயயாரு
மொவ்வோன்மறித்துமமர்மோதவுணர்தலுற்றான். (ககக)

---

* வாயுவுந்தம்பமாக என்றும் பாடம்.

† மறைமந்திரம் என்றும் பாடம்.

ஈண்டுச்சமரினிறந்தோர்களெவருமின்றே
மீண்டுற்பவிக்கவிடுவித் துவிரகினோடும்
பாண்டுப்பயந்தோர்படையாவுமடியமோதப்
பூண்டுத்தமமாமறைகொண்டகன்பொய்கைபுக்கான். (௧௧௨)

என்னைத்துருபன்மகனுதியர்கோறலெண்ணப்
பின்னைக்குவாய்த்தோன்பிழைப்பித்தனன்யானும்வந்தேன்
றன்னைக்குழூழ்கத்தடம்வாய்த்தமைதந்தையோடு
மன்னைக்குரைப்பேனெனப்போயினனந்தணாளன். (௧௧௩)

## வேறு.

வேதியன்வாய்மைகேட்டவேதியன்மகனுமற்றை
யோதியகிருபனுதியுள்ளவர்தாமுமெய்தி
மாதுயாகற்றுமற்றவாய்மைகேட்டங்குஞான
வூதியம்பெற்றுலென்னவொடுங்கியவோடைகண்டார். (௧௧௪)

புள்ளியலரவங்காணார்பொருதெறிதாங்கங்காணார்
துள்ளியமீனங்காணார்சூழ்வருமணிலங்காணா
ரொள்ளியமலர்களெல்லாமுறங்குதலன்றிமன்றல்
வள்ளியதோடுதோறுமதுநுகர்வண்டுங்காணார். (௧௧௫)

ஏறியபாதம்போலவிறங்கியபாதநோக்கிச்
சாறியவிரதமிஞ்சுந்தடம்புனலடங்கநோக்கி
மாறியல்வேந்தர்தம்மில்வாண்முகநோக்கிநோக்கிக்
கூறியவரசன்றன்னைக்கூவினரழைக்கலுற்றார். (௧௧௬)

நின்கிளையாகிவந்தநிருபருந்துணைவர்யாரும்
வன்சிளிறிவுளிபொற்றேர்வாண்முதற்படைகள்யாவும்
புன்களமதனிற்சேரப்பொன்றினவிம்பரன்றோ
வென்கருதினைகொலோயாவென்பெறற்கென்செய்தாயே. (௧௧௭)

வீரியம்விளம்பல்போதாதாயினும்விளம்புகின்றேன்
போரியலமரிலென்னோர்பொருகிலையெடுத்துநின்றாற்
றேரியல்விசயனோடுநால்வருஞ்சேரவென்னை
மூரிவெங்கணைகளாலேமுடித்தலைதுணிவர்கண்டாய். (௧௧௮)

எல்லவன்வீழுமுன்னம்யாரையுந்தொலைத்துவேலைத்
தொல்லைமண்ணளித்திலேனேற்றுரோணன்மாமதலையல்லேன்
வில்லெனும்படையுந்தீண்டேனிடையவனுதலோர்தந்த
*வல்லியகணையும்பொய்த்தெனமறைகளும்பொய்க்குமாதோ. (௧௧௯)

மோதுமோகாப்போர்வென்றுமுடித்துமோவொன்றிலொன்றிற்
சாதுமோவிரண்டுமெல்லாற்றரணிபர்க்குறுதியுண்டோ
யாதுமோதெளிதிநின்போலேற்றமுள்ளவர்க்கிவ்வாறு
போதுமோபூண்டபூண்டபுகழெலாம்போய்விடாதோ. (௧௨௦)

---

* வல்லியற்கணை என்றும் பாடம்.

பாண்டவர்முடியவென்றிப்பாரெலாமுனக்கேதந்தான்
மாண்டவர்தம்மைநின்வாய்மறைமொழிதன்னைக்கொண்டு
மீண்டவராக்கிப்பின்னைவேறொருபகையுமின்றி
யாண்டவரிவரோயென்னத்துணைவரோடாளலாமே. (௧௨௧)

என்றிவைபோல்வபன்னூறியம்பவுமிராசராச
னென்றினுங்கவலைசெல்லாவுணர்வுடையுளத்தனாகி
யன்றிகல்வருணன்கூறுமாருமென்றறிஞர்சொல்லத்
துன்றியவடிவத்தோடேமடங்கினான்றோயத்தூடே. (௧௨௨)

உரைத்தனவுரைகட்கெல்லாமுத்தரமுரைசெய்யாத
வரைத்தடந்தோளானெஞ்சின்வலிமையைவலிதினெண்ணி
நிரைத்தவெங்கதிர்கொள்வாளிநெடுஞ்சிலைத்துரோணன்மைந்தன்
விரைத்தொடைக்கிருதனோடேமாதுலனோடுமீண்டான். (௧௨௩)

மற்றவர்மீண்டபின்னர்மாதவக்குந்தியீன்ற
கொற்றவர்தாமுஞ்சேனைக்குழாத்தொடுந்தங்களோடுஞ்
செற்றவர்தம்மையெல்லாஞ்சேணுலகெறவேற்றிப்
பொற்றவரிராசராசனபுக்குழியறிவுறாமல். (௧௨௪)

பாடியுங்களமுஞ்சூழ்ந்தபாங்கருமங்குமிங்குந்
தேடியுங்காண்கிலாதசிந்தையராகுலத்தராகி
நீடுயிர்த்துயிர்த்துநின்றபொழுதினினிகழும்வேட்டை
யாடியவலைஞர்கண்டோராணிலறறுரைசெய்வாரே. (௧௨௫)

தவமிகுமுனிவரோடுசுரர்களுந்தோயநன்னீர்த்
தவமுயல்பொய்கைதன்னிற்றண்டுடைக்கையனாகிப்
புவிமுழுதாண்டவேந்தன்புக்கனன்கண்டோமென்றார்
கவலையின்மனத்தனைகாற்றருள்கூற்றனாற்கே. (௧௨௬)

கருமுகிலனையமேனிக்கண்ணனும்பவளமேனித்
தருமனுமெவருங்கேட்பத்தாமவேல்வீமன்சொன்னான்
பொருமாவுயர்த்தோனின்றோர்பொய்கையிற்புகுந்தானென்று
தெரிதருமிருகமாக்கள்செப்பினரென்றுகொண்டே. (௧௨௭)

என்றலுந்தன்னைச்சேர்ந்தோரிடுக்கணுமிளைப்புமாற்ற
நின்றவெம்பெருமானேமிநெடியவனருளிச்செய்வா
னன்றயன்முகத்தினாற்பெற்றநேகமாமுனிவர்தம்பா
னின்றமந்திரமொன்றுண்டுநிகரதற்கில்லைவேறே. (௧௨௮)

வெஞ்சமரிறந்தோரெல்லாமீண்டுயிர்பெறுவரந்த
வஞ்சகமறைமுன்பெற்றோன்வலம்புரித்தாரினானு
நெஞ்சமர்வலிமையோடுநீரிடைமூழ்கிநீங்க
டுஞ்சிடப்பொருவானின்னஞ்சூழ்ந்தனன்போலுமென்றான். (௧௨௯)

மாயவனுரைத்தமாற்றமாருதிகேட்டுத்தந்தை
யாயவன்றன்னைப்போலவப்பெரும்பொய்கையெய்தித்
தூயதண்டொவினுனுந்துணைவருஞ்சூழ்ந்துநிற்பத்
தீயெனத்தீயநெஞ்சன்செவிசுடச்சிலசொற்சொல்வான். (கஙo)

## வேறு.

கங்கைமகன்முதலாகக்காந்தாரர்முடிவாகக்களத்தில்வீழ்ந்த
துங்கமணிமுடிவேந்தர்சொல்லிமுடிப்பதற்கடங்கார்துரகமாவுஞ்
செங்கனகமணிக்கொடிஞ்சித்திண்டேரும்பெரும்பணைக்கைச்சிறுத்தசெங்கண்
வெங்கயமுமேருமல்வீழ்கயத்திலேறினையோவேந்தர்வேந்தே. (கஙக)

நெஞ்சறியநீயெமக்குநிலைநின்றபழியாகநெடுநாட்செய்த
வஞ்சகமும்பொய்மொழியுமனுநீதிதவறியதுமறந்தாய்கொல்லோ
துஞ்சியநின்சேனையெல்லாமீண்டுவரநீயறையுஞ்சுருதியிற்றை
வெஞ்சமரமுடித்தன்றோவறைவதிவைவீரருக்குவீரமாமோ. (கஙஉ)

அடிமாறிநீரிடைப்புக்கருமறைநீபுகன்றாலுமரவப்பைம்பொற்
கொடிமாறிக்குருகுலத்தார்கோவேநின்பேர்மாறிக்குலவுமாலை
முடிமாறியொருதனிமாமுத்தநெடுங்குடைநிழற்கீழாளுநீர்ப்
படிமாறியொழியவிடேன்புறப்படாய்மறைபடவிப்பகல்போமுன்னே. (கஙங)

ஓதப்பைங்கடல்புடைசூழுலகாளுமுடிவேந்தருறுபோரஞ்சிப்
பாதத்தில்வீழ்வரோபாராசர்கேட்டாலும்பழியேயன்றோ
மேதக்கவரமகளிர்கைப்பிடிக்கவிந்திரனும்விண்ணோர்தாமுங்
காதத்திலெதிர்கொள்ளக்கற்பகநீழலில்வைப்பன்கலங்கலம்மா. (கஙச)

களந்தனிலெத்துணைகவந்தங்கண்களிக்கக்கண்டனைநீகைத்தண்டோடிக்
குளந்தனிலிக்கவந்தமுங்கண்டேகுதற்குப்புகுந்தனையோகொற்றவேந்தே
வளந்தனிலிக்சோபமுமென்வஞ்சினமும்போகாதுவந்தென்பாவி
யுளந்தனிலிக்கவலையைவிட்டேற்றுதலல்லதுமற்றோருறுதியுண்டோ. (கஙரு)

இனத்திடைநின்றொருபதின்மேலெழுநாளுமொருவருடனிகல்செய்யாமற்
றனத்திடைநின்றுளமகிழும்புல்லரைப்போன்மதத்துடனேதருக்கிவாழ்ந்தாய்
சினத்திடைவெம்பொறிபறக்கச்செயிர்த்திருகண்சிவப்பேறச்செருச்செய்யாமல்
வனத்திடைசென்றொளிப்பரோமண்முழுதுந்தனியாளுமன்னரானோர். (கஙசு)

திரிபுவனங்களுஞ்சேரச்செங்கோன்மைசெலுத்தியநின்சீர்த்தியிந்த
விரிபுவனந்தனிலொழித்தான்மிகுவசையாய்ப்போகாதோவெருவலாமோ
புரிபுவனமுண்டுமிழ்ந்தோன்பொன்னிலங்கைவழிகாணப்பொருதவாளி
யெரிபுவனநுகர்ந்ததுபோலித்தடமும்புகையாமுனெழுந்திராயே. (கஙஎ)

பாவனன்னிப்படியுரைத்தபழிமொழியுந்தனதுசெவிபட்டகாலைச்
சீவனமுற்றையும்விடுவோனிருக்குமோமறைமொழியுஞ்சோவிட்டா
னுவனமற்றறியாமலழிவனமற்றறியாமலடுத்தோராவி
வீவனமற்றரியாமளினையுநினைவினுக்குவமைவேறிலாதான். (கஙஅ)

நீளமுறப்பரவையுறவாளமுறக்கரைபரந்துநிமிர்ந்தநீத்த
நாளமலர்ப்பொய்கையினின்றெழுவான்மெய்ச்சுருதிமறைநவிலுநாவான்
காளநிறக்கொண்டல்பெருங்கடன்முழுகிவெள்ளமெலாங்கவர்வுற்றண்ட
கோளமுறக்கிளர்ந்ததுபோற்றோன்றினான்மணியுரகக்கொடியினானே. (௧௩௯)

தோன்றிநெடுங்கரையேறிக்கரைமுழுதுநெருக்கமுறச்சூழ்ந்துநின்ற
தேன்றிகழ்தாரைவரையுஞ்செந்திருமாலையுநோக்கிச்சேனையோடு
மான்றிகழ்தேர்முதலானவாகனங்களொடுநின்றீர்வலிகூரெங்கை
யூன்றியதண்டுடனின்றேனொருதமியேனெப்படியேயுடற்றுமாறே. (௧௪௦)

ஐவரினுமிப்பொழுதிங்காரென்னோடமர்மலைவாராகான்மொய்க்குங்
கொய்வருதார்ப்புயவீரர்கூறுமெனத்திருநெடுமால்கூறலுற்றான்
செய்வருசேவிளம்பூகமடலொடிக்குந்திருநாடாசெருச்செய்வானிம்
மெய்வருசொற்றவறுதவீமசேனனையொழிந்தால்வேறுமுண்டோ. (௧௪௧)

இளம்பருவமுதலுனக்குமிவனுக்கும்வயிர்ப்பெண்ணிலெண்ணொணாத
வுளம்புகலவரசவையில்வஞ்சினமும்பலவன்றுரைத்தேநின்றான்
களம்புகுந்துநின்னொழிந்ததுணைவரையுந்தனதுதடக்கையாற்கொன்றான்
விளம்புவதோவேறொருவர்நினையுடனேபோர்மலைவரோவேந்தர்வேந்தே. (௧௪௨)

வில்லானும்வாளானும்வேலானும்பரிநெடுந்தேர்வேழத்தானுந்
தொல்லாண்மைதவறாமற்செருமலைந்தோர்சான்றாகச்சூழ்ந்துநிற்பப்
புல்லாரைப்புறங்காணும்போர்வேலையிருவருநீர்பொருதநும்மில்
வல்லார்கள்வென்றிபுனைந்தவனிதலம்பெறுமிதுவேவழக்குமென்றான். (௧௪௩)

வேறு.

கொண்டணிகர்திருமேனிக்கோபாலனிவையுரைப்ப
வண்டுபடிவலம்புரித்தார்வயவேந்தன்மனங்களித்துத்
திண்டிறல்வீமனைநோக்கிச்சிலைமுதலாம்படைகொண்டோ
தண்டெனுநின்படைகொண்டோசமர்விளைப்பாய்சாற்றென்றான். (௧௪௪)

நினகரத்தின்மிசையேந்திநின்றதுநீள்கதையாகி
லெனகரத்திற்றண்டுகொண்டேயானுமுடற்றுவனென்றான்
றனகரற்குங்குமரற்குந்தண்டுழாய்முடியவற்குந்
தினகரற்குமேலானசிந்தையுடன்செருச்செய்வோன். (௧௪௫)

எவ்விடைவீமனும்யானுமிகல்புரிதற்கிடமென்று
பொய்விடையேயுடற்றோனைப்புயங்ககேதனன்கேட்ப
மெய்விடையானிரைப்பின்போய்வேயூதுந்திருநெடுமா
லவ்விடையாங்கிருவருக்குமாம்பரிசாலருள்புரிந்தான். (௧௪௬)

அரும்பெறலாயோதனமற்றவனுரைக்கும்வேலையினி
விரும்புனலாடுதற்ககன்றோரிருவருமவ்வனவணைந்தக்
கரும்புயலேயனையானுங்காவலருங்கண்களித்து
விரும்பிமனங்களிகூரமேதகவேயெதிர்கொண்டார். (௧௪௭)

மதுரைநகர்க்கரசானமாயனுந்தம்முனைவணங்கி
விதுரனையுமெய்தழுவவேல்வேந்தனைவோருங்
கதிரவரோரிருவரையுங்கண்டுகளிப்பவர்போல
வெதிரெதிர்போய்க்கைதொழுதாரிகலாண்மைக்கெதிரில்லார். (க௪அ)

அன்றுமுதலேகியநாளளவாகவிருவோருங்
குன்றிடமுங்கடவிடமுங்குறித்தநதிகளினிடமுஞ்
சென்றுசுரரும்படியுந்தீர்த்தங்கடிசைதோறு
மொன்றுபடமகிழ்ந்தாடிமீண்டவாறுரைசெய்தார். (க௫௯)

அறன்றருகாளையுமுகுரானனன்றருகாளையும்புரிந்த
மறந்தருபோர்வெங்களத்துமன்னவர்களனைவோரு
மிறந்தநிலையுந்தினங்களீரொன்பானிலுந்தோன்ற
மறந்திகழ்தோளிருவருக்குமாமாயன்கட்டுரைத்தான். (க௫0)

கேட்டருளிநெடுந்தாலகேதனன்மாமனந்தளர்வுற்
றுட்டாவமுடையவற்கோவழிவுவருவதுபோரி
னுட்டமினியேதென்றுநராந்தகனைவினவுதலு
மீட்டுமவற்குரைசெய்தான்விசிதிரைநீர்மறந்தோனே. (க௫க)

வீமனுக்கும்வீமனுடன்வெகுண்டமர்செய்வலம்புரிப்பூந்
தாமனுக்குமமர்புரியுந்தலமேதென்றுயாவுகின்றே
நீமனத்தினிகழ்ந்தபடிநிகழ்த்துகெனநிலவொளியாற்
சோமனுக்குநிகராஞ்னிளவலைநீசொல்லென்றான். (க௫௨)

தாவெழுமாமணிநெடுந்தேர்த்தபனனிகர்மழுப்படையோன்
மூவெழுகான்முடிவேந்தனைவரையுமுடிப்பித்து
நாவெழுடான்மையினுடையோன்களிக்கநாமேதஞ்செய்
பூவெழு தீவினுஞ்சிறந்துபொன்னுலகோடொத்துளதால். (க௫௩)

அந்நிலமேயிருவருக்குமமர்புரியலானவிட
மன்னவர்தம்முடற்சோரிவழிந்துசமந்தபஞ்சகமா
மென்னநிலைபெற்றிடுமைந்தடங்களுமங்கங்கேயுண்
டுன்னிலெதிரில்லதனுக்கொலிகடல்சூழ்நிலத்தென்றான். (க௫௪)

அத்தலத்தின்றிசைநோக்கியனிகினியுமனைவோரு
முத்தநெடுங்குடைநிழற்றமூவகைவாகனமேறிக்
கொத்துடனேநெறிபடாக்கொற்றவர்கொற்றவன்றானுங்
கைத்தலமுந்தண்டுமாக்கால்வேகமுறச்சென்றான். (க௫௫)

தம்பியர்கள்புடைசூழத்தருமன்மகன்பல்லியமும்
பம்பியெழநடக்கின்றபரிசுதனைமுகநோக்கி
யெம்பியருமெங்கிளையுமிறக்கவிருந்தனமென்றே
வெம்பிமனமிகத்தளர்ந்தானவிதிதனக்குவதிபோல்வான். (க௫௬)

முடிக்குலமன்னவர்தத்தமுடிகளினூற்சிவக்கின்ற
வடிக்கமலநடந்து சிவப்பாவதேயெனவிரங்கிக்
கொடிக்கண்முரசெழுதியவக்கோவேந்தன்கொடித்தேர்விட்
டடிக்குமுரசெனப்புகல்வானிராசராசனுக்கம்மா. (கடுஎ)

என்றுணைவருடன்யானுமேவியநின்றொழில்புரிந்து
வன்றுணையாய்ச்சேவிப்பமடங்கலாசனமேறி
யின்றுணைவர்குருகுலத்தாரொனுமிசைபோய்த்திசையேற
நன்றுணைவாவாளுதியான்ஞாலமெலாநின்குடைக்கீழ். (கசஅ)

தப்பாதென்மொழியென்றுதருமன்மாமதலைமுகி
லொப்பானதிருமேனியும்பர்பிரான்சான்றாகச்
செப்பாதவாய்மையெலாஞ்செப்பினான்செப்பவுமக்
கைப்பானவன்னெஞ்சக்கடுங்கண்ணான்கண்மறுத்தான். (கசகூ)

எங்கிளைஞரொந்துணைவரெம்பொருட்டாலிறந்தேக
வுங்களருள்பெற்றிருக்குமுயிர்வாழ்வினினிதன்றே
வங்கமெலாம்வேறுபடவாறுபடுகுருதியின்வாய்க்
கங்கமுங்காகமுங்கொத்தக்களத்தவிந்தானெனும்பெயரே. (கரு0)

எனத்தருமன்வார்த்தைதனக்கிசையாமலவனேக
வினைத்துவருதினிகளொடுமைவருமாங்குடனேகக்
கனத்தில்வடிவுடையோனுங்*கைலைவடிவுடையோனும்
வினைத்தடந்தேர்விதுரனொடும்விரைவுடனெகினரம்மா. (கருக)

கலங்கள்பலவினமேறிக்காளிந்திக்கரையேறித்
தலங்களினற்றலமானசமந்தபஞ்சகமெய்தி
வலங்கொள்படைத்தலைவரெலாம்வளைந்தகடலெனவாளா
விலங்கலெனச்சூழ்நிற்பவெஞ்சமரந்தொடங்கினரே. (கருஉ)

பூங்கவசத்துட்புகுந்துபூணணைத்துந்திருத்திமணி
யோங்கலிவையிரண்டுயிர்பெற்றுடற்றுகின்றதெனவுரைப்ப
வாங்கியதண்டமுந்தோளுமலர்க்கரமும்வலிகூர
வாங்குலகுசெவிடுபடவடலரிநாதமுஞ்செய்தார். (கருங)

கந்தநறுமலர்க்கூந்தற்காந்தாரிபுதல்வனையக்
குந்திமகன்முகநோக்கிக்கொடுஞ்சொற்கள்சிலசொல்வான்
கந்தருவான்றன்னைக்கட்டியதோள்வலிகொண்டோ
சிந்தைதனின்வலிகொண்டோசெருச்செயநீபுகுந்தாயே. (கருச)

இடிப்பதுமின்றிருகதையுமென்கதையாலிடியுண்டு
துடிப்பதுமின்றன்னுடலமுயிர்துறக்கங்குடியேற
முடிப்பதுமின்னழற்பிறந்தாண்முகிலோதிமுகில்பொழிநீர்
குடிப்பதுமின்றொருவேனின்குருதிநீர்குடித்தாலே. (கருரு)

---

*காதலறுமுன்னோனும் என்றும் பாடம்.

## வேறு.

இனிவிடுமேன்மேனுரைக்கும்வாசகமெனதுயிர்நீகோறலிற்றைநாளிடை
யுனதுயிர்வானேறவிட்டுநானுலகொருசெடைமாநீழல்வைத்தலேதுணி
வணிகழுமாயோனடத்துதேருடையநுசனும்வாளாண்மைமற்றைமூவரு
நினைவுடனேகாணவச்சிரவாயுதசிகர்கதைவீமாவெடுத்திநீயென. (கசுசு)

நடையொழியாதோன்விறற்குமாரனுநயனமிலாதோன்முதற்குமாரனு
மடலொடுகார்வானிடிக்குமாறெனவதிர்வுறவேகூறிமத்தவாரணம்
விடையரிமாவேறெனப்பிரதாபமும்விசயமுமேன்மேன்மிகுத்துமேவிடு
கடையுகநாள்வாயுவொத்துநீடியகதைகெழுபோராதரித்துமூளவே. (கசுஎ)

ஒருதமனியாசலத்தினோடெதிரொருமுழுமாநீலவெற்புநீடமர்
புரிவதுபோன்மேல்விசைத்துமீமிசைபொறியெழமாறுமலெற்றிவீரர்க
ளிருவருமாகாயமுட்டநாகர்களிறைகொளநாணுறுதிக்குநாகரும்
வெருவரநீணுகருட்கவீசினர்விசையுடனேபோர்விறற்கதாயுதம். (கசுஅ)

உவகையினாலேசிரிப்பர்நீள்சினமுறுதலினாலேமடிப்பர்வாய்மலர்
புகையெழவேதீவிழிப்பர்மார்பொடுபுனைகிரிபோலேதடிப்பர்தோளிணை
யிகல்புரிநூலோடுகற்றசாரிகைபிடம்வலமேபோவர்வட்டமாகுவர்
முகடுறமீதேகுதிப்பர்பார்மகண்முதுகிறநேரேகுதிப்பர்மீளவே. (கசுகூ)

ஒருகையினாலேசுழற்றிவான்முகடுடைபடவேலேகிளப்பிநீள்கதை
யிருநிலமீதேமறித்துவீழுமு*னொருகையினாலேதரிப்பர்மேலவர்
விரைவுடனேதாளமொத்தியோடுவர்விசையுடனேகாலொதுக்கிமீளுவர்
பரிதிகள்போலேவிருத்தமாமுறைபவுரிகொளாவீசிநிற்பர்வீரரே. (கஎ0)

மலரடிதாளுருவட்டவார்தனம்வயிறுமனோகபற்பமார்பொடு
குலகிரிநேர்தோள்கழுத்துநீடணல்குறுநகைகூர்வாய்கதுப்புவார்குழை
யிலகுபுருநூர்பாகநெற்றியானனமெனவடைவேகூறுநப்பியாவையு
முலைவுறமேன்மேன்மிகுத்துமூளையுமுதிரமுமாறாதுகுக்கமோதியே. (கஎக)

கதைகதையோடேயடிக்குமோதைகொல்கதையுடையோர்தாநகைக்குமோதைகொ
லெதிர்மொழியோவாதிசைக்குமோதைகொலிணையுடனூடேயிடிக்குமோதைகொல்
பதயுகமாறடிவைக்குமோதைகொல்பணிபலசூழ்போதவெற்றுமோதைகொ
றிதியொடுவானூடுசெற்றவானவர்செவிசெவிடாமாறதிர்க்குமோதையே. (கஎஉ)

அரிவயமாவேறுயர்த்தசூரனுமழல்விடநாகேறுயர்த்தவீரனு
மிருவருமேவாலிசுக்கிரீவர்களெனவமர்மோதாவிளைத்தகாலையில்
வரைமுடிமேனுளொடித்தகாளைதன்மதலையையேழ்பார்படைத்தகோமக
னுரைதடுமாறுவுயிர்த்துநீயுனதுயிர்நிலைகூறுயெனக்கெனுமுனம். (கஎங)

இருவினைகூறுவறத்தின்மாமகனிளவல்விதாதாவொடொத்தகேள்விய
னுரைதவறாதான்மறைக்குமோவெனதுயிர்துணைவாகேள்சிரத்திலேயென
வரிமகவானேனுரைத்தபோதிவனவன்முடிமேலேபுடைக்கவீமனு
முருமுறுமாமேருவெற்பதாமெனவுரைதடுமாறுவுழற்றினனரோ. (கஎச)

---

* இருகையினாலே என்றும் பாடம்.

மகிதலமேல்வீழ்தலுற்றுமீளவும்வலியுடனேபோர்குறித்துமேல்வரு
பகைவனைநீயாவிநிற்பதோர்நிலைபகரெனமாறுடுசெர்ப்பகேதுவு
மிகனுதலூடேயெனக்குமாருயிரெனமதியாதேயுருத்துவீமனு
முகுதருசெய்நீர்பரக்கமோதினனுயர்கதையாலேசிரத்தின்மேலுமே. (௧௭௫)

உரியகதாபாணியர்க்குளோதவொருவமையிலாதானடித்தபோதுயர்
சிரமுடியூடேபிளக்கநாலிருதிசையினும்வார்சோரிகக்கிவீழ்தர
விருநிலமீதேபதைத்துவீழ்தலுமிரிதரமோதாமல்விட்டுநீயினி
விரைவுடனாறெனத்தனுண்மையைவிருதர்முன்மேன்மேல்விளக்கவீமனே. ()

வருகளையாறுவுயிர்ப்புறுவிழிமலர்திறவாநாவறட்சிபோயுகு
குருதியுகாமேதுடைத்துவீழ்தருகுருகுலபூபாலனுக்கிரவேகமொ
டுருமெறிமாமேகமொத்தகாயமுமுதறிமனோவீரமுற்றுமீளவு
மருகொருபான்மேவிநிற்கும்வீமனையடுகதையாலோடிமுட்டிமோதவே. (௧௭௭)

வேறு.

ஓமவுண்டிகொள்பேரழலோடடலூதைவெஞ்சமராடியவாறென
வாமறங்களினுன்மதியாதமராடுகின்றநிசாசரராமென
வீமனுந்துரியோதனநாமனும்வேகமொன்றியவீரியராயடு
சேமவன்கதையாலமராடினர்தேறிநின்றவர்வாள்விழிமூடவே. (௧௭௮)

மேவுசிங்கவியாளவிலோதனர்வீசுகின்றகதாரவமேவிட
வாவுவெம்பரியாதபனுந்தடுமாறிநின்றனன்வானவர்தானவர்
நாவடங்கினர்மாமுனிவோரொடுநாகரஞ்சினர்நான்முகனாதிய
மூவருஞ்செயலேதெனநாடினர்மோனைகொண்டதுமூடியகோளமே. (௧௭௯)

தார்வலம்புரியானொடுபோரழிதாழ்வுகண்டனன்வீமனைவாசிகொ
டோர்விடுந்திருமாலடிநீண்முடிசேர்நின்றுரையாடினன்மாருதி
நேர்தளர்ந்தனன்யாதுகொலோசெயனீமொழிந்தருள்வாயெனவானவ
ரூர்புரந்தவனோதமுராரிபுமோதினன்பரிவோடவனோடிவை. (௧௮௦)

நீநயந்தனைகேளுறுபோரிடைநேர்மலைந்திடுவோரிருவோரினு
மானிலன்பெலவானதிலேமுதலானனன்றருசெய்வினையாதிக
னுனியம்பறகாதிவராயிரநாண்மலைந்தனராயினும்வீவொடு
வானகம்புகுதாரிருவோர்களும்வாசவன்றருபூணணிமார்பனே. (௧௮௧)

மாறுகொண்டவராவிகொணீள்கதைமாருதன்சுதனோடிவனோருவை
கூறலிங்கிதமேயலவோருரைகூறில்வஞ்சகமாமிவனுண்மையி
னூறுமைந்தரினாதிபனாகியநூனலந்திகழ்மார்பனையாருயி
ரீறுகண்டிடலாமவனூருவையேறுபுண்படவேயெதிர்மோதிலே. (௧௮௨)

ஏழ்பெருங்கடல்சூழ்புவிபாரமுமேதமுங்கெடவேதமிலைவரும்
வாழவன்றுயர்நாரணனார்திருவாய்மலர்ந்தசொலான்மகிழாமிக
ஆழினும்புரிதாள்வலிதேயெனவூருவின்புடைசேர்கரநாண்மலர்
காழ்நெடுங்கிரியேயனையான்விழிகாணநின்றனன்வானரிகாளையே. (௧௮௩)

ஞானபண்டிதன்வாயுகுமாரனுநாரணன்பணியாவிளையோன்மொழி
மோனவண்குறிதானுணராவெதிர்மோதினன்கதைபூபதியூருவின்
மானகஞ்சுகனுறடியேமுடிமாறிநின்றிடவேபிழைபோதலின்
மேன்முழங்கினவானவர்தூரியமேல்விழுந்ததுபூமழைசாலவே. (கஅச)

மாறிநின்றசுயோதனன்மீளவும்வாயுமைந்தனைவாகுவுமார்பமு
நீறெழும்படிசாடியபோதவனீணிலந்தனிலோடிவிழாதுத
னூறுமிஞ்சியபேருடலோடெதிரோடிவண்டொடைகீறிடமாறடும்
வீறுகொண்டகதாயுதம்வீசினன்வீரனம்புவிமீதுறவீழவே. (கஅரு)

வேறு.

அரிப்பதாகனுரகப்பதாகனையதிர்த்துமேலுறவடர்த்துநீ
டுருப்பினோடுதிசயிக்கவூருவையொடிக்கவேயவனுடற்றனு
நெருப்புறுவிழிசிவத்துவார்கடைநிமிர்ப்புறுதபுருவத்தனாய்
மருப்புநாலுறுமதத்தடாவெனமதத்துமார்பமிசைகுத்தினான். (கஅசு)

கதுப்பும்வாயுநெரியக்கதாயுதகரத்தினனிகலக்கினா
னெதிர்த்தயானையையடர்ந்தகேசரியெனப்பொன்மௌலியையிருத்தினா
னுதைத்துமேவிருபதத்தினாலவ*னுரத்தைவாகுவையொடித்துநீள்
விதத்தினாலிருநிலத்துமீதுடல்விதிர்த்துவீழ்தரவிழுத்தினான். (கஅஎ)

நிறத்தநீலகிரியொக்கவேயிருநிலத்தின்வீழ்குருகுலத்தினோ
னுறைத்துமீளவுமுயிர்த்துமாயனொடுருத்துவாசகமுறச்சொல்வான்
குறிப்பினால்விசயனைக்கொடாருயிர்குறிக்குமாமதிகொளுத்தினா
யறத்தினாலடன்மறத்தினீர்மையையவித்தையாயருமளப்பரோ. (கஅஅ)

மலைத்தபோர்தொறுமெனக்குநீசெய்பிழைமற்றுளோர்செயநினைப்பரோ
குலத்திலேபிறிகுலத்தரானவர்குறிப்பிலாதிவைபிறக்குமோ
சலத்தினால்வினையியற்றுவார்முடிதரித்தகாவலரொடொப்பரோ
நிலத்தில்வாழ்வவர்பெறக்கொடாயினிநினைத்தகாரியமுடித்தியே. (கஅகூ)

எனச்சில்வாசகமிழற்றிமீளவுமெதிர்ப்பதாகவெழலுற்றபோ
தனற்சகாயன்முனளித்தகாளைதனடற்சரோருகபதத்தினா
லுனக்குவாழ்வினியெனக்கொலாமெனவுதைத்துமௌலியையுடைக்கவே
சினத்தலாயுதனிறத்தவாள்விழிசிவக்கவாய்மைசிலசெப்புவான். (ககூ0)

வேறு.

எம்பிரானைமுராரியைமாயனையிம்பரேழ்கடல்சூழ்புவிமேலொரு
தம்பியாவுடையானவனோடெதிர்சந்தியாவெகுளாவிழிதீயெழ
நம்பிகேளரியோடுடன்மேவியநஞ்சுபோலுநரேசர்முன்னேயுடல்
கம்பியாவிழவூருவின்மோதுதல்கண்டபோதெனதாருயிர்போனதே. ககூக)

---

* உரத்தவாகுவை என்றும் பாடம்.

வேறு.

கதையெடுத்துடற்றுமாடவர்கள்கடிதடத்தினுக்குமேலொழிய
வதிர்வுறப்புடைப்பரோதொடையிலடிபடத்துகைப்பரோமுடியி
லெதிரியைச்சலத்தினாலென்விழியெதிர்வழக்கழித்தபாவனை
முதுகிடப்புடைப்பல்யானுமெனமுசலகைத்தலத்தொடோடினனே. (௧௬௨)

வேறு.

மதியிரவியோடுபோர்செயுமாறெனவலியதிறல்வீமன்மேலிவனோடனு
மிதயமலர்தோறுமேவருநாயகனிவனைவிரைவோடுபோய்விலகாவிரு
பதுமநிகரானதாள்பணியாமிகுபரிவினொடுசீறுமாண்மைதகாதென
வதிமதுரவாய்மையால்வெகுளாவகையடிகளிவைகேண்மினோவெனவோதினன். ()

வேறு.

மூகுராசனன்மைந்தனும்வீமனுமூடியாதபெரும்பகையாளர்கண்
மகிபாலர்திருந்தவையூடுரைவழுவாதவன்வஞ்சினமோதின
னிகல்வார்சிலையின்குருவானவனிடுசாபமுழுண்டுதிரௌபதி
பகர்சாபமுழுண்டதனாலெதிர்படுமேபவன்வெங்கதையாலிவன். (௧௬௪

வேறு.

வெஞ்சிலைவிதுரனவனுநீவிருமிஞ்சியபுனல்கள்படியவேகினிர்
பஞ்சவர்களொடுவயிரியாயொருபஞ்பறவினைசெய்சமரபூமியில்
வஞ்சனைவழியிலொழியநேர்படவன்பொடுமறமுமறமதாம்வகை
யெஞ்சியபதினெண்வகைகொளுளினுமின்றமர்பொருதநாககேதுவே. (௧௬௫)

வேறு.

வெற்றிபுனைபலபத்திராமனுமெய்த்துணைவனிவைசொற்றகாலையின்
மற்றையநுசனொடுற்றநீள்களம்வட்டமிடவொரிமைப்பினேகின
னற்றையடலமரிற்சுயோதனனற்பவுயிர்நிலைநிற்பநீடுடன்
முற்றுமுகுருதிக்கண்மூழ்குறபெரய்த்தகமூகினிமூற்கண்மேவினன். (௧௬௬)

வேறு.

மைந்தினிற்பெரியோனெனும்வாயுவின்மைந்தனுற்றரியோதனன்மாமுடி
சிந்தவார்த்தனர்நீடிசைகாவலர்சிந்திவாழ்த்தினர்பூமழைதேவர்கண்
முந்தவோட்டியதேரொடுகாய்கதிர்மொய்ம்பன்மேற்கடன்மூழ்கினன்மாலைகொ
ளந்திவாய்த்தபாசறைமேவினரைந்துபார்த்திவரானவர்தாமுமே. (௧௬௭)

வேறு.

மிடன்மிஞ்சுமேவலர்வானிடைபோதரவினைவென்றகாவலர்பாசறைசேருதல்
கடனன்றெனாமுனிமாமகன்வாள்வலிகருதார்தனீர்மையைவேறறியாவகை
யடல்கொண்டசேனையெலாமவண்வாழ்வுறவவரைந்துவீருமேவாவேயொரு
புடைதங்குகானிடைபோயினனனிபொழிகொண்டல்போர்திருமேனிமுராரியே,

## வேறு.

*ஆனகமலமலர்வாவியிடையேமுழுகியாவியுதவுமறையோகபானுகிமொழி*
*மானகவசவாராசதுரியோதனனைவாயுகுமரன்முதிர்போரிலெதிர்வீழும்வகை*
*தானகாடகரிமாவையரிமாபொருததாயமெனவுழறினனுமுன்வேகமுற*
*ஞானசரிதகுருவாகியதுரோணன்மகனுடுகௌமனுகினைருவிநாழிகையில்.* (௧௯௯)

## வேறு.

*உரகதுவசனயர்கின்றவாவியினுணர்வொடுதுயில்வதுகண்டுபேருடல்*
*கரதலமலர்மிசைகொண்டுவார்புனல்கலுழ்தருவிழியினனன்பினலமர்*
*பொருகளனிடைதனதந்தைநவீடியபொழுதினுமனமிகநொந்துளானுயர்*
*சுரர்களுமுருகவிரங்கினன்வரிதொடுசிலைவிசயதுரங்கதாமனே.* (௨௦௦)

## வேறு.

*முனைத்தலையழிந்துடல்சோரவும்யான்வினைமுடிப்பனெனுநெஞ்சுடைவாள்வயவீரனை*
*யனைத்துலகினுங்குருவானசராசனனளித்தமுனியன்புறமார்புதழீஇயின*
*னினைத்தநினைவின்படியேமிகுபோர்செய்துநினக்கவனிதந்திடநீதலைநாளினி*
*லெனைத்தனிதெளிந்திலையாதவன்மாயையினெனப்பரிவுகொண்டுசில்வாய்மைகள்கூறியே.* ()

## வேறு.

*அருளுறவழக்கழிவறவழாமாற்றமுமறனுடனழுக்கறலனுகுருவேற்றமு*
*மிருநிலமதித்திடவினிதுகோலோச்சுதலியல்புநிருபர்க்கெனுமுறைமையோபார்த்திலை*
*நரைகெழுமுடித்தலையெனபிதாமீப்படுநதிமகன்முறித்தவில்விதுரனேபோற்பல*
*குரவருமுரைத்தசொலுறுதிநீகேட்டிலைதருமாபினுக்கொருதிலகமாமூர்த்தியே.* (௨௦௨)

## வேறு.

*இடியிடித்திடுசிகரிகளாமெனவெறிமருச்சுதன்முதலிகலோர்தலை*
*துடிதுடித்திடவவரவர்சேனைகடுணிபடப்பொருதெழுபுவிநீபெற*
*விடிவதற்குமுன்வருகுவன்யானெனவிடைகொடுத்தனனாவவிலோதனன்*
*முடிமிசைத்தனதுடையசிகாமணிமுனிமகற்கினிதருள்செய்துமீளவே.* (௨௦௩)

## வேறு.

*பூசுரர்பெருந்தகைபரித்தாமாவிரியல்போனகிருபன்கிருதபத்மாமூவருமுன்*
*வாசவன்விரிஞ்சனுமைபத்தாமாயன்முதல்வானவர்வழங்கியவயப்போர்வாளிகளி*
*லாசுகன்மகன்றனையுமப்பேதேதுணைவரானவரையுந்தலைதுணிப்பானுடியவர்*
*பாசறைபுகுந்தனர்பரித்தேர்யானையொடுபாரதமுடிந்தபதினெட்டாநாளிரவே.* (௨௦௪)

## சல்லியபருவ முற்றுப்பெற்றது.



பத்தாவது

# சௌப்திக பருவம்.

வேலமர்தடக்கைவீரரிப்பாடிவீடுசென்றணைதலும்புறத்தோ
ராலமர்சினையிற்பல்பெருங்காகமறும்*பகலழிந்தகூகையினாற்
சாலவுமிடருற்றலமரக்கண்டுதம்மிலேமுகமுகநோக்கிக்
காலமுமிடனுமறிந்தமர்செகுத்தல்கடனெனக்கருதினரன்றே. (௨௦௫)

உரத்துவாரணங்கண்மதமிகுத்தென்னவூக்கமோடொன்றையுமதியார்
புரத்துவாரத்துப்புகுதலும்வெருண்டுபொங்கழல்போல்வதோர்பூதம்
பரத்துவாசனையுமாதுலன்கிருதபன்மனென்றிவரையுமுனைந்து
கரத்துவார்சிலையுங்கணைகளுமுறித்துக்கடவுதிண்டேர்களுங்கலக்கி. (௨௦௬)

முன்புகுவிசயமுனிமகன்றன்னைமுரணெடுந்தோள்களுமாறு
மென்புடனிணமுந்தசைகளுஞ்சிந்தவிணைக்கருஞ்சிறுகுறுங்கரத்தால்
வன்புகையெழுமாறுள்ளுறமலைந்துமற்றுளோர்கொற்றமுமழித்துப்
பின்புகலறுமாதுரந்ததப்பூதப்பெருமையாம்பேசுறுந்தகைத்தோ. (௨௦௭)

மாதவன்விதியாலகன்பெரும்பாடிமாநகர்காவல்கொண்டிருந்த
பூதமேபொருதுதுரத்தலின்மீண்டுபோய்வடகருகிமுற்புகுந்து
பேதுறவெருவோடிருந்தனர்கரியபெரியவக்குன்றுகுலிற்றுரோணை
சாதனன்மதலையென்செய்துமென்னத்தன்மனத்தெத்தனைநினைந்தான். (௨௦௮)

எஞ்சினநிருபனுயிரினைநிறுத்தியிவ்விரவகல்வதன்முன்னர்
வெஞ்சினமுறச்சென்றுன்பகைமுடித்துமீளுதுமெனப்பலபடியும்
வஞ்சினமுரைத்துவந்தனமின்னம்வன்குறட்பாரிடந்தன்னாற்
றஞ்சினமெனினுமமையுமென்றெண்ணித்துணிந்தனன்றுயிலறுகண்ணான். ()

எண்ணியகருமமுடியினுமுடியாதொழியினுமீசனைத்தொழுதல்
புண்ணியமெனுமாறுன்னியாங்கொருதண்பொய்கையிற்புனல்படிந்தேறிப்
பண்ணியலிசையின்படிவமாந்தெரிவைபங்கனைப்†பங்கயமலர்கொண்
டண்ணியகருத்திலிருத்தியஞ்செழுத்தாலாகமப்படியடிபணிந்தான். (௨௧௦)

அன்றவன்மறையின்முறையினற்புரிந்தவருச்சனைதனையுவந்தருளி
நின்றனன்விழியுமிதயமுங்களிப்பநீறுடையேறுடைக்கடவுள்
வன்றிறன்முனிவன்மதலையும்விசலைமாறிமாறடர்ப்பதோர்படைநல்
கென்றனனென்றவுரைமுடிவதன்முனேதியொன்றீசனுமீந்தான். (௨௧௧)

---

* பகல்கழித்த என்றும் பாடம்.

† பற்பலமலர் என்றும் பாடம்.

பாதிமெய்நீலமாகியபவளப்பருப்பதம்விருப்புடனளித்த
வேதிபெற்றுவகையுடனிமைப்பளவினிருந்தவவ்வீரருந்தானும்
வீதிகொள்பாடிவீடுறப்பூதயீளவந்தடர்த்திவன்காத்தி
லாதிநல்கியவெம்படையினலைஞ்சியாவிகொண்டோடியதன்றே. (௨௧௨)

பருவாலகற்றியிருவர்வீரரையும்பாசறைவாயிலினிறுத்தி
மருவருங்கமலமாலையான்கடப்பமாலையானெனமனங்களித்துப்
பொருவருமூனைக்குக்குரிசிலாமெல்லாப்போரினும்புறமிடாதடர்த்த
துருபதன்மதலைவரிசிலைத்திட்டத்துய்மனைமணித்தலைதுணித்தான். (௨௧௩)

கயில்புரிகழற்காற்றந்தையைச்செற்றகாளையைப்பாளையத்திடையே
துயில்புரியமையத்திமைக்குமுன்சென்னிதுணித்தனன்சுதனெனக்கலங்கி
வெயில்புரிவதன்முன்வல்லிருளிடையேயுணர்ந்தவர்வெருவுடனாற்றப்
பயில்புரிசிலைக்கைச்சிகண்டியைமுதலோர்பலரும்வந்தனர்கள்பாஞ்சாலர். (௨௧௪)

உத்தமோசாவுமுதாமனுமுதலிட்டுள்ளவர்யாவரும்பிறருந்
தத்தமோகையினல்வந்தெதிர்மலைந்தோர்தலைகளாற்பலமலையாக்கி
மெத்தமோகரித்துப்பாரதமுடித்தவீரரைத்தேடிமேல்வெகுளுஞ்
சித்தமோடெங்குந்திரிந்துளானவர்தஞ்சிறுவரைவரையுமுன்சேர்ந்தான். (௨௧௫)

பூதலமுழுதுங்கவர்ந்ததந்தையர்கள்புறத்திடைப்போயதுந்துயின்ற
மாதுலன்முனிவன்மதலைகைப்படையான்மடிந்திடத்தடிந்ததுமுணரார்
தாதலரலங்கற்சமரவான்புனிதைத்தழுவிடைவருபெருந்தையல்
காதலம்புதல்வர்கண்டுயில்புரிவோர்கனவுகண்டனரெனக்கண்டார். (௨௧௬)

கண்டவர்தத்தம்படைபெடுப்பதன்முன்காசினிமுழுவதும்வென்று
கொண்டவரிவரென்றெண்ணியேசுடரிற்கொளுத்திபசுடரனையாரைத்
நிண்டவர்தமக்குச்சிகாமணியனையான்சினத்துறக்கலங்கிவண்டேற
துண்டவர்தமைப்போன்மதத்தினல்வாளாலொருகொடியினிற்றலைதுணித்தான்.

துருபதன்மைந்தரனைவரும்பஞ்சத்திரௌபதீயருந்துயில்பொழுதிற்
புரவியந்தாமாநினைவறப்புகுந்துபொன்றுவித்தனனெனப்புலம்ப
விரவிடையமர்மற்றென்னைகொலென்றுவிரவிதன்றிருக்குலத்திறைவன்
பெருமையோடெழுந்தான்பகைவன்மேலவன்முன்பின்னிடப்பொருதிடும்பெரியோன். ()

பொன்னிநன்னதியுநேரியம்பொருப்பும்புகாரெனுநகரியும்படைத்த
சென்னியுமவன்றன்சேனையின்விதமுஞ்சேனைமண்டலீகருஞ்சேர
*முன்னியசிலைக்கைமுனிமகனுடன்போய்மோதியவேதியான்மடிந்தார்
பின்னியசடையோன்வழங்கியபடைமுன்பிழைத்தவர்யாவரேபிழைத்தார். (௨௧௯)

புகலரும்பதினெண்பூமிமுற்றுடையபூபதிகளுமவர்படைத்த
விகலருந்தந்திதேர்பரிகாலாளென்பனயாவையுஞ்சேரப்
பகலருஞ்சமரிற்பதின்மடங்காகப்பாதிநாளிரவினிற்படுத்தான்
றகலருங்கேள்வித்தாமனேதாமச்சடையவன்றனயனுதவினல். (௨௨0)

---

* முன்னியசமரின்முனிமகன் என்றும் பாடம்.

உள்ளியபடியேகடுஞ்சினங்கன்றியுள்ளவர்யாரையு முருக்கித்
துள்ளியவிடைபோற்செருக்கியப்புரத்தின் றுவாரத்தின் றவரையுங்கூட்டித்
தெள்ளியகுமரர்சென்னியைந்தினையுந்தேவருந்திகைத்திடத்தூக்கி
வெள்ளியகுருவந்தெழுமுனே குருவின்மிகுகுலவேந்தைவந்தடைந்தான். ()

வேறு.

வந்தனேனையமா தவனேவலான்
முந்து பூதமுந்து கிடமாமுடி
சிந்தயாரையுஞ்செற்றகன்பாசறை
யைந்துவீரர் தம்மாவியுங்கொண்டரோ. (௨௨௨)

சொன்னசிங்கத்துவசனையாதியா
மன்னரைவருமாண்டனர்மற்றவர்
சென்னியென் றுசிறுவர் தஞ்சென்னியை
முன்னர்வைத்தனனுன்முனிமைந்தனே. (௨௨௩)

வைத்தசென்னியைநோக்கிவயாவுறு
சித்தமன்னவன்றேறிச்சிறார்முகந்
தத்தமன்புடைத்தந்தையர்வாண்முக
மொத்தவாகுமிஃதுண்மையென்றோதினான். (௨௨௪)

ஓதும்வேந்துக்கொருமொழியுஞ்சொலான்
வேதபண்டிதனிற்கவவ்வீரனைப்
பாதகஞ்செய்கைபார்ப்பனமாக்களுக்
கேதமேதமிதென்செய்தவாறரோ. (௨௨௫)

துன்னுபாரதந்தோன்றியநாண்முதன்
மன்னரோடமலைந்தனைவாளியாற்
சொன்னபாலர்மகுடந்துணித்ததின்
றென்னவீரியமென்னினைந்தென்செய்தாய். (௨௨௬)

இருகுலத்திலெமக்குமவர்க்குமிங்
கொருகுலத்தினுமுண்டெனவில்லையாற்
குருகுலத்தின்கொழுந்தினைக்கிள்ளினை
வருகுலத்தொருமாசறுமைந்தனே. (௨௨௭)

ஆற்றினீர்விளையாடியநாண்முதற்
காற்றின்மைந்தனுடைத்தனைகன்றினேன்
சாற்றினென்வினைதானென்னையேசுடக்
கூற்றின்வாய்புகுந்தேற்கென்னகூற்றையா. (௨௨௮)

பணைநெடுங்கைப்பகட்டுவெஞ்சேனைசூ
ழிணைதருஞ்சொற்கிளைஞர்கள்யாரையுந்
துணைவர்யாரையுந்தோற்றுநின்றேனெனக்
கிணையர்பார்மிசையாருளரெண்ணிலே. (௨௨௯)

என்றுபன்மொழிகூறியிம்மைந்தரைக்
கொன்றுவந்தகுமரனைப்போர்தொறு
நின்றதீவினைநீங்கிடநீதவ
மொன்றிவாழ்கென்றுயர்விடைநல்கினன். (உ௫0)

வெஞ்சராசனவீரனுமாமனு
நெஞ்சமாழ்குறநின்றவர்போனபின்
கஞ்சநாண்மலர்க்கண்புனல்சோர்தருஞ்
சஞ்சயாரின்றன்னொடுகூறுவான். (உ௫௧)

யாயொடெந்தையிரக்கமுறுவகை
யாயவின்சொலினுற்றுயராற்றிட
நீயெழுந்தருணின்மொழிவல்லபந்
தூயசிந்தைச்சுரர்களும்வல்லரோ. (உ௫உ)

யானுமெம்பியருமிறந்தோமெனு
மானபங்கமறந்து தன்னெஞ்சினுக்
கானதம்பியளித்தவர்தம்மொடுங்
கோனிலம்புரக்கும்படிகூறுவாய். (உ௫௫)

என்னவம்முனிதன்னிணைத்தாண்மலர்
சென்னிமீதும்விழியினுஞ்சேர்த்திட
வுன்னிலாண்மைக்குவமையில்லாதவன்
பொன்னிலத்தினுணர்வொடும்போயினன். (உ௫௪)

வேறு.

வயிரஞ்செறிதருமனனும்வாய்மையும்வலியும்பொருபடைவினையின்மேல்வரு
செயிருந்திகழ்குருகுலமகீபதிதிறல்வெஞ்செருமுனையதனின்மேதகு
மயிர்நுண்குழலரமடநலார்பலரளிகொண்டெதிர்கொளவமரனனபின்
னுயிர்கொண்டதுசுரருறையும்வானுலகுடல்கொண்டதுதனதுடையபூமியே. ()

வேறு.

கிடந்தவுடல்வானவர்தங்கிளைசொரிந்தபூமழையாற்கெழுமுற்றோங்க
நடந்தவுயிர்புத்தேளிரமகளிர்விழிமலரானலனுற்றோங்க
வடர்ந்தளிகண்மொகுமொகெனுமாமோதவலம்புரித்தாரண்ணல்யாரு
மிடைந்துமிடைந்தெதிர்கொள்ளவீரருறைபேருலகமேவினனே. (உ௫௬)

கேள்வியுடைவரிசிலைக்கைமுனிமகனுமாதுலனுங்கிருதனென்னும்
வாள்விறல்கூர்நரபதியுங்குருபதிதன்வாய்மையினன்மாழ்கியேகி
வேள்வியருங்கனன்மூன்றுமொருவடிவாய்ப்பிறந்தனையவியாதற்கைவர்
தோள்வலியுந்தஞ்செயலுந்தொழாமுடியோன்றுஞ்சியதுந்தொழுதுசொன்னர். ()

புரிதவத்திற்கானவனங்கிருபனுக்குந்துரோணமுனிபுதல்வனை
துரகததாமனுக்குமமைத்திவ்வுழிநீரிருத்திரெனச்சொன்னபின்னர்க்
கிருதனுக்குவிடைகொடுத்தானிவருமவன்மொழிப்படியேகிரிசூழ்கானிற்
றருநிலத்தோரதிசயிப்பச்சிவபெருமான்றனைநினைந்துதவஞ்செய்தாரே. (உ௫௭)

நாடியசொற்சுருதிநிகழ்நாவினுன்சஞ்சயனுநள்ளென்கங்கு
லோடியொளித்திடுகதிரோனுதிப்பதன்முன்விலோசனநீருகுப்பவெய்தி
யாடிமுகத்தரசினுக்குமையிருபதாசரையுமளித்துவாழ்ந்து
வாடியமெய்ச்சவுபலைக்குமுற்றவெல்லாம்வாய்மலர்ந்தான்வாய்மைவல்லான். ( )

சேனுவிந்துவைமுதலாந்திருமைந்தரைவரும்வான்சென்றநாட்டொட்
டானுமற்சொரிகண்ணீராறுபெருங்கடலாகவழுதுசோர்வாள்
பானுள்வந்தநுண்முனிவனபகருமொழிவிடஞ்செவியிற்பட்டகாலைத்
தூநாகமுருமொலிகேட்டயர்வதுபோல்வீழ்ந்தழுதாள்சுபலன்பாவை. (௨௪௦)

மருத்தின்மகனெனுஞ்சண்டமருத்தனையபுயவலியோன்வன்கைத்தண்டா
லுருத்தமரினுடன்றம்பரூர்புகுந்தான்வாளரவமுயர்த்தோனென்று
வருத்தமுடனுபங்கிமிகமயங்கிநிலமிசைவீழ்ந்துவயிரமான
கருத்தினுடனலமந்தானழுதுபெரும்புனல்சொரியக்கண்ணிலாதான். (௨௪௧)

இப்பான்மற்றிவரிரங்கவெப்பாலுமிருளொளிப்பவிரவிபானுத்
துப்பார்செங்கொடிகளெனவுதபகிரிமிசைப்படர்ந்துதோற்றஞ்செய்யத்
தப்பாமனிலமடந்தைதன்பாரமகற்றுவித்தசார்ங்கபாணி
யப்பாலப்பாண்டவர்களைவரொடும்புரிந்தசெயலறைதுமம்மா. (௨௪௨)

ஐந்துபெரும்பார்த்திவரோடாரணியம்புகுந்தபிரானரியகங்குற்
சிந்துதினகரனுதயஞ்சேருமுனம்பாசறையிற்சென்றுநோக்க
விந்திரனேநிகர்நிருபர்முடித்தலைகள்வெவ்வேறாயிடைபேசிந்த
மைந்தருடற்குறைதழுவியாகுலித்துமெலிந்தாற்றுமானைக்கண்டார். (௨௪௩)

கண்டவுடன்மனமெலிவுற்றிவ்வண்ணமெவன்கொலெனக்கரியமேனிக்
கொண்டலுரைத்தனன்றாரகதாமாவின்வினைகளெலாங்கூற்றுமூட்க
வண்டமுகடதிரவுருத்தருச்சுனனுமாருதியுமவன்றனுவி
யுண்டலதுதவிரோமென்றுரைத்தோடமாறுபித்தேயுரைக்குமன்றே. (௨௪௪)

பாரிடமொன்றினைப்புரத்திபாசறையையெனப்புகன்றுபரிவிற்சென்றேம்
வீரருக்குழினைத்தாமன்சுயோதனற்குச்சூழுரைத்துமீண்டானைவ
ராரமணிமுடிகொய்துதரணியெலாமுன்குடைக்கீழமைப்பனின்றே
காரிருக்குமலராளகக்காந்தாரிசுதவுள்ளங்களித்தியென்றே. (௨௪௫)

திருகுசினத்தொடுங்கடுகிப்பாசறையிற்புகுதலுமேசெங்கட்பூதம்
பெருகுவிழிநீர்சொரியவடர்த்தலும்பின்னிட்டானைப்பெட்பிற்போற்றி
முருகிதழிச்சடாருனும்படைக்கலம்பெற்றிவ்வண்ணமுடித்தானம்மா
குருகுகிரியெறிந்தோனைநிகர்த்தவன்றன்விறலெவர்க்குங்கூறலாமோ. (௨௪௬)

என்றுபினுமபாண்டவியமெனும்படையுந்துரந்தான்மற்றெவரேகாப்பா
ரன்றுநுமதுயிரைந்துமளிப்பனெனும்வாய்மையினுலகன்றேனின்னும்
வென்றியுமதுழியடைவிற்சேர்ப்பவன்யான்விடுமினெனமின்னனைத்
துன்றிவிதியினையெவரோவெல்பவரென்றெடுத்தருளிச்சூழ்ச்சிவல்லான். (௨௪௭)

மைந்தருயிர்க்கிரங்குவதென்மலர்க்குழலாயுன்கொழுநர்வாழ்தற்கியான்செய்
தந்திரமற்றொருகோடியுரைக்கடங்காவெனத்துயரந்தவிர்த்துத்தன்மன்
கொந்தலருழுகநோக்கிக்கன்னன்முதல்யாவருக்குங்குலவுமீமத்
தந்தமுறுகடன்கழித்துமெனவுலுகன்சொற்படிநின்றளித்தபின்னர். (உசஅ)

அத்திருபுரியதனிலைவருடன்சென்றரியுமந்தன்முன்னர்ப்
பத்தியினிலிறைஞ்சிடமற்றெவர்கொலெனத்தருமன்முதற்பாலரென்ன
வித்தகனுமாகிசொற்றுச்சதாகதிசேயினைத்தழுவவேண்டுமென்ன
வத்தனைத்தூணைவித்தருளத்தழுவிநெரித்தனன்றுகள்களாயதம்மா. (உசகூ)

இனியூழிவாழ்திரெனவினைஞரொருநால்வருடனறத்தின்மைந்தன்
றனையிருத்திமீள்வலெனச்சாத்தகியுமலாயுதனுந்தன்னைச்சூழ
வினையகற்றும்பசுந்துளவோன்றுவரைநகர்த்திசைநோக்கிமீண்டான்சீர்த்திக்
கனைகடற்பாரளித்தவரு*மங்நகரினறநெறியேகருதிவாழ்ந்தார். உருO)

ஆகச் செய்யுள்—ச,௲௲௬.

பதினெட்டாம்போர்ச்சருக்க முற்றிற்று.

சௌப்திகபருவம்

முற்றுப்பெற்றது.





* அந்நகரில்வாழ்ந்தசெயல்கழறுவாமே என்றும் பாடம்.

உ

கணபதி துணை.

# மகாபாரத அரும்பதவுரை.

## சிறப்புப்பாயிரம்.

க. பொருப்பு - ஈண்டுப்பொதியமலை. அகத்தியமுனிவர் அகத்தியமுதலாய நூல்களையுண்டாக்கியதன்றித் தொல்காப்பியமுனிவர் முதலாயபன்னிருமாணாக்கருக்குங் கற்பித்திருத்தலாற்பொருப்பிலே பிறந்ததென்றும். அம் முனிவர்கண் முதலாய வான்றோர்பலரு மியற்றுஞ் செய்யுளெல்லாம் உரைப்பாருரைக்குமுரையாவும் புகழில் வைத்தோதுகிற தென்னன் புகழிலமைந்து கிடத்தலாற் றென்னன் புகழிலே கிடந்ததென்றும், முச்சங்கப் புலவருங் குழுமியிருந்தாராய்தலிற் சங்கத்திருப்பிலே யிருந்ததென்றும், சமணரை வெல்லுமாறு திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருக்கையாலிட்ட திருப்பாசுரம் வரைந்தவேடு வையையாற்றின் எதிர்செல்லுதலால் வையையேட்டிலே தவழ்ந்தபேதையென்றும், அந்நாயனார் வாது நிகழ்ந்துழிப்பாண்டியனெதிர் வளர்த்த பெருநெருப்பிலேயிட்ட திருநள்ளாற்றுப் பதிகம் வரைந்தவேடுவேவாது நிற்றலால் நெருப்பிலே நின்றதென்றும், பலநூல் கற்றோர் அவற்றைப் பயின்று சிந்தித்தொழுகலாற் கற்றோர் நினைவிலே நடந்ததென்றும், உலகிலாங்காங்கு வதிந்து வளர்தலால் ஒரேனமருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள் என்றுங் கூறினரென்க. கடையடிக்குத் திருமாலாகிய வோர் பன்றியின் கோட்டிற்றாங்கின பூமியாகிய பெண்ணினொக்கலையிலிருந்து வளர்கின்றாளென்க. திருமால் வராகாவதாரமாகிப் பிரளயநீரிலே முழுகியிருந்த பூமியைக் கோட்டிற்றாங்கி மேலெடுத்தருளினர் என்னுங் கதையினை விஷ்ணுபுராணத்திலறிக. தமிழைப் பேதையென வுருவகஞ்செய்ததற்கியைய அப்பருவத்திற்காக்கும் பிறத்தல் கிடத்தல் முதலிய வினைகளை முறையே கூறினரென்க. வருங்கவியில் அகத்தியன்பயந்தசெஞ்சொலாரணங்கு எனக்கூறலால் ஈண்டுக்கூறியபொருப்புத்தமிழ்பிறந்த விடமென்றாயிற்று.

உ. அம்புசாதன் - பிரமன். (அம்புசாதம் - தாமரை) பத்தாம்போர்ச்சருக்கம் - ௰உ ஆவது கவியிற்காண்க. முகம் ஆகுபெயராய் நாவையுணர்த்தியது. முந்நீர் - படைத்தல் காத்தல் அழித்தலாகிய மூன்று தன்மையையுடைமையாற் கடற்கு ஆகுபெயராயிற்று. செய்கென - இதில் வியங்கோளீறுதொக்கது. பிறபாவினங்களு முளவாயினு மிகுதியால் விருத்தயாப்பென்றாரென்க. காஞ்சிப்புராணத்திலே சிவபிரான் வடமொழியையுந் தென்மொழியையும் பாணினி முனிவர்க்கும் அகத்தியமுனிவர்க்கும் முறையே கற்பித்தாரென்பதனாலும், அவ்விருவருக்கு முன்பே திருமந்திரத்தில் ஆரியந்தமிழென்னுமிரண்டு முமாதேவியார்க்குங் கற்பித்தாரென்பதனாலும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அச்சிறுபாக்கமுதலிய பதிகங்களிற் கூறியதனாலுஞ் சிவபிரானேயுண்டாக்கினரென்பது புலப்படும்; அங்ஙனமாகவுஞ் சிவபிரானைக்கூறாது அகத்தியமுனிவர் மலையத்து வந்திருந்து விருத்திசெய்து விளங்கினமையால் அவர்பெருமை விளங்குமாறு அகத்தியன் பயந்த செஞ்சொலாரணங்கு என்றாரென்க.

ங. எழுவகையாவன - தடாகப்பிரதிஷ்டை, தநிக்ஷேபம், அக்கிரகாரப்பிரதிஷ்டை, தேவாலயப்பிரதிஷ்டை, நந்தவனப்பிரதிஷ்டை, பிரபந்தநிர்மாணம், சத்திரப்பிரதிஷ்டை என்பன. இவற்றை வடநூலார் சத்தசந்தானமென்பார். நூல்செய்தற் கேதுவாய்ச் சிறந்தமையிற் பாடுவித்தலையு முடன்கூறினரென்க. நவை - குற்றம்.

ச. முதலிரண்டடிக்கு - அச்சுவினி முதலிய நாண்மீன்களை நிரைத்து, மற்றை அநேக நக்ஷத்திரக்கூட்டமாகிய புதிய மணிகளோடு ஞாயிறு முதலான ஒன்பது விதங்கொண்ட கோள்களை நிரைத்துப், பதினாலுலகங்களையுஞ் சூழ்ந்த வெற்றியையுடைய திருமால்போலக் (கடலினீரையுண்டு கருநிறங்கொண்டு) வரு

கின்றமேகமென்க. நிரைத்தல் - ஒழுங்குபடச்செய்தல். நாண்முதலியன வொழுங்குபடச்செய்யாவழி மேகமழைபெய்யாமையறிக. நிரைத்தலிரண்டுந் திருமாலுக்குங் கொண்டுரைக்க. விஷ்ணுபுராணத்திற்றேவர் முதலோர்களைப்படைத்தலுந் துருவனுக்குப் பதங்கொடுத்தலுங் கூறியிருத்தல் காண்க. ஈரேழ்புவனமும்வலஞ்செய்கொற்றம் திருமாலுக்கே கூறிய விசேடணமென்க. இன் ஐந்தாவது ஒப்புப்பொருட்டு. இவ்வாறன்றி, நேமியை மேருமலையெனக்கொண்டு நாணிரைத்து முதலிய விசேடணங்களை மேருவுக்காக்கி ஈரேழ்புவனங்கட்கும் வலிமையைச்செய்கின்ற மேருமலையினின்றும் வருகின்ற கொண்டலெனப்பொருள் கூறுவாருமுளர். இப்பொருட்கு இன் - நீக்கப்பொருட்டு. வாள் - வாட்படை. இரவி - அந்நந்திமலை. விதிர்த்தல் அசைத்தல்.

ரு. வம்பு - வாசனை. உம்பர் - மேலுலகம். உள்ளுற — கண்டோர்மதிக்க அம்புராசி — கடல். அதற்கு - அம்மந்தரமாகிய மத்திற்கு. அதனுடன் — அம்மந்தரமாகிய மத்துடன். குன்றின் - இன்ஐந்தனுருபு. குன்றின்வீழருவியென்றிசையும். வைத்தது எனற்பாலது வைத்தெனக் குறைந்துநின்றது. உம்பரூடெழ என்னும் பாடத்திற்கு ஊடெழனுருபென்க.

சு. ககனம் - ஆகாயம். பண்ணை - வயல், வாவியுமாம். பெண்ணையேகொண்டு என்பது பெண்ணையாற்றைக் கொண்டென்றும், பெண்ணைக்கொண்டென்றுமிருபொருள் கொள்ளநின்றது. ஏகாரம் முன்னையவிரண்டுமசையும் பின்னையது தேற்றமுமாம். ஆல்— அசை.

எ. சுரத மகளிரைக்குறிக்குங்கால், தொடுத்த-நாரினாற்றொடுக்கப்பெற்ற. அகில்-அகிற்புகை. உந்திச்சுழிவயினிலங்க — கொப்பூட்சுழிவயிற்றில்விளங்க. மெய்த்தனங்கள்-மெய்யிலுள்ளமுலைகள். வீசி—பரப்பி. மணிமருங்கு-அழகியஇடை. வண்டு-வளையல். தடங்கண்-விசாலமானகண்கள். கரையழிந்து — அளவுகடந்து. அணைப்போர் - கலவி. என்றும்; ஆற்றைக்குறிக்குங்கால், தொடுத்த - சேர்க்கப்பட்ட. அகிலலைந்துந்தி — அகில்மரங்களைப் பொருந்தித்தள்ளி. சுழிவயினிலங்க - நீர்ச்சுழிகள் இடங்கள் தோறுமிலங்க. மெய்த்தனம் - உண்மையான பொன். வீசி - எறிந்து. மணி - நவமணி. மருங்கு—பக்கம், வண்டு—வண்டுகள் சங்குமாம். சிலம்பிரங்க — மலையெதிரொலிசெய்ய. தடங்கள் - வாவிகள். கரையழிந்து - கரைகடந்து படுத்த - கட்டப்பட்ட என்றுங்கொள்க. பண்ணையங்கானல்-வயல்களும் அழகிய சோலைகளும். ஆல் - அசை.

அ. ஔவையார், பாரியென்னும் வள்ளலின் மகளிராகிய அங்கவை, சங்கவையைத் தெய்வீகனென்னும் அரசனுக்கு மணம்புரிவித்தபோது, "முத்தெறியும்பெண்ணை முதுநீரதுதவிர்ந்து, தத்தவருநெய்பாறலைபெய்து-குத்திச், செருமலைதெய் வீகன் றிருக்கோவலூர்க்கு, வருமளவிற்கொணடோடிவா." எனப் பாடிய பாடலுக்காக நெய்பால் பெருகி வந்தமையால் அருந்தமிழறிவினாற்சிறந்து என்றார். வரால்முதலியன எதிரேறிச்செல்லுகையால் எதிர்கொள்ளவென்றார். சனம்-கூட்டம். சம்பவச்சருக்கம் சஎ-ஆவது கவியிற்காண்க. மலங்குமுதலிய மீன்களாகிய சனங்கள் எதிர்கொளள வெனவுங்கூறுவர். உம்மை - எச்சத்தோடு சிறப்பு.

கூ. அருந்தமிழ்ப்பாவாற்பேர் பெறுபனுவற்பாவலர் மூவருமெனக்கூட்டுக. மூவர் — பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார். மொழிவிளக்கு — பிரபந்தமாகிய விளக்கு. இம்மூவரும் திருக்கோவலூரையடைந்து மாலையிற்பொய்கையாழ்வார் ஒருவர் திருமாளிகையிற்சென்று இடைகழியிற் சயனித்திருந்தனர்; பின்னர்ப் பூதத்தாழ்வார் சயனித்தற்கு இடந்தேடிவந்து பொய்கையாழ்வாரைக்கண்டு அடியேன் சயனித்தற்கு இடமுண்டாவென்று வினவ அவர் இவ்விடமொருவர் படுக்கலாம் இருவரிருக்கலாமென்று கூறியழைக்க அவ்விருவருமங்கிருந்தனர்; பின்னர்ப் பேயாழ்வாரும் இடந்தேடி அத்திருமாளிகைக்கு வந்து சயனித்தற்கிடமுண்டாவென்று வினவ இவ்விருவரும் இவ்விடம் ஒருவர் படுக்கலாம் இருவர் இருக்கலாம் மூவர் நிற்கலாமென்றழைக்க இவருமுள்ளேசென்றனர்; இம்மூவரும் ஒருவரையொருவர் விசாரித்து மகிழ்ச்சியடைந்தனர்; அப்பொழுது திருமால் பேரிருளையும் பெருமழையையுமுண்டாக்கித் தாமுமவ்விடைகழியிற்சென்று அதிகநெருக்கமுண்டாக்கியருளினார்; அவ்வாழ்வார் மூவரும் முன்னில்லாத நெருக்கமிப்பொழுதுண்டாயதென்னையென்று திகைத்தனர்; பொய்கையாழ்வார் வையந்தகழியாவெனத் தொடங்கிய முதற்றிருவந்தாதியாற் சூரியனை விளக்காக வேற்றிப்பார்க்கப் பூதத்தாழ்வார் அன்பே தகழியாவெனத் தொடங்கிய இரண்டாந்திரு

வந்தாதியால் ஞானதீபத்தை யேற்றிப்பார்க்க, இவ்விரண்டாலு மிருளற்றமையாற் பேயாழ்வார் திருமாலையுள்ளபடி கண்டு, திருக்கண்டே னெனத்தொடங்கிய மூன்றாந்திருவந்தாதியை யருளிச்செய்தார். என்னுங் கதையினைச் சுருக்கி மூவருநெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத்தொழுதநன்னாடு என்றார். மூவரிருவர் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார் என்னுமூவரிற் பின்னர்க்கூறப்பட்ட விருவர். மொழி- ஆகுபெயர்.

௧0 அமுதம்-நீர். சந்தம்-சந்தனம். பகடு - எருமைக்கடா. முன்னேருழுவ-முனைநோயுழுவன, முன் ஏராயுழுவனவென்றுமாம். சிந்தச் சிந்த என்னுமடுக்கு ஒருதொழில் பலகால நிகழ்வதைக்குறித்து நின்றது.

௰௧. கனை - அம்மலராகியகனை. குழைதோய்விழி - காதளவியகண். துவைத்தல் - ஈண்டு நையப்பிதித்தல். செறு-வயல.

௰௨. தலைதெரியா - வேற்றுமைதெரியாத தலை - அசைநிலை; புறநானூறு-௰௬-ஆம் பாட்டுரையிற்காண்க. சேறாக அத்தேனுறுசேறும்படி. வேலைக்கழிக்கானலங்கைதை - கடற்கரையிற்கழியையுடைய அளங்களினிற்கின்ற அழகியதாழைகள். சுரும்பு தும்பி - வண்டுகளின் பேதம், சோறிடுதல் - ஈண்டு மகரந்தத்தைச்சொரிதல். பாடுவாரிசைகேட்டு அவர் வருத்தந்தீரச் சோறிடுந்தன்மை தோன்றக் கூறினுரென்க. தெரியா - ஈறுதொக்கபெயரெச்சம்.

௰௩. கம்பலை - ஒலி. கழனிபிலெனஎழாவது விரிக்க. காமட-இறைப்பொருள். ஐம்புலத்தார், ஐந்திடத்தார். அவர் தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்பவர். புலக்கிழத்தி - நிலமகள். இதனலாசருக்குச் செலுத்துங்கடன் ஆறிலொன்று என்பது பெறப்பட்டது.

௰௪. கடலேழு-உவர், கருப்பஞ்சாறு, தேன், நெய், தயிர், பால், நன்னீர் என்பன. பழனப்பண்ணை-வயல்களையுடைய மருதநிலம். வண்ணம நானகு - பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர வருணங்கள்.

௰௫. ஐந்துபா - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா. நால்வகைக் கவி-ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம். கவித்துறை - கவிவர்க்கம். பாமனை-பாமனுக்கு என நான்காவதாக்குக.

௰௬. தென்னர், சேரலர், செம்பியர்-பாண்டியர், சேரர், சோழர். வரிசை-சிறப்பு. முத்தமிழ் - இயல், இசை, நாடகம்.

௰௭. தாரகாயணவண்டு – தாரமென்னுமிசையைப்பாடுவதாகிய வண்டென்க. தாரம் - மூக்காற்பிறக்குமிசை. தண்டலை - சோலை. வீரராகவன் – வில்லிபுத்தூரர் தந்தை, குருவென்பாருமுளர். தீரகாகளம் - வெற்றிச்சின்னத்தைக்குறித்தது. தாரகாகணவண்டு என்ற பாடத்திற்கு - நக்ஷத்திரக்கூட்டம் போல வண்டுகள் என்க. பெரியாழ்வார்க்கு வில்லிபுத்தூரர் எனப்பெயருண்மையால் அப்பெயரை இந்நூலாசிரியர் தமக்கிட்டழைக்கப்பெற்றாரென்பர்.

௰௮. குரிசில் - பெருமையிற் சிறந்தோன். கலி - வறுமை. கருநடம் - கன்னடபாஷை. கலக்காமல் - நிலைகுலையாமல். தலைகண்டான் - மேம்பாடாகச்செய்தான்; பரிபாலித்தான என்பது கருத்து. தமிழ்நூல்கள் கலியினைமூழ்குதலாவது - கற்பாரின்றிக்குறைதல். கருநடப் பெயர்வெள்ளத்துவிழுதலாவது - கருநடபாஷை அதிகரித்துப்பரவ அதனுளடங்குதல், அந்தத் தேசம் கருநடதேசமாதலாற் பெருகிய அத்தேய பாஷைக்கலந்து தமிழ்பெருமைகுன்றாமை கருதிக்கருநடப் பேர் வெள்ளத்து விழாமலென்றார்.

௰௯. வளவன் - சோழன். வழுதிதெவ் - பாண்டியனுக்குப்பகைவன். கொற்றவை - வீரலக்ஷ்மி. கோட்டினான் - எழுதினான். கொற்றவைமனங்களிப்பத் தெவ்வைச்செற்றுக்கமலமாது மனக்களிப்பக்கற்றவர்க்களித்து எனக்கூட்டிப் பொருள்கொள்க இருகையுடைக் கற்பகம் - இல்பொருளுவமை

௨0 அமர்பொருது கன்னாட்டிக் கங்கை நீருட்டுவித்து எனக்கூட்டுக. கண்டன் வேங்கை – கண்டனென்னுஞ்சோழனது புலிக்கொடி. எழுதிய அவனெனற்பாலது எழுதியவன் எனப் பெயரெச்சத்திறு தொக்கது. எழுதியவன் - வினையாலணையும் பெயருமாம். கன்னாட்டுதலாவது – புறங்கொடாது போர்செய்திறந்தோன் பெயர்தீட்டி. அவற்கு இஃதுருவமென்று கல்லைநாட்டுதல; இது புறப்பொருளிலக்கணம “என்னைமுன்னில்லன்மின்றெவ்விர்பலரென்னை, முன்னின்றுகல்னின்றவர்” என்னுந்திருக்குறளானுமுணர்க நாட்டி - நாட்டுவித்து எனப்பிறவினையாக்குக. கங்கை நீருட்டிவித்து எனவே வீரசுவர்க்க வின்ப

மெய்தவிடுத்தென்பது கருத்தாயிற்று. வேங்கை - ஆகுபெயர்.

உ௧. வக்கபாகை - நகரத்தின்பெயர். தன்றிருப்பெயா - ஆட்கொண்டான். அறனெறியாலீட்டிய பொருளென்பார் மெய்ச்செல்வமென்றார். தோற்றிய - ஈண்டுத்தன்வினை.

உ௨. உய்யக்கொண்டவன் யாவரையுமீடேறச்செய்தவனாகிய அவ்வாட்கொண்டான், நறகேள்வியானிறைந்த செவியென்பார்சிறந்த செவியென்றார்.

உ௩. இருக்காதிமறை மொழிந்தோன் - வேதத்தை இருக்கு முதல்நான்காகப் பகுத்துரைத்தோனாகிய வியாசமுனி. சுருக்காக - சங்கிரகமாக. புராணமுறை-பழையமுறை. அது முதனூலோடு முரணாமுறையாம். பெருக்காளர் கல்வி செல்வ முதலியவற்றாற் பெருக்கமுடையோர். வரந்தருவார் தம்மைப்படர்க்கையாகக் கூறினாரென்க. வியாசமுனிவர் முற்காலத்திலே தைத்திரிய முதலிய பெயரையுடையனவாயிருந்த வேதங்களை இருக்கு முதலிய பெயரிட்டு வரையறைப்படுத்தியுரைத்தமையால் இருக்காதிமறைமொழிந்தோனென்றார். 'இக்கருத்தைக்கலித்தொகையிற கடவுள் வாழ்த்துரையிற்காண்க.'

# தற்சிறப்புப்பாயிரம்.

## என்பது, தெய்வவணக்கமுஞ்செயப்படு பொருளுங்கூறுவது.

—[o]—

௧. வாடாத சுருங்காத. வடமேருவெற்பேடாக ஆகவங்கூர்தன் கோடெழுத் தாணியாக எழுதும்பிரானை யெனக்கூட்டியுரைக்க. ஆகவங்கூர்தன்கோடு-யுத்தத்திலே கூர்ந்த தனது கொம்பு. ஆக என்பது நிகழ்காலத்தின் வந்தசெயவெனச்சம். மறை – என்பதாகசியார்த்தங்களையுடையது எனப் பொருடருதலாற்காரணப்பெயர் வினைமுதற்பொருளுணர்த்தும இகரவிகுதி புணர்ந்து கெட்டது. பாரதம் என்னும் பெயர் முதனூலாற் பெற்ற பெயர். திருமான் முதலாய தேவர்களின் சரித்திரங்களைக் கூறுதலானும், உலகினரெளிதினுணர்ந்துய்யுமாறு பலதருமநீதிகளைககூறுதலானும், வேதவியாசமுனிவராற்கூற விநாயகரெழுதப் படுதலானும் பாரதம் ஐந்தாம்வேதமெனப் பட்டதென்க. மாபாரதஞ்சொன்னநாள் அதனை யெழுதும் பிரானெனக்கூறலால் அதில் விருப்புடைய அவ் விநாயகக்கடவுள் அதனைத்தமிழின மொழிபெயர்த்துக்கூறு மிந்நூலுமிடையூறின்றி யினிது முற்றுமாறருள்வரென்பது கருத்தாயிற்று. இக்கவிக்கு யாம் என்பது தோன்றா வெழுவாய். அரோ-அசை.

உ. தாமம் – கொன்றை. திறம் - வகை. புருகூதன்முதலாய - இந்திரனை முதல்வனாகக் கொண்ட. பூதேவர் பிராமணர். கோடி - எண்ணின் மிகுதிகுறித்ததென்க. உற-மிக. அடியார்முயறசித்திறந் திருகாமல் விளையிக்குமெனவே, அன்பனாகிய யான் செய்யும் இந்நூன்முயற்சியை யிடையூறின்றி யினிது நிறைவேற்றுவரென்பது கருத்தாயிற்று. காண்டவதகனச்சருக்கத்தில்; தேவர் முப்பத்துமுக்கோடியரென்றும் கோடிதேவருக் கொருவர்தலைவராக இருவரெண்மர்பதினொருவர் பன்னிருவரெனுமவ் விண்ணவர்கண் முப்பத்துமூவர் என்றும், இவர்கட்கெல்லாந்தலைவன் இந்திரனென்றுங்கூறலால், மூன்றுமடிக்கு இந்திரன் முதலாகியமுப்பத்து முக்கோடிதேவர் எனப்பொருள்கூறுவது மொருந்தாதென்க. புருகூதன் யாகத்தில் அதிகமாக வழைக்கப் படுபவன்.

௩. உலகம் முதல் ஆக்குமாறயனும்-உலகங்களை முதலிற் படைக்கு நெறிக்குபிரமனாகுவன். ஆக்கியவுலகம்—அவ்வாறு படைக்கப் பட்ட வுலகங்களை. அடிபோற்றி—பாதங்கள்

நம்மாற் போறறப்படுவன. போற்றி என்ப பதில் இகரஞ்செயப்படு பொருளுணர்த்தும் விகுதி. போற்றிய வென்னும் வியங்கோண் முற்றுப் போற்றி என நின்றதாகக் கொண்டு காக்கவெனப் பொருள் கூறுவாருமுளர். அவை. அவ்வுலகங்கள். உலகம் இடைநிலைத் தீவகம். யாதுயாண்டொடுங்கும் அஃததனி லுற்பத்தியாம் மண்ணிற்கடம்போலும் என்னு மவிளுபாவத்தால்; உலகஞ்சங்காரகாரணன் மாட்டொடுங்குதலின் மீளத்தோன்றுங்கால் அவனிடத்து நின்றுந்தோன்றும்; அவனையொ ழியத் தோற்றுவிப்பாளொருவனில்லனென்பார் வீக்குமாறாளும். அவைவீந்த நாண் மீளப் பூக்குமாமுதலெவன் என்றாரென்க. ஆகுமென் னுஞ்செய்யுமென்முற்று ஆம் என நின்றது. இவ்வாறன்றி ஆம் அசையெனினுமாம்.

௪. தேங்குகசுருதி வேதங்களெங்கு நிரம் பக்கடவன. புயல் - மழை.

ரு. * கன்னபாகம் - காதுவழியால் காதெ. னினுமாம். துகள் - குற்றம். சுகன்-சுகமுனி. பாவம்-அபிப்பிராயம். மற்று - அசை.

௬. ஊமன், கண்ணிலாதவன். கேட்டலுங் காண்டலும் என்பது முறைநிரனிரையணி.

எ. முன்சொல்-வடசொல். சொல்லென் பதனை ஆகுபெயராக்கிப்புராணங்களென்பாரு முளர். புன்சொல் — வழூஉச்சொல். என் சொல் வழூச்சொல்லாயினு மாப்பெருங்காப் பியக்கதை மகிமையாற் பொறுத்தங்கீகரிப்பர் என்பது கருத்து உம்மை இழிவு சிறப்பு. தமிழ்நூலார் காப்பியத்தைத் தொடர் நிலைச் செய்யுளென்பர்.

அ. மொழி - ஈண்டு வடமொழி. மாதவன் இலக்குமிநாயகன். மன்உமாதவன் எனப் பிரித்து நிலைபெற்ற உமாதேவிநாயகனுகிய சிவபிரான் எனப்பொருள்கொண்டு இந்நூலார் அரிசிவபத்தி யிரண்டுமுளராதலால் இங்ஙன மிரு பொருள் படக்கூறினரென்பாருமுளர். அவர் கூறுமாறே சிவபத்தியுமுடையரென்ப தனை இந்நூலுள் வந்துழி வந்துழிக்காட்டுதும்.

உ

## முதலாவது ஆதிபருவம் குருகுலச் சருக்கம்

௧. சந்திரன்றோன்றும்இடம் பலவுளவாயி னும் அவன்பெருமைதோன்ற, கங்கண்மாதவ னிதையமாமலர் வருமென்றார் என்க. கோடி என்றதன்பின் உள்ளார் எனவருவித்து முடிக்க சந்திரன்றோன்றுமிடம் பல என்ப தைச் சூதுபோர்ச்சருக்கத்தில் "விழியினொன் சின்வாயொருப்பினீடுததியின் விதிபடைப பினிற்றோன்றி" எனக்கூறுதலாற்காண்க.

௨. நாள்கள்-நாண்மீன்கள். திருந்தச்சடை முடிமேல் இருந்தவானவன் எனக்கூட்டி யுரைக்க.

திருந்துதல் — ஈண்டுக்கலைதேய்வுறாதின் புறல். திருந்த-என்பது காரியப்பொருளில்வந்த செயவனெச்சம். இனித்திருந்து அவ்வானவர் எனப்பிரித்துரைப்பினுமாம். சடைமுடிமே லிருந்தகதை புராணங்களிற் காண்க.

௩. முதலிரண்டடிக்கு - (உலகில்) வட்ட மாகப் பயிலுகின்ற பாம்புகளின் பெரிய சுவா சத்தினல் கலந்துநெருங்கிய ஆலமானது தாக்க வருந்திய பெரியதுன்பம் நீங்க. மயங்குதல். ஈண்டுக்கலத்தல்; நன்னூல் "மம்முன்பயவ மயங்குமென்ப" என்பதினும், புறநானூற்றில் ௰௯-ஆவது பாட்டுரையினுங்காண்க. அலம் - விடம். ஆலம் - அலமென விகார மாயிற்று இவ்வாறன்றி உயிர்ப்பினன் மண்டு அலம பொரமயங்கி வருந்திய பெருந் துயர் எனக்கொண்டு கூட்டியுரைப்பாருமுளர். நிழல் - குளிர்ச்சி. மரபு - தன்மை; புறநானூற் றில். ௨௯-ஆவது பாட்டுரையிற்காண்க. நிழலி னூலும், அமிழ்தினுலும் மாறக் குளிரவைத் தோன் என்க.

௪. பைம்பொன்மால்வரை — பசியபொன் னினையுடைய பெரியமந்தரமலை. பணி-பாம்பு. ஆனவர்-எழுவாயுருபு. அம்புராசி-கடல்.

ரு. மித்திரன் - சூரியன். சித்திரம்-அழகு. அபரபக்கத்திற்சூரியனிடத்திலே ஒவ்வொரு கலையாக ஐக்கியமாதலும் பூர்வபக்கத்தில் ஒவ்

* கன்னபாகம்-காது. புட்பயாத்திரைச்சருக்கம்-௫௫-ஆங் கவியிற்காண்க.

வோர் கலையாகத்தானடைதலுங் கருதி அவை முன் கொடுத்து மீளவுங்கவர்வோன் என்றார்.

௬ புந்தி-அறிவு. சந்திரன் வியாழகுருவின் பன்னியாகிய தாரையைப் புணர்ந்து புதனைப் பெற்றானென்பது புராணங்களின் கதை. உந்தியாரழகுடையபேரு ரோகிணி வயிற்றிற், புந்தியாலுயர்புதனையப் புண்ணியன்பயந்தான. என்றிப்போதுகிடைத்த வெட்டுப்பிரதிகளிலிருக்கின்றதாயினும் புராணங்களோடு மாறுகொளக்கூறலாலது பாடமன்றென்க.

௭. மநு - மநு என்னும் பெயரையுடைய அரசன. இவன்மைந்தன் இளனென்னும் பெயரையுடையவன். உளை-பிடர்மயிர். விபினம் - காடு. விதி - ஈண்டுச்சாபம்; அது உமாதேவியார் அருந்தவம் விளக்கின்றவனத்தையுற்றதனாற் பெண்ணாகும்படி விதித்ததென்க. என்ப-அசை ; சீவகசிந்தாமணியுரையிற் பலவிடங்களிலுங் காண்க.

௮. மாரகாகளம் - மன்மதனுடைய வெற்றிச்சின்னமாகிய குயில். ஈண்டு ஆகுபெயராகக் குயிலோசையை யுணர்த்திற்று. தீரகாமம் - வலியகாமம்.

௯. பூவை - ஆகுபெயர். பின்னிரண்டடியினுமுறைநிரனிறையணியறிக. அகத்திய முனிவர்க்குச் செந்தமிழையறிவுறுத்திய பரமாசிரியராதலாற் கலைமுருக னென்றார். இவ்வாறன்றித் தலைச்சங்கமிருந்து கலைகளையாராய்ந்தமையாற் கலைமுருகனென்றார் என்பாருமுளர்.

௧௦. உரு - அழகு. உருவினிற்சிறத்தல் அசுரர் கவர்தற் கேதுவாத லறிக. முற்காலத்தின் மலைகளெல்லாஞ்சிறகுடன் பறந்து வீழ்ந்தூர்களை யழித்தமைகண்டு இந்திரனவற்றின் சிறகரிந்திட்டமையாற் பொருப்பினைச் சிறகரிந்தவனென்றார். உருப்பசி-தேவகணிகையரிலொருத்தி.

௧௧. அபயம்-ஈண்டு அடைக்கலம். போதலும் - உம்மீற்று வினையெச்சம்.

௧௨. புறம்-முதுகு. மறம்-வீரம். மறந்தருங்கழல் என்பது ஒரு பொருட்டன்மையை மற்றொருபொருண்மேல்வைத்துக் கூறலான் மரபுவழுவமைதி யென்க.

௧௩. திருமால்நரன்நாரணன் என இருவராகி வதரிகாச்சிரமத்திற் றவஞ்செய்கையில் அவர்களுடைய தவத்தைக் கெடுக்க இந்திரன் அநேகதேவகணிகையரை விடுத்தனன், அதனால் நாராயணன் கலங்காதிருந்து தொடையில் ஊருவசிமுதலிய அநேக தாசிகளைப்பிறப்பித்தான், அவர்களைத் தேவர்கணிகையர்கண்டு மயங்கி ஊருவசிமுதலியவரைத் தங்களுக்கு நாயகிகளாகக்கொண்டு தேவலோகமடைந்தனர் என்பது கதை. அவிப்பாகத்தைத் தேவர்கட்கு முன்னரேயுவந்து சுவைகாணலாற் றேயுவை மூறகூறினார்.

௧௪. முகுடம் - முடியுறுப்பு, ஈண்டாகு பெயராய் முடியினை யுணர்த்தியது. சகுடமீரென - சேம்பினிலைக்கண்ணீர்போலப் (பற்றற்று) இது இசையெச்சம். சகுடம்-சேம்பினிலையையுணர்த்தலால் ஆகுபெயர். சதம் - நூறு. நாமவேல் — அச்சத்தைத்தரும்வேல். அரசு-உயர்திணைப்பொருள் குறித்த அஃறிணைச்சொல்.

௧௫. புலோமசை - இந்திராணிக்கோர் பெயர், புலோமாவென்னுமசுரன்மகள். முயக்கு-கலவி. யானம்-சிவிகை. முனிவாய்மை-முனிந்தவாககாகியசாபம், இது வினைத்தொகை. பெரும்புயங்கம்-பெரும்பாம்பு. உம்மை-எச்சம். ஏவலென்றது சத்த முனிவர்கள் தாங்கச் சிவிகையிலேறி வருவாயென்று கூறிவிடுத்த ஏவலுரையை. சாபமாவது நகுடன் சிவிகையிலேறி விரைந்து நடக்குமாறு சர்ப்ப எனக்கூறலாற் குறுமுனி சர்ப்பமாக எனச்சபித்தல்; இக்கதையினைத் திருவிளையாடற்புராணத்தி லிந்திரன் பழிதீர்த்தபடலத்திற் காண்க.

௧௬. மைந்து-வலி. கொற்றவை-வீரலக்குமி. பகை - பகைவரையுணர்த்தலால் ஆகுபெயர். செற்றவன் - அழித்தவன். செற்றம்-கோபம். தொறு என்பது ஈண்டிடப் பன்மைகுறித்து நின்றது.

௧௭ புகரவன்-சுக்கிரன். இவன் புதல்வி பெயர் தெய்வயானையென்க. குயசலம்-தனமலை. இருவர்பெயர் - யது, துருவசு என்க. பிதாவாக்கியத்தை அங்கீகரியாதவராதலால வெங்குமரரென்றார். அதனை-௨௬-ஆவது-கவியிற்காண்க. தழீஇ - தழுவி, இதுசெய்தென் வாய்ப்பாட்டு வினையெச்சம.

௧௮. கவி-சுக்கிரன். உரை-புகழ். மன்னவன்-விடபபன்மன் என்னுமசுரமன்னனென்க; இவன் மகளின்பெயர் சன்மிட்டை. தெய்வயானையுஞ்சன்மிட்டையு நண்புற்றிருக்கு நாளில் ஓர்நாட் சன்மிட்டைதன்னைக்கோபத்தால் நிந்தித்த தெய்வயானையைக்கிணற்றிற் றள்ளினாள். அதனால்விடபபன்மன்சன்மிட்டையைத் தெய்வயானை கருத்தின்படி அவளுக்கே வலாட்டி யாக்கினான், சன்மிட்டையு மவ்வா

றிசைந்தொழுகினாள் என்னுங் கதையினைச் சுருக்கி முன்னிசைந்தபேரிசைவிளைலேவலின் முயல்வாளென்றார்

௧௯ ஆழி-ஈண்டு ஆக்கினையாகிய சக்கரம். அணங்கென - தெய்வமகளைப்போல. பாழி - பெருமை. யாழினோர்புணர்ச்சி - கந்தருவருடைய மணம்; அது தலைவனுந் தலைவியு மெதிர்ந்து தாமேகூடுவது. எட்டுமணத்தினுஞ் சிறந்தமையாற் பெரும்புணர்ச்சி என்றார். துடித்து-துடிக்க எச்சத்திரிபு வாழி - அசை. ஆடவர்க்குவலந்துடித்தல் நற்குறியென்க.

௨௦. மைந்து-வலி. தர்ப்பான் - எதிர்கால வினையெச்சம். பிதாவினுரைகொள்ளு நீதியனென்பீது விளங்கப்புண்ணியப் புதல்வனென்றார்.

௨௧. இறைமனை-தெய்வயானை. அழன்று-கோபமுற்று. அப்புதல்வர்தன்னையகனையொத்த வடிவுடையராயிருத்தல்கண்டு கோபமுற்றாளென்பது கதை. கொல்-அசை. மைந்தரிருவர் பெயர்-துருகுவு, மநு என்பர்.

௨௨. ஐ - சிலேட்டுமம். செப்பலும் - உம்மீற்று வினையெச்சம். நூறு - ஆகுபெயராய் நூறுவயதினை யுணர்த்திறறு.

௨௩. உசன்-சுக்கிரன். யாவரும் என்றது பூருவையொழிந்த நால்வரை. சபித்தமை கருதிக்கூறலால் உசனார் என்பதில் ஆர் இழிதற்கண்வந்தது

௨௪. விந்தை-வீரலக்குமி. முந்தை-பழமை. மணம் - போகம். ஆதரம் - ஆசை. சிந்தனை - விருப்பம். விந்தைமுதலோர்விரும்ப என்றதனால் அட்ட ஐசுவரியங்களுடன் போகங்களை யனுபவித்தானென்பது கருத்தாயிற்று. உம்மை-அசை.

௨௫. இடியுமாறுகொளெணுமொழி — இடியும் ஆறுதல் கொள்ளத்தக்க மேம்பாட்டுரை. உம்மை-சிறப்பு. முரசு அரசர்க்குத்தசாங்கத்தினொருறுப்பென்க. அடி-வம்மிசமுதல்.

௨௬. விரதம-நோன்பு. சுரதம் - புணர்ச்சி. பரதம்-நாடகம் இசை சங்கீதம். சரதம்-உண்மை இவ்வரசனு லுண்மையாக விருத்தியடைந்தனவென்பார் பரதமுமிசையுஞ் சரதமின்புற என்றார். இவன்சிறந்து விளங்கலாலிவன்முதற் சந்திரவம்சத்திற்குப்பாரத வம்மிசமென்றும் அவ் வம்மிசசம்பந்தமான கதைக்குப்பாரதமென்றும் பெயர் கூறுவர்.

௨௭. சமூகம் - கூட்டம். சுராரிகள்-தேவர்கள் பகைவராகிய அசுரர். பூசல்-போர். வெந்-முதுகு. புரசைநாகம் - கழுத்திலிடு கயிற்றையுடையயானை. நாகம்-சுவர்க்கம். கடவினன்-முற்றெச்சம். முன்போரிலசுரரைக்கொன்று சுவர்க்கத்தாரைக் காத்த வொற்றுமை கருதி அறுமுகக்கடவுளென்றயிர்த்தாரென்க.

௨௮. மூக்குலம் — அக்கினி சூரிய சந்திர குலம். மைக்குலம் - முகிற்கூட்டம். புட்கலாவர்த்தம் - பொன்மழைபொழியுமேகமென்க.

௨௯. வாகம் — வாகனம். அப்புரவலன் - அந்த அத்திராசன். இயக்கர்நகர் - அளகாபுரி. நாகம - சுவர்க்கம். "பெறுவதுகொள்வாருங் கள்வருநேர்" என்றாற்போல நிகர் என நின்றதென்க.

௩௦. விநதை - கருடன்றாயின்பெயர். யானம்-வாகனம். விநதைபயந்தயானம் — கருடனாகியவாகனமென்க. கானம்-வாசனை. கயம்-தடாகம். கயம்-யானை. காரம்-முதலை. கயமுங் காரமுமானவர் இந்திரத்துய்மன், அநுரு என்பவர்.

௩௧. வயம்-வெற்றி. மருவரும்-அடைதற்கரிய. அங்குரித்தல் - தோன்றுதல். இவன் பிதா சவ்வருணன், வசிட்டராகிய குருவினருளாலிவனைப பெற்றமையாலிவனுக்குக் குருவென்று பெயரிட்டானென்க.

௩௨. இருகுலம் - ஈண்டு அக்கினிகுலஞ் சூரியகுலமென்ப. வேறொரு குலமென்றது இம்முக்குலமுமொழிந்த குறுநிலமன்னர் முதலோர்குலங்களை. இருகுலத்தினுமென்பதற்குத் தந்தைதாய் என்னுமிருமரபினும் என்றும், வேறொருகுலத்தினும் என்பதற்கு இவன்குலமன்றி வேறெந்தக்குலத்திலாயினு மெனறும் பொருள்கூறுவர். ஓகாரம்-எதிர்மறை.

௩௩. அமுதவெண்டிரைச்சிந்து என்றது றைபாற்கடலென்க. இவன் முதலானவர்கள் ஐந்தாம் வேதமாகி உலகிற்கு யோகமாகும் பாரதகதை நிகழ்தற்கேதுவாயிருந்தமையால் இவன்செயல்விரித்துக்கூறுது மென்பார் வகுத்துக்கூறுவாம் என்றார், இவன்றந்தை பிரதீபன்.

௩௪. வேட்டைபோய்-மிருகங்களைக்கொலை செய்தற்குப்போய். தூ - வெண்மை. சூழல்-ஈண்டு இடமாகிய கரை என்க.

௩௫. மரு-வாசனை. பொற்ப - பொலிய. குழை-காது. உடைமைதோன்ற-தனக்குடைமையாந்தன்மைதோன்ற. ஒடு-எண்ணின்கண் வந்தது.

௩௬. சோகம் - ஈண்டு வேட்டையிற்போய் வருதலாலுண்டாகிய இளைப்பு. தாபம்-தாகம். பங்கயம்-தாமரை. இக்கவிமுதன் மூன்றுகவி

யும் அகப்பொருட்டுறையில் முறையேகாட்சி, ஐயம், துணிவு என்க.

௩௭. கொல்-ஐயம். கலை வேதமுதலாகப் பலவாகவிரிதலிற்கலைவிதம் என்றார்.

௩௮. புண்ணியப்பயனைப் புண்ணியமென்றது ஆகுபெயர். இமைத்து இமைக்க எனத் திரித்துரைக்க. உம்மை - இறந்ததுதழீஇய வெச்சம். இவளைப்பெற்றோர் மிக்கபுண்ணியஞ்செய்திருக்க வேண்டுமென்பது கருதி யாவர் செய்புண்ணியமென்றான்.

௩௯. புளகம்-மயிர்சிலிர்த்தல், தோற்றியது என்பதுதன்வினை. அயனிடுசாபம்-௫௬ ஆவது செயுண்முதலாகக்காண்க.

௪௦. விழிப்புரிவு - கண்ணின்செயல், அது குறிப்புநோக்கம். ஆதரம்-ஆசை. இங்கிதம்-அவள் எண்ணக்குறிப்பு. தடம்-உயர்ந்தவிடம். திருக்கோவையாரில் "அகல்கின்றவல்குற்றடமது" என்னுங் கவியுரையிலறிக. மகளிர்க்கு ஆடவர்மீதாசை யுறுங்காற் குறிப்பு நோக்கமுந் தனம்பூரித்தலுமுண்டாமென்க.

௪௧. கடி-விவாகம். உசாவினன்-ஆராய்ந்தான். இகல்-வலி. வடி-கூர்மை. என்னில் என்பதில் இல்-ஐந்தாமுருபு. பான்மையை-முன்னிலை வினைமுற்று.

௪௨. சேணுறுதனதுமெய்த்தேசு — தூரத்தேவிளங்குகின்றதனதுமெய்யொளி. வாய்மை — வசனம். கற்புடைமகளிராடவருடன் பேசுங்காலவர்முகம்பாராது தலைகவிழ்ந்து பேசுதலியல்பாதலால் முலை முகம்பொருந்த நோக்கினள் என்றுந், தான் வினவுவது தகாச்செயலாயினுந் தன்மாட்டுள்ள மோகத்தாலுடன்படுமவன்குறிப்பு நோக்கியிவனறிவிருந்தவா றென்னேயென எள்ளல்பற்றி நகைநிகழுதலால் நகைவாணிலவெழ என்றுங்கூறினார்.

௪௩. இரிந்து - அஞ்சி. பரிந்து - இரங்கி. புணர்வல்-சேர்வேன். பொறுத்தியேல் - முற்றின்மேல் வந்த ஏவீற்று வினையெச்சம்.

௪௪. கைதருக - கைவழங்குக. ஒன்றை நிச்சயிப்பார் கைகொடுக்கும் வழக்குண்மையின்றுங் காண்க. உய்வு-உய்தல். தருக-என்பதில் வியங்கோளீறு தொக்கது.

௪௫. அரசு-ஈண்டு இராச்சியம். மருட்டினன்-மயக்கினன். மன்றல்-கல்யாணம். யாவையு நினது என்றது பன்மையொருமை மயக்கம். நிகரிலா-ஈறுதொக்க பெயரெச்சம்.

௪௬. நுண்ணியவறிவினாலன்றியேனையோரறியலாகாமையின் அருமறை யென்றார்.

௪௭. மணந்து - புணர்ந்து. கருவுயிர்த்தனள்-பிள்ளையைப்பெற்றாள். பழிக்கஞ்சா நெஞ்சளாய் வெளிப்படச் செய்தாளென்பார் புவனங்காணப் புதைத்தனள் என்றார்.

௪௮. கதித்தல்-ஈண்டுச்சொல்லுதல். பரிவு-அன்பு.

௪௯. முரண்டு - மாறுபட்டு. அறுவரை மாய்க்கவெனக்கூட்டுக.

௫௦. முருக்கினள்-கொன்றாள். "நிறைமக வுடையவர் நெறிசெலம்பொறி, குறைமக குறையினுங்கொடிப்பராமுயிர்" அவ்வாறாகவும் இவள் பொறிகள் சிறிதுங்குறையாத பேரழகனைக்கண்டுந் தயையின்றி வதைத்தனள் என்பார் வழுவறுமைந்தரோரெழுவரையீன்றதாய் முருக்கினள் என்றார். மகவின்றுமை பெற்றோரறிவார் என்பார் மகப்பலபயந்த மங்கையரென்றார்.

௫௧ அனந்தரம்-பின்பு. வயிறுவாய்த்தல்-ஈண்டுகருப்பந்தரித்தலென்க கயகடகரி பெரியமதத்தையுடையயானை அங்கு-அசை.

௫௨. கதுமென - விரைய. விரைதல்முன் போலிப்பிள்ளையையும் வதைசெய்யாமைகருதியென்க, பணிதல் தான்கூறியவுறுதிமொழியறிதலால் அவள் நீங்காமைக்கென்க. மற்று-அசை. என்றலும்-உம்மீற்றுவினையெச்சம்.

௫௩. வேண்டும் - இதுதேற்றப்பொருட்ந்த தொழிற்பெயர். ஆல் - அசை உம்மை - எதிர்மறை. வியங்கோள்கள் வேண்டிக்கோட்பொருளில் வந்தன.

௫௪. அடுக்கு-வெகுளிபற்றிவந்தது. எவன் என்னும் வினா என்னென மரீஇயிற்று.

௫௫ உரைசெய - இதுவொருசொல். கொல், ஆம்-அசைகள் உம்மை-எச்சம்.

௫௬. மதியமுமிதழியுங்-கமழுங்கங்கையாள் என்றதனாற் சிவபெருமான் சடைமுடியிலிருப்பவளென்பது கருத்தாயிற்று முகம் - இடம். தன்னைப் படர்க்கையாகவைத்துக் கூறினளென்க.

௫௭. கலையெனுமிகற்புரவி வீரன் - கலையென்னும் வலியவாகனத்தையுடைய வீரனாகிய வாயுதேவன். கலையிமையவர்-கல்வியறிவினையுடையதேவர். அலைமதியினை மதிக்குமாறு - அலைகின்ற அறிவினை (யிவ்வளவினதென்று) வரையறைசெய்யுமாறு. எதிர்-பிரமனுக்கெதிர். அருங்கலை - அக்கங்கையினரிய புடவை. மானங்காத்தலிற்சிறந்ததென்பார் அருங்கலையென்றார். இறைஞ்சுவாண்மருங்கலை இமையவர்மதியெனக்கூட்டுக. இறைஞ்சுவாண்மருங்கு அருங்கலையெனக்கூட்டியுரைப்

பினுமாம்.

௫அ. மருத்து - வாயு. காதல்கூருரு-ஆசையை மிகுவிக்கும் அவ்வவயவத்தையென்க. கூர்உரு - பிறவினைவிகுதிதொக்கவினைத்தொகை தகுமுரிமை-புணருமுரிமை. பெண்பாற்குரிய அவயவங்களிலின்பத்தை தத்தருவதிது வென்பதுவிளங்கத்திருத்தகுமவயவம் என்றும் காண்டற்கரியஅவயவத்தை யெளிதிற்காணச் செய்தமையான்மருத்தினைமனனுற மகிழ்ந்தென்றுங்கூறினார். உம்மை-இழிவுசிறப்பு.

௫௯. பாக்கியம் - செல்வம். உரும் - இடி. மறையாக்கியமுனிஎன்றதுபசாரம். உருத்தழன்று-ஒருபொருட்பன்மொழி. செங்கோல் செலுத்தி வீடுமனைப்புதல்வனுகப் பெறுமிவனாற்பூமிதேவிக்கு மேன்மைகளெல்லாமுளவாமென்பதுபற்றிப் பார்மகள் பாக்கியமென்ன வுற்பவிக்க எனக்கூறினனென்க.

௬0. தந்தை-பிரமன். வழு-தவறு. அவள் செய்ததவறுவது வருணனைத்தானும் பிரிய முற்றுப்பாத்தல் முற்பிறப்புணர்ச்சியுடையளாயிருக்க என்பான் நினைவொடு குறுகியென்றும், இகபரசாதனத்தை யடைந்து பயனெய்தற்குரியதென்பான் நன்மானுடமென்றுங்கூறினனென்க.

௬௧. பதம்-பதவி. ஈரம் - அன்பு. உர்கை- விண் மீன். வார் - மிகுதி. சாபத்தாலொளி மழுங்கினரென்க.

௬௨. எவன் என்னும் வினு என்னைஎன மரீஇயிற்று. பின்னை - இதில் ஐ, சாரியை. தன்னை - தனக்கு உருபுமயக்கம்.

௬௩. உற்று - சேர்ந்து. வாய்மை-வசனம். சற்று-சிறிது. ஒருவன்-பிரபாசனென்னும்வசு. எனையெழுவர் - அனலன், அனிலன், ஆபபன், சோமன், தரன்; துருவன், பிரத்தியூசன்.

௬௪. தேனு - காமதேனு. மீனெறிகரந்தென - மீன்சென்றவழி (பிறர்க்குத்தெரியாமல்) மறைந்தாற்போல. மீள - மீண்டு. இது எச்சத்திரிபு. மீனெறிகவர்ந்தெனஎன்னும் பாடத்திற்கு மீன் இரைபொருந்திய தூண்டிலைக்கவர்ந்தாற்போல எனப்பொருள்கொண்டு மீனெறிகவர்ந்தெனத்தேனுவைக்கைக்கொளா எனக்கூட்டுக. எறியால்வருந் துன்பத்தையறியாது மீன்கவர்ந்தாற்போல அப்பசுவால்வருந் துன்பத்தையறியாதுகவர்ந்தோமென்பதுகருத்தாயிற்று. எறி - தூண்டில்.

௬௫. முசு - குரங்கினுளோர் சாதி. அது போல உரோமம் வளர்ந்து மெய்யினைத்தொடுக்கமுற்றிருப்பதனுன் முசுக்குலமனையமெய்ம் முனிவரென்றுரென்க. வளர்தற்கும் இளைத்தற்குங்காரணந்தவவிரதமென்க.

௬௬. உததி-கடல். பெறுவது-தொழிற்பெயர். உத்தமாங்கமாதலிற் பூஞ்சென்னி யென்றுர்.

௬௭. புரிந்து - அடைந்து. புரை - ஒத்த. விழைந்த-விரும்பிய. மானுடப்பிறப்பால்வரும் பயனில்லை யென்பதுகருத்தாக ப்புரிந்துமீளுதிர்என்றும், தெரிவைசொல் விழைந்ததனுன் மாதராலெய்துமின்பமில்லை யென்பது கருத்தாக இன்பமற்றென்றுங் கூறினமையுணர்க. மனைவிசொல்விழைந்தவன் அஷ்டவசுக்களிற் பிரபாசனென்றறிக.

௬அ. விழைவு - போகம்; இதுஆகுபெயர். தையலும் என்றதில் உம்மையெச்சம். இறுதியிற்கூறியவரும் என்பது உவமையுருபுமாம்.

௬௯. வரம்-ஈண்டுச்சாபம். கொண்டு-மூன்றுவதன் சொல்லுருபு. மனை - மனைவி.

எ0. இறைவனென்றது பிரபாசனென்னும்வசுவை. நெஞ்சுற - பிதாவின்மனத்திற்கிசைய.

எ௧. படாத - அழியாத. எவரும்பூமியிற் பிறந்துபயனடைதல் வேண்டுமாதலால் தவஞ்சாலிருநிலம் என்றுர்.

எ௨. சதையமீன்கடவுள் - வருணன். சந்திரகுலம் பல்கியதிவனுலென்பாள் சசிகுலத்து நல்விதையெனவும், மானுடமகளாயினளென்பாள்அள்செறிகுழற்ரேகையாயினளென்றுங் கூறினுள். தோகையின் - ஆகுபெயர்.

எ௩. இன்ன-அஃறிணைப்பன்மைப்பெயர்.

எ௪. இவன் குருமரபை விளக்கிநெடுநாளிருந்து புண்ணியங்களைஈட்டிக் கதியடைவானென்பதனையறிந்தானுதலால்உயர்சிறப்புடையினையவன் என்ருன். இலா, எகலா - ஈறுதொக்கபெயரெச்சம். எமை-உருபு மயக்கம். இறப்பவர் - இறத்தலையடைந்த அவரென்க.

எ௫. குலத்தவம் - மேலானதவம். மெய்க்குலத்தந்தையாம்விழைவு - மெய்ம்மையுடைய குலத்திலேதாஒருவருக்குப் பிதாவாயிருக்குங் காமவிச்சை. உம்மை - பின்னதுசிறப்பு. இவனுக்கு எனநான்காவது விரிக்க. பெரியோர் செய்யுந்தண்டமும் கருணையேயாதலால் அருளினுல் என்றுர்.

எ௬. கழல் - பாதம். பார் - ஆகுபெயர். இல்வாழ்க்கையியையாத இப் புதல்வனுக்குப் பின் குருமரபு குன்றுமே என்றுலகம் வருந்தலைநீக்கவென்பான் பார்களிக்க என்ருன்.

எஎ. போய்-விண்ணுலகிற்போய். சமாதி என்னுமணிபற்றி அனுபவித்து என்பதற்கு அருந்தி என்றார்.

எஅ. பதம் - பருவம். தன்பிரிவாலவனுக்காம் வருத்தநீங்குமாறும், தன்னன்பினைப்புலப்படுத்துமாறும்தழீஇயினளென்க.

எகூ. எழுதி-படத்தில் வரைந்து. ஒன்றுபட்டு-மனமொருமித்து. கண்டு-அவள் அவயவங்களைநோக்கி. தலைநாள் - முற்காலத்தில். எண்ணுநாளெல்லை - அவன்குறித்த நாள்வரையும். ஆண்டு-அரசாண்டெனினுமாம். அடுக்கு ஒருதொழில் பலகாணிகழ்தற்பொருளில் வந்தது.

அ0. முன்னொருதினத்தில் — முன்னொருநாட்போல்; இல்ஐந்தாவது. உறைமறையும் மெல்லியல்எனக்கூட்டுக. மெல்லியலையும்என உருபும் உம்மையும் விகாரத்தாற்றொக்கன. உறைமறையும்-நீரிலேமறைந்த. இவ்வாறன்றி மெல்லியல் திரும்பிச்சென்றுறைந்த ரகசியமும் எனக்கூறுவாருமுளர். கொண்டால் என்பது கொண்டு எனத்திரிந்துநின்றது.

அக. மலையமாருதம் - தென்றல். புளினம்-மணற்குன்று. புளினம் - பறவைக்கூட்டம். எதிர்ப்பட்ட என்றபாலது எதிர்ப்படுமெனக் காலவழுவமைதியாயிற்று. ஓ - ஐயம்

அஉ. பேது - மயக்கம். பாதவம் - மரம். முறுகவளைத்தவில்லென்பார் கால்பொரக்குனித்தகார்முகம்என்றார். கால்பொர - இருகாலும் பொருந்தவென்க. விரிதலை மார்பினுக்கேற்றுக.

அஙு. வயந்தன்-தென்றல். வின்மை-வில் வலிமை. பயந்த - பெற்ற. படி - வடிவம்; சிலப்பதிகாரவுரையிற்காண்க. வீரத்தான் முருகனோ, அழகான்மதனோ, பெருமிதத்தாற் சயந்தனோ என்றயிர்த்தானென்க. எ, ஓ-அசைகள். ஐயப்பொருட்டருங்கொல்என்பதனை தமலைக்குங்கூட்டுக.

அச. தழுவுறவளைத்தல்-இருகாலும்பொருந்தவளைத்தலென்க. மோகனம்-மயக்கம் மறை-மந்திரம். தனு - வில். திவலைச்சிந்து - துளியையுடையநீர். எழுதி - ஈண்டழுத்தி யென்க.

அரு. அயர்வு - சோர்வு. சிலைவினோதன்-வில்வித்தையே போதுபோக்கும் விளையாட்டாகவுடையவனென்க. ஓதம் - பெருக்கு. சூடகம் - வளையல். மற்று - அசை. திரை - ஆகுபெயர். பால்விரவிச்சிறப்பினல்வினோதனுந்தானு மெடுத்தாள் எனவொருமுடிபேற்றது. வெண்மையாகிய கங்கையினின்று புதல்வனோடெழுந்து சென்றமையாற் பாற்கடலின் மதியுடனுதித்த இலக்குமிபோலஎன்றுமொன்

அசு. கழல்-வீரக்கழல். பொழிவது - ...ழிற்பெயர். அடுக்கு - பன்மைபற்றிவந்த... "மீளநின்கைப்படுத்துவல்" எனமுன்ன... கூறியபடிதானுடிய கருமம் பிதாவேதன்னிட... தேடிவந்தமையால்எளிதின்முடிந்ததென்பா... நாடியகருமம் வாய்த்ததென்றுளென்க. நாடி கருமம்வாய்த்தது என்பதனைச்சந்தனுவுக்கே... றிப்பொருள் கூறலுமாம்.

அஎ. மழுப்படையோன் - பாசுராமன்... மறை - மந்திரம். சிலை, படை-ஆகுபெயரா... அவற்றின்றொழில்களை யுணர்த்தின. ஏ-தே... றம். மிகுதிபற்றிவெள்ளமென்றார்.

அஅ. ஓரடிக்கோரடிபுரிந்து - (பிரிவாற்ற... மையால்) அடிக்குமேலடிவைத்தல் செய்து... தகைவுற - தளர்ச்சியுற. மயில் - ஆகுபெய... தகவு-தக எனநின்றது. கல்வி, வீரமுதலி... வுடைய புதல்வனைப் பெறுதலான் மகிழ்ச்... யும், வாழ்வும், மெய்வலியுமிகப் பெறுந்தவ... செய்தனை யென்றாள். ஓரடிக்கோரடிபுரிந்து... என்பதற்கு அடிக்குமேலடிவைக்குந்தோறுஞ்... சொல்லியெனப்பொருள் கூறுவாருமுளர்.

அகூ. கேள்வி-கல்வி தணப்ப-நீங்க. புரம்-நகரத்திலுள்ளார்; இது ஆகுபெயர். ஏகாரம்-தேற்றம். நிறைந்ததண்ணளியனுயிருத்தல... லே தந்தைக்கு மதியையும், பண்டிதனுயிருத்த... லாலே புதல்வனுக்குத் புதனையுமுவமை கூறி... னென்க,

கூ0. பாரம்-கரை. காற்றெனக்கூற்றென நடந்து-வேகத்தால்வாயுவெனவும்,கொலையால் யமனெனவுஞ்சென்று என்க. நாட்டிற்கேதஞ் செய்யும் விலங்குகளைக்கோறல் அரசர்க்கு முறையர்தலால் விலங்கினுயிர் கவர்நசையாற் குற்றமின்றென்க.

கூக. பாசறை - பாடிவீடு. உயிர்க்குமெல்லுயிர்ப்பு-செல்கின்றமெல்லியகாற்று. தாசர்-பாதவர். ஈசன் - ஈண்டுத்தலைவனென்க. ஒல்லென - விரைவுக்குறிப்பு. கொல் - அசை. கடவுட்பரிமளம் - தெய்வீகமணம்.

கூஉ. பக்கமது என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. எக்குற்றத்தால் யாதுவருமோவென்றுகருதலால் அஞ்சினளெனவும்,நாணுடைப் பெண்ணுதலால் ஒதுங்கினள்எனவுங் கூறினர்.

கூஙு. குறிப்பாவது - மணம்பேசு என்பது. ஓ-ஐயம். பரதவர்பதியை யுடன்படுத்தற்குரிய மெய்ப்பாட்டைத் தன்கணிகழ்த்தியிருந்தினனென்பார் ஓகையோடிருந்தி யென்றார்.

கூச. பயந்த - பெற்ற. கொல் - அசை.

இருந்தான், பயந்த என்பன இயல்பினு விறந்தகாலமாயின வழுவமைதி. மற்று-பிறிது என்னும பொருளில் வந்தது.

கரு. கன்னம் - காது. உன்மதம் - தான்கொண்ட பயக்கம். முனி - ஈண்டுவசிட்டர் ஆகுலம்-வருத்தம். படப்பை-தோட்டம்.

கசு. ஆதரம்-ஆசை. களிந்தவெற்பளித்த மங்கை-களிந்தமலைபெற்றகாளிந்திநதி; இவள் சூரியன் புத்திரிநதிவடிவாய்க் களிந்தமலையினின்றுவருகின்றவள். சங்கை-ஐயம். பங்கயானனம்-வடநூன்முடிபு. இவன்முகம் நாளொருவண்ணமாய்க் குறைந்ததென்பது விளங்கமுறைமுறை குறையும் பான்மதியை யுவமை கூறினுரென்க.

கஎ. இளவரசு - தேவவிரதன். ஏகாரம்-தேற்றம். நீட்டம் - தாமதம். தந்தை யெண்ணத்தை நிறைவேற்றற்குடனே விரைந்தானென்பார் அக்கணத்தில் என்றார்.

கஅ. வீடின்று - நீங்குமக்காலம். சாதம்-இதுஉண்மை. தாது - சுக்கிலம். மூலத்தழல்-மூலாக்கினி. இரதம்-இனிமை. சுரதம்-புணர்ச்சி. ஏகாரம் - தேற்றம். இந்திரியாவத்தையெனக்கில்லையென்பது விளங்கத்தாதுவுமூலத்தழலுடன்மீதெழுந்தசைத்துஎன்றும், தந்தை மனத்தை யுவப்பித்தலாகிய புண்ணியத்தால் என்பது விளங்கத்தந்தை தன்பொருட்டால் என்றுங்கூறினுன்.

ககூ. ஏற்றபேர்-இயைந்தவீடுமனென்னும் பெயர். நிருபர்வெருவருந்திறலான் என்பது அரசர் யாவருமடக்கற்கரிய காமத்தையடக்கியதுகண்டஞ்சத்தக்கமனவலியன் எனவும், அரசர்யாவருமஞ்சத்தக்க மெய்வலியன் எனவுமிருபொருள்கொள்ளநின்றது. பீஷ்மன் என்னும் வடமொழி வீடுமனெனத்தற்பவமாயிற்று. பீஷ்மன-பயத்தைச்செய்பவன்.

ா. காளி-பரிமளகந்திக்கோர்பெயர். மன்றல்-மணம். செய்ம்மகிழ்பழனம்-மகிழ்செய்யத்தக்கபழனம். குருநிலம் - குருநாடு. பூபதியுங் காளியுந்தானுஞ்சேர்ந்தான் இது சிறப்பினுலொருமுடிபேற்றல். பராசரமுனிவரால்வியாசமுனிவரைப் பெற்றுளாயினும் பின்பு அப்பராசரமுனிவரருளாற் கன்னியாயினுள ஆதலாற் கன்னிகை என்றார்.

ாக. தாழ்ந்துமோந்துருகி என்னுஞ் சினைவினை முதல்வினையோடுமுடிந்தது. உம்மை-சிறப்பு. பிதாவாகிய யயாதிக்குப் பூருவென்பவன் றன்னிளமையைக்கொடுத்துப் பின்பெற்றுக்காமவின்பத்தைப் பின்னுயினு மனுபவித்தான்; நீ அங்ஙனங்காமவின்பத்தையும் அரசுரிமையையுமனுபவியாதென்றுமிழந்தாயென்பது போதரக்கோமகனுமுனக்கெதிரல்லன் எனருனென்க.

ாஉ. சதம்-நூறு. முந்துற - அதற்குமுன்னுக. இவ்வரம் பொய்யாது பலித்ததென்பதனை “ மாகஞ்சூழுமிரவிவடபாலெய்துமளவு, நாகங்காணேனென்ன ஞானத்தோடேவைக” எனப்பத்தாம்போர்ச்சருக்கத்திற்கூறுமாறறிக.

ாந. கிளி-ஆகுபெயர். ஏகாரங்கள் - தேற்றம். வலைஞர்-ஈண்டுப்பரதவர்.

ாச. கேசரன்-விஞ்சையன். ஆகாயத்திற் சேறலால் விஞ்சையனையுவமைகூறினுர். கிரிகை-வசுவின் மனைவிபெயர். வீரியம் - சுக்கிலம். தேசவனளித்த நதி - சூரியன் பெற்ற யமுனையாகியகாளிந்திநதி. தாளம் - முத்து. வசுவென்பான் றன்மனைவிமீதுகொண்ட மோகத்தால் விழுந்த வீரியத்தை இலைக்கலத்திட்டு மனைவிக்கீயுமாறு ஒருவல்லூற்றினிடத்திற்கொடுக்க அது அலகாற்கௌவிக்கொண்டு போங்காலையில் ஓர்பறவை அதனை யிரையென்றுகருதி அதனுடன் போர்செய்ய அவ்வீரியங்காளிந்தி நதியிற்சிந்தியது என்னுங்கதையினைச்சுருக்கித்தேசவனளித்த நதியிடைச்சிந்தியதென்றார்.

ாரு. முனி - ஈண்டுப்பிரமன். ஈன் - ஈனுதல்; முதனிலைத் தொழிற்பெயர். யமுனையும் யமனுஞ் சூரியன்மகாராகிய சகோதரரென்க.

ாசு. மானவர்பதி - நரபதியென்க. காட்டலும இது உம்மீற்று வினையெச்சம். குயில் வேற்றுச் சாதியாகிய காகத்தினிடம்வளர்ந்து பருவம் வந்துழித்தன்கிளையோடு சேருமாறு போல் இவள் வேற்றுச்சாதியாகிய தன்னிடம் வளர்ந்து பருவம்வந்துழித்தன்னரசசாதியுடன் கலந்தமையாற்குயிலையுவமை கூறியதென்க.

ாஎ. எளியபரதவப்பெண்ணை மணந்தானென்று கூறுமிழிவில்லையெனமகிழ்ந்தானென்பார் அவைக்கண்ணவன்மொழி கேட்டுவந்தென்றார். மன்றல் - விவாகம்.

ாஅ. வாளி - மண்டலமாயோடல். மீளி-வலியுடையவனுகிய சந்தனு. விடையன்-சிவன், வருணன். காளி-காளியென்னும பெயரையுடைய பரிமளகந்தி, கருநிறமுடையவுமாதேவி. வேய் - மூங்கில். சந்தனு இடபக்குறியுடைய வருணனவதாரமாயிருத்தலால் விடையவனென்றார். இச்செய்யுள்சிலேடையணி.

ாகூ. எங்கை - என்றங்கை. யமுனையின்

பால் வருமங்கை-யமுனாநதியிற்பிறந்த பரிமள கந்தி.

௱ம. சந்தனுவுக்கு வண்டும் பரிமளகந்திக்குப் பூவிதழும் போகத்துக்குத்தேனுமுவமையாகக்கொள்க.

௱மக. கன்னபூரம்-காதுமுற்றும். ஓரிடத்திற் பிறத்தலினாலும், இருளைநீக்கியொளியையாக்கி உலகையளித்தலினாலும் அருக்கனுந்திங்களுமுவமையாகக்கூறினார். கொண்டால் என்பது கொண்டு எனத்திரிந்து நின்றது.

௱மஉ. தம்முன்-தங்கள்தமையனாகிய வீடுமன். இளையவனுற்குருகுலம்விளக்கமடைந்தமைபற்றி அவற்கு விசேடணங்கொடுத்துக் கூறினாரென்க.

௱மா. எம்பி - என்தம்பியாகிய சித்திராங்கதன். அனந்தரம்-பின்பு. விதி அவன்சாபத்தைநீக்கிப்பூருவநிலையிற் சேர்த்தமை பற்றி நண்பினால் என்றார். விதியேற்றினான் என்பதிலக்கணை.

௱மச. கண் - இடம். நாமம் - சித்திராங்கதனென்னும் பெயர். மலைந்து-பொருது. போர்த்தொழில்வல்ல கையென்பார் அங்கை என்றார். வீடுமேற்கஞ்சிக்கந்தருவராசன் வந்தான் என்பது விளங்கக்கங்குல்வந்தென்றார்.

௱மரு. விம்முதல்-ஏங்குதல். துனி-துன்பம். தெம்முன்-பகைமுனையில். எம்முன்னிறந்தாற்காண்டன் முதலியவற்றாற் சிறிதுகவலையொழியுமே அதுவுமில்லையே என்பாள் எம்முனன்றி யென்றாள்.

௱மசு. முதலிரண்டடிக்கு - ஞானப்பொருளானபரம் பொருளினது சந்நிதியில் (பிரபஞ்சம்) தொழிற்படுமுபாயம்போல் என்க, பிரபஞ்சமென்பது அவாய்நிலையாக வருவித்துரைக்க. குவ்வுருபை அதுவுருபாக்குக. எதிர்-சந்நிதி. உபாயமது என்பதில் அதுபகுதிப்பொருள்விகுதி. வாய்மை-வாக்கு.

௱மஎ. சேர்வது (எங்களினியம்ம)எனவருவித்துரைக்க. சேர்வது-தொழிற்பெயர். மாசிறால்குலமன்னவர் என்றதனால் அன்னராகாரேல் இழிக்கப்படுவரென்பது கருத்தாயிற்று.

௱மஅ. வரித்தமன்னர்-(கன்னியர்) நியமித்தவரசர் மறம் - வீரம். திரித்தும் - மாறுபடுத்தியாயினும். இதிலும்மை எதிர்மறை.

௱மகூ. அரவம் - ஓசை. ஊதை - காற்று. உம்மை - சிறப்பு.

௱உ௰. சராசனம்-வில். மஞ்சம் - என்பதுண்டுஉயர்ந்த ஆசனத்திலேறுதற்கு அதின்கீழ்ப்படியாயிடப்பட்டதென்க.

௱உக. குருத்தலம் - குருநாடு. வஞ்சினப்விரதமாகியசபதம்; அது-கூஅ-ஆங்கவியிற்கண்க. விருத்தன் - முற்கூறியவிரதத்திற்ஒவ்வாதவனாய் எனமுற்றெச்சமாக்குக. இ[illegible]வன்எனப்பொருள்கொள்ளற்க.

௱உஉ. செவிலியர்-வளர்த்ததாயார். மு[illegible]ந்தவாணகை - மயிலினிறகடிக்குருத்துப்பே[illegible]ன்றஒளியையுடைய பற்கள். அரசகன்னிய[illegible]ரை யவைக்கழைத்துச்சென்று சுயம்வரத்தி[illegible]குவந்தஅரசர் வரலாற்றை அவர்க்குக்கூறச்செவிலியர்க்குமரபென்க.

௱உ௩. வெய்ய-விரும்பிய. வையமன்னன்-வீடுமன். வயநிலை-வீரநிலை. இவன் என்றதுஅக்கன்னியர்தனித்தனி விரும்பியஒவ்வொருவரைக்குறித்தது. தம்மை வலாற்காரமாகக்கொண்டு போங்குறிப்பினனாகிநின்ற வீடுமன்வீரநிலையைக்கண்டு நாம்விரும்பிய அரசர்க்குமாலை சூட்டினால் வீடுமனால் எத்தீங்குநிகழுமோ வென்று ஐயமுற்றாரென்க.

௱உச. இவரை - இப்பெண்மூவரையும். சந்தனம் - தேர். சோனை - விடாமழைபோல். அஞ்சாது சென்றானென்பார் கடதடயானையென்னவேகினானென்றார். தடம்-பெருமை.

௱உரு. மொய்ம்பு-வலி. கோக்குலம்-அரசர்கூட்டம். ஏற்ற-எதிர்த்தன. குலம் என்பதற்கியைய ஏற்றன அஃறிணைவினைகொடுத்தார். ஏற்றஎன்னும் பாடத்திற்குப்போர்செய்தெதிர்க்க என்க. பிறைமுகக்கணை-பிறைவாயம்பு. முறையாவது கன்னியர்வரித்துமாலைசூட்டல். இவ்வீடுமனே டொத்தவலிமுதலியனவுடைமையால் ஒரு குறையுமின்றென்பார் எக்குறையினாலென்றார்.

௱உசு. ஆடமர்விந்தை-வெற்றியையுடையயுத்தத்தில் தம்மிடத்திலிருக்கும் வீரலக்குமி. உம்மை-எச்சம்.

௱உஎ. அமர - விரும்ப. சமரின்முந்திய-யுத்தத்திற்குமுற்பட்ட.

௱உஅ. பதி-நாயகன். தனஞ்சயன்-அக்கினி. வம்பு-புதுமை. ஏ-தேற்றம்.

௱உகூ. இகப்ப-நீக்கிவிட. மன்றல்-முன்னதுவிவாகம் பின்னது வாசனை. கற்பால்வந்தவளைக்கடிதலிற்றீமதிச் சாலுவன்என்றார்.

௱௩௰. கடிமணம் - மீமிசைச்சொல்; புதியமணமெனினுமாம். கூர்-மிகுதி. சங்கை-ஐயம். இருவருநீக்கினமையால் இனிமணமுடியுமோஎன ஐயமுடையளாயினாளென்பார் சங்கையோடென்றார்.

௱௩க. கோதையால் - சூட்டுகின்றமாலை

யால். கைதால்-கைகொடுத்தல்; அதுமணஞ்செய்தலையுணர்த்திற்று. பின்னையும் - இதில் ஐசாரியை. உம்மை-எச்சம். தூது உயர்திணைப்பொருளையுணர்த்திய அஃறிணைச்சொல்.

௱௩௰௨. மீனகேதனன்-மன்மதன். அவனை வென்றானெனவே காமவிகாரமின்றி எனபது கருத்து. ஏகாரம்-தேற்றம். வீடுமன்மணத்தைவிரும்பலால் ஆதரவும், அதுகைகூடாமையால் ஆகுலமுமாயினவென்க.

௱௩௰௩. குருவாதலாற் பாசுராமனருண்மொழிமருன் என்றான். விளம்புமேல்-வவீற்றுவினை யெச்சம். எனது கைகள் என்பது போல் அவனதிருபதம் எனவந்தது

௱௩௰௪. சதுரந்தயானம்-சிவிகை. யமதங்கிமைந்தன்-சமதக்கினிமுனிவன் புதல்வனாகிய பாசுராமமுனி. கூறிய என்பதனைப்பெயரெச்ச மாக்காது வினையெச்ச மாக்கி ௧௩௨-ஆஞ்செய்யுளில் (அருளினால்) என்பதற்கு முடிக்குஞ்சொல்லாக்குக. "எட்டேயவ்வு" என்பதனுல், ஜமதங்கி யமதங்கிஎன்றாயிற்று. பாசுராமனகர் - மகேந்திர மலைச்சார்பிலுள்ளதென்பர்.

௱௩௰௫. கடை - வாயில். ஆசினுல் - விரைவொடு. தன்சொல்லை மருனெனத்துணிந்து கூறினுனென்பார் யாமுடிக்குவமிதென்று மெய்ம்மையொடு பேசினுன் என்றார்.

௱௩௰௬. சாதம்-உண்மை. மேவலும்-உம் மீற்று வினையெச்சம்.

௱௩௰௭. வின்மை-வில்வித்தையென்க. இருந்தவாவென-இருந்தவாறு (என்னை) யென்று சொல்லி;று விகாரமாயிற்று. பெரிய கரிய கண்ணி இதில்ஈரடைசினையை விசேடித்தல். ஆருகவென்னும் வியங்கோளீற்றின் அகாரந் தொக்கது.

௱௩௰௮. இரதமணம் - புணர்ச்சிக் குரிய விவாகம். இரதம் - இனிமையுமாம். உம்மையும், ஓகாரமும் எதிர்மறையில் வந்தன.

௱௩௰௯. அநுராகம்-ஆசை. மாதர் - அழகு. குருவே தெய்வமெனக்கொள்வது முறையாதலால் கடவுளுன்னையன்றி யிலையுண்மையே என்றான்.

௱௪௰. வீரியன் - கார்த்தவீரிய னென்னுமரசன். அனந்தரம் - பின்பு. யாமுடிக்குவமெனக்கூறிய வுறுதிமொழி யழிந்ததென வஞ்சிவெளுத்தானென்பார் வெளுத்த மேனியன் என்றார். வீரியன்-முதற்குறை. கார்த்தவீரியன்றன்பிதாவைக் கொன்றதனுலவனைப் பாசுராமன் கொன்றானென்பது கதை.

௱௪௰௧. வெருவு-அச்சம். குருவினுலிறத்தன்மேலாய வறமென்பான் குருவுடன்பொருதுமடித்தனன்று என்றான். தாலம் - பனை. அமைந்து-அலங்காரமமைக்கப்பட்டு. வீழவும் இதிலும்மை சிறப்பு. உறுவதில் இதில் இல் ஐந்தாவது நீக்கப்பொருட்டு.

௱௪௰௨. அவ்விராமன்-அந்தத்தசரதராமன். இவனை-இப்பாசுராமனை. பகற்போலப்புண்ணியகாலமன்றாதலால் வெவ்விராவென்றார். அஞ்சி-என்பதற்கு ஆசாரியன் என்னுமரியாதையால் அஞ்சி எனக. தசரதராமன பாசுராமனைச் செயித்தகதை இராமாயணம் பாலகாண்டத்திலறிக.

௱௪௰௩. நவ்வி-உவமையாகுபெயர். அமையும்-(மணஞ்செய்தல்) போதும். அடுக்கு ஒரு தொழில் பலகாலிகழ்தற்பொருட்டு.

௱௪௰௪. விகங்கராசன்-கருடன். வம்பு-மூன்றும் முறையேகச்சு வாசனை, புதுமையென்க. தும்பை-பொருதற்குரிய மாலையென்க.

௱௪௰௫. அமை-மூங்கில். இயக்கி-தருமதேவதை, காளியென்பர். வானுளோர்நாள்பன்னிரண்டும் பூவுள்ளோர்க்குப்பன்னிரு வருடமென்க.

௱௪௰௬. களங்கமே முயல்வடிவாகத்தோன்றலால் முயல்ஆகுபெயரென்க. முயலிலா மதி, புயலிலாதமினல் என்பன இல்பொருளுவமை. சிகண்டி - அலி. வயினிடை - இடத்தில். செயலில் என்றதனுல் வடிவாலொப்பிலாமையறிக. யாகசேனன் வரலாறு பின்னர்க் காண்க.

௱௪௰௭. நிருபன் - என்றது விசித்திரவீரியனை. பெரும்பிணி - பெருவியாதி. நணித்து-சுருங்கியது. பற்றிலாதநெறிபற்றினுனென்பதற்குமுத்தியடைந்தான் என்பது கருத்தாயிற்று; இதுவுமுபசாரமென்க. பிணித்து-பிணிக்கப்பட்டு; செயப்பாட்டுவினை விகுதிதொக்கது.

## சம்பவச் சருக்கம்.

௧. அலகை - (பூதனையென்னும்) பேய். பரிவு - அன்பு. உருகுதல் - மனங்கசிதல். முருகு-இளமை. பாலுண்ணுதலை வியாசமாக வைத்து அவளுயிரை யுண்டா னென்பார் முலைப்பாலுட னவளுயிருண்டென்றார்.

உ. தென்புலத்தவர் - பிதிரர். உலகியல்-ஈண்டு அபரக்கிரியை. யாமினி-இரா. மன்-ஈண்டுவீடுமன். மற்று-அசை.

ஙூ. மரபரும்பனிப்பகைச் சிரத்தெழிலி யொத்தது-மரபு எழிலிச்சிரந்தரும் பனிப்பகை யொத்ததுஎன வியைத்து மரபானது (புதல் வரின்மையால்) முகிலின்மேல் அதனுன் மறைக்கப்பட்டொளி மருங்கி யிருந்த சூரியனை யொத்தத்து என்க. மரபரும் பனியச் சிரத் தெழிலி யொத்தது என்னும் பாடத்திற்கு-மரபானது அரியகுளிர்ச்சியை யுடை முன் பனிக்காலத்து மேகத்தை யொத்தது என்க. அச்சிரம் என்பது முன்பனி; சிலப்பதிகாரம் ஊர் காண்காதையில், ஈகு-ஆம் அடியிற்காண்க. உணர்கிற்றி - முன்னிலைவினைமுற்று; கில்-ஆற்றலிடைநிலை.

ச. தேவரஞ்திபில் - கணவனுடன் பிறந்த வனுக்குரிய வொழுங்கினுல். தேவரன்-கண வனுடன் பிறந்தவன். மூண்டுவொனுருமெறிந்த முகிலினிடி கிளர்ந்துதாக்கிய. முரிந்து-நிலை குலைந்து. கடையடிக்கு - பெரியநதியானது திரும்பித் தோன்றியதன்னிடத்திற்சென்றால் என்னுடைய விரதமுந்தவறுமென்றான்; என வே நதி தானெழுகியநெறியன்றித்தோன்றிய விட்டுச்செல்லாது, அதுபோலத் தறவற நெறியிலொழுகுமென்விரதமுங்கெடாது என் பது கருத்தாயிற்று. வயின்-இடம். மிசை-ஏழனுருபு இவ்வாறன்றி மீண்டும் மாநதி வயின்மிசைப்புரியின் எனப்பிரித்து நான் திரும்பவும் பெரியகங்கைவயிற்றிலவதரிக்கில் எனக்கூறுவாருமுளர். இப்பொருட்குவயின்-வயிறு. ஆல்-அசை. விரதமும் என்றதில் உம்மை-சிறப்பு.

ரு. மனுகுலமென்றது - சூரியகுலத்தரசர் களை. ஏகாரம் - தேற்றம். உம்மை - எச்சம். காமவின்பங்கருதாது நூல் விதிப்படி முனிவ ரைப்புணர்ந்தமையாற் பழுதின்மங்கையரென் ருன்.

சு. பரிதிதந்தமாநதி-சூரியன்பெற்றகரிய காளிந்திநதி. புலவு-புலான்மணம்; ஆகுபெயர். சுருதிவாய்மையில்-வேதம்போலத்தவறில்லாத வாக்கினுல். மறைத்து-சூரியனை மறைத்து; எனவே பகலையிராப்போலாக்கியென்க. வண் டுறைக்குறை-அழகிய ஆற்றிடைக்குறையில். பராசரமுனிவர் உலகிற்கு நன்மைசெய்யு மோர் புதல்வனைப்பெறுதற்குத் தாங்குறித்த முகூர்த்தகாலஞ் சமீபித்தமையான் மச்சகந்தி யைக்கண்டு அவளைப்பரிமளகந்தியாக்கி விபூதி யைத்தூவிச் சூரியனைப்பனியினுன்மறைத்துப் பகலையிரவுபோலாக்கிப் புணர்ந்தார் என்னுங் கதையினைச் சுருக்கிக் கூறியவாறுணர்க.

எ. முரண்-வலி. கேள்வி-கல்வி. முஞ்சி-ஆகுபெயராய் முஞ்சிப்புற்கயிற்றை யுணர்த்தி யது; இதுபிரமசாரிகள் அரையிற்கட்டுவது. தபோதனமுனி-தவச்செல்வனுகிய முனிவன். அரணி-தீக்கடைகோல். எளியவென்னிடத் தில் உயர்முனியவதரித்தான் என்பதும், சேர் ந்தவப்பொழுதே யுதித்தானென்பதும் விளங்க அரணியின்புறத்தனலென வென்வயினவதரி த்தனன் என்றுங் கூறினுள். அம்மா-வியப் பிடைச்சொல்; அசையெனினுமாம்.

அ. உறுவல்-உறுவேன். முனி-பராசர முனி. கையறுதல் - ஈண்டுச்சாதலைபுணர்த் தியது.

கூ. ஏவலும்-இதில்உம்மைசிறப்பு. கொல் ஐயம். ஓ-அசை.

மு. விழுது சடைக்குவமானமென்க - மீள அப்பழுதுநீங்க. உய்த்திடல் - செலுத்தல்; ஆக்கினுசக்கரஞ்செலுத்தலென்க. குறைநேர்ந் தான் - குறையைநீக்கவுடன்பட்டான் என இடையேசொற்பெய்துரைக்க.

மக. உழை-இடம். தழைத்தநெஞ்சினள் பரிமளகந்தி யென்க. அனந்தரம் - பின்பு. இழைத்த-செய்த.

மஉ. கனை-மிகுதி. ஒல்க-சுருங்க.பொழுது-உரியகாலமென்க. நூல்விதிப்படி புதல்வரின் பொருட்டுப் பிறரைப்புணரினுங் கணவனை நினையாவிடிற் பாவமுண்டென அவனை நினை ந்தனர் என்பார் கணவனை மறவாது நினையு நெஞ்சினரென்ருர். மாவுரிமுதலியவணிந்து உண்டிமுதலியனவெறுத்தலால் புன்மணநிறை ந்தொளிகுறைந்தொல்கப் புனையுமெய்என்ருர். பொழுதொடும் என்றதில் ஒடுவேறுவினையுட னிகழ்ச்சியில்வந்தது.

மங. நினைவொடு - புதல்வற்பேறுகருதிய எண்ணத்தோடு. காமவின்பங்கருதினுனல்லன் என்பார் நிராசைநெஞ்சினன் என்ருர். மெய்க் குறி - கண்மூடியிருத்தல் முதலியசரீரத்தின் குறியென்க. காரசலம்-யானை;வடநூன்முடிபு. குஞ்சரம் என்றதற்கியைய அதற்கு என்ருர்.

மச. தூளம் - விபூதி. சுதன் - பிள்ளை. நாளபங்கயபதி-தண்டையுடைய தாமரைக்கு நாயகனுகிய சூரியன். கவிகை-குடை. ஆள-அகர வீற்றுவியங்கோள். சூரியன் இருளை நீக்கி ஒளியைச் செய்யுமாறு போல இவனும் பகையை நீக்குப் புகழை யாக்குவானுயிருத்தல்

வேண்டுமென்பாள் பங்கயப்பதியென வென்றாள். தோன்றல்-அண்மைவிளி.

௰௫. துகிர் - பவளம். வெரீஇ - அஞ்சி. விளர்த்திட்டாள் - வெளுத்தாள். உலகிற்கு நன்மை செய்யும் புதல்வற் பேற்றாலுண்டாம் புகழுங்கதியுமாகிய பயன்களுள் ஒன்றையுமென்க.

௰௬. தபோநிதி-தவச்செல்வனாகிய வியாத முனி. இருந்தவாறு-நிகழ்ந்த படியை. இமையவன்-தேவன். இமையவனெனவுரைத்துஎனக்கூட்டித் திரிகாலவுணர்வுடைய தேவனைப் போலக்கூறி எனப்பொருள் கூறலுமாம். மருட்சி - ஈண்டுஅச்சம். விளர்த்திடும் - வெளுத்திருப்பான்.

௰௭. பாண்டு-வெள்ளைநிறம்; ஆகுபெயராயதனையுடையானையுணர்த்திற்று. பொழுதுற்றுச்சாதராயினர்-(பிறத்தற்குரிய) காலத்தைப் பொருந்திப்பிறந்தார்கள்.

௰௮. சிந்தனையுறச் சொல்ல - தன்னெண்ணத்தை அம்முனிவன் மனத்திலமையும்படி சொல்ல; எண்ணமாவது பிறந்த பிள்ளைகளிருவருமுடற்குற்றமுடையாராயிருத்தலால் அரசாளுதற்குச் சிறப்பிலராயினர்; இனியக்குற்றமிலாதபிள்ளைவேண்டுமென்பதாம் முன்னர் நாணாலுமச்சத்தாலுங்கண்மூடினமையாற் பின்னுமவ்விரண்டாலுந் தோழியொருத்தியைப் பூவணையணைவித்தாள் என்பார் நாணலந்திகழும் பிகையென்றும், அஞ்சியென்றுங் கூறினார்.

௰௯. அநங்கநூன்மரபு-மதனநூன்முறை. சந்தனாகரு - ஆகுபெயராக்கிச்சந்தனமுமகிலுமாகிய குழம்பென்க. தனதடம்-முலைத்தடம். மிகச்சிறந்த போகமென்பார் இந்திராதிபர் போகமென்றார்.

௨௰. தருமன்-யமன். விதுரன்-அறிந்தவன் என்பர். வனநெறி - காட்டுவழி. பெயர்என்ற தன்பின் கூறுக என்பதனை அவாய் நிலையாக வருவித்துரைக்க. மாண்டவியமுனிவர் சாருவராசனாற்றிருட னெனமதித்துக் கழுவிலிடப்பட்டு, பின் அவ்வரசன் வேண்ட அவனை வெகுளாது யமனிடத்திற்போய் எனக்கித்துயர் வந்ததற்குக்காரணம் என்னையென அவன் குழந்தைப்பருவததில் நீ, தும்பிகளைப்பிடித்து முள்ளாற் குத்திக்கொன்றமையினாலித்துயர் வந்ததென்றுகூற அம்முனிவர் வெகுண்டு அறியாப்பருவத்திற்செய்த குற்றத்தால் என்னைத்தண்டித்தமையால் நீ, இழிந்தவள் வயிற்றிற் பிறக்கக்கடவையென்று சபித்தனர்; அதனால் யமன்விதுரனாய்த்தாதி வயிற்றிற்பிறந்தான் என்னுங்கதையுண்மையறிக. கந்தருவராசனாகிய மீசன் திருதராட்டிரனாகவும், இயக்கராசனாகிய குபேரன் பாண்டுவாகவும் பிறந்தார்கள் என்பதுகதை. திருதராட்டிரன் என்பதற்குத் தேசத்தைத்தாங்குபவன் என்பது பொருள்.

௨௧. குவடு-சிகரம். படை, களிறு, தேர், புரவி இவை ஆகுபெயராய் அவற்றின் றொழிலை யுணர்த்தின. திண்மையுந் தோற்றமுமுடைமையார்க்குருகுலத்தைப் பெருங்கிரியென்றும் மலையைச்சிறப்பிக்குங் குவடுபோல இம்மூவரும், குருகுலத்தைச்சிறப்பித்தார் என்பார் இலங்குமூக்குவடென்ன என்றுங் கூறினார்.

௨௨. திக்கு - ஆகுபெயர். மகன்றனை-மகனுக்கு. ஏ-தேற்றம்.

௨௩. காந்தாரபதியின்பெயர் சுபலன். வடமீனெனத்தகுங் கற்பாளாதலால் விழியிலாமையன்றி நற்குணங்களெல்லாமுண்மையால் விதியளித்ததென்றுள மகிழ்ந்தனனென்றார். இவள் பெயர் காந்தாரி.

௨௪. சமைத்தபட்டம் - உண்டாக்கிய புடவை. தனையோர் - சகுனிமுதலாயபுத்திரர், நாயகன்போலக்கட்புலனால் வருமின்பத்தைத் தானுமனுபவியாதிருத்தல் வேண்டிப்பட்டத்தாற்கண்களை மறைத்தாளென்க. பேதம்பை-ஈண்டுபருவத்தைக் குறித்தது.

௨௫. குந்திபோசர் - யாதவகுலவரசர். பிரதை பிரசித்தியுடையவள். நிகரென்ன என்பதனைக்கலைமகண் முதலியவற்றோடுங் கூட்டுக; இது ஏதுவமையணி.

௨௬. மடம்-அழகு. முந்த-முதன்மைபெற முந்து அம்மாதவம் எனப்பிரித்துரைக்கினுமாம். வழி-இடம்.

௨௭. துறைவரிவண்டலாடல் - நீர்த்துறையில் வரிபொருந்திய வண்டலாகிய மணலில் விளையாடல். ஒருங்குவிடாமல் ஒவ்வொன்றாமறந்தனளென்பார் தனித்தனி மறந்திட்டாள் என்றார். திரையெடுத்து வீசலாற் சங்குகள் நிலாமுற்றத்திற் றவழ்ந்தனவென்க.

௨௮ தொழுது - (உண்ணாஞ் செய்மாதர்) வணங்கி முதிர்குறைந்து - அறிவின் முதிர்ந்து, ஒன்று என்பது ஒருநாளை யுணர்த்திற்று. கோபத்தாற்றவம் வளரும் வரமுடையன் என்பார் கோபமே மிக மிகுமுனிவரன் என்றார்; அதனைப்பின் றுருவாசமுனிச் சருக்கம் முதற்செய்யுளிற் காண்க ஏ-தேற்றம்.

௨௯. மறை-மந்திரம அடுக்குகள்பன்மை

பற்றிவந்தன. மந்திரமொன்றே என்பது கிருட்டிணன்றூதுச்சருக்கம் (உ௯உ) உ௱சக-ஆஞ் செய்யுளிற் காண்க.

௲. மானதம், மந்தம், உரைஎன்னுமூன்றனுள் மானதத்தாற்செபித்தாளென்பார்மனத்தொடுபயின்று என்றும், தேவரைச்சேரும்படி துருவாசமுனியருள் பெற்றமையின் அரமகளெனவென்றுங்கூறினர். தெளிவுபற்றி எய்தியது என இறந்தகாலமாகக்கூறினர்.

௲க. இமிர்-ஒலிக்கின்ற. சுதை-சுண்ணச்சாந்து. காண்பான் - பானீற்றுவினையெச்சம். பூவிற்றேனைக்கொள்ள வண்டுவருமாறுபோலப்பானுவுமிவள் போகத்தைக்கொள்ள வந்தானென்க.

௲உ. ஆரம்-பதக்கம். அங்கதம்-வாகுவலயம். வம்பு-வாசனை. பதுமினி-முதற்சாதிப்பெண். பதுமினியென (நின்று) எனவருவித்துரைக்க. சூரியன்வந்தமையால் இம்மந்திரசித்தியாற்றன் முகமலர்தலால் ஆனனமலர்வுற என்றார். அணைத்ததனன் முகமலர்ந்திலள் என்பதனை வருங்கவியிலறிக.

௲௩. அறிகிற்றி - அறிவாய். இதையமும் இதிலும்மை எச்சத்தொடு சிறப்பு. அடுக்கு அச்சத்தின்கண்வந்தது.

௲௪. உரு - அழகு. சாயை - சாயாதேவி. உழை-உஷாதேவி; இவர்சூரியன் மனைவிகள். வெருக்கொளா-அஞ்சி. தப்பாதுபலிக்குமந்திரமாதலால் மெய்ம்மறையென்றான்.

௲௫. அதிதி - தேவர்களைப் பெற்றவள், சூரியனுக்குந்தாயென்றறிக. அஞ்சல் - எதிர்மறைவினைமுற்று. ஆல்-ஈண்டு உடனிகழ்ச்சியில்வந்தது. மைந்தன்றனையும் என்னுமும்மை விகாரத்தாற்றொக்கது. மற்று-அசை.

௲௬. முகம் - வாயில். இரந்து - யாசித்து. மதர்விழிப்புரிவு - மதர்த்தகண்ணின் குறிப்பாலாகும்விருப்பு. மூரல்-நகை. வேய்-மூங்கில். பாயிரம்-வரலாறு. ஐயுற-சூரியன்சந்தேகிக்க. புணர்ச்சிக்குடன்பட்டமை தோன்ற விழிப்புரிவுமூரலுநல்கினென்றார்.

௲எ. தனக்குரிய வெப்பத்தொடு புணரிற்சகிக்கமாட்டாளென்று தன்மேனியைக்குளிரச்செய்தானென்பார் சுடர்வடிவுமமிர்தெழு திங்களின்வடிவாக என்றார் ஆகஎன்பதில் ஆதல்ஒப்புப்பொருட்டு. "ஆள்வாரிலிமாடாவேனோ" எனத்திருவாசகத்திற் கூறியதனலறிக.

௲அ. அந்தியாரழலெனப் பரிதியினொளியடைந்தபின் - மாலைக்காலத்திற் சூரியனொளியை வாங்கிவிளங்கும் அக்கினியைப் போல (இவள்) சூரியனைப்புணர்ந்து அவனொளியைக் கொண்டபின்பு. அஸ்தமயமானகாலத்திற்சூரியன் றன்னொளியை அக்கினிக்குக் கொடுத்து உதையகாலத்தில் வாங்கிக்கொள்வனென்பது நூல்வழக்கு. சூரனுக்குக்குந்திபோசன் என்பது குடியால்வருபெயர். இரந்தன-வினையாலணையும்பெயர்.

௲௯. வாரமகன்எனவியைக்க. வாரம்-அன்பு. பாரம்-உயர்ச்சி. பழுது-ஈண்டுவசை. பூரம்-நிறைவு. கேடுறுவண்ணம் பொதிதலால் நனிபொதிந்துஎன்றார். நதி-கங்கை. பேடகம்-கூடு. வருங்கவியிற்பஞ்சர மென்றதனலுங் காண்க. பெட்டகம் என்பாருமுளர்.

௬௰. கோளரிச்சாபம் எனமாற்றிச்சிங்கக்குட்டிஎன்க. அஞ்சரத்திரை-அழகியநடையையுடையதிரை. சஞ்சரத்திரைஎன்னும் பாடத்திற்கு உலாவுதலையுடைய அலையென்க. சூதநாயகன் - தேர்ப்பாகர்களுக்கதிபதி. தாலாட்டு ஈண்டுத்திரையொலியைக் குறித்தது. அடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தல்பற்றி வந்தது.

௬௧. கோடகப்பட-கரைதன்னுட்பட,தினபதி-சூரியன். இராதை-அவன்மனைவி பெயர். ஆடகக்குலம் - பொற்குவை. அரும்பெறலாதரம்-பெருதற்கரியவிருப்பம். புத்திரப்பேறில்லார்க்கு வலியவந்து வாய்த்தலால் ஆடகக்குலமடைந்ததொத்து என்றார். கோடும் என்னுஞ் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது.

௬௨. அதிரதத்தைச்செலுத்தும் பாகனயிருக்குமுரிமையால் இவனை அதிரதன் என்றார்; அதிரதம் - நால்வகையிரதங்களினொன்று. கற்றை - தொகுதி. மதி - ஈண்டுப்பிறையென்க; அஃது, "இருகோட்டொருமதியெழில்பெறமிலச்சினை" எனப்பிறருங்கூறுமாறுகாண்க. படைகளும் என்னும்உம் மைமுற்றுப்பொருளன்றி எச்சப்பொருளுந் தருதலால் ஏனைக்கலைகளையுங்கொள்க. கவின்-அழகு.

௬௩. முகவோலை - திருமுகமாகியவோலை. வரிக்கும் - (நம்மை) நியமிப்பாள். சென்னற்படைவேல் - சென்னலென்னுந் தேன்கெண்டைமீனையொத்தவேற்படை. செல்லுகின்ற நல்லபடைவேல் என்பது சிறப்பின்று. சென்னற்படிவேல்என்னும்பாடத்திற்குப், படி - ஒப்பு. புறநானூறு-உஅஎ-ஆம் பாட்டிற்கெண்டையின்வேல் எனக்கூறல்காண்க.

௬௪. உருவம்-அழகு. உதிக்குமேனும் இது உம்மீற்றுவினையெச்சம். மலருமாஎன்பதில்,று கடைக்குறை.

சரு. அமுதம்போல வினைமாதரினும் இவள் சிறந்திருத்தலாலமுதினையுவமைகூறினர். மத்திரம்-ஓர்தேயம்.

சசு. கண்ணுற்ற-இடமகன்ற. சாரல்மலைப்பக்கம். இமையச்சாரற்புறம் எனமாற்றுக. புறம்-ஏழனுருபு

சஎ. காட்சியாமா-அழகுடையகாட்டுப்பசு. கற்கியாமாவென்னும் பாடத்திற்குக் கற்கி-குதிரை. ஏனம்-பன்றி. எண்கு-கரடி. பகடு-யானை. சனம்-கூட்டம். மானச்சரம்-வலியபாணம். வாகை-வெற்றி.

சஅ. குருதி - இரத்தம். மேருவில்லிசையம்-சிவபிரான்கைலை. கேதம் - ஈண்டுத்துன்பமாகிய இளைப்பென்க. பைய-மெல்ல. இமநாகபவனன் - இமயமலையிலிருந்து வருகின்ற காற்று.

சக. கலை-ஆண்மான். கூர-மிக.

ரும். நாரி-பெண்ணாகியவுமாதேவி. கூறு-பாகம். மூதல் - முன்பு. எய்த - மதனெய்த. வேரி - தேன் சோரி - இரத்தம். நாரிக்கொருகூறானார்முதனல்க வெய்த, வேரிக்கணையென்றதனாற் கடவுளரையுமயக்கும் பாணமென்பதாயிற்று

ருக. அன்போடு இறத்திஎனக்கூட்டுக. தன்போன் மகிழ்நன்-தன்னைப்போற்றான்பாவிக்கு நாயகன். பிணை-ஈண்டுப்பெண்மான்.

ருஉ. நினைவற்றசாபம்-கருதாமையால்வந்த சாபம்; எனவே அபுத்திபூர்வத்தால் வந்தசாபமாம். இனைவு-வருத்தம். காதல்வைத்தமனை மடவார்எனவியைக்க. மன்றல்-விவாகம். மூனைவைத்தவாய்மை- முதன்மைபொருந்தியமெய்ம்மை. முயன்று-தவத்தைமுயன்றனென்க. இனிச்சாபம்பலியாமைக்கும், நற்கதியடைதற்கும் ஏதுவாகியதவமே நன்மையெனத்தெளிந்தான் என்பார் நன்மையிதுவே யினியென்று தேறி என்றுங்கூறினர். வனைவற்றகாதல் என்னும் பாடத்திற்கு, வனைவு - அலங்கரித்தல். முனைவற்றவாய்மைஎன்னும்பாடத்திற்கு, முனைவு-கோபம். மனைவியைமகன்பால்வைத்தாயினும், உடன்கொண்டாயினுந்தவத்திற்கேகுதல் விதியாதலால் இவன்மனைவியரையுடன் கொண்டு சென்றானென்க.

ருங. விடயங்களின்வேடமாற்றி - விஷயங்களாலாகிய அரசவேடத்தைநீக்கி. இன் ஏதுப்பொருட்டு.

ருச. முதலடிக்கு - புறத்துப் பொருந்திப் பகைகொண்டு மாறுபட்ட எல்லாவற்றையும். செற்று-அழித்து தனியாழி-ஏகசக்கரம். உட்பகையாறு-காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம். காமமுதலியவற்றை உட்பகைஎன்றதற்கியைய அவற்றை நீக்கும் யோகத்தைப்படைஎன்றார். இது இயைபுருவகம்.

ருரு. ஆரம் - முன்னதுசந்தனம், பின்னது முத்துவடம். குசம்-முன்னதுதனம் பின்னது தருப்பை. தைவரல் - தடவல். நாரக்கமலம்-நீரிலுள்ளதாமரைமலர். முதலடியில் இல்லுருபை ஐ யுருபாக்குக.

ருசு. நாமம்-அதிசயம். தாமம்-மாலை உணர்வுண்மை-மெய்யுணர்வு.

ருஎ. சமித்து-ஓமவிறகு. மனைவியருடனிருந்துகாமமின்றிச் செய்தவமாதலால் அரியதவமென்றார். புவிமேலுறை தெய்வமன்னான் என்பது இல்பொருளுவமை.

ருஅ. ஆர்வம்-ஆசை. வேந்து ஈண்டுத்திருதராட்டிரன். ஆதரிக்க-விரும்ப. சிவபிரான் வரத்தாற்கருப்பந்தரித்தாளென்பது முதனூற் கதை.

ருக. கல்லாமழலை - கற்றுப்பழகாமழலை, திருக்கோவையாருரையில் மழலையிளஞ்சொல் என்றார். கல்லாமழலையாகிய சொல்லாலெனக் கூட்டுக. கனியூறல் - வினைத்தொகை. யூறல் வாய்நீருக்கு ஆதலால்ஆகுபெயர்.

சும். தானம் - அறிநெறியால்வந்த பொருளைத்தக்கார்க்குதவல். வண்மை-அப்பொருளை வரையாதுகொடுத்தல்.

சுக. பயவாதவர் - பெறாதவர். தென்பாலவர்-பிதிரர். இடர்-புத்திரப்பேறில்லாத்துன்பமென்க.

சுஉ. மூன்றாமடியில், இல்லுருபுகள் ஏதுப்பொருட்கண்வந்தன. யாகாதிகருமங்களையேற்றுப் பலன்றரலாற்றேவரையும் அவற்றைச் செய்வித்தலான்முனிவரையும் ஏதுவாகக்கூறினரென்க. பிறரைச்சேர்ந்துபுதல்வரைப்பெறுவாயெனின் இயையாளெனக் கருதிஇயையுமாறு மேற்கவியினும் இக்கவியினுங்குறிப்பாற் பணிமொழிகூறினனென்க.

சுங. பொன்ற-(மனம்) அழிய. சொற்பால சொல்லும்பகுதியன. இற்பாலவர் - இல்லறத்திற்குரியமாதர்.

சுச. வருட்டி-வற்புறுத்தி. வருடிஎண்பது வருட்டிஎன விகாரமாயிற்றென்பர்வருடிஎனக்கூறினுஞ் செய்யுளியையுமாதலின் அஃதுரையன்றென்க. பெற்றி - தன்மை. தன்றாய்முதலாயினோர் பிறரைச்சேர்ந்து புதல்வரைப்பெற்றார்கள் எனக்கூறினனென்பார் பிறர்பெற்றி

காட்டியென்றும், தன்னன்பிறந்ததைக்கூறின் வடுவாமென்றஞ்சி மறைத்தாள்என்பார் கன்னன்பிறந்தொழிய என்றுங்கூறினர்.

சுரு. பணித்தேவுதல்-நீநினைத்ததேவரைப் புணர்ந்து புதல்வரைப்பெறுகவெனக் கூறிவிடுத்தலென்க. தருமாதிபன்-யமன் இதுவடநூன் முடிபு. உம்மை-சிறப்பு.

சுசு. நிறைமாமதிக்கூட்டமுற்ற அந்தித்தெரிவை - பூரணமான அழகிய சந்திரனாகிய நாயகனது கூடுதலைப்பொருந்திய மாலைக்காலமாகியபெண். இதுவகதேசவுருவகம்.

சுஎ. சிவம் - நன்மை. முகூர்த்தம் ஈண்டு லக்கினமென்க. தினம் - ஈண்டுநட்சத்திரம். கோளும்-என்றதில் உம்மைமுற்றுமெச்சமுமாம்.

சுஅ. உதிட்டிரன்-யுத்தத்திலேதிரமுள்ளவன்.

சுகூ. சலநிதி-சமுத்திரம். ஏ-அசை. பிறைபோல்வளரவளர மகிழ்ச்சியதிகரிக்கச் செய்தலின் தருமனுக்குப்பிறைபைஉவமை கூறினர்.

எய. அரிதாய்ப்பெற்றமையிற் பேருரையென்றார். சிந்தியாதாள் வினையாலணையும் பெயர்.

எக. மை-குற்றம். வயின்-வயிறு. ஈண்டுப் பரிமளகந்தினிவின்படி வியாதமுனிவர் வந்தாரென்பது முதனூற்கதை. விழுந்ததாக - இதுவிழுந்ததென்னுமுற்றுச்சொல்லோடு ஆக என்னுமெச்சம்புணர்ந்து ஒருசொன்னீர்மைப் பட்டுநின்ற செயவென்வாய்பாட்டு வினையெச்சம்.

எஉ. சஞ்சலமானகோசத்தசை - கலக்கமடைந்தகருப்பையின்றசை. எஞ்சலவாக-குறையாதனவாக. இழுது-நெய். நின்றவக்குறை - சேடமாயிருந்தஅந்தத்தசை. குறைஆகுபெயர் அஞ்சில்-அழகியபொன்வட்டத்தகட்டணி.

எங. கையறும்-அழிந்துவிடும். வெருவுறல், மருவுறல்என்பனஎதிர்மறை வியங்கோள்வினைமுற்று.

எச. காம்பு - மூங்கில். தேம் - வாசனை, ஈற்றளை-முட்டையிட்டிருக்கின்ற புற்றுஎன்க. பாம்பு தாணிட்டமுட்டைகளினின்று குஞ்சு வெளிப்படும் பருவம்வரை அளையைப்பிரியாது காத்தல்போல் இவளுங்காத்திருத்தலிற் பாம்பினையுவமைகூறினர்.

எரு. குந்திபோசர் யாதவருள் ஒருபகுப்பினராதலாற் குந்திபோச ராசனாகியசூரனை யாதவனென்றார். கேட்டு - நாரத முனிவராற் கேட்டு, பவனன்-வாயுதேவன்.

எசு. கலைவாகன் - கலைமான்வாகனத்தையுடையவாயுதேவன். வீமன்-பயத்தைச்செய்பவன்.

எஎ. சாயல் - அழகு நண்புடையனலன் - அவ்வாயுதேவனோடு நட்பையுடைய அக்கினிதேவன். நற்சகுனமாக இளந்தென்றல் வீச அக்கினிவலஞ்சுழித்ததென்பத கருத்து.

எஅ. அனிலன-வாயு. பிறந்தனனுகஎன்பதற்கு எசு-ஆங்கவியில்விழுந்ததாக என்பதற்குரைத்தாங்குரைக்க. சுயோதனன்-நன்றாயுத்தம் பண்ணப்பட்டவன்.

எகூ. வாரி - கடல். விம்முதல் - ஒலித்தல், ஓரி - நரி. பாரிய - உயர்ந்த பனித்தல்-துளித்தல். சோனைமேகம-விடாமழைபெய்யுமேகம். துர்ச்சகுனமுண்டாயினவென்பது கருத்து.

அய. கோள்கள் - நவக்கிரகங்கள். கழை - மூங்கில். துச்சளை - பிறரால்வருத்தப்படுத்த முடியாதவள்.

அக. செம்பொற்கன்னிகை - சிவந்தஇலக்குமியாகியபெண்; சிவந்தஅழகியபொருட்டென்பாருமுளர். இது ஏதுவுவமை.

அஉ. மொழிமறை - பின்மொழி நிலையல். கொல்-அசை. ஓ-எதிர்மறை. தேன்மொழித்தெரிவையென்றது அவள் என்னுஞ்சுட்டுப்பொருளாய் நின்றது.

அங. இரண்டாமடிக்கு-பங்குனிமாசத்துப் பூரணையோடுகூடிய உத்தரநக்ஷத்திரத்தில்.சூரியன்பிறந்தநாள் உத்தரமாதலால் ஆதபன்பயிலுநாள் என்றார். உத்தரநக்ஷத்திரத்திற்கும் பங்குனியென்னும் பெயருண்மையால் அதிற்பிறந்தவுரிமைபற்றிப் பங்குனனென்னுநாமம் பகுதியாற் படைத்திட்டானென்றார். பகுதி. ஈண்டு-உரிமை.

அச. பொற்பு-அழகு. முழவு - வாத்தியம். விமம-ஒலிக்க. புரிவளை-புரியையுடையசங்கு. வாத்தியப் பொதுவிற்குமுழவென்னும் பெயர் பிங்கலநிகண்டிற்காண்க.

அரு. உரைபப-மாத்திரையும் புதல்வரைப் பெறுமாறு மந்திரத்தையுபதேசிப்பாய் என்று சொல்லவெனவருவித்துரைக்க. குறைவற- இருமையின்பமுமில்லையென்னுங் குறைநீங்க. இரவிமைந்தரிருவர் - சூரியன்புதல்வராகியமருத்துவரிருவர்; இவர் தேவவைத்தியர்.

அசு. வரிசை - மேன்மை. ஒருவர்போல என்றதனால் ஒற்றுமைப்பட்டுப்புணர்ந்தார்என்பது கருத்து. பருவரல்-துன்பம்.

அஎ. அசைவு-கலக்கம். சிங்கசாபம்-சிங்கக்குட்டி.

அஅ. புல்வாய் - மான். விழைதல்-விரும்பு தல். பாலப்பருவத்திலும்மிக்க வீரமும் வேக மும்உடையரென்பார் போதகமுதலியவற்றோ டோடிவிளையாடலுற்றாரென்றார்.

அகூ. சாத்தி - சாத்தபெற்றுளனச்செயப் பாட்டுவினையாக்குக. கைதவம்-துன்பம். எது கைநோக்கி மெய்தவமெனமிகாது நின் றது கலைகளையெளிதிற்கற்றற்கும் வனப்புமிகுதற் கும் முற்செய்தவம்வேண்டுமாதலின் மெய்த வம் விளங்கவென்றார்.

கூ0. தெரியன்மாலை-ஒருபொருட்பன்மொ ழி. அகன்ற, நிறைந்த, உயர்ந்த, மிக்க, பரந்த என்பன அஃறிணைப்பன்மைவினைமுற்று. இவ ருங் கல்விமுதலியவற்றான் மிக்காராயினர் என் பது கருத்து. கண்ணிற்சிறந்தவுறுப்பில்லை யா தலால் அதனையெடுத்துக்கூறினார்.

கூக. ஆரம் - முத்துவடம். மூன்றுமடிக்கு- ஒருயிரிரண்டு சரீரத்திலும்பொருந்த உருகு கின் ற ஆடவர்களுமாதர்களும்கலவிவேட்டுரு கும்படி. மாரனை - மாரனுக்கு. வசந்தகாலமா னது உருகும்வண்ணஞ்சூட்ட ஆரமுதலாகிய இவற்றோடுவந்ததென்க. ஆகிய இவற்றோடு என்பன அவாய்நிலையாய்வந்தன. இதம்பெறு தற்குக்காரணமான தென்றலென்க.

கூஉ. விதுநலம்பெறுகா-சந்திரனுற்குளிர்ச் சியாகிய சுகத்தைப்பெறுஞ்சோலை. காவானது ஏற, மொய்ப்ப, உலாவ, நடிகைத்தடுமாறிற்று என்றியையும். சோலையைக்குறிக்குங்கால், மது வயர்தல்-மதுவைச்செய்தல். மெய்சிவப்பேற- தளிரால் வடிவஞ்சிவக்க. தலைநடுங்க-தலையசை ய. காறடுமாறிற்று - தென்றலாலசைந்ததுஎன் க. கள்ளுண்டோரைக்குறிக்குங்கால், அயர் தல்-குடித்தலென்க.

கூகூ. செந்தழலாக்குதல்- சிவந்ததளிராக்கு தல். சூதம்-மா. தருக்களெல்லாங்காட்டுஞ்சீரால் இயற்கையினியற்றுமெனக.

கூச. இராகம்-ஆசை. முரண்-வலி. மோ கனச்சுண்ணம் - மயக்கபொடி. புரிந்த - புரி கின்ற. இதுகாலமயக்கம்.

கூரு. மாநலம் - பேரழகு. மாத்திரி - மத்தி ரை. நலம் - இன்பம். சாபம் நிக - ஆங்கவியிற் காண்க. பானல்-கருங்குவளை. அவன் நலமுறு தற்குச்சிரிப்புமோரேதுவாயிருந்ததென் பார் மாநலந்திகழுமுரன்மாத்திரி எனவுடம்பொடு புணர்த்திக்கூறினரென்க.

கூசு. அலகுடனலகுசேரத் தளிர்நல்கி என்க. அவசம்-பரவசம். மாதவி - குருக்கத்தி. இதுபந்தர்போற்செறிந்திருத்தலாற்பந்தரென் றார். அலகு-மூக்கு.

கூஎ. கண்ணோட்டம்-இச்சை. நலிய - வரு த்த. எஞ்சியகாலம் - கழிந்தகாலம். அடுக்கு - மிகுதிகுறித்தது. பஞ்சின்மெல்லடிஎன்பதற் பஞ்சினுமெல்லடியெனினுமாம்.

கூஅ. பொங்க-பொலிவடைய புணர்முலை- நெருங்கியமுலை. காவி-கருங்குவளை. ஓவியம்- சித்திரப்பாவை.

கூகூ. தொண்டை - கொவ்வைக்கனி. சுரத போகம்-புணர்ச்சியாலாகியபோகம். மன்றல் - பரிமளம். சிறிதுவிழித்தகண் என்பார் அரும் பியவிழியென்றார். வீழ்ந்தான் என்பதற்கு இறந்தானென்க; வருங்கவியாலறிக.

௱. என்ன என்பது என வெனக்குறைந்து நின்றது. ஓ - எதிர்மறை. அஞ்சு முதனிலைத் தொழிற்பெயர்.

௱க. வசந்தன் - மதன். சித்திரைச்செல்வி யுடன்-இளவேனிற்காலத்தால். சித்திரை ஆகு பெயர். உடன்மூன்றுவதன் சொல்லுருபு கரு விப்பொருளில்வந்தது கொல், ஆம்-அசை.

௱உ. அயிர்த்தல் - சந்தேகித்தல். வயிர்த்த னள்-மனவைராக்கொண்டாள்.உணர்ந்துமிலன் என்றதில் உம்மைஎச்சம். நிலம் வானம் என் பன அவற்றின் வாழ்வை யுணர்த்தலால் ஆகு பெயர். இறக்கத்துணிந்தாள் என்பதுகருத்து.

௱௩. புந்தி-அறிவு. மன்றல்-கூண்டுபுணர் ச்சி. கொல்-ஐயம். அந்தி-மாலைக்காலம். பூவை, அரவிந்தம்-என்பனஆகுபெயர். நாயகன்புணர் ச்சியாலிறப்பன் என்னுமறிவுசிறிது மிலளாய தற்குடன்பட்டாள்என்பார்புந்தியிலளென்றார்.

௱ச. உற்றது - சம்பவித்தது. நலம் - இன் பம்.

௱ரு. அரசை - அரசனுக்கு. ஈமவிதி - தீக் கடன். செய்ய - அம்முனிவர்கள்செயவிக்க; இதில்லிவ்விகுதிதொக்குநின்றது. முகத்தாள். விடாதாள் முறறெச்சம். நாயகனுடன் செல் கின்றமையின் மகிழ்ச்சியுடையளாயினள் ஆத லாற்பொற்புடை முகத்தாளென்றார். உடன சென்மகளிர்க்கு நெருப்பு நீர்போன்றிருத்த லின் அனலைப்புனலென்றார்.

௱சு. கங்கைவனம்-கங்கைநீர். கற்பவனம்- கற்பகச்சோலை. உம்மை-முற்று. மூடித்தனன் என்றதிற் பிவவிகுதி தொக்குநின்றது.

௱எ. ஆசி-வாழ்த்து. எசு-குறறம. தேசிகர்- ஆசாரியர். சதசிருங்கர் வேதியர்கருத்தால் உய்த்தார் என்க.

௱அ. மன்னன் - கூண்டுத்திருதராட்டிரன். புறம் - உடம்பு. பிறந்தபொழுதொத்து - அப்பு

தல்வர்கள் பிறந்தபொழுதின் மகிழ்ச்சியை யொத்து. பெற்றி-தன்மை.

௱௯. வியன் - பெருமை. சயம் - வெற்றி. புனலிரண்டாவன - சோகத்தால்வருபுனல், ஆனந்தத்தால்வருபுனலென்க.

௱௰. கனகுலம் - முகிற்கூட்டங்கள். நற்குணமுதலியவுடைமையால் ஐவர்க்குவனசமலரையும, அவையின்மையால் நூற்றுவர்க்குக்குமுதமலரையுமுவமை கூறினாரென்க.

௱௰௧. இன்னணம்-இவ்விதம். ஆகுலத்தாளாகிய பூமிதேவியென்க; அவளெண்ணமுடித்தலாவதுபூபாரந்தீர்த்தல். தலைவனைத்தந்தகோமான் - கிருட்டிணனைபபெற்றவசுதேவனும் என்க; இதில் எண்ணுமமை விகாரத்தாற்றொக்கது பிருதுவிக்குப்பொன்னிறமுடையாற் பொன்னெனு நிறமென்றார்.

௱௰௨. அந்தமில்-அழிவில்லாத. சிவபிரான் றிருமாலையாதலால் வான்கொன்றையென்றார். கொன்றைஈண்டாகுபெயர். கிருட்டிணன்முதலோர் அவதரித்தமையாற் போசகுலத்தைத் தெய்வகுலமென்றார்.

௱௰௩. விடலை-என்றதுபலராமனை. மாது-என்றதுதேவகியை. கோத்தார் - ஒழுங்குபடுத்துக்கூறினாரென்க.

௱௰௪. தருமக்கடவுளின் அமிசமாயவதரித்தலால்தருமராசனைத் தருமதேவதையென்றார். அம்புராசி - கடல். இம்பர்நோய் - இவ்வுலகிற்குத்துன்பம். ஏ-தேற்றம். பூபாரந்தீர்த்தலாகிய தன்னெண்ணத்தையும், ஞாதியர்முதலியபகைவரைவெல்லுதலாகிய தருமன்முதலோர் கருத்தையுமுளப்படுத்தி யெல்லாவெண்ணமு மெனக்கூறினமை காண்க. இம்பரோயகற்றி என்னும்பாடத்திற்குநோயென் னுஞ்சொல்லைவருவித்துரைக்க.

௱௰௫. முகுரவானனன் - கண்ணாடியைப் போலுமுகத்தவன்; திருதராட்டிரனென்க. தர்ப்பணானனனென்றும், அது பிறரைத்தான் காணாதவாறுபோல இவனும்பிறரைக்காணானென்றுங்கலித்தொகை ௨௫-ஆம் பாட்டுரையிற் கூறினமைகாண்க. கண்ணாடியைப்போலுமுகத்தவன் என்பதனை வாரணாவதச்சருக்கம் ௱௨-ஆஞ்செய்யுளிலுங்காண்க. வேத்துமுனிவன்-இராசமுனிவனாகியவீடுமன். பாந்தளேறுயர்த்தகோ-சர்ப்பவேற்றைக்கொடியாகவுயரச்செய்ததுரியோதனன். தகைவு-தடுத்தல். கெழுமினார்-மனங்கலந்தார். திரிகரணசுத்தியுடையவன் என்பார் மனஞ்சொற்காயம் பகிர்விலாவிதுரனென்றார்.

௱௰௬. தாதைதன்றாதை-பாட்டன். முன்பு-வலி. மன்பதை-மக்கட்கூட்டம். தன்பதிபன்மையினொருமைமயங்கிற்று. அடுக்கு ஒருதொழில்பலகானிகழ்தல் பற்றிவந்தது.

௱௰௭. வைநுதியுடைச்சமரவேல் - கூரிய நுனியையுடைய யுத்தஞ்செய்யும் வேல் எனவுரைக்க. தோற்றம் - உயர்ச்சி. ஆற்றுவரேனும என்றதில் உம்மை எதிர்மறை.

௱௰௮. பலமாற்றம்யாவும்என்க. பலவும் என்பதில உம் அசை. ஏ - அசை. தனதன் - குபேரன்.

௱௰௯. எயில்-மதில். (மணிகளால்) வெயிலுநிலாவுமென்க விலாசம்-விளையாட்டு. பபினன் மேல்வருகல் - படக்கூட்டங்களையுடையவனாகிய ஆதிசேடன் படத்தான்மேன்மூடியமேருமலை; இவ்வாறன்றி அழகியசூரியன்மேலுதையமாகிவரப்பெற்ற உதையகிரியென்றுமாம். இப்பொருட்குப் பை-அழகு. இனன்-சூரியன் பிங்கலநிகண்டிற்காண்க. பவனன்-வாயு. வயினதேயன் - கருடன். காத்திரவேயர் - சர்ப்பங்கள். உம்மை-சிறப்பு பையினன், வையினதேயன்என்பன பயினன் வயினதேயன் எனப் போலியாயின. இதனாற்பகையுடையாரானென்பதும் வீமனைநூற்றுவர்வெல்லும் வன்மையிலராயினாரென்பதுங் காண்க.

## வாரணாவதச் சருக்கம்.

[௦]

௧. முகில்வண்ணன் - மேகத்தினிறம்போலுநிறத்தையுடையான். இக்கருத்தை, திருக்கோவையார் ௯௪௯-ஆங்கவியில் தீவயின்மேனியன்என்பதற்குரைத்தமை காண்க. ஒரு பொருண்மேற்பலபெயாவந்ததனால்இறுதியிலிறைஞ்சி எனவொருவினைகொடுத்தார்.

௨. அயருமாயிடை-(விளையாட்டை)ச்செய்யுமக்காலத்திலென்க. பாங்கு-உரிமை; ஈண்பநண்பன் எனப்பொருடந்தது குணத்தின்பெயர் குணிமேலாயிற்று. வாங்குபு-அழைத்து.

௩. மங்குலின்வருபகீரதி - விண்ணினின்றும் வருகின்றகங்கை. ஆல்உடனிகழ்ச்சியில்

வந்தது.

ச. தைவரல் - தண்டழுக்கறத்துடைத்த தென்க. ஆடகம்-பொன். போனகம்- அன்னம்.

ரு. கண்படை-நித்திரை. கன்னசௌபலர்- கன்னனுஞ்சகுனியும். இதுவும்மைத்தொகை. படைக்குமரன்-ஈண்டுத்துரியோதனன். பாவ கனண்பன்-வாயு. வல்லி-கொடி. சிக்க-இறுக. யாத்தல்-கட்டல்.

சு. உரன் - வலி. பொருப்பு - ஈண்டுமந்தர மலை. பரவை - கடல். இருமையினுமுறுதிபய வாதசெயலென்பார் பயனில்செய்கையென் றூர்.

எ. அனந்தரம்-பின்பு. பிணி-கட்டு. துணி- துண்டு. அவசம் - பரவசம். இலக்குவன்றன் னைக்கட்டியநாகபாசத்தைநீக்கியெழுந்தவியை புபற்றி அவனையுவமைகூறினரென்க. இராவ ணன்றம்பிபோன்றுளான் என்னும் பாடத்தி ற்கு சரீரப்பெருமைவலி முதலியவற்றாற்கும் பகன்னனை யொத்துளனாகிய வீமனென்பர்.

அ. வாள்-கிரணம். நித்திராலு - நித்திரை செய்பவன் இதுவினையாலணையும்பெயராய் வீமனையுணர்த்திற்று. முதலிரண்டடியிற்கூறி யவுவமையால் அறிவொழுக்கமுதலியவற்றிற் சிறந்த வீமனைக்கெடுக்குஞ்சூழ்ச்சியையுடைய கொடியமனத்தினன்என்பது விளங்கிற்று. வஞ்சத்தாற்கொல்லத்துணிந்த துரியோதன னைவீரனென்றது புகழ்வதுபோலப் பழித்த தென்க. சோலையில்விளையாடி அன்றிரவுநித்தி ரைசெய்யும்போது பிடாரர்களைக் கொண்டு பாம்புகளாற்கடிக்கச்செய்தானென்க. உம்மை- எச்சம்.

கூ. மற்குணம்-மூட்டுப்பூச்சி. வடித்தவேல்- கூராக்கியவேல்.

ய. கழுநிரைத்து-கழுவை (ஆற்றினுள்ளே பிறர்க்குத்தோன்றாவண்ணம்) நிரைத்து. வண் டினால் - கிருட்டிணனாகிய வண்டினாலென்க. கழுநாட்டியவிடத்தின்மேலே கிருட்டிணன் வண்டாகிச் சுழன்றுகொண்டிருந்தமையைச்சு ருக்கி வண்டினாலென்றூர்.

யக. பெற்றம் - வாயு. ஆனுருபுஒடுருபின் பொருளில்வந்தது.

யஉ. வடம் - கயிறு. பிணித்தல் - கட்டல். வாரி-நீர். கிங்கரர்-ஏவல்செயவார். தான்செய் வஞ்சனை பிறர்க்குப புலப்படுத்தாமையால் இதையமொத்தவரென்றூர்.

யங. ஓதம்-திரை. பவனசூனு-வாயுகுமார னாகியவீமன். ஆதவம் - ஒளி. பணம் - படம். கடலிடையொளித்தவெற்பு - தன்சிறகையறு த்துவிடுவானென்று இந்திரனுக்கஞ்சிக்கடலி ல்வீழ்ந்தொளித்த மைநாகமலை.

யச. அலரி-சூரியன். முளையெயிறு-வினைத் தொகை. முளைபோன்றஎயிறெனினுமாம். உம்மை-எச்சம்.

யரு. ஆசுகன்மதலை - வாயுகுமாரன். ஏசு - குற்றம். மற்று, ஆல் அசை-அமிர்தங்குறை யாதருடங்களையறிந்தெதன்பார்தெரிந்தென்றூர். தன்சாதியாகிய அரவினங்கட்குணவாயிருந்து அவற்றைவளர்க்கும் வாயுவின்குமாரனென்ற சம்பந்தத்தாலமுதையூட்டினனென்க. பத்து - அன்பு.

யசு. புலம் - காடு அதிலுள்ளமரமுதலிய வற்றையுணர்த்தலால்ஆகுபெயர். கனல், புலம் என்பனவற்றை ஆகுபெயராக்கிமுறையேசூரி யகிரணமெனவும் வயலிலுள்ள பயிரெனவுங் கூறுவர். எழில்-அழகு.

யஎ. எய் - எய்ந்த. எண்பகல் - எட்டுநாள். மேய்-மேவி, செய்தெனெச்சம். என்ன-என்று பிறசொல்ல.

யஅ. பாவி - ஈண்டுத்துரியோதனன். தவ னன் - சூரியன். உததி - கடல். அவனிபன் - ஈண்டுத்திருதராட்டிரன். அரசவெள்வளைத்து வனி-அரசர்க்குரியவெண்சங்கினொலி. எடுக்க என்னுஞ்செயவெனெச்சம் நிகழ்காலத்தின் கண்வந்தது. மாலை சூரியனைச்சாய்த்துச்சிறிது போதுமேம்பட்டுத்தோன்றிப் பின்னழியுமாறு போலப்பாவியும் வீமனைநதியில்வீழ்த்தி அத னாற்சிறிதுபோது பெருமிதங்கொண்டு பின்ன தனையிழந்ததனாற்றவனை யுததியிற்சாய்த்த மாலைபோலென்றூர். அரசநகரிற்காலைமாலை சங்கொலித்தலியல்பென்க.

யகூ. தரித்திலன் - துயரைச்சகித்திலனெ ன்க. விம்மல்-ஏங்குதல்.

உய. விடிஞன - இறந்தான். நடுக்கில்-பிறி தொன்றானடுக்கமில்லாதவன்க.

உக. சுயோதனகுமரன்-துரியோதனனாகிய விராசகுமாரன். ஆற்றலின்வெற்றி - வலியினு லஞ்சி. அழுக்கற்ற-பொறாமைப்பட்ட. ஏ-பிரி நிலை.

உஉ. ஊதையில்பூதம் - வாயுவையொழிந்த வேனைநான்குபூதங்கள். ஒத்தஎன்னும் பெய ரெச்சத்தீறுதொக்கது. ஊதையில்லாபூதங் களையொத்தனைக்கூறிற்பொருட்சிறப்பின்று விதலையாதலிற் கோதையில் குழலினனென் றூர். தாதைதாதை-பாட்டனாகியவீடுமனென்க.

உங. தெருமரல்-கலக்கம். தெய்வங்கூறல்- ஆவேசப்பட்டுக்கூறல். மூன்றுமடிக்கு-நற்சகு

னங்கள் வரவிற்குரிய குறியைக்காட்டவும் என்க. யமனவதாரமாதலால் விதுரனைத்தருமமன்னனென்றார்.

௨௪. போகிகள்-பாம்புகள். வீமன் பதினாயிரமரசுவாக்களின் வலியமைந்திருத்தலால்வருந்தியுற்றெடுத்தனவென்க.

௨௫. பாழி-பெருமை. பாண்டவன்-பாண்டுவின்புத்திரனாகியவீமன். சூழ் - மண்டலமிடுகின்ற இகல்-வலி. வாழி-அசை. ஆதலால் அவைகளுமிவனைச்சுமக்க வல்லவாயின என்பதுகுறிப்பெச்சம். ஓகாரமிரண்டில்முன்னையது வினாவுதற்கண்ணும் பின்னையது இறையாய் வினாவெதிர் வினாவுதற்கண்ணும்வந்தன. இனிதினேந்துவானென்றதனாலிலேசாகத்தாங்கும் வலியுடையானென்பது கருத்தாயிற்று.

௨௬. உயங்கி-வாடி. பதி-தம நாயகனாகிய சூரியன். வான்-ஆகாயம். உபமேயத்திற்கியையப்பங்கயத்திற்குச் (சூரியன்மறைதலாற்கூம்பி,) என்னுஞ்சொற்களையும், ஆகாயத்திற்குச் (சூரியனால்வெப்பமடைந்து) என்னுஞ்சொற்களையும்வருவித்துரைக்க இதுபலபொருளுவமை.

௨௭. மூன்றாமடியிற் கூறியகுவ்வுருபை ஏனையவற்றோடுங்கூட்டி எண்ணும்மைவருவித்துரைக்க. ஞாதியர்-தாயத்தாராகியதுரியோதனன் முதலானோர்.

௨௮. குந்தியை குந்திக்கு எனத் திரித்துரைக்க. அந்திமீன்என்றது அருந்ததியை ஏ-அசை.

௨௯. கோதமன்மகன்மகன்-கௌதமமுனிமகனாகியசரத்துவந்த முனியுடைய புத்திரன். படைக்கலம்-ஆயுதம் இதுஆகுபெயராய்அதன் றொழிலையுணர்த்தியது. வீறு-பெருமை அம்மாதவன் - அச்சரத்துவந்தமுனிவன். வனத்திற்றவஞ்செய்யுங்காலை இந்திரனதனையழிக்க வோரரம்பையைவிடுக்க அம்முனிவன் அவளைக்கண்டுமோகித்துவீரியத்தைத் தானிருந்ததருப்பையாசனத்திலிரண்டு துளியாக வீழ்த்தினான். பின்னர்த்தன்கையிலிருந்த வில்லையும் திவ்வியாஸ்திரங்களடங்கிய அம்புக்கூட்டையும் அவ்வாசனத்தில் வைத்துவிட்டு வேறிடஞ்சென்று தவஞ்செய்திருந்தான். அவ்வீரியததுளிகள் ஆணும் பெண்ணுமாக விருபிள்ளைகளாயுதித்திருக்க வேட்டைக்குவந்த சந்தனுமகாராசன் அப்பிள்ளைகளையுந் தூணியையுங்கண்டெடுத்துக் கொண்டுபோய்வளர்க்கச் சரத்துவந்தமுனிவன்வந்து மகனுக்கு ஆயுதப்பயிற்சி செய்து அவனையவ்விடத்தில் விடுத்துப்போயினான்; அம்மகனுக்குக் கிருபாசாரியனென்றுபெயர்; இவனுடன்பிறந்தாளுக்குக் கிருபியென்றுபெயர் இவள் துரோணாசாரியன்மனைவியாயினாள்.

௩௰ மற்று - அசை. சிலைமுதலியன ஆகுபெயர்.

௩௧. பரிவு - அன்பு. குருபதி - ஈண்டுவீடுமன், உம்மைமுன்னது எச்சம்பின்னது சிறப்பு. இது வேற்றுப்பொருள்வைப்பணி.

௩௨. பரதநாதவேதம்-நாடகத்தலைவனாகிய கடவுளருளியவேதம். சுரததாது - புணர்ச்சிக்குரியவீரியம். துரோணகும்பம் - பதக்குநீர் நிறைந்தகும்பம்.

௩௩. ஈரேழ்விஞ்சை-பதினான்கு வித்தை; அவை வேதம்நான்கு, அங்கம ஆறு, மீமாஞ்சை, தருக்கம, தருமசாஸ்திரம், புராணம் என்பனவாம். நீர்-கடல்.

௩௪. வேந்தன்-ஈண்டுவீடுமன். பன்னியின். பெயர் கிருபி. கடையடியில் இன் ஏதுப்பொருட்டு. இளங்குழவியென்பார் கையின்மதலையென்றார். ஏ-பிரிநிலை, தேற்றமுமாம். இம்மதலையின்பெயர் அசுவத்தாமன்.

௩௫. சகலகலைஞானவுணர்ச்சியாற்றுரோணனை வீடுமனெஞ்சின் மதித்துவைத்தமையாலவனெஞ்சைச் சிந்தாசனமென்றார். எந்தையென்னும்பெயர் எந்தாய்என விளியாயிற்று.

௩௬. மூசி-நெருங்கி. முருகு-தேன். செவ்வி-அழகு. வாசிமான் - குதிரை. ஏசு-குற்றம். கடவுள்வாய்மை-தெய்வவாக்கு. ஆசி-வாழ்த்து. ஐயுருபைக் குவ்வுருபாக்குக. இருக்கால் இதில் ஆல் உடனிகழ்ச்சிப்பொருட்டு.

௩௭. வேத்துமுனி-விகாரம். பூதம்-சென்றகாலம். புன்மை-எளிமை. ஏதம்-குற்றம். பூட்டுதல்-சம்பந்தப்படுத்தல் என்பான் இதிற் படுவிகுதிதொக்குநின்றது, இல்வாழ்வானென்னுந் திருக்குறளுரையிலறிக.

௩௮. பானு - சூரியன். அங்கிவேசன் - ஓர் முனி. இம்முனிதுரோணாசாரியனுக்குப் பிரதமகுரு. இரண்டாவதுகுரு பரசுராமமுனி. கற்று கற்கஎனத்திரித்துரைக்க. என்னையும் என்னு மிழிவுசிறப்பும்மைவிகாரத்தாற்றொக்கது. தானும்என்னுமெச்சவும்மையாற் றுரோணனும் வல்லனாதல்கொள்க.

௩௯. ஆதரியா - ஆதரித்து. என்னை - என் பிதா. எய்தி-எய்தஎனத்திரித்துரைக்க.

௪௰. அடுக்கு - எள்ளல்பற்றிவந்தவுவகை. வென்று - பகைவரைவென்று என வருவித்துரைக்க.

௪௧. தவழு-ஈறுதொக்கபெயரெச்சம். ஏ- முன்னது பிரிநிலை பின்னது அசை. சனம்-பிரசைகள்.

௪௨. ஐயாண்டு-ஐந்துவயதுடையதுஎன்க.

௪௩. மாவின்பால்- மாவைநீரிற் கரைத்தமைத்தபாலென்க. கோ - ஈண்டியாகசேனன். நாவின்பாலால்-அப்பொழுதுண்டாகியநாவினியல்பால். பழையநண்பு அவனுக்குப்புலப்படநானுனண்பன் என்றனென்க. ஏ - பிரிநிலை கண்டும் என்னுமும்மை விகாரத்தாற்றொக்கது.

௪௪. மரபு-முறைமை. அரசர்க்கு அந்தணர்கள் அமைச்சர்முதலானோர் ஆதற்குரியரன்றி நட்பினராதற குரியரன்மையின்மரபாவென்றான்.

௪௫. சுகன்-சுகமுனி. உமமை-எச்சம். ஏ - அசை.

௪௬. படைமைக்கல்வி - ஆயுதத்தொழில் வித்தை. வஞ்சினம்-சபதம்.

௪௭. ஆக என்பது ஈறுதொக்கு ஆவென நின்றது. உம்மை-எச்சம்.

௪௮. நிதியோர் எவரும் எனக்கூட்டுக. தொன்று-பழமை. மறை-மந்திரம். முதலே நின்றகுறை-முற்பிறப்பிற்கற்றதனால் நின்ற சேடம். முதல்-ஆகுபெயர். ஏ - அசை. முனைனர்கிருபாசாரியனிடத்திற்கற்றதனானின்ற சேடம் என்றுங்கூறுவர்.

௪௯. சிலை-வில்வித்தை; இது ஆகுபெயர். விசயம-வென்றி. எஞ்சியகுமாரர் எனறது ஏற்புழிக்கோடலாற்றுரியோதனாதியரையென்க.

௫௰. கிராதன-வேடன். முனி - துரோணமுனி தனியிறைஞ்சி-குருகுலகுமாரரின்றித தனியேயிருநதபோது வந்து வணங்கினென வருவித்துரைக்க. இவனேவலின்வழானாகலையடைந்து - இம்முனிவற்குச செய்யுமேவலிற றவறாதவனாதலைப்பொருந்தி. விலவித்தைகற்பிக்கவேண்டின போது அதற்குடன்படாமையாற் றுரோணாசாரியனைப்போலவொருவடிவத்தை யுண்டாக்கிவைத்துடபூசித்து அவனிடத்திற்கற்குமாறுபோலககற்றா னென்னுங் கதையைச் சுருக்கி இங்ஙனங்கூறினானெனக் கொள்க. மேகலை-மேகலையாக. மாகலை-பெரிய தனுர்வேதம். இவ்வேகலைவன்றன்னிடம்வந்த துரோணாசாரியனை வணங்கிக் குருதக்ஷிணைபெறவேண்டுமென்றுவேண்ட, இவன்மேற் பொறாமையுற்றிருந்த அருச்சுனனுவக்க இவன் வலக்கைப்பெருவிரலைக்கேட்க அதனைத்தக்ஷிணையாக வறுத்துக்கொடுத்தானென்க. என்றொரு இதிற்பெயரெச்சவீறுதொக்கது.

௫௧. அங்குலிகம்-மோதிரம். புங்கம்-அம்பு. புகன்று-விரும்பி. துங்சம்-உயர்ச்சி. இலக்கின்றொடையால்-ஒப்பில்லாத (ஒரு) பாணத்தால். அனவற்றபாணத்தால் எனின் அவ்வாறுகதையின்மையினது பொருந்தாதென்க. வடம்-ஆல்.

௫௨. முனி - ஈண்டுத் துரோணாசாரியன். எனலும் - இடைச்சொல்லடியாகப்பிறந்த உம்மீற்றுவினையெச்சம். போல்கணை-வினைத்தொகை. முதலையில்-முதலையைப்போல.

௫௩. நிலை - சாம்விடுநிலை. ஆலீடம், பிரத்தியாலீடம், பைசாசம், மண்டலம் என்னுஞ் சாம்விடுநிலைநான்கு. மறை-மந்திரம். ஓகாரம் எதிர்மறை.

௫௪. கலையோனாகிய சிலைக்குருவென்க. சிரமநிலை-யுத்தப்பயிற்சி. அலைத்தலைநிலாவெழுசரிற்புதல்வன் - அலையினிடத்துநிலாவுண்டாகின்றகங்கையின்புதல்வனாகியவீடுமன். சரித்-நதி. அறககடவுள்-யமனுடையஅவதாரத்தனாகிய விதுரன் அரங்கு - ஈண்டுயுத்தப்பயிற்சியைக்காட்டுஞ்சபையென்க. அரியுடன்கலைப்புரவியூர்திரு - சிங்கத்துடன்கலைமானாகிய வாகனத்தையூர்கின்ற வீரலக்குமி.

௫௫. புரி-நகரம். சனபதம்-நாடு. வரிபடர்-நிரைபொருந்த. இருந்தபொழுதில் (அச்சபையானது) வானிகரும் என்க.

௫௬. ஆசிரியரிருவர்-கிருபாசாரியன்துரோணாசாரியன. நாணேற்றிய-நாணேற்ற. சராசனம்-வில். வடிவாளியின - கூறியஅம்புகளால். பெருவண்மை சிறுநுண்மை சலநிச்சலம் எனச்சொல்வகையாகிய இலக்கம் அவை நாலுவகையாற்பிளந்து மாற்றினரெனக்கூட்டுக. பெருவண்மை-பெரியஇலக்கு சிறுநுண்மை சிறிய இலக்கு. சலம-அசையுமிலக்கு. நிச்சலம-அசையாத இலக்கு. வகையால் - மூன்றுவகையால்; அவையாவன—கேசமுட்டியும், சிரோமுட்டியும், கணமுட்டியுமாம; இவற்றைத் தமிழ்நூலார் மேனோக்கியெய்தல், கீழ்நோக்கியெய்தல், நேரேயெய்தல் என்பர்.

௫௭. தெற்றி - திண்ணை, சித்திரகூடமுமாம். நவை-குற்றம். என-என்றுசொல்ல. வல்லனபுரிந்தனர-வல்லவற்றைச்செய்தார்கள்.

௫௮. வலி - சரீரவலி, திறல் - தைரியம். வினை - போர்த்தொழில். அனிலன் சிறுவன்-வீமன். கதை-தண்டாயுதம். வலியோருந்திறலோரும் வினையோரும்ஆகிய அரசன்மகனும் அனிலன்சிறுவனு எனக்கூட்டுக. மறவோர்-மறத்தன்மையுடையோராய் என முற்றெச்சமாகுக.

௫௩. உரும்-இடி. உடற்ற-தாக்க. மறம்-வீரம். செயிர்த்து-கோபித்து. பெரியோனாகிய குருவின் சிறுவனெனக்கூட்டுக. குருவின்சிறுவன்-அசுவத்தாமன். சந்தநோக்கி மெய்கல்வி என இயல்பாயிற்று.

௬0. மீளி-வீரன். ஆயுதபுரோகிதன் - ஆயுதத்தொழில்வல்ல புரோகிதனாகிய துரோணசாரியன். எ௫-ஆங்கவியிலுஞ் சிலைப்புரோகிதன்என்றார்; புரோகிதன்-எந்தக்கருமங்களுக்கு முன்னே வைத்துக்கொள்ளப்படுபவன் மணிமேகலை அரும்பதவுரையிற்காண்க. விலோசனமுணர்ந்து பார்வைக்குறிப்பறிந்து, உன்தனுர்வேத சாமர்த்தியத்தைக் காட்டுவாயென வாயாறகூறாது கண்ணாற்குறித்தமையின் விலோசனமுணர்ந்தென்றார். வன்னி-அக்கினி. சலிலம்-நீர். திமிரம்-இருள். இரவி-சூரியன். ஏகாரம்.தேற்றம்.

௬௧. மங்குல்-மேகம். மஞ்சகோடி - மஞ்சவரிசை; இந்திரப்பிரத்தச்சருக்கம் உக-ஆங்கவியிற்காணக. பங்கசாதம் - தாமரை பானுராசசூனு-சூரியனாகிய தலைவனுக்குப் பிள்ளையாகிய கன்னன்.

௬௨. தேசிகேசன் - குருசிரேஷ்டனாகிய பரசுராமனென்க. அடுக்கு பன்மைபற்றிவந்தது, நிலையும்வவும்-சரம்விடுநிலையிலும் பாணத்தைச்செலுத்துதலிலும்.

௬௩. ராசமண்டலம்-இராசசமூகம். பிணையன்மாலை - பின்னல்மாலை ; ஒருபொருட்பன்மொழியுமாம். பெற்றி - ஈண்டுச்சாமர்த்தியத்தன்மை. தன்னின்மேம்பட்டமைபற்றி நாணினனென்க. வரிகழல்-கட்டியவீரக்கழல்.

௬௪. வம்மின்-வாருங்கள். குமரன்-ஈண்டுத்துரியோதனன்.

௬௫. அனந்தரம் - பின்பு. நீகொலந்தரமெனக்கு-நீயாவெனக்குநிகர். முகசரோருகம்-முகமாகிய தாமரைமலர். அரங்கபூசை - வீரலக்குமிக்கு அரங்கத்திற்செய்யும் பூசையென்க.

௬௬. எழிலி - மேகம். வின்மை-வில்லின் வலிமை. கௌதமன் - கௌதமமுனிபோனாகியகிருபாசாரியன். அமுதவிந்து-அமிர்தத்துளி, கிருபாசாரியன்சொற்கள் நீதியுடையார்செவிக்குஇனிமையாதலால், அவற்றிற்கு அமுதவிந்துவை உவமைகூறினர். ஏ - அசை.

௬௭. சூதன்-தேர்ப்பாகன். ஏதம்-குற்றம். ஓ-எதிர்மறை.

௬௮. கொற்றவர் - அரசர். ஞானசரிதர் - ஞானவொழுக்கத்தை யுடையவர். நன்மை தீமையென்பன-ஈண்டுயர்வுதாழ்வைக்குறித்தன.

௬௯. வேய்-மூங்கில். பரவை - கடல் ஒருவயின்-ஓரிடம; அதரும்பமென்க. உயர்ந்தோரை அடிகளெனக் கூறுதல்மரபாதலால் ஈண்டு அடிகளென்றது கிருபாசாரியனை; திருவிளையாடற்புராணம் இந்திரன்பழிதீர்த்த படலத்தில் "அடிகணீர்மறுதலொன்று" எனக்கூறுதலும், அருச்சுனன்றீர்த்தயாத்திரைச் சருககம் ௫௭-ஆங்கவியிலுங்காண்க. சரம் - நாணற்புல் நீருமாம். கிருபாசாரியன் பிறந்ததனை இந்தச்சருக்கம் ௯-ஆஞ்செய்யுளுரையிறகாண்க. முருகவேள்கங்கைநீரிற் சரவணப்பொய்கையிலுற்பவித்ததனைக் கந்தபுராணத்திற்காண்க. அ௫-ஆஞ்செய்யுளிலுங்காண்க.

௭0. ஏனையிழிவினோடொன்றி நின்றவாடகத்தையோடவைக்குமாறுபோல் - மற்றையிழிவுடையனவாகியலோகங்களோடு கலந்திருந்த பொன்னை (அவைகெட)ப்புடம் வைக்குமாறுபோல. இழிவு-ஆகுபெயர். ஓடவைத்தல்-மாற்றுயரப்புடமிடுதல்; ஓடவிட்டபொன்னெனவழங்குதலாலறிக. ஆங்கம்-அங்கதேசம்.

௭௧. அரிமுகஞ்செய்தாள்சுமந்ததவிசு-சிங்கமுகஞ்செய்யப்பட்ட கால்களாற்சுமந்த ஆசனம். படையினன் - ஈண்டுக்கன்னன். வாருசிகரமீதுமண்டலமிருத்தினன்எனவேபுயமலையிற் பூபாரந்தாங்கவைத்தானென்பது கருத்தாயிற்று. தாங்கல் தோள்வலியாற்றுஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்தாளுதல்.

௭௨. செல்வத்தாற்றுரியோதனனும் வலிமையாற்கன்னனுஞ் சிறந்தமைவிளங்குதற்குத் தனதனையுஞ்சிவனையுமுவமை கூறினனென்க.

௭௩. யானம் - வாகனம். ஆயுதம், யானம் அவற்றின்றொழிலை யுணர்த்தலால்ஆகுபெயர்.

௭௪. வம்மின்-வாருங்கள். தம்மின்-தாருங்கள். எம்மினன் - எமதுபகைவன். ஏ - அசை. இனன்-இடைக்குறை.

௭௫. கனன்று-(யாகசேனன்மேற்)கோபங்கொண்டு. அங்கநாலு - ரதகசதுரகபதாதிகள். தெவ்-பகை; ஆகுபெயராய்ப்பகைவனை யுணர்த்திற்று.

௭௬. மொய்ம்பு-வலி. மூனை-யுத்தம். அனீகினி-சேனை. துவனி-ஒலி. விருதர்-வீரர். ஒளி நீட்டல்விகாரமாயிற்று; ஒளி ஒழுங்குமாம்.

௭௭. உளைத்து - கொர்ச்சித்து. கமுழை - குகை. உடன்ற-கோபித்த. மோகம் - ஆசை. கொடுத்தற்குடன்பட்டபூமியைக்கொடாமலதிலாசையுள்ளான் என்பது விளங்கமோகயாகசேனனென்றார்.

௭௮. சோமகர்-பாஞ்சாலர். சமர் - யுத்தம். கூர-மிக. பூமகன்-பிரமன்.

௭௯. தூறு - கூட்டம். வீறு - பெருமை. மன்விலங்கர்-மன்னாகிய விலங்கு. மன் - ஈண்டு யாகசேனன். விலங்கு விலங்கர் எனவிகுதி போலியாய்நின்றது. ஈடுபட்டது - வலியழிந்தது, அகப்பட்டதென்பதாம்.

௮௰. தகவுபடும்என்றது தகப்படும்என்றாயிற்று. பிணித்து-கட்டி. வாள் - ஈண்டு ஆயுதம் என்னும்பொருள்பட நின்றதென்க.

௮௧. முறுவல்-நகை. உறுவது - சம்பவிப்பது. மூன்றாமடியில், உம்மைமுன்னது இழிவுசிறப்பு பின்னதுயர்வுசிறப்பு. ஏ - அசை. ஓ- எதிர்மறை. என்மேற்றவறில்லை யென்பான் மறுவிலந்தணாளனென்றான்.

௮௨. வரைந்து - பிரித்து. சாபமுனியும் உதவினான் எனமுடிக்க. மற்று-பிறிதுஎன்னும் பொருள்படவந்தது; அசைநிலையுமாம். மூன்றாமடியிற்கூறியது புகழ்வதுபோலப்பழித்ததென்க.

௮௩. புயங்கம்-பாம்பு. சுருதிவாய்மை-வேதவாக்கு, வேதம்போலப்பொய்யாதவாக்கு. குருக்கள் - குருகுலத்தவர் உயங்குதல் - வருந்தல் அநிக்கு அவலம்பற்றிவந்தது.

௮௪. மறுகு - வீதி. பணிலம் - சங்கு. நாடுடையான் - ஈண்டுயாகசேனன். தறுகண்-வன்கண்மை. முறுகிப்புரிதல் - திருகிவளைதல், இதுகோட்டைவிசேடித்தது. வெம்மை கலையை விசேடித்தது. ஏ-பிரிநிலை. மகவைத்தோற்றுவிக்கும்யாகத்திற்கைவந்தவராதலாற் கலைக்கோட்டு முனிவரையீண்டுவமை கூறினாரென்க.

௮௫. நதி - ஈண்டுக்கங்கை. கோவின்வழக்கப்பெருவேள்வி-அரசர்க்குரிய வழக்கமாகிய பெரியஅசுவமேதயாகம் இதிற்புத்திரகாமேஷ்டியைச்செய்வதுண்டு. இராமாயணம் பாலகாண்டந் திருவவதாரப்படலத்திலறிக. மேன்மை-பெருமை.

௮௬. மிச்சில் - சேடம். விபுதர் - தேவர் இமைப்பு - இமைத்தல்; இது ஆகுபெயராயிமைப்பொழுதினையுணர்த்திற்று.

௮௭. வலயம்-வாருவலயம். வயம்-வீரம். குருளை - குட்டி. பொலங்குன்றின்புறத்து - பொன்மலையின்மேல். தலைவன் - ஈண்டியாகசேனன். தலைபடுதல்-நேர்படுதல்.

௮௮. அருணம்-சிவப்பு. செவ்வி - அழகு. வீரோதயன்-வடநான்முடிப்பு. அடுக்கு - மிகுதிகுறித்தது. தோறும - காலப்பன்மைபற்றி வந்தது.

௮௯. சங்கச்சங்கம்-கூட்டமாகியசங்குகள். சோமகன்-ஈண்டுயாகசேனன். சயந்தன் - இந்திரன்மகன். ஆர்வம்-அன்பு. எண்டிசையுமலினமின்றிவிளங்குதல் மங்கலமென்க.

௯௰. சுருவை-நெய்த்துடுப்பு. புறம் - ஏழனுருபு.

௯௧. ஒருத்திஎன்றதுசீதையை. வாமனுதற்கண்-சிவபிரானதுநெற்றிக்கண்ணாகியவக்கினி எண்-ஆலோசனை. அம்மா-வியப்பிடைச்சொல் கொல்-அசை.

௯௨. முரண்-வலி. ஆங்கு-அசை-

௯௩. கரணம்-அந்தக்கரணம். அரணி-தீக்கடைகோல் செகுத்தல்-கெடுத்தல். அபமா-வியப்பிடைச்சொல். வினைப்பயனைமறுத்தல் கூடாதெனவறிந்தளித்தானென்க. இதுவேற்றுபொருள்வைப்பணி.

௯௪. அமைந்த என்னும் பன்மைவினைமுற்றினீறுதொக்கது. அமைந்த எனவினையெச்சமாக்கில் முற்செய்யுளோடுபொருத்தமின்றென்க. இக்காலத்தில் வியாசமுனி பரிமளகந்தியைவணங்கித் துரியோதனாதிகளும் பாண்டவரும் போர்புரியப்போகின்றார் நீபாராதுன் மருகி மாருடன்றவஞ்செய்யென அவ்வாறே அவருடன்வனத்திற்போய்த்தவஞ்செய்து கதியடைந்தாள் என்பது முதனூற்கதை.

௯௫. பூதி-செல்வம். ஆதிபன் - தலைவன். அனங்கனை வென்றோன் என்றது வீடுமனை. உம்மை-எச்சம்.

௯௬. ஏ-பிரிநிலை. நிலக்கு-இதில் அத்துச்சாரியை குறைந்துநின்றது.

௯௭. குடைக்கும் முடிக்கும் இந்துவையும் ஆதபனையும் உவமானமாகக்கொள்க. தழீஇ - இச்செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக.

௯௮. மாழ்கி-மயங்கி. மன்மதி - அரசநீதி, மதி ஆகுபெயர். இலாதான்-முற்றெச்சம்.

௯௯. மன்பதை - மக்கட்கூட்டம். அநுசர்-தம்பியர். ஏ-பிரிநிலை. எந்தாய்-விளி. அன்பது இதில் அதுபகுதிப்பொருள்விகுதி. அம்ம - இரக்கத்தின்கட்குறிப்பு. ஐ-சாரியை.

௱. எம்பி-என்றம்பி. ஆல்-அசை. ஏ-தேற்றம். ஓ - எதிர்மறை. தன்புதல்வனை ஐயா என்றது உவப்பினான்வந்தமரபுவழுவமைதி

௱௧. வாய்மை - வாக்கு. ஆதிபர் - தலைவர். வேத்து - விகாரம்.

௱௨. உகவை-மகிழ்ச்சி. முகமுகுரம்புரைமுதல் - திருதராட்டிரன். சம்பவச்சருக்கம்

௱௰௩-ஆஞ்செய்யுளிற்காண்க. உண்டு - பொது வினைக்குறிப்புமுற்று. மூதல்என்னும் பண்பு பண்பியையுணர்த்தியது.

௱௩. பேதகன் - கருத்துவேறுபட்டவன். மருள்-மயக்கம். ஏ-ஆசை. மொழிக்கு இதில் நான்காவது கருவிப்பொருளில்வந்தது.

௱௪. இங்ஙன்-இவ்விடத்தில்.

௱௫. ஒன்ருது-இணங்காமல். திறல்-வலி. ஒருதிறல் இருதிறன்மைந்தரும் எனக்கூட்டினுமாம்.

௱௬. தெம்முறை - பகைமுறைமை. மதி-அரசனேமதிப்பாய். இனியவர்மதியாகுவது தம்மதியே - இனிமேலவர்கட்குப்புத்தியாவது தங்கள்புத்தியேவேறில்லை. ஏ - முன்னது அசை. பின்னிரண்டுந்தேற்றம்.

௱௭. பொதுமை - நடுவுநிலைமை. புரோசனன் இப்பொழுது துரியோதனன்வழிப்பட்டுப் பாண்டவர்களுக்குத்தீங்குபுரியத் துணிந்தமையாற் பொதுமையிலாதபுரோசனனென்ருர்.

௱௮. தனிவயின்-தனியிடம். புரிந்து - விருமபி. மற்று-அசை.

௱௯. வாரணவதம்-காசி. புகழ்வது, நண்ணும் இவைகளிற்படுவிகுதி தொக்குநின்றன.

௱௰. ஒன்றுபட்டு-மனமொருப்பட்டு.

௱௰௧. பின்னிரண்டடிக்கு - பார்த்தவர்கள் அமராவதியைக் கற்பகச்சோலை யொ ன் ரு லன்றி (ஏனையவற்ருல்) இதற்குத்தாழ்ந்ததென்றுசொல்ல என்க.

௱௰௨. காவலன்-ஈண்டுத்திருதராட்டிரன். ஆங்கு-அசை. புறம்-ஏழனுருபு.

௱௰௩. செற்று-கொல்வித்து. செய்து-செய்வித்து எனப்பிறவினையாக்குக.

௱௰௪. என்னவும் - எவைகளையும். என்ப-அசை தலைமைபற்றி இளவரசைக்கூறவே ஏனைநால்வருந் தாயுமுடன்சென்ரு ரென்பது தாமேபோதருமென்க.

௱௰௫. ஆரம்-பதக்கம், சந்தனமுமாம். பூரணம்-நிறைந்தவறிவு.

௱௰௬. இஙஙனம்-எண்ணக்குறிப்பு.

௱௰௭. பாண்டவருக்குஅகத்திற்கேடுசூழ்கின்ருனயினும் அதுதோன்ருவண்ணம் புறத்திலவர்க்குயிர்போலினியனு யொழுகுதலால் ஆவியன்னவமைச்சன் என்ருர்.

௱௰௮. பேது-மயக்கம். பின்னம் - வேற்றுமை.

௱௰௯. ஆலயம்-மாளிகை. விரகு-உபாயம். ஏ-தேற்றம. ஐ-சாரியை. சூழ்ச்சியும்பெரிது-(ஆதலால) இவன்கண் ஆராய்ச்சிமிகவிருக்கின்றது. வரும்பொழுதுதுரியோதனன் கரு[illegible] திற்கிசைந்து தன்வழியொழுகுஞ்சேனைகளை[illegible] தெரிந்துகொடுவந்தானுகலின் அச்சேனைகள்[illegible] புரோசனன்வழிப்பட்டிருந்தனவென்க. "தெ[illegible] மூதகையுள்ளும்படையொடுங்கும்" என்னுந்[illegible] ருக்குறளின் கருத்தை யீண்டுக் கூறினமை க[illegible] ண்க.

௱௨௰. சங்கை - ஐயம். கோடலம் - கொ[illegible] ளோம்; இதில் து சாரியை, அல் எதிர்மறை[illegible] யிடைநிலையென்க.

௱௨௧. சையம-மலை. பட்டதை-சம்பவித்[illegible] தை. ஐவருள்வீமன் சரீரவலியின்மிக்கானுயி[illegible] த்தலாலவனுக்கறிவித்தானென்க.

௱௨௨. நடுவுநிலையுடையனுதலில் விதுரனை அறன்வடிவாந்தந்தையென்ருன். யமனுடைய அவதாரத்தனுகியதந்தையெனப் பொருள்கே[illegible] டல் ஈண்டுஅத்துணைச்சிறப்பின்று.

௱௨௩. இப்படியனுல் - இந்தத்தன்மையின[illegible] ல். தொழிற்பயன்என்றது பாண்டவர்ஐவரு[illegible] துள்ளிருந்திறத்தலை. கோட்டுதல்-ஈண்டுச்செ[illegible] ய்தல. முழை-குகை.

௱௨௪. ஊறு-தீங்கு. பிறரறியில்அதுவாய[illegible] லாகபபின்னுந் தீங்குநிகழுமென்பான் திருவுள[illegible] த்தடக்கியென்ருன்.

௱௨௫. பிச்சர்-பித்தர். இவன்-புரோசனன். அமமனை - அக்கினி; நீர்பிறத்தற்கிடமாயுள்ள[illegible] து என்றபடி. பித்தம்-பிச்சமென்ருயிற்று. பி[illegible] தம் - இனம். கொடையின்மிகுதிவிளங்கப்பிச்[illegible] ரிற்கொடுத்தென்ருர். கொல்-ஐயம்.

௱௨௬. விடவி-மரங்கள். நடந்தார் - ஒழு[illegible] ஞர். புடவி-பூமி. குளிருமா இதுஈறுகுறைந்த[illegible] நின்றது. புடவி-ஆகுபெயர்.

௱௨௭. பாந்தள்-பாம்பு. மந்திரம் - ஆலோ[illegible] னை. காந்துநெஞ்சு-அழலுகின்றமனம். கைவ[illegible] டார்-நீங்காதவராய். பாம்போடொருமனைவயி[illegible] பயில்பவர் அது எஙஙனமாயினுங் கேடுபயக்[illegible] மென்றச்சத்தோடு தம்மைககாத்தொழுகிப் [illegible] யிலுமாறுபோல் இவருந்தீயபுரோசனனோட[illegible] னமபயின்ருரென்பார் பாந்தளொடொரு[illegible] னைவயிற் பயில்பவர்போல என்ருர்.

௱௨௮. உசாவி-விசாரித்து. பாங்கர்-பக்க[illegible] தில். அனையாகியபள்ளிஎன்க. பாங்கர் இறு[illegible] படபோலி. புரோசனனையருகிற் பள்ளிகொள்[illegible] வெனின் அவனையுமவினைக்கருதி அவன[illegible] ம்தருந்தபடி அரசி . ஒசாவினுரென்க.

௱௨௯. அற்றம் - சமயம். தாதைநண்பன்[illegible] காற்றின்சகாயனுகிய அக்கினி.

௱௩௰. முளிகழை-காய்ந்தமூங்கில். புரிசை

மதில். கோயில்-அரசமாளிகை.

௱௬௧. தொக்க-பொருந்திய. பொக்கெனல்-விரைவுக்குறிப்பு. ஊர்-திரிபுரம். மூவர்-சுதன்மன், சுசீலன், சுபுத்தி ; இம்மூவருந்திரிபுரத்தி லெரியாது தப்பியவர். காஞ்சிப்புராணம் முப்புராரிகோட்டப் படலத்திலறிக. ஆங்கு-அசை.

௱௬௨. புரிந்த-(அமராளிகையையுண்ண) விரும்பிய. பாவகன்-அக்கினி. மீண்டும் என்பதிலும்மை எச்சம். கண்டோர்-வேடரைவருந் தாயுமெரிந்துகிடந்தமை கண்டோரென்க.

௱௬௩. விடமிட-(துரியோதனனேவற்படி பாண்டவருக்கு) நஞ்சிடவென்க. பாண்டவருக்குவிஷங்கலந்ததேனைக்கொடுக்க வேடரைவரும் அவர்தாயுந் துரியோதனனேவற்படிவந்திருந்தார் என்பது முதனூற் கதை.

௱௬௪. போது-சூரியன். மாது-அழகு. ஏதுபட்டன - என்னபாடுபட்டன, அதிகவருத்தமுற்றன என்பது கருத்து. பட்டு - பட. புகுந்து-புக எனச்செயவெனெச்சமாக்குக.

௱௬௫. கொட்பு-சுழற்சி. குருக்கள்-குருகுலத்தவர். துட்பதம்-தீதாகியவியாசம். பெட்புற-ஆசையிக. பாண்டவரிறந்தமைகேட்ட துரியோதனுதியர் நடிபபுமாத்திரையாகக் காட்டிய செயற்கைத்தன்பம்புறத்தும் இயற்கைமகிழ்ச்சிபகத்து முடையரானமையின், மூன்றுமடியிலங்கனமுவமைகூறினர்.

௱௬௬. பொன்னலங்கொள - புறத்தே பொன்னினழகுகொள்ள. மருச்சுதன் - வீமன். சுடுவான் எண்ணினுன் எனக்கூட்டுக என்னவாண்மைகொல்-இஃதென்ன வாண்டன்மையோ என்க. ஏ-முன்னதுவினு. கொல்-ஐயம். ஓ-எதிர்மறை. மருச்சகன்-காற்றின்சகாயன்.

# வேத்திரகீயச் சருக்கம்.

௧. பூதநாயகன் - உயிர்களுக்குத் தலைவன். போதகாதிபன் - கசேந்திரனென்னும் யானை. பொறை-வலி.

௨. தொக்கு-கூடி. குகரம்-ஈண்டுநிலவறை கதி-வேகம். சாரல்-பக்கம். தாய் துணைவாதலைகளுந் தன்றலையும் விளங்கலாற் பலதலையாயி னவென்க.

௩. நள்ளியாமம்-நடுயாமத்தில். திமிரம்-இருள். வன்னம்-வனமென்றாயிற்று

௪. இராவணி-இந்திரசித்து. மெய்க்கந்தம்-சரீரவாசனை. மாயமும் வீரமுமுடையனுதலின் இராவணியை யுவமைகூறினுனென்க.

௫. மலைதல் - யுத்தஞ்செய்தல். கொம்மை-வட்டம். கூறுகிற்பது-பிறர்க்குச் சொல்லுதற்கு. இறுதி-(என்கருத்தின்) முடிவென்க. அம்ம, ஏ, கொல், ஆம் - அசைகள். பெண்கள் தாமுறுகாமத்தன்மைதாங்களே ஆடவர்க்குரையாமை அவரியல்பென்க.

௭. நிற்க - கொல்லுதற்காயத்தமாய நிற்க. ஓடி-அதற்குமுன்னுகவ்வாடி செகுத்திடு-நீங்குவான். அம்பரம்-ஆகாயம். இரக்கமின்றி வருத்துதலான் மாரனை நிருதனென்றாள்.

௮. ஆண்மைபோதுமோ - ஆண்மைக்குத்தகுமோ என நான்காவது விரித்துரைக்க.

௯. நவை - குற்றம். நீர்மையான்-முற்றெச்சமாய் வருநகவியிலியையும்

௰. இடிபடுத்து-இடியையுண்டாக்கி. நெடில்-மூங்கில். வானுற நிமிர்ந்தமையாற் கானமெங்கணு நிழலுண்டாயிற்றென்க. நீர்மையனுய்ப் புகைந்து சிரித்து வாயினுற் நிமிர்ந்து வானுய்க் கூவிக் குறுகினுனென்க. நெடிபடுத்த என்பது பாடமாயின் நெடி-சீள்வண்டென்க

௰௧. கந்தல்வாணர் - நிசிசரர். அணவுதல்-பொருந்துதல். பிணவு-பெண். கலை-கலைமான். பேதை-அண்மைவிளி

௰௨. வார்-நேர்மை, ஈண்டு முறைமையை யுணர்த்திற்று ; அடா-சுறுத்தாக்க பெயரெச்சம். யாதுதானர் - இராக்கதர்.

௰௩. வென்றி - வெற்றி, நல்குமா என்பது கடைக்குறையாயிற்று. விந்தை - வீரலக்குமி.

௰௪. குணபவல்சி - பிணத்தையுணவாகவுடைய இடிம்பன். முனைந்து-பொருது. தத்தினர்-பாய்ந்தவராகி. அம்புதம்-மேகம். உரும்-இடி. அடுக்கு மிகுதிபற்றிவந்தது.

௰௫. செம்புணீர்-இரத்தம். கேதம்-துன்பம். கோதவாய்மை-குற்றமுடையவாக்கு. ஆடகன் இரணியன். பின்னை-இலக்குமி இடிம்பன்றங் கையுமாம். முன்னுற-முன்னாக நிற்க.

௰௭. தமையனிறந்தமையால் வருத்தமும் இனி வீமனைச் சேரலாமென்பதனான் மகிழ்ச் சியுமுற்றாளாதலால் உளைவுட னுவகையுமென் றார். உளைவு-வருத்தம்.

௰௮. மங்கலஞ்செய்தற்குரிய திசையான தால் அருந்திசையென்றார். இது பெயர் பொ ருட்டற்குறிப்பேற்றவணி.

௰௯. சூரியனைக்குறிக்குங்கால், கரம் - கிர ணம். நிசாசரவிருள்-இரவிற் சஞ்சரிக்கு மிருள். வனம் - நீர். தாமரைமுகம் - தாமரை மலர்களின் முகம் என்க. வீமனைக்குறிக்குங் கால, இராக்கதனாகியவிருள், காடு, தாமரை மலரைபபோன்றமுகமஎன்க. வரம்-மேன்மை.

௨௰. எண்டருகவர்மனம் - யோசனைமிக்க கவர்தத மனம். மணம்புணர்வாளோழிவாளோ என விருபகுதிப் படநினைத்தலாற் கவர்மன மென்றார். காணலன்-பகைவன்.

௨௧. காய்ந்தமை-(சூர்ப்பநகி மணஞ்செய வேண்டியபோது அம்மணத்தை) வெறுத்த மையை என்க. காய்ந்தமை என்பதற்கு அவளை மூக்குமுலையுமரிந்தமை யென்பாருமுளர்.

௨௨. அனிலன் காதலன் - வாயுகுமாரன். கட்டுரை-உறுதிமொழி. ஓசை-கீர்த்தி. உசாவி- ஆய்ந்து. ஏசு - குற்றம். விரும்பிய கன்னிகை யைய மறுத்தல் ஆடவர்கருக் குற்றமாதலின் அது நீஙகவுரைத்தாளென்பார் ஏசறவுரைத் தாளென்றாரென்க.

௨௩. கறுத்தவர்-பகைவர். வேண்டும், தகும் என்பன தொழிற்பெயர், தேற்றப் பொருடந் தனவென்க.

௨௬. மூந்துறலைகி எனக்கூட்டுக. மன னுற-மனம்பொருந்த.

௨௭. தமபடர் - தங்களுடைய வருத்தம். இமையவன்-தேவனாகிய வியாதமுனி.

௨௯. கொடிமந்தரம்-லதாக்கிரகம். கந்தரு வப் புணர்ச்சியாதலின் மேன்மணம் என்று ரென்க.

௩௧. காதியதிறல்-பகைவரை யழித்தவலி. ஆதிவெங்கோலம் - திருமாலாகிய வெவ்விய வராகம். திருமால் வராகரூபங்கொண்டபொ ழுது தன்னைக்கண்டுமயங்கிய பூமிதேவியைப் புணர்ந்த நரகாசுரனைப்பெற்றார் என்னுங்கதை யுண்மையறிக. பின் அந்நரகாசுரன் செய்தீங்கி னலவனைக் கொன்றாரென்றுங்கதையுமுண்டு.

௩௨. நிறை - ஆடவர்க்குரிய குண நான்கி னொன்று. பிறையெயிறு-பிறைபோன்ற வக் கிரதந்தம். பணிவிடை-உம்மைத்தொகை. ஐவ ரையுநோக்கித் தந்தையர் நீர் என்றான். தந்தை யைநோக்கி யிறைவவென்றான்; வேறுமுடிவு கோடலிற் பால்வழுவின்றென்க.

௩௩. முனிவர் - ஈண்டுப் பிராமணர். காத் திரம்-வடிவம்.

௩௪. அதிதியர்-விருந்தினர். முந்துபு-முந்தி. ஆதிதேயர் - விருந்தினரையுபசரிப்போர். அடு க்கு உவகைபற்றிவந்தது.

௩௫. மன்மனை - அரசமாளிகை. தருமன் தன்மன் என்றாயிற்று. அம்மனை தாய்.

௩௬. அருநெறிக்கடவுளர் - அரிய வழிப் போகினாராகிய பூசுரர். முறைபபடி-உபசரி க்குமுறைபபடி. தன்மை-இயல்பு. அமிழ்தம், அமுது என்பன உணவினைக்குறித்தன.

௩௮. வனசரிதர்-வனத்திற் சஞ்சரிப்பவர் கள. பொலிவு-அழகு. கொடுமை-வருங்கவியிற் கூறும் பகனல்வந்த கொடுமை இறையும் - கணப்பொழுதும். அறல்-நீர். இனைதல்-வருந் தல்.

௩௯. குறைய-சோர்வடைய. குறையவுரை செய்குவளெனக்கூட்டுக. மூரண்-வலி. தறு கண் - அஞ்சாமை. மூகன், வனன் என்பன இறுதிப்போலி. மூகன்-இருமடியாகு பெயரா ய்க்கண்ணோட்டத்தையுணர்த்திற்று.

௪௰. சரிதம்-ஒழுக்கம். பொறி-அடையாளம் உடல்முழுதும் என்னு முற்றும்மை விகாரத் தாற்றொக்கது கடையடி இல்பொருளுவமை.

௪௧. மன்ற - நிச்சயமாக. மறுகிடை-வீதி யில். செங்கையார்-முற்றெச்சம்.

௪௨. விஞ்சையோர்குன்றம - விஞ்சையரி ருத்தற்குரியவெள்ளிமலை, கைலையன்றென்க. அடிசில் - சோறு. அடுக்குப்பன்மை குறித்து நின்றது.

௪௩. இறை-சிறிது. பலி-நரபலி. எஞ்சுற- குறைய. தஞ்சம் - ஈண்டுத்துணை. அந்தணர் வேண்டுகோட்கிரங்கி அங்ஙனமுடன்பட்டமை யின் இறையன்பினொடு என்றார்.

௪௪. சர்மன் சன்மன் என நின்றது; சர் மன் பிராமணனுக்குரிய பெயர். குலமுதல் - வமிசத்துக்கு மூலமாயுள்ளவன். அன்னை என் பது முறைப்பெயர்பற்றிய வழுவமைதி.

௪௬. அலமரல்-மனஞ்சுழலற்க. குவ்வின்- பூமியில். சுதர்-புதல்வர். அவ்வியம்-பொறாமை. செவ்வியோர் - நடுநிலைமையர். இவ்விவரில் - இந்தக்குணங்களையுடைய இவர்க்குள். பௌ

வம்-கடல். பைதல்-துன்பம்.

சஎ. மறலி - இயமன். மகவு - ஈண்டுமார்க் கண்டேயர். செனக சென்னியர்-தாய்தந்தை யர். தவம் தவன்எனப்போலியாயிற்று தவனி-ஈண்டமூகையொலி.

சஅ. விடலை - ஈண்டு வீமன். தம்பண்டி - தங்கள் வயிறு. ஒருபண்டிகெழுமியபண்டம் - ஒருபண்டியில் அவ்வுணவுப்பொருள்கள் நிறைந்தன. அடையடுத்தமலைகள் பலபொருளுவமை.

சகூ. வைகலுடன் - உதையகாலத்தில்; உடன் என்பதனை எழனுருபாகத்திரித்துரைக்க. ஐயை-தாயாகிய குந்தியென்க ஒய்யென் விரைவு-மிகவிரைவு என்க. மெய்யை-தன்னுடம்பை. மொய்-ஈண்டு மிகுதியை யுணர்த்தியது. தெளிவுபற்றிப் பெய்த குருதிஎன இறந்தகாலத்தாற்கூறினுரென்க.

ருய. நெற்றிமிசை - அப்பண்டியின் முற்பக்கத்தில். அரி-சிங்கம். துற்றபலகறிசெற்றிய மலைசெய்துப்பு-குவிந்த பலகறிகள் நெருங்கிய மலைபோலச் செய்யப்பட்டவுணவாகிய அன்னம். சகடு எனச்சந்தவின்பநோக்கியிரட்டாது நின்றது. அடுக்கு மிகுதிகுறித்து நின்றது. உய்க்கக்கட்டினுனென இயைக்க. உய்க்க உய்க்கும்படி.

ருக. பரிதி - சூரியன். முனிகுலம் - பிராமணர்கள் கூட்டம். பேயிரதம-கானல். அடுக்கு ஒருதொழில் பலகாணிகழ்தல்பற்றிவந்தது ருஉ ருரு, ருசு,-ஆங்கவிகளினும் அடுக்குகள் இவ்வாறே வந்தனவென்க.

ருஉ. களிந்த வெற்பு-களிந்தமலை. நதிகாளிந்தியென்க. கழிமுழை - பெரிய முழைஞ்சு. முளிந்து - காய்ந்து. புகைமுகன் - சினக்குறிப்புண்டாகின்ற முகம். புகைதல்-சினக்குறிப்பு. பலிவருந்திசையைநோக்கி நின்றமையால்விழிநிரைத்தென்றூர்.

ருங. விகங்கம்-பறவை. மேவர - விருப்பமுண்டாக. சம்புகம் - நரி. அல்லல் - துன்பம். உடற்றிறல் - கொன்றல். வல்சி - அன்னம். இச்சையான் - முற்றெச்சம். இவனுண்டெஞ்சிய புலாலைப் புசிக்குமாறு சூழ்ந்தனவயிட்டன வென்பார் துதிசொல்லவென்றும், இயைந்த எதிரிவாய்த்தமையின் உகந்தென்றுங்கூறினர்.

ருச. வாரி - கடல். ஆர் - அருமை. பின்-அருந்தியவதன்பின்பு. பண்டியில் முன்பின்னுக மாறியிருந்துண்கின்றமையின் பகன் வீமனுக்குப்பின்னுகவெய்தினுனென்க.

ருரு. விடக்கு-தசை. பூழை-பூனை. எளிமை-நீகருதிய எனதுஎளிமைத்தன்மை. பனை-பருமை.

ருசு. முட்டிகள். முட்டியாகப்பிடித்தகைக் கைக்குத்துகளை யுணர்த்தலால் ஆகுபெயர். போவது-தொழிற்பெயர்.

ருஎ. சுவடு-அடையாளம். அர்க்கன்-சூரியன். ஒத்து என்றதன்பின் உக்கிரங்கொண்டு என வருவித்துரைக்க. இவனோடுத்தரித்து-இப்பகனோடு தருக்கித்து. ஒட்டினன்-போர்க்குடன்பட்டவனுகி. கச்சகத்து - கைப்பான பயனில்வார்த்தை. உத்தரித்துரை செய்தல் என்பது ஒருசொன்னீர்மையாய் விடைகூறுதலை யுணர்த்திற்றென்பர். அடுக்கு மிகுதிகுறித்தது. கச்சஎன்பது போலி.

ருஅ. சரணபற்பன் - பாததாமரையுடையனுகிய வீமனென்க. உடல-போர்செய்ய. வட்டம்-மண்டலம். ஒட்டி - கலந்து. மற்றொழிற்செரு-மற்றொழிலாகிய யுத்தம். மட்டியா-மட்டித்து. முட்டியுத்தம் - முட்டிப்போர்; அது கைவிரல்களைமடக்கிக் குத்தும்போர். பத்மம் பற்பம் எனத்தற்பவமாயிற்று. நிற்பதுஎன்னுந் தொழிற்பெயர் ஈறுகெட்டு நின்றது. அடுக்குகள் மிகுதிபற்றி வந்தன.

சுய. பிணங்க-பின்ன. மூன்றமடியில் இட்டு என்பதற்குச் சேர்த்து என்றும், நான்காமடியில் இட்டு என்பதற்கு எறிந்து என்றும் பொருள்கொள்க. இகலி-மாறுபட்டு.

சுஉ. விழுத்திமார்பின்மண்டியிட்டுஎனக்கூட்டுக. மண்டியிடுதல்-இருகான்மடக்கிநிற்றல்.

சுங. அரி-அக்கினி. மோகரித்து - கோபித்து. அவுணர் - மந்தேகர் என்னுமசுரர்கள். தடிந்து-வதைத்து.

சுச. மணி-அழகு. எடுப்ப - நகருள்ளாரெடுப்ப. தவம் - ஈண்டு இல்லறதருமவிரதங்கள்.

சுரு. சமரமொய்ம்பன - யுத்தவலியுடைய வீமன். கொல்-ஐயம். துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்தமையான் மால்கொலென்றுரென்க.



# திரௌபதி மாலையிட்ட சருக்கம்.

க. பங்கம்-குற்றம். மாழ்க-வருந்த. துங்கம்-உயர்ச்சி. துருபதன்-யாகசேனன். சூழ்ந்தது-எண்ணிச்செய்தது.

உ. வான்மொழி-அசரீரி. தேசிகன் - தன் குருவாகிய உலூகமுனியென்பர். உரத்தினர் ஈண்டுப்பாண்டவரென்க. தேசிகனுரைத்தவாறுவது பாண்டவரிறந்திலரென்பது.

௩. தான்வரித்தவற்கு - தானாக வேண்டுமென்று நியமித்தவனுக்கு. தனையை - புத்திரி. கான்-வாசனை. வரி - இராக. உண்-(தேனை) யுண்கின்ற. வரி - செவ்வரி. தேன்வரித்தல்-வண்டுகள்நியமித்தல். சேனையென்ற தற்கியையத்திரண்டதுவென்றுர்.

௪. பாங்கு - அழகு. தாங்கு - முதனிலைத் தொழிற்பெயர். மனத்தேர்-மனமாகியவிரதம்.

௫. சாரம்-இனிமை. தந்திரம்-நூலறிவையுணர்த்தலால் ஆகுபெயர். நீரதநெறி - நீரற்ற வழி. அதம்-கேடு. இன், ஆல் அசைகள்.

௬. முந்த - முன்னாக. வாழ்வு - வாழ்வை. சுணங்கு-தேமல். தொடையல்-மாலை. கொள்வான-வினையெச்சம்.

எ. எய்தும் - அடையுங்கள். தோற்றுதலாண்மை - சுயவடிவத்தோடு தோன்றுதலாண்டன்மை. மைப்புறப்பார்த்தன்-கரியசரீரத்தையுடையவருச்சுனன். மணி-அழகு

அ. குத்திரம்-வஞ்சகம். விஞ்சைவேந்தன் பெயர் சித்திராங்கதன். தீயத்திரம் - அக்கினியஸ்திரம். இருந்தை-கரி. அமமா-அசை, வியப்பிடைச்சொல்லுமாம.

௯. புலர்ந்தன-ஈண்டுநீங்கினவென்க. புள்-பறவை. மா - விலங்கு. குருகு - ஈண்டுச்சேவலென்க.

௰. அடுக்கு - உவகைபற்றிவந்தது. போலும் - ஒப்பில்போலி. உதவ-(என்பதற்குஎன் நண்பன்மகளை மணம்புரிந்து) உதவிசெய்ய என்க.

௰௧. வெறி-தேன். மூளரிமொக்குள்-தாமரையரும்பு. பொறி - புள்ளி. வரி - இராகம். நிமித்தம் - சகுனம். இங்ஙனமேநாமுந் திரௌபதியின்போகத்தை அனுபவிப்போமென மனத்தில்நிச்சயித்துச் சென்றுரென்க.

௰௨. துறை-நீர்த்துறை. உறை-நீர். வென்று-அம்மீன்களைவென்று. ஆங்கு, ஏ-அசை. திரௌபதியைக்கருதி பலவரசர் வந்திருந்து அவர்கணம்மாற்றுல்வியடையநாமே அவளைக்கைக்கொள்வோமென்பதனை இக்குறிப்பினுலறிந்துவகை கூர்ந்தாரென்க.

௰௩. மாக்குரல் - வண்டுகளினேசை. இவ்வாறன்றிமா-கருமை. குரலளகம் ஒருபொருட்பன்மொழியெனினுமாம். வம்மின்-வாருங்கள். கூக்குரல் - கூவுகின்றசத்தத்தால். விளிப்ப - அழைப்பன. இதுபெயர் பொருட்டற்குறிப்பேறறம்

௰௪. வாரணமாயை-மறைப்பினைசெய்யுமாயை. ஆரவம்-ஒலி.

௰௫. மங்கலமுழவம்-மணமுரசம். எல்லாத்தானை-நால்வகைச்சேனை. இராசமண்டலம் - இராசகூட்டம் என்க.

௰௬. தொடங்கல், வளர்தல், மடங்கல் இம்மூன்று முறையே சிருட்டி திதி சங்காரங்களைக்குறித்தன. இந்நகர்யாவரையும் எல்லாப்பொருளையுமடக்கியிருத்தலால் திருமாலுதரம் போன்றதென்றுர்.

௨௰. மழைப்புறமாடம்-மேகத்தைப்புறத்தேயுடையமாடம். இதில் அல்பொருட்டற்குறிப்பேற்றவணிகாண்க.

௨௧. விதானம்-மேற்கட்டி. குலாலன்-குயவன். வீரமுடையமன்னர் பிராமணர்வடிவங்கொண்டமையாலிவ்வுவமானங்கூறினர் பிராமணர் குயவர்மனையிற்றங்கலாமென்பது நூல்வழக்கு.

௨௨. எதுகைநோக்கித் தூங்கணங்குரீஇ எனமெலித்தலாயிற்று, இன்னுருபு ஒப்புப்பொருட்டு.

௨௩. ஆதியில்-முற்பிறப்பில். விதியினுல்-சிவபிரானியமித்த நியதியினுல் உலப்பு-ஒழிவு ஐவர்-தொகைக்குறிப்பு

௨௪. வைகல் - நாள். தீட்டிய - எழுதிய. கோட்டிய-வளைத்த. கோலம்-அருச்சுனன்வடிவக்கோலம்.

௨௫. மீண்டு - திரும்ப. தன்பிதாஅருச்சுனன்வெற்றியை வியந்துபிரியத்தால் மணஞ்செய்துகொடுக்க வுடன்பட்டமையால் அன்பினுலென்றுள். ஏ-தேற்றம்

௨௬. சேண்புனல்-தூரதேசங்களிலிருந்து வந்ததீர்த்தங்கள்.

௨௮. பாவை - ஆகுபெயர். பாவம் - அபிப்பிராயம்

௨௯. மங்குலில் - ஆகாயத்தில். அவர்என்றது பாண்டவரை; ஓ-வினா.

௩௧. சிலீமுகம் - பாணம். திரிகை-குலாலசக்கரம். இலைமுகம் - ஆர். எந்திரத்திகிரிநாப்பண்-யந்திரசக்கரத்தினடு.

௩௨. கதித்து-மேலெழுந்து. பரிவு-ஆசை. பிரிவுற்றார்-நீங்கினார்.

௩௪. திருந்து - திருந்துதல். இருந்தார் - பெருமையாகியமாலை. முருந்து - மயிலிறகடிக்குருத்து.

௩௫. இவனுக்குமாலைபுனையாமைவேண்டுமெனக்கருதிப் பொய்யேமலர்ந்த திருமுகத்தாஎன அவன்றீக்குணத்தை யெடுத்துக் கூறினாரென்க.

௩௬. கொடுமைவகிர்-கொடுமையின்பிளவு; இதுஇல்பொருளுவமை.

௩௭. உலைவந்து-வருந்தி. குலக்கலை-நல்லஆண்குரங்கு. கண்டாய்-முன்னிலையசை. முன்னிரண்டடியால் இவனும் மாதர்க்கு வேண்டியவற்றைத் தந்துவக்கச்செய்வன் என இறைச்சப் பொருடோன்றினும், அதுகருதிவிரும்பாதிருக்கவேண்டிப் பின்னிரண்டடியினும் அவன்றீக்குணங்களையெடுத்து கூறினாரென்க. நிலைவஞ்சனை - வொராலுமாற்றுதற்கரியவஞ்சனை.

௩௮. சிவானுக்கிரகத்தாலுற்பவித்தலாற்பிறப்பால்என்றார். படை - படைக்கலத்தொழில்; இதுஆகுபெயர். ஈசானன் - வடகீழ்த்திசைக்கிறைவன்.

௪௰. இராமன் - பலராமனென்க அலம் - கலப்பை. சலம்-கோபம். யமுனை - யமுனாநதி இதுகருங்நிறமுள்ளது. தானை - நீலவஸ்திரமென்க. முன்பலராமன் ஆயமகளிருடன் கிரீடைசெயக்கருதித் தூரத்திலிருந்த யமுனையைஅருகுவரவழைக்க அவ்வாறுவாராது பராமுகஞ்செய்தமையால் வெகுண்டுதன்கலப்பையாயுதத்தை அதிவிட்டுப்பிளந்தமையால் அலத்தான் முன்னம்பிளந்தபகை யென்றார்.

௪௧. இந்திரனுடைய அந்தரகாத்திலிருக்குங்கற்பகச் சோலையைத் தன்மனைவியரிருக்கும் அந்தப்புரத்திற்கொண்டுவந்து வைத்தமையைப்பின்னடியிற் கூறினாரென்க.

௪௨. கண்ணன்றன்னைக் கார்முகத்தையவமதித்துப் புன்சொற்கழறுந்திண்ணென் கருத்தான் எனக்கொண்டு கூட்டுக சேதி - சேதிநாடு. காண்-முன்னிலையசை. இச்சிசுபாலன் கண்ணனுக்கோரத்தை பிள்ளையெனவறிக.

௪௩. உமைடை-எச்சத்தொடு சிறப்பு. மதுராபுரி யமுனாநதிக்கரையிலுள்ளது, துவாரகை மேற்கடனடுவிலுள்ளது. இச்சராசந்தன்மலைக்கோட்டை சூழ்ந்த மகதசேதாதிபதி யென்க.

௪௪. பகடு-யானை. வினை-யுத்தம. முனைக்கண்-போர்முனையில். இவனையானைப்போரில்வல்லவனென்க. இவனகரம் சமுத்திரநடுவிலுள்ளது.

௪௫. சல்லியன்மத்திரதேசாதிபதியென்க. வீரசுவர்க்க மெற்றுதலால் இமையோராகுமென்றார். நீலன நகரம-மாகிஷ்டபுரி.

௪௬. அரசு என்னுஞ்சொற்கியையத் திரண்ட என அஃறிணையாக முடித்தார். மதன்பூவாளிக்கிலக்காகாதவரிலாபோல இவ்வரசர் வாளிக்கிலக்காகாதவரிலராதலின் மதனைக்கா கூறினார்.

௪௭. தவர் வில். சாயகம்-பாணம். பவரிற்செறிய நிரைத்துருளும் பல்வாய்ததிகிரி-கொடியாற் பொருந்த ஒழுங்காய் நிறுத்தப்பட்டுருளுகின்ற பல வாய்கள் பொருந்திய யந்திரசக்கரத்தில். வாய் சண்டுஆரின் வெளிகளென்க. பவர் கொடியென்பதனைப் புறநானூற்றுரையிற்காண்க. கமபரும் வேளவிபடலத்தில் "பவாசடையந்தணன்" என்றார். எழுந்திருந்து-என்பது ஒருசொல.

௪௮. கைத்தாயர்-செவிலித்தாயார். முகத்தாளை-முகத்தாளுக்கு.

௪௯. அனுவுருக்கொண்டு (அப்பார்ப்பனமாக்களை) யொத்தவுருவத்தைக் கொண்டு. அலாயுதன்-கலப்பையாயுதனாகியபலராமன.

௫௰. அகங்கரித்து - அகங்காரங்கொண்டு பனை-பருமை. அமையும்-இது போதும்.

௫௨. பூகசன்-பூமியிற்பிறந்தவன். சதன்-அடைந்தவன; ஈண்டுப்பிறந்தவன் என்க. மாகதன். மகததேயத்தனாகியவரசன். சராசந்தன் மகததேசங் கிரிவிரிசநகரையுடையது ஆதலால் அம்மகததேசம் வேறு இக் கவியிற்கூறிய மகததேசமும் வேறென்க. சராசந்தனை முற்கவியிற்கூறியதுகாண்க. ௰௯-ஆம்போர்ச்சருக்கம் ௧௰-ஆவதுகவியிற் கொங்குதேசத்தை யடுத்த மகதமுமுண்டெனக்கூறுதலுங் காண்க. வில்லின்மாபு-வில்லினடுவென்க. சாகதன் - வலியவன்.

௫௪. உரவு - வலி. இரவிகுலச்சிறுவன் - இராமன்.

௫௫. வின்மாபு - விற்குலம். கடையிற்கூறியவுவமையா லிவனுமோராணுத் துணையும்

வருத்தமின்றி யெடுத்தானென்க. அந்தணர் வினை மூன்றுவருணத்தும் மணம்புரியலாமென்னும் விதிபற்றித்தகவென்று கூறினனென்க.

௫அ. ஆனகதுந்துபிமுதல்வன் - வசுதேவனுடைய முதன்மைப்புத்திரனாகிய கிருட்டிணன். வசுதேவனாகியமுதல்வன்என்பதுசிறப்பின்று குனு-பிள்ளை.

௫௯. பரிவித்து-வருத்தஞ்செய்து. வேர்ப்பாடுநுதல்-வேர்வையுண்டாகுநெற்றி. ஆர்ப்பு-ஆரவாரம். கோடி - ஈண்டுமிகுதியையுணர்த்தியது.

௬௰. முருத்து - விகாரம். கோகு - புயம்; நிரைமீட்சிச்சருக்கத்தில், "கோகுதட்டிடுதனஞ்சயன்"எனக்கூறுமாறு காண்க. தட்டிட்டு-தட்டி. வார்தக-மிக.

௬௧. மிகைத்த-கோபித்த.

௬௨. இருவர்-கன்னனுஞ் சல்லியனும். வேதமோதன்முதலியகருமஞ்செய்யும் வைதிகராதலின் இவரைவென்றாலும் வசையேயென்றாரென்க.

௬௪. கொற்றவை-வீரலக்குமி. கம்மி-தொழிலையுடையவன். தாங்கொண்டவேடத்திற்கியைய ஐயமென்றாரென்க.

௬௫. புறம்பர் - வெளி- சுரும்பர் என்றாற்போலப் போலியாயிற்று.

௬௬. ஒருமாதை ஐவர்மணஞ்செய்தல் கூடாதாயினுஞ்சிவபிரானியமித்தவூழின்வயத்தாராயிவர்நிற்றலின், எங்கணெஞ்சினு நினைவுண்டெனக்கூறியது வழுவன்றென்பதுவிளங்கக்கடையடியில் விசேடணங்கொடுத்துக் கூறினரென்க.

௬எ. எவருங்காணின் இவளான் மயங்கி அம்மதனுலாளப்படுதலின், மாரனுக்கரசுநல்குமங்கையென்றார். மங்கையுந்தானுங்கேட்டாள் எனச்சிறப்பினுலொருமுடிபேற்றதென்க.

௬௮. வைக்க - பரிசோதிக்கு நிமித்தமாக வைக்க. பண்டைப்பயிற்சிவயத்தாலுஞ்,சாதித்தருமத்தாலும் ஆயுதத்தையேயெடுத்தாரென்க.

எ௩. உரை - புகழ். மௌற்கலியன் ஓர் முனிவனென்க. நாளாயனன் என்னுமோர் முனிவன்புத்திரியானதால் நாளாயனியென்று பெயரென்பர்.

எ௪. துவக்குநோய் - ஈண்டுப்பெருவியாதியென்க. சோதித்த இதில் முதனீண்டது. கூர்ந்து-மிகுந்து.

எ௫. மிச்சிற்புறத்து-சேடத்தில் வீழ்தல்-விரும்பல். குச்சித்தல்-அருவருத்தல் மிச்சில்-ஈண்டு உண்டெஞ்சியவுணவென்க.

எ௬. திறைநல்க - (உமாதேவியாருக்கு)த் திறையாகக்கொடுக்க என்க. உம்மை-சிறப்பு.

எஎ. மிச்சிலில்விரல்வீழவும் விரும்பிநுகர்தல் அருந்ததியுஞ் செய்யாமையின், மிகுகற்புடைமீனுமொவ்வாளென்றார்.

எஅ. அவன் குன்றாயின் இவள் நதியாயும், அவன்மரமாகில் இவள் கொடியாயும் இவ்வாறே ஒவ்வொருயோனியிலும் பிரியாதுதுய்த்தாரென்க.

எ௯. இந்திரசேனையென்னும்பெயருடைய வளாகியென்க. அந்தப்பதியை-அந்த நாயகனாகிய மௌற்கலியமுனிவனை.

அ௰. ஏந்தல - ஈண்டுமௌற்கலியமுனி. கூற்றால். (என்றவத்திற் கிடையூறு புரிவதனால் நீமானுடயோனியிற் பிறந்து ஐந்துபுருடரைச்சேர்வாய் என்று சொன்னசாப)வசனத்தால். மூரல்-நகை, இது தனது எள்ளல்பற்றி வந்ததென்க.

அ௧. ஐந்தானசொல்லால்-(பதிந்தேகி என்று ஐந்துமுறையாகச்) சொல்லிய ஐந்தாகிய சொல்லால் என்க. ஐந்தானபோகம் - ஐம்புலநுகர்ச்சியானவின்பமென்க. ஐந்தானசொல்லான்-பஞ்சாக்கரமாகிய ஐவகைச்சொல்லுடையானாகிய சிவபிரான்; ஒவ்வோரக்கரமுமொவ்வொருபொருளைத்தருதலின் ஐந்தானசொல்லானென்றார்; சுந்தரமூர்த்திநாயனார்தேவாரம், "அந்தியுநண்பகலுமஞ்சுபதஞ்சொல்லி"யெனக்கூறுமாறு காண்க.

அ௨. தேவன்மொழியின்படி - சிவபிரான் இக் கங்கையின்மூழ்கி உன்னெதிர்தோன்றும் புருடனையழைத்துவாவென்ற)திருவாக்கின்படி. அழுகின்ற - (எவரையுங்காணாமையால்) அழுகின்ற கண்ணீரெல்லாம் பொற்றாமரைகளாயினவென்க. தன்னந்தனி - மிக்கதனிமை.

அ௩. தொடர்பால்- (சிவபிரானருளிய திருவாக்கின்) சம்பந்தத்தால். எஞ்சினன்-இறந்தவன்.

அ௪. வச்சிரம்-வச்சிராயுதம்.

அ௫. பாகசாதனன் - பாகன்என்னுமசுரனைக்கொன்றவன். சிவபிரானைமதியாமையாகிய தவறுபுரிந்தமையாற் புன்பாகசாதனன் என்றார்.

அ௬. தினநாதன்றனயர் - சூரியன் புதல்வராகிய தேவமருத்துவரிருவர். சிலைவீரன்-என்றது விசயனை. பிறப்பிற்கு-தன்னுடைய பிறப்பினுக்கு. நான்கிந்திரருந் தருமன்முதலோர் கலையாற்பிறக்க இவன்தன்கலையாற் பிறந்தமையாற் பிறப்பிற்கவனே முன்பிதாவுமானு

னென்றார்.

௮௭. தெம்மாதர்முற்பூண்-பகைவர்மனைவியர் மங்கிலியங்கள். ஏனையணிகட்கு முதன்மையுற்றிருத்தலான் முற்பூணென்றார்.

௮௮. மறைநாலுமுருவுசெய்தலாவது-தைத்திரியம், பௌடியம், தலவகாரம், அதர்வம் என நான்காய்விரிந்துகிடந்த வேதங்களைப் பின்புசிற்றறிவோரெளிதினுணருமாறு இருக்குமுதல் நான்காக வகுத்தல்; இதனைக் கலித்தொகையுரையிற்காண்க. செய்த ஒவ்வாவியாதன் என்றியையும். ஒவ்வா - ஈறுதொக்கபெயரெச்சம். வியாதமுனிசிவபெருமானருளால் ஓதாதுணர்ந்து மறைநாலுமுருவு செய்தமையால், அவனருளால் ஓதியுணர்ந்தவேதா அம்முனிக்கொவ்வாரெனக. தூதானவண்டு - மகளிர்விடுத்த தூதாகியவண்டுகள். துதைதல் - நெருங்குதல். சோமகேசன் - யாகசேனன். ஐவர்க்குமுரியளாக மகளை விவாகஞ்செய்தல் தகாதென்றுகருதினமையாற் கோதானநெஞ்சு என்றார். வேதாவும் என்றவும்மைசிறப்பு.

௮௯. சிவபிரானருளால், ஐந்திந்திரர்களாகியவிவர் இவட்கு நாயகராயினரென்றமையால் உண்டாகியவியப்பெனக. ஈடா - தகுதியாக. அயர்வித்தனன் - செய்வித்தனன்.

௯௧. பிளிறியார்ப்ப-மிகவொலிப்ப. வேதிமணஞ்செய்தற்கியற்றப்பட்ட மேடையில்என இல்லுருபு விரித்துரைக்க.

௯௨. மிளிரும் என்றதனால் விடத்தோடமுதங்கலந்தென்ன என்பது பண்புவமை; பொதுநோக்காற்றுயரையுங்குறிப்புநோக்காலுவப்பையுந்தருதலால் விடமுமமுதமுமவமை கூறினாரென்றலீண்டியையாதெனக. உரைத்தகுறி-நூல்களாலுரைத்த அடையாளம். கடையடியில் ஒடு-வேறுவினையோடு.

௯௩. கேள்வி - கல்வி. வேள்வி - விவாகம். ஈட்டி-தொகுத்து. கரி-சான்று. தாள்வித்தகன்-முயற்சியையுடைய சாமர்த்தியன். வாமம்-மேன்மை. சடங்கு-கிரியை.

௯௪. மங்கலம் - மங்களவணிகள். சாத்தி-அணிவித்து, இதில் விவ்விகுதி தொக்கு நின்றது.

௯௫. கடல் இராக்காலத்தில்மிகக்கிளர்ச்சியாதல் பற்றிக்கங்குலைக் கூறினார், புறம்-இடம். பொரி - நெற்பொரி. பொழியுமாறு என்பதில் றுதிவிகாரமாயிற்று.

௯௬. ஏனைநால்வருக்குங் கன்னிகையாக ஒவ்வொருமுறை தீயின்மூழ்கினள் என்பார் முறைமூழ்கினளென்றார். ஐவரைமணந்துழியுங் கற்பிற்கிழிவின்றென்பார் வடமீனிகர்கற்பினளென்றார்.

௯௮. அங்குரித்தார்-வெளிப்பட்டாரெனக. இகல்-வலி. தார்த்தாராட்டிரர் - திருதராட்டிரன்மைந்தர். வினை-போர்.

௯௯. மூன்றுமடிக்கு - கொல்லப்பட்ட சேனையொழிந்தஎஞ்சியகுருகுலத்தவர்சேனையையெனக. வென்றசேனை - வெற்றிகொண்டதிட்டத்துய்மன்சேனைகள்.

௱. நால்வர் - சகுனி, கன்னன், துரியோதனன், துச்சாதனன். நச்செயிறுவன - காளி, காளாஸ்திரி, யமன், யமதூதி. வீரர்பலரிருப்பினுஞ் சிறந்தவரிந்நால்வருமேயாதலின் அவரையெயிறாகக்கூறினர், வருக்கம் - சண்டணிவகுப்பு. ஆலுதல்-ஒலித்தல்.

௱௧. தோற்றம் - வலி, பிங்கலந்கண்டிற்காண்க.

௱௨. மெய்தமர்பட-தன்னுடம்புந்துளைபட; இவ்வாறன்றி யானையணிமுகத்தோடு அதன் மெய்யுந்துளைபட எனக்கூறினுமாம்.

௱௩. இடையென்னுமேழாவதைமூன்றாவதாக்குக.

௱௫. விரோசனக்கதிர்-சூரியன். வேந்தன்-துரியோதனன். சரோசனன் - ஒத்தகோபமுடையோன். புன்மதி-அற்பமதியினன். அரோசனம்-சந்தோஷமில்லாமை. அத்தினம் - அத்தினபுரி.

௱௭. அம்பிகேயன் - அம்பிகையின்புதல்வனாகிய திருதராட்டிரன்.

௱௮. காதினால்-கொலைசெய்வதினால். கண்கள்போற்கோதினற்றெரியா மனக்கோளினன் - கண்கள் குருடானமையிற்றமக்குரிய விடயத்தைப்பற்றாதவாறுபோலக் குற்றமாகிய அறியாமையுண்மையால் நன்மைதீமையையறியாத மனக்கொள்கையுடையானாகிய திருதராட்டிரனென விரித்துரைத்துக்கொள்க.

௱௯. ஏற்க-இயைய. அங்காடு-பாண்டுவின் கூறாகிய நாடெனக. அகாம்-பண்டாரசாட்டு.



# இந்திரப்பிரத்தச் சருக்கம்.

—⋉[o]⋊—

க. ஞாதம் - காண்பான்; ஞாதா என்னும் வடசொல்லீண்டு ஞாதம் என நின்றது.

உ. மைத்துனன்-சகுனி.

௩. கோடித்து-அலங்கரிப்பித்து. கடி-விளக்கம். இயற்றி-இயற்ற.

௪. அத்தி-யானைத்தந்தம்; இது ஆகுபெயர். அரி - சிங்கம். தசும்பு - குடம். சித்திரம்-அழகு. கிரிதருமனுகவும், நிலாவெள்ளந்தீர்த்தமாகவுங்கொள்க.

௫. ராகம்-செந்நிறம். உதையன்-சூரியன். துதைதல்-நெருங்கல். பதயுகம்-இரண்டுபாதம். நீராசனம்-ஆலத்தி.

௬. ஒற்றை - ஓர்ஊதுகருவி; நிரைமீட்சிச் சருக்கம. ௫-ஆங்கவியிலும், பதினாறும்போர்ச் சருக்கம். ௫௬-ஆங்கவியிலுங்காண்க. வாய்த்த வாவென்ன-வாய்த்தபடிநன்றென்றுகூற.எழு-ஈண்டு எழுமுழத்திணைக்குறித்தது; எழுமுழ முயர்ந்திருத்தல்அரசுவாவிற்கிலக்கணமென்க.

எ. குரவர் என்றது கிருபன்துரோணன் வீடுமன் திருதராட்டிரன்முதலோரை யென்க. கொற்றவன்-திருதராட்டிரன்.

௮. நாயகக்கடவுள்-இந்திரன். விச்சுவகன்மா - தேவதச்சனென்க. அழைத்தநியாதோ வெனநடுங்கியுந்தரிசித்தமையால விழிகளித்தும் நின்றுனென்க.

௰. நமதாம்விண்ணினும் என்றமையால் அமரசேகரன் என்றது இந்திரனையென்க.

௰க. முதலடிக்கு, தேவதைகட்கும் தேவயோனியிற்பிறந்த கூட்டத்தினுள்ளுஞ் சிறப்புற்றயாவர்க்குமென்க. தேவு-தெய்வத்திற்குப் பெயரென்றுர் நச்சினுர்க்கினியார்.

௰உ. வைதூரியம் - வைடூரியம். எரிமணி-மாணிக்கம். ஆகரம் - உறைவிடம். அரி - திருமால், இந்திரனுமாம்.

௰௪. ஆபதம்-ஆபத்து. மந்திரம்-மாளிகை. கொந்து - பூங்கொத்து. இந்திராபதி - கிருட்டிணன். பிரஸ்தம்-விஸ்தாரமானவிடம்.

௰௫. நிதி - நிறைவு, சங்கநிதி பதுமநிதியுமாம். அளகையோர்என்றது தனவைசியரை.

௰எ. மஞ்சத்தலம் - மஞ்சங்களையுடைய விடம். வாகம்-வாகனம்.

௰௯. கண்டல்-ஓர்மரம். பழனவேலி-மருதநிலம்.

உ௰. மீன்கொடி-நக்ஷத்திரவரிசையென்க, வாளைகளொன்றன்பின்னென்று தொடர்ந்து சென்றமைவிளங்கக்கொடிபோலென்றுர். மருதத்தில் எனை எழாவது விரிக்க.

உக. புரிசை-மதில். கிடங்கு - அகழ். பரிசயம் - பழக்கம். பறத்தல் பறல்என நின்றது. அன்னங்கள் மலையில் வாழ்தலுமுண்டாதலாற் கிரிமிசைப்பறக்குமன்னமென்றுர். இது மயக்கவணி. வருங்கவியுமது.

உஉ. அருவியில்எனஎழாவதுவிரிக்க. அருவியில் விருப்புடன் முழுகுவனவாகிய சகோரங்கள் தமமை அன்னச்சேவல்கள் பேடையென்று (புணர்ச்சிக்குறிப்புடன்) நணுகலால் மனநாணுமென்க.

உ௩. அரிமணிச்சிலை - ஒளியுடைய நீலரத்நக்கல். அளிக்க-பெற. களிந்தவெற்பு-களிந்தமலை. நதி-யமுனையென்க; இந்நதிகருநிறமுடையது. புரிமணிச்சுழி - வளைந்தகரியசுழி. சாலகங்கள் சுழியாகவும், அவற்றிற்றோன்றுங் கண்கள் கயல்களாகவுங்கொள்க.

உ௪. துலைகொண்மனம் - துலாக்கோலின்றன்மையைக்கொண்டமனம். உணர்வு கேள்வி இவ்விரண்டும் வாழ்வார்தொழில்நகரிலேற்றிக் கூறினுரென்க. ஓ-எதிர்மறை.

உ௫. இரதம் - இரசகுளிகை. பிறக்கம் - மலை.

உ௬. மயங்கலில் - கலந்திருத்தலால். நாடனைத்தும் வாவிமுதலியனமயங்கலின் பூமகள் வடிவையோவியங்குறித்தொப்பனை செய்தவாறொக்குமென்க. ஓவியங்குறித்து - சித்திரமெழுதி, ஒப்பனை-அலங்காரம்.

உ௮. கோயில்-அரசமாளிகை. கரங்குவிப்பு காமல - கையாறசெய்யாமல்என்பது தாற்பரியம்.

உ௯. முதலடிக்கு-நாலைப்பழுதடையாமற் காப்பதற்கியைந்த குற்றமற்றசத்தியத்தை யுடையவேந்தனென்க. கோடி-கூண்டுவரிசை.

௩௰. எறிற்றுக-எற. இயற்றெகொல இயமுற்றே. எ - அசை. சப்தாசுவம் என்னும் பெயரை எழ்புரவியென்றுர். இது முதலகள-ஆஞ்செய்யுள்வரை தற்குறிப்பேற்றவணி காண்க.

௩க. உருள் - உருளுதல், முதனிலைத்தொழிற்பெயர். திமிரம்-இருள். சின்னெறி - சிறுவழி. தெருளுடைத்திமிரம் - திணிந்தவிருள்

என்பது கருத்து. சின்மை சிறுமை.

௩௨. சமர்முகப்பொறிகள் - போர்முகத்தை தையுடையபொறிகள்; யானைமுதலியபொறிகளும், வின்முதலிய பொறிகளுமதிலுக்குரிய வகைமென்க. குமர் - அழியாமை.

௩௩. அசும்புறு மடை - நீர்க்கசிவுறுதமடைப் பள்ளி.

௩௪. அனிலம் - வாயு. மிடுக்கு - வலி. நாள் என்றது. நாண்மீனிருபத்தேழையுமென்க.

௩௫. துதைதல் - நெருங்குதல். பொங்கர் - கொம்பு. விதம் - பகுப்பு. காளம் - கருமை. அகழியாகியபெரியமேகலையென்க.

௩௬. ஈட்டிய - தொகுக்கப்பட்ட. புடை - பக்கம். பூட்டியசிகரிசாலப்புரிசை - சேர்க்கப்பட்ட கோபுரங்கண்மிக்க அம்மதில். மன்றல் - விவாகம். சூட்டியசூட்டு - கோலஞ்செய்வார்சூட்டிய நெற்றிச்சூட்டு; தலையிற்சூட்டியமாலையுமாமென்பர்.

௩௭. பணை - வாத்தியம். துணைமணி - தம்முளொத்த இரத்நம். புனைவனம் - மூங்கிற்காடு. பொழி - மழையைப்பொழிகின்ற. இருமருங்குமுள்ள மாடங்களை இணைவரையாகக்கொள்க.

௩௮. எண் - மதித்தல்.

௩௯. ஓசம் - ஒளி.

௪௰. வேய் முன்னது அலங்காரம், பின்னது மூங்கில். வாய் - உண்மை. ஆய் - அழகு. தாய்முதலியோர்மொழிகளைக்கொள்ளுமுறை கூறினமையுணர்க.

௪௧. சந்தனுகருவின்றூபம் - சந்தனம் அகில் ஆகிய இவற்றின்புகை. வந்தனு ஆவீறு ஐயாகாது நின்றது. ஆதிவாசவர் - பழையஇந்திரர். நாரதரை வழிபட்டமகிழ்ச்சியாலு மேன்மையாலும் ஆதிவாசவர்களானாரென்க.

௪௨. சிவபிரான் ஐவர்க்குமுரியளாவாய் எனக்கொடுத்தவரத்தால ஐவரைச்சேரினுங் கற்பிற்குறையாதவளென்பார் வாமிகுகற்பினாளென்றார். சரிகமபதநி என்னுமேழுசுரங்களென்க. தண்டு - வீணை. தைவரல் - தடவல். படைவீடு - ஈண்டுத்தங்குமிடம் என்க. எம்பிரான் என்றது சிவபிரானை.

௪௩. முராரி - திருமால். சுராரிகள் - தேவருக்குப்பகைவராகிய அசுரர்கள். சுந்தன், உபசுந்தன் என்றிருவரென்க. நிராரி - வலியபகைவனாகிய இந்திரனென்க. திலோத்தமை - பிரமன் பெண்களைச்சிருட்டிக்கும்போது வாய்ந்த அழகினுள்ளே திலந்திலமாக எடுத்துச்செய்யப்பட்டவளென்பர்.

௪௪. எண்ணுற - மனம்பொருந்த. ஆறிருது - ஆறுபருவம்; கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில்; ஆவணிமுதலிரண்டிரண்டுமாதமென்க. ஏ - அசை.

௪௭. தேவர்நாளுக்கின்னநாளவதியென்று - தேவருடைய ஒருநாளுக்கு இத்தன்மையாகிய மானுடவருடம் எல்லையாமென்று.

## அருச்சுனன் றீர்த்தயாத்திரைச் சருக்கம்.

௧. தரியார் முனைமதியாவன்பன் - பகைவர் போரைமதியாவலியவனாகிய தருமராசன். இயல்பாதலின் - இயற்கையாயிருத்தலினால். அவனது தண்ணளியைக்குடைமேலேற்றிப் பைங்குடையென்றார். பசுமை - ஈண்டுத்தண்மையென்க. அறம்பொருளின்பமெனக்கூறுது செய்யுளாதலிற் றலைதடுமாற்றமாகக் கூறினார்.

௨. திறை - திறைப்பொருள். இறை - கையிறை. எண்ணுற - இதற்குக்காரணம்யாதோ வென்றுயாவரும் யோசனைமிக. அடுக்கு அவலம்பற்றிவந்தது.

௩. புவித்தேவன் - பூசுரன். மறையின்றுறைகாவல - வேதவொழுக்கத்தைக்காப்பவனே. விடைகாவலர்நிரை - இடையர்வசத்திருந்த பசுக்கூட்டத்தை.

௪. ஏ - பாணம்; வின்றொழிலுக்காகுபெயர். [illegible] - மேலோன். திலகனாகிய விசயன் எனக்கூட்டுக.

௫. மாணுநிரை - மாட்சிமையுடையபசுக்கூட்டம்; இவற்றின்மாட்சிமை சிவதருமோத்திரத்திற்கோபுரவியலிற் காண்க.

௬. தொறு - பசுக்கூட்டம். முனி - நாரதமுனியென்க. துலைநிகர்தம்முன் - துலைநாவன்னசமனிலையையுடையதமையனாகியதருமன். துலை - ஆகுபெயர். நிகழ்வு - தீர்த்தயாத்திரைக்குரிய கருமநிகழ்ச்சியென்க.

௭. ஆடம்பரம் - இடம்பம். சூடம் - சடைமுடி. சேடன்றலம் - நாகலோகம். புனலயர்தல் - ஈண்டுப்புனலாடுதலென்க. முதலடியில் அரசவேடத்தினிழிபும், தவவேடத்தினுயர்வுந்தோன்றக்கூறினமை காண்க.

௮. அநுராகம் - ஆசை. நலம் - அழகு.

௯. பாயல் - சயனம். பரிபுரம் - சிலம்பு. மலராகிய கால்களையென்க. இம்மெனல், பொம்மெனல் ஒலிக்குறிப்பு. ஊடுதல் காமத்திற்கின்பமாதலாற் பரிபுரநாண்மலர் பொற்சென்னியில்வைத்துமென்றார்.

௰. நாகாதிபன் - இமயமலை. நாகாதிபன் விடு - ஐராவதஞ்சொரிகின்ற.

௰௧. களிந்தாநதி - காளிந்திநதி. முளிந்து - காய்ந்து. முக்கோல் - திரிதண்டம்; மூன்றுகோல் ஒன்றாகச்சேர்த்துக்கட்டப்பட்ட தண்டம். திரிமூர்த்திகளுமொன்றென்பது விளங்க மூன்றுகோல்களுமொன்றாகச் சேர்த்துக் கட்டப்பட்டதென்பர்.

௰௨. இட்டசித்திகளைப் பெறுதற்கேதுவாயிருத்தலாற் சித்திக்கொருவிதையாகிய தென்றனென்றார். அரவக்கிரி - திருவேங்கடமலையென்பர்.

௰௩. அறமெண்ணான்கு - ஆதுலர்க்கன்னசாலை முதலியன; அவை பிங்கலநிகண்டிற் காண்க. காஞ்சிப்புராணங்கழுவாய்படலத்திற் சிலவேறுபடக் கூறினர். செச்சைத்தொடை - வெட்சிமாலை. கச்சிப்பதி - காஞ்சிநகர்.

௰௪. அத்திகிரிக்கு - நான்காவதையேழாவதாக்குக. ஐராவதம் மலைவடிவானமையின் அத்தகிரியெனப்பெயராயிற்று. மா - வேதமாமரம். எழுநதி - கம்பை, பம்பை, மஞ்சனி, பிச்சி, சவிச்சி, மண்ணி, வெஃகா என்பனவாம். பம்பை, கம்பை, புண்ணியநீர், மஞ்சனதி, வேகவதி, பாலி, சேயாறு எனவுங் கூறுவர்.

௰௫. சகதண்டம் இது வடநூன்முடிபு; சகத் அண்டம் எனப்பிரித்துத்தோன்றியழியுமியல்புடைய அண்டமென்பர். அவை பெற்றுமுற்றாமுகிழ்முலையாள் என்பதன் கருத்தை "உலகுயிரெல்லா மீன்றும்பவன் பிரமசாரியாகும்பான்மொழிகன்னியாகும்" என்னுஞ் சிவஞானசித்தியாரிற்கூறியவாற்றாற்காண்க. பற்றாமென - பற்றுதலையுடையதானமாமென்று. பற்று - ஆகுபெயர். மிக்கோரிகழ் பற்றொன்றினுமுண்மைகற்றார்தொழுமருணசலம் - மேலோரிகழும்பற்றுத்தம்மைவந்தடைந்தாலும் ஞானிகள் வணங்குமருணசலம்; நினைத்தான் முத்தியுதவுந்தலமாதலின் இருந்தவிடத்திருந்து ஞானியரும் வணங்குந் தலம் என்பதாயிற்று. ஒன்றினும் என்ற எச்சவும்மையால் ஒன்றாவிடினும் வணங்கு மருணசலமென்க. பற்றொன்றினால் வணங்குதல் அது நீங்குதற்கெனவும், பற்றொன்றாவிடின் வணங்குதல் அப்பற்றுப்பயிற்சிவயத்தாற் பின்னும்வந்து தாக்காமை கருதியெனவுங்கொள்க.

௰௬. துறை - நதி; நெய் பாலைக்கூறினமையாற்பெண்ணை நதியென்க. நெய்பால்பெருகினமை சிறப்புப்பாயிரத்திற்காண்க ஏழேழு பிறப்பு - எழுமையினையுடைய தன்னெழுபிறப்பு, "எழுமையெழுபிறப்பும்" என்னுந்திருக்குறளிற்காண்க. முகின்மேனியார் - திருமால். அமுதானவர் என்றது சிவபிரானை. திருமால் சிவபிரான் பாதங்களை யென்க. கவிஞானியர் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் முதலோரென்பர்.

௰௭. இயலவாணன் - தமிழ்வாணராகியசுந்தரமூர்த்திநாயனாரென்க. ஆவணம் - ஓலை. பதி - திருவெண்ணெய்நல்லூர். திருவீரட்டம் - திருவதிகை வீரட்டம். இதுதிரிபுரதகனத்திற்கிடமாயிருந்ததலம். வீரத்தைப்புரியுமிடம் வீரட்டானம் என்றும், வீரஞ்செய்து அட்டதானம் வீரட்டானமென்றுங்கூறிப், பின் வீரட்டானம் வீரட்டம் எனமரீஇயிற்று என்றுங்கூறுவர்.

௰௮. பலர் - அரிபிரமர் இருவரும்; இருவரைப்பலரென்றது தமிழ்வழக்கு. உம்மைகள் சிறப்பு. முதலடியிற்கூறியவாற்றால் மறுமைப்பயன்கருதிவணங்கினனென்க.

௰௯. செற்றவன் என்றது அநுமானை. அறிதுயில் - யோகநித்திரை யென்பர். பொலம் - பொன்.

௨௰. பதி யென்பதற்கு ஊர் எனப்பொருள்கொண்டு மேற்கவியில் ஸ்ரீரங்கத்தைக் கூறியதனாலீண்டு உறையூர் முதலாக விளங்குமூர்கடோறு மென்க. தமிழ் - தேவாரப்பதிகத்தை யுணர்த்தலால் ஆகுபெயர். இளமை - ஈண்டழகு, அன்றிக்கருத்தாவினிளமையை அவர் செய்த பதிகத்தின்மேலேற்றிக் கூறியதெனினுமாம். துறை - ஈண்டு வையைநதி. புறவம் - முல்லைநிலம்.

௨௰௧. குன்று - ஈண்டு வெள்ளிமலை. வாடை - வடகாற்று. தென்றல் - தென்காற்று. பொதியமலைக்குச்சந்தனம்போல வெள்ளியங்கிரிக்குக் கொன்றை சிறந்ததென்க. சிவபிரான் றிருவடையாளமாலையாதலிற்றிருக்கொன்றையென்றார். மதுரை நான் மாடக்கூடலானது திரு

விளையாடற் புராணத்திற் காண்க.

௨௨. கன்னியைக்கண்ணுற்ற - கன்னியாகுமரிநதியைக்கண்டுமுழுகவென்றும், கன்னிப்பெண்ணைக் கண்டு அவளைக்கூடவென்றும் இருபொருளாகக் கூறினனென்க. திரௌபதியைக்காண்டலாற்றீர்த்தமாடவென வேறுமொருபொருள்கொள்ளினன்றெனவுங்கொள்வர்.

௨௩. இந்திரன் முடியில் வளையெறிந்த கதை திருவிளையாடற்புராணத்திற் காண்க. ஒருகோடிதருக்களென மாற்றி ஒப்பற்றபுதுமையுடைய ஐந்தருக்களென்க. வரூதம்-இருப்பிடம். அவரோதம என்பது பாடமாயின் அவரோதம்-அந்தப்புறம்; கட்டுப்பாடுமாம். கைதவர்கோன்-பாண்டியராசன்.

௨௪. சேவிக்க - வழிபட. அரி-பருக்கைக் கற்கள்; அழகுமாம். அரவிந்தை - இலக்குமி. அழகினாலும் புண்ணியமுடையானைச் சேர்தலானும் இலக்குமியையுவமைகூறினர்.

௨௫. பிச்சன்-பித்தன். இவனுந்தன் வயமழிந்து நிற்றலிற் பிச்சன்போலென்றார்.

௨௬. பூழிவேந்தனாகிய சித்திரவாகனனென்க. பூழி-பூழிநாடு, இது கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனு ளொன்று, இந்நாட்டையுமுடையனாதலிற்பூழிவேந்தனென்றார். மித்திரம்-சிநேகம்.

௨௭. வாகம்-வாகனம். சாமன்-காமன்றம்பி.

௨௮. வண்டானம்-கொய்யடிநாரை. வரி - இசை. தார்-ஆரம்; கிளியின் கழுத்திற்றோன்றுவது. "செந்தார்ப்பசுங் கிளியார்" எனக்கூறியிருத்தல் காண்க.

௨௯. கந்தருவமுறையாவது கொடுப்பாருமடுப்பாருமின்றித் தலைவனுந்தலைவியுந் தனியிடத்தெதிர்ப்பட்டுத் தெய்வங்கூட்டப்புணர்வது; இதனைக்களவென்பார்.

௩௰. நீடியது-(கால) நீட்டித்தது. அஞ்ஞான்று-அப்பொழுது.

௩௧. பரியங்கம் - கட்டில். ஐயமளி - பஞ்சசயனம்; அவை மயிர்ச்சேணம், இலவின்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, அன்னத்தூவி என்னுமைவகைமெத்தை. பிங்கல நிகண்டில் வேறுபடக்கூறுவர். நவிர்-புன்மை. கரை-எல்லை.

௩௨. ஐந்தரு-சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம். அரிசந்தனத்திற்குத் தேவதாரமென்பர். முன் அரி - இந்திரன். மகோததி-கடல். ஆரம்பூண்டதும், வருணன்விடுத்த கடலைக்கனைக்காலளவாகவற்றச் செய்ததுந் திருவிளையாடற்புராணத்திற் காண்க. இவன் குலத்துளான்செயலை உரிமை பற்றி இவன்மேலேற்றிக் கூறினர்.

௩௫. விபுதர்-அறிஞராகிய முனிவரென்க. வேறாக இச்செயவெனெச்ச மீறுதொக்கது.

௩௬. பஞ்சவன்-பாண்டியன். சஞ்சரிகம்-வண்டு. அஞ்சல் - அஞ்சற்க; எதிர்மறைவியங்கோள். மறைத்து நின்றெய்தலால் மதனைவஞ்சகனென்றார்.

௩௭. மதி - முன்னிலையசை. கிரீசன்-கைலாயபதி. மக-பிள்ளை. வரமும் என்றவும்மை எச்சம்.

௪௰. கோமடந்தை - பூமிதேவி. விந்தை - வீரலக்குமி. ஒப்பனை - அலங்காரம். பூமடந்தை-இலக்குமி. பூமியாளுதற்குரிய அரசைப்பெறலாற் கோமடந்தைகளி கூரவென்றும், அங்ஙனம் அரசுசிறத்தலாற் பெரும்புகழ் விளைதலிற் புகழ்மடந்தைகளிகூர வென்றும், அரசும்புகழுஞ்சிறக்கவேயெதிர்ந்த பகைவரஞ்சிமுதுகு தரவெற்றி விளைதலில்விந்தைகளி கூரவென்றும், நல்வினையுடையான் மாட்டுச் சேறலிற் பூமடந்தை யனையாளென்றுங்கூறினர்.

௪௨. நுண்ணியபுலவி என்றதனாற்புலவி நுணுக்கமென்க. அது திருக்குறளிற் காண்க. அப்புலவிதணியாகாது விரைந்து புணர்தற்குரியதாயிற்றென்பார் மென் புலவி யென்றார். அநுராகம் - ஆசை. துலையையுவமைகூறலால் இருவர்போகமுந் தம்மொத்திருந்தனவென்க. பாக்கியத்தைப்பயப்பதாய ஊழைப் பாக்கியமென்றது ஆகுபெயர்.

௪௩. தென்னா-பாண்டியனே எனவிளியாகவும், இசைக்குறிப்பாகவு மிரட்டுற மொழிக. மூன்றாமடியில், மக்கட்கேயன்றி நான்கறிவுடைய விலங்குகளிரந்தாலும் வேண்டுவனகொடுப்பவன் எனக்கொடை மிகுதிவிளங்கக்கூறினார். தேம்-தேன்.

௪௪. யாழோரின்பம்-காந்தருவப்புணர்ச்சியின்பம். பார்த்தன் - பிரதையின்புத்திரன். அருச்சுனன் - தூயசெயலினன். கரியோன் - கரியநிறத்தவன். விசயன்-யுத்தகளத்தில்வெற்றி கொள்பவன். பாகசாதனி-இந்திரன்புதல்வன். சவ்வியசாசி - வலக்கையாலன்றி இடக்கையாலும் பாணப்பிரயோகஞ் செய்பவன். பற்குனன்-(பங்குனன்) உத்தரநட்சத்திரத்திற் பிறந்தவன். தனஞ்சயன்-எல்லாவரசர்களையும் வென்றுகொண்ட செல்வத்தை யுடையவன். கிரீடி - இந்திரனாற் சூட்டியகிரீடமுள்ளவன். சுவேதவாகனன்-வெள்ளைக்குதிரையான்.

௪௫. இக்கவியிற்கூறியகதை இராமாயண

த்திலறிக. தம்பியர்மூவரினுங்குறிப்பறிந்தேவல்புரிதலைமேற்கொண்டு வனத்திலுந் தொடர்ந்து சென்றபோன்பஞதலில் வாய்த்ததிருத்துணைவனென்ருர். வழியின் பெருமையுணர்த்துவார் இன்றளவுநாறுமென்ருர்.

௪௬. திரையாகியகளிற்றினம் என்க. கணையமரம்-யானைபொருதாமற்றடுப்பதற்கிடுவதென்பர். தலைகள்-வாயு பறித்தெறிந்ததன் சிகரங்கள் இருபூதலம் - பாண்டிநாட்டையும் இலங்கையுமென்க. முக்கோணக்குன்று-திரிகோணசலம்; இது ஈழநாட்டிலுள்ளது. அச்சேதுபோலுமென்க. இதுபலபொருளுவமையணி.

௪௭. மழுப்படையோன்-பரசுராமன். பலபோகங்களுமிகச் செறிந்திருத்தலாற்பாக்கியபூமியென்ருர்.

௪௮. இந்திரனிமித்தமாகவிளைந்த சாபமென்க. இந்திரன் ஐந்தரமபையரைத்தன் உத்தியானவனத்திருந்த ஒருமுனிவன் றவத்தையழிக்கும்படியேவ அவரங்வனம் புகுந்தபோது அம்முனிவனிட்ட சாபத்தான முதலைகளாயினர்; பின் அம்முனிவன் அவர்வேண்டுகோட்கிரங்கி அருச்சுனனுலிச்சாபங்கழியுமென்ருன்; அவர் முதலைகளாய் வாசஞ்செய்யும்ஐந்துதடங்களிலும் அருச்சுனனிறங்கவே அவர்சாபநீங்கிப்பழையவடிவடைந்தனரென்பர். ஐந்துதடத்திற்கும் நாரீதீர்த்தமென்று பெயருண்டு. பசுவின் செவிவடிவாய்ச் சிவலிங்க மிருத்தலால் அத்தலத்திற்குக் கோகன்னமெனப்பெயராயிற்று

௪௯. ஆகன்னம் - காதளவும். கோட்டுக்கோட்டுநாகு- நீர்க்கரையிற்சங்கின்பெடைகள். பாவை என்றது சுபத்திரையை. முக்கோற்பகவன்-திரிதண்டசந்நியாசி.

௫௰. குடதிசை - மேற்றிசை. செய்யவாடை-ஈண்டுக் காவிதோய்த்த சிவந்தவஸ்திரம். இரைவதகசைலம்-ஓர்மலை. வடம்-ஆல். பொதும்பர் - சோலை. ஆடையுந்தானுஞ்சேர்ந்தான் எனத்திணைவிரவிச்சிறப்பினு லாண்பான் முடிபேற்றது.

௫௧. காலம் - கார்காலமென்க. நீலம் - நீலநிறம். விதானம்-மேற்கட்டி. இடியாகியமுரசமென்க. அம்மா-அசை. மேற்றிசை கீட்டிசையிருதிசையினும் இந்திரதனுத்தோன்றுதலால் இரட்டை வரிசிலையென்ருர். ஒருதிசையிலிரண்டு சிலைதோன்றுதலுமுண்டென்க. தாரைமுத்து - தாரைகளுடன் சொரியுமுத்து என்க. முழுப்பொறி-முரிவில்லாதபொறி. தம்முடையநாயகன்புதல்வனுதலின் இவ்வாறு பசரித்தனவென்க. இது தற்குறிப்பேற்றவணி.

௫௨. இராமன் - பலராமன்; தலைக்குறை. பாங்கு - உரிமை. அவயவங்கள்கமலமலர்போலிருத்தலாற் கமலமலரோடையனையானென்ருர்.

௫௪. குன்று - இரைவதகமலை. போசர் - குந்திபோசர். சூது - சூதாடுகருவி. தன்றங்கையாகிய சுபத்திரை மணத்தை அருச்சுனனுக்கு எளிதின்முடிப்பதற்குக் கிருட்டிண னிங்ஙனமேவினனென்க.

௫௫. தவவேடமுடைமையிற் காயத்தால் வணங்காது மனத்தால் வணங்கினனென்க.

௫௬. கன்னியிளமை என்பது மீமிசை. இமையாதுநோக்கலில் விரிந்தபின் குவியாத கடம்பலருவமையாயிற்று. கூந்தலினீலவொளிவிளங்க மின்கொடிபோற்றுவண்டு தோன்றலிற் புயலின்மின்னியரேகையையுவமை கூறினர். காட்சி தவவேடத்திற் கியையாமையாற் புன்மூரலுண்டாயிற்றென்க. மைத்துனமை - மைத்துனமுறைநமை.

௫௭. அடிகள்-சுவாமிகள். கடியயர்வுற்று-விவாகஞ்செய்து. இருபருவம் - நாலுமாசம். துரியோதனனுக்குச் சுபத்திரையை மணம்புரிய உத்தேசித்திருத்தலால் இசையலரென்றும, பிறரறியாமல் மணம்புரிந்துகொண்டேகல்நீதியன்றென அருச்சுனனினையாவண்ணம் காவலர்க்குக் கடனென்றும், அருச்சுனன் தன்பாலன் பாலிவ்வுபாயங்கூறியது என்றுட்கொண்டுருகவென்பார் கசியவென்றும், சுபத்திரை ஐயுறுமைக்கு மெய்ம்மையுறக்கொண்ட கோலப் படிவமுனியென்றுங்கூறினர். இராசகன்னியர் தாங்கருதியவரங்கொள்ளற்காக முனிவர்க் கேவல்புரியுமாறு நியமித்தல் மரபென்க. அவ்வாறு குந்திதேவி சரிதத்திற்காண்க.

௫௯. இவள் வந்ததென்க. கண்ணினள் - முற்றெச்சம்.

௬௰. புடவி-பூமி. அடவி - வனம். விடவிலோசனக்கடை - நஞ்சுபோன்ற கடைக்கண். பலவுறுப்பினும் விரகக்கனலைமூட்டுதலிற்சிறந்தது கண்ணேயென்பார் அதனைக்கூறினர்.

௬௧. சதனம்-வீடு. அகக்கண்ணைமறைத்து நீங்காத்துயர்செய்யும்வன்மையினுல் வெம்மோகவிதனவல்லிருளென்ருர். உம்மை இரண்டுஞ் சிறப்பு.

௬௨. கற்றை-தொகுதி. ஒற்றையன்றில்-துணைபிரிந்த அன்றிற்பறவை.

௬௫. நிலத்தாலுங்காங்களாலும் எனவும்மை விரிக்க. கொல்-அசை.

௬௮. ஊழின்-இன்னதுப்பொருட்டு. வாழி-அசை. வினவாதுமறைத்தனனென்க. யாழ்-ஆகுபெயர்.

௬௯. யாதவி-சுபத்திரையென்க. கச்சணி குரும்பை என்றதனால் முலைகளென்க. ஆகுலம் - ஆரவாரம்; ஈண்டுமகிழ்ச்சியை யுணாத்திற்று. ஓ-எதிர்மறை. ஓகாரத்தைஅசையாக்கி ஆகுலம் படாது என்பதற்கு வருத்தப்படாது எனப்பொருள்கொண்டு மகிழ்ச்சியே யுண்டா மென்பாருமுளர்.

௭௰. உகவை - சந்தோஷம். அகவு - ஆடுகின்ற. முத்தம், பவளம், நீலம் இவை ஆகுபெயர். தகைதல் - ஈண்டுப்பற்றல். ஊழ்வயத்தால் ஏவப்பட்டுப்பற்றியதனாற்றகவுடைத்தன தடக்கையென்றார்.

௭௧. அசைதல் - எழுதல்.

௭௨. அலாயுதன்-பலராமன். மறி - மான்; முனிவரேவியமான் என்க. தம்மைப்பரம்பொருளெனமதியாத அகங்காரிகட்குந் தம்மைப் பரம்பொருளென அறிவுறுத்தியாளுங் கிருபாநிதியென்பதுவிளங்கமறிகொள்செங்கையனென்றார். தான்புரியுஞ்சூழ்ச்சி, பிறர்க்குப்புலப்படாதென்பதுவிளங்க உறியிலவெண்டயிருண்டவனென்றார். முப்பத்துநாலுநாட் சிவபிரானுக்கு விழாச்செய்தனர் என்பர்

௭௩. பாண்டுவினும் மேம்பட்டுச்சிறந்தமையிற் பெரும்பிதாவென்றார். தியானமுற்ற-தன் கருத்து முற்ற என்றும், தியானவிலக்கண முதிர என்றும் இருபொருடருமென்க.

௭௪. இந்திரபதி-கிருட்டிணன். ஆதவம்-ஒளி; சந்திரனொளியைச்செய்யு மண்டபமென்க; எனவே வண்மணிகளாலியன்ற மண்டபமாம். கிருட்டிணனையும்புதல்வனையுங் கண்டமையாலும், புதல்வனுக்குச்சிறந்த மணமெய்தினமையாலு மகிழ்ந்திருந்தானென்றார்.

௭௫. புலோமகன்னிகை-புலோமன் மகளாகிய இந்திராணி. மரு - முதனிலைத்தொழிற்பெயர்.

௭௬. அதிவிரகன் - மிக்கவுபாயத்தையுடையானாகிய கிருட்டிணன். சால்-அமைதி; சிலப்பதிகாரவுரையிற்காண்க. அமைதியாகிய குணத்தையுடைய அருந்ததியென்க; சிவஞானபோதச் சிற்றுரையில் அமைதிக்குணமுடையது பெண்ணென்றார். நாவலர்-அறிஞர். தகிசமையம்.

௭௭. நாதவெம்முரசு - ஓசையையுடைய விரும்பப்படுமுரசு. சுரிமுகம்-சங்கு. சடங்கு-கிரியை. விடங்கு-அழகு. மடங்கினார் - மீண்டுஞ்சென்றாரென்க. ஆகஎன்பது ஈறுதொக்கு ஆவெனநின்றது.

௭௮. முன்னம்-அடியார்மனக்குறிப்பென்க; தன்மனக்குறிப்பென்றுங்கூறுவர். கொள-இது எதுப்பொருளின் வந்தவெச்சம். அடுக்குப் பன்மைகுறித்தது.

௭௯. சாபவீரன் - வில்வீரனாகிய அருச்சுனன். தாமக்குழலாள் என்றது சுபத்திரையை. காமபாலன் வாமப்பதி - பலராமனது அழகிய துவாரகை.

௮௰. சிறகர் இறுகிப்போலி. அப்பலற்கு-அந்தப்பலராமற்கு.

௮௧. காலாந்தகனும்- உருத்திரமூர்த்தியும்; உம்மை-சிறப்பு. நீலாம்பரன்-நீலவஸ்திரத்தையுடைய பலராமன்.

௮௩. அகில்நாறும் - (நீராடுமாதர்கூந்தலுக்கூட்டிய) அகிற்புகைமணநாறுகின்ற. மருதவேலி-மருதநிலம்.

௮௪. முசலப்படை - உலக்கைப்படை. மொய்ம்பு-வலி. உபசாரம்-உபசாரப்பொருள்; இது ஆகுபெயா. முதலடியிற்புகழ்வதுபோலப பழித்தலாமென்க. அருச்சுனனோடு சமர்புரிந்ததனாலவன்கொண்ட சினந்தணியு மாறு பின்போய்னியமொழியாயிரம் பேசினானென்க.

௮௫. தாலத்துவசன் - பனைக்கொடியையுடைய பலராமன். சிலத்துவன்-ஈண்டு அருச்சுனன். அவண் - இந்திரப்பிரத்தமாகிய அவ்விடத்தில்.

௮௭. ஆதங்கம் - வருத்தம். குணமைந்தாவன-சத்த பரிச ரூப ரச கந்தமென்க. வேதம்-வேதவொழுக்கத்தையுணர்தலால் ஆகுபெயர். பிரதிவிந்தியன், சுருதசோமன், சுருதகீர்த்தி, சதாநீகன், சுருதசேனன் என ஐவர் மைந்தர் முறையே தருமன்முதலிய ஐவருக்கும் பிறந்தாரென்க.

௮௮. விதி - சாதகன்மமுதலாயின. வின்மை-விற்றொழில். தெவ் இதில் வகரவொற்று மகரவொற்றாயது. தெவ்-பகை. கடையடிக்கு-ஒருவர்க்கொருவர்) ஒழுங்காக வாதுகொண்டு மிகப்பழகும்படிசெய்தார் என்க.

௮௯. தோற்றம்-காட்சி. நாரதமுனிவனிட்டசாபத்தாற் குபேரன் புத்திரராகிய நளகூபரன், மணிக்கிரீபன் என்னுமிருவரும் இருமருதமரமாயிருந்தவர் பின் அம்முனிவர் கிருட்டிணனால்இச்சாபங்கழியுமென்றபடி அக்கிருட்டிணன் உரலோடுதவழ்ந்து இடையேபோகும்போது அம்மரவடிவ நீங்கினாரென்பர். மது

சூதனன் = மதுஎன்பவனைக்கொன்றவன். விரு து-வெற்றி.

௬௰. நரநாராயணர்க்குள்ள நண்பு போல வசந்தகாலமாரனோடு நண்பிசைந்தது என் மான்-குறுக்கல். இசைந்தன்று இவ்வினைமு றில் அன்சாரியையென்க. வான்-பெருமை.

---

# வசந்தகாலச்சருக்கம்.

௧. நனியாடல் - மிகுதியாகிய வெற்றி. திசை-தென்றிசையில். முனியாமல் - வெறுக் காமல். பரிதாபம்-மிக்கதாகம். தனியாழி - ஒ ருருளை. பரியை - பரிக்குவேற்றுமைமயக்கம். சைலராசன்-இமயமலை. பனிப்பகை-சூரியன். பனிசெய்வோன்-அவ்விமயமலையென்க சூரி யன் தக்ஷிணாயனத்தை நீக்கி உத்தராயணமா னான் என்பதிதன்கருத்து. இதுபெயர்பொருட் டற் குறிப்பேற்றவணி.

௨. வேனிற்கலகம்-வேனிற்காலத்திற்செ ய்யும் மதனலீலைப்போரென்க. சிலை - மதன கருப்புவில். தென்றல் நறுமணங்கலந்து வருத லால் அதனைநுகர அதன்பின் அளிகளோடின வென்க. கருங்கொல்லன் குயிலாகவும், சிறு குறடுஅலகாகவும், உலைக்கனல் செந்தளிர் நெ ருங்கியகாவாகவும், பந்தரகடு விரிந்ததளிராக வும், ஒதுக்கிச் சமைத்தல் அலகாற்றளிரைச் சுருட்டிக் கோதுதலாகவுங்கொள்க.

௩. முத்தீ - ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி. தடமாகியஓமகுண்டம், மதுக ரங்களாகிய அந்தணர்கள் எனவுருவகமெடுத் துரைக்க. தனஎன்பதில் அகரவுருபு அஃறிணை யொருமையில்வந்தது. யாகமுடித்தபின் நீராடப் பன்னியுடன்றேரேறியுலாவரன் மர வென்க.

௪. சால - அமைய. சாலுதல் - அமைதல்; திருமுருகாற்றுப்படையுரையிற்காண்க. ஓவிய முமுயிர்ப்பெய்த - சித்திரமுந்தம்மைக்கண்டு பெருமூச்சுவிட. உம்மை - சிறப்போடெச்சம். பொங்கர்-சோலை. மனக்கலப்பாலுநிறத்தாலும் இருவருக்கு முபேந்திரனையு மிந்திரனையுமுவ வை கூறினரென்க.

௫. சாயற்றோகை - மென்மையையுடைய மயில்கள்; சாயல் அழகுமாம். வண்டு-வளையல். தனமாகியமலையென்க. இங்ஙனம் நிகழ்ந்தன கார்காலக்குறியென்க. தையலார் வடிவுதோ லும் எழ, நுடங்க, வளைவுற, தோன்ற, மலர, விழக்கண்டுகளிக்கும் எனமுடிக்க. இதுமயக் வணி.

௬. பாதஞ்சேராமல் செங்கை சேராம எனக்கூட்டி உதையாமல் அணையாமல் என பொருள்கொள்க. முகராகம் - ஒருசொல்லா நட்பையுணர்த்தியது. ஆராமம்-சோலை. வே ற்காலமானதால் இத்தொழில் களியற்று இயல்பாய் மலர்ந்தனவென்க. பெண்களா மாபார்க்க, முல்லை நகைக்க, குருக்கத்தி பாட புன்னை ஆட, அசோகு உதைக்க, குரா அ க்க, பாலைநட்புற, பாதிரி இகழ, மகிழ்சுவைக் சண்பகம் நிழலளிக்க மலர்வனவாம்; சூடாமன நிகண்டு பன்னிரண்டாவதுதொகுதியில், எ விழ் என்னுஞ்செய்யுளாலறிக.

௭. சிந்தைத்தாபம் - மனத்திலுண்டாகி காமவெப்பம். முலையென்னும்இளநீரொன் கூந்தலாகியபூகத்தாறென்க. மரகதச் செந் கிரால்-மரகதமாகிய பாக்குக்காயினாலுஞ் சிவ தபவளமாகியபாக்குப்பழத்தினாலு மென் க நவமணிகளு நீரிலுளவாதலின் மரகதமு பவளமுந் தடாகத்திலுளவென்றார்.

௮. சிவிறி-நீர்தூவுந்துருத்தி. மழை-நீர்மா விரற்சாளரங்கள் - விரல்களினிடை வெளி ளாகிய பலகணிகள் என்க. விரல்-ஆகுபெய

௯. சலமதி - நீரிற்றோன்றுஞ் சந்திரன் பரிவுகூர-(அவனுக்கு)விருப்பமிக. கூர்ந்தபா வை - நுண்ணிதாய்ப்பார்த்த அவள்கண்கள் விடவும் என்றவும்மைசிறப்பு. குங்குமப்புன செங்கலங்கற்புதுப்புனலாகவும், எதிராய்ப்பா த்த கண்கள் அதற்கெதிரோடிவிளையாடு சேல்களாகவுங்கொள்க.

௰. நெறி-நெறிப்பு. அறல்-நீர். கூந்தலு கு கருமணலையும், வீசியநீருக்குச் சின்னீ முவமையாகக்கொள்க. அமைந்தது ஒத்த என்க.

௰௧. விளிந்து-வருந்தி. வேய்-மூட்கோல். பாகு-பாகன். களிந்தகிரி-களிந்தமலை.

௧௨. வீச அந்தநீர்என வருவித்துரைக்க. நிரைத்து-நிரைக்கப்பட்டு; படுவிகுதி தொக்கு நின்றது. நிறத்த - ஒளியைச்செய்தன இது இல்பொருளுவமை.

௧௩. ஆடி-விளையாடி. மனை - அச்சோலையி லமைக்கப்பட்டிருந்த மனைகளென்க. அழகா லுங் காமநுகர்ச்சியாலும் மதனுமவன் படையுந் தோல்வியடைந்துசேவித்தாரென்க.

௧௪. படுவெய் கஞ்சவெள்வளையமென்க. தண்மைதருதலாற்றாமரை வளைய முமுடன் கூறினார். படுவெய் - தடாகத்திற்பொருந்திய. ஆலவட்டம் - விசிறி. படீரம - சந்தனம். வடு-மாவடுவகிர்க்கு ஆகுபெயர்; "மாவின்வடுவகி ரன்ன கண்ணீர்" எனத்திருவாசகத்திற் கூறல் காண்க.

௧௫. செவிப்பூ-செவியிலணிந்தபூ. புன்முறு வலிதழூறல்-புன்சிரிப்பையுடைய அதரத்திலூ றுமமுதவூறல். மூழ்கி-அமிழ்ந்தி. கலகமிடுத லால்வரும் பரிதாபமென்க. பரி-மிகுதி. வெம் மைக்காலத்திற் குளிர்ச்சியைத் தருதலால் ஈர மூலையென்றார்.

௧௬. மாரவசந்தனையகன்று-மாரனுக் குரிய தென்றலைநீங்கி. வெங்கோடை-முதிர்வேனிற் காலமென்க. சீதளமேயன்றி அக்கினியும் எனப்பொருள்கொள்ளநிற்றலால் உம்மை எச்சம்.

பிணங்கினார்-மணங்குழம்பினாரென்க.

௧௭. கொண்டல் - கீழ்காற்று. கோடை - மேல்காற்று. வாடை - வடகாற்று. மாருதம் - காற்று. வழக்கம்-இயங்குதல். ஆடைமுதலிய விவற்றான்மாத்திரங் காற்றியங்கினவென்பதா ம். ஓடை - நெற்றிப்பட்டம். இறகு - மயிலிற காற்செய்த விசிறி ஆகுபெயர்; இதற்குப்பற வைகளிறகு எனக்கூறலுமாம்.

௧௮. தாழ்-தாழ்வு. இல்-இல்லாத. குவளை-செங்குவளை. பாழி - சிறுகுளம்; கொடுந்தமிழ் நாட்டுப்பூழி நாட்டார்சிறுகுளத்தைப் பாழியெ ன்பர். பூழிபடுகமர்வாயநானிலம்-புழுதிபொருந் திய பிளப்பைத்தம்மிடத்துடைய முல்லைமுத லான நான்காகியநிலம். நீர்போல இன்பஞ் செய்தலால் உருவகமாக்கி அருட்புனலென்றார் தனக்கெனப்பாலைக்கு நிலமின்றாதலில் நானில மென்றார். இறைக்கின்ற-இறைக்கப்படுகின்ற, இதிற்படுவிகுதி தொக்கது. தாழிநறுங்குவளை என்னும் பாடத்திற்குத் தாழிகளிலுண்டுபண் ணப்பட்ட நறுங்குவளையென்க.

௧௯ நீகாரம் - பனிநீர். பாகு - பால். ஆர்-உவம உருபு. பயில-பொருந்த. காளம்-கருமை. ஆகாரம் - உடம்பு. கார்காலம் என்பது ரகர வொற்றிடைவந்த ஆசெதுகை.

# காண்டவதகனச் சருக்கம்.



௧. சிகைக்கொழுந்து - சுவாலையின் கொழு ந்து. ஓமபபுகையென்பார் புனிதவெண்பு கை யென்றார்.

௨. அக்கினிதேவனாகவிருத்தல் பற்றித் தவிசிற்குவேதிகையை உவமைகூறினார். அவி-அவிப்பாகம் உந்துதல் - மேன்மேல் வளர்தல். ஓதனம்- அன்னம்

௩. மூனி - அண்மைவிளி. போனகம் - அன்னம். சற்பாத்திரனாய்த்தானேவந்த அதி தியாதலில் உவகையுண்டாயிற்றெனக. அரிய வற்றைக் கொடுத்தல் ஔவையார்க்கு நெல்லிக் கனிகொடுத்த அதியமானெடுமானஞ்சி யிடத் தும், வழங்குதற்கேற்றன வல்லவற்றைக்கொ டுத்தல் தம்மனைவியையீந்த இயற்பகைநாய னார்மாட்டும், தம்மிற் பெரியனவற்றைக்கொடு த்தல் மாயமுனிக்குப் புண்ணியத்தையீந்தகன் னன் மாட்டுங் காண்க; முறையேபுறநானூறு, பெரியபுராணங், பாரதமிவற்றிற் கூறுப.

௪. இருபிறப்பினன் - பார்ப்பான். உதாச னன் - ஓமஞ்செய்வனவற்றையுண்பவனாகிய அக்கினி. உணா-உணவு. ஆகியென்னுமெச்சம். கூ-ஆங்கவியில் என்றான் என்னுமுற்றுவினை கொண்டது. இந்திரன் காவலுடைமையாற் காண்டவத்தையெரிக்க உடன்படவொன்றிவ் வனம் வந்தேனென்பான் ஒளித்துவந்தனனென் றும், அவ்வனத்தை ஆசைதீரவுணல் வேண்டு மென்பது விளங்கக் குளித்தருந்தி தற்கென் றுங் கூறினான்.

௫. நால்வகைமகிருகங்கள்-நால்வகைப்பட்ட தாவரயோனிகள்; அவைவித்து,வேர், கிழங்கு,

கொடிகளிற்றோற்றுவன. மகீருகம் - பூமியிற் றோற்றுவது. ஆலயம்-தங்குமிடம். அரி-சிங்கம் கடையடிக்கு - கடைந்தாற்போன்ற கூறியபற் களில் நஞ்சையுடையதக்ககன் என்னும்பாம்பு வாழ்கின்றவனமாகும். கண்டீர்-அசை. தக்கக னும என்றவும்மை எச்சத்தோடு சிறப்பு.

௬. தொகுந்தராதலம் - நெருங்கியவுலகம். மு க ம் - ஆகுபெயராகி வாயையுணர்த்தியது. ஒருமுனைபட - ஒருமுகமாக. சொரிந்த-பிறவி னைவிவ்விகுதி தொக்குநின்றது. இக்காண்ட வத்தையெரிக்க அக்கினிதேவன் வந்ததற்குக் காரணமென்னையெனில், சுவேதகியென்னும ரசன் ஒருயாகத்தைச்செய்தான. அது மிகவும் புகைந்தமையால அதனைநடத்திய முனிவர்கள் மிகவருந்தஅதனைவிடுத்துப்போயினர்; அரசன் அதனை நிறைவேற்றப்பிராமணர்களைவேண்டி னன். அவர்களுடன்படாது பரமசிவனைக்குறி த்துத்தவஞ்செய்யென, அரசன் அவ்வாறுசெ ய்யச்சிவபிரான் வெளிப்பட்டுப் பன்னிரண்டு வருடம் நெய்யை இடைவிடாமற்சொரிந்து ஓமஞ்செய்வாயாயினுன்கருத்து முற்றுமென் றார். அரசன் அவ்வாறோமஞ்செய்து பிரார்த் திக்கப்பரமசிவன் துருவாச முனிவனையழை த்து இவ்வரசன் யாகத்தை முற்றுவிப்பாயெ னக்கட்டளையிட்டனர் அம்முனிவன் அவ்வா றேமுற்றுவித்துப்போயினன். அவ்வரசன்பன் னிருவருடஞ் சொரிந்த நெய்யாகுதியினாலும், அவிகளினாலும் அக்கினிதேவனுக்கு வாட்ட முந்தீர்ப்பலமும் நிறவேறுபாடு முண்டாயின; அதனாலவன்வருந்திப் பிரமதேவனிடத்திலே தன குறையைத்தெரிவித்தான். அவன் காண் டவமென்னும்வனத்தில் அநேகஔடதங்களும் பிராணிகளுமிருக்கின்றன, அவ்வனத்தைநீயு ண்பாயாயின் அங்குள்ள ஔடதங்களாலும் பிராணிகளினுடைய மேதசுகளினாலும உன் னோய்நீங்குமெனக் கூறினன். அக்கினி அவ் வாறே அதனையுண்ண எழுதரமுயற்சித்தும் இடையூற்றாலது முடிவுபெறாதாயிற்று. அக கினி மீண்டுஞ்சென்று பிரமதேவனிடத்திற் கூற, அவன் கிருஷ்ணார்ச்சுனர்களாலுனக்குக் கிடைக்கும் அவர்களிடம்போவாயெனக்கூற, அவன்கூறியவாறே அவ்விருவரிடத்தில் வந் தானென்பர்.

௭. கூர்-மிகுதி. வடி - கூர்மை. ஈந்தனம் தெளிவுபற்றி இறந்தகாலமாயிற்று. வாசியும் என்றவும்மை குரக்குக் கொடியையுந் தழுவி நிற்றலால் எண்ணேடெச்சமாம். வருங் கவியி லறிக.

௮. தொழில் - சாரத்தியம். அருணனில்-சூரியன் றேர்ப்பாகனாகிய அருணனைப்போல. காய்ந்த-பகைவரை வதைத்த. உலையிற்காய்ந்த வென்றுமாம். நாழிகை-தூணி. மாண்க்கக்கவச மணிந்தமையால் அருக்கனை புவமைகூறினர்.

௯. சிஞ்சினீ - விண்ணாணி. வாழ்வனசத்து வம்-வாழ்வனவாகியபிராணிகள். வீரத்தாலும், தேவாக்குணவளிக்கு மிவ்வக்கினி தேவனுக் குணவளிக்கப் பெற்றேமென்னு மகிழ்ச்சியா லும் புயங்கள் பூரித்தனவென்க.

௰. ஆழி - கடல். வடவைமுகத்திடை-பெ ண்குதிரைமுகத்தில். வனதிற்குக்கடலையுவ மைபாகக்கொள்க. முருக்கல்-அழித்தல். பாழி-பெருமை. பாவகன்-அக்கினி. பவனன் - காற் று. அடுக்கு, உவகைபற்றிவந்தது. பாங்கு - உறவு. புறப்பொருள்வெண்பாமாலையுரையிற் காண்க

௰௧. வாளம்-வட்டம். இந்திரன் பூந்தோட் டத்திற்கு நந்தனமென்று பெயர்கூறுப.

௰௨. ஆகுலம் - வருத்தம். தூநிறம் வெண் ணிறம். கபோதம்-புறா. ஓடு ஏதுவின்பொ ருட்டு.

௰௩. தடம்-மலைப்பக்கம். கதுவிய-பற்றிய. பலநிறப்பொருளுண்மையால், அவற்றிற்பற் றிய தீயின்புகைகளுஞ்செம்மைமுதலிய நிறமா யினவென்க. இது இல்பொருளுவமை.

௰௪. புயங்கம் - பாமபு. குவடு-சிகரம். சா ரல் - மலைப்பக்கம். பாம்புகள் தனக்குப் பகை யாதலிற் சூழ்வருதற்குப் பரிதி அஞ்சுகின்று னென்க.

௰௫. கோத்திரம் - மலை. கவான் என்றது பக்கத்தை. திறம்-பகுதி. குலிகநீர் - இங்குலி கங்கலந்தநீர். தாது-பொன். அன்றியும் என்ப தனை மூன்றாமடியிறுதியினுங் கூட்டுக. இது பலபொருளுவமை.

௰௬. தனைத்தபாதவம் - ஒன்றையொன்று பிணித்தமரங்கள். வன்னியின் சிகாவர்க்கம் - அக்கினிச்சுவாலையின் பகுதிகளென்க. பொறி யளி - புள்ளியையுடைய வண்டு. கிசலயம் - தளிர். தினைத்த - நெருங்கிய. தீபசாலம்-தீப விருக்ஷம். பற்றின எரிவானவன்னியின் சிகா வர்க்கமென்க.

௰௭. மயங்கியபொறிமாலை-கலந்ததீப்பொறி களினொழுங்குகள். காம்-கிரணம். அடவி-காடு. முழைத்த - முழைஞ்சின்றன்மையையுடைய. மழைத்த-முகிலின்றன்மையையுடைய.

௰௮. கேசரிக்குலம்-சிங்கக்கூட்டம். உளை-பிடரிரோமம். வாலதி - வால். விளிவுடைச்

சவரங்கள்-(ஒருமயிர்போகினும் உயிர்வாழாது) இறந்தலையுடைய கவரிமானகளென்க. சோக வெங்கனல-(அகத்திலேகொண்டமானமாகிய) சோகவெங்கனலென்க. சலித்தல்-புடைபெயர் தல்.

௰௯. இரலை-புல்வாய். உழை-மான். மெய்ப் புறம் - மெய்யாகிய உடம்பு; உடம்பின்புறம் எனினுமாம் அப்புறம்-அவைகளின்புறம்; அப் பால எனினுமாம்.

௨௰. முதலடிக்கு - புறத்தே வயிரத்தையு டையவேய்ஙகுழலின்றுவாரங்கடோறுங் காற் றூற்பாங்கொலிக்கின்றவென்க. கழை - ஆகு பெயர். புறத்துக்காழுடையன பனைமுங்கின முதலாயின; அவை பெண்மரம் என்றுபெயர் கூறுப. அசுணத்தை விலங்கெனபர் நச்சினார்க் கினியர். சூடாமணி பிங்கலநிகண்டுகளிற் பற வையென்பர் சடுலவோசை-தீபபற்றியெரித லாலுண்டாகுமொலி; பின்னா இச்சருக்கத்திற் சடுலவாரவமஎன்பதனாலு முணர்க. ஊழ் - ஊழிக்காலம. உரகர்-பாமபுகள்.

௨௧. விபினம - வனம். சாலம - கூட்டம். சினை-கொம்பு. சிகாவளகலாபம் - மயில்களின் தொகை. அலகு-மூக்கு. பத்தி-வரிசை. புனை தல-அலங்கரித்தல.

௨௨. ஆசுகன்-வாயு; விரைந்துசெல்பவன். ஆசுசுக்கணி-அக்கினி; விரைந்து சுரத்தைவற றும்படிசெய்வதில் விருப்பமுள்ளவன். புலிங்க சாலம்-தீப்பொறிக்கூட்டம். புகல் - புகலிடம். பாசு-பசுமை.

௨௩. [illegible]. குஞ்சி-குடுமி. வஞ்சி-கொடி. நகமாகிய பூரண மதியென்க பஞ்சி - செமபஞ்சுக்குழம்பு. பத யுகம்-இருகால்கள்.

௨௪. மூவர் - வாரணாவதச்சருக்கம் ௱௩௧-ஆஞ்செய்யுளிற்காணக. பைப்புறம்-படத்தின புறம; படத்தின்கண் எனஏழாமுருபுமாம். தப்பி னாரும் என எச்சவும்மை விரிக்க.

௨௫ விழிகளும் கரிந்தன பொறியெழுந் தனவென்க. பொறி-தீபபொறி. மிகை - அதி கம். தகைவு-தடை. கழை-மூங்கில். சடுலவார வம்-சடுலவொலி.

௨௬. விரதம - நியமம். குறித்தகாலத்தில் உதித்தல், மறைதல் செல்லுதலாகிய நியம மென்க. அக்கினிபற்றிய காண்டவத்திற்குச செம்பொன்மால்வரை உவமானமென்க. அநு சன்-தம்பி; உபேந்திரனாகிய கிருட்டிணன். சாதம்-(அக்கினிதேவனுக்குக்கூறிய)சத்தியம். தாவகம்-வனம். பாவகன்-அக்கினி. பாகசாத னன்-இந்திரன்.

௨௭. மூரண்-வலி. மூரி-பெருமை. உந்தி உடைத்தலினெனக்கூட்டுக. உந்தி - தள்ளி. இந்திராலயம - இந்திரன்கோயில். சூடிகை - சுடிகை.

௨௮. தமனியச்சிலை-மேருமலையாகிய பொ ன்வில். வெள்ளூர்தி - இடபவாகனமென்க. அழலுதல்-கோபித்தல். வலாரி - வலனென்னு மசுரமன்னனைக் கெடுத்தவனாகிய இந்திரன். கானவர்-வேடர்.

௨௯. புகையான் முகினிறமதிகமாகுமென் க நிரந்தரம் - எப்பொழுதும். ஈரிருமருப்புப் பொருப்பு-வெள்ளையானையென்க.

௩௰. ஏவகவிருத்தச்செவ்வியின்றனு-பாண த்தை யகத்திலுடைய இந்திரன் விலலெனக. விருத்தச்செவ்வி - பெரியோர்களாற்கேட்கபப டுபவன, பெரியோர்களிடத்தில் விஷயங்களைக் கேட்பவன் என்பது பொருள். சேவகம்-வீரம். நா - எழுவிதநாக்கையும் எனக. விதிர்த்தல்- அசைத்தல. சலதரசஞ்சலாசாலம் - மேகத்தி லுண்டாகுமின்னற்கூட்டங்கள்.

௩௧. பிளிறு - ஒலிக்கின்ற. சூழிய-சூழ்ந்த. புவனம்-நீர். பவனம-காற்று. நகை - வீரநகை யென்க.

௩௨. தூமம்-புகை. எமது - எம்முடையது. உம்மை-எச்சம. மா-பெருமை. தேயுவினின்று மபபுத் தோன்றுதலாற் [illegible] றென்க. அற-மிக.

௩௩. [illegible] தந்தலைவனாகிய இந்திரனவனமாதலால உரி மைபற்றி எங்கள் காண்டவமென்றனவென்க.

௩௪. நுகர்ந்தென - உண்டாற்போல. [illegible] வினையாலணையும்பெயர். வேலை-கடல். [illegible] பலதிறம்.

௩௫. தொக்கு-திரண்டு. அடல்-வலி. சோ னை-விடாமழை. [illegible] கடலுமெனனுஞ் சிறப்புமமை விகாரத்தாற் றொக்கது. இடியொலி வேதவொலிபோன றிருந்ததென் [illegible] மொழுகாண்டவ [illegible] சோனை கொண்டலா [illegible]. மழை அக்கி னியின் [illegible] அவ னைத தணித்திலது எனபது கருத்தாயிற்று.

௩௬. மாரி-மழை. வி - பாணம. உணவைக் கொடுத்ததனறிக் கவிகையும கொடுத்தான எனப் பொருள்படலால் உம்மை எச்சத்தொடு

சிறப்பு. கவிகை-குடை.

௫௭. பொசிதல்-நீரரும்பல். தொடையல்-மாலை. அழித்தல்-ஈண்டுவீரறமுகத்தலையுணர்த்தியது.

௫௮. மதலை - பிள்ளை. வாளிகளாற்கண்டகூடம்-சரக்கூடமென்க. சண்டம்-வலி.

௫௯. சாயகமண்டபம் - சரக்கூடமென்க. அவன்றன்மெல்லியல் அத்தக்ககன் மனைவியானவள். மகவை-புத்திரனை. உம்- இசைநிறை, சிறப்புமாம். செக்கனல் - விகாரம். தன்-சாரியை. நாகருறவைக்கருதாது அக்கினிக்குதவியவாக்கை நிறைவேற்றுதற்கு வீழ்த்தினான் என்பது கருத்தாக உரக கன்னியைத் திருமணஞ்செய்தான் வீழ்த்தினனென்றார்.

௬௰, அயில் - கூர்மை. சதகோடி வச்சிராயுதம் ; நூறுமுனையுள்ளது. கரு - சூல். செருவயிற்புரள-அப்போர்க்களத்தினின்றும் விலக. தோழன்சிறுவன்-தக்ககன் புத்திரனாகிய அச்சுவசேனன். உதாசனன்-அக்கினி. ஒருவயிற்பிறந்தோன் - சகோதரன்; தேவர்கட்குத் தாய் அதிதியாதலால் அக்கினியை இந்திரனுடன் பிறந்தவனென்றார்.

௬௧. வாய்- ஈண்டாகுபெயராய்த்தலையினையுணர்த்தியது. வாலதி - வால். அலமரல்-சுழலல். வீடு-விடுதல். முனை-யுத்தம். வாரிதம்-மேகம். முன்னை, பின்னை இவற்றில் ஐ- சாரியை.

௬௨. தீரமால்-வலியுடைய இந்திரன். வீடு-விடுதல். சூரன்மாமதலை - கன்னன். அரணம்-காவல், அரணாகிய இடம் எனினுமாம் ஏ-தேற்றம்.

௬௩. வயின்-இடம். வயினும் என்னுமுற்றும்மைவிகாரத்தாற்றொக்கது. வேழம்-யானை. யாழ-அசை; இது படர்க்கையில் வந்ததென்க. தோல்வியின்றி நிற்றலிற் பெருந்தனையனென்றார்.

௬௪. சாலம்-கூட்டம். திளைத்து-நெருக்கி. அணிந்தயூகசாலம - அணிவகுத்தபடை வகுப்பின் கூட்டம். உருத்து கோபித்து. பகடு - யானை. உள்ளமும் என்றவும்மை எச்சம். நிகரின்மையால் ஏகமென்றாரென்க.

௬௫, சிரங்களாய் - தலைவர்களாகி. முப்பத்துமூவர் - மருத்துவரிருவர், வசுக்களெண்மர், உருத்திரர் பதினொருவர், சூரியர் பன்னிருவரென்க; எண்ணிய வசுக்களென்னுஞ் செய்யுளிற் பிரபாசன் வீடுமனாதலின் அவனை விலக்கியமையால் இங்கே முப்பத்துமூவர் என்றது அவனையொழிந்தோரையென்க. வாகம் - வாகனம். அணிந்தார் - அணிவகுத்தார். கொல்-ஐயம். விபுதர்-தேவர்.

௬௬. திகிரி - தேரினொருருளை. உச்சமாமகத்தில்-(தக்ஷப்பிரசாபதிசெய்த) உயர்வாகிய யாகத்தில். துணையா - இதில் ஆகவென்னுஞ் செயவெனெச்சவீறுதொக்கது. அருக்கன் என்றது பிரதானமான இரவியை. அருக்கர் பன்னொருவர் என்றது வைகர்த்தன் முதலோரை இழந்து- இழக்க. செயவெனெச்சஞ்செய்தெனெச்சமாய்நின்றது. சிவபிரானை மதியாது செய்தயாகமாதலாலங்குவந்திருந்த தேவர்களை வீரபத்திரர்தண்டிக்கும்போது இரவியின் பற்களைத் தகர்த்தாரென்க.

௬௭. இங்கே உருத்திரரென்றது முன்பு தேவருங் கோடியென்னுஞ் செய்யுளிற்கூறியவாறே பதினொருகோடித்தேவர்கட்குத் தலைவராய் நின்ற பதினொருவரை, இவர்கட்குச் சிவசின்னங்களுணடென்க; இவர் தேவகணத்தவரேயன்றிச் சிவகணத்தலைவரல்லரென்க.

௬௮. அமர்-யுத்தம். நிலயம்-இடம். ஆயுள் வேதியர்-மருத்துவர். ஓ-எதிர்மறை.

௬௯. ஆசுகன்-வாயு. மதி-குபேரன். சோமன் என்றுங் குபேரனுக்குப் பெயருண்மையால் ஈண்டுமதியென்றார். மதிமுடித்தவன் என்றது வடகீழ்த்திசைக்கிறைவனாகிய ஈசானனை. இவனுக்குமேற்கூறிய உருத்திரர்பதினொருவருக்குப்போலச் சிவசின்னங்களுண்டென்க. இச்செய்யுளில் இந்திரனையொழிந்த திக்குப்பாலகரெழுவரைக் கூறினாரென்க. அரக்கன் என்றது நிருதியை.

௭௰. கொங்கர் பூபதி தன்பொற்பதம் பொருந்தலர்போல-கொங்கர்குலபூபாலனாகிய ஆட்கொண்டானுடைய அழகிய கால்களை அடைக்கலமென அடையாதபகைவரைப்போல. ஏனை அறுவகைமுகிலுமஞ்சிமீண்டமை கூறாதேயமையும். அச்சத்தால் உடம்பு வெளுக்குமென்பதை சூதுபோர்ச்சருக்கம் ௱௬௬-ஆஞ் செய்யுளிற்காண்க. பாகையுந்தனது என்பது பாடமாயின் வக்கபாகையென்னு நகரமென்க.

௭௧. இடித்துவசம்-இடிக்கொடி. காயம்-ஆகாயம். காயம்-சரீரம். பரிவு-அன்பு. நவை-குற்றம். இந்திரன் அருச்சுனனிவர் பகையாகிய நவையைநீக்குதலாலுந் தெய்வமொழியாதலாலும் அசரீரியை நவைதீர் நல்லுரையென்றார். அத்தந்தையென்னுஞ்சுட்டு உலகறிபொருட்டு என்பர்.

௭௨. குருநிலம்-குருக்ஷேத்திரம். குமரன்-அத்தக்ககன்குமரனாகிய அச்சுவசேனன். தூமக்

கொடியன் - அக்கினிதேவன். நரனு-நாரணு மர்களிவிருவர் எனக்கூட்டுக. மனிதரல்ல ரென்பது கருத்து.

௫௩. என்றுகொண்டு - என்று என ஒரு சொல்லாக்குக. குறித்தான் என்பதற்கு ஈண்டு ஊதினுனென்க. சங்கமும் என்ற உம்மை சிறப்பு.

௫௪. கடிமணம் - புதியவிவாகம். புடவி - பூமி. பூசல்-போர். சடைமவுலி-சடாமுடி. முடிவற-அளவின்றி. திருபர்-என்றது சித்திராங்கதனையும், வசுதேவனையும். கன்னியர் என்றது சித்திராங்கதையும் சுபத்திரையும்.

௫௫. மாசுணத்தரசன் மந்திரமமைத்து - சர்ப்பராசனுகிய தக்ககனது கோயிலையுண்டாக்கி. அவ்வனமென்க. ஆசுசுக்கணி - அக்கினி. அபயமென்றரற்றக்கேட்ட அர்ச்சுனன் மயனுக்கு அபயங்கொடுத்தமையால் அம் மயனைக் கொல்லும்படி சக்கரப்படைஎடுத்த கண்ணன் கொல்லாது கருணைபுரிந்தான் என்பது முதனூற்கதை; இதனையுட்கொண்டு திகிரிச் செங்கண்மாலென்முரென்க.

௫௬. கனம்-மேகம். வெங்கண்டு-புறந்தரச் செய்து. தவன் என்றது மந்தபாலமுனிவியை; இம்முனி நெடுங்காலந் தவமியற்றிப்பின் பிதிர் லோகத்தை அடைந்து அங்கே தவத்துக்குத் தக்கபயன் கிடைக்கப்பெருமையால் அங்குள்ள முனிவரை வினவ, அவர் பிள்ளைபபேறின்மையாற் கிடையாதாயிற்றென, மீண்டு பூமியில் வந்து காண்டவ வனத்தில் ஜரிதையென்னு மோர் சாதகப்பறவையோடுசேர்ந்து நான்கு குஞ்சுகளைப்பெற்று அவைகட்குச் செயற்பாலனசெய்து கற்பித்து அவைகளை அவ்வனத்தில்விடுத்து அப்பாற்செல்லும்போது வழியில் அக்கினிதேவனைக் கண்டு, காண்டவதகனஞ் செய்யுங்கால் தன்பிள்ளைகளாகிய குஞ்சுகளைக் காத்தல்வேண்டுமென்று வரம்பெற்றனன். இதனல் அக்கினிதேவன் அக்குஞ்சுகளைத்தகியாதொழிந்தான் என்பதுகதை. இம்முனிவன் கௌதமமுனி வம்மிசத்தவனென்பர்.

௫௭. பிற - வேறு. புவனமும் என்னுமுற்றும்மை விகாரத்தாற்றொக்கது. ஆசி - வாழ்த்து. நிறையவுண்டமையாலும், நோய்நீக்கத்தாலுண்டாகிய சுகத்தினுலும் அக்கினிதேவன் அசைந்துபொயினுனென்க.

௫௮. காவலர்என்றது நரநாராயணரை. தமரம்-ஒலி. முதலடியில் உம்மை சிறப்போடெச்சம். மும்முரசு-வீரமுரசு, நியாயமுரசு, தியாகமுரசு; புறநானூற்றுரையிற்காண்க. நியாயமுரசைநீக்கி மணமுரசைக்கூட்டியுரைப்பாருமுளர்.

ஆதிபருவம் முற்றிற்று.

# இரண்டாவது சபாபருவம்.

## இராயசூயச் சருக்கம்.

[o]

க. வினைமுழுவதுவுமுனைதோறு முரண் முருக்கி - பகையனைத்தைபும் போர்முனைதோறும்வலியழித்து. காக்குமாறே-காக்குநெறியாகிய கிருத்தியத்தையே; இதிலே எனைத்தொழில்செய்யினும் நியாயமாகப்பூண்ட தொழில் காத்தலேயென்பது தோன்றப் பிரிநிலையே காரங்கொடுத்துக் கூறினுரென்க.

உ. வியன் - மேன்மை. ஐம்புலனுமனமும் போல்-பஞ்சப்பொறிகளும் அவற்றைவிடயங்களிற் செலுத்திநிற்கு மனமும்போல. புலன்-ஆகுபெயர். தருமன்முதலிய ஐவரையுங் கிருட்டிணன் வேண்டுங்காரியங்களிற் பிரேரித்து நிற்குந்தலைமையு மொற்றுமையும் விளங்க இவ்வுவமை கூறினுரென்க.

௩. காண்டவத்தீயிற்றுன்புறும் வினைமுற்செய்தமையால் அருவினையேனென்முன். காத்துதவலில் நீர்தந்தவுயிரென்முன். கைம்மாறு - பிரதியுபகாரம். தெம்மாற - பகைவரிலராக. தெவ்-பகை. இப்பகை என்னும் பண்பு பண்பியையுணர்த்தி ஆகுபெயராயிற்று. குருபதி-என்றது தருமனை. சிற்பம் - சிற்பநூல். அம்மா-வியப்பிடைச்சொல். தான் அமைத்தற்கு அவர் உடன்பட்டிருக்குமாறு அரியமணிமண்டபமென்முன். இது சபாமண்டபமென்பர்.

௪. தரியலர் - பகைவர். திறை - வென்ற

அரசற்குத் தோற்றவரசர் கொடுக்கும் பொருள். தாராபந்தி-நக்ஷத்திரவரிசை; அவை பலநிறமுண்மையால் மணிகளும்பலநிற முண்மை கொள்க. பொய்கைதன்னில்-பொய்கைக்கரையிற் பொருந்திய கோட்டைக்குள் எனக; இது இலக்கணையாகக்கொள்க. இவ் விந்துவெனும் பொய்கை மைநாகமலைக்குசசமீபமாயுள்ளதென மூதனூலிற்கூறும. ஆறுமல் - அளவுக்கடையாமல். உபதானம் - முதற்காரணம. ஏ-தேற்றம்.

௫. அசைந்தாலும் என்றவும்மை எதிர்மறை - முன், நொடி இவை விரைவுதோன்றநின்றன.

௬. வீதிபோக்கி-ஒழுங்குபடச்செய்து. ஓதிடத்திற் சுருங்காமல் - சிற்பநூலிலோதுகின்ற இடங்களளவிற்குறையாமல். மாதிடத்தான் - சிவபிரான். வாய்க்குமதோவிது-இது கிடைக்குமோ. ஓகாரம்-எதிர்மறை. சுதன்மை-இந்திரன் சபாமண்டபம்.

௭. இனம - தன்சாதியர்கள். திங்கள்-மாதம். தண்டுவீமனுக்கும், தேவதத்தமென்னுஞ் சங்கு விசயனுக்குங் கொடுத்தானென்றும, இவை இரண்டும் விடபருவராசனுடையனவென்றும், விந்துவெனும் பொய்கையினின்றெடுக்கப்பட்டனவென்றும், இத்தண்டாயுதம் எவ்வகை ஆயுதங்களாலுமழிக்க முடியாவலியினதென்றும், இச்சங்கம் ஒலிக்கிற் பகைவர் மூர்ச்சிக்கத்தக்க ஒலியுடையதென்றும், இச்சபா மண்டபம் நீரில்லாதவிடம் நீரிருப்பது போலவும் நீருள்ளவிடம் நீரில்லாதது போலவும், இன்னுமநேக விசித்திரங்களமைக்கப்பட்டதென்றும் முதனூலிற் கூறப்பட்டன.

௮. குறிப்பு - கருத்து. வித்தாரம - அகலம். பொதுவாகத்தாரெனினும் ஈண்டுக்குவளை மாலையென்க. தருமனையிடியேறாகக்கூறினதற்கியைய இறைஞ்சலாகியசர்ப்பமென்க. இது ஏகதேசவுருவகம்.

௯. அமையம்-சமையம். தோன்றல்-பெருமையிற் சிறந்தோன். பணிந்திறைஞ்சி - தாழ்ந்துவணங்கி. என்செய்தான் என்னும் வினாவிற்கு விடைவருஞ்செய்யுளிற்காண்க.

௰. உபசாரமாவன-எதிர்கொளல் பணிதல் முதலிய ஒன்பதுவகையன; அவை பிங்கலநிகண்டிற்காண்க. போற்றுதல் - ஈண்டுவணங்குதல், பிங்கலநிகண்டிற்காண்க. சூதம்-மாமரம். போற்றுதல்புகழ்தல் இவ்விரண்டும் உபசாரம் யாவுந்தந்தனன முன்னர்க்கூறியவற்றிலுளவாகவும் அன்பாராமைமீக்கொளலாற் பின்னரும் போற்றினன் புகழ்ந்தானென்க.

௰௧. அமுதுண்டோர செவியிரண்டுதெவிட்டுவிப்பாய் - தேவர்கள் செவிகளிற் சுவையை நிறைவிப்பாய் தெவிட்டுவிப்பாய், ஞானி இவ்விரண்டும்விளி. தத்துவம்-உண்மை. மூன்றாமடியிற்கூறிய அடைமொழிகளாற் சிவபெருமானுடைய தியானவடிவடையாளங்களை விளக்கின. அன்றியும், அவை முறையே கருமமே கடவுளாகக்கொண்ட மீமாஞ்சகருடைய செய்கை பயன்றருதலில்லையென்பதுணர்த்துமாற்றாற் பதியுண்டென்பதும, எக்குற்றம்புரிந்தோருஞ் சரணடைந்தாலவரை வாழ்விக்குங்கருணையுடைமையும, எத்தொழில்புரியினுஞ் சத்தியுஞ் சிவமுமாயிருந்து புரியுந்தன்மையுங் குறிப்பித்தனவென்க.

௰௨. மாடகூடம் - உப்பரிக்கையையுடைய மண்டபமென்க.

௰௫. மண்மிசைநால்விரனிற்கு மணிமகுடத்தணியரங்கில் - உலகங்களில் (சிறந்தசபா மண்டபங்களைக் குறித் தெண்ணுவதற்காகக் கைவிரன்மடக்குமபோது இதனையொன்றாகக் கருதிச் சிறுவிரலொன்றுமே மடக்கப் பின் இதனுடன் சேர்த்தெண்ணப்படுஞ் சிறப்புடையவையின்மையால் ஏனை) அணிவிரன்முதலிய நான்குவிரல்களுமடக்கப்படாமனிற்கப் பெறும் நவரத்நங்களாற்செயப்பட்ட சிகரங்களையுடைய சபாமண்டபத்தில்; இக்கருத்தைப் பின்பு இந்நூலாசிரியர் அதிரதர் தம்மையெண்ணிலணிவிரன்முடக்கவொட்டா முதிர்சிலைக்குருவும். எனக்கூறியதனாலறிக; எனவே உலகிலே தனக்கொப்பின்றியிம்மண்டப மேம்பட்டதென்பது கருத்தாயிற்று. சிறுவிரன்முதலாக மடக்கியெண்ணுதலே வழக்கமென்க. சிறுவிரற்கடுத்தவிரல் அணிவிரல், அதற்கடுத்தவிரல்நடுவிரல், அதற்கடுத்தவிரல்சுட்டுவிரல், அதற்கடுத்தவிரல் பெருவிரல் எனவிரல்களின் பெயர்வழங்கும். விராயவருமறைச் சடங்கினிராயசூயம-கலந்த அரியவேதத்திற்பொருந்திய கருமமாகிய இராயசூயமெனப்படும் யாகத்தை. இன்-சாரியை. கான்முளையை-புத்திரனுல். ஐ உருபுமயக்கம். கான்முளை ஒருபொருட்பன்மொழி. புரிவி-செய்விப்பாய். காலனூர் - யமலோகம். எனவும் என்ற வும்மைமுற்கவியிற் சாற்றியதையுந் தழுவிநிற்றலால் இறந்தததழீஇயவெச்சம். இராயசூயம் அரசாற்செய்யப்பட்டது; அஃதாவது ஏனை அரசரைவென்று அவர்கொடுத்த திறைப்பொருளாற் செய்யப்பட்டதாகிய யாகமென்க.

௧௪. தம்பியான விந்திரனும்- உபேந்திரனாகிய கிருட்டிணனும். உம்மை-சிறப்பு. எண்ணமானது சராசந்தனைவதைத்தலாகிய நினைவெனக. சராவென்பவளாலே பொருத்தப்பட்டவனுதலாலே சராசந்தன்எனக் காரணக்குறியாயிற்று. இச்சரிதம் பின்வரும். அந்த-பண்டறிசுட்டு. அடைய-எல்லாம். பந்தம்-விலங்கு, கட்டெனினுமாம். நரமேதயாகம்- நரனுடையகிணத்தையாகுதிசெய்யும் யாகம்.

௧௫. சதகோடி-முன்னதுவச்சிராயுதத்தையுடையஇந்திரன், எனையனவரையறைப்பட்டஎண்ணையுணர்த்தாது மிகுதியை யுணர்த்தின. கிரி-மைநாகமலை, இபம்-யானை, மதுகை-வலி. சதாகதிசேய்-வீமன. சாதித்தல்-கொல்லுதல். எல்லாத்தேயத் தரசர்களையம் வென்றடக்கிய பின்னர் இராயசூயயாகஞ் செய்தல்வேண்டும் இப்பொழுது மகததேசத்திற் கிரிவிரசநகரிற் சராசந்தமன்னன் நரமேதயாகஞ்செய்யவேண்டுமெனக்கருதி அநேகவரசர்களைச் சிறைவைத்திருக்கிறான். அவ்வரசரெல்லாம் அவன் கருத்தின்படி யொழுகுவர் அதனாலவனிடையூறு செய்யவுங்கூடும், முதலிலே அவனைச்செயிக்க வேண்டும். அது வீமனால் நிறைவேறும் எனக் கிருட்டிணன் கூறினமை முதனூலிற்காண்க.

௧௬. சந்தனமரஙகள் உள்ளனவாதலால் ஆரமணங்கமழசலமெனவிசேடித்தார். கூலம்-கரை. மதித்தல் - கடைதல். அஃதேசெய்யத்தக்கது என இசையெச்சமாக வருவித்து முடிக்க. முதலிரண்டடியு முற்கவியிற்கூறிய இறுதியடியுமியைந்து பொருள்படலால் வேற்றுப்பொருள்வைபபணியென்க.

௧௭. அரி - வண்டு. விரசுதல் - நலத்தல். இரண்டரி-வாயு, இந்திரன். கிரிவிரசம்-மலைகளாற்சூழப்பட்ட நகரமென்பர்.

௧௮. ஆசி-வாழ்த்து. கந்து-தூண். குவவு-திரட்சி. காட்சி-பார்வைக்குறிப்பு என்க.

௧௯. விது-சந்திரன். மான்மதம்-கஸ்தூரி. யாதவன்-யதுவம்மிசத்தான். காவலர்க்கு - வாயிற்காவலரால் இதுஉருபுமயக்கம். முனிவராய் வந்தோமென்றதனால் அவவையொழிந்தஅரசர் முதலாயினர் அனுமதி [illegible]றிப புகுதலாகாமை பெறப்பட்டது. ஓ-எதிர்நிலை அசையெனினுமாம். போர்குறித்துவந்தோர் நகர்காண்பான் வந்தோமென்றது பொய்யன்றோவெனின்? நகரார் காணவந்தோமென்னும் பொருளுந்தராலாற்பொய்மையன்றென்க.

௨௧. நோயென-(மருந்திற்கு)ப் பிணிநீங்குவதுபோலவென்க. முதலிரண்டடியில், சராசந்தன் மருகனாகிய கஞ்சனைக்கிருட்டிணன் கொன்றகாரணத்தாற் பதினெட்டுத்தரம் விளைந்தபோரிற் றோற்றோடிக் கிருட்டிணன் வடமதுரையை விட்டு மேற்குச் சமுத்திரத்திலே துவாரகாபுரியையுண்டுபண்ணி அதிலே யாதவருடனிருந்த கதையைச்சுருக்கியினைனக் கூறினரென்க.

௨௨. மதலை-மகன், இவன்பெயர் சகதேவனென்பர். பெரும்போர்க்குச்செல்லுமரசர் அந்தியத்தை நினைந்து செய்யும்வழக்கப்படி தன மகனுக்கு முடிசூட்டினனென்க.

௨௩. யாளி-சிங்கம. சமரமண்டலம்-போர்க்குரியமண்டலவகை. முட்டி-குத்துதற்குமுடக்கிய கை. திங்களொன்றினிற் பாதிநாளினும் எனக்கூட்டுக. நளிரவு-செறிந்த இரா.

௨௪. எழுகிரி-உயர்கின்றமலைகள். போதகம்-திக்குயானைகளென்க. மெய்யுற-உண்மையாக. மணமபறையறைதல், நெஞ்சுதுடித்தல்.

௨௫. காலுடன் பறித்தகால்-அடியோடுபிடுங்கியவாயு. வாயுதேவனுடன் ஆதிசேடன் இகலிமேருமலைச்சிகரங்களைத் தன் படங்களான் மூடிக்கொள்ள வாயுதேவன் மூன்றுசிகரங்களை பபிடுங்கித் தக்கிண திசையில் வீசியெறிந்தான எனனுங்கதையைச் சுருக்கிப் பொன்வரையின முகுகுவடு காலுடன்பறித்த காலென்றார்; அம்முகுகுவடும் திருக்காளத்தி மலையும், திருசிராப்பள்ளிமலையும். திருக்கோணமலையுமாகியதலங்களாகித் தக்கிண கைலாயமென்றுசொல்லப்படுமே; சிவந்திபபுராணங்கந்தபுராணஙகளிறகாண்க.

௨௬. மிருகப-ஈண்டுத்தலைமைபற்றிச்சிங்கமென்க. உரறு-உணர்வுறறு. விதலை-நடுக்கம். மேவலன - பகைவன. முடககற - மடக்காமல். கனகன்-இரணியன் கேளரி-சிங்கம.

௨௭. கேதனம - கொடி. கேசரி - சிங்கம். மலைந்து-பொருது. ஆல-அசை.

௨௮. கீணட-கிழித்த. மரகதவடிவோனென்றது கிருட்டிணனை. அக்குறிபபினாற் குறித்து-அவ்வடையாளக்குறிபபாலறிந்து வேறிடுதலையுங்காலுமாறுபட. அடையாளக் குறிபபாவது - ஒருதுரும்பையிரண்டாகக்கிழித்து அடிநுனிமாறியிட்டுக்காட்டியதென முதநூலிற் கூறினமை காண்க.

௨௯. புதுமை-சராசந்தனுடல் இருகூறாகப் பிரிந்து பின்பொருந்தி மாறியிடப்பொருந்தாது மாய்ந்ததாகிய புதுமையென்க.

௩௧. முதலடிக்கு தேவர்கட்குப் பகைமன்னராயினோர்களிலே மகத குலத்தினையுடைய

பிரகத்திரதனென்னுமோரரசனென்க. மீனோ
ததி-மச்சங்களையுடைய கடல். மகாரதனெனி
னும்பிரகத்திரதன் எனினுமொக்கும். அணிந்த-
அணிவகுத்த.

௩௨. மண்-பூமி. பசுவாக-யாகத்திற்குரிய
பசுவாக. கண்ணி - கருதி. விண்ணிற்றேவர்
களும் வெருவுவனவே மண்ணிலரசர்கள்
வெருவுதல் கூறுதேயமைந்ததென்க. இ தில்
உம்மை சிறப்பு. மகம் - ஈண்டு நரமேதயாக
மென்க. யாகத்திற்குரிய ஆட்டைப் பசுவென
வழங்குதலாற பசுவாகவென்றார்; சாகபசு நியா
யம் எனக்கூறுமாறு காண்க.

௩௩. தவன் - தவத்தனாகிய முனியென்க.
சூதம் - மா. சூதநிழலிடத்தில்வசித்திருக்கின்ற
முனியை சூதத்தில் வாழ்வதாகக்கூறிய திலக்
கணை. பிரகத்திரதன் காசிராச னிரட்டைப்
புதல்வியரை விவாகஞ்செய்யும்போது யான்
எவ்விதவுபசாரம புரியினும் இருவருக்குஞ் சம
மாகவே புரிவேன் என அவர்க்கு வாக்குத்தத்
தஞ்செய்தபடி ஒரு கனியை அவ்விருவருககுங்
கொடுத்தான் என்பது கதை.

௩௪. வடு-பிஞ்சு. ஆசு-விரைவு. மாசு-களங்
கம். பாசம்-அன்பு பாதிபாதிஎனைறது பப்பாதி
என வந்தது. அருளாற் பிளந்தென்க. வடுப்
போலுங்கண் என்பதே பெருவழக்காயிருக்கச்
கண்போல் வடுஎன்றதனாலிது விபரீதவுவமை.

௩௫. உற்பாதம்-ஈண்டுப்பின்வருங்கேட்டுக்
கறிகுறியாய் முன்னே நிகழ்வதென்க. வியன்-
விசாலம். புரிசை-மதில். சரா சரைஎன ஆவீறு
ஐயாயிற்று. பிரகத்திரதமகாராசனுக்குப் பிள்
ளையில்லையென்று வருந்துவதையறிந்து அளித்
தாளென்பதுகதை. சராவென்பவளாற் சந்து
செய்யப்பட்டமையாற் சராசந்தன் என்று பெ
யர் கூறுவர்.

௩௭. வினை-போர். இனைதல்-வருந்துதல்.
அந்தகரீசன் - அங்ககாத்துக்குத் தலைவனாகிய
சகதேவனென்க. துனை - வேகம். முன்னர்ச்
சராசந்தன் மணிமுடி புனைந்தானெனக் கூறி
யிருக்க ஈண்டு மகுடம்புனைவித்தென்ற தென்
னையெனின் அவன் விளவரசாக்கப்பட்டவ
னைத் தமவயமாககொண்ட விவர்தலையரசாக்
கி மகுடம்புனைவித்தாரென்க.

௩௮. கவர்ந்தோர் என்றது கிருட்டிணன்
முதலிய மூவரை.

௩௯. சுருதி ஆகுபெயராய் வேதவிதியை
யுணர்த்திநின்றது. மந்திரங்கிரியை திரவியங்
களிற் சிறிதும் லோபமின்றிச்செய்ய என்பது
விளங்கத் தேற்றேகாரங் கொடுக்கப்பட்டதெ
ன்க. வரம்-மேன்மை. குணபால்-கீழ்த்திசை.
காற்றிசைக்கு நிருதித்திசைக்கு நடு-மேற்குத்
திசை என்க. எம்பி-என்றம்பியாகிய நகுலன்.
வேளின்றேர்வருதிக்கு - தென்றிசை. இளை
யோன் என்றது சகாதேவனை. மலைவான் -
(வெற்றிபெறுதற்குப் பாராசரை)ப் போர்புரி
யும்பொருட்டு.

௪௰. கடவுளாலயம்-தேவமாளிகை. துண்
ணென்றிட்ட-திடுக்கிட்டன ; இது அச்சக்
குறிப்பு. இயம்-வாத்தியம். ஐவகை வாத்திய
மாவன-தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்
கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி, என்
பன. துழனி-முழக்கம்.

௪௧ மூன்றுமடியிற் றசாவதாரமுங்கூறின
தாகப பொருள்கொள்க. அரி - சிங்கத்துக்குங்
குதிரைக்கும்பெயர். மனுடவடிவமுஞ் சிங்க
வடிவமுஞ்சேர்ந்தது நரசிங்காவதாரம்; மனுட
வடிவமுங்குதிரைமுகமுஞ்சேர்ந்தது கற்கியவ
தாரம்; ஆகலாலிரட்டுறமொழிதலால் நரவரி
யென்றார். வாமனவதாரமும், பரசுராமாவதார
மும், இராமாவதாரமும், பலராமாவதாரமும்,
கிருட்டிணவதாரமும நரவடிவாதலால் நரர்
என்றா. இவ்வாறு ஒவ்வொரு காரணம்பற்றித்
தசாவதாரமெடுப்பினும் நாதனுந்தன்மையிற்றி
ரிவிலன் என்பதற்கு மெஞ்ஞானவானந்தமுமா
கிய நாதனென்றார். மெய்ஞ்ஞானவானந்தம் -
சச்சிதானந்தம்.

௪௨. வருதினி-சேனை. மும்மதம் - கன்ன
மதம், கைம்மதம், கோசமதம். முனைமுரண் -
முனைகின்றவலி.

௪௩. அவண் - அக்கீழ்த்திசையில். மற்று
மற்றும் - வேறுவேறு; உம் - அசை. இன்-சா
ரியை. தடிந்து-கொன்று. யானம்-ஊர்திகள்.
முற்ற-மிக. முற்றுதல், மிகுதல்; ஐங்குறு
நூற்றுரையிற்காண்க. குருதிநதி-செந்நிறநதி.
முருக்கி - கொன்று. தலைகளால்வரையினமுங்
குருதியாற்செந்நதியுமாயெழவென நிரனிறை
யாக்குக.

௪௪. அபயம் - ஆபத்துற்றவர் அதனைத்
தவிர்க்குமாறு வேண்டுகிறசொல். சிகரவடம
கீதரம்-கொடுமுடிகளையுடைய வடமலையாகிய
மேரு ; பூதரமெனினு மகீதரமெனினுமொக்
கும். இறை-கப்பம். தந்திவிதங்கள்-கிரிசரம்,
நதிசரம், வனசரம்என்பன; இவைகிரிமுதலிய
மூன்றிடத்திலுந்தோன்றிச் சஞ்சரிப்பனவாம்.
அடுக்கு-மிகுதி. கொண்டு கொடுவென விகார
மாயிற்று.

௪௫. நிசை-இரா. பாரத்தால் அசையவெ

ன்க. பராகம்-ஈண்டுத்தூளி.

சசா. பிஞ்ஞகன் - சிவபிரான். திறை - கப்பம். எழுபுணரி-வினைத்தொகை. பாரதப்பெயர்கொள்வருடம்-பாரதவருடம்; இப்பாரத வருடம் ஆயிரம்யோசனையெல்லையுள்ள குமரி கண்டத்துக்கு வடக்குள்ளதென்றும், அக் குமரிகண்டம்போ லெட்டுக்கண்டங்கொண்டதென்றுங்கூறினர்; திருவிளையாடற்புராணத்திற் காண்க.

சஎ. மாலியம் - மாலியவான் என்னுமலை. அந்தராதிபர்-அழகிய நிலமன்னர்; அன்றி அந்தர அதிபர் எனப்பிரித்து மலைகளிலே கந்தருவர்முதலானவர் வாழ்தலுண்மையால் அவர் எனப்பொருள் கூறினுமாம்.

சஅ. உத்தரகுருவினுள்ளாரை உத்தர குருக்கள் என்றார். உத்தரகுரு-போகபூமி ஆறினுளொன்று. மெத்திசைட்பனிநிலா - நிறைத்த கீர்த்தியாகிய குளிர்ந்த நிலா.

சகூ. பவனம் - காற்று. கவனம் - வேகம். எழுகிரிப் புறந்தெறுகிரீடி - (முற்கூறிய) எழு மலைகளின் பக்கத்திலுள்ள தேயங்களையடர்த்த அருச்சுனன். எழுகிரி என்பதற்கு மேலுயர்கின்ற மலைகள் எனக்கூறுவாருமுளர். அரி - வண்டு.

ருய. வடக்குள்ளதுவடாது, குடக்குள்ளது குடாது; இவை மரூஉமொழி. வடக்குள்ளதாகிய தேயம், குடக்குள்ளதாகிய தேயமென்க. அடுக்குகள் அச்சம்பற்றி வந்தன. அஞ்சல் - அஞ்சற்க; எதிர்மறை வியங்கோள். அடாத மன்னர்-பணியாதெதிர்த்தமன்னரென்க. ஏனை மன்னர்-போர்க்கஞ்சிய மன்னர்.

ருக. தூளவன்படை - தூளியால் அவ்வலியடைந்த. தாளவண்கதியுடைத்துரங்கம் - தாளத்துக்கியைந்த சிறந்தநடையுடைய குதிரை; எனவே நாட்டியக்குதிரையாம். சுடரூதல் ஆயுதங்களாலும் அணிகளாலுமாம்.

ருஉ. இசைக்கும்-ஒக்கும். கருக்குலைந்து - வலிமைகுலைந்து. கருமை - வலிமை. வெரு - அச்சம். அவர்கள் - அம்மேற்றிசைமன்னர். இசைக்கும்வகைகொண்டு எனபதற்குத் தங்கள் கீர்த்திக்கும் ஓர் வகையையுண்டாக்கி என்றுரைப்பினுமாம்.

ருச. இசைத்த - ஒத்த. இறைகொள்ளல் ஈண்டுநிற்றல். பணை - வாத்தியம். படர்தல் - செல்லுதல்.

ருரு. இருகடல்-ஈண்டுக் குணகடல், குடகடல்என்க. மத்திகை-சம்மட்டி. பத்திகைக்க-மனம்வெறுக்க. பித்திகைத்தொடையல் - சிறு சண்பகமாலை; பிங்கலநிகண்டிற்காண்க. பதி-மாகிஷமதியென்னும் பட்டணமென்க.

ருஎ. வஞ்சி - பகைமேற்செல்வோரணியுமாலை. எஞ்சி-மிகுந்து. மஞ்சிவர்ந்த-மேகமண்டலம்வரையெழுந்த. வீரர்அந்தணரைக்கொல்லாரென்று அவர்வடிவாகி வந்தானென்க. அக்கினியாற் சேனைகள் வருந்தும்போது சகாதேவன் அக்கினியைத்தியானிக்க அவன்வேதியர் வடிவாகவந்துமுன்னிற்கச், சகாதேவன் உமக்குப்பிரீதியான யாகஞ்செய்தற்பொருட்டு வந்தேனுதலின் இப்போரில் அதற்குமாறாக நீர் நிற்குங்காரணமென்னையென, அவ்வக்கினிதேவன் காண்டவவனமுண்டபோது உன்றமையனுதவிபெற்றேனுயினும் நீலாசன் என்னிடம் வரம்வேண்டியபோது சொல்லிய வாக்குத்தவறுமலிங்ஙனஞ்செய்தேனென்று கூறி, நீலாசனிடஞ்சென்று சகாதேவன் பெருமையையும் வரலாற்றையுந்தெரிவித்து யாகத்திற்காக மிகுபொருளைத்திறையாகக் கொடுக்கும்படிசெய்தான் என்பதுமுதனூற் கதை.

ருஅ. விந்தசயிலம் - விந்தமலை. எலநெட்டடவி-ஏலச்செடியாலாகிய பெருங்காடு. மலைச்சார்பினதாதலில் எலநெட்டடவியென்றார். எலநெட்டடவி வெளியாகமுறியமோதி எனக்கூட்டுக எழுகலிங்கம் - எழுவிதகலிங்கதேசமென்க. கால்-காற்று.

ருக. நாடுகடல்-நாடப்படுங்கடல். மலயம்-பொதியமலை. குடக்கிலுள்ள கொங்கநாடென்க. உமாதேவியார் கன்னியாம்பருவத்தாகவிருந்தலாற் பாண்டி நாட்டிற்குக் கன்னிநாடென்று பெயராயிற்றென்க. சங்க மருவிய செந்தமிழ்வழங்கு நிலமாதலாற் செந்தமிழ்க் கன்னிநாடென்றார். தன்றமையன் விவாகஞ்செய்யப்பட்டநாடாதலால் உறவடாப் புகுந்தென்றார். அங்குபசரித்துக் கொடுக்கக் கொண்டான் என்பார் பொருதென்றுறைக் கொளாவென்றுகூறினர். அங்குள்ளபொருள்களின்மிகச் சிறந்தது முத்தாதலான் மணித்திலமென அதனைமாத்திரங்கூறினர். "பூழியர் கோன்றென்னாடுமுத்துடைத்து" என்பதனுற் காண்க.

சுய. தனியாழி-ஏகசக்கரமென்னுமாநாடு. பௌவம்-கடல். நவ் - தோணி. மீனவம் ஒடக்கிருத்தும் வகையன்னிறு என்றதனால் அகத்திய முனிவர் பூமிசமமாகும்பொருட்டு வடக்கிருந்து விடுப்பத் தெற்குவந்திருந்தாரென்பது பெறப்படும்; அக்கதை கந்தபுராணமுதலியவற்றிற் காண்க.

௬௧. கன்னிலம்-கற்பாறையென்க. கொல்-அசை. இளையதாதை என்றது சகாதேவனை. சழக்கு-ஈண்டுத்தளர்ச்சி. உழக்கல்-கலக்கல்.

௬௨. யாரையோ-என்றதில் ஐ - சாரியை, ஓ-அசை. பாரை என்றதில் ஐ-சாரியை; அழகெனினுமாம். விபீடணனு மரக்கர்குலமாதலின் ஆதரவுவகைவுற்றானென்க. ஆதரவு-அன்பு. இலக்கணக்கொத்து "வேறில்லையுண்டியார்" என்னுஞ் சூத்திரவிதிப்படி யார் என்னும்வினா முன்னிலையில் வந்ததென்க. முன்னர் நிசாசராதிபன் என்னலாற் பின் அரக்கர்பெருமான் என்றது சுட்டின்பொருளாய் நின்றது.

௬௪. அறன்-தருமனாகிய யமன். கற்பனை-நியமம். கால் - வாயு. வெற்பு-ஈண்டுமேருசிகரம். வெற்பனைவெற்பனுக்கு உருபுமயக்கம். கால்விழுத்தவெற்பின் கதைமுன் வந்தது.

௬௫. பத்மராகம் என்னும்வடமொழி பற்பராகமெனவந்தது. மணியை இச்செய்யுளிற் கூறியதனான் முற்கவியிற் பொற்பனையுடன் கொடுத்தமை பெறப்பட்டது. இச்சகாதேவன் பின்வருவனவற்றை முன்னற்குறிக்குமறிவாற்றலுடையனாதலாற்றேவரை யுவமைகூறிப்பெருஞான பண்டிதன் என விசேடித்தார். பழம்பொருந்து சருக்கம், துருவாசமுனிச்சருக்கம், கிருட்டிணன் றூதுச்சருக்கமுதலியவற்றில் இவன் ஞானத்தை நன்குணர்க.

௬௬. ஆல்வரும் புரவி என்றது நாட்டியக்குதிரையென்க. ஆலல்-ஆடுதல். கோல்வரும்படி-செங்கோல்செல்லும்படி.

௬௭. அரணிய - அரணையுடைய. அரண்-மதில். இலங்கை-நீர்க்கு நடுவேயுள்ளவூர். மூர்த்தி-சரீரி; மூர்த்தியெனவே முன் அரூபியாயிருந்தோனென்பது விளங்கியது.

௬௮. வரன்-மேன்மை. உலூகன்-ஓர்முனி.

௭௧. காகதக்களிறு- கதம்என்னும்வடசொல் அடைந்த என்னும் பொருடாலால் துதிக்கையையடைந்தகளிறு என்க. ஓடுந்துரகதமென்க. கனிட்டரிருவர்வணங்கினர் என்றதனால் தருமன் எதிர்சென்றுபசரித்தன் மாத்திரஞ்செய்தமை விளங்கிற்று. அங்ஙனஞ்செய்தற்குக்காரணங் கிருட்டிணனுக்கு மூத்திருத்தலாலென்பர். வெள்ளைத்திருநிறத்தவனென்றது பலராமனை.

௭௨. புடைமருங்கு-ஒருபொருட்பன்மொழி. மாதரெல்லாம் என்றதனால், பேதைமார் முதலெழுவகைப்பருவமாதருமென்க.

௭௩. அஞ்சனம் - மை. திருத்தகஎன்பதற்குத் திருமகட்கொப்ப என்றுரைப்பினுமாம்.

௭௪. சங்கு - வளையல். கலாபம் - இருபத்தொருகோவைமணியென்பர் நச்சினார்க்கினியர்.

௭௫. குழை-காதணி. இழை - நூல். தனமாகியகுடம், கண்டமாகியகமுகு, தொடையாகிய கதலியென்க. தோள்-கை. பூரித்தல் இச்சையுறலாலென்க. மலர்-கூந்தன்மலரென்க.

௭௬. ஆவணமறுகு-மீமிசை; வீதி.

௭௭. எழுவகைப்பருவமாதர் - பேதைமுதலாயினார்; சூடாமணிநிகண்டிற்காண்க. மெய்வழி-உண்மைநெறி. போகமேகம்-போகத்தைத்தரு மழைமேகமென்க.

௭௮. மாடம் - மாளிகை. ஆடம்பரம். டம்பம். ஆபாதசூடம்-பாதமுதன்முடிவரையும்.

௭௯. திரிவிக்கிரமாவதாரத்தின் மேலுலகளந்ததாள் அண்டத்தைத் துளைத்தவழி கங்கைவாலாற் கங்கைதருபெற்கழலானென்றார். இது அளகநந்தை என்னும் பெயருடையதாய் மேருவில்விழுந்து கீழ்கடலிற்சேர்ந்தது. இச்சரிதம் வாமன கூர்மபுராணங்களிற்காண்க. பகிரதன் பொருட்டுவந்த கங்கை வாராககற்பத்தில் பிரமலோகத்தினின்றும் வந்ததென்பர். முகுளம் - அரும்பு.

௮௰. கண்டனைய-கண்டாலொத்த. பவளம். ஆகுபெயராக அதரத்தைக்குறித்தது.

௮௧. சகடாசுரன்கதை, கஞ்சன்கதை பாகவதத்திற்காண்க. சுருங்கச்சொல்லலாய் அஞ்சம்பெனக்கூறினும் ஐந்தாமம்புகொல்லுந் தன்மையுடையதனாலதனையொழித்து நான்கம்பேயெய்யப்பட்டனவென்க. ௮௪-ஆங்கவியிலறிக. புலன்ஈண்டாகுபெயராக்கிப்பொறியென்க.

௮௩. மன்றல்-மணம், நயனமாகிநின்றாரெனச்சினைவினை முதல்வினையோடு முடிந்தது. ஆகியென்பதை ஆகவெனத்திரித்துரைப்பினுமாம்.

௮௫. குந்திதேவியை உரிமையால் ஐவர் தம்மைப்பெற்றவளென்றாரென்க.

௮௬. உரை-புகழ்.

௮௭. மாகதேசன் - மகததேசத்தவனாகிய சகதேவனென்க. இவனை யிரவியெனக்கூறலால்எனைநரபதிகளைமதிநாண்மீனாகக்கொள்க.

௮௮. பனைக்கொடியோன்-வீடுமன். இரும்பினையுமென்னுமும்மைவிகாரத்தாற்றொக்கது. இரும்பினைக்குழைக்குநெஞ்சரெனவே மறத்தொழிலிற்சிறந்த வன்னெஞ்சரென்பது கருத்தாயிற்று.

௮௯. அந்தரம்-பேதம். தோற்றம்-காட்சி. அம்மா-வியப்பிடைச்சொல்.

கூ௰. தூரியம்-வாத்தியம். ஆரணம்-வேதம். பாரணம்-உண்ணுதல். வேதிகை - ஈண்டு ஓம குண்டம்.

கூக. அனற்கலுழனுக - அக்கினிகுண்டத்தைக் கருடவடிவாக. சுருதி-வேதவிதியென்க. கோட்டி-செய்து. ஏறு-இடபம். உபகுண்டம் நான்கும் இடபவடிவமாகச்செய்தாரென்க.

கூஉ. நாபியம்பெருமான் என்றது பிரமனை. வாழ்வு-தொழிலாகுபெயராய்ச் சத்தியலோகத்தை யுணர்த்தியது. முனிவர்கூட்டம் வசித்தலாற் பிரமலோகத்தை யுவமைகூறினரென்க.

கூச. திதி-நிலை. செவியிற்செப்பினனென்றதனாற் பிறரறியாவண்ணஞ் செப்பினனெனக.

கூடு. சங்கரன்விதி திரௌபதிமாலையிட்ட சருக்கத்திற்காண்க. கடையடிக்கு - விவாகத்தைப் பூமியினுற்பவித்த முறையாற் செய்தீரென்க. இவ்வாறன்றி விவாகத்தைப் பூமியை வேற்றுமையின்றி யரசாளுமுறைபோலச் செய்தீரென்றுங்கூறுவர். புவிமகள்-பூமி.

கூஎ. தந்தையுந்தாயுமெனக்கூறிப் பின் குந்தியும் பாண்டுவுமென்பது கூறியது கூறலன்றோவெனின், பாண்டு உற்பவகாரணனிலனுகவும் உரிமையாலவனைத் தந்தையெனக்கொள்ளுதலால் அவ்வாற்றாற் றருமனைப்பாண்டுவெனவும்; நகுலசகாதேவரிருவருங் குந்தியையுரிமையாற் றாயெனக்கொள்ளுதலால் அவ்வாற்றாற் றிரௌபதியையக் குந்தியெனவுங் கொள்ளல்வேண்டுமென்பது விளக்கி நின்றமையின் அன்றென்க.

கூகூ. கடுக்கைக்காடு-(சிவபிரானது)கொன்றைமாலையையணிந்தசடாடவி. வேளவிக்கேற்பன என்றது அதற்குரிய ஆடையணிகளை.

௱க. சாந்து - சந்தனம். இலையெனவே இனம் பற்றிப்பாக்குமுதலியனவுங்கொள்க. பனிதம்-கர்ப்பூரம்.

௱௩. சுத்தமுடைமையால் அக்கினியையுவமைகூறினர்; அக்கினிக்குச் சுசியென்னும் பெயருண்மையறிக. புரை-ஒப்பு.

௱ச. கலையுறுப்புத்தோல்-கருமானினுடைய கால்வால்முதலிய அங்கங்கள்தோன்றவுரிக்கப் பட்டதோலென்க. கலை-கருமான்.

௱டு. அரிணத்தொக்கு - மான்றோல். அருணமேனி-செம்மேனி.

௱கூ. புரிவு-விருப்பம். புல் - ஈண்டுத்தருப்பைப்புல். சுருவை-நெய்த்துடுப்பு. சுருதி-வேத மந்திரமென்க.

௱அ. குருமுகமாக உதாத்தமுதலிய சுரவமைதியோடோதிப் பொருளுணரப் படுதலால் எழுதொணு நான்மறையென்றார். அரும்பெறல்-சொன்னிலைமாறுதல். சுவாகை-அக்கினியின் மனைவி.

௱கூ. ஊழி-முறையுடையது. முகிலுமின்னுந் தருமனுக்குந் திரௌபதிக்கு முவமானம். யாகமுடிவினீராடுதற்கு அபபிருத ஸ்நானமென்றுபெயர் கூறுப.

௱௰. உபசாரம் பதினுறுவன-ஆசனமளித்தன் முதலியன. மயர்வு-மயக்கம்.

௱௰க. புனிதனென்றது வியாதமுனியை.

௱௰உ. அக்கிரபூசனை - முதற்பூசை. கதித்தான்-சொன்னான்.

௱௰௩. வேத்து-விகாரம். சேதிபதி-சேதிதேயத்தார்க்கரசன்.

௱௰ச. கொச்சை-ஆடு, கீழ்மையுமாம். உம்மை-இழிவுச்சிறப்பு. சச்சை-ஆராய்ச்சி. செச்சை - சிவப்பு. சர்ச்சா என்னும் வடசொல்சச்சை எனவந்தது.

௱௰டு. புறங்கான்-முல்லைவனம். காபாலி-சிவபிரான். ஏழ்தீபு-நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், கமுகு, தெங்கு, புட்கரம் என்பனவாம். தீபாலுமென்னுமுற்றும்மை விகாரத்தாற்றொக்கது. உலகிற்றீபுகளேழாகப் பகுத்தலின் உலகினடங்காதுமிகுந்தபுகழென்க.

௱௰கூ. சூரன்-சூரியன். குபேரன்-சந்திரன். பாவகன்-அக்கினி.வாகுசாரம்-புயவலியென்க. பூரம்-நிறைவு; பூர் என விகாரமாயிற்று. பொதுவர்-இடையர். கொல்-அசை. ஓ-வினு

௱௰எ. மதலை-அண்மைவிளி. ஆம்படியே-ஆகும்விதமே. ஆம்படியேபகர்ந்தனையென்பது உண்மைகூறினையென்பதுணர நின்ற குறிப்புரையென்க. தோற்றம்-புகழ். சூரன் மகன் வசுதேவனென்க.

௱௰அ. சூதிகை-பிரசவவீடு. தாய்-தேவகி. பிதா-வசுதேவன்; இவனபபோதிருந்தது வடமதுரை. கன்னியங்கிருப்ப - மாயைவடிவான பெண்குழவி தேவகியிடத்திருப்பவென்க. காளிந்தி-யமுனாநதி. அண்டர்க்கரசன்-இடையருக்கரசனுகிய நந்தகோபன்; இவன் மனைவி அசோதை; இவனூர் கோகுலம். இது யமுனநதி தீரத்திலுள்ளது. தெய்வத்தன்மையுணர்ந்துவணங்கினரென்க. பேசலாவுரை - பிறரறிந்துரைக்கமுடியாதவுரையென்க; அதுதான் பூபாரந்தீர்க்க வுற்பவித்தகிருட்டிணன் தன்னைக் காளிந்தி நதியைக்கடந்து அசோதையிடமும், அசோதைபெற்றபெண்குழந்தையைத்தேவகியிடமுஞ்சேர்ப்பிக்கவும் கூறுதன்முதலாயின.

இதுமுதலாக வொன்பது செய்யுளில்வருங் கதைகளைப் பாகவதத்திற்காண்க. ஈண்டுறைப் பிறபல்குமென்க.

௱௰௯. பூதனை-கஞ்சனால்விடுத்தபேயென்க. சான்ற-பெரிய.

௱௨௰. மறுகு-வீதி. கன்றாகவும், விளாமரமாகவும் வந்த அசுரர்மாயும்படி கன்றைவிளாவிற்சாடினனென்க. அரவு-காளியனென்னும் பாம்பு. புள்-அசுரனாகிய கொக்குப்பறவையென்க. தாலு-நா. அலகு-மூக்கு.

௱௨௧. ஓரை-மகளிர்விளையாடுமிடம். மூரி-வலி. அந்நியனல்லன் - அறியப்படாதபிறனல்லன். சிசுபாலனுக்கு மைத்துனனாதல்பற்றி அந்நியனல்லனென்றானெனினுமாம்.

௱௨௨. ஏறு-இடபம். படுத்தல்-கொல்லல். ஓரசுரனிடபமாகவந்தானென்க. ஆகண்டலன்-இந்திரன்; சத்துருக்களைக்கண்டிக்கிறவன் என்பது பொருள்.

௱௨௪. இது சராசந்தனுக்கஞ்சி யொளித்திருந்தானென்றிகழ்ந்தானென்க. மூரணறுத்து-பகைகெடுத்து.

௱௨௫. காளை - காளைப்பருவத்திலென்க. தானேமிஞ்சி-தான்மாத்திரமேமேம்பட்டு. உரியமேதினி-தனக்குஞ் சகோதரர்க்குமுரிய பூமியென்க. புரந்தான்-காலவழுவமைதி.

௱௨௬. முன்னோர் - தமையன்மார். முருக்கல்-கொல்லல். பின்னொருதமையன் என்றது பலராமனை. தாயிருவர் என்றது தேவகி உரோகிணியை.

௱௨௭. அறிந்தோர்க் குயர்ச்சியும், அறியாதோர்க்குத் தாழ்வுமென்க.

௱௨௮. எண்ணியது அவனிகழும் பிழை நூறு பொறுக்கவேண்டுமெனத்தவினைத் தொகையறிதற்பொருட்டென்க. அங்ஙனம் பொறுதல் சிசுபாலன்றாய்க்குதவிய வாக்கினாலென்றறிக.

௱௨௯. கன்னாட்டுதல்-சிறப்புப்பாயிரம் ௨௰-ஆஞ்செய்யுளிற்காண்க. அடுக்கு-வெகுளிபற்றிவந்தது.

௱௩௧. ஆதி-கேரோட்டம்; பிங்கலநிகண்டிற் காண்க.

௱௩௨. தானையாறு - அறுவகைப் படை; அவை -மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்பனவாம். அணிவகுப்புச்சருக்கம் ௨௰-ஆஞ் செய்யுளிற்காண்க.

௱௩௩. நான்குவிதாதம் - அதிரதம், மகாரதம், சமாரதம், அர்த்தரதம்.

௱௩௫. கம்பு-சங்கு. கன்னம் - காது. திரு-ஈண்டுவீரலக்குமி.

௱௩௬. புடை-பக்கம். பூதுரந்தரர் - பூபாரந்தாங்குமரசர். தொடை-பாணம். மறைபசுப்பாலன்-வேதங்களையும் பசுக்களையும் பரிபாலித்தவன்.

௱௩௭. நுண்ணியார்-நுணுகியறியுமறிவுடையாரென்க.

௱௩௮. பூரித்து என்றதன்பின், பொருது என்னுஞ் சொல்வருவித்துரைக்க. எஞ்சினர்-இறந்தோர்.

௱௩௯. வீரரைத்துறக்கமேறவிட்டிடுமிரவியைப்போல - பொருதிறந்தவீரரை வீரசுவர்க்கஞ்செல்ல விட்டிடுகின்ற சூரியமண்டலம்போல. கோளகை-அண்டமுகடு. அச்சுதன்-அழியாவியல்பினன்.

௱௪௨. விதி-சிசுபாலன் திருமாலைப்பகைத்துக் கதியுறுநியதியென்க.

௱௪௩. ஐவகைவடிவு - பஞ்சபேதமூர்த்தம். துவாரபாலகர்-வாயிற்காவலர்; இவர் பெயர் ஜெயன், விஜயன்.

௱௪௪. மிக்ககோபமுடைமையால் வெஞ்சினமுனியென்றார். துருவாசமுனிச்சருக்கம் முதற்செய்யுளிற்காண்க.

௱௪௮. சிந்துவிடை - கடலினடுவிடமாகிய இலங்கையிலென்க.

௱௪௯. சித்தெனவே பதியும்பசுவும், அசித்தெனவே பாசமுங்கொள்க.

௱௫௰. விரகு-கபடம்.

௱௫௧. முப்பொழுதினிகழ்செய்தியை முப்பொழுதென்றதாகுபெயர்.

௱௫௪. முன்குலத்தவர் - பார்ப்பார். முனிகுலத்தவர்-முனிவர். வான்குலத்தவர்-தேவர். செய்யுளாதலின் முறைபிறழக்கூறினரென்க. புகழ்மிக வளர்தலாலொளிசிறந்தானென்க. கதிர்போற்றேய்ந்து என்பது பாடமாயிற்பொருளெலாநல்குதலாற் சுருங்கியுமென்க. தேய்தல் ஈண்டுச் சுருங்கல்.

# சூதுபோர்ச் சருக்கம்.



௧. முதலடிக்கு - (பக்குவர்களுக்கு) ஞானமாகிய மிகமேலானவமுதமாகிப் (பக்குவமுண்டாதற்குப்புலனழுந்திநுகர்தற் பொருட்டுமயக்குதலாகிய) குற்றமற்ற திரோபவமாகி என்க. பேரின்பத்தை அமிழ்தமென்றார். தானமாமறைமுறைமையில் - தானங்களைக்கூறும் பெரிய வேதத்திற்கூறிய முறையினால்.

௩. கிணை-மருதப்பறை.

௫. நிறம்-மார்பு. புறஞ்சுவர்-சொன்னிலைமாறுதல். புறஞ்சுவர்கோலஞ்செய்வான் எனவே அகக்குற்றமாகிய பொறாமை முதலியவற்றை நீக்கிச் சுத்தஞ்செய்யாதவன் என்பது கருத்தாயிற்று; இது ஒட்டென்னுமணி.

௭. விதரணவிநோதன் - கொடையைப் பொழுதுபோக்கும்விளையாட்டாகக் கொண்டவன். பின்னிரண்டடியில், ஆயுதங்களையுடைய நீ பாண்டவரைக் கீழ்ப்படுத்தாதொடுங்கியிருப்பையாயினவர்களுன்னின் மேம்படுவார்களென்பது கருத்தாயிற்று; இதுவுமேலையணி.

௮. தம்பி-துச்சாதனன். வில்லிடைநின்று-வில்லளவு தூரத்தினின்று. பின்னிரண்டடியில்தருமன் ஏனையரசர்க்குமுன் மேம்பாட்டிருப்பினுந் துரியோதனனுக்குமுன் மேம்பட்டுவிளங்கானென்பது கருத்தாயிற்று; இதுவுமேலையணி. எல்-பகல்.

௯. கமை - பொறுமை. பூசுரனுதவினிமையவனென்றான்

௰௧. துனை-வேகம். வேலை-வேலமரத்தை. வயிர்த்த - வயிரங்கொண்ட. பின்னிரண்டடியில், தருமன்முதலோர் இவ்வளவிலேசான வலியராயிருக்கும்போதே அவரையடக்கவேண்டும், காலந்தாழ்க்கின் அவர்மிக்கவலியடைவர், நம்படையும் வலியழியும், நாமும் வலியழிவோமென்பது கருத்தாயிற்று. இதுவுமேலையணி. இக்கருத்தை "இளைதாகமுண்மரங்கொல்" என்னுந் திருக்குறளிற்காண்க. நவியமும் என்னும்மையெச்சத்தோடுசிறப்பு. நவியம் - கோடாலி.

௰௫. கருமம் - காரியம். கோமான் என்றது துரியோதனனை, நென்னல்-நேற்று. அங்கு-இராயசூயயாகஞ்செய்த அவ்விடத்தில். பளிங்காற்செய்தவோரிடத்தை நீர்வாவியென்று கருதி யுடையைத்தூக்கிக்கொண்டு துரியோதனன் சென்றதுகண்டு வீமனுந் திரௌபதியு நகைத்தாரென்க. உ௱௰௩-ஆஞ் செய்யுளிலுங்காண்க.

௰௪. கொத்தளை - ஓர்சாதிமீன். கோமான் என்றது தருமனை. நந்தமுத்தன-(பெற்றவனை விடுத்து) நந்தன்மேற பிரியங்கொண்டவனாகிய கிருட்டிணன் என்க. முத்தம்-பிரியம்; சூடாமணி நிகண்டிற்காண்க. இங்ஙனமிவன் பழிப்புரையாகக்கூறினும், அந்த முத்தன் எனச் சொற்பிரிந்துயர்வுதோன்றநின்றவாறுகாண்க.

௰௭. எல்-ஒளி. யதுகுலமன்னன் என்றது கிருட்டிணனை. சல்லியம்-கலகம். சென்றான்-(இப்பொழுது) போயினான்; ஆதலால் ஐவர்க்குதவியாக வரமாட்டானென்பது கருத்தாகக் கொள்க.

௨௨. உத்தரஞ்சொல்லலாமோ என்றது சொல்லிற் பயனின்றென்பதையும், அவருக்குணர்வின்றென்பதையுங் குறித்துநின்றது. ஓ-எதிர்மறை. உத்தரம்-மறுமொழி.

௨௩. துப்பு - பவளம். முனி-பார்ப்பானென்க. நாம் யாவருமென்க.

௨௪. சூது சூதாடலைக்குறித்தது. சதிப்பது-அழிப்பது. கருமம்-காரியம்.

௨௬. காமரு-அழகு; உகரஞ்சாரியை.

௨௮. புண்டரம்-நுதற்குறியாகிய திரிபுண்டாமென்க. ஊர்த்துவபுண்டாமெனவுங் கூறுவர்.

௨௯. ஐயென - விரைவாக; மணிமேகலை சிறைவிடுகாதை யுரையிற்காண்க; நல்லதெனவுங்கூறுவர். செகுத்திடுவன்-கெடுப்பேன்.

௩௧. வல்-சூதாடுகருவி; சூண்டுச்சூதாடுதலையுணர்த்தியது.

௩௨. வேண்டா-எதிர்மறைவியங்கோள்.

௩௫. தந்தையென்றது திருதராட்டிரனை. கடையடிக்கு அப்புன்மையாகிய செய்கையினாலே (தந்தைக்கெய்துவது)வசையேயன்றிப் புகழோசொல்லப்படுவதென்க. ஏ - முன்னது அசை, பின்னது தேற்றம். ஓ-இரண்டுமெதிர்மறை. கொல், அம்மா- அசை.

௩௭. யானுமத்தந்தையன்றோஎன்றதனால், எனக்கும் புதல்வரிலொரு சாரன்பில்லை என்பதுபெறப்பட்டது; எனவே நின்றீயநினைவை மாற்றக்கூறிய நீதியை நீயிகழ்ந்துரைத்தது தகாதெனவிலக்கியவாறுமென்க. என்றாய் என்றதில் யகரவொற்றுக்கெட்டது.

௩௯. அம்மா - அசை. கஞ்சப்பூரவலனெ

ழிவு-சூரியனத்தமித்தல்.

௪௧. குரவர்-ஈண்டுத்தந்தையர் வரைந்து கண்டாய் - வரைசெய்தறிந்தாய். முறுவல் - நகை; ஈண்டு எள்ளல்பற்றிவந்ததென்க.

௪௩. புரிவு முன்னது தப்புதல்; புறப்பொருள்வெண்பாமாலையுரையிற்காண்க. பின்னது செய்கை. விதூரன் - விகாரம். விரிவிலா மனம்-புண்ணியபாவவியல்பை ஆராய்ச்சிசெய்யாத மனமென்க.

௪௫. சங்கை - எண். கற்றை - தொகுதி. வேய்தல் - அலங்கரித்தல். உத்திரத்தின்மேற் பாப்பினை ஈண்டுக்கூறுது சுருக்கினரென்க.

௪௬. ஓவியம்-சித்திரம். வருணித்துப்பாடுமறிவினராதலாற் காவியமாக்களைக் கூறினுரென்க. சமைந்தது - மேற்கூறியமண்டபஞ் சமைக்கப்பட்டதென்க.

௪௯. விரகு-உபாயம். அகம்-வருத்தம்.

௫௧. காணத்தகுஞ் சிறப்புடைமை தோன்றப்பேரழகு என்றும், மண்டபத்தழகுகாணவாராதொழியினுந் தன்னைக் காண்பதற்காயினும் வரல்வேண்டுமென்பது விளங்க எமையுமெய்தியென்றும், தாழாதுவரல்வேண்டுமென்பதற்கு விரைவினென்றும், தாழாது செல்லவேண்டுமென்பதற்கு இன்னே என்றும், இங்ஙனஞ்செல்லுதற்கு விருப்பின்றென்பது விளங்க எவலினென்றுங்கூறின்மையுணர்க.

௫௫. பருகெலாம் புனனதியெலாம் - நதியெல்லாம் உண்ணுதற்குவிளக்கமாகும் புனல். எல்-விளக்கம்.

௫௬. ஆனகம்-வாத்தியம். ஞானகஞ்சுகன்-ஞானச்சட்டையணிந்தவனுகிய தருமன்; ஞானவடிவன் என்பது கருத்து.

௫௭. சிறந்தவில்லினன் ஆதலிற்சிலைவிதுரனென்றூர். அம்புலி-சந்திரன். சந்திரனுதயமாகும்போது கடல்மிகப்பொங்குதலின் அதனையுவமைகூறினுர்.

௬௧. ஒட்பம்-அறிவு. "கல்லாதாளுெட்பம்" என்னுந்திருக்குறளிற்காண்க. ஒட்பத்தாலென மூன்ருவது விரிக்க. தூர்மதி துன்மதியெனத் திரிந்துவந்தது. அவை-ஈண்டிடத்தையுணர்த்தியது.

௬௪. இளையவன் என்றது விதுரனை. தோன்ற-புறத்துவிளங்க. கோவை-ஒழுங்கு. மற்று-அசை. ஓ-எதிர்மறை.

௬௫. அடி-சந்ததி; குருகுலச்சருக்கம் உ௫-ஆஞ் செய்யுளிற்காண்க. படி-பூமி.

௬௬. குழகு-இளமை. குறிப்பு - ஆய்ந்தறிதல். பழகுவார்-சூதாடுதலைப்பழகுவரென்க.

௬௭. கழகம்-சூது. பலபட-பலவாருக. தீதகப்படு-தீமைவசப்படுகின்ற. தோதகம்-வஞ்சகம். என்னையோ என்றதில் ஓகாரம் சூதாடல் பாவமென்றறிந்திருக்கின்ற என்னையா எனப் பொருடரலால் ஒழியிசை.

௭௨. ஆறலாதன-முறையல்லாதகாரியங்களென்க- தேறலார்தமைத் தேறன்முதலிய நான்கினையும், "தேரான்றெளிவும்," எனக் கூறுந் திருக்குறண்முதலியவற்றிற் காண்க. கூறலாதன—"வன்படைகொடுமோதிக்களைதன்" முதலியனவென்க.

௭௪. முதலிரண்டடிக்கு-நீதிமிகுந்த வரிய பெரிய கீர்த்தியல்லது உயிர்நிலைபெறுவோர் யாவர்; சம்பவிக்கற்பாலது நாமங்கே போகாதிருக்கினும் நினையாமலேவந்து சம்பவித்துவிடும் என்க.

௭௫. காவலர்-ஊர்காவலர்; கிருட்டிணன்றூதுச்சருக்கம்௬௬-ஆங்கவியிற்காண்க. வேளையேறிய வரும்படைத்தலைவர் நாட்பட்டவரிய சேனுதிபதிகள்.

௭௭. வேள்விஐந்து - தெய்வயாகம், பிரமயாகம், பூதயாகம், பிதிர்யாகம், மானுடயாகம். வாசம்ஐந்து - ஏலம், தக்கோலம், இலவங்கம், சாதிக்காய், கர்ப்பூரம்.

௭௮. விழி-அத்திரிமுனிகண். நெஞ்சு-மாதவனிதயம். நெருப்பு - அக்கினிமுகமென்க. உததி-பாற்கடல். விதிபடைப்பு-பிரமசிருட்டி.

௭௯. மைத்திறம்-மேகவருக்கம். மெய்-வடிவம். எழுதிறம்-எழுவகையாயவுறுப்பு; அவை:- கபோலமிரண்டு, கண்ணிரண்டு, கைத்துவாரமிரண்டு, கோசமொன்றென்க. தாழ்ந்தவுறுப்பேழாவன-கால், வால், கை, கோசம் என்க. முத்திறத்தனவெண்ணலப்பிறப்பின- மூவகையான மதிக்கின்ற நல்ல பிறப்புடையன; அவை:-வனத்திற்பிறத்தல், மலையிற்பிறத்தல், நதியிற்பிறத்தல் என்க. இப்பிறப்பினையுடையனவற்றை வனசரம், கிரிசரம், நதிசரமென்பர்.

௮௦. எண்கோ - எண்ணத்தகு மலைகள். மறைந்தது, முற்றெச்சமாக்குக. சேதுபந்தனம்-அணைக்கட்டு.

௮௧. ஐங்கதி - மல்லகதி, மயூரகதி, வானரகதி, வியாக்ரகதி, இடபகதி என்க. சீவகசிந்தாமணி காந்தருவதத்தையாரிலம்பகவுரையில், "விக்கிதம் வற்கிதம் வெல்லுமுபகண்டமத்திமஞ்சாரியோடைந்து" என்றூர்.

௮௨. முதலிரண்டடிக்கு - பாகர்மனத்தாற் குறிப்பிடுவதையும், வார்த்தையாற் குறிப்பிடுவ

தையும், செவ்வியகையாற் குறிப்பிடுவதையும், ஆசனத்தாற் குறிப்பிடுவதையும், காலாற்குறிப்பிடுவதையும், குற்றமில்லாத மகிழ்ச்சிபொருந்த அறிந்துகொள்வனவும், இன்னுமேலான விலக்கணங்களினுங் குறைபாடில்லனவு மாகி என்க. ஆள்-ஈண்டுப்பாகர். ஆசனம்-இருப்பு. இயக்கு-கதி.

அரு. முனிவரன் என்றது பிரமதேவனை. படைத்ததிங்கிவற்றினுக்கவயங் குறையாமல் - இக்குதிரைகளுக்குமாத்திரம் அங்கவீனமின்றி (அடி) யைச் சிருட்டித்ததே (அன்றிப்படிமிசைச் சஞ்சரிக்கக் கருதியன்றென்க).

அச. ஆல்-அசை. வரையில்லென அந்நான் கென்னும் வரையறையில்லையென்னும்படி.

அடு. பிதிர்முழக்கு-சிதறினசிற்றொலி.

அசு. நெருங்கி - செறிதலால், கீழ்ப்படுத்த வானமேவானமா - கீழாக்கியவெளியே ஆகாயமாக. மீதுறப்பகிரண்டமறைந்தது-மேலாகப் புறத்தாகாயமறைவுற்றது. அடுத்த பூநதி-பூமியையடுத்தநதி. குளித்தனகுளிர்தோயம்-(அக்கொடிகள்) குளிர்ந்த ஆகாயநதியிலமிழ்ந்தின.

அஎ. மேலெழுந்ததூளிகள் செல்லுகின்றதுபோன்மென்க; போலும்என்றது போன்ம் எனவந்தது. நிலனுற - அப்பூமிதேவி பூமியில் வர.

அகூ. சாயை-சூரியன்மனைவி.

கூ0. ஏவின - செல்லாது மீள்வாயென்று ஏவினவென்க. குக்கில் - செம்போத்து. வரதநூல்-மேலான சகுனநூல். ஓவினர் - (பின்னுமுணர்த்துதலை) யொழிந்தாரென்க.

கூக. உத்தமசாதிமடந்தையராளகத்திலியற்கைமண முண்மையான்முன்னித்தொடர்ந்தனவென்க.

கூஉ. வச்சிரம் - வயிரரத்நம். மணிகளிற் சிறந்தமையால் அதனையுவமைகூறினரென்க.

கூங. தடா - மிடா அடா - அடுத்து படாமுதல் - படாதவேர். கடாமலை-யானை.

கூச. இதழி - கொன்றை. கருவிளமலர்-காக்கணமலர் கொண்டுகொடுளன விகாரமாயிற்று.

கூஎ. தழலெழுகானகம்-பாலைவனமென்க.

கூகூ. புறவிபச்சுவடு - வேற்றியானை புறங்காட்டியோடிய அடிச்சுவடென்க. தொடர்ந்து செல்லுதல் வீரமன்றெனச்சென்றிலவென்க.

ங. மீளியர்வேல் - அத்தூளிகளான்மறைக்கப்பட்டுநின்ற வீரர்வேலென்க.

ஙஉ. புரைநிலங்கடந்து - நிலத்திற் குற்றநீங்கி. உரைநிலங்கடந்தசீருரை-வார்த்தையிலுநிலத்திலுமடங்காத புகழுரை.

ஙரு. களி-களிப்பு. கண்டல்-தாழை. புளினம்-மணற்குன்று.கானல்-கடற்கரைச்சோலை.

ஙச. உம்மை சிறந்ததுதழீஇயவெச்சம். இயல்பிலார்த்ததை அங்ஙனங் கருதியதாகக் கூறலாவிது தற்குறிப்பேற்றவணி.

ஙஅ. மொட்டின - குமிழ்வடிவினவாகிய. மட்டு-கள். கட்டின - கட்டப்பட்டனவென்க. கழை-மூங்கிற்குத்துக்கோல்.

ஙகூ. சரித்தன- அச்சுமைகளைக்கொட்டினவென்க. படங்குவீடுகள்-கூடாரமனைகள்.

ஙயக. ஊர்-அத்தினபுரி. புனிதன்பாசறை நிறத்திருந்தது-தருமன்சேனை தங்கிய படங்குமாளிகை விளங்கியிருந்ததென்க.

ஙயஉ. மாண்டவர்-மாட்சிமையுடையபெரியோர்.

ஙயங. மேனியினுமிழ் அமிழ்துவிந்துஎனக்கூட்டுக. விந்து-துளி.

ஙயஅ. விளங்கின என்பதனை எழுவென்பதோடுங்கூட்டுக. வெள்ளம்-ஈண்டுமிகுதி.

ஙஉய. தருக்கவென்றது தொகுதியொருமையாதலின் அதன்கோடென்வொருமையாற் கூறினர்.

ஙஉக. முடுகுவேட்டமாய்-வேகத்தில்விருப்பமாய். வாளிபோதல்-மண்டிலமாயோடல்.

ஙஉச. எழுந்து-எழுவெனத்திரித்துரைக்க. படுத்து-இருக்கவைத்தென்க.

ஙஉரு. முந்தை - முன்றந்தையாகிய திருதராட்டிரனென்க.

ஙஉகூ. கடையடிக்கு - எளிதாக இராச்சியநடைபெறுமென்க.

ஙஙரு. யாய்என்றது குந்தியை; காந்தாரியுமாம். எந்தைஎன்றது வீடுமனை. போய்யாயை என்பதில் நிலைமொழியீற்று யகரவொற்றுக் கெட்டது.

ஙஙஅ. வெங்கருவி - கொடுமைத்தொகுதிகள்; கொடியகாரணமெனினுமாம்.

ஙஙகூ. நம் - வணக்கமென்னும் பொருளில் வந்த வடசொல்.

ஙசக. மெய்யுற - உண்மையாக. தமநில் - தமதுமனையில்.

ஙசஉ. சூரியனைக்கமண்டலமாகவும், செவ்வானத்தைக் காஷாயவஸ்திரமாகவுங்கொள்க. வந்தனை-சந்தியாவந்தனம். எறிதல்-அலையெறிதல். வேலை-கடல். புனிதர் - ஈண்டுத்துயோராய துறவினர் என்க. புண்கண்மாலை - வருத்தந்தருமாலைப்போது.

ஙசச. ஈதுஎன்-வஞ்சகஞ்செய்யுமிது எத்

தன்மையதென்க. கொல்-அசை.

௩௪௫. ஏ-அசை. இருள்-களங்கம். வெறுக் கவோ-வெறுக்கலாமா. ஓ-எதிர்மறை. கரியன்-களங்கன்.

௩௪௬. துரியோதனன்கொடுமைக் க ஞ் சி யுலகினரெல்லாஞ் சரீரம் வெளுத்தனர். அத் துரியோதனன் முதல்வனாகிய சந்திரனிலாவி னுலனைத்தும் வெளுத்தனவென்க.

௩௪௭. முந்தை-முதன்மை. தெரிவை-ஈண் டுத் திரௌபதி.

௩௫௪. பிராதிகாமி - துரியோதனன்சாரதி. கறபம்-கற்பகதரு. ஐந்தருவிற்குங்கற்பகமென வழங்குதலுமுண்டென்க. ஐவருக்குங் கற்பகத் துவமைகூறுரென்க.

௩௫௬ சிறுபான்மை இகரமுதலாகாது ஈா யகுயமெனநின்றதென்க.

௩௫௮. தேவரூர்மண்டபம்-சுதன்மை. இனி மை-ஈண்டுச்சிறப்பு.

௩௫௯. மனு-மனுநூல். வணங்கி-வணங்கப் படுவோரை வணங்கி. இருப்பு-ஆசனம் தவிசு-ஆசனம்.

௩௬௦. புரை - குற்றம். வாழ்தி-இனிவாழ் வாயென்க. நாகர்வாழ்வினுள்ளதும்-(இப்போ து) தேவருலகத்துள்ளதாகிய வின்பத்தையு மென்க.

௩௬௧. விலாசமயர்விர்-விளையாட்டைச்செ ய்வீர் என்முன் றுரியோதனன் ; என இசை யெச்சமாக வருவித்துரைக்க. ஓ-அசை.

௩௬௨. சூள்-சபதம். தீமெதடுத்த-தீங்ககற் றிய. இது ஒபபுமைக்கூட்டவணி.

௩௬௩. சூதாடக்கூறியது துரியோதனுதலா லவனைநோககித் தாமமார்பவென்றும, அதனை யாடி வாழ்வைக கவரக்கருதியது சகுனியுமாத லாலவனையுமுளபபடுத்தி நீர்எளவுங் கூறி ஞ னென்க. தாமம்-மாலை.

௩௬௪. இரண்டாமடிககு - தவறில்லாதகவ றுனதாநண்ட தாயமானதிருபசகத்துஞ் சம மாகக்கொள்ளபபடும. வை ப பிலாண்மையன் றி-அவ்வசசமயத்தில் வைக்கின்றதிலே திற மையல்லாது, உண்டென - வஞ்சமுண்டென் று. இது சகுனிசபையாரைநோக்கிக் கூறினு னென்க. கவறு-ஈண்டுச்சூதாடுகருவி. தாயம்-ஈண்டு விருத்தம்.

௩௬௫. [illegible]ணுமாகில் வேணும் - தருமன் சூதாடுதலை விருமபுமாயினெனககும் விருபபமா மென்க. விரகு-வஞ்சம். விடுதி - தங்குமிடம். பூணுமாகில்-சூதாடுதலிலிசைவானாயின்.

௩௬௬. ஒட்டுகின்ற - உடன்பட்டுப்பந்தயம் வைக்கின்ற.

௩௬௭. இசைவு-ஈண்டுப் பந்தயப்பொருள். தேனெறிந்து-வண்டுகண்மோதி.

௩௭௧. ஏதிலாரின்-அயலாரைப்போல். கா தில்-பொருதுகொல்வேனாயின். உருத்து-கோ பித்து.

௩௭௨. ஒட்டம் - உடன்படும் ப ந் த ய ப் பொருள்.

௩௭௩. மீளி - பெருமை, வலியுமாம். ஒன் றிட-ஒன்ற. நவிர்-குற்றம். புறம்-ஏழனுருபு. நவிரம் நவிர்என நின்றதென்க.

௩௭௪. முதலடிக்கு-யானையினுடையகோட் டாற்செய்த யாளிக்கால் வகுத்தமைக்கப்பட்ட பலகையிலென்க. யாளிகால் சந்தநோக்கிமிகா தின்றது. யானைக்கொம்பாற் செய்யப்பட்ட மையிற்றவளமான கவறென்றார். த வ ள ம் - வெண்மை. கவளமான்-யானை. பணை-கொம்பு; என்பதை இரண்டாம்பேபோர்ச்சருக்கம் ௰௬-ஆங்கவியிற்காண்க.

௩௭௫. மணிசாரம்-மணிசிரேட்டம்.

௩௭௬. கிராதவனம் - வேடர்சஞ்சரிக்கும் வனமாகிய காண்டவமென்க. அங்கு-கங்கைக் கரையில். இரா-இராவில். விஞ்சையன-சித்தி ராங்கதனென்க. இவன்கதை திரௌபதிமாலை யிட்ட ச ரு க் க ம் ௮-ஆஞ்செய்யுளிற்காண்க. பொங்கிராமணஞ்சிறந்த அளகநீள் போகமாத ரெனக்கூட்டுக. இரா-இருந்து. நரேசன் என் றது தருமராசனை.

௩௮௦. வெற்றியெய்தவென்ற மேன்மையா னெனக்கூட்டுக. வீவு-அழிவு. அடுக்கு-தனித் தனிவெல்லுதலைக்குறித்தலாற் ப ன் மை யி ல் வந்தது.

௩௮௧. குறிப்புறாது - (தருமன் ஐவரையுங் குறித்தாடுதறீங்கென்று) குறிக்காமல்.

௩௮௨. வெல்லுமாறு-(வஞ்சமின்றி)வெல் லத்தக்க வழியால். அடிமையின்னர் என்றதில் னகரவொற்றுவிரித்தலாயிற்று. ஒட்டி-பந்தய மாக்கி. நீயடிமையானபின்னவளைப் பந்தயங் குறித்தாடல் கூடாதாயினு நான் சம்மதிக்கின் றேனென்பது விளங்க இன்னமெறிகவென்றா னென்க.

௩௮௩. விதுரன்-நடுக்குறில்நீண்டது. அந்த னைப்புகன்று-குருடனாகிய திருதராட்டிரனைக் குறித்து. அபோதம-அறிவிலாமை. ஐகாரம்-எதிர்மறை.

௩௮௪. செய்தகால் இதிற் ககரவொற்றுத் தொகுத்தலாயிற்று.

௩௮௬. கருமம்-காரியம். தஞ்சம் - ஈண்டுப்

பற்றுக்கோடாகிய நீதியென்க.

௱௮௭. வெதிரனுங்கொல்-செவிடனுமோ, கொல்-ஐயம். சதுர்புரிந்த-சமர்த்தைவிரும்பிய. இரக்கமில்லாத பாவியென்பார் அருளிலா னென்றார்.

௱௮௮. கள்வன் என்றது சகுனியை-நிகர் பிடித்தென்ன-அக்கள்வனுக்கு நிகராக (வஞ்சகத்தைப்) பற்றியதென்னும்படி. மாயம்-வஞ்சனை. தாயம் - ஈண்டுரிமை. இடங்கொடாது-தருமன்வெல்லற்கிடங்கொடாமல். சதித்தது - வஞ்சித்து.

௱௮௯. தாயம்-ஈண்டு விருத்தம். பன்னன்-ஈண்டுத்தருமன்.

௱௯௪. எண்ணி என்பது நால்வருடைய வினையாயினும் அவருள்ளே தலைமையோன் வினையாகிய சொல்வானென்பதனோடு முடிந்தது.

௱௯௫. ஐவருக்கு முரியளாயிருத்தலாற் பொதுமகளென இழித்துக்கூறினன்.

௱௯௬. தவம்-ஈண்டுப் பிரமசரிய விரதம். நகா-நகைத்து. புகாது-கொள்ளாமல். வெகுளி கூரப்புரிந்தனன்-வெகுளியைமிகச்செய்தான்.

௱௯௯. முதலடியில், வேசையென்பதும், யாகஞ்செய்தற்குரிய பத்தினியல்லள் என்பதும் விளங்கக்கூறினனென்க.

௨௱. துரியோதனன் முகங்கொடுத்துக் கேட்குமாறு ஆணைச்சிறப்பித்துக்கூறும் நம்பி யென்னும் பெயராற்கூறினனென்க.

௨௱௧. திருத்தக - உனக்குச்செல்வமிகும் படி. கண்டாய்-முன்னிலையசை.

௨௱௩. இவனுக்குக் கேடுசம்பவிக்குமே யென்றிரங்கினனாதலின் அன்பினையுமனங்கசி தலையுங் கூறினர்.

௨௱௪. உம்மை - முற்பிறப்பில், இம்மை-இப்பிறப்பில். இம்பர்-இவ்வுலகில். தான் என்றது பூமியை. அவராகம் - அந்தச் செந்நிறம். தேவருக்கும் அசுரருக்கும் போர்நேர்ந்தபோது தேவர்தோல்வியுற்றுத் திருமாலைத்தியானித்து அவர்காட்சிதரப்பணிந்து சகாயம்பெற்றுமீண்டும் அசுரருடன் போர்செய்ய அதுகண்ட அசுரர் இதற்குக் காரணனாயிருந்த திருமாலை முதலிற் கொல்லவேண்டுமென்றுவந்து போர்செய்யத் திருமால் சக்கரத்தையேவி அசுரர்களைக் கொன்றார். பின் அவ்வசுரர்பூமியில் அரசர்முதலான மனிதராய்ப்பிறந்ததையறிந்த பூமிதேவி அவர்பாரஞ் சுமக்கமுடியாமற் பிரமனுக்குத் தெரிவித்து அவனுடன் திருமாலைக்கண்டு பணிந்து தன் வருத்தத்தை நீக்கியருளுமாறு வேண்டத் திருமாலவ்வாறே செய்வோமென்றருளி அதற்காகக் கிருட்டிணனாக அவதரித்தனர்; என்னுங்கதையை இக்கவிமுதல் ௨௱௭-ஆங்கவிவரை சுருக்கிக்கூறினமையுணர்க.

௨௱௯. மின்னிடை-இலக்குமியுமாம். முன்னிடை கடையொன்றின்றி-முன்னுநடுவும்பின்னுமாகிய சந்ததிகளிலொன்றுமின்றி.

௨௱௮. சற்றும்புரிவிலீர்-சிறிதுமன்பற்றவராய் என முற்றெச்சமாக்குக.

௨௱௰௧. முன்னை - தன்னைத்தோற்பதற்கு முன்பு. பின்னை-தன்னைத்தோற்றபின்பு.

௨௱௰௨. அல்லற்பான்மை - துயரின்றன்மை.

௨௱௰௪. வீமன்முதனால்வரைத் தோற்றபின் றருமன் றன்னைத்தோற்றானென் றுவியாசபாரதத்திற் கூறலாலீண்டுச்செய்யுட் டொடைநோக்கியானேயென்றும், என முன்வைத்துக் கூறினரென்க. ௨௱௪௨-ஆங்கவியிலுங்காண்க. மற்றொருவருடனிருந்தேவமற்றானேசூதுபொருது என்பது கருத்தாகவின் ஏகாரமுன்னது பிரிநிலை. ஏனையன அசை. தலைவனென்றது துரியோதனனை. இசைவு-பந்தயப்பொருள்.

௨௱௰௫. கோயில் - இராசசூயயாகச் சபா மண்டபத்தில். புனல்வாவியிலென்று-நீர்வாவியில்லையென்று. மன்னை-துரியோதனனை; சிரித்தகதையை இச்சருக்கம் ௰௯-ஆங் கவியுரையிலறிக. சளம்-நடுக்கம்.

௨௱௰௯. சூழ்ச்சிமுடித்தான்-துராலோசனையை முடித்தவனாகிய துச்சாதனனென்க.

௨௱௰௭. சிலைவாயணங்கை என்பது பாடமாயின், வில்விலக்கெய்தலால் மணம்வாய்ந்த திரௌபதியென்க.

௨௱௰௮. கொடியாள் - கொடிபோன்றவளாகிய திரௌபதி.

௨௱௨௰. உரும்-இடி. உற்பாதம்விரவிற்று-ஈண்டுக்கேட்டுக்கறிகுறிசம்பவித்தது. வெரூஉ-அச்சம்.

௨௱௨௰௧. ஓகாரம்-முன்னதுசிறப்பு. இரண்டாவது ஐந்தாவது எதிர்மறை. மூன்றாவது அசை.

௨௱௨௰௨. பணிச்சை - குழல். சுயம்வரத்திலுங் காண்டவவனமெரித்தபோதுங் காட்டப்பட்டதாதலிற் காட்டுந்திறல் வெஞ்சிலைவிசயனென்றார்.

௨௱௨௰௩. மாமனென்றது திருதராட்டிரனை. பெரும்போரரசர் என்றது துரியோதனாதியரை. பெண் என்றது துச்சளையை.

௨௱௨௰௫. பறைதல்-ஒலித்தல்.

௨௱௨௬. கொடும்புலல் எனக்கூட்டுக. பின் றுரியோதனுதியரைக் கோறற்கேதுவாதலாற் கொடும்புனலென்ருர்.

௨௱௨௮. உற்பாதம்போதியாவும்புரிந்தன- இவ்வாறு கெடுகுறிகள் பகற்காலமெல்லா நிக ழ்ந்தன. நால்வர்-துரியோதனன், சகுனி, கன் னன், துச்சாதனன்.

௨௱௩௰. வேம்போது - கான்வேகும்பொழு து- வாழ்வ-வாழ்வனவாகிய ஏனையுயிர்களெல் லாம். கான்-வனம். முதலிரண்டடியினும் நா மெல்லாம் வருந்துமபோது துரியோதனுதியர் களித்திருக்கின்ருர், துன்பமனுபவிக்கின்றகா லத்து என்னைச்சேர்ந்த நீங்களுந் துன்பமுறு கின்றீர் என்பதை விளக்கலால் இது ஒட்டணி யென்க. முன்னம் பொறுத்தலாவது, ஆற்றிற் கழுநட்டியும், விடமருத்தியும், கங்கையில்வீழ்த் தியும், மாளிகையிற்றீயிடுவித்துங் கொலைசூழ்ந் தபோது பொறுத்திருத்தலையென்க.

௨௱௩௧. மெய்யும் என்னுமும்மை தொக்கு நின்றது. மனங்கொதிக்க அதனுற் சரீரமுங் கொதிக்குமாதலின் மெய்சுடவென்ருர்.

௨௱௩௩. மாமனென்றது விதுரனை.

௨௱௩௪. வாய்மைமொழியோனென்றது வீடு மனை.

௨௱௩௫. மன்னென்றது தருமனை. வழக் காற்கொண்மின் - முறையாலே யென்னையுங் கவர்ந்துகொள்ளுங்கள். மூன்-தன்னைத்தோற் றற்குமுன். இசைந்து-பந்தயங்குறித்து. கரி- சான்று. தன்னைமுன்ருேற்றுப்பிறருக் கடிமை யானவரசனுக்கு மண், பெண், பொன்முதலா யினவற்றினுரிமையில்லை யென்னுங் கருத்தா லிவ்வாறு கூறினளென்க.

௨௱௩௬. ஆகார் - உடன்படாதவராய் என எச்சமாக்குக. கொடும்பாவியாதலிற் றுரியோ தனனுக்கு வேறுபெயர்கூருது ஈண்டுவெய் யோனென்ருர். ஐ-சாரியை.

௨௱௩௭. மெய்பேசுந் தெய்வத்தன்மையனு தலின் வாய்மைக்கடவுளென்ருர். பொல்லா நெறியிற் புகுந்தீராயின் நரகெய்துவீரென் பான் அதிற்போகாவண்ணமென்ருன்.

௨௱௩௮. இராயசூயயாகமுடித்துச்சம்ராட்டு என்னும் பெயர்பெற்றிருத்தலால், அவனிதல முழுதுமுடையானென்ருர். நிறை-தகைமை. அழிந்து - மனம்வருந்தி. நினைவற்றிருந்தீர் - அறிந்துகொண்டு பேசாதிருக்கின்றீர். நினை வற்ருே-அறிவழிந்தோ. இருந்தால்-அறிவிருந் தால், சபையிலிருந்தால் என்றுங்கூறுவர்.

௨௱௩௯. முடிவுற்ருன்-சூதாடுதலை முடித்த னுற்ருன். திரௌபதியைப் பந்தயம்வைத் தா டினது சகுனி கூற்ருனன்றித் தான்வைத்தாட வில்லையென்னுங்கருத்துவிளங்க முடிவுற்ரு னென்ருன். இக்கவியிறுதியில் இங்ஙனம் பந்த யம் வைத்தாடுதற்குரிமையில்லையாதலாலப் பந் தயமும் வெற்றியுற்ருேனெய்தற்குரிமை யில் லையென்பது கருத்தாகக்கூறுக. உரைக்கு - உரைபபேன்; தன்மையொருமைவினைமுற்று.

௨௱௪௰. நஞ்சினைவடிவன்னுனிளிவல்-விட த்தின்வடிவை யொத்தவனுகிய துரியோதன னுக்குத் தம்பியாகிய விகருணன்.

௨௱௪௧. இன்னறிவெனப் பிரித்துரைக்க. குரு-கனம்.

௨௱௪௨. தான் என்றது தருமனை. தருமன் றன்னைத்தோற்றபின் திரௌபதியைப்பந்தய மாக வைத்தாடுதற்குரிமையில்லை யாயினுமா குக, தருமன்றன்னைத் தோற்குமுன்னுடிய சூ திற்குறித்த பந்தயப்பொருள்களிலே திரௌ பதியுமடங்கினளெனவொருபோலி நியாயங் கூறினனென்க. அவ்வாருகிற் பின் அவளை வைத்தாடவேண்டுவது பொருந்தாது. தனம்- பொருள். மனையாளுக்கு இல் என்றபெயர் நான் புதிதாகவுண்டாக்கவில்லை. முன்னோர்நூ ல்களிற கூறபபட்டதேயென்பான் யான்படை த்தமொழியன்றேயென்ருன். நிகண்டு, திருக் குறள், கந்தபுராணம், இராமாயணமுதலிய நூல்களிற் காண்க.

௨௱௪௫. வரிசை - சிறப்பு. அம்மா - இவ் வியப்பிடைச்சொல் இழித்தற் குறிப்புணர நின்றதென்க.

௨௱௪௬. இளையோருருப்ப-நகுலசகாதேவர் கோபிக்க. மடக்கினன்-அந்நால்வருடைய கோ பத்தையுமடங்கச்செய்தானென்க.

௨௱௪௭. தகைய - அத்துகில் குலையாவண் ணந் தடுத்துப்பிடிக்கவென்க.

௨௱௪௭. கோவிந்தன் - உலகத்தைக்காப்ப வன் என்பது பொருள். அந்நாமத்தைக்கூற லால் நாவிலமிழ்தூறலு முடல்புளகித்தது மன முருகலு நிகழ்தனவென்க.

௨௱௫௨. இரண்டாமடிக்கு - எங்களுக்குத் தோறறேரும் உங்களோடு போர்செய்யாதிருக் கின்றேம், அஃதெதுபோலுமெனின் இருளை யோட்டுகின்ற சூரியவடிவம் அவ் விருளினு லொளித்திருப்பதுபோலாமென்க. ஆல்-அசை.

௨௱௫௪. கோவிந்தனருளாற் கூறைமாளாத தெய்விகமுடைய கற்பினளென்பது தெரியப் பட்டமையாற் றெய்வமன்னுளென்ருர்.

௨௱௫௫. செய்புளாதலிற் றுகிரீண்டியள கந்தீண்டியென முறைபிறழக்கூறினர். தகா தனவிளம்புவோர் - துரியோதனன், துச்சாத னன், கன்னன் என்பவர்.

௨௱௫௬. பழுதுரைத்தோன்- துரியோத னன். மேழி - ஈண்டு ஆகுபெயராய்க்கலப்பை யையுணர்த்திநின்றது. சாலி - நெல். சாலின் வேம்நறுநெய்யென்க. சால்-கடாரம். இதுவும் வருங்கவியும் வீமன்கூற்று

௨௱௫௮. சௌபலன் - சகுனி. நகுல சகா தேவரிருவருமொற்றுமையுண்மையாற் சகுனி யைக் கொல்லுஞ்சபதத்தைக கூறினரென்க. ஓ எதிர்மறை.

௨௱௫௯. விண்-ஆகாயத்தில். வழங்காமல்- சஞ்சரியாமல் ஊாசோள்-பரிவேடம். உடனே பொய்கைவாடி-மலர்ந்தவுடனே வாவிமலர்கள் வாடி. பொய்கை-ஆகுபெயர்; இவ்வாறன்றிப் பொய்கைநீர்வறந்து என்றுரைபபினுமாம். இருந்த - இவ்வாறவசகுனஙசணிசழ்ந்தன என்க. அவிதா-யாதேனுமோராபத்தையடைந் தவர் அதினின்று நீக்குதற்கு உதவிபெறும பொருட்டு முறையிட்டுக்கூறுமோர்சொல்.

௨௱௬௨. மெய்-உண்மையாக. வற்போர் - சூதுபோர்; உகரச்சாரியை பெருதுவந்தது

௨௱௬௩. எம்பி என்றது பாண்டுவை. துரி யோதனுதியர்செய்த சூழ்சசியிலேதான் சமபந் தப்படாதவன்போலக் கூறினனென்க.

௨௱௬௪. சம்பு-நாவல் சயபுநாடு என்றது. நாவலந்தீவை இப்பரதகண்டத்திற்கு நாவலந் தீவு என்று பெயர்கூறுப.

௨௱௬௫. இது முதலமூன்றுமொருதொடர். குருகுலத்தே தலங்கொடுத்தானவருககும்- அடிமையான பாண்டவரைவருசகுங்குருவமிச சத்திற் சேர்ந்தவரென்று குலமுங்கொடுத் தான். தடைகொடுத்தான் - அடிமையாகிய தடையைவிடுத்தான். அமம - அசை. திருதராட்டிரனைக்குறித்துக்கூறிப் பின் அவ னையுமுளப்படுத்தித் துரியோதனுதியரை நோக்கிவிடுகின்றீரெனக்கூறினனென்க.வயப் புலியை வாலுருவி விடுகின்றீர் என்றது அகப பட்ட வீரரை யுபசரித்துவிடுகின்றீர் இனியுங் களைமோசஞ்செய்வார் என்னும பொருள்பயத் தலால் இதுவொட்டணி.

௨௱௬௬. முதலிரண்டடியில்— "எண்ணித் துணிககருமம்" என்னுந் திருக்குறளின்கருத் துணர்க. அற்றன்று - அத்தன்மையுடைய தன்று. பேதுறவடர்த்தும்-மயங்கவருத்தியும். உருகி-மனமுருகிவிடுத்தலால் என்க.

௨௱௬௭. முதலிரண்டடியில்—"தீயினுற் சுட்டபுண்ணுள்ளாறும்" என்னுந் திருக்குற ளின்கருத்துணர்க. புடையுண்ணல்-அடிபடல். பேயினுற்புடையுண்டாரோ என்றதனுற்பாண் டவர் சுபாவந்திரிந்து மயங்கினரில்லை; இனி யுங்கட்குத் தீங்கிழைப்பாரென்பது கருத்தா யிற்று. மறப்பரோ பெரியோர் என்றதனுற் சிறியோர் பெரும்பிழை செய்தனராயிற் பெரி யோரப்பிழை பொறுத்துவிடுவரோ என்பது கருத்தாயிற்று.

௨௱௬௮. துகிலினையுரிந்தவன்கைச் சூரன் என்றது புகழ்வதுபோற் பழித்தலென்க.

௨௱௬௯. போகமாதென்பான் சூதமென் கொடியென்றான். விரதம் - விரதவொழுககம். கடையடியில-உனது தருமத்திற்கு விரதவொ ழுக்கமெய்யாயிறமுற்றவைகளை மீளகமகான் வாயல்லை என்ற கருத்தாகக் கூறினனெனக.

௨௱௭௨. நாட என்றது திருதராட்டிரனை,

௨௱௭௩. தனமனை-தனமனுககு தழைகக- (வாட்டம)டிக.

௨௱௭௪. உன்னுணர்வுனக்கேயுள்ளது - ஆய்ந்தறியத்தக்கவுணர்ச்சி யுனக்குண்டு எகா கூம-பரிங்லை. நீதோறறபொருள்களுனக்குரி மையாகமாட்டா; வெனறவர்மீளகமகாடாமை குற்றமன்று, என்பவற்றை நீ யறியவல்லாய் என்பது கருத்தாக வுரைததானென்க. ஒல லார்-இசையார். மு-னு வாா என்றது அரச [illegible] ருதலின், முறைமையே முன்னுகஎன இதவச னமாகக்கூறினன், அதனைத் துரோண முனி வருஙகவிகளால விளககககூறினமையறிக.

௨௱௭௫. சதையாவது தமபிக்கு அரசுகொ டுத்துபபோய் பதினன்கு வருடம வனவாசஞ் செய்து பினபுவந்து அவ் ரசுபெற்றது.

௨௱௭௬. பதனமூவாண்டு மநங்க லமைவ வென்பதற்குச் சு ர்தினஞ் ப ஙறுனைக

௨௱௭௭. மறைந்துறைதல்-அஞ்ஞாதவாசம என்க. ஆரணியம-வனம்.

௨௱௭௮. குறித்தகாலங் கழித்துவரினும் அடிமையின் செல்வமடிமை கொண்டவர்கே யெனக்கூறவுங்கூடுமாதலி னதனைநீக்குதற்கு உரிமையினமெறயதவென்ருளெனக. உரிமை- சுதந்திரம.

௨௱௭௯. கையறுதொண்டராகி-(சுதநதிரச் செயலிழந்த அடிமையராகி.

௨௱௮௰. பன்னிருநாமம் - கேசவன்முதலா யின.

உ௱௮௧. ஐவரும் புதல்வருந் திரௌபதியு மாகிய பதின்௵ருவருடைய அடிமை நீக்கத்தைக்குறித்து யாவும் என்றதென்க; அன்றிப் பந்தயங்குறித்த-புண்ணியமுங்கூட்டிப்பன்மை கூறியதெனினுமாம்.

உ௱௮௪. கூடு - ஈண்டு உடம்பு. துய்த்து - அனுபவித்து, மாறி - அந்நிலைமாறி. வீடு-முத்தி. மெய்மகிழ்விபுதர் - உண்மைமகிழ்ச்சியுறுகின்ற மகா ஞானியர். உவமைகூறுதற்கேது நித்தியாநித்தியவுணர்ச்சியென்க.

சபாபருவம் முற்றிற்று.

# மூன்றாவது ஆரணியபருவம்.

## அருச்சுனன்றவநிலைச் சருக்கம்.

௧. பேணலார்-பகைவராகிய துரியோதனாதியர். சாரல்-மலைப்பக்கம். காமியவனம்-இது சரசுவதிநதிதீரத்தினுள்ளதென்பர்.

௩. அங்கி-ஈண்டுக்காட்டக்கினி. சிங்கமும் யானையுஞ்சேர்ந்து திரிதற்குக்காரணம்-நீதிமன்னராகிய பாண்டவர் வசித்தலாலென்க.

௪. துருபன், இதில் தகரந்தொகுத்தலாயிற்று. இவன் பாஞ்சாலதேசத்தரசன். சோமகிருபர், பாஞ்சாலவரசனைச்சேர்ந்த அரசர். விராடன்-மச்சதேசத்தரசன்.

௬. ஆதபம்-வெயில்.

௮. எற்றுதும்-கொல்வோம்.

௰. சுபலன்மைந்தன்-சகுனி. சமம்-யுத்தம்.

௰௩. இருந்து அம்மகீபர்க்கு, எனப்பிரித்துரைக்க.

௰௭. தனையர்-தன்னையர் என விரித்தலாயிற்று. தனையர்-புத்திரர்.

௰௮. அச்சம்-அச்சுஎன நின்றது. ஆர்வம்-ஆசை. ஏ-தேற்றம்.

௨௰. செவ்வனம்-செவ்வை. சேயவன்-தன் புத்திரனாகியபாண்டு. இனைவு-வருத்தம்.

௨௨. ஊற்றங்கோல்-ஊன்றுகோல். இதில் அம் சாரியை. குறிந்தன-அறிந்தோம். நகரவொற்று மெலித்தல் விகாரம். தாயம்-உரிமை. ஈண்டு ஆகுபெயராய்த் தாயத்தாரையுணர்த்தியது. அவதி-எல்லை.

௨௩. துன்றினர்-அடைந்தோர். துன்னலர்-பகைவர். இறுதியடியில், தன்பெருமைதான் அறியாதவனென்பது கருத்தாயிற்று.

௨௫. சுருதிகளை நான்காகக்கோத்தலைச் சிறப்புப்பாயிரம் ௨௩-ஆங் கவியுரையிற் காண்க. ஆர்த்தல்-கட்டல்.

௨௬. கிரீசன் என்றது எதுகைநோக்கிக் கிரிசன் எனக் குறுக்கலாயிற்று. பாசுபதாஸ்திரம் பெறுமாறு விசயனைநோக்கிக் கூறியது எனையருள்ளுஞ் சிலைவல்லோனுதலினென்க. புறம்-பக்கம்.

௨௭. வதி-வழி.

௨௮. சலம் - மாறுபாடு; மதுரைக்காஞ்சியுரையிற்காண்க. நவை-குற்றம்.

௩௰. பொறை-மலை. உத்தரம் - வடதிசை.

௩௩. கிரியின்முழக்கம்- மலையிலுண்டாகும் எதிரொலி. கிராதர்-வேடர்.

௩௪. கட்செவி - பாம்பு. உரிவை - தோல். கட்செவி-கண்ணிந்திரியத்தில் செவியிந்திரியமுடைமையால் கட்செவி என்பர். ஞானமிர்தவுரையில் கண்ணாற்காணுந்தூரம் கேட்கவற்றான செவி என்பர். கச்சு-இடைக்கட்டு. விம்மல்-கலக்கம்.

௩௭. ஆசுஇல்-குற்றமில்லாத. மிகுதிபற்றி யெண்ணில்கோடி என்றார்.

௩௮. ஊரு-தொடை. தாரை - கண்மணி. தாமரைப்போதென்ன இருதாரைநெடுங்கணிமையாது, ஓராயிரங்கதிரும்நோக்கி எனக்கூட்டுக. நிருதாதியர் - அரக்கர்முதலோர். மனு - மனுக்களாகிய நரர்.

௩௯. நரன்-அருச்சுனன். நாரம்-நீர். மேற் கவியிலும் இக்கவியிலும் பஞ்சாக்கினிமத்தியில்

நின்றுதவஞ்செய்ததாகக்கூறினர். பஞ்சாக்கினியாவன-மேலேசூரியனும் நாற்றிசையிலும் நான்கு அக்கினியும். விற்குன்று-மலேயில்.

௪௰. குறிப்பு-கருத்து. புலப்பாடுபுறம்பொசிய-தன்னறிவிற்றேன்றியது புறத்து விளங்கித்தோன்ற. பாரித்தல்-மிகுதல்.

௪௧. துறுகல்-பொற்றைக்கல்; புறநானூற்றுரையிற்காண்க.

௪௩. பண்ணுக்குவாம்பரி-இசையின்முளத்துக் கிசையத்தாவும் பரி. புவனம் என்பது உயிர்களே; ஆகுபெயர். எல்லாவுயிர்களுக்குஞ் சூரியனின்றிக் கண்ணெளிவிளங்காவாகையால் கண்ணுவானிவனென்றார். ஈற்றடியில், "கண்ணிற்கணிகலங்கண்ணேட்டம்" என்னுந் திருக்குறளேயெடுத்துக்கூறினமைகாண்க.

௪௪. அங்கி முன்னது மூலாதாரத்துள்ள அக்கினி பின்னது உதராக்கினி, வெம்மை-அக்கினியின்வெப்பம், வாயு-பிராணவாயு, சிரந்தங்கியவமுது சிரத்திலுள்ள சந்திரமண்டலத்தினமுது என்பர். யோகநூல்களிலுணர்க.

௪௭. குரு-வியாழன். விரகு-உணர்வு.

௫௰. வேலே-ஈண்டுப்பாற்கடல். இன்-ஐந்தனுருபு.

௫௨. மதுரம்-இனிமை. மதுரசாபமென்றதனுற் கருப்புவில்லெனக. சேனேயென்றது உருப்பசிமுதலோரை.

௫௩. தேர்-தென்றலாகியதேர். ஆதபத்திரம்-குடை. சிந்து-கடல். செவ்விகூற - அழகு மிக.

௫௪. மந்தாகினி - கங்கை. மந்தமாருதம் - தென்றற்காற்று. குறுமுனி செந்தமிழுரைத் தலேச் சிறப்புப்பாயிரம் உ-ஆங் கவியிற்காண்க. வம்பு-வாசனே. பல்லவம்-தளிர்.

௫௫. மகரந்தம்-பூந்தாது. அஞ்சல் என்றதனல் நான் உனக்குத்துணேசெய்வேனென்பது கருத்தாயிற்று. அஞ்சல்-அஞ்சற்க; வியங்கோள் எதிர்மறை.

௫௬. புலத்துடன்பூதமைந்தினேயுமொடுக்கி எனக்கூட்டுக. புலத்தை யொடுக்குதலாவது ஐம்பொறிகளுந் தத்தம் விடயங்களிற்செல்லாது அடக்குதல். பூதமைந்தினேயுமொடுக்குதலாவது-பிருதிவி அப்புவிலும், அப்புவைத்தேயுவிலும், தேயுவை வாயுவிலும், வாயுவை ஆகாயத்திலுமொடுக்குதல். வான்மணி-சூரியன். பணே-கொம்பு. பாதபம்-மரம்.

௫௭. அசலத்துயர்தலேமுழை - அருச்சுனனேக்குறிக்கும்போது அசைவில்லாத உயர்ந்த சிரத்தின்கண்ணுள்ள பிரமரந்திரம் என்க. அமுதம் - சந்திரமண்டலத்தினின் றெழுகும் அமுதம்என்க. புள் அன்னமும், கருடனுமாம். இருவர்-பிரமன், அரி.

௫௮. இருள் - மயக்கம். மாதவன் ஈண்டு அருச்சுனன். அறை - பாறை. பொறை-துறுகல்.

௬௧. கிஞ்சுகமலர்ந்து - முருக்கம்பூவாகிய வாய்களேத்திறந்து என்க கலாபம் - இருபத்தொரு மணிவடம். விடர்-குகை.

௬௩. எழால் - யாழ். குழல்குறிப்பார் - குழலூதுவார் என்க. குறித்தல் ஈண்டு ஊதுதலெனபது காண்டவதகனச்சருக்கம் எக-ஆங்கவியிற்காண்க.

௬௪. காவில் அசோகமும் மாவும், புறவில் முல்லேயும், கயத்தில்தாமரையும் நீலமும் உண்டாதல் கொள்க.

௬௫. இடக்கண் சந்திரனும், வலக்கண் சூரியனுங், நெற்றிக்கண் அக்கினியுமாதலால் நிலாவெயிலனலுமிழ் விழியென்றார். அறல்-நீர். ஐ-சாரியை. இக்கவியிற் சிவபிரானேத் தியானிப்போர்க் கடையாளங் கூறியவாறு காண்க.

௬௭. கிரீடை-ஈண்டுப்புணர்ச்சிக்குரியலீலே. இமிர்தர-ஒலிக்க.

௬௮. இந்திரசேலம் - தேவலோகம். நீலம்-நீட்டல்விகாரமாயினது.

௭௧. மருத்துவான்-இந்திரன். சிவபிரானேத் தியானித்திருக்கின்ற சிந்தையாதலாற் றிருத்தகு சிந்தையென்றார்.

௭௫. விடத்தின்கொடுமையை யடக்கி அமுதமாக்கினமையால் ஆலமுண்டமுதம்பொழிதருசெங்கணென்றார்; இதனேக் காஞ்சிப்புராணம் மணிகண்டேசப் படலத்திலுங்காண்க.

௮௩. பலகறை - சோதி. குழைமுன்னது காது. பின்னது காதணி. பிணேயல்-பின்னல். சேலே-வஸ்திரம். அதள்-தோல்.

௮௪. கொடுவரிதத்தோலாவநாழிகை- புலித்தோலாற்செய்த அம்பறாத்தூணி.

௮௫. வேடமாதர் தழைபுடுக்கைபுனேதலியல்பென்பதனேக் கோவைகளினுங்காண்க.

௮௭. ஏனம் என்றது திருமாலாகிய பன்றி; அது சிவபெருமானடியைத் தேடியது காஞ்சிபபுராணமுதலியவற்றிற்காண்க. ஏனல்-தினே. கிரிக்குத்தேவதையாங்குழவி - சுப்பிரமணியர்.

௮௯. பாகசாதனி-இந்திரன் புதல்வனுகிய விசயன். பாக்கியம்-பாக்கியத்தைத்தரும் புண்ணியத்தை; பாக்கியமென்றது ஆகுபெயர்;

இராமாயணம்; அயோத்தியாகாண்டம்மந்தரை சூழ்ச்சிப்படலத்திற் "பாக்கியம்புரிந்திலாப்பா தன்றன்னே" எனக்கூறுமாறுகாண்க.

அபராங்கம்-பின்னுறுப்பாகிய குதமென்க.

கூஉ. முச்சிகரத்தின்மேலிராதவாறு திரிகோண மலைமேல் அந்நிசாசரர் தங்காதவாறென்க. இம்மலை யிலங்கையிலுள்ளது. இம்மலையின் வரலாற்றை அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம் சசு-ஆங்கவியிற்காண்க.

கூச. குறும்பொறை - குறிஞ்சிநிலத்தூர், சிறுமலைகளுமாம்.

கூரு. மோகரம்-உக்கிரம் புரிவு-அன்பு.

கூஎ. ஒரு வேடனென்றது ஏகலைவனை. ஒரு முனியென்றது வேடனாலே தன்னிரைக்கூட்டமிழந்த ஓர் வைதிகமுனி.

ராஉ. மூலிவடிவம் - செகத்காரணமாயுள்ளதாகிய வடிவமென்க.

ராஎ. ராஅ. இவ்விரண்டுசெய்யுளாலுஞ் சிவபிரான் சர்வாந்திரியாமியாய் நிறைந்திருத்தலுணரக்கூறியவாறுகாண்க.

ராகூ. மிருகாதிபதிகாரி-யானைக்கு அதிபதியாகிய இந்திரனென்க. இந்திரனைப்பொலவடிவழகுள்ளவன் என்பதனை நிவாதகவசர், காலகேயர்வதைச்சருக்கம் உச-ஆங் கவியிலுங்காண்க. மறவோன் - வீரனாகியவிசயன். அபிராமம்-பேரழகு.

ஙம்ச. இறைவர்தண்மலரென்றது சிவபிரானுக்குரிய பிரணவவடிவமாகிய கொன்றைமலரென்க.

ஙஉ௰. சக்கரம்-வட்டம். கயல்உருவகமாகக் கண்ணைக்குறித்தது. வாழியவென்னும் வியங்கோண்முற்றீறுகெட்டு வாழியெனநின்றது.

ஙஉகூ. முட்டி - ஆயுதம்பிடித்தல். நிலை - சரம்விடுநிலை.

ஙகூரு. புரம்-நகரம். பாயிரம்-வரலாறு.

ஙகூகூ. புண்ணியன் என்றது எண்டிசிவபிரானை. உள்-இடம், உள்ளம். பெயர்-நாமம், பெருமை.

ஙசஎ. மாவலியைச் சிறையில்வைத்தகதையினை இராமாயணம் பாலகாண்டம் வேள்விப்படலத்திற்காண்க.

ஙசகூ. அருச்சுனனை மானிடனெனக் கருதாது இந்திரன்போலக்கொண்டுபசரித்தாளென்பது விளங்க இந்திரனிதயம்போன்றுளாள் என்றார்.

ஙசஎ. அட்டவசுக்களிற் பிரபாசன் வீடுமனாகப் பிறந்திருப்பதனாலவனைநீக்கி யேழ்வசுக்களென்றாரென்க

ஙடு௰. செருந்து-பூவிதழ், எட்டாம்போர்ச்சருக்கம் ௰டு-ஆங்கவியிற்காண்க.

ஙடுச. நிகரம்-விழுங்குதல்.

ஙடுஅ. அரிசந்தனம் - ஓர்வகைச்சந்தனம். நீலிதவுடை-நீலநிறமாகச்செய்யப்பட்டவுடை.

ஙடுக. வான்மணி-சூரியன். வார்-நீர்.

ஙகூ௰. ஆயுவின்றந்தை புரூரவா; குருகுலச்சருக்கம் ௰கூ-ஆஞ் செய்யுளிற்காண்க.

ஙகூகூ. மரபு - முறைமை. காமவின்பமெய்தற்குரியதாதலிற்பொன்போலிரவென்றாள்.

ஙகூச. பேடி-அலி. நலம்-அழகு. அந்தோ-ஐயோ; இரக்கக்குறிப்புணர்த்துஞ்சொல்.

ஙகூகூ. செக்காவி-வலித்தல்விகாரமாயிற்று. வரிவண்டு சிலேடைமொழியாகக்கொள்க. செங்காவி நீளமானபாணத்தோடொத்துவிளங்கவென்றும், அரவிந்தம் இசைப்பாட்டையுடைய வண்டுகளோடுவிளங்கவென்றும் பொருள்கொண்டு முறையேகுவிதலும் விரிதலுஞ் செய்ய என்பது கருத்தாகக்கொள்க. தொக்கான்-கூடினன். சூரன்-சூரியன்.

ஙஎக. தையலென்றது அகலிகையை. பெயரென்றது ஆயிரங்கண்ணன் என்பதனை.

ஙஎச. நீ அவ்வருச்சுனனுக்குத் தாயாயினும் அவனரசனுயினும் ஆசையால் வருந்துன்பத்தைத்தீர்ப்பதுலகில்யார்க்குமுறைமை (ஆதலாலதனை நோக்காது) பெருமபிழைசெய்தான் என்று தேவர்கள் அவட்குத்தக்கவாறிதஞ்சொல்லியென்க. அரோ-அசை.

## நிவாதகவசர்காலகேயர்வதைச் சருக்கம்.

க. திவ்வியம் - தெய்வத்தன்மை. வண்டினைக்குறித்தவீயென்பது விளனக்குறுக்கலாயிற்று.

௰உ. இந்திரன் அருச்சுனனுக்கு ஆயுதங்களைக்கொடுத்து மந்திரவுபதேசஞ்செய்தாலாற்றன்னைக்குருவென்றுனென்க.

௰ச. அழுவம்-பரப்பு. ஆழியான்-திருமால். ஊழியினுதன்-உருத்திரமூர்த்தி.

௰டு. நிவாதகவசத்தர்- சஸ்திரங்களினலே பேதிக்கக்கூடாத கவசத்தையுடையவர்என்பர்.

உஉ. தோயம்-நீர்.

உச. இந்திரனைப்போல வடிவழகிருப்பதனு லிந்திரனென்றெண்ணினுரென்க.

உரு. வார்-நீட்சி. கோலம் - நீர். கோலபுரமென்றது தோயமாபுரத்தை.

ருய. சிந்து-கடல். சூழல்-இடம். குரகதம்-குதிரை. மாகதக்கொண்டல் என்றது அருச்சுனனை. விரகு-அறிவு.

சஎ. மூதலிரண்டடியினும் ஒட்டென்னு மலங்காரங்காண்க.

சக. செயும்-செய்யுங்கள்; இது உம்மீருய் வரும்பன்மையேவல்.

ருஅ. தொக்கு-கூடி. உடற்று-பொருகின்ற கோடிய-வளைந்த. மூருக்குவன்-அழிப்பேன்.

ருக. வெரீஇ-அஞ்சி. பொன் - இரும்பு.

சுச. கையற-செயலற. நிருதேசரைவென்றவன்-இராமன்.

எய. பாகு-பாகன். பவனம்-காற்று. துவனித்து முழங்கி.

எஉ. குடித்து என்பதைக்குடிக்க எனப் பொருள்கொள்க. ஏற்ருன்-சிவபிரான்.

எச. குருகு - பறவை. மாமிசமுண்ணவந் திருத்தலாற் குருகோடியையுமென்ருர்.

எரு. சங்கு-வளையல். விடுத்தனசுரும்பின் சாலம் - தம்மைச்சேரும்படி தூரதாகவிடுத்தனவாகிய வண்டுக்கூட்டமென்க. கொங்கு - வாசனை.

எஅ. வீத்த-கெடுத்த. பண்-அமைவு. படுத்து-கொலைசெய்தது.

அய. மகேந்திரக்கணை - இந்திராஸ்திரம். வீக்க-அழிக்க. எழிலியின படை-மேகாஸ்திரம்.

அக. வரைபபகழி- பருவ தாஸ்திரமென்க.

அஉ. மாயவாளி-மயக்கஞ்செய்யுமபாணம.

அச. அமோகபாணம்-மயக்கமின்மையைச் செய்யும்பாணம.

அரு. விட்டேறு-ஈட்டி. எழு-தம்பம். திகிரி வாளம்-ஒருபொருட்பன்மொழி.

அக. பரிபவம்-அவமானம். கடாமலை-யானையென்க.

கச. அறப்படச்சமைந்தது - பின்னுகப் போர் செயச்சமைந்தது அற-பின் பின்னுகப் போர்செய்யுந்தன்மை யிவனுக்குண்டென்பதனைப் பதினேழாம்போரச்சருக்கத்தில் உஎஉகு-ஆங் கவியிற்காண்க.

கரு. சமூகம்-கூட்டம். ஆவலங்கொட்டல்-வாய்கையாற்கொட்டல்.

கஅ. திவசம்-நாள். இவறு-ஆசையுற்று.

ஈகூ. தெவ்-பகை. தீர்ந்திலவாகிய கோபமுஞ் சிவப்பும் எங்கப்பாய அன்றேதீர்ந்தனனக் கூட்டுக. அன்றே-அப்பொழுதே.

ஈக. தனுசர்-அசுரர். கன்னங்கரிய - மிகக் கரிய.

ஈஅ. அதிதிமக்கள்-தேவர்கள். இவர்நகரம் இரணியபுரம். ஆடகம் - பொன். மும்மை - மூன்று.

ஈய. கைவாரி-ஈண்டுக்கையாற்றருப்பணஞ் செய்யுநீரென்க. உருமு-இடி.

ஈயஎ. கூளி-பேய். வாளி-மண்டிலமாயோடல். வாசி-குதிரை. ஒளி-ஒழுங்கு.

ஈஉஉ. உழுவை-புலி. உழை-மான். முழை-குகை. மொய்-வலி. சந்தனம்-தேர். புழுவிலொன்றுமொன்று - புழுச்சாதிகளிற்பொருந்தியவொன்று.

ஈஉச. ஆலகாலம்-நஞ்சு. அயில் - கூர்மை. பாலம்-மழு. செம்புனீர்-இரத்தம்.

ஈகூச. ரகுவென்னுமரசன்குலத்திற் பிறந்திருத்தலாலிராமனை ரகுபதிபுதல்வனென்ருர்.

ஈசய. பொதுளல்-நெருங்கல். ககபடலம்-பறவைக்கூட்டம். கதுவல்-நிறைதல்.

ஈசஉ. ஓதனம்-உணவு ஆதபனருணனில்-சூரியன்றேர்ப்பாகனுகிய அருணனைப்போல.

ஈசரு. வாகை-வெற்றி, நாணுயர்தனுவின் வாங்கி-நாணையுயர்ந்த வில்லினின்றுங்கழற்றிக் கொண்டு. பறம்பு-மலை.

ஈசகூ. இதுபுகழாப்புகழ்ச்சியென்னுமணி.

ஈசஅ. சோடித்து-அலங்கரித்து.

ஈசக. கின்னரம்-கின்னரப்புள். மிதுனம்-இரட்டை. இப்புள் ஆணும்பெண்ணுமாய்க் கூடியிருத்தலிற் கின்னிரமிதுனமென்ருர்.

ஈருஉ. புன்மை-ஈண்டுப்பூபாரம். இதனைச் குதுபோர்ச்சருக்கம் உஈச, உஈரு, உஈகு-ஆஞ் செய்யுளிற்காண்க. திருமாலேநாரணனும் நானுமாகிப் பின் கிருட்டிணனும் அருச்சுனனுமாயிருத்தலால், மாயன் அருச்சுனன் உருவங் கொண்டானென்ருன்.

ஈருகூ. இகழல்-இகழற்க. இது அல்ஈற்று எதிர்மறை வியங்கோள்வினைமுற்று.

ஈகூய. மறை - மந்திரம். புரோசனப்பகைவன்-அருச்சுனன். புரோசனன், திரிதராட்டிரன் மந்திரிகளிலொருவன். சலித்தல் - ஈண்டு நீங்குதல்.

# புட்பயாத்திரைச் சருக்கம்.

:(0):

௧. புரை-குற்றம். கற்கொண்ட - கல்லுருவங்கொண்ட. துவக்கு-கட்டு.

௭. புரை-குற்றம். நாமம்-புகழ்.

௰. எமையாளுடையான் என்றது சிவபிரானை. ஆலயம்-தங்குமிடம்.

௰௨. கந்தவகன்-காற்று.

௰௫. இயக்கர்பதி - அளகாபுரி. துயக்கம்-சோர்வு. சுரபி - வாசனை. கரடம் - மதம்பாய் சுவடு. தறுகண்-அஞ்சாமை. சதாகதி-காற்று.

௰௯. செய்க்காற்றும்-வயலினிடத்துச்சொரிகின்ற.

௨௧. மாருதி-அனுமன்.

௨௨. சிற்பவாலதி-சிறியவால்.

௨௮. தூதனாகிய தம்முன்னென்க. தம்முன்-தமையன்.

௩௨. தாமமாருதி ஒழுங்குடைய அனுமான். நரன்-அருச்சுனன்.

௩௩. கன்னபாகம்-காது.

௩௫. கான்முளை - புதல்வன். புந்தி-புத்தி. சீகரச்சிந்து-திவலையையுடையகடல்.

௩௯. சீயம்-சிங்கம். சிம்புளேறு - அண்சரபப்பக்ஷி. தாயத்தாரால் அரசிழந்திருத்தல் வினைவசத்தாலென்பர் சீயத்தாலரசிழந்திடுஞ் சிம்புளேறனையான் என்றார்.

௪௰. தகைந்த - விரிந்த; தகைதல் விரிதல் என்பன ஐங்குறுநூற்றிற்காண்க. அகைந்த - எழுந்த. துணை-ஒப்பு.

௪௭. பாண்டவன் - பாண்டுபுத்திரனாகிய வீமன்.

௪௮. பெரியோரை அடிகளெனக்கூறுதல் மரபென்க.

௪௯. மோட்டுரு-பெரியவடிவம்; என்றது விஸ்வரூபத்தையென்க.

௫0. மன்றுளதார் - வாசனையுள்ள மாலை; மன்றம் மன்று என விகாரமாயிற்று.

௫௫. மேலளவாது என்றதற்கு ஆழ்ந்தளவிட்டு என்க. நுண்ணறிவோர்போல் என்றதற்குத் திருவடிக்காக்ஷியன்றி ஏனையவற்றைக் காணாத நுண்ணிய அறிவுடையோரைப்போலவென்க.

௫௭. இரண்டாமடிக்கு, செந்தமிழ்ப் பிரபந்தத்தைச்செய்து தொகுத்தோராகிய மெய்யன்பர் தம் பெருமையைத் வெளிப்படுத்தாது ஒடுக்கியிருத்தல்போல என்க. தமிழ் - ஆகுபெயர்.

௫௮. இந்திரசாலம்-அற்புதங்களைக் காட்டு மாயவித்தை. மைந்து-வலி. புந்தி-புத்தி.

௫௯. திருவடி-அனுமானுக்கொருபெயர்.

௬௰. மின்என்றது திரௌபதியை. ஏதம்-குற்றம்.

௬௩. பொழில்-முன்னதுசோலை, பின்னது புவி. திறை-கப்பம். துப்பு-வலி.

௬௪. மல்லல்-வளம். மலர்தருவோடு-வனசமலரைக் கற்பகதருவொடு.

௬௭. ஆசு-விரைவு. இடை-இடம்.

௬௮ கவான்-மலைப்பக்கம். குகரம்-குகை.

௬௯. கொடி-நீளம்.

௭௨. இரண்டாமடிக்குப் புண்டரீகன் என்னுந் தன்பெயரை நாடுகளிலெழுதிவைத்தோனென்க.

௮௨. பாறு-கழுகு; புறப்பொருள்வெண்பாமாலையுரையிற்காண்க. இதுவரை இவ்வரக்கனையுண்ணமுடியாமல் வருந்துகின்றனதலால் வருந்துகின்ற கூற்றென்றார்.

௮௩. துவக்கு-தோல். நலியுமீட்டார்-வருத்துதல்செய்யும் வலியுடையார். வாழி-அசை.

௮௮. பூழை-துவாரம்.

௮௯. வைத்தாரை-கூர்மை; இது மீமிசைச்சொல். தாரைபட-ஒழுங்குபட.

௯௨. பவர்-நெருங்குதல். பனகம்-பலமலைகளென்க. தவர்-வில்.

௯௩. செப்படிப்பவரின் - செப்படிவித்தை செய்பவரைப்போல. அரக்கர்சேனையைத் துணித்தல் சிறிதும் வருத்தமின்றி விநோதமாகக் கொண்டிருந்தானென்பார் செப்படிப்பவரினின்று சிரித்தனன் என்றார்.

௯௮. எழ்மதம் - சூதுபோர்ச்சருக்கம் ௭௩-ஆம் பாட்டுரையிற்காண்க.

௯௰. சங்கோடணன் குபேரன்சேனைத்தலைவன். துவக்கி-கட்டி.

௯௰௩. உருத்திரசேனன்-இவன் குபேரன் மகன். அருத்தி-ஆசை.

௯௨௨. மைந்தர் என்பது மருதமரவடிவமாயிருந்த நளகூபரன், மணிக்கிரீவன் என்க.

௯௨௩. உயர்வுடையபொற்றருவைக் கொடுத்துபசரித்தானெனவேவனசமலரையுங்கொடுத்தானென்பது கூறாதேயமைந்ததென்க.

௯௩௰. உயவாமல்-ஆராயாமல்.

௯௩௮. முனி - உரோமசமுனி. சேய்தழற் பாவையென்பது பாடமாயின், சேய் - சிவப்பென்க.

## சடாசுரன்வதைச் சருக்கம்.



௫. சுரும்பு-மலே.

௬. சழக்கன் - வழக்குக்கு மாறுபாடுடைய வன் ; சழக்கு-வழக்குக்கு மாறுபாடு ; பெரிய புராணம் திருவாரூர்ச்சிறப்பு ௩௫-ஆங் கவியிற் காண்க.

௮. நபம்-ஆகாயம்.

௰௫. பணை - முன்னது கொம்பு, பின்னது பருமை.

௰௬. கஞ்சன் குஞ்சரமென - கஞ்சனுற் கிருட்டிணன்மேலேவப்பட்ட குவலயாபீட மென்னும் யானையைப்போல.

௰௮. முட்டி - ஈண்டுக்கைக்குத்து. மட்டி- மட்டித்தல்; அது மண்டலித்தல்.

௰௯. மொய்ம்பு-வலி. கழல் - காலணிமணி வடம்; சிவஞானபோதச் சிற்றுரையிற்காண்க. குரக்கு நாயகன் சுக்கிரீவன். குன்றென்பது ஈண்டுத் துந்துபி எலும்பின் குவையை ; இக் கதையை இராமாயணங் கிஷ்கிந்தாகாண்டம் துந்துபிப்படலத்துக் காண்க.



## மணிமான்வதைச் சருக்கம்.



௪. முன்பு-வலி.

௫. மைந்து-வலி.

௮. அரிமணி-சந்திரகாந்தக்கல், சூரியகாந் தக்கல். எரிமணி - எரிநிறமுள்ள செம்மணி. தருணம்-புதுமை. சதனம்-வீடு.

௰. வழை-சுரபுன்னே.

௰௪. தாரை-நட்சத்திரங்கள். வார்-நீட்சி.

௰௯. சிவனன்பன்-குபேரன்.

௨௰. பணை - முரசு. நம்பி என்றது ஆடவ ரிற் சிறந்தோனுகிய குபேரனே.

௨௨. தாமம்-ஒழுங்கு. தூமம் - புகை. சேமம்-காவல்.

௨௪. காழ்-வயிரம். காணுர்முனே-பகைவர் யுத்தம். வீழ்-விரும்புதல்.

௩௫. தண்டதரன்-தண்டத்தைத் தரித்தவ னுகிய வீமன்.

௩௯. மருத்துதவுகூற்று-வாயுபெற்றயமனு கிய வீமன்.

௪௰. பிறங்கல்-மலே. கன்னம்-காது. கற்கி- குதிரை.

௪௧. உளேத்து-ஒலித்து. புளேத்த-உயர்ந்த.

௪௨. தாரணி - தரணியின் புத்திரனுகிய யமன்; தரணி-சூரியன்.

௪௪. முருக்குதல் - அழித்தல். மொய்ம்பு- வலி. தாள்-முயற்சி. பூளே-பூளேப்பூ.

௪௭. இஞ்சிமதில்-ஒருபொருட்பன்மொழி. அரணம்-காவலிடம்.

௪௯. ஆனிலன் - அனிலன் புத்திரனுகிய வீமன். அனிலன்-காற்று.

௫௧. என்றூ-சூரியன். மூசி-மொய்த்து.

௫௨. பாசதரன்-யமன். வேகியா-வேகமுற் று. ஆசை-திசை.

௫௫. தாயம்-ஈண்டுச் சமயவாய்ப்பு.

௫௭. இரண்டாமடிக்கு-திரிபுரத்தைச் சுட்ட மேகம்போலு நிறத்தையுடைய பாணமாகிய திருமான்முன்பு என்க. சோரி-இரத்தம். வை- கூர்மை. வாரியுதவும் பகழியெனச்சுட்டுக.

௬௫. முதலடிக்கு-கேடுடையவனுகிய மணி மான் (உயிர்நீத்து)ச் சுவர்க்கஞ்செல்லப்பின்பு என்க. தந்திரம்-சேனே.

௬௭. துனி-துன்பம்.

௬௯. துனேவரு-வேகத்துடன்சூழ்ந்து வரு கின்ற. ஒ-முன்னது வினு, பின்னது-இரக்கம். நனே-கள்.

௭௧. சதித்தனே - கொண்டது சாதித்தாய். சதிசெய்தாய்-வஞ்சனேசெய்தாய்.

௯௨. விபுதர்-தேவர். பனே-ஈண்டுவாத்தி யப்பொதுவென்க.

௯௮. சலம்-கோபம். முரண்-பகை. புலத் திய முனி மகன் விச்சிரவா ; விச்சிரவாவின் மகன் குபேரன்.

௱௨. நித்தன்-அழியாதவனுகியசிவபிரான்.

௱௫. தாமம் - மாலே. புரிசை - மதில். ஞா யில்-மதிலுறுப்பு.

ராசு. பதினாறுவகைப்பூசை - அவை பெரியோர்க்குச்செய்யுமுபசாரம், ஆசனமளித்தல் முதலியன. காசு-குற்றம். ஆசி-வாழ்த்து.
ராஅ. அரக்கர்நாயகன்-கடோற்கசன்.
ராகூ. அராபதம்-வண்டு. அங்கராகம்-பூசும் பரிமளம்.
ராய. பதம்-வரிசை.

ராயக. துணங்கை-பேயின் கூத்து; அது "பழுப்புடையிருகைமுடக்கியடிக்கத், துடக்கியநடையது துணங்கையாகும்" என்றார் திருமுருகாற்றுப்படையுரையில். பழு-விலா.

# துருவாசமுனிச் சருக்கம்.



க. எனை - முனிவர்க்குச் சாபத்தாற்றவங் குறையும், இம்முனிவற்கு அதனாற்றவம்வளருமாதலிற் சாபமொழி தன்னல்வளருந்தவம் என்றார்.
உ. அம்மா-வியப்பிடைச்சொல். செம்மாந்து-மிகக்களித்து
ரு. மேவார்-பகைவராகிய துரியோதனாதியர். ஆஆ - இரக்கச்சொல். கோ - துரியோதனன். ஆனவன் என்பது எழுவாயின் சொல்லுருபு.
ய. அருக்கனுதவும் பாண்டம்-சூரியன்கொடுத்த பாத்திரம்; தருமன் ஆரணியத்திற்குவந்தவுடன் சௌனகமுனிவர் உபதேசித்தமந்திரத்தை யுச்சரித்துத் தவஞ்செய்ய சூரியன் பிராமணவடிவாய்வந்து வேண்டுமளவு குறையாமல் உணவளிக்கும்பாத்திரம் ஒன்று கொடுத்தான் என்னுங்கதையினைச் சுருக்கிக்கூறினாரென்க.
யக. ஒருகாலத்திற் பிரமனுக்குத் திருமால் அன்னமாயிருந்து வேதங்களைக்கூறினாரென்க.
யஉ. இதாம்-தீங்கு.
யச. நென்னல்-நேற்று. புயங்ககேதனன்-துரியோதனன். நிலயம்-இடம்.
யரு. உம்மிற்-செல்வமுடையவன்போலுரைத்தான் என்றதற்கு (எல்லாச்செல்வமுமெய்தற்குரியதிருமாலினருட்செல்வமுடைய) உங்களைப்பார்க்கினும் பெருஞ்செல்வமுடையவன்போல் அறியாமையாலுரைத்தானெனவுரைக்க.
யசு. பரம்-மெய்மை. உரம்-அறிவு. திரம்-உறுதி.



# பழம்பொருந்து சருக்கம்.



க. கயிரவம்-ஆம்பல்.
உ. மைக்கனிக்களவு - கரியகளாக்கனியென்க. முக்கனி-வாழை, பலா, மா இவற்றின் கனி,
ங. சோமகர் - பாஞ்சாலதேசத்தார். ஆமலகம்-நெல்லிக்கனியென்க. ஏ - பாணம். இறுத்தல்-ஈண்டுவீழ்த்தல்.
எ. மேவிடாவைம்புலத்தினன் - ஐம்புலனடங்கியவன். துலை என்பது துலாநாவையுணர்த்தியது; துலையோடொப்பான் என்பதற்குச் சமனிலையுடைமையாற்றுலாநாவோடொப்பானாகிய தருமனென்க.
யக. அவன் என்றது கிருட்டிணனை.
யஉ. மண் - ஆகுபெயராயுலகரையுணர்த்தியது. ஓ-எதிர்மறை.
யரு. பட்டாங்கு - உண்மை. கோடு - மரக்கொம்பு. ஒன்றுதல்-பொருந்துதல்.
யசு. அலகையாமன்னை- பூதனையென்னும் பேயாகியதாய்.
யஎ. எட்டி - ஆகுபெயராய்க் காஞ்சிரங்காயை யுணர்த்தியது. மல்-மல்யுத்தம்.
யகூ. தாரை நேரோடல்; குதிரைநடை.
உய. உற்பவகாரணன்- தந்தை.
உக. ஆடவரிலாமையினல்லால்-புருடருண்மையினால். நம்புதற்குளதோ-அப்பெண்களைப்

பதிவிரதைகள் என்று நம்புதற்கில்லை. ஓ-எதிர்மறை. ஆடவருண்மைமிஞற்கண்டவுடன் பெணகளின்மனம் விரும்புமென்றபடி. இதுவேற்றுப்பொருள்வைப்பணி. நினைத்தாற்ரேஷமில்லையென்பது துவாபரயுகதருமமாக ஸ்மிருதியிற்கூறப்படலால், வேறொருவனெம்பெருங்கொழுநனுவதற்கு குருமென்ருள்; ஆதலால் வசிட்டனல்லநமனைவியேயனையாளென்ருர்.

உஉ. மறு-ஸ்ரீவத்ஸம் என்னுமறு. ஓதனம்-ஈண்டுணவென்க.

## நச்சுப்பொய்கைச் சருக்கம்.

உ. சேர்ந்து - சேரவெனத்திரித்துரைக்க. கழி-மிகுதி; விபினம்-காடு. சிந்தனை - ஈண்டு மனக்கவலை.

ங. மூவர்என்றது துச்சாதனன், கன்னன், சகுனியை. விரகு-உபாயம். கோலி-வளைத்து. கோறும்-கொல்லுதும்.

ரு. கொல், ஆம்-அசை. கலாமனம்-கல்லாகிய நெஞ்சம்; அருளிலாமனமாதலிற் கல் ஆமனமென்ருர். இவ்வாறன்றி கல்லாதமூடத்தன்மையுள்ளமனமென்பர்.

எ. கொடையாலினியபுகழை வளர்ப்பவனுயிருக்கவும், கொலைக்குடன்பட்டமையாற் கன்னனைக் கொடியபாவியென்ருர்.

அ. கன்னம்-காது. ஏழாகவெழும்பிறப்பெண்க; அவை தாபரம், ஊர்வன, நீர்வாழ்வன, பறபபன, விலங்கு, மனிதர், தேவர்என்பன. திருக்குறள் புதல்வரைப்பெறுதலுரையிற் காண்க.

கூ. கண்ணல் - கருதல். வீதல் - இறத்தல்.

யஉ. பாரிடம் - பூதகணம். துன்றி-நெருங்கப்பட்டு எனப்பிறவினையாக்குக. வெயிலாமலன மூன்ருவது விரிக்க. கழை-மூங்கில்.

யங. கொடுந்தருக்கள் - வேம்புமுதலியனவென்க.

யச. யாமளவேதத்திற் கதிதேவதைகாளியென்க.

யரு. முப்பாலினுக்கு முதற்பாலாய் - அறம்பொருளின்பமெனனும் மூன்று பகுப்பினுக்கும் முதற்பகுதியாகிய அறத்தின்வடிவாய். மும்மைபபுவனம்-பூமியந்தரசுவர்க்கம்; பூலோக சுவர்க்கலோக பாதாளலோகமென்பாருமுளர். அறக்கடவுள் - யமதருமன். எண்ணம்-துரியோதனன் எண்ணம்.

யஎ. அசினம் - ஈண்டு மான்ரேல். ஆகாயத்தினின்றும் வாயுத்தோன்றியதனுல் வாயுவை வான்மைந்தனென்ருர். தொன்மை பழமை. உழை - மான்.

யஅ. வானிடையில் - தூரமானவிடத்தில். பொறை-மலை. அபயம் - ஆபத்துற்ரேர் அதனை நீக்கற்குரைபபது. நறை - தேன்.

யகூ. ஆசுகம்-பாணம். வெளிக்கு - வெளியில். ஏ-அசை. முகப்பட்டிடும்-முன்பட்டிடும். தகைபட்டு-தடுத்தல்செய்து.

உக. தலை-அசை, இடமுமாம்.

உஉ. பானீயம்-நீர். தொன்மரம்-ஆலமரம். எல்லாமானேன் - எல்லாப்பொருளிலு மந்தரியாமியாயிருக்குமிறைவனென்க.

உங. தாலு - நா. மரு - வாசனை. எக்கண் என்பது வலித்தல்விகாரமாயிற்று. என்று - சூரியன்.

உசு. ஈமம்-மயானம். ஆம்-நீர்.

உஎ. வளர்ந்து - அத்தாகம் வளர்ந்து. என்னவன்பட்டான்-அவன் என்ன வருத்தப்பட்டான். முன்சொன்னவன-இச்சரித்திரத்தைக் கூறிய வியாசமுனி. தொகுக்கமாட்டான் - அளவுபடுத்துச் சொல்லமாட்டான்.

உஅ. குசை - கடிவாளம.

ஙய. தோயம்-நீர்.

ஙக. அருப்பம் - அருப்பு என நின்றது. அருப்பம்-அருமை. அறல்-நீர். ஆலம்-விடம். உருப்பு - வெம்மை.

ஙஉ. அமுதம் - அமிழ்தினுக்கும் நீரினுக்குங்கொள்க.

ஙங. யோனி - ஈண்டுப் பிறந்தவுயிரென்க. வெட்புலம-வெற்றிடம். உயங்கல் - வருந்தல். நட்புலந்தவர்-நட்பற்றவராகிய துரியோதனுதியர்.

ஙச. ஆங்கு-அசை.

ஙரு. துன்றிடா - துன்றி. சூழல் - இடம். சென்றிடா-சென்று. கொன்றிடா - கொன்று.

ஙசு. இலக்கு-இலட்சியம்.

ஙஎ. மோட்டுரு - பெருவடிவம். சூறை - சூருவளி.

ஙஅ. அறன்-யமன். மற்று-அசை.

ஙகூ. துப்பு-உணவு; ஈண்டுப்பானம்.

சம். போலும் என்பது ஐயப்பொருளில் வந்தது. ஏ-அசை. நிட்டூரம்-கொடுமை.

சஉ. இல்லாநயனி - நயனமில்லாதவனாகிய திருதராட்டிரன்.

சச. சிரிப்பு-ஈண்டு வீரநகையென்க.

சரு. உயங்கிய-வருந்திய. மகீருகம் - தாபரம்.

சஎ. அடிக்கடி-பலமுறை.

சகூ. ஊறு - புண். உடற்றினர் - பொருதோர். மாறு-பகை.

ருய. கோளகை - வட்டம். ஆதபத்திரம்-குடை. பதினெண்டேசமாவன - நன்னூல், பெயரியலுரைக்குறிப்பிற் சிங்களஞ் சோனகமென்னுங் கவியிற்காண்க.

ருக. சமம் - போர். அருளில் வஞ்சகன் என்றது துரியோதனனை. கயம்-தடாகம்.

ருச. அறக்கடவுள் - யமன். பொருவு - ஒப்பு.

ருரு. எண்-ஆலோசனை.

ருஎ. சிற்பம்-நுட்பம்.

ருஅ. வயின் - இடம். பொலஞ்சிலம்பு - பொன்மலை. வெவ்வயிற்புரிவிரகு - வெய்ய வனத்திடத்திற்செய்த மாரண வேள்வியாகியவுபாயம் என்க.

ருக. மறம்-வீரம்.

சூய. மறை-மந்திரம்.

சூங. குத்திரம்-வஞ்சம். புரிந்து-விரும்பி. வல்லவர் - சித்திரம்வரையவல்லோர்.

சூஅ. இரண்டாமடியிற் றந்தை யென்றது இயமனை. வம்பு-வாசனை. அம்பகம்-கண்.

சூகூ. பேது - மயக்கம். பிணை - மான். கடையடியில் ழகரவொற்றிடைவந்த ஆசெதுகைகாண்க.

ஆரணியபருவம் முற்றிற்று.

# நான்காவது விராடபருவம்.

## நாடுகரந்துறை சருக்கம்.



க. தத்துவம்-உண்மைப்பொருள். அறல்-நீர். காளியன் - ஓர் பாம்பு.

எ. கல்கெழுகுறும்பு - கற்கள்பொருந்தியமலை. முல்லையம்புறவு — முல்லைக்கொடிபடர்ந்த அழகிய வனம்.

கூ. எழுவகைத்தாயர் என்றது சத்தமாதரை; அவர் இந்திராணிமுதலியவர்; நிகண்டிற் காண்க. சாமளம்-பச்சை. கோமளம் - அழகு. பாதவம் - மரம்.

ய. கோடரம்-பொந்து. விரகு - உபாயம். முத்தலைவேல்-சூலம். வடி-கூர்மை.

யக. தாபதர்-முனிவர்.

யஉ. பாங்கு - பக்கம்.

யச. பவனம் - காற்று. மடையன் - மடைத்தொழிற்குரியவன்.

யரு. ஐம்பெருஞ்சுற்றம் - நட்பாளர், அந்தணர், மடைத்தொழிலர், மருத்துவக்கலைஞர், நிமித்திகப்புலவரென்க.

யஎ. உருப்பசி சாபவரலாறு அருச்சுனன் றவநிலைச்சருக்கத்திற் காண்க.

யஅ. முனி - கங்கமுனி. சாய்த்து - வணக்கி.

உக. கம்பி-இரும்புக்கம்பியாலாகிய கடிவாளமென்க. மத்திகை-குதிரைச்சம்மட்டி. உன்னயம் - அசுவசாத்திரங்களினொன்றென்பர்; பதின்மூன்றும் போர்ச்சருக்கம் ரு-ஆங் கவியிலுங்காண்க.

உங. மந்துரை-குதிரைப்பந்தி.

உரு. நந்தகோபன்மைந்தன் - கிருட்டிணன். குழை-முன்னது காது, பின்னது தளிர். தொடி - வளைவு. வேத்தவை - இராசசபை.

உஎ. கோபாலன்-பசுவைக்காப்பவன்.

உஅ. நிரை-பசுக்கள். செம்மல்-தலைவன்.

உகூ. வண்ணமகள் - அலங்காரஞ்செய்யும் பெண்.

ஙய. நொதுமலினள்-அயலாள்.

௩௨. விரதமாயைபுரி - வஞ்சகமே விரத மாகச்செய்கின்ற. மான்விரதநோக்கியர் - மானின் பார்வையை நிந்தைசெய்கின்றநோக்கத்தையுடைய மாதர். மான்-ஆகுபெயர். விரத சாரணி - விரதநெறியிற்சரிப்பவள்.

௩௩. எலுவை-தோழி.

௩௫. முற்கவியிற் கந்தருவர் காவல்புரிகற்புடையளென்றதனல் தெய்வமகளோவென வெரீஇயினளென்க. வெரீஇயினள்-அச்சமுற்றாள்.

# மற்போர்ச் சருக்கம்.

௨. தந்தியெட்டாவன - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் என்பன.

௩. பாரை-அடி. சோதிநேமி-சூரியமண்டலம். விம்பம்-வட்டம். தாணி-நீர்ப்பெருக்கு. உரவு-வலி.

௰௨. காயம்-இலக்கு. ஊதை-வாயு. ஊரு-தொடை. மருங்கு-இடை. மிடறு-கண்டம்.

# கீசகன்வதைச் சருக்கம்.

௧. வருதினி-சேனை. கன்னல்-கரும்பு.

௨. நூபுரம் - சதங்கை. அந்தப்புரம் - மன்னன்றேவியில்லம். பணைத்த-பருத்த.

௩. மயற்கையால் - மயக்கத்தின் சிறுமையால். இணைக்கயல் இராசசின்னங்களிலொன்றென்றும், இரண்டு மச்சரேகையென்றுங் கூறுவர்.

௰. சுரதமாமேகளிர் - புணர்ச்சிசெய்யு மகளிர். சரதம் - உண்மை.

௰௩. காவியங்கண்ணவள் என்றது விரத சாரணியை. ஆதரம்-ஆசை.

௰௪. பாசகாரிகள் - பாசத்தைச்செய்பவைகள். பாசம்-ஈண்டு ஆசை. பரிவுகூர - இன்ப மிக, மதனவேதத்தின் மார்க்கமாவது ஈண்டுத் தன்னை விரும்பாத மகளிரைத் தான்விரும்பல் கூடாதென்பது.

௰௫ ஆகுலம்-வருத்தம். கோகுலம்-இராச குலம்.

௰௬. மெய்ந்நலமாதரித்து - மெய்யின் சுகத்தை விரும்பி. நலம்-சுகம்; பிங்கலநிகண்டிற் காண்க. விரகின்-உபாயத்தால்.

௰௮. முதுக்குறைவு-பேரறிவு. ஆரமாகிய நீர்த்துளியென்க. ஆரம்-முத்து.

௰௯. ௰-வது கவியில் ஆருயிர்தப்புமெனக் கூறலால் ஈண்டு விதியென்றது கீசகன் ஊழினையுமென்க; அது வினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கேதுவாகிய நியதியென்க.

௨௰ சூரியன்றேர்ப்பாகனாகிய அருணனுக்குக் காலின்மையாற் பாதமில்பாகனென்றார்.

௨௧. சாயல்-அழகு.

௨௨ துரங்கம் - குதிரை. சப்தாஸ்வா என்னும் பெயருண்மையாலே துரங்கமேழென்றார்

௨௩. என்றூ-சூரியன். மன்றல்-முன்னது புணர்ச்சி, பின்னது மணம்.

௨௪. காமருகுளிரி - அழகியகல்லார மலர்; உகரஞ்சாரியையென்க. அடை-இலை. அமளி மெத்தை. ஈமம்-விறகு.

௨௬. பாக்கியம-புண்ணியம்.

௩௨. உருளை - சக்கரம். கிங்கரன் - ஏவல் செய்பவன். மாருதம்-காற்று. ௨௨-ஆங்கவியிற் சூரியனைவணங்கி வேண்டிக்கொண்டாளாதலின் அவன் கிங்கரனிவ்வாறுசெய்தானென்க.

௩௩. வாய்மை-வசனம்.

௩௪. விடவி - மரம்.

௩௫. கொளுந்திடாது - பற்றிடாது. இந்தனம் - விறகு. பின்னிரண்டடியும் வீமன் வெகுளியைத் தணித்திருத்தற்குக் கூறிய குறிப்புரையென்க.

௪௧. எதிலர்-அயலார்.

௪௨. ஆர்வம்-ஆசை. பூரியர்-கீழோர். ஓ-எதிர்மறை.

௪௩. ஆசைநோய் மன்பதையனைத்தினுக்குமுண்டு ஆயினுங் கீசகன் கேடுசெய்தனன்

என முதலிரண்டடியையுமியைத்துரைத்துக் கொள்க. ஆசைநோயைத் தீர்க்குநெறியை விடுத்துப் பிறர்தாரத்தைப் பற்றவந்ததனால், ஆயினுங் கீசகன் கேடுசெய்தனனென்றான். மன்பதை-மக்கட்கூட்டம். ஏசு-குற்றம்.

சசு. பன்னிருவரினும்-பன்னுகின்ற சூரிய சந்திரரிருவருள்ளும். பன்னல்-சொல்லல்.

சஅ. பானுள்-பாதிநாள். கனை-ஒலி.

சகூ. ஏ-தேற்றம். அமளி-மெத்தை.

ருௐ. சௌபலன் - சகுனி. இன்றுமம் மூறைமை மொழிந்ததை, ருடு-ஆவது கவியிற் காண்க. புரசை-கழுத்திடு கயிறு.

ருக. மருச்சகன் - அக்கினி. அருத்தி - ஈண்டு அன்பு.

ருங. ஐயென - விரைய. அழலனையகற்பு-அக்கினியொத்த பரிசுத்தமுள்ள கற்பு.

ருடு. காந்தக்கல்-ஈண்டுச்சந்திரகாந்தக்கல். தலைமகனல்லான்-கீழோன்.

ருகூ. விடுத்தல் - தங்குதல். புளகம் புளகு என நின்றது. புளகம்-மயிர்சிலிர்ப்பு. கொக்கு-மாமரம்.

சுௐ. வம்மின் என்பதுபாடமாயின் - வாரீர். உருள்-சக்கரம். தேரோய்வம்மின்என ஒருமையிற் பன்மை வந்தவழுவமைதியென்க. ஒருப்பட்டான்-சம்மதித்தான். வம்-வா-மோ-அசை

சுக. சமீரணன்-வாயு. செறிவு-அடக்கம்.

சுஉ. எல்லையின்றலைவன் — பகலின்றலைவன். எல்லை பகல் என்பதைப் புறநானூற்றுரையிற்காண்க.

சுங. அடுதொழில் — முறையே கெடுத்தலுஞ் சமைத்தலுங்கொள்க. உடுமுகத்தின்மை-நட்சத்திரங்கள் தன்னிடத்தில்லாமையால்.

சுச பொங்கர் - சோலை. இங்கிதம் - எண்ணக்குறிப்பு.

சுசு. சாந்து-ஈண்டுச் சுண்ணச்சாந்து. கூர்ந்த-மிகுந்த.

சுஅ. அளை - அளைந்து; வரிப்புனைபந்து என்பதுபோல முதனிலை வினையெச்சமாயினதென்க.

சுகூ. கிஞ்சுகம்-முருக்கம்பூவாகிய இதழென்க. கிள்ளை-கிளிமொழியையுணர்த்தலாலாகுபெயர். வாய்மை-வாக்கு. எஞ்சுதல்-குறைதல்.

எௐ. கழி-மிகுதி. முகம்புகுதல்-நோக்கிற் கெதிர்சென்றுபுகுதல்; ஐங்குறுநூற்றுரையிற் காண்க.

எஉ. பெற்றம்-வாயு. பொறி-தீப்பொறி. எண்-வலி. ஏண் என்பது வலியாதலின் எண் எனக்குறுகி நின்றதெனினுமாம்.

எடு. உரும்-இடி. நெக்கன - நெகிழ்ந்து விண்டன. உகிர்த்தலை-நகநுனி.

எசு. கேள் - சுற்றம். வேளொடுவருநலம்-வேளால்வருஞ்சுகம். விஞ்ச-மிக.

எஎ. காழ்-வயிரம்; காளை என்றது வீமனை சூறை-சூறைக்காற்று. மிடல்-வலி

எஅ பகைவன் என்றது கீசகனை.

எகூ. விடைத்தல்-விடுத்தல். பூதி-புழுதி.

அௐ. நிசை-இரா.

அடு. நீங்கியவாய்மைகள் - கழிந்த வாக்குகள்.

அஅ. முட்டி-ஈண்டுக் கைக்குத்து.

அகூ. தொய்யில்-எழுதுங்குழம்பு.

கூங. நள்ளிருள் - செறிந்த விருட்டு; மணிமேகலையுரையிற்காண்க. அகரு-அகில்.

கூசு. எண்ணிலாமனம் - வலிநிலாவுகின்ற மனம். விண்ணுளார் என்றது கந்தருவரை.

கூஅ. மெய்காக்குங்கடவுள் என்றது முன்னர்க்கூறிய கந்தருவரை.

கூகூ. துடைப்பரும்பவனம்-கெடுத்தற்கரிய மாளிகையில். தொடைப்பெரும் பவனமெனப் பாடமோதித்தொடையின் பெருங்காற்றுஎனப் பொருள் கூறுவாருமுளர்.

௱க. வானவன் - பெரியோனாகிய வீமன். ஒக்க-ஒருமிக்க. ஆனைமானவன் என்பது பாடமாயின் யானையைப்போலும் வலியுடையவனென்க.

௱உ. துவன்றுகற்பு-நிறைந்தகற்பு. கவன்றது-வருந்தியது. கடி-காவல்.

௱ங. திற்குமைந்து-செய்யும்வலி. திறல்-செய்தல். தன்கு - செருக்கு; இது தற்கு என விகாரமாயிற்று.

௱ச. பொருநன்-அரசன், வீரனுமாம். புறநானூற்றுரையிற்காண்க.

௱டு. கனை-மிகுதி. இருள்வலி-சூரியன்.

# நிரைமீட்சிச் சருக்கம்.

உ. நிரை-பசுக்கள். கோள்-கொள்கை.

ங. ஒற்றர்-பகை, நொதுமல், நட்பென்னு மூன்றுதிறத்தார் மாட்டுநிகழ்ந்தனவறிந்து கூறுவாரென்க.

௬. என்று-எண்ணிடைச்சொல். கடையடியில் என்று சூரியன். நின்பாதம் (ஆணையாக) எனவருவித்துரைக்க.

ஒற்றையிருசங்கம் - ஒற்றையோடிரட்டை வலம்புரிச்சங்கமென்க; இந்திரபிரத்தச்சருக்கம் ௬௯-வது கவியிலும், பதினாறாம்போர்ச்சருக்கம் ௫௯-வது கவியிலுங்காண்க; ஒற்றை ஒரு துளைக்கருவியென்க.

௭. தொறு-நிரை. சூழல்-இடம்.

௮. வெட்சி-வெட்சிப்பூமாலை; இது பகைவர் நிரைகவரச்செல்லும் வீரர்சூடும் பூமாலையென்க. திரிகத்தர்கோன் - திரிகத்ததேசத்தார்க்கரசன்; இத்தேசம் இமயத்திற்கும் விந்தியத்திற்கு 'மத்தியிலுள்ளதாகிய ஆரியாவர்த்தமென்னுந் தேசத்தின் வடமேற்றிசையிலுள்ளதென்பர். அக்குரோணி - படை, உ௧௮௭0-யானை, ௬௫௬௧0-குதிரை, உ௧௮௭0-தேர், லட்சத்து௯௩௫0-காலாள்கொண்டது; இவ்வாறு நல்லாபிள்ளை பாரதம் சிறப்புப்பாயிரச் சருக்கம் உ௩-ஆங்கவியிற்காண்க. வியாச பாரதத்திலுங்காண்க ஆன்-பசு.

௧0. செரு-போர். சதி - வஞ்சனை. நிருமித்தல் - நியமித்தல். பண் - அலங்காரம். உரும்-இடி.

௧௧. தூசி-படைமுன்னணி. சிந்தி-சிந்த.

௧௨. கொட்பு-வளைவு. பெட்பு-விருப்பம்.

௧௩. காந்தை-காந்தைப்பூமாலை; பகைவர் கொண்ட நிரையை மீட்போர் அணிவது.

௧௪. தாமச்சரம்-ஒழுங்காகிய பாணம்.

௧௫. துனை - விரைவு. தொடை - பாணம். பாகு-பாகன்.

௧௭. ஈறு-முடிவு. ஊதை-காற்று. நருக்குதல்-நொருக்குதல்.

௧௮. வடம்-கயிறு. துவக்கி-கட்டி. மூரி-வலிமை.

௧௯. வெருமுகத்தில் - அஞ்சுகின்ற இடத்தில். வீடு-விடுதல். கைம்மாறு-பிரதியுபகாரம்.

உ0. சேவலான்-குமரக்கடவுள். மாவலான்-நகுலனாகிய தாமக்கிரந்தி என்க. கோவலான் - சகாதேவனாகிய தந்திரிபாலனெனக.

உ௧. பாவித்தாங்கு - பாவித்தாற்போல; ஆங்கு உவமையுருபு. ஐங்குறு நூற்றுரையிற் காண்க.

உ௨. சூரியகுலத்தரசனாதலின் விராடனை அயோத்திமன் என்றார்.

உ௩. யாரினும்பெரியோன் - எல்லாவரசரினு மேலான துரியோதனனென்க. ஈர்தல்-அரிதல்.

உ௫. உத்தரன்-விராடன்மகன்.

உ௮. துணை-அளவு. எயில்-மதில்.

உ௯. ஆரம்-முன்னது சந்தனம், பின்னது முத்து.

௩௧. ஒப்பனைக்குரியாள்-திரௌபதியாகிய வண்ணமகள். வித்தரம் - விஸ்தாரம். தரம் - தகுதி. பேடி-விசயனாகியபேடி.

நிரைவளை - ௯தேட்டினை. வெய்தீண்டும் - விரைந்தணுகுவன்.

௩௪. உத்தரம்-வடக்கு.

௩௮. நிலை-சரம்விடுநிலை. முட்டி-கைப்பிடி. சிலீமுகம்-பாணம். மலையிலக்கென-எய்வதற்கு மலையையிலக்காக்குவதுபோல.

௩௯. இகல் வீரன் என்பது-பழிப்பதுபோலப் புகழ்தல்.

௪௨. பொதும்பர்-மரப்பொந்து.

௪௩. எரிப்புறத்தரு-மயானத்திலிருக்கின்ற வன்னிமரமெனக்கொள்க. இரண்டாமடிக்கு, மலைகளைத் தன்னிடத்துடைய பெருங்காட்டினுறைகின்ற அருச்சுனனுடையனவென்று கூற என்க.

௪௪. அரிடம்-அதிஷ்டவீனம். அரிட்டம், அரிடமெனநின்றதெனக் கொண்டுசென்ம தோஷமென்பதனை பிங்கலநிகண்டிற்காண்க.

௪௫. கடிகை-நாழிகை.

௪௬. உத்தரன் விசயனுக்குச்சாரதியாகுஞ் சிறப்பைப்பெற்றதனால் மால் பெருஞ்சிறப்பைப்பெற்றெனன்றார்.

௪௮. தொடி-வளையல். தொடை-தொடுத்தல். வீடு-விடுதல். அஞ்சிடா - வினையெச்சம் ஈறுகெட்டது.

௫0. அருச்சுனன் பெற்று, வென்று, நுகர்ந்து வேய்ந்தான் (ஆதலால்) அன்று போலலன் எனமுடித்துக் கவிகூறியதாகக்கொள்க. போனகம்-உணவு; ஈண்ட முதுணவென்க.

௫௪. தண்டு-படை. மிண்டுதல்-அடர்தல்.

௫௬. பொதுவர் - இடையர். மச்சர்கோமகன்-உத்தரன்.

௬௧. செருச்செய்வான் - யுத்தஞ்செய்யும் பொருட்டு. பருச்சிலம்பு - பெரியமலை; இது வலித்தல் விகாரம் பெற்றது. உகைதரல் - எழுதல். உண்மைக்கு - வீமன் வேண்டிக்கூறிய மெய்மொழியின்பொருட்டு; அது புட்பயாத்திரைச்சருக்கம் ௬௮, ௬௯-ஆங்கவிகளிற் காண்க. உம்மைஇறந்ததுதழீஇயஎச்சவும்மை.

௬௨. செறும்-நெருக்கி. கோள்-வலி.

௬௩. பொறித்த-எழுதிய. பொறி - அறிவு. மறித்தும் என்பதில் உம்மை இறந்தது தழீ

இய எச்சவும்மை. முன்னம் வீழ்ந்ததை ௯௬- ஆங்கவியிற்காண்க.

௬ரு. உளவுகோல்-குதிரைச்சம்மட்டி. அருணன்-சூரியன்றேர்ப்பாகன். சுவேதம்-வெண்மை.

௬௬. உரவு-வலி. நின்றுதை என்றது ஆதிசேடனை. அவனிபன் என்றது துரியோதனனை.

௬எ. மண்டலநிலை - சரம்விடுநிலைநான்கி ெனொன்று.

௬அ. புரவிபாகவற்றினை-புரவியும் பாகுமாகிய அவைகளை. பாகு-பாகன், ஈண்டுச்சொல்லாலஃறிணையாகக்கூறினர். கவறு - சூதாடுகருவி. கவற்றிய-வருத்திய.

௬௯. மாகு - வலையிற்கோத்தமணி; அது ஆகுபெயராய் வலையையுணர்த்தியதென்பர். வரிநிறமா - புலி. தகைந்து - தடுத்து. கோகு-புயம்.

எக. ஆகவென்னும் செயவனெச்சம் ஈறுகெட்டு ஆ என நின்றது.

எரு. மறைத்துவசன்-ஈண்டுத்துரோணசாரியன்.

எஎ. கரக்கவுண்மதம்-கரத்தின்மதம், கவுண்மதமெனக. கொடுவரி-புலி. நிரத்தல்-கலத்தல்.

அ௰. முற்று என்னும் முதனிலை முற்றியென வினையெச்சமாயிற்று. கோல்-பாணம். ஒருவுதல்-நீங்குதல்.

அஉ. முனிவன்மாமகன்-ஈண்டு அசுவத்தாமன். தெம்முறைறமை-பகைமுறைறமை.

அரு. முந்தை-பாட்டனாகிய வீடுமன்.

அ௬. மீளிமை-வீரத்தன்மை.

௯௰. தெம்முனை-பகைவர்போர்.

௯உ. அதிரதம் - நால்வகை ரதங்களின் முதல்ரதம். அணிவிரன்முடக்கவொட்டா முதிர்சிலை முனி என்றதன் கருத்தை இராசசூயச்சருக்கம், ௰௩-ஆங்கவியுரையிற் காண்க. பின் பதினேழாம்போர்ச்சருக்கம் ௩௧-ஆங் கவியிலுங்காண்க.

௯௪. தாறு-செலவு முடுக்குங்கோல். பொருநராற்றுப்படையுரையிற்காண்க.

௯ரு. சாபலம்-நடுக்கம்.

௯௬. ஈடு-வலி. சாயகம்-பாணம்.

௯௯. பவுரி-மண்டலமிடுதல்.

௱. மதி-குபேரன்.

௱க. கோகனநாகம் - கண்ணைக் காதாகவுடைய நாகம். மோகனம்-மயக்கம்.

௱உ. மத்தர்-மதத்தையுடையவர். தூசு-வஸ்திரம். உத்தரை - விராடன் மகள். வண்டற்பாவை-விளையாட்டுப்பாவை. அத்தர்-சிவனர். மவுலி-முடி. வண்டல் விளையாட்டு என்பதைப் பெரும்பாணாற்றுப்படையுரையிற்காண்க.

௱௪. பாகை-வக்கபாகையென்னுமூர்.

௱ரு. வல்-சூதாடுகருவி.

௱௬. இந்துவினியக்கம் - சாந்திராயணம். நென்னல்-நேற்று.

௱எ. மாழ்கி-மயங்கி. கடையடியால், நகரிற் பகலிற்செல்வதற்கு நாணமுற்றனெனென்பது கருத்து.

௱௰உ. கண்படை-நித்திரை. பூசல்-போர்.

௱௰எ. சோரர்தங்கரு - சோரநாயகருடைய பிள்ளையெனக.

௱௰அ. தோரணம் - தோரணகம்பம். கோடித்தார்-அலங்கரித்தார்.

௱உக. அரிகள்-பகைவர்கள்.

௱உ௯. நாயகர் மனக்கவலையுடன் மறைந்திருத்தலாற் குறைந்த வழகுடையவளாயினளென்பார் வற்றியவோடையன்னவனப்பினளென்றார். வற்றியவோடை-சுருங்கியநீர்நிலை.

௱உஎ. அல்கிய - தங்கிய. அடுக்கு-அவலம் பற்றிவந்தது.

௱உஅ. அடுக்கு-அச்சம்பற்றிவந்தது.

௱உ௯. ஆயிடை-அவ்விடம்; சுட்டு நீண்டு வந்தது. வீ-மலர்.

௱௩க. நீராசனம் - ஆலாத்தி; இது கண்ணூறு கழித்தற்குச்செய்வது. குன்றெறிந்தவன்-குமரக்கடவுள்.

௱௩உ. தழுவிய சனகன் என்பது பாடமாயிற் சனகன் பிதாவெனக.

௱௩௬. உத்தரிக்க-சாதிக்க, தருக்கிக்கவென்றுமாம். உத்தரீயம்-மேற்போர்வை. குழமகனென்பது இளம்பிள்ளைவடிவமைந்தபாவையெனக; ௱உ - ஆங்கவியில் வண்டற்பாவைக்குடுத்ததற்கென்று கொய்தான் என்றதனாற்கொள்க.

௱௩அ. பதங்கம்-விட்டில்.

௱௪௰. "யானையறிந்தறிந்தும்பாகனையேகொல்லும்" என நாலடியிற்கூறலால் ஆளையேயடுங்களிறென்றார். வரன்-நாயகன்.

௱௪க. பரகாயசரிதர்-தம்முடலைவிட்டு அந்நிய சரீரத்திற் புகுந்து சஞ்சரிக்கும்யோகிகள்.

## வெளிப்பாட்டுச்சருக்கம்.

க. விதி நான்கும் முறையே வேதமுறை, சிருட்டித்தொழில், பிரமன், உண்டாக்குதல் என்க. செக்கமலம்-வலித்தலாயிற்று.

உ. அருணம்-சிவப்பு. குருக்குலம்-விகாரமாயிற்று.

ரு. இது விரோதவணியின்பாற்படும்.

ம. இறை-சிறிதும். கொண்டருளல் - உபசாரமாய்க்கொள்ளற்க என்பது கருத்தாகக் கொள்க. தன்னையுந் தன்புதல்வனையுமுளப்படுத்தி நற்குணமிலாதவர் என்றான்; இது தன்மையில் வந்த படர்க்கை வழுவமைதி. ஓ-எதிர்மறை.

மக. சென்னல்வயல் என்பது பாடமாயிற் செந்நெல் தேன்கெண்டையென்க.

மங. மனம்-மனன்எனப் போலியாயிற்று.

மச. மூன்றுமடியில் அறுவகைப்படையென்க; அணிவகுப்புச்சருக்கம் மஉ-ஆங்கவியிற்காண்க.

மஎ. துணைவர் - சாத்தகி பலராமனென்க. சிவேதன்-விராடன் மூத்தமகன்.

மஅ. எண்-எண்ணம்.

மகூ. இவன்றன் பகைசெற்றதும் - இச்சிவேதன்றன் பகைவரைக்கொன்றதும்; சிவேதனையழைத்துக்கொண்டுவந்து அவனுக்கிருட்டிணன்றன் பகைவரைவென்று செயங்கொண்டகதை முதனூலிற்காண்க.

உம. சிங்கசாபம் - சிங்கக்குட்டி. மைந்து - வலி. வேறற்கு-வெல்லுதற்கு.

உக. வாஞ்சா - வாஞ்சை; வடசொல் ஆவீறு ஐயாகாது நின்றது.

உஉ. கந்து-கட்டுத்தறி. நுதி-நுனி.

உச. பண்ணுக்குருகிப் பறையாலகப்பட்ட மான்-ஒருவன் வாசித்த யாழின் பண்ணுக்கு மனமுருகிப் பின் பறையோசையால் மயங்கி வீழ்ந்து அவனுக்கு அகப்பட்டமானென்க. பண்-இசைப்பாட்டு. மான்-விலங்கு; ஈண்டு அசுணமாவென்னுமிசையறிவதோர் விலங்கென்க; இதன் கருத்தை (மறையிற்றன் யாழ் கேட்ட மானையருளாது) என்னுநெய்தற் கலியுரையிற்காண்க. மண்ணுக்கிறைவன்என்றது திருதராட்டிரனை. களகண்கள்-ஆதாரங்கள்.

உரு. அவையின்கணவை- துரியோதனன் சபையின்கண்ணடந்திய குற்றங்கள். விரைமணம். விளைந்தவெல்லாம்-துரியோதனனுலுண்டாகிய யாவுமென்க; அவை தான்வரும்வழியில் படைத்துணையாகவேண்டுமென்னுங் கருத்துடன் றனக்குச்செய்த விருந்துமுதலிய வுபசாரங்களெல்லாமென்க. பாசுற்று - தருமன்முதலோர்க்குச்சொல்லி. பிழைகொன்ற பகடு-குற்றநீக்கிய யானை.

உகூ. கடம்-மதம்பாய்சுவடு. கவனம்-கதி. துரகம்-குதிரை. விரகு-உபாயம். நெறி-வரும் வழி.

உஎ. வேலான்-என்றது தருமனை.

உஅ. தூமம் - புகை. காமன்றிருமைத்துனன் அபிமன். மன்றல்-விவாகம்.

கூம. விழவு - ஈண்டு விவாகம். உபலாவியமென்றதை உபலாவி எனக்குறைத்துக்கூறினார். இந்த நகரம் அபிமன் மனைவியாகிய உத்தரைக்கு வரிசையாக விராடனாற்கொடுக்கப்பட்டதென்றறிக. ஆயோதனம்-போர்.

விராடபருவம் முற்றிற்று.

# ஐந்தாவது உத்தியோகபருவம்.

## உலூகன்றூதுச் சருக்கம்.

ங. காமபாலன் - கிருட்டிணன்றமையனாகிய பலராமன்.

ச. சாத்தகி - கிருட்டிணன்றம்பி. மிகக்கரிது என்பதற்கு மிகவஞ்ஞானமுள்ளது என்பதும், வெள்ளையாகியது என்பதற்கு வெற்றையாகியது என்பதுங் கருத்தாகக்கொள்க.

ரு. உலூகம்-ஒருவகைப்பரி. பேருலூகமென்றதனால் உயர்ந்த சாதிப்பரியென்க. பிணா - அப்பரியின் பெட்டை. இவ்வாறன்றி உலூகம் - கோட்டான்; கோட்டான் முட்டையிற் குதிரை பிறக்குமென்பதைத் திருவாதவூரடிகள்புராணங் குதிரையிட்டசருக்

கத்தில் "மிக்கசெழுமறைநாவிற்கமலநாதன்
விழிப்புனலில் விண்ணோர்களெண்மர்தம்பான்,
மைக்கடன்மேலமிர்தத்திலங்கிமீதின்மல்கு
கருப்பையிலுலுகவண்டந்தன்னிற்,றெக்கவெ
ரூபேதமென்னுமிவற்றிற்றோன்றும்" எனக்
கூறுதலாற்காண்க. உலூகவண்டம்என்பதற்கு
இலக்குமி சாபத்தாற்கோட்டான் வடிவுற்ற
பிரமனிட்டமுட்டையென்றுரைகூறினார்.

௯. அந்தன்-குருடனாகியதிருதராட்டிரன்.

௮. புரோகிதன்-எந்தக்கருமங்களுக்குமுன்
னேவைத்துக்கொள்ளப்படுவன். வருங்காரியத்
தைமுன்சொல்பவன்என்றுங்கூறுவர். மானம்-
பெருமை.

௰௧. சூதுபோரை என இரண்டாவது
விரிக்க. இலஞ்சி - வாவி. அன்னங்களுடன்
வேற்றுச்சாதியாகிய மயில்களும் விளையாடு
நாட்டீர் என்றதனால் ஒரு சாதியான ஞாதியர்
நீவிர்பகைத்தல்கூடாதென்பது கருத்தாயிற்று.

௰௨. விடுவீரெனக் கூறவேண்டுவதைத்
தெளிவினால் விடுகின்றனிர் என நிகழ்காலத்தி
னாற் கூறினாரென்க.

௰௩. பூசை-பூனை. பூசல்-போர்.

௰௪. விதூரன் நீட்டல் விகாரமாயிற்று.
புல்-புன்மை. விதூடகர்-இகழ்வோர். செல்வி
தூரியளாய்விடும் - செல்வத்தையுடையவளா
கிய இலக்குமி தூரத்தவளாவாள்.

௰௫. பாரத்துவாசன்புத்திரனாகிய துரோண
முனியை பாரத்துவாசன் என்றாரென்க. ஓகா
ரம்-வினா.

௰௬. கழிந்தன்று - கழிந்தது. கோடுதல்-
வளைதல்.

௰௭. உகிர்-நகம். முரண்-வலி. முனிமைந்த
னென்றது ஈண்டுச்சமதக்கினிமுனிவன் புத்
திரனாகிய பரசுராமனை; இப் பரசுராமன் வலி
யழிந்ததை இராமாயணம் பாலகாண்டம் பரசு
ராமப்படலத்திற் காண்க. சேவகம்-வீரம்.

௰௮. எடுத்தனை-முற்றெச்சமாக்குக. நரன்-
ஈண்டு அருச்சுனன். நிருபன்-ஈண்டுத்துரியோ
தனன். அந்தரசரிதர் - அந்தரத்திற்சஞ்சரிப்ப
வராகிய சித்திரசேனன் முதலிய கந்தருவ
ரென்க. கொண்டு-(கட்டிக்)கொண்டு. பாண்ட
வர் வனவாசஞ்செய்கையில் வந்த துரியோத
னனை இந்திரனேவலாற் சித்திரசேனன் முத
லோர் துரியோதனனைக்கட்டித் தூக்கிக்கொ
ண்டுபோக, கன்னன் முதலோர் போர்செய்து
தோற்றுவிடத், தருமன் கட்டளையால் வீமன்
றுரியோதனனைமீட்டான் என்னுங்கதையைச்
சுருக்கிக்கூறினாரென்க.

௰௯. நெருநல் - முன்னைநாள். வெருநர் -
அஞ்சுதலுடையார்.

௨௰. யாதவனென்பதுகிருட்டிணனை. தன
தெண்ணத்தை நிறைவேற்றலாமென்று மகிழ்
வுற்றதென்க.

## வாசுதேவனைப்படைத்துணையழைத்தசருக்கம்.



௧. குரா-குராவம்பூ.

௨. விரோசனசுதன்-சூரியன்புத்திரனாகிய
கன்னன். சரோருகசதனம்-பிரமசபை.

௪. சூடிகாமகுடம்-ஒருபொருட்பன்மொழி.
இக் கவிமுதனான்குகவியுந் தற்குறிப்பேற்ற
வணி.

௫. அடல்-வலி. பொறி - மதிலிற்செய்து
வைத்த இயந்திரம்.

௭. பதி-ஈண்டுவைகுண்டம். சித்து - அறி
வுடைப்பொருள். அசித்து - அறிவிலாப்பொ
ருள்,

௮. அந்தன்-குருடனாகிய திருதராட்டிரன்.
மூன்றுமடிக்கு-சந்திரகலையாகிய இடகலை வாயு
அடங்கிநிற்கச் சூரியகலையாகியபிங்கலை வாயுச்
சஞ்சரிக்குமாறு எனவுரைக்க.

௯. சர்ப்பம் - சற்பமெனமரீஇயிற்றென்க.
உற்பலம்-நீலோற்பலம்.

௰. தேரோன்-ஈண்டு விசயன்.

௰௧. இன்சொலானுவகைசெய்தானென்ற
தனால் மனத்தினுவகைகொண்டிலன் என்பது
கருத்தாயிற்று.

௰௫. துமித்தல்-அறுத்தல்.

௰௭. தாலகேது - பனைக்கொடியையுடைய
வனாகிய பலராமன். மும்மை - ஈண்டுத்திரிகா
லம் என்க.

௰௮. கிருதவன்மா-இவன்வசுதேவனுக்குச்
சிறியபாட்டன். வசுதேவன்தந்தை சூரன்.
சூரன்தந்தை தேவமீடன். தேவமீடன் தம்பி
கிருதவன்மாவென்றறிக.

௰௯. சங்கவண்ணன்-பலராமன்.

உ௰. மூன்றுமடிக்குக் கிருட்டிணனும் அருச்சுனனும் என்க. ஆறிருநாமம்-கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன், இருடிகேசன், பதுமநாபன், தாமோதரன் என்பன. ஈயிருநாமம் நிகண்டிலறிக.

---

## சஞ்சயன்றூதுச்சருக்கம்.

க. பொதுவர்-இடையர்.

உ. உயவி-உசாவி; உயாவிஎன்பது உயவி என நின்றது. சஞ்சயன் - ஒருமுனி. இவன் பாரதயுத்தமநடக்கும்போது நாடோறும் நிகழ்வதையறிந்துவந்து உள்ளவாறு திருதராட்டிரனுக்குரைத்தவன்.

ச. பாடிவீடு-பாசறை; இது பகைமேற் சென்றோருறைவிடம்;

ரு. புடவி-பூமி. அடவி-கானம். மடவியார்-அறிவிலாதவர். விடவி-மரம்.

அ. திகந்தம் - திசையினந்தம். அகந்தை-அகங்காரம். தாயம-ஈண்டுச்சுற்றம்.

கூ. நிறுக்கிலர்-நிலைபெறஆராய்கலர்என்க. துராசர்-துராசையுடையவர். ஆசு-பற்று. சுகன்-சுகமுனி. நிராசர்-உன்னிடத்தில் விருப்பமில்லாதவராகிய துரியோதனுதியர் என்க.

௰. தூர் - மூலம்; ஈண்டு முதலென்பது கருத்து.

௰க. மும்மை - ஈண்டு மூன்றுகாலம். இம்மை-இப்பிறப்பு. புகல் - புகுக என வியங்கோளாக்கி யுரைக்க. ஏழ்நரகு-கூடசாலம், இரௌரவம், கும்பிபாகம, பூதி, அள்ளல், செந்து, மாபூதி என்க.

௰உ. பின் அறமென்றது துறவறததை.

௰ங. தனிதம் - ஒலி. மாருதி துணைவன் - அநுமன்றமபியாகிய வீமன்.

௰ச. ஒருழை-ஒருபக்கம். வினை-போர்.

௰ரு. பிடர்க்கணைமதி-பின்புத்தியென்க.

௰சு. மாழ்குதல-மயங்குதல். கவந்தம்-தலையில்லாத உடற்குறையாகிய பிணங்கள்.

௰எ. போரதாகியபூம்சாலை - யுத்தகளமாகிய வேள்விச்சாலை என்க. பசு - ஈண்டு ஆடு; யாகத்திற்குரிய ஆட்டை பசுவெனககூறுவது (சாகபசுநியாய)மெனக்கூறலாற்கொளக. படுத்து-கொன்று. வீரமாமுனிஎன்றது தருமனை. களவேள்வி என்பது புறப்பொருளில் வாகைத்திணையில் ஒரு துறை; இதிலவிகொள்ளுந் தெய்வம் தூர்க்கை.

௰அ. நேமியான்-கிருட்டிணன். காமியாத-இச்சைகொள்ளாத.

---

## கிருட்டிணன்றூதுச்சருக்கம்.

க. மும்மைப்பிறவி-நர நாராயணரும், இராம லக்குமணரும், கிருஷ்ணார்ச்சுனருமாக வந்த பிறவியென்க; வீட்டும பருவம் முதற்போர்ச்சருக்கத்தில் ரு, எ-ஆங்கவியிற்காண்க. தெய்வத்தோற்றமாகலின் நெடும்பிறவி யென்றார். பிறவாழி-பிறவிக்கடல்.

உ. சாம பேத தான தண்டம் இவை அரசர்செய்யும் உபாயங்கள். முறையே சமாதானத்தோடாயினும், பிரித்தாயினும், பொருள் கொடுத்தாயினும், படைகொண்டாயினுங் காரியங்கொள்ளலாம் என்க. எனல்-தினைப்புனம்.

ங. புரோகிதன்-ஈண்டு உலூகமுனி. எஞ்சுதல்-குறைதல்.

ச. வாணுசுரனுக்குப் புயங்களாயிரமாதலின் அவற்றின்மிகுதிவிளங்க புயப்போர் வாணனென்றார்.

ரு. செய் - வயலில் என ஏழாவதுவிரிக்க. பை - படம். பைவாரா என்பது பாடமாயில், பை- அழகு என்க.

சு. வரை-மூங்கில். கயிரவம்-ஆம்பல். சந்து-தூது. ஓரிடத்திற்றோன்றிய இருவகையாகிய ஆம்பலுந் தாமரையுங்கலந்து கமழ்கின்ற குருநாடெனக்கூறலால் அவ்வாறு தோன்றிய இருவகையினராகிய யாங்களுங்கலந்து வாழவேண்டுமென்பது கருத்தாயிற்று.

அ. கரவு-வஞ்சகம். பலமூலசாகம் - பழம்

கிழங்கு இலை.

௰. தாது-மகரந்தம். முரலுதல்-ஒலித்தல். தாயம்-உரிமை. காலன்றூதர்செய்யுங்கொலைத் தொழிலை அவர்க்குச்சிரமமின்றித் தான்செய் வதினால் மகிழ்வார் என்று கருதி அவர்மனங் களிக்கவென்றான்.

௰௧. சிந்துரம் - ஈண்டுக் (கஞ்சன்விடுத்த குவலயாபீடமென்னும்) யானை. ஒசித்தல் - முறித்தல்.

௰௨. நா-நாவில். தோமில்-குற்றமில்லாத. பூத்தல்-உண்டாக்குதல். ஊனமிலான்என்பது கேடில்லாதவனாகிய தருமன்.

௰௩. கண்டாய்-செய்தாய்.

௰௫. நீர் முடித்தான் இரவொழித்தகதை-காஞ்சிப்புராணம் வயிரவீச்சரப்படல முதலிய வற்றிற்காண்க. சிலர்வேறுகூறுவர்.

௰௬. அணிந்து-அணிவகுத்து. பட்டபாடு-இவன்பட்ட சிரமம் இவ்வாறு முடிந்ததெதன வருவித்துரைத்துக்கொள்க.

௰௭. இதில்ஔவையார் "குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை" என்றதனையெடுத்துக்கூறினமை காண்க.

௰௮. பரிபவம் - அவமானம். பிறராற்பட்டால்-அந்நியரால் பழிக்கப்பட்டால் என வருவித்துரைக்க. அரசர்க்குரிய உபாயம் நான்கனுள் தண்டங்கடையானதால் பொருதொழிலுங் கடைநிலத்திற்கிடந்தே என்றானென்க.

௰௯. வேண்டாவென்பது ஈண்டெதிர்மறை வியங்கோள்வினைமுற்று. கோடுகின்ற - மாறுபடுகின்ற.

௨௩. மூவர்திருமாலின் வியூகர்களாகியசங்கரிடணன், பிரத்தியும்நன், அநிருத்தன் என்பவர். இவர்கட்கு படைப்பு முதலியவற்றில் அதிகாரப்பொதுமையால் பிரமன்முதலிய பெயரெய்துமென்று வாயுசங்கிதையிற் கூறப்பட்டுள்ளதென்பர். மீ-மேல். உகளல்-பாய்தல்.

௨௫. பொறைவேந்தன் - தருமன். கெடுமதி கண்டோன்றூது "கெடுமதிகண்ணுக்குத் தோற்றாது" என்னும் பழமொழியையீண்டுக் கூறினானென்க. என்முளைவித்திடினும்-என்ன முளையையுடைய வித்தையிட்டாலும். அன்று, ஏ-அசை.

௨௬. கோத்தருமம்- இராசதருமம்.

௨௭. நாவலம் பூதலம் என்றது சம்புத்தீவை; இது மேருவின் தெற்குள்ளது.

௨௮. அரம்பை - தெய்வப்பெண்; ஈண்டு ஊருவசி. சிறைமீட்டான் புரூரவாவென்க.

௩௨. கலைஞானமிகுதியால் தெய்வத்தன்மையால் தெய்வமன்னானென்றார்.

௩௩. பை-அழகு. பிங்கலநிகண்டிற்காண்க.

௩௪. புரிதல் - விரும்பல். பாரதம் - பாரதப் போர்என்க. கொல்-அசை.

௩௬. உன்னைநீ,தானுமுணராதாய் என்பதற்குத் தன்பெருமை தானுமறியாதவன் என்பது கருத்தாகக்கொள்க.

௪௰. ஓம் - இது உடன்பாட்டையுணர்த்துமிடைச்சொல்.

௪௩. கனகன்-இரணியன். மைந்தன்-பிரகலாதன், தூணிடைவந்தாய் - தூணில்நரசிங்க வடிவமாயுதித்தாய்.

௪௫. திறல்வீரர் என்றதனால் ஐந்தூர் பெறுவதடாதென்பது கருத்தாயிற்று.

௫௧. கடையடியிற் பஞ்சபூத வடிவாயினேன் என்றது அவைகளினந்தரியாமியாயிருத்தலாலென்க.

௫௨. முறைமை - நீதி. மந்திரம் - ஆலோசனை.

௫௪. சல்லரி-ஒருவகைவாத்தியம். தாரை-சிறுசின்னம்.

௫௫. நல்வரையு நீர்நாடு-வறுமையைநீக்கு நீர்நாடென்க. நல்-வறுமை; நல்குரவு என்பது நல் எனக்குறைந்து வருமென்றார் புறநானூற்றுரையில். வரைதல் - ஈண்டு நீக்கல். இவ்வாறன்றி, வரைதல் கொள்ளுதற்கும் போதலின் நன்மையைக்கொள்ளுநீர் நாடெனினுமாம்.

௫௬. பழத்தைத்துகிர் என்றும், காயை மரகதமென்றுங்கூறினார். கமுகினியல்பாக முத்துக்களுண்டென்க. காவணங்களில் - பந்தர்களைப்போல. துகிர்-பவளம். மரகதம்-பச்சை. கோவை-ஒழுங்கு. தாளம்-முத்து.

௫௭. வருக்கை-பலா. மாகந்தம் - மாமரம். தமாலம்-பச்சிலைமரம்.

௫௮. நீராசனம்-ஆலாத்தி. புணரி - கடல். பொய்கை செந்தாமரைமலருடன் சிறந்தனனக் கூட்டுக. சிறந்த - அஃறிணைப்பன்மை வினைமுற்று.

௫௯. கோலம்-பன்றி. கிடங்கு-அகழ்.

௬௰. உடுபதம் - நட்சத்திரமண்டலம். சக்கரப்பொருப்பு-சக்கரவாளகிரி. புரிசை-மதில்.

௬௧. கால் - காற்று. மந்தாகினித்தரங்கம்-கங்கையினலை.

௬௨. புயங்கபூமி - பாதாலமென்க. முழை-குகை. உயிர்த்தல் விடுதல்.

௬௪. உவமைவேறுளதோஎன்றதனால் இவ்வாவணநீர்மைக்கு இதுவே வுவமையாமென்

பது கருத்தாயிற்று. ஆவணம்-கடைவீதி.

௬௭. சிலம்பு-மாதர்காலணியுமணியென்க. மும்முரசு-காண்டவதகனச்சருக்கம் ௫௮-ஆங் கவியுரையிற்காண்க.

௭௰. தூதுகொண்டிலங்கை தீவிளைத்தவன் இன்று தூதுவந்திறுத்தனன் என்றதனுலிங்கு மவ்வாறே கேடுவிளைப்பனென்பது கருதக் கிடந்ததுகாண்க. இறுத்தல் - தங்கல். தூது வண்டு-மாதர்கள் தூதாகவிடுத்த வண்டென்க.

௭௧. யோசனை - குரோசம் நான்குகொண்டது ; கைமுழநான்குகொண்டது வில், வில் இரண்டுகொண்டது தண்டம், தண்டம் இரண்டாயிரங்கொண்டது குரோசமென்க. ஒப்பனை-அலங்காரம்.

௭௭. துவந்தனை-பந்தம். மருந்து-அமுது. பிரித்தாகிய மாயோனெனக்கூட்டுக.

௭௮. கோடு-சங்கம். கோகனதம்-ஈண்டுச் செந்தாமரை.

௭௯. தத்துவம்-உண்மை. அளி-அன்பு.

௮௰. நால்வகைச்சுருதியாவன - தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம் என்பனவாம். இனி இவற்றை வேதவியாசர்வரையறைப்படுத்தியகாலத்து இருக்கு முதலியவாகப் பேர்பெற்ற நான்குமாமென்பர்.

௮௧. அம்ம-அதிசயக்குறிப்புச்சொல்.

௮௨. வரூதினி - ஈண்டுக்காலாட்படை. கந்து-கட்டுத்தறி.

௮௩. உமைக்குநாயகன் இரவொழித்தகதை ௰௫-ஆங்கவியிற்காண்க. இமைப்பிலார்-தேவர்.

௮௪. பூசறுத்தல்-சுத்திபண்ணல். கேசரித்தவிசு-சிங்காசனம்.

௮௫. ஞானகஞ்சுகம்-ஞானமாகியசட்டை.

௮௬. அம்பு-நீர்க்குமாதலால் நீராகிய அம்பென்க. பகைவர்-மந்தேகர் என்பாராகிய அசுரரென்க. குருதி-இரத்தம்.

௮௭. துரங்கமேழு-சப்தாஸ்வா.

௮௮. இரவினும் பகல் புண்ணியகாலமாதலின் நீதியிற்புகல்பகலென்றார். ஆதபத்திரம்-குடை. அடவி-காடு.

௯௰. உரகபுங்கவன் - ஆதிசேடன். அரி - சிங்கம்.

௯௧. பொதுவர்-இடையர். பாடி-ஆயரூர். கங்கைகாலில்வந்தகதை இராயசூயச் சருக்கம் ௭௯-ஆங்கவியுரையிற்காண்க.

௯௩. தழக்கின் - முழக்கத்தோடு. உழக்குதல்-கலக்குதல்.

௯௪. முதலிரண்டடியில், பாண்டவ வீரர் போர்க்கெழுவாராயிற்றுரியோதனன் புறந்தருவானென்பது உள்ளுறையாய்க்கிடந்தமை காண்க. உகண்டு-பாய்ந்து.

௯௭. தவளம்-முல்லை. சதம்-நூறு. அளி-வண்டு, அன்பு. கணிகையர் - விலைமாதர். அளவு - பொருள்கொடுக்குமளவென்க. இது சிலேடையுவமை.

௯௮. பீறல்-கிழித்தல். வடவாமுகாக்கினி-பெண்குதிரைமுகத்திலுள்ள அக்கினி ; அது கடலினடுவுள்ளதென்க. இது தற்குறிப்பேற்றவுவமை.

௱. அரசியல் ஆறினையும் நீதியாறுவகையென்றார் ; அவை, அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப்பொருள். மறநிலைப்பொருள், அறநிலையின்பம், மறநிலையின்பம் என்பன. படைகுடிகூழமைச்சு நட்பரண் எனினுமாம்.

௱௧. ஆலவட்டம் - விசிறி. சொட்டை - ஓராயுதம். பரிசை-கேடகம். துகில்-கோசிகமுதலாகப் பலவகைப்படும்; அவை சிலப்பதிகாரவுரையிற்காண்க, களாசி-படிக்கம்.

௱௨. பற்பராகம் - ஒருவகைமாணிக்கம். துலாம்-மேற்பரப்புங்கட்டை. கோமளம் - அழகு.

௱௩. முட்ட-நிறைய.

௱௪. ஓவல்-(உபசரியாது) ஒழிதல்.

௱௫. தந்தவண்ணன் என்றது பலராமனை.

௱௭. நகம்-மலை. நென்னல் - நேற்று. பன்னகம்-பாம்பு.

௱௮. இல்-மனை. உன்னில்-ஆராயில். அடிசில்-சோறு.

௱௰௧. ஏதிலார்-அயலார்.

௱௰௨. சொல்-புகழ். கெழுமி - பொருந்தி. வாய்மை-மெய்ம்மை.

௱௰௬. காடளிக்க - நான்காடுகொடுக்க. உறை-இருப்பிடம். காந்து-மறைந்து. ஓகாரங்கள்-எதிர்மறை.

௱௰௭. தந்தையென்றது - சந்தனுவை இளையதாயென்றது - பரிமளகந்தியை. தம்பியரென்றது-சித்திராங்கதனையும், விசித்திரவீரியனையும். கொடுத்தவனென்றது-வீடுமனை.

௱௰௮. நன்றென்பது ஈண்டுக்குறிப்பு மொழி நன்றாகவில்லை என்பது விளங்கநின்றது.

௱௰௯. "ஸெளராஜ்யா ப்ருதிவி॥" என்னும் பழமொழியின் கருத்துவிளங்கப் பார் வீரரானவரதல்லவோவென்றனென்க.

௱௨௰. குருநிலம் - குருக்ஷேத்திரம். கைவழங்குதல்-ஈண்டுக்கையடித்தலென்க; ௱௨௨-ஆவது கவியிற்காண்க. இது உறுதிகூறியதற்கறிகுறியாக இன்றும் நிகழுகின்றது.

௩௨௧. புறவு - முல்லை நிலம். கோவியர் - இடைமாதர்.

௩௨௨. வ - பாணம். கோவிலங்கு - மிருகராசனாகிய சிங்கம். கரடம் - மதம்பாய் சுவடு. கொண்டகால் எனச் சந்தநோக்கி மிகாது நின்றது. மலைத்தல்-போர்செய்தல். நாவிலங்கும் - நாவிலகும்; சொல்வேறுபடும் என்பது கருத்து. நா-ஆகுபெயர்.

௩௩௰. தூதென விசைப்பவன் நம்மையொத்தவனல்லன் என்பது விளங்க உலகமெங் கணுநீண்டவனென்றான். மாண்டவர் - மாட்சிமையுடைய தவத்தோர்.

௩௩௧. வில்லிரண்டு - அருச்சுனன் வில் விதுரன் வில். ௩௪௧ - ஆங்கவியில் இருசிலை என்பதற்குங்கொள்க. மல்லிரண்டினையுமிருவராகி-கஞ்சனாலேவப்பட்ட சாணூரன், முஷ்டிகன் என்னுமிரண்டு மல்லர்களையுந் தானும் பலராமனுமாகிய இருவராகி.

௩௩௩. பிதாமகன்-பாட்டனாகிய வீடுமன்.

௩௩௪. மாதணி - பதக்கம். விதாரமொய்ம்புன் என்பது பாடமாயின் போர்வலியனென்க. பரணி-போர்முகத்தாயிரங்களிற்றைக்கொன்ற வீரனைத்தலைமகனாகக்கொண்டு பாடுவது.

௩௩௫. வேய்-மூங்கிற்குழல்.

௩௩௭. தளம்-படை.

௩௩௮. நிசி-இருள். கொல்-அசை. ஓ-எதிர்மறை.

௩௪௬. இந்தனம்-விறகு. தென்புலம்-தென்றிசை; யமதிசையென்க.

௩௪௭. புரை - குற்றம். கேள்வி - கல்வி. கேள்விப்பயனுகர்மனத்தாயென்றது பொறுப்பதற்கேதுக் கூறியவாறாயிற்றென்க.

௩௫௰. தென்புலவேந்தன் வெஃக - யமன் விரும்ப. அவன்செய்யுந்தொழில் அவனுக்குச் சிரமமின்றிப்போரிலாவதினால் வெஃகவென்க

௩௫௩. மிதவையம்பேழை-மிதத்தலையுடையவழகிய பேடகம். தெப்பம்போன்ற அழகிய பேடகமெனினுமாம்.

௩௫௪. சூதன்-தேர்ப்பாகன். சுதன்-பிள்ளை.

௩௫௮. கானம்-காண்டவவனம். அரவு-தக்ககன் என்னும் பாம்பின் மகனாகிய அச்சுவசேனன் என்னும் பாமபென்க ஆசுகம்-பாணம.

௩௬௧. தேக்குந்தி-தேக்குமரங்களைத்தள்ளி. மீக்குந்தி - மேலேகுதித்து. வாக்குந்தி மலரோன் - வாயுமுந்தியுந்தாமரைமலர்போன்றவனாகிய கிருட்டிணன்.

௩௬௨. பை-படம். உய்வு-பிழைத்தல்.

௧௬௩. செந்திலகம்-சிந்தூரப்பொட்டென்க.

௩௬௪. ஆதி-சூரியன். மேற்றிசைக்கடவுள்-வருணன். வெயில்-ஒளி.

௩௬௫. முண்டகக்குலத்துமாதர் - தாமரையாகிய குலமகளிர். கயிரவக்கணிகைமாதர்-ஆம்பல் மலர்களாகிய விலைமகளிர்.

௩௬௭. தூ - பரிசுத்தம். துணைவர்-நாயகர். மேவிய - நாயகருடன்கூடிய. பரவை - கடல். உழை-மான். நாயகரைப்பிரிந்த மாதர்கண்கள் இராக்காலத்தில் உறக்கமின்றி விழித்திருத்தலால் அக்காலத்தில் மலர்ந்திருக்குங்காவி முதலிய மலர்களைப்போன்றன என்றும், இரவில் நாயகரைக்கூடிய மகளிர்கண்கள் கிளர்ச்சியுற்றுமகிழ்ந்திருத்தலால் அவ்விராக்காலத்தில் கிளர்ச்சியுடையனவான கடன் முதலியவற்றைப் போன்றனவெனவுங்கூறினார் என்க.

௩௬௯ மந்திரம்-ஆலோசனை.

௩௭௰. பாதபம் - மரம். யாதவன்-ஈண்டுக் கிருட்டிணன். வந்தான் - இங்குவந்தால்; ஆன் மூன்றனுருபு.

௩௭௧. கரும்பொழுது-இராப்பொழுது.

௩௭௫. மந்தணம்-இரகசியம். இம்பர்-இவிடம். மற்று-பிறிது.

௩௭௮. மதிப்பதென்வேறு - வேறெண்ணுவதியாது. கோலி-வளைந்து. சதிப்பது-அழிப்பது.

௩௭௯. எல்-பகல். இகல்-வலி.

௩௮௰. நீதியினிருந்து - நீதியினின்றுநீங்கியிருந்து. ஆதி-முதலில்.

௩௮௧. பப்பரவர்-ஒருதேயத்தவர். கடிகை-நாழிகை.

௩௮௨. வேய்-மூங்கில். தொழில்-சித்திரத்தொழில்.

௩௮௩. மனத்தின்கங்குல் - அஞ்ஞானமென்க.

௩௮௪. சுடிகை-உச்சி. நிரந்தரம்-எப்பொழுதும். அருக்கன்றீபம்போன்றானென்க.

௩௮௫. தாமரையைக்குறிக்கும்போது உதயராகத்தோடு - வெண்ணிறமுஞ் செந்நிறமுந் தோன்றுதலையுடையவிதழ். (உதையம்-தோன்றுதல். இராகம்-நிறம்). அரி - வண்டு. கயல்-மீன் என்றும், முகத்தைக்குறிக்கும்போது ராகம் - இச்சை, நிறமுமாம். தோடு - காதணி. அரி-செவ்வரிகருவரி. கயல்-கண்ணாகிய கயல் என்றும்பொருள்கொள்க. இதுசிலேடையணி.

௩௮௬. துயிலிலாத கண்ணன் - என்றது துரியோதனனை. அனந்தபோகப் பேரணை. ஆதிசேடனுடம்பாகிய பெரியமெத்தை.

௩௮௮. தந்திரம்-படை.

௱௮௯. வீமலர்-மீமிசை. வேத்திரத்தவர்-பிரம்பினை வைத்திருப்பவராகிய வாயில்காவலர். ஏ-பிரிநிலை.

௱௯௧. நெறுநெறு-உபயவோசைக்குறிப்பு. மறலி-யமன்.

௱௯௨. நன்று என்பது கொடுமையையுணர்த்தலாற் குறிப்புமொழி.

௱௯௩. பப்பார்-ஒரு தேயத்தார்; துற்றல்-நெருங்கல். கல்-ஒலிக்குறிப்பு. உடலில் எழாவது விரிக்க. உட்கல்-மடிதல்.

௱௯௪. பவனன்-வாயு. குவடு-சிகரம். முடங்கிய-மடங்கிய.

௱௯௫. காமர்-அழகு.

௱௯௬. பை-படம் அமளி-மெத்தை. விபுதர்-தேவர். உரம்-மார்பு. கடவுளர்பகை - என்றது சூரனை. முருக்கல்-அழித்தல். வரை என்றது கிரௌஞ்சகிரியை.

௱௯௭. புயகம்-பாம்பு. வெரு-அச்சம். ககனம்-ஆகாயம். கவிக்கிறைஎன்றதுசுக்கிரீவனை. மொய்ம்பு-வலி. என்புமலை-துந்துபியின் எலும்பாகிய மலை.

௱௯௮. மைந்து-வலி. அந்தணன் என்றது அகத்திய முனியை. உதைத்து - உதைக்க. புடைத்தல்-அடித்தல். விந்தம்-ஒருமலை.

௱௯௯. குந்தி-குதித்து. அடுக்கு - ஒருதொழில் பலகாணிகழ்தல்பற்றிவந்தது. மந்தரம் - ஒரு மலை. குந்தம்-கைவேல்.

௨௱. முட்டி-கைப்பிடி. நித்தர் - ஈண்டுத் தேவர். மட்டு-அளவு. கவி-குரங்குகள்.

௨௱௧. உட்கினர் - அஞ்சினர். மல் - வலி. வர்க்கமலர்க்கழல் என்பது பாடமாயின், வர்க்கம்-கூட்டம்.

௨௱௨. சண்டம் - வேகம். பவனக்கிளை - வாயுவின்வர்க்கம். சிரிப்பு-ஈண்டு வீராட்டகாசமென்க.

௨௱௩. முகத்தல்-வாருதல். சிந்துரம்-யானை. திரிப்பன-சுழற்றுவன. எண்டிசையானை-ஐராவதம், புண்டரீகம், வாமனம, குமுதம், அஞ்சனம், புட்பதந்தம, சாருவபூமம், சுப்பிரதீபம் என்க. எண்குன்றம் - மாலியவான், கந்தமாதனம், நிசதம், ஏமகூடம், இமயம், நீலம், சுவேதம், சிருங்கம் என்பனவாம். கந்தபுராணம் அண்டகோசப்படலத்திற்காண்க.

௨௱௪. துகிர்-பவளம். அரி-ஒளி. உதணம்-மொட்டம்பு.

௨௱௫. கணையம் - வளைதடி. குந்தம் - கைவேல். சுரிகை-வாள்.

௨௱௬. வான்புடை-ஆகாயத்தில். தோல் - கேடகம். சோரி-இரத்தம். தோமரம்-பெருஞ்சவளம்.

௨௱௮. அண்டர்-தேவர். பாயிரம்-வரலாறு.

௨௱௰. நீதவன்-நீதியுள்ளவன்.

௨௱௰௫. நூறுவன்-அழிப்பேன்.

௨௱௰௭. பணி-பாம்பு. துரியோதனன்கொடுமைவிளங்கப்பணிசேர்கொடியோனென்றார்.

௨௨௰. அந்தணன்-ஈண்டுத்துருவாசமுனி. மந்திரமைந்தினில் எனப்பாடமோதுவாருமுளர்; சம்பவச்சருக்கம் ௨௯-ஆங்கவியினும், இச்சருக்கம் ௨௱௪௯-ஆங்கவியினுங் கூறியவதனலதுபாடமன்றென்க. மைந்து - வலியெனப்பொருள்கொண்டு இப்பாடபேதத்தைக் கொண்டாலென்னையெனில்? இப்பாடபேதம பலபிரதிகளிலுங் காணப்படாமையானும், ஐந்தோமைந்தோவென ஐயநிகழ்கின்றமையானும் அது பாடமன்றென்க.

௨௨௧. கழை - ஈண்டு வேய்ங்குழலென்க. மூன்றாமடியில் ஆல்-அசை.

௨௨௪. கரி-சாட்சி.

௨௨௫. ஆறு-அளவில்லாத.

௨௨௬. ஆயோதனம் - போர். ஆழி - மோதிரம். சேயோன்-முருகனாகிய அசுவத்தாமன். ஊர்கோள்-பரிவேடம்.

௨௨௭. கிரித்தாழ்கவிகை – மலையாகியதங்கியகுடை. ஆள்-ஆணை.

௨௨௮. எங்ஙனம் என்றது எங்ஙன் என நின்றதென்க. துனி-கோபம்.

௨௩௧. தந்தம்-யானைக்கொம்பு. அரி-சிங்கம்.

௨௩௨. களம்-போர்க்களம். அரவு-அச்சுவசேனனாகிய பாம்பு. அரி-சூரியன்.

௨௩௪. திவசம் - நாள். பொரினும்-போர் செய்தாலும். ஓ-எதிர்மறை. படும்-இறப்பன். இன்னே-இப்பொழுதே; புறநானூற்றுரையிற் காண்க. கவசம், குண்டலம் இரண்டும் கன்னனுடன் றோன்றினவென்க.

௨௩௫. வல்லார் - கலைகளில் வன்மையில்லார். இல்லாதவர்-பொருளில்லார். சொல்லாதவர் - புகழாதவர்.

௨௩௬. தானகரன்-கொடைக்குறைவிடமாயுள்ளவனாகிய கன்னன். அளிப்பாயென்றதன்பின் அளிப்பான் என வருவித்து முடித்துக்கொள்க.

௨௩௯. பரிசில் - (சம்பாவனை) வெகுமானம். இரவலர் - ஏற்போர். முற்பகல் - பகலின் முற்கூறு.

௨௪௧. அருத்தி - ஆசை; ஈண்டு ஆகுபெயராய் ஆசையுற்றபொருளை க்குறித்தது. சுரா

தரு - தேவதருவாகிய ஐந்தரு. மற்று - அசை. ஓ-வினு. கறுத்தவர்-பகைவர். பதம் - பதவி.

உசஎ. தேசவன் - சூரியன். பாசவன் பாசம் - அன்பாகிய வலியகயிறு. வலித்தல்-இழுத்தல்.

உசஅ. சிந்து-முன்னது சிந்துதல், பின்னது கடல்.

உருக. படாம்-வஸ்திரம். எடா-எடுத்து.

உருஉ. பொன்முடிமோயினள் - அழகிய உச்சிமோந்தாள். உயிராப்பரிந்து - உயிராக அன்புற்று. உயிரா என்பதற்கு உயிர்த்து எனினுமாம். பாக்கியம்-ஈண்டுப்புண்ணியமென்க.

உருரு. கடை-வாயில். கடன்-முறைமை.

உருசு. தோற்றம்-காட்சி.

உருகூ. மடந்தை – என்றதுபானுமதியை. மேகலைமணியுக-மேகலாபரணத்தின் மணிகள் சிதற. ஏகாந்தம்-தனிமை. உகப்புரிந்து எனக்கூட்டுக. துரியோதனன் மனைவியாகிய பானுமதியுங் கன்னனுந் தனியிடத்திற் சூது விளையாடிக்கொண்டிருக்கும்போது துரியோதனன் வரவைப்பானுமதிமாத்திரங் கண்டெழுந்திருக்க அப்போது கன்னன் விளையாட்டை முடித்தெழுவேண்டுமென்று மேகலாபரணத்தைப்பற்றியிழுத்ததனால் அதன் மணிகளற்றுதிர்ந்தன. அப்போது கன்னன் தன் பிழைநோக்கிச் சோர்ந்திருந்தான். துரியோதனன் விசனமுமுறாது இம்மணிகளை நான் எடுக்கவா கோக்கவா என்று கூறினன் என்னுங்கதையினைச் சுருக்கி இக்கவியிற்கூறியவாறு காண்க.

உருஅ. பாந்தள்-பாம்பு. கோறல் மலையல் என்பனவற்றிற்கொல்லற்க, மலையற்க என அல்விகுதி வியங்கோள் எதிர்மறையில் வந்ததென்க.

உசுக. கடைப்பிடி-மறவாதிருப்பாய், உறுதியுமாம். கருமம்-காரியம்.

# படையெழுச்சிச்சருக்கம்.



உ. புறம்-இடம். அம்மா-அசை.

ரு. யாகசேனன்-துருபதன். திட்டத்துய்மன், திட்டகேது, சிகண்டி, உத்தமோசா, உதாமன் இவ்வைவருந் துருபதன்பிள்ளைகள். திட்டகேதுவைத் திட்டத்துய்மன் பிள்ளையென்பாரும் உத்தமோசா உதாமன் என்பவரைத் துருபதன் உறவினரென்பாருமுளர். பாஞ்சாலர்-பாஞ்சால தேசத்தரசர்.

ச. விராடபூபன்-விராட தேசமாகிய மச்ச தேசாதிபதி. சதானிகன், விராடன்றம்பி சுஆம் போர் ருசு-ஆங்கவியிலறிக. சுவேதன், வராககேது, உத்தரகுமரன் இம்மூவரும் விராடன் பிள்ளைகள். சூரா-ஒருமரம். கேகயம்-ஒரு தேயம். குந்திபோசர்-யாதவவரசர்கள் பலரென்பர்.

கு. இடையடியிரண்டிற் கூறிய ஐவரும் உபபாண்டவர் என்பர். இவ்வைவருக்கும் வெவ்வேறு பெயருங் கூறுப. திரௌபதர்-திரௌபதியின் புத்திரர் அருச்சுனன்றீர்த்தயாத்திரைச்சருக்கம் அஎ-ஆங்கவியுரையிற்காண்க. புண்டலனும், செபசனனும் என உம்மை விரித்துரைக்க.

சு. ஒட்டர் ஆதியாய் ஆன வெம்படை நடப்பனதானை ஐயிரண்டெண்பூமி மன்னர் எனக்கொண்டு கூட்டியுரைக்க.

எ. பாங்கு- உரிமை- தந்திரிகள் - சேனைத்தலைவர்கள்-பதாகினி-சேனை.

அ. அக்குரோணிகளேழும் என்க. அக்குரோணி - நிரைமீட்சிச் சருக்கம். அ-ஆங்கவியுரையிற்காண்க.

ய. தோண்மை - புயவலியென்க. வாகை-வெற்றிமாலை.

யக. தாரை - நட்சத்திரம். தருமராசனை மதியாகக்கொள்க.

யஉ. செற்றுவார் - நெருங்கியுயர்ந்த. அரவமின் மகன் - நாககன்னியின் மகனுகிய இராவான்.

யரு. பார்த்திபர்-அரசர். உழி-இடம். செரு-போர்.

யச. சாதுரங்கம்-நால் வகைத்தானை.

யரு. மித்திரம்-சிநேகம். சத்திரம்-குடை. மத்திரபதி - மத்திரதேசாதிபதியாகிய சல்லியன். மருகர் என்றது நகுலசகாதேவரை.

யசு. நெறி-வழி. படைப்படுவிதி - படைத்தொழிற்குண்டாகிய நூல்விதி. படை - ஆயுதம்.

யஎ. மாகதர்பதி - மகததேசத்தார்க்கரசன்; இவன் சராசந்தன்மகனுகிய சகதேவன்; தன்றந்தையை வீமன் கொன்றதனாற் பாண்டவர்க்குத் துணையாகாமற் றுரியோதனனுக்குத் து

ணையாகினனென்பர். விந்தான், விந்தன் இவ் விருவரும் அவந்திதேசத்தரசரென்பர்.

யஅ, யக, உய, ஆங் கவிகளிற் சிலவரசர் பாண்டவர்க்குந் துணையாகவந்தாரெனக் கூறி யிருத்தலால் அவ்வரசர் ஞாதியர் பலரென வறிக.

உய. இரண்டாமடியிற் கூறியவர் கிருஷ்ணனுக்குக் கோவியரிடம்பிறந்த பதினறுயிரவரென்க. இவர்க்கு நாராயண கோபாலரென்னும் பெயருமுண்டு. பூரி-சோமதத்தன் முதன் மகன். கௌரிமா-ஓரரசன்.

உக. அம்பரம் - ஆகாயம். மூந்நீரம்பரம்- மூன்றுதன்மையாகிய கடல்.

உஉ. விகத்தசேனன் - ஓரரசன். பகதத்தன் - நரகாசுரன்புத்திரன். இவன் யானைப் படைமிகவுடையவன். கோடு-சிகரம். மேருமலையைச்சூழ்ந்த கிரியேழாவன. இமவான், நிஷதம், விந்தம், மாலியவான், பாரியாத்திரம், கந்தமாதனம், ஏமகூடம் என்பனவாம்; அமரம் சைலவர்க்கத்திற் காண்க. இவ்வாறன்றி, இராசசூயச்சருக்கம் சஎ-ஆங்கவியிற் கூறிய மலைகளேழையுங் கொள்வாருமுளர். துரியோதனன் மேருவொப்பாயிருந்தானென்க. உள்ளோராகிய தலைவரென்க.

உங. சிந்து-கடல் இராசமண்டலம்-அரசர் கூட்டம். சதமகன்-இந்திரன்.

# முகூர்த்தங்கேள்விச்சருக்கம்.

க. கயம்-கீழ்மை. வயம்-வெற்றி. சூழ்ச்சி- ஆலோசனை.

உ. தளப்பு-ஈண்டுச் சோர்வு.

ங. இராவான் கூறியது படையெழுச்சிச் சருக்கம் கஉ-ஆங்கவியி லறிக.

ச. இயந்திரவெகினம் - சூத்திர அன்னப் பறவை. சிலையில்வெங்கதிரைத்திங்களொன்றியபகலிராவில் - தனுலக்கினத்திற் பிரவேசித்த வெய்ய சூரியனைச் சந்திரன்கூடியநாளிரவில்; மார்கழி அமாவாசைத்தின மிரவிலென்க.

ரு. பை-படம். தாதை - பிதா வென்னுமுறையையுடைய துரியோதனனென்க. இராவான் தேக மகித்தியமாதலால் நாளைவரையில் தேகமிருக்குமாகில் என்னைப் பலியூட்டுக என்றான் என்பது முதனூற்கதை.

# களப்பலியூட்டுசருக்கம்.

க. அன்று-மிதிலையிற் சனகன் வேள்வி செய்த அக்காலத்து. வில்விழவு - வடமதுரையிற் கஞ்சன்செய்த விற்சிறப்பை. எடுத்திறுத்து - அக்கஞ்சன் விழவுசெய்துவைத்திருந்த வில்லையெடுத்து ஒடித்து.

உ. திதிபன்னன்கு - சதுர்த்தசி. உவா - அமாவாசை. ஆக என்னும் வியங்கோளீறு தொக்கதென்க. சுடர்கள் என்றது சூரிய சந்திரரை. இது வென்னையென்ன - சதுர்த்தசியிற் பூலோகத்தார் பிதிர் தருப்பணஞ்செய்கின்றார்கள்; இதற்குக்காரணம் யாது என்று ஒருவரையொருவர் வினவ. அன்றதுவாயது- இருவருங்கூடியதினமே அமாவாசையாதலால் அன்று அமாவாசையாயினது.

ரு. களப்பலிக்குச் சௌரிய சத்திய சௌந்தரமுள்ளவராய் ஏதிருரோமமுள்ளவரா யிருப்பவர் வேண்டும்; இங்கே அவ்வாறிருப்பவர் நாமிருவருமேயாதலால் நம்மி லொருவரே வேண்டுமென்றான். எனக் கதையை விரித்துரைத்துக்கொள்க.

எ. இராவான் போர்க்களத்திநின்று போர்செய்ய வரமுங் கொடுத்தாரென்பர். சென்மதேயம்-குருக்ஷேத்திரபூமி. கொய்வருநிலையாவது முப்பத்திரண்டவயவங்களிலுஞ் சிறிது சிறிது கொய்யும்போது தான் கண்ணீர் விடாமலிருத்தலென்க.

அ. கன்னி - காளி. யாமளம்-யாமளசாஸ்திரம். பகடு - யானை. ஆதியாக என்றதனற் குதிரை, எருமை, ஒட்டகம், பன்றி, ஆடு, கோழி முதலியன வென்க.

# அணிவகுப்புச்சருக்கம்.

க. செற்றல்-நெருங்கல். வஞ்சி-வஞ்சிப்பூமாலை; இது பகைவர் பூமியைக்கொள்ளக்கருதி அமாமேற்செல்வோர் சூடுவது.

உ. உத்தமபானு - உத்தமோசா; இவன் துருபதன்பிள்ளைகளி லொருவன்.

ச. ஐம்புலன்களையுந் தன்வழிப்படுத்து நெஞ்சம்போல ஐவரையுந்தன்வழிப்படுத்து மாலுக்கு நெஞ்சை யுவமை கூறினரென்க. சமம்-போர். இராமன்-ஈண்டுப்பலராமனென்க.

ரு. கடி-ஈண்டு அடித்தல. கடிப்பு - குறுந்தடி ; இது கடியென விகாரமாயிற்றென்பர். பணை-பறைப்பொது. கறை-உரல். கரிநிகரம்-யானைக்கூட்டம்.

எ. திகிரி-சக்கரம். இவுளி-குதிரை. குரம்-குளம்பு. துகள்-தூள். சாதம்-உண்மை.

அ. பவனம்-வாயு. பரவை கடல். வெளியிலுய்த்தலின்-துகளாக ஆகாயத்திற்செலுத்துதலினால். உதவியாய்-பூபாரங்குறைதலினால் உபகாரமாய். சக்கரகிரி-சக்கரவாளகிரி. சுற்றடியென - சுற்றடியெல்லையென்ன. எழுமுகில்-சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. இவை முறையே மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ இவைகளைப பொழிவன. காண்டவதகனச்சருக்கம் ருச-ஆங்கவியினும், நிவாதகவச காலகேயர் வதைச்சருக்கம் கசச-ஆங்கவியினுங் கொள்க.

கூ. துகிர் - பவளம். பார்வையையழித்திமைத்தால் அது வீரர்க்குப் புறங்கொடுத்தலாம் ஆதலின் இமைப்பறுவிழி யென்றார்; 'விழித்தகண்' என்னு முதற்குறிப்புடைய குறளிற் காண்க. விருதர்-படைவீரர்.

ம. இபம்-யானை. அயம்-குதிரை.

மக. உகள்-பாய்கின்ற. உடு-நட்சத்திரம். ககனம்-ஆகாயம். துவசம்-கொடி.

மஉ. அறுவகைப்படை - இராயசூயச்சருக்கம் ளருஉ-ஆங்கவியுரையிற் காண்க.

மரு. சதி-தாளவொத்து. சதம்-நூறு, இடியுமாம். நளினவெம்பதி-சூரியன்.

மடு. வளை-சங்கு. கிடுகு-ஒருபறை. வயிர்-ஊதுகொம்பு. மகுடி - ஒருகுழற்கருவி. கிணை-மருதப்பறை. துளை - ஆகுபெயராய்த் துளைக்கருவிகளையுணர்த்தியது. துடி-உடுக்கு ; குறிஞ்சி பாலையிவற்றின் பறையுமாம். இமிழ்த்தல், உாற்றல், இசைத்தல், அரற்றல் இவற்றிற்கு ஒலித்தலென்க.

மஅ. அஞ்சபு-அஞ்சி. அனீகினி-சேனை. மதுகை-வலி.

மகூ. பூரிசிரவா-இவன் சோமதத்த னிரண்டாம்புத்திரன் ; இவனுக்குப் பூரிசிரவன் என்றும் பெயர்கூறுவர். சோமவரதத்தன் - சோமதத்தன்; இவன் சந்தனு சகோதரனாகிய பாகிலிகன்புத்திரன். பகதத்தன் - நரகாசுரன்புத்திரன். துன்மருடணன்-துரியோதனன் றம்பியரி லொருவன். கிருதபன்மன்-யதுகுலத்தவனாகிய ஹிருதிகன்மகன், தேவமீடனுக்குத் தம்பி. அரசன் என்றது துரியோதனனை.

உம. விருடசேனன் - கன்னன்புத்திரன்; இவனை விடசேனன் என்றும் பின்னர்க் கூறுவர். நிசாரி-சூரியன்.

உக. ஏதி-வாள்.

உஉ. பணை-பருமை. மகரிகை-தந்தப்பூண்.

உரு. மிசை-மேற்றலம். உடுநிகரம்-நட்சத்திரக்கூட்டம். கொடுமுடி - சிகரம். இவுளி - குதிரை. குரைபவனம்-ஒலிக்கின்ற காற்று. எழு-எழுகின்ற.

உச. யவனசவனம் - யவனதேயத்திலுண்டான வனம். சம்வனம் சவனமெனநின்றது. சுதம்-செல்கை, வலியுமாம். புறப்புணரி - பெரும்புறக்கடல்.

உடு. எழு-தம்பம். அனிலம்-காற்று.

உசு. திகிரி-பரிதி.

உஎ. கடி-ஈண்டு அடித்தல். கருவி-வாத்தியம். பணை - பறை. மணி - எறிமணி. நரப்பு - நரம்பு. உழை-ஒரு பண். உழை-இடம்.

உஅ. மைத்துனமை-மைத்துனமுறைமை. விறல் - வெற்றி. கரியவன் - கண்ணன். உருமுத்துவசன்மதலை - விசயன். இறுதி-நாசம். வளி-காற்று. வெருவு-அச்சம். புறக்கிடுவது - புறங்கொடுப்பது.

உகூ. வியனதி - ஈண்டு ஆகாயகங்கை.

ஙம. எனப்படம் - என்கின்ற அப் படம். உரகன் - என்றது ஆதிசேடனை. வரு - வளர்கின்ற. உததி-கடல்.

ஙரு. பிதாமகன்-பாட்டன். அணிந்தநிலை - அணிவகுத்த நிலைமை. விபுதர்பதி-இந்திரன்.

ஙச. கொள்பவன்-அத்தாணிகொள்பவன் என்க.

**உத்தியோகபருவம் முற்றிற்று.**

# ஆறாவது வீட்டுமபருவம்.

## முதற்போர்ச்சருக்கம்.

௨. அறிவன் - என்றது பரமான்மாவாகிய ஈசுவானை. நேயம்-அன்பு.

௩. ஐம்பொருள்-ஈண்டுச் சத்த பரிச ரூப ரச கந்தங்கள். அயின்று - உண்டு. முக்குணம் - சாத்துவிதம், இராசதம், தாமதம். அறுவகைப்படை-காமக் குரோத லோப மோக மத மாற்சரியமென்னு மறுவகைப்படையென்க. துயின்றபோது - லயமாகும்போது. ஒளித்துநின்ற தோன்றல் - மறைந்துநின்ற பரமான்மாவாகிய ஈசுவரன்.

௪. தந்தை-பிரமன். பாலினெய்போ லுயிர்க்குயிராகிவாழும் - பாலின்க ணெய்போலப் பேதம் அபேதம் பேதாபேதம் என்னும் மூன்றியல்பாக உயிர்க்குயிராகி வசிப்பா னென்க. "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல் - மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்" எனத் திருநாவுக்கரசுநாயனார்தேவாரத்தினுங் காண்க. இவ்வாறன்றிப் பாலி னெய் விளங்காது மறைந்திருத்தல்போல உயிர்க்குயிராகி வசிப்பானென்றுங் கூறுவர்.

௫. ஒன்றை - ஏகமாகிய ஈசுவானை. பூதமைந்தாவன - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம். நம்பன் - அடியார்விரும்புதலுள்ளவனாகிய ஈசுவரன்.

௬. மேனாள் என்றது கிருதயுககாலத்தை.

௭. தத்துவம்-உண்மை. இவ்வாறுசெய்யுளும் பகவற்கீதையின் சங்கிரகமென்க.

௮. முற்றி-அடைந்து. பாங்கு-உரிமை.

௯. அம்பை சிகண்டியாயின்கதை குருகுலச்சருக்கத்திற் காண்க.

௰௧. குமரன்-என்றது சிகண்டியை.

௰௩. வையந்தாயவர் - உலகத்தையளந்தற்குத் தாவியவராகிய திருமால்.

௰௪. வேந்தன் என்றது தருமாசனை. சூரன்றன்மகன்மகன்-சூரன்மகன் வசுதேவன், வசுதேவன்மகன் கிருட்டிணன்.

௰௬. பனிவனம் - குளிர்ச்சியையுடையநீர்.

௰௭. அசலவியூகம் - பருவதவடிவாயமைக்கப்பட்டவியூகம். இதனை வச்சிரயூகமென்பர். வியூகம் - படைவகுப்பு. விந்தை - வீரலக்குமி. தூசி-படைமுன்னணி.

௰௮. புரசை-யானைக்கழுத்திடு கயிறு. அரசன்-ஈண்டுத்தருமராசன். ஆரை-ஒலி. குப்பை-கூட்டம். சாலம்-கூட்டம். சால-மிக.

௰௯. பற்பவனம்-தாமரைக்காடு. இடம்புரி ஆயிரஞ் சூழ்ந்தது வலம்புரி, வலம்புரி ஆயிரஞ் சூழ்ந்தது சலஞ் சலம் என்க. சங்கு என்றது ஈண்டு இடம் புரியை. திருமாலேந்தின சங்கு பாஞ்சசந்நியமென்னும் வலம்புரிச்சங்கென்க.

௨௩. தந்திரம்-படை.

௨௪. சண்டம் - வேகம். சாமந்தர்-தானைத்தலைவர்.

௨௫. இடி-அடித்தல். அமுதங் கடைந்தெடுத்தகாலத்திலே திருமால் மோகினிவடிவெடுத்து அவ்வமுதத்தைப்படைக்கும்போது அதனையருந்தவிருந்த தேவருடன் மறைந்திருந்த இராகு அம்மோகினியால் உடல்வேறு தலைவேறாயினனென்றறிக. தொடி-வீரவளை; புறநானூற்றுரையிற் காண்க. சூரியன்றேர்ப்பாகனுக்குக் காலில்லையென வறிக. எயினர் - ஒத்தார்.

௨௬. தீபம்-தீபவிருக்ஷம். நீபம் - ஈண்டுச் செங்கடப்பு.

௨௭. மெய்யில்வாளி - உடலிற்றைததிருகின்ற பாணம். வாங்கினர்-வளைத்தார். மை-குற்றம்.

௨௮. எயிற்றுக்கணை-பறகளாற பாணத்தை. இலக்கம்-எண். இலக்கு-குறி.

௨௯. முதலடியில் இல்பொருளுவமை காண்க.

௩௨. புங்கம - பாணம். கங்கம - பருந்து. காவணம்-பந்தல். அலகை-பேய.

௩௩. ஒளி-ஒழுங்கு தாளிலான் என்றது அருணனை. மீளி என்றது வலியோனாகிய சூரியனை.

௩௬. மேலை, கீழை என்பனவற்றில் ஐ சாரியை யென்க.

௩௭. உகவை மகிழ்ச்சி. மகீபன் - என்றது துரியோதனனை. அரசன்-என்றது தருமனை. விந்தரன்-பூதிவிந்தனென்னு மோரரசன் என்பர். படையெழுச்சிச்சருக்கம் ௰௭-ஆங்கவியிற் கூறியவனன்று.

௬௮. சதாகதி-வாயு.

௬௯. தன்பிதாவின் பிதாமகன்-தன்றந்தையாகிய அருச்சுனனுடைய பாட்டனாகிய வீடுமனென்க.

௭௨. தாமன் - ஒளியுடையோனாகிய சூரியன். தமம்-இருள்.

௭௩. செண்டு-ஓராயுதம். வசுகிரி - பொன்மலையாகிய மேரு. செழியன்-பாண்டியன்.

௭௪. பரித்த - தாங்கிய. பரிதிபோல்-பரிவேடத்தைப்போல. மைத்துனர் - துரியோதனன் மனைவியாகிய பானுமதியின் சகோதரமுறையினர்.

௭௭. விண்ணிடைச் செய்து பெற்றனதேர் - விண்ணுலகத்திற்செய்யப்பட்டுத் தான் பெற்றாற்போன்ற தன்றேர்.

௭௮. சாகரத்தெழுதழல் - கடலிலெழுகின்ற வடவாமுகாக்கினி.

௮௦. சொல்லி என்பதனைச் சொல்ல எனத் திரித்துரைக்க.

௮௨. இரணம்-போர். நறை-தேன்.

௮௪. பூளை-ஒரு செடி; ஆகுபெயரா யதன் பூவையுணர்த்தியது. அனிலம்-காற்று.

௮௫. கெட்டநிலை-மறைந்தோடினநிலை.

௮௯. இளந்தலை-எளிமை.

௯௧. குகுரம்-ஒரு தேயம்.

௯௪. ஏறு-ஈண்டு ஆண்சிங்கம்.

௯௮. நடுத்தகை-நடுநிலைமையாகியகுணம்.

௯௯. உகளித்து-குதித்து. ஆழி-கடல்.

௭௦. குருதிப்புனலாறுங் கிடக்கின்ற தேருருள்கள் போரிலிறந்தவீரர் வீரசுவர்க்கஞ் செல்லுங்காற் சூரியமண்டலத்தைக் கிழித்துச் செல்லுதல் மரபாதலால் அங்ஙனஞ் சென்ற அம்மண்டலத்தி னிழலை யொக்குமென்றாரென்க.

௭௧. அலங்கல் முன்னது மாலை; பின்னது ஒளி செய்தல். சததளம்-நூறிதழ். முகுளசாலம்-அரும்புக்கூட்டம்.

௭௨. கண்ணிழந்த பறை என்றது ஓட்டையாகிய பறையை. இடை - அக்குருதிநதிநடுவில். கால்வாய் - வாய்க்கால். கண் - ஈண்டுத் துவாரம். பலநிறமணியென்றும், பலநிறமீனினமென்றும் வருவித்துரைக்க.

௭௩. படங்கியல் பாடிவீடு-பாசறையி லியன்ற படங்காகிய வீடு. படங்கு - கூடாரம். படங்கு பெருங்கொடி யெனப் பொருள் கொண்டு பெருங்கொடிகள் பொருந்திய பாசறையிலுள்ள வீடு எனவுங் கூறுவர். இது தற்குறிப்பேற்றவணி. இனிப் போர்முடிவளவுங் கதிரின்மறைவு தோற்றத்திற் பெரும்பாலுமிவ்வணி வருதல் காண்க.

௭௭. முடி-தலை. முடிசாய்த்து-சயனித்து என்பது கருத்து. வல் - விரைவு. மை - இருள். வரூதினி-படை.

# இரண்டாம்போர்ச்சருக்கம்.

—[o]—

௨. சோனை-விடாமழை. வானை என்றதில் ஐ-சாரியை.

௩. பௌவம்-கடல். கௌவை-ஒலி.

௪. பராகம்-தூளி. சம்பராரி-மதன். உரும்-இடி.

௫. இளவல் என்றது சகாதேவனை. பளகம்-மலை. வளவர்-சோழர்.

௬. மிடல்-வலி. நாயகன் என்றது தருமராசனை. கடகநாதன் - ஈண்டுச் சேனாநாதனாகிய திட்டத்துய்மன். அணிந்து - அணிவகுத்து.

௭. மாடு-பக்கம். பீடு-பெருமை. பேரணி-கூழை, பின்னணி. பிங்கலநிகண்டிற் காண்க. நடுச்சேனையுமாம். தூசி - முன்னணி. மகீபன் என்றது துரியோதனனை.

௮. கொண்டல்-கீழ்காற்று. கோடை-மேல் காற்று. ஆசுகம்-பாணம்.

௯. கோல் - பாணம். உற்கை - விண்வீழ் கொள்ளி.

௰. சாபம் முன்னது வில், பின்னது சபித்தல்.

௰௨. வக்கிரம் - ஈண்டு வளைவு. சக்கிரதேவன்-இவன் கலிங்கதேசத்தரசனாகிய சுருதாயுவின் இரண்டாம்புத்திரன்

௰௪. இபம்-யானை. தாமமாருதி-ஒழுங்கையுடைய அனுமான். எறி-கடலிலெறிந்த.

௰௫. தும்பி - யானை. பவனன் - காற்று. அம்பி-மரக்கலம்.

௰௬. களிறு-யானை. பணை-கொம்பு. ஏனம்-திருமாலாகிய பன்றியென்க.

௰௭. கழல்-கால். பொலம்-பொன். இந்திரன் சிறகுகளையரிவதற்குமுன் னிருந்த மலை யென்பார் பழையகல் லென்றார்.

௰௮. முகபடமுகில்-யானை.

௨௰. தளம்-படை.

௨௨. ஒச்சினன் - எறிந்தான். தோமரம் - கைவேல்.

௨௩. ஈடு-வலி.

௨௪. மோகரம்-உக்கிரம். ஆகவம்-ஈண்டுப் போர்க்களம். ஆரவம்-அரவம். அற-மிக.

௨௫. மேகநிகர்மெய்க்கணை என்றது திருமாலாகிய பாணத்தை. நகை-வீரவெகுளிநகை யென்க.

௨௭. மேவலர் - பகைவர். உட்கல் - அஞ்சுதல். பரவை - கடல். கூவல் - கிணறு. ஒத்ததொரு கோபம் - ஒத்ததாகிய வொரு கோப மென்க.

௨௮. வருவோன் என்றது விசயனை. மீனவன் - மீனக்கொடியையுடைய மதன். காளை என்றது அபிமனை.

௩௰. ஆலம் - விடம். இவன் என்றது விசயனை. உததி-கடல்.

௩௧. மாதிரம்-திசை. முட்ட-நிறைய. எதிவிருள் - அயலாகியவிருள். கடையின் - யுகமுடிவில்.

௩௨. கூளி-பேய். கோமகன் என்றது துரியோதனனை. உற்ற என்னும் பெயரெச்சவீறு தொக்கது.

# மூன்றாம்போர்ச்சருக்கம்.



௨. காருடயூகம் - கருடனதுவடிவம்போல வகுக்கப்படும் படைவகுப்பு. அர்த்தசந்திரவியூகம்-பாதிச்சந்திரனதுவடிவம்போல வகுக்கப்படும் படைவகுப்பு.

௩. ஏ-அசை. கார்கோள்-கடல்; திருமுருகாற்றுப்படையுரையிற் காண்க. கால்-காற்று. கலி-ஒலி. காகளம்-காளம்.

௪. எல்-ஒளி. எல்-இயலுகின்ற. சிறுவன் என்றது அபிமனை. மல் முன்னது மல்யுத்தம், பின்னது மல்லர்.

௫. காந்தாரன் என்றது சகுனியை. சிங்கத்துவசன்-வீமன்.

௬. மறை-மந்திரம்.

௮. மாகம் - ஆகாயம். மைந்தன் என்றது அபிமனை. மருமம்-மார்பு.

௯. சாயகம்-பாணம், மந்தாகினிமைந்தன்-கங்கைபுத்திரனாகிய வீடுமன்.

௰௩. தரங்கம்-அலை. வடவானலம்-வடவாமுகாக்கினி.

௰௫. தாழி-ஈண்டுத் தயிர்த்தாழி; ஆயர்பாடியில் ததிபாண்டனுடைய வேண்டுகோளால் அவனுடைய தயிர்த்தாழிக்கும் அவனைச் சேர்ந்த இருபத்தெட்டுவீட்டாருக்கு முத்தி கொடுத்தகதையை யீண்டுச் சுருக்கிக்கூறினாரென்க. மாயன்-கருநிறமுடையோன் என்றார் பரிபாடலுரையில். வாழி-அசை.

௰௭. ஆரணகற்பித - வேதத்தை விதித்தவனே. மாதவ - இலக்குமிநாயகனே. அச்சுத-அழியாதவனே. சிற்குணம்-ஞானமாகிய குணம். வாரணம்-யானை.

௰௮. ஆடகன்-இரணியன். சிறுமாணுருவம் என்றது குறள்வடிவத்தை. மாண்-மாட்சிமை. ஏ-பாணம். அரக்கன் என்றது இராவணனை.

௨௧. நிலவைப்படைய - நிலத்தினிடமெல்லாம். வை-கூர்மை.

௨௩. மத்திரநாடன்-சல்லியன்.

௨௪. மூன்றாமடியில், வீடுமனுந் துரோணசாரியனும் அசுவத்தாமனு மென்க.

௨௫. பஞ்சரம்-கழுகு; இது மாமிசம்புசித்தற்கு யானையுடன் றிரிவதனாற் பஞ்சரத்தோடுந் திரியும் யானை யென்றார். சிலபாணங்கட்கு இறகுண்மையாற் சரத்தின்மேற் சிறகரென்றார்.

௨௬. கோலம்-தலைக்கோலம் என்னு மோரணி. முதலிரண்டடியிலே தும்பைத்திணையிற் பேய்க்குரவையென்னுந் துறையின்கருத்தமையக் கூறினரென்க.

௨௭. பமரமும்மதம் — வண்டுண்ணுகின்ற மும்மதம். வேலின்வாய் - வேலாயுதந் தைத்த துவாரத்தில். அனலம் - அக்கினி. குன்றம் என்றது கிரௌஞ்சகிரியை. கிரௌஞ்சகிரியை வேல் துளைத்தபோது துவாரத்தின்வழி அக்கினிவந்தது என்பதைக் கந்தபுராணத்திற் காண்க. ஞாளி-நாய். மானுடத்தலைவிலங்கு-புருஷமிருகம். நிணம்-ஈண்டு இரத்தம். அன்றி இரத்தங்கலந்துவரும் கொழுப்பென்பார்.

உகூ. கண்படாமல் - நித்திரைசெய்யாமல். தருமன்சேனைக்கு வெற்றியால்வரு மகிழ்ச்சியைப் பாராட்டலால் நித்திரையில்லையென்க. முன்னிரண்டடியும் பேராண்முல்லையின் றுறைக்கருத்தும், பின்னிரண்டடியுங் கையறுநிலையின் றுறைக்கருத்துமாகக் கொள்க.

ஙய. நென்னல்-நேற்று; மூன்றுநாளாகிய நேற்றென்க. கையிற்கொண்டது - (அருச்சுனன் வாளாநின்ற நிலைகண்டு வீமனைக்கொல்லக்) கையினிடத்துச் சக்கரமாகக்கொண்டது என வருவித்துரைக்க. விபாகரன்-சூரியன்.

# நான்காம்போர்ச்சருக்கம்.

—:(o):—

உ. பொற்பகலுற-பொலிவகல. முற்பகல் வியூகம்-அர்த்தசந்திரவியூகமென்க.

ங. காணலார் - பகைவர். ஏமம் - களிப்பு. இதில் ரகரவொற்றிடைவந்த ஆசெதுகை காண்க.

ச. ஏழிருபுவனம் - பதினாலுலகு; அவை மேலேழுலகம், கீழேழுலகம். பிங்கலநிகண்டு முதலாவது நான்காவதிற் காண்க. பாழி-பெருமை, வலியுமாம்.

ரு. ஆலாலம்-விடம், வடசொல். கதுவல்-பற்றுதல். ஏலா - ஏற்று. தோலினம்-யானைக்கூட்டம்.

சு. மால்வாரணம்-பெரியயானைகள். நால்வாய் - தொங்கிய வாயையுடையது என யானைக்குப் பெயராகக்கொள்க. நாலுதல்-தொங்குதல்.

எ. சிந்துரம் - யானை. வல்லுரம் - வலியமார்பு. சிந்துரமாகி-சிந்தூரமாகி. இவ்வாறன்றி வல்லுரம்-மிக்கவலி. சிந்துரமாகி - சிந்துகின்ற வலியாக என்றுமாம்.

அ. மிடல்-வலி. அத்தி-யானை, எலும்பு.

கூ. கந்தாவகன்-காற்று. கந்து-தூண். தந்தாவளம்-யானை, தம்முடைய இருப்பிடம்.

யெ. தோல்-யானை. வாலதி-வால். வாரணமாகியது - கடலையொத்திருந்தது. கைமுதலியன காந்து கருநிறமேமிகுந்து தோன்றுதலால் வாரணமாகியதென்றார்.

யக. தம்பித்தல் - அசையாதிருத்தல். கும்பித்தல்-அடங்கல். தும்பி-யானை. தும்பிக்குலமாயின-வண்டுக்கூட்டம்போலிருந்தன.

யஉ. முருக்குதல்-அழித்தல். நாகம்-யானை, மலை. ஆகவம்-ஈண்டுப் போர்க்களம்.

யங. குதிகொண்டு-(கொம்புங் கையு நீங்கிய வாயினின்றும்) குதித்து என்க. கயம்-குளம், யானை.

யச. மூசுதல் - மொய்த்தல். களபக்குலம்-யானைக்கூட்டம். மொய்ம்பன்-வலியோனாகிய வீமன். களபக்களி-கலவைக்குழம்பு.

யரு. கிட்டின - கிட்டினவாகிய யானைகள் என்க. புன்பொரி - அற்பமாகியநெற்பொரி. அவர்தங் கரியே கரி-அப்பகைவருடைய யானைகளே சாட்சி.

யசு. வாரணவேலை-யானைக்கடல்.

யஅ. நாமம்-அச்சம்.

யகூ. அற்று-(அரவத்துவசம்) அற என்த் திரித்துரைக்க.

உய. உற்று-உற. கடகம்-கங்கணம்.

உக. மைத்துனர் - திரௌபதிக்குச் சகோதரமுறையினர்.

உங. உடையாவல்ல வகிலாண்டம்-எல்லா வண்டமுமுடைந்தன.

உச. மொட்டு-தேரின்கூம்பு. கொடிஞ்சி - தாமரைப்பூவடிவமாகப் பண்ணித் தேர்த்தட்டின்முன்னே நடுவது; மதுரைக்காஞ்சியுரையிற் காண்க.

உரு. ஓரினவெதுகை காண்க.

உகூ. உத்தமபானு - உத்தமோசா; இவன் துருபதன்பிள்ளைகளி லொருவன்.

ஙய. பகதத்தன் நகர் பிராக்ஜோதிஷம்என்பர். பஞ்சகதி - சூதுபோர்ச்சருக்கம் அக-ஆஞ் செய்யுளுரையிற் காண்க.

ஙஉ. ஓடை - நெற்றிப்பட்டம். பகதத்தன் யானையின்பெயர் சுப்பிரதீகம்.

ஙஎ. போயினது என்பது இன் இடைநிலை முதற்குறைந்து ஈறுதொக்குப் போன என நின்றதென்க.

ஙகூ. கண்ணீர் சோர்தர எனக் கூட்டுக. தூண்பாலாகி-தூணின்றன்மையாகி; எனவே அசைவற்றிருந்து என்பது கருத்தாயிற்று.

சய. கொன்-வீண். முன்னம் - எண்ணம். அடுக்கு-அவலம்பற்றிவந்தது.

சக. கண்ணறை-கண்ணற்றவனாகிய திருதராட்டிரன்.

சஉ. காலைச்சுடரொன்றதனால் அத்திசைவானோன் என்றது இந்திரனை. சூளாமணி - முடிமணி.

# ஐந்தாம்போர்ச்சருக்கம்.



உ. விம்ம - ஒலிக்க. மூன்றாமடிக்கு-கரையைச் சிந்துகின்ற திரையானது சிந்துகின்ற நுரைசிந்தப்பெற்ற வேகத்தையுடைய கடற்கூட்டம்போல வென்க. சிந்துதல் - சிதறல். அரசன்-ஈண்டுத் தருமராசன்.

ரு. விருது-கொடி. அரக்கன் என்றது இராவணனே. இறைவன் என்றது இராமனே.

ச. கொடித்தேர் என்பதில் தகரவொற்று விரித்தலாயிற்று. புரக்கைக்குநின்றோன்-கிருட்டிணன். இது தற்குறிப்பேற்றவணி.

டு. குறித்தல் ஈண்டு ஊதுதல்.

எ. செம்மல்-சிறந்தோனுகியவீடுமனென்க. விடை-விடுத்தல்.

பவர்-கொடி. ஈண்டுப் பவளக்கொடியென்க; நெருங்குதலெனினுமாம். தவர்-வில்.

கூ. உச்சாசனம்-மேலானஆக்கினே.

யக. ஆரவம் ஆராவம் என விகாரமாயிற்று. ஆரவம் ஒலி. ஆர் ஆவம் எனப் பிரித்து ஆவம் அம்பறாத்தூணி யென்பாரு முளர்.

யஉ. ஈமம்-சுடுகாடு ; அது ஸருவசங்காரமாக்கிய சுடுகாடு என்க.

யரு. பூரிசவா-அணிவகுப்புச்சருக்கம் யகூ-ஆஞ் செய்யுளுரையிற் காண்க.

யச. நளினபதி...வ வென்றது சாத்தகியை. நளினபதி-இ...குமிநாயகனுகிய கிருட்டிணன். தவம்-தவ...னைப் போலியாயிற்று.

யடு. எண்-வகை... நடையடிக்கு-மாறுபாடில்லனவாகிய ஒழு...நுகளை யெடுத்துச்சொல்லும்பொருட்டு ஒரு ...குறையுமில்லாமற்போயினது அவ்விருவருக்கும் என்க.

யசு. ஒரு கேடகவுரை தேறினருளமேயென-ஒற்றுமையான சிநேகம் பொருந்த வுரைத்தவுரையைத் தெளிந்தோராகிய சிநேகரிருவருள்ளத்தைப்போல வென்க. கேடக நடவும்-கேட்டை அவ்விடத்திற்செலுத்தும். கேட்டைத் தன்னிடத்தினின்றும் ஓட்டுகின்ற வெனினுமாம். முருகு-வாசனே. ஏடு-இதழ். கேடகம்-பரிசை.

யஎ. படி-பூமி. தொடி-வீரவளே. தோல் - கேடகம் வடி-கூர்மை.

யகூ. வாளே - வாளேமீன். குறை என்றது கவந்தங்களே. அலகை-பேய்.

உரு. வானவர்தமதாலயம் என்றது மேருமலையை.

உச. படை-ஆயுதம். செம்புனல்வழி-இரத்தமொழுகுகின்ற வழி. உயிர்காய்வார் - பகைவருயிரைக் கொல்லுவார். "படைசெம்புனல்கடலுண்டதுகால்வார்" என்பது பாடமாயின் ஆயுதங்களாற் கடல்கொள்வதாகிய இரத்தத்தையொழுகச்செய்வா ரென்க.

உடு. முதலடிக்கு - இராவென்ற கருநிறம் பொருந்திய நஞ்சினையும், இளம்பிறையாகிய பல்லினையுமுடைய ஒரு பாம்பென்க. என்ற என்னும்பெயரெச்சவீறுதொக்கது. உரம்-வலி. உம்-அசை. குடதிசை - மேற்றிசை. உரவுக்குடதிசையென்பது சந்தநோக்கி மெலித்தலாயிற்று எனினுமாம்.

# ஆறாம்போர்ச்சருக்கம்.



க. பாக்கியம் செய்ததென்-செய்யப்பட்டதாகிய புண்ணியம்யா...து; அதனைக் கூறுவாயாயின் யானு மவ்வாறுசெய் துய்வே னென்பது குறிப்பெச்சமாக வருவித்துரைக்க.

ரு. மகரவியூகம் - சுறாமீன்வடிவமாக வகுக்கப்படும் படைவகுப்பு

ச. போகம்-இன்பம். புனிதன்-சுத்தனுகிய வீடுமனென்க.

டு. சனம்-கூட்டம். கிரிஞ்சவியூகம் - அன்றிற்பறவைவடிவமாக வகுக்கப்படும் படைவகுப்பு. கிரௌஞ்சம்-கிரிஞ்சம் எனத் திரிந்து நின்றதென்பர்.

சு. அரவு என்றது ஆதிசேடனே. ஒட்டினுர்-உடன்பட்டார்.

அ. சிலேவரம் - மேலான வில்வித்தையென்க. உதையினுன்-செலுத்தினுன்.

கூ. சூழி - முகபடாம். துளேத்த என்னும் பெயரெச்சவீறு தொக்கதென்க.

௰. தொல்லைவெங்கரியென - முன் நான் காம்போரி லெடுத்தெறிந்த வெவ்விய யானைகளைப்போல வென்க. மடுத்து - ஈண்டு எற்றியென்க. அம்புவியெல்லை என மாற்றுக. எற்றினான்-அடித்தான்.

௰௧. பாந்தள் - பாம்பு. அல்லி - அகவிதழ். தெரியல் - மாலை. அங்கையினெல்லியங்கனியினிநேராலாருயிரென - இனிப் பகைவருயிர் உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தப்பாது கைவசமாகு மென்று; புறப்பொருள்வெண்பாமாலை கரந்தைப்படலம் ௰௩ - ஆஞ்செய்யுளில் உள்ளங்கைநெல்லிக்கனியை யெடுத்துக் கூறுதல் காண்க.

௰௩. எதிரூன்றினான் - போர்க்கு எதிர்த்து நின்றான். மைத்துனர் என்றது பாஞ்சாலரை.

௰௪. கொக்கரித்தல்-கர்ச்சித்தல்.

௰௬. சிரம்-நெடுங்காலம். வில்லுதையினான்-வில்லினின்றுஞ் செலுத்தினான்.

௰௯. விகன்னன்-துரியோதனன்றம்பியரிலொருவன்.

௨௰ சித்திரசேனன்-துரியோதனன்றம்பியரிலொருவன்.

௨௧. மைத்துனன்-ஈண்டுச் சயத்திரதன். செற்றல்-நெருங்கல். பொருகிற்றிலர்-பொருதார்.

௨௩. இன்னர் - இத்தன்மையுடையார்.

௨௪. விஞ்சுதல்-மிகுதல். இந்துவரவெழுசிந்துவென-சந்திரன்றோன்றப் பொங்கியெழுகின்ற கடலைப்போல.

௨௫ கோடு - கொம்பு. முதலொடு - அடியோடு. கஞ்சன்வரவிடுகளிறு - குவலயாபீடமென்னும் யானை. ஓடைமா-நெற்றிப்பட்டத்தையுடைய யானை. முதலைவாயின் வலியழிந்த யானை கஜேந்திரன். நீலகிரி என்றது உருவகம். வலிபடல்-இழுக்கப்படுதலுமாம்.

௨௬. மாலுமதகடசாலும்-மயக்கஞ்செய்யும் மதநீரையுடைய கடமாகிய சாலும். கடம்-யானைக்கதுப்பு. சால்-நீர்வைக்கு மொருவகைப் பாத்திரம்; கடசால் என்றது உருவகம். தும்பிமா-யானை; ஒருபொருட்பன்மொழி. போர்வைபுரியதள்-போர்த்தல்செய்யப்பட்ட (யானைத்) தோல்.

௨௭. அற்று விழுவனவாகிய இபமுகத்தையென்க. இபம்-யானை. படைகொடு - ஆயுதத்தைக் கைக்கொண்டு. பூசல்-போர். சோனை - விடாமழை. மழை-குளிர்ச்சி. வாகம்-வாகனம். முதல்வன்-ஈண்டு விநாயகர்.

௨௮. அமர் அமையுமென முதல் இமயமனுகினன் எனக் கூட்டுக. அணிதல்-அணிவகுத்தல். சிமயம் - மலை; ஈண்டு உதயகிரியென்க.

# ஏழாம்போர்ச்சருக்கம்.

௧ ஆடுதல்-விளையாடுதல்.

௨. மாசுணவியூகம்-சர்ப்பத்தின்வடிவமாக வகுக்கப்பட்ட படை வகுப்பு. சகட வியூகம் - வண்டிச்சக்கரவடிவமாக வகுக்கப்பட்ட படை வகுப்பு. வடநூலில் வீடுமன் மண்டலவியூகம் வகுத்ததாகக் கூறியிருக்கின்றதாம்.

௩. அந்தணன் என்றது துரோணாசாரியனை. புறம் என்பதனைக் கண்டு என்பதனோடும், இடான் என்பதனோடுங் கூட்டி மத்திமதீபமாகக் கொள்க.

௪. பின்பிறந்தவன்-சாத்தகி. நின்றிலன் - ஓடினான். சுதாயு-இவன் வருணன் புத்திரன்; ௰௪-ஆம் போர்ச்சருக்கம் ௯௫-ஆஞ் செய்யுளிற் காண்க.

௫. செயந்தன் - இந்திரன்மகன்; அவன் துணைவன் அருச்சுனனென்க. மீளி - ஈண்டு வலியோனாகிய சிவபிரான்.

௬. கரியின்வந்த தாரகன் - யானைபோல வந்த தாரகாசுரன்; இவன் சூரபன்மனுக்கும் சிங்கமுகனுக்கும் இளையவன்; யானைமுகமுள்ளவனென்றறிக. வலன்-வலாசுரன். இந்திரனும் வலாசுரனும் போர்செய்த கதை திருவிளையாடற்புராணம் மாணிக்கம்விற்றபடலத்திற் காண்க.

௭. நரன் என்றது அருச்சுனனை. வசு என்றது அஷ்டவசுக்களிலொருவசுவாகிய வீடுமனை. ஏ-பாணம்.

௰ போரினால் என மூன்றுருவது விரிக்க. இங்கு என்றது மேருவின் றென்பாகத்தை. அப்புறம் என்றது மேருவின் வடபாகத்தை.

# எட்டாம்போர்ச்சருக்கம்.

க. பல்பூதமுஞ்சேர்த்த-பலவகையுயிர்களையுஞ் சிருட்டிக்குட்படுத்திய. எப்பான்மையென்னும் வினவுக்குப் பூபாரந்தீர்த்தற்காகிய கருணைப்பான்மையால் என விடை கூறுக.

ங. விலோதனப்பணி-சர்ப்பக்கொடிஎன்க. வடநூலில் ஊர்மியூகமென்றார். ஊர்மி-அலை. சூசியென்றார் ஈண்டு. சூசியூகம் பதினான்காம் போர்ச்சருக்கம்ஏழாம்பாட்டுரையிலறிக. சகடவியூகம் எ - ஆம்போர்ச்சருக்கம் இரண்டாங்கவியிற் காண்க.

ச. சூறை-சூறாவளி. தினைத்தல்-நெருங்கல். விலங்கலுக்கரசு-மேருமலை.

ரு. வேந்தனுக்கு விண்டலத்தி விடம்பிடிக்கவென்று சரம் ஏவினானென்று கூட்டுக.

கூ. வினைத்தலை - போரினிடத்தில். வீவு-இறத்தல். ஓவியத்தின்-சித்திரத்தைப்போல. நித்திலம்-முத்து.

ய. உய்ந்தனர்-பிழைத்தனராகி என வெச்சமாக்குக.

யங. கால் - காற்று. கவனம் - கதி. கன்னபாகம்-காதுகளில். மால்வருகலுழி-மிகுதியாக வருகின்ற கலங்கல்நீராகிய மதமென்க.

யரு. செய்நந்து-இதழ்.

யஎ. சோனையம்புயலில்-விடாமழையைச் சொரிகின்ற அழகிய மேகத்தைப்போல.

யக. பை-படம். பகல்-ஒளி. பைப்பகன் மகுடமைந்தனென்றது இராவானை. அன்று - வேத்திரகீயத்திற் பாண்டவர்தங்கியிருந்த அக்காலத்தில். பகனிளவல்-பகனென்னுமரக்கன் றம்பியாகிய அலம்புதன்; அலம்பசன் என்றுஞ் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது.

உஉ. கலுழன்-கருடன். எஞ்சுதல்-சுருங்குதல்.

உச. பூஞ்சாயகன்-புட்பபாணத்தையுடைய மதன். சாபம்-வில்லாகிய கரும்பு. பொசிந்து-கசிந்து. கண்-கணு.

உகூ. தந்தம்-கொம்பு. தந்தி-யானை. கடையடிக்குச் செயமடையப்படுதலைவிளங்க எழுதப்படுந் தன் கொடிச்சிங்கத்தையொத்தவனென்க; சிதம்-செயமடையப்படுதல். அது சிந்தம் என விரித்தலாயிற்று.

உஅ. தினைத்தல்-நெருங்கல். திகிரிக்கிரி - சக்கரவாளகிரி. உளைத்தல்-ஒலித்தல். கிளைத்தல்-ஈண் டேக்கங்கொள்ளுதல்.

ஙய. கருடத்துசனை தோன்றல் என்பதனை நீக்கி, கனகத்துசனை தோன்றல் எனப் பாடங்கூறுவாருமுளர்.

ஙஉ. மறம்-வீரம். சீயம்-சிங்கம். மாசுணத்தோன்-அரவக்கொடியோன்.

ஙங. கந்து-தூண். ஏ - அசை. மந்தேகர்-இவர் சூரியன்பகைவராகிய அசுரரென்க.

ஙச. தளவொத்தமூரற் றலமான் - முல்லையரும்பினையொத்த பற்களையுடைய பூமிதேவி.

ஙரு. வாட்டம்-வாட்டென நின்றது; வாடுதல், வேட்டல் - விவாகஞ்செய்தல். வேந்து - ஈண்டுத் தருமராசன். சூட்டு-நுதலணி. அற்று-அத்தன்மைத்து.

ஙகூ. நீலவாடை-சமுத்திரமாகிய கரியவஸ்திரமென்க. மன்றல்-விவாகம்.

ஙஎ. பாடி - பாசறை. பாடு - பெருமை. தென்பாடி - தென்றிசைநகரமாகிய யமபுரமென்க.

ஙக. தாமம்-ஒளி.

# ஒன்பதாம்போர்ச்சருக்கம்.

க. பிறவித்தூர்-பிறவிக்கு மூலமாகிய கன்மம். சுமடர்-அறிவிலீர். சுமடர் என்பதன்விளி என்க. ஆறுபேதசமயம். இங்கே கபிலமதம், பதஞ்சலிமதம், அக்ஷபாதமதம், கணாதமதம், ஜைமினிமதம், வியாசமதம்என வேதாந்தமதம் ஆறென்பர்; வேறுங் கூறுவர். இவற்றுள்ளே முன்னிரண்டும் யோகத்தையும், இடையிரண்டுந் தருக்கநியாயத்தையும், ஐந்தாவது தரும ஞானங்களையும், ஆறாவது அத்துவிதத்தையும் விளக்குமென்பர். அக்ஷபாதமுனிக்குக் கௌதமமுனியெனப் பெயருமுண்டு. ஜைமினிமுனி செய்தநூல் மீமாஞ்சையென்பர். நாராயணம் - கேசவன் முதலாயினவென்க. வாசுதேவனைப் படைத்துணையழைத்தசருக்கம் உயி

ஆங் கவியுரையிற் காண்க.

உ. பகலிற் பிற்பாதியிற் கொடாமையினாற் கன்னனைப் பின்போதில் வண்மையொழி வான் என்றான்.

ங. என்னிளையோர்கள் எனப்பிரித் துரைக்க. கந்தவகன் - காற்று. புகல்கிற்பது-சொல்வது. அனிகக்கோ-ஈண்டு வீடுமன். நினையார்-பகைவர்.

ச. வெய்து-விரைவு. உந்தைதந்தை-உன் பிதாவின் றந்தையாகியவீடுமன். அவர் என்றது பாண்டவரை.

ரு. புற்கவ்வுமாகில்-வீடுமன் புல்லைக் கௌவுவனாயினால். கவ்வை-பழிச்சொல். சிற்கவ்வை-சிலதுன்பம்.

சு. எச்சாபம் - எவ்வகைவிற்களுமென்க. யூகமான விரதம் - படைவகுப்பாகிய இரதம் என வுருவக மாக்குக. அச்சாணி-அச்சினுனியின்கண்டுகின்ற ஆணி. "உருவுகண்" டென்னு முதற்குறிபபுடைய திருக்குறளுரையிற் காண்க.

ய. குறித்தல்-ஈண்டு வரைதல். பூகம்பமாக-பூமிநடுங்க. சருப்பதோபத்திரயூகம்-நாற்றிசையினும் எங்குநின்று பார்க்கினும் ஒரேவிதமாகக் காணும்படி வாயிலுள்ளவீடுபோல வகுக்கப்படும் படைவகுப்பு. சருப்பதோபத்திரம் என்னுஞ் சித்திரகவியின்வடிவைத் தண்டியலங்காரத்திற்காண்க.

யக. நிருதன் என்றது அலம்புதனை. மதலை என்ற திராவானை. எண்மர் எழுவோர் என றது துரியோதனன் றம்பியரை.

யஉ. முற்றுள்ள-முன்சென்றுதுள்ள. பூழி-புழுதி. செற்று-கோபித்து.

யங. பற்பராகமுடி - மாணிக்கமணிமுடி. மதாணி - மார்பிற்பதக்கம். தொங்கல் - ஆரம். பைம்பற்பராகமலர்வல்லி-அழகியசெந்தாமரை மலரிலிருக்குங்கொடியாகிய இலக்குமி. இதில் ராகம் சிவப்பு. வெம்பற்பராகவரையூகம் - விருப்பமுள்ள மாணிக்கங்களையுடைய பருவத வடிவமாக வகுக்கப்பட்டபடைவகுப்பு. அது அசலவியூகமென்க. இவ்வாறன்றி, (வீரர்) இச்சைகொள்ளத்தக்க பத்மவடிவமாய் வகுக்கப்பட்டவெய்யயூகமென்பாருமுளர்; இப்பொருட்கு வரைதல் கொள்ளுதலாம். அம்பற்பராகபதி-அழகிய தாமரைக்கிச்சையுள்ள நாயகனாகிய சூரியன்.

யசு. மீளிமை-வீரத்தன்மை; திருவானைக் காப்புராணம்நகரச்சிறப்புநூறி-ஆஞ்செய்யுளிற் காண்க.

யஎ. உற்றுழியும் - துன்பமுற்றவிடத்தும். உளனாகி-கையையுடையவனாகி யென்க.

உய. பேது-மயக்கம். புணை என்றதற்குப் போர்க்கடலைக் கடக்குந்தெப்பம் எனவுரைக்க. உம்-அசை.

உஉ. அந்தரம் - இடம்; சூடாமணிநிகண்டு பதினோராவதிற் காண்க. அந்தரநெறி-ஆகாய மார்க்கம். கந்தரம்-குகை.

உங. பொறி-அறிவு. பகழி-பாணம்.

உச. (வீமன்) விட்டானென்க.

உசு. முதலடிக்கு அறுநூறாயிரமாக்க வென்க. படிதல்- அமைதல்.

உஎ. சொற்பகலிலான் - சொல்வேறுபடுதலில்லாதவனாகிய தருமராசன். அற்பகலிலாவுலகு- இரவும் பகலு மில்லாத தேவவுலகம்.

நக. கலி-ஒலி, செருக்குமாம். புறநானூறு நக-ஆங்கவியுரையிற் காண்க. மதுகை - வலி. கால்-காற்று.

நச. தவனன்-சூரியன். பவனேதயத்தேர்-காற்றைப்போல (வேகத்தோடு) வந்து தோற்றஞ்செய்யுந் தேரென்க.

நஎ. பண்ணுதல் - அலங்கரித்தல். மன்-நிலை. சதாநிகன்-விராடன்றம்பி.

நஅ. தேரோன் என்றது சூரியனை. நாடோறுந் தேரேறிச்செல்லுதலாற் றேரோன் என்றார். புணரி-கடல். அந்தோ-இரக்கச்சொல்.

நக. திலம்-எள். மச்சத்தவனிபர் - மச்சநாட்டரசர். இவன் என்றது வீடுமனை.

சக. உணர்த்துதல்-நீக்குதல்.

# பத்தாம்போர்ச்சருக்கம்.

க. தந்தை என்றது இரணியனை. நலிவு-வருத்தம். நாலிரண்டெழுத்து-ஓம்நமோநாராயணாய. கலியன் என்றது திருமங்கையாழ்வாரை. மங்கை-திருமங்கைநகர்.

ங. ஆகவத்துளணிய - யுத்தகளத்தி லணிவகுக்க.

ரு. முனைந்து-பொருது. முடித்தும்-முடிப்போம்; தன்மைப்பன்மை.

௭. வானுலாம்யானம் என்றது தேவவிமானத்தை.
௮. ஆன் நான்கும் மூன்றுருபு. வாரிதம்-மேகம். இது எதுவுவமை.
௰. பொருள் என்றது பகவற்கீதையிற் கூறிய அத்துவிதப்பொருளை.
௰௧. தேவவிரதன்-வீடுமன்.
௰௨. பனித்து - நடுங்கி. மாழ்கி - மயங்கி. அம்புசாதம்-தாமரை.
௰௩. நிமித்தம்-குறி. மித்திரர்-சிநேகர்.
௰௪. மருத்து-காற்று. பூழி-புழுதி. உருத்து-கோபித்து. உருமின் - இடியால். உட்குதல்-அஞ்சல்.
௰௭. முனைவாய்-யுத்தஞ்செய்யுமிடம். அம்புதம்-மேகம். அனிலம - காற்று. செம்பியன்-சோழன். மாமன் என்றது சகுனியை. சயிந்தர் என்றது சயத்திரதனைமொழிந்த சிந்துதேசத் தரசரை.
௨௰. பணை-கொம்பு. வஞ்சினம்-சபதம்.
௨௧. பருமம் - பருமை; முதுகணியுமாம். பரந்தனர்-பரவினர்.
௨௪. எழுவரென்றது வசுக்களெழுவரை. எண்ணுதல்-கருதுதல்
௨௭. சோமகர் என்றது துருபதனைமொழிந்த பாஞ்சாலதேசமன்னரை. மச்சர்-விராடதேசத்தார். சிஞ்சியர் - ஒருதேசத்தவர். மருக்கணை - எய்யுந்தொழில் மருவுகின்ற பாணம். அப்பொருட்டாதல் புறநானூற்றுரையிற் காண்க.
௨௮. முரண்-போர் சந்தனம்-தேர். கோலினன்-வளைத்தான்.
௨௯. ஓதம் - கடல். மாதிரம்-திசை. பொதுளி-நெருங்கி. அருணம்-சிவப்பு. சமம்-போர்.
௩௰. தூரியம்-வாத்தியம். மண்டலம்-ஈண்டுக்கூட்டம். தலையாக-முதன்மையாக. அன்றுமின்றுகொலென - அக்காலமு மிப்போதுதானோவென்றுசொல்ல.
௩௧. எதிரி என்றது சிகண்டியை.
௩௨. தேர்வாகம்-தேராகிய வாகனம்.
௩௩. கூனல் - வளைவு. கோலி - வளைத்து. வேனிலம்பு-மதனம்பென்க. மேனி - வீடுமன் மேனி.
௩௪. சாளரம்-பலகணி. இந்துமுகசாயகம்-பிறைவாயம்பு. மைந்தனன்று-புருடனன்று. சிகண்டி-அலி.
௩௫. பொன்றல் - பொன்றற்க. கோமடங்கல்-இராசசிங்கமாகிய துரியோதனன்.
௩௬. கோடு-சங்கு. பவளநாதம். கிருட்டிணனது பவளமாகிய வாயொலியென்க. முன்பு நினைந்தி லை-யோகநிலையென்க.
௩௭. எஞ்சினன்-குறைந்தான். துனைந்து-விரைந்து. அமபு-நீர்.
௩௮. மாகம் - ஆகாயம். வடபாலெய்தல் - உத்தராயணமாகுதல் நாகம்-விண்ணுலகு.
௪௨. என்பவம-யானெடுத்த பிறப்பு.
௪௩. பஞ்சசயனம் - மயிர், இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, அன்னத்தூவி இவைமுதலாகிய ஐந்தை. பிகைலசிகண்டி நசிலச்வமு படக்கூறுவர். வரம் - சந்தனுராசன் கொடுத்த வரமென்க.
௪௫. நோயிலயர்வு-பிணியில்லாத தளர்ச்சி. வீயின் - (தக்ஷிணயனத்தி) லிறந்தாலென்க. சேயின்-குமரக்கடவுளைப்போன்ற.
௪௬. வருணன் சந்தனுராசனுகப்பிறந்ததலால் வருணனை வீடுமனுக்குத் தந்தையென்றார். மன்ற - தெளிவாக; புறநானூற்றுரையிற் காண்க.
௫௰. பாடு - இறப்பு. தருணம் - இளமை. விசயம்-வெற்றி.

வீட்டுமபருவம் முற்றிற்று.

# ஏழாவது துரோணபருவம்.

## பதினோராம்போர்ச்சருக்கம்.

௧. மாயம்-மாயை.
௪. சேதனம்-அறிவு.
௬. கேதனம்-கொடி.
௰௪. சல்லிய குமாரன் என்றது சல்லியனை.
௰௫. மோகரித்து-கர்ச்சித்து.
௰௮. சோமதத்தன்-சந்தனு சகோதரனாகிய

பாகிலிகன் மகன்.

உக. வில்லுக்கு விசயன் எனப்பெயர்பெற் றிருத்தலால் விசயனை வில்லியென்றாரென்க. ஐ நன் சிலை - அழகிய நல்ல வில்லென்க. துணிய-துண்டமாக.

உ௩. வீ - ஈண்டுப் புட்பபாணம். குழல் - சிகை.

உ௪. தகைய-தடுக்க.

உ௮. சித்திரபாநு - அக்கினி. மித்திரர் - சிநேகர்.

௩உ. உய-பிழைக்க. கிருதவன்மா-ஹிருதி கன் புத்திரன். ஹிருதிகன் யதுகுலத்தவனாகிய போசன் மகன். வாசுதேவனைப்படைத்துணை யழைத்த சருக்கம் ௰௮ - ஆங்கவியுரையிலும், அணிவகுப்புச் சருக்கம் ௰௧-ஆங்கவியுரையிலுங் காண்க.

௩௩. புண்ணியன்-தருமராசன்.

௩எ. செனு-உற்பத்தி; ஈண்டுப் பிறப்பிட மென்க. இதற்கு-இலக்கணகுமாரனை யகப்படுத் தினதற்கு. அனு-ஒப்பு. செற்றம்-சினம்.

௩௯. காப்பார்-தடுப்பார்.

௪௰. திகத்தராசன் - திரிகர்த்தமென்னுந் தேசாதிபதி, சுசர்மாவென்க. சஞ்சத்தகர் - இவர் திரிகர்த்ததேசத்திலிருக்கும் ஒரு பெருங் கூட்டத்தவராகிய வீரரென்க; இவர் போர் புரிவதன்முன் சபதமிட்டு அவ்வாறே முடிப்ப வர்; இவர் அறுபதினாயிரவர். மகத்திற் சனி-மகநக்ஷத்திரத்திற் புக்க சனி மிகத்துன்பஞ் செய்வானென்க; சுந்தரமூர்த்திநாயனாரும் “ மகத்திற்புக்கதோர் சனியெனக்கானாய் ” என்றார். தஞ்சைவாணன் கோவையில், “ அடையார்தமக்கு மகத்திற்சனியன்னசந்திர வாணன் ” என்றார்.

௪௧. தகைதல் - தடுத்தல். வெஃகுதல் - விரும்புதல்.

௪௪. விபுதர்-தேவர்.

௪௫. பாளையம்-சேனை.

# பன்னிரண்டாம்போர்ச்சருக்கம்.



௧. முனி - விசுவாமித்திர முனியென்க. ஆவம்-அம்புறாத்தூணி. சாபம்-முன்னது அகலி கைக்குக் கௌதமமுனிவனிடுசாபம், பின்னது மிதிலையிற் சனகன்வைத்திருந்த வில்லென்க.

௨. அல்-இரவு. மற்று-அசை. சொற்று - சொல்லி. அராபதம். வண்டு.

௪. பேரணி-நடுச்சேனை.

௫. நாரணகோபாலர் - நாராயணகோபலர் பதினாறாயிரவர்; இவர் கிருட்டிணனுக்குக்கோ வியரிடம் பிறந்தவர்; துரியோதனனுக்குத் துணைசெயவந்தவர். அறைகூவல் - போரவழைத்தல்.

௮. கூளி-பேய்.

௯. தடி-தசை. தலை-முதன்மை. சவுபலன்-சகுனி. குண்டலன்-ஓரரசன். தடி-வில்லுமாம்.

௰. வயப்பணை-வீரமுரசு.

௰உ. துன்முகன், துன்மருடன் - இவ்விரு வரும் துரியோதனன்றம்பியர். கவுசலர் - கோசலநாட்டரசர். நிடதர்-நிடதநாட்டரசர்.

௰௩. துருபதன் என்றது திட்டத்துய்மனை.

௰௪. சத்தியகேது-காசிராச வம்மிசத்தவன் விபுவின்றந்தை. உத்தமபானு - உத்தமோசா. ஓசம்-ஒளி.

௰௫. நடுத்தகைவின் வானவர்-நியாயகுணத் தையுடைய தேவர்.

௰எ. சாலம்-கூட்டம். காகளம்-காளம்.

௰௮. மதங்களேழு - சூதுபோர்ச்சருக்கம் எ௧-ஆங் கவியுரையிலறிக.

உ௧. உளைத்தல்-ஒலித்தல்.

உ௩. பதாகை-கொடி. மா-குதிரை. சதா வியிட-பழுதுபட.

உ௧. திட்டத்துய்மனுதி மால்பின்னனுதி யாக என்பது பாடமாயின், மால்பின்னன் சாத் தகியென்க.

௩உ. துரங்கம் - குதிரை. தாரை-ஒழுங்கு.

௩௩. முடியிழந்தகுறையுடம்பு என்றதனாற் கவந்தமென்க.

௩௮. பெருமன் என்றது கன்னனை. துணி ந்து-விற்கள்துணிந்து; என இசையெச்சமாக வருவித்துரைக்க.

௩௯. பதிட்டிதம்-நிறுத்தப்பட்டது.

௪௩. நொய்து-விரைவு. கழற்றினன்-வில கினன்; தன்வினை பிறவினையாக நின்றதென்க.

௪௪. முனிதல்-கோபித்தல். சலதம்-மேகம். சதமகன் சகாயன்-இந்திரனுக்குச்சகாயனாகிய பகதத்தன்; இவன் ராசதானி பிராக்சோதிஷம்

என்பர்.

௪௫. தவளம்-வெள்ளை. வாரணம்-பகதத்த னுடைய சுப்பிரதீகம் என்னும் பெயரை யுடைய யானை; ௫௨-ஆங் கவியிற் காண்க. மதனம் - கடைதல். விருது - வெற்றி. ஆழிமிசைச் சுத்தமாகவருமதகளிறு எனக்கூட்டுக; அது ஐராவதமென்க.

௪அ. பொலிவொடு-பொலிவால்.

௪௯. ஒசிதர-துவள.

௫0. மீள-மீண்டு. நிரை-வரிசை. உதைய-செலுத்த. கதையாற்புடைத்து எனமூன்று வது விரிக்க.

௫௨. மகரிகை - தந்தப்பூண்; ௬௨-ஆங்கவியிற்காண்க. அல-அல்ல, இது பாலிடமெங்கு மியலுமென்க. மருப்புநாலுமுளவெனில் — நான்கு கொம்புமில்லாத குறையொன்றிருக்கின்றது அவையுளவெனில் எனஎடுத்துரைத்துக்கொள்க. இபமெட்டாவன - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் என்பன; இவை முறையே குணதிசைமுதலான வெண் டிசையிலுள்ளன.

௫௫. மூளமட்க-போர்மழுங்க.

௫௬. முதலடியில் எண்பதினாயிரம் வீரரென்க; சஞ்சத்தகரிற் சிலரும் ஏனைவீரருமாக எண்பதினாயிரவரென்க. முரணற்றதிவண் - இவ்விடத்திற் போர்முடிந்தது.

௫௭. அரி-காற்று. விக்கிரமன் - ஈண்டுப் பராக்கிரமனாகிய பகதத்தன் என்க.

௫௯. மற்கடம்-குரங்கு நுழையூ-நுழைந்து. சிவம் - நன்மை. சவனம் - வேகம். கணைகள் வெட்டி, மூடுகி, கொத்தி, நுழையூ, உறுவிக்க வென்க. விசயனென்னும் எழுவாய்க்குப் பயனிலைவருங்கவியிற்காண்க.

௬0. மாசரம்விட்டு - பெரியபாணங்களை நீக்கி. அயில்-வேல். தமரம்-முழக்கம்.

௬௨. முழை-குகை. விசிறுதல்-வீசுதல். மகரிகைப்பணி - தந்தப்பூணாகிய ஆபரணம். பணை - கொம்பு. படுவித்த - இறத்தலைச் செய்தன.

௬௩. சக்கரதரன் - திருமால். உதவினன் அயர்வுற்றவுணர்வினலமென - மனக்கவர்ச்சியில் வந்துற்ற அறிவினலத்தைப்போலவுதவி செய்தானென்க. அயர்வு-மனக்கவர்ச்சி யென் பதனைப் புறநானூற்றுரையிற்காண்க.

௬௪. பருமித்தல்-அலங்கரித்தல். மருமம்-மார்பு. நிருமித்தல் - நியமித்தல். உயிர்கள் செய்வினைக்குத்தக்க பயன்தருமுதல்வனென்பார் கருமத்தின் முதலென்றார்.

௬௬. ரசதகிரி - வெள்ளிமலை. கரிதத்த - அப்பகதத்தன் வெள்ளையானை தாவிவிழவென்க.

௬அ. விருது - வெற்றி; விருது எடுத்துக் கூறுவாரை விருதென்றது ஆகுபெயர்.

௭0. சஞ்சத்தகர்-பதினொராம்போர்ச்சருக்கம் ௪0-ஆஞ்செய்யுளுரையிற்காண். விஞ்சைக் கடவுள் சிகரம் - வித்தியாதரருடைய வெள்ளி மலையென்க; இவர்மலை வெள்ளிமலையென்பதனை வேத்திரகீயச்சருக்கம் ௪௨-ஆங்கவியிற் காண்க.

௭௧. புங்கம்-பாணம். மதுகை-வலி.

௭௨. பின்னிட்டவர்க்குமுன்னிட்டான் — புறங்காட்டியோடினவர்களுக்குத் தான்முந்தியோடினனென்க.

௭௫. சரபம்-எண்காற்புள்; இது சிங்கத்தை வெல்லுவது. சக்கரபாணி-திருமால். பாறின-நீங்கின. ஓ-எதிர்மறை.

௭௭. ஆயோதனம்-போர்.

௭அ. விதித்தான்-பிரமன்.

௭௯. கோலாகலம்-பேரொலி.

அ0. மலைந்து - பொருது. திளைத்தல் - அசைத்தல்; புறப்பொருள் வெண்பாமாலையுரையிற்காண்க.

அ௧. பரிபவம்-அவமானம்.

அ௨. அஞ்சிப்புறந்தந்து என மாற்றிக்கூட்டுக. அஞ்சி என்பதற்கு தன்றாகமுமிவ்வாறுமோ என்றஞ்சி எனவுரைக்க. துரகம் - குதிரை.

அ௩. இரங்கா, அழா என்பன செய்யாஎன் னும் வாய்ப்பாட்டுவினையெச்சம்.

அ௪. ஏ-வினா. நிலையானது என்பது நிலையாகவில்லை என்பதுணர நின்ற குறிப்புரையென்க. கன்னப்பெயர்க்காளையென்றது அண்மைவிளி.

அ௬. ஓரஞ்சொல்லுவது - ஒருபக்ஷமாகப் பேசுவது.

அ௭. எனைப்போல வில்லாண்மையாவர்க்குமின்று என்று வஞ்சினஞ் சொல்லாமல் எனக்கூட்டுக. வம்மின்கள்-வாருங்கள்.

அ௯. சாதித்தல் - தொடங்கியதைச் சோர் வின்றி நிறைவேற்றல். சாதித்ததும் எவ்வாறிருந்தது என வருவித் துரைத்துக்கொள்க.

௯0. விந்தைகிரிகன்னி-கிரி-மலை. விந்தை கன்னி என்பன துர்க்கைக்குப்பெயர்கள்; விந்தியமலையிலிருத்தல்பற்றித் துர்க்கைக்கு விந்தியவாஸினியென்றும் ஒருபெயருண்டு என்றார்; மணிமேகலையுரையிற்காண்க. கரி-சாக்ஷி.

தன்மைக்குநிலையான - குணத்திற்கிடமாகிய இளையோனென்று நகுலசகாதேவரை.

கக. வாய்மை-சொல்.

கஉ. மகதத்தர்-மகததேசத்தார். காந்தார பதி மைந்தர் சுகூ-ஆங்கவியிற்காண்க. தனு வேதி-வில்லாயுதத்தையுடையவனாகிய விசய னென்க. சுகதத்தமுற - தந்தமக்குச்சுகமுற சுகம் என்பது சுக எனவும், தம் தம் என்பது தத்தம் எனவும் விகாரமாயின.

கரு. தேவராய்-(போரிலிறந்து வீரசுவர்க் கம் புகுகின்ற)தேவராகி. ஏக-அப்பாற்செல்ல. ஆடி - கண்ணாடி. மாணிக்கவணியாழிபோல் என்பது பாடமாயின் ஆழிசக்கரமென்க.

# பதின்மூன்றாம்போர்ச்சருக்கம்.



க. சங்கை - எண். யமபடர்-யமனேவல் செய்பவராகிய தூதர்.

உ. வியாளம் - பாம்பு. விஞ்ச-மிக. அவர் என்றது தருமன் முதலோரை.

ங. செயத்திரதன்சிரமா இலக்கணமைந் தன் முதலான காவலர் பற்பலரும் பேரணி நின்றனர் எனக்கூட்டுக. சிரமா-தலைமையாக. ஆக என்பது ஆவெனக்குறைந்துநின்றது. பே ரணி-நடுச்சேனை.

ச. அக்கரம் - அழியாப்பொருள், இவ்வா றன்றிப் பஞ்சாக்கரம், அஷ்டாக்கரம் முதலிய மந்திர அக்ஷரங்களென்பாருமுளர். ஆசுரர்-அசுரரென்க. எயில்-மதில். சக்கரயூகம்-சக்கர வடிவமாக வகுக்கப்படும் படைவகுப்பு. யகூ-ஆம் போரில் நேமியூகமென்பது மிதுவே.

ரு. துப்பு-வலி.

சூ. ஒரிருநாலுடையையிருபூமி-பதினெண் பூமி; அவை - நச்சுப்பொய்கைச்சருக்கம் ருய-ஆங் கவியுரையிற்காண்க. மானவரூதினி - மா னத்தையுடைய சேனை.

கூ. மல்லிகல் - இருசொல்லும் வலியைக் குறித்தது. கால் - காற்று. தாரை-வழி. கை-செயல்.

யக. உற்பலவாளி-நீலோர்பலத்தைப் போ ன்ற பாணம்; மதன் பாணமாகிய உற்பலம் போன்ற வடிவமும், தப்பாதுகொல்லுந்தொழி லுமுடைமையால் உற்பலவாளியென்றாரென் பர்.

யஉ. உந்திகள்-தேருருள்கள்.

யங. கோலொடு - கோலால். ஒடுகருவிப் பொருட்டு. கால்-தேருருள்.

யச. மன்குலவாதி-இராசகுலத்தின் முதன் மையுற்றவராகிய விசுவாமித்திரமுனி. அந்த ணனும் பெருமுனி - பாசுராமமுனியென்க. ஒருமுனி என்பது அகத்தியமுனியை.

யசு. முகமன்-உபசாரம்.

உக. கழல் - வீரகண்டை; அதுவீரத்திற் கும் வெற்றிக்குங் கட்டப்படுவது என்றார் புற நானூற்றுரையில். கழலின்மீது-(வலக்)காலின் மேலென்க.

உஉ. கனம்-மேகம். தூரியம் - வாத்தியம். கைவர - பக்கத்தில்வர. தினஞ்செய்நாதன் - சூரியன்.

உங. கோதை-கைத்தோற்கட்டி.

உச. மாதுலன்-மாமன். ஆதியிற் சக்கர யூகம் வகுத்தவன் இந்திரனென்பர் ஆதலால், வச்சிரத்தவனுரைசெய் சக்கரமாறிலாவணி யென்றார்போலும். பாற-நீங்க.

உகூ. சகுனிதிருமகன்-சகுனிபுத்திரர்களில் மூத்தவனாகிய உலூகன் என்க.

ஙய. துன்முகன்-துரியோதனன் றம்பியரி லொருவன்.

ஙஎ. நேமி - சக்கரயூகமென்க. வலீமுகங் கள் என்பது பாடமாயின், வலிமுகம்-குரங்கு, விகாரமாயிற்று. தன் முகம் இயல்பாயிருந்த தேனும் நார்முகச்செவ்விக்கு மாறுபட்டிருந்த லால் வலிமுகமெனப் பெயராயிற்றென்றார் நன்னூல் விருத்தியுரையில்.

ஙஅ. விண்டு-மலை. கண்ணிலன் என்றது துரியோதனனை.

ஙகூ. நபம்-ஆகாயம். உபரி-மேல். அடைய-எல்லாம். விபினம்-காடு.

சய. விந்து - விந்தராசனென்னும் ஓரரச னென்பர். பூரி-சோமதத்தன்மகன்.

சரு. அபரிமிதம்-அளவின்மை.

ருய. முடிதும்-நாமுமிறப்போம்.

ருக. பரிசனகுமாரன்-வீமன்.

ருசு. விரகு-சண்டுக்கபடம்.

ருஎ. தன்மகன் என்றது இலக்குமணகும ரனை. கொன்றொழிய-கொன்றொழிய.

௬௨. மொய் - திரட்சி. மெய்கணைய-சரீரனைய.

௬௬. உற்கை-தீக்கொள்ளி.

௭௨. வன்மிகம்-புற்று. முடி-கிரீடம்.

௭௩. உருமித்திரன் — இவன் சல்லியன் முதற்புத்திரன்.

௭௭. மாவிரதர்-மகாரதவீரர்.

௭௮. கெட்டவர்கள் - காணாதுபோனவர்களென்க.

௭௯. முன்பு-வலி. வெறி - மணம். கற்சக்கரமாக நடுவூர் - சக்கரவாளகிரிக்குள் ஆகாயநடுவிலூர்கின்ற.

௮௰. சடாதுங்கமௌவி - உயர்ச்சியையுடைய சடாமுடியென்க. புரகுதனன் - திரிபுரத்தையழித்தவன். நேமி-சக்கராயுகம்.

௮௩. பின் என்றது முதுகை.

௮௪. பணைமுழவுறழ் திணிபுயன் - பருத்த முழவையொத்த திணிந்தபுயத்தையுடையவன்.

௮௫. முத்திருக்குமிடத்திற்குக்கண்ணென்னும் பெயருண்மையாலீண்டு விழியென்றார். வெளிமுகடு - ஆகாயத்தின்மேலாகிய வண்டமுகடு. வீராட்டகாசமாதலின் முகடுடைப்பதோர் நகையென்றார். உளை-பிடர்மயிர்.

௮௬. மொகுமொகுத்தல் — ஒலிக்குறிப்பு ; உபயவோசை.

௮௭. ஞெலிமரம்-தீக்கடைகோல்.

௮௮. பவனன்-காற்று. வடவையின் - வடவா முகாக்கினியோடு. பவனம்-இடம்.

௮௯ அரணி-தீக்கடைகோல்.

௯௰. மகுடம்-மகுடம்.

௯௪. வகைகளாறு-காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன ; இவையுட்பகைகளென்க.

௯௫. உடற்றினார்-பிரயோகித்தார். பொருதாரெனினுமாம்.

௯௭. மனுகுலத்தரசன் என்றது கோசல நாட்டரசனை. கேகயன்-கேகயத்தரசன். மாகதக்குரிசில்-மகததேசத்தரசன்.

௯௮. துலை-ஒப்பு.

௯௯. இனைவரும் - வருந்தலில்லாத என்க. அவன் என்றது சகுனியை. பாலன் முனை வெரீஇ-அபிமனது போர்க்கஞ்சி.

௱௨. துறினன்-சிதறினன்.

௱௫. உன்னயப்புரவி என்பது பாடமாயின் உன்னயம் நாடுகரந்துறை சருக்கம் ௨௧-ஆங் கவியிற்காண்க. மூரி-பெருமை.

௱௬. பரிசை-கேடகம்.

௱௯. யோதனம் - போர் ; ௰௬-ஆம்போர்ச் சருக்கம் ௬௩-ஆங் கவியிற்காண்க. புரி - முன்னது செய்தல், பின்னது கட்டுதல். வரி-கட்டுதல். ஒல்-ஒலி.

௱௰௩. பேணார் — பகைவர். பெட்ப-மிக. கோள்-வலி, கொலையுமாம். புகர்வாளம் - அழகுடையவாள். புகர் அழகு என்பதனைச் சிலப்பதிகாரவுரையிற் காண்க. நாகர்-தேவர்.

௱௰௪. பின்னிரண்டடியில், குபேரன் புத்திரர் மருதமரமாயினகதையை யுணர்க.

௱௰௫. எல்-ஒளி.

௱௰௬. கையற-பண்டவகுப்பொழிய.

௱௰௮. பசுபதி-உயிர்கட்குநாயகனாகிய சிவபிரான். உருகெழும்-அச்சம்பொருந்துகின்ற.

௱௰௯. கரகம்-துளி.

௱௨௨. தொடைப்புடைமிடைநடை-துடைகள் மோதுகின்ற நெருங்கிய நடை. பிதிர் - பொடி.

௱௨௪. சரபம்-யானைக்குட்டி.

௱௨௫. சித்திரம் - புலி ; பலவிதவர்ணங்களுடைமையாற் புலிக்குச்சித்திரமெனப் பெயர் கூறுப. கதுவி-பற்றி.

௱௨௭. கழுதினம்-பேய்க்கணம். கரணம்-கூத்து. பவுரி - கூத்தின்விகற்பம். எஞ்சியிட்டன-குறைந்தன.

௱௨௮. தெறுதல்-ஈண்டு வருத்துதல். பொறையழிந்துகெட்டு - பொறுக்குஞ்சத்திகெட்டு. அழிந்துகெட்டு என்பது ஒருபொருளிருசொல்லென்க. வெருவு-அச்சம்.

௱௩௰. தரி-தங்கல் ; முதனிலைத் தொழிற்பெயர்.

௱௩௧. செயற்கை-வினை. வேறுவேறு என்பது வெவ்வேறு என வந்தது. விரகு-உபாயம். ஆம் என்பன அசைகளென்க; 'பணியுமாமென்றும்பெருமை" என்னுந் திருக்குறளிற் காண்க; அன்றி முன்னைய மூன்றும் ஈற்றயல் கெட்டுநின்ற செய்யுமென்முற்றாகவும், பின்னையவிரண்டில் முன்னது பெயரெச்சமாகவும், பின்னது அசையாகவுங் கூறலுமாம்.

௱௩௨. அந்தோ - இரக்கத்தினையுணர்த்துமொரு குறிப்புச்சொல். கூடகம்-மாயம்.

௱௩௬. ஈரிரண்டுபேர்-துஷ்ட சதுட்டமாகிய துரியோதனன், துச்சாதனன், கன்னன், சகுனியென்க.

௱௩௭. தாள்-முயற்சி.

௱௪௰. திகிரி என்றது சக்கராயுகத்தை.

௱௪௨. சங்கலார்-பகைவர்.

௱௪௩. என்னனை-என்னுடையவனை.

௩௪௫. தளம் - சேனை. என்று - சூரியன். அபிமனடுதலைக்குன்றை - அபிமனலடப்பட்ட தலைகளாகிய மலையை.

௩௪௭. நிகழ்வது யாவருமுணர்தலால் அதனையொழித்துப போனது வருவதெல்லா மென்றார்.

௩௪௮. விதித்தலைப்பட்ட-ஊழ்வினைவசத்தி லிறந்த. சுதன்-மகன். விளிவேன்-இறப்பேன்.

௩௫௦. வாளா-சும்மா; இது பயனின்மையை யுணர்த்துமோரிடைச்சொல்.

௩௫௨. அமம - கேள் என்னும்பொருளில் வந்த இடைச்சொல்.

௩௫௩. ஐயென,ஒய்யென-விரைய; இவை இடைச்சொற்கள். வேலை-கடல்.

௩௫௫. ஆர்த்து-அடித்து. கோடம்-ஆரவாரம். நித்திலம் - முத்து ; ஆகுபெயராய்க் கண்ணீரை யுணர்த்தியது.

௩௫௭. உணராதது என்றது - உணராது எனநின்றது.

௩௫௯. பாகலம்-யானைநோய் ; இது பத்து வகைப்படும் அவற்றுட் கூடபாகலம் வெளிக் குத்தோன்றாது மறைந்துநின்று விரைவிற் கொல்வது என வடமொழி யானைவைத்திய நூலிலுள்ளதென்பர். கோடிகூட என்று பாடங் கூறிக் கோடியென்பது நீட்டல் விகாரமெனக் கொண்டு வல்லியாலமைந்த மருந்துபொருந்த என்றுரைப்பர். கயம்-யானை.

௩௬௧. துக்காம்-இவ்வடசொற்குச் செய்ய வொண்ணாத தெய்வத்தன்மையெனக.

௩௬௮. கனுழி-கலங்கனீர்.

௩௬௯. கையற-இறக்க. பந்தனை-பந்தம்.

௩௭௧. பரியாமல்-அன்புசெய்யாமல். புந்தி-புத்தி.

௩௭௨. உம்மை-முற்பிறப்பு. அம்மை-வருபிறப்பு. இம்மை-இப்பிறப்பு. இரங்கல்-இரங்கற்க; எதிர்மறைவியங்கோள்.

௩௭௪. மகப்பிரிவு-புத்திரசோகம்; அன்றே-அப்பொழுதே. வல் விரைவு.

௩௭௫. ஊடு - ஏழனுருமெனக. மித்திரர்-சிநேகர். இது வேற்றுப்பொருள்வைப்பணி. சித்திரபாநு என அக்கினிக்குப் பெயருண்மையாற் சித்திரவில் என்றூரொளினுமாம். பாநு, வில்-ஒளி. இப்பொருட்கு ஓடு உருபிற்கிடப் பொருள் கூறுக.

௩௭௭. சுரம் - பாலைநிலம். முளிபாதவம் - காய்ந்தமரம்.

௩௭௯. உடற்றி-போர்செய்து.

௩௮௧. அபிமனை மாயப்போர் செய்து கொன்றமையாற் செயத்திரதனைப் பாதகனென்றான்.

௩௮௪. வினை-வஞ்சம். தினை-சிறுமைக்குக் காட்டுமோரளவெனக. "மனைவியுயிர்வீய நன்மகன் மனைவி கையாற் றினையளவு மோர்பொழுது சீவித்தவனுவேன்" என யாழ்ப்பாணத் துப் பிரதியொன்றிற் காணப்பட்டது ; இப் பாடத்திற்கு, மனைவி இறக்கப்பெற்ற ஒருவன் வேறு விவாகஞ்செய்யவேண்டும் ; அன்றேல் வானப்பிரஸ்தஞ் சந்நியாசங்களிலொன்றிற் சேர்தல் வேண்டும்; இவ்விரண்டுமின்றி மருமகளாலுபசரிக்கச் சீவித்திருத்தல் பாவமென்று தருமசாஸ்திரங்கூறலால், அக்கருத்துப்பற்றிப் பொருள்கூறவேண்டுமென்பர் ; அங்ஙனமாயினும்; இப்பாடம் சந்தப்பொலிவின்றாதலாலது பாடமன்றெனக.

௩௮௭. கடிகை - நாழிகை. துப்பு - வலி. அணிந்திடில்-அணிவகுத்திருந்தால்.

௩௮௮. ஏஞ்சில்-(அருச்சுனன் சபதம்)அழிந்தாலெனக.

௩௮௯. மகுடம் ஈண்டுச் சிரத்தினைக்குறித்தது.

௩௯௧. போகி-(ஆதிசேடனாகிய) பாம்பு. உயக்கம்-வாட்டம்.

௩௯௨. கன்னல்-சக்கரை.

௩௯௫. இருவருமொருவரே யென்றதனால் அரியுஞ் சிவனுமொன்றென்னும் அபேத சித்தாந்தங்கூறியதென்பர்; அவ்வாறன்றிக் கிருட்டிணன் உபமன்யுமகா முனிவர்பாற் சிவதீக்ஷை பெற்றுச் சிவோகம்பாவனையுற் றிருத்தலால் இருவருமொருவரேயெனக்கூறியதென்பர்; இக்கருத்துக்கியையப் பின் சிவாகம வுரையிற் சாத்திரனென்றும்,மாதவன் சிவனுருவமென் றுணர்ந்தென்றுங் கூறினமைகாண்க என்பர்.

௪௦௩. வயினதேயன் - விநதையின்புத்திரனாகிய கருடன். வச்சிரன்-இந்திரன்.

௪௦௫. ஆரதர்-அரியவழி.

௪௦௮. நந்தி-இவர் சிவகணத்தலைவராயுந் திருவாயில் காப்பவராயுஞ் சனற்குமாரர் முதலோர்க்குச் சகல வேதாகம புராணமுதலியவற்றை யருளினவருமாயுள்ளவர்.

௪௧௧. இரண்டென - துவிதமென. இருவருந் தம்முளத்துவிதமாய்க் கலந்திருக்கின்றனர் என்றபடியாம்.

௪௧௨. அங்கராகம்-மெய்ப்பூச்சு.

௪௧௩. கூறு-அமிசம். கொள்ளுமே-கொள்ளான் என்க. ஏ-எதிர்மறை.

௪௧௭. வீரன் என்றது கிருட்டிணனை.

பறையறைந்து - செயபேரிகையடித்து என்க.

உகக. கூறை-வஸ்திரம்.

உஉ0. சகதண்டம் - வடநூன்முடிபு. சகமாகிய அண்டமென்க. நித்தவிபூதி-நித்தியமாகிய செல்வம்.

உஉக. மாணுரு-மாட்சிமைதங்கிய வடிவம்; அது தெய்வத்தன்மையென்க. பிரமசாரியை யுணர்த்தும் மாணியென்னுஞ்சொல் மாண் என விகாரமாயினதென்பர்.

உஉரு. பதம்-வைகுண்டமென்க.

உஉஎ. மறம்-பாவம். வயிர்த்தவர்என்றது-விரோதிகளை. வஞ்சனேயோவிரகோ-வஞ்சனையாகுமன்றி அறிவாகாது. ஓ-முன்னது அசை பின்னது எதிர்மறை. மறநெறியன்று வயிர்த்தவர்சொல்வது என்பது பாடமாயின், மறம் வீரமென்க. விரல்-வெற்றி.

உங0. செம்மொழியற்றவன்-நல்வசனமிலனாகிய துரியோதனன். கேண்ம்-கேளும்; இது மகரக்குறுக்கம் வந்தசொல். புத்திரசோகத்தால் நோதரு நெஞ்சினனென்க.

உஙச. மகரமோதுங்கயம் என்றது கடலை. மகரம்-சுறுமீன். கயம்-நீர்நிலை. கையறுதல்-இறத்தல்.

உஙஎ. அரசன் என்றது துரியோதனனை. இது புகழ்வதுபோலப் பழித்ததென்க.

உஙக. ஈடுபடுத்துவேன்- வலியழிப்பேன்.

உச0. நிசா என்னும் வடசொல் நிசையென வந்ததென்க; இரா.

உசக. அறைகூவி-போரவழைத்து.

உசங. பதின்மூவாண்டு கழித்துவந்தால் நாடுதருவேனென்றது தவறினதை உரைதப்பினதென்றான்.

உசச. உயர்ந்தோரை அடிகளெனக் கூறுதல் மரபென்க; வாரணாவதச்சருக்கம் கூக - ஆங்கவியுரையிற்காண்க.

உசஅ. ஆனையுமடுகளிறு என்ற விசேடணத்தால் உதவிசெய்தாரையுங் கொலைபுரிவான் என்பது கருத்தாயிற்று. யானை ஆளைக்கொல்லுதலை "யானையறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என நாலடியாரிற்கூறலாற் காண்க. வேளைபுக்கவர்-ஆபத்துற்றவேளையிற் சரண்புகுந்தவர்.

உசக. ஆமளவும் - என்னுலாகுமட்டும். முற்றுவ-அடையும் வகைகள்.

உரு0. "சொன்னசொற்படி வெல்லலாமென்பது விதிக்குங்கூடுமோ" என்பது நிரைமீட்சிச்சருக்கம் அரு-ஆங் கவியிலுங்காண்க.

உருங. கோ-அரசர். கூறல்-கூறற்க. தாவலி. முதனிலைத்தொழிற்பெயருமாம்.

உருரு. தென் - குறுக்கல் விகாரமாயிற்று; வண்டு.

உருச. சாற்புயல்-சாற்காலத்திற் பெய்யு மேகம்; சரற்காலமாவது கூதிர்காலமாகிய ஐப்பசி, கார்த்திகை மாசங்கள். தனிதம் - ஈண்டு இடிமுழக்கமென்க. இது மறுபொருளுவமை.

உருரு. இரண்டாமடிக்கு ஒருவர்தான் வெல்வாரென்பது கருத்து.

உருஎ. தூதன் - கடோற்கசன். சேதனர்-அறிவோர்.

# பதினான்காம்போர்ச்சருக்கம்.



க. உரை-புகழ். மகோததியில் - (சிவபிரானுகிய) பெருங்கடலில். மேகத்தைக்குறிக்குங் காற் சிலை - மணிக்கற்கள். அம்பு - நீர். திருமாலைக் குறிக்குங்காற் சிலை-வில். அம்பு - பாணம் என்க. பற்குனப்பொருப்பு - அருச்சுனனுகிய மலை. இது சிலேடையுருவகம்.

உ. சாலை-யாகசாலை. வேலை-கடல். பணை-வாத்தியம்.

ங. ஆடகம்-பொன். பொருப்பு - (மந்தர) மலை. சந்தனம்-தேர். குடைந்து-ஈண்டு நெருங்கியென்க. கைவர-ஒழுங்காகவர. கை ஒழுங்கு என்பதனை மதுரைக்காஞ்சியுரையிற் காண்க.

ச. இராசமண்டலம்-இராச கூட்டம். பேரணியாக-பெரிய அலங்காரமாக.

கூ. தூசி-படைமுன்னணி. பேரணி-நடுச்சேனை.

எ. அணிகளைந்தைந்தால்-ஐந்தைந்து வகுப்பாக வகுக்கப்பட்ட அணிவகுப்பால். ஐவகை வியூகமாகிய - ஐந்துவகை வியூகமாக வகுக்கப்பட்ட. ஐவகையாவன - சூசிகாயூகம், சக்கரயூகம், பத்மயூகம், வியாக்கிரதுண்டயூகம், சகடயூகம் என்பர்; சூசிகாயூகம் - ஊசிபோல்வது. வியாக்கிரதுண்டயூகம் - புலிமுகம்போல்வது. இவ்வாறன்றிச்சகடம், பதுமம், கர்ப்பம், சூசி,

கூடம் என்பர். பார்க்கவன் - சுக்கிராசாரியன். சகடதுண்டத்து - சகடவியூகமுகத்தில். சகட வியூகமாவது - மேற்கூறிய ஐவகையூகத்தில் ஏனை நான்கையுந்தன்னுள்ளடக்கி முதன்மை யாயுள்ளதென்க; அச்சகடவியூகம் சதுரங்க சேனைகளை வண்டிச்சக்கரம்போலத் தோன்ற வகுத்து நிறுத்துவதென்பர்.

௮. மந்தணம்-ஈண்டு ஆலோசனை. அணிந்த விரகு - அணிவகுத்தவுபாயம். உரோடம்-கோபம்.

௯. சாதுரங்கம்-சதுரங்கம். குரம்பு - கரை. உழி-இடம்.

௰௧. ஈடு-வலி. அழிந்திடவிசயனுலழிய - தானைகாவலன் துரோணன். உடன்று - பொருது.

௰௫. பொழுதுசென்றது என்றது குறிப்புரையாக இங்குச்செய்யும்போரை நீக்குகஎனக் கூறியதாகக்கொள்க.

௰௮. ஈசன் - சகல ஐசுவரியமுடையவனுகிய சிவபிரான். காம்போசன் - காம்போச தேசத்தரசன் ; இவன்பெயர் ஜலசந்தன் என்பர். பாசநாம வணி-முற்கூறிய ஐந்தனுளொன்ருகிய சூசிகாயூகம்; அது சேனையை ஊசிபோலொழுங்காக நிறுத்துவதென்பர். பாசம் - ஊசித்துளை என நிகண்டிற்கூறலால் ஈண்டாகு பெயராய் ஊசியையுணர்த்தியதென்க.

௨௰. கருதி என்பதனை மேற்கவியில் உரை செய்தான் என்பதனேடு முடிக்க. விலங்கி-குறுக்கிட்டு. விடதன்-ஓரரசன். சுதக்கணன்-காம்போசராசன் மகனென்பர். அவந்தி - ஒரு தேசம்.

௨௩. இலக்கம்-எண். உலக்கவிட்டு-அழியச் செய்திட்டு. அளக்கர்-கடல். உலம்ப-ஒலிக்க. கலம்-மரக்கலம்.

௨௪. விதி-தநுர்வேதவிதி. சமம்-போர்.

௨௫. விடங்கு-அழகு. விடங்கொள்வாளிநஞ்சூட்டப்பெற்ற பாணம். மடங்கல்போ விடிக்க எனக்கூட்டுக; மடங்கல்-இடி. இடிக்க-ஒலிக்க.

௨௬. புதைந்து - புதைய எனத்திரித்துரைக்க. அலம்-சஞ்சலம்.

௨௮. வருணன் மகன் சுதாயு என்க.

௨௯. செறுவில்வித்த-வயலில்விதைத்த.

௩௨. மொகரித்து-உக்கிரங்கொண்டு. தூர காரியாதலால் - (கிருட்டிணன்) மேல்வருங் காரியமறிந்து செய்பவனுதலாலென்க. மாகம்-ஆகாயம்.

௩௩. அடுக்கு உவகைபற்றி வந்ததென்க.

௩௬. யோனிகள் - பிராணிகள். முதல் - மூலம். செறிந்தவர்-அடைந்தோர்.

௩௭. கெதாயு - அழிந்துபோன ஆயுளுடையவன். இது வேற்றுமைபபொருள்வைப்பணி.

௩௮. ஆயிரம்புயத் தருச்சுனன் — கார்த்த வீரியார்ச்சுனன். ஆழி - (திருமால்) சக்கரம். ஆயிரம்புயத்தவன் என்றது வாணுசுரனை. ஆடல்-வெற்றி. ஆயிரவாகு-ஓரரக்கனென்பர்.

௩௯. ஆயிரங்கணன்மைந்தன்-அருச்சுனன். மறை-மந்திரம்.

௪௰. நின்றது, நின்ற என இறுதி விகாரமாயிற்று. ஒருதனு-அருச்சுனன் ஒருவில்.

௪௧. அலி-அலாயுதனுகிய பலராமனென்க. முகம்-முன். அங்குலி-கைவிரல். கால்பொர-நுனிவளைந்து பொருந்த. சிலீமுகம் சிலிமுகம் என நின்றது; பாணம்.

௪௩. அருச்சுனம் மூன்ருமடியில் சுத்தமென்றும், நான்காமடியில் மருதமரம் என்றுங் கொள்க.

௪௪. பணிக்குலம் என்றது ஆதிசேடனையும், அஷ்டநாகங்களையும்.

௪௫. பரிதி - முன்னது பரிவேடம், பின்னது சூரியன். அருச்சுனனுக்குச் சூரியனையும் வளைந்த வில்லுக்குப் பரிவேடத்தையு முவமையாக்குக.

௪௬. காவணம்-பந்தல்.

௪௭. நவகதி - குரங்கு, வேங்கை, யானை, நாய், ஆடு, சிங்கம், நரி, சரபம், முயல் என்பன ; திருவிளையாடற்புராணம் நரிபரியாக்கிய படலம் ௬௰ - ஆங் கவியிற்காண்க. உறையிடுதலாவது உலகிற் பொருள்களை அளவிடுங்கால் ஞாபகத்திற்காக ஒவ்வோர் பெருந்தொகைக்கு ஒன்ருகவைத்திடுமோரிலக்கக் குறிப்பென்க. ஓ - எதிர்மறை. அநேகநாள் என்றது பதின் மூன்றுநாளை.

௪௮. சிலைமணி- வில்விற்கட்டியிருக்கின்ற ஒலிமணியென்க.

௪௯. அரவுடையான் என்பதற்கு அரவெழுதிய கொடியனுகிய துரியோதனனென்க. ஆயோதனம் - போர் ; இது ஆகுபெயராய்ப் போர்க்களத்தையுணர்த்தியது.

௫௰. முருகார்-தேனையுண்ணுகின்ற. பின்னிரண்டடிக்கு — பிராமணர்வேதத்திற் கூறிய காயத்திரி மந்திரத்தைக்கொண்டு காலைமாலையாகிய இரண்டு காலமு மும்முறைகையால் விடப்பெறும் அர்க்கியநீரை இருமுறையாகவும், ஒருமுறையாகவும விடப்பெறுந் தானத்தைச் சூரியனடைந்தானென்க. அத்தானம் -

உச்சியென்க.

௫௧. நுகம் - நுகத்தடி. உரவாவிடில்-வலி கொள்ளாவிட்டால். மறைவருணச்சரவாய்வர-மந்திரத்தை வருணாஸ்திரத்திற்பொருந்த.

௫௨. கின்னரபபறவை ஆணும் பெண்ணு மாகக் கூடியேயிருப்பதனாற் கின்னரமிதுன மென்றார்; திருவிளையாடற்புராணந் திருமணப் படலத்திற் கின்னரமிதுனமெனச்செல்வார்" எனககூறுமாறுகாண்க.

௫௩. போதா-பெருநாரை, நேமி - சக்கர வாகப்புள். புளினம்-மணற்குன்று.

௫௪. உலம் - திரண்டகல். மாமணி - நீல மணி. வுள்-வலி, வளம். விசி-கட்டு.

௫௭. எரியோடியபுரி வெளித்தோற்றத் திற்கு புரியாகத் காணபபட்டு உள்ளீடின்றி யிருக்குமென்க. புரி-ஈண்டு வைக்கோற்புரி.

௫௮. அதிரேகம் - அதிசயம், மிகுதி. துச் சளை-திருதராட்டிரன் மகளென்க.

௬௪. தமர் - தம்மவராகியவுறவினர். என-என்று (விதுரன் நீதி) கூற.

௬௬. அங்கரா - தேவகுருவான வியாழன் றந்தை; அங்கிரஸ் என்பது அங்கரா எனத் திரிவுற்றுவந்ததென்பர். இதிற்கூறிய கவசத் தின் வரலாற்றின்விரிவை முதனூலிற்காண்க.

௭௪. பவுரிவருதல் - ஈணடு மண்டலமிட்டு வருதலென்க. நிரைமீட்சிச்சருக்கம் ௬௮-ஆங் கவியிற் காண்க.

௭௬. எணிலம்-வலியுடைய போர்க்கள மென்க.

௭௭. சூறியிட்டனன் - வளைந்திட்டான். சுழல்காற்றுக்குச் சுறையென்னும் பெயருண் மையால் சூறுதல்-வளைதல் எனக.

௮௧. ஆதபததிரம்-குடை.

௮௨. இராசசூயச்சருக்கம் ௫௮-ஆங்கவியிற் கலிங்க மெழுவிதமெனக் கூறலால் கலிங்கதே தேசத்தரசர் பலரெனக்கொண்டு ஈண்டுக் கலிங்கர் பலரென்றார். கிருதவன்மனைக் கிருத னென்றார். சேதிதேசத்தரசனை-சேதிவித்தக னென்றும், பூரிசிரவாவைப் பூரியென்றும் கூறினரென்க.

௮௩. கன்பந்தி-மேகவரிசை. ௯௧-ஆங்கவி யில் எழுதட்டிரதமெனக் கூறலாற் கனபந்தி நிகர்தேரென்றார் என்க. தரணிமண்டலதுரந் தரன்-பூமண்டலமாகிய பாரத்தைத்தாங்குபவ னென்பது பொருளாகக் கொள்க.

௮௭. கோமணிக்குரல் - பசுக்களின் கழுத் திற்கட்டிய மணியோசை. 'வலமபுரிவலம்புரி யே' என்னும் பாடத்திற்கு வெற்றியைச்செய் கின்ற வலம்புரிச்சங்கென்க.

௮௯. நரகன்-நரகாசுரன்.

௯௰. நூறுபட்ட மகவின்றலைவன் என்றது துரியோதனனை.

௯௧. பெரும்பகழி - ஆறு பத்து இருபது ஐம்பது ஆகவிட்டென்க. பை-படம்.

௯௩. அம்பரம்-கடல்.

௯௭. கூய்-கூவி; இது செய்தெனெச்சம்.

௱௧. ஆதிக்கேழல்-திருமாலாகிய வராகம்.

௱௨. பரித்தேரன்மிக - சாத்தகி போரின் மிகுந்துவரலால். நூறு-பகையை அழிக்கின்ற. பன்மகர் ஆயிரவர்-பிள்ளைகள் பல்லாயிரவரும். நூறாயிரவர் - லட்சயாதவவீரரும். அழிந்தார்-கேடுற்றார். உரிமைபற்றித் தமையன் பிள்ளை களைச் சாத்தகி பிள்ளைகளாகக்கூறினார். மகார் மகர் என நின்றதென்க; துரியோதனனுக்குத வியாகக் கிருட்டிணன் தனக்குப் பதினாயிரங் கோவியரிடம் பிறந்த பிள்ளைகளாகிய நாரா யணகோபாலரையும், பல யாதவ வீரரையும், இவர்களுக்குத் தலைவனாகக் கிருதவன்மாவை யும் விடுத்தமையால் மேற்கவியிற் கிருதவன் மாவையும், இவ்விரண்டடியில் அவரிருவகை யினரையுங் கூறினரென்க. மன் - மிகுதி. வீரன்-அச்சாத்தகி. மிசை - மேலிருந்து என வருவித்துரைக்க.

௱௪. ஈட்டம் - கூட்டம். வேட்டம்போன-வேட்டைக்குச்சென்ற.

௱௰௨. பொம்ம-பொலிவாக.

௱௰௪. விலங்கினார்-குறுக்கிட்டவர்.

௱௰௬. முல்லை முதலிய ஐவகையரும்பின் வடிமாயுள்ள பாணமென்க. பல்லம்-பாணம்.

௱௰௭. இதிற்கூறிய இருவரும், வருங் கவியிற்கூறிய மூவரும், அதன் பிற்கவியிற் கூறிய முப்பதின்மருந் துரியோதனன் றம்பிய ரென்க.

௱௰௯. சூரன் மெய்த்துணையாகிய முப்பது குமாரர்களெனக் கூட்டுக. சூரன் என்றது துரி யோதனனை.

௱௨௰. சடக்கென-விரைய.

௱௨௪. நாகவிந்தம் - விந்தமலை. பார்-தேர்ப் பலகை. உருள்-தேர்ச்சக்கரங்கள்.

௱௨௫. அந்தகன் - பிராணிகளுக் கழிவைச் செய்பவனாகிய யமன். கடலூழியும் - கடலுங் கற்பகாலமும்.

௱௨௭. மாசுணம் என்றது ஆதிசேடன் முதலிய பாம்புகளை.

௧௨௮. விஞ்சை-வித்தை. தாரை-ஈண்டுக் கதியென்க. நீபம்-கடம்பு செந்நீர்-இரத்தம்.

பூரம்-அவ்விரத்தப்பிரவாகமென்க.

௱௩௰. விடசேனன்-இவன் கன்னன்மகன். அவன் என்றது வீமனை. இவனேறி - கன்னனேறி.

௱௩௨. மதுகைடவரிருவர்-இவ்வசுரர் ஆதியிற் றிருமாலை யெதிர்த்துப் போர்புரிந்திறந்தவர்கள்.

௱௩௫. இரண்டாமடியில், ஒத்தன-பொருந்தின. குருநாடன் என்றது வீமனை. வலியினாற் குருநாடன் காற்றையொத்தனன் என்றும், சினத்தினாற் கதிரவன்றிருமைந்தன் கூற்றையொத்தனன் என்றும், கூட்டுக. பிறப்பிலே துவக்குளோர் குணங்களுங் கொள்ளாரோ - பிறப்பிலே சம்பந்தமுள்ளவர்கள் (அச்சம்பந்தமுடையார்க்குரிய) குணங்களையுங் கொள்ள மாட்டாரோ கொள்ளுவரென்க. ஓ-எதிர்மறை. காற்றின்மகன் வீமனாதலாலவன் வலிகொண்டவன் போலானானென்றும், யமன் றம்பி கன்னனாதலாலவன் கோபத்தைக்கொண்டவன் போலானானென்றும் பின்னிரண்டடியின் கருத்துவிளங்கியவாறுகாண்க. இது வேற்றுப் பொருள் வைப்பணி.

௱௩௬. ஆறல் வெஞ்சமம்-நீதிவழியல்லாத கொடும்போர்.

௱௩௯. தினமுந்தேரிலேறி வருதலுண்மையாற் சூரியனைத் தேரவன் என்றார்; அன்றித் தேர்ப்பாகனென்பாருமுளர். தேர்வாசி பாகன் அங்கமாதலால் அவற்றின்வினையை அங்கியாகிய கன்னன்மேலேற்றி ஓடலுற்றனன் பன்பதனோடு முடித்தார்.

௱௪௧. தோமரம்-கைவேல். இசை - உவமவுருபு. கோள்-வலி.

௱௪௪. கொடுவுரைக்கணை - கொடியசாபச் சொற்போன்ற பாணம்.

௱௪௫. என்றான் - என்று கூறினான் வீமனென்க. இது வேற்றுமைப்பொருள் வைப்பணி.

௱௪௮. மூரி-வலி. என்ப-அசை.

௱௫௰. சகலம்-துண்டு.

௱௫௧. அன்னை - காந்தாரி. மகுடம் ஆகுபெயராய்த் தலையையுணர்த்தியது. தடிந்தது-அறுத்தது,

௱௫௨. கன்னமறை - மிகுதியாக மோதுகின்ற; கனம் கன்னம் என விகாரமாயிற்று. வென்று - வெற்றிகொண்டு. இகல்மேவு நகமென்க. இகல் - வலி. ஆவி அறவென்க. துரியோதனன்றீச்செயற் குடன்பட்டிருத்தலாற் கன்னனைப் பாவியென்றார்.

௱௫௩. சாதம்-பூதம்.

௱௬௩. பச்சிளமுடை-பசியதயிர் நாற்றம். பசுமை ஈண்டுக்குளிர்ச்சியென்க. பாடி-ஆயரூர்.

௱௬௫. அயம் – இரும்பு. இரதம் - இரசகுளிகை. சிவஞானசித்தியார் பதினொராஞ்சூத்திரம் பத்தாங்கவியிற்காண்க. நாள்செய்வான்-சூரியன்.

௱௬௬. சமந்தபஞ்சகம்—இது திரேதாத்துவாபரயுக சந்தியிலே கர்வங்கொண்டிருந்த க்ஷத்திரியரையெல்லாம் பரசுராமமுனி கொன்று அவர் குருதியை ஐந்துதடாகங்களி னிறைத்து அதனாற் பிதிர்தர்ப்பணஞ்செய்தது. சமந்தபஞ்சகமெ எனப் பெயராயிற்றென்க; பின்னர் அவ்விடங் குருக்ஷேத்திரமெனப்பெயராயிற்று. உடற்றல் - பொருதல். செயத்திரதன் பிதா விருத்த க்ஷத்திரன்.

௱௭௰. கன்னசவுபலர் – உம்மைத்தொகை. பனைத்தனைப்போழ்து- பனையளவு தூரமான இடமுள்ளபொழுது.

௱௭௧. பேதித்தல்-மாறுபடுதல். பெரியோர் என்றது கிருட்டிணன் முதலாகிய பெரியோர். பேதித்தல் துரியோதனன் கொடுமைக்கு மாறுபடுதலென்க.

௱௭௬. இருடிகேசன் - திருமால்; இந்திரியங்கட்குத் தலைவன் என்பர். அரிநாதம்-சிங்கநாதம்.

௱௭௮. இடிம்பன் மருமகன்-கடோற்கசன். திருமகன் என்றது அக்கடோற்கசன் மகனாகிய அஞ்சனபன்மனை.

௱௮௰. வேகித்து-விரைந்து.

௱௮௧. உரு-அழகு.

௱௮௪. வாள்-ஒளி.

௱௮௫. இராகம்-செம்மை. தகல்-தகுதி.

௱௮௬. அரவெழுந்து-ஆயிரமுடிகளின் மணியொளியுடன் ஆதிசேடனாகிய பாம்பு மேலெழுந்தென வருவித்துரைக்க. தீபகாளம்-தீபகலங்கள். தாரை-ஒருவகையூதுகருவி.

௱௮௮. சதாநிகன்-இவன் விராடன் மகன். வல்லியம்-புலி. புரை-ஒத்த.

௱௯௧. வாளம்-வட்டம். கோளம்-வட்டம். முருக்கி-அழித்து. தூளம்-துகள்.

௱௯௪. அலாயுதன் - இவன் ஓராக்கர்பதி; கலப்பையாயுதமாகவுள்ளவன்; என்று பொருளாம். இருள்கங்குல்-வினைத்தொகை.

௱௯௬. பணைத்து-பூரித்து. வயம்-வலி.

௱௯௭. நிசாச்சரர் - இதிற் சகரவொற்று விரித்தல் விகாரம்.

௬௧௯. அருக்கனை மறைத்தவர் என்றது கிருட்டிணனை. மைத்துனர் - திட்டத்துய்மன் முதலோர். குமரர் - கடோற்கசன்முதலோர். தூர்த்தன் என்பதனைத் தூருத்தனென்றுர்.

௬௨௦. ஓச்சல் - எறிதல். இலக்கம் - எண். கோத்திரம்-மலை.

௬௨௧. முதலடி அசுவத்தாமனைக்குறித்தது. கோத்திரி - குலமுடையவன். பரி - அசுவம். சுடர்-பிரகாசம்; தாமமெனினுஞ் சுடரெனினு மொக்கும். பரத்துவாசமுனி மகன் துரோணமுனி, துரோணமுனி மகன் அசுவத்தாமன் என்றறிக. பாரத்துவாசன் என்பது பாரத்துவசனென விகாரமாயினது. எரித்தலை - எரியைப் போன்ற செம்மயிர் என்க. தலை-ஆகுபெயர்.

௬௨௨. சிலோச்சயம்-மலை. கடகம்-அண்ட முகடு. விபத்து - ஆபத்து. வெருவுதாக்கின - அச்சமிகப்பெற்றன. அமரராகிய ஆத்தியர் என்க; ஆதித்தியர் என்பதனைச் சந்தநோக்கி ஆத்தியர் என விகாரமாக்கினர் ஆதித்தியர்-அதிதி மைந்தர்.

௬௨௩. அணுவின் — அணுவைப் போல. மதன்-செருக்கு; னகரம் போலி. ககனம்-ஆகாயம். புடவி-பூமி. துணி - துண்டம். துவக்கு-தோல். பழு-விலாவெலும்பென்க.

௬௨௪. சிலமணித்தர் என்றது இராமலக்குவரை. ஆய்த்திலன்-ஆயினனிலன்; இதில் துச்சாரியையென்க. இருவருடனெதிர்த்து வென்று சீதையைக்கவராது மாரீசனைவிடுத்து வஞ்சித்துககவர்ந்தமையால் இவ்வாறு கூறினுரென்க. எனைப்பலர்-எத்தன்மையான பல வரக்கரென்க.

௬௨௫. புள்-வண்டு.

௬௨௬. தெறும்-கொல்லும். உந்த-இந்த.

௬௨௭. உலப்பு-முடிவு.

௬௨௮. இது வேற்றுப்பொருள்வைப்பணி.

௬௨௯. பூத்து - பொலிவுற்று. அகிக்குலம்-ஆதிசேடன்முதலிய நாகங்கள். அகிலமும் - உலகமுழுவதும் அகிமுதலியன பாரங்குறைய இளைப்பாறுதலாற் புகழ அகிலமுந் தாங்குகிறவன் எனச்சிறப்பித்து கூறினுரென்க. இரண்டாமடியில், உம்மை முன்னது முற்று, பின்னது உயர்வு சிறப்பு. சேத்து-செந்நிறம்; பிங்கல நிகண்டிற்காண்க.

௬௩௦. துனை-விரைவு. விறலோர்என்றது பாண்டவர்முதலோரை. தூக்க-தூரத்துதலால். ஆசறை-முடிவில். ஆசறு - பகுதி. ஐதொழிற்பெயர்விகுதி.

௬௩௧. அல்-இரா. நாகாலயம்-மேருகிரி. பிறங்கல் - மலை. இது தற்குறிப்பேற்றவணி. சூரியன் இரவிற்றன்கிரணங்களை அக்கினியில் விடுத்துப் பின்னுதிக்கும்போது வாங்கிக்கொள்கின்றுன் என்பது நூல்வழக்கிற் காண்க.

# பதினைந்தாம்போர்ச்சருக்கம்.

௧. சித்து-அறிவுடையதாகிய பசு. அசித்து அறிவிலாததாகிய பாசம். ஈசன் - பதி. தத்துவம்-உண்மைப்பொருள். புரோகிதன் - எந்தக் கருமங்கட்குமுன் வைக்கப்படுபவன். குருகையாதி-திருக்குருகூரிலுதித்த முதல்வராகிய சடகோபர்.

௩. சாபநிலைநாலும் வல்ல எனக்கூட்டுக; வில்விற்சாம் விடுதற்குரிய நிலைநான்குந்தேர்ந்தனென்க. நாலுபாகம்-சதுரங்கவகை. சிரங்களாதலைமையாக. நாலுகூறுசெய்து-தங்கள்சேனையை நான்குபங்குசெய்து.

௪. வாலவீமன்-ஓரரசன்; சூலபாசபாணி என்றது யமனை. ஆலகாரம்-வடசொற்றிரிபு; விடம்.

௬. விஞ்சை-வித்தை. பதினொன்குவித்தை-வாரணவதச் சருக்கம் ௩௩-ஆங்கவியுரையிற் காண்க.

௮. தன்மருகனென்றது நகுலனை. மாளவன்-மாளவதேசத்தரசனுகிய இந்திரவன்மா. அநந்தசாயியிளவல்—ஆதிசேஷசயனத்தனுகிய கிருட்டிணனது தம்பியாகிய சாத்தகி.

௰. அவ்வருதினி என்றது துரியோதனன் சேனையை.

௰௨. உம்பர்-உயர்ச்சி. துருவன்-சுவாயம்பு மனுவின் புத்திரன்; இவன் றவம்புரிந்து சகல கிரக நக்ஷத்திரங்களையுஞ் செலுத்தும்படியாகிய பதவியை அடைந்திருப்பவன்.

௰௩. மகம்-யாகம். அத்திரி, குச்சன், வசிட்டன், பிருகு, கௌதமன், காசிபன், அங்கிரா என எழுமுனிவர் என்றுர் காஞ்சிப்புராணஞ் சத்ததானப்படலத்தில். ஈண்டு அத்திரியை நீக்கி மரீசியாதி யென்றுர்; இவ்வாறன்றி வேறுங்கூறுவர்.

௰௬. தூ-பரிசுத்தம். சோமியம் - ஸௌமியம் என்னும் வடசொல்லின்றிரிபு. சோதிச் சோமியம்-சோதிவடிவாகிய கடவுளையடைதற்குரிய மனவொடுக்கமென்பது கருத்தாகக் கொள்க. யானம்-வாகனம்,

௰௭. நின்றோனென்பது துரோணமுனியை. முன்னர்-முதற்போர் தொடங்கும் அக்காலத்தில். வார்த்தை - தன்னைக்கொல்லு முபாயவசனம். மாடை-பொன். சொற்றவவதி-அம்முனிவன் சொன்ன காலவெல்லை.

௰௮. கடல்வடிம்பலம்பநின்ற கைதவன் - கடலானது தன்காலிளிம்பலம்பும்படியாக நின்ற பாண்டியன்; திருவிளையாடற்புராணங் கடல்சுவற வேல்விட்டபடலம் ௰௪-ஆங்கவியில் உக்கிரகுமார பாண்டியன் கடலிலே வேலை விடுத்தகாலத்தில் அக்கடல் வற்றி அவன் கணைக்காலின் மட்டதானது எனக்கூறுதல் காண்க. வடிம்பு என்றது காலிளிம்பென்க. புறநானூறு ௯-ஆங்கவியுரையில் "நெடியோன்" என்றதற்கு முந்நீர்க்கண்வடிம்பலம்ப நின்றோன் என்பது கருத்தாகவுரையிட்டார். மதுரைக் காஞ்சியுரையில் " நெடியோன் " என்றதற்கு வடிம்பலமப நின்ற பாண்டியன் என்றார். நளவெண்பாவில் "ஆழிவடிம்பலம்ப நின்றானும்" என்றார். இங்ஙனங் கடல் தன்கால் விளிம்பலம்ப நின்றநிலையினையே பலருங்கூறியிருத்தலாற் கடல் தன் வேலினுனியைக் கழுவநின்றவன் எனப்பொருள்கூறுதல் பொருத்தமின்மையறிக. அரசருள் முன் ஒருவன் பெற்றிருந்த சிறப்பை உரிமைபற்றி அவன் குலத்துள் மற்றொருவனுக்குமேற்றிக்கூறுதல் நூல்களின் மரபென்க. திட்டத்துய்மன் றூரத்திலிருந்தமையாலவன்பாற் சொல்லுமாறு பாண்டியனிடத்திலோதியென்க. அவன்மேலேவி - துரோணமுனிமேற் போர்புரியவேவி. வடு - குற்றம்; பிங்கலநிகண்டிற்காண்க. ஓதி-ஞானமெனினுமாம்.

௰௯. மாளவக்கோனாகிய இந்திரவன்மாவென்க. இவன் யானையின் பெயர் அசுவத்தாமாவென்க.

௨௧. வையினால்-கூர்மையோடு. கையறல்-சாதல்.

௨௩. வெள்ளில் - விளா. என்ப மாது ஓ-அசைகள்.

௨௪. உம்மை - முற்பிறப்பு. இம்மை-இப்பிறப்பு. இயற்கை-தன்மை. விபத்து-ஆபத்து. மெய்ம்மையே - உண்மையாகவே. பொய்ம்மையும் வாய்மையிடத்த என்னுந் திருக்குறளைக் குறித்துக்கூறியது காண்க.

௨௬. போதம் - ஈண்டுத் தத்துவ ஞானமென்க. நிற்பானாகிய துரோணமுனியென்க. வாரற-நேர்மைமிக. அசுவத்தாமா இறந்தமை சிலேடையாகப் பொருள்படக்கூறலாற் பிழையறப் பேசுவானென்றார்.

௨௭. அத்தனே-குருவே. வீரகு-உபாயம்.

௨௮. போதிலான்-ஆயுட்காலமில்லாதவன். போலும்-அசை. இனைதல்-வருந்துதல். அவா வற்றமையால் இனைதலின்றி நின்றானென்றார். ஏதிலான்-அயலான்.

௨௯. நாளம் - தணடு. முனி என்றது பிரமனை. பினாகபாணியாகிய கிரீசனென்க. பினாகம்-சிவபிரான் வில்லின்பேர். வீரனாகிய திட்டத்துய்மன் என்க. பிரமன் நடுத்தலையைச் சிவபிரான் கிள்ளினாற்போல துரோணமுனிவரைத் திட்டத்துய்மன் றுணித்தலால் அவனுக்குச் சிவபிரானை யுவமைகூறினர் என்க. பிரமன்றலையைக் கிள்ளியகதையைக் காஞ்சிப்புராண முதலியவற்றிற் காண்க.

௩௰. வாசபதி - வடசொற்றிரிபு; வாக்குக்குத் தலைவனாகிய வியாழன். கெட்டது-ஓடிப்போனதென்க. கட்டு-உறுதி.

௩௩. சொல்வளையா-சொல்வழுவாத.

௩௪. தெய்வப்பாகனாகிய மேகமேனியன் என்க. பகடு-யானை. மாருதிமைந்தன்-வீமனாகிய வலியோன்.

௩௭. கார்கோள் - கடல். ஏற்றரி - ஆண்சிங்கம். குவிந்தகையைக் கரமுகுளமென்றார். முகுளம்-அரும்பு.

௪௰. மூச்சு - வீமன் சுவாசக்காற்றென்க. அப் பெருமன்வாளியென்றது நாராயணாஸ்திரத்தை. படாததுண்டோ - துன்பப்படாதது இல்லை. ஓ-எதிர்மறை.

௪௧. தாள்-முயற்சி. விதி - வினைப்பயன் செய்தவனையேசென்று அடைதற்கேதுவாகிய நியதி. சுராரி-தேவர்கட்குப் பகைவனாகிய வாணாசுரன்; இராவணனுமாம்.

௪௨. மிதியடி-பாதுகை.

௪௪. வரத்தினால் - (யாகசேனன் பெற்ற) வரத்தினால்.

௪௫. மன்ற-நிச்சயமாக; தெளிவுபொருட்குவதோரிடைச்சொல். செற்றல் - அழித்தல். என்று-சூரியன். இது தற்குறிப்பேற்றவணி.

௪௯. அந்தன் - குருடனாகிய திருதராட்டிரன். யாவும் வினைசெய்து - முன் போர்த்தொழில் யாவுஞ்செய்து. மந்தணம் - ஆலோசனை. புரை-குற்றம்.

௫௰. அரவு என்றது ஆதிசேடனை.

துரோணபருவம் முற்றிற்று.

# எட்டாவது கன்னபருவம்.



## பதினாறாம்போர்ச்சருக்கம்.

உ. கையற்றார்-இறந்தார்.

௪. கற்கி-குதிரை.

௫. வேறும் - வெல்வோம். அம்ம - வியப்பிடைச்சொல், அசையுமாம்.

எ. ஆழி - யானைக்கைந்நுனி. புகர்-புள்ளி. மகரிகை-பூண்.

அ. ஓடை-பட்டம். ஆலவட்டம் - விசிறி. தொழில்-சித்திரத்தொழில். அங்குலமொத்து. உத்தமயானைக்குரிய அங்குலமமைந்து. மத்தகம்-தலை. மேல்கொளுமவன் என்பதற்குத்தான் மேல்கொள்ளுமவனாகிய வீமனெனக.

௯. வாலதி-வால்.

௰. பாகு-பாகன். பரிக்கோல்-குத்துக்கோலெனக. நடமுதலிய நாலு-நடனம், துரிதகதி, மந்தகதி, ஓட்டமெனக. சேனையர் - ஒருபொருட் பன்மொழி. போதர-மிக,

௰௧. காசிராசன் பெயர் கேமதூர்த்தி.

௰௨. வெங்கதி-துரிதகதி. நடை-மந்தகதி. அங்கசாரி - போர்க்கங்கமாகிய இடசாரி வலசாரி.

௰௩. ஒன்பதுறுப்பாவன - கால்கள், துதிக்கை, தந்தங்கள், வால், சரீரம் இவ்வாறு பிங்கலநிகண்டிற் கூறுவர். சரீரத்தை நீக்கித்தலையைக் கூறுவாருமுளர். சேடனையும் அமரர்கோனையும் கூறவே பூமியிலுள்ளார் வெறுக்கொண்டார் என்பது கூறாதேயமைந்ததெனக.

௰௫. கேமதூர்த்தியைக் கேமன் எனக் குறைத்துக் கூறினாரெனக.

௰௬. புரிவிலார்-(போரன்றிவேறொன்றில்) விருப்பமில்லாதவராகியெனக.

௰எ. காயம்-இலக்கு.

உ௰. கணகண - ஒலிக்குறிப்பு. ககனம்-ஆகாயம். விததி-விஸ்தாரம்.

உ௧. சவரம்-சாமரை. அடவி-காடு. முடுகுமிடம் - நெருங்கிய இடம். முழை - குகைபோன்ற மறைவிடம் என்க. இசை-ஒலி.

உஉ. அடல் - பொருதல். உயிர்-சுவாசம். ஒருபடி-ஒருவிதம். இக்கவியிற்கூறிய தொழில்களைக் காற்றிற்குங்கொள்க.

உ௩. அறல்-நீர். உடலாலெனமூன்றாவது விரிக்க. பவனசகுலம்-பாம்பின்கூட்டம். பவநாசம் பவநசம் என விகாரமாற்று ; பவநாசம் வாயுவைப் புசிப்பது. மிடலணி-வலியவரிசைகள். விருவின் - பாப்பினால். சலநிதி - சமுத்திரம். விருதர்-ஈண்டிக் காலான் வீரர்.

உ௪. படு-ஒலிக்கின்ற. கருவி - வாத்தியம். கொடுவயிர் - வளைந்த ஊதுகொம்பு. அரவவிருது-ஒலியையுடைய வெற்றிச்சின்னம். வளி-காற்று. கனலி-நெருப்பு.

உ௫. நவகதி-பதினான்காம்போர்ச் சருக்கம் ௬எ-ஆங்கவியுரையிற்காண்க. நடலை-நடுக்கம்.

உ௬. இரவிதன் மதலையரிருவர் மதலை - சூரிய குமாராராகிய அசுவினி தேவரொன்னும் இரட்டையர் குமாரனாகிய நகுலன். வலமிடநிகழ்புரிவு என்றது வலசாரியிடசாரியை.

உஎ. கசை-குதிரைச்சம்மட்டி. குசை-கடிவாளம். தொடைமுதலிய நான்கினாலும் (மேற்கொண்டவர்) உளநினைவறியு முணர்வினவெனக. வளமை-அழகு. விபுதர்குலபதி-தேவேந்திரன்; அவன் பரியின் பெயர் உச்சைசிச்சிரவமெனக. பத்துத்திசை - கீழ்த்திசைமுதலெட்டும் மேல்கீழிரண்டுமெனக.

உஅ. எலுவல் — தோழன் ; கொடுந்தமிழ்நாட்டினொன்றாகிய சீதநாட்டுச்சொல். எழுமடி-ஏழுமடங்கு.

உ௯. விதாரணம் - கொடை. குரம்-குளம்பு. (இரத்தத்தால்) ஒளிதிகழனவருவித்துரைக்க.

௩௰. உபரிசரரென-மேலே சஞ்சரிக்கின்ற தேவரைப்போல.

௩௧. எயிறு-பல். அயில் - கூர்மை. நனையினர்-நனைந்தவராகிய.

௩௪. அல்லி-அகவிதழ். நா-ஆகுபெயராய் வாக்கையுணர்த்தியது ; அது விசயனையன்றி மற்றயரைக் கொல்லேனெனக் குந்திபாற் கூறியதெனக. அழியாவில்லின் நாணழியா-கெடாதவில்லின் நாணைக்கெடுத்து.

௩௫. விடதரன்-ஓரரசன்.

௩எ. இருகண்ணர் என்றது கருநிறமுள்ள கிருட்டிணன் அருச்சுனனிருவரை. திருக்கோவையாருரையிற் கண்ணன் என்பது கரி

யோன் என்னும் பொருளது பாகதச்சிதைவு என்றார். விடா-விட்டு. விடா என்றதன்பின், அப்பகழியொன்றுஞ் செய்யாமைகண்டு இனி நம்மால் வெல்லமுடியாதெனக்கருதி என்பதை இசையெச்சமாக வருவித்துரைக்க. பிறிந்திலர்-வேறுபட்டிலர்.

௩௮. காளை என்றது ஸ்ரீராமனை. முதனாட் போரிற்றோற்ற இராவணனை நாளைவாவெனக் கூறி விடுத்தலால் அவ்விராமனையுவமைகூறினாரென்க. இக்கவி புறப்பொருள்வெண்பாமாலையிற் கூறியவாறு தழிஞ்சி என்னுந் துறைப்பாற் பட்டமை காண்க.

௩௯. அநுசன் என்றது சாத்தகியை. பணைப்பகடு-கொம்பையுடைய யானை.

௪0. தீரன் என்றது சாலுவனை. ஆழி-தேருருள். சூரன் - சூரியன். சேரன் - பாண்டவர் சகாயனென்க.

௪௧. மும்மைத்தமிழ் - இயலிசை நாடகம். தெளிஞர்-தெளிதலுடையாராகிய சங்கத்தார். தமிழ் என்பது இனிமை; அதனையுடைய மொழிக்காகி அம்மொழிகளாலாகிய நூல்கட்காயிற்று. மும்மை- எண்டெண்ணினையுணர்த்தியது பலகையின் வரலாறு திருவிளையாடற் புராணத்திற் காண்க. முனிவரன்புகன்றதைச் சிறப்புப்பாயிர முதற்கவியுரையிற் காண்க.

௪௨. அனந்தரமான-பின்புதோன்றிய.

௪௫. வாளமொப்பென மூரிவில்வளையாவெனக்கூட்டுக. மூரி-வலி. வாளம்-சக்கரவாளகிரி. தூளம்-தூளி.

௪௬. கைகயன்-கேகயதேசத்தரசன். சுருதகீர்த்தி - இவன் அருச்சுனனுக்குத் திரௌபதியிடத்திற் பிறந்தவன். கெட்டனன்-வலியழிந்தவனாகியென்க.

௪௭. சேனையின் பதியாகிய அங்கிவாய் வருவோனென்க. ஆசிரியனாகிய கிருபன் என்க.

௪௯. காவணம் - பந்தல். உரைபெருகாவணம்-சொல்லுக்கடங்காதபடி என்பது கருத்து. சாமரம் - கவரிகள். அழிந்து-அழிய. சாமரம்-சமரம்; முதனீண்டது.

௫0. ஓடை - பட்டம். எயினவோடைகள்-நீர்நிலைகளிசைந்தன. முன்புடைவாலதி - வலியுடைய வால். செற்றது - எண்டுத்துணித்ததென்க. முகமுழுகுஞ்சரம் வாலைச்செற்றதென்க. மறிந்தன-வீழ்ந்து மடங்கினவென்க.

௫௧. விழுதும்பிகள் பட்டன - வீழ்கின்ற வண்டுகளொலித்தன. படுதல்-ஒலித்தல்; மதுரைக்காஞ்சியுரையிற் காண்க. தோட்டி என்பது தொட்டியெனக் குறுகியதென்க. தொட்டி - அம்பாரியென்பாருமுளர். குமண்டைய - (நிறையவுண்ணலால்) தெவிட்டுதலுடைய. உகளித்தன-மகிழ்ச்சியால் குதித்தன.

௫௨. புலாவினவம்பின - மாமிசத்திலுள்ள வாசனையையுடையன; இன் சாரியை. தடிவன-அறுப்பன. மீளவும் - தலைதடிந்தபின்னுமென்க. ஆவனசக்கரம்-ஆச்சரியத்தையுடைய தாமரைப்பூவையொத்த கைகள்.

௫௩. வாளிகள் எண்ணில என்க. உழை-பக்கம். மழைவீழ்வன-மழையையொப்பனவாகிய. வெயில் - ஒளி. சூழெயில் - சூழ்தலாகிய மதில். சூழ்ந்திருத்தலையே மதிலென்றாரென்க. எவ்வெயில்-எந்தமதில்.

௫௪. மனோவனசம்புகமேயின - இருதயகமலம்புகமூடின. சம்புகமேயின - (அங்குப்) பொருந்தின நரிகள். யாமளவாரணம்-யாமளவேதம், யாமளை-காளி. சம்புகம்-நரி என்பதை வேத்திரகீயச்சருக்கம் ௫௩-ஆங்கவியிற்காண்க.

௫௫. பாரிடம் - பூமியிடம், பூதம். பாறு-பருந்தினொருபேதம். அந்தரம் - ஆகாயம். எயிறு-பல். கந்தரம்-கழுத்து.

௫௬. உம்பல் – ஆண்யானை. செம்புனல்-இரத்தம். வீழ்குறைசெய்தனகோடுகள்-வீழ்ந்து கிடக்கின்ற உடற்குறைகள் கரைசெய்தன.

௫௭. உடல்சாயகம் - உடம்புகள் சாய்ந்து கிடக்கின்ற இடங்கள். இருந்துகள் - பெரிய தூளிகள். மிக்கவிருந்துகள் - (அவ்விடத்தில்) உயர்ந்த விருந்துகள்; விருந்து புதுமை, இது ஆகுபெயராகி விருந்தினரை யுணர்த்தியதென்க.

௫௮. சிவந்த கவந்தம் - செந்நீராகிய இரத்தம். கவந்தம் - நீர். கவந்தமலைந்தன - தலையில்லாதவுடம்புகள் போர்செய்தன. ஐவகைக்கதி முன்வந்தனவறிக. இவை – இச்சிறப்பாகிய இவைகளெல்லாம். கோல் - பாணம். கைவாசிகள்-கையின்மிகுதிகளேயாமென்க.

௫௯. தாரை - சிறுசின்னம். ஒற்றை-ஒருகுழற்கருவி. வயிர்-ஊதுகொம்பு. துரங்கமசங்கமுழக்கின - குதிரைக்கூட்டங்கள் கலக்கின. உயிர்ப்பு-உயிர் ஆகுபெயர். மெய்ம்முகமேவின-மெய்யிடத்தைச் சேர்ந்தன.

௬0. போதவிரைந்தன - மிகவொலித்தன, வருதற்குவிரைவுற்றன. சுரிகை-வாள். துனியிலரும்புகை-பேருடலில் அதனைத்தீர்க்குமாறு குவிகின்ற கைகள்.

௬௧. நகரத்தனவாகிய கடகரி - அம்பொடு போனகரத்தனவாகி வனமோடொத்தன

வெண்க. நகரத்தன - நகங்களையுடையன. நகரம் விரித்தலாயிற்று. ஏனம்-பன்றி. வாயசம்-காக்கைகள். ஆயசம் - ஈண்டாயுதம். ஆயசம் இரும்பாலாக்கப்பட்டது. அயஸ்-இரும்பு.

௬௨. தேனையென இரண்டாவது விரிக்க. விளைத்தன-உண்டாக்கின. இளைத்தன-தளர்ந்தன. ஆர்பன-உண்பன.

௬௩. ஆவம்-அம்பறாத்தூணி. நெஞ்சுகளாகிய போதகம் - இருதயமாகிய கமலப்போதிணிடங்கள். போதகம்-யானைகள். தலையோதனம்-தலைகளாகியவுணவுகள். நனந்தலையோதனம் - அகன்றவிடத்தையுடைய போர்க்களச் சிறப்பு. நனந்தலை - அகன்றவிடம் என்பதனை மதுரைக்காஞ்சி புறநானூற்றுரைகளிற் காண்க. யோதனம்-போர்; அது போர்க்களத்திற்காகிப்பின் போர்க்களச் சிறப்பிற்காதலால் இருமடியாகுபெயர்.

௬௪. சேனாபதி-ஈண்டுத் திட்டத்துய்மன். சஞ்சத்தகர் - பதினொராம்போர்ச்சருக்கம் ௬௰-ஆங்கவியுரையிற்காண்க. நாராயணகோபாலர்-இவர் கிருட்டிணனுக்கு கோவியரிடம் பிறந்தவர்கள். இவ்விருவகையினரு முன்போர்களிலிறந்தவரொழிய மிஞ்சியவரென்க; ௬அ-ஆங்கவியினுங்காண்க.

௬௫. சட்கோணம்-ஆறுகோணம். சத்தியசேனன்-இவன் கன்னன் புத்திரன். புட்கோ-கருடன். துட்கு-அச்சம். தோமரம் - தண்டாயுதம்; பதிற்றுப்பத்துரையிற்காண்க. முட்கோல் - இருப்புமுட்டைத்திருக்கின்ற கோல். வடம் - குதிரைகளைக்கட்டியிருக்கிற கயிறு. முரண்-வலி.

௬௭. சித்திரசேனன்-கன்னன்மகன்; இவனுக்கு மந்திரபாலனென்னும் பெயருமுண்டாதலால் சித்திரசேனனாகிய மந்திரபாலன் என்க.

௬௯. குறை-கவந்தம். கூடார்-பகைவர்.

௭௧. குருமித்து-ஆரவாரமிட்டு. நிருமித்து-(தன் சேனையையிவ்வாறிருத்தல்வேண்டுமென்று) நியமித்து.

௭௨. துனை-வேகம். கபோலம் - கன்னம். விகடம் - உன்மத்தம். தனிதம்-ஒலி. தமரம்-ஒலி.

௭௩. சுலாவி - சுற்றி. சண்டம் - வேகம். சூரன் - சூரியன். முகில்பஞ்சபூதவடிவுபெற-வானங் காற்றுத்தீ நீர் என்னுநான்கின் சம்பந்தமுடையமேகம் இப்புழுதியடைந்ததனுற்பஞ்சபூதவடிவைப்பெற எனவிரித்துரைத்துக்கொள்க. வியனதிவண்டலாக - மேலுள்ள ஆகாயகங்கைசேறாக. கழிய-மிக.

௭௪. பொதுள-நெருங்க.

௭௫. நேமி - சக்கரம். விரிதந்த - விரிந்த. முரிதந்த-வளைந்த.

௭௭. சுளிவு-கோபம்.

௭௮. மருமம் - மார்பு. அருமந்ததேர் என்பது அருமருந்தன்ன தேர் என்பதன் மரூஉவென்க. கிடைத்தற்கரியதேர் என்பார் அருமந்த தேரென்றார். நாணி-வில்லினாண்.

௮௰. பிழைகொண்ட - தன்குறிதப்புதலைக்கொண்ட. தருமராசன் செந்நிறத்தனுதலாலும் பலராமனையுவமைகூறினாரென்க.

௮௧. ஆசும் - சிறிதும். அமையுமமையும் - போதும்போதும்; இவ்வடுக்கு இகழ்ச்சி குறித்து நின்றது.

௮௨. அரசாசனி - பகையரசர்க்கு இடியாகியவன். பொடி-புழுதி.

௮௭. நேமி-ஆக்கினையாகிய சக்கரமென்க. தா-வலி.

௯௰. நா - நாக்கு. வாகை - வெற்றிமாலை. மாகதக்கொங்கர்கோமான் - (சிறிது) மகததேச சம்பந்தமுடைய கொங்குதேசத்தவர்கட்குத் தலைவனென்க. பாகை - வக்கபாகையென்னுமூர். எவ்வளவெடுத்துக்கூறினும் வெறுப்பைத் தாராதினிமையைத் தருவதென்பார் கையாப்புகழென்றார். தெவ்வரோடக் கன்றுட்டியமார் பொருதமை விளங்க வாகையாற்பொலிதிண்டோளானென்றார். பெருங்கொடைக்கையென்பார் செங்கையென்றார்.

# பதினேழாம்போர்ச்சருக்கம்.



௧. உபநயனத்துக்குமுன் சூத்திரத்துவமும் பின் பிராமணத்துவமுமெய்தலால் ஈரொருபிறப்பென்றார்.

௨. ஒற்றை-ஒரு குழற்கருவி.

௩. கறுவல்-நெருங்க. அண்ணல்-பெருமை. அரசு-என்றது துரியோதனனை.

௫. காசினித்தேர்-பூமியாகிய ரதம். காணுமாறு என்பதில் இறுதிவிகாரமாயிற்று.

௬. முத்தரும்ப - கண்முத்துப்போல நீர்த்துளியரும்பவென்றும், இதயமுருகவென்றுங் கொள்க.

௯. நுங்குதல்-விழுங்குதல். நுங்கழல் - எல்லாவற்றையும் விழுங்குகின்ற வக்கினி.

௰. கடவுள் - ஈண்டுத்தெய்வத்தன்மை. முனிவன் என்றது துருவாச முனியை.

௰௧. வழங்கிடும்படி-இராவான் கொடுக்கும் படி.

௰௨. குறித்தல் - ஈண்டுஏதுதல். மூதாதை-பாட்டனாகிய வீடுமன்.

௨௰. நஞ்சோற்றம்பெற-நஞ்சின் ஆரவாரமடங்க என்க. ஒல்-ஒலி; ௰௩-ஆம்போர்ச் சருக்கம் ௩௯-ஆங்கவியிற்காண்க. தம்மிடல் - அடங்குதல். நஞ்சு ஒற்று அம் பெற எனப் பிறித்துரைப்பாருமுளர் இப் பொருட்கு ஒற்றுநீட்டல் விகாரமாயிற்றென்பர்.

௩௩. கோவல் - திருக்கோவல் வீரட்டம் என்னுமொரு தலம்; இது பெண்ணைநதிக்கரையிலுள்ளது. பாகை-வக்கபாகையென்க. உலகிலுவமானமாகக் கூறப்பட்ட கன்னன்கையை இங்கே உவமேயமாக்கிக் கூறுதலால் இது விபரீத வுவமையணியென்க.

௩௫. வெயிலவன் - சூரியன். இயமதங்கியாகிய முனி-சமதக்கினிமுனி.

௪௨. உருவுரும் - அச்சந்தருமிடி. காயம் - இலக்கு.

௪௬. இராமன்-பலராமன் என்க.

௪௮. கரிமுகக்கடவுள்-விநாயகர்.

௪௯. சாமளம்-பச்சை. சேய் - குமாரக்கடவுள். தோயல்-கலப்பு. சூரன்-சூரியன்.

௫௰. மித்திரர்-நண்பர். சுத்திரன் - வஞ்சகன். மறை-மந்திரம்.

௫௩. முகம்புகுந்து-நோக்கிற்கெதிர்புகுந்து.

௫௭. துரோணகூதனன் - துரோணாசாரியனைக் கொன்றவனாகிய திட்டத்துய்மன். கை-இடைச்சொல், வரிசையுமாம்.

௬௰. செல்-மேகம். ஒளி - ஒழுங்கு. வலக்கண் என்றது சூரியனை.

௬௧. கலம்-முகத்தலளவையிலொன்று.

௬௨. எம்பி-என்றம்பியாகிய விசயன். வஞ்சினம்-சபதம்.

௬௩. விடசேனன்-கன்னன் மகன். இளையான்-என்றது சாத்தகியை.

௬௪. சிஞ்சிதம்-பாணங்களாலெழுமொலி.

௬௫. குடகாவிரி - மேற்றிசையினின்றும் வருகின்ற காவிரி.

௬௬. வேய்-மூங்கிற்குத்துக்கோல். நிகளம்-சங்கிலி.

௬௭. வஞ்சி - கருவூர். மதுரை - ஒருநகர். புகார் - காவிரிப்பூம்பட்டினம். நேரியன்-நேரிவெற்பன் எரிகால்-அக்கினியைக்கக்குகின்ற. கம்பர்சிலைமலை-சிவபிரான் வில்லாகிய மேரு.

௬௮. முதலடிக்கு - இந்திரனாகிய இடபவாகனத்தையுடையான், மாற்றரசர்களுடைய அழகிய பொன்முடிக்கணுள்ள மலர்கமழுங் காலையுடையான் என்க. ஒருகாலத்தில், அசுரரைச் செயிக்குமாறு இந்திரன் அயோத்திமன்னனைவேண்டி அவனுக்கு இடபவாகனமாயினன்; அதன் கழுத்திலிருந்து அவ்வயோத்திமன்னன் அசுரர்களைச் செயித்தான்; அதனாலம்மன்னனுக்குக் காகுத்தன் எனப் பெயராயிற்று. ககுத்து-எருத்தின்பிடர். அக்காகுத்தன் குலத்தினனாதலாற்சோழனை அண்டர்குலபதியாம் விடைவாகனன் என்றார். ௬௨௮-ஆங்கவியினுமிவ்வாறு அக்குலத்தவனென்க்கூறுதல் காண்க. தாதகி-ஆத்தி.

௬௯. மகதர்கோமானாகிய சாதேவன் என்க.

௭௧. வினை-போர்.

௭௩. பெருலம்-அதிகம். அகிலம்-எல்லாம்.

௭௪. மலையின்-போர்செய்தால். பட்டுப் படாத — போரிலாயுதங் தைக்கப்பட்டிறவாத என்க.

௭௫. மாய்ந்தார் என்றது மாஞ்சார் என மருவிநின்றது.

௭௬. போய்-போக எனத் திரித்துரைக்க.

௭௭. இனையோர்-இத்தன்மையார்.

௭௮. பொன்-அழகு. மல்-வலி.

௮௰. தாழும் - தாழுதல். ஈண்டுச் சாந்தமென்க. தரங்கம்-அலை. அம்புராசி-கடல்.

௮௩. இக்கவியில், சாதேவன் முதலாகத் தண்டநாதனிறுதியாகக்கூறிய வெழுவருந் தருமனால் தேருந்தகர்ந்து வில்லுமற்றார் என்க. இவ்வருவருக்கு மூத்தவன் தண்டநாதன் ஆதலால் தம்பியரோடு தண்டநாதன்என்றார். இவ்வெழுவருந் துரியோதனன் றம்பியரென்க.

௮௪. சேனைநாதன் என்றது கன்னனை தன் சேனாநாதன் என்றது திட்டத்துய்மனை, தருமன் நடக்கலுற்றானென்க.

௮௫. நிரை - வரிசை. முரசுடைக்கொடி கொளிரதமெனக்கூட்டுக. முகிலை இரதத்திற்குவமானமாக்குக.

௮௬. மொட்டு-கூம்பு; குமிழ்வடிவாயிருப்பதென்பர்.

௮௯. மதுபம்-வண்டு.

௯௰. குணம்-நாண். உற்றன - உற்றனவா

ிய பாணங்கள். தண்டு - கொடிகட்டியிருக்குந் தண்டு.

௬௧௪. நவநடை - நவகதி. உபநிடதவித்து-கிருட்டிணன்.

௬௧௫. கரை - அளவு. நிலே-வீரநிலேயென்க. அணிநிற்றி-இவ்வணிவகுப்பிலே நிற்பாய்.

௬௧௬. வ்யிரவச்சு-வயிரச்சுஎனவிகாரமாயிற்று.

௬௧௭. விதலே-நடுக்கம்.

௬௧௮. திமிர்ந்து-கிராகரித்து.

௬௨௨. வேய்ந்த-மூடின.

௬௨௭. உரிமைபற்றி இந்திரன் முடிமேல் வளேயெறிந்ததைச் சித்திரவாகனுக்கேற்றிக் கூறினுரென்க. சென்னி - ஆகுபெயராய்முடியையுணர்த்தியதென்க. வளேயால்-என மூன்ருவது விரிக்க.

௬௨௯. செஞ்சொலேடு-செந்தமிழ்ச்சொல்லாலாகிய தேவாரப்பதிகம் வரைந்த வேடென்க. பிற்காலத்து வைகை எனவுங்கூறுவர்.

௬௩௧. துகைத்து-உழக்கி. காலிற்றுகைத்தல்; கடல்வடிவம்பலம்ப நிற்றலேக்குறித்ததென்க; பதினேந்தாம்போர்ச்சருக்கம் ௧௯-ஆங்கவியிற்காண்க. விலோதம்-கொடி.

௬௩௭. இமத்தாரை - குளிர்ச்சியுள்ள மததாரையென்க. சாதிமை - குலத்தன்மை. ஓதிமப்பதாகை-அன்னக்கொடி.

௬௩௯. கெட்டனர்-ஈண்டுக்காணுமலோடினுரென்க.

௬௪௦. உற்கை-தாரகை. கொற்கை-பாண்டியனுரூர்; இது பொருநைத்துறையிலுள்ளது. கோழி-உறையூர்.

௬௪௩. ஈந்தனவாகிய அம்புமம்பும் என்க.

௬௪௮. சிபி என்னும் பெயரையுடைய அயோத்திமன்னனெருவன் தன்பாலடைக்கலம் புகுந்த ஒரு புருவின் பொருட்டுத் தன் சதையையரிந்து அப்புருவினெடை நிறுத்துக் கொடுத்தான், அவன்குலத்தவனுதலாலக்கதையினே உரிமைபற்றி யிச்சோழனுக்கேற்றிக் கூறினுரென்க; ௯௮-ஆங்கவியினு மிவ்வாறு கூறுதல்காண்க.

௬௫௨. துன்மருடணன், துன்முகன் இவ்விருவருந் துரியோதனன்றம்பியர். துன்மருடணன் மகன் சுவாகு. துன்முகன்மகன் சுவாதி. கன்னன் மகன் சங்கன் என்க. விபாகரன் - சூரியன்.

௬௫௭. அம்ம — ஈண்டிழித்தற்கண் வந்ததென்க.

௬௬௨. ஒன்பதின்மர்-விசித்திரவீரன், விசித்திரவாகு, விசித்திரன், விநோதன், அகண்டதரன், விஷயன், அகண்டிதன், சுசிநாதன், சுகிரதன் என்பர். பாவனன்-வாயுகுமாரன்.

௬௬௫ மேன்மேல் என்னுமடுக்கு முதல் குறுக்கியதென்க.

௬௬௮. கொக்கரித்தல் - கெர்ச்சித்தல். உகவை-மகிழ்ச்சி.

௬௭௧. மொய்ம்பு-வலி. உத்தரிக்க-சாதிக்க.

௬௭௭. அயிர் - நுண்மணல். துகைத்தல் - உழக்கல்-அவுணக்குலத்திறை-மாவலியென்க.

௬௭௯. சொட்டை - ஓராயுதம். துகிர்-பவளம். பவர்-கொடி.

௬௯௦. வெண்ணீர்மை - வெண்மைக்குணம். காத்தற்றெழிலாலும் நிறத்தாலுமொத்திருத்தலால் எத்திறத்தும் என்ருர். நீருண்டமேகமென்பார் வெண்ணீர்மையில்லாத மேகமென்ருர்.

௬௯௨. அகங்கரித்தான் - செருக்குற்ருன்.

௬௯௫. எதிருன்றல் - பொருதற்கெதிர்த்து நிற்றல்.

௬௯௯. யாமினி-இரா. நாமம்-அச்சம். தாமம். ஒழுங்கு, ஒளியுமாம். முதலடியிற் சூரியனென்க.

௭௦௨. கச்சைக்கொடியோன்-கன்னன்.

௭௦௪. ஊண்டிரைமதியா - உணவுக்குரிய பாற்கடற்றிரையை மதித்து.

௭௧௪. பேரவை மூன்று - மிகுதி, ஒப்பு, தாழ்வு என மூன்றென்க; திருக்குறளிற் காண்க.

௭௧௫. அலேய-வருந்த.

௭௨௨. கிரீசன் - என்பதைக் கிரிசன் என்ருர்.

௭௨௫. திகிரிக்கல்-சக்கரவாளகிரி.

௭௨௭. ஆசு-விரைவு, குற்றமுமாம்.

௭௨௯. நிமலர் என்றது திருமாலேயும் ருத்திரமூர்த்தியையும். அலே-கடல்.

௭௩. தேவதத்தம்-அருச்சுனனுக்கு மயன் கொடுத்த சங்கம். ஆவம்-அம்பருத்தூணி. மெத்துதல்-நிறைத்தல். மூவர் தத்தம் வடிவா முதல்வன் என்றது சூரியனே. மூவர் - திரிமூர்த்திகள்; இவர்கள் சூரியமண்டலத்துள்ளாரென்பது நூற்கொள்கை.

௭௩௧. பராபரம் - சூரியன் கன்னனுக்குக் கொடுத்த சங்கம்.

௭௩௫. சாயாபதி-சூரியன்.

௭௩௪. அறனுர் குமரன் - தருமராசன்.

௭௩௭. குரவோர் என்றது அரசன், உபாத்தியாயன், தந்தை, தேசிகன், மூத்தோன் ஆகிய ஐவரை.

உ௱௯. துனி-கோபம்.

உ௱௰உ. தாமங்களின்வைப்பு-என்றது சூரியனை. தாமம் - ஒளி. நுதற்கண் - சிவபிரானக்கினிக்கண்.

உ௱௰௩. கன்னன் அரவக்கணையென்க. கங்கு-கரை.

உ௱௰௪. இயமனுங் கன்னனுஞ் சூரியன் புத்திரராதலாற் கன்னனை இயமன்றுணைவனென்றார். பணை-வாத்தியம்.

உ௱௰௫. அம்புதம்-மேகம். புரை-ஒத்த.

உ௱௰௬. வான்மணி-சூரியன். உரகேசன் - நாகேந்திரன். கணையொன்று-ஒருநாகாஸ்திரம். தெரிந்தனன்-தெரிந்துவிடுத்தானென்க. பின்னிரண்டடிக்கு-கன்னனது அந்த நாகஸ்திரமானது விசயன் நீலோற்பலக்கணையை பிரயோகித்துப் பொருமுன்பு அவ்வாயுவாஸ்திரத்தை விழுங்கியதென்க. ஆயுப்புறமிட்டு விடப்பொருவோன்-கன்னனென்க. மலைந்திடுவோன்-விசயனென்க. மாமுனை-மிக்ககூர்மை. வெம்மை-கொடுமை.

உஉக. வனம்-காண்டவவனமென்க. உசவி-ஆய்ந்து.

உஉ௬. பிறகு-பின். துணி-துண்டம். திரியவும்-மறுபடியும்.

உஉ௭. புகல்-அடைக்கலம். ஒருபடி - ஒருதரம். தொடை-தொடுப்பு.

உஉ௮. சேகு-வயிரம். ஏகாதசம்-பதினொராமிடம்.

உஉ௯. மறை-மறுத்தல். அம்ம-அசை.

உ௩க. தேன் தென் எனக்குறுகின்றது.

உ௩உ. ஆழிநிலனுற்ற - சக்கரம் பூமியிற் பதிந்த. மழுவாளி - பரசுராமன். சாபமாவது-கன்னன் றன்னைச் சத்திரியன் எனக்கூறாது கற்றான்; அதனையறிந்தபின்புகோபமுற்றுக் கன்னனைநோக்கி உனக்கு கற்றவித்தை காலத்திற்குதவாது எனக்கூறியது; இதன்விரிவை மகாபாரதத்திற்காண்க. அதவா-அல்லது; இது வடசொல்.

உ௩௩. கைவந்திலா - தன் கைவசம்வரப் பெறாத.

உ௩௪. கடையடிக்கு - கன்னன் வன்மை குறைகின்றதைச் சொன்னார் என்பது கருத்து.

உ௩௫. மகவன்-மகவான். தினகாரி-தினஞ்செய்வோனாகிய சூரியன். உயிர்க்காலவிப்பான்-உயிராகிய காற்றையவிக்கும்பொருட்டு.

உ௩௭. அத்தவெற்பு. அஸ்தமனகிரி. செருபோர்.

உ௩௮. வேண்டிய-விரும்பியவற்றை இது வினையாலணையும்பெயர்.

உ௪க. கடையடியால் மறைந்து நின்று நிக்கிரகம்போலநுக்கிரகஞ்செய்யு மியல்பு விளக்கினமை காண்க.

உ௪௪. பஞ்சவாயுதம்-நேமி, தண்டு, வாள், சங்கு, வில் என்பன.

உ௪௫. அமரர்-ஈண்டு முப்பத்துமூவராகிய நால்வகைத்தேவர். மணிமேகலையில் "நால்வேறுதேவ" ரெனக்கூறுதல் காண்க; அவர் வசுக்களெண்மர், திவாகரர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், மருத்துவரிருவர். அமரயோனிகள் என்றது, இவரையொழிந்த கந்தருவர்முதலோரை.

உ௪௬. அனிலயோகம் - வாயுவையடக்கிச் செய்யும் யோகம்.

உ௪௯. நதிவரலாறு முன்னுரைத்தமை காண்க. "எங்கண்மாதவனிதயமாமலர் வருமுதையத்திங்க" ளெனக்கூறலால் மதிபெற்ற திருவுளமென்பதை யுணர்க.

உ௫க. சதியாமல்-அழிவுசெய்யாமல்.

உ௫உ. அஞ்சரீகம்-அருச்சுனனுடைய பாணத்துக்கு ஒருபெயர். தகவுடையார் - தகுதியுடைய பெரியோர்.

உ௫௪. கோ-இரக்கக்குறிப்புச்சொல்.

உ௫௫. மண்கவர்தரு மன்மதலை என்றது துரியோதனனை.

உ௫௬. இங்கிதம்-எண்ணக்குறிப்பு. பதம்-பதவி.

உ௫௭. எஞ்ச-இறக்க. கபிலை-பசு.

உ௫௮. தானம்-சுவர்க்கம்.

உ௫௯. சண்டமருத்து-ஈண்டுவீமன். மருத்துவான்-இந்திரன். கரியசுடர்-ஈண்டு விசயன்.

உ௬௰. புணை-தெப்பம்.

உ௬௧. துவக்கு-சம்பந்தம். வாழ்வு - செல்வம்.

உ௬௪. அரியமா-சூரியன்.

உ௬௬. சஞ்சரீகம்-வண்டு.

உ௬௭. யாயுரைத்ததும், எமருரைத்ததும், தேவின் வாயுரைத்ததும் எனவும்மைவிரித்துரைத்துக்கொள்க. எம்முன் - எந்தமையன். நேர்செய்தாய்-பொருதல்செய்தாய்.

உ௬௮. ஆடகன்-இரணியன். ஈடு-வலி.

**கன்னபருவம் முற்றிற்று.**

# ஒன்பதாவது சல்லியபருவம்.

## பதினெட்டாம்போர்ச்சருக்கம்.

௧. கோலம்-வராகம். வடிவாய்-(கிருஷ்ணு வதார) வடிவமாய். பரியாளாக-குதிரைமுகத் தையுடைய மனிதவடிவமாக. நாராயணுயநம-நாராயணமூர்த்திக்கு நமஸ்காரம். இக்கவியில் தசாவதாரமுங் கூறினமைகாண்க.

௨. மறித்து - மீண்டுவந்து. அவுணர் - மங் தேகரென்னுமசுரர். பற்பராககிரி - மாணிக்க மலை.

௩. சாதி - பிச்சிப்பூ. ஞமிறு, வண்டு, சுரும்பு இவைகள் வண்டின் விசேடம. வண்டு கள் இரவில் செடி தருக்கண்முதலிய மலர்க ளின்றேனையுண்டு சுகித்துக் காலையிற்பொலி வழிதலால் அவைகளைவிட்டுத் தாமரைத்தடத் துவருதல் இயல்பென்க. சாதி - சிறுசண்பக மெனில், வண்டுபடா மலராதவிலது பொருந் தாதென்க.

௬. பட்டம் - ஈண்டுப் பொற்பட்டம். இப ராசன் என்றது அரசுவாவை. ஓடை-நெற்றிப் பட்டம். கண்முத்தம் - ஈண்டு ஆநந்தக்கண்ணீ ரென்க.

௯. தாமன்-அசுவத்தாமன் என்க. அணிய-அணிவகுக்க. மாமன் அன்றது சகுனியை. மூவர் என்றது சித்திரசேனன், சூரியவன்மன், சித்திரகீர்த்தி; ௩௪-ஆங்கவியிற் காண்க. சாமந் தன்-ஈண்டுத் தானைத்தலைவனுகிய சல்லியன். தரணிபதிபின்னணிய — துரியோதனன் பின் னே யணிவகுத்து நிற்க.

௰௧. இரவு-இரப்பு. வீ என்றது வி எனக் குறுக்கலாயிற்று. வீ-புள், ஈண்டு வண்டினைக் குறித்தது.

௰௨. முதலிரண்டடியின் கருத்து அருச் சுனன் உறவுமுறையறியாதவனுய்க் கன்னனை உயிர் கவர்ந்தானென்று அவனைச் சாயாதேவி வெறுப்புற்றுள், அவளைப்பார்க்கினும் பூமி தேவிமிக வெறுப்புற்றுளென்பது. சாயை-சூரியன் மனைவி. இவள் வெறுத்தற்குக் கார ணம் புத்திரனைக்கொன்றுனென்பதும், பூமி தேவி வெறுத்தற்குக்காரணம் தன்னையாளு தற் குரியவனுயிருந்தவனைக் கொன்றுனென் றுங்கொள்க. விசயன் மாயோனையுந் தாயையும் வெறுத்தற்குக் காரணம் அவ்விருவரும் முன் னமே அறிந்திருந்துந் தனக்குக்கூறுமையா லென்க. விதியை வெறுத்தற்குக்காரணம் இவற்றிற்கெல்லாங் காரணமாயிருத்தலா லென்க.

௰௪. அணிவகுப்பு இன்னதெனக் கூற வில்லை.

௰௫. அத்திரவூகம்-அஸ்திரவடிவாக வகுக் கப்பட்ட படைவகுப்பு. குத்திரம்-வஞ்சம்.

௰௬. கழி-உப்பங்கழி.

௰௯. மூத்தவன் மைந்தர்-தமையனுன கன் னன் புத்திரர்.

௨௰. சலநிதி-கடல். விதி-பிரமன்.

௨௨. முதிர - அதிகமாக. முனைபிதிர்படும் படி எனக்கூட்டுக. பிதிர் - பொடி. கொள்கார் விசும்பு - கருநிறங்கொண்ட வாகாயமென்க. கொண்டுகொடு என விகாரமாயிற்று.

௨௩. கொடிஞ்சி-முன்னுரைத்தாம். எழினி-திரைச்சீலை.

௨௫. செல்-மேகம். கல்-மலை. மணிக்கழுத் துடையவனென்றது சுக்கிரீவனை. வாலி சுக்ரீ வர் மலைந்தகதை இராமாயணங் கிஷ்கிந்தா காண்டத்திலறிக.

௨௬. எஃகு-கூர்மை. கைதவம் - வஞ்சம். புரை-குற்றம்.

௨௮. அழுக்காறு - பொறுமை. போற்ற லன் என்றது சல்லியனை. பஞ்சானனம்-விரிந்தமுகத்தையுடையதாகிய சிங்கம்.

௨௯. இருவரும் - வீமனுஞ்சல்லியனும் வேறு - வேறுபாடு. வினதை காளை என்றது கருடனை. வினதை-காசிபர்மனைவியரிலொருத் தியாகியுங் கருடனுக்குத் தாயாகியுமுள்ளவள்.

௩௧ பத்திரம் - சிறந்தசாதியானை. பரூஉ-பருமை. பகடு-யானை. வீமனிலுஞ் சல்லியன் மிக்க வலியன் என்பது விளங்க வீமனுக்கு யானையையும், சல்லியனுக்கு சிங்கவேற்றையு மூவமைகூறினுரென்க.

௩௨. புடைத்தல் - அடித்தல். தோமரம் - ஈண்டுத்தண்டாயுதம். எற்றுதல்-அடித்தல்.

௩௩. ஏமரு-பாணமருவிய.

௩௪. தேரவன்-சூரியன். ஒளியும் பகையிருளொழித்தலுமுடைமையான் முச்சுடரை யுவமைகூறினாரென்க.

௩௫. இருவர் உலூகன், சைந்தவன்என்பர். நிசை-இரா.

௩௬. கேதுதரன்-ஓரரசன்.

௩௮. சுமித்திரன்-ஓரரசன்.

௩௯. வாளச்சிலம்பு-சக்கரவாளகிரி.

௪௰. மாயனிளவல் என்றது சாத்தகியை.

௪௧. ஒன்றென - ஒன்றுபோல. கோறும்-கொல்வோம். கொல் என்னும் பகுதிமுதனீண்டது.

௪௨. சதம்-நூறு.

௪௪. பொற்றை-மலை.

௪௬. பாகன் என்றது கிருட்டிணனை. தேரோன் என்றது விசயனை.

௪௭. அவுணரூர் நீறுசெய்வீரன் என்றது சிவபிரானை.

௪௯. கழிந்தநீர்க்கணை கோலிவந்தெதிர்ந்து-கடந்துசென்ற வெள்ளநீரைத் தடுப்பதற்கு அணைவளைப்பவனைப்போல்வந்து அருச்சுனனையெதிர்த்து என்க. முன் பதினான்காம் போர்ச்சருக்கம் ௱௩௰-ஆங்கவியினுமிதனை யெடுத்துக்கூறினமை காண்க.

௫௰. செருப்புலக்கையா முரலிடை-யுத்தகளத்திற் படைவகுப்பாகிய உரலில். கை-படைவகுப்பு. பொருப்புலக்கையுற்றலமர-மலைகள் கேட்டையடைந்து கலங்க.

௫௧. அலக்கைவித்தகனிளவல் என்றது கிருட்டிணனை. அலம்-கலப்பையாயுதம்.

௫௫. ஆளியேறனையான் என்றது சல்லியனை. அரசு என்றது துரியோதனனை.

௫௯. படைத்த என்னும் பெயரெச்சவீறு தொக்கது.

௬௰. சம்பரன்-ஓரசுரன்.

௬௨. நீண்முதற்றீபம்-அடிநீண்ட தீபவிருக்ஷம்; அது சோதிவிருக்ஷமென்க. முதற்போர்ச்சருக்கம் உ௬-ஆங்கவியினு மிவ்வாறு கூறுதல் காண்க.

௬௩. ஒன்பதுபடி-ஒன்பதுவிதம். உடற்றினன்-போர்செய்தான். வீமன் தோன்றுவெழுவாய்.

௬௪. இரணம்-போர். முரண்-வலி.

௬௫. கிருதவன்மனைக் கிருதபற்பன் என்றார்.

௬௬. வேளின் இதில் இன் ஐந்தாவது ஒப்புப்பொருட்டு. எமகூடம்-குலபருவதங்களினொன்று; பொற்சிகரமுடையதென்பர். கிறத்தவன் என்றது சாத்தகியை என்க. நேமி-கடல்.

௬௭. ஆழி-சக்கரம். பவனம்-காற்று. வேகத்தாற் காற்றையுவமைகூறினாரென்க. அரி-சிங்கம். உததி-கடல். தமரம்-ஒலி. கோடுகோடுகள் சூறித்த - வளைந்த சங்குகளூதப்பட்டன. பவனம் என்பதற்குப் பூமியெனப் பொருள் கொண்டு தட்டின் பரப்பாற் பூமியையொத்த ரதத்திரளென்பர்.

௬௮. தானவர் வானவர் என்றது தானவானவர் என விகாரமாய் நின்றது; குரங்கு கோட்டில்வாழ்விலங்காதலால் சாகைமாமிருகம் என்றார்.

௬௯. சோமகேசபதி மெய்ப்புதல்வன் என்றது துருபதன் புதல்வனாகிய திட்டத்துய்மனை.

௭௰. மாரசாயகம் குறித்த இலக்குத்தப்பாமன் மறைந்து பாய்தலாலதனை புவமானமாக வுரைத்தார். சூரன்-சூரியன்.

௭௭. நிறமுஞ்சலியாதுநிற்றலுமுண்மையால் ஆனிலற்கு இமயத்தையுவமைகூறினார். என்செய்தான் என்னும் வினாவுக்குமிக மகிழ்வுற்றானென வருவித்துரைத்துக்கொள்க.

௭௯. ஐவர்-துரியோதனன்றம்பியர்.

௮௰. சத்திரம் - கைவிடாப் பலவகையாயுதங்கள்.

௮௧. எறு - புண், நன்னூல் விருத்தியுரை சொல்லதிகாரம் பேரியல் ௰உ-ஆஞ் சூத்திரவுறையிற்காண்க.

௮௨. வை - கூர்மை. மற்றுமற்று என்பது அடுக்காகி வேறுவேறு எனப் பொள்கொள்ள நின்றது. மூண்டு மூண்டு என்பது ஒரு தொழில் பலகாணிகழ்தற் பன்மையில் வந்தது. பிறங்கல்-மலை.

௮௪. கறங்கு-காற்றாடி.

௮௫. கேசரிசாபம் - சிங்கக்குட்டி. இறுதியிற்கூறிய வீழ என்பதற்கு விரும்ப என்க.

௮௬. கனக்குடில்-(வீரசுவர்க்கத்தில்) பொன்மயமான குடிசையிலென்க.

௮௭. வாழி-வாழ்வாயாக என்றாசீர்வதித்தானென்க.

௮௯. ஆமாறுபாரிலானன் எனக் கூட்டுக. ஆமாறு-(விரைவிற் பகைவரை யழிக்கக்கருதி) அதற்கிசையுமாறென வருவித்துரைக்க.

௯௰. வாகு-புயம். கதாபாணியரணியாக - வீமன்றீக்கடைகோலாக. எனலடவி - தினைப்புனம். அரணி உரசுதலால் எனலடவியழியுமென்க. அரணி அக்கினியென்பாருமுளர்.

௬௩. உதவியாக-சகுனிக்குதவியாகவென்க. அதலபூமி. என்றது பாதாளலோகத்தை.

௬௪. பூமியமரனனதாமா - பூசுரனான அசுவத்தாமாவென்க. ஈசானகுமரன் என்றது அசுவத்தாமாவை. குடைதும் - அம்புகளாற்றுளைப்போம். வீரன் என்றது சோழனை வருங்கவியாலறிக.

௬௫. மனுகுலேசன் - மனுவின் குலத்தவனாகிய சோழன்; பதினேழாம்போர்ச்சருக்கம் ௩௨௰-ஆங்கவியில் மனுகுலத்தோன்றல் எனக்கூறியது காண்க.

௬௬. மருகன்வீழ-அசுவத்தாமா வீழ. சாபமறைவலான் என்றது அவன் மாமனாகிய கிருபாசாரியனை. ஆர்-ஆத்தி.

௬௭. சபதம் - சூதுபோர்ச்சருக்கத்திற் காண்க. மகிபனேவுவேல்போல துரியோதனன் முன்பு தன்மேலேவு வேல்போலென்க. இளவல் என்றது சாதேவனை.

௬௮. ஓவியது-ஒழிந்தது.

௬௯. அம்பி-மரக்கலம்.

௭௧. கயமுனி - வியாழகுருவின் புத்திரனென்றறிக. இமையோர்குரு-வியாழனென்க. முனிவர் என்றது பூமியிலுள்ள பல முனிவர்களை. மறை - இறந்தவருயிர்பெற்றெழச்செய்யுஞ் சஞ்சீவிமந்திரமென்பர். பூருவத்திற் றேவாசுரர்க்குப் போர்நடந்தபோது தேவரால் இறந்த வசுரரைப் பிழைப்பிக்க அயனிடம் அசுரகுருப்பெற்றதென்க ; பின் அவன்பாற் கயமுனி முதலானவர்பெற்ற விவர முதனூலிற் காண்க.

௭௨. அமர்-போர். அத்து-சாரியை.

௭௩. கங்கையென - கங்காநதியைப்போல. பாயதடம்-பரவிய ஒருவாவி. சேவடிமுன் பினதாவேகி - சிவந்தவடிச்சுவடு முன்பின்னாகமாற (வைத்து)ச்சென்று ; இக்கருத்தை "எறியபாதம்போல விறங்கியபாத"மெனப் பிற்கூறல் காண்க, இவ்வாறு சென்றது பகைவரறியாவண்ணமென்க. சேயவன் - சிவந்த ஒளியனாகிய சூரியனென்க.

௭௪. கம்பித்து - (விஷயங்களாற்) கலங்கி. புலன்-ஐண்டுப்பொறி. கலக்கமாற-இப்போது அக்கலக்கம் நீங்க. வெம்பித்தடங்கி - (பிரபஞ்சத்திலுண்டாகிய) வெய்ய மயக்கமொழிய. மனஞ்சித்தொடுமேவல்கூற - மனமானது அறிவின் வசமாகப்பொருந்த. தம்பித்ததோயத்திடை-தான் மந்திரத்தாற் றம்பிக்கப்பட்ட நீரில். வாயுத்தசமுமொக்கக்கும் பித்து-தசவித வாயுமொக்க வடக்கிக்கொண்டு; இங்ஙனங்கூறினும் உச்சுவாசநிச்சுவாச மிரண்டையுமடக்கிச் சுழுமுனைமார்க்கத்திற் பிராணவாயுவைநிறுத்தி என்பது கருத்தாகக்கொள்க. அடங்கி அடங்க எனத்திரித்துரைக்க. மந்திரத்தாற் சலத்தம்பனஞ்செய்து நீரின் மூழ்கியிருந்தமையால தனைவிளக்கத் தம்பித்ததோயத்திடை யென்றார்; இக்கருத்தைப்பின் ௭௰௫-ஆங்கவியிலறிக. தசவாயுவாவன - பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன.

௭௫. தன்னகமுற்றுமெலிவின்றித் தயங்குமாறு நன்னாளமூலநளினத்தைமலர்த்தி-தனது தேகத்தினுள் முற்றிலும் வாட்டமின்றி விளங்கும் ஆறுவகையான நல்ல நாளத்தையுடைய மூலாதாரமுதலான வாதாரங்களினங்களைமலரச் செய்து ; இனி ஆறுதாரமலர்களை மலர்த்தியெனவே அவற்றினரும்பொருளையுணர்ந்து மேற்சென்று பிரமரந்தரத்திற் சகஸ்தரதளதாமரையை மலரப்பண்ணி அதிலிருக்கிற சந்திரமண்டலத்தினமிர்தத்தை மூலாக்கினியால் விளகப்பண்ணி அதனைச்சர்வநாடிவழியாகவுடலிலே நிரப்பி அதனாலாகிய சுகோதையத்தாற் பூரணசோதியைப்பாவித்து எனப்பொருள்கொள்ளுமாறு அங்ஙனஞ் சுருக்கிச் கூறினாரென்க. நாளம்-உட்டுளையுடையதண்டு. நாவாலுன்னாமல்-நாவினால் (ஒலிவெளிக்) கிளராமல். உன்னுதல் - கிளர்தல். உன்னுமுறைமந்திரம்-உள்ளே கருதுமுறைமையுடைய (சஞ்சீவி) மந்திரத்தை. முற்கவியினுமிக்கவியினுங்கூறிய கருத்தின் விரிவைச் சிவஞான சித்தியாரிற் சகமார்க்கமென்னுமுதற்குறிப்புடைய கவிக்குச் சிவாக்கிரயோகியருரைத்தவுரையிற் காண்க.

௭௭. பரபாவகம்-பரம்பொருளின் பாவனை. ஒருபாலிறைகொண்டொழிசேனை - (போரிற் றப்பி) ஒருபக்கத்துத்தங்குதல்கொண்டு இறவாதொழிந்திருந்தசேனை.

௭௯. வலத்தேபுரிபூந்தண்மாலை என்றது வலம்புரிமாலையாகிய நந்தியாவர்த்த மாலையை. கோண்-வளைவு. வாள்-ஒளி.

௮௩. பின்னைக்குவாய்த்தோன் - நப்பின்னைப்பிராட்டிக்கு வாய்த்தவனாகிய கிருட்டிணன் ; நப்பின்னை ஓரிடையன் மகளென்க. பின்னை இலக்குமியுமாம். தன்னைக்கு-தன்னரசனாகிய துரியோதனனுக்கு.

௮௪. மற்று அ-சாரியை. வாய்மை-ஈண்டுக் குருமொழியென்க. ஞானவூதியம் - ஞானமாகிய இலாபம்.

௱௰௬. சாறு-ஈண்டுக் கருப்பஞ்சாறெனக். மாறியல் வேந்தர்-மாறுபடுதலையறிந்துகொண்ட அரசர். மாறுபாடாவது முதலடியால் உள்ளிருந்து புறம்போயினனென்பதும், இரண்டாமடியாற் புறத்துப்போகவில்லையென்பதுமாம்.

௱௰௭. இம்பர்-இவ்வுலகத்திலெனக். மிகுதிபற்றிப்பொன்றின என அஃறிணைமுடிபாக வுரைத்தாரெனக. அன்று ஓ-அசை.

௱௰௯. வல்லிய என்பது விரித்தல் விகாரமேற்றது.

௱௨௰. மோகரம்-உக்கிரம். ஒன்றில் - ஒருபக்கத்தில். யாதுமோதெளிதி - (இவ்விருதிறத்தில்) யாதாயினும் ஒன்றை நிச்சயித்து அறிந்து தெளிவாய். ஓ-அசை.

௱௨௨. கூறு - அம்சம். வருணன் கூறும் என்றதில் உம்மை திருமாலம்சமேயன்றி வருணனம்சமும் எனக்கொள்ளநிற்றலில் இறந்ததுதழீஇய வெச்சமாம். அரசர்திருமாலம்சமென்பதைத் திருக்குறளில் இறைமாட்சி என்பதனுரையிற்காண்க.

௱௨௬. துவம்-சலியாநிலைமை ; சூடாமணி நிகண்டு எட்டாவது தொகுதி ௰௬-ஆங்கவியிற் காண்க.

௱௩௨. சுருதி-ஈண்டு மந்திரம்.

௱௩௩. மாறியொழிய - நீங்கினுலொழிய. விடேன்-யானுன்னை விடமாட்டேன்.

௱௩௪. ஓதம்-அலை. பாதம் - கால் என்றும் நீர் என்றுமிருபொருள்கொள்க. காதம் - காததூரம். கலங்கல் - (நிலவுலகாட்சியொழியுமென்று) கலங்கற்க என்பது கருத்தாகவருவித்துரைக்க.

௱௩௭. வாளியெரி என்றது அக்கினியாஸ்திரத்தை. புவனம்-நீர்.

௱௩௮. சீவனம் - உயிர்வாழ்க்கை என்றும், நீர் என்றுமிருபொருள்கொள்க. இருக்குமோ-அச்சீவனத்திற்றங்குவானோவெனக.

௱௩௯. பரவை - பரப்பு. வாளம் - வளைவு. நாளம்-பூந்தண்டு.

௱௪௫. தனகரன்-பொருளையுண்டுபண்ணுபவனாகிய குபேரனெனக.

௱௪௬. பொய்-ஈண்டுக் கபடமெனக. விடையேழடர்த்தல்நப்பின்னையைமணத்தற்கெனக; வேய்ங்குழலூதல் ஆனிரையை மகிழ்வித்தற்குஞ் சேர்த்தற்குமெனக.

௱௫௧. தாலகேதனன் - பனைக்கொடியன். நரகாந்தகன் என்பது நராந்தகன் எனவிகாரமாய்வந்ததெனக. நரகாந்தகன் - நரகாசுரனுக்கழிவுசெய்தவன். கடலிற் பள்ளிகொண்டிருந்தலைவிடுத்துக் கிருட்டிணனாகவவதரித்தமை விளங்கத்திரைநீர்மறந்தோனென்றார்.

௱௫௨. உயாவுகின்றோம்-ஆராய்கின்றோம்.

௱௫௪. வழிந்து - வழிய எனத்திரித்துரைக்க. சமந்தபஞ்சகம் - மன்னவர் சோரியை ஐந்து தடாகங்களினிறைத்துப் பரசுராமமுனி பிதிர்தர்ப்பணஞ்செய்தமையால் அவ்விடஞ் சமந்தபஞ்சகம் எனப்பெயராயிற்றெனக.

௱௫௫. மூவகைவாகனம் - ரதகசதுரகம்.

௱௫௬. துரியோதனன் எவரையுமடக்கு மூழ்வினையையுமச்சுறுத்துங் கொடுஞ் செய்கையன் என்பது விளங்க விதிதனக்கும் விதி போல்வானென்றார்.

௱௫௯. கண்-கண்ணோட்டம். அன்றி அசைநிலையுமாம் ; புறநானூறு ௱௯-ஆஞ்செய்யுளிற் காண்க.

௱௬௨. கலம்-மரக்கலம். காளிந்தி - யமுனநதி. வாளவிலங்கல்-சக்கரவாளகிரி.

௱௬௩. பூங்கவனத்துட் புகுந்துஎனப்பாடமோதிப் பூங்காவனம் என்பது விகாரமாயிற்றென்பர்.

௱௬௪. கந்தருவர் துரியோதனனை கட்டிய கதை ஆரணியபருவத்தினிகழ்ந்ததெனக; உலூகன்றூதுச்சருக்கம் ௰௮-ஆங் கவியிற் காண்க.

௱௬௫. இக்கவியிறுதியில் என்றான்என்பது வருவித்துரைக்க.

௱௬௬. இக்கவியில், துரியோதனன் என்பதனை வருவித்துரைக்க.

௱௬௭. நடை - சஞ்சரித்தல். பிர்தாபம் - வீரம்

௱௬௮. பொரி - தீப்பொரி. நாகர்களிறைகொள - தேவர்கள் சிதற. தமனியாசலத்தை வீமனுக்குவமானமாக்குக. சந்தநோக்கி இகரம் நீண்டுவந்தது.

௱௭௰. பரிதிகள்-பரிவேடங்கள். விருத்தம்-வட்டம். பவுரி-ஈண்டுச்சுழலுதல். வீசுங்கதையின் வட்டத்துக்குப் பரிவேடத்தையுவமானமாகக்கொள்க.

௱௭௧. ஊரு-தொடை. மனோரகபற்பம் - மனத்திற்கு விருப்பத்தைத் தருங்கமலமெனக. அணல் - கீழ்வாய் ; கல்லாடம் ௮-ஆங்கவியிற் காண்க. புரூரம் என்றது சந்தநோக்கிப்புரூர் என விகாரமாயிற்று. புரூரம்-புருவம்.

௱௭௨. பணை-வாத்தியம். திதி - நிலையாக. செற்ற-நெருங்கிய.

௱௭௪. இருவினைகூரு-மாறுபாடானசெய்கை கூருத. விதாதா - பிரமன். அரி - காற்று.

உரும்-இடி. உழற்றினன்-வருந்திச்சுழன்றான்.

௱௭௬. சிரமாகிய முடியென்க. இரிதா - கெட.

௱௭௮. ஓமவுண்டி-ஓமம்பண்ணப்படுகின்ற அவியாகியவுணவு.

௱௭௯. கதாரவம்-தண்டாயுதவோசை. மோழை-மோட்டை. கோளம்-அண்டகோளம்.

௱௮௧. வினையாதிகன்-வஞ்சனையின் மிகுந்தவன்; நாணியம்பல் தகாது என்றதனால் இருவர் போர்செய்யுங்காலத்து நடுவாகநின்றோர் ஒன்றைக்கூறுதல் நியாயமன்று என்பது கருத்தாயிற்று.

௱௮௩. ஏதம் முன்னது துன்பம்; பின்னது குற்றம். புரிதாள்-செய்யுமுயற்சி. அரி காளை என்றது விசயனை.

௱௮௪. மோனவண்குறி - வாயாற்கூறாது கையாற்காட்டிய நல்ல குறி. மானகஞ்சுகன் - மானத்தைக்கவசமாகத் தரித்தவனாகிய துரியோதனன். மாறிநின்றிட-கால்கள்மாறிப் பின்வாங்கி நிற்க. பிழைபோதலின் - வீமன் கதையான் மோதியது தப்புதலாகப்போதலால் என்க.

௱௮௫. மாறடும்வீறு - பகையையழிக்குமேன்மை.

௱௮௬. உருப்பு-கோபம். உடற்றல்-பொருதல். சிவத்து என்றது-வலித்தலாயிற்று.

௱௮௭. கதுப்பு - கன்னம். இருத்துதல் - ஈண்டழுத்துதல். விதிர்த்து-நடுங்கி.

௱௮௮. உயிர்என்றது உயிர்த்தானத்தையென்க. மறம்-வீரம். அவித்தை-அஞ்ஞானம். ஆயர் - இடையர். அளப்பரோ - அளவிட்டறிவாரோ.

௱௮௯. இவை - இவ்வக்கிரமங்கள். சலம்-வைரம். வினை-வஞ்சம் அவர் என்றது பாண்டவரை.

௱௯௰. மிழற்றி-சொல்லி. எனக்கொலாம்-என்னும். கொல்-அசை. என்னையெனும்வினா ஈண்டு என்எனநின்றதன்மேல் அகரச்சாரியையெய்தியபின்ககரவொற்றுமிக்கது.

௱௯௧. அரி-பாம்பு. பகைவரைக்கொல்லுங் கொடுமைவிளங்க நஞ்சுபோலு நரேசர் என்றதென்க.

௱௯௨. கடிதடம் - ஈண்டு அரை. வழக்கு ஈண்டு யுத்தநியாயமென்க. முசலம்-உலக்கையாயுதம்.

௱௯௪. சிலையின்குரு-வில்வித்தைக்குக்குருவாகிய மைத்ரேய முனிவர்; இவர் சாபமாவது பாண்டவர் காமிய வனம்புக்கிருந்தபோது மைத்ரேய முனிவர் அவர்களிடத்திலிருந்து வந்து துரியோதனனுக்குநீதிமுறைகூற அவன் பரிகரித்தமையாலவர் வெகுண்டு நீ வீமன் கதையாற் றொடையிலடிபட்டிறப்பா யென்றது. சிலையின்குருவென்றதற்குத் துரோணாசாரியனென்பாருமுளர்.

௱௯௫. மற்றையநுசன் என்றது சாத்தகியை.

௱௯௮. மிடல் - வலி. மேவலர் - பகைவர். வான் - ஈண்டு வீரசுவர்க்கமென்க. வினை - போர். முனிமாமகன் என்றது அசுவத்தாமனை அவண்-அப்பாசறையில்.

௱௯௯. தாயம்-உரிமை. உழறினன்-கலக்கினன். சரிதம்-ஒழுக்கம்.

௨௱௧. சராசனம்-வில். யாதவனென்றது கிருட்டிணனை.

௨௱௨. வழக்கழிவறவழாமாற்றம்-நீதியழிவு நீங்கவழுவாதவுரை. அழுக்கறல் - பொறாமை செய்தல். எனபிதா-என்னுடைய தந்தை. மீ- மேல்.

௨௱௩. தனதுடைய முடிமிசைச்சிகாமணியென்க. மீள - அவ்வசுவத்தாமன்றிரும்பிவர.

௨௱௪. இரியல்போன-(போரிலேதோற்று) ஓடுதலுற்றுப்போன. பத்தா - கணவன். சந்தநோக்கிக் கிருதபத்மாவென்றார். ௨௱௬ - ஆங்கவியில் மோனை நோக்கிக் கிருதபன்மவென்றார்.

சல்லியபருவம் முற்றிற்று.

# பத்தாவது சௌப்திகபருவம்.

௨௱௫. அலமர - சுழல. பகலிற்கண்டெரியாதிருக்கின்ற கூகையை அக்காலநோக்கி அதனிடத்திற்சென்று அதனைக் காகம் வெல்லுதலும், இரவிற்கண்டெரியாதிருக்கின்றகாக்கையை அக்காலநோக்கிஅதனிடத்திற்சென்று அதனைக்கூகை வெல்லுதலுமியல்பென்க; இக்கருத்தைத் திருக்குறளிற் "பகல் வெல்லுங் கூகையை" யென்னுமுதற்குறிப்புடைய குற

ளிற்காண்க. ஸுஷுப்தி-தூக்கம். அதினிகழுஞ் செயல் சௌப்திகமாதலால் சௌப்திகபருவ மெனப் பெயராயிற்றெனக.

௨௱௬. புரம்-நகர், ஈண்டுப்பாடிநகரென்க. துவாரம்-வாயில். பாத்துவாசமுனி குலத்திற் பிறந்த அசுவத்தாமாவை யீண்டுப் பரத்துவாச னென்றார், பேரனைப் பாட்டன்பெயராற் கூறு முலகவழக்குப்பற்றிப்போலும். பூதம் கிருட் டிணனால் நியமிக்கப்பட்டிருந்ததென்க.

௨௱௮. துரோணசாதன்-துரோணகும்பத் திற் பிறந்தவன் ; துரோணாசாரியன்.

௨௱௯. எஞ்சின-வலிகுறைந்த என்க.

௨௱௰. படிவம்-வடிவம். படிவமும் என்னு மும்மை தொக்குநின்றதென்க.

௨௱௰௧. விதலை - நடுக்கம். மாறு - பகை. எதி-வாள். முற்கவியில் ஆகமம் என்றும் இக் கவியில் மறையென்றுங்கூறியதென்னை யெ னிற் பொதுவாகிய வேதவிதியுஞ் சிறப்பாகிய ஆகமவிதியுங்கொண்டு பூசித்தான் என்பது விளக்கற்கென்க.

௨௱௰௩. பருவரல்-துன்பம். இருவர் என் றது கிருபன், கிருதவன்மன் என்பவரை.

௨௱௰௪. கயில் — பூணின்கடைப்புணர்வு. பாளையம்-சேனை, ஈண்டு அதுதங்கும் பாசறை யென்க. பயில்புரி-பழகுதல்புரிந்த.

௨௱௰௭. உபபாண்டவர்களைவரும் பாண்ட வரைப்போல் வடிவுடையாரென்பது விளங்கச் சுடரிற்கொளுத்திய சுடரனை யாரென்றார். தேறல்-கள்.

௨௱௰௮. அவன் - அவ்வசுவத்தாமன். பின் னிட-புறங்கொடுக்க ; இவன் முன் புறங்கொ டுத்ததை ௰௭-ஆம்போர்ச்சருக்கம் ௱௩௪-ஆங் கவியினும், இச்சருக்கம் ௯௯ - ஆங்கவியினுங் காண்க.

௨௨௰. பதினெண்பூமி முன்னுரைத்தாம். பகல்-பகற்பொழுதில். படுத்தான்-அழித்தான். தகலருங்கேள்வி - தகுதியையுடைய அரிய கல்வி. தாமம்-கொன்றைமலர்.

௨௨௪. வயா-வருத்தம்.

௨௨௭. உண்டு - (சந்ததி) உண்டு. வருகு லம் என்றது அசுவத்தாமன்வந்த பாத்துவாச குலம் என்க.

௨௨௮. கன்றினேன்-சினமுற்றேன்.

௨௨௯. இணைதல்-சேர்தல். சொல்-புகழ்.

௨௩௧. முதலடிக்கு-கொடிய வில்வீரனாகிய அசுவத்தாமனும் அவன் மாமனாகிய கிருபா சாரியனும் என்க. மாழ்குற-மயங்க. கிருபா சாரியன் போயினான் என்றதனால் அவனுடன் பிரியாதிருக்கின்ற நண்பனாகிய கிருதவன்ம னும் போயினான் என்பது உபலக்கணத்தாற் கொள்க. சஞ்சய ஆரியன் என்பது சஞ்சயாரி யன் என நின்றது.

௨௩௫. வயிரம் என்றதனை வாய்மைக்குங் கூட்டுக. வாய்மை-வாக்கு. துரியோதனன் அசத்தியனாதலால் வாய்மை என்றதற்கு மெய் மை எனக்கொள்ளற்க. அயிர்-கருமணல்.

௨௩௬. மொகுமொகு-ஒலிக்குறிப்பு. ஆமோ தம்-வாசனை.

௨௩௭. கனன்மூன்றும் பரிசுத்தமும் ஒளியு முடைமையாலதனை யுவமைகூறினார். மூவகை அக்கினி இராசசூயச்சருக்கம் ௱௬-ஆங்கவி யுரையிற்காண்க.

௨௩௯. நள்ளென்கங்குல்-நள்ளென்னுமொ லியினையுடைய இரவில், நடுவிரவு என்றுமாம்; ஐங்குறுநூற்றுரையிற்காண்க. விலோசனம் - கண்.

௨௪௰. ஆறுமல் - அமையாமல். பானாள் - பாதிநாளிரவில். சேனாவிந்து முதலைவரை நான்காம்போர்ச்சருக்கம் ௨௮-ஆங்கவியிலறிக. தூ-வலி. மதுரைக்காஞ்சியுரையிற்காண்க.

௨௪௨. பானு என்றது கிரணத்தை. துப்பு-பவளம்.

௨௪௩. சிந்து-கடல். ஆகுலித்து - வருந்தி அரற்றல்-அழுதல்.

௨௪௫. பாரிடம்-பூதம். முனை-முன்.

௨௪௬. முருகிதழிச்சுடர் - வாசனையுடைய கொன்றைமாலையைப்புனைந்த சோதிவடிவா கிய சிவபிரானென்க. குருகுகிரி என்றது கிரௌஞ்சகிரியை. குருகு-பறவை.

௨௪௭. அபாண்டவியம் — பாண்டவரைக் கருவறுப்பது; இதனைப் பிரமசிரோஸ்திரமென் பர். வீமனும் அருச்சுனனுங் கோபமுற்று அசு வத்தாமனுடன்பொருது அவன்முடிமணியைக் கவர்ந்தாரென்றும், அசுவத்தாமன் அபாண்ட வாஸ்திரத்தைப் பாண்டவரையும் அபிமன் மனைவி உத்தரையின் கருவையுமழிக்கவிட்டா னென்றும், அது கிருட்டிணனருளால் வலி யிழந்ததென்றும் முதனூல் விரிவாகக்கூறும். அடைவில்-முறையால். விடுமின்-(அசுவத்தா மன்மேற்கொண்ட கோபத்தை) விடுங்கள்.

௨௪௮. கொந்து - பூங்கொத்து ஆகுபெய ராய் மலரென்க; அன்றிக்கண்வாய் முதலியன மலர்போன்றிருத்தலாற் பூங்கொத்துப் போல வருமவர் முகமெனினுமாம். உலுகன் - உலூக முனி.

௨௪௯. வித்தகன்-சதுரனாகிய கிருதாட்

டிரனென்க. ஆசி-வாழ்த்து. அத்தனாகிய கிருட்டிணனென்க. அத்தன் - உயர்ந்தோன். தூண் என்றது இரும்புத்தூணை. திருதராட்டிரன் பதினாயிரமயானைப் பலமுடையவனாதலால் நெரித்தானென்க.

௨௫௰. மீள்வல்-செல்வேன்; தன்மையொருமைவினைமுற்று. திரும்பிவருவேன் எனினுமாம். சீர்த்தி-மிகுபுகழுடனென்க. அந்நகரில் வாழ்ந்தசெயல் கழறுவாமே என்னும் பாடஞ் சிறப்புப்பாயிரத்திறுதியிற்காணப்படுங் கவிக்கியையுடைமையறிக.

## சௌப்திகபருவம் முற்றிற்று.

தற்சிறப்புப்பாயிரம் ௮-ஆங்கவியில், உமாதவன் சரிதமும் எனப்பொருள்கூறுவோர் அவ்வுமாதவன் சரிதங்குறித்த கவியின்றொகையிவை; குருகுலச்சருக்கம் ௨ - வாரணாவதச் சருக்கம் ௱௰௫, திரௌபதி மாலையிட்டசருக்கம் ௮௰-ஆங்கவிமுதலாக ௮௫-ஆங்கவிவரை, இந்திரப்பிரத்தச்சருக்கம் ௪௨, அருச்சுனன் றீர்த்தயாத்திரைச் சருக்கம்-௰௩, ௰௫, ௰௭, ௰௮, ௨௰, ௭௨, இராசசூயச்சருக்கம் ௰௧, அருச்சுனன் றவநிலைச்சருக்கம் ௩௩, ௩௭, ௪௰, ௭௩-ஆங்கவிமுதலாக ௱௩௰-ஆங்கவிவரை, புட்பயாத்திரைச்சருக்கம் ௱௩௯, மணிமான்வதைச் சருக்கம் ௮௫, நிரைமீட்சிச்சருக்கம் ௫௰, வெளிப்பாட்டுச்சருக்கம் ௰௯, பதின்மூன்றாம் போர்ச்சருக்கம ௪௭, ௪௮, ௪௯, ௱௯௪, ௱௯௫, ௱௯௯, ௨௱௮-முதலாக ௨௱௨௩-வரை, பதினான்காம்போர்ச்சருக்கம ௯௨, பதினைந்தாம்போர்ச் சருக்கங் ௪௪, பதினெட்டாம்போர்ச்சருக்கம் ௱௰௯, ௨௱௰, ௨௰௧, ௨௩௮, ௨௪௯-ஆங்கவிகளிற் காண்க. சங்கிரகமாகக்கூறிய நூலாதலாலிங்ஙனங்கூறினர். இந்நூலிற்கூறாத வேனைய பருவங்களினிடையிடை அவ்வுமாதவன்சரிதங் கூறப்பட்டுள்ளதென்றுங்கூறுவர்.

இன்னுமவர்தாம் இந்நூலாசிரியர் சிவபத்தியுடையாரென்பதற்கு எடுத்துக்காட்டுங் கவியின்றொகையிவை;

வாரணாவதச்சருக்கம்-௫௫, இந்திரப்பிரத்தச் சருக்கம்-௪௨, அருச்சுனன்றீர்த்தயாத்திரைச் சருக்கம்-௰௮, ௭௨, ௯௰, இராயசூயச்சருக்கம்-௰௧, ௱௪௧, சூதுபோர்ச் சருக்கம்-௩௪, அருச்சுனன்றவநிலைச்சருக்கம்-௩௧, ௩௩, ௫௫, ௫௭, ௯௯, ௮௭, ௱௭, ௱௮, ௱௰, ௱௰௨, ௱௰௩, நிவாதகவசர் காலகேயர்வதைச் சருக்கம்-௰௪, புட்பயாத்திரைச் சருக்கம்-௰, மணிமான்வதைச் சருக்கம்-௫௭, இக்கவிபோல இரண்டாம்போர்ச் சருக்கம்-௨௯-ஆங்கவியினுங் காண்க, ஆறாம்போர்ச் சருக்கம்-௨௯, பதினொராம்போர்ச்சருக்கம்-௨௩, பதின்மூன்றாம்போர்ச் சருக்கம்-௱௰௮, ௱௯௪, ௱௯௫, ௱௯௯, ௨௱௰௧, பதினைந்தாம்போர்ச் சருக்கம்-௨௯, ௪௩, பதினேழாம்போர்ச்சருக்கம்-௨௮, ௯௨, ௨௱௯, பதினெட்டாம்போர்ச் சருக்கம்-௨௱௰, ௨௩௮-ஆங்கவிகளிற்காண்க.

## மகாபாரத அரும்பதவுரை முற்றுப்பெற்றது.

இங்ஙனம்,

சே. ரா. சுப்பிரமணியக்கவிராயர்.



உ

# விஷயசூசிகை.



உ

# அபிதான அகராதி.

# அபிதான அகராதி.





# தொகையகராதி.







# சூசிபத்திரம்.

# மகாபாரதம்.

## செய்யுளகராதி.



ஈ

ஏ

| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|---|---|

# செய்யுளகராதி.

செய்யுளகராதி முற்றிற்று.



# மகாபாரதம்

## பிழையும் திருத்தமும்.

| பக்கம். | பாட்டு. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| எ | முக.வரி. | கவிதமுத | கவிமுத |
| கூ | ௩அ | செய இவ்வாறுமெய்யெழுத்துக்கள் புள்ளிபதியாமலநேகமுள்ளன அவற்றைக்காட்டவில்லை. | செய் |
| ,, | ச௰ | மாதர் | மதர் |
| ௰ | சச | பெய் | வெய் |
| ௰ரு | மேல்வரி | சருக்கும் | சருக்கம் |
| ,, | கூகூ | பூஞ்கொடி | பூங்கொடி |
| ௰கூ | க௦ச | தேசவனனி | தேசவனளி |
| உக | கசரு | தாளிரண்டிளி | தாளிரண்டினி |
| உ௩ | கஎ | சாதார | சாதாரா |
| உஅ | ருரு | கிளிக்கு | கிழிக்கு |
| உகூ | எஉ | நூறுசெய் | நூறுகூறுசெய் |
| ருக | எ | மும்மை | மூன்னை |
| எ௩ | உச | பாருங் | யாருங் |
| எச | ௩எ | பனையினம் | பணையினம் |
| அ௦ | ௩கூ | தொண்டி | தெண்டி |
| ,, | சஉ | நோந்து | நொந்து |
| அக | சகூ | னேபேரலுங் | னேபோலுங் |
| அரு | அஉ | சேலனை | சேலனைய |
| அகூ | ச | முயிர்பெய்த | முயிர்ப்பெய்த |
| ,, | எ | பொன்ற | போன்ற |
| கூச | ருஉ | தக்கன் | தக்ககன் |
| ,, | ருகூ | வன்கர் | வனுகர் |
| ,, | ருஅ | யாலங்க | யாலலங்க |
| கூஅ | உரு | தலத்து | தாலத்து |
| க௦௦ | சச | மகிதர | மகிதா |
| ,, | சரு | கதிரவி | கதிரிரவி |
| கஉஅ | க௩அ | துண்ட | துண் |
| ,, | கசஉ | திகழ் | திகழ்க |
| கருச | அ௦ | வாசன் | வாசவன் |
| கஅஉ | கருகூ | மளதன் | மனிதன் |
| கஅ௩ | க | மவவரோ | மவரோ |
| ,, | உ | தப்பால | தப்பாமல |
| ,, | ௩ | மேன்மே | மேன்மேல் |
| கக௩ | அ௩ | மொவ்வாளகை | மொவ்வாவளகை |
| ,, | க௰ | தணர் | தன்னர் |
| ககரு | க௦எ | யரக்கர் | யியக்கர் |
| உஉரு | சகூ | தென்றலா | தென்றலான் |
| உ௩கூ | கரு | கோரலு | கோலு |
| ,, | உக | கிளசார | கிளர்சா |
| உருஎ | க௦௦ | வாதிசை | வடதிசை |
| உகூக | க௩கூ | கோடிரித்த | கோடியுத்த |
| உகூ௩ | எ | கானக | காணக |

| பக்கம். | பாட்டு. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| உஎங | கஎ | சுயோ | சுயோ |
| உஎசு | உ0 | மிவன் | மிவள் |
| உஎஎ | உஅ | யரம்ப | யரம்ப |
| உஎஅ | ஙரு | காரர் | காரார் |
| ,, | ஙஎ | மன்மன் | மன்ப |
| உஅரு | கூஎ | மகண்றி | மகன்றி |
| உஅசு | க0கூ | சழிப்பினுங் | சளிப்பினுங் |
| உகூகூ | உஉரு | தேனன்று | தேனென்று |
| ங0ங | உசுச | குணைத்தாள் | குணைத்தான் |
| ஙக0 | ககூ | பூரிசா | பூரிசிர |
| ஙஉக | எங | பங்கியல் | படங்கியல் |
| ஙஉகூ | உ | பொபக | பொற்பக |
| ஙசுக | சங | மறித்திலமேலெ | மறித்திலமேயெ |
| ஙசுஎ | சங | எறுதே | எறுதே |
| ஙஎஎ | ஙகூ | மொடுவன | மோடுவன |
| ,, | சரு | நெந்து | நொந்து |
| ஙஅஉ | க0ச | நெறிந்த | நெரிந்த |
| ஙஅங | க0ரு | றன்னை | றன்னைப் |
| ஙஅச | கஉஉ | னெறியவெ | னெறியவே |
| ஙஅரு | கஉரு | பணயுய | பணயுய |
| ஙஅசு | கசயி | டுறைக்க | டுரைக்க |
| ஙகூங | கககூ | போற் | பொற் |
| ச0அ | சுசு | வாசன் | வாசவன் |
| ச0கூ | சுஅ | சொலை | சோலை |
| ,, | எக | வருதினி | வருதினி |
| சகக | கூக | தங்கருரு | தங்கருகு |
| சகங | க0உ | சலந்தன் | சலசந்தன் |
| ,, | க0ங | யெனு | யென்னு |
| சகசு | கஙஉ | கடிந்து | கடிது |
| ,, | கஙச | சாயங்க | சாயக்கங்க |
| சசக | எகூ | யறனகுள் | யறனருள் |
| சருரு | க0கூ | வைவகை | வைவயை |
| சஎஉ | உசுங | யுள்ள | வுள்ள |
| சஎங | உசுரு | விற்றி | வீற்றி |
| சஎகூ | ருயி | முறிட | முறிபட |
| சஅக | கூஉ | சொரி | சோரி |
| சஅங | எஎ | னேடிய | னெடிய |
| ,, | அயி | வெழுவரொ | வெழுவரோ |
| ,, | அங | சிகிரி | சிகரி |
| சஅரு | கூரு | வாளிமெ | வாளிமே |
| ,, | ,, | வாராதே | வாராதே |
| ,, | கூஎ | கொடா | கோடா |
| சஅஅ | கஉச | கெற | கேற |
| சஅகூ | கஙக | திண்டேரும் | திண்டேரும் |
| சகூஎ | உ0க | குருவான் | குருவான |
| சகூஅ | உ0அ | வக்குங் | வக்கம் |

வரம்பலவரை கூ-ஆம் பக்கம் கங-ஆம் பாட்டு ஆயபன் என்பதை ஆயன் என்று திருத்துக.